கழக வெளியீடு: எச

உ

திருச்சிற்றம்பலம்

பரஞ்சோதிமுனிவர்

அருளிச்செய்த

# திருவிளையாடற் புராணம்

## மதுரைக்காண்டம்



நாவலர், பண்டித

ந மு வேங்கடசாமி நாட்டாரவர்கள்

எழுதிய

உரையுடன்



திருநெல்வேலித் தென்னிந்திய

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட்

திருநெல்வேலி - 6. : : சென்னை - 1.

1965

# பதிப்புரை

'தென்பாண்டி நாட்டானே' என்றும், 'பாண்டிநாடே பழம்பதியாகவும்' என்றும், 'தென்னாடுடைய சிவனே போற்றி' என்றும் மணிமொழிப் பெருமான் கூறியருளியபடி முழுமுதற் பொருளாய சிவபெருமான் பண்டுதொட்டுத் தமக்குச் சிறப் பிடமாகக் கொண்ட பாண்டி வளநாட்டில் பல கலையொடு தமிழ் வளர் மதுரையம்பதியிலே சோமசுந்தரக் கடவுள் உலகுய்யத் தமது சத்தியைச் செலுத்தி அருளிய அறுபத்துநான்கு திரு விளையாடல்களை எடுத்துக் கூறுவது பரஞ்சோதிமுனிவர் இயற்றி யருளிய இத் திருவிளையாடற் புராணம்.

இதற்குத் தொல்காப்பியம் இலக்கணமென்று கூறுப. இது சங்க இலக்கியங்கள், திருமுறைகள், சைவசித்தாந்த சாத் திரங்கள் முதலியவற்றின் அருங்கருத்துக்களை யுடையதாய், செந்தமி ழின்பம் பெருக்குவதாய், பத்திச்சுவை இனிது கனிந் தொழுகுவதாய், சொன்னயம், பொருணயம், பாநய மிக்குடைய தாய், பெரிய புராணத்தைப் போலக் கயிறு சாத்தி உண்மை யறிந்து வரும் வழக்கினை யுடையதாய் விளங்குகின்றது.

இதற்கு இரண்டு மூன்று உரைகள் முன் வெளிவந்திருப்பி னும் அப் பதிப்புக்களில் ஒன்றேனும் இப்போது கிடைப்பதற் கில்லையாகலான், இதுபோது இவ்வுரைநூல் வெளிவரவேண்டி யது இன்றியமையாததாயிற்று. இதனை அச்சிடுவதற்கு மிகுதி யான பொருள் வேண்டியிருத்தலான் இதனைத் தொண்ணூற் றுறு பாகங்கள் கொண்ட தனித் தனிப் பகுதிகளாக வெளி யிடக் கருதி முன் பணங்கேட்டு ஓர் அறிக்கை அனுப்பியதைக் கண்ணுற்று இருநூறுபேர்களுக்குமேல் ஆறுபகுதிகளுக்கும், பன்னிரண்டு பகுதிகளுக்குமாக முன்பணமனுப்பி யுதவினர்கள். அவர்களுடைய மொழிப்பற்றும் சமயப்பற்றும் கருதி அவர் களுக்கு நன்றி செலுத்துங் கடப்பாடுடையோம். இந் நூலி லுள்ள மதுரைக்காண்டம், கூடற்காண்டம், திருவாலவாய்க் காண்டம் என்னும் மூன்று காண்டங்களையும் மூன்று தனிப் பகுதிகளாகக் கட்டடஞ் செய்து வெளியிடத் தீர்மானித்து மதுரைக் காண்டத்தை முதற்கண் வெளியிடலானேம்.

இதன்கண் எழுதப்பட்டிருக்கும் உரை முன் உரைகளைவிட விளக்கமுடையது. இன்றியமையாத பாடபேதங்கள் காட்டப் பெற்றிருக்கின்றன. பல இடங்களில் முன் உரையாசிரியர்கள் கொண்ட பொருளைவிடச் சிறந்த பொருள் காட்டப் பெற்றிருக்கின்றது. இதனை அவ்வுரைகளோடு ஒப்பிட்டுப் பார்ப்பவர்களுக்கு அஃது இனிது விளங்கும். இதன்கண் பிள்ளையார், சிவபெருமான், முருகன், மதுரைநகர் முதலிய திருவுருவப் படங்களும், ஒவ்வொரு திருவிளையாடலின் கருத்தைக் கண்டவுடனே விளக்குவதற்கு ஒவ்வொரு அரிய படமும் மிக்க அழகியவாக எழுதுவித்துச் சேர்த்திருக்கின்றோம்.

இதற்கு உரை எழுதி வருகின்ற இலக்கணப் புலமையும் இலக்கியப் புலமையும், சமயநூற் புலமையும் ஒருங்கே வாய்ந்தவரும், அன்பு அறிவொழுக்கங்களிற் சிறந்தவரும், எளிய இனிய செந்தமிழ் உரைநடை எழுதும் வன்மை யுடையவருமான திருவாளர் பண்டித ந. மு. வேங்கடசாமி நாட்டாரவர்களும், அவர்கட்கு உதவியாக விருந்து எழுதிவரும் திருவாளர் அ. மு. சரவண முதலியாரவர்களும், இதனைப் பதித்து வருகையில் எழுத்துப் பிழைகள் முதலியவற்றைப் பார்த்துதவிவரும், தமிழாசிரியராய திருவாளர் மா. வடிவேலு முதலியாரவர்களும், பிள்ளையார் படம், சிவபெருமான் படம், திருவிளையாடற் படங்கள் முதலியவற்றை மிக்க திறமையோடு எழுதியுதவிவரும் திருவாளர் ஆ. சேகனுதாச்சாரியாரவர்களும் நெடிது வாழ்ந்து எல்லாப் பயன்களையும் அடையுமாறு எல்லாம் வல்ல முழுமுதற் செம்பொருளை வழுத்துகின்றோம்.

திருநெல்வேலி<br>அட்சயஹு (1927)<br>தைமீ அவ — சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்.

# முகவுரை

நீல மாமிடற்
றால வாயிலான்
பால தாயினர்
ஞால மாள்வரே.

ஒருமருந் தாகி யுள்ளா யும்பரோ டுலகுக் கெல்லாம்
பெருமருந் தாகி நின்றாய் பேரமு தின்சு வையாய்க்
கருமருந் தாகி யுள்ளா யாளும்வல் வினைக டீர்க்கும்
அருமருந் தால வாயி லப்பனே யருள்செ யாயே.

வாயானை மனத்தானை மனத்து ணின்ற
கருத்தானைக் கருத்தறிந்து முடிப்பான் றன்னைத்
தூயானைத் தூவெள்ளை யேற்றான் றன்னைச்
சுடர்த்திங்கட் சடையானைத் தொடர்ந்து நின்றென்
தாயானைத் தவமாய தன்மை யானைத்
தலையாய தேவாதி தேவர்க் கென்றும்
சேயானைத் தென்கூடற் றிருவா லவாய்ச்
சிவனடியே சிந்திக்கப் பெற்ற நானே. —தேவாரம்

திருவிளையாடற் புராணம் என்பது மதுரையம்பதியிலே கோயில்கொண்டிருக்கும் முழுமுதலாகிய சோமசுந்தரக்கடவுள் உயிர்களெல்லாம் உய்திகூடுதற் பொருட்டுப் பெருங் கருணையினால் நிகழ்த்தியருளிய திருவிளையாட்டுக்களை உணர்த்தும் தமிழ் நூலாகும். மதுரைப் பதியானது வண்புகழ் மூவர் தண்பொழில் வரைப்பாகிய தமிழகத்திலே, செந்தமிழ் நாடென்று சிறப்பித்தோதப்பெறும் பாண்டி நாட்டில், படைப்புக் காலந் தொடங்கி மேன்மையுற்று வந்த பாண்டி மன்னர்கள் அரசிருக்கும் தலைநகராயது; திரிபுரமெரித்த விரிசடைக் கடவுளையும் தம்முளொருவராகக்கொண்டெண்ணும் பெருமைவாய்ந்த நல்லிசைப் புலவர் பல்லோர் பன்னெடுங்காலம் சங்கமமர்ந்து அமிழ்தினு மினிய தமிழ்மொழியை ஆராய்ச்சி செய்தற்கு நிலைக்களமானது; சங்கப் புலவர்கள் பாடித்தொகுத்த எட்டுத்தொகையுள் ஒன்றாகிய பரிபாடல் எழுபது செய்யுட்களுள் வையைக் கென்றும் தனக் கென்றும் முப்பது செய்யுட்களை வரைந்து கொண்டது; மற்றும் எண்ணிறந்த சான்றோர்களாற் பாராட்டப் பெற்றது; தேவாரப் பாடல்பெற்ற

'கூடல் புனவாயில் குற்றாலம் ஆப்பனூர்
ஏடகம் நெல்வேலி இராமேசம்—ஆடானை
தென்பரங்குன் றம்சுழியல் தென்றிருப்புத் தூர்காளை
வன்கொடுங்குன் றம்பூ வணம்'

என்னும் பாண்டிநாட்டுப் பதினான்கு திருப்பதிகளில் முதலாயது; திருஞான சம்பந்தப் பிள்ளையார் பாடிய க. நீலமாமிடற்று, உ. மந்திரமாவது, ௩. மானினேர்விழி, ௪. காட்டுமாவது, ௫. செய்யனே, ௬. வீட

லாலவாயிலாய், எ. வேதவேள்வியை, அ. ஆலநீழல்; கூ. மங்கையர்க்கரசி என்னும் பதிகங்களையும், திருநாவுக்கரசுகள் பாடிய க. வேதியா, உ. முளைத்தானை என்னும் பதிகங்களையுங் கொண்டு திகழ்வது. உலகெலா மீன்ற மலைமகளாரும், மறைகளுந் தேறாக் கறைமிடற்றிறையும், குன்ற மெறிந்த வென்றிவேற் பரனும் அரசு வீற்றிருந்து முறை செய்யப் பெற்றது இப்பதியென்றால் இதனை யொப்பது வேறெப்பதி ? இத்திருப்பதியிலே கருணைக் கடலாகிய சோமசுந்தரக் கடவுள் செய்தருளிய அற்புதமான அறுபத்து நான்கு திருவிளையாடல்கள் போலும் பொற்பு மிக்க வரலாறுகள் வேறெவ்விடத்தும் நிகழ்ந்தனவாகக் கேட்டலரிது.

இத் திருவிளையாடற் கதைகளை யெடுத்துக்கூறும் தமிழ் நூல்கள் அளவற்றன. வெள்ளியம்பலத் திருக்கூத்தாடியது, கடல்சுவற வேல் விட்டது, இந்திரன் முடிமேல் வளை யெறிந்தது முதலியன சிலப்பதிகாரத்திலும் ; இந்திரன் பழி தீர்த்தது, திருமணஞ் செய்தது, வெள்ளியம்பலத் திருக்கூத்தாடியது, அன்னக்குழியும் வையையும் அழைத்தது, எழுகடலழைத்தது, உக்கிர குமார பாண்டியர் திருவவதாரம், கடல் சுவற வேல்விட்டது, கல்லானைக்குக் கரும்பருத்தியது, அங்கம் வெட்டியது, வளையல் விற்றது, சோழனை மடுவில் வீட்டியது, மாமனாகவந்து வழக்குரைத்தது, விறகு விற்றது, திருமுகம் கொடுத்தது, கரிக்குருவிக்கு உபதேசித்தது, தருமிக்குப் பொற்கிழியளித்தது, இடைக்காடன் பிணக்குத் தீர்த்தது, வலை வீசியது, நரியைப் பரியாக்கினது, மண் சுமந்தது முதலியன கல்லாடத்திலும்; நான்மாடக் கூடலானது, சங்கப் பலகை தந்தது, தருமிக்குப் பொற்கிழியளித்தது, வலை வீசியது, பாண்டியன் சுரந் தீர்த்தது, சமணரைக் கழுவேற்றியது முதலியன தேவாரத்திலும் ; வெள்ளியம்பலத் திருக்கூத்தாடியது, மெய்க்காட்டிட்டது, அட்டமாசித்தி யுபதேசித்தது, தண்ணீர்ப் பந்தல் வைத்தது, பன்றிக்குட்டிக்குப் பால் கொடுத்தது, கரிக்குருவிக்கு உபதேசித்தது, வலைவீசியது, வாதவூரடிகளுக்கு உபதேசித்தது, நரியைப்பரியாக்கியது, மண் சுமந்தது முதலியன திருவாசகத்திலும் எடுத்தோதப் பெற்றன.

திருவிளையாடல்களை உணர்த்தும்பொருட்டே யெழுந்த தமிழ் நூல்கள் திருவாலவாயுடையார் திருவிளையாடற் புராணம், கடம்பவன புராணம், சுந்தர பாண்டியம், திருவிளையாடற் புராணம் என்பனவும், வேறு சிலவுமாம். திருவாலவாயுடையார் திருவிளையாடற் புராணம் என்பது செல்விநகர்ப் பெரும்பற்றப் புலியூர் நம்பி யென்பவரால் இயற்றப் பெற்றது ; இது வேம்பத்தூரார் திருவிளையாடல் எனவும், பழைய திருவிளையாடல் எனவும் வழங்காநிற்கும். கடம்பவன புராணம் என்பது தொண்டை காட்டிலுள்ள இலம்பூரிலிருந்த வீமநாதபண்டிதர் என்பவரால் இயற்றப் பெற்றது. சுந்தர பாண்டியம் என்பது தொண்டை நாட்டிலுள்ள வாயற்பதியிலிருந்த அனதாரியப்பன் என்னும் புலவரால் இயற்றப் பெற்றது. திருவிளையாடற் புராணம் என்பது பரஞ்சோதி முனிவரால் இயற்றப் பெற்றது. இவற்றுள் நம்பி இயற்றியதும், பரஞ்சோதியார் இயற்றியதும் ஆகிய இரு நூல்களும் அறுபத்து நான்கு திருவிளையாடல்களையும் செவ்வையாக விரித்துரைப்பன. இவற்றுள் முன்னதினும் பின்னது ஏறக்குறைய இருமடங்கு விரிவுடையது.

இவ்விருநூல்களுள் ஒன்றனோடு மற்றொன்றற்குள்ள வேறுபாடுகள் பல. இந்நூலிலுள்ள வருணன் விட்ட கடலை வற்றச் செய்த வரலாறு

அந்நூலிலுள்ள நான்மாடக்கூடலான வரலாற்றிலும், இதிலுள்ள நாக மெய்த வரலாறும் மாயப் பசுவை வதைத்த வரலாறும் அதிலுள்ள மதுரையான வரலாற்றிலும், இதிலுள்ள திருநகரங்கண்ட வரலாறு அதிலுள்ள புலிமுலை புல்வாய்க் கருளின வரலாற்றிலும் அடங்கி யுள்ளன. அதிலுள்ள மூர்த்தியார்க்கு அரசளித்தது, காரியார் நாரியார் பாப்பகுந்தது, புலிமுலை புல்வாய்க் கருளினது என்னுந் திருவிளை யாடல்கள் இந்நூலிற் காணப்பட்டில. இரண்டிலும் கதை மாறுபாடு களும் உள. இந்நூல் இன்ன பாண்டியன் மகன் இவன் என்று பாண்டி யர் வழியை இடைவிடாமற் கூறிச் செல்வதுடன், இன்ன பாண்டியன் காலத்து இன்ன திருவிளையாடல் நடந்ததென்றும் கூறுகிறது; அந் நூல் அங்ஙனம் கூறிற்றிலது; க. மலயத்துவசன், உ. சுந்தரமாறர், ௩. உக்கிரனர், ச. தந்தன், ரு. வீரமாறன், சு. வரகுணர் எ. வர குணருடைய மைந்தர் என்னும் பாண்டியர்களின் பெயர்களை மட்டுமே அது கூறுகின்றது. திருநகரங் கண்டது தவிர, வேல்வளை செண்டு கொடுத்ததுகாறும் முதலிலுள்ள பதினெரு திருவிளையாடல்கள் இரு நூலிலும் ஒரே முறையிலும், பின்புள்ள திருவிளையாடல்கள் முறை மாறியுமுள்ளன. இந்நூல் கூறும் பாண்டியர் பெயர்களிற் பெரும் பாலன வடமொழியில் எழுதுதற்பொருட்டுப் படைத்துக்கொண்டன வாதல் வேண்டுமென்பது பழந்தமிழ் நூல்களின் உணர்வுடையார்க்கு விளங்கும். திருவிளையாடல்களின் முறைவைப்பில் அந்நூலினும் இந்நூல் பொருத்தமுடையதாகத் தோன்றுகிறது. சில நூற்றாண்டு களின் முன்பு தோன்றிய வேறு சில நூல்களிலும் நம்பி திருவிளை யாடலின் முறை வைப்பே காணப்படினும், அதனாற் பெறப்படுவது அவற்றுள் ஒன்றைப் பார்த்து ஒன்று அமைக்கப்பட்டது என்பதன்றி, அம்முறையே பொருந்துவதென்ப தாகாது. திருவிளையாடல் அறு பத்து நான்கில் மாணிக்கவாசகர் காலத்து நிகழ்ந்தன உஎ, உஅ, உகூ, ௩0 - ஆம் திருவிளையாடல்களாகவும், திருஞானசம்பந்தர் காலத்து நிகழ்ந்தன ௩எ, ௩அ - ஆம் திருவிளையாடல்களாகவும், மெய்க்காட் டிட்டது, அட்டமாசித்தி பகர்ந்தது, தண்ணீர்ப்பந்தர் வைத்தது, புலிமுலை புல்வாய்க் கருளினது, பன்றிக்குட்டிகளுக்கு அருள்புரிந் தது, கரிக்குருவிக்கு அருள் புரிந்தது என்பன முறையே ௩க, சஉ, ச௩, ரு௩, ருகூ, கூ0 - ஆம் திருவிளையாடல்களாகவும் அந்நூல்களில் அமைக்கப் பெற்றுள்ளன; அட்டமாசித்தி பகர்ந்தது முதலாக இங்கெடுத்துக் காட்டியவைகளை மாணிக்கவாசகர் திருவாசகத்துக் கூறியிருப்பது அம்முறை பிழைபாடுடையது என்பதைக் காட்டும்; மற்றும், மதுரையானது, இந்திரன் முடிமேல் வளை யெறிந்தது, திரு ஆலவாயானது என்பவற்றை முறையே ௩கூ, சச, சஎ ஆம் திரு விளையாடல்களாக அமைத்திருத்தல் முதலியன தமிழாராய்ச்சியாற் பெறப்படும் உண்மை வரலாற்றுடன் மாறுபடுவன வாகும்.

இனி, பரஞ்சோதி முனிவரியற்றிய இத் திருவிளையாடற் புராணத் திற்கு முதனூல் வடமொழியிலுள்ள ஆலாசிய மான்மியம் என்றும், இது பதினெண் புராணங்களி லொன்முகிய கந்தபுராணத்தின் ஓர் பகுதியாம் என்றுங் கூறப்படுகின்றது. தல மான்மியங்களைப்பதினெண் புராணங்களி லொன்றனேடு இயைத்துரைப்பது அவற்றின் பெரு மையை மிகுத்துக் காட்டவேண்டு மென்னும் கருத்தினலாம் என்பது நல்லறிவுடையா ரனைவர்க்கும் உடன்பாடாகும். யாதானும் ஒரு தமிழ் நூல் ஆரியத்தினின்று மொழிபெயர்க்கப் பட்டதானல் மட்டும்

யாவரும் ஒத்துக் கொள்ளத்தக்க பெருமை யுடையதாம்; அதுவும் வேத ஆகம புராண இதிகாசங்களில் ஒன்றைச் சார்ந்ததாகவும், பின் நிகழப்போகிற வரலாறுகளை முன்னரே கூறி வைத்ததாகவும் இருக்க வேண்டும் என்னும் இத்தகைய போலிக் கொள்கைகள் பிறருடைய பழக்கங் காரணமாகச் சென்ற சில நூற்றாண்டுகளிலிருந்த தமிழ் மக்க ளிடையே தோன்றின. அவை தமிழ் நூல்கள் சில மறைந்தொழியும் படி வடமொழி மூலம் இன்றென்று புறக்கணித்தொதுக்குமாறும், சில தமிழ் நூல்களை ஆரியத்தில் மொழிபெயர்த்துக்கொண்டு அவற்றி னின்று இவை வந்தனவென்று காட்டுமாறும் தூண்டக் கூடியவாதல் காண்க. எனினும், அக்கொள்கைகள் வலியுற்று நின்றகாலத்தில் ஒரு தமிழ்ப்புலவர் அந்நெறியே சென்றிருப்பின், அவர் அவற்றைக் கடக் கும் மதுகையிலராயினு ரென்பதன்றி, அவர்மீது வேறு குற்றம் சுமத் துதல் சாலாது. இற்றை நாளையிலும் அத்தகையோ ரிருப்பதே பெரிய தோர் வியப்பாகும். இன்னோர் இன்னமும் இருக்கின்றன ரென்பத னைத் திருவாலவாயுடையார் திருவிளையாடற்புராண முகவுரை ௬-ஆம் பக்கத்தில் மகாமகோபாத்தியாய உ. வே. சாமிநாதையரவர்கள் எழுதி யுள்ளதனு லறிக. சில ஆண்டுகளுக்கு முன்பு சித்தாந்த நூற்பயிற்சி வாய்ந்தவராயிருந்த ஒருவர் குமரகுருபர சுவாமிகளின் சரிதத்தைத் தமிழில் எழுதி வைத்துக்கொண்டு, இதற்கு எப்படியாவது வடமொழி யில் மூலம் கற்பித்துவிடவேண்டுமெனத் தாம் எண்ணியதை என் னிடம் கூறியதுமுண்டு! தனித்தமிழ் நூல்களாகிய பெரியபுராணம் போல்வனவற்றைச் சிலர் ஆரியத்தில் மொழிபெயர்த்து வைத்துக் கொள்ள, ஆரியத்தினின்று இவை மொழி பெயர்க்கப்பட்டனவென்று கூறும் ஒன்றிரண்டுபேர் இன்னுமிருக்கின்றனரே. திருவிளையாடற் புராணம் ஆரியத்தினின்று மொழிபெயர்க்கப் பெற்றதாயினும், இதிற் கூறப்படும் திருவிளையாடல்களெல்லாம் செந்தமிழ்ப் பாண்டி நாட் டிலே தமிழ் மக்களிடையே தமிழ் மொழியாற் பேசியும் எழுதியும் நிகழ்த்திப் போந்தன வாகலின், இவ் வரலாறுகள் ஆரியத்தில் எழுதப் படு முன்பே தமிழின் இருவகை வழக்கிலும் பயின்றனவாதல் வேண்டு மென்றும், இவற்றை வடநூற் புலவர் அம்மொழியில் எழுதுங்கால் தமிழ் வழக்குகளை நன்கு அறியாமை முதலிய காரணங்களாற் சில பிறழ்ச்சிகள் நிகழ்ந்திருத்தல் இயல்பென்றும், இந் நூலாசிரியர் வட நூன் மேற்கோளாகக் கதைகளை எடுத்துக் கொண்டனராயினும் பழந் தமிழ் நூல்களின் கருத்துக்களையும் சொற்களையும் தொடர்களையும் எடுத்தமைத்தே இந் நூலை அழகுபெறச் செய்திருக்கின்றன ரென்றும் தமிழ் மக்கள் உணரவேண்டும். கதைகளிற் சில பிறழ்ச்சி நிகழ்ந்திருப் பினும், இந் நூல்களின் நோக்கம், சரித்திர வாராய்ச்சி செய்வதன்றி, முழுமுதல்வனுகிய இறைவன் அடியார்களுக்கு எளிவந்து அருள்புரியும் பெருங்கருணைத் திறத்தை உணர்த்தி உயிர்களை உய்வித்தலேயென் பதை உன்னின், அஃதோரிழுக்காகத் தோன்றுமாறில்லை.

இனி, இந் நூலாசிரியராகிய பரஞ்சோதி முனிவர் ஏறக்குறைய 280 ஆண்டுகளின் முன்பு, சோழ மண்டலத்திலே, திருமறைக் காட் டில் வழிவழிச் சைவர்களாகிய அபிடேகத்தர் மரபில் மீனாட்சி சுந்தர தேசிகர் என்பவர்க்குப் புதல்வராய்த் தோன்றியவர்; தந்தையாரிடத் தில் முறையானே தீக்கைகள் பெற்று, தமிழிலும் வடமொழியிலு முள்ள பலவகையான அரிய நூல்களையும் கற்றுத் துறைபோயவர்; சிவபத்தி அடியார்பத்தி மிக்கவர்; அங்கயற்கண்ணம்மையின் திரு

வடிக்கு மிக்க அன்பு பூண்டவர்; இவர் சிவபெருமான் திருக்கோயில் கொண்டிருக்கும் திருப்பதிகள் பலவற்றுக்கும் சென்று, மதுரையை அடைந்து கயற்கண் இறைவியையும் சோமசுந்தரக்கடவுளையும் நாடோறும் தரிசித்து வழிபட்டுக்கொண்டு அப்பதியில் வதியும் பொழுது, மீனாட்சி தேவியார் தமக்குக் கனவிலே தோன்றி 'எம்பெருமான் திருவிளையாடல்களைப் பாடுவாய்' என்று பணிக்க, அப்பணியைத் தலைமேற்கொண்டு இந்நூலைப் பாடி முடித்து, சொக்கேசர் சந்நிதியில் அறுகாற் பீடத்திலிருந்து, அடியார்களும் புலவர்களும் முதலாயினோர் கூடிய பேரவையில் இதனை அரங்கேற்றினர் என்று பெரியோர் கூறுவர். இவர் காலம் 400 ஆண்டுகளின் முன்பாமென்றும், 850 ஆண்டுகளின் முன்பாமென்றும் இங்ஙனம் வேற்றுமைப்படக் கூறுவாருமுளர்; ஒருவர் கூற்றும் ஆதரவுடன் கூடியதன்று; தக்க சான்று கிடைத்த வழியே இது துணிதற்குரியதாகும். இவரியற்றிய வேறு தமிழ்நூல்கள் வேதாரணியப் புராணம், திருவிளையாடற் போற்றிக் கலிவெண்பா, மதுரைப் பதிற்றுப்பத்தந்தாதி என்பன. திருவிளையாடற் புராணத்தினுள்ள மாணிக்கம் விற்ற படலம், கால்மாறியாடிய படலம், நரி பரியாக்கிய படலம் என்பவற்றை நோக்குழி இவ்வாசிரியரது அருங்கலையுணர்ச்சியின் பரப்பு வெளிப்படும். தொல்காப்பியம் முதலிய இலக்கணங்களிலும், எட்டுத்தொகை, பத்துப்பாட்டு முதலிய சங்கச் செய்யுட்களிலும், ஐம்பெருங் காப்பியங்களிலும், தேவாரம் முதலிய பன்னிரு திருமுறைகளிலும், மெய்கண்ட நூல்கள் முதலியவற்றிலும் இவ்வாசிரியர் நல்ல பயிற்சியுடையவர்; இதனை இந்நூலுரையுள் ஆண்டாண்டு எடுத்துக் காட்டும் பகுதிகளால் அறியலாகும். ஈண்டுச் சில காட்டுகின்றேன்;

"மகர வேலையென் றியானைபோன் மழையருந் தகழி
சிகர மாலைசூ ழம்மதி றிரைக்கரந் தழாவி
அகழ வோங்குநீர் வையையா லல்லது வேற்றுப்
பகைவர் சேனையாற் பொரப்படும் பாலதோ வன்றே"

என்னும் இந்நூல் அகழிச் சிறப்புணர்த்துஞ் செய்யுள்,

"வையைதன்
நீர்முற்றி மதில்பொரூஉம் பகையல்லா னேராதார்
போர்முற்றொன் றறியாத புரிசைசூழ் புனலூரன்"

என்னும் மருதக்கலியின் கருத்தையும்,

"செங்கதிர் மேனியான்போ லவிழ்ந்தன செழும்ப லாசம்
மங்குலூர் செல்வன்போல மலர்ந்தன காஞ்சி திங்கட்
புங்கவன் போலப் பூத்த பூஞ்சினை மரவஞ் செங்கை
அங்கதி ராழி யான்போ லலர்ந்தன விரிந்த காயா"

என்னும் இளவேனிலைச் சிறப்பிக்கும் இந்நூற் செய்யுள்,

"ஒருகுழை யொருவன்போ லிணர்சேர்ந்த மராஅமும்
பருதியஞ் செல்வன்போ னனையூழ்த்த செருந்தியும்
மீனேற்றுக் கொடியோன்போன் மிஞிறார்க்குங் காஞ்சியும்
ஏனோன்போ னிறங்கிளர்பு கஞலிய ஞாழலும்

"ஆனேற்றுக் கொடியோன்போ லெதிரிய விலவமும் ஆங்கத்
தீதுதீர் சிறப்பி னவர்க ணிலைபோலப்
போதவிழ் மரத்தொடு பொருகரை கவின்பெற
நோதக வந்தன்று விளவேனின் மேதக"

என்னும் பாலைக்கலியின் கருத்தையும் மேற்கொண்டுள்ளன.

"கொய்ம்மலர்க் குடுமிச் சேவல் கோழிளந் தகர்போர் மூட்டி"
"ஆறிடு மதமால் யானைப் பழுக்குலை யவரை"
"பாய தொன்மரப் பறவைபோற் பயன்கொள்வான் பதினெண்
டேய மாந்தருங் கிளந்தசொற் றிரட்சிதான்"
"கதிர்கலம் பெய்காட்சி போ லுதிர் பழம்"

என்னும் இந்நூற் செய்யுட் பகுதிகள்,

"கோட்டிளந் தகர்களுங் கொய்ம்மலர் தோன்றி போற்
சூட்டுடைய சேவலும்...போர்க்கொளீஇ"
"பொருவில் யானையின் பழுப்போற் பொங்கு காய்க்குலையவரை"
"முட்டிலா மூவறு பாடை மாக்களாற்
புட்பயில் பழுமரப் பொலிவிற் றாகிய"
"புதுக்கலம் போலும் பூங்கனியால்"

என்னும் சிந்தாமணிச் செய்யுட் பகுதிகளை முறையே ஒத்துள்ளன.

"வஞ்சவினைக் கொள்கலனு முடலைத்தீவாய் மடுக்கிலேன்
வரையுருண்டு மாய்ப்பே னல்லேன்"
"மழலைதேருஞ் சிறியனு மொருமதலை கையிற்கொண்ட
செம்பொன்மணி வள்ளம்போற் றேவர் யார்க்கும்
அறிவரியாய் சிறியேனை யெளிவந்தாண்ட வருமையறியேன்"
"முன்னு முதுபொருட்கு முன்னு முதுபொருளாய்ப்
பின்னும் புதுமைக்கும் பின்னுகும் பேரொளியாய்"
"மண்ணுய்ப் புனலாய்க் கனலாய் வளியாகி
விண்ணு யிருசுடரா யித்தனையும் வேறுகி"

என்னும் வாதவூரடிகள் பரவுவனவாகவுள்ள இந்நூற் செய்யுட் பகுதிகள் முறையே,

"தீயில் வீழ்கிலேன் றிண்வரை யுருள்கிலேன்"
"மையிலங்குநற் கண்ணிபங்கனே வந்தெனைப்
பணிகொண்டபின் மழக்
கையிலங்குபொற் கிண்ண மென்றலா லரியையென்
றுனைக் கருதுகின்றிலேன்"

"முன்னைப் பழம்பொருட்கு முன்னைப் பழம்பொருளே
பின்னைப் புதுமைக்கும் பேர்த்துமப் பெற்றியனே"

"வானாகி மண்ணாகி வளியாகி யொளியாகி
ஊனாகி யுயிராகி யுண்மையுமா யின்மையுமாய்"

என்னும் திருவாசகப் பகுதிகளைச் சிந்தனையிற் கொண்டு இயற்றப் பெற்றனவாகும்.

இனி, இவ்வாசிரியர் ஒன்பான் சுவையும் விஞ்சவும், பரிமான் செலவுபோற் பெருமித நடை பொருந்தவும் செய்யுளியற்றுந் திறன் வாய்ந்தவர். நம்பி திருவிளையாடலானது இந்நூற்கு முற்பட்டதும், பழைய தமிழ் வழக்குகளைப் பெரும்பாலும் தழுவிச் செல்வதுமாகவும் அதன் பயிற்சி குன்றவும், இதனையே யாவரும் விரும்பிக் கற்கவும் செய்தது இந்நூற் செய்யுட்களின் அழகேயெனல் மிகையாகாது. பத்தி நலங்கனிந்து கற்பார்க்குப் பெரும்பயன் விளைப்பதாய், சைவநன்மக்கள் யாவரானும் பெரிய புராணத்தை யடுத்துப் பாராட்டிப் படிக்கப் பெறுவதா யுள்ளது இந்நூலே.

இந்நூல் மூலமானது தமிழுக்கும் சைவத்திற்குமாகத் தம் வாழ்க்கையை ஈடுபடுத்திய பெரியாராகிய ஸ்ரீலஸ்ரீ ஆறுமுக நாவல ரவர்கள் முதலிய பலரால் முன் அச்சிடப் பெற்றுளது. திரிசிரபுரம் மகாவித்துவான் ஸ்ரீமீனாட்சி சுந்தரம் பிள்ளை யவர்கள் மாணாக்கராகிய சோடசாவதானம் சுப்பராயச் செட்டியாரவர்கள் இதற்கு ஓர் உரையெழுதி வெளிப்படுத்தி யுள்ளார்கள். பின் அவ்வுரையையே பெரிதுந் தழுவி ஈக்காடு, இரத்தினவேலு முதலியார் என்பவர்களால் ஓர் பொழிப்புரை யெழுதப்பெற்று வெளிவந்துளது. மதுரைக்காண்ட மட்டும் மதுரை இராமசுவாமிப் பிள்ளை யென்னும் ஞான சம்பந்தப்பிள்ளை என்பவர்களால் வேறுபட்ட பல பாடங்கொண்டு ஓர் பொழிப்புரை யெழுதி வெளிப்படுத்தப் பெற்றுளது. இவர்களனைவரும் அவ்வக் காலங்களிற் புரிந்துவைத்த இவ்வுதவிகளைத் தமிழ்மக்கள் யாவரும் பாராட்டுங் கடமைப் பாடுடையராவர்.

தமிழ் நூல்கள் பலவற்றையும் அழகிய முறையில் அச்சிட்டுப்பரப் பித்தமிழையும் சைவத்தையும் பேணிவரும் திருநெல்வேலித் தென்னிந் திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தின் அமைச்சரும், நனவிலும் கனவிலும் தமிழ் நலமே கருதிப்பேரூக்கத்துடன் உழைத்து வருபவரும் ஆகிய திருவாளர் வ. திருவரங்கம் பிள்ளையவர்கள் 'செட்டியாரவர்கள் உரையுடன் கூடிய திருவிளையாடற் பதிப்பு முற்றிலும் செலவாகி இப்பொழுது கிடைப்பதரிதாயினமையால், நீங்கள் இக்காலத்திற் கேற்றபடி திருத்தமான முறைதழுவிய ஓர் உரை எழுதித்தரல் வேண்டும்' என்று கூறிப் பலகாலும் என்னை வற்புறுத்தினமையால், திருவருளிருந்தவா றென்று நான் இவ்வுரையினை எழுதுவேனாயினேன். பல பதிப்புக்களை ஒத்து நோக்கி, மூலத்தின் வேறுபட்ட பாடங்களுட் சிறந்ததெனத் தோன்றுவதை அமைத்துக் கொண்டு பிறவற்றைப் பாடபேதமாக அமைத்திருக்கின்றேன். இந் நூற் செய்யுட்களின் இடர்ப் பட்ட சொற்பொருண் முடிபுகளை ஒழுங்குபடுத்துவது, இன்றியமையாதவும் ஒத்த கருத்துள்ளவுமாகிய பிற நூன் மேற்கோள்களை யெடுத்துக் காட்டி விளங்க வைப்பது முதலியவற்றில் எவ்வளவு அருமுயற்சி

யெடுத்துக் கொண்டிருக்க வேண்டு மென்பதும், இவ்வுரை எவ்வளவு திருத்தம் பெற்றுள்ள தென்பதும் நடுநிலைமுதலிய உயர்குணங்களுடையராய் ஒத்து நோக்கும் அறிவுடையா ரெவர்க்கும் நன்கு புலனுமாகலின், இங்கு அவைகள் எடுத்துக்காட்டப் பெற்றில.

இவ்வுரை யெழுதுவதில் எனக்குத் துணையாயிருந்து எழுதியுதவி வந்தோர் தமிழ் இலக்கிய இலக்கணங்களிலும் திருமுறைகளிலும் நல்ல பயிற்சியும் கூரிய அறிவும் வாய்ந்துளாரும், தமிழ்ப்பற்றும் சிவபத்தியும் மிக்காரும் ஆகிய என் இனிய நண்பர் திருவாளர் அ. மு. சரவண முதலியாரவர்களாவர். அவர்களுதவி இருந்திராவிடில், பலவினைச் செறிவுடைய என்னால் இப்பொழுது இவ்வுரை யெழுதியிருக்கவொண்ணாது. கழகத்தாரும் யானும் அவர்கட்கு நன்றி பாராட்டுங் கடமைப் பாடுடையோம்.

கல்வி அறிவு ஆற்றல்களில் மிகவும் சுருங்கியவனாகிய யான் பல வேலைகளுக்கிடையே எழுதிவந்த இவ்வுரையில் எத்தனையோ பல குற்றங்கள் காணப்படக்கூடும். அவற்றைப் பொறுத்தருளுமாறு பெரியோர்களை மிகவும் வேண்டுகின்றேன்.

ஒன்றுக்கும் பற்றாத என்னை இம்முயற்சியிற் புகுத்தி இதனை நிறைவேற்றுவித் தருளாநின்ற பரங்கருணைத் தடங்கடலாகிய சோமசுந்தரக் கடவுளின் திருவடித் தாமரைகளை எஞ்ஞான்றும் சிந்தித்து வாழ்த்தி வணங்க உன்னுவதன்றி எளியேன் செய்யக் கிடந்தது யாதுளது?

"ஞால நின்புக ழேமிக வேண்டுந்தென்
ஆல வாயி லுறையுமெம் மாதியே."

ந. மு. வேங்கடசாமி.

# உள்ளுறை

---



வெள்ளை யானைச் சாபந்தீர்த்தது



திருநகரங் கண்டது

ம. ப. உஎகூ]



தடாதகைப் பிராட்டியார் திருவவதாரம்



திருமணம்



வெள்ளியம்பலத் திருக்கூத்தாடியது



ம. ப. சஎ0]

குண்டோதரனுக்கு அன்னமிட்டது



ம. ப சஅப] அன்னக்குழியும் வையையுமழைத்தது




மலயத்துவசனை யழைத்தது




உக்கிரகுமார பாண்டியரது திருவவதாரம்

ம. ப. ௫௧௫]



வேல் வளை செண்டு கொடுத்தது

ம. ப. [illegible]௨ அ]



கடல்சுவற வேல்விட்டது

ம ப. ௫௭௬ ]



ம. ப. ௫அ௩] இந்திரன் முடிமேல் வளையெறிந்தது



ம. ப. சுகை]　　　மேருவைச் செண்டா லடித்தது




வேதத்துக்குப் பொருளருளிச் செய்தது

ம. ப. சுரு௯ ]



வருணன்விட்ட கடலை வற்றச் செய்தல்

ம. ப. எ0கூ]

திருச்சிற்றம்பலம்

# சிறப்புப்பாயிரம்

---

[அறுசீரடியாசிரிய விருத்தம்]

அறுகாற்பீ டத்துயர்மா லாழிகடைந்
தமுதையரங் கேற்று மாபோல்
அறுகாற்பே டிசைபாடுங் கூடன்மான்
மியத்தையருந் தமிழாற் பாடி
அறுகாற்பீ டுயர்முடியார் சொக்கேசர்
சந்நிதியி லமரர் சூழும்*
அறுகாற்பீ டத்திருந்து பரஞ்சோதி
முனிவனரங் கேற்றி னானே.

(இதன் பொருள்.) அறுகால் பீடத்து உயர்மால் - காலிலி யாகிய அனந்தன் என்னும் படுக்கையில் அறிதுயில் கொள்ளும் திரு மால், ஆழிகடைந்து அமுதை அரங்கேற்றுமாபோல் - பாற்கடலைக் கடைந்து அதிலுண்டாகிய அமிழ்தத்தைத் தேவர் கூட்டத்திற்கு அளித்தாற்போல, பரஞ்சோதி முனிவன் - பரஞ்சோதி முனிவன் என்னும் பெயருடைய பெரியோன், அறுகால் பேடு இசைபாடும் கூடல் மான்மியத்தை - ஆறுகாலையுடைய பெண் வண்டுகள் இசை பாடும் சோலைகள் சூழ்ந்த மதுரையின் மகத்துவத்தை, அருந்தமிழால் பாடி - அருமை வாய்ந்த தமிழ் மொழியாற் பாடி, அறுகால்பீடு உயர் முடியார் சொக்கேசர் சந்நிதியில் - அடியார்களருச்சிக்கும் அறுகம்புல்லுடன் பெருமைமிக்கு விளங்கும் திருமுடியை உடைய ராகிய சொக்கநாதர் சந்நிதியில், அமரர் சூழும் அறுகால் பீடத்து இருந்து அரங்கேற்றினான் - தேவகணங்கள் சூழ்ந்திருக்கும் ஆறு கால் மண்டபத்திலிருந்து அரங்கேற்றினான் என்றவாறு.

அறுகால் - பாம்பு: வினைத்தொகை நிலைக்களத்துப் பிறந்த அன் மொழித்தொகைக் காரணப்பெயர்; அற்ற காலையுடையதென விரி யும்; காலில்லாததென்பது கருத்து. பீடம் - ஈண்டுப் பள்ளி; ஆத னம் எனினும் ஆம்; என்னை?

''சென்றாற் குடையா மிருந்தாற்சிங் காதனமாம்
நின்றான் மரவடியா நீள்கடலுள்—என்றும்
புணையா மணிவிளக்காம் பூம்பட்டாம் புல்கும்
அணையாந் திருமாற் கரவு''

---

(பாடபேதம்) * அமரர் சூழ.

என்பவாகலினென்க. உயர்தல் - கண்வளர்தல்; பீடத்திலுள்ள சிறந்த மால் எனினுமாம். இசைபாடு மென்பதற் கேற்பச் சோலைகள் சூழ்ந்த என வருவிக்கப்பட்டது; பாடும் என்னும் பெயரெச்சம் இடப்பெயர் கொண்டது. திரிபுரமெரித்த விரிசடைக் கடவுளும் குன்றமெறிந்த முருகவேளும் அமரமுனிவணுகிய அகத்தியனும் என்றிவர் முதலாயினோரால் ஆராயப்பெற்றதும் திருந்திய இயல்வரம்புடையதும் ஆம் என்பார் 'அருந்தமிழால்' என்றார்; அருமை - பிறவற்றிற்கில்லாத சிறப்பு. அறுகால் - அறுகோடு; ஆல் ஒடுவின் பொருட்டாயிற்று. அமரர்கள் சோமசுந்தரக் கடவுளை வணங்குதற்கு வந்து மொய்த்திருக்கும் பீடமென்க. அமுதை அரங்கேற்றுதல் - அமிழ்தத்தைத் தேவர் கூட்டம் உண்ணச் செய்தல். முனிவன் அரங்கேற்றுதலாவது தான் பாடிய புராணத்தை அரங்கின்கண் உள்ள புலவர்களுக்குக் கூறி, அவர்கள் ஏற்கும்படி செய்தல். இது தொன்றுதொட்ட வழக்கமென்பது தொல்காப்பியம் நிலந்தரு திருவிற் பாண்டிய னவையத்து அரங்கேறியதென்பதனால் அறியலாகும். இச்செய்யுளில் ஆக்கியோன் பெயர், நுதலிய பொருள், களன் முதலியவை கூறப்பட்டிருத்தல் காண்க. இதனை இயற்றினார் இந்நூலாசிரியர்க்கு ஒருசாலை மாணாக்கர் முதலாயினாருள் ஒருவராதல் வேண்டும். ஏ : ஈற்றசை.

———

உ

திருச்சிற்றம்பலம்

# திருவிளையாடற் புராணம்

## மூலமும் உரையும்

---

## க. மதுரைக் காண்டம்

### காப்பு

[கலிவிருத்தம்]

சத்தி யாய்ச்சிவ மாகித் தனிப்பர
முத்தி யான முதலைத் துதிசெயச்
சுத்தி யாகிய சொற்பொரு ணல்குவ
சித்தி யானைதன் செய்யபொற் பாதமே.

(இ - ள்.) சத்தியாய் - சத்தியாகியும், சிவம் ஆகி-சிவமாகியும், தனி - ஒப்பற்ற, பரமுத்தி ஆன - பரமுத்திப் பேருகியும் உள்ள, முதலை - முதற் கடவுளை, துதிசெய - துதித்தற்கு, சுத்தி ஆகிய-தூய்மையவான, சொல் பொருள்-சொற்களையும் பொருள்களையும், சித்தி யானைதன் - யானை முகத்தையுடைய சித்திவிநாயகக் கடவுளின், செய்ய - செம்மையாகிய, பொன் - அழகிய, பாதம் - திருவடிகள், நல்குவ - அருளுவன எ - று.

இச்செய்யுள், எடுத்துக்கொண்ட நூல் இனிது முடிதற்பொருட்டுச் செய்யற்பாலதென ஆன்றோரொழுக்கத்தான் அநுமிக்கற் பாலதாய மங்கலம் கூறவெழுந்தது. மூத்த பிள்ளையாரின் திருவடிகளை வணங்குதலே இவண் இடையூறு போக்கி நூலினை யினிது முடித்தற்குக் காரணமாகக்கொண்ட மங்கலமாம்; இது காப்பு எனவும் படும். இறைவி பிடியுருவு கொள்ள இறைவன் களிற்றுருவு கொண்டு அருளினமையின் பிள்ளையார் யானைமுகத்துடன் ருேன்று வாராயினர்; இதனையும், பிள்ளையார் வழிபடும் அடியாரின் இடர் களைதற்கே இறைவனுல் அருளப்பட்டவ ரென்பதனையும்,

''பிடியத னுருவுமை கொளமிகு கரியது
வடிகொடு தனதடி வழிபடு மவரிடர்
கடிகண பதிவர வருளினன் மிகுகொடை
வடிவினர் பயில்வலி வலமுறை யிறையே''

"செற்றிட்டே வெற்றிச்சேர் திகழ்ந்ததும்பி மொய்ம்புறுஞ்
சேரேவாரா நீள்கோதைத் தெரியிழை பிடியதுவா
யொற்றைச்சேர் முற்றற்கொம் புடைத்தடக்கை முக்கண்மிக்
கோவாதேபாய் மாதானத் துறுபுகர் முகவிறையைப்
பெற்றிட்டே மற்றிப்பார் பெருத்துமிக்க துக்கமும்
பேராநோய்தா மேயாமை பிரிவுசெய்த வனதிடங்
கற்றிட்டே யெட்டெட்டுக் கலைத்துறைக் கரைச்செலக்
காணுதாரே சேராமெய்க் கழுமல வளநகரே"

என்னும் ஆளுடைய பிள்ளையார் அருளிச் செயல்களானறிக. மதுரையம்பதி சத்தி பீடம் அறுபத்து நான்கனுள் முதன்மையதாகலானும், அருளாகிய சத்தியை யுணர்ந்தே சிவத்தை யுணரவேண்டு மென்பவாகலானும், இந்நூலாசிரியர்க்குப் பராசத்தியார் காட்சி தந்து இதனைப் பாடுமாறு அருள்புரிந்தனராகலானும் 'சத்தியாய்' என்று தொடங்கப்பெற்றது. பரமுத்தி - எல்லா முத்திகளினும் மேலாய முத்தி; திருவடியிற் கலத்தலாகிய முத்தி. வீடு பேற்றுக்கு ஆதாரமாகிய இறைவனை வீடுபேறெனவே உபசரித்துக் கூறுவர் ஆன்றோர். சொல்லும் பொருளும் வடிவமான சத்தியும் சிவமுமாம் முதற்பொருளைத் துதித்தற்குச் சொல்லும் பொருளும் அருளப்பெறுதல் ஒருதலை யென்பார் 'சத்தியாகிய சொற்பொரு ணல்குவ' என்றார். (க)

---

## வாழ்த்து

[அறுசீரடியாசிரிய விருத்தம்]

மல்குக வேத வேள்வி வழங்குக சுரந்து வானம்
பல்குக வளங்க ளெங்கும் பரவுக வறங்க ளின்பம்
நல்குக வுயிர்கட் கெல்லா நான்மறைச் சைவ மோங்கிப்
புல்குக வுலக மெல்லாம் புரவலன் செங்கோல் வாழ்க.

(இ - ள்.) வேத வேள்வி-வேதத்திற் கூறப்பட்ட வேள்விகள், மல்குக - நிரம்புக; வானம் - முகில்கள், சுரந்து வழங்குக-நீரினைச் சுரந்து பொழிக; எங்கும் - எவ்விடத்தும், வளங்கள் பல்குக - செல்வங்கள் பெருகுக; அறங்கள் பரவுக - தருமங்கள் பரவுக; உயிர்கட்கு எல்லாம் - எல்லா வுயிர்கட்கும், இன்பம் நல்குக - இன்பம் அளிக்கப்படுக; உலகம் எல்லாம் - உலக முழுதும், நான்மறைச் சைவம் - நான்கு வேதங்களின் துணி பொருளாகிய சைவ சமயமானது, ஓங்கிப் புல்குக - தழைத்தோங்கி நிலைபெறுக; புரவலன் - அரசனது, செங்கோல் வாழ்க - செவ்விய கோல் வாழ்க எ - று.

வேள்வி வேதத்திற் கூறப்பட்டதாகலின் 'வேத வேள்வி' எனப்பட்டது. 'வேத வேள்வியை' என்பது தமிழ் மறை. வேள்வியால் மழையும், மழையால் வளமும், வளத்தால் அறமும் இன்பமும் உளவாகலின் அம்முறை வைத்து, உலகியலின் வேருகிய ஈறிலின்பம்

எய்துதற்குரிய சைவ நெறியை அவற்றின் பின் வைத்து, அவை யனைத்திற்கும் அரணாக வுள்ளது அரசன் செங்கோலாகலின் அதனை இறுதிக்கண் வைத்து வாழ்த்துக் கூறினர். நல்கப்படுக எனற் பாலது படு சொற்ளுக்கு நல்குக என நின்றது. 'அமரர்கண் முடியு மறுவகையானும்' என்னும் தொல்காப்பியப் புறத்திணையியற் சூத்திர வுரையில் 'முனிவரும் பார்ப்பாரும் ஆனிரையும் மழையும் முடியுடை வேந்தரும் உலகும்' என்னும் ஆறனையும் அமரர்கண் முடியும் அறு முறை என்பர் நச்சினார்க்கினியர். இஃது ஆளுடைய பிள்ளையார் அருளிய,

"வாழ்க வந்தணர் வானவ ரானினம்
வீழ்க தண்புனல் வேந்தனு மோங்குக
ஆழ்க தீயதெல் லாமர னாமமே
சூழ்க வையக முந்துயர் தீர்கவே"

என்னும் பாசுரத்தின் பொருளோடு பெரிதொத்துச் சிறிதொவ் வாமை காண்க. இந்நூலாசிரியர் வேள்வி என்பதனல் அவ்வாற னுள் அந்தணர் வானவர் ஆனினங்களைப் பெற வைத்து, வானம் என்பதனல் மழையையும், புரவலன் என்பதனல் வேந்தனையும் விளந்து கூறி, ஏனைப் பகுதிகளால் உலகினை யெடுத்தோதி வாழ்த் தினரென்க. உலகமெல்லாம் சைவமோங்கிப் புல்குக என்றதும் உயிர்களெல்லாம் பேரின்ப மெய்த வேண்டுமென்னும் கருத்துப் பற்றியாகலின் உலகினை வாழ்த்தியதேயாயிற்று. (க)

---

## நூற்பயன்

[எண்சீரடியாசிரிய விருத்தம்]

திங்களணி திருவால வாயெம் மண்ணல்
திருவிளையாட் டிவையன்பு செய்து கேட்போர்
சங்கநிதி பதுமநிதிச் செல்வ மோங்கித்
தகைமைதரு மகப்பெறுவர் பகையை வெல்வர்
மங்கலநன் மணம்பெறுவர் பிணிவந் தெய்தார்
வாழ்நாளு நனிபெறுவர் வானு டெய்திப்
புங்கவரா யங்குள்ள போக மூழ்கிப்
புண்ணியராய்ச் சிவனடிக்கீழ் நண்ணி வாழ்வார்.

(இ - ள்.) திங்கள் அணி - சந்திரனை யணிந்த, திருவாலவாய்- திருவாலவாயில் எழுந்தருளிய, எம் அண்ணல் - எம் இறைவன் புரிந் தருளிய, திருவிளையாட்டு இவை - இத் திருவிளையாடல்களை, அன்பு செய்து கேட்போர் - அன்போடு வழிபாடு செய்து கேட்பவர், சங்க நிதி பதுமநிதி - சங்கநிதி பதுமநிதிகளைப் போலும், செல்வம் ஓங்கி - செல்வத்தால் உயர்ந்து, தகைமை தரும் மகப் பெறுவர்-பண்புடைய மக்கட் பேற்றையடைவர்; பகையை வெல்வர் - பகைகளைக் கடப்பர்; மங்கலம் நல் மணம் பெறுவர் - மங்கலமாகிய நல்ல மணங்களைப்

பெறுவர்; பிணிவந்து எய்தார் - நோய்கள் வந்து அடையப் பெறார்; வாழ் நாளும் நனி பெறுவர் - நீண்ட ஆயுளையும் பெறுவர்; வான் நாடு எய்தி - விண்ணுலகிற் சென்று, புங்கவராய்-தேவராய், அங்கு உள்ள போகம் மூழ்கி - அங்குள்ள இன்பங்களை மிக நுகர்ந்து, புண்ணியராய் - சிவபுண்ணியம் உடையவராய், சிவன் அடிக்கீழ் - சிவபெருமான் திருவடி நீழலில், நண்ணி வாழ்வார்-இரண்டறக் கலந்து வாழ்வார், எ - று.

திங்களணி அண்ணலென இயைக்க. திருவிளையாட்டு என்றது அதனைக் கூறும் நாலுக்காயிற்று. இறைவன் செய்யுஞ் செயலெல்லாம் எளிதின் முடிதனோக்கி அவற்றை அவனுடைய விளையாட்டுக்கள் என்ப;

"காத்தும் படைத்துங் கரந்தும் விளையாடி"

என்னும் திருவாசகமும்,

"சொன்னவித் தொழில்க ளென்ன காரணந் தோற்ற வென்னின்
முன்னவன் விளையாட் டென்று மொழிதலுமாம்"

என்னும் சிவஞான சித்தித் திருவிருத்தமும் நோக்குக. சங்கம், பதுமம் என்பன சில பேரெண்கள்; அவ்வளவினையுடைய நிதிகள் சங்கநிதி, பதுமநிதி எனப்படும்; சங்கு போலும் தாமரை போலும் வடிவினையுடைய நிதிகள் எனக் கூறுவாரு முளர். இவை குபேரனிடத்தி லுள்ளன வென்பர். திருநாவுக்கரசரும் 'சங்கநிதி பதுமநிதி யிரண்டுந்தந்து' என அருளிச்செய்தல் காண்க. வாழ்நாளு நனிபெறுவர் என்பதுகாறும் இம்மைப் பயனும், புங்கவரா யங்குள்ள போக மூழ்கி என்பதனால் மறுமைப் பயனும், சிவனடிக்கீழ் நண்ணி வாழ்வார் என்பதனால் முத்திப் பயனும் முறையே கூறப்பட்டன. இச் செய்யுளில், திருவிளையாட்டிவை என்பதனால் நுதலிய பொருளும், அன்பு செய்து கேட்போர் என்பதனால் கேட்டற்குரிய அதிகாரியும், பிறவற்றால் கேட்போ ரெய்தும் பயனும் பெறப்பட்டமை காண்க. ()

---

## கடவுள் வாழ்த்து

### சிவம்

[அறுசீரடியாசிரிய விருத்தம்]

வென்றுளே புலன்க ளைந்தார் மெய்யுண ருள்ளந் தோறுஞ்
சென்றுளே யமுத மூற்றுந் திருவருள் போற்றி யேற்றுக்
குன்றுளே யிருந்து காட்சி கொடுத்தருள் கோலம் போற்றி
மன்றுளே மாறி யாடு மறைச்சிலம் படிகள் போற்றி.

(இ - ள்.) உள்ளே புலன் வென்று களைந்தார் - அகத்தின்கண் புலன்களை வென்று போக்கினவரின், மெய் உணர் - மெய்ம்மையை உணர்ந்த, உள்ளம் தோறும்-இதயங்கள் தோறும், சென்று-போய், உள்ளே - அவர்கள் அறிவினுள்ளே, அமுதம் ஊற்றும் - அமிழ்தத்

தைச் சொரிகின்ற, திருவருள் போற்றி - திருவருள் காக்க, குன்று ஏறு உள்ளே இருந்து - வெள்ளி மலைபோலும் இடபத்தின்கண் அமர்ந்து; காட்சி கொடுத்தருள் - தரிசனம் தந்தருளுகின்ற, கோலம் போற்றி - திருவுருவம் காக்க; மன்று உள்ளே - வெள்ளி மன்றத்தின் கண், மாறி ஆடும் - கால் மாறி நடித்தருளுகின்ற, மறைச் சிலம்பு - வேதமாகிய சிலம்பினை யணிந்த, அடிகள் போற்றி - திருவடிகள் காக்க எ - று.

புலன் - சுவை முதலியன; ஈண்டு அவற்றின்மேற் செல்கின்ற அவாவினை உணர்த்துகின்றது. பொறிகள் புறத்தின்கண்ணவேனும் ஆசை அகத்தே நிகழ்தலின் 'உள்ளே புலன்' எனப்பட்டது; 'ஐவரை யகத்தே வைத்தீர்' என்பது ஆளுடைய அரசுகள் திருவாக்கு. அமுதம் என்றது சிவானந்தத்தை; அது தேனென்றும் பிறவாறும் கூறப் படுவதுண்டு; 'அனைத்தெலும் புண்ணெக வானந்தத் தேன் சொரி யும் - குனிப்புடையான்' என்பது மணிவாசகம். குன்றுளே என்ப தில் உள் ஏழனுருபு. போற்றி - காக்க என வேண்டிக்கோடற் பொருடரும் வியங்கோள் வினைமுற்று; நம என்பது போல் வணக்கம் என்னும் பொருளதுமாம்; பரவப்படுக என்னும் பொருள் பயப்பது மாம். இப்பாட்டு விஞ்ஞானகலர், பிரளயாகலர், சகலர் என்னும் மூவகை உயிர்கட்கும் முறையே அருளுமுறைமை குறிக்கின்றது எனவும் கூறுவர். (௬)

சத்தி

[வேறு]

சுரும்புமுரல் கடிமலர்ப்பூங் குழல்போற்றி
　　யுத்தரியத் தொடித்தோள் போற்றி
கரும்புருவச் சிலைபோற்றி கவுணியர்க்குப்
　　பால்சுரந்த கலசம் போற்றி
இரும்புமனங் குழைத்தென்னை யெடுத்தாண்ட
　　வங்கயற்க ணெம்பி ராட்டி
அரும்புமிள நகைபோற்றி யாரணநூ
　　புரஞ்சிலம்பு மடிகள் போற்றி.

(இ - ள்.) சுரும்பு முரல்-வண்டுகள் ஒலிக்கின்ற, கடிமலர் - வாசனை பொருந்திய மலரை யணிந்த, பூங்குழல் போற்றி-அழகிய கூந்தல் காக்க; உத்தரியம் தொடி - உத்தரியத்தையும் வளையலையும் அணிந்த, தோள் போற்றி - திருத்தோள்கள் காக்க; கரும்புருவம் சிலை போற்றி - கரிய புருவங்களாகிய விற்கள் காக்க; கவுணியர்க்கு- ஆளுடைய பிள்ளையாருக்கு, பால் சுரந்த - ஞானப்பால் சுரந்தருளிய, கலசம் போற்றி - கலசம் போலும் கொங்கைகள் காக்க; இரும்பு மனம் - இரும்பு போலும் வலிய மனத்தை, குழைத்து - இளகச் செய்து, என்னை - (பிறவிக்கடலுள் அழுந்தும்) அடியேனை, எடுத்து- (அழுந்தாவகை) தூக்கி, ஆண்ட-ஆண்டருளிய, அம் கயல்கண்-அழ கிய கயல்போலும் கண்களையுடைய, எம்பிராட்டி - எம் இறைவி யின், அரும்பும்-அரும்புகின்ற, இளநகை போற்றி - புன்முறுவல்

காக்க; ஆரண நூபுரம்-வேதங்களாகிய சிலம்புகள், சிலம்பும்-ஒலிக்கின்ற, அடிகள் போற்றி – திருவடிகள் காக்க எ – று.

இருப்பு மனம் எனற்பாலது மெலிந்து நின்றது; 'இரும்பு தரு மனத்தேனை யீர்த்தீர்த்தெ னென்புருக்கி' எனவும், 'இருப்பு நெஞ்ச வஞ்ச னேனை யாண்டு கொண்ட நின்னதாள்' எனவும் ஆளுடைய வடிகள் கூறுவன இங்கே சிந்திக்கற்பாலன. முதற்கட் குழலையும் ஈற்றின்கண் அடிகளையும் கூறியது எல்லா அங்கங்களையும் அகப்படுத்துப் பரவுங் குறிப்பினுலென்க.

பரசிவம்

[கலிநிலைத்துறை]

பூவண்ணம் பூவின் மணம்போல மெய்போத மின்பம்*
ஆவண்ண மெய்கோண் டவன்றன் வலியாணை தாங்கி
மூவண்ண றன்சந் நிதிமுத் தொழில்செய்ய வாளா
மேவண்ண லன்னுன் விளையாட்டின் வினையை வெல்வாம்.

(இ - ள்.) பூவண்ணம் பூவின்மணம் போல – பூவும் அதன் நிறமும் அதன் மணமும் பிரிப்பின்றி நிற்றல் போல, மெய் போதம் இன்பம் - உண்மை அறிவு ஆனந்தம் இம்மூன்றும் பிரியாது, மெய் ஆம் வண்ணம் கொண்டவன் - திருமேனி ஆகும் வண்ணம் கொண்டவனும், தன்வலி ஆணை தாங்கி–தனது சத்தியின் ஏவலையேற்று, மூவண்ணல் - அயன் அரி அரன் என்னும் மும்மூர்த்திகளும், தன் சந்நிதி – தனது திருமுன்னே, முத்தொழில் செய்ய - ஆக்கல் அளித்தல் அழித்தலாகிய மூன்று தொழில்களையும் செய்யா நிற்க, வாளா மேவு அண்ணல் - அசைவின்றி நிற்கும் பெருமையுடையவனுமாகிய, அன்னுன்– அவ்விறைவனின், விளையாட்டின் - திருவிளையாடல்களைக் கூறுதலினுலே, வினையை வெல்வாம் – வினையாகிய பகையை வெல்வாம் எ - று.

வலி – சத்தி. தாங்கி என்றது முடிமேற் கொண்டென்றபடி. இறைவனுடைய சத்தியால் முத்தொழிலும் நடைபெறுமென்பதனை,

"உரைத்தவித் தொழில்கண் மூன்று மூவருக் குலக மோத
வரைத்தொரு வனுக்கே யாக்கி வைத்ததிங் கென்னை யென்னின்
விரைக்கம லத்தோன் மாலு மேவலான் மேவி னோர்கள்
புரைத்ததி கார சத்தி புண்ணிய நண்ண லாலே"

என்னும் சிவஞான சித்தியாலறிக. (௫)

சிற்சத்தி

அண்டங்க ளெல்லா மணுவாக வணுக்க ளெல்லாம்
அண்டங்க ளாகப் பெரிதாய்ச்சிறி தாயி னுனும்
அண்டங்க ளுள்ளும் புறம்புங்கரி யாயி னுனும்
அண்டங்க ளீன்ற துணையென்ப ரறிந்த நல்லோர்.

---

(பா - ம்.) * மெய்ப்போத வின்பம்.

(இ - ள்.) அண்டங்கள் எல்லாம் - எல்லா அண்டங்களும், அணுவாக - அணுவாகத் தோன்ற, பெரிதாய் - பெரிய பொருளாகி, அணுக்கள் எல்லாம் - எல்லா அணுக்களும், அண்டங்களாக - அண்டங்களாகத் தோன்ற, சிறிதாயினும் - நுண்பொருளாயினும், அண்டங்கள் உள்ளும் புறம்பும் - அண்டங்களின் அகத்தும் புறத்தும், கரி ஆயினும் - சான்றாயினுமாகிய இறைவனை, அண்டங்கள் ஈன்றாள் - அவ்வண்டங்களைப் பெற்ற உமையம்மையாருக்கு; துணை என்பர் - துணையாக நிற்பவன் என்று சொல்லுவர், அறிந்த நல்லோர் - மெய் உணர்ந்த பெரியோர் எ - று.

நிரனிறை கொண்டு கூட்டி உரைக்கப்பட்டது. இறைவன் அண்டங்கள் எல்லாம் அணுவாகப் பெரிதாயிருக்குந் தன்மை,

"அண்டப் பகுதியி னுண்டைப் பிறக்கம்
அளப்பருந் தன்மை வளப்பெருங் காட்சி
ஒன்றனுக் கொன்று நின்றெழில் பகரின்
நூற்றொரு கோடியின் மேற்பட விரிந்தன
இன்னுழை கதிரின் றுன்னணுப் புரையச்
சிறிய வாகப் பெரியோன்"

எனத் திருவாசகத்துள் ஓதப்பட்டது.

திருவிசைப்பாவிலும்,

"அண்டமோ ரணுவாம் பெருமைகொண் டணுவோர்
அண்டமாஞ் சிறுமைகொண் டடியேன்,
உண்டவூ னுனக்காம் வகையென துள்ளம்
உள்கலந் தெழுபரஞ் சோதி"

எனப் பெரிதும் சிறிதுமாந்தன்மை கூறப்பெற்றமை காண்க. ஆயினுமென்புழி, ஆயினுக்கும் எனக் குவ்வுருபு விரித்துப் பொருளுரைத்தலுமாம். (௬)

## சொக்கநாதர்

[கலி விருத்தம்]

பூவி னாயகன் பூமக ணாயகன்
காவி னாயக னாதிக் கடவுளர்க்
காவி நாயக னங்கயற் கண்ணிமா
தேவி நாயகன் சேவடி யேத்துவாம்.

(இ - ள்.) பூ இல் நாயகன் - தாமரை மலரை இருக்கையாக வுடைய அயனும், பூமகள் நாயகன் - செந்தாமரை மலரில் இருக்கும் திருமகளின் தலைவனாகிய அரியும், காவின் நாயகன் - கற்பகத் தருவிற்குத் தலைவனாகிய இந்திரனும், ஆதி - முதலான, கடவுளர்க்கு-தேவர்கட்கு, ஆவிநாயகன் - பிராணநாதனும், அம்கயல் கண்ணி - அழகிய கயல் போன்ற கண்களையுடையவராகிய, மாதேவி நாயகன்-பெருமை

பொருந்திய உமாதேவியாரின் தலைவனுமாகிய சொக்கநாதனின், சேவடி - சிவந்த திருவடிகளை, ஏத்துவாம் - துதிப்பாம் எ - று.

இல் - இல்லமாகவுடைய. காவினையுடைய விண்ணுலகிற்கு நாயகனென்பார், 'காவிநாயகன்' என்றார். எல்லாத் தேவர்களிடத்து மிருந்து அவர்களை யியக்குவிப்பான் இறைவனாகலின் 'ஆவி நாயகன்' என்றார். கண்ணியாகிய தேவியென்க. (எ)

அங்கயற்கண்ணம்மை

[அறுசீரடியாசிரிய விருத்தம்]

பங்கயற்கண் ணரியபரம் பரனுருவே
தனக்குரிய படிவ மாகி*
இங்கயற்க ணகனுலக மேண்ணிறந்த†
சராசரங்க ளீன்றுந் தாழாக்
கோங்கயற்கண் மலர்க்கூந்தற் குமரிபாண்
டியன்மகள்போற் கோலங் கோண்ட
அங்கயற்க ணம்மையிரு பாதப்போ
தெப்போது மகத்துள் வைப்பாம்.

(இ - ள்.) பங்கயற்கு அண் அரிய - பிரமனுக்கும் அணுகுதற் கரிய, பரம்பரன் உருவே - சிவபெருமான் திருவுருவே, தனக்கு உரிய படிவம் ஆகி - தனக்கு உரிய திருவுருவமாகப் பெற்று, இங்கு - இவ் விடத்தும், அயற்கண் - அயலிடத்தும் உள்ள, அகன் உலகம் - இட மகன்ற உலகங்களையும், எண் இறந்த - அளவற்ற, சர அசரங்கள் - இயங்குவன நிற்பனவாகிய பொருள்களையும், ஈன்றும் - பெற்றும், தாழாக் கொங்கை - தளராத கொங்கைகளையும், அல் கள் மலர் கூந்தல் - இருள்போலும் தேனிறைந்த மலர்களை யணிந்த கூந்தலையு முடைய, குமரி - கன்னியாகிய, பாண்டியன் மகள்போல் - மலையத் துவச பாண்டியனின் திருமகளாரைப்போல், கோலம்கொண்ட - திருவுருத் தாங்கிய, அங்கயற்கணம்மை - அங்கயற்கணம்மையாரின், இருபாதப் போது - திருவடி மலர் இரண்டனையும், எப்போதும் - எஞ்ஞான்றும், அகத்துள் வைப்பாம் - மனத்தின்கண் வைத்துச் சிந்திப்பாம் எ - று.

பரம்பரன் - எவற்றினுக்கும் மேலோன். இறைவன் திருவுருக் கொள்ளுமாறே சத்தியும் உருவு கொள்ளுதலையும், இறைவி உலகுயி ரெல்லாம் பெற்றும் கன்னியாயிருத்தலையும்,

"சத்தியாய் விந்து சத்தி யாய்மனோன் மனிதா னாகி
யொத்துறு மகேசை யாகி யுமைதிரு வாணி யாகி
வைத்துறுஞ் சிவாதிக் கிங்ஙன் வருஞ்சத்தி யொருத்தி யாகும்
எத்திற னின்றா னீச னத்திற மவளு நிற்பள்"

(பாடம்.) * படிவமாக்கி. † உலகத் தெண்ணிறந்த.

''சிவஞ்சத்தி தன்னை யீன்றுஞ் சத்திதான் சிவத்தை யீன்றும்
உவந்திரு வரும்பு ணர்ந்திங் குலகுயி ரெல்லா மீன்றும்
பவன்பிரம சாரி யாகும் பான்மொழி கன்னி யாகும்
தவந்தரு ஞானத் தோர்க்கித் தன்மைதான் றெரியு மன்றே''

என்னும் சிவஞான சித்தித் திருவிருத்தங்களான் முறையே யுணர்க. 'கொங்கயற்கண்' என்புழி ஐகாரம் திரிந்தது. மலையத்துவச பாண்டியனது வேள்வியின்கண்ணே இறைவி மூவாட்டைக் குழவியாகத் தோன்றியருளினமையால் 'பாண்டியன் மகள்போற் கோலங் கொண்ட' என்றார். அங்கயற்கணம்மை - பெயர்; மீனாட்சியம்மை. போதுமென்னும் உம்மை தொக்கது. பொழுது என்பது போது என மருவிற்று. அகத்துள் வைத்தல் - சிந்தித்தல். (அ)

சபாபதி

உண்மையறி வானந்த வுருவாகி
யெவ்வுயிர்க்கு முயிராய் நீரின்
தண்மையனல் வெம்மையெனத் தனையகலா
திருந்துசரா சரங்க ளீன்ற
பெண்மையுரு வாகியதன் னானந்தக்
கோடிமகிழ்ச்சி பெருக யார்க்கும்
அண்மையதா யம்பலத்து ளாடியருள்
பேரொளியை யகத்துள் வைப்பாம்.

(இ - ள்.) உண்மை அறிவு ஆனந்த உருவாகி-சத்து சித்து ஆனந்தமே திருவுருவாகக்கொண்டு, எவ்வுயிர்க்கும் உயிராய்-எல்லா உயிர்களுக்கும் உயிராய், நீரின் தண்மை-நீரில் தட்பமும், அனல் வெம்மை என - தீயில் வெப்பமும் போல, தனை அகலாது இருந்து - தன்னை நீங்காதிருந்து, சர அசரங்கள் ஈன்ற - திரிவனவும் நிற்பனவுமாகிய பொருள்களைப் பெற்ற, பெண்மை உருவாகிய-பெண்மை வடிவாகிய, தன் ஆனந்தக்கொடி - சிவகாம வல்லியார், மகிழ்ச்சி பெருக - கண்டு களிகூர, யார்க்கும் - அனைவருக்கும், அண்மையதாய் - அணித்தாய், அம்பலத்துள் - பொற் சபையின்கண், ஆடியருள் - திருநடனம் செய்தருளும், பேரொளியை - பெரிய ஒளிப்பிழம்பாகிய சபாபதியை, அகத்துள் வைப்பாம் - மனத்துள் வைத்துச் சிந்திப்பாம் எ - று.

'நீரின் றண்மை அனல் வெம்மை' என்பன இறைவி இறைவனோடு தாதான்மியமாய் நிற்குந் தன்மையை உணர்த்த வந்த உவமைகள். தன் ஆனந்தக் கொடி - சிவகாமவல்லி என்னும் பொருட்டு; தன் - சிவம்; அன்றி, ஆனந்தக்கொடி என்பதனைப் பெயராக்கித் தனது ஆனந்தக்கொடி எனலும் ஆம். இறைவி கண்டு மகிழ இறைவன் திருக்கூத்தியற்றுதலை,

''செய்ஞ்ஞின்ற நீல மலர்கின்ற தில்லைச்சிற் றம்பலவன்
மைஞ்ஞின்ற வொண்கண் மலைமகள் கண்டு மகிழ்ந்துநிற்க
நெய்ஞ்ஞின் றெரியும் விளக்கொத்த நீல மணிமிடற்றான்
கைஞ்ஞின்ற வாடல்கண் டாற்பின்னைக் கண்கொண்டு காண்பதென் [னே''

என்னுந் தேவாரத் திருவிருத்தத்தாலும் அறிக. (கூ)

சோமசுந்தரர்

சடைமறைத்துக் கதிர்மகுடந் தரித்துநறுங்
கோன்றையந்தார் தணந்து வேப்பந்
தோடைமுடித்து விடநாகக் கலனகற்றி
மாணிக்கச் சுடர்ப்பூ ணேந்தி
விடைநிறுத்திக் கயலேடுத்து வழுதிமரு
மகனாகி மீன நோக்கின்
மடவரலை மணந்துலக முழுதாண்ட
சுந்தரனை வணக்கஞ் செய்வாம்.

(இ - ள்.) சடை மறைத்து - சடையை மறையச் செய்து, கதிர் மகுடம் - ஒளிபொருந்திய திருமுடியை, தரித்து-சூடி, நறுகொன்றை அம்தார்-மணமிகுந்த கொன்றை மலர்களாலாகிய அழகிய மாலையை, தணந்து - நீக்கி, வேப்பம் தொடை முடித்து - வேப்பம் பூக்களாலாகிய மாலையை அணிந்து, விடநாகக் கலன் அகற்றி-நஞ்சையுடைய நாகங்களாகிய அணிகளை அகற்றி, மாணிக்கம் சுடர் பூண் ஏந்தி - நவமணிகளாலாகிய ஒளியையுடைய அணிகளை அணிந்து, விடை நிறுத்தி - இடபக்கொடியை உயர்த்தாது நிறுத்தி, கயல் எடுத்து - மீனக்கொடியை உயர்த்தி, மீனம் நோக்கின் - மீன்போலும் கண்களையுடைய, மடவரலை - தடாதகைபிராட்டியாரை, மணந்து - திருமணம் செய்ததனால், வழுதி மருமகனாகி - மலயத்துவச பாண்டியனின் மருமகனாகி, உலகம் முழுது - எல்லா உலகங்களையும், ஆண்ட - ஆண்டருளிய, சுந்தரனை வணக்கம் செய்வாம் - சோமசுந்தரக் கடவுளை வணங்குவாம் எ - று.

இறைவன் 'பிறவாயாக்கைப் பெரியோன்' ஆகலின் அருள் காரணத்தாற் பாண்டி வேந்தாதற்கேற்பத் தனதுண்மைத் திருக்கோலத்தையே மாற்றி வந்தனனென்பார் 'சடைமறைத்துக் கதிர்மகுடந் தரித்து' என்றிங்ஙனங் கூறினர்.

"கடுக்கை மலர்மாற்றி வேப்பமலர் சூடி
ஐவாய்க் காப்புவிட் டணிபூ ணணிந்து
விரிசடை மறைத்து மணிமுடி கவித்து
விடைக்கொடி நிறுத்திக் கயற்கொடி யெடுத்து
வழுதியாகி"

என்னும் கல்லாடத்துடன் இப்பாட்டு ஒற்றுமையுற்று விளங்குதல் காண்க.

முழுதென்பது எஞ்சாமைப் பொருட்டு. வணக்கஞ் செய்வாம் என்னும் இருசொல்லும் ஒரு சொன்னீரவாய்ச் சுந்தரனை என்னும் இரண்டாவதற்கு முடிபாயின. (௧௦)

### தடாதகைப்பிராட்டியார்

செழியர்பிரான் றிருமகளாய்க் கலைபயின்று
முடிபுனைந்து செங்கோ லோச்சி
முழுதுலகுஞ் சயங்கொண்டு திறைகொண்டு
நந்திகண முனைப்போர் சாய்த்துத்
தொழுகணவற் கணிமணமா லிகைசூட்டித்
தன்மகுடஞ் சூட்டிச் செல்வந்
தழைவுறுதன் னரசளித்த பெண்ணரசி
யடிக்கமலந் தலைமேல் வைப்பாம்.

(இ-ள்.) செழியர் பிரான் - பாண்டியர் தலைவனாகிய மலயத்துவசனின், திருமகளாய் - திருமகளாய்த் தோன்றி, கலைபயின்று - எல்லாக் கலைகளையும் கற்று, முடிபுனைந்து - திருமுடி சூடி, செங்கோல் ஓச்சி - அரசு நடாத்தி, முழுது உலகும் - எல்லா உலகங்களையும், சயங்கொண்டு - வெற்றி கொண்டு, திறைகொண்டு - திறைப்பொருளை ஏற்று, நந்தி கணம் - நந்திதேவர் முதலிய சிவகணங்களை, முனைப்போர் - போர்முனையில், சாய்த்து-வலிகெடச் செய்து, தொழுகணவற்கு - (தன்னாலும் அனைவராலும்) தொழப்பெறுகின்ற நாயகனுக்கு, அணிமண மாலிகை சூட்டி - அழகிய மணமாலையைச் சூட்டி, தன்மகுடம் சூட்டி - தனது திருமுடியையும் புனைவித்து, செல்வம் தழைவுறு - செல்வம் நிரம்பப்பெற்ற, தன் அரசு அளித்த - தனது அரசியலையும் கொடுத்தருளிய, பெண்ணரசி-மங்கையர்க்கரசியாகிய தடாதகைப்பிராட்டியாரின், அடிக்கமலம் - திருவடித் தாமரைகளை, தலைமேல் வைப்பாம் - முடியின்மீது சூடுவாம் எ - று.

இறைவி பாண்டியற்கு மகளாய்த் தோன்றிப் புரிந்தருளிய செயலெல்லாம் முறையானே இப்பாட்டில் தொகுத்துரைக்கப்பட்டவாறறிக. நந்திகணம்-நந்தியை முதலாகவுடைய கணம். முனைப்போர் என்பதைப் போர்முனை என மாற்றுக. சாய்தல் - மெலிதல்; சாய்த்தல் அதன் பிறவினை. தொழு கணவன்-தொழப்படுங் கணவன். மேற்பாட்டினும் இப்பாட்டினும் கூறிய வரலாற்றைத் தடாதகைப் பிராட்டியார் திருவவதாரப்படலத்தானும், திருமணப்படலத்தானும் அறிக.

### வெள்ளியம்பலவாணர்

பொருமாறிற் கிளர்தடந்தோ ளொருமாறன்
மனங்கிடந்த புழுக்க மாற
வருமாறிற் கண்ணருவி மாறாது
களிப்படைய மண்ணும் விண்ணும்
உருமாறிப் பவக்கடல்வீழ்ந் தூசலெனத்
தடுமாறி யுழலு மாக்கள்
கருமாறிக் கதியடையக் கான்மாறி
நடித்தவரைக் கருத்துள் வைப்பாம்.

(இ - ள்.) பொரும் ஆறில்-போர்த்துறையில், கிளர்-விளங்கா நின்ற, தடம் தோள் - பெரிய தோள்களையுடைய, ஒரு மாறன் - ஒரு பாண்டியன், மனம் கிடந்த - மனத்தின்கண் தங்கிய, புழுக்கம் மாற-துன்பம் நீங்கவும், வரும் ஆறில் - பெருகிவரும் ஆற்றுநீர் போல், கண் அருவி - கண்களினின்றும் ஒழுகும் நீரருவி, மாறுது-நீங்கப்பெறுது, களிப்பு அடைய - (அம்மன்னன்) மகிழ்ச்சியடையவும், பவக்கடல் வீழ்ந்து - பிறவிக் கடலுள் வீழ்ந்து, உருமாறி-நால்வகைக்கதியினும் மாறி மாறி, ஊசலென-(மேலும் கீழும் போவதும் வருவதுமாகிய) ஊசல் போல, மண்ணும் விண்ணும் தடுமாறி - மண்ணுலகத்தும் விண்ணுலகத்தும் வருவதும் போவதுமாகி, உழலும் மாக்கள் - வருந்துகின்ற மக்கள், கருமாறி - கருவிற்சென்றடைதலினின்றும் நீங்கி, கதி அடைய - வீடுபெறவும், கால் மாறி நடித்தவரை - கால் மாறி யாடிய வெள்ளியம்பல வாணரை, கருத்துள் வைப்பாம்-மனத்துள் வைத்து வணங்குவாம் எ - று.

வெட்சி, வஞ்சி முதலிய புறத்திணைகளும், அவற்றின் பகுதியாய துறைகளும் 'பொருமாறு' எனப்பட்டன; விற்போர், வாட்போர், மற்போர் முதலிய போர் விகற்பங்கள் எனினும் பொருந்தும். மாறன் - இராசசேகர பாண்டியன்; இம்மன்னன் பரதநூற்றுறை பயின்று அதனுற் கால் தளர்ந்து வருந்தி, எம் பெருமானுக்கும் இங்ஙனம் திருவடி வருந்துமே என நினைந்து உளம்புழுங்கி வேண்டிக் கொள்ள, அவன் மகிழும்படி இறைவன் ஊன்றிய திருவடியை மேலெடுத்தாடி யருளினன்; இதன் விரிவைக் கான்மாறியாடின படலத்திற் கண்டு கொள்க. பொருமாற்றில், வருமாற்றின் எனற்பாலன விகாரப்பட்டன, ஊசலென மனந்தடுமாறி எனினும் ஆம்; 'உறுகயி றூசல்போல வொன்றுவிட் டொன்று பற்றி, மறுகயி றூசல் போல வந்துவந் துலவு நெஞ்சம்' என்னும் திருநேரிசையும் காண்க. (௧௨)

தட்சிணுமூர்த்தி

கல்லாலின் புடையமர்ந்து நான்மறையா
றங்கமுதற் கற்ற கேள்வி
வல்லார்க ணல்வருக்கும் வாக்கிறந்த
பூரணமாய் மறைக்கப் பாலாய்
எல்லாமா யல்லதுமா யிருந்ததனை
யிருந்தபடி யிருந்து காட்டிச்
சொல்லாமற் சொன்னவரை நினையாம
னினைந்துபவத் தொடக்கை வெல்வாம்.

(இ - ள்.) கல் ஆலின் புடை அமர்ந்து - கல்லால மரத்தின் கீழ் இருந்து, நான்மறை ஆறு அங்கம் முதல்-நான்குமறை ஆறு அங்க முதலானவற்றை, கற்ற-கற்றுணர்ந்த, கேள்வி வல்லார்கள் நால்வருக்கும் - கேட்டலில் வல்லுநர்கள் ஆகிய சநகர் முதலிய நான்கு முனிவர்கட்கும், வாக்கு இறந்த பூரணமாய் - வாக்கியலைக் கடந்த நிறைவாயும், மறைக்கு அப்பாலாய் - வேதங்கட்கு அப்பாற்பட்டதாயும், எல்லாமாய்-எல்லாமாயும், அல்லதுமாய் - (அவற்றுள் ஒன்

றும்) அல்லதுமாயும், இருந்ததனை - உள்ளதன் உண்மையை, இருந்த படி இருந்து - உள்ளபடி இருந்து, காட்டி - காண்பித்து, சொல்லா மல் சொன்னவரை-குறிப்பாலுணர்த்திய தட்சிணாமூர்த்தியை, நினை யாமல் நினைந்து - இடையறாமல் நினைந்து, பவத்தொடக்கை வெல் வாம் - பிறவிக்கட்டாகிய பகையை வெல்வாம் எ - று.

நான்மறை-இருக்கு, எசுர், சாமம், அதர்வணம் என்ப; தைத்திரி யம், பௌடிகம், தலவகாரம், சாமம் எனலுமாம். ஆறங்கம்-சிட்சை, வியாகரணம், நிருத்தம், கற்பம், சந்தம், சோதிடம் என்பன; இவை வேதத்திற்கு உறுப்புக்கள் போறலின் வேதாங்கம் எனப்படும்; இதனை,

"கற்பங்கை சந்தங்கா லெண்கண்
தெற்றெ னிருத்தஞ் செவி சிக்கை மூக்
குற்ற வியாகரண முகம் பெற்றுச்
சார்பிற் றோன்று வாரண வேதக்
காதியந்த மில்லை"

என மணிமேகலை கூறுவதாலும் அறிக. முதல் என்றதனால் அற நூல், புராணம் முதலாயின கொள்ளப்படும். கேள்வி என்பது கேட்டல் எனப் பொருள்படுதலன்றிக் கல்வி யெனவும், வேதம் என வும் பொருள்படும். நால்வர்-சனகர், சனந்தனர், சனந்தரர், சனற்குமா ரர் எனுமிவர். இறைவன் வாக்கிறந்து நிற்றலை 'மாற்ற மனங்கழிய நின்ற மறையோன்' 'சொற்பதங் கடந்த தொல்லோன்' என ஆளு டைய அடிகள் அருளுமாற்றானறிக. வேதம் முதலிய கலைகளெல் லாம் பாசஞான மாகலானும், இறைவன் 'பாசஞானத்தாலும் பசு ஞானத்தாலும் பார்ப்பரிய பரம்பரன்' ஆகலானும் 'மறைக்கப் பாலாய்' என்றார். இறைவன் எல்லாமா யிருத்தலை,

"இருநிலனாய்த் தீயாகி நீருமாகி
இயமான னாயெறியுங் காற்றுமாகி
அருநிலைய திங்களாய் ஞாயி றாகி
யாகாச மாயட்ட மூர்த்தி யாகிப்
பெருநலமுங் குற்றமும் பெண்ணு மாணும்
பிறருருவுந் தம்முருவுந் தாமேயாகி
நெருநலையா யின்றாகி நாளை யாகி
நிமிர்புன் சடையடிக ணின்ற வாறே"

எனவும், அல்லதுமா யிருத்தலை,

"விரிகதிர் ஞாயிறல்லர் மதியல்லர் வேத விதியல்லர் விண்ணுநிலனுந்
திரிதரு வாயுவல்லர் செறுதீயு மல்லர் தெளிநீரு மல்லர் தெரியில்
அரிதரு கண்ணியாளை யொருபாக மாக வருள்காரணத்தில் வருவார்
எரியர வாரமார்ப ரிமையாரு மல்ல ரிமைப்பாரு மல்ல ரிவரே"

எனவும் திருநாவுக்கரசு சுவாமிகள் அருளிச்செய்தமை காண்க:

'ஒன்றுநீ யல்லை யன்றியொன் றில்லை யாருனை யறியகிற் பாரே"

என்னும் திருவாசகமும் சிந்திக்கற் பாலது; இறைவன் 'உலகெலா மாகி வேறாயுடனுமாய்' நிற்பன் என மெய்கண்ட நூல்கள் கூறு நிற்கும். இருந்ததனை : வினையாலணையும் பெயர் ; தன்னை யெனப் பிரித்தலும் ஆம். இருந்து காட்டிச் சொல்லாமற் சொல்லுதல் - மோன முத்திரைக்கையுட னமர்ந்து அருளாலுணர்த்துதல்; ''ஒருகை மார்பொடு விளங்க ஒருகை தாரொடு பொலிய' என்னும் திருமுருகாற்றுப்படைத் தொடருக்கு 'முனிவர்க்குத் தத்துவங்களைக் கூறி உரையிறந்த பொருளை யுணர்த்துங் காலத்து ஒருகை மார்போடே விளங்கா நிற்க, ஒருகை மார்பின் மாலை தாழ்ந்ததனோடே சேர்ந்து அழகுபெற, இறைவன் மோன முத்திரை யத்தனாய்த் தானாயே யிருந்து காட்ட ஊமைத்தசும்புள் நீர் நிறைந்தாற் போல ஆனந்த மயமான வொளி மாணுக்கர்க்கு நிறைதலின் அதற்குரிய மோன முத் திரை கூறிற்று'' என நச்சினார்க்கினியர் உரை விரித்திருப்பது இங்கு நோக்கற்பாலது.

''ஓரானிழ லொண்கழ லிரண்டும்
முப்பொழு தேத்திய நால்வர்க்கு ஒளிநெறி
காட்டினை''

என்பது திருவெழுகூற்றிருக்கை.

நினையாமல் நினைந்து - பிறிதொன்றையும் நினையாமல் நினைந்து; இடையறாது பாவித்து என்றபடி; சிந்திக்கு முறையிற் சிந்தித்து என்றலுமாம்; அது தற்போதத்தாற் சிந்தியாது திருவருள் வழியாற் சிந்தித்தல் என்பதாம். இதனை,

''அறியாமை யறிவகற்றி யறிவி னுள்ளே
யறிவுதனை யருளினா லறியாதே யறிந்து
குறியாதே குறித்தந்தக் கரணங்க ளோடுங்
கூடாதே வாடாதே குழைந்திருப்பை யாகில்''

என்னும் சிவஞானசித்தியா லறிக. மாணிக்கவாசகப் பெருமானும் 'நினைப்பற நினைந்தேன்' என்றார். ஆலின் கீழிருந்து சிவபெருமானிடத்தில் மறைப்பொருளைக் கேட்டுணர்ந்த சனகர் முதலிய முனிவர்கள் பின்னரும் தெளிவு பிறவாராகித் திருக்கைலையை அடைந்து இறைவனை வணங்கி 'ஆகமத்தி னரும்பத மூன்றும் கூற'ப் பெற்றுப், புந்தியொடுங்கும் ஞானத்தைப் போதிக்க வேண்ட, இறைவன் 'உரத்திற் சிர்கொள், கரதல மொன்று சேர்த்தி மோனமுத் திரையைக் காட்டி, ஒருகணஞ் செயலொன் றின்றி யோகுசெய் வாரி னுற்றான்' என்பது வரலாறு. இதனைக் கந்த புராண உற்பத்தி காண்டத்து மேருப்படலத்தாலறிக.

### சித்திவிநாயகக்கடவுள்

உள்ளமெனுங் கூடத்தி லூக்கமெனுந்
தறிநிறுவி யுறுதி யாகத்
தள்ளரிய வன்பென்னுந் தொடர்பூட்டி
யிடைப்படுத்தித் தறுகட் பாசக்

கள்ளவினைப் பசுபோதக் கவளமிடக்
களித்துண்டு கருணை யென்னும்
வெள்ளமதம் பொழிசித்தி வேழத்தை
நினைந்துவரு வினைகள் தீர்ப்பாம்.

(இ - ள்.) உள்ளம் எனும் கூடத்தில்-உள்ளமாகிய கூடத்தில், ஊக்கம் எனும் - மனவுறுதியாகிய, தறி நிறுவி - கட்டுத் தறியை நிறுத்தி, தள்ளரிய - பேதித்தலில்லாத, அன்பு என்னும் தொடர் - அன்பாகிய சங்கிலியை, உறுதியாகப் பூட்டி - வலிமை பெறப்பூட்டி, இடைப்படுத்தி - அதில் அகப்படுத்தி, தறுகண் - வன்கண்மையை யுடைய, பாசம் - ஆணவ சம்பந்தமுள்ள, கள்ள வினை-வஞ்சவினையை யுடைய. பசுபோதம் - சிவபோதம் ஆகிய, கவளம் இட - கவளத் தைக் கொடுக்க, களித்து - மகிழ்ந்து, உண்டு - அருந்தி, கருணை என்னும் - அருளாகிய, மதவெள்ளம் பொழி - மதப்பெருக்கைச் சொரிகின்ற, சித்தி வேழத்தை - சித்திவிநாயகக்கடவுளாகிய யானையை, நினைந்து - தியானித்து, வருவினைகள் தீர்ப்பாம் - பிறவி தோறும் தொடர்ந்துவருகின்ற வினைகளை நீக்குவாம் எ - று.

விநாயகக்கடவுளை வேழமென்றதற்கேற்ப உள்ளம் முதலிய வற்றைக் கூடம் முதலியவாக உருவகப்படுத்தினர். கூடம் - யானை கட்டுமிடம். கவளம் - யானை யுணவு. தொடராற் பூட்டி என விரிப்பினும் அமையும். ஆணவத்தாற் பசுபோதமும், அதனால் வினையும் நிகழுமென்க. பசுபோதக் கவள மிடுதலாவது யான் எனது என்னுஞ் செருக்கற்று வணங்குதல். சித்தி விநாயகர்: பெயர். இப்பாட்டு இயைபுருவக வணி. (கச)

முருகக் கடவுள்

கறங்குதிரைக் கருங்கடலுங் காரவுணப்
பெருங்கடலுங் கலங்கக் கார்வந்
துறங்குசிகைப் பொருப்புஞ்சூ ருரப்பொருப்பும்
பிளப்பமறை யுணர்ந்தோ ராற்றும்
அறங்குலவு மகத்தழலு மவுணமட
வார்வயிற்றி னழலு மூள
மறங்குலவு வேலெடுத்த குமரவேள்
சேவடிகள் வணக்கஞ் செய்வாம்.

(இ - ள்.) கறங்கு - ஒலிக்கின்ற, திரை - அலைகளையுடைய, கருங்கடலும் - கரிய கடலும், கார் அவுணப் பெருங்கடலும் - கரிய அசுர சேனையாகிய பெரிய கடலும், கலங்க - கலங்கவும், கார் வந்து உறங்கு - முகில் வந்து படியப் பெற்ற, சிகை - உச்சியையுடைய, பொருப்பும்-கிரவுஞ்ச மென்னு மலையும், சூர்-சூரபன்மாவின், உரம் பொருப்பும் - மார்பாகிய மலையும், பிளப்ப - பிளவை யடையவும், மறை உணர்ந்தோர் ஆற்றும் - வேதவிதிகளை நன்குணர்ந்தவர்கள் செய்கின்ற, அறம் குலவும் - அறத்தோடு கூடிய, மகத்து அழலும் - வேள்வியின்கண் தீயும், அவுண மடவார் வயிற்றின் அழலும்-அசுரப்

பெண்டிர் வயிற்றின்கண் தீயும், மூள-மூண்டு எரியவும், மறம் குலவு-வீரம் பொருந்திய, வேல் - வேற்படையை, எடுத்த - திருக்கரத்தி லேந்திய, குமரவேள் - முருகவேளின், சேவடிகள் - சிவந்த திருவடிகளை, வணக்கம் செய்வாம் - வணங்குவாம் எ - று.

சூரபன்மன் கடல் நடுவே மாமரமாய்த் தோன்றி நின்றபொழுது முருகக் கடவுள் ஆங்கெய்தி அதனைத் தமது வேலாற் றுணித்தனராகலின் 'கருங்கடலும் - கலங்க' என்றார். திருமுருகாற்றுப்படையுள் 'பார்முதிர் பனிக்கடல் கலங்கவுள் புக்குச், சூர்முதல் தடிந்த சுடரிலை நெடுவேல்' என்று கூறப்படுதலுங் காண்க. கிரவுஞ்சன் என்னும் அசுரன் மலைவடிவாயிருந்து, முருகக் கடவுள் சேனையுடன் வரும்பொழுது மாயை பல புரிந்து, அவரது வேலாற் பிளக்கப்பட்டமையால், 'சிகைப் பொருப்பும்...பிளப்ப' என்றார். அவுணப் பெருங் கடல், சூருரப் பொருப்பு என்பன உருவகம். வயிற்றினழல் - சோகத்தீ. இவ்வரலாறுகளனைத்தும் கந்தபுராணத்துட் காண்க. வேலெடுத்த எனக் காரணத்தாற் காரியத்தைக் கூறினர். (கரு)

நாமகள்

பழுதகன்ற நால்வகைச்சொல் மலரெடுத்துப்
பத்திபடப் பரப்பித் திக்கு
முழுதகன்று மணந்துசுவை யொழுகியணி
பெறமுக்கண் மூர்த்தி தாளில்
தொழுதகன்ற வன்பெனுநார் தொடுத்தலங்கல்
சூட்டவரிச் சுரும்புந் தேனுங்
கொழுதகன்ற வெண்டோட்டு முண்டகத்தா
ளடிமுடிமேற் கொண்டு வாழ்வாம்.

(இ - ள்.) பழுது அகன்ற - குற்றநீங்கிய, நால்வகைச் சொல் மலர் எடுத்து - பெயர் வினை இடை உரி என்னும் நான்கு வகையையுடைய சொற்களாகிய மலர்களை எடுத்து, பத்திபட பரப்பி - நிரல்பெற வைத்து, திக்குமுழுது அகன்று - எல்லாத் திக்குகளினுஞ் சென்று, மணந்து - கமழ்ந்து, சுவை ஒழுகி - சுவை ஒழுகப்பெற்று, அணிபெற - அழகுபெற, அகன்ற அன்பு எனும் நார் - பெரிய அன்பாகிய நாரினால், அலங்கல் தொடுத்து - பாமாலையாகச் செய்து, முக்கண் மூர்த்தி-மூன்று கண்களையுடைய இறைவனுடைய, தாளில்-திருவடிகளில், தொழுது - வணங்கி, சூட்ட - அணிவதற்கு, வரி-கீற்றுக்களையுடைய, சுரும்பும் தேனும் - ஆண்வண்டும் பெண்வண்டும், கொழுது - குடைதலினால், அகன்ற-விரிந்த, வெண் தோட்டு முண்டகத்தாள் - வெண்மையான இதழ்களையுடைய தாமரைப்பூவை இருக்கையாகவுடைய நாமகளின், அடி - திருவடிகளை, முடிமேற் கொண்டு வாழ்வாம் - சென்னியிற் சூடிவாழ்வாம் எ - று.

பழுது - மலருக்குப் புழுக்கடி முதலியனவும், சொல்லுக்குத் திணைவழு முதலியனவும் ஆம். மலரும் கோட்டுப்பூ, கொடிப்பூ, நிலப்பூ, நீர்ப்பூ என நால்வகைப்படும். நால்வகைச் சொல்லென்பன இயற்சொல், திரிசொல், திசைச்சொல், வடசொல் எனலுமாம்;

"இயற்சொல் திரிசொல் திசைச்சொல் வடசொலென்
றனைத்தே செய்யு ளீட்டச் சொல்லே"

என்றார் ஆசிரியர் தொல்காப்பியனாரும். சொன்மலர், அன்பெனு நார் என்பன உருவகம். 'பத்திபடப் பரப்பித் திக்கு முழுதகன்று மணந்து சுவையொழுகி யணிபெற' என்பன செம்மொழிச்சிலேடை. (கற்போர்க்கு) அன்புண்டாகப் பரப்பித், திசை முழுதும் புகழ் பொருந்துமாறு எண்வகைச் சுவையுங் கனிந்து சொல்லணி பொருளணியுடையதாகத் தொடுத்து எனப் பாமாலைக்கேற்ப உரைத்துக் கொள்க. எண்வகைச் சுவையாவன: வீரம், அச்சம், இழிப்பு, வியப்பு, காமம், அவலம், வெகுளி, நகை என்பன. சமனிலை கூட்டின் சுவை ஒன்பதாகும். (கசு)

## திருநந்திதேவர்

[வேறு]

வந்திறை யடியிற் றாழும் வானவர் மகுட கோடி
பந்தியின் மணிகள் சிந்த வேத்திரப் படையாற் றாக்கி
அந்தியும் பகலுந் தொண்ட ரலகிடுங் குப்பை யாக்கும்
நந்தியெம் பெருமான் பாத நகைமலர் முடிமேல் வைப்பாம்.

(இ - ள்.) இறை அடியில் - இறைவன் திருவடிகளில், வந்து தாழும் - வந்து வணங்குகின்ற, வானவர் - தேவர்களின், மகுடகோடி பந்தியின் - முடியுறுப்பு வரிசைகளினின்று, மணிகள் சிந்த - மாணிக்கங்கள் சிதறும்படியாக, வேத்திரப்படையால் - பிரம்பாகிய படையால், தாக்கி - அடித்து, அந்தியும் பகலும் - இரவும் பகலும், தொண்டர் - திருத்தொண்டர்கள், அலகு இடும் - திருவலகிடுதற்குக் காரணமாயுள்ள, குப்பை ஆக்கும் - குப்பையாகச் செய்கின்ற, நந்தி எம் பெருமான் - எம் திருநந்தி தேவரின், பாதம் - திருவடிகளாகிய, நகை மலர் - ஒளிபொருந்திய மலர்களை, முடிமேல் வைப்பாம் - முடியின் கண்ணே சூடுவாம் எ - று.

மகுட கோடிபந்தி என்பன வடசொற்களாதலின் வல்லொற்று மிகாதியல்பாயின. கோடி - முடியுறுப்பு; எண் ஆயின் மகுடகோடி சிந்த என எழுவாயாக்கி உரைத்தல்வேண்டும்; வேற்றுமையாயின் கோடிப்பந்தி என ஒற்றுமிகுதல் வேண்டுமென்க. அந்தியும் பகலும் என்பதற்குக் காலையந்தி, மாலையந்திகளிலும், நண்பகலிலும் என்று கூறலுமாம். தொண்டர்களுக்கெல்லாம் திருத்தொண்டுநெறி கற்பிக்கும் குரவரென்னும் குறிப்புத்தோன்ற 'அலகிடுங் குப்பையாக்கும்' என்றார். (கஎ)

## ஆளுடைய பிள்ளையார்

கடியவிழ் கடுக்கை வேணித் தாதைபோற் கனற்கண் மீனக்
கொடியனை வேவ நோக்கிக் குறையிரந் தனையான் கற்பிற்
பிடியன நடையாள் வேண்டப் பின்னுயி ரளித்துக் காத்த
முடியணி மாடக் காழி முனிவனை வணக்கஞ் செய்வாம்.

(இ - ள்.) கடி அவிழ்-மணத்துடன் மலர்ந்த, கடுக்கைவேணி-கொன்றைமலர் மாலையையணிந்த சடையையுடைய, தாதைபோல் - தந்தையாராகிய சிவபிரான் புரிந்தருளியதுபோல, கனற்கண் - வெப்பு நோயாகிய தீயின்கண், மீனக்கொடியனை-மீனக்கொடியை உடையவனுகிய கூன்பாண்டியனை, வேவநோக்கி-வெதும்பி வருந்தும் படியாக அருள்செய்து, அனையான் - அப்பாண்டியனின் (மனைவியாராகிய), கற்பின்-கற்பினையுடைய, பிடிஅன நடையாள்-பெண்யானை போலும் நடையினையுடைய மங்கையர்க்கரசியார், குறையிரந்து வேண்ட-தமது குறைகூறி வேண்டிக்கொள்ள, பின் - அவ்வாறு வேண்டிய பின்பு, உயிர் அளித்து - அப்பாண்டியனுக்கு உயிரை நல்கி, காத்த - ஆண்டருளிய, முடிஅணி - சிகரங்களையுடைய அழகிய, மாடம் - மாடங்களையுடைய, காழி முனிவனை-சீகாழிப்பதியில் அவதரித்த திருஞான சம்பந்தப்பெருமானை, வணக்கஞ்செய்வாம் - வணங்குவாம் எ - று.

'கனற்கண்......காத்த' என்பது சிலேடை. கனற்கண் - அனல் விழியால், மீனக்கொடியனை-மீனக்கொடியுடைய மன்மதனை, வேவ நோக்கி-எரியும்படி பார்த்தருளி, அனையான் கற்பின்பிடிஅன நடையாள் வேண்ட-அவன் மனைவியாகிய இரதிதேவி வேண்டிக்கொள்ள, பின் உயிர் அளித்துக் காத்த - பின்பு அம்மன்மதனது உயிரை நல்கிக் காத்தருளிய, — என்று சிவபிரானுக்கேற்பப் பொருளுரைத்துக் கொள்க.

காமனை யெரித்த கதை:—சிவபெருமானை யிகழ்ந்து தக்கன் புரிந்த வேள்வியிற்சென்று அவியுண்ட தீவினையால் அயன், மால், இந்திரன் முதலிய அமரர்களெல்லாம் அப்பொழுது ஒறுக்கப்பட்டதன்றிப், பின்னரும் சூரபன்மன் முதலிய அவுணர்களால் துன்பமுழந்து, அத்துன்பத்தை யொழிப்பதற்கு இறைவன் மலையரையன் புதல்வியாரை மணந்து குமாரக்கடவுளைத் தோற்றுவிக்க வேண்டுமெனத் தெளிந்து, அதன்பொருட்டு, முனிவர்க்கு மெய்ப்பொருளுணர்த்தி யோகிலிருக்கும் பெருமானை மலரம்பெய்து மோனத்தினின்றும் அகற்றும்படி மன்மதனை வேண்டிக்கொண்டனர். அவன் அது செய்தற்கு அஞ்சினனுயினும் தேவர்கள் பலவாறு வேண்டிக் கொண்டதற்கிரங்கிச் சென்று சிவபெருமான்மேல் அம்பினையெய்து, அப்பெருமான் சிறிது விழித்தவளவில் நெற்றிக்கண்ணின் நெருப்பால் எரிந்து சாம்பராயினன். பின் அவன் மனைவியாகிய இரதி வேண்ட, இறைவன், திருக்கலியாண காலத்தில் அவனுக்குயிர் நல்கி, இரதிக்கு உருவுடனும் ஏனையர்க்கு அநங்கனுகவும் இருக்குமாறு அருள்செய்தனர் என்பது. இதனைக் கந்தபுராணத்துக் காமதகனப் படலம் முதலியவற்ருனறிக.

திருஞானசம்பந்தர் பாண்டியனை வெப்புநோயால் வருந்தச் செய்து, பின் அது தீர்த்தருளிய வரலாறு:—

சோழநாட்டிலே சீகாழிப்பதியிலே சிவபாதவிருதயர் என்னும் அந்தணர்க்குப் பகவதியார் திருவயிற்றிலே திருவவதாரஞ் செய்து மூன்றும் ஆண்டிலே பிரமதீர்த்தக்கரையில் சிவபெருமான் உமாதேவியாரோடும் வந்து பரஞானம் கலந்த பால் கொடுக்கப்பெற்றுத் 'தோடுடைய செவியன்' என்னும் பதிகம்பாடித் தந்தைக்கு இறைவனைச் சுட்டிக்காட்டித் திருஞானசம்பந்தரென்றும், ஆளுடைய

பிள்ளையாரென்றும் பெயரெய்தியவர் பல திருப்பதிகளுக்குஞ் சென்று பதிகம்பாடி இறைவன்பால் பொற்றாளம், முத்துச்சிவிகை முதலிய பெற்றுப் பல அற்புதம் புரிந்து மதுரையையடைந்து அடியார் கூட்டத்துடன் தங்கியிருக்கும்பொழுது சமணர்கள் பொறாமையினால் திருமடத்திற் றீவைக்க, அக்கொடுஞ்செயல் அரசன் முறை செய்யாமையால் நிகழ்ந்ததென உட்கொண்ட பிள்ளையார் அத்தீயானது சென்று பாண்டியனை வெப்பு நோயாகப் பற்றுமாறு அருளி, மங்கையர்க்கரசியாரின் வேண்டுகோளுக்கிணங்கிப் பின் அம்மன்னனது வெப்புநோயைத் திருநீற்றால் மாற்றிச் சமணனாயிருந்த அவ்வரசனைச் சைவனாக்கிச் சமணரை வாதில்வென்று தமிழ்நாடு முழுதும் சைவம் தழைத்தோங்கச் செய்தனர் என்பது.

இதன் விரிவைப் பெரியபுராணத்திலுள்ள அவரது புராணத்திலும், இந்தப் புராணத்திலுள்ள பாண்டியன் சுரந்தீர்த்த படலத்திலும் கண்டுகொள்க.

தாதைபோல் என்றது தந்தையினியல்பு பிள்ளையிடத்தும் விளங்குமென்பது குறிப்பித்தவாறும். (கஅ)

### ஆளுடைய அரசுகள்

அறப்பெருஞ் செல்வி பாகத் தண்ணலஞ் செழுத்தா லஞ்சா*
மறப்பெருஞ் செய்கை மாறா வஞ்சக ரிட்ட நீல
நிறப்பெருங் கடலும் யார்க்கு நீந்துதற் கரிய வேழ
பிறப்பெனுங் கடலு நீத்த பிரானடி வணக்கஞ் செய்வாம்.

(இ - ள்.) அறப்பெரும் செல்வி-முப்பத்திரண்டு அறங்களையும் வளர்த்த பெரிய செல்வியாராகிய உமையம்மையாரை, பாகத்து-ஒரு கூற்றிலுடைய, அண்ணல் - பெருமை பொருந்திய இறைவனின், அஞ்சு எழுத்தால் - திருவைந்தெழுத்தாகிய புணையினாலே, அஞ்சா - பழிக்கு அஞ்சாத, மறப்பெரும் செய்கை - பெரிய பாவச்செய்கையினின்று, மாறா - நீங்காத, வஞ்சகர்-வஞ்சகராகிய சமணர்கள், இட்ட நீலநிறப் பெருங்கடலும் - கற்றூணோடு பிணித்துப் போகட்ட நீல நிறத்தையுடைய பெரிய கடலையும், யார்க்கும்-எவ்வகையோராலும், நீந்துதற்கு அரிய-கடப்பதற்கு முடியாத, ஏழு பிறப்பெனும் கடலும் - ஏழுவகையினையுடைய பிறவி என்னுங் கடலையும், நீத்த-ஒருசேரக் கடந்தருளிய, பிரான்-திருநாவுக்கரசரின், அடி-திருவடிகளை, வணக்கம் செய்வாம்-வணங்குவாம் எ - று.

அஞ்சா, மாறா என்னும் பெயரெச்சமறைகள் வஞ்சகர் என்னும் பெயருடன் தனித்தனி முடிந்தன. அஞ்ச என்பது பாடமாயின் அதனை இட்ட என்பதனோடு முடிக்க. ஈரிடத்தும் கடலும் என்பதிலுள்ள உம்மைகள் எண்ணுடன் சிறப்புங் குறித்தன. ஏழு பிறப்பாவன: தேவர், மக்கள், விலங்கு, பறவை, ஊர்வன, நீர் வாழ்வன, தாவரம் என்பன.

(பா - ம்.) * அஞ்ச.

திருநாவுக்கரசர் கடல்கடந்த வரலாறு:—திருமுனைப்பாடி நாட்டிலே திருவாமூரிலே வேளாளர் குலத்திலே புகழனார் என்பவர்க்கு மாதினியார் வயிற்றிலே திருவவதாரஞ்செய்த மருணீக்கியாரென்பவர் இளமையிலே பலகலையுங்கற்று, அறம் பல புரிந்து, உலகநிலையாமை யுணர்ந்து, உண்மைப்பொருளை ஆராயத்தொடங்கி, 'நம்பர் அருளாமையினால், சமணசமயமே மெய்ச்சமயமெனத் துணிந்து, அதிற் பிரவேசித்து, அம்மதநூல் முழுதுங்கற்றுப், புத்தர் முதலானோரை வாதில் வென்று, தருமசேனர் என்னும் பெயருடன் சமண குரவராய் விளங்கிய காலத்தில், அவர் தமக்கையாராகிய திலகவதியம்மையார் திருவதிகைத் திருப்பதியிலே திருவீரட்டானமுடைய பரமசிவனுக்கு வைகலும் தொண்டுசெய்து வருகின்றவர் தமது தம்பியாரைச் சமணசமயத்திலிருந்து மீட்டருளவேண்டுமெனப் பிரார்த்தித்தபடியே பரங்கருணைத் தடங்கடலாகிய இறைவன், சைவசமயம் தழைத்தோங்கவும் உலகமெல்லாம் ஈடேறவும், அவரைச் சைவசமயத்திற்கு மீட்கத் திருவுளம்பற்றி அவருக்குச் சூலைநோய் தந்தருள, அந்நோயானது சமணக்குருக்கண்மார் செய்த மந்திரமருந்துகளினாலெல்லாம் தணியாது மேன்மேல் முறுகி வருத்தாநிற்க, அவர் அது பொறுக்கலாற்றாது திருவதிகைப் பதியை அடைந்து திலகவதியாரை வணங்கித் திருநீறுபெற்றுத் தரித்துத் திருவைந்தெழுத்துபதேசம்பெற்று, அவருடன் திருக்கோயிலையடைந்து 'கூற்றாயினவாறு' என்னும் பதிகம்பாடிச் சிவபெருமானால் நோய்நீக்கமும், திருநாவுக்கரசு என்னும் திருப்பெயரும் பெற்றுத் திகழ்வாராயினர். அதையுணர்ந்த சமணக்குருக்கண்மார் தங்கள் சமயத்திற்கு ஊனம் வந்துவிடுமென்றஞ்சிச் சமணசமயத்தவனாயிருந்த (மகேந்திரவர்ம பல்லவ) அரசன்பாற் சென்று, போதித்துத் திருநாவுக்கரசரை யழைப்பித்து அவரைக் கொல்லுமாறு தூண்டினர். அரசனும் அவர்கள் கருத்திற்கிணங்கித் திருநாவுக்கரசரை நீற்றறையிலிட்டும், நஞ்சமருந்தச்செய்தும், அவர்மீது கொலையானையை ஏவியும், சிவபெருமான் றிருவருளால் அவற்றானெல்லாம் அவர் துன்புறாதிருந்த காலைக், கற்றூணிற் பிணித்துக் கடல்நடுவே யிடச்செய்தான். அப்பொழுது அரசுகள்,

"சொற்றுணை வேதியன் சோதி வானவன்
பொற்றுணைத் திருந்தடி பொருந்தக் கைதொழக்
கற்றுணைப் பூட்டியோர் கடலிற் பாய்ச்சினும்
நற்றுணை யாவது நமச்சி வாயவே"

என்னும் பஞ்சாக்கரப் பதிகம் பாடிக், கல்லே தெப்பமாக மிதக்க அதில் ஆரோகணித்துத் திருப்பாதிரிப்புலியூரில் வந்து கரையேறினர் என்பது. இதன் விரிவைப் பெரிய புராணத்திலுள்ள திருநாவுக்கரசு நாயனார் புராணத்திற் காண்க. திருநாவுக்கரசர் இங்ஙனம் கரையேறிய வரலாற்றை அவர் தமது திருவாக்கினாலேயே,

"கல்லி னோடெனைப் பூட்டி யமண்கையர்
ஒல்லை நீர்புக நூக்கவென் வாக்கினால்
நெல்லு நீள்வயல் நீலக் குடியரன்
நல்ல நாம நவிற்றியுய்ந் தேனன்றே"

எனக் கூறலுங் காண்க. (கக)

## ஆளுடைய நம்பிகள்

அரவக லல்கு லார்பா லாசைநீத் தவர்க்கே வீடு
தருவமென் றளவில் வேதஞ் சாற்றிய தலைவன் றன்னைப்
பரவைதன் புலவி தீர்ப்பான் கழுதுகண் படுக்கும் பானாள்
இரவினிற் றூது கொண்டோ னிணையடி முடிமேல் வைப்பாம்.

(இ - ள்.) அரவு அகல் அல்குலார்பால்-பாம்பின் படம்போலும் அகன்ற நிதம்பத்தையுடைய மகளிரிடத்து, ஆசை - அவாவை, நீத்தவர்க்கே-ஒழித்தவர்களுக்கே, வீடுதருவம் என்று-பேரின்ப வீட்டைக் கொடுப்பேமென்று, அளவு இல் வேதம்-எண்ணிறந்த வேதங்களால், சாற்றிய-கூறியருளிய, தலைவன் தன்னை-முதல்வனாகியசிவபிரானையே, பரவைதன் - பரவை நாய்ச்சியாரின், புலவி தீர்ப்பான் - ஊடலை நீக்கும் பொருட்டு,கழுது கண்படுக்கும்-பேயும் உறங்கப் பெறுகின்ற, பானாள் இரவினில் - நள்ளிரவில், தூதுகொண்டோன் - தூதாகக் கொண்ட சுந்தரமூர்த்திநாயனாரின், இணையடி-இரண்டு திருவடிகளையும், முடிமேல் வைப்பாம் - சென்னியின் மேல் வைப்பாம் எ - று.

மடவாராசையை யொழித்தவர்க்கே பேரின்பங் கைகூடு மென்பதனை,

"அருப்புப் போன்முலை யாரல்லல் வாழ்க்கைமேல்
விருப்புச் சேர்நிலை விட்டுநல் விட்டமாய்த்
திருப்புத் தூரனைச் சிந்தை செயச்செயக்
கருப்புச் சாற்றினு மண்ணிக்குங் காண்மினே"

என்னும் திருக்குறுந்தொகையானுமறிக. நீத்தவர்க்கே என்பதில் ஏகாரம் பிரிநிலையும் தேற்றமும் ஆம். தருவம் என்னும் பன்மை உயர்வு குறித்தது. வேதத்தால் என்னும் மூன்றனுருபும், கழுதும் என்னும் சிறப்பும்மையும் விகாரத்தாற்றொக்கன. தன் இரண்டும் சாரியை. விதிவரம்பு செய்த தலைவனே அவ்விதிக்கு மாறாகத் தாம் புரியுஞ் செய்கைக்கு உதவிசெய்யப் புரிந்த வல்லாளன் என்று சமற்காரம்படக் கூறினார். நம்பியாரூரர் தம்மை ஆட்கொண்டருளிய சிவபெருமானாலேயே கூட்டுவிக்கப்பெற்று அப்போகம் புசிக்குமிடத்து,

"தென்னாவ லூர்மன்னன் றேவர்பிரான் றிருவருளால்
மின்னாருங் கொடிமருங்குற் பரவையெனு மெல்லியறன்
பொன்னாரு முலையோங்கற் புணர்குவடே சார்வாகப்
பன்னாளும் பயில்யோகம் பரம்பரையின் விரும்பினார்"

என்று சேக்கிழார்பெருமான் கூறுமாறு அதனையே சிவயோகமாகக் கொண்டொழுகிய பெரியாராகலின், அவர் சிவப்பேறாகிய நலத்தினின் வழாராயினாரென்க.

சிவபிரானைத் தூதுகொண்ட வரலாறு :—திருமுனைப்பாடி நாட்டிலே திருநாவலூரிலே ஆதிசைவ மரபிலே சடையனார் என்பவர்க்கு இசைஞானியார் வயிற்றிலே திருவவதாரஞ் செய்த நம்பியா

ரூரர் அந்நாடாளும் அரசராகிய நரசிங்கமுனையரையரால் வளர்க்கப் பெற்று, புத்தூர்ச் சடங்கவி சிவாசாரியின் மகளைத் திருமணஞ்செய்து கொள்ள மாப்பிள்ளைக்கோலத்துடன் வந்திருந்தபொழுது பரமசிவனால் ஆவணங் காட்டித் தடுத்தாட்கொள்ளப்பெற்று, இறைவன் கட்டளையிட்டபடியே பல திருப்பதிகட்குஞ் சென்று திருப்பதிகம்பாடித் திருவாரூரையடைந்து சிவபெருமான் திருவருளால் அங்கே உருத்திர கணிகையர் குலத்தில் திருவவதாரஞ் செய்திருந்த பரவைநாச்சியாரை மணந்து இன்பந்துய்த்து வருகின்றவர், திருவொற்றியூரை யடைந்து சங்கிலிநாச்சியாரை மணந்து மீண்டு திருவாரூரையெய்திப், பரவையார் மிக்க சினத்துடனிருப்பதைப் பரிசனங்களால் அறிந்து, பரவையின் ஊடலைத் தணித்துத் தம்மை அவருடன் சேர்ப்பிக்கவேண்டுமெனச் சிவபெருமானைப் பிரார்த்தித்தனர். ஆரூராளும் அடிகளாகிய இறைவனும் நள்ளிரவில் பரவையார் வீட்டுக்கு அருச்சகர் வடிவிற் சென்று, அவரால் மறுக்கப்பட்டு, மீட்டும் தேவர்களும், முனிவர்களும், சிவகணங்களும் புடைசூழச் சென்று பரவையாரின் ஊடலைத் தீர்த்துத் தன் தோழநம்பியை ஏற்றுக்கொள்ளுமாறு செய்தனன் என்பது. இதனைத் திருத்தொண்டர் புராணத்தாலறிக. (௨0)

### ஆளுடைய அடிகள்

எழுதரு மறைகள் தேறா இறைவனை யெல்லிற் கங்குற்
பொழுதறு காலத் தென்றும் பூசனை விடாது செய்து
தொழுதகை தலைமீ தேறத் துளும்புகண் ணீருள் மூழ்கி
அழுதடி யடைந்த வன்ப னடியவர்க் கடிமை செய்வாம்.

(இ - ள்.) எழுதரும் - எழுதப்படாத, மறைகள் தேறா-மறைகளாலும் தெளியப் பெறாத, இறைவனை - முதல்வனாகிய சிவபிரானை, எல்லில் கங்குல்பொழுது - பகற்பொழுதிலும் இராப்பொழுதிலும் உள்ள, அறுகாலத்து - ஆறுவகையாகிய காலங்களினும், என்றும் - எந்நாளும், பூசனை விடாது செய்து-இடையறாது பூசனைபுரிந்து, தொழுதகை - கூப்பிய கைகள், தலைமீது ஏற - தலையின்மீதேற, அழுது - நெக்கு நெக்குருகி அழுது, துளும்பு - ததும்பி வழிகின்ற, கண்ணீருள் மூழ்கி-கண்ணீருட் படிந்து, அடி அடைந்த-திருவடி நீழலை யடைந்த, அன்பன் - அன்பராகிய மணிவாசகப் பெருமானின், அடியவர்க்கு - அடியார்களுக்கு, அடிமை செய்வாம் - தொண்டு செய்வாம் எ - று.

மறைகள் எழுதப்படாது கேட்கப்பெற்று வந்து எழுதாக்கிளவி யெனவும் சுருதியெனவும் பெயர் கூறப்படுதலின் 'எழுதருமறைகள்' என்றார். கங்குற் பொழுதில் என உருபு விரிக்க. அறுகாலம்: விடியல், நண்பகல், எற்பாடு, மாலை, யாமம், வைகறை என்பன. எல்லிற் கங்குற் பொழுதறு காலத்து என்பதற்கு இராப்பகலற்ற விடத்தில் என்றும் பொருள் கூறுப; இதற்கு எல்லில் என்பதன் இல் சாரியையாகும். மாணிக்கவாசகர் பூசனைபுரிந்து அடியடைந்ததனை,

"பாசவே ரறுக்கும் பழம்பொரு டன்னைப் பற்றுமா றடியனேற்கருளிப்
பூசனை யுகந்தென் சிந்தையுட் புகுந்து பூங்கழல் காட்டியபொருளே"

எனவும், அவர் அன்பினால் உருகி அழுததனை,

"முழுமுத லேயைம் புலனுக்கு மூவர்க்கு மென்றனக்கும்
வழிமுத லேநின் பழவடி யார்திரள் வான்குழுமிக்
கெழுமுத லேயருட் டந்திருக்க இரங்குங் கொல்லோவென்
றழுமது வேயன்றி மற்றென் செய்கேன் பொன்னம் பலத்தரைசே"

எனவும் அவர் பாடியருளிய திருவாசகத்தானறிக.

மாணிக்கவாசகர் வரலாறு:—பாண்டிநாட்டிலே திருவாதவூரிலே அமாத்தியர் குலத்திற்பிறந்த வாதவூரர் பதினாறுண்டினுள் எண்ணெண்கலையும் பயின்று பாண்டிவேந்தனுக்கு முதலமைச்சராய்த் திகழ்ந்து, குதிரை வாங்குதற்குப் பெரும் பொருளுடன் புறப்பட்டுச் சென்று, திருப்பெருந்துறையிலே குருந்தமரத்தினடியில் தம்மை ஆட்கொள்ளுதற்காக எழுந்தருளியிருந்த பரமசிவனாகிய குருமூர்த்தியைத் தரிசித்து அருள்பெற்று, நெஞ்சம் அனலிடைப்பட்ட மெழுகென உருக அன்பினாலழுது பாமாலைபாடிச் சாத்தி, மாணிக்கவாசகர் என்னும் திருப்பெயர் ஆசாரிய மூர்த்தியாகிய பரமசிவனால் அளிக்கப் பெற்றுத், தம்பொருட்டாகப் பெருமான் பல திருவிளையாடல் புரியத் தாம் தலந்தோறுஞ் சென்று திருவாசகமும், திருக்கோவையும் பாடிச் சிதம்பரத்திலே சபாநாதர் திருவடியிற் கலந்தருளினர் என்பது. இவ்வரலாற்றின் விரிவை இப் புராணத்திலுள்ள வாதவூரடிகளுக் குபதேசித்த படலம் முதலிய நான்கு படலங்களானும், திருவாதவூரர் புராணம், திருப்பெருந்துறைப் புராணம் முதலியவற்றானும் அறிக. (உக)

சண்டேசுரரும், மற்றை அடியார்களும்

[வேறு]

தந்தைதா ளோடும்பிறவித் தாளேறிந்து
　　நிருத்தரிரு தாளைச் சேர்ந்த
மைந்தர்தாள் வேதநெறி சைவநெறி
　　பத்திநெறி வழாது* வாய்மெய்
சிந்தைதா னரனடிக்கே செலுத்தினராய்ச்
　　சிவாநுபவச் செல்வ ராகிப்
பந்தமாந் தொடக்கறுத்த திருத்தொண்டர்
　　தாள்பரவிப் பணிதல் செய்வாம்.

(இ - ள்.) தந்தை தாளோடும் - தந்தையாரின் அடியோடு, பிறவித்தாள் எறிந்து - பிறவிவேரையும் களைந்து, நிருத்தர் இருதாளைச் சேர்ந்த - திரு நிருத்தஞ் செய்யும் இறைவனின் திருவடிகளை அடைந்த, மைந்தர் தாள் - சண்டேசுர நாயனாரின் திருவடிகளையும், வேதநெறி - வேதநெறியிலும், சைவநெறி - சைவநெறியிலும், பத்தி நெறி - பத்தி நெறியிலும், வழாது - வழுவாது, வாய் மெய் சிந்தை - வாக்கு மெய் மனம் ஆகிய மூன்று கரணங்களையும், அரன் அடிக்கே - சிவபிரான் திருவடிகளிலேயே, செலுத்தினராய் - செலுத்தினவர்களாய், சிவாநுபவச் செல்வராகி - சிவாநுபூதிமான்களாகி, பந்தம் ஆம் தொடக்கு

---

(பா - ம்.) * பத்திநெறி வளர்ந்து.

அறுத்த-பாசபந்தமாகிய கட்டினை அறுத்த, திருத்தொண்டர் தாள் — பிற அடியார்களின் திருவடிகளையும், பரவி - துதித்து, பணிதல் செய்வாம் - வணங்குவாம் எ — று.

தந்தையின் தாளைத் துணித்தது பாதகச் செயலாயினும் அது பத்திநெறிக்கண் வல்வினையாகிய சிவபுண்ணியம் ஆயினமையின் அதுவே பிறவி வேரறுத்து இறைவனடி சார்தற்கு ஏதுவாயிற்று. இதனை,

"மெல்வினையே யென்ன வியனுலகி லாற்றரிய
வல்வினையே யென்ன வருமிரண்டும்—சொல்லிற்
சிவதன்ம மாமவற்றிற் சென்றதிலே செல்வாய்
பவகன்ம நீங்கும் படி"

"பாதக மென்றும் பழியென்றும் பாராதே
தாதையை வேதியனைத் தாளிரண்டுஞ்—சேதிப்பக்
கண்டீசர் தாமாம் பரிசளித்தார் கண்டாயே
சண்டீசர் தஞ்செயலாற் றான்"

என்னும் திருக்களிற்றுப்படியாரா லறிக.

"வந்து மிகைசெய் தாதைதாள் மழுவாற் றுணித்த மறைச்சிறுவர்
அந்த வுடம்பு தன்னுடனே யரனார் மகனா ராயினார்"

என்று அருண்மொழித்தேவர் கூறுகின்றபடி சிவகுமாரராயினமை யின் 'மைந்தர்தாள்' என்றார். வேதநெறி-வைதிகம். சைவநெறி — வேதத் தெளிவாகிய ஆகமநெறி. பத்திநெறி - வைதிக, சைவநெறி கட்கு அப்பாற்பட்டுப், 'பண்டைநற் றவத்தாற் றோன்றிப் பரம னைப் பத்திபண்ணும் தொண்டு' நெறி. தான்: அசை. மைந்தர் தாளை யும் திருத்தொண்டர் தாளையும் பரவி எனக் கூட்டுக.

சண்டேசர் வரலாறு:—சோழநாட்டிலே திருச்சேய்ஞலூரிலே மறையோர் குலத்திலே எச்சதத்தன் என்பவருக்குப் பவித்திரை வயிற்றிலே திருவவதாரஞ் செய்த விசாரசருமர் இளமையிலேயே வேதம் முதலிய கலைகளையெல்லாம் உணர்ந்து, அவற்றின் பொருட் கெல்லாம் எல்லையாவது சிவபெருமானது திருவடியே யெனத் தெளிந்து, சிவபெருமானிடத்துத் தலையன்புடையராய் ஒழுகிவரு நாளில், ஒருநாள் அவ்வூர் ஆனினங்களை மேய்ப்பானொருவன் ஒரு பசுவினை அடிக்கக்கண்டு மனம் பொறாராய் ஆவின் மேன்மைகளை யெல்லாம் அவ் வாயனுக்கு அறிவுறுத்தி அவனை ஆனிரை மேய்ப் பதினின்றும் விலக்கித் தாமே ஊராருடைய உடன்பாடும் பெற்று நிரைமேய்த்து வருவாராயினர். அவர் அவைகளை நல்ல புல் லுள்ள இடங்களில் மேயச்செய்து, நறுந் தண்ணீரூட்டி, நிழலி லமரச்செய்து இங்ஙனம் புரந்து வரும்பொழுது ஆன்களெல்லாம் அழகு சிறந்து இரவும் பகலும் மடிசுரந்து தாமே பால் பொழிவன வாயின. ஊராராகிய மறையோர்களும் தம் பசுக்கள் முன்னையிற் பன்மடங்கு பால் கறத்தல் கண்டு மகிழ்ச்சிமிக்கார்கள். விசாரசரு மரும் பசுக்கள் தம்மை யணுகி அன்பாற் பால் சொரிதல் கண்டு, சிவபெருமானுக்குத் திருமஞ்சனஞ் செய்யும் குறிப்பு உள்ளத்தே நிகழ, மண்ணிநதியின் ஆற்றிடைக் குறையாகிய மணற்பரப்பில் திரு

ஆத்திமரநிழலில் மணலாலே சிவலிங்கம் தாபித்து ஆவின்பாலால் திருமஞ்சனமாடி விதிப்படி அருச்சித்துப் பூசிப்பாராயினர். அவர் அங்ஙனம் பூசித்துவருங்கால் அதன் இயல்பு அறியாதானொருவன் அதனைக்கண்டு அவ்வூர் மறையோரிடஞ்சென்று,'விசாரசருமர்பாலைக் கறந்து மணலிலே சொரிகின்றார்' என்றுகூற, அவர்கள் எச்சதத்த னுக்கு அதனை அறிவிக்க, அவனுஞ்சென்று கரவில் மறைந்திருந்து பார்த்து வெகுண்டு, திருமஞ்சனப் பாற்குடத்தைக் காலால் இடறித் தள்ளினான். விசாரசருமர் அதனைக்கண்டு அது செய்தவன் தந்தை யென வுணர்ந்தும் அவன்றாளைத் துணிப்பது தகுதியெனத் துணிந்து அருகிலிருந்த கோலையெடுக்க, அதுவே மழுவாக, அதனால் அவன் றாளை யெறிந்து வீழ்த்தினார். அப்பொழுது சிவபெருமான் உமாதேவியாரோடு இடபவாகனத்தில் எழுந்தருளிவந்து 'அடுத்ததாதை யினியுனக்கு நாமென்றருள் செய்து,' தொண்டர்கட்கு அதிபராக்கிச் சண்டேசராம் பதமும் அளித்துத் தாம் சடையிலணிந்திருந்த கொன்றைமாலையையும் எடுத்துச்சூட்டியருளினார் என்பது. இதனைத் திருத்தொண்டர் புராணத்தா லறிக. இவ் வரலாறு சைவத்திருமுறைகள் பலவற்றிலும் எடுத்துப் போற்றப் பெற்றுளது.

"பீரடைந்த பாலதாட்டப் பேணாதவன் றாதை
வேரடைந்து பாய்ந்ததாளை வேர்த்தடிந்தான் றனக்குத்
தாரடைந்த மாலைசூட்டித் தலைமைவகுத்த தென்னே
சீரடைந்த கோயின்மல்கு சேய்ஞலூர் மேயவனே"

என்று திருஞானசம்பந்தரும்,

"ஆமலி பாலுநெய்யு மாட்டியர்ச் சனைகள்செய்து
பூமலி கொன்றைசூட்டப் பொறாததன் றாதைதாளைக்
கூர்மழு வொன்றாலோச்சக் குளிர்சடைக் கொன்றைமாலை
தாமெனச் சண்டிக்கீந்தார் சாய்க்காடு மேவினாரே"

என்று திருநாவுக்கரசரும்,

"ஏத நன்னில மீரறு வேலி
யேயர்கோ னுற்ற இரும்பிணி தவிர்த்துக்
கோத னங்களின் பால்கறந் தாட்டக்
கோல வெண்மணற் சிவன்றன்மேற் சென்ற
தாதை தாளற வெறிந்த சண்டிக்குன்
சடைமி சைமல ரருள்செயக் கண்டு
பூத வாளிநின் பொன்னடி யடைந்தேன்
பூம்பொ ழிற்றிருப் புன்கூரு ளானே"

என்று சுந்தரமூர்த்திகளும்,

"தீதில்லை மாணி சிவகருமஞ் சிதைத்தானைச்
சாதியும் வேதியன் தாதைதனைத் தாளிரண்டுஞ்
சேதிப்ப வீசன் திருவருளாற் றேவர்தொழப்
பாதகமே சோறு பற்றினவா தோணோக்கம்"

என்று மாணிக்கவாசகரும்,

"தாதையைத் தாளற வீசிய சண்டிக்கு மண்டத்தொடு முடனே
பூதலத் தோரும் வணங்கப்பொற் கோயிலும் போனகமும் அருளிச்
சோதி மணிமுடித் தாமமு நாமமுந் தொண்டர்க்கு நாயகமும்
பாதகத் துக்குப் பரிசுவைத் தானுக்கே பல்லாண்டு கூறுதுமே"

என்று சேந்தனாரும் அருளிச்செய்திருத்தல் காண்க. (உஉ)

நூல்செய்தற்குக் காரணம்

[வேறு]

அண்ணல்பாற் றெளிந்த நந்தி யடிகள்பாற் சநற்கு மாரன்
உண்ணிறை யன்பி னாய்ந்து வியாதனுக் குணர்த்த வந்தப்
புண்ணிய முனிவன் சூதற் கோதிய புராண மூவா
றெண்ணிய விவற்றுட் காந்தத் தீசசங் கிதையின் மாதோ.

(இ - ள்.) *அண்ணல்பால் - பெருமை பொருந்திய சிவபிரானிடத்து, தெளிந்த - கேட்டுத் தெளிந்த, நந்தி அடிகள்பால் - நந்திதேவரிடம், சநற்குமாரன்-சநற்குமார முனிவன், உள்நிறை அன்பின்-உள்ளத்தில் நிறைந்த அன்பினோடு, ஆய்ந்து - கேட்டு ஆராய்ந்து, வியாதனுக்கு உணர்த்த-வியாசமுனிவனுக்கு அறிவிக்க, அந்தப்புண்ணிய முனிவன் - அந்தப் புண்ணியங்களையுடைய வியாசமுனிவன், சூதற்கு - சூதமுனிவனுக்கு, ஓதிய - சொன்ன, புராணம் மூவாறு - புராணங்கள் பதினெட்டாகும்; எண்ணிய இவற்றுள் - மதிக்கப் பெற்ற இப்பதினெண் புராணங்களுள், காந்தத்து - காந்தமகாபுராணத்தில், ஈசசங்கிதையின் - சங்கரசங்கிதையில் எ - று.*

*நந்தியடிகள், சிலாதரமுனிவன் புதல்வர்; கோடியாண்டு அருந்தவம் புரிந்து சிவபெருமானுக்கு ஊர்தியும், வாயில் காப்போருமாயினவர்; சைவசந்தான முதற் குரவர்; சனற்குமாரன், வியாதன், சூதன் என்போர் வரலாறுகளும், பதினெண்புராணங்களின் பெயர் முதலியவும் பின் புராணவரலாறு கூறுமிடத்தே விளக்கப்படும். மாது, ஓ: அசைகள்.* (உ௩)

அறைந்திடப் பட்ட தாகு மாலவாய்ப் புகழ்மை யந்தச்
சிறந்திடும் வடநூ றன்னைத் தேன்சொலாற் செய்தி யென்றிங்
குறைந்திடும் பேரியோர் கூறக் கடைப்பிடித் துறுதி யிந்தப்
பிறந்திடும் பிறப்பி லெய்தப் பெறுதுமென் றுள்ளந் தேறு.

(இ - ள்.) *ஆலவாய்ப்புகழ்மை- திருவாலவாயென்னும் மதுரையின்பெருமை, அறைந்திடப்பட்டது ஆகும் - கூறப்பெற்றது ஆகும்; அந்தச்சிறந்திடும் வடநூல் தன்னை-அந்தச் சிறந்த வடநூலுட் கூறப்பட்ட பெருமைகளை, தென்சொலால் செய்தி என்று - தமிழ்மொழியால் கூறுவாயென்று, இங்கு உறைந்திடும்-இவ்விடத்து(மதுரையில்) வசிக்கும், பெரியோர் கூற-பெரியோர்கள் பணிக்க, பிறந்திடும் இந்தப் பிறப்பில் - பிறந்த இப்பிறவியிலேயே, உறுதி எய்தப் பெறுதும்*

என்று-பிறப்பின்பயனை அடையக் கடவேம் என்று, கடைப்பிடித்து-உறுதியாகக்கொண்டு, உள்ளம் தேரு - சிந்தை தெளிந்து எ - று.

அறைந்திட என்பதில் இடு, துணைவினை. புகழ்மை என்பதில், மை: பகுதிப்பொருள் விகுதி. அந்த வடநூல் எனவும், இந்தப் பிறப்பில் எனவும் கூட்டுக. செய்தி: முன்னிலையேவலொருமை யெதிர்கால வினைமுற்று; இதில் த் எழுத்துப் பேறு. தேரு: செய்யா என்னும் வாய்பாட்டு வினையெச்சம். (உச)

திருநகர் தீர்த்த மூர்த்திச் சிறப்புமுன் றந்த மூர்த்தி
அருள்விளை யாட லெட்டெட் டருச்சனை வினையோன் றுக
வரன்முறை யறுபத் தெட்டா மற்றவை படல மாக
விரிமுறை விருத்தச் செய்யுள் வகைமையால் விளம்ப லுற்றேன்.

(இ - ள்.) திருநகர் திர்த்தம் மூர்த்திச் சிறப்பு மூன்று-தலவிசேடம் தீர்த்தவிசேடம் மூர்த்திவிசேடம் என மூன்றும், அந்த மூர்த்தி - அப்பெருமை பொருந்திய சோமசுந்தரக் கடவுள், அருள் விளையாடல் எட்டெட்டு - அருளினாற் புரிந்த திருவிளையாடல்கள் அறுபத்துநான்கும், அருச்சனை வினை ஒன்று - அருச்சித்த செயல் ஒன்றும், ஆக அறுபத்தெட்டு ஆம் அவை - ஆக அறுபத்தெட்டாகிய அவைகளை, வரன்முறை-முறைப்படியே, படலம் ஆக-படலங்களாக அமைத்து, விரிமுறை - விரிந்தமுறையில், விருத்தச் செய்யுள்வகைமையால் - விருத்தமாகிய செய்யுள்வகையினால், விளம்பல் உற்றேன் - கூறத் தொடங்கினேன் எ - று.

சிறப்பு என்பதனைத் திருநகர், திர்த்தம் என்பவற்றோடும் ஒட்டுக. அறுபத்தெட்டு என்று கூறினும், தலவிசேடத்தின் முற்படக் கூறிய பகுதிகளையும் சேர்த்தெண்ணிக் கொள்க. மற்று: அசை. விருத்தம் என்பது கலித்துறை முதலியவற்றையும் குறிக்கும்; திருவிருத்தம் என்னும் வழக்கும் ஓர்க. வகைமை, மை: பகுதிப்பொருள் விகுதி. மேற்பாட்டில் 'பெறுதும்' என்று பன்மையாற் கூறியது சார்புடையாரையும் உளப்படுத்தி. இவை மூன்று பாட்டும் குளகம். (உரு)

## அவையடக்கம்

நாயகன் கவிக்குங் குற்ற நாட்டிய கழக மாந்தர்
மேயவத் தலத்தி னோர்க்கென் வெள்ளறி வுரையிற் குற்றம்*
ஆயுமா றரிதன் றேனு நீர்பிரித் தன்ன முண்ணுந்
தூயதீம் பால்போற் கொள்க சுந்தரன் சரிதந் தன்னை.

(இ - ள்.) நாயகன்-முற்றறிவுடையனாகிய சிவபிரானின், கவிக்கும்-திருப்பாசுரத்திற்கும், குற்றம் நாட்டிய-குற்றங்கூறி நிறுத்திய, கழகமாந்தர் - சங்கப்புலவர்கள், மேய - பொருந்தியிருக்கப்பெற்ற, அத்தலத்தினோர்க்கு - அந்த மதுரைமாநகரில் வசிப்போர்க்கு, என் வெள் அறிவு உரையில் - என் வெண்மையான அறிவு பற்றிவந்த சொற்களில், குற்றம் ஆயுமாறு - குற்றங்காணும் வழி, அரிது

(பா - ம்.) * வெள்ளறிவுரை சொற்குற்றம்.

அன்றேனும்-அருமையுடைத்தன்றாயினும், அன்னம்-அன்னப்பறவையானது, நீர் பிரித்து-நீரை ஒதுக்கி, உண்ணும் தூய தீம்பால் போல்-தூய்மையோடு கூடிய இனிய பாலை உண்ணுவது போல, சுந்தரன் சரிதம் தன்னை - சோமசுந்தரக்கடவுளின் திருவிளையாடலை, கொள்க-கொள்ளக்கடவர் எ - று.

உம்மை, உயர்வு சிறப்பு. கவி - 'கொங்குதேர் வாழ்க்கை' என்னும் முதலையுடைய செய்யுள். குற்றங் கூறியவர் - நக்கீரர்; இவ்வரலாற்றை இப்புராணத்திலுள்ள தருமிக்குப் பொற்கிழி யளித்த படலத்தால் அறிக. அன்னம் பால் உண்ணுவதுபோல எனப் பிரித்துக் கூட்டப்பட்டது. நீர் பிரித்து என்றதற்கேற்ப என் சொற்குற்றத்தை நீக்கி என உரைத்துக்கொள்க. (உ௬)

[கலிநிலைத்துறை]

கவைக்கொ ழுந்தழ *னுச்சுவை கண்டவூ னிமையோர்
சுவைக்க வின்னமிழ் தாயின துளக்கமில் சான்றோர்
அவைக்க ளம்புகுந் தினியவா யாலவா யுடையார்
செவிக்க ளம்புகுந் தேறுவ சிறியனேன் பனுவல்.

(இ - ள்.) கொழும் தழல்-கொழுவிய அக்கினியின், கவை நா-பிளவுபட்ட நாவினால், சுவைகண்ட - சுவைகாணப்பெற்ற, ஊன் - ஊன்கள், இமையோர் - தேவர்கள், சுவைக்க - சுவைத்துண்ண, இன் அமிழ்து ஆயின-இனிய அமிழ்தமாயின; (அதுபோல), சிறியனேன் பனுவல் - சிறியேனுடைய செய்யுட்கள், துளக்கம் இல் சான்றோர் - ஐயந்திரிபில்லாத புலவர்களின், அவைக்களம் புகுந்து - அவைக்களஞ்சென்று, இனியவாய் - மதுரமுடையனவாய், ஆலவாய் உடையார்-திருவாலவாயுடைய இறைவரின், செவிக்களம் புகுந்து ஏறுவ - திருச்செவியினிடத்தில் சென்று பொருந்துவனவாம் எ - று.

தழல் - வேள்வித்தீ. கொழுந்து அழல் எனப் பிரித்தலும் ஆம். துளக்கம் - நடுக்கம். அவைக்களம்: இருபெயரொட்டுப் பண்புத்தொகை. அவைக்களம் புகுந்து என்றது சான்றோரால் கேட்டுத் துகளறுக்கப்பட்டு என்றபடி. (உஎ)

பாய வாரியுண் டுவர்கெடுத் துலகெலாம் பருகத்
தூய வாக்கிய காரெனச் சொற்பொருள் தெளிந்தோர்
ஆய கேள்வியர் துகளறுத் தாலவா யுடைய
நாய னார்க்கினி தாக்குப நலமிலேன் புன்சொல்.

(இ - ள்.) கார் பாயவாரி உண்டு - மேகமானது பரந்த கடல் நீரைப் பருகி, உவர் கெடுத்து-(அதிலுள்ள) உப்பைப்போக்கி, உலகு எலாம் பருக - உலகிலுள்ளாரனைவரும் உண்ணும்படி, தூய ஆக்கிய என-தூயவாகும்படி செய்தாற்போல, சொல்பொருள் தெளிந்தோர் ஆய-சொல்லையும் பொருளையும் குற்றமற உணர்ந்தோராகிய, கேள்வி

(பா - ம்.) * கவைக் கொழுந் தெழுநா.

யர்-கேள்வி வல்லுநர், நலம் இலேன் புன்சொல்-(அக்கல்வி கேள்வி) நலம் இல்லாத என்னுடைய புன்மையான சொற்களிலுள்ள, துகள் அறுத்து-குற்றங்களைப் போக்கி, ஆலவாய் உடைய நாயனார்க்கு-திருவாலவாயையுடைய சிவபிரானுக்கு, இனிது ஆக்குப - இனியதாகச் செய்வர் எ - று.

வாரி, நீருக்கு ஆகுபெயர். கார் ஆக்கியவென என்று பிரித்துக் கூட்டப்பட்டது. கேள்வியர் - புலமையர் என்றுமாம். நாயனார் - தலைவர். (௨அ)

அல்லை யீதல்லை யீதென மறைகளு மன்மைச்
சொல்லி னாற்றுதித் திளைக்குமிச் சுந்தர னாடற்
கெல்லை யாகுமோ வென்னுரை யென்செய்கோ விதனைச்*
சொல்லு வேனெனு மாசையென் சொல்வழி கேளா.

(இ - ள்.) அல்லையீது அல்லையீது என - இஃது அல்லையாயிருக்கின்றாய் இஃது அல்லையாயிருக்கின்றாய் என்று, மறைகளும் - வேதங்களும், அன்மைச் சொல்லினால்-எதிர்மறைச் சொல்லினால், துதித்து இளைக்கும் - துதித்து மெலிவதற்குக் காரணமாயுள்ள, இச்சுந்தரன் ஆடற்கு - இந்தச் சோமசுந்தரக் கடவுளின் திருவிளையாடலைக் கூறுதற்கு, என் உரை எல்லையாகுமோ - என்மொழி வரம்பு ஆகுமோ, (ஆகாது எனினும்) இதனை சொல்லுவேன் எனும் ஆசை - இத்திருவிளையாடலைக் கூறுவேன் என மனத்திலெழுந்த விருப்பம், என் சொல்வழி கேளா - நான் கூறும் வழியைக் கேட்கின்றிலது, என் செய்கு - என்செய்வேன் எ - று.

ஈது எனச் சுட்டுப்பெயர் நீண்டது. அல்லை: முன்னிலையொருமை எதிர்மறைக் குறிப்பு வினைமுற்று. உம்மை: உயர்வு சிறப்பு. இளைக்குமென்றார் காணலாகாமையால். இளைக்கும் என்னும் பெயரெச்சம் சுந்தரன் என்னும் கருவிப்பெயர் கொண்டது. இகரச் சுட்டு உயர்வின் மேலது. ஆடற்கு-ஆடலைக் கூறுதற்கு. ஆடற்கு உரை எல்லையாகுமோ என்றது, ஆடல் என் உரை வரம்பில் அடங்காது என்றபடி. ஓ இரண்டனுள் முன்னது வினா; பின்னது அசை நிலை. செய்கு: தன்மை யொருமை யெதிர்கால வினைமுற்று. கேளாது என்னும் துவ்வீறு தொக்கது. ஆசை மிகுதியாற் சொல்லலுற்றேன் என்றார்.

மறைகள் அன்மைச் சொல்லினாற் கூறி இளைத்தலை இவ்வாசிரியரே,

"பூதங்க ளல்ல பொறியல்ல வேறு புலனல்ல உள்ள மதியின்
பேதங் களல்ல விவையன்றி நின்ற பிறிதல்ல வென்று பெருநூல்
வேதங் கிடந்து தடுமாறும் வஞ்ச வெளியென்ப கூடன் மறுகிற்
பாதங்க ணோவ வளையிந்த னாதி பகர்வாரை யாயு மவரே"

என, இப்புராணத்துள் பின்னரும் கூறுதல் காண்க. இவை நான்கு பாட்டும் அவையடக்கம். அவையடக்கமாவது இன்னதென்பதனை,

(பா - ம்.) * என்செய்கே னிதனைச் சொல்லுகேனெனு மாசை.

"அவையடக் கியலே யரிறபத் தெரியின்
வல்லா கூறினும் வகுத்தனர் கொண்மினென்
றெல்லா மாந்தர்க்கும் வழிமொழிந் தன்றே"

என்னும் தொல்காப்பியச் செய்யுளியற் சூத்திரத்தானறிக. 'அவையடக்கியலைக் குற்றமற ஆராயின் அறியாதன சொல்லினும் பாகுபடுத்துக் கோடல்வேண்டுமென்று எல்லா மாந்தர்க்கும் தாழ்ந்து கூறல் என்றவாறு' என்பது இதற்கு இளம்பூரணர் கூறிய உரை. "வாயுறை வாழ்த்தே யவையடக் கியலே" என்னும் செய்யுளியற் சூத்திரவுரையில், பேராசிரியர், 'அடக்கியலென்பது வினைத்தொகை; தானடங்குதலாயின் அடங்கியலென வேண்டும்; அஃதாவது அவையத்தாரடங்குமாற்ருல் இனியவாகச் சொல்லி அவரைப் புகழ்தல்' என்று கூறியிருப்பதும் இங்கே கருதற்பாலது. (உக)

ஆகச் செய்யுள் - ௩௦

## திருநாட்டுச் சிறப்பு

[கலிநிலைத்துறை]

கறைநி றுத்திய கந்தர சுந்தரக் கடவுள்
உறைநி றுத்திய வாளினுற் பகையிரு ளோதுக்கி
மறைநி றுத்திய வழியினுல் வழுதியாய்ச் சேங்கோன்
முறைநி றுத்திய பாண்டிநாட் டணியது மோழிவாம்.

(இ-ள்.) கறைநிறுத்திய-விடக்கறையினை நிலவச்செய்த, கந்தரம்-திருமிடற்றினையுடைய, சுந்தரக்கடவுள்-சோமசுந்தரக்கடவுள், வழுதியாய் - பாண்டி வேந்தாகி, உறை நிறுத்திய வாளினுல் - உறையில் நிறுத்தியுள்ள வாட்படையாகிய ஒளியால், பகை இருள் ஓதுக்கி-பகையாகிய இருளை யொழியச்செய்து, மறை நிறுத்திய வழியினுல் - வேதங்களிற் கூறி நிறுத்தப்பட்ட வழியினுல், செங்கோல் முறை நிறுத்திய-நீதிமுறையை நிலைபெறுத்தி ஆண்டருளிய, பாண்டி நாட்டு அணி மொழிவாம்-பாண்டித்திருநாட்டின்சிறப்பினைக்கூறுவாம்எ-று.

பாற்கடல் கடைந்தபொழுது உண்டாகிய ஆலகாலம் என்னும் கொடுவிடத்திற் காற்ருது அமரரெல்லாரும் அஞ்சிச் சரண்புக, சிவ பெருமான் அதனையுண்டு, முடிவிலாற்றலும், பேரருளுமுடைய முதற்கடவுள் தானே என்பதனை எக்காலத்தும் யாவர்க்கும் அறிவுறுத்தி உய்விக்கும் பொருட்டாக அதனைத் திருமிடற்றிலே நிலைபெறுத்தி நீலகண்டன் என்னும் திருப்பெயருடன் விளங்குகின்ருன் ஆகலின், 'கறைநிறுத்திய கந்தர சுந்தரக் கடவுள்' என்ருர். கந்தரம்-தலையைத் தாங்குவது என்னும் பொருளது. வாள் - இரட்டுற மொழிதலால் ஒளியும் ஆம். தான் வகுத்தருளிய மறைநெறியினின்று யாவரும் மாறுபடா தொழுகுதற்பொருட்டுத் தானே அந்நெறி நின்று செங்கோலோச்சிக் காட்டினன் என்பார் 'மறை நிறுத்திய வழியினுல் முறை நிறுத்திய' என்ருர். முறை நிறுத்திய என்னும் பெயரெச்சம் பாண்டி நாடென்னும் நிலப்பெயர் கொண்டது. அணியது - அது பகுதிப்பொருள் விகுதி. (க)

தேய்வ நாயக னீறணி மேனிபோற் சேன்று
பௌவ மேய்ந்துமை மேனிபோற் பசந்துபல் லுயிர்க்கும்
எவ்வ மாற்றுவான்* சுரந்திடு மின்னரு ளேன்னக்
கௌவை நீர்சுரந் தேழுந்தன கனைகுரன் மேகம்.

(இ - ள்.) கனைகுரல் மேகம்-ஒலிக்கின்ற குரலையுடைய மேகங்கள், தெய்வநாயகன்-தேவர்களுக்குத் தலைவனுகிய சிவபெருமானின், நீறு அணி மேனி போல் சென்று - திருநீறு அணிந்த திருமேனி போலும் (வெண்ணிறத்தோடு) சென்று, பௌவம் மேய்ந்து - கடல் நீரைப்பருகி, உமை மேனிபோல் பசந்து - உமாதேவியாரின் திருமேனிபோலும் பசிய நிறங்கொண்டு, பல் உயிர்க்கும் - பலவகைப்பட்ட உயிர்களுக்கும், எவ்வம் மாற்றுவான் - பிறவித் துன்பத்தை

(பா - ம்.) * எவ்வமாற்றுவாள்.

நீக்குதற் பொருட்டு, சுரந்திடும் இன்அருள் என்ன - இனிய திருவருளைச் சுரந்திடுதல் போல, கௌவை நீர் சுரந்து எழுந்தன - ஒலிக்கின்ற நீரைச் சுரந்து மேலெழுந்தன எ - று.

'நீறணிந்த கடவுணிறத்தவான்' என்றார் கம்பரும். மேய்ந்து - பருகி; 'கலங்குதெண்டிரை மேய்ந்து' என்று திருத்தக்கதேவரும், 'ஆர்கலிமேய்ந்து' என்று கம்பரும் கூறுதல் காண்க. ஆற்றுவான் எனவும் பிரித்தலமையும். பல்லுயிர்க்கும் எவ்வமாற்றுவான் நீர் சுரந்து எனவும் கூட்டிக்கொள்க. ஈண்டு எவ்வமாவது ஞாயிற்றின் வெம்மையும் உணவின்மையும் ஆம். உமையுடன் கூடிய இறைவன் சுரந்திடும் இன்னருளென்க;

"............நந்தம்மை யாளுடையாள்
தன்னிற் பிரிவிலா வெங்கோமா னன்பர்க்கு
முன்னி யவணமக்கு முன்சுரக்கு மின்னருளே
யென்னப் பொழியாய் மழையேலோ ரெம்பாவாய்"

என்னும் திருவாசகமும் காண்க. (௨)

இடித்து வாய்திறந் தோல்லென வெல்லொளி மழுங்கத்
தடித்து வாள்புடை விதிர்த்துநின் றிந்திர சாபம்
பிடித்து நீளம்பு கோடைமேற் பெய்துவெம் பெரும்போர்
முடித்து நாமென வருதல்போல் மொய்த்தன கொண்மூ.

(இ - ள்.) ஒல்லென வாய் திறந்து இடித்து - ஒல்லென்று வாயைத் திறந்து முழங்கி, எல் ஒளி மழுங்க-சூரியன் ஒளியும் மழுங்கும் வண்ணம், தடித்து வாள்புடை விதிர்த்து நின்று - மின்னலாகிய வாட்படையைப் பக்கங்களில் அசைத்து நின்று, இந்திர சாபம் பிடித்து-இந்திர வில்லை ஏந்தி, நீள் அம்பு-நீண்ட நீராகிய அம்பினை, கோடைமேல் பெய்து-கோடையாகிய பகையின்மீது சொரிந்து, வெம்பெரும் போர்-வெவ்விய பெரிய போரினை, முடித்தும் நாம் என-நாம் முற்றுவிப்போமென்று, வருதல் போல்-வருவதைப்போல், கொண்மூ மொய்த்தன - மேகங்கள் நெருங்கின எ - று.

ஒளியும் என்னுஞ் சிறப்பும்மை விகாரத்தாற் றொக்கது. தடித்து-மின்னல். அம்பு-நீர், கணை. இந்திரசாபமாகிய வில் என்றும் நீராகிய கணை என்றும் உரைக்க. கோடையைப் பகையென்னாமையால் இஃது ஏகதேசவுருவகம். (௩)

முனித னீள்வரை யுச்சிமேன் முழங்கிவா னிவந்து
தனித நீர்மழை பொழிவன தடஞ்சிலை யிராமன்
கனித னீர்மையா லாலவாய்க் கண்ணுதன் முடிமேற்
புனித நீர்த்திரு மஞ்சன மாட்டுவான் போலும்.

(இ - ள்.) தனிதம் - மேகங்கள், முனிதன் - அகத்திய முனிவருடைய, நீள்வரை உச்சிமேல்-உயர்ந்த பொதியின் மலையினுச்சியில், முழங்கி - குமுறி, வான்நிவந்து - வானின்கண் உயர்ந்து, நீர்மழை பொழிவன - நீராகிய மழையைப் பொழிதல், தடசிலை இராமன்

பெரிய கோதண்டம் என்னும் வில்லையுடைய இராமபிரான், கனிதல் நீர்மையால்-கனிதற் றன்மையோடு, ஆலவாய் - திருவாலவாயின்கண் வீற்றிருக்கும், கண்ணுதல் - நெற்றிக்கண்ணையுடைய இறைவனது, முடிமேல்-திருமுடிமேல், புனிதம் நீர்-தூய்மையான நீரால், திருமஞ் சனம் ஆட்டுவான்போலும் - திருமஞ்சனம் செய்தலை ஒக்கும் எ - று.

பொதியில் அகத்தியர்க்கு என்றும் உறைவிடமாதலின் முனி வரை எனப்பட்டது; தென்றமிழ்நாட் டகன்பொதியிற் றிருமுனி வன் றமிழ்ச்சங்கஞ் சேரு வீரேல், என்றுமவ னுறைவிடமாம்' என்று கம்பரும் கூறினர். தனிதம் - முழக்கம்; மேகத்திற்கு ஆகுபெயர். இராமன் சிவபெருமானுக்குக் கோயிலெடுத்துப் பூசனை புரிந்ததனைத் திருவிராமேச்சுரத் திருநேரிசையா னறிக. மற்றும் பல திருப்பதி களினும் அவன் வழிபட்டமை கேட்கப்படுகின்றது. பொழிவன ஆட்டுவான் என்பன ஈண்டுத் தொழிற்பெயர்கள். நீர்மையால், ஆல் - ஒடுவின் பொருட்டு. (௪)

சுந்த ரன்றிரு முடிமிசைத் தூயநீ ராட்டும்
இந்தி ரன்றனை யொத்தகா ரெழிலிதென் மலைமேல்
வந்து பெய்வவத் தனிமுதன் மௌலிமேல் வலாரி
சிந்து கின்றகைப் போதெனப் பன்மணி தெறிப்ப.

(இ - ள்.) தென்மலைமேல்-பொதியின்மலைமேல், வந்து பெய்வ-வந்து மழையைப் பெய்வனவாகிய, கார் எழிலி - கரிய மேகங்கள், சுந்தரன் திருமுடிமிசை - சோமசுந்தரக் கடவுளின் திருமுடியின் கண்ணே, தூயநீர் ஆட்டும் - தூய்மையான நீரால் அபிடேகஞ் செய் கின்ற, இந்திரன்தனை ஒத்த - இந்திரனை ஒத்தன; அத் தனிமுதல் மௌலிமேல் - அந்த ஒப்பற்ற முதற் கடவுளின் திருமுடிமேல், வலாரி - அவ்விந்திரனனவன், கைசிந்துகின்ற - கையினால் சொரி கின்ற, போது என-மலர்களைப்போல, பல்மணி-பலவாகிய மணிகள், தெறிப்ப - (அம் மேகங்களினின்றும்) சிதறுவன எ - று.

வலாரி - வலன் என்னும் அசுரனுக்குப் பகைவன்; இந்திரன். மணிகள், முகில்கள் கடலி னீருண்ணும்பொழுது அதனுடன் கலந்து வந்தன. இந்திரன் பூசித்ததை இப்புராணத்து இந்திரன் பழிதீர்த்த படலத்தாலறிக. (௫)

உடுத்த தெண்கடன் மேகலை யுடையபார் மகடன்
இடத்து தித்தபல் லுயிர்க்கெலா மிரங்கித்தன் கொங்கைத்
தடத்து நின்றிழி பாலெனத் தடவரை முகடு
தொடுத்து வீழ்வன விழுமெனத் தூங்குவெள் ளருவி.

(இ - ள்.) இழுமென-இழுமென்னு மொலியோடு, தூங்குவெள் அருவி - ஒழுகுகின்ற வெள்ளிய அருவிகளானவை, உடுத்த-உடுக்கப் பட்ட, தெண்கடல் - தெளிந்த கடலாகிய, மேகலை உடைய - ஆடை யினை யுடைய, பார்மகள் - புவிமடந்தையானவள், தன் இடத்து உதித்த - தன்னிடத்துத் தோன்றிய, பல் உயிர்க்கு எலாம் - பலவகை யான உயிர்களெல்லாவற்றுக்கும், இரங்கி - இரக்கமுற்று, தன் கொங்கைத் தடத்து நின்று - தனது கொங்கையிடத்தினின்றும்

(சொரிய), இழிபால் என-பால் ஒழுகுமாறுபோல, தடவரை முகடு தொடுத்து வீழ்வன - பெரிய மலையின் உச்சியினின்றும் வீழ்வன எ - று.

மேகலை, ஈண்டு ஆடை. பார்மகள் கொங்கை யென்பதனை, 'மணி மலைப் பணைத்தோள் மாநில மடந்தை, அணிமுலைத் துயல்வருஉ மாரம்போலச், செல்புன லுழந்த சேய்வரற் கான்யாற்று' என்னும் சிறுபாண் அடிகளிற் காண்க. சொரிய என ஒருசொல் வருவிக்கப் பட்டது. (௬)

[அறுசீரடியாசிரியவிருத்தம்]

கருநிற மேக மென்னுங்
கச்சணி சிகரக் கொங்கை
அருவியாந் தீம்பால் சோர
வகன்சுனை யென்னுங் கொப்பூழ்ப்
பொருவில்வே யென்னு மென்றோட்
பொதியமாஞ் சைலப் பாவை
பெருகுதண் பொருநை யென்னும்
பெண்மகப் பெற்ற ளன்றே.

(இ - ள்.) அகன்சுனை என்னும் கொப்பூழ்-அகன்ற சுனையாகிய கொப்பூழினையும், பொருஇல் - ஒப்பில்லாத, வேய் என்னும் மென் தோள்-மூங்கிலாகிய மெல்லிய தோளினையுமுடைய, பொதியம் ஆம் சைலப்பாவை-பொதியமாகிய மலைமடந்தையானவள், கருநிறமேகம் என்னும் கச்சு அணி - கரிய நிறத்தினையுடைய மேகமாகிய கச்சினை யணிந்த, சிகரக்கொங்கை-சிகரமாகிய கொங்கையினின்றும், அருவி யாம் தீம்பால் சோர-அருவியாகிய மதுரம்பொருந்திய பால் ஒழுக, பெருகுதண் பொருநை என்னும் பெண்மகப் பெற்றாள் - பெருகா நின்ற குளிர்ந்த தாமிரபன்னியாகிய பெண்மகவை ஈன்றாள் எ - று.

அகன்சுனை, புறனடையான் முடிக்க. பொதியில் என்பது பொதியம் எனவும் பொதிகை யெனவும் வடமொழியிற்சென்று திரிந்துவழங்கும். அன்று ஏ, அசை. இயைபுருவகம். (எ)

கல்லெனக் கரைந்து வீழுங்
கடும்புனற் குழவி கானத்
தொல்லெனத் தவழ்ந்து தீம்பா
லுண்டோரீஇத் திண்டோள் மள்ளர்
செல்லெனத் தெழிக்கும் பம்பைத்
தீங்குரல் செவிவாய்த் தேக்கி
மெல்லெனக் காலிற் போகிப்
பணைதொறம் விளையாட் டெய்தி.

(இ - ள்.) கல்லெனக் கரைந்து வீழும் - கல் என்று ஒலித்து வீழும், கடும்புனல் குழவி-கடிய வேகத்தினையுடைய பொருநைநீரா

இய குழந்தை, கானத்து-முல்லைநிலத்தின்கண், ஒல்லெனத்தவழ்ந்து-விரையத் தவழ்ந்து, தீம்பால் உண்டு - இனிய பாலைப் பருகி, ஒரீஇ - அதனினின்றும் நீங்கி, திண்தோள் மள்ளர் - வலிய தோளையுடைய உழவர்களின், செல்என தெழிக்கும் - மேகம்போல் உரப்புகின்ற, பம்பை தீம்குரல் - பம்பையினுடைய இனிய குரலை, செவி வாய் தேக்கி - செவியினிடமாக நிரப்பி, மெல்லென - மெதுவாக, காவில் போகி-காலாற் சென்று, பணைதொறும் விளையாட்டு எய்தி-பண்ணைகள்தோறும் விளையாடுதலைப் பொருந்தி எ - று.

கல்லென - ஒலிக்குறிப்பு. ஒல்லென - விரைய; ஒலிக்குறிப்புமாம். செவிவாய்த் தேக்கி யென்றது உபசாரம். பண்ணை - மகளிர் விளையாட்டிடம்; விகாரம். முல்லைநிலத்து ஆய்ச்சியரின் பாற்குடங்களை யுருட்டி யென்றும், கால்வாய் வழியே சென்றென்றும், கழனிகடோறும் பாய்ந்தென்றும் புனலுக்கேற்ப உரைத்துக்கொள்க. இது குழவித்தன்மை கூறியவாறு. (அ)

அரம்பைமென் குறங்கா மாவி
 னவிர்தளிர் நிறமாத் தெங்கின்
குரும்பைவெம் முலையா* வஞ்சிக்
 கொடியிறு நுசுப்பாக் கூந்தல்
சுரும்பவிழ் குழலாக் கஞ்சஞ்
 சுடர்மதி முகமாக் கொண்டு
நிரம்பிநீள் கைதை வேலி
 நெய்தல்சூழ் காவில் வைகி.

(இ - ள்.) அரம்பைமென் குறங்கா-வாழைமரங்களை மெல்லிய தொடைகளாகவும், மாவின் அவிர்தளிர் நிறமா - விளங்குகின்ற மாந்தளிர்களை நிறமாகவும், தெங்கின் குரும்பை-தென்னங் குரும்பைகளை, வெம்முலையா - விருப்பத்தைத்தரும் முலைகளாகவும், வஞ்சிக்கொடி - வஞ்சிக்கொடியை, இறு நுசுப்பா-ஒடிகின்ற இடையாகவும், கூந்தல்-கூந்தற்பனையின் மடலை, சுரும்பு அவிழ்குழலா - வண்டுகள் பரந்த கூந்தலாகவும், கஞ்சம் சுடர் மதிமுகமாக்கொண்டு - தாமரைமலரை ஒளியையுடைய மதிபோலும் முகமாகவுங்கொண்டு, நிரம்பி - (மங்கைப்பருவம்) நிரம்பி, நீள்கைதைவேலி - நீண்ட தாழையாகிய வேலியையுடைய. நெய்தல்சூழ் - நெய்தனிலத்தைச் சூழ்ந்த, காவில் வைகி - சோலையில் தங்கி எ - று.

அரம்பை முதலியன மகளிரின் குறங்கு முதலியவற்றிற்கு உவமமாவன ஆகலானும், அவை அம்மருங்குளவாகலானும் அவற்றையே உறுப்புக்களாகக் கூறினர். ஆக என்பது விகாரமாயிற்று. (கு)

பன்மலர் மாலை வேய்ந்து பானுரைப் போர்வை போர்த்துத்
தென்மலைத் தேய்ந்த சாந்த மான்மதச் சேறு பூசிப்
பொன்மணி யாரந் தாங்கிப் பொருநையாங் கன்னி முந்நீர்த்
தன்மகிழ் கிழவ னாகந் தழீஇக்கொடு கலந்த தன்றே.

---

(பா - ம்.) *மென்முலையா.

(இ - ள்.) பொருநை ஆம் கன்னி - அந்தப் பொருநையாகிய கன்னி, பன்மலர் மாலைவேய்ந்து-பலமலர் மாலைகளை அணிந்து, பால் நுரைப் போர்வை போர்த்து-வெள்ளிய நுரையாகிய போர்வையைப் போர்த்து, தென்மலை தேய்ந்த - பொதியின்மலையி லரைபட்ட, சாந்தம் மான்மதச் சேறுபூசி - சந்தனத்தோடு கலந்த கத்தூரிக் குழம்பை அணிந்து, பொன்மணி ஆரம் தாங்கி - பொன்னாலும் மணியாலு மியன்ற ஆரங்களைத் தாங்கி, மகிழ் - மகிழ்ச்சியைச் செய்கின்ற, முந்நீர் - கடலாகிய, தன் கிழவன் ஆகம் - தன் தலைவன் மார்பை, தழீஇக்கொடு கலந்தது-தழுவிக்கொண்டு கலந்தது எ-று.

மலர்மாலை - மலராற் றொடுத்தமாலை, மலர் வரிசை. மாலை வேய்தல் முதலியன கலவியின் பொருட்டு. கலவிக் காலத்து மெல்லிய வெண்டுகி லுடுத்தலை 'பட்டுநீக்கித் துகிலுடுத்து' என்னும் பட்டினப் பாலை யடியானறிக. மணியாரம் - மணியானியன்ற ஆரம், மணியும் முத்தும். முந்நீர், 'நிலத்தைப் படைத்தலும் காத்தலும் அழித்தலு மாகிய மூன்று தொழிலுமுடைமையின்' கடலுக்கு ஆகுபெயரென்பர் நச்சினார்க்கினியர். "யாற்றுநீரும் ஊற்றுநீரும் மழைநீரும் உடைமை யால் கடற்கு முந்நீ ரென்று பெயராயிற்று' என்பர் புறநானூற்றுரை காரர். இவை மூன்றுபாட்டுங் குளகம். குழவி மங்கையாய் விரம் பினமை கூறிப் பின் கன்னி யென்பதனை எழுவாயாக நிறுத்திக் கலந்ததென்னும் பயனிலையால் முடித்தார். பொருநைக்கியையக் கலந்ததென அஃறிணை வினை கொடுத்தார்.

"திரைபொரு கனைகடற் செல்வன் சென்னிமேல்
நுரையெனு மாலையை நுகரச் சூட்டுவான்
சரவெனும் பெயருடைத் தடங்கொள் வெம்முலைக்
குரைபுனற் கன்னிகொண் டிழிந்த தென்பவே"

என்னுஞ் சிந்தாமணிச் செய்யுள் ஈண்டு நோக்கற்பாலது. (௧௦)

வல்லைதா யிருபால் வைகுஞ் சிவாலய மருங்கு மீண்டி
முல்லையா னைந்துந் தேனுந் திரைக்கையான் முகந்து வீசி
நல்லமான் மதஞ்சாந் தப்பி நறுவிரை மலர்தூய் நீத்தஞ்
செல்லலாற் பூசைத் தொண்டின் செயல்வினை மாக்கள் போலும்.

(இ - ள்.) நீத்தம் - பொருநை வெள்ளமானது, வல்லைதாய் - விரைந்து தாவிச் சென்று, இருபால்வைகும்-இருபுறங்களினு முள்ள, சிவாலய மருங்கு ஈண்டி - சிவாலயங்களிடத்தில் நெருங்கி, முல்லை - முல்லை நிலத்திலுள்ள, ஆன் ஐந்தும் - ஆவின்பால் முதலிய ஐந்து கவ்வியங்களையும், தேனும்-தேனையும்,திரைக்கையால்-அலைகளாகிய கைகளால், முகந்துவீசி-மொண்டு வீசியும், நல்ல மான்மதம் - நல்ல கத்தூரியையும், சாந்து-சந்தனத்தையும், அப்பி - பூசியும்; நறுவிரை மலர்தூய் - நறிய மணமுள்ள மலர்களைத் தூவியும், செல்லலால் - செல்லுதலால், பூசைத்தொண்டின் - சிவபூசைத் திருத்தொண்டின், செயல் வினை மாக்கள் போலும் - செயலாகிய வினையையுடைய அடியார்களை ஒக்கும் எ - று.

ஆன் ஐந்து - பால், தயிர், நெய், கோமயம், கோசலம் என்பன. தேன் முதலியன மலையிலும் காட்டிலுமுள்ளன. தாவி, தூவி என்பன

தாய், தூய் என விகாரப்பட்டன. மருங்கும் என்பதில் உம்மை அசைநிலை. நீத்தம், நீந்தப்படுவதென வெள்ளத்திற்குக் காரணக்குறி. நீந்து பகுதி, அம் செயப்படுபொருள் விகுதி. (௧௧)

அரும்பவி ழனங்க வாளி யலைதர வாகம் பொன்போர்த்
திரங்கிவா லன்ன மேந்தி யிருகையுஞ் சங்கஞ் சிந்தி
மருங்குசூழ் காஞ்சி தள்ளி வரம்பிற வொழுகும் வாரி
பரம்பரற் கையம் பெய்யும் பார்ப்பன மகளிர் போலும்.

(இ - ள்.) அரும்பு அவிழ் - முகை விரிந்த, அனங்க வாளி-மன்மத பாணமாகிய மலர்களை, அலை தர-அலைகள் ஒதுக்க, ஆகம் பொன் போர்த்து - தன்னிடமுற்றும் பொன்மணலையுடைய தாய், இரங்கி - ஒலித்து, வால் அன்னம் ஏந்தி - வெள்ளிய அன்னப்பறவைகளைத் தாங்கி, இருகையும் சங்கம் சிந்தி-இரண்டு கரைகளிலும் சங்குகளைச் சிதறி, மருங்குசூழ் காஞ்சி தள்ளி-பக்கங்களிற் சூழ்ந்த காஞ்சி மரங்களைத் தள்ளிக்கொண்டு, வரம்பு இற ஒழுகும் வாரி- கரையுடையும்படி செல்லா நின்ற பொருநை நதியானது, பரம்பரற்கு-சிவபெருமானுக்கு, ஐயம் பெய்யும் - பிச்சையிடும், பார்ப்பன மகளிர் போலும் - தாருகாவனத்து முனிபன்னியரை ஒக்கும் எ - று.

அனங்கவாளி - காமபாணங்கள், அலைதர-வருத்த, ஆகம் பொன் போர்த்து - உடல்முழுதும் பொன்போலும் தேமல் பூக்கப்பட்டு, இரங்கி - மனங்கவன்று, வால் அன்னம் ஏந்தி - வெள்ளிய சோற்றையேந்தி, இருகையும் சங்கம் சிந்தி-இரண்டு கைகளிலுமுள்ள வளையல்களை உதிர்த்து, மருங்கு சூழ் காஞ்சி தள்ளி - இடையில் அணிந்த காஞ்சி யென்னும் அணியை விழுத்தி, வரம்பு இற ஒழுகும்-கற்புநிலை கெட ஒழுகும் என, மகளிர்க்கேற்ப உரைத்துக்கொள்க. விரகநோயுற்று உடல் மெலிதலால் வளையும் காஞ்சியும் தாமே கழன்று விழுதலைச் சிந்தி, தள்ளி எனப் பிறவினையாற் கூறினார். காஞ்சி - இருகோவையுள்ள இடையணி; எழுகோவை என்பாரும் உளர். மகளிர் ஐயமிட்டதனை வளையல் விற்றபடலத்திற் காண்க. (௧௨)

வரைபடு மணியும் பொன்னும் வைரமுங் குழையும் பூட்டி
அரைபடு மகிலுஞ் சாந்து மப்பியின் னமுத மூட்டிக்
கரைபடு மருத மென்னுங் கன்னியைப் பருவ நோக்கித்
திரைபடு பொருநை நீத்தஞ் செவிலிபோல் வளர்க்கு மாதோ.

(இ-ள்.) திரைபடு பொருநை நீத்தம்-அலைகளையுடைய பொருநையின் வெள்ளமானது, வரைபடு-மலைகளிலுள்ள, மணியும் பொன்னும் வைரமும் குழையும் பூட்டி - மணி பொன் வைரம் குழை என்பவற்றைப் பூட்டி, அரைபடும் அகிலும் சாந்தும் அப்பி - அரைபட்ட அகிலையும் சந்தனத்தையும் பூசி, இன் அமுதம் ஊட்டி - இனிய அமுதத்தை உண்பித்து, கரைபடு மருதம் என்னும் கன்னியை - வரம்பு பொருந்திய மருத நிலமாகிய மங்கையை, பருவம் நோக்கி - அவள் பருவத்திற்குத் தகுந்தனவற்றை ஆராய்ந்து, செய்து செவிலிபோல் வளர்க்கும் - கைத்தாயைப்போல வளர்க்கும் எ - று.

குழை - குண்டலம், தளிர். அமுதம் - பால், நீர். மலையிலுள்ள வற்றை வாரிச்சென்று மருதத்திற் சேர்ப்பதனைக் கன்னியென்றதற் கேற்பப் பூட்டி என்றும் அப்பி என்றுங் கூறினர். கன்னியை வளர்க்கு மென்க. செவிலிபோல் - செவிலி வளர்ப்பதுபோல். (கங)

மறைமுதற் கலைக ளெல்லா மணிமிடற் றவனே யெங்கும்
நிறைபர மென்றும் பூதி சாதன நெறிவீ டென்றும்
அறைகுவ தறிந்துந் தேரு ரறிவெனக் கலங்கி யந்த
முறையின்வீ டுணர்ந்தோர் போலத் தெளிந்தது மூரிவெள்ளம்.

(இ - ள்.) மறைமுதல் கலைகள் எல்லாம்-வேதமுதலிய கலைகள் எல்லாமும், மணிமிடற்றவனே-நீலமணிபோலுங்கண்டத்தையுடைய சிவபெருமானே, எங்கும் நிறைபரம் என்றும்-எங்கும் நிறைந்த பரம் பொருள் என்றும், பூதிசாதனம் - திருநீறு முதலிய சாதனங்களே, வீடுநெறி என்றும்-வீடுபேற்றுக்கு வழி என்றும், அறைகுவது அறிந்தும்-கூறுவதை அறிந்து வைத்தும், தேரார் அறிவென - தெளியாத வரின் அறிவின் கலக்கத்தைப்போல, மூரிவெள்ளம் கலங்கி - பெரிய வெள்ளமானது கலங்குதலுற்று, அந்த முறையின் வீடு உணர்ந்தோர் போல-அவை கூறுமுறையான் வீட்டினை உணர்ந்த பெரியாரின் திருவுள்ளத்தின் தெளிவுபோல, தெளிந்தது-தெளிவையடைந்தது எ-று.

பூதிசாதனம் என்னுந்தொடர்க்குத் திருநீறாகிய சாதனம் என்றும் பொருள் கூறுதல் அமையும். 'எவரேனுந் தாமாக விலாடத் திட்ட திருநீறுஞ் சாதனமுங் கண்டா லுள்கி' என்று தமிழ்மறை கூறுதலின் திருநீறும் சாதனமும் என்று பொருள் கூறுதல் சிறப்பு. சாதனம், உருத்திராக்கம் என்றும், திருவைந்தெழுத்தென்றும் கூறுவர். வீட்டு நெறி என மாற்றியுரைக்கப்பட்டது. பூதிசாதன நெறி என நிறுத்திச் சைவசமயம் என்று பொருள் கொள்ளலும் ஆம். இதற்கு வீட்டிற் கேதுவை வீடென உபசரித்தாரெனல் வேண்டும். (கச)

மறைவழி கிளைத்த வெண்ணெண்
கலைகள்போல் வருநீர் வெள்ளந்
துறைவழி யொழுகும் பல்கால்
சோலைதண் பழனஞ் செய்தேன்
உறைவழி யோடை யெங்கு
மோடிமன் றுடையார்க் கன்பர்
நிறைவழி யாத வுள்ளத்
தன்புபோ னிரம்பிற் றன்றே.

(இ - ள்.) வருநீர் வெள்ளம்-வருகின்ற பொருநையின் வெள்ளமானது, மறைவழி கிளைத்த - வேதத்தினின்றுங் கிளைத்த, எண் எண் கலைகள்போல் - அறுபத்துநான்கு கலைகளைப்போல், துறைவழி ஒழுகும்-நீர்த்துறைகளினின்று கிளைத்துச் செல்லாநின்ற, பல்கால் - பல வாய்க்கால்களால், சோலை - சோலையிலும், தண் பழனம் - குளிர்ந்த மருத நிலத்திலும், செய் - கழனிகளிலும், தேன் உறை வழி ஓடை -

தேன் துளிகள் வழிகின்ற ஓடைகளிலும், எங்கும்-எல்லாவிடத்தும், ஓடி - விரைந்து சென்று, மன்று உடையார்க்கு அன்பர் - தில்லைமன்றுடைய சிவபிரான் அடியார்களின், உள்ளத்து-திருவுள்ளத்தின்கண், நிறைவு அழியாத - நிறைதல் நீங்காத, அன்பு போல் நிரம்பிற்று - அன்பைப்போல நிரம்பியது எ - று.

கலைகள், எழுத்திலக்கணம் முதலாகவுள்ள அறுபத்து நான்கும். 'நிறைவழியாத' என்பதனை உள்ளத்திற்கு அடையாக்கி, இன்ப நிறைவுடைய என்று கூறலும் ஆம்; அன்பராயினர் 'இறைவன் கழலேத்துமின்ப மின்பமே' என்று கொள்வராகலின் அவருள்ளம் இன்பத்தால் நிறைந்திருக்குமென்க. 'நிறைக்கொண்ட சிந்தையா னெல்வேலி வென்ற நின்றசீர்நெடுமாறன்' என்னுந் திருத்தொண்டத்தொகையும் காண்க. சோலை முதலியன பெயர்ச் செவ்வெண். அன்று, ஏ: அசை. (கரு)

[கலிநிலைத்துறை]

இழிந்த மாந்தர்கைப் பொருள்களு மிகபரத் தாசை
கழிந்த யோகியர் கைப்படிற் றூயவாய்க் களங்கம்
ஒழிந்த வாறுபோ லுவரியுண் டுவர்கெடுத் தெழிலி
பொழிந்த நீரமு தாயின புவிக்கும்வா னவர்க்கும்.*

(இ - ள்.) இழிந்த மாந்தர் கைப்பொருள்களும்-கீழ்மக்களிடத்துள்ள பொருள்களும், இகபரத்து ஆசை கழிந்த யோகியர்-இம்மைப் பயன் மறுமைப் பயன்களில் அவா நீங்கிய சிவயோகியரின், கைப்படில்-திருக்கரத்தில் பட்டால், தூயவாய் களங்கம் ஒழிந்தவாறு போல்-குற்றத்தின் நீங்கித் தூய்மையாயினமைபோல, எழிலி - மேகமானது, உவரி உண்டு - கடல் நீரைப் பருகி, உவர்கெடுத்து - (அதிலுள்ள) உப்பைப் போக்கி, பொழிந்தநீர் - சொரிந்த நீர்த்துளிகள், புவிக்கும் வானவர்க்கும் - நிலவுலகத் துயிர்கட்கும் வானின்கண் உள்ள தேவர்கட்கும், அமுது ஆயின - அமிழ்தமாயின எ - று.

துறக்கவின்பமும் அழிதன்மாலையதாகலின் அவ்வாசை கூடாதாயிற்று. ஆசைகழிதல் விராகமெனப்படும். யோகியர்கைப்படில் என உடம்பொடு புணர்த்தலால் அவரே தானமளித்தற்குச் சிறந்தார் என்பது பெறப்படும்.

"தண்டறு சிந்தைத் தபோதனர் தாமகிழ்ந்
துண்டது மூன்று புவனமு முண்டது
கொண்டது மூன்று புவனமுங் கொண்டதென்
றெண்டிசை நந்தி யெடுத்துரைத் தானே"

என்று திருமந்திரங் கூறுதல் காண்க.

"சிறப்பொடு பூசனை செல்லாது வானம்
வறக்குமேல் வானோர்க்கு மீண்டு"

---

(பா - ம்.) * வானகர்க்கும்.

என்பவாகலின், வானவர்க்கும் அமுதாயின என்றார். உவரி உவர்ப்பினையுடையதெனக் காரணப் பெயர்; இ வினைமுதற்பொருள் விகுதி. (கசு)

ஈறி லாதவ ளொருத்தியே யைந்தொழி லியற்ற
வேறு வேறுபேர் பெற்றென வேலைநீ ரொன்றே
ஆறு கால்குளங் கூவல்குண் டகழ்கிடங் கெனப்பேர்
மாறி யீறில்வான் பயிரெலாம் வளர்ப்பது மாதோ.

(இ - ள்.) ஈறு இலாதவள் ஒருத்தியே - அழிவில்லாதவளாகிய சிவசக்தி ஒருத்தியே, ஐந்தொழில் இயற்ற-படைப்பு முதலிய ஐந்து தொழில்களையும் நடத்துதற்பொருட்டு, வேறு வேறு பேர் பெற்றென - வெவ்வேறு பெயர்களைத் தாங்கி நின்றாற்போல, வேலை நீர் ஒன்றே-கடல் நீர் ஒன்றே, ஆறு கால் குளம் கூவல் குண்டு அகழ் கிடங்கு என-நதி கால்வாய் குளம் கிணறு ஆழமாகத் தோண்டப் பெற்ற கிடங்கு என, பேர்மாறி - பெயர்கள் வேறுபட்டு, ஈறு இல் வான் பயிர் எலாம் - எண்ணிறந்த உயர்ந்த பயிர்களை, வளர்ப்பது - வளர்க்கா நிற்கும் எ - று.

ஐந்தொழில்-படைத்தல், காத்தல், துடைத்தல், மறைத்தல் அருளல் என்பன. வேறு வேறுபேர்-பராசத்தி, ஆதிசத்தி, இச்சாசத்தி, ஞானசத்தி, கிரியாசத்தி என்பன; வாணி, திரு, உமை, மகேசை, மனோன்மனி என்னலுமாம். குண்டு-ஆழம்; குட்டமுமாம். ஏகாரங்கள் தேற்றப்பொருளன. பெற்றென, தொகுத்தல் விகாரம். பெயர் பேரென மருவியது. மாது ஓ: அசை. (கஎ)

[அறுசீரடியாசிரிய விருத்தம்]

களமர்கள் பொன்னேர் பூட்டித் தாயர்வாய்க் கனிந்த பாடற்
குளமகிழ் சிறாரி னேறு மொருத்தலு முவகை தூங்க
வளமலி மருதம் பாடி மனவலி கடந்தோர் வென்ற
அளமரு பொறிபோ லேவ லாற்றவாள் வினையின் மூண்டார்.

(இ - ள்.) களமர்கள்-உழவர்கள், பொன்னேர் பூட்டி-பொன்னேரைப் பூட்டி, தாயர்வாய்-அன்னையரின் வாயினின்றும் வருகின்ற; கனிந்த பாடற்கு - கனிவோடு கூடிய பாடலுக்கு, உளம் மகிழ் சிறாரின் - மனமகிழுகின்ற சிறுவர்களைப்போல, ஏறும் ஒருத்தலும் உவகை தூங்க-எருதுகளும் எருமைக்கடாக்களும் மகிழ்ச்சிகூர, வளம் மலி மருதம் பாடி - வளமிக்க மருதப்பண்களைப் பாடி, மனவலிகடந்தோர் - மனத்தின் வலிமையைக் கடந்தோரால், வென்ற - வெல்லப்பட்ட, அளமரு பொறிபோல் - சுழலுகின்ற ஐம்பொறிகளும் (அவர்கள் பணித்தவழி நிற்றல்) போல, ஏவல் ஆற்ற - (அவைகள்) தாம் பணித்தவாறு செய்ய, ஆள்வினையில் மூண்டார் - உழுதொழிலின் கண்ணே தலைப்பட்டார்கள் எ - று.

களமர், நெற்களமுடையார் என்னும் காரணப்பெயர். புத்தேரினைப் பொன்னேர் என்பர்; நல்லேர் என்றலுமுண்டு.

"கொழுங்கொடி யறுகையுங் குவளையுங் கலந்து
விளங்குகதிர்த் தொடுத்த விரியல் சூட்டிப்
பாருடைப் பனர்போற் பழிச்சினர் கைதொழ
ஏரொடு நின்றோ ரேர்மங் கலமும்"

என்னும் நாடுகாண்காதையால் பொன்னேர் பூட்டு மியல்பும், அதற்கு ஏர் மங்கலம் பாடுவதுண்டென்பதும் விளங்கும்.

ஒருத்தல் எருமைக்கடாவாதலை 'ஏற்புடைத்தென்ப எருமைக் கண்ணும்' என்னும் மரபியல் சூத்திரத்தானறிக. மனத்தை அடக்கினோர்க்கு ஐம்பொறிகளும் ஏவல் செய்யுமென்றார். லள வொற்றுமைபற்றி அலமரு அளமருவென நின்றது. (கஅ)

பலநிற மணிகோத் தென்னப் பன்னிற வேறு பூட்டி
அலமுக விரும்பு தேய வாள்வினைக் கருங்கான் மள்ளர்
நிலமக ளுடலங் கீண்ட சால்வழி நிமிர்ந்த சோரிச்
சலமென நிவந்த செங்கேழ்த் தழன்மணி யிமைக்கு மன்னோ.

(இ - ள்.) பலநிறமணி கோத்தென்ன - பல நிறங்களையுடைய மணிகளைக் கோவை செய்ததுபோல, பல் நிற ஏறு பூட்டி - பல நிறங்களையுடைய எருதுகளைப் பூட்டி, அலம் முக இரும்புதேய - கலப்பையின் முனையிலுள்ள கொழுத் தேயும்படி, ஆள்வினை - உழுதொழில் செய்யும், கரும் கால் மள்ளர் - வலியகாலினையுடைய உழவர்கள், நிலமகள் - புவிமடந்தையின், உடலம் கீண்ட - உடலைக் கிழித்த, சால் வழி - படைச்சாலின் வழியே, நிமிர்ந்த சோரிச் சலமென - பொங்கிய உதிரவெள்ளத்தைப்போல, நிவந்த செம்கேழ் - உயர்ந்த செந்நிறத்தையுடைய, தழல்மணி இமைக்கும் - நெருப்புப் போன்ற மணிகள் ஒளிவீசா நிற்கும் எ - று.

கருங்கால் என்பதிற் கருமை வலிமை; 'கருந்தொழில் வினைஞர்' என்னும் சிறுபாண் உரையிற்காண்க; நிறமுமாம். நிலமகள் என்றதற்கியைய உடலென்றும், சோரியென்றும் கூறினார். தழல்மணி - மாணிக்கம். கோத்தென்ன தொகுத்தல். உடலம், அம் சாரியை. மன் ஓ : அசை. (கசு)

ஊறுசெய் படைவாய் தேய வுழுநரு நீர்கால் யாத்துச்
சேறுசெய் குநருந் தெய்வந் தொழுதுதீஞ் செந்நெல் வீசி
நாறுசெய் குநரும் பேர்த்து நடவுசெய் குநருந் தெவ்வின்
மாறுசெய் களைகட் டோம்பி வளம்படுக் குநரு மானார்.

(இ - ள்.) (அவ்வுழவர்கள்) ஊறுசெய் - (புவியைக்) கிழிக்கின்ற, படைவாய் தேய - கலப்பையின் முகம்தேயும்படி, உழுநரும் - உழுகின்றவர்களும், நீர்கால் யாத்து - நீரிணைக்கட்டி, சேறு செய்குநரும் - சேருக்குகின்றவர்களும், தெய்வம் தொழுது - (அந்நிலக்கடவுளாகிய) இந்திரனை வணங்கி, தீம்செந்நெல் வீசி - இனிய செந்நிறமுடைய நெல்முளைகளை விதைத்து, நாறு செய்குநரும் - நாறுசெய்கின்றவர்களும், பேர்த்து நடவுசெய்குநரும் - (அவற்றைப்) பெயர்த்து நடுகின்றவர்களும், தெவ்வின் மாறுசெய் - பகைவரைப்போலப் பகை

செய்கின்ற, களைகட்டு-களைகளைக் களைந்து, ஓம்பி - (பிற ஊறுகள் நேராவண்ணம்) பாதுகாத்து, வளம்படுக்குநரும் ஆனார் - வளப்படுத்துகின்றவருமாயினார்கள் எ - று.

கால்யாத்தல், ஒருசொல். தெய்வம்-இந்திரன்: 'இந்திரதெய்வதந் தொழுது நாறுநடுவார்' என்பது திருத்தொண்டர் புராணம். இந்திரன் மருதத்தின்தெய்வம்; 'வேந்தன்மேய தீம்புன லுலகம்' என்றார் தொல்காப்பியனார். நாறு - நாற்று. பேர்த்து, பெயர்த்தென்பதன் மரூஉ. கட்டு - கள்பகுதி, ட் இடைநிலை, உ வினையெச்ச விகுதி. நர், பெயர் விகுதி. (௨0)

பழிபடு நறவந் தன்னைக்* கடைசியர் பருகிச் செவ்வாய்
மொழிதடு மாற வேர்வை முகத்தெழ முறுவ றோன்ற
விழிசிவந் துழலக் கூந்தன் மென்றுகில் சோர வுள்ளக்
கழிபெருங் களிப்பு நல்கிக் கலந்தவ ரோத்த† தன்றே.

(இ - ள்.) பழிபடு நறவம்-பழிக்கப்படுகின்ற மதுவானது, தன்னைக் கடைசியர் பருகி-தன்னை உழத்தியர்கள் பருகுதலால், செவ்வாய் மொழி தடுமாற-(அவர்கள்) சிவந்த வாயினின்று வருகிற மொழிகள் தடுமாறவும், முகத்து வேர்வை எழ-முகத்தின்கண் குறுவேர்வை எழவும், முறுவல் தோன்ற - (வாயின்கண்) நகை தோன்றவும், விழி சிவந்து உழல-விழிகள் சிவந்துசுழலவும், கூந்தல் மென்துகில் சோர-கூந்தலும் மெல்லிய ஆடையும் சரியவும், உள்ளம் கழிபெருங்களிப்பு நல்கி - உள்ளத்தில் மிகப்பெரிய களிப்பை நல்குதலால், கலந்தவர் ஒத்தது - புணர்ந்த தலைவரை ஒத்தது எ - று.

நறவம் ஒத்தது என்க. மொழிதடுமாறல் முதலாயின கள்ளுண்டார்கண்ணும் கலவிசெய்த மகளிர்கண்ணும் நிகழ்வன. பருகி, நல்கி என்னும் எச்சங்கள் காரணப்பொருளன. கூந்தல் மென்றுகில், எண்ணிடைச் சொல் தொக்கது. கழிபெரு, ஒருபொருளிருசொல். ஒத்தார் என்பது பாடமாயின் கடைசியர் எழுவாய். நறவம் செயப்படு பொருள். அன்று ஏ: அசை. (௨௧)

பட்பகை யாகுந் தீஞ்சொற் கடைசியர் பவளச் செவ்வாய்க்
குட்பகை யாம்ப லென்று மொண்ணறுங் குவளை நீலங்
கட்பகை யாகு மென்றுங் கமலநன் முகத்துக்‡ கென்றுந்
திட்பகை யாகு மென்றுஞ் சேறுதல்போற் களைதல் செய்வார்.

(இ - ள்.) பண்பகையாகும் - பண்ணுக்குப் பகையாகிய, தீம் சொல்-இனிய மொழிகளையுடைய, கடைசியர் - உழத்தியர்கள், பவளச் செவ்வாய்க்கு-(தங்கள்) பவளம் போன்ற சிவந்த வாய்க்கு, ஆம்பல் உள்பகை ஆகும் என்றும் - செவ்வல்லி மலர்கள் உட்பகையாகுமென்றும், கண் - கண்களுக்கு, ஒள் நறும் குவளை நீலம் - ஒள்ளிய நறிய செங்குவளை மலர்களும் கருங்குவளை மலர்களும், பகை ஆகும் என்றும் - பகையாய் உள்ளனவென்றும், நல் முகத்துக்கு - நல்ல

(பா - ம்.) * நறவந்தானே. † கலந்தவரொத்தார்.
‡ மென்முகத்துக்கு.

முகத்திற்கு, கமலம் என்றும் திண்பகை ஆகும் என்றும் - தாமரை மலர்கள் எப்போதும் திண்ணிய பகையாயுள்ளன வென்றும், செறுதல்போல் களைதல் செய்வார் - அழித்தல் போல அவற்றைக் களைவாராயினர் எ - று.

உட்பகை-புறந்தோன்றாத பகை, உள்ளிடத்திற்குப் பகை. ஆம்பல் முதலியன அவற்றின் மலருக்கு ஆகுபெயர். களைதல் - முதலொடும் போக்குதல். திண்பகை யெனற்பாலது எதுகை நோக்கி வலித்தது. (உஉ)

கடைசியர் முகமுங் காலுங் கைகளுங் கமல மென்னார்
படைவிழி குவளை யென்னார் பவளவாய் குமுத மென்னார்
அடையவுங் களைந்தார் மள்ளர் பகைஞரா யடுத்த வெல்லை
உடையவ னாணை யாற்று லொறுப்பவர்க் குறவுண் டாமோ.

(இ - ள்.) மள்ளர் உழவர்கள், கமலம்-தாமரை மலர்கள், கடைசியர் - (தங்கள்) உழத்தியரின், முகமும் காலும் கைகளும் என்னார் - முகம் கால் கைகள் ஆகுமென்று கருதாமலும், குவளை-நீலமலர்கள், படைவிழி என்னார் - வேல் போன்ற கண்கள் ஆகுமென்று கருதாமலும், குமுதம் - செவ்வல்லி மலர்கள், பவளவாய் என்னார் - பவளம் போன்ற வாய்கள் ஆகுமென்று கருதாமலும், அடையவும் களைந்தார் - (அவைகளை) முற்றவும் களைந்தார்கள்; பகைஞராய் அடுத்த எல்லை - (உறவினராயினும்) பகைவராய்வந்த காலத்தில், உடையவன் ஆணை ஆற்றால் - ஆண்டானது ஏவல்வழி நின்று, ஒறுப்பவர்க்கு உறவு உண்டாமோ - தண்டிப்பவர்க்கு அவ்வுறவை நினைத்தல் கூடுமோ (கூடாது) எ - று.

என்னார் என்பன முற்றெச்சங்கள். உண்டாமோ, ஓ: எதிர்மறை. வேற்றுப் பொருள்வைப்பணி.

"பண்கள்வாய் மிழற்று மின்சொற் கடைசியர் பரந்து நீண்ட
கண்கைகான் முகம்வா யொக்குங் களையலாற் களையிலாமை
உண்கள்வார் கடைவாய் மள்ளர் களைகலா துலாவி நிற்பார்
பெண்கள்பால் வைத்த நேயம் பிழைப்பரோ சிறியோர் பெற்றால்"

என்னும் கம்பராமாயணச் செய்யுட் கருத்து இதில் வேறுவகையாற் கூறப்பட்டமை காண்க. (உங)

புரையற வுணர்ந்தோர் நூலின் பொருளினுள் ளடங்கி யந்நூல்
வரையறை கருத்து மான வளர்கருப் புறம்பு தோன்றிக்
கரையமை கல்வி சாலாக் கவிஞர்போ லிறுமாந் தந்நூல்
உரையென விரிந்து கற்பின் மகளிர்போ லோசிந்த தன்றே.

(இ - ள்.) வளர்கரு-வளர்கின்ற கருவானது, புரையற உணர்ந்தோர் நூலின் பொருளின் - (ஐயந்திரிபாகிய) குற்றம் நீங்கக் கற்றுணர்ந்தோர் (இயற்றிய) நூலின்கண் (உள்ளடங்கியிருக்கும்) பொருள்போல, உள் அடங்கி-அகத்திலடங்கி நின்று, அந் நூல் வரை அறை - அந்நூற் பொருளி னளவைத்தெரிக்கின்ற, கருத்துமான - கருத்துரையின் தோற்றம்போல, புறம்பு தோன்றி-வெளித்தோன்றி, கரை அமை கல்வி சாலா - இலக்கணவரம்பு அமைந்த கல்வி நிறை

யாத, கவிஞர் போல் இறுமாந்து-புன்கவிஞர் (இறுமாத்தல்) போல் தலை எடுத்து, அந்நூல் உரை என-மேற் கூறிய நூலின் உரைபோல, விரிந்து - தலைவிரிந்து, கற்பின் மகளிர் போல்-கற்புடைமகளிர் (தலை வணங்குதல்) போல், ஒசிந்தது - தலைவளைந்தது எ - று.

அந்நூல் என்றது புரையறவுணர்ந்தோ ரியற்றிய நூலினை. நூலின், கற்பின் என்பவற்றில் இன் சாரியை. பொருளின், இன்: ஒப்புப் பொருட்டு. அன்று ஏ: அசை.

"சொல்லருஞ் சூற்பசும் பாம்பின் றோற்றம்போன்
மெல்லவே கருவிருந் தீன்று மேலலார்
செல்வமே போற்றலை நிறுவித் தேர்ந்தநூற்
கல்விசேர் மாந்தரி னிறைஞ்சிக் காய்த்தவே"

என்னுஞ் சிந்தாமணிச் செய்யுள் இங்கே நினைக்கற்பாலது. (உச)

அன்புறு பத்தி வித்தி யார்வநீர் பாய்ச்சுந் தொண்டர்க்
கின்புரு வான வீச னின்னருள் விளையு மாபோல்
வன்புறு கருங்கான் மள்ளர் வைகலுஞ் செவ்வி நோக்கி
நன்புல முயன்று காக்க விளைந்தன நறுந்தண் சாலி.

(இ - ள்.) அன்பு உறு - அன்பு மிக்க, பத்திவித்தி-பத்தியாகிய வித்தை விதைத்து, ஆர்வம் நீர் பாய்ச்சும் தொண்டர்க்கு - விருப்பமாகிய நீரைப் பாய்ச்சுகின்ற அடியார்களுக்கு, இன்பு உருவான ஈசன் - இன்பமே வடிவாகிய இறைவனது, இன் அருள் விளையுமாபோல் - இனிய திருவருளாகிய பயன் விளைகின்ற தன்மைபோல, வன்புஉறு - வலிமை மிக்க, கரும்கால் மள்ளர் - கரியகாலினையுடைய உழவர்கள், வைகலும் - நாள்தோறும், செவ்வி நோக்கி - பருவம் பார்த்து, நன்புலம் - நல்ல விளைபுலங்களை, முயன்று காக்க - முயற்சியோடு பார்த்து காக்க, நறும்தண்சாலி விளைந்தன - நறிய தண்ணிய நெற்பயிர்கள் விளைந்தன எ - று.

அன்பின் முதிர்ச்சி பத்தி யெனப்படும். இக்கருத்தினை,
"அன்பென் பாத்தி கோலி முன்புற
மெய்யெனு மெருவை விரித்தாங் கையமில்
பத்தித் தனிவித் திட்டு நித்தலும்
ஆர்வத் தெண்ணீர் பாய்ச்சிநேர் நின்று"

என்னும் பட்டினத்தடிகள் திருவாக்கானறிக. 'அருச்சனை வயலு ளன்புவித் திட்டு' என்பது திருவாசகம். விளையுமாறு என்பது குறைந்து நின்றது. (உரு)

அகனில வேறு பாட்டி னியல்செவ்வி யறிந்து மள்ளர்
தகவினை முயற்சி செய்யக் காமநூல் சாற்று நான்கு
வகைநலார் பண்பு செவ்வி யறிந்துசேர் மைந்தர்க் கின்பம்
மிகவிளை போகம் போன்று விளைந்தன பைங்கூ ழெல்லாம்.

(இ - ள்.) அகல்நில வேறுபாட்டின் இயல் - அகன்ற நிலங்களின் வேறுபாட்டின் தன்மையையும், செவ்வி - (பயிரிடும்) பருவத்தையும், அறிந்து-தெரிந்து, மள்ளர் - உழவர்கள், தகவினை முயற்சி செய்ய-(அவற்றிற்கு) தகுதியாகத் தொழில் முயற்சி செய்ய, காம நூல் சாற்றும் நான்குவகை நலார்-காமநூல் கூறுகின்ற நால்வகைப்பட்ட மகளிரின், பண்பு செவ்வி அறிந்து - தன்மையையும் பருவத்தையும் தெரிந்து, சேர் மைந்தர்க்கு-கலவிசெய்யும் ஆடவருக்கு, இன்பம் மிகவிளை-இன்பம் மிக விளைகின்ற, போகம் போன்று - அவ்வநுபவம் போல, பைங்கூழ் எல்லாம் விளைந்தன - பயிர்கள் அனைத்தும் விளைந்தன எ - று.

நில வேறுபாடு - செவ்வல், கரிசல் முதலாயின. நான்குவகை நல்லார் - பத்மினி, சித்தினி, சங்கினி, அத்தினி என்போர். மகளிரிடத்துப் போகம் விளைதல் போன்று நிலத்தின்கட் பயிர்விளையுமென்னுங் கருத்தினை,

"செல்லான் கிழவ னிருப்பி னிலம்புலந்
தில்லாளி னூடி விடும்"

என்னும் பொதுமறையா னறிக. இயல் செவ்வி, பண்பு செவ்வி என்பவற்றில் எண்ணும்மைகள் விகாரத்தாற் றொக்கன. (௨௬)

கோடும்பிறை வடிவிற் செய்த கூனிரும் பங்கை வாங்கி
முடங்குகால் வரிவண் டார்ப்ப முள்ளரைக் கமல நீலம்
அடங்கவெண் சாலி செந்நெல் வேறுவே றரிந்தீ டாக்கி
நெடுங்களத் தம்பொற் குன்ற நிரையெனப் பெரும்போர் செய்தார்.

(இ - ள்.) கொடும்பிறை வடிவில் செய்த-வளைந்த பிறையின் வடிவுபோற் செய்யப்பெற்ற, கூன் இரும்பு அங்கை வாங்கி - அரிவாளைக் கையிலேந்தி, முடங்கு கால் வரிவண்டு ஆர்ப்ப - வளைந்த கால்களையும் இற்றுக்களையுமுடைய வண்டுகள் ஒலிக்க, முள் அரைக் கமலம் நீலம் - முள்ளோடு கூடிய நாளத்தினையுடைய தாமரையும் குவளையும், அடங்க - உடன்சேர, வெண்சாலி செந்நெல் - வெண்ணெல் செந்நெல் விளைவுகளை, வேறு வேறு அரிந்து - வெவ்வேறாக அறுத்து, ஈடு ஆக்கி-கற்றைகளாக்கி, நெடும் களத்து - நெடிய களத்தின்கண், அம்பொன் குன்றம் நிரை என-அழகிய பொன் மலைகளின் வரிசைகள்போல, பெரும்போர் செய்தார் - (உழவர்கள்) பெரிய போர்கள் செய்தனர் எ - று.

பிறை வடிவென முன்வந்தமையின் கூனிரும்பு என்பது பெயர் மாத்திரையாய் நின்றது. அங்கை-அகங்கை. கமலநீலம் உம்மைத் தொகை. வெண்சாலி செந்நெல் என்புழிச் செவ்வெண்ணின் றொகை விகாரத்தாற் றொக்கது. ஈடு-பெருமை; ஈண்டுக் கற்றை; 'ஈடுசால் போரழித்து' என்னும் சிந்தாமணிச் செய்யுளுரையை நோக்குக. (௨௭)

கற்றவை களைந்து தூற்றிக் கூப்பியூர்க் காணித் தெய்வம்
அற்றவர்க் கற்ற வாறீந் தளவைகண்* டாறி லொன்று
கொற்றவர் கடமை கொள்ளப் பண்டியிற் கொடுபோய்த் தென்னு
டுற்றவர் சுற்றந் தெய்வம் விருந்தினர்க் கூட்டி யுண்பார்.

---

(பா - ம்.) * அளவை கொண்டு.

(இ - ள்.) கற்றை வைகளைந்து-திரளாகிய வைக்கோலை நீக்கி, தூற்றி - பதர்போகத் தூற்றி, கூப்பி - (நெல்லைப்) பொலிகளாகக் குவித்து, ஊர்க்காணித் தெய்வம்-கிராம தேவதைகளுக்கும், அற்றவர்க்கு - வறியோர்களுக்கும், அற்றவாறு ஈந்து - வரையறுத்தபடி கொடுத்து, அளவை கண்டு-அளந்து, கொற்றவர்-மன்னர், கடமை-இறைப்பொருளாக, ஆறில் ஒன்றுகொள்ள-ஆறில் ஒருகூறு கொள்ள, பண்டியில்கொடுபோய்-(மிகுதியைப்) பண்டிகளிற் கொண்டுபோய், தென்னாடு உற்றவர் - தென்புலத்தாரையும், சுற்றம் - ஒக்கலையும், தெய்வம்-தேவரையும், விருந்தினர்க்கு-விருந்தினரையும், ஊட்டி - உண்பித்து, உண்பார் - (அந்நாட்டினர்) தாமும் உண்பார் எ - று.

> "தென்புலத்தார் தெய்வம் விருந்தொக்க லானென்றாங்
> கைம்புலத்தா றோம்ப றலை"

என்னும் திருக்குறளும், "பிதிரராவார் படைப்புக்காலத்து அயனாற் படைக்கப்பட்டதோர் கடவுட்சாதி; அவர்க்கிடம் தென்றிசை யாகலின் 'தென்புலத்தார்' என்றார். தெய்வமென்பது சாதியொருமை. விருந்தென்பது புதுமை. அஃதீண்டாகு பெயராய்ப் புதியராய் வந்தார் மேல்நின்றது. அவர் இருவகையர், பண்டறிவுண்மையிற் குறித்து வந்தாரும், அஃதின்மையிற் குறியாது வந்தாருமென. ஒக்கல்-சுற்றத்தார். எல்லா அறங்களும் தானுளனாய் நின்று செய்ய வேண்டுதலின் தன்னையோம்பலும் அறனாயிற்று............அரசனுக்கிறைப்பொருள் ஆறிலொன்றாயிற்று; இவ் வைம்புலத்திற்கும் ஐந்து கூறு வேண்டுதலான் என்பதறிக" என்று பரிமேலழகர் விளக்கிய உரையும் இங்கே அறியற்பாலன. அற்றவர்க்கு, விருந்தினர்க்கு என்னும் நான்கனுருபுகள் ஏனையிடத்தும் சென்றியையும். (உஅ)

> சாறடு கட்டி யெள்ளுச் சாமைகோள் ளிறுங்கு தோரை
> ஆறிடு மதமால் யானைப் பழுக்குலை யவரை யேனல்
> வேறுபல் பயறோ டின்ன புன்னில விளைவு மற்றும்
> ஏறோடு பண்டி யேற்றி யிருநிலம் கிழிய வுய்ப்பார்.

(இ - ள்.) சாறு அடுகட்டி-கருப்பஞ்சாற்றைக் காய்ச்சிய வெல்லம், எள்ளு சாமை கொள் இறுங்கு தோரை - எள் சாமை கொள் சோளம் மலைநெல், ஆறு இடும்மதம் - வெள்ளம்போற் சொரிகின்ற மதத்தினையுடைய, மால்-பெரிய, யானைப்பழுக் குலை அவரை - யானையின் விலா வெலும்புபோலும் காயினையுடைய குலைகளையுடைய அவரை, ஏனல்-தினை, வேறுபல் பயறோடு-வேறு வகைப்பட்ட பல பயறுகளோடு, இன்னமற்றும்-இத்தன்மைய பிறவுமாகிய, புன்னில விளைவு-புன்செயில் விளைந்தபொருள்களை, ஏறு ஒடுபண்டி ஏற்றி - எருதுகளிலும் பண்டியிலும் ஏற்றி, இருநிலம் கிழிய உய்ப்பார் - பெரிய பூமி கிழியும்படி கொண்டுபோவார் எ - று.

யானையின் பழுப்போல் அவரையின்காயிருத்தலை, 'பொருவில் யானையின் பழுப்போற் பொங்கு காய்க்குலை யவரை' எனப் பிறருங் கூறியிருத்தல் காண்க. யானையின் பழுவெலும்பின் வரிசைபோன்ற வாழைக்குலை என்பாரும், யானைமுகம்போற் பழுக்கத்தக்க வாழைக்குலை என்பாரும் உளர். இறுதியிற் கூறியபொருளுக்குக் 'கருங்கதலிப்

பெருங்குலைகள் களிற்றுக்கைம் முகங்காட்ட' என்னும் பெரியபுராணச் செய்யுள் மேற்கோளாகும். குறிஞ்சியும் முல்லையும் புன்னிலமெனப்படும். ஓடு என்னும் எண்ணிடைச்சொல் பிறவிடத்துஞ் சென்றியையும். எள்ளு, உ: சாரியை ஏற்றொடு எனற்பாலது விகாரப்பட்டது. (உகூ)

துறவின ரீச னேசத் தொண்டினர் பசிக்கு நல்லூண்
திறவினைப் பிணிக்குத் தீர்க்கு மருந்துடற் பனிப்புக் காடை
உறைவிடம் பிறிது நல்கி யவரவ ரொழுகிச் செய்யும்
அறவினை யிடுக்க ணீக்கி யருங்கதி யுய்க்க வல்லார்.

(இ - ள்.) துறவினர்-துறந்தோரும், ஈசன் நேசத்தொண்டினர்-சிவபிரானிடத்து அன்பினையுடைய திருத்தொண்டரும் ஆகியவர்களின், பசிக்கு நல்ஊண்-பசியைப்போக்க நல்ல உணவும், வினைத்திறப் பிணிக்கு-வினைவகையாலாகிய நோய்க்கு, தீர்க்கும் மருந்து-நீக்குதற்குரிய மருந்தும், உடல் பனிப்புக்கு ஆடை - மெய்யின் குளிரைப்போக்க உடையும், உறைவிடம்-தங்குமிடமும், பிறிதும்-வேறு பொருளுமாகிய இவற்றை, நல்கி - கொடுத்து, அவர் அவர் ஒழுகிச் செய்யும் - அவரவர்கள் தத்தம் நிலையில் வழுவாதொழுகிச் செய்கின்ற, அறவினை இடுக்கண் நீக்கி-அறத் தொழிலுக்கு நேரும் இடையூறுகளைப் போக்கி, அருங்கதி உய்க்கவல்லார் - அரிய வீட்டு நெறியில் (அவர்களைச்) செலுத்தவல்லவராவர் எ - று.

"இல்வாழ்வா னென்பா னியல்புடைய மூவர்க்கும்
நல்லாற்றி னின்ற துணை''

என்னும் திருக்குறளும், ''இவரிவ் வொழுக்க நெறிகளை முடியச் செல்லுமளவும் அச் செலவிற்குப் பசிநோய் குளிர் முதலியவற்றான் இடையூறு வாராமல் உண்டியும் மருந்தும் உறையுளும் முதலிய உதவி அவ்வந்நெறிகளின் வழுவாமற் செலுத்துதலான் 'நல்லாற்றி னின்ற துணை' என்றார்'' எனப் பரிமேலழகர் கூறிய உரையும் இங்கே நோக்கற்பாலன. திறவினை வினைத்திறமென மாற்றப்பட்டது. (௩௦)

நிச்சலு மீச னன்பர் நெறிப்படிற் சிறார்மேல் வைத்த
பொச்சமி லன்பு மன்னர் புதல்வரைக் கண்டா லன்ன
அச்சமுங் கொண்டு கூசி யடிபணிந் தினிய கூறி
இச்சையா றொழுகி யுள்ளக் குறிப்பறிந் தேவல் செய்வார்.

(இ - ள்.) நிச்சலும் - நாள்தோறும், ஈசன் அன்பர் - சிவனடியார்கள், நெறிப்படில்-வழியிலே எதிர்ப்பட்டால், சிறார்மேல்வைத்த பொச்சம் இல் அன்பும்-தங்களிளம் புதல்வர்களிடம் வைத்திருக்கும் மெய்யன்பும், மன்னர் புதல்வரைக் கண்டால் அன்ன அச்சமும் கொண்டு - அரசிளங்குமரரைக் கண்டாலொத்த பயமும் கொண்டு, கூசி அடிபணிந்து-ஒடுங்கி அடிவணங்கி, இனிய கூறி - இன் மொழிகள் கூறி, இச்சை ஆறு ஒழுகி- (அவர்கள்) விருப்பின்படி நடந்து, உள்ளக் குறிப்பு அறிந்து ஏவல் செய்வார் - உள்ளக் குறிப்பினை உணர்ந்து பணி செய்வார் எ - று.

(இ - ள்.) கற்றை வை களைந்து-திரளாகிய வைக்கோலை நீக்கி, தூற்றி - பதர்போகத் தூற்றி, கூப்பி - (நெல்லைப்) பொலிகளாகக் குவித்து, ஊர்க்காணித் தெய்வம்-கிராம தேவதைகளுக்கும், அற்றவர்க்கு - வறியோர்களுக்கும், அற்றவாறு ஈந்து - வரையறுத்தபடி கொடுத்து, அளவை கண்டு-அளந்து, கொற்றவர்-மன்னர், கடமை-இறைப்பொருளாக, ஆறில் ஒன்றுகொள்ள-ஆறில் ஒருகூறு கொள்ள, பண்டியில்கொடுபோய்-(மிகுதியைப்) பண்டிகளிற் கொண்டுபோய், தென்னடு உற்றவர் - தென்புலத்தாரையும், சுற்றம் - ஒக்கலையும், தெய்வம்-தேவரையும், விருந்தினர்க்கு-விருந்தினரையும், ஊட்டி - உண்பித்து, உண்பார் - (அந்நாட்டினர்) தாமும் உண்பார் எ - று.

''தென்புலத்தார் தெய்வம் விருந்தொக்க லுனென்றுங்
கைம்புலத்தா றோம்ப றலை''

என்னும் திருக்குறளும், ''பிதிரராவார் படைப்புக்காலத்து அயனாற் படைக்கப்பட்டதோர் கடவுட்சாதி; அவர்க்கிடம் தென்றிசை யாகலின் 'தென்புலத்தார்' என்றார். தெய்வமென்பது சாதியொருமை. விருந்தென்பது புதுமை. அஃதீண்டாகு பெயராய்ப் புதியராய் வந்தார் மேனின்றது. அவர் இருவகையர், பண்டறிவுண்மையிற் குறித்து வந்தாரும், அஃதின்மையிற் குறியாது வந்தாருமென. ஒக்கல்-சுற்றத்தார். எல்லா அறங்களும் தானுளனாய் நின்று செய்ய வேண்டுதலின் தன்னையோம்பலும் அறனாயிற்று..........அரசனுக்கிறைப்பொருள் ஆறிலொன்றாயிற்று; இவ் வைம்புலத்திற்கும் ஐந்து கூறு வேண்டுதலான் என்பதறிக'' என்று பரிமேலழகர் விளக்கிய உரையும் இங்கே அறியற்பாலன. அற்றவர்க்கு, விருந்தினர்க்கு என்னும் நான்கனுருபுகள் ஏனையிடத்தும் சென்றியையும். (உஅ)

சாறடு கட்டி யெள்ளுச் சாமைகோள் ளிறுங்கு தோரை
ஆறிடு மதமால் யானைப் பழக்குலை யவரை யேனல்
வேறுபல் பயறே டின்ன புன்னில விளைவு மற்றும்
ஏறொடு பண்டி யேற்றி யிருநிலம் கிழிய வுய்ப்பார்.

(இ - ள்.) சாறு அடுகட்டி-கருப்பஞ்சாற்றைக் காய்ச்சிய வெல்லம், எள்ளு சாமை கொள் இறுங்கு தோரை - எள் சாமை கொள் சோளம் மலைநெல், ஆறு இடும்மதம் - வெள்ளம்போற் சொரிகின்ற மதத்தினையுடைய, மால்-பெரிய, யானைப்பழக் குலை அவரை - யானையின் விலா வெலும்புபோலும் காயினையுடைய குலைகளையுடைய அவரை, ஏனல்-தினை, வேறுபல் பயறோடு-வேறு வகைப்பட்ட பல பயறுகளோடு, இன்னமற்றும்-இத்தன்மைய பிறவுமாகிய, புன்னில விளைவு-புன்செயில் விளைந்தபொருள்களை, ஏறு ஒடுபண்டி ஏற்றி - எருதுகளிலும் பண்டியிலும் ஏற்றி, இருநிலம் கிழிய உய்ப்பார் - பெரிய பூமி கிழியும்படி கொண்டுபோவார் எ - று.

யானையின் பழுப்போல் அவரையின்கா யிருத்தலை, 'பொருவில் யானையின் பழுப்போற் பொங்கு காய்க்குலை யவரை' எனப் பிறருங் கூறியிருத்தல் காண்க. யானையின் பழுவெலும்பின் வரிசைபோன்ற வாழைக்குலை என்பாரும், யானைமுகம்போற் பழுக்கத்தக்க வாழைக்குலை என்பாரும் உளர். இறுதியிற் கூறியபொருளுக்குக் 'கருங்கதலிப்

பெருங்குலைகள் களிற்றுக்கைம் முகங்காட்ட' என்னும் பெரியபுரா ணச்செய்யுள் மேற்கோளாகும். குறிஞ்சியும் முல்லையும் புன்னில மெனப்படும். ஓடு என்னும் எண்ணிடைச்சொல் பிறவிடத்துஞ் சென்றியையும். எள்ளு, உ: சாரியை ஏற்றெடு எனத்பாலது விகாரப்பட்டது. (உகூ)

துறவின ரீச னேசத் தொண்டினர் பசிக்கு நல்லூண்
திறவினைப் பிணிக்குத் தீர்க்கு மருந்துடற் பனிப்புக் காடை
உறைவிடம் பிறிது நல்கி யவரவ ரொழுகிச் செய்யும்
அறவினை யிடுக்க ணீக்கி யருங்கதி யுய்க்க வல்லார்.

(இ - ள்.) துறவினர்-துறந்தோரும், ஈசன் நேசத்தொண்டினர்-சிவபிரானிடத்து அன்பினையுடைய திருத்தொண்டரும் ஆகியவர்களின், பசிக்கு நல்ஊண்-பசியைப்போக்க நல்ல உணவும், வினைத் திறப் பிணிக்கு-வினைவகையாலாகிய நோய்க்கு, தீர்க்கும் மருந்து-நீக்குதற்குரிய மருந்தும், உடல் பனிப்புக்கு ஆடை - மெய்யின் குளிரைப்போக்க உடையும், உறைவிடம்-தங்குமிடமும், பிறிதும்-வேறு பொருளுமாகிய இவற்றை, நல்கி - கொடுத்து, அவர் அவர் ஒழுகிச் செய்யும் - அவரவர்கள் தத்தம் நிலையில் வழுவாதொழுகிச் செய்கின்ற, அறவினை இடுக்கண் நீக்கி-அறத் தொழிலுக்கு நேரும் இடையூறுகளைப் போக்கி, அருங்கதி உய்க்கவல்லார் - அரிய வீட்டு நெறியில் (அவர்களைச்) செலுத்தவல்லவராவர் எ - று.

"இல்வாழ்வா னென்பா னியல்புடைய மூவர்க்கும்
நல்லாற்றி னின்ற துணை"

என்னும் திருக்குறளும், "இவரிவ் வொழுக்க நெறிகளை முடியச் செல்லுமளவும் அச்செலவிற்குப் பசிநோய் குளிர் முதலியவற்றான் இடையூறு வாராமல் உண்டியும் மருந்தும் உறையுளும் முதலிய உதவி அவ்வநெறிகளின் வழுவாமற் செலுத்துதலான் 'நல்லாற்றி னின்ற துணை' என்றார்" எனப் பரிமேலழகர் கூறிய உரையும் இங்கே நோக்கற்பாலன. திறவினை வினைத்திறமென மாற்றப்பட்டது. (௩௦)

நிச்சலு மீச னன்பர் நெறிப்படிற் சிறுர்மேல் வைத்த
பொச்சமி லன்பு மன்னர் புதல்வரைக் கண்டா லன்ன
அச்சமுங் கொண்டு கூசி யடிபணிந் தினிய கூறி
இச்சையா றொழுகி யுள்ளக் குறிப்பறிந் தேவல் செய்வார்.

(இ - ள்.) நிச்சலும் - நாள்தோறும், ஈசன் அன்பர் - சிவனடியார்கள், நெறிப்படில்-வழியிலே எதிர்ப்பட்டால், சிறுர்மேல்வைத்த பொச்சம் இல் அன்பும்-தங்களிளம் புதல்வர்களிடம் வைத்திருக்கும் மெய்யன்பும், மன்னர் புதல்வரைக் கண்டால் அன்ன அச்சமும் கொண்டு - அரசிளங்குமரரைக் கண்டாலொத்த பயமும் கொண்டு, கூசி அடிபணிந்து-ஒடுங்கி அடிவணங்கி, இனிய கூறி - இன்மொழிகள் கூறி, இச்சை ஆறு ஒழுகி- (அவர்கள்) விருப்பின்படி நடந்து, உள்ளக் குறிப்பு அறிந்து ஏவல் செய்வார் - உள்ளக் குறிப்பினை உணர்ந்து பணி செய்வார் எ - று.

இச்செய்யுளின் கருத்தை,

"ஆசையொடு மரனடியா ரடியாரை யடைந்திட்
டவர்கரும முன்கரும மாகச் செய்து
கூசிமொழிந் தருண்ஞானக் குறியி னின்று
கும்பிட்டுத் தட்டமிட்டுக் கூத்தாடித் திரியே"

என்னும் சிவஞானசித்தித் திருவிருத்தத்தா னறிக. பொச்சம்-பொய். நித்தல்-நிச்சல் என மரீஇயது. (௩௧)

நறைபடு கனிதேன் பெய்த பாலோடு நறுநெய் வெள்ளம்
நிறைபடு செம்போன் வண்ணப் புழுக்கலா னிமிர்ந்த சோறு
குறைவற வுண்டு வேண்டும் பொருள்களுங் கோண்மி னேன்ன
மறைமுத லடியார் தம்மை வழிமறித் தருத்து வார்கள்.

(இ - ள்.) மறை முதல் அடியார் தம்மை - வேத முதல்வனாகிய சிவபிரானுடைய அடியார்களை, நறுநெய் வெள்ளம் நிறைபடு-நறிய மணமுள்ள நெய்ப்பெருக்கு நிறைந்த, செம்பொன் வண்ணப் புழுக்கலான்-சிவந்த பொன்போலும் நிறத்தினையுடைய பருப்புச் சோற்றோடு, நிமிர்ந்த சோறு-உயர்ந்த வேறுவகை அன்னத்தை, நறைபடு கனிதேன் பெய்த பாலொடு-தேன்பொருந்திய கனியோடும் தேனளாவிய பாலோடும், குறைவு அற-குறைவின்றி (நிறைய), உண்டு - அருந்தி, வேண்டும் பொருள்களும் கொண்மின் என்ன - வேண்டிய பிறபொருள்களும் கொள்ளுங்கள் என்று, வழிமறித்து அருத்துவார்கள்-வழியை மறித்து அழைத்துவந்து உண்பிப்பார்கள் எ - று.

செம்பொன் வண்ணப்புழுக்கல் - பருப்புச்சோறு; இதனைத் 'தீம் பாலடிசிலமிர்தஞ் செம்பொன் வண்ணப்புழுக்கல்' என்னும் சிந்தாமணிச் செய்யுளுரையாலறிக. புழுக்கலான்-புழுக்கலோடு. நிமிர்ந்த சோறு - பாலடிசில், அக்காரடலை, புளிச்சோறு முதலியன. வேண்டும் பொருள்கள் - ஆடை முதலியன. வழிமறித்தல்-வற்புறுத்தல். ஓடு, எண்ணுப் பொருளில்வந்த இடைச்சொல். 'கற்றவைகளைந்து' என்னுஞ் செய்யுள்முதல் இச்செய்யுள்காறும் அந்நாட்டினர் என்னும் எழுவாய் வருவித்து முடிக்க. (௩௨)

பின்னேவ னுரைப்ப தந்தப் பெருந்தமிழ் நாடாங் கன்னி
தன்னிடை யூர்க ளேன்னு மவயவந் தாங்கச் செய்த
போன்னியற் கலனே கோயில் மடமறப் புறநீர்ச் சாலை
இன்னமு தருத்து சாலை யேனவுருத் திரிந்த தம்மா.

(இ - ள்.) அந்தப் பெருந்தமிழ்நாடு ஆம் கன்னி - அச்சிறப்பு வாய்ந்த பெரிய தமிழ் நாடாகிய கன்னியானவள், தன் இடை ஊர்கள் என்னும்-தன்னிடத்துள்ள ஊர்களாகிய, அவயவம் தாங்கச்செய்த - உறுப்புக்கள் தாங்குமாறு செய்த, கலனே-அணிகலன்களே, கோயில் மடம் அறப்புறம் நீர்ச்சாலை இன்அமுது அருத்துசாலை என - திருக்கோயில் திருமடம் அறச்சாலை தண்ணீர்ப்பந்தர் இனிய அமுதைஉண்பிக்கும் அன்னசாலை என்றிவைகளாக, உரு திரிந்தது - வடிவம் வேறு

பட்டனவென்று கூறுவதன்றி, பின் எவன் உரைப்பது-வேறு யாது சொல்லக் கிடப்பது எ - று.

பின் என்பது வேறு என்னும் பொருளில் வந்தது. தமிழ்நாடென்னும் பெயர் பாண்டிநாட்டிற்குச் சிறப்பாக வுரித்து; இதனையாமெழுதிய கபிலர் என்னும் உரை நூலுட் காண்க. கன்னியென்பதும் அதற்கோர் பெயர். கலன்: சாதியொருமை. அம்மா: அசைநிலை. (கூ)

## திணைமயக்கம்

[கலிநிலைத்துறை]

இன்ற டம்புனல் வேலிசூ ழிந்நில வரைப்பிற்
குன்ற முல்லைதண் பணைநெய்தல் குலத்திணை நான்கும்
மன்ற வுள்ளமற் றவைநிற்க மயங்கிய மரபின்
ஒன்றோ டொன்றுபோய் மயங்கிய திணைவகை உரைப்பாம்.

(இ - ள்.) இன் தடம் புனல் வேலிசூழ் - இனிய அகன்ற நீர் வேலியாற் சூழப்பட்ட, இந்நிலவரைப்பில் - இந்தப் பாண்டிநாட்டெல்லையில், குன்றம் முல்லை தண்பணை நெய்தல் - குறிஞ்சி முல்லை குளிர்ந்த மருதம் நெய்தலாகிய, குலத்திணை நான்கும் - உயர்ந்த நான்கு திணைகளும், மன்ற உள்ள - ஒரு தலையாகவுள்ளன; அவை நிற்க-அவை அங்ஙனமாக, மயங்கிய மரபின்-(அந்நிலங்கள்) ஒன்றோடொன்று நெருங்கியுள்ள முறைமையால், ஒன்றோடு ஒன்றுபோய் மயங்கிய - ஒருதிணைக் கருப்பொருளுடன் மற்றொருதிணைக் கருப்பொருள் சென்று கலந்த, திணைவகை உரைப்பாம் - திணைமயக்கக் கூறுபாட்டைச் சொல்வாம் எ - று.

குலத்திணை-சிறந்த நிலங்கள். பாலைத்திணைக்கு நிலமின்றாகலின் அதனை யொழித்து நான்கென்றார்;

> "அவற்றுள்,
> நடுவ ணைந்திணை நடுவண தொழியப்
> படுதிரை வையம் பாத்திய பண்பே"

என்பது இலக்கணமாகலின், பாலைக்கு இயற்கை நிலமின்றேனும்,

> "வேனலங் கிழவனொடு வெங்கதிர் வேந்தன்
> றானலந் திருகத் தன்மையிற் குன்றி
> முல்லையுங் குறிஞ்சியு முறைமையிற் றிரிந்து
> நல்லியல் பிழந்து நடுங்குதுய ருறுத்துப்
> பாலை யென்பதோர் படிவங் கொள்ளும்"

என்று சிலப்பதிகாரம் கூறுமாறு செயற்கை நிலமுண்டாகலின், ஒரோவிடத்து அதுவுங் கூறப்படும். இங்கே திணைமயக்கமென்பது ஒரு திணைக் கருப்பொருளோடு மற்றொரு திணைக் கருப்பொருள் சென்று மயங்குதல். இதற்கு விதி:

"எந்நில மருங்கிற் பூவும் புள்ளும்
அந்நிலம் பொழுதொடு வாரா வாயினும்
வந்த நிலத்தின் பயத்த வாகும்''

என்னும் தொல்காப்பியச் சூத்திரமாகும். இதனுரையிலே 'ஒன்றெ‌ன முடித்தலாற் பிற கருப்பொருண் மயங்குவ உளவேனுங் கொள்க' என்றார் நச்சினார்க்கினியர். 'இவ்வாறு வருவன திணைமயக்கமாம்' என்றார் இளம்பூரணர். எனினும் 'வந்த நிலத்தின் பயத்த வாகும்' என்பதன் கருத்தைத் தழுவியதன்று இங்கே கூறப்பட்டுள்ள திணை மயக்கம். நான்கு நிலங்களும் நெருங்கியிருத்தலாகிய வளமுடைமையே இதனாற் பெறப்படுவது. இங்ஙனம் பாடுவதும் பழைய வழக்கேயென்பது பொருநராற்றுப்படையில் (அடி - உ௪அ - உ௨௬) அறியலாகும். "குறிஞ்சி பரதவர் பாட நெய்தல், நறும்பூங் கண்ணி குறவர்சூடக், கானவர் மருதம் பாட வகவர், நீனிற முல்லைப் பஃறிணை நுவலக், கானக்கோழி கதிர்குத்த, மனைக்கோழி தினைக்கவர, வரைமந்தி கழிமூழ்கக், கழிநாரை வரையிறுப்பத், தண்வைப்பினா டுகுழீஇ'' என்பது காண்க. மன்ற, தேற்றப் பொருள்தரும் இடைச்சொல். (௫௪)

கொல்லை யானிரை மேய்ப்பவர் கோழிணர்க் குருந்தின்
ஒல்லை தாயதிற் படர்*கறிக் கருந்துண ருகுப்ப
முல்லை சோறெனத் தேன்விராய் முத்திழை சிற்றில்
எல்லை யாயமோ டாடுப வெயின்சிறு மகளிர்.

(இ - ள்.) கொல்லை ஆன் நிரை மேய்ப்பவர்-முல்லை நிலத்திற் பசுக்கூட்டத்தை மேய்க்கும் இடையர்கள், கோழ் இணர் குருந்தின்-கொழுவிய பூங்கொத்துக்களையுடைய குருந்த மரத்தின்மேல், ஒல்லை தாய்-விரைவாகத் தாவி ஏறி, அதில் படர் - அதிலே படர்ந்துள்ள, கறிக் கருந்துணர் உகுப்ப-மிளகு கொடியிலுள்ள கரிய காய்க்கொத்துக்களை உதிர்ப்பார், எயின் சிறுமகளிர்-வேட்டுவச் சிறுமியர், முத்து இழை சிற்றில் எல்லை - முத்துக்களாலியற்றிய சிற்றிலினிடத்து, முல்லை சோறு என - முல்லை அரும்புகளே சோறாக, தேன் விராய் - (அவற்றோடு) தேனைக் கலந்து, ஆயமோடு ஆடுப - மகளிர் கூட்டத்துடன் விளையாடுவர் எ - று.

குருந்து முல்லைக்கும்,—கறி குறிஞ்சிக்கும் உரியன. முத்து - குறிஞ்சி நில முத்துக்கள். எயின் என்னுஞ் சாதிப்பெயர் குறிஞ்சித் திணை மக்கட்கும், பாலைத்திணை மக்கட்கும் உரியது; ஈண்டு, குறிஞ் சிக்குரிய வேட்டுவச் சாதியைக் குறிக்கின்றது. குறிஞ்சிக்கும் முல் லைக்கும் மயக்கங் கூறியவாறு. பின்னிரண்டடிக்கு முல்லை நெய்தல் பாலைகளின் மயக்கமாகச் சிலர் பொருள் கூறியிருப்பது பொருந்தாதாகும். விராவி யென்பது விராய் என விகாரப்பட்டது. உகுப்ப, ஆடுப என்பன பலர்பால் முற்றுக்கள். (௫௫)

கன்றோ டுங்களி வண்டுவாய் நக்கவீர்ங் கரும்பு
மென்று போன்சோரி வேங்கைவா யுறங்குவ மேதி
குன்றி ளந்தினை மேய்ந்துபூங் கோழுநிழல் மருதஞ்
சென்று றங்குவ சேவக மெனமுறச் செவிமா.

---

(பா - ம்.) * அகிற்படர்.

(இ - ள்.) மேதி - எருமைகள், கன்றொடும் களிவண்டு - தன் கன்றுகளும் களித்த வண்டுகளும், வாய் நக்க-கடைவாயை நக்கும் படி, ஈர் கரும்பு மென்று - குளிர்ந்த கரும்புகளைக் குதட்டி, பொன் சொரி வேங்கைவாய் உறங்குவ-பொன்போலும் பூக்களை உதிர்க்கின்ற வேங்கை மர நிழலில் தூங்குவன; முறச்செவிமா - முறம் போலும் செவிகளையுடைய யானைகள், குன்று இளம் தினை மேய்ந்து-குறிஞ்சி நிலத்திலுள்ள முதிராத தினைக் கதிர்களைத் தின்று, பூ மருதம்-பூக்கள் நிறைந்த மருதமரத்தின், கொழுநிழல்-கொழுவிய நிழலிலே,சென்று-போய், சேவகம் என உறங்குவ - (தாம்) துயிலுமிடமாகக் கருதி உறங்குவன எ - று.

பொன் போலும் பூக்களைப் பொன்னென்றார்; 'முறியிணர்க் கொன்றை நன்பொன் கால' என்புழிப் போல. சேவகம் - யானை துயிலிடம். கரும்பு, மருதம், மேதி மருதத்திற்கும்; தினை, வேங்கை, யானை குறிஞ்சிக்கும் உரியன. குறிஞ்சிக்கும் மருதத்திற்கும் மயக்கங் கூறியவாறு. உறங்குவ: பலவின்பால் முற்று. (௩௬)

எற்று தெண்டிரை யெறிவளை யெயிற்றிய ரிழைத்த
சிற்றில் வாய்நுழைந் தழிப்பவச் சிறுமியர் வெகுண்டு
பற்றி லாரெனச் சிதறிய மனவணி பரதர்
முற்றி லாமுலைச் சிறுமியர் முத்தொடுங் கோப்ப.

(இ - ள்.) எற்று தெள்திரை - மோதும் தெள்ளிய அலைகள், எறிவளை-வீசிய சங்குகள், எயிற்றியர் இழைத்த சிற்றில்வாய்-வேடச் சிறுமிகள் கோலிய சிறு வீட்டின்கண், நுழைந்து அழிப்ப - புகுந்து அழிக்க, அச்சிறுமியர் வெகுண்டு - அப்பெண்கள் சினந்து, பற்று இலார் என - பற்றற்றாரைப்போல, சிதறிய மனவு அணி - கழற்றி யெறிந்த அக்குமணி அணிகளை, பரதர் - நுளையருடைய, முற்றிலா முலைச் சிறுமியர் - முதிராத கொங்கையையுடைய சிறுமிகள், முத் தொடும் கோப்ப - முத்துக்களோடுங் கோவை செய்வர் எ - று.

மனவு குறிஞ்சிக்குரியது. பரதர்-நெய்தற்றிணை மக்கள். குறிஞ் சிக்கும் நெய்தலுக்கும் மயக்கங் கூறியவாறு. அழிப்ப: செயவெ னெச்சம். கோப்ப: பலர்பால் முற்று. (௩௭)

முல்லை வண்டுபோய் முல்லையாழ் முளரிவாய் மருதம்
வல்ல வண்டினைப் பயிற்றிப்பின் பயில்வன மருதங்
கொல்லை யான்மடி யெறிந்திளங் குழவியென் றிரங்கி
ஒல்லை யூற்றுபால் வெள்ளத்து ளுகள்வன வாளை.

(இ - ள்.) முல்லை வண்டு போய் - முல்லை நிலத்துள்ள வண்டு கள் சென்று, முல்லை யாழ் - (தாம்வல்ல) முல்லைப்பண்ணை, முளரி வாய் மருதம் வல்ல வண்டினைப் பயிற்றி-தாமரைப் பூவிலுள்ள மரு தப்பண்வல்ல வண்டுகளைப் பயில்வித்து, பின் மருதம் பயில்வன-பின் மருதப் பண்ணைத் தாம் கற்பன; வாளை - வாளை மீன்கள், கொல்லை ஆன்மடி-முல்லை நிலத்திலுள்ள பசுவின் மடியில், எறிந்து - முட்டி, இளம் குழவி என்று இரங்கி-(அப்பசு தனது) இளமையாகிய கன்று

முட்டியதென்று மனமுருகி, ஒல்லை ஊற்று-விரைந்து சொரிகின்ற, பால்வெள்ளத்துள் உகள்வன-பால் வெள்ளத்திலே தாவுவன எ-று.

முல்லையாழ் - முல்லைப்பண். மருதம் - மருதப்பண். பயிற்றி, பயின்று என்பதன் பிறவினை. வண்டுகளுக்குப் பயிற்றி எனப் பொருள் கூறி, உருபுமயக்கம் என்னலுமாம்.

"குஞ்சரம் பெறுமே குழவிப் பெயர்க்கொடை"
"ஆவு மெருமையு மவைசொலப் படுமே"

என ஆசிரியர் தொல்காப்பியனார் விதித்திருத்தலின் ஆன்கன்றைக் குழவியென்றார், முல்லைக்கும் மருதத்திற்கும் மயக்கங் கூறியவாறு.

கரும்பொற் கோட்டிளம் புன்னைவாய்க் கள்ளுண்டு காளைச்
சுரும்பு செவ்வழிப் பாண்செயக் கொன்றை பொன்சொரிவ
அருந்த டங்கடல் வளையெடுத் தாழியான் கையில்
இருந்த சங்கென விறைகொளப் பூவைமே லெறிவ.

(இ-ள்.) கரும்பொன் கோட்டு-இரும்புபோலும் கரியகொம்புகளையுடைய, இளம் புன்னைவாய் கள் உண்டு-இளமையாகிய புன்னை மலரின் தேனைப்பருகி, காளை சுரும்பு - ஆண்வண்டுகள், செவ்வழிப் பாண் செய-செவ்வழிப் பண்ணைப் பாட, கொன்றை பொன் சொரிவ-கொன்றை மரங்கள் (கொடையாளர்போல) பொன்போலும் பூக்களைப் பொழிவன; அரும் தடம் கடல்-அளத்தற்கரிய பெரிய கடலானது, வளை எடுத்து - தன்னிடத்துள்ள சங்கினை எடுத்து, ஆழியான் கையில் இருந்த சங்கு என இறைகொள - சக்கரப் படையையுடைய திருமாலின் கையில் இருந்த பாஞ்சசந்நிய மென்னுஞ் சங்குபோலத் தங்கும்படி, பூவைமேல் எறிவ - காசாஞ் செடிமீது எறிவன எ - று.

கரும்பொன் - இரும்பு. புன்னை நெய்தலுக்கும், பூவை முல்லைக்கும் உரியன. செவ்வழி - நெய்தற்பண். பாண்செயல் - பாடுதல். பொன்போலும் பூவைப் பொன் என்றார். மேலுரைத்தது காண்க. சுரும்பு பாணராகவும், கொன்றை பரிசிலளிப்போராகவும் தோன்றுமாறு நயம்படக் கூறினார்.

"வரைச்சேரு முகின்முழவ மயில்கள்பல நடமாட வண்டுபாட
விரைச்சேர்பொன் னிதழிதர மென்காந்தள் கையேற்கு மிழலை
யாமே"

என்னும் ஆளுடைய பிள்ளையார் திருவாக்கும் காண்க. பூவைமாயோன் போலுமாகலானும், அவனும் முல்லைக் குரியனாகலானும், அவன் கையிலிருந்த சங்குபோல வென்றார். இறைகொளல்-இறுத்தல்; தங்குதல். முல்லைக்கும் நெய்தலுக்கும் மயக்கங்கூறியவாறு. (௩௧)

கழிந்த தெங்கினெண் பழம்பரீஇ முட்பலாக் கனிகீண்
டழிந்த தேனுவர்க் கேணிபாய்ந் தகற்றுவ வுவரை
வழிந்த தேன்மடற் கேதகை மலர்நிழல் குருகென்
றேழிந்த தாமரைப் போதுபுக் கொளிப்பன கெண்டை.

(இ-ள்.) கழிந்த தெங்கின் ஒண்பழம் பரிஇ - குலையினின்று நீங்கிய தென்னையின் ஒள்ளிய காய்களைப் பரித்தலால், முள்பலாக்கனி கீண்டு அழிந்த தேன் - முட்களையுடைய பலாப்பழங்கள் கிழிபட்டு ஒழுகிய தேன்கள், உவர்க்கேணி பாய்ந்து-உப்புக்கேணியிற் பாய்ந்து, உவரை அகற்றுவ - அவ்வுப்பைப் போக்குவன; தேன் வழிந்த-தேன் சிந்திய, மடல் கேதகை மலர்நிழல்:- இதழ்களையுடைய தாழம்பூவின் நிழலை, குருகு என்று - கொக்கு என்று அஞ்சி, ஒழிந்த தாமரைப் போது-(அப்பறவை இருந்து) நீங்கிய தாமரைமலரில்,புக்கு-புகுந்து, கெண்டை ஒளிப்பன-கெண்டை மீன்கள் மறைந்துகொள்வன எ-று.

இச்செய்யுளின் பின்னிரண்டடிகளை "கேதகை நிழலைக் குருகென மருவிக் கெண்டைகள் வெருவு கீழ்க்கோட்டூர்" என்னும் திருவிசைப் பாவோடு ஒத்துநோக்குக. பரிஇ - பரித்து, சுமந்து: எச்சத்திரிபு. கீண்டு: கீழ்ந்து என்பதன் மரூஉ. பலா குறிஞ்சிக்கேயன்றி மருதத் திற்கு முரித்து. தெங்கு, பலா, தாமரை, கெண்டை மருதத்திற் குரி யன. உவர்க்கேணி, கேதகை நெய்தற் குரியன. குருகு இரண்டிற்கு முரித்து. மருதத்திற்கும் நெய்தலுக்கும் மயக்கங் கூறியவாறு.

"காய்மாண்ட தெங்கின் பழம்வீழக் கமுகி னெற்றிப்
பூமாண்ட தீந்தேன் றொடைகீறி வருக்கை போழ்ந்து"

என்னும் சிந்தாமணிச் செய்யுள் இங்கு நோக்கற்பாலது. (சo)

ஆறு சூழ்கழிப் புலால்பொரு தசைந்துகூன் கைதை
சோறு கால்வன வாம்பல்வாய் திறப்பன துணிந்து
கூறு வாரெனக் குவளைகண் காட்டிடக் கூடித்
தூறு வாரெனச் சிரித்தலர் தூற்றுவ முல்லை.

(இ-ள்.) கூன்கைதை-வளைந்த தாழைகள், ஆறுசூழ் கழிபுலால் பொருது - ஆருகச் சூழ்ந்த உப்பங்கழியின் புலால் நாற்றத்தைப் பொறுக்கலாற்ருது, அசைந்து - (உடல்) நடுங்கி, சோறு கால்வன- (பூவினின்று மகரந்தாங்கிய) சோற்றைக் கக்க, ஆம்பல்வாய் திறப் பன-ஆம்பல்கள் (அதனை உண்ணுங் குறிப்பின போன்று மலர்களா கிய) வாயைத் திறப்பன; குவளை துணிந்து கூறுவார் என-குவளைகள் (ஒருவன் தீயசெயலை) மனந்துணிந்து சொல்வார்போல, கண்காட்ட- (மலர்களாகிய) கண்ணாலறிவிக்க, முல்லை-முல்லைகள், கூடிச் சிரித்துத் தூறுவார் என - (ஒருவன் குற்றத்தைத் தம்முட்) கூடி நகைத்துத் தூற்றுகின்றவரைப் போல, அலர் தூற்றுவ-(மலர்தலாகிய) நகைத் தலைச் செய்து பழம்பூக்களைத் தூற்றுதல் செய்யும் எ - று.

சோறு - மகரந்தம், அடிசில். அலர்தூற்றுவ என்பதில் பழிச் சொற்களைத் தூற்றுவன என்னும் குறிப்புமுளது. ஆம்பல் மலர்தலை வாய்திறப்பன என்றும், குவளை நெகிழ்தலைக் கண்காட்டிட என்றுங் கூறினர். கால்வன என்பது செயவெனெச்சப் பொருளில் வந்தது. நெய்தலோடு மருதத்திற்கும் முல்லைக்கும் மயக்கங் கூறியவாறு. (சக)

துள்ளு சேல்விழி நுளைச்சியர் சுறவொடு மருந்தக்
கள்ளு மாறவுங் கூனலங் காய்தினை யவரை
கொள்ளு மாறவுங் கிழங்குதேன் கொழுஞ்சுவைக் கன்னல்
எள்ளு மாறவு மளப்பன விடைக்கிடை முத்தம்.

(இ - ள்.) துள்ளு சேல் விழி நுளைச்சியர் - துள்ளுகின்ற கெண்டை மீன்போலுங் கண்களையுடைய நெய்தனிலப் பெண்களால், சுறவொடும் அருந்த-சுறா மீனோடும் உண்ணுதற் பொருட்டு, கள்ளு கொழும் சுவைக் கன்னல்-கள்ளையும் கொழுவிய இனிய கரும்பையும், மாறவும்-வாங்குதற் பொருட்டும், கூனலங்காய் தினை கிழங்கு தேன்-புளியங்காய் தினை கிழங்கு தேன் இவைகளை, மாறவும் - வாங்குதற் பொருட்டும், அவரை கொள்ளு எள்ளு மாறவும்-அவரை கொள் எள் இவைகளை வாங்குதற் பொருட்டும், இடைக்கு இடை முத்தம் அளப்பன - அளவுக்கு அளவு முத்துக்கள் அளக்கப் பெறுவன எ - று.

கள், கன்னல் மருதத்திற்கும்; கூனலங்காய், தினை, கிழங்கு, தேன் குறிஞ்சிக்கும்; அவரை, எள், கொள் முல்லைக்கு முரியன. கள்ளு, கொள்ளு, எள்ளு என்பவற்றில் உகரமும், கூனலங்காய் என்பதில் அம்மும் சாரியை. மாறல்-ஒரு பண்டங் கொடுத்து மற்றொரு பண்டம் வாங்கல்; பண்ட மாற்று என்னும் வழக்குங் காண்க; ஈண்டு வாங்க என்னுந் துணையாய் நின்றது. நெய்தலோடு மருதத்திற்கும், முல்லைக்கும், குறிஞ்சிக்கும் மயக்கங் கூறியவாறு. சொல்லானும் மயக்கங் காட்டுவார் போன்று இச்செய்யுளில் சொற்களை முறை பிறழ வைத்திருப்பதும் ஓர் வியப்பு. (சஉ)

அவமி கும்புலப் பகைகடந் துயிர்க்கெலா மன்பாம்
நவமி குங்குடை நிழற்றிமெய்ச் செய்யகோ னடாத்திச்
சிவமி கும்பர ஞானமெய்த் திருவொடும் பொலிந்து
தவமி ருந்தர சாள்வது தண்டமிழ்ப் பொதியம்.

(இ - ள்.) அவம் மிகும்-கேடு மிகுந்த, புலப்பகை கடந்து-புலனாகிய பகையை வென்று, உயிர்க்கு எலாம் - உயிர்கள் அனைத்திற்கும், அன்பு ஆம் நவம் மிகும் குடை நிழற்றி - அருளாகிய புதுமை மிக்க குடையால் நிழலைச் செய்து, மெய்ச் செய்ய கோல் நடாத்தி - வாய்மையாகிய செங்கோலை நடத்தி, சிவம் மிகும் - சிவப்பேறு மிகுதற்குக் காரணமாயுள்ள, பரஞான மெய்த் திருவொடும் பொலிந்து-சிவஞானமாகிய அழியாச் செல்வத்துடன் விளங்கி, தவம் இருந்து அரசு ஆள்வது - தவமானது வீற்றிருந்து ஆட்சி புரிவதற்கிடமாயுள்ளது, தண் தமிழ்ப் பொதியம் - குளிர்ந்த செந்தமிழை யுடைய பொதியின் மலை எ - று.

புலம் - ஊறு முதலியன; மெய் முதலிய பொறிகளுமாம். தவத்திற் கேற்ப அன்பு என்பதற்கு அருளெனப் பொருள் கூறப்பட்டது. சிவம்-மங்கலமுமாம். புலனடக்கல், அருள், வாய்மை, ஞானம் என்பன தவத்திற்குச் சிறந்தன வாதல் குறிப்பிட்டவாறு. தவராசயோகிகளாயுள்ளார்கட்கு இருப்பிடமாதல் பற்றித், தவமே அரசாளுதற்கிடனாயுள்ளது என்றார். தமிழை வளர்த்த ஆசிரியர் அகத்தியனார்க்கு என்றும் உறைவிடமாகலின் தண்டமிழ்ப் பொதியம் என்றார். (சங)

வான யாறுதோய்ந் துயரிய மலயமே முக்கண்
ஞான நாயக னம்மலை போர்த்தகார் நால்வாய்
யானை யீருரி யம்மழை யசும்பதன் புண்ணீர்
கூனல் வான்சிலை குருதிதோய் கோடுபோன் றன்றே.

(இ - ள்.) வான யாறு தோய்ந்து உயரிய மலயம் - ஆகாய கங்கையை அளாவி உயர்ந்த பொதியின் மலை, முக்கண் ஞான நாயகன் - மூன்று கண்களையுடைய ஞான முதல்வனாகிய சிவபிரானையும், அம் மலை போர்த்த கார் - அப்பொதியின் மலையாற் போர்க்கப் பெற்ற முகில், நால் வாய் யானை ஈர் உரி - தொங்குகின்ற வாயினையுடைய யானையினின்றும் உரித்து (அவ்விறைவனாற் போர்க்கப் பெற்ற) தோலையும், அம்மழை அசம்பு - அம் முகிலின் மழைத்துளிகள், அதன் புண்ணீர் - அவ்வியானையின் குருதியையும், கூனல் வான்சிலை - (அதனிற் காணப்படும்) வளைந்த இந்திரவில், குருதி தோய் கோடு - (அவ்வியானையின்) உதிரந் தோய்ந்த கொம்பினையும், போன்றன்று - ஒத்தது எ - று.

வானயாறு தோய்தல் மலயத்திற்கும் இறைவனுக்கும் பொது. தோய்ந்து என்பதனை மலைக்கேற்றுங்கால் தோய என்பதன் திரிபெனக் கொள்ளலுமாம். ஏகாரமிரண்டும் அசை.

யானையுரித்த வரலாறு:— யானையுருவினையுடைய கயாசுரன் என்பவன் பிரமனைக்குறித்து அருந்தவம் புரிந்து வரங்கள் பெற்றுத் தேவர் முதலியோர்க்கு இடுக்கண் விளைத்துத் திரியாநின்றவன், ஒரு கால் தன்னைக் கண்டஞ்சிய முனிவர்களைத் துரந்து வந்தனன். அப்பொழுது, முனிவர்கள் சிவபெருமானைச் சரண்புக இறைவன் அவனைக் கொன்று தோலையுரித்துப் போர்த்தருளினன் என்பது; இதனைக் கந்தபுராணத்துட் காண்க. (௬௪)

சுனையய கன்கரைச் சூழல்வாய்ச் சுரும்புசூழ் கிடப்ப
நனைய விழ்ந்தசெங் காந்தண்மே னாகிள வேங்கைச்
சினைய விழ்ந்தவீ கிடப்பபோன் றோய்கலத் தெண்ணீர்
அனைய பொன்சுடு நெருப்போடு கரியிருந் தனைய.

(இ - ள்.) சுனை - சுனையும், அகன்கரைச் சூழல்வாய் - அதனகன்ற கரையின்கண், சூழ்கிடப்ப சுரும்பு - சுற்றி மொய்த்துக் கிடக்கும் வண்டுகளும், பொன்தோய் தெண்ணீர் கலம் கரி அனைய - பொன்னைக் காய்ச்சித் தோய்க்கப்பெறுகின்ற தெளிந்த நீரையுடைய பாத்திரத்தையும் கரியையும் ஒத்தன; நனை அவிழ்ந்த செங்காந்தள் மேல் - முகை விரிந்த செங்காந்தள் மலர்மேல், நாகு இள வேங்கைச்சினை அவிழ்ந்தவீ கிடப்ப - மிக்க இளமையாகிய வேங்கை மரத்தின் கிளையில் மலர்ந்த பூக்கள் கிடப்பன, நெருப்பொடு சுடுபொன் இருந்து அனைய - நெருப்பின்மேல் அதனாற் சுடப்படுகின்ற பொன் இருந்தால் ஒத்தன எ - று.

பொருளுக்கியையச் சொற்கள் மாற்றி யுரைக்கப்பட்டது. இது மொழிமாற்றெனப்படும். என்னை?

"மொழிமாற் றியற்கை
சொன்னிலை மாற்றிப் பொருளெதி ரியைய
முன்னும் பின்னுங் கொள்வழிக் கொளாஅல்"

என ஆசிரியர் தொல்காப்பியனார் கூறினாராகலின். பின்னூலார் இதனைக் கொண்டு கூட்டென்ப. நாகிள: ஒருபொருளிருசொல். கிடப்ப: வினைப்பெயர். இருந்தாலனைய என்பது விகாரமாயிற்று. (௬௫)

குண்டு நீர்ப்படு குவளைவாய்க் கொழுஞ்சினை மரவம்
வண்டு கூப்பிடச் செம்மறாய்ப் புதுமது வார்ப்ப
அண்டர் வாய்ப்பட மறைவழி பொரிசொரிந் தானெய்
மொண்டு வாக்கிமுத் தீவினை முடிப்பவ ரனைய.

(இ - ள்.) குண்டு நீர்ப்படு குவளைவாய்-ஆழ்ந்த சுனைநீரிலுள்ள செங்குவளை மலரில், வண்டு கூப்பிட-வண்டுகள் ஒலிக்க, செம்மல் தாய்-பழம்பூக்களைத் தூவி, புதுமது வார்ப்ப - புதியதேனைச் சொரிவனவாகிய, கொழும் சினை மரவம் - கொழுவிய கிளைகளையுடைய குங்கும மரங்கள், அண்டர் வாய்ப்பட-தேவர்களின் வாயில் சேரும்படி, மறைவழி - மந்திர வொலியுடன், பொரி சொரிந்து - நெற்பொரியைச் சொரிந்து. ஆன்நெய் மொண்டுவாக்கி - பசுநெய்யை (ச்சுருவையால்) முகந்து வார்த்து, முத்தீவினை முடிப்பவர் அனைய - மூன்று வகையாகிய நெருப்பையுடைய வேள்வி வினையை முடிக்கும் முனிவர்களை ஒத்தன எ - று.

செம்மல்-பழம்பூ. வாக்கி-வார்த்து. முத்தீ - காருகபத்தியம், ஆகவனீயம், தென்றிசை யங்கி என்பன. செங்குவளை,மரவம்,வண்டினொலி,பழம்பூ,புதுமது என்பவற்றுக்கு முத்தீ, முனிவர், மறையொலி, பொரி, நெய் என்பன முறையே உவமங்களாம். தூவியென்பது தூய் என விகாரமாயிற்று. முகந்தென்பது மொண்டு என மருவிற்று. ()

அகிலு மாரமுந் தழன்மடுத் தகழ்ந்தெறிந் தழல்கால்
துகிரு மாரமுந் தோட்டெறிந் தைவனந் தூவிப்
புகரின் மால்கரி மருப்பினால் வேலிகள் போக்கி
இகலில் வான்பயி ரோம்புவ வெயினர்தஞ் சீறார்.

(இ - ள்.) எயினர்தஞ் சிறார்-குறவர்களின் சிறார்கள், அகிலும் ஆரமும் தழல் மடுத்து - அகில் சந்தன மரங்களைத் தீயினால் உண்பித்து, அகழ்ந்து எறிந்து-(அவற்றின் வேர்களைக்) கல்லி எறிந்து, அழல்கால் துகிரும் ஆரமும் தொட்டு எறிந்து - நெருப்புப்போலும் ஒளிவீசும் பவளத்தையும் முத்தையும் தோண்டி வெளியில் வீசி, ஐவனம் தூவி-மலைநெல்லை விதைத்து, புகர் இல் - குற்றமில்லாத, மால்கரி மருப்பினால் வேலிகள் போக்கி - பெரிய யானைக் கொம்புகளால் வேலிகள் கோலி, இகல் இல்-பகை இல்லையாம்படி, வான்பயிர் ஓம்புவ-உயர்ந்த பயிர்களைப் பாதுகாப்பன எ - று.

ஆரம் - சந்தனம், முத்து. சிறார் - குறிஞ்சி நிலத்தூர். சிறாரிலுள்ளார் அனைவரும் என்பதற்குச் சிறார் என்றார். அகில் முதலிய விலையுயர்ந்த பொருள்களைக் கழித்து ஐவனந்தூவி ஓம்புவ என்றது, குறவர்களின் குறிய வாழ்க்கையைக் குறிப்பிட்டவாறு; அகில் முதலியன நெற்போல இன்றியமையாதனவல்ல வென்பதுமாயிற்று. மலையின் வளங் கூறியதுமாயிற்று. வருஞ்செய்யு ளிரண்டிற்கும் இங்ஙனமே கொள்க. (சஎ)

அண்ட வாணருக் கின்னமு தருத்துவோர் வேள்விக்
குண்ட வாரழற் கொழும்புகை கோலுமக் குன்றிற்
புண்ட வாதவே லிறவுளர் புனத்தெரி மடுப்ப
உண்ட காரகிற் றூமமு மொக்கவே மயங்கும்.

(இ - ள்.) அண்டவாணருக்கு - தேவர்களுக்கு, இன் அமுது அருத்துவோர்-இனிய அவியுணவை உண்பிக்கும் முனிவரின், வேள்விக்குண்ட ஆர் அழல் கொழும்புகை-வேள்விக் குண்டத்தில் நிறைந்த தீயினின்று மேலெழும். கொழுவிய புகையானது, கோலும் அக்குன்றில் - சூழும் அப்பொதியின்மலையில், புண் தவாத வேல் இறவுளர்-புலால் நீங்காத வேலினையுடைய குறவர்கள், புனத்து எரிமடுப்ப - காட்டில் தீயைமூட்ட, உண்ட கார் அகில் தூமமும் - அதனால் உண்ணப்பட்ட கரிய அகிலின் புகையும், ஒக்கவே மயங்கும்-அவ்வேள்விப் புகையின் உடனாகவே மயங்கா நிற்கும் எ - று.

வாழ்நர் என்பது வாணர் என மருவிற்று. கொலைத்தொழிலுடையாரென்பார் 'புண்ட வாதவே லிறவுளர்' என்றார். தவாத, தாவாத என்பதன் விகாரம்; தபு என்னும் பகுதி திரிந்து முடிந்ததுமாம். சுட்டு, வருவிக்கப்பட்டது. இடையடியாகப் பிறந்த ஒக்கவென்னும் வினையெச்சம் உடன் என்னும் பொருட்டு. (சஅ)

கருவி வான்சொரி மணிகளுங் கழைசொரி மணியும்
அருவி கான்றபன் மணிகளு மகன்றலை நாகத்
திரவி கான்றசெம் மணிகளும் புனங்கவ ரினமான்
குருவி வீழ்ந்திடக் கொடிச்சியர் கோத்தெறி கவண்கல்.

(இ - ள்.) கருவி வான் சொரி மணிகளும்-தொகுதியையுடைய மேகங்கள் சொரிந்த முத்துக்களும், கழைசொரி மணியும் - மூங்கில்கள் சொரிந்த முத்துக்களும், அருவிகான்ற பன்மணிகளும் - அருவிகள் ஒதுக்கிய பல்வகை மணிகளும், அகன்தலை நாகத்து - அகன்ற படத்தினையுடைய நாகத்தினின்றும், கான்ற - உமிழப்பட்ட, இரவி செம்மணிகளும் - சூரியன்போலும் சிவந்த மணிகளும், புனம் கவர் இனம்மான் குருவி வீழ்ந்திட - தினைப்புனத்தின் கதிர்களைக் கவர்கின்ற கூட்டமாகிய மான்களும் குருவிகளும் வீழும்படி, கொடிச்சியர் கவண்கோத்து எறிகல்-குறமகளிர் கவணில்கோத்து எறிகின்ற கற்களாவன எ - று.

கருவி - தொகுதி; 'கருவிதொகுதி' என்னும் தொல்காப்பியச் சூத்திரவுரையில், 'கருவிவான மென்புழிக் கருவி, மின்னு முழக்கு முதலாயவற்றது தொகுதி' எனச் சேனாவரையர் எழுதியிருப்பது இங்கே அறியற்பாலது. நாகத்து என்பதில் இன் உருபு தொக்கது. புனம் என்றது புனத்திலுள்ள கதிர்களை உணர்த்திற்று. மான் குருவி, எண்ணும்மை தொக்கன. கொடிச்சியர்-குறிஞ்சிநில மகளிர். (சகூ)

மாய வன்வடி வாயது வைய மாலுந்திச்
சேய பங்கய மாயது தென்னனா டலர்மேற்
போய மேன்பொகுட் டாயது பொதியமப் பொகுட்டின்
மேய நான்முக னகத்தியன் முத்தமிழ் வேதம்.

(இ - ள்.) வையம் மாயவன் வடிவு ஆயது-புவியானது திருமாலின் வடிவம் போன்றது; தென்னன்நாடு-(அப்புவியின் ஒருகூறாகிய) பாண்டியன் நாடானது, மால்சேய உந்திபங்கயம் ஆயது-அத்திருமாலின் சிவந்த உந்தித்தாமரை போன்றது; பொதியம் - (அந்நாட்டின்) பொதியின் மலையானது. அலர்மேல் போய மென்பொகுட்டு ஆயது-அத்தாமரை மலர்மேல் நீண்ட மெல்லிய கொட்டை போன்றது; அகத்தியன்- (அம்மலையின்கண்) அகத்திய முனிவன், அப்பொகுட்டின் மேய நான்முகன் அக்கொட்டையிலிருக்கும் நான்முகன் (போல்வான்); முத்தமிழ் - (அம் முனிவன் போற்றி வளர்த்த) மூன்று பிரிவினதாகிய தமிழானது, வேதம் - (அந்நான்முகன் அருளிய) வேதம் (போன்றது) எ - று.

மாயவன் - கருநிற முடையவன்; மாயைவல்லானும் ஆம். பங்கயம் - சேற்றில் முளைப்பது; காரண விடுகுறி. தென்னன்-தெற்கின் கண்ணதாய நாட்டையாள்பவன், பாண்டியன். முத்தமிழ் - இயல், இசை, நாடகம் என்பன. வழக்குஞ் செய்யுளுமாகிப் பொருளுணர்த்துவதாய தமிழ் இயற்றமிழ். பண்ணுடன் கூடியது இசைத்தமிழ். பண்ணொடும் அபிநயத்தொடுங் கூடியது நாடகத்தமிழ். இயலின்றி இசையும், இயல் இசையின்றி நாடகமுமில்லை. எனவே, இவை மூன்றும் மொழியின் மூவகை யியக்கத்தைக் குறிப்பனவென்க. தமிழ் இம் மூன்று துறையிலும் எண்ணிறந்த நூல்களை உடைத்தா யிருந்தமையின் முத்தமிழ் என வழங்கப்பெறுவதாயிற்று. முத்தமிழை வேதமெனக் கூறவந்தவர் அதற்கேற்பப் புவிமுதலியவற்றை மாயவன் வடிவு முதலியவாகக் கூறினர். அகத்தியன் தென்மதுரை யகத்துத் தலைச்சங்கத்து வீற்றிருந்து தமிழாராய்ந்தும், தொல்காப்பியன் முதலிய பன்னிருவர்க்குத் தமிழறிவுறுத்தியும், அகத்தியமென்னும் முத்தமிழிலக்கணத்தை அருளிச்செய்தும் பல்லாற்றானும் தமிழை வளம்படுத்திச் செந்தமிழ்க் குரவனாகத் திகழ்ந்தமையின், தமிழை அவன் வெளியிட்டானாக உபசரித்துக் கூறுவர். அகத்தியற்கு முன்னும் தமிழ் உயரிய நிலையிலிருந்ததென்பதே ஆராய்ச்சியாற் பெறப்படும் உண்மை. இதனை 'அகத்தியர்' என்னும் உரை நூலுட் காண்க. சேய: செம்மை யென்னும் பண்படியாக வந்த குறிப்புவினைப்பெயரெச்சம். மேவிய என்பது மேய என விகாரமாயிற்று. (௰)

ஏக மாகிய மேருவும் பொதியமே யிரும்போன்
ஆகு மேருவைச் சூழ்ந்தசாம் பூநத யாறு
நாக ராடுதண் பொருநையே நாவலா றுடுத்த
போக பூமியும் பொருநைசூழ் பூமியே போலும்.

(இ - ள்.) ஏகம் ஆகிய மேருவும்-ஒப்பற்ற மேருமலையும், பொதியமே-பொதியின் மலையே; இரும்பொன் ஆகும் மேருவை – பெரிய பொன்மயமாகிய மேருமலையை, சூழ்ந்த - சுற்றியுள்ள, சாம்பூநதயாறும்-சாம்பூநதம் என்னும் நதியும், நாகர் ஆடு தண் பொருநையே – (அப்பொதியின் மலையைச் சூழ்ந்த) தேவர்களும் நீராடுதற்குரிய தண்ணிய பொருநை நதியே; நாவல்ஆறு உடுத்த போகபூமியும் - நாவலாற்றால் சூழப்பெற்ற போக பூமியும், பொருநைசூழ் பூமியே போலும்-பொருநையால் சூழப்பெற்ற பூமியே எ - று.

இணையாயது பிறிதின்மையின் 'ஏகமாகிய' என்ருர். மேரு முதலியவாகக் கூறப்படுவனவெல்லாம் பொதியின் முதலியவே போலும் எனத் தங்குறிப்பினை யேற்றுவார் 'பூமியேபோலும்' என்ருர் எனலுமாம். போலும்: ஒப்பில்போலி; உவமச் சொல்லாக்கி, மேரு முதலியன பொதியின் முதலியவற்றை ஒக்குமெனக்கூறின் தடுமாறுவமமாம்; இதனை விபரீத வுவமையென்றுங் கூறுவர். சாம்பூநதம் என்றதனைத் தமிழால் 'நாவலாறு' என்ருர். நாவலாறு-நாவற்கனிச் சாருகிய ஆறு. நாகர்-தேவர். போகபூமி – இன்பநுகர்ச்சி மாத்திரையேயுடையபூமி. மேருமுதலியவற்றின் பெற்றியைக் கந்தபுராண,அண்ட கோச படலத்திற் காண்க. உம்மைகள் உயர்வு சிறப்புப் பொருளன.

சிறந்த தண்டமி ழாலவாய் சிவனுல காணுற்
புறந்த யங்கிய நகரேலாம் புரந்தரன் பிரமன்
மறந்த யங்கிய நேமியோ னுதிய வானேர்
அறந்த யங்கிய வுலகுரு வானதே யாகும்.

(இ-ள்.) சிறந்த தண் தமிழ் ஆலவாய்-சிறந்த தண்ணிய தமிழையுடைய திருவாலவாயானது, சிவன் உலகு (உரு)-சிவலோக வடிவாயுள்ளது; ஆனுல்-அங்ஙனமாயின், புறம் தயங்கிய நகர் எலாம்-(அவ்வாலவாயின்) புறத்தில் விளங்குகின்ற நகரங்கள் அனைத்தும், புரந்தரன் பிரமன்-இந்திரன் பிரமன், மறம் தயங்கிய நேமியோன்-வீரம் விளங்குகின்ற சக்கரப் படையையுடைய திருமால், ஆதிய வானேர்-முதலிய தேவர்களின், அறம் தயங்கிய உலகு உரு ஆனதே ஆகும் - தருமம் விளங்குகின்ற உலகங்களின் வடிவமானதேயாகும் எ - று.

சங்கமிருந்து தமிழாராய்ந்த பதியாகலின் 'தண்டமிழாலவாய்' என்ருர். ஆலவாய் சிவனுலகானுல் என்றது, அத் திருப்பதியிலே வரகுணனுக்குச் சிவலோகங் காட்டியருளினமையை உட்கொண்டென்க. இதனை இப்புராணத்து வரகுணனுக்குச் சிவலோகங்காட்டிய படலத்தானறிக. அன்றி இறைவன், உமை, முருகவேள் என்னும் மூவரும் இருந்து அரசுபுரிந்தமை கருதியுமாம். "அப்பாண்டி நாட்டைச் சிவலோக மாக்குவித்த" என்பது பாண்டி நாட்டையே சிவலோகமாகக் கூறுகின்றது. ஆலவாய் சிவனுலகென்பது யாவரானும் தெளியப்படுதலின் அதுபோலப் புறந் தயங்கிய நகரங்கள் ஏனை வானேரின் உலகங்களாமென்பது தெளியப்படுமென்பார் 'சிவனுல கானுல்' என்ருர். 'நீரின் றமையா துலகெனின்' என்பதற்குப் பரிமேலழகரெழுதிய உரையுங் காண்க. நகரெலாம் ஆனது என்றது, பன்மை யொருமை மயக்கம். (௰௨)

வளைந்த நுண்ணிடை மடந்தையர் வனமுலை மெழுகிக்
களைந்த குங்குமக் கலவையுங் காசறைச் சாந்தும்
அளைந்த தெண்டிரைப் பொருநையோ வந்தி ஞாங்கர்
விளைந்த செந்நெலும் கன்னலும் வீசுமவ் வாசம்.

(இ - ள்.) வளைந்த நுண் இடை மடந்தையர் - நுடங்கிய நுண்ணிய இடையையுடைய மகளிர், வனம் முலை மெழுகிக் களைந்த - (தங்கள்) அழகிய கொங்கைகளிற் பூசிக்கழுவிய, குங்குமக் கலவை

யும் காசறைச் சாந்தும் அளைந்த - குங்குமப்பூக்கலந்த கலவையும் கத்தூரிகலந்த சந்தனமும் அளையப்பெற்ற, தெண்திரைப் பொருநையோ-தெளிந்த அலைகளையுடைய பொருநையாறு மட்டுமா (கமழ்வது), அந்நதி ஞாங்கர் விளைந்த-அவ்வாற்றின் பக்கங்களில் விளைந்த, செந்நெலும் கன்னலும் - செந்நெல்லும் கரும்புங்கூட, அவ்வாசம் வீசும் - அவற்றின்மணங் கமழா நிற்கும் எ - று.

காசறை - கத்தூரி. அளைதல் - விரவுதல். பொருநையோ என்பதில் ஒகாரம் பிரிநிலைப் பொருளது. (௫௩)

பொதியி லேவிளை கின்றன சந்தனம் பொதியின்
நதியி லேவிளை கின்றன முத்தமந் நதிசூழ்
பதியி லேவிளை கின்றன தருமமப் பதியோர்
மதியி லேவிளை கின்றன மறைமுதல் பத்தி*

(இ - ள்.) சந்தனம் - சந்தன மரங்கள், பொதியிலே விளைகின்றன - பொதியின்மலையின்கண்ணே உண்டாகின்றன; முத்தம் - முத்துக்கள், பொதியின் நதியிலே விளைகின்றன - பொதியின்மலையினின்றும் வருகின்ற பொருநையாற்றின் கண்ணே உண்டாகின்றன; தருமம் - அறங்கள், அந்நதிசூழ் பதியிலே விளைகின்றன - அப்பொருநையாற் சூழப்பெற்ற நகரங்களிலே உண்டாகின்றன; மறைமுதல் பத்தி - வேத முதல்வனாய சிவபிரான் திருவடிகளிற் பத்திகள், அப்பதியோர் மதியிலே விளைகின்றன-அந்நகரத்தோர் அறிவின்கண்ணே உண்டாகின்றன எ - று.

பொதியிலிற் சந்தனமும்; தென்கடலில் முத்தும் உண்டாவனவென்று தொன்னூல்கள் கூறுநிற்கும்;

"குடமலைப் பிறந்த வாரமு மகிலுந்
தென்கடன் முத்தும் குணகடற் றுகிரும்"

என்பது பட்டினப்பாலை. மறைமுதல் - சிவபெருமான்; முன்னரும் 'மறைமுதலடியார் தம்மை' எனக் கூறியது காண்க. பத்தி, பலதிறப்படுமாகலின் பன்மை கூறினர். பொதியிலில் என்னும் ஏழனுருபு தொக்கது. (௫௪)

கடுக்க வின்பெறு கண்டனுந் தென்றிசை நோக்கி
அடுக்க வந்துவந் தாடுவா னுடலி னிளைப்பு
விடுக்க வாரமென் காறிரு முகத்திடை வீசி
மடுக்க வுந்தமிழ் திருச்செவி மாந்தவு மன்றே.

(இ-ள்.) கடு கவின்பெறு கண்டனும்-நஞ்சினால் அழகுபெற்ற திருமிடற்றையுடைய இறைவனும், தென்திசை நோக்கி-தென்திசையைக் குறித்து, அடுக்க வந்துவந்து ஆடுவான் - நெருங்க வந்துவந்து ஆடுதல், ஆடலின் இளைப்பு விடுக்க - திருநிருத்தத்தாலுண்டாகிய மெலிவை நீக்குதற்பொருட்டு, ஆரம் மென் கால்வீசி-சந்தனச்சோலை

(பா - ம்.) * மறைமுதற் பத்தி.

யிற் படிந்து வருகிற மெல்லிய தென்றற்காற்று வீசப்பெற்று, திருமுகத்திடை மடுக்கவும் - (அதனைத் தனது) திருமுகத்தின்கண் ஏற்கவும், தமிழ் திருச்செவி மாந்தவும் அன்றோ - தமிழின் சுவையைத் திருச்செவியால் நுகரவும் அல்லவா எ - று.

தென்றிசை—தெற்கின்கண்ணதாய தமிழ்நாடு; 'மாதவஞ் செய்த தென்றிசை வாழ்ந்திடத், தீதிலாத் திருத் தொண்டத் தொகைதரப், போதுவார்' எனப் பெரியபுராணங் கூறுதலுங் காண்க. இறைவன் திருக்கைலை முதலியவற்றை விடுத்துத் தமிழ்நாட்டிலே திருநடம்புரிவதும், தமிழ்நாட்டினுள்ளும் திருவாலங்காடு, சிதம்பரம், மதுரை, திருநெல்வேலி, திருக்குற்றாலம் என்பவற்றில் முறையானே நெருங்கி வந்தாடுவதும் என்பார் 'தென்றிசை நோக்கி அடுக்கவந்து வந்தாடுவான்' என்றார். தெற்கு நோக்கியாடுதலுங் கொள்க. தமிழ் திருச்செவிமாந்தவும் என்றது, வேறெம்மொழிக்குமில்லாத அதன் இனிமை கருதி யென்க. அடுக்கு உவகை குறித்தது; வந்து உவந்து எனப் பிரித்தலும் ஆம். வீசி - வீசப்பட்டு. கண்டனும்: உம் உயர்வு சிறப்பு. ஆடுவான் என்பது தொழிற்பெயராய் நின்றது: தற்குறிப் பேற்றவணி. (௫௫)

விடையு கைத்தவன் பாணினிக் கிலக்கண மேனாள்
வடமொ ழிக்குரைத் தாங்கியல் மலயமா முனிக்குத்
திடமு றுத்தியம் மொழிக்கெதி ராக்கிய தென்சொல்
மடம கட்கரங் கென்பது வழுதிநா டன்றோ.

(இ - ள்.) விடை உகைத்தவன்—இடபவாகனத்தைச் செலுத்துகின்ற சிவபெருமான், மேல்நாள் - முன்னொருகாலத்திலே, பாணினிக்கு - பாணினிமுனிவனுக்கு, வடமொழிக்கு இலக்கணம் உரைத்தாங்கு — சமஸ்கிருத மொழிக்கு வியாகரண சூத்திரத்தை அருளிச் செய்ததுபோல, மலயம் மாமுனிக்கு — பொதியின் மலையிலுள்ள பெருமை பொருந்திய அகத்திய முனிவனுக்கு, இயல் திட முறுத்தி - தமிழிலக்கணத்தைத் திடம்பெற அறிவுறுத்தி, அம் மொழிக்கு—அவ் வடமொழிக்கு, எதிர் ஆக்கிய - எதிர்மொழியாகச் செய்த, தென்சொல் மடமகட்கு - தென்மொழியாகிய தமிழ் நங்கைக்கு, அரங்கு என்பது – நடனசாலையென உயர்ந்தோரால் புகழ்ந்து கூறப்படுவது, வழுதிநாடு அன்றோ - பாண்டி நாடு அல்லவா எ - று.

பாணினி என்பவர் காந்தாரநாட்டிலே சலாது நகரத்திலே பாணினி என்பானுக்குத் தாக்ஷி என்பாள் வயிற்றுப்பிறந்து இளமையிலே மந்தமதி யுடையானென ஆசிரியனாலும் பிறராலும் அவமதிக்கப்பட்டுப் பின் சிவனை நோக்கித் தவம்புரிந்து மகேசுவர சூத்திர உபதேசம் பெற்றுப் பலகலையினும் வல்லவராகி வடமொழிக்குச் சிறந்ததோரிலக்கணம் இயற்றின ரென்ப. இவரியற்றிய வியாகரணம் பாணினியம் எனப்படும். இதனைக் காசுமீர நாட்டின் அரசனாகிய கானிட்கனது அவைக்களத்தே அரங்கேற்றின ரென்பர். இந்நூலுக்கு உரை கண்டவர்கள் வரருசியும், பதஞ்சலியுமாவர். பாணினியின் காலம் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்டதெனச் சிலரும், நாலாயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்டதெனச் சிலரும் கூறுநிற்பர். எங்ஙனமாயினும் பாரத இராமாயண காலங்களுக் கெல்லாம் முன்னரே தென்

மதுரை யகத்துத் தலைச்சங்கப் புலவராய்த் திகழ்ந்த ஆசிரியர் அகத்தியனார்க்குப் பாணினி மிகவும் பிற்பட்டவரென்பதுதேற்றம். எனவே சிவபெருமான் பாணினிக்கு முதற்கண் இலக்கணம் அறிவுறுத்திப் பின்பு அகத்தியர்க்கு அறிவுறுத்தின ரென்பது சிறிதும் பொருந்தாது ஆகலின் 'மேனாள்' என்பதற்கு முன்னொருகாலத்தில் எனப் பொது வகையாகப் பொருள் கொள்ளப்பட்டது. இப் புராணமியற்றிய ஆசிரியரும் இவரனைய பிறரும் பாணினீயத்தையே முற்பட்டதாகக் கொண்டனரெனினும், இன்னோர் சரித்திர ஆராய்ச்சியைப் பொருளாகக் கொண்டவரல்ல ராகலின் இவர்கள் கூற்று இவ்வழித் தவறென எடுத்துக்காட்டுதலால் இவர் பெருமைக்கு இழுக்கொன்று மின்றென்க. அகத்தியர் சிவபெருமானிடத்தே தமிழ் கேட்டதனை,

''உழக்குமறை நாலினு முயர்ந்துலக மோதும்
வழக்கினு மதிக்கவியி னும்மரபி னாடி
நிழற்பொலி கணிச்சிமணி நெற்றியுமிழ் செங்கண்
தழற்புரை சுடர்க்கடவு டந்ததமிழ் தந்தான்''

என்று கம்பரும் கூறியுள்ளார்.

பரத கண்டத்தின் தெற்கிலே தமிழும், வடக்கிலே ஆரியமும் சிறந்து விளங்கினமையின் இவற்றை முறையே தென்மொழி, வடமொழி யென்பர். திடமுறுத்தி - உறுதிபெற அறிவுறுத்தி. சேர, சோழ மண்டலங்களும் தமிழ் நாடேயாயினும், பல்லாயிரம் ஆண்டுகள் சங்கமிருந்து தமிழாராய்ந்தது பாண்டிநாடாகலின், அதனையே அரங்கென்றார். மடம் - மென்மை. (ருசு)

கண்ணு தற்பெருங் கடவுளுங் கழகமோ டமர்ந்து
பண்ணு றத்தெரிந் தாய்ந்தவிப் பசுந்தமி ழேனை
மண்ணி டைச்சில விலக்கண வரம்பிலா மொழிபோல்
எண்ணி டைப்படக்* கிடந்ததா வெண்ணவும் படுமோ.

(இ - ள்.) கண் நுதல் பெரும் கடவுளும் - நெற்றியிற் கண்ணையுடைய முதற் கடவுளாகிய சிவபெருமானும், கழகமோடு அமர்ந்து- சங்கத்தின்கண் வீற்றிருந்து, பண் உற-செப்பமுற, தெரிந்து ஆய்ந்த- ஆராய்ந்து தெரிந்த, இப்பசுந்தமிழ்-இப் பசிய தமிழ்மொழியானது, ஏனை மண் இடை-மற்றை நிலங்களினுள்ள, இலக்கண வரம்பு இலா- இலக்கண வரையறை இல்லாத, சிலமொழிபோல்-சில மொழிகளைப் போல, எண் இடை-எண்ணின்கண், படக்கிடந்ததா-அமையக்கிடந்ததாக, எண்ணவும் படுமோ - நினைக்கவுங் கூடுமோ (கூடாது) எ-று.

சிவபெருமான் கழகமோடமர்ந்து தமிழாராய்ந்ததனை ''தலைச் சங்க மிருந்தார் அகத்தியனாரும், திரிபுரமெரித்த விரிசடைக்கடவுளும், குன்றெறிந்த முருகவேளும், முரஞ்சியூர் முடிநாகராயரும், நிதியின் கிழவனும் என இத்தொடக்கத்தார் ஐஞ்ஞூற்று நாற்பத்தொன்பதின்மர் என்ப'' என்னும் இறையனாரகப்பொருளுரையானும், இப் புராணத்தின் சங்கப்பலகை கொடுத்த படலத்தில்,

(பா - ம்.) * எண்ணிடைப்படக்.

"பொன்னின் பீடிகை யென்னும் பொன்னரமேல்
துன்னு நாவலர் சூழ்மணி யாகவே
மன்னி னூர்நடு நாயக மாமணி
என்ன வீற்றிருந் தார்மது ரேசரே"

"நதிய ணிந்தவர் தம்மொடு நாற்பத்தொன்
பதின்ம ரென்னப் படும்புல வோரெலாம்
முதிய வான்றமிழ் பின்னு முறைமுறை
மதிவி ளங்கத் தொடுத்தவண் வாழுநாள்"

என வருதலானும், நம்பி திருவிளையாடற் புராணத்தா னு மறிக. சேக்கிழார்குரிசிலும் திருத்தொண்டர் புராணத்தில்,

"சென்றணைந்து மதுரையினிற் றிருந்திய நாற் சங்கத்துள்
அன்றிருந்து தமிழாராய்ந் தருளிய வங்கணர்"

எனவும்,

"திருவாலவாயில், எம்மைப் பவந்தீர்ப்பவர் சங்கமிருந்தது"

எனவும் கூறியருளினர்.

கழகமோடு – கழகத்தில்: உருபுமயக்கம், புலவர்களோடு எனினும் ஆம். பசுந் தமிழ் என்றது, என்றும் இளமைச் செவ்வி குன்றாத கன்னித்தமிழ் என்றவாறு. ஏனைமண் இவையென்பதனை,

"சிங்களஞ் சோனகஞ் சாகஞ் சீனந் துளுக்குடகம்
கொங்கணங் கன்னடங் கொல்லந்தெ லுங்கங்க லிங்கம்வங்கம்
கங்க மகதங் கடாரங் கவுடங் கடுங்குசலம்
தங்கும் புகழ்த்தமிழ் சூழ்பதி னேழ்புவி தாமிவையே"

என்னுஞ் செய்யுளாலறிக. சில என்றதும் மொழிகளின் எளிமை தோன்ற நின்றது. எண்ணிடைப் படுதலாவது அவற்றை யெண்ணுங்கால் அவற்றுடன் ஒன்றாகச் சேர்த்து எண்ணப்படுவது. எண்ணிடப் பட என்பது பாடமாயின் எண்ணப்பட எனப் பொருளுரைக்க. கடவுளும் பண்ணுறத் தெரிந்தாய்ந்ததும், பசுமையும், இலக்கண வரம்புமுடையதுமாகிய தமிழை, அவற்றுள் ஒன்றேனும் பெறாத ஏனைமொழிகளுடன் சேர்த்தெண்ணுதல் தகுதியன்றென்பதாம். இவ்வியல்பு வடமொழிக்கு மின்றாகலின், பொதுப்பட 'மொழிபோல்' என்றார். எண்ணவும் படுமோ என்றதனால் சொல்லுதல் கூடாதென்பது கூறவேண்டாதாயிற்று. கடவுளும் என்றதில் உம்மை: உயர்வு சிறப்பு. இகரச் சுட்டு இதன் பெருமை யாவரானும் அறியப்பட்டதென்பதனைக் காட்ட வந்தது. (௫௭)

தொண்டர் நாதனைத் தூதிடை விடுத்தது முதலை
உண்ட பாலனை யழைத்தது மெலும்புபெண் ணுருவாக்
கண்ட தும்மறைக் கதவினைத் திறந்ததுங் கன்னித்
தண்ட மிழ்ச்சொலோ மறுபுலச் சொற்களோ சாற்றீர்.

(இ - ள்.) தொண்டர் நாதனை - அடியார்க்குத் தலைவனாகிய சிவபெருமானை, தூதிடை விடுத்ததும்-தூதின்கண் செலுத்தியதும், முதலை உண்ட பாலனை அழைத்ததும் - முதலையால் உண்ணப்பெற்ற சிறுவனை வரவழைத்ததும், எலும்பு பெண் உருவாக்கண்டதும் – எலும்பைப் பெண்வடிவாக உயிர்ப்பித்ததும், மறைக்கதவினைத் திறந்ததும் – வேதத்தினாலே அடைக்கப்பட்ட கதவைத் திறந்ததும், கன்னித் தண்தமிழ்ச் சொலோ-அழியாத தண்ணிய தமிழ் மொழியா (அன்றி), மறுபுலச் சொற்களோ சாற்றீர் - ஏனைய நிலங்களின் வழங்கு மொழிகளா (புலவர்களே) சொல்லக் கடவீர் எ – று.

திருஞானசம்பந்தர் முதலிய பெருமக்கள் புரிந்த அருஞ்செய லெல்லாம், அவர்கள் பாடியருளிய தமிழ்ப் பதிகங்களின் வாயிலாக வாகலின், கருவியை வினைமுதலாக்கித் தமிழ் செய்தனவாகக் கூறினர். வேறெம் மொழியாலும் யாரும் இத்தகைய அருஞ்செயல் செய்திற்றில ரென்பார், 'மறுபுலச் சொற்களோ சாற்றீர்' என்றார்.

நாதனைத் தூதுவிடுத்த வரலாறு முன்னரே கூறப்பட்டது.

முதலையுண்ட பாலனை அழைத்த வரலாறு:—தம்பிரான் றோழ ராகிய நம்பியாரூரர் சேரமான் பெருமாளைக் காணும் விருப்பினால் திருவாரூரினின்றும் புறப்பட்டுச் சோணாடுகடந்து கொங்கு நாட்டிலே திருப்புக்கொளியூர் அவிநாசியை அடைந்த காலையில், ஓரில்லத்தில் மங்கலவொலியும், அதற்கெதி ரில்லத்தில் அழுகையொலியும் நிகழக்கேட்டு, அதன் காரணத்தை விசாரித்தனர். ஐந்து வயதினரா யிருந்த இரண்டு பார்ப்பனச்சிறார்கள், ஏரிக்குச் சென்று விளையாடும் பொழுது ஒருவனை முதலை விழுங்கிவிட்டதென்றும், தப்பி வந்தானுக்கு இப்பொழுது உபநயனவிழா நடக்கிறதென்றும், மகனை யிழந்தோர் துயரத்தால் அழுகின்றனரென்றும் அறிந்துகொண்டு, அப்பொழுது தம் வரவினையறிந்து, அழுகையை விடுத்துவந்து மெய்யன்புடன் வணங்கிய பெற்றோர்களுக்கு, அச்சிறுவனை அழைத்துத் தருவதாகத் துணிந்து, ஏரிக்கரையை யெய்திப் பதிகம்பாட, முதலை அச்சிறுவனைக் கரையிலுமிழ்ந்து சென்றது என்பது.

> "உரைப்பா ருரையுகந் துள்கவல் லார்தங்க ளுச்சியாய்
> அரைக்கா டரவா வாதியு மந்தமு மாயினாய்
> புரைக்காடு சோலைப் புக்கொளி யூரவி நாசியே
> கரைக்கான் முதலையைப் பிள்ளைத ரச்சொல்லு காலனையே"

என்பது அத்திருப்பதிகத் திருப்பாட்டு.

என்பு பெண்ணுருவாக் கண்ட வரலாறு:—திருமயிலாப்பூரிலே செல்வத்திற் சிறந்த சிவநேயர் என்னும் வணிகரொருவர், கபாலீசர் திருவருளால் ஓர் புதல்வியைப் பெற்று, அந் நங்கையை ஆளுடைய பிள்ளையார்க்கு உரிமையாக்கத் துணிந்து வளர்த்துவருங் காலத்தில் அவர் சேடியருடன் மலர் கொய்யச் சென்று அரவுதீண்டி இறந்தனர். சிவநேயர் மிகுந்த துயரத்துடன் அவ்வம்மையின் உடலைத் தகனஞ் செய்து, பிள்ளையாரிடம் ஒப்புவித்தற்பொருட்டாக அச்சாம்பரையும் என்பையும் ஒரு குடத்திலிட்டுக் கன்னிமாடத் திருத்தி, அவ்வம்மை உயிர்த்திருக்கும் பொழுதிற்போலச் சேடியர் உபசரித்து வருமாறு

செய்வித்தனர். அப்பொழுது திருஞானசம்பந்தப்பெருமான் அடியார் கூட்டங்களுடன் பல திருப்பதிகளும் தரிசித்துக்கொண்டு திருவொற்றியூரை அடைந்திருந்தனர். சிவநேயர் அதனைக் கேள்வியுற்றுத் திருமயிலையிலிருந்து திருவொற்றியூர் காறும் பந்தரிட் டலங்கரித்து ஞானசம்பந்தரை இறைஞ்சி அழைத்துவந்து நிகழ்ந்த செய்தியைத் தெரிவிக்க, சம்பந்தப் பெருமான் அக்குடத்தினைக் கபாலீசர் திருமுன் வருவித்துப், பதிகம்பாடியருள, அவ்வென்பானது அங்கே கூடியிருந்த எண்ணிறந்தோரும் கண்டு அதிசயிக்கும்படி பெண்ணுருவெய்திப் பன்னிரண்டாண் டளவு நிரம்பி வெளியே வர, ஆளுடைய பிள்ளையார் தம்மால் உயிர்ப்பிக்கப்பெற்ற அவ்வம்மையை அங்கேயே இருக்கச் செய்து கபாலீசரை வணங்கிக்கொண்டு எழுந்தருளினர் என்பது.

"மட்டிட்ட புன்னையங் கானன் மடமயிலைக்
கட்டிட்டங் கொண்டான் கபாலீச் சரமமர்ந்தான்,
ஒட்டிட்ட பண்பி னுருத்திர பல்கணத்தார்க்
கட்டிட்டல் காணுதே போதியோ பூம்பாவாய்''

என்பது அத்திருப்பதிகத் திருப்பாட்டு.

மறைக்கதவினைத் திறந்த வரலாறு:—திருஞானசம்பந்தரும், திருநாவுக்கரசரும் திருமறைக் காட்டுக்கு எழுந்தருளிய காலத்தில், ஞானசம்பந்தர் நாவுக்கரசரைப் பார்த்து, 'நாம் வேதங்கள் பூசித்துத் திருக்காப்பிட்ட நேர் வாயில்வழியே சென்று இறைவரை வழிபடவேண்டும் ஆகலின், நீர் திருக்கதவம் காப்புநீங்கப் பாடியருளும்' என்று கூற அரசுகளும் பதிகம்பாடிக் கதவு திறக்கச் செய்தனர் என்பது.

''அரக்கனை விரலா லடர்த் திட்டநீர்
இரக்க மொன்றிலீ ரெம்பெரு மானிரே
சுரக்கும் புன்னைகள் சூழ்மறைக் காடரோ
சரக்க விக்கத வந்திறப் பிம்மினே''

என்பது அத்திருப்பதிகத் திருப்பாட்டு. இவ்வரலாறுகளின் விரிவினைத் திருத்தொண்டர் புராணத்திற் காண்க. (௩அ)

வெம்மை யால்விளை வஃகினும் வேந்தர்கோல் கோடிச்
செம்மை மாறினும் வறுமைநோய் சிதைப்பினுஞ் சிவன்பாற்
பொய்ம்மை மாறிய பத்தியும் *போலிவுங்குன் றுவாத்
தம்மை மாறியும் புரிவது தருமமங் நாடு.

(இ - ள்.) வெம்மையால் - (மழைவறங் கூர்ந்து) கோடை மிக்கமையால், விளைவு அஃகினும் - விளைவு குன்றினாலும், வேந்தர் கோல் கோடி - அரசர் செங்கோல் திறம்பி, செம்மை மாறினும் - நடுவுநிலைமை மாறினாலும், வறுமைநோய் சிதைப்பினும் - வறுமைப் பிணி வருத்தினாலும், சிவன்பால் - சிவபிரானிடத்து, பொய்ம்மை மாறிய பத்தியும் - பொய்ம்மை நீங்கிய (மெய்) அன்பும், பொலிவும் குன்றுவா - (சைவ) விளக்கமுங் குன்றுவாக, தம்மை மாறியும் -

(பா - ம்.) * பொலிவு குன்றுவாய்.

(அங்குள்ளார்) தங்களை விற்ருயினும், தருமம் புரிவது அந்நாடு - அறஞ்செய்யப் பெறுவது அப்பாண்டி நாடு எ - று.

'வேந்தர் கோல் கோடிச் செம்மை மாறினும்' என்பது செய்யுளாகலின் இடையே நின்றது; கோல்கோடுதலாற் கோட்கள் நிலை திரிதலும், அதனுல் மழையின்மையும், அதனுல் விளைவு குன்றலும், அதனுல் வறுமைநோயும் உண்டாமென்க.

"கோனிலை திரிந்திடிற் கோணிலை திரியும்
கோணிலை திரிந்திடின் மாரிவறங் கூரும்
மாரிவறங் கூரின் மன்னுயி ரில்லை"

என்று மணிமேகலையும்,

"கோணிலை திரிந்து நாழி குறைபடப் பகல்கண் மிஞ்சி
நீணில மாரி யின்றி விளைவஃகிப் பசியு நீடிப்
பூண்முலை மகளிர் பொற்பிற் கற்பழிந் தறங்கண் மாறி
ஆணையிவ் வுலகு கேடா மரசுகோல் கோடி னென்ருன்"

என்று சிந்தாமணியும் கூறுதல் காண்க. பொய்ம்மை மாறிய பத்தி - நெக்கு நெக்கு நினைந்துள்ளுருகும் பத்தி. "மெய்ம்மையா முழவைச் செய்து விருப்பெனும் வித்தை வித்திப், பொய்ம்மையாங் களையை வாங்கிப் பொறையெனு நீரைப்பாய்ச்சி" என்பதும் சிந்திக்கற்பாலது. பொலிவாவது திருநீறு, கண்டிகை, திருவைந்தெழுத்து என்பவற்றின் விளக்கமாம். ஆக என்பது குறைந்து நின்றது. புரிவது அந்நாடு - புரிதற்கு இடனுயது அந்நாடு; நாடு என்பது நாட்டிலுள்ளாரைக் குறிப்பது என்னலுமாம். சிவபத்தியும், சிவபுண்ணியமும் மலிந்த நாட்டின்கண் விளைவஃகுதல் முதலியன உளவாகா என்பது தோன்ற எதிர்மறை யும்மை கொடுத்துக் கூறினுரென்னலுமாம். தம்மை மாறியும் : உம்மை எச்சமும் சிறப்புமாம். (௩௧)

உலகம் யாவையு மீன்றவ ளும்பரு ளுயர்ந்த
திலக நாயகி பரஞ்சுடர் சேயென மூன்று
தலைவ ரான்முறை செய்தநா டிஃதன்றிச் சலதி
சுலவு பாரினுண் டாகுமோ துறக்கத்து மஃதே.

(இ - ள்.) உலகம் யாவையும் ஈன்றவள் - எல்லா வுலகங்களையும் ஈன்றருளியவளும், உம்பருள் உயர்ந்த திலகநாயகி - சத்திகளுள் உயர்ந்த திலகம் போல்வாளுமாகிய உமாதேவியும், பரஞ்சுடர் - பரஞ்சோதியாகிய சிவபெருமானும், சேய் என மூன்று தலைவரான் - முருகக்கடவுளுமாகிய மூன்று முதல்வர்களாலும், முறைசெய்த நாடு இஃது அன்றி - செங்கோல் ஓச்சியநாடு இப்பாண்டி நாடேயன்றி, சலதி சுலவுபாரின் உண்டாகுமோ - கடலாற் சூழப்பட்ட நிலவுலகின்கண் வேறுநாடும் உளதோ (இன்று); துறக்கத்தும் அஃதே - விண்ணுலகத்து மங்ஙனமே (வேறு நாடு இன்று) எ - று.

உம்பர் என்பது இங்கே சத்திகளை யுணர்த்திற்று. உமை தடாதகைப் பிராட்டியாராகவும், பரஞ்சுடர் சோமசுந்தர பாண்டியராக

வும், சேய் உக்கிரகுமார பாண்டியராகவும் இங்நாட்டிலிருந்து ஆட்சி நடாத்திய செய்திகள் மேல் இப்புராணத்துள் விளக்கமாம். இம் மூவருள்ளும் வேற்றுமை யின்றென்பார் 'மூன்று தலைவரான்' என்றார். செங்நிறமுடைமையால் முருகக்கடவுளுக்குச் சேய் என்பது ஒருபெயர். செய்த, செயப்பாட்டு வினைப்பொருளது. உண்டாகுமோ என்றது உளதோ என்னுமாத்திரையாய் நின்றது. தலைவரானும் என்னும் முற்றும்மை தொக்கது. (சு0)

திருநாட்டுச் சிறப்பு முற்றிற்று.

ஆகச் செய்யுள் - சு0

---

## திருநகரச் சிறப்பு

மங்க லம்புனை பாண்டிநா டாகிய மகட்குச்
சங்க லம்புகை தோளிணை தடமுலை யாதி
அங்க மாம்புறந் தழுவிய நகரெலா மனைய
நங்கை மாமுக மாகிய நகர்வளம் பகர்வாம்.

(இ - ள்.) மங்கலம்புனை - பல நலன்களையும் பூண்ட, பாண்டி நாடு ஆகிய மகட்கு-பாண்டிநாடு என்னும் மங்கைக்கு, புறம் தழுவிய நகர் எலாம்-(அதன்) புறத்தே சூழ்ந்த நகரங்கள் அனைத்தும், சங்கு அலம்பு கை - வளை ஒலிக்குங் கைகள், தோள் இணை - இரண்டு தோள்கள், தடம்முலை – பெரிய கொங்கைகள், ஆதி அங்கம் ஆம் - முதலிய உறுப்புக்கள் ஆகும் ; அனைய நங்கை – அங்ஙனமாய நங்கையின், மாமுகம் ஆகிய நகர்வளம் - பெருமை பொருந்திய முகமாகிய மதுரை நகரின் சிறப்பினை, பகர்வாம் - கூறுவாம் எ – று.

மங்கலம் - நலம். நாட்டிற்கு நலமாவன : பிணியின்மை, செல்வம், விளைவு, இன்பம், ஏமம் என்பனவும் பிறவுமாம் ; அவற்றைத் திருக்குறளில் 'நாடு' என்னும் அதிகாரத்திற் காண்க. வருகிற பாட்டில் 'திருமுக மதுரையாம் புரமே' என்று கூறுதலின், இங்கே முகமாகிய நகர் என்று கூறிப்போந்தார். நங்கை - பெண்டிரிற் சிறந்தாள். பாண்டிநாடு ஏனை நாடுகளினுஞ் சிறந்ததென்பார் 'நங்கை' என்றும், மதுரை அந்நாட்டு ஏனைப் பதிகளினுஞ் சிறந்ததென்பார் 'மாமுகமாகிய நகர்' என்றும் கூறினர். (க)

கொங்கை யேபரங் குன்றமுங் கொடுங்குன்றுங் கொப்பூழ்
அங்க மேதிருச் சுழியலவ் வயிறுகுற் றாலஞ்
செங்கை யேடக மேனியே பூவணந் திரடோள்
பொங்கர் வேய்வனந் திருமுக மதுரையாம் புரமே.

(இ - ள்.) (அந்நங்கைக்கு) கொங்கை - கொங்கைகள், பரங்குன்றமும் கொடுங்குன்றும் - திருப்பரங்குன்றமும் திருக்கொடுங்குன்றமுமாகும் ; கொப்பூழ் அங்கம்-உந்தியாகிய உறுப்பு, திருச்சுழியல் - திருச்சுழியலென்னுந் தலமாகும்; அவ்வயிறு – அழகிய வயிறு, குற்றாலம் – திருக்குற்றாலமென்னுந் தலமாகும்; செங்கை-சிவந்தகை, ஏடகம் - திருவேடகமென்னுந் தலமாகும்; மேனி–உடல், பூவணம் – திருப்பூவணமென்னுந் தலமாகும்; திரள்தோள்-திரண்ட தோள்கள், பொங்கர் வேய்வனம் - சோலைகள் சூழ்ந்த வேணுவனமென்னுந் தலமாகும் ; திருமுகம் – அழகிய முகம், மதுரை புரம்ஆம் – மதுரையாகிய நகரம் ஆகும் எ - று.

அந்நங்கைக்கு என்பது வருவிக்க. கொடுங்குன்று - பிரான்மலை. வேய்வனம்-திருநெல்வேலி. குன்றுகள் கொங்கைக்கு உவமமாகலின் பரங்குன்றம் கொடுங் குன்றுகளைக் கொங்கையென்றும், நீர்ச்சுழி, ஆலிலை, தாமரை, மலர், மூங்கில் என்பன கொப்பூழ் முதலியவற்றுக்கு உவமமாகலின், பெயரான் அவற்றோடியைபுடைய பதிகளை அவ்

வங்கங்களென்றும், சந்திரனது அமிழ்தத்தாற் சாந்திசெய்யப் பட்டமையின் மதுரை யென்பது பெயராயிற்று என மேல் இப்புராணத்துள் ஓதப்படுதலானும், சந்திரன் முகத்திற்கு உவமமாகலானும் மதுரையைத் திருமுகமென்றுங் கூறினர். அவ்வயிறு-அழகியவயிறு: மகரம் வகரமாய்த் திரிந்தது. ''மடவோள் பயந்த மணிமருளவ்வாய்க், கிண்கிணிப் புதல்வர்'' என்று புறத்தில் வருதலுங் காண்க. கொங்கையே என்பது முதலிய ஏகாரங்கள் எண்ணுக் குறித்தன ;

''எண்ணே கார மிடையிட்டுக் கொளினும்
எண்ணுக் குறித்தியலு மென்மனார் புலவர்''

என்பது தொல்காப்பியம். புரமே என்பதில் ஏ: ஈற்றசை. இயைபுருவகம். (உ)

வடுவின் மாநில மடந்தைமார் பிடைக்கிடந் திமைக்கப்
படுவி லாரமே பாண்டிநா டாரமேற் பக்கத்
திடுவின் மாமணி யதன்புற நகரெலா மிவற்றுள்
நடுவி ணுயக மாமணி மதுரைமா நகரம்.

(இ - ள்.) வடு இல் - குற்றமில்லாத, மாநில மடந்தை-பெரிய நிலமகளின், மார்பு இடை - மார்பின்கண், கிடந்து இமைக்கப்படு - இருந்து விளங்குகின்ற, வில் ஆரமே - ஒளியையுடைய பதக்கமே, பாண்டிநாடு-பாண்டிநாடாகும்; ஆரம் மேற்பக்கத்து இடு-அம் மதாணியின் சுற்றுப்புறங்களிற் பதித்த, வில் மாமணி - ஒளியையுடைய பெரியமணிகளே, அதன்புறம் நகர் எலாம் - அப்பாண்டிநாட்டின் புறத்துச் சூழ்ந்த நகரங்களனைத்துமாகும்; இவற்று நடுவுள் - இம் மணிகளின் நடுவிடத்துள்ள, வில் நாயக மாமணி - ஒளியினையுடைய தலைமையாகிய பெரியமணியே, மதுரை மாநகரம் - மதுரையாகிய பெரிய நகரமாகும் எ - று.

இமைக்கப்படு - இமைக்கின்ற. ஆரம் - பதக்கம் ; மதாணி: உள்பிரித்துக் கூட்டப்பட்டது. இன் சாரியையாக்கி நடுநாயகம் எனினும் ஆம். (ங)

திரும கட்கோரு தாமரைக் கூடமே திருமால்
மரும கட்குவெண் டாமரை மாடமே ஞானந்
தரும கட்கியோ கத்தனிப் பீடமே தரையாம்
பெரும கட்கணி திலகமே யானதிப் பேரூர்.

(இ - ள்.) தரையாம் பெருமகட்கு-நிலமாகிய பெருமாட்டிக்கு, அணிதிலகமே ஆனது - அணிகின்ற திலகமேயானதாகிய, இப்பேர் ஊர்-இப்பெரிய நகரமானது, திருமகட்கு ஒரு தாமரைக்கூடம்-அலைமகளுக்கு ஒப்பற்ற தாமரையில்லம்; திருமால் மருமகட்கு-திருமாலின் மருகியாகிய கலைமகளுக்கு, வெண்தாமரை மாடம் - வெண்தாமரையில்லம்; ஞானம் தருமகட்கு - ஞானத்தைப் பாலிப்பவராகிய மலைமகளுக்கு, யோகத்தனிப் பீடம் - ஒப்பற்ற யோகபீடம் எ - று.

திருமகள் - திருவாகிய மகள் ; இலக்குமி. பின் வெண்டாமரையெனலால் முற்கூறியது செந்தாமரை யென்க. தாமரை யிரண்டும்

மலருக்கு ஆகுபெயர். கலைமகள் அயனுக்கு மனைக்கிழத்தியாகலின் திருமாலுக்கு மருகியாயினள். திருமான் எனப்பிரித்து இலக்குமிக்கு மருமகளென்னலுமாம். திருமான் - திருவாகிய மான்.

"நாவின் கிழத்தி யுறைதலாற் சேராளே
பூவின் கிழத்தி புலந்து"

என்பதிலும் இவர் மாமியும் மருகியும் என்பது தோன்றக் கூறப்பட்டிருத்தல் காண்க. ஞானந்தருமகள் - உமை;

"ஆகமங்க ளெங்கே யறுசமயந் தானெங்கே
யோகங்க ளெங்கே யுணர்வெங்கே—பாகத்
தருள்வடிவுந் தானுமா யாண்டிலனே லந்தப்
பெருவடிவை யாரறிவார் பேசு"

என்று திருக்களிற்றுப்படியார் கூறுவது இங்கே சிந்திக்கற்பாலது. ஆனது என்பதனை முற்றுக்கிக் கூடம் முதலியவற்றோடும் கூட்டி நான்கு முடிபாக்குவாரு முளர்: இந்நகரமானது செல்வத்தானும், கல்வியானும், ஞானத்தானும் ஏனையவற்றினுஞ் சிறந்து விளங்குவதென்பது கருத்து. செல்வ முதலியவற்றுக்கு இருக்கையென்றும், அவற்றைத் தருவது என்றும் கருத்துக்கொள்ளலுமாம். ஏ: அனைத்தும் அசை; தேற்றமுமாம். (௬)

திக்கும் வானமும் புதையிரு டின்றுவெண் சோதி
கக்கு மாளிகை நிவப்புறு காட்சியந் நகருள்
மிக்க வாலிதழ்த் தாமரை வெண்மக ளிருக்கை
ஒக்கு மல்லது புகழ்மக ளிருக்கையு மொக்கும்.

(இ - ள்.) திக்கும் வானமும் - திசைகளையும் ஆகாயத்தையும், புதை - மறைத்த, இருள் தின்று - இருளை விழுங்கி, வெண்சோதி கக்கும் - வெள்ளிய ஒளியைக் காலுகின்ற, மாளிகை நிவப்புறு காட்சி - மாளிகைகள் உயர்ந்துள்ள தோற்றம், அந்நகருள் - அந்நகரின்கண், மிக்க வால்இதழ் தாமரை - மிக்க வெண்மையையுடைய இதழ்களையுடைய தாமரையாகிய, வெண்மகள் இருக்கை ஒக்கும் - கலைமகளின் இருப்பிடம்போலும், அல்லது - அன்றி, புகழ்மகள் இருக்கையும் ஒக்கும் - புகழ்மாதின் இருப்பிடமும் போலும் எ - று.

வெண்சோதி-முத்து, வயிரம், சுண்ணம் என்பவற்றாலாய வெள்ளொளி. இருளைத் தின்று சோதியைக் கக்குமென ஒரு நயம்படக் கூறினார். தாமரையாகிய இருக்கை யென்க. புகழையும் வெண்ணிறமுடையதாகக் கூறுதல் மரபாகலின் 'புகழ்மக ளிருக்கையு மொக்கும்' என்றார். (௭)

புறம்பணை

நெற்க ரும்பெனக் கரும்பெலா நெடுங்கமு கென்ன
வர்க்க வான்கமு கோலிகலித் தெங்கென வளர்ந்த
பொற்க வின்குலைத் தெங்குகார்ப் பந்தரைப் பொறுத்து
நிற்க நாட்டிய காலென நிவந்ததண் பணையே.

(இ - ள்.) தண்பணை-குளிர்ந்த மருத நிலங்களில், நெல் கரும்பு என - நெற்பயிர்கள் கரும்புகள் எனவும், கரும்பு எலாம்-கரும்புகள் அனைத்தும், நெடு கமுகு என-நீண்ட கமுக மரங்கள் எனவும்,வர்க்கம் வான் கமுகு - இனமாகிய உயர்ந்த கமுகமரங்கள், ஒலிகலித் தெங்கு என-தழைத்த செருக்கிய தென்னை மரங்கள் எனவும், வளர்ந்த - ஓங்கிய, பொன்கவின் குலைத்தெங்கு - பொன்போலும் அழகிய குலைகளையுடைய தென்னைமரங்கள், கார்ப்பந்தரை - முகிலாகிய பந்தரை, பொறுத்து நிற்க - சுமந்து நிற்பதற்கு, நாட்டிய கால் என-நாட்டப்பட்ட கால்கள் எனவும் (கருதும்படி), நிவந்த-உயர்ந்துள்ளன எ-று.

ஒலி-தழைத்தல்; இஃதிப்பொருட்டாதலை 'ஒலி நெடும்பீலி' என நெடுநல்வாடையினும், 'வணரொலியைம்பாலாய்' எனக் கார்நாற்பதினும் வருதலானறிக. கலி-செருக்குதல்; இதனை, மலைபடுகடாத்துள்,

"தீயி னன்ன வொண்செங் காந்தட்
டுவற்கலித்த புதுமுகை"

என்பத னுரையானறிக. வளர்ந்த வென்பது தெங்கிற்கு அடை. நிவந்த, அன்பெறுத பலவின்பால் முற்று. தண்பணை யென்பதில் ஏழனுருபு இறுதிக்கட் டொக்கது;

"ஐயுங் கண் ணு மல்லாப் பொருள்வயின்
மெய்யு ருபுதொகா விறுதி யான"

என்பது தொல்காப்பியம். ஏ, அசை. (சு)

சிவந்த வாய்க்கருங் கயற்கணாள் வலாரியைச் சீறிக்
கவர்ந்த வான்றருக் குலங்களே கடிமணம் வீசி
உவந்து வேறுபல் பலங்களும் வேண்டினர்க் குதவி
நிவந்த காட்சியே போன்றது நிழன்மலர்ச் சோலை.

(இ - ள்.) நிழல் மலர்ச்சோலை - குளிர்ந்த மலர்களையுடைய சோலைகளின் (தோற்றம்), சிவந்தவாய் - சிவந்தவாயினையும், கரும் கயல் கணாள்-கரிய கயல்மீன்போலும் கண்களையுமுடைய தடாதகைப் பிராட்டியார், வலாரியைச் சீறிக் கவர்ந்த - இந்திரனைக் கோபித்துக் கொணர்ந்த, வான்தருக் குலங்களே - உயர்ந்த பஞ்சதருக் கூட்டங்களே, கடிமணம் வீசி-மிக்க மணத்தினை வீசி, வேண்டினர்க்கு-குறையிரந்தார்க்கு, வேறு பல் பலங்களும் - வேறாகிய பல பயன்களையும், உவந்து உதவி - மகிழ்ந்து கொடுத்து, நிவந்த-உயர்ந்துள்ள, காட்சியே போன்றது - தோற்றத்தையே ஒத்தது எ - று.

வலாரி - வலன் என்னும் அசுரனுக்குப் பகைவன், இந்திரன். தருக்கள் : சந்தானம், அரிசந்தனம், மந்தாரம், பாரிசாதம், கற்பகம் என்பன. குலம் - கூட்டம். கடிமணம் - மிக்க மணம் : ஒருபொருளிருசொல். வேறு-வானுலகத்து வழங்கிய ஆடை அணி முதலியவற்றின் வேறாகிய ; வெவ்வேறு பல என்னலுமாம். பலம்-பழம்; பழம் என்னும் தமிழ்ச்சொல் நெடுநாளின்முன் ஆரியத்திற் பலமெனத் திரிந்தேறியது. ஏ : இரண்டும் பிரிநிலை. தடாதகைப் பிராட்டியார் இந்திரனைச் சீறித் தருக்களைக் கவர்ந்து வந்ததனை இப்புராணத்தே திருமணப்படலத்திற் காண்க. (எ)

ஒல்லொ லிக்கதிர்ச் சாலிகள் புறந்தழீ இயோங்க
மெல்லி லைப்பசுங் கோடியினால் வீக்குறு பூகம்
அல்லெ னுங்களத் தண்ணற னணிவிழாத் தருப்பைப்
புல்லொ டும்பிணிப் புண்டபொற் கொடிமரம் போலும்.

(இ - ள்.) ஒல் ஒலி - ஒல் என்ற ஒலியையுடைய, கதிர்ச்சாலிகள்-கதிர்களையுடைய நெற்பயிர்கள், புறம் தழீஇ ஓங்க - புறத்தின் கண் பொருந்தி உயர்ந்து நிற்க, மெல் இலைப் பசும் கொடியினால் - பசிய வெற்றிலைக் கொடியினால், வீக்குறு பூகம்-கட்டப்பட்ட பாக்கு மரமானது, அல் எனும் களத்து - இருள் போலுந் திருமிடற்றினை யுடைய, அண்ணல் தன் அணிவிழா-பெருமை பொருந்திய சிவபிரானுடைய திருவிழாவின் கண், தருப்பைப் புல்லொடும்-தருப்பைப்புற்களோடும், பிணிப்புண்ட - கட்டப்பெற்ற, பொன் கொடி மரம் போலும் - பொன்னாலாகிய கொடிமரத்தை ஒக்கும் எ - று.

மெல்லிலை - வெற்றிலை; இதனை யறியாத சிலர் மெல்லிய இலைகளையுடைய எனப் பொருள் கூறுவர்; அவர் பூகம் என்பதனுடன் இணைத்துக் கூறிய நயத்தினையும் நோக்கிற்றிலர்;

''மல்லலங் தெங்கிள நீர்பெய் பண்டியும்
மெல்லிலைப் பண்டியுங் கமுகின் மேதகு
பல்பழுக் காய்க்குலை பெய்த பண்டியும்
ஒல்குதீம் பண்டம்பெய் தொழுகு பண்டியும்''

என்னும் சிந்தாமணிச்செய்யுளுரையில், நச்சினார்க்கினியர், மெல்லிலைப் பண்டியும் என்பதற்கு 'வெற்றிலை பெய்த பண்டியும்' எனப் பொருள் கூறி, 'மெல்லிலை-வினைத் தொகை' எனக் குறிப்பெழுதியிருப்பதுங் காண்க. கொடிமரம் - துவசத் தம்பம். பாக்கு மரம் கொடி மரத்தையும், பாக்கு மரத்தைத் தழுவிய கதிர்ச்சாலிகள் கொடிமரத்தின் புறத்தே பொருந்திய தருப்பைப் புல்லையும், சாலியுடன் பாக்குமரத்தைச் சுற்றியுள்ள வெற்றிலைக்கொடி புல்லுடன் கொடிமரத்தைப் பிணித்துள்ள கயிற்றையும் ஒக்குமென்றவாறு. சாலியும் வெற்றிலையும் பூகமும் நெருங்கியிருக்கு மென்க. ஒல்லொலி - ஒலிக்குறிப்பு. தழீஇ: தழுவி என்பதன் விகாரம். கொடியினால், ஆல்: வினை முதற் பொருளில் வந்தது. (அ)

சீத வேரியுண் டளிமுரல் கமலமேற் செருந்தி
போத வேரியு மலர்களுஞ் சொரிவன புத்தேள்
வேத வேதியர் செங்கரம் விரித்துவாய் மனுக்கள்
ஓத வேமமும் உதகமும் உதவுவா ரனைய.

(இ -ள்.) சீதவேரி உண்டு-குளிர்ந்த தேனைப்பருகி, அளிமுரல்-வண்டுகள் ஒலிக்கப்பெற்ற, கமலம் மேல் - தாமரை மலரின்மேல், வேரியும் மலர்களும்-தேனையும் பூக்களையும், போத சொரிவன-மிகச் சொரிவனவாகிய, செருந்தி-செருந்தி மரங்கள், புத்தேள் வேத வேதியர் - தெய்வத்தன்மை பொருந்திய மறைகளை யுணர்ந்த மறையோர், செங்கரம் விரித்து - சிவந்த கைகளை விரித்து, வாய் மனுக்கள் ஓத -

வாயினால் மந்திரங்களைச் சொல்ல, ஏமமும் உதகமும் - (அவர் கையில்) பொருளையும் (தத்தஞ் செய்யும்) நீரையும், உதவுவார் அனைய-கொடுப்பாரை ஒத்தன எ - று.

போத - மிக; நிரம்பிய வழி அமைவுண்டாமாகலின், அமையும் அமையா என்னுங் கருத்தில் போதும் போதா என வழங்கும் வினை விகற்பங்களும் நோக்குக. மணிவாசகரும் 'ஒன்றும் போதா நாயேனை' என்றார். போத என்பது போர எனவும் திரிந்து வழங்கும். மனு - மந்திரம்; உதவுவாரனைய என்பதற்கேற்பச் சொரிவன வாகிய செருந்தியென்க. ஏமமும் உதகமும் என்பதற்கேற்ப மலர்களும் வேரியும் என மாற்றிக் கொள்க. வண்டினொலி, கமலம், மலர், வேரி, செருந்தி என்பவற்றுக்கு மந்திரவொலி, பார்ப்பனர்கை, பொன், நீர் உதவுவோர் என்பன முறையே உவமங்களாம். வேதமென முன்வந்தமையின் வேதியரென்பது பெயர் மாத்திரையாய் நின்றது. (கூ)

விரைசெய் பங்கயச் சேக்கைமேற் பெடையோடு மேவி*
அரச வன்னநன் மணஞ்செய வம்புயப் பொய்கை
திரைவ ளைக்கையா னுண்டுளி செறிந்தபா சடையாம்
மரக தக்கலத் தரளநீ ராசனம்† வளைப்ப.

(இ - ள்.) விரைசெய்-மணம் வீசும், பங்கயச் சேக்கைமேல் - தாமரை மலராகிய சேக்கையின்மேல், அரச அன்னம்-அரச அன்னப் பறவையானது, பெடையோடும் மேவி - பெண் அன்னத்தோடும் பொருந்தி, நன்மணம் செய - நல்ல மணத்தைச் செய்யா நிற்க, அம்புயப் பொய்கை - தாமரைத் தடாகங்களாகிய (மகளிர் கூட்டம்), திரை வளைக்கையால்-அலைகளாகிய (சங்கு) வளையுள்ள கைகளால், நுண் துளி தரளம் செறிந்த-நுண்ணிய நீர்த்துளிகளாகிய முத்துக்கள் நெருங்கிய, பாசடையாம் மரகதக்கலம் - பசிய இலையாகிய மரகதத்தட்டின்கண், நீராசனம் வளைப்ப-ஆலத்தி சுற்றா நின்றன எ - று.

சேக்கை-தங்குமிடம், படுக்கை. அரச வன்னம் - அன்னங்களிற் சிறந்தது. பங்கயம் - சேற்றிலுதிப்பது, அம்புயம் - நீரிலுதிப்பது காரண விடுகுறிப் பெயர்கள். பொய்கை என்பது மானுடராக்காத நீர் நிலை என்று கூறுவர் நச்சினார்க்கினியர்; வழக்கில் பொதுவாகத் தடாகத்தைக் குறிக்கின்றது. வளை திரைக்கும் கைக்கும் பொது. நுண்டுளியாகிய தரளம் எனக் கூட்டுக. தாமரையிலையின் நீர்த் துளி முத்துப்போலுமாகலின் 'தரளம்' என்றார். பசுமை அடை பாசடையாயிற்று. அது மரகதம் போறலின் 'மரகதக்கலம்' என்றார். செல்வப் பெருக்கினால் மரகதக் கலத்து முத்து நீராசனம் வளைப்ப என்பது தோன்றக் கூறினார். நீரினை யேற்ற பாசடை திரையால் அலைவதை ஆலத்தி சுழற்றுவதாகக் கூறினார். ஏகதேச வுருவகம். (க0)

இரும்பி னன்னதோள் வினைஞரார்த் தெறிந்துவாய் மடுக்குங்
கரும்பு தின்றிடி யேற்றொலி காட்டியின் சாறு
சுரும்பு சூழ்கிடங் தரற்றிடச் சோரிந்துவெஞ் சினத்தீ
அரும்பு கட்களி றேத்தன வாலையெந் திரங்கள்.

(பா - ம்.) * பெடையொடும் விரவி. † நீராஞ்சனம்.

(இ - ள்.) ஆலை எந்திரங்கள் - ஆலையாகிய எந்திரங்கள், இரும்பின் அன்னதோள்-இரும்பையொத்த வலியதோள்களையுடைய, வினைஞர் ஆர்த்து-மள்ளர்கள் ஆரவாரித்து, எறிந்து - தறித்து, வாய்மடுக்கும் - (தமது) வாயிற் கொடுக்கின்ற, கரும்புதின்று - கரும்புகளை நெரித்து, இடி ஏற்று ஒலிகாட்டி - இடியேற்றின் முழக்கத்தைத் தோற்றுவித்து, சுரும்பு சூழ்கிடந்து அரற்றிட-வண்டுகள் சூழ்ந்து கிடந்து ஒலிக்க, இன்சாறு சொரிந்து-இனிய சாற்றைப் பொழிந்து, வெம்சினத் தீ அரும்பு-வெவ்விய வெகுளித் தீ உண்டாகின்ற, கண் களிறு ஒத்தன-கண்களையுடைய யானைகளை ஒத்தன எ - று.

களிற்றுக்கேற்ப வினைஞரென்பதற்குப் பாகரென உரைத்துக் கொள்க. ஆலை கரும்பு தின்றலாவது கரும்பினை நெரித்தல். ஏனைய களிற்றுக்கும் ஆலைக்கும் பொது. ஆலை-கரும்பினைச் சாறு பிழியும் பொறி: ஆலையாகிய எந்திரமென இருபெயரொட்டு. இரும்பினன்ன: சாரியை நிற்க உருபு தொக்கது. (கக)

பள்ள நீர்குடைந்* தஞ்சிறைப் பாசிபோர்த் தெழுந்த
வெள்ளை யன்னத்தைக் காரன† மெனப்பெடை வீழ்ந்த
உள்ள மீட்டல மரச்சிற குதறியுள் ளன்பு
கொள்ள வாசையிற் றழீஇக்கோடு குடம்பைசென் றணையும்.

(இ - ள்.) பள்ளம் நீர்குடைந்து-ஆழமாகிய நீரில் மூழ்கி, அம் சிறை-அழகிய சிறைகள், பாசிபோர்த்து-நீர்ப்பாசியினாற் போர்க்கப் பட்டு, எழுந்த வெள்ளை அன்னத்தை - மேலெழுந்த வெள்ளிய அன்னச்சேவலை, கார் அனம் என - காகமெனக் கருதி, வீழ்ந்த உள்ளம் மீட்டு-விரும்பிய உள்ளத்தைத் திருப்பிக்கொண்டு, பெடை அலமர-அன்னப்பேடு சுழலா நிற்க, சிறகு உதறி - (அவ்வன்னச் சேவல்) சிறைகளை விதிர்த்துப் (பாசிகளை வீழ்த்தி), உள் அன்புகொள்ள - உளத்தில் அன்பு நிறைய, ஆசையின்-ஆசையால், தழீஇக்கொடு - (அவ்வன்னப் பேட்டைத்) தழுவிக் கொண்டு, குடம்பை சென்று அணையும்-கூட்டினுட் போய்ச் சேரும் எ - று.

பாசி - பசுமையுடையதெனக் காரணப் பெயர். போர்த்து - போர்க்கப்பட்டு, எருமையைக் காரான் என்பதுபோலக் காகத்தைக் காரனமென்றார். கரிய அன்ன மென்பாருமுளர். வெள்ளை கருமை என்பன முரண். எனக் கருதி மீட்டென்க. அங்குள்ள பறவைகளும் கற்பு நெறிப்பட்டன என்றார். வீழ்ந்த என்னும் பெயரெச்சம் வினை முதற் பெயர்கொண்டது. (கஉ)

இரவி யாழியோன் றுடையதே ரீர்த்தெழு மிமையாப்
புரவி நாகிமிர்த் தயில்வன போங்கர்வாய்த் தளிர்கள்
‡கரவி லார்மகத் தெழுபுகை கற்பக நாட்டிற்
பரவி வாட்டுவ பனியெனப் பங்கயப் பொய்கை.

(இ - ள்.) இரவி - சூரியனின், ஆழி ஒன்று உடைய தேர்-ஓர் உருளையையுடைய தேரை, ஈர்த்து எழும்-இழுத்துச் செல்லாநின்ற,

(பா - ம்.) * நீர்க்குடைந்து. † காரண்டம். ‡ கரவிலா.

இமையாப் புரவி-இமையாத நாட்டத்தையுடைய குதிரைகள், பொங்கர்வாய்த் தளிர்கள் - சோலைகளின் தளிர்களை, நா நிமிர்த்து அயில்வன-நாக்களை நீட்டித் தின்று நிற்பன; கரவு இலார்-வஞ்சகமில்லாத மறையோரால் (வேட்கப்படுகின்ற), மகத்து எழு புகை-வேள்வியினின்று மேலெழும் புகைகள், கற்பக நாட்டில் - கற்பகத் தருக்களையுடைய வானுலகில், பரவி-பரம்பி, பங்கயப்பொய்கை-(அங்குள்ள) தாமரைத் தடாகத்தை, பனி என வாட்டுவ-பனிபோலும் வாட்டா நிற்பன எ - று.

இமையாப்புரவி-இமையா நாட்டமுடைய புரவி; வானோர்க்குக் கண்ணிமையாவாகலின் பரிதிவானவன் புரவிக்கும் கண்ணிமையா என்றார். பொங்கர் தம்மினும் மேல் நிவந்திருத்தலின் 'நாநிமிர்த்தயில்வன' என்றார். வானுலகில் பொழுது வேற்றுமை யின்மையின் 'பனியென' என்றார். பங்கயப் பொய்கை என்றாரேனும், வாட்டுவ என்பதற் கியையப் பொய்கையிலுள்ள பங்கய மென்க. தொடர்புயர்வு நவிற்சி. (கரு)

அகழி

பிறங்கு மாலவா யகத்துளேம் பிரானரு ளால்வந்  
தறங்கோ டீர்த்தமா யெழுகட லமர்ந்தவா நோக்கிக்  
கறங்கு தெண்டிரைப் பெரும்புறக் கடலும்வந் திவ்வூர்ப்  
புறங்கி டந்ததே போன்றது புரிசைசூழ் கிடங்கு.

(இ - ள்.) புரிசை சூழ் கிடங்கு - மதிலைச் சூழ்ந்துள்ள அகழியானது, பிறங்கும் ஆலவாய் அகத்துள்-விளங்குகின்ற மதுரைப் பதியின்கண், எம்பிரான் - எம் பிரானாகிய சோமசுந்தரக் கடவுளின், அருளால்-திருவருளால், எழுகடல் - ஏழு கடல்களும், வந்து அறம்கொள் தீர்த்தமாய் - வந்து அறவடிவாகிய தீர்த்தமாகி, அமர்ந்தவா நோக்கி - அமர்ந்த தன்மையை நோக்கி, கறங்கு தெண் திரை - ஒலிக்கின்ற தெளிந்த அலைகளையுடைய, பெரும்புறக் கடலும் வந்து - பெரும்புறக் கடலும் இங்குப் போந்து, இவ்வூர்ப்புறம் கிடந்தது போன்றது - இந்நகரின் புறத்திலமர்ந்ததை ஒத்தது எ - று.

தீர்த்தம் - வினைமாசு கழுவுந் தூயநீர். எழுகடலாவன,—உவர்நீர்க்கடல், பாற்கடல், தயிர்க்கடல், நெய்க்கடல், கருப்பஞ் சாற்றுக்கடல், மதுக்கடல், நன்னீர்க்கடல் என்பன. ஏழுதீவுகளில் ஒவ்வொன்றின் புறஞ்சூழ்ந்து கிடக்கும். இவற்றின் புறத்தே சக்கரவாளகிரியும், அதன் புறத்தே பெரும்புறக்கடலும் சூழ்ந்துகிடக்கும். இவற்றைக் கந்தபுராணத்து அண்டகோசப் படலத்தில்,

"பரவுமிவ் வுலகிலுப்புப் பால்தயிர் நெய்யே கன்னல்  
இரதமா மதுநீராகு மெழுகட லேழுதீவும்  
வரன்முறை விரவிச்சூழு மற்றதற் கப்பாற் சொன்னத்  
தரையது சூழ்ந்துநிற்குஞ் சக்கர வாளச் சையம்"

"அன்னதற் கப்பால்வேலைக் கரசனும் புறத்திலாழி  
பின்னது தனக்குமப்பாற் பேரிருள் சேர்ந்தஞாலம்"

என வருதலானறிக. எழுகடலும் வந்து அமர்ந்தமையை இப்புராணத்து எழுகடலழைத்த படலத்தானறிக. தாலும் தீர்த்தமா

வான் வந்துகிடந்ததே போன்றதென்க. எழுகடலும்: என்னுமும்மை தொக்கது. அமர்ந்தவா: ஈறு கெட்டது. (கச)

எறியும் வாளையு மடிக்கடி யெழுந்துடல் பரப்பிப்
பறியு மாமையும் வாளோடு கேடகம் பற்றிச்
செறியு நாண்மல ரகழியுஞ் சேண்டோடு புரிசைப்
பொறியு மேயன்றி *யுடன்றுபோர் புரிவது† போலும்.

(இ - ள்.) அடிக்கடி எழுந்து-அடிக்கடி மேலெழுந்து, எறியும் வாளையும்-(நீரை) வெட்டுகின்ற வாளைகளும், உடல்பரப்பிப்பறியும் ஆமையும்-(அங்ஙனமே மேலெழுந்து) உறுப்புக்களை விரித்துத்தவழு கின்ற ஆமைகளும் (அகழியிலே திரிதல்), சேண்தொடு-ஆகாயத்தை யளாவிய, புரிசைப் பொறியும் அன்றி - மதிலின்கண் உள்ள பொறி களே யன்றி, நாள் மலர் செறியும் - அன்றலர்ந்த மலர்கள் நிறைந்த, அகழியும்-அகழிதானும், வாள் ஒடு கேடகம் பற்றி-வாளோடு கேட கத்தையும் பற்றிக்கொண்டு, உடன்று போர் புரிவது போலும் - கோபித்துப் (பகைவரோடு) போர் புரிதலை ஒக்கும் எ - று.

வாளை வாளினையும், ஆமை கேடகத்தையும் போலுமென்க. கேடகம் - பரிசை. அகழியும் புரிசைப்பொறியும் போர்புரிவது போலும் எனினும் ஆம். இதற்கு அன்றி என்பது மாறுபட்டு என் னும் பொருளதாகும். அகழியும் பொறியும் எனினும், அகழி பொறி யுடன் மாறுபட்டு என்று கருத்துக் கொள்ளவேண்டும். ஒன்றியென் பது பாடமாயின் எதிரெதிர் பொருந்தி யென்க. ஏ : அசை. புரிவது தொழிற்பெயர். (கரு)

கண்ணி லாதவெங் கூற்றெனக் கராங்கிடந் தலைப்ப
மண்ணி னுரேவ ரேனுமிம் மடுவிடை வீழ்ந்தோர்
தெண்ணி லாமதி மிலைந்தவர்க் கொப்பெனச் சிலரை
எண்ணி னுரிரு ணரகநீத் தேறினு மேறூர்.

(இ - ள்.) கண் இலாத - கண்ணோட்டமில்லாத, வெம்கூற்று என-வெவ்விய கூற்றுவனைப்போல, கராம் கிடந்து அலைப்ப - முதலை இருந்து வருத்துதலைச் செய்ய, மண்ணினுர் எவரேனும் - நிலவுலகி லுள்ளார் யாவரேனும், இம்மடுவிடை வீழ்ந்தோர் - இவ்வகழியின் கண் வீழ்ந்தவர்கள், தெள்நிலா மதிமிலைந்தவர்க்கு - தெள்ளிய நில வினையுடைய சந்திரனைச் சடையிலணிந்த இறைவனுக்கு, ஒப்பு என - சமம் என்று, சிலரை எண்ணினுர் - சில தேவரைக் கருதினவர்கள், இருள் நரகம் நீத்து ஏறினும் - இருளாகிய நரகத்தைக் கடந்தேறி னும், ஏறூர் - ஏறமாட்டார்கள் எ - று.

கண் - கண்ணோட்டம். கூற்றுவனுக்குக் கண்ணோட்டமின்மையை,

"தவத்துறை மாக்கள் மிகப்பெருஞ் செல்வர்
ஈற்றிளம் பெண்டி ராற்றுப் பாலகர்
முதியோ ரென்னு திளையோ ரென்னுன்
கொடுந்தொழி லாளன் கொன்றனன் குவிப்ப"

(பா - ம்.) * பொறியுமே யொன்றி. † புரிவன.

என மணிமேகலை கூறுவதானு மறிக. கராம்-முதலையின் சாதிபேதம். "கொடுந்தாண் முதலையும் இடங்கருங் கராமும்" எனக் குறிஞ்சிப் பாட்டில் வருதல் காண்க. முழுமுதற் பொருளாகிய சிவபெருமானு டன் ஏனைத் தேவரைச் சேர்த்தெண்ணுதல் பொருந்தாதென்பதனை,

"சாவமுன் னுட்டக்கன் வேள்வித் தகர்தின்று நஞ்சமஞ்சி
ஆவவெந் தாயென் றவிதா விடுநம் மவரவரே
மூவரென் றேயெம் பிரானொடு மெண்ணிவிண் ணுண்டுமண்மேல்
தேவரென் றேயிறு மாந்தென்ன பாவந் திரிதவரே"

என வாதவூரடிகள் இரங்கிக் கூறுவதாலறிக. இருளாகிய நரகமென்க. இருள்-நரக வகையுளொன்று; "அடங்காமை ஆரிருளுய்த்துவிடும்" என்பதற்கு பரிமேலழகரெழுதிய உரையுங்காண்க. ஏறினும் என்பது ஏறுரென்பதுபட நின்றமையின் எதிர்மறை யும்மை. (கசு)

குமிழ லர்ந்தசெந் தாமரைக் கோடிமுகிழ் கோங்கின்
உமிழ்த ரும்பர ஞானமுண் டுமிழ்ந்தவாய் வேதத்
தமிழ றிந்துவை திகமுடன் சைவமு நிறுத்தும்
அமிழ்த வெண்டிரை வையையு மொருபுறத் தகழாம்.

(இ - ள்.) குமிழ் அலர்ந்த - குமிழம்பூ மலர்ந்த, செந்தாமரை - செந்தாமரை மலரையுடைய, கொடி-கொடியின்கண், முகிழ் கோங்கின் - முகிழ்த்த கோங்கரும்பினின்றும், உமிழ்தரும்-பொழிந்த, பர ஞானம் உண்டு-சிவஞானத்தைப் பருகி, வாய் உமிழ்ந்த-(திருஞான சம்பந்தப் பெருமானர்) திருவாயால் வெளியிட்டருளிய, வேதத்தமிழ் அறிந்து-வேதமாகிய தமிழின் பெருமையையறிந்து, வைதிகமுடன் - வேதநெறியோடு, சைவமும் நிறுத்தும் - சைவநெறியையும் நிலை பெறச்செய்த, அமிழ்த வெண்திரை - அமிர்தம்போலும் வெள்ளிய அலைகளையுடைய, வையையும்-வையையாறும், ஒருபுறத்து அகழாம்- (மதிலின்) ஓர் பக்கத்துள்ள அகழியாம் எ - று.

குமிழ், தாமரை யென்பன அவற்றின் மலருக்கும், கோங்கு என் பது அதன் அரும்புக்கும் ஆகு பெயர். குமிழ் மூக்கிற்கும், செந் தாமரை முகத்திற்கும், கொடி திருமேனிக்கும், கோங்கு தனத்திற்கும் உவமமாவன; அவற்றையே மூக்கு முதலியவாகக் கூறினர்; கேட் டோர்க்கு மகிழ்ச்சி யுண்டாமாகலின். குமிழாகிய கோட்டுப்பூ நீர்ப் பூவாகிய தாமரையுள் அலர்தலும், அதனைக் கொடி உடைத்தாதலும், அதன்கண் கோங்கமரத்தின் அரும்பு இருத்தலும் என்னுமிவையும் அபூதமாய் இன்பம் பயத்தல் காண்க. கோங்கின் உமிழ்தரும் பரஞா னம் என்றது உமையம்மையார் தமது திருத்தனத்தினின்றும் கறந் தருளிய பாலுடன் கலந்த சிவஞானம் என்க. இதனை,

"வாரிணங்கு திருமுலைப்பால் வள்ளத்துக் கறந்தருளி"

எனவும்,

"எண்ணரிய சிவஞானத் தின்னமுதங் குழைத்தருளி"

எனவும் திருத்தொண்டர் புராணங் கூறுதலானறிக. உண்டருளிய பர ஞானமே தமிழ் வேதமாக வெளிப்போந்ததென்பார் 'உண்டுமிழ்ந்த

வாய்வேதத் தமிழ்' என்ருர்; இதனுனே அபரஞான மெனப்படும் மற்றைக் கலைகளினும் தமிழ்வேதம் சிறந்ததாதலும் பெறப்படும். வாய் என்பதனை முன்னே கூட்டுக; வாய்வேதம் - உண்மைவேதம் என்னலுமாம். திருஞானசம்பந்தப் பெருமான் சமணர்களோடு வாது நிகழ்த்துங் காலையில் பாசுரம் எழுதியிட்ட திருவேடானது வையையில் எதிரேறிச் சென்றதாகலின், அதன் பெருமையை வையை அறிந்ததெனக் கொண்டு 'தமிழறிந்து' என்றும், அதனல் பிள்ளையார் திருவவதாரத்தின் நோக்கமாகிய வேதநெறி தழைத்தோங்கலும், மிகு சைவத் துறை விளங்கலும் நிறைவேறினமையின், அதனை அதன்மே விட்டு 'வைதிகமுடன் சைவமு நிறுத்தும்' என்றுங் கூறினர். பாசுர மாவது;

"வாழ்க வந்தணர் வானவ ரானினம்
வீழ்க தண்புனல் வேந்தனு மோங்குக
ஆழ்க தீயதெல் லாமர னுமமே
சூழ்க வையக முந்துயர் தீர்கவே" என்பது. (கஎ)

பிள்ளை யும்பெடை யன்னமுஞ் சேவலும் பிரியாக்
கள்ள முண்டகச் செவ்வியாற் கண்டவர் கண்ணும்
உள்ள முந்திரும் பாவகை சிறைப்படுத் தோங்கும்
புள்ள லம்புதண் கிடங்கிது புரிசையைப் புகல்வாம்.

(இ - ள்.) பிள்ளையும் பெடை அன்னமும் சேவலும்-பார்ப்பும் அன்னப்பேடும் சேவலும், பிரியா - நீங்காத, கள்ள - தேனையுடைய, முண்டகம்-தாமரை மலர்களின், செவ்வியால்-அழகினுல், கண்டவர்-பார்த்தவர்களின், கண்ணும் உள்ளமும்-கண்களும் மனமும், திரும்பாவகை-மீளாவண்ணம், சிறைப்படுத்து - அகப்படுத்தி, ஓங்கும் - மேன்மையுற்ற, புள் அலம்பு-பறவைகள் ஒலிக்கப்பெறுகின்ற, தண் கிடங்கு இது - குளிர்ந்த அகழி இத்தன்மையது; புரிசையைப் பகர்வாம் - (இனி) மதிலின் பெருமையைக் கூறுவாம் எ - று.

பிள்ளை - பறவையின் இளமைப்பெயர்; 'பார்ப்பும் பிள்ளையும் பறப்பவற்றிளமை' என்பது மரபியல். பெடையன்னமென இடை நிற்றலின் அன்னப்பார்ப்பும் அன்னச் சேவலுமெனக. புள் - வண்டுமாம். கள்ள - குறிப்பு வினைப்பெயரெச்சம். (கஅ)

மதில்

மாக முந்திய கடிமதின் மதுரைநா யகர்கைந்
நாக மேன்பதே தேற்றமந் நகர்மதில் விழுங்கி
மேக நின்றசை கின்றதவ் வேஞ்சினப் பணிதன்
ஆக மோன்றுதோ லுரிபட நேளிவதே யாகும்.

(இ - ள்.) நாகம் உந்திய - வானுலகை ஊடறுத்துச் சென்ற, கடிமதில்-காவலாயுள்ள மதிலானது, மதுரை நாயகர்-மதுரேசராகிய சோமசுந்தரக்கடவுளின், கைந்நாகம்என்பதே தேற்றம்-கையிலணிந்த

பாம்பென்பதே துணிபு; அந்நகர் மதில் விழுங்கி - அந்நகரின் மதிலை மறைத்து, மேகம் நின்று அசைகின்றது - முகிலானது தங்கி அசைகின்றது, அவ்வெம் சினப்பணி - அந்த வெவ்விய சினத்தினையுடைய பாம்பானது, தன் ஆகம் ஒன்று தோல் - தனது உடலோடு பொருந்திய தோல், உரிபட நெளிவது ஆகும் - உரிபடும் பொருட்டு நெளிகின்றதை ஒக்கும் எ - று.

முந்திய எனப்பிரித்து முந்துற்றுச் சென்ற என்னலுமாம். சிவபெருமான் கையிலணிந்திருந்த கங்கணமாகிய பாம்பினால் நகரின் எல்லை காட்டப்பெற்றமையின் மதிலை நாகமென்றார். பாம்பு எல்லை காட்டியதனை இப்புராணத்தே திருவாலவாயான படலத்திற் காண்க. என வென ஒரு சொல் வருவித்து, மேகமென நின்றசைகின்றது நெளிவதேயாகும் ஆகலின் நாகமென்பதே தேற்றம் என முடித்தலுமாம். (கக)

புரங்க டந்தபோற் குன்றுகோ புரமெனச் சுருதிச்
சிரங்க டந்தவர் தென்னரா யிருந்தனர் திருந்தார்
உரங்க டந்திட வேண்டினு முதவிசெய் தவரால்
வரங்க டந்திடப் பெறவெதிர் நிற்பது மானும்.

(இ - ள்.) புரம்கடந்த பொன் குன்று - திரிபுரத்தை வெல்லுதற்கு வில்லாயிருந்த மேருமலையானது, சுருதிச் சிரம் கடந்தவர் - மறைமுடியைக் கடந்தவராகிய இறைவர், தென்னராய் இருந்தனர் - பாண்டி மன்னராய் இருந்தனர் (ஆதலின்), திருந்தார் உரம் கடந்திட வேண்டினும் - வலிய பகைவர்களை வெல்லுதற்கு (இன்னும்) வேண்டியிருந்தாலும், உதவி செய்து - உபகரித்து, அவரால் - அவ்விறைவரால், வரங்கள் தந்திடப்பெற - வரங்கள் அருளப்பெற, கோபுரம் என - கோபுரம் என்று சொல்ல, எதிர் நிற்பது மானும் - எதிர் நிற்றலை ஒக்கும் எ - று.

பகைவரின் வலியை அடக்க என்னலுமாம். வேண்டினும் என்னும் உம்மை முன் வேண்டியிருந்ததென்பதுபட நின்றமையின் எச்சவும்மை. மேருவே கோபுரமென நிற்பதென்று கோபுரத்தின் பெருமை கூறினார். கடந்த என்னும் பெயரெச்சம் கருவிப் பெயர்கொண்டது. மானும் என்பதற்குக் கோபுரம் என்னும் எழுவாய் வருவித்துக் கொள்க.

திரிபுர மெரித்த வரலாறுவது:—தாருகாக்கன், கமலாக்கன், வித்துன்மாலி என்னும் அரக்கர் மூவர் சிவபெருமானைக் குறித்துத் தவங்கிடந்து இரும்பு வெள்ளி பொன் என்பவற்றா லாகியனவும், திரியுமியல்பினவுமாகிய மூன்று அரண்களைப் பெற்று அவற்றுடன் சென்று பல இடங்களையும் அழித்துத் தேவர் முதலாயினார்க்குந் துன்பம் விளைவித்து வந்தனர். அப்பொழுது திருமால் முதலிய தேவர்கள் வேண்டிக் கொண்டதற்கிரங்கிச் சிவபெருமான் புவித்தேரூர்ந்து மேருவை வில்லாகவும் வாசுகியை நாணாகவும் திருமாலைக் கணையாகவும் தீக்கடவுளை அம்பின் முனையாகவும் கொண்டு சென்று திரிபுரத்தை நோக்கி நகைபுரிய அவை எரிந்து பட்டன என்பது. திரிபுரத்தின்மீது அம்பெய்து, அழித்ததாகவும் இருமுறைகளிற் பலவிடத்துக் கூறப் பெற்றுள்ளது. சிவபத்தி மிக்காராகிய அவர்களை அழித்தற்கு உபாயமாகத் திருமாலானவர் நாரதர் முதலானோரைக் கொண்டு

அவர்கட்குப் புத்தமதத்தைப் போதிப்பித்துச் சிவபத்தி குன்றுமாறு செய்வித்தனரென்றும் கூறப்படுகின்றது. திரிபுரம் எரியுண்டகாலையில் மூவர் உய்ந்தனரென்றும், அவருள் இருவரை வாயில் காவலாளராகவும் ஒருவனை முழவம் வாசிப்போனாகவும் சிவபெருமான் அமைத்துக் கொண்டனரென்றும் மூவரையும் காவலாளராகக் கொண்டனரென்றும் தமிழ்மறைகள் கூறுகின்றன.

"மூவெயில்செற்றஞான் றுய்ந்தமூவரி
விருவர்நின்றிருக் கோயிலின்வாய்தல்
காவலாளரென் றேவியபின்னை
யொருவனீகரி காடரங்காக
மானைநோக்கியோர் மாநடமகிழ
மணிமுழா முழக்க வருள்செய்த
தேவதேவநின் திருவடியடைந்தேன்
செழும்பொழிற்றிருப் புன்கூருளானே"

எனத் தேவாரமும்,

"உய்யவல் லாரொரு மூவரைக் காவல்கொண்
டெய்யவல் லானுக்கே யுந்தீபற"

எனவும்,

"என் னுடை மூவ ரிராக்கதர்க ளெரிபிழைத்துக்
கண் ணுத லெந்தை கடைத்தலைமு னின்றதற்பின்"

எனவும், திருவாசகமும் கூறுதல் காண்க. (உ0)

சண்ட பானுவுந் திங்களுந் தடைபடத் திசையும்
அண்ட கோளமும் பரந்துநீண் டகன்றகோ புரங்கள்
விண்ட வாயிலால் வழங்குவ விடவரா வங்காந்
துண்ட போல்பவு முமிழ்வன போல்பவு முழலா.

(இ - ள்.) சண்ட பானுவும் - வெம்மை மிக்க சூரியனும், திங்களும் - சந்திரனும், தடைபட - தாம் போக்கொழியும் வகை, திசையும் அண்டகோளமும் - எட்டுத் திக்குகளிலும் அண்ட முகட்டிலும், பரந்து நீண்டு அகன்ற - அகன்று உயர்ந்து சென்ற, கோபுரங்கள் - கோபுரங்களின், விண்ட வாயிலால் - திறந்த வாயில் வழியால், உழலா வழங்குவ - உழன்று சஞ்சரிப்பன, விட அரா - நஞ்சினையுடைய இராகு கேது என்னும் பாம்புகளால், உண்ட போல்பவும் உமிழ்வன போல்பவும் - உண்ணப்பட்டன போல்வனவும் உமிழப்படுவன போல்வனவும் (ஆம்.) எ - று.

சண்டபானு - விரைந்த செலவினையுடைய சூரியன் என்றுமாம். அகன்ற - சென்ற. பானுவுந் திங்களுமென இரண்டாதலின் பன்மைவினை கொடுத்தார். வழங்குதலும், உண்டுமிழ்தலும் பல்கால் நிகழ்தல் பற்றியுமாம். வழங்குவ, போல்ப என்பன தொழிற்பெயருமாம். உண்ட: அன்சாரியை யின்றி நின்றது. உண்டற்குப் பின் நிகழ்வது பற்றி 'உமிழ்வன' என எதிர்காலத்தாற் கூறினார். ஆம் என்பது வருவிக்கப்பட்டது. (உக)

மகர வேலையென் றியானைபோன் மழையருந் தகழிச்
சிகர மாலை* சூ ழம்மதி றிரைக்கரந் துழாவி
அகழ வோங்குநீர் வையையா லல்லது வேற்றுப்
பகைவர் சேனையாற் போரப்படும் பாலதோ வன்றே.

(இ - ள்.) மகரம் வேலை என்று - சுறுமீன்களையுடைய கடல் என்று கருதி, யானைபோல் - யானைகளைப்போல, மழை - முகிற் கூட்டங்கள், அருந்து - நீருண்ணப் பெறுகின்ற, அகழிச் சிகரமாலை சூழ் - அகழியின் அலை வரிசையாற் சூழப்பட்ட, அம்மதில் - அந்த மதிலானது, திரைக்கரம் - அலையாகிய கைகளால், துழாவி அகழ - துழாவிக் கல்லும்படி, ஓங்குநீர் - பெருகிய நீரினையுடைய, வையையால் அல்லது - வையை நதியாலன்றி, வேற்றுப் பகைவர் சேனையால் - வேற்று நாட்டுப் பகைமன்னரின் படையால், போரப்படும் பாலதோ அன்று - தாக்கப்படுந் தன்மையதோ அன்று எ - று.

மகரம் - சுறு; அதனை யுடைமையால் கடல் மகராலயம் எனவும் படும். சிகரம் - அலை. சிகரம் என்பதனைச் சீகரம் என்பதன் குறுக்கமாகக் கொண்டு நீர்த்திவலை என்னலுமாம். மாலை - வரிசை. 'அகழி சிகரமாலை' எனப் பாடங் கொண்டு, அகழியும் சிகரவரிசையும் என்று உரைப்பாருமுளர். வையையாற் போரப்படுவதல்லது என உரைக்க. மதுரையின் மதில் வையையாலன்றிப் பகைவராற் பொரப்படுவதன் றென்னுமிக்கருத்து,

"கார்முற்றி யிணரூழ்த்த கமழ்தோட்ட மலர்வேய்ந்து
சீர்முற்றிப் புலவர்வாய்ச் சிறப்பெய்தி யிருநிலம்
தார்முற்றி யதுபோலத் தகைபூத்த வையைதன்
நீர்முற்றி மதில்பொரூஉம் பகையல்லா னேராதார்
போர்முற்றொன் றறியாத புரிசைசூழ் புனலூரன்"

என்னும் மருதக்கலியினின்றுந் தோன்றியதாகும். (௨௨)

எல்லை தேர்வழித் தடைசெயு மிம்மதிற் புறஞ்சூழ்ந்
தொல்லை மேவலர் வளைந்துழி யுடன்றுபோ ராற்றி
வெல்ல மள்ளரும் வேண்டுமோ பொறிகளே வெல்ல
வல்ல வம்மதிற் பொறிசெயு மறஞ்சிறி துரைப்பாம்.

(இ - ள்.) எல்லை - சூரியனின், தேர்வழி - தேர் செல்லும் வழியாகிய வானை; தடை செயும் - தடைப்படுத்தும், இம்மதில் புறம் - இம்மதிலின் புறத்தே, மேவலர் - பகைவர், ஒல்லை சூழ்ந்து வளைந்துழி - விரைவாக முற்றிவளைத்த காலத்து, உடன்று - சினந்து, போர் ஆற்றி - போர் செய்து, வெல்ல - (அவர்களை) வெல்லுதற்கு, மள்ளரும் வேண்டுமோ - வீரரும் வேண்டுமோ (வேண்டா), பொறிகளே வெல்ல வல்ல - (அம்மதிற்) பொறிகளே வெல்ல வல்லன; அம்மதிற் பொறி செயும் - அவை செய்கின்ற, மறம் சிறிது உரைப்பாம் - வீரச் செய்கைகளில் சிலவற்றைக் கூறுவாம் எ - று.

---

(பா - ம்.) * அகழிசிகரமாலை.

எல்லை - சூரியன்; எல்: பகுதி, 'எல்லை தேர்வழித் தடைசெயும்' என்பதற்கு, உயர்வகலமாகிய எல்லையை ஆராயும் வழி அறிவைத் தடைசெயும் என்று பொருளுரைப்பாருமுளர். மள்ளர் - வீரர்; வலியுறுத்தற்கு வேண்டுமோ எனவும், வல்ல எனவுங் கூறினர். வல்ல: குறிப்பு வினைமுற்று அன்சாரியையின்றி நின்றது. வளைந்துழி: வினையெச்சம். மதில் வளைத்தல் உழிஞை யெனப்படும். (உ௩)

மதிற் பொறிகள்

[எழுசீரடியாசிரியவிருத்தம்]

மழுக்கள் வீசுவன நஞ்சு பூசுமுனை
வாள்கள் வீசுவன முத்தலைக்
கழுக்கள் வீசுவன குந்த நேமியெரி
கால வீசுவன காலனேர்
எழுக்கள் வீசுவன கப்ப ணங்கள்விட
மென்ன வீசுவன வன்னெடுங்
கொழுக்கள் வீசுவன கற்க வண்கயிறு
கோத்து வீசுவன வார்த்தரோ.

(இ - ள்.) (பொறிகளிற் சில) மழுக்கள் வீசுவன-மழுப்படைகளை எறிவன; நஞ்சு பூசுமுனை - நஞ்சு பூசிய முனையையுடைய, வாள்கள்-வாட்படைகளை, வீசுவன - எறிவன; முத்தலைக் கழுக்கள்- மூன்று முடியையுடைய சூலப்படைகளை, வீசுவன - எறிவன; குந்தம் நேமி - கைவேல் திகிரி என்னும் படைகளை, எரிகால வீசுவன - அனலுமிழ எறிவன; காலன் நேர் எழுக்கள் - கூற்றுவனை ஒத்த வளைதடிகளை, வீசுவன - எறிவன; கப்பணங்கள் - இரும்பாலாகிய நெருஞ்சின் முள் வடிவப் படைகளை, விடம் என்ன - நஞ்சு என்று சொல்லும்படி, வீசுவன - எறிவன; வல்நெடும் கொழுக்கள்- வலிய நெடிய கொழுப்படைகளை, வீசுவன-எறிவன; கவண் கயிறு- கவண் கயிற்றில், கல் கோத்து - கல்லைக் கோத்து, ஆர்த்து - ஆரவாரித்து, வீசுவன - எறிவன எ - று.

குந்தம் - விட்டேறு என்பர் நச்சினார்க்கினியர்; சிறுசவளம் என்பர் சிலப்பதிகார உரையாளர்கள். கப்பணம்-இரும்பினாலே யானை நெருஞ்சின்முள் வடிவாகச் செய்யப்பட்டது. கல்வீசுவன இடங்கணிப் பொறி முதலியன என்பர். சில என்னும் எழுவாயை ஒவ்வொன்றுக்கும் கூட்டிக்கொள்க. அரோ: அசை. (உ௪)

நஞ்சு பில்குதுளை வாளெ யிற்றரவு
நாநிமிர்த் தெறியு மலையரா
வெஞ்சி னங்கொண்முழை வாய்தி றந்துபொரு
வாரை விக்கிட விழுங்குமால்

குஞ்ச ரங்கொடிய முசலம் வீசியெதிர்
குறுகு வார்தலைகள் சிதறுமால்
அஞ்சு வெம்பொறி விசைப்பி னுங்கடுகி
யடுபு லிப்பொறி யமுக்குமால்.

(இ - ள்.) நஞ்சு பில்கு துளை - நஞ்சினைச் சிந்துகின்ற துளையினை யுடைய, வாள் எயிற்று அரவு - கூரிய பற்களையுடைய பாம்புப் பொறிகள், நாநிமிர்த்து எறியும் - நாவை நீட்டி (ப் பகைவரைக்) கொல்லும்; வெம் சினம்கொள் - கொடிய சினங்கொண்ட, மலை அரா - மலைப் பாம்புப் பொறிகள், முழைவாய் திறந்து - குகைபோலும் வாயைத்திறந்து, பொருவாரை விக்கிட விழுங்கும்-போர் செய்வாரை விக்கும்படி விழுங்கும்; குஞ்சரம்-யானைப்பொறிகள், கொடிய முசலம் வீசி - கொடிய உலக்கைப்படையை வீசி, எதிர் குறுகுவார்கள்-எதிரே நெருங்குவார்களின், தலைகள் சிதறும்-தலைகளைச் சிந்தும்; அடுபுலிப்பொறி - கொல்லும் புலிப்பொறிகள், அஞ்சு வெம்பொறி- கொடிய ஐந்து பொறிகளின், விசைப்பினும் - வேகத்தினும், கடுகி அமுக்கும் - விரைந்து (பகைவரை) அமுக்கும் எ - று.

ஐம்பொறி யுவமையை 'நன்னெறி விலக்கும் பொறியென வெறியுங் கராத்தது' என அகழிச் சிறப்பில் வைத்துள்ளார் கம்பநாடர். ஆல் எல்லாம் அசை. (உ௫)

எள்ளி யேறுநரை யிவுளி மார்பிற
வெறிந்து குண்டகழி யிடைவிழத்
தள்ளி மீளுமுருள் கல்லி ருப்புமுளை
தந்து வீசியுடல் சிந்துமாற்
கொள்ளி வாயலகை வாய்தி றந்துகனல்
கோப்பு ளிப்பவுடல் குப்புறத்
துள்ளி யாடுவன கைகள் கொட்டுவன
தோள்பு டைப்பசில கூளியே.

(இ - ள்.) இவுளி - குதிரைப் பொறிகள், எள்ளி ஏறுநரை - இகழ்ந்து ஏறியவர்களை, மார்பு இற எறிந்து-(அவர்கள்) மார்பு ஒடியும்படி உதைத்து, குண்டு அகழி இடை-ஆழமாகிய அகழியின் கண், விழத்தள்ளி மீளும் - விழும்படி வீழ்த்தித் திரும்பும்: உருள் கல் இருப்புமுளை தந்து-உருட்சியாகிய கல் இருப்புமுளை அரிகயிறு என்னும் படைகளை, வீசி உடல் சிந்தும்-எறிந்து (பகைவர்) உடலை அழிக்கும் (சில பொறிகள்); கொள்ளிவாய் அலகை - கொள்ளிவாய்ப் பைசாசப் பொறிகள், வாய்திறந்து - தம் வாய்களைத் திறந்து, கனல் கொப்புளிப்ப - தீயை உமிழ்வன; சில கூளி - சில பேய்ப் பொறிகள், உடல் குப்புறத்துள்ளி ஆடுவன - உடல் குப்புறும்படி குதித்து விளையாடுவன, கைகள் கொட்டுவன - கைகளைக் கொட்டுவன, தோள்புடைப்ப - தோள்களைத் தட்டுவன எ - று.

தந்து - நூல். நூல் - அரிகயிறு என்பர் நச்சினார்க்கினியர். தந்து என்பதற்கே கொணர்ந்து எனலும், ஆம். கொப்புளிப்ப, புடைப்ப : அன்பெறாத பலவின்பால் முற்றுக்கள். (உ௬)

துவக்கு சங்கிலி யெறிந்தி ழூக்குமரி
தொடர்பி டித்தகை யறுக்கவிட்
டுவக்கு மொன்னலர்க டலைக ளைத்திருகி
யுடனெ ருக்குமர நிலைகளாற்
கவைக்கொ ழுந்தழல் கொளுத்தி வீசுமெதிர்
கல்லு ருட்டியடு மொல்லெனக்
குவைக்க டுங்கன்மழை பெய்யு மட்டமணல்
கொட்டு மேவலர்கள் கிட்டவே.

(இ - ள்.) (சில பொறிகள்) மேவலர்கள் கிட்ட - பகைவர்கள் அணுகுங்கால், துவக்கு சங்கிலி - கட்டுகின்ற சங்கிலியை, எறிந்து இழுக்கும் - வீசி இழுக்கும்; பிடித்தகை அறுக்க - பற்றிய கையைத் தறித்தற் பொருட்டு, அரிதொடர்விட்டு உவக்கும் - அரிசங்கிலியை விட்டு மகிழும்; மரம் நிலைகளால் - மரநிலைகளினால், ஒன்னலர்கள் - பகைவர்களின், தலைகளைத் திருகி உடல் நெருக்கும் - தலைகளைப் பறித்து உடல்களை நெறிக்கும்; கவைக்கொழுந்து - பிளவாகிய சிகையையுடைய, அழல்கொளுத்தி வீசும் - தீயைக் கொளுத்தி எறியும்; கல் எதிர் உருட்டி அடும் - கல்லை எதிரே உருட்டிக் கொல்லும்; ஒல்லென - ஒல் என்னும் ஒலியோடு, குவை - கூட்டமாக, கடும் கல்மழை பெய்யும் - கடிய கல்மழையைப் பொழியும்; அட்ட மணல் கொட்டும் - வறுத்த மணலைக் கொட்டும் எ - று.

மரநிலை - ஐயவித்துலாம் என்பர் நச்சினார்க்கினியர். ஒல்லென - விரைய எனலுமாம். (உஎ)

உருக்கி யீயமழை பெய்யு மாலய
வுருக்கு வட்டுருகு செம்பினீர்
பெருக்கி வீசும்விடு படையெ லாமெதிர்
பிடித்து விட்டவர் தமைத்தெறச்
செருக்கி வீசுநடை கற்ற மாடமொடு
சென்று சென்றுதுடி முரசொடும்
பெருக்கி மீளுநடை வைய மேனடவி
யெய்யும் வாளிமழை பெய்யுமால்.

(இ - ள்.) (சில பொறிகள்) ஈயம் உருக்கி - ஈயத்தையுருக்கி, மழைபெய்யும்-மழைபோல(ப்பகைவர்மீது) பொழியும்; உருளும் அய உருக்குவட்டு செம்பின் நீர்-உருகிய இரும்பாலாகிய உருக்குவட்டுக் களோடு செம்பின் நீரையும், பெருக்கி வீசும் - மிகுத்து வீசும்; விடு படை எலாம்-(பகைவர்) விடுகின்ற படைகள் அனைத்தையும், எதிர் பிடித்து-எதிர்நின்று பிடித்து, விட்டவர்தமை-அப்பகைவரை, தெறச் செருக்கி வீசும்-கொல்லும்படி செருக்குடன் வீசும்; நடைகற்ற மாடமொடு-சஞ்சரிக்கின்ற மாடங்களோடு, சென்று சென்று - பல இடங்களிலும் போய், துடி முரசொடும் - உடுக்கை யொலியைப் பேரிகை-

யொலியோடும், பெருக்கிமீளும்-மிகச் செய்து திரும்பும்; நடைவையம் - நடைத் தேரை, மேல் நடவி-மேலே செலுத்தி, எய்யும் வாளி மழைபெய்யும் - எய்கின்ற அம்பு மழையைப் பொழியும் எ - று.

வையம் - தேர். நடை வையமென்றது புரவி முதலியனவின்றிச் செலுத்துந் தேரை. நடவி - நடத்தி, நடவு : பகுதி, இ : வினையெச்ச விகுதி. ஆல் : அசை. (உஅ)

வெறிகோ ளைம்பொறியை வெல்லினும் பொருது
வெல்லு தற்கரிய காலனை
முறிய வெல்லினும் வெலற்கருங் கொடிய
முரணவா யமர ரரணெலாம்
அறிவி னானிறுவு கம்மி யன்செயவு
மரியவா யவனர் புரியுமிப்
பொறிகள் செய்யும்வினை யின்ன பொன்னணி
புரத்து வீதிக ளுரைத்துமால்.

(இ - ள்.) வெறிகொள்-மயக்கத்தைக்கொண்ட, ஐம்பொறியை-ஐந்து பொறிகளையும், வெல்லினும் - வென்றாலும், பொருது - போர் செய்து, வெல்லுதற்கு அரிய-வெல்ல முடியாத, காலனை-கூற்றுவனையும்,முறியவெல்லினும்-புறங்கொடுக்க வென்றாலும்,வெலற்கு அரும்-வெல்லுதற்கு முடியாத, கொடிய முரணவாய்-கொடிய வலியையுடையனவாய், அமரர் அரண் எலாம்-தேவர்களின் அரண்முதலிய எல்லாவற்றையும், அறிவினால் நிறுவு கம்மியன்-நினைத்தலினாலேயே படைக்கும் தேவதச்சன், செயவும் அரியவாய் - செய்யவும் இயலாதனவாய், யவனர் புரியும்-யவனர்களால் செய்யப்பெற்ற, இப்பொறிகள் செய்யும் வினை இன்ன-இம்மதிற் பொறிகள் செய்கின்ற தொழில்கள் இத்தன்மையன; பொன்புரத்து-அழகிய மதுரைமா நகரத்தின், வீதிகள் அணி உரைத்தும் - வீதிகளின் அழகைச் சொல்வாம் எ - று.

ஐம்பொறியை வெல்லுதல் அருமை யென்பது,

"ஐவரை யகத்தே வைத்தி ரவர்களே வலியர் சால"

என்னுந் திருநேரிசை யானுமறிக. யவனர் - கிரேக்க தேசத்தார்; இவர்கள் பண்டை நாளிலே தமிழ் நாட்டிற் போந்து தமிழரசர்க்கு வாயிற்காத்தல் முதலிய ஊழியம் புரிவோராயும், வேறுபல தொழில் செய்வோராயுமிருந்தனர்; இவர்கள் மிலேச்சர் எனவும் சோனகர் எனவும் படுவர்;எகிப்து முதலிய தேசத்தினரையும் யவனரென்னும் பெயருக்குட்படுத்தல் பொருந்தும்.இவர்கள்சிற்பம்வல்லராயிருந்த செய்தி பழைய தமிழ் நூல் பலவற்றானும் அறியப்படுகின்றது. தமிழரசர்கள் யவனரது நாட்டினையும் அடிப்படுத்தாண்டிருக்கின்றன ரென்பது,

"வன்சொல் யவனர் வளநா டாண்டு
பொன்படு நெடுவரை புகுந்தோ னாயினும்"

என்னும் சிலப்பதிகாரத்து நடுகற் காதையா லறியப்படுகின்றது. யவனர் புரியும் என்பதற்குத் தண்டமிழ் வினைஞர் தம்மொடுங் கூடி யவனரியற்றிய என்பது கருத்தாகக் கொள்க. ஆல் : அசை.

பின்வருஞ் செய்யுட்கள் இங்கே நோக்கற் பாலன :

"மிளையுங் கிடங்கும் வளைவிற் பொறியுங்
கருவிர லூகமுங் கல்லுமிழ் கவணும்
பரிவுறு வெந்நெயும் பாகடு குழிசியுங்
காய்பொன் னுலையுங் கல்லிடு கூடையுந்
தூண்டிலுந் தொடக்கு மாண்டலை யடுப்புங்
கவையுங் கழுவும் புதையும் புழையும்
ஐயவித் துலாமுங் கைபெய ரூசியுஞ்
சென்றெறி சிரலும் பன்றியும் பணையும்
எழுவுஞ் சீப்பு முழுவிறற் கணையமுங்
கோலுங் குந்தமும் வேலும் பிறவும்
ஞாயிலுஞ் சிறந்து நாட்கொடி நுடங்கும்"

சிலப்பதிகாரம், அடைக்கலக்காதை அடி ௨0எ - ௨கஎ.

"மாற்றவர் மறப்படை மலைந்துமதில் பற்றின்
நூற்றுவரைக் கொல்லியொடு நாக்கியெறி பொறியுந்
தோற்றமுறு பேய்களிறு துற்றுபெரும் பாம்புங்
கூற்றமன கழுகுதொடர் குந்தமொடு கோன்மா"

"விற்பொறிகள் வெய்யவிடு குதிரைதொட ரயில்வாள்
கற்பொறிகள் பாவையன மாடமடு செந்தீக்
கொற்புனைசெய் கொள்ளிபெருங் கொக்கெழில்செய் கூகை
நற்றலைக டிருக்கும்வலி நெருக்குமர நிலையே"

"செம்புருகு வெங்களிக ளுமிழ்வதிரிந் தெங்கும்
வெம்புருகு வட்டுமிழ்வ வெந்நெய்முகந் துமிழ்வ
அம்புமிழ்வ வேலுமிழ்வ கல்லுமிழ்வ வாகித்
தம்புலங்க ளால்யவனர் தாட்படுத்த பொறியே"

"கரும்பொனியல் பன்றிகத நாகம்விடு சகடங்
குரங்குபொரு தகரினொடு கூர்ந்தரிவ நுண்ணூல்
பரந்தபசும் பொற்கொடிகள் பதாகையொடு கொழிக்குந்
திருந்துமதி றெவ்வர்தலை பனிப்பத்திருந் தின்றே"

சீவகசிந்தாமணி, நாமகளிலம்பகம் எ௨, எ௩, எ௪, எ௫.

"சினத்தயில் கொலைவாள் சிலைமழுத் தண்டு
சக்கரந் தோமர முலக்கை
கனத்திடை யுருமின் வெருவருங் கவண்கல்
லென்றிவை கணிப்பில கொதுகின்
இனத்தையு முவணத் திறையையு மியங்குங்
காலையு மிதமல நினைவார்
மனத்தையு மெறியும் பொறியுள வென்றான்
மற்றினி யுணர்த்துவ தெவனோ."

கம்பராமாயணம், நகரப்படலம். (௨௬)

[கலிநிலைத்துறை]

கழையுந் தாமமுஞ் சுண்ணமு மணிநிழற் கலனுங்
குழையுந் தூபமுந் தீபமுங் கும்பமுந் தாங்கித்
தழையுங் காதலர் வரவுபார்த் தன்பகந் ததும்பி
விழையுங் கற்பினு ரொத்தன விழாவரு வீதி.

(இ-ள்.) விழா அரு வீதி - திருவிழாக்கள் நீங்கப் பெறாத வீதிகள், கழையும் - கரும்புகளையும், தாமமும்-பூ மாலைகளையும், சுண்ணமும்-வாசனைப் பொடிகளையும், மணி நிழல் கலனும் - இரத்தினங்களாலாகிய ஒளியையுடைய அணிகளையும், குழையும் - மாந்தளிர்களையும், தூபமும் தீபமும் கும்பமுந் தாங்கி - தூபங்களையும் தீபங்களையும் பூரண கும்பங்களையும் தாங்குதலால், (கழையும் தாமமும் சுண்ணமும் மணி நிழல்கலனும் குழையும் - கருப்புவில் எழுதிய தொய்யிலையும் பூமாலைகளையும் வாசனைப் பொடிகளையும் ஒளியையுடைய இரத்தினுபரணங்களையும் குண்டலங்களையும் அணிந்து, தூபமும் தீபமும் கும்பமும்-தூபதீப கும்பங்களாகிய மங்கலங்களை, தாங்கி-ஏந்தி) தழையும் காதலர் - தழைகின்ற காதலையுடைய தலைவரின், வரவு பார்த்து-வருகையை நோக்கி, அகம் அன்பு ததும்பி விழையும் - உள்ளத்தின்கண் அன்பு நிரம்பி விரும்பி நிற்கின்ற, கற்பினர் ஒத்தன - கற்பினையுடைய மகளிரை ஒத்தன எ - று.

மகளிர்க்குச் சொல்லுங்கால், கழை-கரும்புவில் வடிவாக எழுதப் பெற்ற தொய்யில்; கழை, தாமம் முதலியவற்றை அணிந்து என்றும். தூபம் முதலியவற்றை ஏந்தி என்றும் கொள்க. நிழல் - ஒளி. நிழற் கலன் - கண்ணுடி என்னலும் ஆம்; படிமக்கலன் என்னும் பெயரும், கண்ணுடி அட்டமங்கலத்து ளொன்ருதலும் நோக்குக. வரவு பார்த்து என்றமையாற் பிரிந்து சென்ற காதலரின் வருகையை எதிர் நோக்கி யென்க. பிரிதல் ஓதல் முதலியன குறித்தாம்;

"ஓதல் காவல் பகைதணி வினையே
வேந்தர்க் குற்றுழி பொருட்பிணி பரத்தையென்
றாங்க வாறே யவ்வயிற் பிரிவே"

என்பது இறையனுர்களவியல். (கூ0)

ஆல நின்றமா மணிமிடற் றண்ணலா னந்தக்
கோல நின்றசே வடிநிழல் குறுகினர் குணம்போல்
வேலை நின்றெழு மதியெதிர் வெண்ணிலாத் தெண்ணீர்
கால நின்றன சந்திர காந்தமா ளிகையே.

(இ-ள்.) ஆலம் நின்ற - நஞ்சு நிலைபெற்ற, மாமணி மிடற்று அண்ணல் - பெருமை பொருந்திய நீலமணிபோலும் திருமிடற்றினையுடைய இறைவனின், ஆனந்தக்கோலம் நின்ற - இன்பவடிவம் நிலைபெற்ற,சேவடிநிழல்-சிவந்த திருவடிநீழலில்,குறுகினர்குணம்போல்-(பிறவி வெப்புத்தணிய) அடைந்தவர்கள் (ஆனந்தக் கண்ணீர் சொரிய நிற்கும்) தன்மைபோல், சந்திரகாந்த மாளிகை - சந்திரகாந்தக் கற்களாலாகிய மாளிகைகள், வேலைநின்று எழு-கடலினின்றும் எழுகின்ற,

மதி எதிர் - சந்திரன்முன்னர், வெள் நிலாத்தெள் நீர் கால நின்றன- வெள்ளிய ஒளியினையுடைய தெளிந்த நீர் ஒழுகும்படி நின்றன எ - று.

குறுகினர் குணம் என்றது ஆனந்தக் கண்ணீர் பொழியு மியல் பினை; குணம் தெளிந்த நீர் என்னலுமாம். சந்திரகாந்தம் - சந்திரனைக் கண்டு நீர் சொரியும் ஒருவகைக் கல். (கூக)

குன்ற நேர்பளிக் குபரிகை நிரைதோறுங் குழுமி
நின்ற பல்சரா சரமுமங் நீழல்வாய் வெள்ளி
மன்ற கம்போலிந் தாடிய மலரடி நிழல்புக்
கோன்றி யோன்றறக் கலந்தபல் லுயிர்நிலை யனைய.

(இ - ள்.) குன்றம் நேர் - மலையை ஒத்த, பளிக்கு உபரிகை நிரை தோறும் - பளிங்குக் கற்களாலாகிய மேல்வீடுகளின் வரிசைதோறும், குழுமிநின்ற-கூடிநின்ற, பல் சர அசரமும்-பல இயங்கியற் பொருள் களும் நிலையியற் பொருள்களும், அந்நீழல் வாய்-அம்மேல் வீடுகளின் நீழலின்கண், ஒன்றி - கலத்தலால் (அவை), வெள்ளிமன்று அகம் - வெள்ளிமன்றின்கண், பொலிந்து ஆடிய - விளங்கி நடித்த, மலர் அடி நிழல்-மலர்போலும்திருவடி நீழலில், புக்கு ஒன்றுஅற(ஒன்றி)-போய் ஒன்றுமாகாமல் வேறுமாகாமல் சேர்ந்து, கலந்த நிலை - கலந்த தன் மையையுடைய, பல் உயிர் அனைய - பல உயிர்களை ஒத்தன எ-று.

ஒன்றி யென்பது முன்னுங் கூட்டி, ஒன்றலால் எனத் திரிக்கப் பட்டது. கலந்த நிலையையுடைய பல்லுயிர் என்க. நிழலில் ஒன்றி விளங்குந் தன்மைகள் பல்லுயிர் கலந்த தன்மைகளைப் போல்வன என்றுரைத்தலுமாம். ஒன்றற என்றது அபேதமின்றி யென்றபடி. பேதமின்றிக் கலத்தலென்பது இரண்டறக் கலத்தல் எனப்படும். ஆன்மாக்கள் இறைவனுடன் கலக்கும் கலப்பானது பேதம், அபேதம், பேதாபேதம் என்னும் மூன்றினும் வேறென்றும், அதுவே அத்துவிதம் எனக் கூறப்படுமென்றும் சைவ சித்தாந்தம் இயம்புகின்றது. இதனை,

"புறச்சமயத் தவர்க்கிருளா யகச்சமயத் தொளியாய்ப்
புகலளவைக் களவாகிப் பொற்பணிபோ லபேதப்
பிறப்பிலதா யிருள்வெளிபோற் பேதமுஞ்சொற் பொருள்போற்
பேதாபே தமுமின்றிப் பெருநூல் சொன்ன
அறத்திறனல் விளைவதா யுடலுயிர்கண் ணருக்கன்
அறிவொளிபோற் பிறிவருமத் துவிதமாகுஞ்
சிறப்பினதாய் வேதாந்தத் தெளிவாஞ் சைவ
சித்தாந்தத் திறனிங்குத் தெரிக்க லுற்றாம்"

என்னும் சிவப்பிரகாசத் திருவிருத்தத்தா லறிக. (கூஉ)

கறித்த ருந்துபுற் குவைகழீ இக் காற்றேடர் பரியத்
தெறித்த கன்றயன் மரகதச் சித்திரத் தெற்றி
எறித்த பைங்கதிர்க் கொழுந்தையு மேட்டிநா வளைத்துப்
பறித்து மென்றுவா யசைப்பன பசலையான் கன்று.

(இ - ள்.) ஆன் பசலை கன்று-பசுவின் இளங்கன்றுகள், கறித்து அருந்து-கடித்துத் தின்னுகின்ற, புல் குவை கழீஇ-புற்குவியல்களை நீக்கி, கால் தொடர்-காலிற் கட்டிய கயிறுனது, பரியத் தெறித்து அகன்று-அறும்படியாகத் துள்ளி (அங்கு நின்றும்) நீங்கி, அயல்-பக்கங்களிலுள்ள, மரகதம்-மரகதத்தாலமைந்த, சித்திரத்தெற்றி-சித்திரங்களமைந்த திண்ணைகள், எறித்த பைங்கதிர்க் கொழுந்தை - வீசுகின்ற பசிய ஒளிக்கொழுந்தை, நா வளைத்து-நாவை வளைத்து நீட்டி, எட்டிப்பறித்து - எட்டிப்பிடுங்கி, மென்றுவாய் அசைப்பன - தின்று வாயால் அசை போடுவன எ - று.

கறித்து-கடித்து. கழீஇ - கழித்து. பறித்தும் என்று ஈ எனப் பிரித்து, பறிப்பேமென்று எனப் பொருள் கூறலுமாம். கொழுந்தையும் என்பதில் உம் : அசை நிலை. (ருரு)

சிறுகு கண்ணவாய்க் காற்றெறி செவியவாய்ப் பாசம்
இறுகு காலவாய்க் கோட்டுமா னினம்வழங் காறும்
குறுகு நுண்மருங் கிறுத்தெழு கோட்டுமா னினம்போம்
மறுகும் வண்டுசூழ்ந் திறைகொள மான்மத நாறும்.

(இ - ள்.) சிறுகு கண்ணவாய்-சிறிய கண்களையுடையனவாய், காற்று எறி செவியவாய்-காற்றை வீசும் செவிகளையுடையனவாய், பாசம் இறுகு காலவாய்-சங்கிலி இறுகப் பிணித்த கால்களையுடையனவாய், கோட்டுமான் இனம் - கொம்புகளையுடையனவாகிய யானைக் கூட்டங்கள், வழங்கு ஆறும் - செல்லுகின்ற நெறிகளிலும், வண்டு சூழ்ந்து இறைகொள - வண்டுகள் மொய்த்துத் தங்க, மால் மதம் நாறும் - மிகுந்த மதநீர் மணக்கும் ; குறுகு நுண் மருங்கு-மிக நுண்ணிய இடையானது, இறுத்து-முறிய, எழு கோட்டு - பூரித்தெழுந்த மலைச்சிகரம்போன்ற கொங்கைகளையுடைய, மான் இனம் - மான் போலும் மகளிர் கூட்டம், போம் மறுகும்-போகின்ற வீதிகளிலும், வண்டு சூழ்ந்து இறைகொள- வண்டுகள் மொய்த்துத் தங்க, மான் மதம் நாறும் -கத்தூரி கமழும் எ -று.

கோட்டு மானினம் என்னுந் தொடர்கள் முன்னுள்ள அடைகளால் யானைக் கூட்டத்தையும், மகளிரினத்தையும் குறிப்பனவாயின. மகளிரைக் குறிக்குமிடத்துக் கோடு, மான் என்பன அவைபோலும் பொருளுக்காயின. இறைகொள - தங்க : ஒரு சொல். மால் - பெரிய. மான்மத நாறும் என்பது முன்னுங் கூட்டித் தனித்தனி முடிக்கப்பட்டது. கண்ணவாய் என்பது முதலிய குறிப்புவினையெச்சங்கள் கொம்புகளை யுடையனவாகிய என விரிக்கப்பட்ட பெயரெச்சவினை கொண்டுமுடியும். இறுத்து: செயவெனெச்சத் திரிபு. 'மான்மத நாறும்' என்னும் வினை சிலேடையாய் ஆறு, மறுகு என்னும் இரண்டிற்கும் பொருந்துதலின் பல வினைச்சிலேடையாகும். மேல் இங்ஙனம் வருவனவும் இது. (ருச)

மாட மாலையு மேடையு மாளிகை நிரையும்
ஆட ரங்கமு மன்றிவே ளன்னவர் முடியும்
ஏட விழ்ந்ததா ரகலமு மிணைத்தடந் தோளுஞ்
சூடு மாதரார் சீறடிப் பஞ்சுதோய் சுவடு.

(இ - ள்.) மாதரார் - மகளிரின், சிறு அடி தோய்-சிறிய அடிகளில் ஊட்டிய, பஞ்சு சுவடு - செம்பஞ்சிக் குழம்பின் சுவட்டினை, மாடம் மாலையும்-மாடவரிசைகளும், மேடையும் மாளிகை நிரையும்-மேடைவரிசைகளும் மாளிகை வரிசைகளும், ஆடு அரங்கமும்-நடனசாலை வரிசைகளும், அன்றி-(சூடுவதே) அல்லாமல், வேள் அன்னவர்-மன்மதனை ஒத்த ஆடவர்களின், முடியும்-முடிகளும், ஏடு அவிழ்ந்த தார் அகலமும்-இதழ்கள் விரிந்த மாலையை யணிந்த மார்புகளும், இணைத்தடம் தோளும்-பெரிய இரண்டு தோள்களும், சூடும்-சூடாநிற்கும் எ - று.

பஞ்சுதோய் சிறடிச் சுவடு என்றியைத்துரைத்தலும் ஆம். மகளிர் திரிந்து விளையாடுதலால் மாட முதலியவற்றிலும், அவர் கலவியிடத்தாடியபொழுது ஊடல் தீர்த்தற்கு வணங்கிய தலைவரை உதைத்தலால் அவர் அகலம் முதலியவற்றிலும் சுவடு பொருந்துமென்க. தலைவன் பணிதலும், தலைவி பணியாமையும் உண்டென்பதனை,

"மனைவி யுயர்வுங் கிழவோன் பணிவும்
நினையுங் காலைப் புலவியு ளுரிய"

என்னுந் தொல்காப்பியச் சூத்திரத்தாலறிக.

"சிலைமலி வாணுத லெங்கைய தாகமெனச் செழும்பூண்
மலைமலி மார்பி னுதைப்பத்தந் தான்றலை மன்னர்தில்லை
உலைமலி வேற்படை யூரனிற் கள்வரி லென்னவுன்னிக்
கலைமலி காரிகை கண்முத்த மாலை கலுழ்ந்தனவே"

என்னும் திருக்கோவையார்ச் செய்யுளின் நயத்தினையும் நோக்குக. (கூ)

மருமச் செம்புன லாறிட மாறடு கோட்டுப்
பருமச் செங்கண்மால் யானையின் பனைக்கையு மறைநூல்
அருமைச் செம்பொரு ளாய்ந்தவர்க் கரும்பொரு ளீவோர்
தருமச் செங்கையு மொழுகுவ தானநீ ராறு.

(இ - ள்.) மருமம்-மார்பினின்றும், செம்புனல் ஆறு இட-குருதி வெள்ளம் தோன்ற, மாறு அடு கோட்டு-பகைவரைக் கொல்லுகின்ற கொம்பினையுடைய, பருமம் - கவசத்தை யணிந்த, செம்கண்-சிவந்த கண்களையும், மால் - மத மயக்கத்தையும் உடைய, யானையின் பனைக்கையும்-யானையினது பனைபோன்ற துதிக்கையினின்றும், தானம் நீர் ஆறு - மதநீராகிய வெள்ளம், ஒழுகுவ-ஒழுகுவன ; மறைநூல்-வேத நாலின், அருமைச் செம்பொருள் - அரிய உண்மைப் பொருளை, ஆய்ந்தவர்க்கு - ஆராய்ந்தவர்க்கு, அரும்பொருள்-கொடுத்தற் கரிய பொருளை, ஈவோர் தருமச்செங்கையும்-கொடுப்போர்களின் அறத்தையுடைய சிவந்த கைகளினின்றும், தானம் நீர் ஆறு-தானஞ் செய்யும் நீர்ப்பெருக்கு, ஒழுகுவ - ஒழுகுவன எ - று.

செம்புனல்-குருதி. பருமம் - யானைமேற் போர்க்குங் கவசம். செம்பொருள் -கடவுள் ;

"பிறப்பென்னும் பேதைமை நீங்கச் சிறப்பென்னுஞ்
செம்பொருள் காண்ப தறிவு"

என்னும் திருக்குறளும், "தோற்றக் கேடுகளின்மையின் நித்தமாய், நோன்மையாற் றன்னையொன்றுங் கலத்தலின்மையின் தூய்தாய்த், தான் எல்லாவற்றையுங் கலந்து நிற்கின்ற முதற்பொருள் விகார மின்றி எஞ்ஞான்றும் ஒரு தன்மைத்தாதல்பற்றி, அதனைச் 'செம்பொருள்' என்றார்" என்னும் பரிமேலழக ருரையும் நோக்குக. செங்கை - செவ்விய கையுமாம். தானமாவது தக்கார்க்கு வேண்டும் பொருளை நீருடனளிப்பது. கோட்டு யானை, பரும யானை எனத் தனித்தனி முடிக்க. மாறு - பகைமை; பகைமையுடையாரை உணர்த்திற்று. (௩௬)

பரிய மாமணி பத்தியிற் பதித்திருட் படலம்
பொரிய வில்லிடக் குயிற்றிய பொன்னர மியமுந்
தெரிய மாமுர சொலிகெழு செம்பொனா டரங்கும்
அரிய மின்பயோ தரஞ்சுமந் தாடுவ கொடிகள்.

(இ - ள்.) பரிய மாமணி - பருத்த பெருமை பொருந்திய மணிகளை, பத்தியில் - வரிசையாக, பதித்து - பதித்து, இருள் படலம் பொரிய - இருட் கூட்டம் சிதறும்படி, வில் இட - ஒளிவிடுமாறு, குயிற்றிய - செய்த, பொன் அரமியமும் - பொன்னாலாகிய நிலா முற்றங்களிலும், கொடிகள் - கொடிகள், அரிய மின் பயோதரம் - மின்னலையுடைய பசியமேகங்களை, சுமந்து ஆடுவ - தாங்கி அசைவன; தெரிய மாமுரசு ஒலிகெழு - விளங்கும்படி பெரிய முரசின் ஒலி பொருந்திய, செம்பொன் ஆடு அரங்கும் - சிவந்த பொன்னாலாகிய நடனசாலைகளிலும், கொடிகள் - கொடி போன்ற பெண்கள், அரிய - நுண்ணிய, மின் - மின்னல்போலும் இடையினையும், பயோதரம் - கொங்கைகளையும், சுமந்து ஆடுவ - தாங்கி நடிப்பார்கள் எ - று.

பொரிய வில்லிடப் பதித்துக் குயிற்றிய எனக்கூட்டி முடித்தலுமாம்; சிந்தாமணியுரையில், நச்சினார்க்கினியர், "உதைய கிரியிற் சிந்தூர அருவி வீழ்ந்த சிந்தூராகரத்திற் பிறந்து பதினாறு சதுர் யுகஞ் சிவப்பேறின முழுமாணிக்கம் இருளைக் கெடுத்தலின் 'இருள் பருகுமருமணி' என்றார்" எனக் கூறியிருப்பது நோக்கற்பாலது.

அரமியம் - நிலாமுற்றம். தெரிய - விளங்க. அரிய : அரி என்பதனடியாக வந்த குறிப்புப் பெயரெச்சம். அரி - பசுமை, நுண்மை. பயோதரம் என்பது நீரைத் தரிப்பது என்னுங் காரணத்தால் மேகத்திற்கும், பாலைத் தரிப்பது என்னுங் காரணத்தால் கொங்கைக்கும் பெயர். மின், கொடிகள் என்பனமுறையே இடைக்கும் மகளிர்க்கும் ஆகுபெயர். இப்பொருளில் ஆடுவர் என உயர்திணை முடிபாக்குக. (௩௭)

வலம்ப டும்புயத் தாடவர் மார்பமேற் புலவிக்
கலம்ப டர்ந்தபூண் முலையினார் காலெடுத் தோச்சச்
சிலம்ப லம்பிசை மழுங்கமுன் னெழுமவர் தேந்தார்ப்
புலம்பு வண்டுநோந் தரற்றிய பொங்குபே ரொலியே.

(இ - ள்.) வலம் படும் புயத்து - வெற்றி பொருந்திய தோள்களையுடைய, ஆடவர் மார்ப மேல் - தத்தங் கணவர்களின் மார்பின்கண், புலவிக் கலம் படர்ந்த - ஊடலாகிய அணி பரந்த, பூண் முலையினார் -

அணிகலத்தையுடைய கொங்கையையுடைய மகளிர், கால் எடுத்து ஓச்ச - காலை எடுத்து உதைக்க, சிலம்பு அலம்பு இசை மழுங்க - (அவர்) சிலம்பு ஒலிக்கின்ற ஒலி மழுங்கும்படி, அவர் - அவ்வாடவர்களின், தேம்தார் - தேனையுடைய மாலையினின்றும், புலம்பு வண்டு - இசை பாடும் வண்டுகள், நொந்து அரற்றிய - வருந்தி ஒலித்த, பொங்கு பேர் ஒலி - மிகுந்த பெரிய ஒலியானது, முன் எழும் - முற்பட்டுத் தோன்றும் எ - று.

புலவியானது அவரைப் பொதிந்ததென்பார் 'படர்ந்த' என்றார். படர்ந்த மகளிரென்க. (காமக் கடலிற்) புலவியாகிய மரக்கலத்திற் சென்ற என்னலுமாம். பூண் கலம் படர்ந்த முலையினார் புலவியால் ஓச்ச என முடித்தலுமாம். காலெடுத்தோச்சுமியல்பினை 'மாடமாலையும்' என்னுஞ் செய்யுளுரையிற் கூறியது கொண்டுமறிக. நன்கு ஓச்சவென்பார் 'எடுத்தோச்ச' என்றார். தேன்; தேம் எனத் திரிந்தது. (௯அ)

தைய லார்மதி முகங்களுந் தடங்களுங் குழைய
மைய ளாவிய விழிகளு மாடமுங் கொடிய
கையு நாண்மலர்ப் போதும்பருங் கறங்கிசை வண்ட
நெய்ய வோதியும் வீதியு நீளற னெறிய.

(இ - ள்.) தையலார் மதிமுகங்களும் - மகளிரின் மதிபோன்ற முகங்களும், குழைய - குண்டலங்களையுடையன; தடங்களும் - தடாகங்களும், குழைய - தளிர்களையுடையன; மை அளாவிய விழிகளும் - மை தீட்டப்பெற்ற (அவர்) கண்களும், கொடிய - கொடுமையையுடையன; (மை அளாவிய - மேக மண்டலத்தை அளாவிய) மாடமும் - மாடங்களும், கொடிய - கொடிகளையுடையன; கையும் - (அவர்) கைகளும், கறங்கு இசைவண்ட - ஒலிக்கின்ற ஒலியினையுடைய வளையல்களை யுடையன; நாள் மலர்ப் பொதும்பரும் - அன்றலர்ந்த மலர்களையுடைய சோலைகளும், கறங்கு இசைவண்ட - ஒலிக்கின்ற இசையினையுடைய வண்டுகளையுடையன; நெய்ய ஓதியும் - நெய்யினையுடைய (அவர்) கூந்தல்களும், நீள் அறல் நெறிய - கருமணல்போலும் நீண்ட நெறிப்பினையுடையன; வீதியும் நீள் அறன் நெறிய - வீதிகளும் மிக்க அற நெறிகளையுடையன எ - று.

'மையளாவிய' என்னும் அடை சிலேடையாய் மாடத்திற்கும் பொருந்திற்று. நெய் - புழுகுமாம். நெய்ய: குறிப்பு வினைப்பெயரெச்சம். குழைய என்பது முதலியன சாரியை யின்றி வந்த பலவின்பாற் குறிப்பு வினை முற்றுக்கள். (௯௧)

மலருந் திங்கடோய் மாடமுஞ் செய்வன மணங்கள்
அலருந் தண்டுறை யுங்குடைந் தாடுவ தும்பி
சுலவுஞ் சோலையு மாதருந் தூற்றுவ வலர்கள்
குலவும் பொய்கையு மனைகளுங் குறைபடா வன்னம்.

(இ - ள்.) மலரும் - பூக்களும், செய்வன மணங்கள் - மணங்களை வீசுவன; திங்கள்தோய் மாடமும் - சந்திரமண்டலத்தை யளாவிய மாளிகைகளும், மணங்கள் செய்வன - கல்யாணங்கள் செய்யப்படுவன;

அலரும்-மலர்களிலும், தும்பி - வண்டுகள், குடைந்து ஆடுவ-கிண்டி ஆடுவன; தண் துறையும் - குளிர்ந்த நீர்த்துறைகளிலும், தும்பி - யானைகள், குடைந்து ஆடுவ - மூழ்கி விளையாடுவன; சுலவும் சோலையும்-சூழ்ந்திருக்கின்ற சோலைகளும், அலர்கள் தூற்றுவ - மலர்களைச் சொரிவன; மாதரும்-மகளிராலும், அலர்கள் தூற்றுவ-பழிமொழிகள் தூற்றப்படுவன; குலவும்-விளங்குகின்ற, பொய்கையும் - தடாகங்களிலும், அன்னம் குறைபடா-அன்னப்பறவைகள் குறையா (நிறைந்துள்ளன); மனைகளும்-இல்லங்களிலும், அன்னம் குறைபடா - அடிசில்கள் குறையா (நிறைந்துள்ளன) எ - று.

மலரும், சோலையும் என்பன எழுவாய் வேற்றுமை. மாதரும் என்பதில் மூன்றனுருபும், மாடமும் என்பது முதலியவற்றில் ஏழனுருபும் விரிக்க. சோலையும் மாதரும் என்பதற்குத் திணை விரவிச் சிறப்பால் அஃறிணை வினைகொண்டு முடிந்தன என்னலுமாம். மாதர் அலர் தூற்றுதல் தலைவன் தலைவியரின் களவொழுக்கம் வெளிப்பட்டதனாலென்க. (சo)

ஊடி னாரெறி கலன்களு மம்மனை யுடன்பந்
தாடி னார்பரி யாரமு மடியினாற் சிற்றில்
சாடி னாரொடு வெகுண்டுகண் டதும்புமுத் துறைப்ப*
வாடி னார்பரி நித்தில மாலையுங் குப்பை.

(இ - ள்.) ஊடினார் - (தலைவரோடு) புலந்த மகளிர், எறி கலன்களும் - வெறுத்து எறிந்த அணிகளும், அம்மனை உடன் பந்து ஆடினார்-அம்மனையொடு பந்து விளையாடு மகளிர், பரி ஆரமும் - (சுமக்கலாற்றாது) நீத்த அணிகளும், அடியினால் சிற்றில் சாடினாரொடு-காலினால் (தாமிழைத்த) சிறு வீட்டை அழித்த இளைஞரோடு, வெகுண்டு-கோபித்து, கண் ததும்பும் - கண்களினின்றும் ததும்புகின்ற, முத்து உறைப்ப-முத்துப்போலும் நீர்த்துளிகள் துளிக்க, வாடினார் - வருந்திய சிறுமிகள், பரி - (அறுத்து) எறிந்த, நித்திலமாலையும் - முத்து மாலைகளும், குப்பை - (அவ் வீதியில்) குப்பைகளாம் எ - று.

ஊடினார் வெறுத்தும், ஆடினார் சுமக்கலாற்றாதும், வாடினார் சினந்தும் எறிவரென்க. சிற்றில் சாடுதல்-சிறார்கண் இயற்கையினிகழும் குறும்புச்செயல். இதனை ஆண்பாற் பிள்ளைக்கவியில் ஒரு பருவமாக வைத்துப் பாடுதலுங் காண்க. பரிதல்-அறுதல்; பரி என்பது ஈண்டுப் பிறவினைப் பொருளில் வந்தது. முத்து என்பது முத்துப்போலும்நீர்த் துளிக்காயிற்று. உறைத்தல் - துளித்தல். இறைப்ப என்னும் பாடத்திற்குக் கண்கள் சொரிய வென்க. ஈற்றில் ஆக்கம் வருவிக்க. (சக)

ஐய வென்னுரை வரம்பின வாகுமோ† வடியர்
உய்ய மாமணி வரிவளை விறகுவிற் றுழன்றோன்
பொய்யில் வேதமுஞ் சுமந்திடப் பொறாதகன் றரற்றுஞ்
செய்ய தாண்மலர் சுமந்திடத் தவஞ்செய்த தெருக்கள்.

---

(பா - ம்.) * முத்திறைப்ப. † வரம்பினதாகுமோ.

(இ-ள்.) அடியர் உய்ய - அடியார்கள் உய்தற்பொருட்டு, மாமணி - பெருமை பொருந்திய மாணிக்கங்களையும், வரிவளை - வரிகளையுடைய வளையல்களையும், விறகு - விறகையும், விற்று உழன்ருேன்-விற்றுத் திரிந்த இறைவனுடைய, பொய்யில்வேதமும்-பொய்யில்லாத வேதங்களும், சுமந்திடப் பொருது - தீண்டமாட்டாமல், அகன்று-சேய்மையினின்று, அரற்றும் - முறையிடப்பெற்ற, செய்ய தாள் மலர்-சிவந்த திருவடிமலர்களை, சுமந்திட-சுமப்பதற்கு, தவம் செய்த தெருக்கள் - தவம் புரிந்த வீதிகளின் பெருமைகள், என் ஐய உரைவரம்பின ஆகுமோ - எளியேனது நொய்மையான சொல்லின் அளவின ஆகுமோ? (ஆகா) எ-று.

ஐய: ஐம்மை யென்பத னடியாக வந்த குறிப்புப்பெயரெச்சம்; ஐம்மை-நொய்மை; 'ஐவியப்பாகும்' என்பதனுல் ஐ யென்னும் உரிச்சொல் திரிந்து வந்ததெனக் கொண்டு, (நான் கூறப்புகுந்தது) வியப்பே என்னலுமாம். என்னும்மைகள் தொக்கன. உழன்ருேன் தாண்மலர் எனக் கூட்டுக. வேதமும் என்னும் உம்மை உயர்வு சிறப்பு. சுமந்திடத் தவஞ்செய்த என்பதைத் தவஞ்செய்து சுமந்த எனப் பிரித்துக் கூட்டலுமாம். தெருக்கள் - தெருக்களின் பெருமைகள். மணி வளை விறகு விற்றமையை இப்புராணத்து அவ்வப்படலங்களா னறிக. (௬௨)

[அறுசீரடியாசிரிய விருத்தம்]

தோரண நிரைமேன் காஞ்சி சூழ்நிலை நெடுந்தே ரல்குற்
பூரண கும்பக் கொங்கைப் பொருவின்மங் கலமா மங்கை
தாரணிந் தாரந் தூக்கிச் சந்தகி றிமிர்ந்து பாலிச்
சீரணி முளைவெண் மூரல் செய்துவீற் றிருக்கு மன்னோ.

(இ-ள்.) தோரண நிரை-தோரண வரிசையாகிய, மென்காஞ்சி சூழ் - மிருதுவான எண்கோவை சூழ்ந்த, நிலை நெடுதேர் அல்குல் - பெரிய நிலைத்தேராகிய அல்குலையும், பூரண கும்பம் - நிறை குடங்களாகிய, கொங்கை-கொங்கைகளையுமுடைய, பொரு இல் - ஒப்பற்ற, மங்கலமாம் மங்கை-மங்கலமாகிய மங்கையானவள், தார் அணிந்து - மலர்மாலைகளை அணிந்து, ஆரம் தூக்கி - முத்துமாலைகளைத் தொங்கவிட்டு, சந்து அகில் திமிர்ந்து-சந்தனக் குழம்பையும் அகிற் குழம்பையும் பூசி, பாலி - பாலிகைகளிலுள்ள, சீர் அணி - சிறப்பு வாய்ந்த, வெண்முளை மூரல் செய்து - வெள்ளிய முளைகளாகிய புன்னகை காட்டி, வீற்றிருக்கும் - வீற்றிருப்பாள் எ-று.

மென்மை - தொழிலின் நயம். காஞ்சி - இடையிலணியும் அணிவிசேடம்; எண்கோவை யுடையது. சீர் அணி - சிறப்பும் அழகுமுடைய என்றும், அழகு மிக்க என்றும் கூறலுமாம். தோரணம் முதலியவற்றைக் காஞ்சி முதலியவாக உருவகித்து, அவற்றை மங்கல மங்கைக்கு உரியவாக்கினர்; அவை மங்கலப்பொருள்களாதலின். அந்நகரத்தில் மங்கலமெல்லாஞ் சிறந்து திகழ்கின்றன என்றபடி. நகரவீதிகளின் சிறப்பைப் பொதுவகையால் உரைத்துவந்து, இது முதல் மூன்று செய்யுட்களால் நகரின் சிறப்பைப் பொதுவகையாற் கூறுகின்ருர். மன், ஓ: அசை. (௬௩)

திங்களைச் சுண்ணஞ் செய்து சேறுசெய் தூட்டி யன்ன
போங்குவெண் மாடப் பந்தி புண்ணியம் பூசுந் தொண்டர்
தங்கண்மெய் வேடந் தன்னைத் தரித்தன சாலக் கண்கொண்
டங்கணன் விழவு காண்பா னடைந்தென மிடைந்த வன்றே.

(இ-ள்.) திங்களை - மதியை, சுண்ணம் செய்து - நீறாக்கி, சேறு செய்து - சேறாகக் குழைத்து, ஊட்டி அன்ன - பூசினாலொத்த, பொங்கு-விளங்குகின்ற, வெள் மாடப்பந்தி-வெள்ளிய மாடவரிசைகள், புண்ணியம் பூசும் - திருநீற்றை யணிந்த, தொண்டர் தங்கள் - அடியார்களின், மெய்வேடம் தன்னை - உண்மை வேடத்தினை, தரித்தன - தாங்கினவைகளாய், சால - மிக, கண்கொண்டு - கண்களால், அங்கணன் - அழகிய கண்ணையுடைய இறைவனது, விழவு காண்பான் - திருவிழாவைக் காண்பதற்கு, அடைந்தென - அடைந்தாற் போல, மிடைந்த - நெருங்கியுள்ளன எ - று.

புண்ணியம்-திருநீறு; 'புண்ணிய மாவது நீறு' எனத் தமிழ்மறை கூறுவது காண்க. மெய்வேட மென்பது அவ்வேடமே மெய்ப்பொருளாகலின். மாடங்கட்குச் சாலக்கண் என்றதனைச் சாளரக்கண் என்று கொள்க. சாலம்-சாளரம். கண்-துவாரம்; கண்போறலின் கண் எனப்படும். பலகணி யென்னும் பெயரும் அதுபற்றி வந்தது. கொண்டு: மூன்றாம் வேற்றுமைச் சொல். ஊட்டியன்ன, அடைந்தென என்பன வினையெச்சத் திரிபுகள். காண்பான்: வினையெச்சம். அன்று, ஏ: அசை. (சச)

தேரொலி கலினப் பாய்மான் சிரிப்பொலி புரவி பூண்ட
தாரொலி கருவி யைந்துந் தழங்கொலி முழங்கு கைம்மான்
பேரொலி யெல்லா மொன்றிப் பொருகொலி யன்றி யென்றுங்
காரொலி செவிம டாது கடிமணி மாடக் கூடல்.

(இ-ள்.) கடி மணி மாடம் - விளக்கமாகிய மணிகள் பதிக்கப்பெற்ற மாடங்களையுடைய, கூடல் - கூடற்பதியில், என்றும் - எஞ்ஞான்றும், தேர் ஒலி - தேர்கள் ஓடுவதனாலுண்டாய வொலியும், கலினம் - கடிவாளத்தையுடைய, பாய் மான் - பாய்கின்ற குதிரைகளின், சிரிப்பு ஒலி - கனைப்பொலியும், புரவி பூண்ட - அவைகள் அணிந்த, தார் ஒலி - கிண்கிணி மாலையின் ஒலியும், கருவி ஐந்தும்-(தோற்கருவி முதலிய) ஐவகை இயங்களும், தழங்கு ஒலி - ஒலிக்கின்ற ஒலியும்; முழங்கு கைம்மான் - பிளிறுகின்ற யானைகளின், பேர் ஒலி - பெரிய ஒலியுமாகிய, எல்லாம் ஒன்றி-இவை எல்லாம் கலந்து, பெருகு ஒலி அன்றி - பெருகிய ஒலி கேட்கப்படுவதன்றி, கார் ஒலி - மேகத்தின் இடியொலியானது, செவி மடாது-செவியிற் கேட்கப்படாது எ-று

கலினப் பாய்மான் என முன் வந்தமையான் புரவி என்பதனைச் சுட்டாகக் கொள்க. கருவி ஐந்தாவன: தோற்கருவி, துளைக்கருவி, நரப்புக் கருவி, கஞ்சக் கருவி, மிடற்றுக் கருவி என்பன. ஆகியவென ஒரு சொல் வருவிக்க. செவிமடுக்கப்படா தென்க. கடி-விளக்கம். நான் மாடக்கூடல் என்பதுமுதல் குறைந்து வந்த தென்னலுமாம். (சரு)

பரத்தையர் வீதி

இழிபவ ருயர்ந்தோர் மூத்தோ
ரிளையவர் கழியா நோயாற்
கழிபவர் யாவ ரேனுங்
கண்வலைப் பட்டு நெஞ்சம்
அழிபவர் பொருள்கொண் டெள்ளுக்
கெண்ணெய்போ லளந்து காட்டிப்
பழிபடு போகம் விற்பார்
ஆவணப் பண்பு சொல்வாம்.

(இ - ள்.) இழிபவர் - இழிகுலத்தோர், உயர்ந்தோர் - உயர் குலத்தோர், மூத்தோர் - முதியோர், இளையவர் - இளைஞர், கழியா நோயால் கழிபவர் - நீங்காத நோயினால் மெலிகின்றவர், யாவரேனும் - (ஆகிய) யாவராயினும், கண் வலைப்பட்டு - தம் கண்களாகிய வலைகளி லகப்பட்டு, நெஞ்சம் அழிபவர் பொருள்கொண்டு - மனம் வருந்து கின்றவர்களின் பொருளைக் கைக்கொண்டு, எள்ளுக்கு எண்ணெய் போல் - எள்ளுக்கு எண்ணெய் அளந்து கொடுப்பது போல், அளந்து காட்டி - அப்பொருளுக்குத்தக அளந்து காட்டி, பழிபடு - பெரியோர் களால் பழிக்கப்படுகின்ற, போகம் விற்பார் - கலவியின்பத்தை விற் கின்ற புறப்பெண்டிரின், ஆவணப்பண்பு - வீதியின் தன்மையை, சொல்வாம் - பகருவாம் எ - று.

எள்ளுக்கு என்றமையின் நெய்யெனவே அமையுமெனினும் விளங்குதற் பொருட்டு எண்ணெய் என்றார்; வழக்கு நோக்கி யெனி னுமாம். மிகைகுறையின்றி யென்பார் அளந்து காட்டியென்றார். விற்பாரென்ற தற்கேற்ப ஆவணம் என்றார். (சுசு)

மெய்படு மன்பி னார்போல் விரும்பினார்க் கருத்துந் தங்கள்
பொய்படு மின்பம் யார்க்கும் புலப்படத் தேற்று வார்போல்
மைபடு கண்ணார் காமன் மறைப்பொருள் விளங்கத் தீட்டிக்
கைபடச் சுவராய்த் தோன்றச் சித்திரங் காணச் செய்வார்.

(இ - ள்.) மைபடு கண்ணார் - மையெழுதிய கண்களையுடைய விலை மகளிர், மெய்படும் அன்பினார் போல் - உண்மையான அன்புடை யாரைப் போல், விரும்பினார்க்கு - விரும்பிய ஆடவருக்கு, அருத்தும் - ஊட்டுகின்ற, தங்கள் பொய்படும் இன்பம் - தம்முடைய பொய்யாகிய இன்பக் கலவிகளை, யார்க்கும் - அனைவருக்கும், புலப்பட - விளங்க, தேற்றுவார் போல் - தெளிவிப்பார் போல், காமன் மறைப் பொருள் - காமநூலுட் கூறும் கலவிக்கரணங்களை, விளங்கத் தீட்டி - விளங்கும் படி எழுதிவைத்தும், கைபட - கைபடுங்கால், சுவராய்த்தோன்றவும் - சுவராகத் தோன்றவும், சித்திரம் காணச் செய்வார் - சித்திரங்களைப் புலப்படுத்துவார்கள் எ - று.

மெய்படு மன்பினார் போல் என்றமையின், அவர் பொய்யன்புடை யார் என்பதாயிற்று. இன்பமென்றது, கலவிக்கரணங்களை. தாம் அவை

வல்லராதலைக் காட்டவும், அவை அறியாத ஆடவர் அறிந்துகொள்ளச் செய்யவும் என்பார் புலப்படத் தேற்றுவார்போல் என்றார். காமன் மறைப்பொருள்-கலவிக்கரணம்; லீலைவகை. ஓவியங்கள் மெய்யாய ஆடவர் மகளிர் போன்று தோன்ற என்பார் 'கைபடச் சுவராய்த் தோன்ற' என்றார்; ஓவியத் தொழிலின் சதுரப்பாடு கூறியவாறு. (சஎ)

திருவிற்கான் மணிப்பூ ணகம்
பலகையாத் தெண்முத் தார
அருவிக்கால் வரைமேன் கோங்கைச்
சூதொட்டி யாடி வென்றும்
மருவிக்கா முகரைத் தங்கள்
வடிக்கண்வேன் மார்பந் தைப்பக்
கருவிச்சூ தாடி வென்றுங்
கைப்பொருள் கவர்தல் செய்வார்.

(இ - ள்.) காமுகரை மருவி-(பொருட்பெண்டிர்) காமுகரைச் சேர்ந்து, திருவில் கால்-அழகிய ஒளியை வீசுகின்ற, மணிப்பூண் ஆகம்-மணிகளாலாகிய அணிகளை யணிந்த (அவர்) மார்பையே, பலகையா-பலகையாகக் கொண்டு (அதிலே), தெண் முத்து ஆரம் - தெளிந்த முத்து மாலையாகிய, அருவிகால் - அருவியை ஒழுக்குகின்ற, வரை மென்கொங்கை-மலை போன்ற மெல்லிய கொங்கைகளாகிய, சூது - வல்லுகளை, ஒட்டி - ஒற்றி (பணயம் வைத்து), ஆடி வென்றும்-ஆடி வெற்றி பெற்றும், தங்கள்-தங்களுடைய, வடிக்கண் வேல் - மாவடுப் போன்ற கண்களாகிய வேல்கள், மார்பம் தைப்ப-(அவர்கள்) மார்பிற் றைக்கும்படி, கருவி-கருவியாகிய, சூது ஆடி வென்றும்-சூதினை ஆடி வெற்றிபெற்றும், கைப்பொருள் கவர்தல் செய்வார் - (அவர்) கைப் பொருள்களைக் கவர்ந்து கொள்வார்கள் எ - று.

கொண்டு அதில் என்னுஞ் சொற்கள் வருவிக்கப்பட்டன. ஒட்டி யென்பதற்குக் கொங்கைக்கேற்பப் பொருந்தச் செய்து என்றும், சூதிற் கேற்பப் பந்தயம் வைத்து என்றும் பொருள் கொள்க. வடி - மாவடு; கூர்மை யெனினும் பொருந்தும். வடிக்கண் வேல் மார்பந் தைத்தலைக் கலவிப் போருடனும் சூதுப் போருடனும் இயைத்துக் கொள்க. கருவிச் சூது - கருவியாலாடுஞ் சூதெனலுமாம். கருவி-சூதாட்டத்திற்குரிய கவறு, வல்லு முதலியன. இருவகை வென்றி யாலும் பொருள் கவர்வாரென்றார். (சஅ)

தண்பனி நீரிற் றோய்த்த மல்லிகைத் தாம நாற்றி
விண்படு மதியந் தீண்டும் வெண்ணிலா முற்றத் திட்ட
கண்படை யணைமேற் கொண்டு காமனுங் காமுற் றெய்தப்
பண்பல பாடி மைந்த ராவியைப் பரிசில் கொள்வார்.

(இ - ள்.) (பரத்தையர்) தண்பனி நீரில் தோய்த்த - குளிர்ந்த பனிநீரில் நனைத்த, மல்லிகைத் தாமம் நாற்றி - மல்லிகை மலர்மாலை களைத் தொங்கவிட்டு, விண்படு மதியம் தீண்டும் - ஆகாயத்திற்

பொருந்திய சந்திரனையாளாவிய, வெள் நிலா முற்றத்து இட்ட-வெள்ளிய நிலா முற்றத்தின்கண் அமைத்த, கண் படை அணைமேற் கொண்டு-தூங்குமஞ்சத்தின்கண் இருந்து, காமனும் காமுற்று எய்த-காமவேளும் விரும்பி வர, பல பண் பாடி - பல பண்களைப் பாடி, மைந்தர் ஆவியை-ஆடவரின் உயிரை, பரிசில் கொள்வார்-பரிசிலாகக் கொள்வார் எ-று.

நாற்றி-தொங்கவிட்டு; நால் என்பதன் பிறவினையாகிய நாற்று: பகுதி. மதிய மென்பதில் அம்: சாரியை. நிலாமுற்றம்-நிலவின் பயன்கொள்ளுதற்கு மேனிலத்தமைத்த கூடம்; இஃது அரமியம் எனவும்படும். கண்படை-உறக்கம்; கண்படு: பகுதி. மேற்கொள்ளல்-அமர்தல், உம்மை: உயர்வு சிறப்பு. காமம் என்பது ஈறு கெட்டுக் காம் என்றாகி, உறு என்பதனுடன் சேர்ந்து வினையாயது. பண்பாடி என்றதற்கேற்பப் பரிசில் கொள்வார் என்றார். ஆவி யெனவே உடலும் பொருளும் கூறவேண்டாவாயின. (சக)

குரும்பைவெம் முலையிற் சிந்து சாந்தமுங் குழலிற் சிந்தும்
அரும்பவிழ் மாலைத் தாது மளிநகர்ந் தெச்சி லாகிப்
பொரும்பரிக் காலிற் றூளாய்ப் போயர மாதர் மெய்யும்
இருங்குழற் காடுஞ் சூழ்போ யியன்மணம் விழுங்கு மன்னோ.

(இ - ள்.) குரும்பை-தென்னங் குரும்பைபோன்ற, வெம்-விருப்பந்தருகின்ற, முலையில் - கொங்கைகளினின்றும், சிந்து சாந்தமும்-உதிர்ந்த சந்தனமும், குழலில் சிந்தும்-கூந்தலினின்றும் உதிர்ந்த, அரும்பு அவிழ்மாலைத்தாதும்-முகைவிரிந்த மாலையின் மகரந்தமும், அளி நுகர்ந்து எச்சிலாகி - வண்டுகளால் உண்ணப்பட்டு எச்சிலாகி, பொரும் பரி-போர்செய்யும் குதிரைகளின், காலில் தூள் ஆய்-காலினால் தூளாகி, போய்-மேலெழுந்துபோய், அரமாதர்-தேவமாதரின், மெய்யும் - உடலையும், இரும் குழல் காடும்-நீண்ட கூந்தலாகிய காட்டையும், சூழ்போய் - சூழ்ந்து, இயல் மணம் விழுங்கும்-(அவற்றின்) இயற்கை மணத்தை மறைக்கும் எ - று.

வெம்மை-விருப்பம். இருமை-கருமையுமாம். இவராற் கழிக்கப்பட்டு இழி வெய்திய சாந்தமும் தாதும் தேவமாதரின் மணத்தையும் மறைக்கும் எனக் கூறி, இங்குள்ள பரத்தையரின் சிறப்பினை விளக்குவாராய், சிந்து சாந்தமும் தாதும் எச்சிலாகிக் காலிற் றூளாய்ப்போய் விழுங்கும் என்றார். விழுங்குமென்றது, புலப்படாமற் செய்யும் என்றபடி. தேவமகளிர்க்கு இயற்கையில் மணமுண்டென்றார். எச்சில், எஞ்சு என்பதனடியாகப் பிறந்தது. துகள் என்பது தூள். என மருவிற்று. மன், ஓ: அசை. (ருo)

ஆலவா யுடையா னென்று
மங்கயற் கண்ணி யென்றுஞ்
சாலைவாழ் குயிலி னல்லார்
சொல்லியாங் கொருங்கு சொல்லும்

பாலவாங் கிளிகள் பூவை
பன்முறை குரவ னோதும்
நூலவாய்ச் சந்தை கூட்டி
நுவன்மறைச் சிறாரை யொத்த.

(இ-ள்.) சோலைவாழ் குயிலின் நல்லார் - சோலையில் வாழும் குயில்போன்ற பரத்தையர், ஆலவாய் உடையான் என்றும்-திருவாலவாயில் வீற்றிருக்கும் உடையானே என்றும், அங்கயற்கண்ணி என்றும்-அங்கயற்கண்ணியே என்றும், சொல்லி யாங்கு-சொல்லினாற் போல, ஒருங்கு சொல்லும்-ஒரு சேரச் சொல்லுகின்ற, பால் அவாம் கிளிகள்-பாலை விரும்புகின்ற கிளிகளும், பூவை-நாகணவாய்ப் பறவைகளும், குரவன் பன்முறை ஓதும்-ஆசிரியன் பலமுறை ஓதுகின்ற, நூல் அவாய்-மறையை விரும்பி, சந்தை கூட்டி நுவல்-சந்தை கூட்டிச் சொல்லுகின்ற, மறைச் சிறாரை ஒத்த-பார்ப்பனச் சிறுவர்களை ஒத்தன எ - று.

உலகுயிரெல்லாம் இறைவனுக்கு உடைமையாகலின் அவன் உடையானெனப்படுவன்; திருவாசகத்துப் பலவிடத்தும் உடையானென வருதல் காண்க. ஆலவாயை உடையான் என்னலுமாம். விளியாக வன்றிப் பெயராகவும் கொள்ளலாகும். நல்லார் சொல்வது இயல்பாகச் சொல்லுதலும், பயிற்றுவித்தலும் ஆம். ஆங்கென்னும் உவமப் பொருட்டாய இடைச்சொல், சொல்லி என்பதனுடன் ஒட்டி ஒரு சொல்லாய் நின்றது. இங்குள்ள பரத்தையரும் அம்மையப்பர் திருநாமங்களையே கூறும் பத்திமை யுடையாரென்றார். நூலென்றது, ஈண்டு மறையினை. சந்தை-பண்ணுடன் ஓது முறைமை.

"நந்தி நாம நமச்சி வாயவெனுஞ்
சந்தை யாற்றமிழ் ஞானசம் பந்தன்சொல்
சிந்தை யான்மகிழ்ந் தேத்தவல் லாரெலாம்
பந்த பாச மறுக்கவல் லார்களே"

என்னும் தமிழ்மறையுங் காண்க. அவாவும், அவாவி என்பன அவாம், அவாய் எனத் திரிந்தன. கிளிகள் பூவை என்புழி உம்மைகள் விரிக்க. ஒத்த: அன்பெறாத பலவின்பால் முற்று. (௩௧)

ஔவிய மதர்வேற் கண்ணா ரந்தளிர் விரன டாத்துந்
திவ்விய நரம்புஞ் செவ்வாய்த் தித்திக்கு மெழாலுந் தம்மிற்
கௌவிய நீர வாகிக் காளையர் செவிக்கா லோடி
வெவ்விய காமப் பைங்கூழ் விளைதர வளர்க்கு மன்றே.

(இ-ள்.) ஔவியம்-பொறாமையுடைய, மதர்-மதர்த்த, வேல் கண்ணார்-வேல்போலுங் கண்களையுடைய பரத்தையர், அம் தளிர் விரல் நடாத்தும்-அழகிய தளிர்போன்ற விரல்களால் உண்டாக்குகின்ற, திவ்விய நரம்பும்-திப்பிய நரம்பின் ஒலியும், செவ்வாய்-(அவரது) சிவந்த வாயினின்றும் வருகின்ற, தித்திக்கும் எழாலும்-மதுரமாகிய மிடற்றொலியும், தம்மில் கௌவிய - தம்முட் கலந்த, நீர

வாகி-தன்மை யுடையவாய் (நீராகி), காளையர் - இளைஞர்களின், செவிக்கால் ஓடி - செவியாகிய காலின் வழியே சென்று, வெவ்விய - கொடிய, காமப் பைங்கூழ் - காமமாகிய பயிரானது, விளைதர வளர்க்கும்-விளையும்படி (அதை) வளர்க்கும் எ - று.

ஔவியமுடைய கண்ணுரென்க; கண்ணெனினுமாம். கண்ணுரின் விரலென விரித்தலுமாம். விரலால் நடாத்தலாவது ஆராய்ந்து வாசித்தல். திவ்வியம்-தெய்வத்தன்மை, இனிமை. நரம்பு-நரம்பின் இசை. எழால்-மிடற்றுப்பாடல். நரம்பும் எழாலும் தம்மிற் கௌவி யியங்குதலை,

"வீழ்மணி வண்டுபாய்ந்து மிதித்திடக் கிழிந்த மாலை
சூழ்மணிக் கோட்டு வீணைச் சுகிர்புரி நரம்பு நம்பி
ஊழ்மணி மிடறு மொன்ருய்ப் பணிசெய்த வாறு நோக்கித்
தாழ்மணித் தாம மார்பிற் கின்னரர் சாம்பி ஞரே"

என்னுஞ் சிந்தாமணிச் செய்யுளாறு மறிக. நீரவாகி யென்பது இரட்டுற மொழிதலால் தன்மையவாகி யென்றும், நீராகி யென்றும் பொருள் படும். நீர் என்னும் பொருளில் அகரம் சாரியை. கால்வழி-வாய்க்கால். உள்ளத்தைநிலமாகக்கொள்க. 'வெவ்வியகாமம்'என்ருர்;

"ஊரு ளெழுந்த வுருகெழு செந்தீக்கு
நீருட் குளித்து முயலாகும்—நீருட்
குளிப்பினுங் காமஞ் சுடுமேகுன் றேறி
ஒளிப்பினுங் காமஞ் சுடும்"

என்பவாகலின். இசையால் காமம் மிகுமென்பதாயிற்று. அன்று, ஏ: அசை. (௬உ)

கட்புல னாதி யைந்து முவப்புறக்* கனிந்த காமம்
விட்புலத் தவரே யன்றி வீடுபெற் றவரும் வீழ்ந்து
பெட்பமுற் றமுதுங் கைப்பப் பெருங்குலக் கற்பி னார்போல்
நட்பிடைப் படுத்தி விற்கு நல்லவ ரிருக்கை யீதால்.

(இ - ள்.) விண்புலத்தவரே அன்றி - தேவர்களே அல்லாமல், வீடு பெற்றவரும்-பாச நீக்கம்பெற்ற சிவன்முத்தர்களும், வீழ்ந்து-விரும்பி, பெட்பம் உற்று-மயல் மிகுந்து, அமுதும் கைப்ப-(தத்தமக்குரிய) அமுதங்களையும் வெறுக்கும்படி, கனிந்த காமம் - முதிர்ந்த காம நுகர்ச்சியை. கண்புலன் ஆதி ஐந்தும் உவப்புற-(ஆடவர்களின்) கண் முதலிய ஐந்து புலன்களும் ஒருசேர இன்பமெய்த, பெரும் குலக் கற்பினர்போல்-பெருமை பொருந்திய உயர்குடியிற் பிறந்த கற்புடைப் பெண்டிர் போல, நட்பு - தமது நட்பின்கண், இடைப் படுத்தி-(அவர்களை) அகப்படுத்தி, விற்குநல்லவர்-விற்கின்ற பரத்தையர்களின், இருக்கை ஈது-இருப்பிடம் இத்தன்மையது எ - று.

"கண்டுகேட் டுண்டுயிர்த் துற்றறியு மைம்புலனும்
ஒண்டொடி கண்ணே யுள"

(பா - ம்.)* உவர்ப்பறக்.

என்பவாகலின், 'கட்புலனுதி யைந்து முவப்புற' என்ருர். உவர்ப்பற என்பது பாடமாயின் வெறுப்பின்ருக எனப் பொருளுரைத்துக் கொள்க. அமுது - தேவருண்டியும், மோக்கமும் ஆம். மோக்கவுலக மும் கைத்தலை,

"தாம்வீழ்வார் மென்ருேட் டுயிலி னினிதுகொல்
தாமரைக் கண்ணு னுலகு"

என்பதனு லுணர்க. அமுதுங் கைப்ப என்றது, பொதுவகையால் அவரளிக்கும் இன்பத்தின் சிறப்புக் கூறியவாறு. 'பெருங்குலக் கற் பினர்போல் நட்பிடைப்படுத்தி' என்றது மேலாயினுரையும் அவர் தம் வயமாக்கும் இயல்பு கூறியபடி. உம்மைகள் உயர்வு சிறப்பு. பெட்பம் என்பதில் அம்: பகுதிப் பொருள் விகுதி; சாரியையுமாம். ஆல்: அசை. (ருரு)

### வேளாளர் வீதி

வழுக்கறு வாய்மை மாண்புங் கங்கைதன் மரபின் வந்த
விழுக்குடிப் பிறப்பு மூவ ரேவிய வினைகேட் டாற்றும்
ஒழுக்கமு மமைச்சாய் வேந்தர்க் குறுதிசூழ் வினையுங் குன்ரு
இழுக்கறு மேழிச் செல்வர் வளமறு கியம்ப லுற்ரும்.

(இ - ள்.) வழுக்கு அறு வாய்மை மாண்பும்-தவறில்லாத வாய்மையின் மாட்சியும், கங்கைதன் மரபின் வந்த - கங்கையின் குலத்திற் ருேன்றிய, விழுக்குடிப் பிறப்பும்-சிரிய குடிப்பிறப்பும், மூவர் ஏவிய வினைகேட்டு ஆற்றும் ஒழுக்கமும் - மூவர்கள் கூறிய வினைகளைக் கேட்டு முடிக்கின்ற ஒழுக்கமும், வேந்தர்க்கு - அரசருக்கு, அமைச் சாய் - மந்திரியாய், உறுதி சூழ் வினையும் - ஆவன ஆராயும் வினையும், குன்ரு - குறையாத, இழுக்கு அறும் - கோழைபடாத, மேழிச் செல் வர் - மேழியால் வருஞ் செல்வத்தையுடைய வேளாளரின், மறுகு வளம் - வீதியின் வளப்பங்களை, இயம்பல் உற்ரும் - சொல்லத் தொடங்கினேம் எ - று.

வேளாளர் வாய்மையிற் சிறந்தாராதலை,

"மாறுகொடு பழையனூர் நீலி செய்த
வஞ்சனையால் வணிகனுயி ரிழப்பத் தாங்கள்
கூறியசொற் பிழையாது துணிந்து செந்திக்
குழியிலெழு பதுபேரு முழுகிக் கங்கை
ஆறணிசெஞ் சடைத்திருவா லங்காட் டப்ப
ரண்டமுற நிமிர்ந்தாடு மடியின் கீழ்மெய்ப்
பேறுபெறும் வேளாளர் பெருமை யெம்மாற்
பிரித்தளவிட் டிவளவெனப் பேச லாமோ"

எனச் சேக்கிழார் புராணத்துக் கூறப்பட்ட வரலாற்ருனறிக. அவர் கங்கை குலத்தின ராதலை,

"பரப்புநீர்க் காவிரி பாவைதன் புதல்வர்"

என்னும் நாடுகாண்காதை யடிக்கு "காவிரிநீர் கங்கைநீரா தலிற் கங்கைப் புதல்வரைக் காவிரிப் புதல்வ ரென்றார்" என அடியார்க்குநல்லார் கூறிய விளக்கத்தானு மறிக; உழவிற்கு இன்றியமையாத நீரினை ஆளுதலுடையா ரென்பதுபற்றி அங்ஙனம் வழங்கப்பட்டா ராதல் வேண்டும்; காராள ரென்பதுங் காண்க. மூவராவார்: அந்தணர், அரசர், வணிகர் என்போர். ஆரிய நால்வருணத்திற் சேர்ந்த சூத்திரர் நிலைமையும், தமிழ் வேளாளர் நிலைமையும் வெவ்வேறுமென்றும், பின்னுளோர் இருதிறத்தாரையும் ஒப்பக் கருதி வேளாளர்க்கு வழிபாடு கூறிவிட்டன ரென்றும் சில அறிஞர் கருதுகின்றனர்; திருக்குறள் முதலிய பழந்தமிழ் நூல்களில் உழவுத் தொழில் உயர்ந்ததாகப் பாராட்டப்படுதலும் நோக்குக. 'மன்னர் பாங்கிற் பின்னோ ராகுப' என்னும் அகத்திணையியற் சூத்திரமும், 'அறுவகைப்பட்ட' என்னும் புறத்திணையியற் சூத்திரமும், 'வேளாண் மாந்தர்க்கு' 'வேந்து விடு தொழிலில்' என்னும் மரபியற் சூத்திரங்களும், அவற்றினுரைகளும் நோக்கி வேளாளர்க்குரிய தொழில்கள் இன்னவென அறிக. 'மன்னர் பாங்கின்' என்னுஞ் சூத்திரவுரையில், வேளாளரை உழுவித் துண்போர், உழுதுண்போர் எனப் பிரித்து முதல்வருடைய பெருமைகளை விரித்துக் காட்டியுள்ளார் நச்சினார்க்கினியர். (௰௪)

வருவிருந் தேதிர்கோண் டேற்று நயனுரை வழங்கு மோசை
அருகிருந் தடிசி லூட்டி முகமனன் கறையு மோசை
உரைபெறு தமிழ்பா ராட்டு மோசைகேட் டுவகை துள்ள
இருநிதி யளிக்கு மோசை யெழுகட லடைக்கு மோசை.*

(இ - ள்.) வருவிருந்து-வருகின்ற விருந்தினரை, எதிர்கொண்டு ஏற்று-(இன்முகத்தோடு) எதிர்சென்று அழைத்து வந்து, நயன்உரை வழங்கும் ஓசை-இன்னுரை கூறும் ஒலியும், அருகு இருந்து-பக்கத்திலிருந்து, அடிசில் ஊட்டி - அறுசுவை உணவுகளையும் உண்பித்து, நன்கு முகமன் அறையும் ஓசை-குறைவற உபசாரங் கூறும் ஒலியும், உரைபெறு தமிழ்-புகழ் அமைந்த தமிழ்ப்பாக்களை (அவற்றின் சொற்சுவை பொருட்சுவை உணர்ந்து), பாராட்டும் ஓசை-பாராட்டுவதனாலுண்டாகும் ஒலியும், கேட்டு-(அவ்வாறு உணர்ந்து பாராட்டும் புலவர்கள் கூறுவதைக்) கேட்டு, உவகை துள்ள-மகிழ்ச்சி மீதூர, இருநிதி அளிக்கும் ஓசை-(அவருக்குப்) பெரும் பொருளைக் கொடுத்தலாலுண்டாகும் ஒலியும் (ஆகிய இவை), எழுகடல் அடைக்கும் ஓசை - ஏழுகடல்களின் ஒலிகளையும் கீழ்ப்படுத்தும் ஒலிகளாம் எ - று.

"இருந்தோம்பி யில்வாழ்வ தெல்லாம் விருந்தோம்பி
வேளாண்மை செய்தற் பொருட்டு"

என்பவாகலின் ஈண்டு விருந்தோம்பலை முதற்கண் எடுத்தியம்பினார். 'சேய்மைக்கட் கண்டுழி இன்முகமும், அதுபற்றி நண்ணியவழி இன்சொல்லும், அதுபற்றி உடன்பட்டவழி நன்றாற்றலும் என விருந்தோம்புவார்க்கு இன்றியமையாத மூன்று' எனப் பரிமேலழகர் கூறிய உரை இங்கே சிந்திக்கற்பாலது. தமிழ் பாராட்டும் ஓசையைக் கேட்டு என்றுரைப்பாரு முளர். கடல் அதன் ஓசைக்காயிற்று. (௰௫)

---

(பா - ம்.) * எழுகட லடக்குமோசை.

அருந்தின ரருந்திச் செல்ல வருந்துகின் ருரு மாங்கே
இருந்தினி தருந்தா நிற்க வின்னமு தட்டுப் பின்னும்
விருந்தினர் வரவு நோக்கி வித்தெல்லாம் வயலில் வீசி
வருந்திவிண் ணேக்கு மோரே ருழவர்போல் வாடி நிற்பார்.

(இ - ள்.) அருந்தினர் - உண்டவிருந்தினர், அருந்திச்செல்ல - உண்டுசெல்ல, அருந்துகின்ருரும்-உண்கின்றவர்களும், ஆங்கே-முன்னுண்டவர் போலவே, இருந்து இனிது அருந்தாநிற்க - இருந்து மகிழ்ச்சியுடன் உண்ணு நிற்க, பின்னும் இன் அமுது அட்டு-பின்பும் இனிய அமுதைச் சமைத்து, விருந்தினர் வரவுநோக்கி - வரக்கடவராகிய விருந்தினர்களின் வருகையை நோக்கி, வித்து எலாம் - விதை அனைத்தையும், வயலில் வீசி - விளைபுலத்தில் வித்தி, விண் வருந்தி நோக்கும் - மழையை வருந்தி எதிர்பார்க்கின்ற, ஓர் ஏர் உழவர் போல் - ஒரே ஏரினையுடைய உழவரைப்போல, வாடி நிற்பார் - வருந்தி நிற்பார் (அவ் வேளாளர்) எ - று.

இடையருது விருந்தோம்புதல் தோன்ற மூன்று காலத்தானுங் கூறினர்.

"செல்விருந் தோம்பி வருவிருந்து பார்த்திருப்பான்
நல்விருந்து வானத் தவர்க்கு"

என்னுந் திருவள்ளுவப்பயனுங் காண்க. விருந்தினர் வரவு தாழ்ப் பின் வாடிநிற்பா ரென்க. விருந்தோம்பற்கண் அவருக்குள்ள ஆர்வ மிகுதி கூறியவாறு. (௫௬)

வானமும் திசையும் போங்கும் புகழ்மையும் வானம் பேணும்
ஞானமும் பொறையுங் குன்ரு நன்றியு மூக்கப் பாடுங்
தானமுங் கொடையு மன்பும் வரிசையுந் தகைசா னண்பும்
மானமுந் தவஞ்செய் தீன்ற மகவுபோல் வளர்க்க வல்லார்.

(இ - ள்.) வானமும் திசையும் - வானுலகத்தினும் எட்டுத் திக்குக்களிலும், பொங்கும் புகழ்மையும் - பரந்து விளங்கும் புகழும், வானம் பேணும் ஞானமும் - வீட்டுலகை விரும்புகின்ற மெய்யுணர்வும், பொறையும்-பொறையுடைமையும், குன்ரு நன்றியும்-குன்ருத நன்றியும், ஊக்கப்பாடும்-உரனுடைமையும், தானமும் கொடையும் அன்பும் வரிசையும்-தானமும் ஈகையும் அன்பும் தகுதியும், தகைசால் நண்பும் மானமும் - பெருமை மிக்க நட்பும் மானமும் (ஆகிய இவைகளை), தவம் செய்து ஈன்ற மகவுபோல்-தவங்கிடந்து பெற்ற மகவை வளர்ப்பது போல், வளர்க்க வல்லார் - வளர்ப்பதில் வல்லவர்கள் (அவ்வேளாளர்) எ - று.

வானமென்றது ஈண்டு வீட்டுலகத்தை; 'வையத்தில் வான நணியதுடைத்து' என்புழி வானம் வீட்டுலக மென்னும் பொருளதாதலைப் பரிமேலழகர் உரையா னறிக. விண்ணுலகத்தவரும் விரும்பும் மெய்யுணர்வு என்றுரைப்பாருமுளர். குன்ரு நன்றி-நன்றிகுன்ருமை-தானம் - தக்கார்க்களிப்பது. தானம் சிறப்பும், கொடை பொதுவு

மாகும். வரிசை-தகுதி, பெருமை; 'வரிசையானேக்கின்' எனவும், 'வரிசையறிதலோ வரிதே' எனவும் வருவன காண்க. நண்பு-நட்புத் தன்மை. மானம்-நிலையிற் ருழாமையும், தாழ்வு வந்துழி உயிர் வாழா மையும் ஆம். குறிக்கொண்டு பேணி வளர்ப்பாரென்பார் 'தவஞ்செய் தீன்ற மகவுபோல் வளர்க்க வல்லார்' என்ருர். புகழ்மை, மை: பகுதிப்பொருள் விகுதி; புகழ்த்தன்மையுமாம். (கஎ)

## வணிகர் வீதி

புல்லியோர் பண்டங் கொள்வார்
வினவினப் பொரு*டம் பக்கல்†
இல்லெனி னினமா யுள்ள
பொருளுரைத் தெதிர்ம றுத்தும்
அல்லதப் பொருளுண் டென்னின்
விலைசுட்டி யறுத்து நேர்ந்துஞ்
சொல்லினு மிலாபங் கொள்வார்
தொன்மர பிருக்கை சொல்வாம்.

(இ - ள்.) கொள்வார்-வாங்குவார், புல்லி-வந்து, ஓர் பண்டம் வினவின்-ஒரு பொருள் உண்டோ என வினவுவராயின், அப்பொருள் தம் பக்கல் இல் எனின்-அந்தப் பொருள் தம்மிடத்து இல்லையாயின், இனமாய் உள்ள பொருள் உரைத்து-அதற்கு இனமாயுள்ள பொருள் உண்டு என்று கூறுவதனல், எதிர்மறுத்தும்-கேட்ட பொருள் இல்லை என்றும், அப்பொருள் உண்டு என்னின் - அவ்வாறின்றி அந்தப் பொருள் தம்மிடத்திருந்ததாயின், விலைசுட்டி அறுத்தும் - விலையை வரையறுத்துக் கூறியும், நேர்ந்தும்-கொடுத்தும், சொல்லினும் இலாபம் கொள்வார்-பொருளாலன்றிச் சொல்லானும் இலாபத்தைப்பெறு கின்ற வணிகர்களின், தொல்மரபு-பழமை தொட்டு வருகின்றமரபின், இருக்கை சொல்வாம்-வீதியின் பெருமையைக் கூறுவாம் எ - று.

"தம்பா லில்ல தில்லெனி னினனய்
உள்ளது கூறி மாற்றியு முள்ளது
சுட்டியு முரைப்பர் சொற்சுருங் குதற்கே"

என்னும் நன்னூற் சூத்திரப் பொருள்பற்றி யெழுந்தது இச்செய்யுள். பயறுளதோ என்று வினயினர்க்கு அது தம்பக்கல் இல்லையாயின் இனனயுள்ள பிறிதுபொருளைச்சுட்டி உழுந்து உளது என்றும், பயறு உளதாயின் இத்துணைப் பயறு உளது, இன்ன விலையிற்று என்றும் கூறுவர் என்பது கருத்து. இங்ஙனம் கூறுதல் வினவும் விடையுமாகிய சொற்கள் பல்காது சுருங்குதற் பொருட்டென்க. இது பண்டைத் தமிழ் வாணிகரது முயற்சித்திறனை விளக்குதற்கு உறு சான்ருகும். 'விலைசுட்டி யறுத்து நேர்ந்தும்' என்பதற்கு, பொருளைச் சுட்டியும் விலையை வரையறுத்தும் என்றும் கூறலுமாகும். 'அறுத்து நேர்ந்து' என்பதற்கு வரையறுத்துக் கூறுதலால் அப்பொருள் உளதென்பதனை

(பா - ம்.) * வினவின பொருள். † பக்கம்.

உடன்பட்டு என்றுரைத்தலுமாம். விலை கூறுமிடத்து இலாபத்தை வெளிப்படையாகச் சொல்லுதலுங் கொள்க. 'பல் பண்டம் பகர்ந்து வீசும்' என்னும் பட்டினப்பாலையடிக்கு நச்சினார்க்கினியர் இப்பொருள் கூறியிருத்தல் காண்க.

"எப்பொரு ளாயினு மல்ல தில்லெனின்
அப்பொரு ளல்லாப் பிறிதுபொருள் கூறல்"
"அப்பொருள் கூறிற் சுட்டிக் கூறல்"

என்னும் தொல்காப்பியச் சூத்திரங்களும், அவற்றின் உரைகளும் நோக்கி அவற்றோ டிதனிடையுள்ள ஒற்றுமை வேற்றுமை காணற்பாலன. உம்மை: எச்சப்பொருட்டு. (நஅ)

[கலிநிலைத்துறை]

நீல வேதிமேற் பளிங்கினு னிழற்சுவர் நிறீஇமின்
கால வாலிய வைரவாட் கானிரைத் தும்பர்க்
கோல வானிலாச் *சோரிமணி குயிற்றிவெண் மாடம்
மாலை போல்வகுத் தியற்றின பீடிகை மறுகு.

(இ - ள்.) பீடிகை மறுகு-கடை வீதிகளில், நீலவேதிமேல்-நீல மணியாலாகிய திண்ணையின்மேல், நிழல் பளிங்கினால் சுவர் நிறீஇ-ஒளி பொருந்திய பளிங்கினாற் சுவரை நிறுத்தி, வாலியவாள்-வெள்ளியஒளியினையுடைய, வைரக்கால்-வைரத்தூண்களை, மின்கால - ஒளிவீச, நிரைத்து-வரிசையாக நட்டு, உம்பர்-மேலிடத்தில், கோலம்-அழகிய, வான்நிலாச்சொரிமணி-வெள்ளிய நிலாவைப் பொழிகின்ற சந்திரகாந்தக் கற்களை, குயிற்றி-பதித்து, மாலைபோல்-மலர் மாலையைப்போல், வெண்மாடம் வகுத்து இயற்றின - வெள்ளிய மாடங்கள் வரிசையாக அமைத்துக் கட்டப்பட்டன எ - று.

இயற்றின : படுசொல் தொக்குநின்ற செயப்பாட்டுவினை. (௬௧)

திரைய ளிப்பவுந் திரைபடு தீம்புனல் வேலிக்
கரைய ளிப்பவுங் கரையிலா னிரை†படு கானத்
தரைய ளிப்பவுந் தரைகிழித் தூன்றிவிண் டாங்கும்
வரைய ளிப்பவும் வாங்கிவாய் மடுப்பன மாடம்.

(இ - ள்.) மாடம்-பண்டசாலைகள், திரை அளிப்பவும்-கடல் தரும் பொருள்களையும், திரைபடு தீம்புனல் வேலி-அலைகளையுடைய இனிய நீரினை வேலியாகவுடைய, கரை அளிப்பவும்-மருத நிலம் தரும் பொருள்களையும், கரை இல் - அளவில்லாத, ஆன் நிரைபடு - பசு மந்தைகளையுடைய, கானத்தரை அளிப்பவும்-முல்லை நிலம் தரும் பொருள்களையும், தரை கிழித்து-புவியைப் பிளந்து, விண் ஊன்றி தாங்கும்-வானத்தை ஊன்றித் தாங்குகின்ற, வரை அளிப்பவும்-மலை தரும் பொருள்களையும், வாங்கி வாய்மடுப்பன-வாங்கித் தம்மிடத்து நிறைப்பன எ - று.

---

(பா - ம்.) * வாணிலாச். † கரையிலா நிரை.

திரை: அதனையுடைய கடலுக் காயிற்று. சூழ்ந்திருத்தலின் புனலை வேலி யென்றார்- கரை-கரைகளையுடைய மருதம். கானத் தரை-கானமாகிய தரை; முல்லை நிலம். விண்ணினைத் தாங்குவது போன்றிருத்தலின், 'விண்டாங்கும்.' என்றார். மாடம் என்றது பண்ட சாலைகளை. அளிப்ப, என்பன: வினையாலணையும் பெயர். குறிஞ்சி முல்லை மருதம் நெய்தல் என்னும் முறை எதிராக உரைக்கப்பட்டது நான்கு திணையிலும் உண்டாம் பொருள்கள் இவை என்பதனை,

"அகில்கறி கோட்ட மொடுதக் கோலம்
குங்கும மைந்தும் மலைபடு திரவியம்"

"அரக்கிரு லின்றே னணிமயிற் பீலி
நாவி கான்படு திரவிய மைந்தே"

"செந்நெல் செவ்விள நீர்சிறு பயறு
கன்னல் கதலி யெனப்பெயர் பெற்ற
ஐந்து நன்னாட் டமைந்த திரவியம்"

"பவள முத்துச் சங்கொக் கோலை
உப்புக் கடல்படு திரவிய மைந்தே"

என்னும் பிங்கலந்தைச் சூத்திரங்களா னறிக. (சுo)

கரிய கம்பலக் கிடுகின்மேற் கதிர் விடு பவளத்
தெரியல் பொன்னரி மாலிகை தெண்ணிலாச் சோரியும்
பரிய நித்தில மணிவட மரகதப் பசுந்தார்
விரிய விட்டன விந்திர வின்னிரை யனைய.

(இ - ள்.) கரிய கம்பலக் கிடுகின்மேல்-கரிய கம்பலம் வேய்ந்த சட்டத்தின் மேல், விரிய விட்டன-விரியும்படி விட்டனவாகிய, கதிர் விடு பவளத் தெரியல்-ஒளிவீசுகின்ற பவளமாலைகளும், பொன் அரி மாலிகை - பொன்னால் அரிந்து செய்த மாலைகளும், தெள் நிலாச் சொரியும்-தெளிந்த நிலவைப் பொழிகின்ற, பரிய நித்திலமணிவடம்-பெரிய முத்துமாலைகளும், மரகதப் பசுந்தார்- பசிய மரகத மாலைகளும், இந்திர வில் நிரை அனைய-வரிசையாகவுள்ள இந்திர வில்லுகளை ஒத்தன எ - று.

மாலைகள் விளங்கித் தோன்றுதற்குக் கரிய கம்பலத்தின்மேல் இட்டு வைப்பர்; கம்பலம் முகிலையும், மாலைகள் இந்திரவில்லையும் போலுமென்க. பலநிற முடைமையின் இந்திரவில் உவமம். (சுக)

நாள்க ளுங்குளிர் திங்களு ஞாயிறு மேனைக்
கோள்க ளுங்குளிர் விசும்போரிக் குடிபுகுந் தாங்கு
வாள்கி டந்திராப் பகலொளி மழுக்கலால் வணிகர்
ஆள்க லம்பகர் பீடிகை தறக்கா டனைய.

(இ - ள்.) நாள்களும் - நாண்மீன்களும், குளிர் திங்களும் - குளிர்ந்த மதியும், ஞாயிறும் - இரவியும், ஏனைக்கோள்களும் - மற்றைக் கோள்களும், குளிர்விசும்பு ஒரீஇ - குளிர்ந்த வானத்தினின்று நீங்கி, குடிபுகுந்தாங்கு - குடி புகுந்தாற்போல, வாள்கிடந்து - ஒளி தங்கி, இராப்பகல் ஒளி மழுக்கலால் - இரவின் ஒளியையும் பகலின் ஒளியையும் மழுங்கச் செய்தலால், ஆள் கலம் பகர் வணிகர் பீடிகை- அணியும் கலன்களை விற்கின்ற வணிகர் கடைவீதிகள், துறக்க நாடு அனைய - வானுலகை ஒத்தன எ - று.

நாள் – நாண்மீன், நட்சத்திரம். ஏனைக் கோள்களாவன:—செவ்வாய், புதன், வியாழன், வெள்ளி, சனி என்பன. இராகு கேதுக்கள் சாயை யாதலின் ஈண்டு அவை கொள்ளற் பாலனவல்ல. இரவிலும் பகலிலும் தோன்றும் அனைத்தொளியும் ஒருங்கு தொக்காற் போலுதலின் அவ்வொளி இரவிலும் பகலிலும் தனித்தனியுள்ள ஒளிகளை மழுங்கச் செய்வதாயிற்று; அதனால் இரவு பகல் என்னும் பொழுது வேற்றுமை புலனாகாமையால் அவ்வேற்றுமையில்லாத துறக்க நாட்டினைப் போலும் என்றார். ஆளுதல் – ஈண்டு அணிதல். (௬௨)

பன்னி றத்தபல் பெருவிலைப் பட்டெலா மவண
அன்ன பட்டின்மேம் படுவிலைப் பருத்தியு மவண
எந்நி லத்தரும் பொருள்பதி னெழுபுல வணிகர்
மன்னி ருக்கையு மரும்பெறல் வளனெலா மவண.

(இ - ள்.) பல் நிறத்த - பல நிறத்தினையுடைய, பெரு விலை - பெரிய விலையினையுடைய, பல் பட்டு எலாம் அவண - பலவகையான பட்டாடைகள் அனைத்தும் அவ்விடத்துள்ளன; அன்னபட்டின் - அத்தன்மையவான பட்டாடைகளின், மேம்படு விலை - மேம்பட்ட விலையினையுடைய, பருத்தியும் அவண - பருத்தி நூலாடைகளும் அங்குள்ளன; எந்நிலத்து அரும்பொருள் (எலாம்)-எந்த நாட்டினுங் கிடைத்தற்கரிய பொருள்கள் எல்லாமும், பதினெழு புலவணிகர் மன் இருக்கையும் - (தமிழ் ஒழிந்த) பதினேழு தேயவணிகர்களின் நிலைபெற்ற உறைவிடங்களும், பெறல் அரும் வளன் எலாம்-பெறுதற்கரிய(பிற) செல்வங்கள் எல்லாமும், அவண-அக் கடைவீதிகளிலுள்ளன எ - று.

அவண: பலவின்பாற் குறிப்பு முற்று. பட்டு, பருத்தி யென்பன அவற்றானாய ஆடைகளுக்கு ஆகுபெயர். எந்நிலத்தும் என உம்மை விரிக்க. எந்நிலத் தரும் பொருள் என்பதற்கு எந்நாட்டினுமுள்ள அரிய பொருள்கள் என்று கொள்ளுதலுமாம். அரும் பொருள்-கருப்பூரம் முதலியன; பட்டினப்பாலையில் 'அரியவும்' என்பதற்குச் 'சீனம் முதலிய இடங்களினின்றும் வந்த கருப்பூரம், பனிநீர், குங்குமம் முதலியனவும்' என நச்சினார்க்கினியர் உரை கூறியிருப்பதுங் காண்க. பொருளும், எலாமும் என்னும் உம்மைகள் தொக்கன. (௬௩)

மரக தத்தினு லம்மிகள் வைரவா ளுலக்கை
உரல்கள் வெள்ளியா லடுப்பகில் விறகுலை பனிநீர்
அரிசி முத்தழல் செம்மணி யடுகலன் பிறவும்
எரிபொ னாலிழைத் தாடுப விவர்சிறு மகளிர்.

(இ - ள்.) இவர் சிறு மகளிர்-இவ்வணிகரின் சிறுமிகள், மரகதத்தினால் அம்மிகள் - மரகதங்களால் அம்மிகளும் குழவிகளும், வாள் வைரம் உலக்கை உரல்கள்-ஒளிபொருந்திய வைரங்களால் உலக்கைகளும் உரல்களும், வெள்ளியால் அடுப்பு - வெள்ளியினால் அடுப்பும் (அமைத்து), அகில் விறகு - அகிற் கட்டையை விறகாகவும். உலை பனிநீர்-பனிநீரை உலைநீராகவும், முத்து அரிசி - முத்துக்களை அரிசியாகவும், செம்மணி அழல் - சிவந்த மாணிக்கத்தை நெருப்பாகவும் (கொண்டு), அடுகலன் பிறவும் - பிற சமையற் கலன்களனைத்தையும், எரிபொனால் - ஒளியினையுடைய பொன்னால், இழைத்து - இயற்றி, ஆடுப - விளையாடுவர் எ - று.

அம்மிகள் என்புழி இனம்பற்றிக் குழவியும் கொள்ளப்பட்டது. வாளால் என விரிக்க. உலக்கையுரல்கள் உம்மைத் தொகை. அமைத்து, கொண்டு என்னுஞ் சொற்கள் இயைபு நோக்கி வருவிக்கப் பட்டன. (௬௪)

செயிரிற் றீர்ந்தசெம் பொன்னினாற் றிண்ணிலைக் கதவம்
வயிரத் தாழுடைத் தவர்கடை வாயிலு மென்றால்
அயிரிற் றீர்ந்தபே ரறிஞரு மனையர்தஞ் செல்வத்
தியலிற் றுமென வரையறுத் திசைப்பதை யெவனோ.

(இ - ள்.) அவர் கடைவாயிலும்-அவ்வணிகரின் கடைவாயிலும், செயிரில் தீர்ந்த - குற்றத்தினீங்கிய, செம்பொன்னினால் - சிவந்த பொன்னினால், திண்நிலைக் கதவம்-வலிய நிலையோடு கூடிய கதவும், வயிரத்தாழ் - (அதற்கு) வயிரத்தினால் தாழக்கோலும், உடைத்து என்றால்-உடையது என்று சொன்னால், அயிரில் தீர்ந்த பேர் அறிஞரும்-ஐயத்தினீங்கிய பெரிய அறிஞர்களும், அனையர் தம்-அவ்வணிகருடைய, செல்வத்து இயல்-செல்வத்தினளவு, இற்று ஆம் என-இவ்வளவினதென்று, வரையறுத்து - முடிவுகட்டி, இசைப்பது எவன் - கூறுவது எவ்வாறு? (முடியாது என்றபடி) எ - று.

செயிரிற்றீர்ந்த பொன் - ஓட்டற்றபொன். வாயில் உடைத்து எனக்கூட்டுக. ஐயத்தினீங்கிய பேரறிஞராவார் ஆதித்தனது செலவு முதலியவற்றையும் அறியும் அறிவினையுடையார்.

"செஞ்ஞா யிற்றுச் செலவுமஞ் ஞாயிற்றுப்
பரிப்பும் பரிப்புச் சூழ்ந்தமண் டிலமும்
வளிதிரிதரு திசையும்
வறிது நிலைஇய காயமு மென்றிவை
சென்றளந் தறிந்தோர் போல வென்றும்
இனைத்தென் போரு முளரே"

என்னும் புறப்பாட்டும் காண்க. வாயிலும், அறிஞரும் என்னும் உம்மைகள் முறையே இழிவையும் உயர்வையும் சிறப்பிக்க வந்தன. தம், ஆம் : சாரியை. இசைப்பதை : வினைத்திரி சொல், ஐ : சாரியை என்னலுமாம். ஓ : அசை. (௬௫)

எரிக்கு றும்பொறி யனையசெம் மணிசுட ரேறிபோன்
வரிச்சு ரும்புநேர் மரகத முத்துவாள் வைரந்
தெரிப்ப ருந்துகிர் சிந்தின செல்லுநா ளொன்றுக்
கரிப்பர் கையகப் படுவன வாயிரத் திரட்டி.

(இ-ள்.) எரிக் குறும்பொறி அனைய-நெருப்பின் சிறிய பொறியை யொத்த, செம்மணி-சிவந்த மாணிக்கங்களும், சுடர் எறி பொன்-ஒளி வீசுகின்ற பொன்னும், வரிச் சுரும்பு நேர் மரகதம்-கீற்றுக்களையுடையவண்டினை யொத்த மரகதங்களும், முத்து-முத்துக் களும், வாள் வைரம்-ஒளிபொருந்திய வைரங்களும், தெரிப்பு அரும் துகிர்-விலை தெரிந்து சொல்லுதற்கரிய பவளங்களுமாக, சிந்தின-சிதறிக் கிடக்கின்றவை, அரிப்பர் செல்லு நாள் ஒன்றுக்கு-அரித் தெடுப்போர் செல்லுகின்ற ஒவ்வொரு நாளும், கை அகப்படுவன-(அவர்) கையிற் கிடைப்பன, ஆயிரத்து இரட்டி-(வகைக்கு) இரண் டாயிரங்களாம் எ - று.

தெரிப்பு - தெரிந்து சொல்லுதல். நாளொன்றுக்கு-நாளொன் றில். சிந்தின, அகப்படுவன : வினையாலணையும் பெயர்கள். ஆயிரத் திரட்டி யென்றது எண்ணிறந்தன வென்றபடி. (சுசு)

பாய தோன்மரப் பறவைபோற் பயன்கோள்வான் பதினெண்
தேய மாந்தருங் கிளந்தசோற் றிரட்சிதான் றூய
மாயை காரிய வொலியன்றி வான்முதற் கருவின்
ஆய காரிய வோசையே யாய்க்கிடந் தன்றே.

(இ-ள்.) பாய தோன்மரம்-பரந்த ஆலமரத்தில், பறவைபோல்-(பயன்கொள்ளுதற் பொருட்டுக் கூடிய) பறவைகளைப்போல், பயன் கொள்வான்-பயனைக் கொள்ள வந்த, பதினெண்தேய மாந்தரும்-பதினெண்மொழிகள்வழங்கும்நிலத்திலுள்ளமக்களும், கிளந்தசொல் திரட்சிதான்-பேசுகின்ற சொற்றொகுதிதான், தூய மாயை காரிய ஒலி அன்றி-சுத்த மாயையின் காரிய ஒலியாக அல்லாமல், வான்முதல் கருவின் ஆய-வானுயமுதற்காரணத்தினாலுண்டாகிய, காரிய ஓசையே ஆய்க்கிடந்தன்று-காரிய ஓசையேயாகி அமைந்தது எ - று.

தொன்மரம்-ஆலமரம். பயன் கொள்வான் என்பது பறவைக் கும் கூட்டப்பட்டது. பதினெண் தேயமாவன-செந்தமிழ் கொடுந் தமிழ் என்றிருபகுதியாகிய தமிழ் வழங்கு நிலமும், சிங்களம் முதலிய ஏனை மொழிகள் வழங்கு நிலங்களுமாம். தமிழொழிந்த பதினேழு நாடுகள் இவை யென்பதனை,

"சிங்களஞ் சோனகஞ் சாவகஞ் சினந் துளுக்குடகம்
கொங்கணங் கன்னடங் கொல்லந் தெலுங்கங் கலிங்கம்வங்கம்
கங்க மகதங் கடாரங் கவுடங் கடுங்குசலம்
தங்கும் புகழ்த்தமிழ் சூழ்பதி னேழ்புவி தாமிவையே"

என்னுஞ் செய்யுளாலறிக. சுத்தமாயையின் காரியவொலியாவது பொருள் பயக்கும் எழுத்து வடிவான வொலி. ஆகாய காரிய வோசை

யாவது பொருள் பயவாது சத்த மாத்திரையாயிருப்பது. வான் முதற்கருவின் என்பதற்கு ஆகாய முதலிய ஐம்பூத காரணங்களால் எனப் பொருள் கூறுவாறு முளர்; ஏனைப் பூதங்களிலும் வானின் கலப்பினாலேயே ஓசையுண்டாமாகலின் அங்ஙனங் கூறுதல்வேண்டா வென்க. ஒலி, ஓசை என்பன ஒரே பொருளில் வழங்குவதுண்டாயினும், அவை முறையே எழுத்து வடிவையும், எழுத்து வடிவில்லாத சத்தத்தையும் உணர்த்துஞ் சொற்களாக ஆன்றோரால் ஆளப்படுகின்றன ; திருநாவுக்கரசுகள் தேவாரத்தில் 'ஓசையொலி யெலா மானாய் நீயே' என்று கூறுவது அவ்விரண்டற்கும் வேற்றுமை யுண்மையைப் புலப்படுத்தா நிற்கும். இச்செய்யுளில் 'மாயை காரிய வொலி' என்றும், 'வான் முதற் கருவினாய காரிய வோசை' என்றும் கூறியது இவ்வேற்றுமை குறித்தே யாகும். பலமொழிகளும் ஒருங்கு பேசப்படுங்கால் அவை மயங்குதலுற்று ஒரு மொழியின் வடிவுந் தோன்றாமையால் ஆகாயகாரிய வோசையேயாயிற்று என்றார்.

"மூசுதே னிறாலின் மூச மொய்திரை யியம்பி யாங்கும்
ஓசையென் றுணரி னல்லா லெழுத்துமெய் யுணர்த லாகா"

என்னும் சிந்தாமணிச் செய்யுளோடு இதனை ஒப்பு நோக்குக. ஓசையே என்பதில் ஏ : தேற்றம். கிடந்தன்று-கிடந்தது. ஏ : அசை. (சுஎ)

ஒழிவில் வேறுபல் பொருளுமே ழுலோகமும் பிறவும்
வழுவில் வேறுபல் கலைகளு மரபுளி வகுத்துத்
தழுவி வேண்டினர் தாங்கொளத் தக்கவா பகரா
அழிவி லாமறை போன்றன வாவண வீதி.

(இ - ள்.) ஒழிவு இல் வேறுபல் பொருளும்-நீங்குத லில்லாத பலவேறு வகையான பொருள்களையும், ஏழு உலோகமும்-ஏழு உலோகங்களையும், வழு இல் வேறு பல் கலைகளும்-குற்றமில்லாத பலவேறு வகைப்பட்ட கலைகளையும், பிறவும் - பிறவற்றையும், மரபுளி-முறையால், வகுத்து-வகைப்படுத்தி, தழுவி வேண்டினர் தாம் கொள-அணுகின்று விரும்பியவர்கள் கொள்ளும்படி, தக்கவா பகரா-தக்கவாறு பகர்ந்து, ஆவண வீதி-கடைவீதிகள், அழிவு இலா மறைபோன்றன-அழிவில்லாத வேதங்களைப் போன்றன எ - று.

கடை வீதிக்கியைய உலோகம் என்பதற்குப் பொன் முதலியன வென்றும், கலைகள் என்பதற்கு ஆடைகள் என்றும், கொளத்தக்கவா பகரா என்பதற்கு வாங்குமாறு விற்று என்றும், மறைக்கியைய அவற்றுக்கு முறையே பூலோகம் முதலியன வென்றும், அறுபத்து நாற்கலைகள் என்றும், பக்குவத்திற்கேற்ப ஏற்றுக்கொள்ளுமாறு கூறி யென்றும் பொருள் கொள்க. பொன் முதலிய ஏழு உலோகங்கள் இவையென்பதனை,

"பொன்னும் வெள்ளியும் செம்பும் இரும்பும்
அன்ன ஈயமும் ஐவகை யுலோகம்"

"தராவொடு கஞ்சந் தானுங் கூட்டி
எழுவகை யுலோகம் என்னவும் படுமே"

என்னும் திவாகரச் சூத்திரங்களா னறிக. மரபுளி-மரபால் ; உளி: மூன்றன் பொருள்படுவதோ ரிடைச்சொல். (சுஅ)

திக்கே லாம்புகழ் மதுரையைச் சிவபுர மாக்கி
முக்க ணுயக னரசுசெய் முறையினுக் கேற்பத்
தக்க தோழனே டளகைமா நகருறை தயக்கம்
ஒக்கு மங்நகர் வாணிக ருறையுள்சூழ் நியமம்.*

(இ - ள்.) அந்நகர் வாணிகர் - அந்த மதுரை மாநகரத்துள்ள வாணிகர்களின், உறையுள் சூழ் நியமம் - இல்லங்கள் சூழ்ந்த கடை வீதியின் விளக்கம், திக்கு எலாம் புகழ் - எல்லாத் திசையாராலும் புகழப்படுகின்ற, மதுரையை - மதுரைமாநகரை, சிவபுரம் ஆக்கி - சிவ புரமாகச் செய்து, முக்கண் நாயகன் - மூன்று கண்களையுடைய இறைவன், அரசு செய் முறையினுக்கு ஏற்ப - செங்கோ லோச்சிய முறைமைக்குப் பொருந்த, தக்க தோழனேடு - தகுதியான நண்பனாகிய குபேரனேடு, அளகைமாநகர் உறை தயக்கம் ஒக்கும் - அளகை மாநகரமானது தயங்கிய விளக்கத்தை ஒக்கும் எ - று.

முக்கணுயகன் அரசு புரிதலின் மதுரை சிவபுரமாயிற்று. தக்க- தோழனு யிருத்தற்குத் தக்க. உறையுள் - உறைவிடம்; உள்:பெயர் விகுதி. (சுகூ)

மன்னவர் வீதி

ஒற்றை யாழியா னுலகிரு ளோதுக்குமா போலச்
செற்ற நேமியாற் கலியிருள் தின்றுகோ லோச்சி
மற்ற டம்புய வலியினுன் மாறடு சீற்றக்
கோற்ற மன்னவர் விழுக்குடிக் கோமறு குரைப்பாம்.

(இ - ள்.) ஒற்றை ஆழியான்-ஓர் உருளை பூண்ட தேரினையுடைய சூரியன், உலகு இருள் ஒதுக்குமாபோல - உலகின்கண் புறவிருளை நீக்குவதுபோல, செற்றம் நேமியால்-(தீயோரிடத்தில்) வெகுளியை யுடைய ஆணைத் திகிரியால், கலி இருள் தின்று-(குடிகளின்) துன்ப மாகிய இருளைக் கெடுத்து, கோல் ஓச்சி - செங்கோல் நடாத்தி, மல் தடம்புய வலியினுல் - வளவிய பெரிய தோள் வலிமையால், மாறு அடு சிற்றம் - பகைவரைக் கொல்லுகின்ற செற்றத்தினையும், கொற்றம் - வெற்றியையுமுடைய, மன்னவர் விழுக்குடி - அரசர்களின் சீரிய குடிகளையுடைய, கோ மறுகு உரைப்பாம் - அரச வீதியின் பெருமையைச் சொல்வாம் எ - று.

ஒன்று என்பது ஐகாரச்சாரியை பெற்று ஒற்றை யென்ருயது. ஆழி அதனையுடைய தேருக்காயிற்று. ஒதுக்குமாறு என்பது ஈறு கெட்டது. செற்ற நேமி - ஆக்கினு சக்கரம். மல் - வளன்; மற் போருமாம். மாறு - பகை; பகைவரை யுணர்த்திற்று. (எ0)

தரங்க வேலைக டம்மையே தாளுறப் பிணித்துத்
துரங்க மாவெனத் தொகுத்தமங் துரைபல வருவி
இரங்கு மோரறி வுயிர்வரை யாவையும் பெயர்த்து
மரங்கோல் யானைபோற் பிணித்தகூ டம்பல மன்னே.

---

(பா - ம்.) * நிகமம்.

(இ - ள்.) தரங்க வேலைகள் தம்மையே-அலைகளையுடைய கடல் களையே, தாள் உறப் பிணித்து - காலை இறுகக் கட்டி, துரங்கமா என - குதிரைகளாக, தொகுத்த-தொகுக்கப் பெற்றுள்ள, மந்துரை பல - பரிச்சாலைகள் பல; அருவி இரங்கும் - அருவி ஒலிக்கின்ற, ஓர் அறிவு உயிர் - ஓரறிவுயிராகிய, வரை யாவையும் பெயர்த்து-மலைகள் அனைத்தையும் தோண்டி, மரம் கொல் யானைபோல்-மரங்களை முறிக் கின்ற யானைகளாக, பிணித்த கூடம் பல - கட்டப்பட்டுள்ள யானைக் கூடங்கள் பல உள்ளன (அவ்வீதியில்) எ - று.

தரங்கம் புரவிக்கு உவமம். புரவியின் மிகுதி கூறுவார் வேலைகள் தம்மையே தொகுத்த என்றார். துரங்கமா - துரங்கமாகிய மா : இரு பெயரொட்டு. மதத்திற்கு அருவியும் யானைக்கு மலையும் உவமம். வளர்தலுண்மையின் ஓரறிவுயிர் என்றார். மரம் - கட்டுத் தறியுமாம். யானைபோல்-யானைகளாக. தற்குறிப்பேற்றம். மன், ஒ: அசை. (எக)

மழுக்கள் வச்சிரங் கார்முகம் வாளிமுக் குடுமிக்
கழுக்கள் சக்கர முடம்பிடி கப்பண நாஞ்சில்
எழுக்க ணுந்தகம் பலகைதண் டிவைமுதற் படையின்
குழுக்க ளோடிகல் விந்தைவாழ் கூடமும் பலவால்.

(இ - ள்.) மழுக்கள் வச்சிரம் கார்முகம் வாளி-மழுக்கள் வச்சி ரங்கள் வில் அம்பு, முக்குடுமிக் கழுக்கள் - முத்தலைச் சூலங்கள், சக்கரம் உடம்பிடி - திகிரி கைவேல், கப்பணம்-இருப்பு நெருஞ்சின் முள், நாஞ்சில் - கலப்பை, எழுக்கள்-வளை தடிகள், நாந்தகம்-வாள், பலகை - கேடகம், தண்டு இவை முதல் - தண்டம் இவை முதலான, படையின் குழுக்களோடு-படைக்கலக் கூட்டத்தோடு, இகல் விந்தை வாழ் கூடமும் பல - வெற்றிக்குரிய கொற்றவை வாழ்கின்ற கூடங் களும் பலவுள்ளன (அவ்வீதியில்) எ - று.

கார்முகம் - வில்; போருக்குரியது என்னும் பொருளுள்ள தத்தி தாந்தம். உடம்பிடி - கைவேல். கப்பணம் - யானை நெருஞ்சின் முள் வடிவாக எஃகினுற் செய்யப்படுவது. விந்தை-துர்க்கை. கொற்றவை. படைக்கலக் கொட்டிலில் விந்தைவாழு மென்றார். ஆல்: அசை.(எஉ)

தொளைய கல்லைமா லெனக்கொண்டு சுழற்றியும் செந்தாள்
அளையும் யானைபோற் பாய்ந்துமல் லாற்றியு மாற்றல்
விளைய வாளொடு கேடகம் வீசியும் வென்றி
இளைய ராடமர் பயில்வன வெண்ணிலாக் கூடம்.

(இ - ள்.) தொளைய கல்லைக் கொண்டு - தொளையையுடைய கல்லை ஏந்தி, மால் எனச் சுழற்றியும் - திருமால் திகிரியைச் சுழற்றி னாற்போல் சுழற்றியும், செம் தாள் அளையும் யானைபோல் - செம் புழுதியிற் படிந்த யானைகளைப்போல, பாய்ந்து மல் ஆற்றியும்-செந் நிலத்திற் பாய்ந்து மற்போர் செய்தும், ஆற்றல் விளைய - வலிமை முதிர, வாளொடு கேடகம் வீசியும் - வாட்படையோடு பரிசையும் பற்றி (ஒருவர்மேலொருவர்) வீசியும், வென்றி இளையர் - வெற் றியையுடைய அரசிளங் குமரர்கள், ஆடு அமர் பயில்வன - வெற்றி

பொருந்திய போர்த்தொழில் பயிலும் இடமாகவுள்ளன, எண் இலாக் கூடம் - அளவிறந்த கூடங்கள் எ - று.

திகிரியைச் சுழற்றினாற்போல வென்பது 'தொளைய கல்லை' என்னும் பொருளுக்கு ஏற்பவும், செந்நிலத்திற் பாய்ந்து என்பது 'செந்தாள் அளையும்' என்னும் உவமைக்கு ஏற்பவும் வருவிக்கப்பட்டன. பயில்வன வாகிய கூடங்கள் உள்ளன என முடித்தலுமாம். (எங)

[அறுசீரடியாசிரிய விருத்தம்]

தேசவிர் நீல மாடஞ் செம்மணிச் சென்னி மாடங்
காசறு கனக மாடஞ் சந்திர காந்த மாடம்
ஆசற விளங்கு மின்ன மாடநீண் மாலை கூடற்
பாசிழை மடந்தை பூண்ட பன்மணிக் கோவை யன்ன.

(இ - ள்.) தேசு அவிர் - ஒளி விளங்குகின்ற, நீல மாடம் - நீல மணியாலாகிய மாளிகையும், செம்மணி - சிவந்த மாணிக்கங்களாற் கட்டப்பெற்ற, சென்னிமாடம் - முடியையுடைய மாளிகையும், காசு அறு கனகமாடம் - குற்றமற்ற பொன்னா லியற்றப்பட்ட மாளிகையும், சந்திரகாந்த மாடம் - சந்திரகாந்தக் கல்லாலமைக்கப்பெற்ற மாளிகையும் ஆகிய, ஆசு அற விளங்கும் - குற்ற மின்றாக விளங்குகின்ற, இன்னமாடம் நீள்மாலை - இந்த நீண்ட மாளிகை வரிசைகள், கூடல்-மதுரையாகிய, பாசிழை மடந்தை பூண்ட - பசிய அணிகலன்களையுடைய மங்கையானவள் அணிந்த, பல் மணிக் கோவை அன்ன - பலவகை மணிகளைக் கோத்த வடங்களை ஒத்திருந்தன எ - று.

மாலை-வரிசை. பசுமை இழை, பாசிழை யென்றாயது. (எச)

விரையகல் கதுப்பி னல்லார் வீங்கிளங் கொங்கை போழ்ந்த
வரையகன் மார்ப மன்றி வடுப்படார் தமக்கன் பில்லார்
உரையகன் மான வாற்றா லொழுகுவார் பலகை யோள்வாட்
கரையகல் விஞ்சை வீரர் கணம்பயில் காட்சித் தெங்கும்.

(இ - ள்.) வரை அகல் - மலைபோ லகன்ற, மார்பம் - மார்பின்கண், விரை அகல் - மணமிக்க, கதுப்பின்-கூந்தலையுடைய, நல்லார்-மகளிரின், வீங்கு இளம் கொங்கை-பருத்த இளமையாகிய கொங்கைகள், போழ்ந்த (வடு) அன்றி-பிளந்ததனாலாகிய வடுவே யல்லாமல், வடுப்படார் - வேறு படையினால் வடுப்படாதவர்களும், தமக்கு அன்பில்லார் - தம்முயிரினிடத்து அன்பில்லாதவர்களும், உரை அகல் - புகழ் மிகுந்த, மான ஆற்றால் ஒழுகுவார்-மான நெறியால் ஒழுகுகின்றவர்களுமாகிய, பலகை ஒள் வாள் விஞ்சை - கேடகத்தையும் ஒளி பொருந்திய வாளையும் பற்றி வீசுகின்ற வித்தையில் வல்ல, கரை அகல் வீரர்கணம்-அளவிறந்த வீரர்கள் கூட்டம், பயில் காட்சித்து எங்கும்-நெருங்கி யிருக்கிற காட்சியையுடையது எல்லாவிடங்களும் எ-று.

வரை அகல் மார்பம் - மூன்று வரிகளையுடைய அகன்ற மார்பு எனலுமாம். கொங்கை போழ்ந்த மார்பிலன்றி ஏனையிடத்து வடுப் படார் எனக் கூறலுமாம்; இதற்கு இனம் பற்றி முகமும் கொள்ளப்

படும் ; என்னை ? முகத்தினும் மார்பினும் பட்ட புண்ணை விழுப்புண் என்பவாகலின், புறங்கொடார் என்பது கருத்து. தம் முயிர்க் கிரங்காமையின் 'தமக்கன்பில்லார்' எனப்பட்டார். மானவாற்ருெலொழுகுதலாவது தாழ்வுவரின் உயிரை விடுதல்,

"மயிர்நீப்பின் வாழாக் கவரிமா வன்னர்
உயிர்நீப்பர் மானம் வரின்"

என்றார் வள்ளுவனாரும். விஞ்சை பயில்என ஒட்டலுமாம். காட்சித்து: குறிப்பு முற்று. எங்கும் : எழுவாய்; பன்மை யொருமைமயக்கம். (எடு)

மின்னைவா ளென்ன வீசி வீங்குகார் தம்மிற் போர்மூண்
டென்னவான் மருப்பு நீட்டி யெதிரேதிர் புதையக் குத்தி
அன்னவா னென்ன வாய்விட் டதுவெனச் செந்நீர் சோரப்
பொன்னவா மகன்ற மார்பர் பொருகளி றூட்டு வார்கள்.

(இ - ள்.) வீங்கு கார்-சூல்முதிர்ந்த முகில்கள், மின்னை வாள் என்ன வீசி-மின்னலை வாள்போல விசி, தம்மில் போர் மூண்டென்ன-தம்முள் போர் மூண்டுசெய்தாற்போல, பொரு களிறு-போர் செய்யும் யானைகள், வால் மருப்பு-வெள்ளிய தந்தங்களை, எதிர் எதிர் நீட்டி-எதிரெதிரே நீட்டி, புதையக் குத்தி-(உடலில்) மூழ்கும்படி குத்தி, அன்னவான்என்ன-அந்த மேகங்கள் முழங்குவதுபோல, வாய்விட்டு-முழங்கி, அதுவென-அம்மேகம் சொரியும் தாரைபோல, செந்நீர் சோர-குருதித் தாரை சொரியும்படி, பொன் அவாம்-திருமகளும் விரும்பும்படியான, அகன்ற மார்பர்-விரிந்த மார்பினையுடைய வீரர்கள் (அவ் யானைகளை), ஊட்டுவார்கள்-போர் செய்விப்பார்கள் எ - று.

மூண்டென்ன: விகாரம். அன்ன: சுட்டு. மேக மென்னும் பொருண்மைபற்றி 'அது' என்று ஒருமையாற் கூறினர். சோர-சொரிய என்னும் பொருட்டு. அவாவும் என்பது அவாம் என விகாரமாயிற்று. அவாவும் மார்பு, அகன்ற மார்பு எனத் தனித்தனி கூட்டுக. நீட்டி என்பது முதலியன களிற்றின் வினைகள். (எசு)

தூண்டுவா ருளமுந் தங்கள் பின்னிடத் துவக்குண் டீர்த்துத்
தாண்டுமா னொற்றை யாழித் தேரினுந் தள்ளித் துள்ளப்
பாண்டில்வாய்ப் பசும்பொன் றேயப் பார்மகள் முதுகு கீண்டு
சேண்டிசை போய்ம டங்கச் செல்வத்தேர் நடாத்து வார்கள்.

(இ - ள்.) தூண்டுவார் உளமும்-செலுத்துகின்றவர்களின் மனோவேகமும், தங்கள் பின்னிட-தங்கள் வேகத்திற்குப் பின்னிடும்படி, துவக்குண்டு ஈர்த்துத் தாண்டுமான்-கட்டப்பட்டு இழுத்துத் தாவுகின்ற குதிரைகள், ஒற்றை ஆழித் தேரினும்-ஒருருளையையுடைய சூரியன் தேரிற் பூட்டிய குதிரைகளைவிட, தள்ளித்துள்ள-விரைந்து ஓடவும், பாண்டில் வாய்-உருளையின்கண் உள்ள; பசும்பொன் தேய-பசிய பொன் தேயும்படியாகவும், பார்மகள் முதுகு கீண்டு-புவி மடந்தையின் முதுகைக் கிழித்து, சேண் திசை போய் மடங்க-வானத்தினுந் திசைகளினும் போய் மீளும்படி, செல்வத்தேர் நடாத்துவார்கள்-சிறந்த தேர்களை நடாத்துவார்கள் (அவ்வீரர்கள்) எ - று.

தேரினும்-தேர்க் குதிரையினும். தள்ளித் துள்ளல்-மிக்குத் துள்ளல். பாண்டில்-உருள். பொன்-உருளின் பொற்கட்டு. சேண் டிசை-சேணிலும் திசையிலும். கிழ்ந்து என்பது கிண்டு என மருவிற்று. மான் துள்ளப் பொன் தேயத் தேர் நடாத்துவார்கள் என்க. மடங்கல் தேரின் வினை. கிண்டு என்பது செயவெ னெச்சத்திரிபும் ஆம். (எஎ)

மைந்தர்தந் நெருக்கிற் சிந்து கலவையு மகளிர் கோங்கைச்
சந்தமுங் கூந்தல் சோர்ந்த தாமமுஞ் சிவிறி வீசு
சிந்துரப் பொடியு நாறத் தேனொடு மெழுந்து* செந்தூள்
அந்தர வயிறு தூர்ப்ப வடுபரி நடாத்து வார்கள்.

(இ - ள்.) மைந்தர் தம்-ஆடவர்களின், நெருக்கில்-நெருக்கத்தினால், சிந்து கலவையும்-உதிர்ந்த கலவைச் சாந்தும், மகளிர் கொங்கைச் சாந்தமும்-பெண்களின் கொங்கைகளினின்றும் உதிர்ந்த சந்தனமும், கூந்தல் சோர்ந்த தாமமும்-(அவர்கள்) கூந்தலினின்றும் வீழ்ந்த மகரந்தமும், சிவிறி வீசு சிந்துரப் பொடியும்-துருத்தியால் வீசுகின்ற சிந்துரச் சுண்ணமுமாகிய, செந்தூள் தேனொடும் நாற எழுந்து-சிவந்த புழுதி தேனொடுங் கமழ மேலெழுந்து, அந்தர வயிறு தூர்ப்ப-வானத்தின் நடுவிடத்தை மறைக்கும்படி, அடு பரி நடாத்துவார்கள் - வெற்றி பொருந்திய குதிரைகளைச் செலுத்துவார்கள் (இளைஞர்) எ - று.

சிந்தாமணியிலே கடை வீதியின் சிறப்புணர்த்து மிடத்து,

"பூசுசாந் தொருவர் பூசிற் றெழுவர்தம் மகலம் பூசி
மாசன மிடம்பெ றாது வண்கடை மலிந்த தன்றே"

எனக் கூறியிருப்பதனோடு 'மைந்தர்தந் நெருக்கிற் சிந்து கலவை' என்பது ஒப்பு நோக்கற் பாலது. தாமம்-மகரந்தத்துக்கு ஆகுபெயர். சிந்துரப்பொடி - குங்குமம்; பொற் சுண்ணம் முதலியனவுமாம். பொடியுமாகிய செந்தூள் நாற எழுந்து தூர்ப்ப நடாத்துவார்கள் எனமுடிக்க. (எஅ)

தம்முயிர்க் கிரங்கா ராகித் தருக்கோடு மான மீர்ப்பத்
தெம்முனை யெதிர்ந்தா ராற்றுஞ் செருவெனக் குருதிச் செங்கேழ்க்
கோய்ம்மலர்க் குடுமிச் சேவல் கோழிளங் தகர்போர் மூட்டி
வெம்முனை நோக்கி நிற்பார் வேறவற் றூறு நோக்கார்.

(இ - ள்.) தம் உயிர்க்குஇரங்கார்ஆகி-தமதுஉயிருக்கு இரங்காதவர்களாய், தருக்கோடு மானம் ஈர்ப்ப-செருக்கோடு மானமும் இழுக்க, தெவ் முனை-பகைவரின் போர் முனையில், எதிர்ந்தார் ஆற்றும் செரு என-எதிர்த்த வீரர்கள் செய்யும் போரைப்போல (செய்யும்படி), குருதிச் செம் கேழ்-உதிரம் போலும் செந்நிறத்தையுடைய, கொய் மலர்-கொய்த மலர் போன்ற, குடுமிச் சேவல்-கொண்டையை

(பா-ம்.) * எழுந்த.

யுடைய சேவல்களையும், கோழ் இளம் தகர்-கொழுமையும் இளமையு முடைய ஆட்டுக் கிடாய்களையும், போர் மூட்டி-போரிற் செலுத்தி, வேறு அவற்று ஊறு நோக்கார்-அவற்றின் பிற துன்பங்களை நோக்காதவர்களாய், வெம்முனைநோக்கிநிற்பார்-கொடியபோர் ஒன்றையே கண்டு நிற்பார் எ - று.

உயிருறும் துன்பநோக்கி யொழியாமையால் 'தம்முயிர்க் கிரங்காராகி' என்றார். ஈர்த்தல்-இழுத்தல். தெவ்முனை தெம்முனை யென்றாயது. முனை-போரிடம். செய்யும்படி என்பது வருவிக்கப்பட்டது. மலர்-செங்காந்தட்பூ. வேறு, அஃதன்றி என்னும் பொருளில் வந்த இடைச்சொல்லுமாம்.

"கோட்டிளந் தகர்களுங் கொய்ம்மலர தோன்றிபோற்
சூட்டுடைய சேவலுந் தோணிக்கோழி யாதியா
வேட்டவற்ற தாறுள்ளார் வெருளிமாந்தர் போர்க்கொளிஇக்
காட்டியார்க்குங் கௌவையுங் கடியுங்கௌவை கௌவையே"

என்னுஞ் சிந்தாமணிச் செய்யுளோடு இதனை ஒப்பு நோக்குக. (௭௧)

பெண்முத்த மனைய பேதைச் சிறுமியர் பெருநீர் வையை
வெண்முத்த மிழைத்த சிற்றில் சிதைபட வெகுண்டு நோக்கிக்
கண்முத்தஞ் சிதறச் சிந்துங் கதிர்முத்த மாலை தட்பத்
தெண்முத்தி னகைத்துச் செல்வச் சிறார்கடே ருருட்டு வார்கள்.

(இ - ள்.) பெண் முத்தம் அனைய - பெண்களுள் முத்தினை ஒத்த, பேதைச் சிறுமியர்-பேதைப் பருவத்தையுடைய சிறுமிகள், பெருநீர் வையை வெண்முத்தம்-மிகுந்த நீரினையுடைய வையையாற்றின் வெள்ளிய முத்துக்களால், இழைத்த சிற்றில் சிதைபட-கட்டிய சிறு வீடுகள் சிதைய, வெகுண்டு நோக்கி-(அதனால் அவர்கள்) கோபித்துப் பார்த்து, கண் முத்தம் சிதற-கண்கள் முத்துப்போலும் நீர்த்துளிகளைத் துளிக்க, சிந்தும்-அறுத்துச் சிந்திய, கதிர் முத்தமாலை-ஒளி பொருந்திய முத்துமாலைகள், தட்ப-(தங்கள் சிறு தேர்ச் செலவைத்) தடைசெய்ய, செல்வச் சிறார்கள்-செல்வத்தையுடைய அரசிளங் குமரர்கள், தெண் முத்தின் நகைத்து-(அது கண்டு) தெள்ளிய முத்துப்போற் புன்னகை யரும்பி, தேர் உருட்டுவார்கள்-சிறு தேரைச் செலுத்துவார்கள் எ - று.

களங்க மின்மையும் அழகும் பற்றிப் 'பெண் முத்த மனைய' என்றார். வையை மருங்கே என்னலுமாம். சிதைபட உருட்டுவார்கள் என்றும், மாலை தட்ப நகைத்து உருட்டுவார்கள் என்றும் தனித்தனி முடிக்க. சிதைபட என்னும் எச்சம் காரியமும் காரணமும் ஆயிற்று. சிதற என்பது சிந்தும் என்பதை விசேடித்து வந்தது. தட்ப-தடுக்க; தள்: பகுதி; தளையுமாம். 'கண்முத்தம்' என்புழி, முத்தம்: ஆகுபெயர். சிறார்-ஆகாரமாயிற்று; பராரை என்பதிற்போல. சிற்றில் சிதைத்தல் சிறாரின் குறும்புகளிலொன்று. சிற்றில் சிதைத்தல், சிறுதேருருட்டல் என்பன சிறுபருவச் செயல்களாகப் பிள்ளைக்கவியிற் பின்னுள்ளோர் பாடுதலுங் காண்க. (௮0)

கோடிமுகி றுழாவு மிஞ்சிக் கோநகர் வடகீழ் ஞாங்கர்
முடிமிசை வேம்பு நாற முருகவி ழாரும் போந்தும்
அடிமிசை நாறத் தென்னர் வழிவழி யரசு செய்யும்
இடிமுர சுறங்கா வாயி லெழுநிலை மாடக் கோயில்.

(இ - ள்.) முகில் துழாவும் கொடி-மேகத்தைத் தடவுகின்ற கொடிகளையுடைய, இஞ்சிக் கோ நகர்-மதிலாற் சூழப்பட்ட அத்தலை நகரின், வடகீழ் ஞாங்கர்-வடகிழக்குப் பக்கத்தில், முடிமிசை வேம்பு நாற-முடியின்கண் வேப்பம்பூமாலை கமழவும், அடிமிசை-அடிகளின் மேல், முருகு அவிழ் - மணம் விரிந்த, ஆரும் போந்தும் நாற-ஆத்தி மாலையும் பனைமாலையும் கமழவும், தென்னர் வழிவழி அரசு செய்யும்-பாண்டி மன்னர்கள் வழிவழியாகச் செங்கோலோச்சி வருகின்ற, இடி முரசு உறங்கா-இடிபோலும் முரசொலி நீங்காத, வாயில்-வாயிலையும், எழுநிலை மாடக் கோயில் - எழுநிலை மாடங்களையுமுடைய கோயில் (உள்ளது)எ - று.

கோ-தலைமை; அரசுமாம். வேப்பம்பூ மாலை பாண்டியர் முடியிற் சூடுங்கண்ணியாகலின் 'முடிமிசை வேம்பு நாற' என்றும், சோழரும் சேரரும் வணங்குங்கால் முறையே அவர்கள் முடியிற் சூடிய கண்ணியாகிய ஆத்திமாலையும் பனைமாலையும்அடியிற்படுமென்று 'ஆரும்போந்தும் அடிமிசை நாற' என்றும் கூறினர். சேர பாண்டிய சோழர்க்கு முறையே உரிய அடையாளப் பூ மாலை இவை யென்பது,

"போந்தை வேம்பே யாரென வரூஉம்
மாபெருந் தானையர் மலைந்த பூவும்"

எனத் தொல்காப்பியத்தும் கூறப் பெற்றுளது. வேம்பு முதலியன ஆகுபெயர். வழிவழி-தலைமுறையாக. முரசு: வீரம் நியாயம் தியாகம் என்பவற்றை யுணர்த்தும் மும்முரசுகள். இடையறு தொலிக்கு மென்பார் 'உறங்கா' என்றார். கோயில்-அரசமனை; அரமனை. உள்ளது என ஒரு சொல் வருவித்து முடிக்கப்பட்டது. ஞாங்கர்உள்ள தென்க.

## மறையவர் வீதி

ஆத்திக ருண்டென் றோது மறமுதற் பொருள்கள் நான்கும்
நாத்திகம் பேசும் வஞ்சர் நாவரி கருவி யாக
ஆத்தனு லுரைத்த வேத வளவுகண் டுள்ளந் தேறித்
தீர்த்தராய் முத்தீ வேட்குஞ் செல்வர்தம் மிருக்கை சொல்வாம்.

(இ - ள்.) ஆத்திகர் உண்டு என்று ஓதும்-ஆத்திகர்கள் உண்டு என்று சொல்லுகின்ற, அறம் முதல் பொருள்கள் நான்கும்-அற முதலிய நான்கு பொருள்களையும், நாத்திகம் பேசும் வஞ்சர்-இல்லை யென்று கூறுகின்ற வஞ்சகரின், நா அரி கருவி ஆக-நாவினை அறுக்கின்ற வாளாக, ஆத்தனுல் உரைத்த-இறைவனுல் அருளிச் செய்யப்பட்ட, வேத அளவு கண்டு-மறையின் முடிவை உணர்ந்து, உள்ளம் தேறி-மனந் தெளிந்து, திர்த்தராய்-தூய்மையுடையராய், முத்தி வேட்கும்-மூன்றுதீயினைஓம்புதலாகியவேள்வியைமுடிக்கும், செல்வர்

தம் இருக்கை சொல்வாம்-செல்வர்களாகிய மறையவரின் வீதியின் பெருமையைச் சொல்வாம் எ - று.

ஆத்திகர்-உண்டென்பார்; மறுபிறப்பும் இருவினைப்பயனும் கடவுளும் உண்டென்பார், அறம் பொருள் இன்பம் வீடு என்னும் நாற் பொருளும் உண்டென்பார், மற்றும் இத்தன்மைய மெய்ம்மைகள் உண்டென்பார். நாத்திகர்-இல்லையென்பார்; ஆத்திகர்க்கு மறுதலை யாயினர்; இவர் உலகாயதர் முதல் பலதிறப்படுவர்; 'காண்ட லளவை ஒன்றே பிரமாணம்; காணப்படும் நிலம் நீர் தீ வளியென நான்கே தத்துவங்கள்; இவை நித்தப் பொருள்கள்; இவற்றின் கூட்டமே உடம்பு; பாகடையுஞ் சுண்ணும்புங் கூடியவழிச் செவ் வண்ணம் பிறக்குமாறு போல இவற்றின் கூட்டரவின் ஒருணர்வுண் டாம்; அவ்வுணர்வு உடம்பு வளர வளரும்; தேயத் தேயுமாகலின், உடம்பிற்கு வேறே உயிரென்பது பொய்; உடம்பிற்கு இன்பத் துன்பங்கள் இயல்பாயுள்ளன; இவற்றிற்குக் காரணம் வினையென் பதும் பொய்; மயிலைச் சித்திரித்தாரையும் குயிலைக் கூவுவித்தாரையும் காணுமையிற் கடவுளுண்டென்பதும் பொய்' என்றிங்ஙனங் கூறுவார் உலகாயதராவர். ஆத்தன்-உண்மையுரைப்போன், நண்பன்; இங்கே பரமாத்தனும் சிவபெருமான். வேட்குஞ் செல்வர்-வேட்ட லாகிய செல்வத்தினையுடையார் என்றுமாம். (அஉ)

முஞ்சிநாண் மருங்கின் மின்னப்
பொன்செய்த முளரி வேய்ந்த
குஞ்சிநான் றசையத் தானைச்
சொருக்குமுன் கோய்து தூங்கப்
பஞ்சினுண்*கலைத்தோல் மார்பும்
பலாசக்கோல் கையுந் தாங்கி
எஞ்சினுன் மறை†நூல் கற்போர்
கிடைகளே யில்ல மெல்லாம்.

(இ - ள்.) முஞ்சி நாண்-முஞ்சிப் புல்லாலாகிய கயிறு, மருங்கில் மின்ன-அரையின்கண் ஒளிவிடவும், பொன் செய்த-பொன்னுற் செய்யப்பட்ட, முளரி வேய்ந்த - தாமரை மலரை அணிந்த, குஞ்சி நான்று அசைய-சிகையானது தொங்கி அசையவும், தானைச்சொருக்கு-ஆடையின்சொருகல், முன்கொய்து தூங்க-முன்னேகொய்யப்பட்டுத் தொங்கவும், கலைத் தோல் பஞ்சின் நாண்-மான்றேலைக் கட்டியபஞ்சி னுலாகிய பூணுலை, மார்பும்-மார்பிலும், பலாசக்கோல்-முள்முருக் கங்கோலை, கையும் தாங்கி-கையிலுங் கொண்டு, எஞ்சு இல்-குறைவு இல்லாத, நான்மறை நூல்கற்போர்-நான்குமறைகளாகிய நூல்களைக் கற்கின்ற மாணவகரின், கிடைகளே இல்லம் எல்லாம்-சாலைகளேயாம் (அவ்வீதியிலுள்ள) வீடுகளனைத்தும் எ - று.

முஞ்சி-ஒருவகை நாணற்புல். தானைச் சொருக்கு-கொய்சகம். மறை நூல்-மறையும் நூலும் என்றுமாம். கிடை-வேதமோதுஞ் சாலை. முஞ்சி நாண் முதலியன பிரமசாரிக்குரியன. பஞ்சி, எஞ்சி

(பா - ம்.) *பஞ்சிநாண். †எஞ்சி நான்மறை.

என்னும் பாடங்கட்கு முறையே பஞ்சு, ஏக்கற்று நின்று என்பன பொருள்களாம். (அக)

தீவினை யந்த ணாளர் சிறார்பயி றெய்வ வேத
நாவுரு வேற்றக் கேட்டுக் கிளிகளோ நவிலும் வேற்றுப்
பூவையும் பயின்று புத்தே ளுலகுறை புதுமந் தாரக்
காவுறை கிளிகட் கெல்லாங் கசடறப் பயிற்று மன்னே.

(இ – ள்.) தீவினை அந்தணாளர் சிறார்-அங்கி காரியத்தையுடைய பார்ப்பனரின் சிறுவர்கள், பயில் தெய்வ வேதம்-பயிலுதற்குரிய திப்பிய மறைகளை, நா உரு ஏற்றக்கேட்டு-(தமது) நாவினால் உருப் போடுதலைக் கேட்டு, கிளிகளோ நவிலும்-(அவ்வில்லங்களிலுள்ள) கிளிகள் மட்டுமா கூறுநிற்கும்(அன்று); வேற்றுப் பூவையும் பயின்று-அயலிடங்களிலுள்ள நாகணவாய்ப்புட்களும் கற்று, புத்தேள் உலகு உறை – தேவருலகத்திற் பொருந்திய, புது மந்தாரக் கா உறை கிளி கட்கு எல்லாம் – புதிய மலர்களையுடைய கற்பகச் சோலையின்கண் உறையும் கிளிகளுக்கெல்லாம், கசடு அறப் பயிற்றும்-குற்றம் நீங்கக் கற்பிக்கும் எ – று.

உருவேற்றல்-பலமுறை கூறிப் பயிலுதல்; இதனை நெட்டுருச் செய்தல் என்றுங் கூறுவர். மந்தாரம்-கற்பகம் முதலியவற்றுக்கும் உபலக்கணம். 'என்றும் புலரா தியாணர்நாட் செல்லுகினும், நின்ற லர்ந்து தேன் பிலிற்றும்' என்ப ஆகலின் 'புது மந்தாரம்' என்றார். கிளிகட் கெல்லாம் – கிளிகளெல்லாவற்றுக்கும் என உருபு பிரித்துக் கூட்டுக. கசடு - சுரவழு முதலிய குற்றம். உயர்வு நவிற்சி. மன், ஓ: அசை. (அச)

வேதமு மங்க மாறு மிருதியும் புராண நூலின்
பேதமுந் தெரிந்தோ ராலும் பிறர்மதங் களைய வல்ல
வாதமு மதமேற் கொண்டு மறுத்தலு நிறுத்த வல்ல
போதமு முடையோ ராலும் பொலிந்தன கழக மெல்லாம்.

(இ - ள்.) வேதமும்-நான்கு மறைகளும், அங்கம் ஆறும்-ஆறு அங்கங்களும், மிருதியும் - பதினெண் மிருதிகளும், புராண நூலின் பேதமும் - பேதமுள்ள பதினெண் புராண நூல்களும் ஆகிய இவை களை, தெரிந்தோராலும்-அறிந்தோர்களாலும், பிறர் மதம் களையவல்ல வாதமும்-பிறர் கொள்கையை அழிக்கவல்ல வாதத்தினையும், மதம் மேற்கொண்டு மறுத்தலும்-அவர் கொள்கையை ஒருவாற்றான் மேற் கொண்டு மற்றொரு வாற்றால்மறுத்தலையும், நிறுத்த வல்ல போதமும்-தமது கொள்கையை நிறுத்திச்சாதிக்கவல்ல உணர்ச்சியையும், உடை யோராலும்-உடையவர்களாலும், கழகம் எல்லாம் பொலிந்தன-கழகங்கள் அனைத்தும் விளங்கின எ - று.

வேதங்களும் அங்கங்களும் இவையென முன் உரைக்கப்பட்டன, மிருதி பதினெட்டனையும்,

"மனுவே அத்திரி ஔரிதம் விண்டு
யாஞ்ஞ வற்கியம் உசனம் ஆங்கிரசம்

இயமம் ஆபத் தம்பம் சம்வர்த்தம்
காத்தி யாயனம் பிரகற்பதி பராசரம்
வியாசம் சங்கலிதம் தக்கம் கௌதமம்
சாதன்ம மோடு வசிட்டம் இவையே
தருமநூல் பதினெட் டாகு மென்ப''

என்னும் திவாகரச் சூத்திரத்தானறிக. இவை இருடிகளால் வேதங்களின் அருத்தங்களை நினைந்து செய்யப்பட்டனவாம். புராணங்களின் பேதங்களைப் புராண வரலாற்றுட் கூறுதும்; ஆண்டுக் கண்டு கொள்க. மதம் - கொள்கை; நன்னூலார் கூறிய எழுவகை மதங்களுள் மறுத்தல், பிறர் மதம் மேற்கொண்டு களைதல், தான் நாட்டித் தனது நிறுத்தல் என்னும் மூன்றும் இங்கே குறிக்கப்பட்டன. கழகம் - ஓதுஞ் சாலை. (அகு)

உறிபோதி கரகக் கைய ரோளிவிடு செங்கற் றோய்த்த
அறுவைய ருயிர்க்கூ றஞ்சு நடையின ரவிச்சை மாள
எறிசுடர் மழுவா ளென்னக் கோவணம் யாத்த* கோலா
மறைமுடி வன்றித் தேரு மாதவர் மடங்க ளெங்கும்.

(இ - ள்.) உறிபொதி கரகக் கையர் - உறியாற் பொதியப்பட்ட கமண்டலத்தைக் கையிலுடையவரும், ஒளிவிடு செம் கல் தோய்த்த அறுவையர் - ஒளிவீசும் சிவந்த காவிக் கற்குழம்பில் தோய்த்த ஆடையையுடையவரும், உயிர்க்கு ஊறு அஞ்சும் நடையினர் - எறும்பு முதலிய சிற்றுயிர்களுக்கு நேரும் துன்பத்தை யஞ்சி மெல்லென ஒதுங்கும் நடையையுடையவரும், அவிச்சை மாள - அஞ்ஞானமரம் கெட, எறிசுடர் மழுவாள் என்ன - வீசுகின்ற ஒளியையுடைய மழுப்படையைப் போல, கோவணம் யாத்த கோலர் - கோவணங் கட்டிய தண்டத்தையுடையவருமாகிய, மறைமுடிவு அன்றித் தேரு மாதவர் - உபநிடதங்களையன்றி வேறு நூல்களைச் சிந்தியாத முனிவர்களின், மடங்கள் எங்கும் - மடங்கள் (அவ்வீதிகளில்) எவ்விடத்தும் (உள்ளன) எ - று.

துறவிகள் காவியுடை யுடுப்பர்; இதனை, 'கற்றோய்த் துடுத்த' என்றார் முல்லைப்பாட்டிலும். அவிச்சை - அஞ்ஞானம். எறிதல் - துணித்தல். எறிசுடர் மழுவாள் என்றமையால் அவிச்சையாகிய மரமென்க. கோவணம் தலைப்பில் யாத்த கோல், வடிவால் மழுவினைப்போலும். அவர் அவிச்சையின் வலியைக் கெடுத்தலின் அதனைக் கோலின்மேலேற்றிக் கூறினார். மறைமுடிவு - வேத அந்தம்; அதனை இடையறாது சிந்தித்துத் தெளிவரென்க. மாதவர் - சந்நியாசிகள். (அசு)

அட்டில்வாய்ப் புகையு மாடத் தகில்படு புகையும் வேள்வி
விட்டெழு புகையு மோன்றி விரிசுடர் விழுங்கக் கங்குல்
பட்டது பலருந் தத்தம் பயில்வினை யிழக்க நங்கை
மட்டவிழ் கடுக்கை யான்கண் புதைத்தநாள் மானு மன்றே.

(இ - ள்.) அட்டில்வாய்ப் புகையும் - அடுக்களையினின்று எழுந்த புகையும், மாடத்து அகில்படு புகையும் - மேன்மாடத்தினின்றும் அகிற்

(பா - ம்.) * ஆர்த்த.

கட்டையா லுண்டாகி எழுந்த புகையும், வேள்விவிட்டு எழு புகையும் - வேள்விக் குண்டத்தினின்றும் விடப்பட்டு மேலெழுந்த புகையும், ஒன்றி - ஒன்றுபட்டு, விரிசுடர் விழுங்க-ஒளிவிரிந்த சூரியனை மறைக்க, கங்குல் பட்டது - இருள் நிறைந்ததாகிய அந்த நாள், பலரும் தம் தம் பயில்வினை இழக்க - அனைவரும் தத்தமக்குரிய செய்யுந் தொழில்களை இழக்கும்படி, நங்கை - உமையம்மை, மட்டு அவிழ் கடுக்கையான் - மணம்விரிந்த கொன்றை மாலையையுடைய இறைவனுடைய, கண் புதைத்த நாள் மானும் - திருக்கண்களைத் (தமது கரத்தால்) மூடிய நாளை ஒக்கும் எ - று.

அகிற்புகை மகளிர் கூந்தலின் ஈரம் புலர்த்துதற்கு இடப்பட்டது. விட்டு - விடப்பட்டு; நீங்கி யெனினுமாம். கங்குல் பட்டது: வினையாலணையும் பெயர். பயிறல் - செய்தல். மன், ஓ: அசை.

கண்புதைத்த வரலாறு:—ஒருகாலத்தில் திருக்கைலையிலுள்ள இளமரக்காவில் சிவபெருமானும் உமாதேவியாரும் எழுந்தருளியிருக்கும்பொழுது இறைவி ஒரு திருவிளையாடலைக் கருதிப் பின்னே வந்து இறைவனுடைய திருக்கண்களைப் பொத்த, அக்கண்கள் பரிதியும் மதியுமாதலால் உலகெங்கும் இருள்மூடிற்று; எல்லாவுயிர்களும் தம்தம் தொழில்களைக் கைவிட்டு வருந்தின; அப்பொழுது பெருமான் நுதற்கண்ணைத் தோற்றுவித் தருளினர் என்பது. இதனைக் கந்தபுராணம், ததிசியுத்தரப் படலத்திலுள்ள,

“ஈசனை யொருஞான் றம்மை யெழில்பெறு கயிலைக் காவிற்
பேசல ளாட லுன்னிப் பின்வரா விழியி ரண்டுந்
தேசுறு கரத்தாற் பொத்தச் செறிதரு புவனம் யாவும்
மாசிருள் பரந்த தெல்லா வுயிர்களும் வருத்தங் கொள்ள”

“ஓங்குதன் னுதலி னுப்ப ணொருதனி நாட்ட நல்கி
ஆங்கது கொண்டு நாத னருள்கொடு நோக்கி யாண்டு
நீங்கரு நிலைமைத் தாகி நின்றபே ரிருளை மாற்றித்
தீங்கதிர் முதலா னோர்க்குச் சிறந்தபே ரொளியை யீந்தான்”

என்னுஞ் செய்யுட்களா லுணர்க. இவ் வரலாற்றினை,

“நாயகன் கண்ண யப்பா னயகி புதைப்ப வெங்கும்
பாயிரு ளாகி மூடப் பரிந்துல கினுக்கு நெற்றித்
தூயநேத் திரத்தி னாலே சுடரொளி கொடுத்த பண்பின்
தேயமா ரொளிக ளெல்லாஞ் சிவனுருத் தேச தென்னர்”

எனச் சிவஞானசித்தியார் கிளந்தெடுத் துரைத்தலுங் காண்க. (௮எ)

## சைவர் வீதி

[கலிநிலைத்துறை]

தெய்வ நீறுமைந் தெழுத்துமே சிதைக்கல னாக
எவ்வ மாசிரு வினையுடம் பெடுத்துழல் பிறவிப்
பௌவ மேழையுங் கடந்தரன் பதமலர்க் கரைசேர்
சைவ மாதவ ருறைமடத் தனிமறு குரைப்பாம்.

(இ-ள்.) தெய்வ நீறும்-தெய்வத் தன்மையையுடைய திருநீறும், ஐந்து எழுத்துமே-திருவைந் தெழுத்துமே, சிதைக்கலன் ஆக - பாய் மரத்தினை யுடைய கப்பலாகக் (கொண்டு), எவ்வம் மாசு இருவினை-துன்பத்தைத் தருகின்ற குற்றத்தையுடைய இருவினைகளாலும், உடம்பு எடுத்து உழல் பிறவி-உடம்பினை எடுத்து வருந்துகின்ற எழு வகைப் பிறப்பாகிய, பௌவம் ஏழையும்-ஏழு கடல்களையும், கடந்து-நீந்தி, அரன் பதமலர்க் கரைசேர்-இறைவன் திருவடித் தாமரையாகிய கரையை அடைகின்ற, சைவமாதவர் உறைபடம் - தவத்தினையுடைய சைவப் பெரியார்கள் உறைகின்ற மடங்களையுடைய, தனிமறுகு உரைப்பாம்-ஒப்பற்ற வீதியின் பெருமையைச் சொல்வாம் எ - று.

திருநீறு தெய்வத்தன்மையுடையதாதலைத் திருநீற்றுப் பதிகத்தா னறிக. திருவைந்தெழுத்தும் புணையாகப் பிறவிக்கடல் கடத்தலை,

"தனியனேன் பெரும்பிறவிப் பௌவத் தெவ்வத்
தடந்திரையா லெற்றுண்டு பற்றொன் றின்றிக்
கனியைநேர் துவர்வாயா ரென்னுங் காலாற்
கலக்குண்டு காமவான் சுறவின் வாய்ப்பட்
டினியென்னே யுய்யுமா றென்றென் றெண்ணி
யஞ்செழுத்தின் புணைபிடித்துக் கிடக்கின் றேனை
முனைவனே முதலந்த மில்லா மல்லற்
கரைகாட்டி யாட்கொண்டாய் மூர்க்க னேற்கே"

என்னும் திருவாசகத்தானு மறிக. சிதை-பாய்மரம். மாசு-அவிச்சையு மாம்; 'இருள்சே ரிருவினையும்' என்றார் பொய்யில்புலவரும். சைவ மாதவர் - சிவனடியார்; ஆதி சைவருமாம். (அஅ)

எங்கு மீசனைப் பூசைசெய் திகபர மடைவார்
எங்கு மன்பரைப் பூசைசெய் தெழுபிறப் பறுப்பார்
எங்கு மாமகஞ் செவிமடுத் தெதிர்வினை தடுப்பார்
எங்கு நாயகன் வடிவுணர்ந் திருள்மலங் களைவார்.

(இ - ள்.) (அவ்வீதியில்) எங்கும் - எவ்விடத்தும், ஈசனை-சிவ பெருமானை, பூசைசெய்து இகபரம் அடைவார் - பூசனை புரிந்து இம்மை மறுமைப் பயன்களைப் பெறுவாரும், எங்கும் - யாண்டும், அன்பரைப் பூசைசெய்து-அடியார்களைப் பூசித்து, எழுபிறப்பு அறுப்பார் - வருகின்ற பிறவியைப் போக்குவாரும், எங்கும் - எப்புறத்தும், ஆகமம் செவிமடுத்து - ஆகம நூலைக் கேட்டு, எதிர்வினை தடுப்பார் - ஆகாமிய வினையைத் தடுப்பாரும், எங்கும் - எப்பக்கமும், நாயகன் வடிவு உணர்ந்து - இறைவனது திருவுருவைச் சிந்தித்து, இருள்மலம் களைவார் - ஆணவமலத்தைக் கெடுப்பாரும் (உளர்) எ - று.

இகபரம் என்பன அவற்றின் பயனுக்கு ஆகுபெயர்; பரம் என் றது ஈண்டு மறுமையை. அன்பரைப் பூசித்தலாவது அவரையடைந்து அவர் கருமத்தைத் தன் கருமமாகச் செய்து கூசிமொழிந்து அருள் ஞானக் குறியினின்று வழிபடுதலாகும்; அன்பர் திருவேடத்தை அர னெனவே தேறி வழிபடுதலுங் கொள்க. எழுபிறப்பு - எழுவகைப் பிறப்புமாம். செவிமடுத்தல், சிந்தித்தல் தெளிதல்கட்கும் உபலக்கணம். எதிர்வினை - ஆகாமியம்; எதிரக்கடவதாகிய சஞ்சிதம் எனினும் ஆம்.

"சார்புணர்ந்து சார்பு கெடவொழுகின் மற்றழித்துச்
சார்தரா சார்தரு நோய்"

என்னும் தமிழ்மறையுங் காண்க இருள்மலம்-ஆணவம்; அறியாமை. இது, புறவிருளானது கண்ணை மறைப்பதுபோன்று உயிரின் அறிவை மறைத்தலின் இருளெனவும்படும். உளர் என ஒருசொல் வருவித்து எங்குமுளர் எனமுடிக்க. (அகூ)

அழிவி லானுரை யாகம மிலக்கமாய்ந் தவற்றுள்
விழுமி தாகிய விதியினும் விலக்கினு மடியைத்*
தழுவு தொண்டர்கள் மைந்தர்கள் சாதகர் பாசங்
கழுவி வீடருள் போதகக் காட்சியர் பலரால்.

(இ - ள்.) அழிவு இலான் உரை-நித்தனாகிய சிவபிரான் அருளிப் பாடாகிய, ஆகமம்-ஆகமங்களின், இலக்கம் ஆய்ந்து-நூறாயிரங் கிரந்தங்களை ஆராய்ந்து, அவற்றுள் விழுமிதாகிய விதியினும் விலக்கினும்-அவற்றுள்ளே உயர்ந்த விதியாலும் விலக்காலும், அடியைத் தழுவு-(தமது) திருவடிகளை இறுகப்பற்றிய, தொண்டர்கள் மைந்தர்கள் சாதகர்-தொண்டர்கள் மைந்தர்கள் சாதகர் ஆகிய இவர்களின், பாசம் கழுவி-பாசத்தைப் போக்கி, வீடு அருள்-வீட்டுலகை அருளுகின்ற,போதகக்காட்சியர்பலர்-மெய்யுணர்வினையுடையஞானசிரியர் பலர் (அவ்வீதியில் உள்ளார்) எ - று.

உரை ஆகமம்-உரைத்த ஆகமம் என வினைத்தொகையுமாம். ஆகமங்கள் சிவபெருமானால் அருளப்பட்டவையென்பது, 'மன்னு மாமலை மகேந்திர மதனிற்,சொன்னவாகமந்தோற்றுவித் தருளியும்' என்பது முதலிய திருவாசகப் பகுதிகளிலுங்குறிக்கப்பெற்றுளது. ஆகமத்துள் இலக்கங் கிரந்தம் ஆராய்ந்துணர்ந்தவர் உத்தமரென்ப. தொண்டர்-சரியை நெறிநிற்போர். மைந்தர்-கிரியைநெறி நிற்போர். சாதகர்-யோகநெறி நிற்போர். போதகக்காட்சியர்-ஞானிகள்; காட்சி-உணர்வு. இந்நான்கு நெறியும் முறையே தாசமார்க்கம், புத்திர மார்க்கம், சகமார்க்கம், சன்மார்க்கம் எனவுங் கூறப்படும். இவர் சமயம், விசேடம், நிருவாணம், ஆசாரியாபிடேகம் என்னும் தீக்கைகளை முறையே பெற்றவராவரென்றுங் கூறுவர். தொண்டர்கள் முதலிய மூவரும் அடியைத் தழுவி நிற்கும் மாணாக்கரெனவும், போதகக்காட்சியர் அவர்கள் பாசத்தைப்போக்கி வீடருளும் ஆசாரியரெனவும் உணர்க. விதியினும் விலக்கினும் தழுவிய என்க; விதியினும் விலக்கினும் பாசங் கழுவி என இயைப்பாருமுளர். தொண்டர் மைந்தர் சாதகர் என்போரும், காட்சியரும் பலர் என உரைத்தலுமாம். ஆல் : அசை. (கூ0)

மறைக ளாகமம் போதுச்சிறப் பெனச்சிவன் வகுத்த
முறையி† னோதிய விதி‡விலக் குரைகளு முடிவில்
அறையும் வீடுமோன் றிரண்டேனும் பிணக்கற வமைந்த
குறைவி லாச்சிவ யோகியர் குழாங்களும் பலவால்.

---

(பா - ம்.) * அடியில். † வகுத்துமுறையின், வகுத்தமுறையம்.
‡ ஓதியவ்விதி.

(இ - ள்.) மறைகள் ஆகமம் - வேதங்களையும் ஆகமங்களையும், பொது சிறப்பு என - (முறையே) பொதுவாகவும் சிறப்பாகவும், சிவன் வகுத்த முறையின் - சிவபிரான் ஒருவனே அருளிச்செய்த முறைமையினால், ஓதிய விதிவிலக்கு உரைகளும் - அவற்றுள் கூறப்பட்ட விதிவிலக்கு மொழிகளும், முடிவில் அறையும் வீடும் - அவற்றின் இறுதியிற் கூறுகின்ற வீடும், ஒன்று இரண்டு எனும் பிணக்கு அற - ஒன்று என்றும் இரண்டு என்றும் கூறுகின்ற மாறுபாடு இல்லையாகக்கொண்டு, அமைந்த - தெளிந்திருந்த, குறைவு இலா - குறைவில்லாத, சிவயோகியர் குழாங்களும் பல - சிவயோகியர் கூட்டங்களும் பல (அவ்வீதியில் உள்ளன) எ - று.

வேதம் பல்வேறு நிலையினர்க்கும் அவரவர் பக்குவத்திற் கேற்பப் பொருளுணர்த்தி நிற்றலின் பொதுவென்றும், ஆகமம் சத்திநிபாத முடையார்க்கு வேதத்தின் உண்மைப் பொருளுணர்த்தலின் சிறப்பென்றுங் கூறப்படுமென்ப. இங்ஙனம் சிவபெருமான் ஒருவராலேயே இவை பொதுவும் சிறப்புமாக அருளிச் செய்யப்பட்டமையால் இவை கூறும் பொருளனைத்தும் அபேதமுமல்ல, பேதமுமல்லவென்பார் 'ஒன்றிரண்டெனும் பிணக்கற' என்றார். இப்புராணத்துள்ளே பின் 'வேதவாகமச் சென்னியில் விளைபொருளபேதம், பேதமாகிய பிணக்கறுத்து' என வருவதும் இக்கருத்தினதே. 'விதிவிலக்குரைகளும் வீடும் ஒன்றே: அங்ஙனமாகவும் இரண்டென்று பிணங்குவார் பிணக்கற அமைந்த' எனப் பொருளுரைப்பாருமுளர்,

"வேதமொ டாகம மெய்யா மிறைவனூல்
ஓதும் பொதுவுஞ் சிறப்புமென் றுன்னுக
நாத னுரையவை நாடிலி ரண்டந்தம்
பேதமதென்னிற் பெரியோர்க் கபேதமே"

என்னும் திருமந்திரமும்,

"வேதநூல் சைவநூ லென்றிரண்டே நூல்கள்
வேறுரைக்கு நூலிவற்றின் விரிந்த நூல்கள்
ஆதிநூ லநாதியம லன்றருநூ லிரண்டும்
ஆரணநூல் பொதுசைவ மருஞ்சிறப்பு நூலாம்
நீதியினு லுலகர்க்குஞ் சத்திநிபா தர்க்கும்
நிகழ்த்தியவை நீண்மறையி னொழிபொருள்வே தாந்தத்
தீதில்பொருள் கொண்டுரைக்கு நூல்சைவம் பிறநூல்
திகழ்பூர்வஞ் சிவாகமங்கள் சித்தாந்த மாகும்"

என்னுஞ் சிவஞானசித்தித் திருவிருத்தமும் இச்செய்யுளின் பொருளைத் தெளிவுபடுத்துவனவாம். 'வேதாகமத்துணி பிரண்டில்லை யொன்றென்னவே' மூலன் மரபில்வரு மௌனகுரு தமக்குணர்த்தியதாகத் தாயுமானவடிகள் கூறுவர். இச்செய்யுட்குப் பிறர் பிறவா றுரைக்கும் பொருள்கள் பொருந்துமேற் கொள்க. (ஙக)

திருக்கோயில் முதலியன

குழலுந் தும்புரு நாரதர் பாடலுங் குனித்துச்
சுழலுங் கோம்பனு ராடலு மூவர்வாய்த் துதியும்

விழவின் செல்வமுஞ் சுருதியுந் திசையெலாம் விழுங்கும்
முழவுங் கண்டுயி லாதது முன்னவன் கோயில்.

(இ - ள்.) குழலும் - வேய்ங்குழலின் ஒலியும், தும்புரு நாரதர் பாடலும் - தும்புரு நாரதர் என்னு மிருவர்களின் இசைப்பாட்டின் ஒலியும், கொம்பு அனோர் குனித்துச் சுழலும் ஆடலும் - பூங்கொம்பை யொத்த மகளிர் வளைந்து சுழன்று ஆடுகின்ற ஆடலின் ஒலியும், மூவர்வாய்த் துதியும் - ஆளுடைய பிள்ளையார் ஆளுடைய அரசுகள் ஆளுடைய நம்பிகள் ஆகிய மூவரும் திருவாய்மலர்ந்தருளிய திருநெறித் தமிழ்மறையின் ஒலியும், விழவின் செல்வமும்-சிறந்த திருவிழாவின் ஒலியும், சுருதியும்-நான் மறைகளின் ஒலியும், திசை எலாம் விழுங்கும் முழவும்-திக்குகளின் ஒலிகளையெல்லாம் கீழ்ப்படுத்தும் முழவின் ஒலியும், கண் துயிலாதது - நீங்கப்பெறுதது, முன்னவன் கோயில்-இறைவன் வீற்றிருந்தருளுந் திருக்கோயில் ஆகும் எ - று.

தும்புரு - கந்தருவ குரு. நாரதர் பிரமனின் மானச மைந்தர்; இவர் தேவ விருடியெனவும் படுவர். இவ்விருவரும் இசையில் மிக வல்லுநராவர். நாரதர் சிவபிரான் றிருமுன் இசைபாடுதற் சிறப்பை,

"நெற்றித் தனிக்க ணெருப்பைக் குளிர்விக்குங்
கொற்றத் தனியாழ்க் குலமுனிவன்"

எனப் புகழேந்தியாரும்,

"மான்புரிந்த திருக்கரத்து மதிபுரிந்த நதிவேணி மங்கை பாகன்
தான்புரிந்த திருக்கூத்துக் கிசைய மகிழ்ந் திசைபாடுந் தத்வஞானி"

என வில்லிபுத்தூரரும் பாடியிருத்தல் காண்க. குனித்தல் - வளைதல்; 'குனித்த புருவமும்' என்பது காண்க. செல்வம் - ஈண்டு ஒலியின் பெருக்கம். திசையெலாம் விழுங்கும் என்பதற்குத் திக்குக்களையெல்லாம் அகப்படுத்தும் என்றுரைத்தலுமாம். துயிலாமை-இடையறுதி ற்றல் : துயிலாதது. இடப்பொருளில் வந்த வினைப்பெயர். (கூஉ)

மடங்க லின்றிவிண் பிளந்துமேல் வளர்ந்துவெள் ளேற்று
விடங்கர் வெள்ளிமன் றிமைத்தெழ வெண்சுடர் நீட்டம்
முடங்கல் வெண்பிறைக் கண்ணியான் கயிலைமூ வுலகும்
ஒடுங்கு கின்றநா ளோங்கிய வோக்கமே யொக்கும்.

(இ - ள்.) வெள் ஏற்று விடங்கர்-வெண்மையான ஏறுகிய ஊர்தியையுடைய அழகராகிய இறைவன் திருநிருத்தஞ் செய்கின்ற, வெள்ளிமன்று-வெள்ளியம்பலத்தினின்று, இமைத்து-விளங்கி, மடங்கல் இன்றி-மடங்குதலில்லாமல், விண் பிளந்து-வானத்தைக் கிழித்து, மேல் வளர்ந்து எழு-மேலே வளர்ந்தெழுகின்ற, வெண்சுடர் நீட்டம்-வெள்ளிய ஒளியின் நீட்சியானது, முடங்கல் - வளைவையுடைய, வெண்பிறைக் கண்ணியான் கயிலை - வெண்மையுடைய பிறையாகிய கண்ணியையுடைய சிவபிரான் வீற்றிருக்கும் கயிலைமலையானது, மூவுலகும் ஒடுங்குகின்ற நாள்-மூன்று உலகங்களும் அழிகின்ற நாளில், ஓங்கிய ஒக்கமே ஒக்கும்-வளர்ந்த உயர்ச்சியையே போலும் எ - று.

விடங்கம்-உளியாற் செய்யப்படாதது என்னும் பொருளது; சுயம்புலிங்கம் என்பர்; இஃது அழகென்னும் பொருளிலேயே பயின்று வருதலின் விடங்கர் என்பதற்கு அழகர் என்பதே சிறந்த பொருளாம். மன்றினின்றும் வளர்ந்து எழுகின்ற எனக் கூட்டுக. கண்ணி-தலையிற் சூடுமாலை: இது கண்ணி போறலின் கண்ணியெனப் படும். உலகம் அழிவதாவது மாயை யென்னுங் காரணத்துளொடுங் குவதாகலின் 'ஒடுங்குகின்ற' என்றார். நீட்டம், ஓக்கம் என்பன பண்புப் பெயர்கள், நீள், ஓங்கு என்பன முறையே பகுதிகள்; அம்: விகுதி. கைலைமலையானது உலகங்களெல்லாம் ஒடுங்கும் ஊழிக் காலந்தோறும் ஓங்கு மென்பது.

" ஊழிதோ றூழிமுற்றும் உயர்பொன் னொடித்தான் மலையே "

என்று தம்பிரான்றோழர் அருளிச்செய்திருப்பதனாலும் அறியப்படும். (கஙு)

சுரந்து தேன்றுளித் தலர்களுஞ் சோரிந்துவண் டரற்ற
நிரந்து சுந்தரற் கொருசிறை நின்றபூங் கடம்பு*
பரந்து கட்புன லுகப்பல மலர்கடுய்ப் பழிச்சி
இரந்து நின்றருச் சனைசெயு மிந்திர னிகரும்.

(இ-ள்.) தேன் சுரந்து துளித்து - தேன் ஊற்றெடுத்துத் துளித்து, அலர்களும் சொரிந்து - மலர்களையும் சொரிந்து, வண்டு அரற்ற-வண்டுகள் ஒலிக்க; நிரந்து-தழைத்து, சுந்தரற்கு ஒருசிறை-சோமசுந்தரக் கடவுளுக்கு ஒரு பக்கத்தின், நின்ற பூங்கடம்பு - நிற்கின்ற பூக்களையுடைய கடம்பமரமானது, கண் புனல் பரந்து உக - கண்களினின்று அருவியானது பெருகிப் பொழிய, பலமலர்கள் தூய் - பல மலர்களைத் தூவி, பழிச்சி - துதித்து, இரந்து நின்று - குறையிரந்து நின்று, அருச்சனை செயும் - அருச்சிக்கின்ற, இந்திரன் நிகரும் - இந்திரனை ஒக்கும் எ - று.

தேன்றுளித்தலுக்குக் கட்புனல் சொரிதலும், அலர் சொரிதலுக்கு மலர் தூவுதலும், வண்டு அரற்றலுக்குப் பழிச்சுதலும், பூங்கடம்பிற்கு இந்திரனும் உவமைகளாம். நின்ற - நிற்கின்ற. தூவி யென்பது தூய் என விகாரப்பட்டது.. (கச)

உழல்செய் தீவினை யுருப்பற வுயிர்க்கெலா மடியின்
நிழல்செய் வார்க்குநீ ணிழல்செயா நின்றபூங் கடம்பின்
குழல்செய் வண்டுகற் பகமதுக் கோணர்ந்துவங் தூட்டித்
தழல்செய் காமமேன் பேடையி னூடனேய் தணிக்கும்.

(இ-ள்.) உழல் செய்-வருந்துதலைச் செய்கின்ற, தீவினை உருப்பு அற-தீவினையாகிய வெப்பம் நீங்க, உயிர்க்கு எலாம் - உயிர் அனைத்திற்கும், அடியின் நிழல் செய்வார்க்கு - (தமது) திருவடியின் நீழலை அருளுகின்ற சோம சுந்தரக்கடவுளுக்கு, நீள் நிழல் செயா நின்ற பூங்கடம்பின் - மிகுந்த நிழலைச் செய்து (ஒரு சிறை) நிற்கின்ற பூக்கள் நிறைந்த கடப்ப மரத்தினுள்ள, குழல் செய் வண்டு - வேய்ங்குழலின்

(பா - ம்.) * நின்றலர் கடம்பு.

இசைபோலும் ஒலி செய்யும் ஆண் வண்டானது, கற்பகம்-கற்பகச் சோலையிலுள்ள, மதுக்கொணர்ந்து-தேனைக் கொண்டுவந்து, உவந்து ஊட்டி - மகிழ்ந்து உண்பித்து, தழல் செய் காமம்-வெம்மையைச் செய்கின்ற காமத்தையுடைய, மென்பேடையின் - மென்மையான பெண்வண்டின், ஊடல் நோய் தணிக்கும் - புலவித் துன்பத்தை ஆற்றும் எ - று.

உழல்-முதனிலைத்தொழிற்பெயர். உயிர்க்கெலாம்-உயிர் எல்லா வற்றுக்கும் என உருபினை மாற்றுக. இவ்வினையின் உருப்பற எனவும அடியாகிய நிழல்செய்வார்க்குளனவும், அடியினால்நிழல் செய்வார்க்கு எனவும் விரித்தலுமாம். உயிர்க்கெலாம் நிழல் செய்வார்க்கு நிழல் செயா நின்றதென ஓர் வியப்புத்தோன்றக் கூறியவாறு. செயாநின்ற-செய்கின்றவென ஒரு சொல்லுமாம். கடம்பிலுள்ள வண்டினைக் கடம்பின் வண்டு என்றார். தொடர் புயர்வு நவிற்சியணி. (கரு)

ஆரு நீர்க்கட லன்றது வெனநிறை யகழ்கார்
ஊரு மாழியன் றதுவென வோங்கெயி லெட்டாய்ச்
சாரு நேமியன் றதுவெனச் சமைந்தகோ புரம்பொன்
மேரு வன்றது வெனச்சுடர் விண்ணிழி விமானம்.

(இ - ள்.) ஆரும் நீர்க்கடல்-நிறைந்த நீரினையுடைய கடல், அது அன்று (இது) என-அதுவன்று இதுதான் என்று சொல்லும்படி, நிறை அகழ்-நீர் நிறைந்த அகழியும், கார் ஊரும் ஆழி-மேகந் தவழ் கின்ற சக்கரவாளகிரி, அது அன்று (இது) என-அதுவன்று இது தான் என்று கூறும்படி, ஓங்கு எயில்-உயர்ந்த மதிலும், எட்டாய்ச் சாரும் நேமி-எட்டாய்ப் பொருந்திய மலைகள், அது அன்று (இவை) என-அவையல்ல இவைதான் என மொழிய, சமைந்த கோபுரம்-அமைந்த கோபுரங்களும், பொன் மேரு-பொன் மயமாகிய மேருமலை, அது அன்று (இது) என-அதுவன்று இதுதான் எனக் கழற விண் இழி சுடர் விமானம்-வானுலகத்தினின்றும் இறங்கிய ஒளி பொருந்திய விமானமும் (அங்கு உள்ளன) எ - று.

அன்றது என வருவனவற்றை அது அன்று என மாற்றியும், இது என்பதனை அருத்தாபத்தியாற்கொண்டும் உரைக்கப்பட்டது. எட்டாய்ச் சாரு நேமியன்று அது என்புழிப் பன்மை யொருமை மயக்கம். மலை யென்னும் பொதுமை நோக்கி அதுவென்றார் எனலு மாம். மலை யெட்டாவன: இமயம், ஏமகூடம், கந்தமாதனம், கைலை, நிடதம், நீலகிரி, மந்தரம், விந்தம் என்பன. குலமலை ஏழென்பார் கந்தமாதனம் ஒழியக் கொள்வர். பயனிலை தொக்கு நின்றது. இது தற்குறிப்பணியின் பாற்படும். (கசு)

வேத வந்தமுந் துளக்கற மெய்ப்பொருள் விளங்கும்
நாத வந்தமுங் கடந்ததோர் நடுநிலைப் பொருளின்
பாத வந்தனைப் பத்தியின் பாலராய்ப் பயில்வோர்
மாத வந்தரு பயனெனத் தழைத்தபல் வளனும்.

(இ - ள்.) வேத அந்தமும்-வேத முடிவையும், துளக்கு அற-கலக்கமின்றி, மெய்ப்பொருள் விளங்கும்-மெய்ப்பொருள் விளங்குதற்

கேதுவாகிய, நாத அந்தமும்-நாத முடிவையும், கடந்தது-கடந்ததாகிய, ஓர்-ஒப்பற்ற, நடுநிலைப் பொருளின்-நடுநிலைப் பொருளாகிய இறைவனுடைய,பாதம்-திருவடிகளை, வந்தனை-வணங்குதலையுடைய, பத்தியின் பாலராய்ப் பயில்வோர்-அன்பின் பகுதியை யுடையவராய் ஒழுகுவார்க்கு, மாதவம் தருபயன் என-அச்சிவ புண்ணியந் தருகின்ற பயன் தழைப்பதுபோல், பல் வளனும் தழைத்த-பல வளங்களும் (அங்கு) தழைத்தன எ - று.

வேத அந்தம்-உபநிடதம். நாத அந்தம்-நாத தத்துவத்தின் முடிபு; நாதம் - தத்துவங்களெல்லாவற்றினும் தலையாயது; நாத தத்துவத்தைத் தரிசித்தவர்க்கு மெய்ப்பொருள் விளங்கு மென்பார் 'மெய்ப் பொருள் விளங்கு நாதவந்தம்' என்றார்; விளங்கு மென்பதனை இடைநிலை விளக்காகக் கொண்டு வேதவந்தமும் என்பதனோடும் இயைத்துரைத்தலுமாம். இறைவன் பாச ஞானம் பசு ஞானங்களைக் கடந்தவனென்பார் வேத வந்தமும் நாத வந்தமும் கடந்த என்றார். நடுநிலைப் பொருள்-எள்ளினுள் எண்ணெய்போல எங்குங்கலந்துள்ள பொருள். தழைத்த: அன்பெறாத பலவின்பால் முற்று. (கஎ)

பொறிக ளைந்தினுக் கூட்டுபல் போகமு மிதப்பச்
செறிகோ ணீரவா லுவப்பவத்* திருநகர் மாக்கள்
நெறிகோள் செஞ்சடைப் பிறைமுடி நிருமலக் கொழுந்தின்
வெறிகோ ணண்மல ரடிதழீஇ வீடுபெற் றார்போல்.

(இ - ள்.) நெறிகொள் செஞ்சடை-நெறித்தலைக் கொண்ட சிவந்த சடையின்கண், பிறைமுடி-சந்திரனை அணிந்த,நிருமலக் கொழுந்தின்-இயல்பாகவே பாசங்களி னீங்கிய இறைவனுடைய, வெறிகொள்-மிகுந்த மணத்தைக் கொண்ட, நாள் மலர் அடிதழீஇ-அன்றலர்ந்த மலர்போலுந் திருவடிகளைப்பற்றி, வீடுபெற்றார்போல்-வீட்டுலகை யடைந்தவ ரடையும் இன்பம்போல், அத்திருநகர் மாக்கள் உவப்ப-அம் மதுரை மாநகரிலுள்ள மக்கள் இன்பம் பெற, பொறிகள் ஐந்தினுக்கு ஊட்டு-ஐம்பொறிகளுக்கும் உண்பிக்கின்ற, பல்போகமும்-பல போகப் பொருள்களும், மிதப்பச் செறிகொள் நீர-மிக நிறைந்த தன்மையுடையன எ - று.

ஐந்தினுக்கு-இனைத்தென அறிபொருளில் வரும் முற்றும்மை தொக்கது; இன்: சாரியை. மிதப்ப-மிக. செறி, நெறி என்பன முதனிலைத் தொழிற் பெயர். நீரவால் என்பதில் ஆல் அசை. நீர்மையை உடையவாதலால் மாக்கள் உவப்ப என முடித்தலுமாம்; இதற்கு உவப்ப என்பது பலர்பால் முற்று. (கஅ)

முன்ன வன்னர சிருக்கையா லந்நகர் முளரிப்
பொன்னை யீன்றதா லதுபல பொருணிறை செல்வந்
தன்னை யீன்றதா லதுபல தருமமென் றுரைக்கும்
மின்னை யீன்றதஃ தீன்றதால் விழுத்தகு புகழே.

(இ - ள்.) முன்னவன் அரசு இருக்கையால்-யாவர்க்கும் முதல்வனாகிய சோமசுந்தரக் கடவுள் அரசு புரிந்தமையினால், அந்நகர் முளரிப்

(பா - ம்.) *உவர்ப்பத்.

பொன்னை ஈன்றது-அம்மதுரையானது தாமரை மலரில் வீற்றிருக்குந் திருமகளைப் பெற்றது; அது – அத்தெய்வம், பல பொருள் நிறை செல்வம் தன்னை ஈன்றது-பல பொருள்களும் நிறைந்த செல்வத்தைப் பெற்றது; அது-அச்செல்வம், பல தருமம் என்று உரைக்கும் மின்னை ஈன்றது-பல அறங்கள் என்று சொல்லப்படுகின்றபெண்ணைப் பெற்றது; அஃது-அந்தப் பெண், விழுத்தகு புகழ் ஈன்றது-சீரிய புகழைப் பெற்றது எ – று.

னகரம் விரித்தல். ஈன்றதால் மூன்றினும் ஆல்: அசை. பின் பின்னாக வருவனவற்றிற்கு முன் முன்னாகவுள்ளன காரணமாக விருத்தலின் இது காரண மாலையணி. (கசுக)

எழுக்க டந்ததோ ளுருத்திர வுலகமேன் றியாரும்
வழுத்த நின்றவிந் நகர்வயி னும்பரின் மாண்ட
விழுத்த கும்பல செல்வமும் வியந்துபார்த் துள்ளத்
தழுக்க ருமையா லின்னமு மமரர்கண் ணுறங்கார்.

(இ - ள்.) எழுக் கடந்த தோள்-தூணை வென்ற தோள்களை யுடைய, உருத்திரன் உலகமென்று-சிவபிரானுலகமென்று, யாரும் வழுத்த நின்ற-எவரும் பரவுதற்கு அமைந்த, இந்நகர்வயின்-இம் மதுரை நகரின்கண் உள்ள, உம்பரின் மாண்ட-(தமது) தேவ உலகிலுள்ள பொருள்களினும் மாட்சிமைப்பட்ட, விழுத்தகும்பல செல்வமும்-சீரிய பல செல்வங்களையும், பார்த்து வியந்து-கண்டு வியப்படைந்து, உள்ளத்து அழுக்கு அருமையால் - மனத்தின்கண் பொறாமை நீங்காமையினால், அமரர் இன்னமும் கண் உறங்கார்-தேவர்கள் இன்னமும் கண்டுயிலாதவரா யுள்ளார்கள் எ – று.

உருத்திர வுலகம்-சிவலோகம்;பெயர்; 'எழுக்கடந்ததோள்' என்பது உருத்திரனுக்கு அடை; உருத்திர னுலகம் எனப் பாடங் கொள்ளுதல் சிறப்பு; 'குருதிக் கோட்டுக் குஞ்சர நகரம்' என்பதுபோலக் கொள்ளலுமாம். அழுக்கு-பொறாமை. இனி யென்னும் இடைச்சொல் அம்முப்பெற்று இகரங் கெட்டு இன்னம் என்றாயது. அழுக்காறுடையார் கண்ணுறங்கார் என்றார். அமரர்க்கு இயல்பாய கண்ணுறக்க மின்மையைப் பொறாமையால் வந்ததெனக் கவி தன்கருத்தை யேற்றிக் கூறுதலின் இது தற்குறிப்பேற்றவணி. (க00)

விரைய விழ்ந்ததார் மீனவர் வாகைவேல் விடுத்துத்
திரையை வென்றது முடிதகர்த் திந்திரன் செருக்குக்
கரைய வென்றதுங் கார்தளை யிட்டதுங் கனக
வரையை வென்றது மிந்நகர் வலியினா லன்றே.

(இ - ள் .) விரை அவிழ்ந்த தார் மீனவர்-மணம் விரிந்த மாலையை யணிந்த மீனக் கொடியை யுடைய பாண்டி மன்னர், வாகை வேல் விடுத்து-வெற்றி மாலையைச் சூடிய வேற்படையை ஏவி, திரையை வென்றதும்-கடலைச் சுவறச் செய்து வெற்றி பெற்றதும், இந்திரன் முடி தகர்த்து-இந்திரனுடைய முடியைப் பொடியாக்கி, செருக்குக் கரைய வென்றதும்-(அவன்) செருக்கு அழியும்படி செய்து வெற்றி பெற்றதும், கார் தளை இட்டதும்-முகிலை விலங்கு பூட்டிச்

சிறையிலிட்டதும், கனக வரையை வென்றதும் - மகா மேருவைச் செண்டாலடித்து வெற்றி பெற்றதும், இந்நகர் வலியினால் அன்றோ - இந்நகரத்தின் வலிமையினால் அல்லவா எ - று.

இங்கே மீனவர் என்றது உக்கிரகுமாரபாண்டியரை; அவர் கடல் சுவற வேல் விட்டதும், இந்திரன் முடிமேல் வளை யெறிந்ததும், மேகத்தைத் தளையிட்டதும், மேருவைச் செண்டாலடித்ததும் இப்புராணத்துள்ளே வரும் அவ்வப்படலங்களானறிக. 'ஆற்றுபவர்க்கும் அரண் பொருள்' என்றபடி வலியுடையார்க்கும் அரண் வேண்டுமாகலின், ஈண்டு அதனையே மிகுத்துக் கூறுவாராய் 'இந்நகர் வலியினாலன்றோ' என்றார். (௧0௧)

எங்கு நாவுமா யெங்கணுங் கண்ணுமா யெங்குந்
தங்கு பேரொளி யல்லதித் தனிநகர்ச் செல்வஞ்
செங்க ணாயிர நாவினான் செப்பவு மெதிர்கண்
டங்க ணாயிர முடையவ னளக்கவும் படுமோ.

(இ-ள்.) எங்கும் நாவும் ஆய்-எவ்விடத்தும் நாவையுடையதாகி, எங்கணும்கண்ணும் ஆய்-எங்குங் கண்ணையுடையதாகி, எங்கும்தங்கு-யாண்டும் நிறைந்த, பேர் ஒளி அல்லது - பெரிய ஒளிப் பிழம்பாகிய இறைவனால் அளக்கவும் கூறவு முடியுமே யன்றி, இத் தனி நகர்ச் செல்வம்-இந்த ஒப்பற்ற நகரிலுள்ள செல்வமானது, செங்கண் ஆயிரம் நாவினான் செப்பவும்-சிவந்த கண்களையும் ஆயிரம் நாவையுமுடைய ஆதிசேடன் சொல்லவும், அம் கண் ஆயிரம் உடையவன் - அழகிய ஆயிரம் கண்களையுடைய இந்திரன், எதிர்கண்டு அளக்கவும் படுமோ-எதிரே பார்த்து அளந்துவிடவும் முடியுமோ (முடியாது) எ - று.

எண்ணில்லாத நாவும் கண்ணுமுடையவராலன்றி, ஆயிர மென்னும் வரையறைப்பட்ட நாவும் கண்ணுமுடையவரால் சொல்லவும் அளக்கவும் முடியாதென்றார். எவ்விடத்தும் எல்லாத்தொழிலும் ஒருங்கே செய்யும் இறைவனது முடிவிலாற்றலைக் குறித்தற்கு 'எங்கு நாவுமா யெங்கணுங் கண்ணுமாய்' என்றார்.

"ஆயிரந் தாமரை போலு மாயிரஞ் சேவடி யானும்
ஆயிரம் பொன்வரை போலு மாயிரந் தோளுடை யானும்
ஆயிர ஞாயிறு போலு மாயிர நீண்முடி யானும்
ஆயிரம் பேருகந் தானு மாரூ ரமர்ந்த வம்மானே"

என்பது முதலிய திருவாக்குகளில் ஆயிரம் என்பது அளவிறந்ததென்னும் பொருட்டு. (௧0௨)

புண்ணி யம்புரி பூமிபா* ரதில்வரு போகம்
நண்ணி யின்புறு பூமிவா னுடைன்ப நாளும்
புண்ணி யம்புரி பூமியு மதில்வரு போகம்
நண்ணி யின்புறு பூமியு மதுரைமா நகரம்.

---

(பா - ம்.) * பூமியார்.

(இ - ள்.) புண்ணியம் புரி பூமி பார்-அறஞ் செய்தற்கு இடமாயுள்ளது புவியாம், அதில் வருபோகம் நண்ணி - அவ்வறத்தால் விளையும் பயனைப் பெற்று, இன்பு உறு பூமி வானாடு - இன்பத்தையடைதற்கு இடமாயுள்ளது வானுலகமாம், என்ப - என்று சொல்லுவர் நூலோர்; நாளும் - எப்போதும், புண்ணியம் புரி பூமியும் - அறஞ் செய்தற்கு இடமாயுள்ளதும், அதில் வரு போகம் நண்ணி - அதனால் வருகின்ற போகத்தைப் பொருந்தி, இன்பு உறு பூமியும்-இன்பத்தையடைதற்கு இடமாயுள்ளதும், மதுரைமா நகரம் - இம் மதுரை மாநகரமே ஆகும் எ - று.

பூமி என்பன இடம் என்னும் பொருளன. அதில் - அதனால். புண்ணியம், போகம் என்பன சாதி யொருமைகள். சொல்லும் பொருளும் முன் வந்தனவே பின்னும் வருதலின் இது சொற்பொருட் பின் வருநிலை யணி. (கoங)

[அறுசீரடியாசிரியவிருத்தம்]

பண்கனிந் தனைய சொல்லார் நரப்பிசைப் பாணி* தேவர்
உண்கனி யமுதுங் கைப்பச் செவிதொளைத் தூட்ட வுண்டும்
பெண்களி னமுத மன்னார் பெருமித நடன முண்ணக்
கண்களை விடுத்துங் காலங் கழிப்பவ ரளவி லாதார்.

(இ - ள்.) பண் கனிந்தனைய சொல்லார்-பண் கனிந்தாலொத்த (இனிய) சொல்லையுடைய மகளிர், நரப்பு இசைப் பாணி - யாழின் இசையோடு கூடிய பாட்டினை, தேவர் உண் கனி அமுதும் கைப்ப - தேவர் உண்ணுகின்ற (சுவை) முதிர்ந்த அமுதத்தையும் வெறுக்கும்படி, செவி தொளைத்து ஊட்ட உண்டும்-செவியைத் தொளைத்து உண்பிக்க (அதனை) உண்டும், பெண்களின் அமுதம் அன்னார்-பெண்களுள் அமுதம் போன்ற மகளிர் (செய்யும்), பெருமித நடனம் உண்ண-மிகவுயர்ந்த நடனத்தை நுகரும் பொருட்டு, கண்களை விடுத்தும் - பார்வைகளைச் செலுத்தியும், காலம் கழிப்பவர் அளவு இலாதார் - காலம் போக்குவோர் அளவற்றவர்கள் (அப்பதியில் உளர்) எ - று.

பண் கனிந்தனைய - பண் முற்றுப்பெற்றாலொத்த; கனிந்தாலனைய எனற்பாலது விகாரமாயிற்று. நரம்பு - யாழைக் குறிக்கின்றது; மெல்லொற்று வல்லொற்றாயது. இசையாகிய பாணி என்னலுமாம். கனி அமுது-சுவை முற்றிய அமுது. தொளைத்தலை 'கேள்வியாற் றோட்கப்படாத செவி' என்பதனாலு மறிக; உபசாரம். 'செவியுணவு' என்பவாகலின் 'உண்டும்' என்றார்; கண்ணுக்குங் கொள்க. (கoச)

கலவிவித் தாக வூடிக் கட்புனல் குளிக்கு நல்லார்
புலவிதீர் செவ்வி நோக்கிப் புணர்முலைப் போகந் துய்த்தும்
நிலைநிலை யாமை நோக்கி நெறிப்படு† தரும தானங்
கலைஞர்கைப் பெய்துங் காலங் கழிப்பவ‡ ரெண்ணி லாதார்.

(பா - ம்.) * இசை பாணி. † நெறிபடு. ‡ கடப்பவர்.

(இ - ள்.) கலவி வித்தாக ஊடி-புணர்ச்சி காரணமாகப் புலந்து, கண்புனல் குளிக்கும் நல்லார் - கண்ணீரில் மூழ்கும் மகளிரின், புலவி தீர் செவ்வி நோக்கி-புலவி நீங்குகின்ற காலத்தை யறிந்து, புணர் முலைப் போகம் துய்த்தும் - நெருங்கிய கொங்கைகளின் இன்பத்தை நுகர்ந்தும், நிலை நிலையாமை நோக்கி-நிலையுடைப் பொருள் நிலையில் பொருளி னியல்பை அறிந்து, நெறிப்படு - முறைமையையுடைய, தரும தானம் - தரும தானங்களை, கலைஞர் கைப்பெய்தும் - நூலறிவு மிக்க சான்றோருக்குச் செய்தும், காலம் கழிப்பவர் எண் இலாதார் - காலத்தை நடத்துகின்றவர்கள் பலர் (அப்பதியில் உளர்) எ - று.

"ஊடுதல் காமத்திற் கின்ப மதற்கின்பங்
கூடி முயங்கப் பெறின்"

என்பவாகலின் 'கலவி வித்தாக வூடி' என்றார். நிலையுள்ளனவும் நிலையில்லனவும் நிலைநிலையாமை எனப்பட்டன; உம்மை தொக்கது. நித்த அநித்தங்களை உணர்ந்த வழியே அறஞ் செய்தற்கண் மனவெழுச்சி யுண்டாமென்பார் 'நோக்கி' என்றார். தருமம் பொதுவும் தானம் சிறப்புமாம். நெறி யென்றது அறநூல் கூறு முறைமையினை. (கoடு)

சந்தித்து மீன நோக்கி தலைவனை மூன்று போதும்
வந்தித்து மீசன் பூசை மரபுளி முடித்தும் வேதம்
அந்தித்து மறியான் செய்த திருவிளை யாடல் கேட்டுஞ்
சிந்தித்து மன்பர் பூசை செய்துநாள் கழிப்பர் பல்லோர்.

(இ - ள்.) மீன நோக்கி தலைவனை - அங்கயற்கண்ணி தலைவனாகிய சோமசுந்தரக் கடவுளை, மூன்று போதும் சந்தித்து வந்தித்தும்-மூன்று காலங்களிலும்சென்றுகண்டு வணங்கியும், ஈசன் பூசை மரபுளி முடித்தும்-சிவபூசையை ஆகம முறையால் நிறைவேற்றியும், வேதம் அந்தித்தும் அறியான் செய்த-வேதங்கள் அணுகியும் அறியமுடியாதவனாகிய அவ்விறைவன் செய்தருளிய, திருவிளையாடல் கேட்டும் - திருவிளையாடல்களைப் பெரியோர் சொல்லக் கேட்டும், சிந்தித்தும் (அவற்றை) நினைத்தும், அன்பர் பூசை செய்தும் - அடியார்களைப் பூசித்தும், நாள் கழிப்பர் பல்லோர்-நாளை நடத்துவார்கள் பலர் (அப்பதியில்) எ-று.

சந்தித்து வந்தித்து மென்க. போதும்-மரூஉ. மூன்று பொழுது: காலை, நண்பகல், மாலை என்பன. மரபுளி - முறையால்; உளி: மூன்றன் பொருள்படுவ தோரிடைச் சொல். அந்தித்தல்-சந்தித்தல், அணுகல்; முடியச் செல்லுதல் எனினுமாம். அறியான் - அறியப் படாதவன்; செயப்பாட்டு வினைப் பொருளில் வந்தது. சிந்தித்தும் என்பதற்கு இறைவனைத் தியானித்தும் என்றுரைத்தலுமாம. (கoசு)

கற்பவை கற்றுங் கேட்டுங் கேட்பவை* கருத்து ளூறச்
சொற்பொரு ளினைந்துங் கேட்போர்க் குணர்த்தியுட் டுளக்கந் [தீர்த்தும்
எற்பக லிரவு நீங்கு மிடத்துமெய் யறிவா னந்த
அற்புத வெள்ளத் தாழா தாழ்ந்துநாள் கழிப்பர் சில்லோர்.

(பா - ம்.) * கேட்பவை.

(இ - ள்.) கற்பவை கற்றும்-கற்கத் தகுவனவாய மெய்ந்நூல்களைக் கற்றும், கேட்டும் - (அந்நூற் பொருளைப் பெரியார்வாய்க்) கேட்டும், கேட்டவை-(அங்ஙனங்) கேட்டவைகள், கருத்துள் ஊற-கருத்திற்பதியும்படி, சொல்பொருள் நினைந்தும்-சொல்லையும்பொருளையும் பலகாற் சிந்தித்தும், கேட்போர்க்கு உணர்த்தி-கேட்பவருக்கு அறிவித்து, உள் துளக்கம் தீர்த்தும் - (அவர்கள்) உள்ளத்திலுள்ள ஐயத்திரிபாகிய கலக்கங்களைப் போக்கியும், எல் பகல் இரவு நீங்கு இடத்து-ஒளி பொருந்திய பகலும் இரவும் அற்ற விடத்தில், மெய் அறிவு ஆனந்த அற்புத வெள்ளத்து-சச்சிதானந்த சொரூபமாகிய அற்புத வெள்ளத்தின்கண், ஆழாது ஆழ்ந்தும்-படியாமற் படிந்தும், நாள் கழிப்பர் சில்லோர்-நாளைப் போக்குவர் சிலர் (அப்பதியில்) எ - று.

கற்பவை-கற்கத் தகுவனவாகிய ஞான நூல்கள். நினைதல்-சிந்தித்தல். கேட்போர்க்குணர்த்தியென்றது கேட்பித்து என்றவாறு. இவற்றுடன் கற்பித்தலையுங் கூட்டி ஞான பூசை யென்பர்; 'ஞான நூல் தனையோத லோது வித்தல் நற்பொருளைக் கேட்பித்தல் தான்கேட்டல் நன்று, ஈனமிலாப் பொருளதனைச் சிந்தித்த லைந்தும் இறைவனடியடைவிக்கு மெழின்ஞானபூசை' என்பது சிவஞானசித்தி. எல்-ஒளி. இரவு பகல் என மாற்றிக் கொள்க. இரவு பகலற்ற விடமாவது கேவல சகலங்களின் நீங்கியசுத்தாவத்தையில் நிற்கும் அருளாதார நிலை; 'இரவு பகலில்லா வின்ப வெளியூடே, விரவி விரவிநின் றுந்திபற, விரைய விரையநின் றுந்திபற' என மெய்ந்நூல் கூறுதலுங் காண்க. மெய்-அழிவில்லது; சத்து. ஆழாது ஆழ்தல்-அதுவாதலும் வேறாதலுமின்றிப் பேரின்ப நிட்டை கூடியிருத்தல். (கo எ)

தன்னிக ருயர்ச்சி யில்லான் காப்பியத் தலைவ னாக
முன்னவர் மொழிந்த தேனோர் தமக்கெலா முகம னன்றோ
அன்னது தனதே யாகு மண்ணலே பாண்டி வேந்தாய்
இந்நகர்க் கரச னாவா னிக்கவிக் கிறைவ னாவான்.

(இ - ள்.) தன் நிகர் உயர்ச்சி இல்லான்-தனக்கு ஒப்பும் உயர்வு மில்லாதவனே, காப்பியத் தலைவன் ஆக-காப்பியத் தலைவனென்று, முன்னவர் மொழிந்தது-முன்னுள்ளவர்கள் கூறியது, ஏனோர் தமக்கு எலாம் முகமன் அன்றோ-மற்றையோர்க்கெல்லாம் உபசாரமல்லவா, அன்னது தனதே ஆகும் அண்ணலே-அவ்வுயர் வொப்பில்லாத தன்மையைத் தனக்கே உரிமையாகக் கொண்டிருக்கும் இறைவனே, பாண்டி வேந்தாய்-பாண்டி மன்னனாய், இந்நகர்க்கு அரசன் ஆவான்-இம்மதுரை நகருக்கு அரசனுவானும், இக்கவிக்கு இறைவன் ஆவான்-இக்காப்பியத்திற்குத் தலைவனுவானும் ஆகும் எ-று.

காப்பியம்-கவியால் இயற்றப்படுவது; கவி-புலவன்; காப்பியம் என்பது தமிழில் தொடர்நிலைச் செய்யுள் எனப்படும். காப்பியத் தலைவன் ஒப்புயர் வில்லானுதல் வேண்டுமென்பதை,

"பெருங்காப் பியநிலை பேசுங் காலை
வாழ்த்து வணக்கம் வருபொரு ளிவற்றினொன்
றேற்புடைத் தாகி முன்வர வியன்று

நாற்பொருள் பயக்கு நடைநெறித் தாகித்
தன்னிக ரில்லாத் தலைவனை யுடைத்தாய்''

என்னும் அணிநூற் சூத்திரத்தா னறிக. ஒப்பும் உயர்வுமில்லாதவன் எல்லா முழுமுதன்மையுமுடைய இறைவ னொருவனே யாகலின் 'ஏனோர் தமக்கெலா முகமனன்றோ' என்றார். ஏகாரம்: தேற்றம். இக்கவி யென்புழிக் கவி யென்றது காப்பியமென்னும் பொருட்டு; கவி -செய்யுள், காப்பியம்: ஆகு பெயருமாம். (கOஅ)

என்னென வுரைப்பே னந்த* விறைமகன் பண்பை யேனை
மன்னவர் வானோர் போல மதித்துரை விரிக்கற் பாற்றோ
அன்னவ னாணை யாற்றா னடப்பதிவ் வகில மென்றால்†
மூன்னவன் செய்த வாடல் வரவினை முறையிற் சொல்வேன்.

(இ - ள்.) அன்னவன் ஆணையால் தான்-அச்சோமசுந்தரக் கடவுளின் திருவாணையினாலேதான், இ அகிலம் நடப்பது என்றால் - இந்த உலகம் நடைபெறுவதென்றால், அந்த இறைமகன் பண்பை-அந்தப் பாண்டி மன்னனாகிய இறைவனுடைய தன்மையை, என் என உரைப்பேன்-என்னென்று கூறுவேன் (அது), ஏனை மன்னவர் வானோர் போல மதித்து-மற்ற அரசர்கள் தேவர்களின் தன்மைகளைப் போலக் கருதி, உரை விரிக்கற் பாற்றோ-உரைக்குந் தகுதியை உடையதோ (அன்று), முன்னவன் செய்த ஆடல் வரவினை-(இனி அம்) முதல்வன் செய்தருளிய திருவிளையாடல்களை, முறையில் சொல்வேன் - முறையாகக் கூறுவேன் எ - று.

இறைமகன்-இறையாகிய மகன்; இறைவனென்னுஞ் சொல் அரசனையும் கடவுளையுங் குறிக்கும்; 'இறைகாக்கும் வையகமெல்லாம்,' 'இறைவன் பொருள்சேர் புகழ்' என்புழி முறையே காண்க. ஆணை ஆற்றால் எனப் பிரித்து, ஆணைவழியால் எனப் பொருளுரைத்தலுமாம். இவ்வகிலம் என்பதிற் சுட்டு உலகினைப் பொதுவிற் சுட்டுவது; எவ்வுலகும் என்பது பாடமாயின் எல்லாவுலகமு மென்க. நடப்பது யாவரானும் தெளியப்பட்ட தென்பார் 'என்றால்' என்றார். அம்முன்னவன் எனச் சுட்டு வருவிக்க. ஆடல் வரவு-ஆடலின் நிகழ்ச்சி. (கOகூ)

ஆகச்செய்யுள் - ககூகூ.

---

(பா - ம்) * இந்த. † எஉவுலகுமென்றால், எவ்வுலகுமானல்.

## திருக்கைலாயச் சிறப்பு

[கலிநிலைத்துறை]

வரங்க டந்தரு ளெனமுது வானவர் முனிவோர்
கரங்க டந்தலை முகிழ்த்திடக் கருணைசெய் தவிச்சை
உரங்க டந்துரை யுணர்வெலாங் கடந்தரு மறையின்
சிரங்க டந்தவ னிருப்பது திருக்கயி லாயம்.

(இ - ள்.) முதுவானவர் முனிவோர்-பெரிய தேவர்களும் முனிவர்களும், வரங்கள் தந்தருள் என-வரங்களைக் கொடுத்தருளவேண்டுமென்று, கரங்கள் தம் தலை முகிழ்த்திட-கைகளைத் தங்கள் தலையிற் கூப்பி வேண்டாநிற்க, கருணை செய்து-(அவருக்குத்) திருவருள் செய்து, அவிச்சை உரம் கடந்து-(இயல்பாகவே) வலிய பாசங்களினின்று நீங்கி, உரைஉணர்வுஎலாம் கடந்து-வாக்கு மனங்கள் எல்லாவற்றையுங் கடந்து, அருமறையின் சிரம் கடந்தவன்-அரிய வேதங்களின் முடிவையும் கடந்த இறைவன், இருப்பது திருக்கைலாயம்-வீற்றிருக்கப்பெறுவது திருக்கைலாயமலை ஆகும் எ - று.

முதுவானவர்-திருமால் முதலியோர். முனிவோர்: அகரம் ஓகாரமாதல் உடம்பொடு புணர்த்தலாற் கொள்க. அவிச்சை-அஞ்ஞானம்; அஃது ஏனைத் தேவர் முதலாயினோர் அறிவை யெல்லாம் மறைக்கும் வலியுடையதென்பது தோன்ற, 'அவிச்சையுரம்' என்றார். உரை உணர்வுகள் பல திறப்படுமாகலின் 'எல்லாம்' என்றார். இறைவன் அபரஞானத்திற்கு அப்பாற்பட்டவ னென்பார் 'அருமறையின் சிரங் கடந்தவன்' என்றார். செய்து, கடந்து, கடந்து என்னும் வினை யெச்சங்கள் கடந்தவன் என்பதன் பகுதியைக் கொண்டு முடிந்தன. (க)

புரந்த ராதிவா னவர்பதம் போதுறை புத்தேள்
பரந்த வான்பதஞ் சக்கரப் படையுடைப் பகவன்
வரந்த வாதுவாழ் பதமெலா நிலைகெட வருநாள்
உரந்த வாதுநின் றூழிதோ றோங்குமவ் வோங்கல்.

(இ - ள்.) புரந்தர ஆதி வானவர் பதம்-இந்திரன் முதலிய இமையவர் உலகும், போது உறை புத்தேள்-தாமரை மலரில் உறையும் அயனுடைய, பரந்த வான்பதம்-அகன்ற உயர்ந்த சத்தியலோகமும், சக்கரப்படை உடைப்பகவன்-திகிரிப்படையினையுடைய திருமாலின், வரம் தவாது வாழ் பதம்-மேன்மை கெடாது வாழ்கின்ற பரமபதமும், எலாம்-ஆகிய எல்லாமும், நிலைகெட வரும் ஊழி நாள் தோறும்-அழிய வருகின்ற ஊழிக்காலந்தோறும், அ ஓங்கல்-அத் திருக்கைலாய மலையானது, உரம் தவாது நின்று ஓங்கும்-வலி கெடாது நிலைபெற்று வளரும் எ - று.

புரந்தராதி: வடமொழித் தீர்க்க சந்தி. பகவன் ஆறு குணங்களையுடையவன்; சிவன், திருமால் முதலிய பல கடவுளர்க்கும் இப்பெயர் உரித்து. வரும் ஊழி நாள் எனச் சொற்கள் மாற்றப்பட்டன; வரு

நாள் நின்று அவ்வூழிதோறும் என வுரைத்தலுமாம்; உம்மை தொக்கது. 'கைலை மூவுலகும் ஒடுங்கு கின்றநா ளோங்கிய வோக்கம்' என முன்னுங் கூறினர்; ஆண்டுக் காட்டிய 'ஊழிதோ றூழி முற்று முயர்பொன் னெடித்தான் மலையே' என்பதனை ஈண்டுங் கொள்க. ஓங்கல் என்பது மலைக்குத் தொழிலாகுபெயர்; அல்: பெயர் விகுதி யென்னலுமாம். (உ)

அரம்பை மாதரா ராடலி னரவமும் பாடல்
நரம்பி னோசையு முழவதிர் சும்மையும் நால்வாய்
வரம்பி லோதையு மருவிவீ ழொலியுமா றுது
நிரம்பி வானமுந் திசைகளு நிமிர்வன மாதோ.

(இ - ள்.) அரம்பை மாதரார் ஆடலின் அரவமும் - தேவ மகளிரின் கூத்தின் ஒலியும், பாடல் நரம்பின் ஓசையும் - பாடலின் ஒலியும் யாழின் ஒலியும், முழவு அதிர் சும்மையும்-மத்தளம் அதிர்கின்ற ஒலியும், நால்வாய் வரம்பு இல் ஓதையும் - யானைகளின் அளவிறந்த ஒலியும், அருவி வீழ் ஒலியும் - அருவிகள் வீழ்கின்ற ஒலியும், மாறுது - நீங்காது, வானமும் திசைகளும் நிரம்பி நிமிர்வன - வானுலகத்தும் திக்குகளிலும் சென்று நிரம்பி மிகுவன எ - று.

ஓசை யென்பதனைப் பாடலோடுங் கூட்டுக. நரம்பு: ஆகுபெயர். நால்வாய்: தொங்கும் வாயையுடையது என அன்மொழித்தொகைக் காரணப்பெயர். மாது, ஓ: அசை. அரவம் முதலியன சொல்வேறுபட்டு ஒரேபொருளில் வருதலின் இது பொருட் பின்வருநிலை. (ங)

வெந்த நீற்றொளி வெண்மையும் விமலனை யகங்கொண்
டந்த மின்றியே யசைவற விருக்கையு மருவி
வந்த கண்களும் கொண்டவ ணிருக்குமா தவர்க்குத்
தந்த தாலரன் கயிலையுந் தனதுசா ரூபம்.

(இ - ள்.) அரன் கயிலையும் - (சிவபிரானே யன்றி) அவன் வீற்றிருக்கும் கயிலாய மலையும், வெந்த நீற்று ஒளி வெண்மையும்-வெந்த திருநீற்றின் ஒளிபோலும் வெண்மையையும், விமலனை அகம் கொண்டு - நின்மலனாகிய இறைவனைத் தன்னிடத்தே கொண்டு, அந்தம் இன்றியே அசைவற இருக்கையும் - அழிவில்லாமல் அசைவற்று இருத்தலையும், அருவிவந்த கண்களும் கொண்டு - அருவி வருகின்ற இடங்களையுங் கொண்டு, அவண் இருக்கும் மாதவர்க்கு-அங்கு இருக்கின்ற பெருமை பொருந்திய முனிவர்களுக்கு, தனது சாரூபம் தந்தது - தனது சாருப பதவியைக் கொடுத்தது எ - று.

சாரூபம் - பதமுத்தி மூன்றனு ளொன்று. சிவசாரூபமாவது முக்கண், சடைமுடி, நாற்றோள், மணிமிடறு, மான் மழு வேந்துகை முதலியனவுடைய சிவனது திருவுருவைப் பெறுதல். வெண்மை, இருக்கை, கண்கள் என்பன கைலைக்கும் மாதவர்க்கும் பொதுவாக வுள்ளன வாதலின் கைலையும் தனது சாரூபம் தந்ததென்றார்; இது தற்குறிப்பேற்றவகை. திருநீற்றின் ஒளி, உளத்திற் கொண்டு சலிப்பின்றி யிருத்தல். ஆனந்தவருவி வந்த விழிகள் என மாதவர்க்கேற்பப்

பொருளுரைத்துக் கொள்க. ஆல்: அசை. கயிலையும் என்னும் உம்மை எச்சப்பொருட்டு. (ச)

ஆங்கு வெண்டுகில் விரித்தெனக் கல்லென வார்த்து
வீங்கு காலரு வித்திரள் வெள்ளமே யன்றி
ஓங்கு நான்மறைக் குடுமியி னுள்ளொளி நோக்கித்
தூங்கு மாதவர் கண்களுஞ் சொரிவன வெள்ளம்.

(இ - ள்.) ஆங்கு - அம்மலையினிடமானது. வெண்துகில் விரித்தென-வெள்ளிய ஆடையை விரித்தாற் போலத் (தோன்றி), கல்லென ஆர்த்து - கல்லென்று ஆரவாரித்து, வீங்குகால் - உயர்ந்த கால்களையுடைய, அருவித்திரள் வெள்ளம் அன்றி - அருவியாகிய திரண்ட வெள்ளத்தைச் சொரிதல் அல்லாமல், ஓங்கும் நான்மறைக் குடுமியின் உள் ஒளி நோக்கி-உயர்ந்த நான்கு மறைகளின் முடியினுள் விளங்கும் ஒளிப்பிழம்பை (அகத்திற்) கண்டு, தூங்கு மாதவர் கண்களும்-அழுந்திக் கிடக்கின்ற பெரிய முனிவர்களின் கண்களும், வெள்ளம் சொரிவன-ஆனந்த அருவியாகிய வெள்ளத்தைப் பொழிவனவாம் எ - று.

ஆங்கு - அவ்விடம்: எழுவாய். அருவி வெண்டுகில் விரித்தாற் போலுமென்பதனை,

"அவிர்துகில் புரையு மவ்வெள் ளருவி"

எனப் பெருங்குறிஞ்சியுட் கூறியவாற்றானு மறிக. வெள்ளத்தைச் சொரிதலன்றி என விரித்துரைக்கப்பட்டது. ஒளி - இறைவன் றிருவுரு. தூங்குதல்-அழுந்தி நிற்றல்; இதனையே தூங்காமற் றூங்கல் என்பர். 'ஒளி நோக்கித் தூங்கும்' என்பதிலுள்ள அணி நலமுங் காண்க. எச்சவும்மை. (ரு)

கோட்டு மாமலர் நிலமலர் குண்டுநீ ரெடுத்துக்
காட்டு மாமலர் கொடிமலர் கொண்டுமுட் கரைந்த
பாட்டு மாமலர் கொண்டுநம் பரஞ்சுட ரடியிற்
சூட்டு மாதவர் தொகுதியுஞ் சூழ்வன வொருபால்.

(இ - ள்.) கோட்டு மாமலர் - பெருமை பொருந்திய கோட்டுப் பூக்கள், நிலமலர்-நிலப்பூக்கள், குண்டு நீர் எடுத்துக் காட்டும் மாமலர்-ஆழமாகிய நீர் உயர்த்திக் காட்டுகின்ற பெருமை பொருந்திய நீர்ப் பூக்கள், கொடி மலர் கொண்டும் - கொடிப் பூக்கள் ஆகிய இந்நால் வகைப் பூக்களைக் கொண்டும், உள்கரைந்த-உள்ளம் உருகிக் கூறிய, பாட்டு மாமலர் கொண்டும்-பாட்டாகிய பெருமை பொருந்திய மலர்களைக் கொண்டும், நம் பரஞ்சுடர் அடியில் சூட்டும்-நமது பரஞ்சோதியாகிய சிவபிரான் திருவடிகளிற் சூட்டுகின்ற, மாதவர் தொகுதியும் - பெரிய தவத்தினையுடையார் கூட்டங்களும், ஒருபால் சூழ்வன - (அம்மலையின்) ஒரு பக்கத்தில் சூழா நிற்கும் எ - று.

மா என்னு மடையை நிலமலர் கொடிமலர்கட்குங் கூட்டுக. நீர் எடுத்துக் காட்டும் என்பதற்கு நீரில் விளங்கித் தோன்றிய என்னலுமாம். கரைந்த - கரைந்து கூறியவென்க; கரைதற்குக் காரணமான என்னலுமாம். மாதவர் - திருத்தொண்டர். (சு)

கைய நாகமுங் காய்சின வுழுவையுங் கடுவாய்ப்
பைய நாகமுந் தங்கிளை பரவிய முக்கண்
ஐய ஞகமேய் யருந்தவர் தமையடைந் தன்பு
செய்ய நாகமும் வையமும் புகழ்வதச் சிலம்பு.

(இ - ள்.) கைய நாகமும் - கையையுடைய யானைகளும், காய் சின உழுவையும் - மிகுந்த சினத்தையுடைய புலிகளும், கடுவாய் பைய - நஞ்சினையுடைய வாயையும் படத்தையுமுடைய, நாகமும் - பாம்புகளும், தம் கிளை பரவிய முக்கண் ஐயன் ஆக - தங்கள் சுற்றம் வழிபட்ட மூன்று கண்களையுடைய இறைவனைக் கருதி, மெய் அருந் தவர் தமை அடைந்து - மெய்யாகிய அரிய தவமுடையார்களை அடைந்து, அன்பு செய்ய - அன்போடு பணி செய்யா நிற்க, நாகமும் வையமும் புகழ்வது அச்சிலம்பு - விண்ணுலகத்தாராலும் மண்ணுலகத்தாராலும் புகழப் பெறுவது அத்திருக்கைலாயமலை எ - று.

நாகம் என்னும் பல பொருளொரு சொல் கைய, பைய என்னும் சிறப்படைகளானும், வையம் என்னும் இனத்தானும் முறையே யானை, பாம்பு, விண்ணுலகம் என்பவற்றை யுணர்த்திற்று. காய் சினம் - காய்கின்ற சினம்; மிக்க சினம். கைய, பைய வென்பன குறிப்புப் பெயரெச்சம். யானை திருவானைக்காவிலும் சீகாளத்தி யிலும் வழிபட்டமையும், பாம்பு சீகாளத்தியில் வழிபட்டதும், புலி தில்லையுள் வழிபட்டதும் திருவானைக்காப் புராணம், சீகாளத்திப் புராணம், கோயிற் புராணம் என்பவற்றுட் காண்க. மெய்யாகிய தவமென்க; தவத்தினர்க் கேற்றி, மெய்ம்மையையுடையவர் என உரைத்தலுமாம். ஐயனைக் கருதி யென்க. நாகமும் வையமும் ஆகுபெயர். பரவிய, புகழ்வது என்பன செயப்பாட்டுவினை; படு விகுதி தொக்கு வந்தன. (எ)

ஆகச் செய்யுள் - உoசு

---

## புராண வரலாறு

[கலிவிருத்தம்]

அளந்தி டற்கரி தாயவக் குன்றின்மேற்
களங்க றுத்துவிண் காத்தவன் கோயின்முன்
விளம்ப ருஞ்சிவ தீர்த்தத்தின் மிக்கதாய்
வளம்பெ றுஞ்சிவ தீர்த்தத்தின் மாடது.

(இ - ள்.) அளந்திடற்கு அரிது ஆய - அளப்பதற்கு அரிய பெருமையையுடைய, அக்குன்றின்மேல்-அத் திருக்கைலாய மலையின் கண், களம் கறுத்து விண் காத்தவன் கோயில்முன்-திருமிடறு கறுத்துத் தேவர்களை ஆண்ட இறைவனது திருக்கோயிலின் முன்னர், விளம்பு அரும்-சொல்லுதற்கரிய, சிவ தீர்த்தத்தின் மிக்கதாய்-சிவ தீர்த்தங்களின் மேம்பட்டதாய், வளம்பெறும்-வளம்பெற்ற, சிவதீர்த்தத்தின் மாடது-சிவ தீர்த்தத்தின் பக்கத்திலுள்ளது எ - று.

நஞ்சுண்டதனைக் 'களங்கறுத்து' எனக் கூறினர்; அது திருமிடற்றினின்று என்றும் அவனது இறைமையைத்தோற்றுவித்தலின். கோயின் முன் வளம் பெறும் எனக் கூட்டுக. விளம்பு: முதனிலைத் தொழிற் பெயர்; விளம்ப என்பது தொக்கதுமாம். பல தலங்களிலுமுள்ளசிவசம்பந்தமுடைய தீர்த்தங்களைமுதலிலுள்ள சிவதீர்த்தமென்பது குறிக்கின்றது; பின்னுள்ளது பெயர். மாடது மண்டபம் என வருஞ் செய்யுளோடு கூட்டி முடிக்க. (க)

தண்ட ருங்கதிர்ச் சந்திர காந்தத்திற்
பண்ட யங்க* நவமணி பத்திசெய்
தண்டர் தச்ச னநேக தவஞ்செய்து
கண்ட தாயிரக் கான்மண் டபமரோ.

(இ - ள்.) தண்டரும் கதிர்-நீங்குதல் இல்லாத ஒளியினையுடைய, சந்திரகாந்தத்தில்-சந்திர காந்தக் கற்களினால், பண் தயங்க-ஒப்பனை விளங்க, நவமணி-ஒன்பது மணிகளையும், பத்திசெய்து-வரிசைப் படப் பதித்து, அண்டர் தச்சன்-தேவர்கள் தச்சன், அநேக தவம் செய்து கண்டது-அளவிறந்த தவஞ்செய்து கட்டியது, ஆயிரக்கால் மண்டபம்-ஆயிரங் கால்களையுடைய மண்டபம் எ-று.

சந்திர காந்தத்திற் கண்ட தென்க. கண்டது - இயற்றியது: கருத்தால் நிருமித்தலின் கண்டது என்றார் எனலுமாம். மாடது, கண்டது என்பவற்றை மண்டபம் என்பதனுடன் தனித்தனி கூட்டுக; கண்டதாகிய மண்டபம் மாடது என முடித்தலுமாம். அரோ:அசை.

ஆன பான்மையி னலந்த மண்டபம்
ஞான நாயக னுண்மலர்த் தாடொழ
வான மீனொடு வந்து பதங்குறித்
தூன மின்மதி வைகுவ தொத்ததே.

---

(பா - ம்.) * பண்டயங்கு.

(இ - ள்.) ஆன பான்மையினால் - அவ்வாறாகிய தன்மையினால், அந்த மண்டபம்-அந்த மண்டபம் (இருத்தல்), ஞான நாயகன்-ஞானமே வடிவாகிய இறைவனுடைய, நாள் மலர்த்தாள் தொழ-அன்றலர்ந்த மலர்போலுந் திருவடிகளை வணங்க, ஊனம் இல் மதி-குற்றமற்ற நிறைமதியானது, வானம் மீனொடு வந்து-வானிலுள்ள உடுக்களோடு வந்து. பதம் குறித்து வைகுவது ஒத்தது-செவ்வி நோக்கி இருத்தலை ஒத்தது எ - று.

ஆன பான்மையினால் என்றது மேற் செய்யுளிற் கூறிய வியல்பைச் சுட்டிற்று. பான்மை-முறைமை; தன்மை. சந்திர காந்தத்திற்கு மதியும், நவமணிகட்கு வான்மீன்களும் உவமம். ஊனமில் மதி யென்பது நிறைமதி யென்றும், களங்கமில்லாத மதி யென்றும் பொருள்படும்; பிற்பொருளில் இல்பொருளுவமை. (ங)

அன்ன மண்டபந் தன்னு ளருந்தவம்
என்ன வேங்கை யதண்மே லிருந்தனன்
பன்னு கேள்விப் பதினெண் புராணமுஞ்
சொன்ன மாதவச் சூத முனிவனே.

(இ - ள்.) அன்னமண்டபம் தன்னுள்-அந்த மண்டபத்தின்கண்; அரும் தவம் என்ன-செய்தற்கரிய தவமே உருவெடுத்து இருந்தாற் போல, வேங்கை அதள் மேல்-புலித்தோலின்மேல், பன்னு கேள்வி-(யாவரும்) புகழுகின்ற கல்வி கேள்விகளையுடைய, பதினெண் புராணமும் சொன்ன மாதவம் சூதமுனிவன் இருந்தனன் - பதினெட்டுப் புராணங்களையுங் கூறிய பெருந்தவத்தினையுடைய சூதமுனிவன் இருந்தனன் எ - று.

கேள்வியையுடைய சூதமுனிவ னென்க. தான் வியாசமுனிவன் பாற் கேட்டவற்றை நைமிசவனத்துமுனிவர்கட்கு உரைத்தானாகலின் 'பதினெண் புராணமுஞ் சொன்ன' என்றார். பதினெண் புராணம் இவை யென்பதனை,

"மச்சம் கூர்மம் வராகம் வாமனம்
பிரமம் வைணவம் பாகவதம் சைவம்
இலிங்கம் பௌடிகம் நாரதீயம் காருடம்
பிரமகை வர்த்தம் மார்க்கண்டே யம்காந்தம்
பிரமாண்டம் ஆக்கினேயம் பதுமம் என்றிவை
பாற்படு பதினெண் புராண மாகும்"

என்னும் திவாகரச் சூத்திரத்தா னறிக. (ச)

அந்த வேலையி லச்சிவ தீர்த்தத்தில்
வந்து மூழ்கியம் மண்டபத் தேறியே
சந்தி யாதி தவமுடித் தீறிலா
இந்து சேகரன் றாணினைந் தேத்தியே.

(இ - ள்.) அந்த வேலையில்-அப்பொழுதில், அச்சிவ தீர்த்தத்தில் வந்து மூழ்கி-வந்து அத் தீர்த்தத்தின்கண் நீராடி, அம்மண்டபத்து

ஏறியே-அந்தமண்டபத்திலேறி, சந்தி ஆதி தவம் முடித்து-சந்தியா வந்தனம் முதலிய தவங்களை முடித்து, ஈறு இலா இந்துசேகரன்-அழிவில்லாத சந்திரசேகரனாகிய இறைவனுடைய, தாள் நினைந்து ஏத்தி-திருவடிகளைத் தியானித்துத் துதித்து எ - று.

சந்தியிற் செய்யப்படுவதனைச் சந்தி யென்றார், தவம்-செய்கடன். ஈறிலானென்க. குளகம் (ரு)

சம்பு பத்தன் சதானந்த னுத்தமன்
அம்பு யத்த னனைய மகோதரன்
உம்ப ரஞ்சிய வுக்கிர வீரியன்
நம்பு கேள்விப் பிரசண்ட நற்றவன்.

(இ - ள்.) சம்புபத்தன் சதானந்தன் உத்தமன்-சம்புபத்தனும் சதானந்தனும் உத்தமனும், அம்புயத்தன் அனைய மகோதரன்-தாமரை மலரி லிருப்பவனாகிய அயனை யொத்த மகோதரனும், உம்பர் அஞ்சிய உக்கிர வீரியன்-தேவர்களும் அஞ்சப்பெற்ற உக்கிர வீரியனும், நம்பு கேள்விப் பிரசண்ட நல் தவன்-விரும்புகின்ற கேள்வியினையுடைய பிரசண்டன் என்னும் நல்ல தவத்தை யுடையவனும் எ - று.

சம்புபத்தன் முதலியவை பெயர். (சு)

ஆதி மாதவர் யாவரு மன்புமை
பாதி யாய்முற்று மாகும் பராபரச்
சோதி பால்வைத்த சூதனைத் தோத்திரம்
ஓதி யஞ்சலித் தொன்று வினவினர்.

(இ - ள்.) ஆதி-முதலிய, மாதவர் யாவரும்-பெரிய தவமுடையார் அனைவரும், உமைபாதியாய் - உமையொரு கூறாய், முற்றும் ஆகும்-முழுதுமாகிய, பராபரச் சோதிபால்-பராபர ஒளிப்பிழம்பாகிய இறைவனிடத்தில், அன்பு வைத்த சூதனை-அன்பு பூண்ட சூத முனிவனை, தோத்திரம் ஓதி-துதித்து, அஞ்சலித்து - கைகூப்பி, ஒன்று வினவினர்-ஒன்று கேட்பாராயினர் எ - று.

மேற் செய்யுளிற் கூறப்பட்டாருடன் இயைத்து 'ஆதி மாதவர்' என்றார். அன்புவைத்த எனக் கூட்டுக. உமையைத் தன்னுளடக்கித் தானேயாய் நிற்றல் கருதி 'முற்றுமாகும்' என்றார். புறநானூற்றின் கடவுள் வாழ்த்தில்,

"பெண்ணுரு வொருதிற னாகின் றவ்வுருத்
தன்னு ளடக்கிக் கரக்கினுங் கரக்கும்"

எனக் உறப்பட்டிருத்தல் காண்க.

"பாதியு மாய்முற்று மாயினார்க்குப் பந்தமும் வீடு மாயினாருக்
காதியு மந்தமு மாயினாருக் காடப்பொற் சுண்ண மிடித்துநாமே"

என்னும் திருவாசகத்தையும் சிந்திக்க. (எ)

[கலிநிலைத்துறை]

வேத வாகம புராணமே மிருதியே முதலா
ஓது நூல்களின் துணிபொரு ளுலகெலாம் பயந்த
பேதை பாகனே பரமெனத் தேர்ந்துணர் பெரிய
போத மாதவ வுனக்கியாம் புகல்வதொன் றுளதால்.

(இ – ள்.) வேத ஆகம புராணமே மிருதியே முதலா-வேதங்கள் ஆகமங்கள் புராணங்கள் மிருதிகள் முதலாக, ஓதும் நூல்களின் – கூறப்பட்ட நூல்களின், துணிபொருள் – முடிந்த பொருள், உலகு எலாம் பயந்த பேதை பாகனே பரம் - எல்லா வுலகங்களையும் ஈன்ற உமையை ஒரு கூற்றிலுடைய சிவபிரானே பரம்பொருள் என்பது, எனத் தேர்ந்து உணர் பெரிய – என ஆராய்ந்து உணர்ந்த பெரிய வனே, போத மாதவ – ஞானத்தையுடைய பெரிய தவத்தையுடைய வனே, உனக்கு யாம் புகல்வது ஒன்று உளது - உனக்கு நாங்கள் சொல்வது ஒன்று உளது எ – று.

வேதம், புராணம், மிருதி முன் கூறப்பட்டன. சிவாகமம் காமிகம் முதல் வாதுளம் இறுதியாக இருபத்தெட்டு என்ப. ஒன்பது ஆகமங்களின் பெயர்களைத் திருமூலர் குறிக்கின்றார்; இதனை,

"பெற்றநல் லாகமங் காரணங் காமிகம்
உற்றநல் வீர முயர்சிந்தம் வாதுளம்
மற்றவ் வியாமள மாகுங்கா லோத்தரம்
துற்றநற் சுப்பிரஞ் சொல்லு மகுடமே"

என்னும் மந்திரத்திற் காண்க. பரமென்பது என விரிக்க. புராணமே, மிருதியே என்னும் ஏகாரங்கள் எண்ணுப் பொருளன; பிறவற்றொடுங் கூட்டுக.

"எண்ணே கார மிடையிட்டுக் கொளினும்
எண்ணுக் குறித்தியலு மென்மனார் புலவர்"

என்பது தொல்காப்பியம். பேதை பாகனே என்னும் ஏகாரம் பிரிநிலையும் தேற்றமுமாம். ஆல் : அசை. (அ)

மேரு மந்தரங் கயிலைபர்ப் பதமுதல் விடைமேல்
ஊரு மந்தர நாடவ னுறைபதி யனந்தம்
ஆரு மந்தமில் போகம்வீ டடைவதென் றவற்றின்
கார ணங்களோ டுரைத்தனை கருத்தினுக் கிசைய.

(இ – ள்.) விடைமேல் ஊரும்-இடப வாகனத்திலேறி நடத்தி யருளுகின்ற, அந்தர நாடவன் - சிவலோகத்தை யுடையவனாகிய இறைவன், உறைபதி – எழுந்தருளியிருக்குந் திருப்பதிகள் ஆகிய, மேரு மந்தரம் கயிலை பர்ப்பதம் முதல் அனந்தம் – மேரு மந்தரம் திருக்கயிலாயம் திருப்பருப்பதம் முதலிய அளவில்லாதனவும், ஆரும்- எவரும், அந்தம் இல்-அழிவில்லாத, போகம்வீடு அடைவது என்று- போகத்தையும் வீட்டையும் அடைவதற் குரியனவென்று, அவற்றின்

காரணங்களோடு உரைத்தனை-அவைகளின் ஏதுக்களோடு கூறினாய், கருத்தினுக்கு இசைய - எங்கள் கருத்துக்குப் பொருந்தும்படி எ-று.

பர்ப்பதம் - திருப்பருப்பதம். அடைவது : பன்மை யொருமை மயக்கம். இசைய உரைத்தனை என முடிக்க. (கூ)

ஐய மாதிமுக் குற்றமு மகலநீ யருளிச்
செய்ய வுந்தெளிந் திலேங்கள்* யாஞ் சிற்றறி வுடையேம்
மைய னெஞ்சினே மாகையான் மயக்கற வின்னம்
உய்யு மாறருள் செய்தியென் றுரைத்தனர் மன்னோ.

(இ - ள்.) ஐயம் ஆதி முக்குற்றமும் அகல - ஐயம் முதலிய மூன்று குற்றங்களும் நீங்கும்படியாக, நீ அருளிச்செய்யவும் - நீ உரைத்தருளவும், யாம் - நாங்கள், சிறு அறிவு உடையேம் - குறுகிய அறிவினையுடையேமும், மைல் நெஞ்சினேம் - மயக்கத்தையுடைய உள்ளமுடையேமும், ஆகையால்-ஆகையினாலே, தெளிந்திலேங்கள்-தெளிவு பிறவாதிருக்கின்றோம், மயக்கு அற-அம்மயக்கம் நீங்க, உய்யுமாறு-பிழைக்கும்படி, இன்னம் அருள் செய்தி என்று உரைத்தனர்-இன்னும் கூறியருள வேண்டுமென்று விண்ணப்பித்தனர் எ - று.

முக்குற்றம் : ஐயம், திரிபு, அறியாமை என்பன. மயக்கு - மயக்கம் : ஈறு தொக்கது. செய்தி - செய்வாய் ; த், எழுத்துப்பேறு. மன், ஓ : அசை. (கo)

தலங்க டம்மின்மிக் குள்ளதாய்த்† தகுதிசால் தீர்த்தக்
குலங்க டம்மின்மிக் குள்ளதாய்க்‡ குறையிரந் தோர்க்கு
நலங்க டந்தருள் மூர்த்தியாய்$ நாதவே தாந்தப்
புலங்க டந்தபே ரொளியுறை தலனொன்று புகலாய்.

(இ - ள்.) தலங்கள் தம்மில்-பலதலங்களிலும், மிக்குள்ளதாய்-மேம்பட்டுள்ளதாகியும், தகுதி சால் - பெருமை மிகுந்த, தீர்த்தக் குலங்கள் தம்மில் மிக்கு உள்ளதாய் - பல தீர்த்தங்களிலும் சிறந்த தீர்த்தத்தையுடையதாகியும் உள்ள, குறை இரந்தோர்க்கு - தங்கள் குறைகளைக் கூறி வேண்டினருக்கு, நலங்கள் தந்தருள் மூர்த்தியாய் - எல்லா நன்மைகளையும் அருளுகின்ற மூர்த்தியாகி, நாத வேதாந்தம் புலம் கடந்த-நாத தத்துவத்தி னிறுதியாகிய இடத்தையும் வேதத்தி னிறுதியாகிய இடத்தையும் கடந்தருளிய, பேர் ஒளி உறை-பெரிய ஒளிப் பிழம்பாகிய இறைவன் எழுந்தருளப் பெற்ற, தலம் ஒன்று புகலாய் - ஒரு தலத்தைக் கூறுவாயாக எ - று.

அந்தம் என்பதை நாதத்துடனுங் கூட்டுக.

''வேத வந்தமுந் துளக்கற மெய்ப்பொருள் விளங்கு
நாத வந்தமுங் கடந்ததோர் நடுநிலைப் பொருளின்''

என முன்னருங் கூறினர். அந்தம் ஆறு என்ப ; இதனை,

---

(பா - ம்.) * தெளிந்திலங்கள். † உள்ளதா. ‡ உடையதாய். $ மூர்த்தியா.

"வேதத்தி னந்தமும் மிக்கசித் தாந்தமும்
நாதத்தி னந்தமும் நற்போத வந்தமும்
ஓதத் தகுமெட்டி யோகாந்த வந்தமும்
ஆதிக்க லாந்தமு மாறந்த மாமே''

என்னுந் திருமந்திரத்தா னறிக. (கக)

என்ற போதெதிர் முகமலர்ந் திருள்மல வலியை
வென்ற சூதனுந் தலங்களின் விசேடமாய்ந் தம்பொற்
குன்ற வார்சிலை யானிடங் கொண்டுறை பதியுள்
ஒன்று கேட்கவீ டளிப்பதா யுளதுமற் றதுதான்.*

(இ-ள்.) என்றபோது - என்று கேட்டபோது, எதிர் முக மலர்ந்து - எதிரே முகமலர்ச்சி கொண்டு, இருள் மல வலியை வென்ற சூதனும் - ஆணவ மலத்தின் வலியை வென்ற சூதமுனிவனும், தலங்களின் விசேடம் ஆய்ந்து - எல்லாப் பதிகளின் பெருமையையும் ஆராய்ந்து, அம்பொன் குன்றம் - அழகிய பொன்மலையாகிய, வார் சிலையான் - நீண்ட வில்லையுடைய இறைவன், இடம் கொண்டு உறை பதியுள் - இடமாகக் கொண்டு எழுந்தருளி யிருக்கின்ற திருப்பதி களுள், ஒன்று (உளது) - ஒன்று உள்ளது, அது கேட்க வீடு அளிப்பது ஆய் உளது - அப்பதி தன்னைக் கேட்டவளவில் வீட்டை யளிக்க வல்லது எ - று.

தலங்களிற் சிறந்ததனை ஆராய்ந்து என வுரைத்தலுமாம். உளது என்பது ஒன்று என்பதனோடுங் கூட்டி முடிக்கப்பட்டது. மற்று : வினைமாற்று. தான் : அசை. (கஉ)

முற்ற வோதிய புராணமூ வாறனுட்† காந்தம்
பெற்ற தாறுசங் கிதையவை யாறுந்தம் பெயராற்
சொற்ற பேர்சனற் குமரமா முனிவரன் சூதன்
கற்றை வார்சடைச் சங்கரன் மாலயன் கதிரோன்.

(இ-ள்.) முற்ற ஓதிய - (யாவையும்) முடிவுபெறக் கூறிய, புராணம் மூவாறனுள் - பதினெண் புராணங்களுள், காந்தம் - கந்த புராணமானது, ஆறு சங்கிதை பெற்றது - ஆறு சங்கிதைகளைக் கொண்டது; அவை ஆறும் - அச்சங்கிதைகள் ஆறனையும், தம் பெயரால் சொற்ற பேர் - தங்கள் பெயராற் கூறியவர்கள், மா சனற் குமர முனிவரன் - பெருமை பொருந்திய சனற்குமார முனிவனும், சூதன் - சூதமுனிவனும், கற்றைவார்சடைச் சங்கரன் - திரண்ட நீண்ட சடையினையுடைய சங்கரனும், மால் அயன் கதிரோன் - திருமாலும் அயனும் சூரியனுமாவர் எ - று.

பதினெண் புராணங்களுள் மச்சம், கூர்மம், வராகம், வாமனம், சைவம், இலிங்கம், பௌடிகம், காந்தம், மார்க்கண்டேயம், பிரமாண்டம் என்னும் பத்தும் சிவபுராணங்கள்; வைணவம், பாகவதம், காருடம், நாரதீயம் என்னும் நான்கும் விண்டு புராணங்கள்; பிரமம், பதுமம் என்னும் இரண்டும் பிரம புராணங்கள்; ஆக்கினேயம் அக்கினி

(பா-ம்.) * மற்றதனை. † ஆறினுள்.

புராணம்; பிரம கைவர்த்தம் சூரிய புராணம். சிவனது தலைமை கூறும் தேவாரப் பதிகத்திற்குத் 'தசபுராணம்' என்று பெயரிட்டிருப்பது சிவபுராணம் பத்தென்பதனைக் காட்டும். சொற்றவர் என்பதனை வழக்கு நோக்கிச் 'சொற்றபேர்' என்றார். மா: இசை நிறையுமாம்.

இன்ன வாறனுட் சங்கர சங்கிதை யென்று
சொன்ன நூலினை யுணர்த்தினன் சங்கரன் றுணைவிக்
கன்ன போதவள் மடியினி லிருந்துகேட் டதனை
மின்னு வேல்பணி கொண்டவேள் வெளிப்பட வுணர்ந்தான்.

(இ - ள்.) இன்ன ஆறனுள் - இந்த ஆறு சங்கிதைகளுள், சங்கர சங்கிதை என்று சொன்ன நூலினை - சங்கர சங்கிதை என்று சொல்லப்பட்ட நூலை, சங்கரன் துணைவிக்கு உணர்த்தினன் - சிவபெருமான் உமையம்மையாருக்கு அறிவித் தருளினன்; அன்னபோது - அப்போது, அவள் மடியினில் - அவ்வம்மையின் திருமடியின்கண், மின்னு வேல் - விளங்கிய வேற்படையை, பணி கொண்ட வேள் - ஏவல் கொண்ட குமரவேள், இருந்து கேட்டு - வீற்றிருந்து கேட்டு, அதனை - அச்சங்கர சங்கிதையை, வெளிப்பட உணர்ந்தான் - செவ்விதாக உணர்ந்தான் எ - று.

சங்கிதை - தொகுதியென்னும் பொருளுள்ள வடசொற் சிதைவு. மடி - மடக்கிய கவான். இன்: சாரியை. வெளிப்பட வுணர்தல் - தெளிய வுணர்தல். (கசு)

குன்றெ றிந்தவேள் வழிபடு குறுமுனிக் குரைத்தான்
அன்று தொட்டஃ தகத்திய சங்கிதை யாகி
நின்ற தன்னது கேட்பவர்க் கரனடி நீழல்
ஒன்று மின்பவீ டளிப்பதா வொருதல னுரைக்கும்.

(இ - ள்.) குன்று எறிந்த வேள் - கிரவுஞ்ச மலையைப் பிளந்த குமரவேள், வழிபடு குறுமுனிக்கு உரைத்தான் - தன்னை வழிபடா நின்ற அகத்திய முனிவனுக்குக் கூறியருளினன்; அன்று தொட்டு - அந்நாள் தொடங்கி, அஃது - அச்சங்கர சங்கிதையானது, அகத்திய சங்கிதை ஆகி நின்றது - அகத்திய சங்கிதை எனப் பெயருடையதாகி நிலை பெற்றது; அன்னது - அச்சங்கிதைதான், கேட்பவர்க்கு - கேட்கின்றவர்களுக்கு, அரன் அடி நீழல் - இறைவன் திருவடிநீழலில், ஒன்றும் - இரண்டறக்கலத்தலாகிய, இன்ப வீடு - பேரின்ப வீட்டினை, அளிப்பதா - கொடுக்கத் தக்கதாக, ஒருதலன் உரைக்கும் - ஓர் திருப்பதியைக் கூறாநிற்கும் எ - று.

நீழல்: நீட்டல் விகாரம். ஒன்றும் என்பது தொழிற்பெயர்த் தன்மைப்பட்டு நின்றது. (கஎ)

அதிக வப்பதி யாதெனி னாலவாய் கேட்கக்
கதிய ளிப்பதென் றேதிய சூதனைக் கதியின்
மதியை வைத்தவ ரன்னதைப் பகரென வந்த
விதியி னிற்புகல் கின்றனன் வியாதன்மா ணாக்கன்.

(இ - ள்.) அதிக அப்பதி யாது எனில்-சிறந்த அத்திருப்பதி யாதென்று வினவில், ஆலவாய்-திருவாலவாயாம்; கேட்கக் கதி அளிப்பது என்று ஓதிய-கேட்ட அளவில் வீட்டை அளிக்கவல்லது என்று கூறிய, சூதனை - சூதமுனிவனை, கதியில் மதியை வைத்தவர்-வீட்டுலகிற் கருத்தைச் செலுத்திய முனிவர்கள், அன்னதைப் பகர் என-அத்திருப்பதியின் பெருமையைக் கூறியருள வேண்டுமென, வந்த விதியினில்-(தொன்று தொட்டுக் கூறி) வந்த முறையினால், வியாதன் மாணுக்கன் புகல்கின்றனன்-வியாதமுனியின் மாணவனாகிய சூதமுனிவன் சொல்லா நின்றான் எ - று.

அதிகம் மேம்பாடு. தலனென்று புகலாய் என்றபோது என்று ஓதிய சூதனை, என மேற் பதினொன்று பன்னிரண்டாஞ் செய்யுட்களோடு சேர்த்து முடிக்க. அன்னதைப் பகர் என-அதன் பெருமையை விரித்துரைக்க வென. (கசு)

புதிய தாமரை மேவிய பழமறைப் புத்தேள்
விதியி னாற்கடு நடைப்பரி மகஞ் செய்வான் வேண்டிக்
கதியை மாய்ந்தவர்க் குதவுதண் டுறைகெழு காசிப்
பதியின் மைந்தரோ டெய்தினன் பண்டோரு வைகல்.

(இ - ள்.) புதிய தாமரை மேவிய - வாடாத தாமரை மலரில் உறையும், பழமறைப் புத்தேள்-பழைய வேதங்களை யுணர்ந்த பிரம தேவன், விதியினால்-அவ் வேத விதிப்படி, கடுநடைப் பரிமகம் செய்வான்-விரைந்த நடையினையுடைய துரகவேள்வி செய்தற்கு, வேண்டி-விரும்பி, மாய்ந்தவர்க்கு - (தன்னிடத்து வந்து) இறந்தவருக்கு, கதியை உதவு-வீட்டுலகைத் தருகின்ற, தண் துறைகெழு-குளிர்ந்த நீர்த்துறைகள் பொருந்திய, காசிப்பதியில்-காசி என்னுந் திருப்பதியின் கண், பண்டு ஒரு வைகல்-முன்னொரு காலத்தில், மைந்தரோடு எய்தினன்-புதல்வர்களோடு சென்றான் எ - று.

புதிய தாமரை பழமறை என்றது முரண். பரிமகம்-அசுவமேதம் எனப்படும் வேள்வி. துறை-கங்கையின் நீர்த்துறை. காசியில் மரித்தவர் வீடெய்துவ ரென்ப. செய்வான்: வானீற்று வினையெச்சம்.

[எழுசீரடியாசிரியவிருத்தம்]

அகத்தியன் வியாத னாரதன் சனக
னாதிநான் முனிவர்கோ தமனாற்
சிகைத்தெளி வுணர்ந்த பராசரன் வாம
தேவன்வான் மீகியே வசிட்டன்
சகத்தியல் கடந்த சுகன்முதன் முனிவர்
தம்மோடும் பத்துவெம் பரிமா
மகத்தொழின் முடித்து மற்றவர்க் குள்ள
மகிழ்வுற வழங்குந வழங்கா.

(இ - ள்.) அகத்தியன் வியாதன் நாரதன்-அகத்தியனும் வியாதனும் நாரதனும், சனகன் ஆதி நால்முனிவர்-சனகன் முதலிய நான்கு

முனிவர்களும், கோதமன் - கௌதமனும், நூல் சிகைத் தெளிவு உணர்ந்த பராசரன்-மறை முடிவின் றுணிபொருளாகிய பரசிவத்தை உணர்ந்த பராசரனும், வாமதேவன் வான்மீகி வசிட்டன்-வாமதேவனும்வான்மீகியும்வசிட்டனும், சகத்துஇயல்கடந்தசுகன்-உலகியலைக் கடந்த சுகனும், முதல் முனிவர் தம்மொடும்-முதலாகிய முனிவர்களோடும், பத்து வெம்பரி மா மகத்தொழில் முடித்து-பத்தாகிய கூடிய நடையினையுடைய பரிவேள்வி வினைகளை முடித்து, அவர்க்கு-அம் முனிவர்களுக்கு, உள்ளம் மகிழ்வு உற-உள்ளம் மகிழ்ச்சி பொருந்த, வழங்குந வழங்கா-வழங்கத் தக்கவைகளை வழங்கி எ - று.

நூல் என்றது ஈண்டு வேதத்தை. பிறந்தது தொட்டே உலக மாயையாற் பற்றப்படாதவ னென்பார் 'சகத்தியல் கடந்த சுகன்' என்றார். பரிமா : இருபெயரொட்டு ; மா-பெருமை யெனலுமாம். மற்று: வினைமாற்று. வழங்குந-தக்கிணை: வினைப்பெயர். (கஅ)

சத்திய வுலகிற் சரோருகக் கிழவன்
சார்ந்தபின் புலப்பகை சாய்த்த
அத்திரு முனிவ ரனைவருங் காசி
யடிகளை யடைந்தனர் பணிந்து
முத்திமண் டபத்தி னறமுத னான்கு
மொழிந்தருள் மூர்த்திசந் நிதியில்
பத்தியா யிருந்து நாரத முனியைப்
பார்த்தொரு வினவுரை பகர்வார்.

(இ - ள்.) சரோருகக் கிழவன்-தாமரை மலருக் குரியவனாகிய அயன், சத்திய உலகில் சார்ந்தபின்-சத்திய உலகை அடைந்தபின், புலப்பகை சாய்த்த-புலன்களாகிய பகையைக் கெடுத்த, அத்திரு முனிவர் அனைவரும்-அச்சிறந்த முனிவர்களனைவரும், காசி அடிகளை அடைந்தனர் பணிந்து - காசிப்பதியில் வீற்றிருக்கும் இறைவனை யடைந்து வணங்கி, முத்தி மண்டபத்தில்-முத்தி மண்டபத்தின்கண், அறம் முதல் நான்கும் - அறமுதலிய நான்கனையும், மொழிந்தருள் மூர்த்தி சந்நிதியில்-(சனகாதி நால்வருக்கும்) உபதேசித்தருளிய தட்சிணா மூர்த்தி திருமுன்னே, பத்தியாய் இருந்து-அன்போடு அமர்ந்து, நாரத முனியைப் பார்த்து-நாரத முனிவரை நோக்கி, ஒரு வினா உரை பகர்வார்-ஓர் வினா நிகழ்த்துவாராயினர் எ - று.

சத்திய வுலகம்-பிரமனுலகு. அடைந்தனர்: வினையெச்சமுற்று. முத்தி மண்டபம்-பெயர். அறமுதல் நான்கு-அறம் பொருள் இன்பம் வீடு. வினா வுரை-வினாவாகிய உரை. (கக)

தலமுதன் மூன்றுஞ் சிறந்ததோர் சைவத்
தலமுறை யென்னநா ரதன்றான்
கலைமுழு துணர்ந்த சனற்குமா ரன்பாற்
கற்றவன் வியாதனா மவன்பால்

நலமுறக் கேண்மி னெனவவன் கதிர்வே
னம்பிபான் மறைமுத லனைத்தும்
அலைவற* வுணர்ந்தோன் குறுமுனி யாகு
மவனிடைக் கேண்மேன விடுத்தான்.

(இ-ள்.) தலம் முதல் மூன்றும் - தலமுதலிய மூன்றினாலும், சிறந்தது ஓர் சைவத்தலம் உரை என்ன-சிறந்ததாகிய ஒரு சிவதலத்தைக் கூறுவாயென்று வினவ, நாரதன்-நாரதமுனிவன், கலைமுழுது உணர்ந்த சனற்குமாரன்பால்-கலைகள் அனைத்தையும் உணர்ந்த சனற்குமார முனிவரிடத்து, கற்றவன் வியாதன் ஆம்-கற்றுணர்ந்தவன் வியாதமுனிவனாகும், அவன் பால் நலம் உறக் கேண்மின் என-அவனிடத்து நன்மை பெருகக் கேளுங்கள் என்று கூற, அவன்-அவ்வியாதமுனிவன், கதிர்வேல்நம்பிபால்-ஒளியினையுடைய வேற்படையையுடைய முருகவேளிடத்து, மறைமுதல் அனைத்தும்-வேதமுதலிய எல்லாக்கலைகளையும், அலைவு அற உணர்ந்தோன்-ஐயமறக் கற்றுணர்ந்தவன், குறுமுனி ஆகும் - அகத்திய முனிவனாகும், அவனிடைக் கேண்ம் என விடுத்தான்-அவனிடத்துக் கேளுங்கள் என்று ஏவினான் எ-று.

வியாதனுமாகலின், குறுமுனியாகுமாதலின் என விரித்துக் கொள்க. கேண்மினென என்றதன்பின் அவர் கேட்க என்பது தொக்கு நின்றது. அலைவு-அசைவு; ஐயம். கேண்மென-கேளுமென:கேளும் என்பதன் ஈற்றயலுகரங் கெட்டது; 'செய்யுமெனெச்சவீற்று' என்னும் நன்னூற் சூத்திரங் காண்க. விடுத்தல்-விடை கூறுதலுமாம். (உ௦)

மலயமா தவனை யடைந்துகை தொழுது
வாழ்த்திவா தாவிவில் வலனைக்
கோலைபுரி தரும மூர்த்தியே விந்தக்
குன்றடக் கியதவக் குன்றே
அலைகடல் குடித்த வருட்பெருங் கடலே
யருந்தமிழ்க் கொண்டலே தென்பார்
துலைபெற நிறுத்த களைகணே யென்று
சுருதியா யிரமேனத் துதித்தார்.

(இ-ள்) மலயம் மாதவனை அடைந்து-பொதியின் மலையையுடைய பெரிய குறுமுனியை அடைந்து, கைதொழுது வாழ்த்தி-கை கூப்பி வணங்கித் துதித்து, வாதாவி வில்வலனை-வாதாவி வில்வலனென்ற அசுரர்களை, கொலை புரி தரும மூர்த்தியே-கொன்றருளிய அறவடிவானவனே, விந்தக் குன்று அடக்கிய-விந்த மலையை அடக்கிய, தவக்குன்றே-தவமலையே, அலைகடல் குடித்த-அலைதலையுடைய கடலைப் பருகிய, அருள் பெருங் கடலே-பெரிய கருணைக் கடலே, அருந் தமிழ்க் கொண்டலே-அரிய தமிழ் சுரக்கு முகிலே, தென்

(பா-ம்.)* அலமற.

மூவகைச் சிறப்பு முள்ளதோர் தான
மொழிகென முகமலர்ந் தருள்கூர்ந்
தியாவையு முணர்ந்தோன் முத்திமண்
டபத்தி னீரிரு தொகையின்வந் திறக்குஞ்*
சேவல்க டமையு மைங்கரன் றனையுஞ்
சேவலங் கொடியுடை வடிவேற்
காவலன் றனையும் வடநிழ லமர்ந்த
கண்ணுதற் பரனையும் பணியா.

(இ - ள்.) மூவகைச் சிறப்பும்-தலம் தீர்த்தம் மூர்த்தி என்னும் மூன்று வகைச் சிறப்பும், உள்ளது ஓர் தானம் மொழிக என-உடையதாகிய பதி ஒன்றைக் கூறுவாயென, முகமலர்ந்து - முகமலர்ச்சி கொண்டு, அருள் கூர்ந்து - கருணை மிகுந்து, யாவையும் உணர்ந்தோன்-எல்லா நூல்களையும் கற்றுணர்ந்த அகத்திய முனிவன், முத்தி மண்டபத்தின் - முத்தி மண்டபத்தின்கண், ஈர் இரு தொகையின் வந்து இறக்கும் சேவல்கள் தமையும்-நான்குளன்னுந் தொகைபெற்று வந்து இறந்த கோழிகளையும், ஐங்கரன் தனையும்-ஐந்து திருக்கரங்களையுடைய விநாயகக் கடவுளையும், சேவல் அம் கொடி உடை-அழகிய கோழிக் கொடியையுடைய, வடிவேல் காவலன் தனையும்-கூரிய வேற்படை ஏந்திய முருகவேளையும், வட நிழல் அமர்ந்த-கல்லாலினிழலில் எழுந்தருளியிருந்த; கண் நுதல் பரனையும்-நெற்றியிற் கண்ணையுடைய தட்சிணா மூர்த்தியையும், பணியா - வணங்கி எ - று.

மொழிகென : தொகுத்தல். கூர்ந்தியாவையும்: குற்றிய லிகரம். சேவல்கள் என்றது ஈண்டுக் கோழியென்னும் பொதுப்பெயர் மாத்திரையாய் நின்றது, சேவலங்கொடி : அம் சாரியையுமாம்.

சேவல்களின் வரலாறு :—மூன்றும் உகத்திலே காசியிலிருந்த மாகனந்தன் என்னும் மறையவன் கொடுந்தொழில் பல புரிந்து, தன் சுற்றத்தாரால் ஓட்டப்பட்டு, மனைவியோடும், மக்களிருவரோடும் கீகட தேயம் நோக்கிச் செல்வுழி அந்நால்வரும் வேடர்களாற் கொல்லப்பட்டு உயிர் துறந்தனர்; இறக்கும் பொழுது காசியை நினைத்தமையால், அவன் பண்டை யுணர்வுடன் சேவலாகவும், மனைவி பெடையாகவும், மக்களிருவரும் பார்ப்பாகவும் பிறந்து, காசிக்குச் சென்று முத்தி மண்டபத்தை யடைந்து முத்தி பெற்றனர் என்பது. இதனைக் காசி காண்டத்து, முத்தி மண்டபத்தின் கதையுரைத்த அத்தியாயத்திற் காண்க. (உஉ)

அங்கயற் கண்ணி தன்னையு மெந்தை
யாலவா யானையு மிதய
பங்கயத் திருத்திச் சமாதியி லிருந்து
பரவச மடைந்துபார்ப் பதிக்குச்

(பா - ம்.) * ஈரிரு திசையினுமிருக்கும்.

சங்கர னருளிச் செய்தசங் கிதையைத்
　　தாரக னுடலிரண் டாகச்
செங்கைவேல் விடுத்த சேவகனெனக்குத்
　　தெருட்டினு னனையசங் கிதையில்.

(இ - ள்.) அங்கயற் கண்ணி தன்னையும்-அங்கயற்கண் ணம்மையையும், எந்தை ஆலவாயானையும்-எம் தந்தையாகிய திருவாலவாயிறைவனையும், இதய பங்கயத்து இருத்தி - இருதய கமலத்தில் இருத்தி, சமாதியில் இருந்து - சமாதி கூடி இருந்து, பரவசம் அடைந்து-பரவசப்பட்டு, பார்ப்பதிக்கு-உமையம்மையாருக்கு, சங்கரன் அருளிச் செய்த சங்கர சங்கிதையை-சிவபெருமான் அருளிச் செய்த சங்கர சங்கிதையை, தாரகன் உடல் இரண்டு ஆக - தாருகாசுரன் உடலானது இருகூறு ஆகும்படியாக, செம் கை வேல் விடுத்த-சிவந்த திருக்கரத்து வேற்படையை ஏவிய, சேவகன்-வீரனுகிய குமரவேள், எனக்குத் தெருட்டினுன் - எனக்குத் தெளிவுபெற அருளிச் செய்தான்; அனைய சங்கிதையில் - அந்தச் சங்கிதையில் எ - று.

சமாதியாவது இறைவனின் வேருகாது தியானத்தில் அழுந்தி நிற்பது; 'சிறப்பென்னுஞ் செம்பொருள் காண்பது' என்பதனுரையில் 'அதனைக் காண்கையாவது உயிர்தன் னவிச்சை கெட்டு அதனேடு ஒற்றுமையுற இடைவிடாது பாவித்தல்; இதனைச் சமாதியெனவும்... கூறுப' எனப் பரிமேலழகர் கூறியிருப்பது காண்க. பரவசமடைதல்-தன்வயமின்றி யிருத்தல். சமாதியிலிருந்து என்னும் எச்சம் இறுதிச் செய்யுளில், உணர்த்துவான் என்பது கொண்டு முடியும்.

சங்கிதையில் என்பதனை வருஞ் செய்யுளில், ஒன்று கூறப்பட்டுள்ளது என வருவித்து அதனுடன் முடிக்க. தாரகன்-சூரபன்மன் தம்பி.

தாரகன் உடலைப் பிளந்த வரலாறு:—முருகக் கடவுளானவர் தேவர்களின் இடுக்கண் டீர்க்கப் படையுடன் புறப்பட்டுச் சூரபன்மனது நகர் நோக்கிச் செல்லும் வழியில் கிரவுஞ்சகிரி யெதிர்ப்பட்டது; அப்பொழுது நாரதர் அங்கு வந்து, கிரவுஞ்சன் என்னும் அசுரன் முனிவர்களுக்கு இடுக்கண் விளைத்து அகத்திய முனிவராற் சபிக்கப்பட்டு மலையாக விருத்தலையும், அம் மலையின் ஒருபாலுள்ள மாய நகரத்தில் சூரனுக்கிளைய தாரகன் வசித்து வருதலையும், மலை வடிவாகிய கிரவுஞ்சனும், தாரகனும் புரியும் கொடுமைகளையும் கூறினர்; அப்பொழுது குமாரக் கடவுள் தமது வேலினை விடுத்துத் தாரகன் மார்பையும் கிரவுஞ்ச வெற்பையும் பிளந்தருளினர் என்பது. இதனைக் கந்தபுராணத்து, தாரகன் வதைப் படலத்திற் காண்க. (உ௩)

பெறற்கருந் தவஞ்செய் தகந்தெளிந் தரிதிற்
　　பெறுங்கதி கேட்பவர்க் கெளிதாய்
உறப்படுந் தலநீர் வினையமுச் சிறப்பு
　　முள்ளதேத் தலத்தினுங் கழிந்த

சிறப்பினுங் கெண்ணெண் டிருவிளை யாடல்
செய்தருள் வடிவெடுத் தென்றும்
மறைப்பொருள் விளங்கு மாலவா யதனை
மண்ணின்மேற் சிவனுல கென்னும்.

(இ - ள்.) பெறற்கு அருந்தவம் செய்து-பெறுதற்கு அரிய தவஞ்செய்து, அகம் தெளிந்து - மனந்தெளிந்து, அரிதில் பெறும் - அரிதாகப் பெறப்படும், கதி-வீடானது, கேட்பவர்க்கு-கேட்கின்ற வர்களுக்கு, எளிதாய் உறப்படும் தலம் - எளிதாக அடைதற்குரிய தலமாகவும், நீர் வினய முச்சிறப்பும் உள்ளது-நீவிர்கேட்ட மூன்று வகைச் சிறப்புமுள்ளதாகவும் (ஒன்று கூறப்பட்டுள்ளது; அது), எத் தலத்தினும் - மற்றெந்தத் தலங்களினும், கழிந்த-மேம்பட்ட, சிறப் பின் - சிறப்பினையுடைய, மறைப்பொருள் - வேதப்பொருளாகிய இறைவன், அருள் வடிவு எடுத்து - அருட்டிருமேனிகொண்டு, எண் எண் திருவிளையாடல் செய்து - அறுபத்து நான்கு திருவிளையாடல் களைப் புரிந்து, என்றும் விளங்கும்-எப்பொழுதும் வீற்றிருப்பதற் கிடமாயுள்ள, ஆலவாய் - திருவாலவாயாகும்; அதனை - அத்திருப் பதியை, மண்ணின் மேல் சிவனுலகு என்னும் - நிலவுலகிலுள்ள சிவலோகமென்று உலகங் கூறும் எ - று.

எளிதாய் : எச்சத்திரிபு. வினவிய என்பது விகாரமாயிற்று. ஒன்று கூறப்பட்டுள்ளது, அது என்பன வருவிக்கப்பட்டன. கழிந்த: மிகுதிப் பொருள்தரும் கழியென்னும் உரிச்சொல்லடியாகப் பிறந் தது. கழிந்த சிறப்பின் ஆலவாய் என வியையும். ஆங்கு: அசை. உலகம் என்னும் எழுவாய் வருவிக்கப்பட்டது. (உச)

அத்தலத் தனைய மூவகைச் சிறப்பு
மளவிலா வுயிர்க்கெலாங் கருணை
வைத்தவன் செய்த திருவிளை யாட்டும்
வரையுரங் கிழியவே லெடுத்த
வித்தக னெனக்கு விளம்பிய வாறே
விளம்புவ னுமக்கென வந்த
உத்தம முனிவர் யாவருங் கேட்க
வுணர்த்துவான் கடலெலா முண்டான்.

(இ - ள்.) அத்தலத்து - அந்தத் தலத்தின்கண், அனைய மூவ கைச் சிறப்பும் - தலம் தீர்த்தம் மூர்த்தி என்னும் அந்த மூன்று வகைச் சிறப்புக்களையும், அளவு இலா உயிர்க்கு எலாம்-அளவிறந்த எல்லா வுயிர்களிடத்தும், கருணை வைத்தவன்-அருள் வைத்துள்ளவ னாகிய இறைவன், செய்த திருவிளையாட்டும்-செய்தருளிய திருவிளை யாடல்களையும், வரை உரம் கிழிய-கிரவுஞ்ச மலையின் மார்பு கிழியும் படி, வேல் எடுத்த-வேற்படையை ஏந்திய, வித்தகன்-ஞான சொரூப னாகிய குமரவேள், எனக்கு விளம்பியவாறே - எனக்குக் கூறிய வண்ணமே, உமக்கு விளம்புவன் என - உங்களுக்குக் கூறுவேன் என்று, கடல் எலாம் உண்டான் - கடல் நீர் முற்றும் பருகிய குறு

முனிவன்; அந்த உத்தம முனிவர் யாவரும் கேட்க உணர்த்துவான்- அந்தச் சிறந்த முனிவர்களெல்லாரும் கேட்கும்படி சொல்வா னாயினன் எ - று.

சிறப்பும், திருவிளையாட்டும் உணர்த்துவான் என்க. வித்தகன்- சதுரப்பாடுடையவன்; ஞானி. கேட்க-செவியேற்க. மேலே பதி னாருஞ் செய்யுளில் 'விதியினிற் புகல்கின்றனன் வியாதன் மாணாக்கன்' என்று கூறிவைத்து, பின்பு அகத்தியன் முனிவர்கட்கு உரைப்பதாக முழுதும் கூறப்படுகின்றது; ஆகலின் அறுபத்து நான்காவது திரு விளையாடலின் முடிபில், என அகத்தியன் முனிவர்கட்குக் கூறினான் எனத் திருக்கைலையில் சிவ தீர்த்தத்தின் மருங்குள்ள ஆயிரக்கால் மண்டபத்திலிருந்து சூதமுனிவன் அங்கே கூடியிருந்த மாதவர்கட்குக் கூறிப் பின் அம்முனிவர்கள் அகத்தியனுடன் வந்து அருச்சித்துப் பேறு பெற்றதனையும் அருளிச் செய்தனன்' என வருவித் துரைத்துக் கொள்க. (உரு)

ஆகச் செய்யுள்—உருக

---

## தலவிசேடப் படலம்

[அறுசீரடியாசிரியவிருத்தம்]

நாட்டமோரு மூன்றுடைய நாயகனுக்
கன்புடையீர் நயந்து நீவிர்
கேட்டதல மீண்டுரைத்த திருவால
வாயதனுட் கிளைத்துப் பொன்னந்
தோட்டலர்தா மரைமுளைத்த தொருதடமுஞ்
சுந்தரச்செஞ் சோதி ஞான
ஈட்டமென முளைத்தசிவ லிங்கமொன்று
முள*வின்னு மிசைப்பக் கேண்மின்.

(இ - ள்.) நாட்டம் ஒரு மூன்று உடையநாயகனுக்கு-ஒருமூன்று கண்களையுடைய தலைவனாகிய சிவபெருமானிடத்து, அன்பு உடையீர்-அன்புடைய முனிவர்களே, நயந்து நீவிர் கேட்ட தலம்-நீங்கள் விரும்பிக்கேட்ட பதி, ஈண்டு உரைத்த திருவாலவாய்-இப்பொழுது கூறிய திருவாலவாயாகும், அதனுள்-அப்பதியின்கண், கிளைத்து-நிறைந்து, பொன் அம் தோடு அலர்-பொன்போலும் அழகிய இதழ்களையுடைய விரிந்த, தாமரை முளைத்தது-தாமரை முளைக்கப் பெற்றதாகிய, ஒரு தடமும்-ஓர் தடாகமும், சுந்தரம்-அழகிய, செம் சோதி-சிவந்த ஒளிவடிவான, ஞான ஈட்டம் என-ஞானத்திரட்சி என்று சொல்லும் படி, முளைத்த-தோன்றிய, சிவலிங்கம் ஒன்றும்-ஓர் சிவலிங்கமும், உள-உள்ளன; இன்னும் இசைப்பக் கேண்மின்-இன்னுஞ் சொல்லக் கேளுங்கள் எ - று.

நாட்டம், அம்: கருவிப் பெயர் விகுதி. ஒரு மூன்றென்பது வழக்கு. (க)

திருவால வாய்க்கிணையா மொருதலமுந்
தெய்வமணஞ் செய்யப் பூத்த
மருவார்பொற் கமலநிகர் தீர்த்தமுமத்
தீர்த்தத்தின் மருங்கின் ஞான
உருவாகி யுறைசோம சுந்தரன்போ
லிகபரந்தந் துலவா வீடு
தருவானு முப்புவனத் தினுமில்லை
யுண்மையிது சாற்றின் மன்னோ.

(இ - ள்.) திருவாலவாய்க்கு இணை ஆம் ஒரு தலமும்-திருவாலவாய்க்கு நிகராகிய ஒருபதியும், தெய்வமணம் செய்ய-தெய்வ மணம்

(பா - ம்.) * சிவலிங்கமு மொன்றுள.

வீசும்படி, பூத்த-மலர்ந்த, மரு ஆர்-மணம் நிறைந்த, பொற்கமலம் நிகர் தீர்த்தமும் - பொற்றாமரையை நிகர்த்த ஒரு தீர்த்தமும், அத்தீர்த்தத்தின் மருங்கில் - அந்தத் தீர்த்தத்தின் பக்கத்தில், ஞான உரு ஆகி உறை-ஞான வடிவாய் எழுந்தருளியிருக்கின்ற, சோமசுந்தரன்போல் - சோமசுந்தரக் கடவுளைப்போல, இகபரம் தந்து-(உயிர்களுக்கு) இம்மை மறுமைப் பயன்களை அளித்து, உலவா வீடு தருவானும்-அழியாத வீட்டுலகைத் தருகின்றவனும், முப் புவனத்திலும் இல்லை-மூன்றுலகத்திலும் இல்லை; சாற்றின்-சொல்லு மிடத்து, இது உண்மை-இது சத்தியம் எ - று.

தெய்வமணம்-திப்பிய மணம். பொற்கமலம்-தீர்த்தத்தின் பெயர்; பூத்த மருவார் என்னும் அடைகள் தாமரைக்கு. சோமசுந்தரன்-உமை யுடன் கூடிய அழகன்; பெயர். மன், ஓ: அசை. (உ)

அவ்வகைய மூன்றின்முதற் றலப்பெருமை
தனைச்சுருக்கி யறையக் கேண்மின்
எவ்வகைய வுலகத்துந் தருமதல
மதிகமவற் றீறி லாத
சைவதல மதிகமவற் றறுபத்தெட்
டதிகமவை தமிலீ ரெட்டுத்
தெய்வதல மதிகமவற் றதிகதல
நான்கவற்றைச் செப்பக் கேண்மின்.

(இ - ள்) அவ்வகைய மூன்றில்-அத் தன்மையை யுடைய மூன்ற னுள், முதல்-முதற்கண், தலப்பெருமைதனை - தல விசேடத்தை, சுருக்கி அறையக்கேண்மின்-சுருக்கிச் சொல்லக் கேளுங்கள்; எவ் வகைய உலகத்தும் - எத்தன்மையுடைய உலகத்திலும், தரும தலம் அதிகம்-புண்ணியத் தலங்கள் உயர்ந்தன; அவற்று-அப்புண்ணியத் தலங்களுள், ஈறு இலாத-அழிவில்லாத, சைவதலம் அதிகம்-சிவத் தலங்கள் உயர்ந்தன; அவற்று-அப்பதிகளுள், அறுபத்தெட்டு அதி கம்-அறுபத்தெட்டுத் தலங்கள் உயர்ந்தன; அவைதமில்-அவ்வறுபத் தெட்டனுள், ஈர் எட்டுத் தெய்வதலம் அதிகம்-பதினாறு சிவத்தலங் கள் உயர்ந்தன; அவற்று-அப்பதினாறனுள், நான்கு தலம் அதிகம்- நான்கு பதிகள் உயர்ந்தன; அவற்றைச் செப்பக் கேண்மின்-அந்நான் கையுஞ் சொல்லக் கேளுங்கள் எ - று.

தருமதலம் முதலியன வடசொற் றொடராகலின் ஒற்று மிகாவா யின. அவற்றுள் என உருபு விரிக்க. நான்கு தலம் அதிகம் என மாற்றப்பட்டது. (ங)

அன்னமலி வயற்புலியூர் காசிநகர்
காளத்தி யால வாயாம்
இன்னவளம் பதிநான்கிற் றிருவால
வாயதிக மெவ்வா றென்னின்

மின்னவிரம் பலங்காணக் காசிநகர்
வதிந்திறக்க வியன்கா ளத்திப்
பொன்னகரம் பத்தியினல் வழிபாடு
செயவளிக்கும் போகம் வீடு.

(இ - ள்.) அன்னம் மலிவயல் புலியூர் - அன்னப் பறவைகள் நிறைந்த வயல்களையுடைய சிதம்பரமும், காசி நகர்-காசிப்பதியும், காளத்தி - சீகாளத்தியும், ஆலவாய் ஆம்-திருவாலவாயும் ஆகும்; இன்ன வளம்பதி நான்கில்-இந்த அழகிய திருப்பதி நான்கனுள், திருவாலவாய் அதிகம்-திருவாலவாயே உயர்ந்தது; எவ்வாறு என்னின்-எப்படி என்றல், மின் அவிர்-ஒளி விளங்குகின்ற, அம்பலம் காண-சிதம்பரந் தரிசித்தலானும், காசிநகர் வதிந்து இறக்க-காசிப்பதிதங்கி இறத்தலானும், வியன் காளத்தி-பெருமை பொருந்திய சீகாளத்தியாகிய, பொன் நகரம்-அழகிய நகரமானது, பத்தியினல் வழிபாடு செய-அன்போடு வழிபடுதலானும், போகம் வீடு அளிக்கும்-போகத்தையும் வீட்டையுங் கொடுக்கும் எ - று.

அவையென வருவித்து ஆம் என்பதனேடு முடிக்க. இன்ன : சுட்டு. வளம்பதி: மெலித்தல் விகாரம். அம்பலம் முதலியன அளிக்குமென்க. செயவெனெச்சங்கள் காரணப் பொருளன. எண்ணும்மை விரிக்க. வருஞ் செய்யுளோடு சேர்த்துப் பொருள் கொள்க. (ச)

அறந்தழையுந் திருவால வாய்கேட்ட
வுடன்போக மளிக்கு மீண்டு
பிறந்திறவாப் பேரின்பக் கதியளிக்கு
மிதுவன்றிப் பிறழா தெங்கும்
நிறைந்தபர னெத்தலமும் படைப்பானித்
தலத்தைமுத னிருமித் திங்ஙன்*
உறைந்தருளி ஞனன்றி யின்னமுள
திதன்பெருமை†யுரைப்பக் கேண்மின்.

(இ - ள்) அறம் தழையும்-அறங்கள் மிகுகின்ற, திருவாலவாய்-திருவாலவாயானது, கேட்ட உடன் போகம் அளிக்கும் - கேட்டபொழுதே போகத்தைக் கொடுக்கும், மீண்டு-பின், பிறந்து இறவாப் பேர் இன்பக் கதி அளிக்கும்-தோன்றி அழியாத பேரின்ப வீட்டையுங் கொடுக்கும்; இது அன்றி-இதுவல்லாமல், பிறழாது - தவருமல், எங்கும்-எவ்விடத்தும், நிறைந்தபரன்-நிறைந்துள்ள இறைவன், எத்தலமும் படைப்பான்-எல்லாத் தலங்களையும் படைக்கும் பொருட்டு, இத் தலத்தை முதல்நிருமித்து-இத்திருவாலவாயைமுதலிற்படைத்து, இங்ஙன் உறைந்தருளினன்-இவ்விடத்தில் இருந்தருளினன்; அன்றி-அல்லாமல், இதன் பெருமை இன்னம் உளது உரைப்பக் கேண்மின்-இதன் பெருமை இன்னு முண்டு சொல்லக் கேளுங்கள் எ - று.

---

(பா - ம்.) *அங்கண். † அதன் பெருமை.

தழையும் - தழைதற்குக் காரணமான எனினுமாம். கேட்டவுடன்-தன் பெயர் செவியுறப் பெற்றவுடனே; விரும்பியவுடனுமாம். மீண்டு-மீள, அதன்பின்; மீண்டு பிறந்தெனலுமாம். பிறந்திறவாமையாகிய கதி யென்க. (௫)

திருவால வாயென்று கேட்டவரே
　　யறம்பெறுவர் செல்வ மோங்குந்
திருவால வாயென்று நினைத்தவரே
　　பொருளடைவர் தேவ தேவன்*
திருவால வாயதனைக் கண்டவரே
　　யின்பநலஞ் சேர்வ ரென்றுந்
திருவால வாயிடத்து வதிந்தவரே
　　பரவீடு சேர்வ† ரன்றே.

(இ - ள்.) திருவாலவாய் என்று கேட்டவரே - திருவாலவாயென்று ஒருவர் சொல்லக் கேட்டவர்களே, அறம் பெறுவர்-அறத்தையடைவர்; செல்வம் ஓங்கும்-செல்வமிகுந்த, திருவாலவாய் என்று நினைத்தவரே - திருவாலவாயென்று சிந்தித்தவர்களே, பொருள்|அடைவர் - பொருளைப் பெறுவர்; தேவதேவன்-தேவர்களுக்குத் தேவனுகிய சோமசுந்தரக் கடவுளின், திருவாலவாய் அதனைக் கண்டவரே-திருவாலவாயைப் பார்த்தவர்களே; இன்ப நலம் சேர்வர்-இன்பமாகிய நன்மையை அடைவர்; என்றும்-எப்போதும்; திருவாலவாய் இடத்து வதிந்தவரே - திருவாலவாயின்கண் உறைந்தவர்களே, பரவீடு சேர்வர்-மேலான வீட்டுலகை அடைவார்கள் எ - று.

கேட்டல் முதலியன முறையே அறம் முதலிய நாற்பொருளும் பயக்குமென்றார். ஏகாரம்: பிரிநிலையும் தேற்றமுமாம். பரவீடு-பரமுத்தியுமாம். அன்று, ஏ : அசை. (௬)

சுரநதிசூழ் காசிமுதற் பதிமறுமைக்
　　கதியளிக்குந் தூநீர் வையை
வரநதிசூழ் திருவால வாய்சீவன்
　　முத்திதரும் வதிவோர்க் கீது
திரனதிகம் பரகதியும் பின்கொடுக்கு
　　மாதலினிச் சீவன் முத்தி
புரனதிக மென்பதேவ னதற்கதுவே
　　யோப்பாமேப் புவனத் துள்ளும்.

(இ - ள்.) சுரநதி சூழ்-கங்கையாறு சூழ்ந்த, காசிமுதல் பதி-காசி முதலிய பிறபதிகள், மறுமைகதி அளிக்கும்-மறுமையில் வீட்டுலகைக் கொடுக்கும்; தூநீர் வையை வரநதிசூழ்-தூய்மையான நீரினை

(பா - ம்.) * தேவ தேவைத் திருவாலவாயிடத்து.
† வீட்டு நெறி சேர்வர்.

யுடைய வையையாகிய சிறந்த ஆறு சூழ்ந்த, திருவாலவாய்-திருவால வாயானது, வதிவோர்க்கு சிவன் முத்தி தரும்-வசிப்பவர்களுக்குச் சிவன் முத்தியைக் கொடுக்கும்; ஈது அதிகம் திரன் - இது மிகுந்த உறுதி, பின் பரகதியும் கொடுக்கும் - மறுமையில் வீட்டுலகையும் கொடுக்கும், ஆதலின் - ஆதலால், இச்சிவன் முத்திபுரம் அதிகம் என்பது எவன்-இத்திருவாலவாய் சிறந்தது என்பது என்னை, எப்புவனத்துள்ளும்-எல்லா உலகத்தின் கண்ணும், அதற்கு அதுவே ஒப்பு ஆம்-அதற்கு அதுவே நிகர் ஆகும் எ - று.

கங்கை வானினின்று வந்தமையால் சுரநதி எனப்பட்டது. வரம்-மேன்மை. மறுமை - மறுபிறப்பு. இம்மையிலே சிவன் முத்திதருமென்க; அதனாற் சிவன் முத்திபுரம் என்பது பெயர். திரன்-ஒருதலை. எவன்-என்னை; கூறுதல் வேண்டா என்றபடி. 'அதற்கு அதுவேயொப்பு' என்பது சந்திராலோக முடையாரால் இயைபின்மையணி என்றும், தண்டியலங்கார முடையாரால் பொதுநீங்குவமையென்றும் கூறப்படும். (எ)

ஆதலினிப் பதிவிட்டுப் பிறபதியிற்
போய்நோற்போ ரங்கை கொண்ட
சீதளவா னமுதேய்ப்பத் தித்திக்கத்
தேம்பெய்து செய்த தீம்பால்
ஓதனத்தைக் கைவிட்டுப் புறங்கையை*
நக்குவா ரொப்பா ரிந்த
மாதலத்தின் பெருமைதனை யாவரே
யளவிட்டு வழுத்தற் பாலார்.

(இ - ள்.) ஆதலின்-ஆதலால், இப்பதிவிட்டு-இப்பதியிலிருந்து தவஞ்செய்தலை ஒழித்து, பிறபதியில் போய் நோற்போர்-வேறு பதிகளிற் சென்றிருந்து தவஞ்செய்வார், அங்கை கொண்ட - உள்ளங்கையிற் பெற்ற, சீதளம்-குளிர்ந்த, வான் அமுது ஏய்ப்ப-தேவாமுதத்தை ஒக்க, தித்திக்க-சுவைதர, தேம் பெய்து செய்த-தேனைச் சொரிந்து செய்த, தீம்பால் ஓதனத்தை-இனிய பாற்சோற்றை, கைவிட்டு-தவறவிட்டு, புறம்கையை நக்குவார் ஒப்பார்-புறங்கையை நக்குவாரை ஒப்பார்கள். இந்த மாதலத்தின் பெருமைதனை-இந்தப் பெருமை பொருந்திய பதியின் சிறப்பை, அளவிட்டு வழுத்தற்பாலார் யாவர் - வரையறுத்துக் கூறும் பகுதியையுடையார் யாவர் (ஒருவருமில்லை என்றபடி) எ - று.

அங்கை-அகங்கை. ஏய்க்குமாறு தித்திக்க வென்க; ஏய்ப்பச் செய்த வென்னலுமாம். தேன் தேம் எனத் திரிந்தது. புறங்கையை நக்குதல் பழமொழி. வழுத்தல் - ஈண்டுக் கூறுதலென்னும் பொருட்டு; புகழ்தலுமாம். (அ)

---

(பா - ம்.) * முழங்கையை.

மற்றைய தலங்க டம்மிற் பரிமகம் வாச பேயம்
அற்றமில் சோட சாக மக்கினிட் டோமம் யார்க்கும்
முற்றரு மிராச சூய முதன்மக முடித்த பேறுஞ்
செற்றமி றரிச* பூர்ண முதலிட்டி செய்த பேறும்.

(இ - ள்.) மற்றைய தலங்கள் தம்மில்-பிறபதிகளில், பரிமகம்-அசுவமேதமும், வாசபேயம் - வாசபேயமும், அற்றம் இல் சோட சாகம்-குற்றமில்லாத சோடசாகமும், அக்கினிட்டோமம்-அக்கினிட் டோமமும், யார்க்கும் முற்று அரும் - எவருக்கும் முடித்தற்கரிய, இராச சூயம் முதல் மகம் முடித்த பேறும்-இராச சூயமும் முதலிய பல வேள்விகளை முடித்தலால் வரும் பயனும், செற்றம் இல்-வருத்த மில்லாத, தரிச பூர்ணம் முதல் இட்டி செய்த பேறும் - தரிச பூர்ணம் முதலிய பல இட்டிகளைச் செய்தலால் வரும் பயனும் எ - று.

திவாகரத்தினும் பிங்கலத்தினும் பதினெண் வகை வேள்விகள் கூறப்பட்டுள. மாற்றரசர்களை வென்று திறைகொண்டு செய்யப்படுவ தாகலின், 'முற்றரு மிராச சூயம்' என்றார். பெருமை சிறுமை நோக்கி மகம் இட்டி யென வேறு பிரித்தோதினர். தரிசமும் பூர்ணமும் என இரண்டாக்கி யுரைப்பாரு முளர். முடித்த, செய்த என்னும் பெய ரெச்சங்கள் காரணப்பொருளில் வந்தன. (கூ)

எள்ளிழு தன்னங் கன்னி யிவுளிதே ரியானை யில்லம்
வெள்ளியான் பொன்பூ ணாடை விளைவோடு பழன முன்னாத்
தள்ளரு மடிமை யாதி தானங்கள் செய்த பேறும்
வள்ளறன் காசி யாதிப் பதிகளில் வதிந்த பேறும்.

(இ - ள்.) எள் இழுது அன்னம் கன்னி - எள்ளும் நெய்யும் சோறும் கன்னியும், இவுளி தேர் யானை இல்லம் - குதிரையும் தேரும் யானையும் வீடும், வெள்ளி ஆன் பொன் பூண் ஆடை - வெள்ளியும் பசுவும் பொன்னும் அணிகலனும் ஆடையும், விளைவொடு பழனம்-விளைவோடு கூடிய வயலும், முன்னா - முதலாகவும், தள் அரும் அடிமை ஆதி-நீக்குதற் கரிய அடிமை முதலாகவுமுள்ள, தானங்கள் செய்தபேறும்-தானங்களைச் செய்தலினால் வரும்பயனும், வள்ளல்தன் காசியாதி-சிவபிரான் எழுந்தருளியிருக்கும் காசி முதலிய, பதிகளில் வதிந்த பேறும்-தலங்களில் வசித்தலால் வரும் பயனும் எ - று.

எள்ளிழுது - எண்ணெயுமாம். முன்னா - முதலாக; முன்னித் தள்ளரும் என உரைப்பாருமுளர். (கo)

கங்கைகா ளிந்தி வாணி காவிரி கண்ண வேணி
துங்கபத் திரிதீம் பாலி தூயதண் பொருநை முன்னாச்
சங்கையி னதிகள் முற்று மாடிய தவத்தின் பேறும்
மங்கல மதுரை தன்னில் வைகலும் வதிவோர்க் கெய்தும்.

(பா - ம்.) * தெரிச.

(இ - ள்.) கங்கை காளிந்தி வாணி காவிரி கண்ணவேணி-கங்கையும் காளிந்தியும் சரசுவதியும் காவிரியும் கிருட்டிணையும், துங்கபத்திரை திம்பாலி தூயதண் பொருநை முன்னு-துங்கபத்திரையும்இனிய பாலியும் தூய்மையான குளிர்ந்த தாமிரபன்னியும் முதலாக உள்ள, சங்கை இல் நதிகள் முற்றும்-அளவிறந்த நதிகள் முழுதினும், ஆடிய தவத்தின் பேறும்-நீராடிய தவத்தினால் வரும் பயனும் (ஆகிய இவையனைத்தும்), மங்கலம் மதுரை தன்னில்-நன்மையுடைய மதுரைப்பதியில், வைகலும் வதிவோர்க்கு எய்தும்-நாள்தோறும் வசிப்பவர்களுக்கு உண்டாகும் எ - று.

*காளிந்தி - யமுனை. கண்ணவேணி-கிருஷ்ணை; பாகதச் சிதைவு. திம்பாலி : பாலிக்கு அடை. நீராடுதல் தாபதப் பக்கத்துளொன்றாகலின் 'ஆடிய தவம்' என்றார்.* (கக)

அன்னிய தலங்க டம்மி லாற்றிய பிரம கத்தி
பொன்னினைக் களவு செய்தல் கள்ளுண்டல் புனித வாசான்
பன்னியைப் புணர்த லின்ன பாதக மனைத்து மென்றுந்
தன்னிக ரால வாயில் வதிபவர் தமைவிட் டேகும்.

(இ - ள்.) அன்னிய தலங்கள் தம்மில்-வேறு பதிகளில், ஆற்றிய-புரிந்த, பிரமகத்தி-பிரமகத்தியும், பொன்னினைக் களவு செய்தல்-பிறர் பொருளைத் திருடுதலும், கள்ளுண்டல்-கள்ளுண்ணலும், புனித ஆசான் பன்னியைப் புணர்தல்-தூய்மையான குரவன் மனைவியைக் கூடுதலுமாகிய, இன்ன பாதகம் அனைத்தும்-இந்தப் பாவங்கள் எல்லாம், தன் நிகர் ஆலவாயில்-தனக்குத் தானே ஒத்த திருவாலவாயின்கண், என்றும் வதிபவர் தமை விட்டு ஏகும்-எந்நாளும் வசிப்பவர்களை விட்டு நீங்கும் எ - று.

*இச் செய்யுளிற் கூறியவை பெரும் பாதகங்களென்பதனை,*

*" மறையவர்ச் செகுத்தோன் கடிமது நுகர்ந்தோன்*
*வயங்குசெம் பொற்கள வாண்டோன்*
*நிறையருட் குரவன் பன்னியைப் புணர்ந்தோ*
*னிகரிலிக் கொடியரை யாரும்*
*அறைவரான் மாபா தகரென விவரை*
*யடுத்தொரு வருடநட் டவரும்*
*முறைதவிர் மாபா தகர்களே யென்ன*
*மொழிவதற் கையமொன் றின்றே "*

*என்னும் சூதசங்கிதையானு மறிக. இத் தலத்தின் பெருமை கூறுவார் 'வதிபவர் தமை விட்டேகும்' என்றார்.* (கஉ)

மற்றைய தலத்திற் சாந்தி ராயண மதியந் தோறும்
உற்றபே றிங்குக் கங்கு லுண்டியா லடைபே றாகும்
மற்றைய தலத்தின் மாதப் பட்டினிப் பலத்தின் பேறிங்
குற்றொரு வைக லுண்டி யொழிந்தவர் பெறும்பே றாகும்.

(இ - ள்.) மற்றைய தலத்தில்-பிற பதிகளில், மதியம்தோறும்-மாதந்தோறும், சாந்திராயணம் உற்ற பேறு - சாந்திராயண விரதம் நோற்றலால் வரும் பயன், இங்கு கங்குல் உண்டியால் அடை பேறு ஆகும்-இப்பதியில் இரவில் உண்ணுதலால் அடைகின்ற பயன் ஆகும்; மற்றைய தலத்தில்-ஏனைய தலங்களில், மாதப்பட்டினி பலத்தின் பேறு - மாதப்பட்டினி விரதத்தால் வரும் பயன், இங்கு உற்று ஒரு வைகல் உண்டி ஒழிந்தவர்-இத்தலத்திலிருந்து ஒருநாள் உணவு நீங்கியவர், பெறும்பேறு ஆகும்-அடைகின்ற பயன் ஆகும் எ - று.

மற்றையவாகிய தலங்களென்க. சாந்திராயணமாவது, சந்திரன் கலை வளருந்தோறும் ஒவ்வொரு கவளம் உயர்த்தும், குறையுந்தோறும் ஒவ்வொரு கவளம் குறைத்தும் உணவுண்டு நோற்கும் விரதம். மதியம் அம் சாரியை; அசையும் என்ப. கங்குலுண்டி-கங்குலில் மாத்திரம் உணவு கொள்ளும் நோன்பு. பட்டினி-உபவாசம். பலம் என்றது ஈண்டு விரதமென்னும் பொருளது. ஒருநாள் உபவாச நோன்புற்றோர் அடையும் பயன் ஆகும். (கங)

அயனக ரடைந்து நான்கு திங்களுேன் பாற்றும் பேறிவ்
வியனக ரடைந்து நோற்கு மட்டமி விரத நல்கும்
அயனக ரெய்தி யாறு திங்களுேன் பாற்றும் பேறிவ்
வியனகர்ச் சோம வார விரதமே யளிக்கு மன்றே.

(இ - ள்.) அயல் நகர் அடைந்து - வேறு பதிகளிற் சென்று, நான்கு திங்கள்-நான்கு மாதங்கள், நோன்பு ஆற்றும் பேறு-விரதங் கொள்ளுதலினல் வரும் பயன், இவ்வியன் நகர் அடைந்து-இந்த உயர்ந்த பதியைச் சார்ந்திருந்து, நோற்கும் அட்டமி விரதம் நல்கும்-புரிகின்ற அட்டமி விரதம் கொடுக்கும்; அயல் நகர் எய்தி-பிற தலங்களிற்போய், ஆறு திங்கள்-ஆறு மாதங்கள், நோன்பு ஆற்றும் பேறு-விரதம் இயற்றுதலினல் வரும் பயனை, இவ்வியன் நகர்-இச் சிறந்த பதியிலிருந்து நோற்கின்ற, சோமவார விரதமே அளிக்கும்-சோம வார விரதம் ஒன்றுமே நல்கும் எ - று.

அன்று, ஏ : அசை. (கச)

ஏனைய தலத்தி லோராண் டுணவொழிந் தியற்று நோன்பால்
ஆனபே றிங்கு நோற்குஞ் சிவனிரா வளிக்கு மிங்கே
ஊனவைம் பொறியும் வென்றோன் முப்பொழு துண்டு வைகித்
தானமர்ந் தாலுங் காலுண் டியற்றுமா தவத்தோ னாகும்.

(இ - ள்.) ஏனைய தலத்தில்-பிற பதிகளில், ஓர் ஆண்டு-ஒரு வருடம், உணவு ஒழிந்து-உணவின்றி, இயற்றும் நோன்பால் ஆன பேறு-செய்கின்ற விரதத்தால் வரும்பயனை, இங்கு நோற்கும் சிவன் இரா அளிக்கும்-இப்பதியிற் புரிகின்ற சிவராத்திரி விரதம் ஒன்றுமே நல்கும்; இங்கு-இப்பதியில், ஊன் ஐம்பொறியும் வென்றோன் - குற்றமுள்ள ஐம்பொறிகளையும் வென்றவன், முப்பொழுது உண்டு வைகி அமர்ந்தாலும் - மூன்று வேளையும் உண்டு இருந்தானுயினும், கால் உண்டு இயற்று மாதவத்தோன் ஆகும்-காற்றை உண்டு நோற்கின்ற பெரிய தவத்தை யுடையோனுகும் எ - று.

முப்பொழுதும் என்னும் உம்மை தொக்கது. தான் : அசை. காற்றினை யுண்டு தவம்புரிதலை,

"புற்று மாய்மர மாய்ப்புனல் காலே
யுண்டியா யண்ட வாணரும் பிறரும்
வற்றி யாருநின் மலரடி காணு
மன்ன! வென்னையோர் வார்த்தையுட் படுத்துப்
பற்றினுய்"

என்னும் திருவாசகத்தா னறிக. (கரு)

இந்நான் மாட மோங்கு மாலவா யிடத்தியா ரேனும்
அந்தணர் தமக்கோர் முட்டி யருந்தவர் தமக்கோர் பிச்சை
தந்தவர் புறம்பு செய்த சோடச தானந் தம்மால்
வந்தபே றடைவர் பல்வே றுரைப்பதென் மதியான் மிக்கீர்.

(இ-ள்) மதியால் மிக்கீர்-அறிவால் உயர்ந்த முனிவர்களே, இந்த நால் மாடம் ஓங்கும் ஆலவாய் இடத்து-இந்த நான் மாடமாகிய சிறந்த திருவாலவாயின்கண், அந்தணர் தமக்கு ஓர் முட்டி-அந்தணர்கட்கு ஒரு பிடி அரிசியாவது, அருந்தவர் தமக்கு ஓர் பிச்சை-செய்தற்கரிய தவத்தை யுடையார்க்கு ஒரு பிடி அன்னமாவது, தந்தவர் யாரேனும்-கொடுத்தவர்கள் யாவராயினும், புறம்புசெய்த-வேறு இடங்களில் செய்யப்பட்ட, சோடச தானம் தம்மால் வந்தபேறு அடைவர்-சோடச தானத்தால் வரும் பயனைப் பெறுவர் (ஆயின்), பல்வேறு உரைப்பது என்-பல வேறு வகைப்படக் கூறுவது என்னை; (கூற வேண்டா) எ-று.

நான் மாடக் கூடல் என்னும் பெயர் கடைகுறைந்து நின்றது. நான் மாடம் ஓங்கிய என்னலுமாம்: முட்டி - கைவிரல்களை மடக்கியிருப்பது. அரிசி, அன்னமென்பன கொள்க. சோடச தானம்-பதினறு வகைத் தானம். தம்: சாரியை. உரைப்பது: தொழிற்பெயர். முற்கூறியவாற்ருனே பெறப்படுமென்பார் 'உரைப்பதென்' என்ருர், (கசு)

பல்வகைத் தலங்க ளெல்லாம் வைகிய பயனு மென்றும்
பல்வகைத் தீர்த்த மெல்லா மாடிய பயனு மென்றும்
பல்வகைத் தான மெல்லா நல்கிய பயனு மென்றும்
பல்வகைத் தான பூசை பண்ணிய தவத்தின் பேறும்.

(இ-ள்.) பல் வகைத் தலங்கள் எல்லாம் வைகிய பயனும்-பல வகையான பதிகளிலெல்லாம் வசித்தலால்வரும் பயன்களும், என்றும்-எப்போதும், பல்வகைத் தீர்த்தம் எல்லாம் ஆடிய பயனும்-பலவகையான தீர்த்தங்களனைத்திலும் நீராடியதனுல் வரும் பயன்களும், என்றும்-எந்நாளும், பல்வகைத் தானம் எல்லாம் நல்கிய பயனும்-பலவகையான தானங்களனைத்தும் செய்தமையால் வரும் பயன்களும், என்றும் - எக்காலத்தும், பல் வகைத்து ஆன பூசை பண்ணிய தவத்தின் பேறும்-பல வகைகளை யுடையதாகிய பூசையைச் செய்த தவத்தால் வரும் பயன்களும் எ - று.

வகைத்து-து: பகுதிப்பொருள் விகுதியுமாம். பூசையே தவமென்பார் 'பூசைபண்ணிய தவம்' என்றார். (கஎ)

பல்வகைத் தவங்க ளெல்லா முற்றிய பயனுந் தூய
பல்வகை மந்தி ரத்தி லெய்திய பயனு நூலின்
பல்வகைக் கேள்வி யெல்லா மாய்ந்துணர் பயனும் யோகம்
பல்வகை ஞான மெல்லாம் பயின்றுணர்ந் தடங்கும் பேறும்.

(இ - ள்.) பல்வகைத்தவங்கள் எல்லாம்-பலவகையானதவங்கள் முழுதும், முற்றிய பயனும்-செய்து முடித்தலால் வரும் பயன்களும், தூய-புனிதமான, பல்வகை மந்திரத்தில் எய்திய பயனும்-பலவகையான மந்திரங்களைச் செபித்தலால் வரும் பயன்களும், பல்வகை-பலவகையான, நூலின் கேள்வி எல்லாம்-நூற்பொருள் கேட்டவற்றையெல்லாம், ஆய்ந்து உணர் பயனும்-ஆராய்ந்து உணர்ந்ததனால் வரும் பயன்களும், பல்வகை யோகம் ஞானம் எல்லாம் பயின்று-பலவகையான யோகங்கள் ஞானங்களெல்லாம் பழகி, உணர்ந்து-மெய்ப்பொருளை யறிந்து, அடங்கும் பேறும்-தற்போதம் அடங்கியிருத்தலால் வரும் பயன்களும் (ஆகிய இவையனைத்தையும்) எ - று.

பல்வகை யோகமும் ஞானமுமெல்லாமென்க. யோகம் பயின்று ஞானமுணர்ந்து என நிரனிறையுமாம். (கஅ)

அனையதொல் பதியி லென்றும் வைகுவோ ரடைவ ரென்றால்
இனையதொல் பதிக்கு நேர்வே றில்லையிப் பதியின் மேன்மை
தனையறி பவரா ரீசன் றனன்றி* யாத லாலே
வினையைவெல் பவரங் கெய்தி வதிவதே வேண்டு மாதோ.

(இ - ள்.) அனைய தொல்பதியில்-அந்தப் பழமையான ஆலவாயின்கண், என்றும் வைகுவோர் அடைவர் என்றால்-எந்நாளும் வசிப்போர் அடைவாரென்னின், இனைய தொல்பதிக்கு-இப்படிப்பட்ட பழம் பதிக்கு, நேர் வேறு இல்லை-ஒப்பு வேறோர் பதியுமில்லை; இப் பதியின் மேன்மைதனை - அத் தலத்தின் பெருமையை, ஈசன் அன்றி அறிபவர் ஆர்-சிவபிரானல்லாமல் உணர்ந்தவர்வேறு யாவர் (எவருமில்லை), ஆதலால் - ஆகையால், வினையை வெல்பவர்-இருவினைகளையும் வெல்லக் கருதினோர், அங்கு எய்தி வதிவதே வேண்டும்-அப் பதிக்குச் சென்று வசித்திருப்பதே வேண்டியதாகும் எ - று.

அடைவரென்றால் நேர் வேறுண்டோ? இல்லையென்க. ஈசனன்றி அறிபவர் ஆர் என மாற்றிக் கூட்டுக. ஏ: முன்னது அசை; பின்னது தேற்றம். மாது, ஓ: அசை. (கக)

கைத்தலநான் கிரண்டுடைய மலர்க்கடவுள்
மேலொருநாட் கயிலை யாதி
எத்தலமு மொருதுலையிட் டித்தலமு
மொருதுலையிட் டிரண்டுந் தூக்க

(பா - ம்.) * ஈசனன்றியே, ஈசனென்றறி.

உத்தமமாந் திருவால வாய்மிகவுங்
கனத்ததுகண் டுலகின் மேலா
வைத்ததல மிதுவென்று லிதன்பெருமை
யாவரே வழுத்தற் பாலார்.

(இ - ள்.) நான்கு இரண்டு கைத்தலம் உடைய மலர்க் கடவுள்-எட்டுத் திருக்கரங்களையுடைய தாமரைமலரில் வசிக்கும் நான்முகன், மேல் ஒருநாள்-முன் ஒருநாளில், கயிலை ஆதி எத்தலமும்-திருக்கயிலாயம் முதலான எல்லாப் பதிகளையும், ஒரு துலை இட்டு-ஒரு தராசின் தட்டில் வைத்து, இத்தலமும் ஒரு துலை இட்டு-இந்தப் பதியையும் ஒரு தட்டில் வைத்து, இரண்டும் தூக்க-இரண்டையும் தூக்க, உத்தமம் ஆம் திருவாலவாய்-சிறந்த திருவாலவாயானது, மிகவும் கனத்தது கண்டு-மிக்க கனத்திருத்தலைப் பார்த்து, உலகில் மேலா வைத்த தலம் இது என்றால்-உலகங்களில் உயர்ந்ததாக அறுதியிட்டு வைத்த பதி இது ஆயின், இதன் பெருமை-இதன் சிறப்பை, வழுத்தற் பாலார் யாவர்-வரையறுத்துக் கூறும் பகுதியை யுடையார் யாவர் (எவருமில்லை) எ - று.

கைத்தலம் - கையாகிய தலம் ; கை. துலை - தராசு. தராசின் ஒரு தட்டினை ஒரு துலை யென்றார். தூக்க-தூக்கி நிறுக்க. கனத்தல் - கனமாதல். வழுத்தல், ஈண்டுக் கூறுதல். (உ0)

அத்திருமா நகரின்பேர் சிவநகரங்
கடம்பவன மமர்ந்த சீவன்*
முத்திபுரங் கன்னிபுரந் திருவால
வாய்மதுரை முடியா ஞானம்
புத்திதரும் பூவுலகிற் சிவலோகஞ்
சமட்டிவிச்சா புரந்தென் கூடல்
பத்திதரு துவாதசாந் தத்தலமென்
றேதுவினாற் பகர்வர் நல்லோர்.

(இ - ள்.) அத் திருமாநகரின் பேர்-அந்தத் தெய்வத்தன்மை பொருந்திய சிறந்த திருப்பதியின் பெயர்களை, சிவ நகரம் கடம்ப வனம் - சிவ நகரமென்றும் கடம்பவனமென்றும், அமர்ந்த சீவன் முத்திபுரம் - விரும்பிய சீவன் முத்திபுரம் என்றும், கன்னிபுரம் திருவாலவாய் மதுரை - கன்னிபுரமென்றும் திருவாலவாய் என்றும் மதுரை என்றும், முடியா ஞானம் புத்திதரும் பூவுலகில் சிவலோகம்-அழியாத ஞானத்தையும் போகத்தையுங் கொடுக்கின்ற பூலோக சிவலோகம் என்றும், சமட்டி விச்சாபுரம் தென்கூடல்-சமட்டி விச்சா புரமென்றும் தென்கூடல் என்றும், பத்திதரும் துவாத சாந்தத் தலம் என்று-அன்பை யருளுகின்ற துவாத சாந்தப்பதி என்றும், நல்லோர் ஏதுவினால் பகர்வர்-உயர்ந்தோர் ஒவ்வொரு காரணங்களாற் கூறுவர் எ - று.

---

(பா-ம்.) * அமர்ந்தோர் சீவன், சிவநகரோத்தமங் கடம்ப வடவி சீவன்.

சிவன் முத்தியளித்தலின் சிவன் முத்திபுரம் என்றும், தடாதகைப் பிராட்டியார் கன்னியாயிருந்து ஆண்டமையின் கன்னிபுரம் என்றும், எல்லா ஞானங்களேயும் தருதலின் சமட்டி விச்சாபுரம் என்றும், விராட்புருடனுக்கு உச்சிக்குமேற் பன்னிரண்டங்குல முடிவிலுள்ள துவாத சாந்தமாகக் கொள்ளப்படுதலின் துவாத சாந்தத்தலம் என்றும் பெயர்; பிற பெயரின் வரலாறும் மேல்வருமிடங்களில் ஆண்டாண்டுக் காண்க. சிவன் முத்தியாவது உடம்போடு கூடியிருந்தே அளத்திற்பட்ட புற்போலப் பசுகரணமெல்லாம் சிவகரணமாகிச் சாக்கிரத்தே அதிதத்தைப் புரிந்து எப் பற்று மின்றிச் சிவபோகந் துய்த்தல். புத்தி யென்றது சிவபோகத்தை. (உக)

என்றுதலச் சிறப்புரைத்த குறுமுனிவ
னெதிரறவோ ரிறும்பூ தெய்தி
நன்றுதலப் பெருமையருள் செய்தனேகேட்
டுடலெடுத்த நயப்பா டெல்லாம்
இன்றடைந்தே மினிச்சுவண புண்டரிகச்
சிறப்பதனே யிசைத்தி யென்னக்
குன்றமடக் கியகருணேக் குன்றனேயான்
வரன்முறையாற் கூறு கின்றான்.

(இ - ள்.) என்று தலச்சிறப்பு உரைத்த - என்று தலவிசேடத்தைக் கூறிய, குறுமுனிவன் எதிர் - அகத்திய முனிவன் எதிரே, அறவோர் இறும்பூது எய்தி - முனிவர்கள் வியப்புற்று, தலப்பெருமை நன்று அருள் செய்தனே - தலச்சிறப்பை நன்கு கூறி யருளினுய், கேட்டு-அதனேக் கேட்டு, உடல் எடுத்த நயப்பாடு எல்லாம்-உடலே எடுத்ததனுல் அடைய வேண்டிய பயன் முழுதும், இன்று அடைந்தேம் - இப்பொழுதே அடையப் பெற்றேம்; இனி சுவண புண்டரிகச் சிறப்பதனே - இனிப் பொற்றாமரைத் தீர்த்தத்தின் விசேடத்தை, இசைத்தி என்ன - கூறியருளுக என்ன, குன்றம் அடக்கிய - விந்த மலேயை அடக்கிய, கருணேக்குன்று அனேயான் - கருணே மலேயை ஒத்தவனுகிய அகத்தியன், வரன் முறையால் கூறுகின்றான் - வரலாற்று முறைமைப்படி கூறுகின்றான் எ - று.

இறும்பூது-பெருமை பற்றிய அதிசயம். இனியென்னும் இடைச்சொல் எதிர்காலங் குறித்தது. சுவணம் - பொன். (உஉ)

விரதமா தவத்தீர் காணின் வெவ்விணே யெல்லாம் வீட்டிச்
சரதமாப் போக நல்குந் தமனிய* முளரி வந்த
வரவுமக் கனகக் கஞ்சப்† பெருமையும் வளனு நன்கா
உரைசெய்துங் கேண்மி னென்ன முனிவர னுரைக்கு மன்னே.

(இ - ள்.) விரதம் மாதவத்திர் - பெரிய தவத்தினே விரதமாகக் கொண்ட முனிவர்களே, காணின் - தரிசித்தால், சரதமா - உண்மையாக, வெவ்விணே எல்லாம் வீட்டி - கொடிய விணேகளே எல்லாம்

(பா - ம்.) * தபனிய. † கனக கஞ்ச.

அழித்து, போகம் நல்கும் - போகத்தைக் கொடுக்கின்ற, தமனிய முளரி - பொற்ருமரையானது, வந்த வரவும் - தோன்றிய வரலாறும், அக்கனகக் கஞ்சப்பெருமையும் - அப்பொற்ருமரையின் சிறப்பும், வளனும் - வளப்பமும் ஆகிய இவற்றை, நன்கா உரை செய்தும் - நன்ருகக் கூறுவேம், கேண்மின் என்ரு - கேளுங்கள் என்று, முனிவரன் உரைக்கும் - முனிபுங்கவனுன அகத்தியன் கூறுவானுயினன் எ - று.

விரதத்தையும் தவத்தையும் உடையீர் என்றும், விரதமாகிய தவத்தை யுடையீர் என்றும் உரைத்தலுமாம். வீட்டி - வீழ்த்தி யென்பதன் மரூஉ. தமனிய முளரி, கனகக் கஞ்சம் என்பன பெயர். சரதமாக, நன்காக என்பன விகாரமாயின. என்று கூறிப்பின் உரைப்பானுயினன். மன், ஓ: அசை. (உ௩)

ஆகச் செய்யுள்—உ௫௪.

---

## தீர்த்தவிசேடப் படலம்

[அறுசீரடியாசிரியவிருத்தம்]

கண்ணகன் குடுமி மாடக் கடிபொழி லால வாயின்
அண்ணலம் பெருமை யாரே யளப்பவ ரவிர்தண் முத்த*
வெண்ணகை யுமையா ளன்பு விளைமுகச் செவ்வி போலத்
தண்ணறுங் கமலம் பூத்த தடப்பெருந் தகைமை சொல்வாம்.

(இ - ள்.) கண் அகன் - இடம் பரந்த, குடுமி மாடம் - சிகரங்களையுடைய மாடங்களையுடைய, கடிபொழில் - மண மிகுந்த சோலைகளாற் சூழப்பெற்ற, ஆலவாயின் - திருவாலவாயினது, அண்ணல் அம்பெருமை - மிகுந்த அழகிய பெருமையை, அளப்பவர் யாரே - அளவிட்டுக் கூற வல்லவர் யாவர், அவிர்தண் முத்தம் - விளங்கிய குளிர்ந்த முத்துக்கள் போலும், வெள் நகை உமையாள் - வெள்ளிய பற்களையுடைய உமையம்மையாரின், அன்புவிளை - அருள் பழுத்த, முகச் செவ்விபோல - திருமுகத்தின் அழகுபோல, தண் நறும் கமலம் பூத்த - குளிர்ந்த நறிய தாமரை மலரப்பெற்ற, தடம்பெருந் தகைமை சொல்வாம் - தீர்த்தத்தின் பெருஞ் சிறப்பினைக் கூறுவாம் எ - று.

அகன், மரூஉ. அண்ணல் என்பதற்கு இங்கே கடவுளெனப் பொருள் கூறுதல் பொருந்தாமை யறிக. அண்ணற் பெருமை - மிக்க பெருமை. அம்: சாரியையுமாம். ஏகாரம்: எதிர்மறை. முகச்செவ்வி போலக் கமலம் பூத்த என்றமையால் இஃது எதிர்நிலையணி. (க)

ஆற்றினுக் கரசாங் கங்கை காவிரி யாதி யாறும்
வேற்றுரு வாய முந்நீர் வேலையும் பிறவுங் காருந்
தோற்றுமுன் றன்னை யாட்டச் சுந்தர மூர்த்தி செங்கண்
ஏற்றினன் கண்ட தீர்த்த மாகுமீ தெவ்வா றென்னில்.

(இ - ள்.) ஈது - இப்பொற்றாமரையானது, ஆற்றினுக்கு அரசு ஆம் - நதிகளுக்கு அரசாகிய, கங்கை காவிரி ஆதி ஆறும் - கங்கை காவிரி முதலிய நதிகளும், வேற்று உருவு ஆய - வெவ்வேறு வடிவமாகிய, முந்நீர் வேலையும் - மூன்று நீரையுடைய கடலும், பிறவும் - பிற நீர்நிலைகளும், காரும் - மேகமும், தோற்று முன் - தோன்றுவதற்கு முன்னே, தன்னை ஆட்ட - தன்னைத் திருமஞ்சனஞ் செய்விக்க, செங்கண் ஏற்றினன் - சிவந்த கண்களையுடைய இடப ஊர்தியை உடையனாகிய, சுந்தர மூர்த்தி - சோம சுந்தரக் கடவுள், கண்ட தீர்த்தம் ஆகும் - தோற்றுவித்த தீர்த்தம் ஆகும்; எவ்வாறு என்னில் - எப்படி என்னில் எ - று..

முந்நீர் - ஆற்று நீர், ஊற்று நீர், மழை நீர் என்பன; படைத்தல், காத்தல், அழித்தல் என்னும் மூன்று நீர்மையும் என்ப. முந்நீராகிய வேலை யெனினும் ஆம். கண்ட - படைத்த. ஈது: சுட்டு நீண்டது.()

---

(பா - ம்.) அவிர்ந்த முத்த.

அகளமா யுலகமெல்லா மோடுக்கியங் நெறியே யார்க்கும்
நிகளமாம்* விருத்தி தோன்ற நினைவற நினைந்து நிற்கும்
துகளிலா வறிவா னந்தச் சுந்தரச் சோதி மேனாட்
சகளமா முருவங் கோண்டு தானொரு விளையாட் டாலே.

(இ - ள்.) அகளம் ஆய்-நிட்களமாய், உலகம் எல்லாம் ஒடுக்கி-உலகமனைத்தையும் தன்னுள்ளே ஒடுக்கி, அந்நெறியே-அவ்வொடுக்கிய முறையாகவே, யார்க்கும் நிகளம் ஆம் விருத்தி தோன்ற-எவர்க்கும் பாசமாகிய விருத்தி தோன்றுமாறு, நினைவற நினைந்து நிற்கும் - நினைவற நினைந்து நிற்கின்ற, துகள் இலா - குற்றமில்லாத, அறிவு ஆனந்தச் சுந்தரச் சோதி-ஞானானந்த ஒளிவடிவாகிய சோம சுந்தரக் கடவுள், மேல் நாள் - முன்னொரு நாளில், சகளம் ஆம் உருவம் கொண்டு-சகளமாகிய வடிவங் கொண்டு, ஒரு விளையாட்டால் - ஒரு திருவிளையாட்டினால் எ - று.

அகளம் - நிட்களம்; அருவமாகிய சிவம், மாயைக்கு ஆதாரமாய் நிற்றலின் தன்னுள்ளே யொடுக்கி யெனப்பட்டது; மாயையில் ஒடுக்கி யென்னலுமாம். நிகளம் - தளை; பாசபந்தம். விருத்தி - வியாபாரம். நினைவற நினைதல் - சத்தியாற் சங்கற்பித்தல். உயிர்களின் அறிவும் இன்பமும் துகளுடையன. சகளம் - உருவமுடைத்தாதல்.

"அகளமா யாரு மறிவரி தப்பொருள்
சகளமாய் வந்ததென் றுந்திபற"

என்பது காண்க. (ங)

முக்கண னரவப் பூண நூலினன் முகிழ்வெண் டிங்கட்
சேக்கரஞ் சடையான் சூல கபாலத்தன் சேங்க ணேற்றன்
மைக்கருங் கயலுண் கண்ணி வாமத்தன் முன்னும் பின்னும்
பக்கமு நந்தி யாதி கணாதிபர் பரவிச் சூழ.

(இ - ள்.) முக்கணன்-மூன்று கண்களையுடையவனும், அரவப் பூண நூலினன் - பாம்பாகிய பூணூலையுடையவனும், முகிழ் வெண் திங்கள் - அரும்பிய வெள்ளிய பிறைச்சந்திரனை அணிந்த, செக்கர் அம் சடையான்-செவ்வானம் போலும் அழகிய சடையை உடையவனும், சூல கபாலத்தன் - சூலத்தையும் கபாலத்தையு முடையவனும், செங்கண் ஏற்றன் - சிவந்த கண்களையுடைய இடபத்தையுடையவனும், மை உண் கயல் கருங் கண்ணி-மை உண்ட கயல் போலும் கரிய கண்களையுடைய உமையம்மையை, வாமத்தன்-இடப் பாகத்திலுள்ளவனுமாகிய இறைவன், நந்தி ஆதி கண அதிபர்-நந்தி முதலிய கணத்தலைவர்கள், முன்னும் பின்னும் பக்கமும் பரவிச் சூழ - முன்னும் பின்னும் பக்கமுமாகிய எங்கும் சூழ்ந்து துதிக்க எ - று.

பூண நூல், அ: அசை. மையுண்ட வென்க. பக்கமும் - இருமருங்கும். கணாதிபர்: வடமொழி நெடிற் சந்தி. (ச)

(பா-ம்.) * நிகளமாய்.

சென்றுதன் மேனித் தேசாற் றிசையெலாம் விளங்கச் செங்கண்
வென்றிகோ ளுரக வேந்த னகரமும் விபுதர் வேந்தன்
பொன்றிகழ் நகரும் வேதன் புரமுமால் புரமு மேலைத்
தன்றிரு நகருஞ் சென்று சஞ்சரித் தாடி மீள்வான்.

(இ - ள்.) தன் மேனித் தேசால் - தனது திருமேனியின் ஒளியினால், திசை எலாம் விளங்கச் சென்று - திக்குகள் எல்லாம் ஒளிவீசப் போய், செங்கண் - சிவந்த கண்களையுடைய, வென்றி கொள் உரக வேந்தன் நகரமும் - வெற்றியைக் கொண்ட பாம்புகளின் அரசனாகிய அனந்தனுடைய உலகத்திலும், விபுதர் வேந்தன் - தேவர்கட்கு அரசனாகிய இந்திரனது, பொன் திகழ் நகரும் - விளங்காநின்ற பொன்னுலகத்திலும், வேதன் புரமும் - பிரமனது உலகத்திலும், மால் புரமும் - திருமாலின் உலகத்திலும், மேலைத் தன் திரு நகரும் - அவைகளின் மேலுள்ள தனது சிவலோகத்திலும், சென்று சஞ்சரித்து ஆடி மீள்வான் - சென்று உலாவித் திருவிளையாடல் செய்து மீண்டருளுவான் எ - று.

திகழ் பொன் நகரு மென்க. மேலை - மேலுள்ளதாகிய; 'எழின் முடியதாஞ் சிவலோகம்' என்பர் பின்னும். (கூ)

அன்னபோ தயனுந் தேவர்க் கரசனு மாழி வேந்தும்
முன்னர்வந் திறைஞ்சி யேத்த முனிவரும் பேறு நல்கித்
தன்னக ரடைந்து நீங்காத் தனிப்பெருங் கணத்தி னோரை
இன்னருள் சுரந்து நோக்கி யிலிங்கத்திற் புகுதுமெல்லை.

(இ - ள்.) அன்னபோது - அப்பொழுது, அயனும் - பிரமனும், தேவர்க்கு அரசனும் - தேவேந்திரனும், ஆழி வேந்தும் - திகிரிப் படையையுடைய திருமாலும், முன்னர் வந்து இறைஞ்சி ஏத்த - திருமுன் வந்து வணங்கித் துதிக்க, முனிவு அரும் பேறு நல்கி - (அவர்களுக்கு) வெறுப்பில்லாதவரங்களைக்கொடுத்து, தன்நகர் அடைந்து - தனது திருவாலவாயை அடைந்து, நீங்காத் தனிப்பெருங் கணத்தினோரை - பிரியாத ஒப்பற்ற பெரிய கணத்தலைவர்களை, இன் அருள் சுரந்துநோக்கி - இனிய அருள் கூர்ந்து பார்த்து, இலிங்கத்தில் புகுதும் எல்லை - இலிங்கத்திற் சென்றெய்தும் பொழுதில் எ - று.

முன்னர், ஆர்: பகுதிப் பொருள் விகுதி. முனிவு அரும் - வெறுத்தலில்லாத; மகிழ்தற் குரிய என்றபடி. இலிங்கம் - ஒளியுடையது, அடையாளம், சிவனது அருவுருவத் திருமேனி' (சு)

வேத்திரப் படையோ னாதி கணாதிபர் வீழ்ந்து பால
நேத்திர வன்பர்க் கன்ப நிரஞ்சன நிருத்தா னந்த
சாத்திர முடிவுந் தேறாத் தனிமுத லொருவ வென்னாத்
தோத்திர வகையா லேத்தித் தொழுதொன்று வினவல் செய்வார்.

(இ - ள்.) வேத்திரப் படையோன் ஆதி கணாதிபர் - பிரம்புப் படையையுடையோனாகிய நந்தி முதலிய கணத்தலைவர்கள், வீழ்ந்து -

கீழே விழுந்து, பால நேத்திர-நெற்றிக்கண்ணனே, அன்பர்க்கு அன்ப-அன்பராயினார்க் கன்பனே, நிரஞ்சன-களங்கமற்றவனே, நிருத்தானந்த-ஆனந்தத் தாண்டவமுடையவனே, சாத்திர முடிவுந் தேரு-சாத்திர முடிவினாலும் தெளியப்படாத, தனி முதல் ஒருவ-ஒப்பற்ற முதற்பொருளாகிய ஒருவனே, என்னு-என்று, தோத்திர வகையால் ஏத்தி-துதி வகையினாற் புகழ்ந்து, தொழுது-வணங்கி, ஒன்று வினவல் செய்வார் - ஒன்று கேட்பாராயினர் எ - று.

பாலம்-நெற்றி. அஞ்சனம்-களங்கம். ஆனந்த நிருத்த என மாற்றுக; நிருத்தத்தின் ஆனந்தமுமாம்: வடசொற் சந்தி. வீழ்ந்து தொழுது ஏத்தி வினவுவரென முடிக்க. (எ)

ஐயவிவ் விலிங்க மூர்த்திக் காட்டவு மடியே மூழ்கி
உய்யவுங் கங்கை யாதி நதிகளு முலகத் துள்ளோர்*
மையறு தடாக நீரு மற்றிலை யிருமைப் பேறுஞ்
செய்யவோர் தீர்த்த மிங்குண் டாக்கெனச் செப்ப லோடும்.

(இ - ள்.) ஐய-தலைவனே, இ இலிங்கமூர்த்திக்கு-இச் சிவலிங்கப் பெருமானுக்கு, ஆட்டவும்-திருமஞ்சனம் செய்யவும், அடியேம் மூழ்கி உய்யவும்-அடியேங்கள் நீராடி உய்தி கூடவும், உலகத்துள்-உலகின் கண், கங்கை ஆதி நதிகளும்-கங்கை முதலிய ஆறுகளும், ஓர் மையறு தடாக நீரும் இலை - ஓர் குற்றமற்ற தடாக நீரும் இல்லை (ஆதலால்), இருமைப் பேறும் செய்ய - இம்மை மறுமையாகிய இருமைப் பயன்களையும் நல்க, இங்கு ஓர் தீர்த்தம் உண்டாக்கு எனச் செப்பலோடும்-இவ்விடத்து ஓர் தீர்த்தம் ஆக்கியருள வேண்டுமென்று விண்ணப்பித்துக் கொண்டவுடனே எ - று.

உலகத்துள்ளோர் குற்றமறுதற்குக் காரணமான என்றுமாம். மற்று: அசை. (அ)

அத்தகை யிலிங்க மூர்த்திக் கடுத்ததென் கீழ்சா ராக
முத்தலை வேலை வாங்கி நாட்டினான் முதுபார் கீண்டு
பைத்தலைப் பாந்தள் வேந்தன் பாதலங் கீண்டு போயெண்
கைத்தலப் பிரம னண்ட கடாகமுங் கீண்ட தவ்வேல்.

(இ-ள்.) அத்தகை - அத்தன்மையுடைய, இலிங்க மூர்த்திக்கு-சிவலிங்கப் பெருமானுக்கு, அடுத்த தென் கீழ் சார் ஆக - அடுத்த தென் கிழக்குப் பக்கத்தில், முத்தலை வேலை வாங்கி நாட்டினான்-மூன்று தலையையுடைய சூலத்தை எடுத்துக் கீழே ஊன்றினான்; அவ்வேல்-(ஊன்றப்பெற்ற) அச்சூலமானது, முதுபார் கீண்டு-பழமையாகிய நிலவுலகத்தைக் கிழித்து, பைத்தலைப் பாந்தள் வேந்தன் - படம் பொருந்திய தலைகளையுடைய பாம்புகட்கு அரசனாகிய அனந்தனிருக்கும், பாதலம் கீண்டு போய்-பாதலத்தைக் கிழித்துச் சென்று, எண் கைத்தலப் பிரமன் அண்ட கடாகமும் கீண்டது - எட்டுக் கைகளையுடைய நான்முகனது அண்ட கடாகத்தையும் ஊடுருவிச் சென்றது எ - று.

(பா - ம்.) *உலகத்துள்ள.

கிண்டு, கிழ்ந்து என்பதன் மரூஉ. அண்ட கடாகம் - அண்ட கோளத்தின் புறவோடு. (கூ)

அவ்வழிப் புறம்பு சூழ்ந்து கிடந்தபே ராழி யூழிப்
பௌவநீ ரென்ன வோங்கப் பாணியா லமைத்து வேணித்
தெய்வநன் னீரைத் தூவிக் கலந்துமா தீர்த்த மாக்கிக்
கைவரை கபாலி நந்தி கணத்தினை நோக்கிக் கூறும்.

(இ - ள்.) அவ்வழி-அக்கிண்ட வழியால், புறம்பு சூழ்ந்து கிடந்த பேர் ஆழி-அக் கடாகத்தின் புறத்தில் சுற்றிக்கிடந்த பெரும்புறக் கடலானது, ஊழிப் பௌவம் நீர் என்ன-ஊழிக்காலத்திற் பொங்கி எழுங் கடல்நீர் போல, ஓங்க - மேலோங்க, பாணியால் அமைத்து - (தனது) திருக்கரத்தால் அமைக வென அமைத்து, வேணி - சடையி லுள்ள, தெய்வ நல் நீரைத் தூவிக் கலந்து-தெய்வத் தன்மை பொருந் திய நல்ல நீரைத் தெளித்துக் கலந்து, மா தீர்த்தம் ஆக்கி-பெருமை பொருந்திய தீர்த்தமாகச் செய்து, கை வரை கபாலி-கையில் ஏந்திய கபாலத்தையுடைய இறைவன், நந்தி கணத்தினை நோக்கிக் கூறும்- நந்திதேவரையும் மற்றைக் கணத்தலைவர்களையும் பார்த்துக் கூறு வான் எ - று.

வரைதல்-கொள்ளுதல். நந்தி முதலிய கணமும் ஆம். (கo)

இன்னமா தீர்த்தந் தன்னை யெனைப்பல தீர்த்தங் கட்கு
முன்னம்யா மிங்குக் கண்ட முதன்மையா லாதி தீர்த்தம்
என்னலா மினியுண் டாக்குந் தீர்த்தங்க ளெவைக்கு மேலாய்
மன்னலாற் பரம தீர்த்த மெனப்பெயர் வழங்க லாகும்.

(இ - ள்.) இன்னமா தீர்த்தம் தன்னை-இந்தப் பெருமைபொருந் திய தீர்த்தத்தை, எனைப் பல தீர்த்தங்கட்கும்-பலவகையான தீர்த் தங்களெல்லாவற்றையும் தோற்றுவித்தற்கு, முன்னம்-முன்பே, யாம் இங்கு கண்ட முதன்மையால்-நாம் இவ்விடத்து உண்டாக்கிய முதன்மையினால், ஆதி தீர்த்தம் என்னலாம் - ஆதி தீர்த்தம் என்று, கூறலாம்; இனி உண்டாக்கும் - மேல் தோற்றுவிக்கும், தீர்த்தங்கள் எவைக்கும் மேலாய் மன்னலால் - தீர்த்தங்கள் அனைத்திற்கும் உயர் வாக நிலைபெறுதலால், பரம தீர்த்தம் என - பரம தீர்த்தம் என்று பெயர் வழங்கலாகும் - பெயர்கூறலாகும் எ - று.

எனைப் பல - எத்துணையும் பலவாகிய; எனை - எல்லாமென்னும் பொருட்டு; 'எனைவகையாற் றேறியக்கண்ணும்' என்பது காண்க. தீர்த்தங்கட்கும் - தீர்த்தங்களைத் தோற்றுவித்தற்கும்: ஐந்தாவதன் எல்லைப்பொருளில் வந்தது. முன்னம், அம்: அசை; பகுதிப் பொருள் விகுதியுமாம். கண்ட: காரணப் பொருட்டு. ஆய், ஆக. (கக)

மருட்கெட மூழ்கி னோர்நன் மங்கலம் பெறலா னுமம்
அருட்சிவ தீர்த்த மாகும் புன்னெறி யகற்றி யுள்ளத்
திருட்கெட ஞானந் தன்னை யீதலான் ஞான தீர்த்தந்*
தெருட்கதி தரலான் முத்தி தீர்த்தமென் றிதற்கு நாமம்.

---

(பா - ம்.) * இருட்கெடப் பரமமுத்திக் கேதுவா ஞானந் தன்னைத் தெருட்படத் தரலான் ஞான தீர்த்தம்.

(இ - ள்.) மருள் கெட-மயக்கம் நீங்க, மூழ்கினோர்-(இதில்) நீராடியவர்கள், நல்மங்கலம் பெறலால்-நல்ல நன்மைகளை அடைவதால், நாமம் அருள் சிவ தீர்த்தம் ஆகும்-பெயர் அருளையுடைய சிவ தீர்த்தமாகும்; புல்நெறி அகற்றி - தீயவழிகளிற் செல்லுதலை நீக்கி, உள்ளத்து இருள்கெட-மனத்தின்கண் அஞ்ஞான இருள் கெடுமாறு, ஞானம் தன்னை-ஞானவொளியை, ஈதலான் ஞான தீர்த்தம்-கொடுத்தலினால் ஞான தீர்த்தம் என்றும், தெருள் கதி தரலால் - தெளிந்த முத்தியை நல்குவதால், முத்தி தீர்த்தம் என்று - முத்தி தீர்த்தம் என்றும், இதற்கு நாமம்-இதற்குப் பெயர்களுள்ளன எ - று.

சிவம் என்பது மங்கலம் என்னும் பொருளதாகலின் மங்கலந் தருவதற்குச் சிவ தீர்த்தமென்று பெயர். சிவம், மங்கலம், நலம் என்பன ஒரு பொருளன. சீவகசிந்தாமணியுரையில் 'சிவம்புரி நெறியைச் சேர' என்பதற்கு 'நன்மை புரிந்த வீட்டைச் சேரும்படி' என நச்சினார்க்கினியர் பொருள் கூறியிருப்பதுங் காண்க. தெருள்-ஞானம்; 'தெருளாதான் மெய்ப்பொருள் கண்டற்றால்' என்பதற்குப் பரிமேலழகர் கூறிய உரையை நோக்குக. ஞானத்தையும், ஞானத்தானெய்தும் கதியையும் தரும் என்றார். (கஉ)

குடைந்துதர்ப் பணமுஞ் செய்து
 தானமுங் கொடுத்தம் மாடே*
அடைந்தெழுத் தைந்து மெண்ணி
 யுச்சரித் தன்பா லெம்மைத்
தொடர்ந்துவந் திறைஞ்சிச் சூழ்ந்து
 துதித்தெமை யுவப்பச் செய்தோர்
உடம்பெடுத் ததனா லெந்த
 வுறுதியுண் டதனைச் சேர்வார்.

(இ - ள்.) குடைந்து-நீராடி, தர்ப்பணமும் செய்து தானமும் கொடுத்து-தர்ப்பணம் செய்து தானங் கொடுத்து, அம்மாடே அடைந்து-அதனருகே தங்கி, ஐந்து எழுத்தும் எண்ணி உச்சரித்து-திருவைந் தெழுத்துக்களையும் கருதி உச்சரித்து, அன்பால் - அன்பினாலே, எம்மைத் தொடர்ந்து வந்து இறைஞ்சி-எம்மைப் பற்றி வந்து வணங்கி, சூழ்ந்து-வலங்கொண்டு, துதித்து எமை உவப்பச் செய்தோர்-துதித்து எம்மை மகிழ்வித்தவர்கள், உடம்பு எடுத்ததனால்-மக்கட்பிறப்பை யடைந்ததனால், எந்த உறுதி உண்டு-எந்தப் பயன் அடைதற்கு உரியதோ, அதனைச்சேர்வார்-அதைஅடைவார்கள் எ-று.

தர்ப்பணஞ் செய்தல் - மந்திரநீ ரிறைத்தல். எண்ணி - கணித்து என்றுமாம்; 'அக்குமாலைகொ டங்கையி னெண்ணுவார்' என்னும் தமிழ் மறையுங் காண்க. விளக்கத்தினைக் காட்ட 'எந்த' என்றார். உறுதி-வீடுபேறு. (கங)

இந்தநீ ரெம்மை யாட்டி னேழிரண் டுலகின் மிக்க
அந்தமி றீர்த்த மெல்லா மாட்டிய பயன்வந் தெய்தும்
வந்ததின் மூழ்கி யிங்கு வைகுநங் குறியை யுங்கள்
சிந்தையி லார்வம் பொங்கப் பூசனை செய்மி னென்னா.

(பா - ம்.) * கொடுத்துமாடே.

(இ - ள்.) இந்த நீர்-இந்தத் திர்த்தத்தால், எம்மை ஆட்டின் - எம்மைத் திருமஞ்சனஞ் செய்வித்தால், ஏழ் இரண்டு உலகின்-பதினான்கு உலகங்களிலுமுள்ள, மிக்க அந்தம் இல் - உயர்ந்த அழிவில்லாத, திர்த்தம் எல்லாம்-திர்த்தங்கள் எல்லாவற்றானும், ஆட்டிய பயன் வந்து எய்தும்-அபிடேகித்தலால் வரும் பயன் வந்து பொருந்தும்; (ஆகையால்), இதில் வந்து மூழ்கி-இதில் வந்து நீராடி, இங்கு வைகும்-இங்கு எழுந்தருளியிருக்கும், நம் குறியை-நமது அருட் குறியாகிய சிவலிங்கத்தை, சிந்தையில் ஆர்வம் பொங்க-உள்ளத்தில் அன்பு மீக்கூர, பூசனை செய்மின் என்னு-பூசனை புரியுங்கள் என்று கூறி எ - று.

மிக்க திர்த்தம் என இயையும். எல்லாம்-எல்லாவற்றானும். ஆட்டிய : காரணப்பொருட்டு. (கச)

விண்ணவர் தம்மின் மேலாம் வேதிய னாகி நின்ற
பண்ணவன் றானந் நீரிற் படிந்துதன் னனுஞை யாலே*
அண்ணலங் கணத்தி னோரை மூழ்குவித் தனாதி யாய
புண்ணிய விலிங்கந் தன்னுட் புகுந்தினி திருந்தான் மன்னோ.

(இ - ள்.) விண்ணவர் தம்மில்-தேவர்களுள், மேலாம் வேதியன் ஆகி நின்ற பண்ணவன்-உயர்ந்த அந்தணனாகிய இறைவன், தான் அந்நீரில் படிந்து-தான் அத் திர்த்தத்தில் மூழ்கி, தன் அனுஞையால் - தன் ஏவலால், அண்ணல் அம் கணத்தினோரை-பெருமை பொருந்திய அழகிய கணத்தலைவர்களை, மூழ்குவித்து - மூழ்கச்செய்து, அனாதியாய புண்ணிய இலிங்கம் தன்னுள்-அனாதியாயுள்ள அறவடிவான இலிங்கத்துள்ளே, புகுந்து இனிது இருந்தான்-போய் இனிமையாக வீற்றிருந்தான் எ - று.

இறைவன் 'அறவாழி யந்தணன்' ஆகலின் மேலாம் வேதியனாகி யென்றார். அம் : சாரியையுமாம். மன், ஓ : அசை. (கரு)

அந்தமா நீரா னந்தி யாதியோர் விதியாற் சோம
சுந்தரன் முடிமே லாட்டித் துகளறப் பூசை யாற்றிச்
சிந்தையில் விழைந்த வெல்லா மடைந்தனர் செம்பொற் கஞ்சம்
வந்தவா றிதுவத் தீர்த்த மகிமையு முரைப்பக் கேண்மின்.

(இ - ள்.) நந்தி ஆதியோர்-திருநந்தி தேவர் முதலான கணத்தலைவர்கள், அந்தமா நீரால்-அந்தச் சிறந்த திர்த்தத்தால், விதியால்-ஆகம முறைப்படி, சோமசுந்தரன் முடிமேல் ஆட்டி-சோமசுந்தரக் கடவுளின் திருமுடிமேல் அபிடேகித்து, துகள் அறப் பூசை ஆற்றி-குற்றமறப் பூசித்து, சிந்தையில்விழைந்த எல்லாம்அடைந்தனர்-மனத்தில் விரும்பியன எல்லாவற்றையும்பெற்றனர்; செம்பொன் கஞ்சம்-சிவந்த பொற்றாமரைத் திர்த்தமானது, வந்த ஆறு இது-தோன்றிய முறை இதுவாகும்; அத் திர்த்தம் மகிமையும் உரைப்பக் கேண்மின்-அத்திர்த்தத்தின் பெருமையையும் சொல்லக் கேளுங்கள் எ - று.

விழைந்த: வினைப்பெயர்; பெயரெச்சமுமாம். (கசா)

---

பா - ம்.) * தன்னனுச்சையாலே.

வளையெறி தரங்க ஞான வாவியை நோக்கிற் பாவத்
தளையறு மூழ்கின் வேண்டுங் காமிய மெல்லாஞ் சாரும்
உளமுற மூழ்கு மெல்லை முழுக்கொன்றற் குலகத் துள்ள
அளவறு தீர்த்த மெல்லா மாடிய பயன்வந் தெய்தும்.

(இ-ள்.) வளை எறி தரங்கம்-சங்குகளை வீசுகின்ற அலைகளையுடைய, ஞான வாவியை-ஞான தீர்த்தத்தை, நோக்கில்-தரிசித்தால், பாவத் தளை அறும்-பாவத்தொடக்கு நீங்கும்; மூழ்கின்-மூழ்கினால், வேண்டும் காமியம் எல்லாம் சாரும்-விரும்புகின்ற பொருள்களனைத்தும் வந்து கூடும்; உளம் உற மூழ்கும் எல்லை-மனம் பொருந்த மூழ்குங்கால், முழுக்கு ஒன்றற்கு-ஒவ்வொரு முழுக்கிற்கும், உலகத்து உள்ள-உலகங்களிலுள்ள, அளவு அறு தீர்த்தம் எல்லாம்-அளவிறந்த தீர்த்தங்கள் எல்லாவற்றினும், ஆடிய பயன் வந்து எய்தும்-ஆடிய தனால் வரும் பயன் வந்து பொருந்தும் எ-று.

காமியம்-விரும்பிய பொருள். மூழ்கு மெல்லை-மூழ்குமிடத்து. தீர்த்தமெல்லாவற்றிலும் என்க. (கஎ)

மெய்யைமண் ணாதி கொண்டு விதிவழி சுத்தி செய்து
மையறு வருண சூத்த* மந்திர நவின்று மூழ்கில்
துய்யமா தீர்த்த மெல்லாந் தோய்ந்துநான் மறையு மாய்ந்தோர்
கையிலெப் பொருளு மீந்த காசறு பேறு நல்கும்.

(இ-ள்.) மெய்யை மண் ஆதி கொண்டு-உடலைமண் முதலியவைகளைக் கொண்டு, விதிவழி-விதிப்படி, சுத்தி செய்து-தூயதாக்கி, மை அறு-குற்றமற்ற, வருண சூத்த மந்திரம் நவின்று மூழ்கில்-வருண சூக்த மந்திரத்தை உச்சரித்து நீராடில் (அது), துய்ய மா தீர்த்தம் எல்லாம் தோய்ந்து-புனிதமான பெருமைபொருந்திய தீர்த்தங்கள் எல்லாவற்றினும் மூழ்கி, நான்மறையும் ஆய்ந்தோர் கையில்-நான்கு வேதங்களையும் ஆராய்ந்துணர்ந்த மறையவர் கையில், எப்பொருளும் ஈந்த-(அவர்கள் விரும்பிய) பொருள் அனைத்தையும் தானஞ்செய்தலால் வரும், காசு அறு பேறு நல்கும்-குற்றமற்ற பயனை நல்கும் எ-று.

மண்ணாதியாவன:—ஒன்பது வகை மண்ணும், எழுவகைத் தளிரும், பஞ்ச கவ்வியமும் ஆம்; இதனை,

"அரசு கூவிளந் துழாய்புளி யால்சம்பு மூலம்
புரசை மால்கரிக் கூடமும் புரவிமந் திரமும்
கரிசி லானிரைத் தொழுவமுங் கல்வி நால் விதியின்
வரிசை யாலெடுத் திடப்படு மண்களொன் பதுமே"

"தளிர் துழாய்புளி சம்புகூ விளம்வட மரசு
விளரி லாவறு கென்பன விளம்புகவ் வியங்கள்
அளவில் சீர்தரு மங்கல மறிகபால் தயிர்நெய்
வளரி லாவிய கோசல மயமிவை யாகும்"

(பா-ம்.) * சூக்கம்.

எனவரும் திருவானைக்காப் புராணச் செய்யுட்களா லுணர்க. சூக்தம்-நன்ருகச் சொல்லப்பட்டது என்னும் பொருளது; இது தமிழில் சூத்தமெனவும், சூக்க மெனவும் திரியும். எப்பொருளும்-எல்லாப் பொருள்களும் ஈந்ததனுல் வரும் பேறு. (கஅ)

தெய்வவித் தீர்த்தந் தன்னை நினைவின்றித் தீண்டி னுலும்
அவ்விய வினையி னீந்தி யரும்பெறல் வீடு சேர்வர்
இவ்வுரை மெய்யே யாகு மென்னெனின் மனத்தா னன்றி
வெவ்வழ றீண்டி னுலுஞ் சுடுமன்றி விடுமோ வம்மா.

(இ - ள்.) தெய்வ இத்தீர்த்தம் தன்னை-தெய்வத்தன்மை பொருந்திய இத் தீர்த்தத்தை, நினைவு இன்றி தீண்டினுலும்-நினைப்பில்லாது தொட்டாலும், அவ்விய வினையின் நீந்தி-தீவினையினின்றுங் கடந்து, அரும் பெறல் வீடு சேர்வர் - பெறுதற்கரிய வீடு பேற்றை யடைவர்; இ உரை மெய்யே ஆகும் - இந்த வார்த்தை உண்மையே யாகும்; என் எனில் - எப்படி என்ருல், மனத்து ஆறு அன்றி - மனத்தின் வழியன்றி (நினைப்பில்லாமல்), தீண்டினுலும்-தொட்டாலும், வெவ் அழல் - கொடிய தீயானது, சுடும் அன்றி விடுமோ-சுடுமேயல்லாது விட்டு விடுமோ (விடாது) எ - று.

அவ்வியம் - அழுக்காறு, மனக்கோட்டம்; தீவினை அதனுற் செய்யப்படுதலின் 'அவ்விய வினை' என்ருர். ஒளவியமென்பதுபோலி யாயிற்று. பெறலரும் என்பது முன் பின்னுகத் தொக்கது. எவன் என்பது என்னென்ருயது. ஏ: தேற்றம். ஓ: எதிர்மறை. அம்மா: வியப்பிடைச்சொல். இஃது எடுத்துக் காட்டுவமை. (கக)

ஆருமந் நீரி லென்று மாடினுர் சீவன் முத்தி
சேருவ ரந்நீ ராடுஞ் சிறப்புறு பயனுக் கோவ்வா
வாருண மாக்கி னேய மந்திர மிவைமுன் னுன
பேருணர் வளிக்கு நானஞ் செய்தவர் பெறும்பே றெல்லாம்.

(இ - ள்.) ஆரும் அந்நீரில் என்றும் ஆடினுர்-நிறைந்த அத்தீர்த்தத்தில் எப்பொழுதும் மூழ்கியவர், சீவன் முத்தி சேருவர் - சீவன் முத்தியையடைவர்; அந்நீர் ஆடும்-அத்தீர்த்தத்தில் மூழ்குவதால் வருகின்ற, சிறப்புறு பயனுக்கு-சிறப்பையுடைய பயனுக்கு, வாருணம் - வருண நானமும், ஆக்கினேயம் - அங்கி நானமும், மந்திரம் - மந்திர நானமும், இவை முன் ஆன - இவை முதலான, பேர் உணர்வு அளிக்கும் - பெரிய ஞானத்தைக் கொடுக்கின்ற, நானம் செய்தவர்-நானம் செய்தவர், பெறும் பேறு எல்லாம் ஒவ்வா-அடையும் பயன் அனைத்தும் ஒப்பாகா எ - று.

ஆடினுர் ஆருமென்றுமாம். வாருணம் - நீரினியைபுடையது. ஆக்கினேயம்-அக்கினியி னியைபுடையது; நீறு. நானம்-ஸ்நானம்; திருமுழுக்கு. வாருண மந்திரம், ஆக்கினேய மந்திரம் எனக்கொள்ளுதல் பொருந்தாது. (உ0)

அன்னநீர் தனிலு மாடி யாலவா யுடைய நாதன்
தன்னையும் பணிவோன் மேலைப் பரகதி தன்னைச் சாரும்
என்னநன் னூலிற்* சொன்ன பவித்திர மெவைக்கு மேலாய்ப்
பன்னரும் புனித† மான பவித்திர மாகி நிற்கும்.

(இ - ள்.) அன்ன நீர் தனிலும் ஆடி - அந்தத் தீர்த்தத்திலும் நீராடி, ஆலவாய் உடைய நாதன் தன்னையும் பணிவோன் - திருவால வாயையுடைய சோம சுந்தரக் கடவுளையும் வணங்குவோன், மேலை - மறுமையில், பரகதி தன்னைச் சாரும் - மேலான வீடுபேற்றை யடைவன்; என்ன நல் நூலில் சொன்ன - எப்படிப்பட்ட நல்ல நூல்களில் எடுத்துக் கூறிய, பவித்திரம் எவைக்கும் மேலாய் - புனிதங்களனைத்திற்கும் சிறந்ததாய், பன் அரும் புனிதம் ஆன - சொல்லுதற்கரிய தூய்மையான, பவித்திரம் ஆகி நிற்கும் - புனிதவடிவாகி நிற்கும் (அத்தீர்த்தம்) எ - று.

மேலை - பரகதிக்கு அடையுமாம். பரகதி - பரமமுத்தி. தன்: சாரியை. எல்லா நூலினுமென்க. பவித்திரம் - தூய்மை. புனித தீர்த்தம் என்னும் பாடத்திற்கு, அத்தீர்த்தம் மேலாய் ஆகி நிற்கும் எனக் கூட்டிப் பொருளுரைக்க. (உக)

ஆதர விலனா யந்நீ ராடினோன் சுவர்க்கஞ் சேரும்
ஆதர வுளனாய் மூழ்கி வானவ ராதி யானோர்க்
காதர வரிசி யெள்ளுத் தருப்பண மமையச் செய்தோன்
ஆதர வேள்வி முற்று மாற்றிய பயனைச் சேரும்.

(இ - ள்.) ஆதரவு இலனாய் - அன்பு இல்லாதவனாய், அந்நீர் ஆடினோன் - அந்தத் தீர்த்தத்தில் நீராடியவன், சுவர்க்கம் சேரும் - சுவர்க்கத்தை யடைவன்; ஆதரவு உளனாய் - அன்பு உள்ளவனாய், மூழ்கி - நீராடி, வானவர் ஆதி ஆனோர்க்கு - தேவர் முதலானவர்க்கு, ஆதரவு - விருப்பத்துடன், அரிசி எள்ளு - அரிசியையும் எள்ளையுங் கொண்டு, தருப்பணம் அமையச் செய்தோன் - தருப்பணம் விதியோடு பொருந்தச் செய்தவன், ஆதரம் வேள்வி முற்றும் - விரும்பத் தக்க வேள்விகளனைத்தையும், ஆற்றிய பயனைச் சேரும் - செய்தலால் வரும் பயனை அடைவான் எ - று.

ஆதியானோர் என்றதனால் பிதிரர் முதலாயினார் கொள்க. (உஉ)

ஏனமா தலங்க டம்மி லிருந்துசெய் விரதம் பூசை
தானமா தரும மோமந் தவஞ்சேபந் தியானந் தம்மால்
ஆனமா பயனிற் கோடி யதிகமா மடைந்து மூழ்கி
ஞானமா தீர்த்த ஞாங்க ரிருந்தவை நயந்து செய்யின்.

(இ - ள்.) ஏனமா தலங்கள் தம்மில் இருந்து - பெருமை பொருந்திய மற்றைப் பதிகளிலிருந்து, செய் - செய்யும், விரதம் பூசை தானம் மா தருமம் ஓமம் தவம் செபம் தியானம் தம்மால் ஆன -

(பா - ம்.) * இன்ன நன்னூலில். † புனித தீர்த்தம்.

நோன்பு பூசை தானம் பெரிய தருமம் ஓமம் தவம் செபம் தியான மாகிய இவைகளினுலாகின்ற, மா பயனில் - பெரிய பயனிலும், ஞான மா தீர்த்தம் அடைந்து மூழ்கி-பெருமை பொருந்திய ஞான தீர்த்தத்திற் சென்று நீராடி, ஞாங்கர் இருந்து - (அதன்) கரையி லிருந்து, அவை நயந்து செய்யின்-அவற்றை விரும்பிச் செய்தால், கோடி அதிகம் ஆம் - (வரும் பயன்) கோடி மடங்கு அதிகமாகும் எ - று.

பயனிலும் செய்யின் அதிகமாம் என்க. கோடி யென்றது அள வின்மைக்கு ஓர் எடுத்துக் காட்டு. (உங)

பிறந்தநா ளங்நீர் மூழ்கின் மேலைவெம் பிறவிப் பௌவம்
மறிந்திடு மறிதேள் கும்ப மதிகளின் மூழ்கித் தென்பால்
உறைந்தவர் பொருட்டுப் பிண்ட முதவினு லவர்தா மாழ்ந்து
நிறைந்திடு பிறவிப் பௌவ நின்றுமே லெழுவ ரன்றே.

(இ - ள்.) பிறந்தநாள் அங்நீர் மூழ்கின்-பிறந்த நாளில் அந்தத் தீர்த்தத்தில் மூழ்கினல், மேலை வெம் பிறவிப் பௌவம் மறிந்திடும் - தொன்று தொட்டு வருகின்ற கொடிய பிறவிக்கடல் வற்றும்; மறி தேள் கும்பம் மதிகளின் மூழ்கி-சித்திரை கார்த்திகை மாசி மாதங் களில் மூழ்கி, தென்பால் உறைந்தவர் பொருட்டு - தென் திசையி லிருக்கும் பிதிரர்களின் பொருட்டு, பிண்டம் உதவினுல் - பிண்டங் கொடுத்தால், அவர் தாம் ஆழ்ந்து நிறைந்திடு - அப்பிதிரர்கள் தாம் ஆழ்ந்து அழுந்திய, பிறவிப் பௌவம் நின்று மேல் எழுவர்-பிறவிக் கடலினின்றும் மேலே எழுவார்கள் எ - று.

பிறந்தநாள்-ஜன்ம நட்சத்திரம். மறி-ஆடு; மேடம். தேள்-விருச் சிகம். மேடம், விருச்சிகம், கும்பம் இவ்விராசிகளில் ஆதித்தனிருக் குங் காலம் முறையே சித்திரை, கார்த்திகை, மாசி மாதங்களாம். மதி - மாதம். படைப்புக் காலத்து அயனுற் படைக்கப்பட்டதோர் தேவ சாதியாரும், தமது குடியில் முன்பு இறந்தோரும் பிதிரரெனப் படுவர்; இறந்தவர்களைக் குறித்து அத்தேவர்க்குக் கடன் செலுத்து வர். பிதிரருலகம் தெற்கிலுள்ளது. ஆழ்ந்து நிறைந்திடல் - மிக்க ஆழமுடைத்தாதல்; அளவிட முடியாமை. அன்று, ஏ: அசை. (உச)

அத்தட மருங்கின் யாவர் தென்புல மடைந்தோர் தங்கள்
சித்தமா சகற்ற வேண்டிச் செய்கடன் முடிக்கி னன்னோர்*
எத்தனை யெண்ணேர்ந்தாலு மெள்ளுக்கா யிரமாண் டாக
அத்தனை யாண்டு மட்டு மவரைவிண் ணுள வைப்பார்.

(இ - ள்.) தென் புலம் அடைந்தோர் யாவர்-தென் திசைக்கேகி னவர் யாவரோ, (அவர்) தங்கள்-அவர்களுடைய, சித்தம் மா சு - மன முதலிய வற்ருற் செய்த பாவத்தை, அகற்ற வேண்டி-நீக்க விரும்பி, செய்கடன்-செய்ய வேண்டிய கடமைகளை, அத்தடம் மருங்கின் முடிக் கின் - அத்தீர்த்தத்தின் கரையிலிருந்து முடித்தால், அன்னோர் - அம் முடிப்போர், எத்தனை எள் நேர்ந்தாலும்-(பிதிரர் பொருட்டு) எவ் வளவு எள்ளை ஈந்தாலும், எள்ளுக்கு ஆயிரம் ஆண்டாக - எள் ஒன்

(பா - ம்.) * முடிக்க வன்னேர்க்கு;

றுக்கு ஆயிரம் வருடமாக, அத்தனை ஆண்டு மட்டும்-அவ்வளவு வருடங்கள் வரையிலும், அவரை விண் ஆள வைப்பார்-அப்பிதிரர்களை தேவ உலகத்தை ஆளும்படி செய்வார்கள் எ - று.

அடைந்தோர் யாவரோ அவர் தங்கள் என்க. முடிக்க என்பது முடிக்கின் எனத் திரிந்ததென்னலு மொன்று. எண் எனப் பிரித்தலுமாம்; எண்-எள். எள்ளுக்கு-எள் ஒன்றுக்கு. மட்டு என்பது அளவென்னும் பொருளது. (உ௫)

மூவகை யுலகி லுள்ள தீர்த்தமு முறையா லென்றுஞ்
சேவகஞ் செய்யு மிந்தத் தீர்த்தமேன் நாளு மூழ்கி
ஏவரந் நீரா லென்று மீசனைப் பூசை செய்வோர்
ஆவரிப் பிறவி தன்னி லவர்கதிக் கரையைச் சார்வார்*

(இ - ள்.) மூவகை உலகில் உள்ள தீர்த்தமும்-மேல் கீழ் நடு என்னும் மூன்று உலகங்களிலுமுள்ள தீர்த்தங்களனைத்தும், முறையால்-முறைப்படி, என்றும்-எப்போதும், சேவகம் செய்யும் இந்தத் தீர்த்தம்-வணங்கிப் பணி செய்யப் பெற்ற இந்தத் தீர்த்தத்தின்கண், எந்நாளும் மூழ்கி-எந்த நாளிலும் நீராடி, ஏவர் என்றும் அந்நீரால்-எவர் எப்போதும் அந்த நீராலே, ஈசனைப் பூசை செய்வோர் ஆவர்-சோம சுந்தரக் கடவுளைப்பூசிக்கின்றவரோ, அவர் இப்பிறவிதன்னில்-அவர்கள் இந்தப் பிறவிலேயே, கதிக்கரையைச் சார்வார்-வீடாகிய கரையைச் சேருவார்கள் எ - று.

சேவகஞ் செய்தல்-பணிதல், தொண்டு செய்தல். செய்வோராவர் ஏவர் அவர் எனக் கூட்டுக. ஆவர்: முதல் வேற்றுமைக்கண் வருஞ்சொல். பிறவிக் கடலை நீந்தி வீடாகிய கரையைச்சேர்வரென்க. கதிக்கரசராவார் என்னும் பாடத்திற்குவீட்டுலகத்திற்குஅரசாவார் என்று பொருள் கூறிக் கொள்க. (உ௬)

விடுத்திட லரிய நித்த வேள்விமா விரதம் வேதந்
தடுத்திட லரிய தானந் தவமிவை தரும்பே றெல்லாம்
அடுத்ததன் கரையில் வைகி யீசனை யருச்சிப் போர்க்குக்
கொடுத்திடு புண்ணியத்திற் கோடியி லொன்றுக் கொவ்வா.

(இ - ள்.) விடுத்திடல் அரிய-நீக்குதல் கூடாத, நித்த வேள்வி-நித்திய வேள்வியும், மாவிரதம்-பெரிய விரதமும், வேதம்-வேதம் ஓதுதலும், தடுத்திடல் அரிய தானம்-தடையில்லாத தானமும், தவம்-தவமுமாகிய, இவை தரும் பேறு எல்லாம்-இவைகள் கொடுக்கின்ற பயன்களனைத்தும், அதன் கரையில் அடுத்து வைகி-அதன் கரையிற் சென்று இருந்து, ஈசனை அருச்சிப்போர்க்கு - இறைவனை வழிபடுவோருக்கு, கொடுத்திடு புண்ணியத்தில்-தானங் கொடுக்கிற புண்ணியத்தில், கோடியில் ஒன்றுக்கு ஒவ்வா-கோடியில் ஒன்றுக்கேனும் ஒப்பாகா எ - று.

விடுத்திடல் அரிய-கைவிடுதல் கூடாத. நித்த வேள்வி-பஞ்சயக்ஞம்; அக்கினி காரியமும் என்ப. தடுத்திடல்-செய்யாது தவிர்த்-

(பா - ம்) *கதிக்கரசராவார்.

தல். ஒன்றுக்கு-ஒரு கூறுகிய புண்ணியத்திற்கும்: உம்மை தொக்கது. (உஎ)

உம்மையிற் பிறவி தோறு நியமநல் லொழுக்கம் பூண்டு
பொய்ம்மையில் விரதந் தானந் தவஞ்செய்து புனித ராகிச்
செம்மைநன் னெறியி னின்ற சித்தருக் கலதித் தீர்த்தம்
இம்மையி லடைந்து நித்த மாடுதற் கெய்தா தன்றே.

(இ - ள்.) உம்மையில் பிறவிதோறும்-முன்னெடுத்த பிறப்புக்கள் ஒவ்வொன்றிலும், நியமம்நல் ஒழுக்கம்பூண்டு-நியமமாக நல்லொழுக்கத்தை மேற்கொண்டு, பொய்ம்மை இல்-பொய் இல்லாத, விரதம் தானம் தவம் செய்து-விரதம் தானம் தவங்களைச் செய்து, புனிதர் ஆகி-தூயரநாகி, செம்மைநல் நெறியில் நின்ற-நடு நிலைமையாகிய நல் வழியில் நிலைபெற்ற, சித்தருக்கு அலது-சித்த முடையாருக்கன்றி (ஏனையோர்க்கு), இத்தீர்த்தம்-இந்தத் தீர்த்தமானது, இம்மையில் அடைந்து-இப்பிறவியில்சென்று, நித்தம் ஆடுதற்குஎய்தாது-தினமும் ஆடுதற்குக் கிட்டாது எ - று.

உம்மையில் - முற்பிறவிகளில். செம்மை-சிறப்புமாம். சித்தர்-மனமுடையார்; செய்யப்படுவன செய்து முடித்தவருமாம். சித்தருக்கு எய்துவதன்றி ஏனையருக்கு எய்தா தென்க. நித்தம்-நாடோறும். அன்று, ஏ : அசை. (உஅ)

மதிகதிரோ னிடத்தொடுங்கு தினந்திங்கட்
　　பிறப்பரவம் வாயங் காந்து
கதிர்கடமை விழுங்குதினம் விதிபாத
　　மிந்நாளிற் கருதி மூழ்கித்
துதிகடருப் பணந்தானம் புரிதன்மனு
　　வோதுதலத் தொகையோன் றற்கோன்
றதிகபல னம்முறைநா றாயிரநா
　　றாயிரமோ ரனந்த மாகும்.

(இ - ள்.) மதி கதிரோன் இடத்து ஒடுங்கு தினம்-சந்திரன் சூரியனிடத்தில் ஒடுங்குகின்ற அமாவாசையும், திங்கள் பிறப்பு-மாதப் பிறப்பும், அரவம் வாய் அங்காந்து-இராகு கேதுக்கள் வாயைத் திறந்து, கதிர்கள் தமை விழுங்கு தினம்-சந்திர சூரியர்களை விழுங்குகின்ற நாளும், விதிபாதம்-விதி பாதமுமாகிய, இந்நாளில்-இந்த நாட்களில், கருதிமூழ்கி-பயனை எண்ணிநீராடி, துதிகள்தருப்பணம்தானம் புரிதல்-துதிகளும் தருப்பணமும் தானமும் செய்தலும், மனு ஓதுதல் - சமந்திரம் செபித்தலுமாகிய, அத்தொகை-அவை நான்கும், அம்முறை-அந்நாட்களின் முறையே, நூறு ஆயிரம் நூறாயிரம் ஓர் அனந்தம்-நூறும் ஆயிரமும் நூறாயிரமும் அளவில்லாதனவும் ஆக, ஒன்றற்கு ஒன்று-ஒன்றைக் காட்டிலும் ஒன்று, அதிக பலன் ஆகும்-மிக்க பலன் உடையனவாகும் எ - று.

விழுங்கு தினம்-கிரகண நாள். விதிபாதம்-மாதந்தோறும் வரும் யோகங்களிலொன்று. அத்தொகை-அவை. அம்முறை அதிக பலன் ஆகும் என்றது நாடோறுஞ் செய்தலினும் அமாவாசையிற் செய்தல் நூறு மடங்கும், மாதப்பிறப்பிற் செய்தல் ஆயிரமடங்கும், கிரகண நாளிற் செய்தல் நாறுயிரமடங்கும், விதிபாதநாளிற் செய்தல் அளவின்றியும் மிக்க பலனுடையவாகும் என்றவாறு. ஒன்றற் கொன்று-ஒன்றின்னென்று. (உக)

பொருவரிய தகர்த்திங்க டுலாத்திங்க
ளிவையுதிக்கும் போது மூழ்கின்
ஒருபதினு யிரமடங்காஞ் சுறவுகவைத்
தாளலவ னுதிப்பின் மூழ்கின்
இருபதினு யிரமடங்கா மிந்திரவி
யிடத்தோடுங்கு மிந்து வாரம்
வருவதறிந் தாடிமனு வோதன்முதல்
செயினனந்த மடங்குண் டாகும்.

(இ-ள்) பொருவு அரிய-ஒப்பில்லாத, தகர்த் திங்கள்-சித்திரை மாதமும், துலாத் திங்கள் இவை-ஐப்பசி மாதமுமாகிய இவைகள், உதிக்கும் போது மூழ்கின்-பிறக்கு நாழிகையில் மூழ்கினல், ஒரு பதினுயிரம் மடங்கு ஆம்-பதினுயிரமடங்கு பலன் ஆகும்; சுறவு-தை மாதமும், கவைத்தாள் அலவன்-பிளவுபட்ட காலையுடைய கற்கடகமாகிய ஆடி மாதமுமாகிய இவைகள், உதிப்பின் மூழ்கின்-பிறக்கு நேரத்தில் மூழ்கினல், இருபதினுயிரம் மடங்கு ஆம்-இருபதினுயிர மடங்கு பலன் ஆகும்; இந்து இரவி இடத்து ஒடுங்கு-சந்திரன் சூரியனிடத் தொடுங்குகின்ற,இந்து வாரம் வருவதுஅறிந்து-திங்கட்கிழமை வருவதை உணர்ந்து, ஆடி மனு ஓதல் முதல் செயின்-நீராடி மந்திரஞ் செபித்தல் முதலியவற்றைச் செய்தால், அனந்த மடங்கு உண்டாகும்-அளவற்ற பலன் உண்டாகும் எ-று.

தகர்-மேடம். சுறவு-மகரம். அலவன்-கடகம். சித்திரை, ஐப்பசி; தை, ஆடி: என்னும் மாதங்கள் பிறக்கும் பொழுதும், அமாவாசையுடன் கூடிய திங்கட்கிழமையும்கூறப்பட்டன.சுறவு, அலவன் என்பன அத்திங்களைக் குறிப்பன. உதிப்பின்-உதித்தற்கண். அலவன் என்னும் பெயர் நோக்கிக் கவைத்தாள் என அடை கொடுத்தார்.(௬௦)

பிரயாகை தனின்மகா மதிநாண்முப்
பதுங்குடைந்து பெறும்பே றிந்தத்
திரையார்பைந் தடத்தொருநாண் மூழ்குவோன்
பெறும்விரத சீலம் பூண்டு
வரையாம லொருவருடம் படிந்துமையை
யமரர்சிகா மணியாம் வேத
உரையானை வழிபடுமேன் மலடிக்கும்
நன்மகப்பே றுண்டா மன்னே.

(இ - ள்.) பிரயாகைதனில்-பிரயாகையில், மகரமதி-தைமாதத்தில், முப்பது நாளும் குடைந்து - முப்பது நாளும் மூழ்கி, பெறும் பேறு-அடையும் பயனை, இந்தத் திரை ஆர் பைந் தடத்து-இந்த அலைகளையுடைய பசிய தீர்த்தத்தில், ஒரு நாள் மூழ்குவோன் பெறும்-ஒரு நாள் மூழ்குவோன் அடைவான்; விரத சிலம் பூண்டு - விரத ஒழுக்கத்தை மேற்கொண்டு, வரையாமல்-தவருமல், ஒருவருடம் படிந்து - ஓராண்டு மூழ்கி, உமையை-அங்கயற் கண்ணியையும், அமரர் சிகாமணி ஆம்-தேவர்கள் சூளாமணியாகிய, வேத உரையானை-வேதமாகிய திருவாக்கையுடைய சோமசுந்தரக் கடவுளையும், வழிபடுமேல்-வழிபடுவாளானுல், மலடிக்கும் நன் மகப்பேறு உண்டாம் - மலடிக்கும் அறிவறிந்த மக்கட் பேறு உண்டாம் எ - று.

பிரயாகை - திரிவேணிசங்கமம். முப்பது என்றது வழக்குப் பற்றி; சாந்திரமானத்தால் எனினுமாம். விரதமும் சிலமு மென்னலுமாம். வரைதல்-நீக்கல்; தவிர்தல். உமையையும் உரையானையும் என உம்மை விரிக்க. மலடிக்கும் என்னும் உம்மை இழிவு சிறப்பு. மன், ஓ: அசை. (௩க)

எண்டிசைய நதிவாவி வடிவான
　　மாதீர்த்த மேல்லா மிப்போற்
புண்டரிகத் தடத்திலோரு கோடியிலோர்
　　கூறுநிகர் போதா வீது
கண்டதனு லறந்தீண்டப் பேற்றதனு
　　னற்போருளங் கையா லள்ளிக்
கோண்டதனு லின்பநலம் குடைந்ததனுற்
　　பேரின்பங் கோடுக்கு மன்றே.

(இ - ள்.) எண் திசைய-எட்டுத் திக்குகளிலுமுள்ள, நதிவாவி வடிவு ஆன-நதிவடிவும் தடாக வடிவுமான, மா தீர்த்தம் எல்லாம் - பெரிய தீர்த்தங்களிலாடிய பயன் அனைத்தும், இப்பொன் புண்டரிகத் தடத்தில் ஒரு கோடியில்-இந்தப் பொற்ருமரையில் ஆடிய பயன் ஒரு கோடியில், ஓர் கூறு நிகர் போதா-ஒரு கூற்றுக்கும் ஒப்பாகக் கூறப் போதாதன, ஈது-இந்தத் தீர்த்தமானது, கண்டதனுல் அறம் - தரிசித்தலால் அறத்தையும், தீண்டப் பெற்றதனுல் நல்பொருள்-தொடப் பெற்றதனுல் நல்ல பொருளையும், அம் கையால் அள்ளிக் கொண்டதனுல் இன்ப நலம்-அகங்கையால் அள்ளிக் கொண்டதனுல் இன்பமாகிய நலத்தையும், குடைந்ததனுல் பேர் இன்பம் கொடுக்கும்-மூழ்கியதனுல் பேரின்பமாகிய வீட்டையுங் கொடுக்கும் எ-று.

தீர்த்தம், தடம் என்பன பயனுக்காயின. நிகர் போதா: ஒரு சொல்லுமாம்; ஒப்பாகா என்றபடி. உறுதிப் பொருள் நான்கனையுந் தரும் என்ருர். தீண்டு நீண்டது. கண்டது முதலியன தொழிற் பெயர்கள். அன்று, ஏ: அசை. (௩உ)

முன்னவ னருளிச் செய்த காரண முறையா லன்றி
இன்னமிப் புனித வாவிக் கேதுவா லெய்து நாமம்
மின்னவிர் சடையான் சென்னி மேவிய கங்கை நீரிற்
பின்னது கலந்த நீராற் பெருஞ்சிவ கங்கை யென்றும்.

(இ - ள்.) முன்னவன் அருளிச் செய்த காரண முறையால் அன்றி - இறைவனருளிச் செய்த காரண முறையால் வந்த பெயர்களே அல்லாமல், இன்னம்-இன்னமும், இப்புனித வாவிக்கு-இந்தத் தூய பொய்கைக்கு, ஏதுவால் எய்தும் நாமம் - காரணத்தால் வரும் பெயர். மின் அவிர் சடையான் - மின் போலும் விளங்குகின்ற சடையையுடைய இறைவனது, சென்னி மேவிய கங்கை நீரில் - திருமுடியிற் பொருந்திய கங்கையின் புனலில், பின் அது கலந்த நீரால் - பின்பு அது கலந்த தன்மையால், சிவகங்கை என்றும் பெறும் - சிவகங்கை எனவும் பெறும் எ - று.

நாமம் சிவகங்கை யென்றுஞ் சொல்லப்பெறும் என்க. கலந்த நீர்-கலந்த தன்மை. (கங)

அலகிலாத் தீர்த்தந் தம்மு ளதிகவுத் தமமாய்த் தோன்றி
இலகலா லிதனைத் தீர்த்த வுத்தம மென்ப ராய்ந்தோர்
பலவிதழ் விரித்துச் செம்போற் பங்கய மலர்ந்த நீரால்
உலகவர் யாரும் பொற்று மரையென வுரைப்ப ரன்றே.

(இ - ள்.) அலகு இலா-அளவில்லாத, தீர்த்தம் தம்முள்-தீர்த்தங்களுக்குள், அதிக உத்தமம் ஆய்த் தோன்றி இலகலால் - மேலான உத்தமமாய்க் காணப்பட்டு விளங்குதலால், இதனை-இத்தீர்த்தத்தை, ஆய்ந்தோர்-நூலாராய்ந்தோர், பல இதழ் விரித்து - பல இதழ்களையும் விரித்து, செம்பொன் பங்கயம் மலர்ந்த நீரால்-சிவந்த பொற்றாமரை மலர்ந்த தன்மையினால், உலகவர் யாரும்-உலகத்தார் எவரும், பொற்றாமரை என உரைப்பர் - பொற்றாமரை யெனக் கூறுவர் எ - று.

மேற் பாட்டிலுள்ள எய்து நாமம் என்பதனைக் கூட்டி, எய்து நாமம் உத்தம தீர்த்தமென்பர் என முடிக்க; பின்னுள்ள பெயர்களோடும் இங்ஙனமே கூட்டி முடிக்க. அன்று, ஏ: அசை. (கச)

தருமமுன் னாகு நான்குந் தருதலாற் றரும தீர்த்தம்
அருமைசா லருத்த தீர்த்த மரும்பெறற் காம தீர்த்தம்
இருமைசேர் முத்தி தீர்த்த மென்பதா மினைய தீர்த்தம்
வெருவரு பாவ மென்னும் விறகினுக் கெரியா மன்றே.

(இ - ள்.) தருமம் முன் ஆகும் நான்கும் தருதலால் - தரும முதலாகிய நான்கையும் நல்குவதனாலே, தரும தீர்த்தம்-தரும தீர்த்தம்; அருமைசால் அருத்த தீர்த்தம் - அருமை மிகுந்த அருத்த தீர்த்தம், அரும்பெறல் காம தீர்த்தம் - பெறுதற்கரிய காம தீர்த்தம், இருமை சேர் முத்தி தீர்த்தம் என்பதாம் - பெருமை பொருந்திய முத்தி தீர்த்

தம் என்று கூறப்படுவதாம்; இனைய தீர்த்தம்-இந்தத் தீர்த்தமானது, வெருவரு-அச்சம் பொருந்துகின்ற. பாவம் என்னும் விறகினுக்கு எரியாம் - பாவ மென்கின்ற விறகுக்குத் தீயாகும் எ - று.

நான்கில் ஒவ்வொன்றால் இப்பெயர்கள் கூறப்படு மென்க.முத்தி தீர்த்த மென்னும் பெயர் முன்னர்ப் போந்த தெனினும் உறுதிப் பொருள் நான்கும் பயத்தல் கூறுமுறைபற்றி ஈண்டுங் கூறினர். இருமை-பெருமை. வெரு: முதனிலைத் தொழிற்பெயர்; வெருவுதல் வருகின்ற. தீர்த்தம் எரியாம் என்பதின் நயங் காண்க. அன்று, ஏ: அசை. (௩௫)

இவ்வருந் தலத்தி னுன்ற பெருமையு மெரிகால் செம்போற்
றெய்வத பதும தீர்த்தப் பெருமையுஞ் செப்பக் கேட்டோர்
எவ்வமில் போகம் வீடு பெறுவரென் றிசைத்தான் முந்நீர்ப்
பௌவமுண் டமரர் வேந்தன் பரிபவ விழுமந் தீர்த்தோன்.

(இ - ள்.) முந்நீர்ப் பௌவம் உண்டு - மூன்று நீரையுடைய கடலைக்குடித்து, அமரர் வேந்தன்-தேவேந்திரனுடைய, பரிபவ விழுமம் தீர்த்தோன் - தோல்வியால் வருந் துன்பத்தை நீக்கியவனாகிய அகத்தியமுனிவன், இ அருந்தலத்தின் ஆன்ற பெருமையும்-இந்த அரிய தலத்தின் நிறைந்த பெருமையும், எரி கால் - ஒளி வீசுகின்ற, செம்பொன் பதும தெய்வத் தீர்த்தப் பெருமையும் - சிவந்த பொற்றாமரை யாகிய தெய்வத்தன்மை பொருந்திய தீர்த்தத்தின் பெருமையும் ஆகிய இவைகளை, செப்பக் கேட்டோர்-ஒருவர் சொல்லக் கேட்டவர்கள், எவ்வம் இல் போகம் வீடு பெறுவர் என்று இசைத்தான் - துன்பமில்லாத போகத்தையும் வீட்டையும் அடைவார்கள் என்று கூறினான் எ - று.

எரி - நெருப்பு; ஒளிக்காயிற்று. தெய்வதம்: தகரம் விரித்தல், போகமும் வீடும் என்னும் உம்மை தொக்கன. பரிபவம்-இழிவு. விழுமம் - துன்பம். (௩௬)

ஆகச் செய்யுள் —உகo.

---

## மூர்த்திவிசேடப் படலம்

ஆலவா யலர்ந்த* செம்போ னம்புயப் பெருந்தீர்த் தத்தின்
மேலவாம் பெருமை தன்னை விளம்புவா ரெவரே யங்கண்
நீலமா மிடற்று முக்க ணிராமய னறிவா னந்த
மூலமா விலிங்க மேன்மை முறையினு லறைய லுற்றும்.

(இ-ள்) ஆலவாய் - திருவாலவாயின்கண், அலர்ந்த-மலர்ந்த, செம்பொன் அம்புயம்-சிவந்த பொற்றாமரையாகிய, பெருந் தீர்த்தத்தின்-பெருமை பொருந்திய தீர்த்தத்தின், மேல் அவாம்-விண்ணுலகத்தாரும் விரும்புகின்ற, பெருமை தன்னை - பெருமையை, விளம்புவார் எவரே-கூறுவார் யாரே; அங்கண்-அவ்விடத்து, நீலம் மா மிடற்று-மிக்க கருமையுடைய கண்டத்தினையும், முக்கண்-மூன்று கண்களையுமுடைய, நிராமயன்-சோமசுந்தரக் கடவுளாகிய, அறிவு ஆனந்தம்-ஞானனந்த வடிவான, மூலம் மா இலிங்கம்-பெருமை பொருந்திய மூல விலிங்கத்தின், மேன்மை-பெருமையை, முறையினுல் அறையல் உற்றும்-முறைப்படி சொல்லுதலுற்றேம் எ - று.

விளம்புவா ரெவரே யென்றது யாமும் இவ்வளவில் அமைதும் என்றபடி. நீலம் மா: ஒருபொருளிருசொல்; மா பெருமையுமாம். நிராமயன்-நோயில்லாதவன், ஆமயம்-நோய். நிராமயனுகிய இலிங்க மூர்த்தி யென்க. (க)

போன்னெடு மேரு வெள்ளிப் போருப்புமந் தரங்கே தாரம்
வன்னெடும் புரிசை சூழ்ந்த வாரண வாசி யாதிப்
பன்னருந் தலங்க டம்மிற் பராபர விலிங்கந் தோன்றும்
முன்னரிக் கடம்பின் மாடே முளைத்ததிச் சைவ லிங்கம்.

(இ-ள்.) பொன் நெடு மேரு-பொன்னுகிய நெடிய மேருமலையும், வெள்ளிப் பொருப்பு-கைலைமலையும், மந்தரம்-மந்தரமலையும், கேதாரம் - திருக்கேதாரமும், வல்நெடும் புரிசை சூழ்ந்த-வலிய நெடிய மதில் சூழ்ந்த, வாரண வாசி-காசியும், ஆதி-முதலாகவுள்ள, பன் அரும் தலங்கள் தம்மில்-சொல்லுதற்கரிய திருப்பதிகளின் கண், பராபர இலிங்கம் தோன்று முன்னர்-சிவலிங்கம் தோன்றுவதற்கு முன்பே, இக்கடம்பின் மாடே-இக்கடம்ப மரத்தினடியில், இச்சைவ லிங்கம் முளைத்தது-இந்தச் சிவலிங்கம் தோன்றியருளியது எ - று.

பராபரன் என்பதில் னகர வொற்றுக் கெட்டது; பரமும் அபரமுமானவன்; பரைக்கு நாயகன் என்றுங் கூறுவர். சிவன் சைவனெனப் படுதலைச் 'சைவா போற்றி' என்பதனு னறிக. (உ)

அப்பதி யிலிங்க மெல்லா மருட்குறி யிதனிற் பின்பு
கப்புவிட் டெழுந்த விந்தக் காரண மிரண்டி னுலும்
ஒப்பரி தான ஞான வொளிதிரண் டன்ன† விந்தத்
திப்பிய விலிங்க மூல விலிங்கமாய்ச் சிறக்கு மன்னே.

---

(பா - ம்.) * ஆலவாயமர்ந்த. † திரண்டான,

(இ-ள்.) அப்பதி இலிங்கம் எல்லாம்-(மகாமேரு முதலிய) அந்தத் திருப்பதிகளிலுள்ள இலிங்கங்கள் அனைத்தும், அருள் குறி இதனில்-அருட்குறியாகிய இச்சிவலிங்கத்தினின்றும், பின்பு கப்பு விட்டு எழுந்த-இது தோன்றியபின் கிளைத்துத் தோன்றின; இந்தக் காரணம் இரண்டினாலும்-இந்த இரண்டு ஏதுக்களாலும், ஒப்பு அரிதான-ஒப்பில்லாத, ஞான ஒளி திரண்டு அன்ன-ஞானவொளி திரண்டாற்போன்ற, இந்தத் திப்பிய இலிங்கம்-இந்தத் திவ்விய இலிங்கமானது, மூல இலிங்கமாய்ச் சிறக்கும்-மூல லிங்கமாகச் சிறந்து விளங்கும் எ - று.

கப்பு: கவர்ப்பு என்பதன் மரூஉ. எழுந்த: அன் பெறாத பலவின்பால் முற்று. மேற் செய்யுளிற் கூறியதனையுஞ் சேர்த்துக் காரணம் இரண்டென்றார். திரண்டாலன்ன வென்பது விகாரமாயிற்று. மன்னும் ஓவும் அசை. (௩)

இந்தமா விலிங்கத் தெண்ணான் கிலக்கண விச்சை மேனி
அந்தமி லழகன் பாகத் துமையோடு மழகு செய்து
சந்ததம் விளக்கஞ் செய்யுந் தகைமையை நோக்கிச் சோம
சுந்தர னென்று நாமஞ் சாத்தினார்* துறக்க வாணர்.

(இ - ள்.) இந்தமா இலிங்கத்து-இந்தப் பெருமை பொருந்திய இலிங்கத்தின்கண், எண் நான்கு இலக்கணம்-முப்பத்திரண்டு இலக்கணங்களையுடைய, விச்சை மேனி-ஞானவடிவாகிய, அந்தம் இல் அழகன்-முடிவில்லாத அழகினையுடைய இறைவன், பாகத்து உமையோடும்-ஒரு பாகத்தில் உமையம்மையோடும், அழகு செய்து-அழகினைச் செய்து, சந்ததம்-எப்போதும், விளக்கம் செய்யும்-அருள் பாலிக்கின்ற, தகைமையை நோக்கி-தன்மையைக் கண்டு, துறக்க வாணர்-தேவர்கள், சோமசுந்தரன் என்று நாமம் சாத்தினார்-சோம சுந்தரன் என்று பெயர் கூறினார்கள் எ - று.

புருடவுடம்பிலக்கணம்முப்பத்திரண்டென்பதுகருதிக் கூறினார். விச்சை-ஞானம். விளக்கஞ் செய்தல்-அருளால் உலகை விளங்கச் செய்தல். சோம சுந்தரன்-உமையுடன் கூடிய அழகினையுடையான். சாத்துதல்-சார்த்துதல். (௪)

திறப்படு முலக மெங்கும் வியாபியாய்ச் சிறந்து நிற்கும்
அறப்பெருங் கடவுள் சோம சுந்தர னதனா லன்றோ
கறைக்கதிர் வடிவேற் றென்னன் கையிற்பொற் பிரம்பு பட்ட
புறத்தடித் தழும்பு மூன்று புவனமும் பட்ட தன்றே.

(இ - ள்.) திறப்படும்-பலவகையாயுள்ள, உலகம் எங்கும்-உலகங்களனைத்தும், வியாபியாய்ச் சிறந்து நிற்கும்-வியாபியாகச் சிறந்து நிலைபெற்ற, அறப்பெருங் கடவுள்-அறவடிவாகிய பெரிய இறைவன், சோம சுந்தரன்-சோமசுந்தரக் கடவுளாம்; அதனால் அன்றோ-அதனாலல்லவா, கறை-குருதிக் கறையையுடைய, கதிர்-ஒளி பொருந்திய, வடி-கூர்மையான, வேல் - வேற்படையையுடைய,

(பா - ம்.) * சாற்றினார்.

தென்னன் கையில்-பாண்டி மன்னன் கையிலுள்ள, பொன் பிரம்பு-பொற் கட்டினையுடைய பிரம்பினாலே, புறத்துப்பட்ட-முதுகிற்பட்ட, அடித்தழும்பு - அடியின்சுவடானது, மூன்று புவனமும் பட்டது-மூன்றுலகங்களிலுமுள்ள சராசரங்களிலும் பட்டது எ-று.

திறம்-வகை. வியாபித்தல்-கலத்தல். அதனாலன்றோ பட்டது என்க; இரண்டு எதிர்மறை ஒருடன்பாடாயின. அன்று ஏ: அசை; அன்று-அந்நாளில் எனினுமாம். இறைவன் சருவ வியாபி என்பதற்கு ஓர் எடுத்துக் காட்டுக் கூறினார். இவ்வரலாற்றை இப்புராணத்து மண்சுமந்த படலத்திற் காண்க. (ரு)

சோற்றவிச் சமட்டி யான சோமசுந் தரனைக் காணப்
பெற்றவர் வியட்டி யான பிறபதி யிலிங்கங் காணல்
உற்றவ ராவ ரென்னென் றுரைக்கின்வே ரூட்டு நீர்போய்
மற்றைய சினைக ளெல்லாந் தழைவிக்கு மரத்தின் மாதோ.

(இ - ள்.) சொற்ற இச் சமட்டி ஆன-சொல்லிய இந்தச் சமட்டி உருவாகிய, சோம சுந்தரனைக் காணப் பெற்றவர்-சோம சுந்தரக் கடவுளைக் காணப் பெற்றவர், வியட்டி ஆன-வியட்டி உருவாகிய,பிற பதி-பிற திருப்பதிகளிலுள்ள, இலிங்கம் காணல் உற்றவர் ஆவர்-இலிங்கங்களையும் காணப் பெற்றவராவர்; என் என்று உரைக்கின்-எப்படி என்று வினவில், வேர் ஊட்டும் நீர்-வேரை உண்பித்த நீரானது, போய்-சென்று, மரத்தின்-மரத்திலுள்ள, மற்றைய சினைகள் எல்லாம்தழைவிக்கும்-பிறஉறுப்புக்களையெல்லாம்தழையச்செய்யும் (அது போலவென உணர்க) எ - று.

சமட்டியான-சூக்குமமாய் எல்லாமான. வியட்டியான-தூலமாய் வெவ்வேறான. காரணம் என்னென்று வினவிலென்க. சில சொற்கள் வருவித்து முடிக்கப்பட்டது. மாது ஓ : அசை. (சு)

எத்தலத் தியாவ னேண்ணேண் டிருவிளை யாடல் செய்தான்
அத்தலத் தவனுக் கொப்பு மதிகமாஞ் சிறப்பும் பெற்ற
உத்தம னென்று மேந்த வுலகிலு* மில்லை யந்த
வித்தக னதிகத் தன்மை யெனைத்தெனின் விளம்பக் கேண்மின்.

(இ - ள்.) எத்தலத்து-எந்தப்பதியில், யாவன்-எந்தக் கடவுள், எண் எண் திருவிளையாடல் செய்தான்-அறுபத்து நான்கு திருவிளையாடல்களைச் செய்தருளினானோ, அத்தலத்து-அந்த மதுரைப்பதியில் உள்ள, அவனுக்கு-அந்தச்சோமசுந்தரக் கடவுளுக்கு, ஒப்பும் அதிகம் ஆம் சிறப்பும்பெற்ற-ஒப்புத்தன்மையும்உயர்வாகியசிறப்புத்தன்மையும் அடைந்த, உத்தமன்-கடவுள், என்றும் எந்த உலகிலும் இல்லை-எந்தக் காலத்திலும் எந்த உலகத்திலுமில்லை; அந்த வித்தகன்-அந்த ஞான வடிவினனுடைய, அதிகத்தன்மை,-சிறப்புத்தன்மை, எனைத்து எனின்-எத்தன்மையது என்றால், விளம்பக் கேண்மின் சொல்லக் கேளுங்கள் எ - று.

செய்தான் யாவன் அவனுக்கு என்க : குற்றிய லிகரம், (எ)

(பா - ம்.) * எல்லாவுலகிலும்.

பொருப்பினுட் டலைமை யெய்தும் பொன்னெடுங் குடுமி மேரு
தருக்களிற் றலைமை சாருந் தண்ணறுந் தெய்வ தாரு
விருப்புறு வேள்வி தம்முண் மேம்படும் புரவி மேதம்
அருட்படு தானந் தம்முள் விழுமிதா மன்ன தானம்.

(இ-ள்.) நெடுங்குடுமி-நீண்ட சிகரங்களையுடைய, பொன்மேரு-பொன்னாகிய மேருமலையானது, பொருப்பினுள் தலைமை எய்தும்-மலைகளுக்குள் முதன்மையுறும்; தண்நறுந் தெய்வதாரு-குளிர்ந்த நறிய கற்பகத்தரு, தருக்களில் தலைமை சாரும்-மரங்களுள் முதன்மையெய்தும்; விருப்பு உறு-விருப்ப மிகுகின்ற, வேள்வி தம்முள்-வேள்விகளுள், புரவி மேதம் மேம்படும்-பரி வேள்வி உயர்வாகும்; அருள்படு தானம் தம்முள்-அருளோடு கூடிய தானங்களுள், அன்னதானம் விழுமிது ஆம்-அன்னதானம் சிறந்ததாகும் எ - று. (அ)

மனிதரி லுயர்ந்தோ ராதி மறையவர் தேவர் தம்மிற்
பனிதரு திங்கள் வேணிப் பகவனே யுயர்ந்தோன் வேட்டோர்க்
கினிதருள் விரதந் தம்மு ளதிகமா மிந்து வாரம்
புனிதமந் திரங்க டம்முட் போதவைந் தெழுத்து மேலாம்.

(இ - ள்.) மனிதரில் ஆதி மறையவர் உயர்ந்தோர்-மக்களுள் முதன்மையான மறையவர் மேலோராவர்; தேவர் தம்மில்-தேவர்களுள், பனிதரு திங்கள் வேணி-குளிர்ந்த சந்திரனை யணிந்த சடையையுடைய, பகவனே உயர்ந்தோன் - சிவபெருமானே உயர்ந்தவன்; வேட்டோர்க்கு - விரும்பினவர்களுக்கு, இனிது அருள்-நலத்தைச் செய்கின்ற, விரதம் தம்முள்-விரதங்களுள், இந்து வாரம் அதிகம் ஆம் - சோமவார விரதம் சிறந்தது ஆகும்; புனித மந்திரங்கள் தம்முள்-தூய மந்திரங்களுள், போத ஐந்து எழுத்து மேலாம்-ஞானத்திற்கு ஏதுவாகிய திருவைந்தெழுத்தாகிய மந்திரம் மேன்மையுடையதாகும் எ - று.

திருவைந் தெழுத்தின் முதன்மையை,

"மந்திர நான்மறை யாகி வானவர்
சிந்தையு ணின்றவர் தம்மை யாள்வன"

என்னும் திருநெறித் தமிழ் மறையா னறிக. (கூ)

மின்மைசான் மணியிற் சிந்தா மணிவரம் விழுப்ப நல்கும்
தன்மைசா லறங்க டம்மின் மிகுஞ்சிவ தரும மென்ப
இன்மைசா னெறிநின் றோருக் கேற்குநற் கலங்க* டம்மின்
நன்மைசான் றவரே முக்க ணுதனுக் கன்பு பூண்டோர்.

(இ - ள்.) மின்மைசால்-ஒளிமிகுந்த, மணியில் சிந்தாமணி வரம்-மணிகளுள் சிந்தாமணி மேன்மையானது; விழுப்பம் நல்கும் தன்மை சால்-உயர்வைக் கொடுக்குந் தன்மை யமைந்த, அறங்கள் தம்மில்-

(பா - ம்.) * கலன்கள், நற்றவங்கள்.

தருமங்களுள், சிவ தருமம் மிகும்-சிவதருமம் உயர்ந்தது; இன்மை சால் நெறி நின்றோருக்கு-இல்லறமாகிய சிறந்த நெறியில் நின்றவருக்கு, ஏற்கும்-ஏற்றற் குரிய, நற்கலங்கள் தம்மில்-நல்ல பாத்திரங்களுள், முக்கண் நாதனுக்கு அன்பு பூண்டோரே-மூன்று கண்களையுடைய இறைவனுக்கு அன்பு பூண்டவரே, நன்மை சான்றவர்-நன்மை மிக்கவராவர் எ - று.

மின்மை, இன்மை என்பவற்றில் மை: பகுதிப் பொருள் விகுதி. சிந்தாமணி - சிந்தித்தவற்றைத் தரும் மணி. என்ப: அசை. நின்றோருக்கு: வேற்றுமை மயக்கம். பாத்திரம் என்பதனைக் கலம்என்றார். ஏகாரம் பிரித்துக் கூட்டப்பட்டது. (க0)

தீயவாஞ் சுவைப்*பா லாவிற் றேவரா வதிகம் பல்வே
றுயமா தீர்த்தந் தம்மு ளதிகமாஞ் சுவண கஞ்சம்
மாயமா சறுக்க வெல்லாத் தலத்திலும் வதிந்து மன்னுந்
தூயவா னவரிற் சோம சுந்தரன் சிறந்தோ னாகும்.

(இ - ள்.) தீயவாம்-இனிமையாகிய, சுவைப்பால் ஆவில்-சுவையையுடைய பாலையுடைய பசுக்களுள், தேவர் ஆ அதிகம்-காமதேனு உயர்ந்தது; பல்வேறு ஆய-பல வேறு வகையாகிய, மா தீர்த்தம் தம்முள்-பெருமைபொருந்திய தீர்த்தங்களுள், சுவண கஞ்சம் அதிகம் ஆம்-பொற்றாமரை சிறந்தது; (அவைபோல), மாயம் மாசு அறுக்க-பந்தமாகிய குற்றத்தை நீக்குதற் பொருட்டு, எல்லாத் தலத்திலும்-எல்லாப் பதிகளினும், மன்னி வதியும்-நிலைபெற்று வீற்றிருக்கும், தூய வானவரில்-தூய சிவலிங்க மூர்த்திகளுள், சோமசுந்தரன் சிறந்தோன் ஆகும்-சோம சுந்தரக் கடவுள் சிறந்தவனாவான் எ - று.

தீய என்பது பண்பு மாத்திரையாய் நின்றது. அவாம் தீ சுவை எனப் பிரித்துக் கூட்டி, விரும்பும் இனிய சுவை யென்றலுமொன்று. வதிந்து மன்னும்-மன்னி வதியும் என மாற்றப்பட்டது. 'பொருப்பினுட் டலைமை யெய்தும் பொன்னெடுங் குடுமி மேரு' என்பது முதலாகக் கூறப்பட்டவற்றை யெல்லாம் உவமையாக நிறுத்தி ஒப்புமைக் கூட்ட வுவமையாக்குக. (கக)

அந்தமு முதலு மில்லா வகண்டபூ ரணமா யார்க்கும்
பந்தமும் வீடு நல்கும் பராபரச் சோதி தானே
வந்தனை புரிவோர்க் கிம்மை மறுமைவீ டளிப்பா னிந்தச்
சுந்தர விலிங்கத் தென்றும் விளங்குவான் சுருதி யேத்த.

(இ-ள்.) அந்தமும் முதலும் இல்லா-முடிவும் முதலுமில்லாமல், அகண்ட பூரணமாய்-அகண்ட நிறைவாகி, யார்க்கும் பந்தமும் வீடும் நல்கும்-எவருக்கும் பந்தத்தையும் முத்தியையுங் கொடுத்தருளுகின்ற, பராபரச் சோதி - சிவபெருமான். வந்தனை புரிவோர்க்கு-வணங்குவோர்களுக்கு, இம்மை மறுமை வீடு அளிப்பான்-இகபரப் பயன்களையும் வீடுபேற்றையும் அருளும் பொருட்டு, இந்தச் சுந்தர இலிங்

(பா - ம்.) * தீயவான்சுவை.

கத்து - இந்த அழகிய இலிங்கத்தின்கண், சுருதி ஏத்த - மறைகள் துதிக்க, என்றும் விளங்குவான்-எப்போதும் வீற்றிருப்பான் எ - று.

இல்லா: ஈறு கெட்ட எதிர்மறை வினை யெச்சம்; பெயரெச்ச மறையுமாம். தான், ஏ: அசை. (கஉ)

இத்தகு சயம்பு தன்னை யேனைய சயம்பு வெல்லாம்
நித்தமுந் தரிசித் தேகு நிருமல வொளியா மிந்த
உத்தம விலிங்கங் கண்டோ ருரையுணர் வொடுங்க வுள்ளே
சித்தமா சொழியத் தோன்றுஞ் சிவபரஞ் சுடரைக் கண்டோர்.

(இ - ள்.) இத்தகு சயம்புதன்னை - இந்தச் சயம்பு மூர்த்தியை, ஏனைய சயம்பு எல்லாம் - மற்றைய சயம்பு மூர்த்திகள் அனைத்தும், நித்தமும் தரிசித்து ஏகும் - நாள்தோறும் வந்து தரிசித்துச் செல்லா நிற்கும்; நிருமல ஒளி ஆம்-நின்மல ஒளிப் பிழம்பாகிய, இந்த உத்தம இலிங்கம் கண்டோர் - இந்த உத்தமமான சிவலிங்கத்தைத் தரிசித் தோர், சித்தம் மாசு ஒழிய - மனக்குற்றம் ஒழிதலால், உரை உணர்வு ஒடுங்க - வாக்கும் மனமும் ஒடுங்க, உள்ளே தோன்றும் - அகத்தே தோன்றியருளுகின்ற, சிவபரஞ் சுடரைக் கண்டோர் - பரஞ்சோதி யாகிய சிவத்தைத் தரிசித்தவராவர் எ - று.

சயம்பு-சுயம்பு. வடசொல்லாகலின் உயிர்வர உகரங்கெடாது நின்றது. உள்ளே கண்ட பயனெய்துவர்; காண்பர் என்றுமாம். (கங)

இத்தனிச் சுடரை நேர்கண் டிறைஞ்சினோர் பாவ மெல்லாங்
கொத்தழற் பொறிவாய்ப் பட்ட பஞ்சுபோற் கோப மூள
மெய்த்தவஞ் சிதையு மாபோன் மருந்தினல் வீயு நோய்போல்
உத்தம குணங்க ளெல்லா முலோபத்தா லழியு மாபோல்.

(இ - ள்.) இத் தனிச் சுடரை - இந்த ஒப்பற்ற ஒளிவடிவாகிய சிவலிங்கத்தை, நேர் கண்டு இறைஞ்சினோர்-நேரே காணப்பெற்று வணங்கியவர்களுடைய, பாவம் எல்லாம் - பாவங்கள் அனைத்தும், கொத்து - திரண்ட, அழல் பொறி வாய்-தீப்பொறியின்கண், பட்ட பஞ்சுபோல்-அகப்பட்ட பஞ்சு அழிவது போலவும், கோபம் மூள - சினம் மிகுக்க, மெய்த்தவம் சிதையுமாபோல் - உண்மைத் தவம் அழியுந் தன்மைபோலவும், மருந்தினல் வீயும் நோய் போல்-மருந் தினல் நோய் அழிதல் போலவும், உத்தம குணங்கள் எல்லாம்-சிறந்த குணங்களனைத்தும், உலோபத்தால் அழியுமாபோல் - உலோபத் தன் மையால் அழியுந் தன்மைபோலவும் எ - று.

பஞ்சு அழிதல்போல், நோய் வீதல்போல் என்க. சிதையுமா, அழியுமா என்பன விகாரம்.

> ''உளப்பரும் பிணிப்புரு வுலோப மொன்றுமே
> அளப்பருங் குணங்களை யழிக்கு மாறுபோல்''

என்பர் கம்பநாடரும். (கசு)

கலிகட லிரவி தோன்றக் கருகிரு ளுடையு மாபோல்
ஒலிகெழு பெருங்கா றள்ள வுடைபடு மேகம் போல
வலிகெழு மடங்கல் சீற மாயுமால் யானை போலக்
குலிசவல் லேறு தாக்கப் பொடிபடுங் குன்றம் போல.

(இ - ள்.) கலிகடல்-ஒலிக்கின்ற கடலின்கண், இரவி தோன்ற-சூரியன் உதித்தலால். கருகு இருள் உடையுமா போல்-கருகிய இருள் அழியுந் தன்மை போலவும், ஒலி கெழு - ஒலி மிகுந்த, பெருங்கால் தள்ள - பெரிய காற்றுத் தள்ளுதலால், உடைபடு மேகம்போல் - மேகம் சிதைதல் போலவும், வலி கெழு - வலி மிக்க, மடங்கல் சீற - சிங்கம் கோபிக்க, மாயும் மால் யானைபோல - பெரிய யானை அழிதல் போலவும், குலிசம் வல் ஏறு தாக்க - வச்சிரப்படையாகிய வலிய இடியேறு தாக்குதலால், பொடி படு குன்றம் போல - மலைகள் துகள் பட்டு அழிதல் போலவும் எ - று.

தோன்ற என்பது முதலிய செயவெனெச்சங்கள் காரணப் பொருளன. மேகம் முதலிய பெயர்களை மாற்றித் தொழிலுவம மாக்குக. மடங்கல் - சிங்கம்; மடங்கி முன்னும் பின்னும் நோக்கு வது பற்றி வந்த பெயர். (கஞ)

மருட்சிசெய் காம நோயான் மதிகெடு மாறு போல
அருட்சிவ ஞான நோக்கால் வலிகெடு மவிச்சை போலத்
தருக்குறு முவணஞ் சீறத் தழலரா விளியு மாபோற்
செருக்குற வழியுங் கற்ற கல்விபோற் சிதையு மன்றே.

(இ - ள்.) மருட்சி செய் - மயக்கத்தைச் செய்கின்ற, காம நோயால் - காமநோயினால், மதிகெடுமாறு போல - அறிவுகெடுந் தன்மை போலவும், அருள் சிவஞான நோக்கால்-அருளையுடைய சிவ ஞானப் பார்வையினால், வலி கெடும் அவிச்சை போல - அஞ்ஞானம் வலிகெட்டு அழிதல் போலவும், தருக்கு உறும் உவணம் சீற-செருக்கு மிக்க கருடன் கோபித்தலால், தழல் அரா விளியுமாபோல்-நஞ்சினையுடைய பாம்புகள் அழிதல் போலவும், செருக்கு உற-தருக்குப் பொருந்துதலால், அழியும் கற்ற கல்விபோல் - கற்றகல்வி அழிதல் போலவும், சிதையும் - கெட்டு விடும் எ - று.

செருக்கினையே அறியாமை யாக்கி,

''வெண்மை யெனப்படுவ தியாதெனி னொண்மை
யுடையம்யா மென்னுஞ் செருக்கு''

எனத் தெய்வப் புலவர் கூறியிருப்பது இங்கு நோக்கற் பாலது. மேல் 'இறைஞ்சினோர் பாவமெல்லாம்' என நிறுத்திய எழுவாய் இச்செய் யுளிற் 'சிதையும்' என்னும் பயனிலை கொண்டு முடிந்தது. அன்று, ஏ: அசை. (கசு)

புலரியிற் சீவன் முத்தி புரேசனைக் காணப் பெற்றால்
அலைகட னான்குட் பட்ட வவனிமா தானஞ் செய்த
பலனுறுங் கதிர்கா லுச்சி வைகலிற் பணியப் பெற்றால்
கலைஞர்பா னூற்றுப் பத்துக் கபிலைமா தானப் பேறாம்.

(இ - ள்.) புலரியில்-விடியற்காலையில், சீவன் முத்தி புரேசனை-சீவன் முத்திபுரத்தில் வீற்றிருக்கும் சோமசுந்தரக் கடவுளை, காணப் பெற்றால்-காணப் பெறின், அலைகடல் நான்குள்பட்ட - அலைகின்ற கடல் நான்கின் உட்பட்ட, மா அவனி தானம் செய்த - பெரிய பூமியைத் தானங்கொடுத்தலால் வரும், பலன் உறும் - பயன் எய்தும்; கதிர்கால் உச்சி வைகலில் - சூரியன் ஒளியை வீசும் உச்சிப் போதில், பணியப் பெற்றால் - வணங்கப் பெற்றால்; கலைஞர்பால் - அறிஞர்களிடத்து, நாற்றுப் பத்து மா கபிலை தானப் பேறு ஆம் - ஆயிரம் பெரிய பசுக்களைத் தானஞ் செய்தலால் வரும் பயன் கூடும் எ - று.

புலரி - இருள் நீங்குங்காலம். புரேசன்: குணசந்தி. மா அவனியென்க. உச்சி-ஆதித்தன் விசும்பினடுவில் இருக்குங்காலம். கலைஞர்-வேதம் முதலிய கலைகளை யுணர்ந்தவர். (கஎ)

விண்ணிடைப் பரிதிப் புத்தேள் மேலைநீர் குளிக்கு மெல்லை
அண்ணலை வணங்கிற் கோடி யானினத் தானப் பேறாம்
பண்ணவர் பரவும் பாதி யிருள்வயிற் பணியப் பெற்றால்
வண்ணவெம் புரவி மேத மகம்புரி பெரும்பே றெய்தும்.

(இ - ள்.) விண் இடை-வானின்கண் உள்ள, பரிதிப் புத்தேள் - சூரிய தேவன், மேலை நீர் குளிக்கும் எல்லை-மேலைக் கடலில் மூழ்கும் அந்திப்பொழுதில், அண்ணலை வணங்கில்-சோம சுந்தரக் கடவுளைப் பணிந்தால், கோடி ஆன் இனம் தானப்பேறு ஆம் - கோடி பசுக்கூட்டங்களைத் தானஞ்செய்த பயன் எய்தும், பண்ணவர் பரவும் பாதி இருள் வயின் - தேவர்கள் வணங்கும் அரையிருளில், பணியப் பெற்றால் - வணங்கப் பெற்றால், வண்ணம் - நல்ல நிறத்தையுடைய, வெம்புரவி மேதம் - கடிய செலவினையுடைய பரி மேதமாகிய, மகம் புரி பெரும் பேறு எய்தும் - வேள்வியைப் புரிதலால் வரும் பெரிய பயன் கூடும் எ - று.

வண்ணமும் வெம்மையும் புரவிக்கு அடை. புரி: காரணப் பொருளில் வந்தது. (கஅ)

இன்னன வதிக மாம்பே றறிந்துபோ யெத்தே வர்க்கும்
முன்னவன் சமட்டி விச்சா புரமுறை முதல்வன் றன்னைச்
சொன்னவிக் காலங்*தோறு மிறைஞ்சியுந் தொழுதுஞ் சூழ்ந்தும்
பொன்னடிக் கன்ப ராகி வழிபடும் புனித சீலர்.

(இ - ள்.) இன்னன - இவை போல்வனவாகிய, அதிகம் ஆம் பேறு அறிந்து போய்-மிகுந்த பயனை உணர்ந்து சென்று, எத்தேவர்க்

(பா - ம்.) * சொன்னவக்காலம்.

கும் முன்னவன் - எல்லாத் தேவர்களுக்கும் முன்னவனாகிய, சமட்டி விச்சாபுரம் உறை முதல்வன் தன்னை - சமட்டி விச்சாபுரமென்னும் மதுரைப்பதியில் எழுந்தருளியுள்ள முதல்வனாகிய சோமசுந்தரக் கடவுளை, சொன்ன இக்காலந்தோறும் - மேற் கூறிய இக்காலங்கள் தோறும், இறைஞ்சியும்-நிலத்திற் றாழ்ந்து வணங்கியும், தொழுதும்-கைகூப்பிக் கும்பிட்டும், சூழ்ந்தும்-வலம் வந்தும், பொன் அடிக்கு-அழகிய திருவடிகளுக்கு, அன்பர் ஆகி வழிபடும் புனித சீலர் - அன்பினை யுடையாராகி வழிபாடு செய்கின்ற தூய ஒழுக்கத்தையுடையார் எ - று.

சமட்டி விச்சாபுரம் என்பதனைத் தலவிசேடத்துட் காண்க. புனித சீலர் என்பது வரும்பாட்டில் வாழ்வார் என்பதனோடு முடியும். (கக)

உம்மையில் வினைக ளென்னும் பிணியவிழ்ந் தொருவித் தூய
செம்மைய ராகி யானாத் திருவொடு செல்வ மோங்க
வெம்மையில் போக மூழ்கி மலவிருள் வீக்க நீந்தி
மைம்மலி கண்டத் தெங்கோன் மலரடி நீழல் வாழ்வார்.

(இ - ள்.) உம்மையில் - முற்பிறப்புக்களிற் செய்த, வினைகள் என்னும் பிணி - வினைகளாகிய கட்டானது, அவிழ்ந்து ஒருவி - அவிழ்ந்து நீங்கப் பெற்று, தூய செம்மையர் ஆகி- தூய வாய்மையை யுடையவராய், ஆனாத் திருவொடு - நீங்காத அருட் செல்வத்தோடு, செல்வம் ஓங்க - ஏனைச் செல்வங்களும் மிக, வெம்மைஇல் போகம் மூழ்கி - தட்பமாகிய போகத்தில் அழுந்தி நுகர்ந்து, மல இருள் வீக்கம் நீந்தி - ஆணவ இருளாகிய பெருக்கினைக் கடந்து, மை மலி கண்டத்து எங்கோன்-கருமை மிகுந்த திருமிடற்றையுடைய எம் இறைவனுடைய மலர் அடி நீழல் வாழ்வார் - மலர்போன்ற திருவடி நீழலை யடைந்து வாழ்வார்கள் எ - று.

அவிழ்ந்து என்றமையால் பிணி என்பதற்குக் கட்டு என்றும், நீந்தி என்றமையால் வீக்கம் என்பதற்கு பெருக்கு என்றும் பொருள் கூறப்பட்டன. செம்மை-நடுவுநிலைமை, வாய்மை. மலமாகிய இருள் வீக்கம் என்றும், இருளினது வீக்கம் என்றும் விரித்தலுமாம். (உ0)

[வேறு]

அறவுருவ னாலவா யானாமஞ்
சேவிமடுத்தா லடைந்த பத்துப்
பிறவிவினை யறுநினைந்தா னாறுபெரும்
பவப்பாவப் பிணிபோங் கூடல்
இறைவனையின் றிறைஞ்சுதுமேன் றெழுந்து
மனைப்புறம்போந் தாலீரைஞ் ஞூறு
மறமுறுவெம் பவத்திழைத்த பாதகவல்
வினையனைத்து மாயு மன்னே.

(இ - ள்.) அற உருவன் ஆலவாயான்-தரும வடிவினனாகிய திருவாலவாய்க் கடவுளின், நாமம் செவிமடுத்தால்-பெயரைச் செவியிற்

கேட்டால், பத்துப் பிறவி அடைந்த வினை அறும் - பத்துப் பிறப்புக் களிலெய்திய வினைகள் கெடும்; நினைந்தால் - சிந்தித்தால், நூறு பவம் - நூறு பிறவிகளிற் செய்த, பெரும் பாவப் பிணிபோம் - பெரிய பாவமாகிய நோய் ஒழியும்; கூடல் இறைவனை - மதுரையில் எழுந்தருளிய அவ்விறைவனை, இன்று இறைஞ்சுதும் என்று எழுந்து- இன்று வணங்குவேமென்று கருதி எழுந்து, மனைப்புறம் போந்தால்- வீட்டின் புறத்தே வந்தால், ஈரைஞ்ஞூறு மறம் உறு வெம்பவத்து இழைத்த-ஆயிரம் பாவ மிகுந்த கொடிய பிறவிகளிற் செய்த, பாதக வல்வினை அனைத்தும் மாயும்-பாதகங்களாகிய கொடிய வினைகளெல் லாம் அழியும் எ - று.

பவம்-பிறப்பு. பெரும் பாவம் என்க. மன்னும் ஓவும் அசை. ()

புழைக்கைவரை தொலைத்தானைத் தரிசித்தோ
　　ராயிரவாம் புரவி வேள்வி
தழைத்தபெரும் பயன்பெறுவ ருருத்திரசூத்*
　　தம்மதனுற் றவவா னோர்கள்
தொழற்கரியான் றனைத்துதித்தோர் கணத்துக்கா
　　யிரராச சூய யாகம்
இழைத்தபெரும் பயன்பெறுவர் சமட்டிவடி
　　வாகியவவ் விலிங்கந் தன்னை.

(இ - ள்.) புழை கைவரை தொலைத்தானை-துவாரத்தையுடைய துதிக்கையினையுடைய மலையாகிய யானையைத் தொலைத்த சோம சுந்தரக் கடவுளை, தரிசித்தோர் - காணப்பெற்றவர்கள், வாம்புரவி வேள்வி ஆயிரம் தழைத்தபெரும் பயன் பெறுவர் - தாவுகின்ற பரி வேள்விகள் ஆயிரஞ் செய்தலால் வரும் மிகுந்த பெரிய பயனை அடை வர்; தவ வானோர்கள் - தவத்தினையுடைய தேவர்களும், தொழற்கு அரியானை - வணங்குதற்கு அரியவனை, உருத்திர சூத்தம் அதனுல் துதித்தோர்-உருத்திர சூத்த மந்திரத்தால் துதித்து வணங்கியவர்கள், கணத்துக்கு-கணப்பொழுதுக்கு; ஆயிர ராச சூய யாகம் இழைத்த- ஆயிரம் இராச சூயவேள்வி செய்தலால் வரும், பெரும்பயன் பெறு வர் - பெரிய பயனை அடைவர்; சமட்டி வடிவாகிய அ இலிங்கம் தன்னை - சமட்டி உருவமாகிய அந்தச் சிவலிங்கத்தை எ - று.

கைவரை-யானை. புழை கைக்கு அடை. வாவும் புரவி. ஆயிரஞ் செய்தலால் வரும் என விரிக்க. இலிங்கந்தன்னைப் பூசித்தோர் என வருஞ் செய்யுளோடியையும். (உஉ)

அங்கையள வாகியநன் னீராட்டிப்
　　பூசித்தோ ரளவி லேனைத்
துங்கதலத் துறையிலிங்க மூர்த்திகளைச்
　　சிவாகமநூல் சொன்ன வாற்றான்

---

(பா - ம்.) * சூக்கம்.

மங்கலமா கியமுகம னீரெட்டும்
வழுவாது வாசந் தோய்ந்த
செங்கனக மணிக்கலசப் புனலாட்டி
மாபூசை செய்தோ ராவார்.

(இ - ள்.) அங்கை அளவு ஆகிய நல்நீர் ஆட்டி-உள்ளங்கையி லடங்கும் அளவினையுடையதாகிய நல்ல நீரால் திருமஞ்சனம் செய்து, பூசித்தோர்-பூசித்தவர்கள், ஏனை அளவு இல் துங்க தலத்து உறை - மற்றைய அளவிறந்த உயர்ந்த பதிகளில் எழுந்தருளிய, இலிங்க மூர்த்திகளை-சிவலிங்க மூர்த்திகளை, சிவாகமநூல் சொன்ன ஆற்றால் - சிவாகமம் கூறிய வழியால், மங்கலம் ஆகிய முகமன் ஈரெட்டும் வழுவாது - மங்கலமான சோடச உபசாரங்களும் தவறாமல், செங்கனக மணிக்கலசம்-சிவந்த பொன்னாற் செய்த இரத்தினங்கள் பதித்த கலசத்தில் நிறைந்த, வாசம் தோய்ந்த புனல் ஆட்டி - மணம் அளாவிய நீரால் அபிடேகித்து, மாபூசை செய்தோர் ஆவார்-பெரிய பூசை செய்தவர்கள் ஆவார்கள் எ - று.

சோடச வுபசாரங்களாவன: ஆவாகனம், தாபனம், சந்நிதானம், சந்நிரோதனம், அவகுண்டனம், தேனுமுத்திரை, பாத்தியம், ஆசமனீயம், அர்க்கியம், புட்பதானம், தூபம், தீபம், நைவேத்தியம், பானீயம், ஆராத்திரிகை, ஐபசமர்ப்பணை என்பன. (௨௫)

அவ்வண்ணஞ் சுந்தரனை யைந்தமுத
மானுதவு மைந்து தீந்தேன்
செவ்வண்ணக் கனிசாந்தச் சேறுமுதன்
மட்டித்துத் தேவர் தேரு
மெய்வண்ணங் குளிரவிரைப் புனலாட்டி
மாபூசை விதியாற் செய்தோர்
மைவண்ண வினைநீந்தி யறமுதனாற்
பொருளடைந்து மன்னி வாழ்வார்.

(இ - ள்.) அவ்வண்ணம் சுந்தரனை-அவ்வாகமத்திற் கூறியவண்ணம் சோமசுந்தரக் கடவுளை, ஐந்து அமுதம் - பஞ்சாமிர்தமும், ஆன் உதவும் ஐந்து - பசுக்களால் அளிக்கப்பெற்ற பஞ்ச கவ்வியமும், தீந்தேன்-மதுரமாகிய தேனும், செவ் வண்ணக்கனி - சிவந்த நிறத்தையுடைய பழங்களும், சாந்தச்சேறு முதன் மட்டித்து - சந்தனக் குழம்பும் முதலியவற்றை அப்பி, தேவர்தேரு மெய்வண்ணம் குளிர-தேவர்களும் அறியாத அழகிய திருமேனி குளிருமாறு, விரைப்புனல் ஆட்டி-மணமுடைய நீரால் அபிடேகித்து, மாபூசை விதியால் செய்தோர் - பெரிய பூசையை விதிப்படி செய்தவர்கள், மைவண்ண வினை நீந்தி - கரிய தீவினைக் கடலைக் கடந்து, அறமுதல் நாற்பொருள் அடைந்து - அறமுதலிய நான்கு பயனையும்பெற்று, மன்னி வாழ்வார் - நிலைபெற்று வாழ்வார்கள் எ - று.

அமுதம் ஐந்து: பால், நெய், தேன், சருக்கரை, பழம்; பால்நீக்கித் தேங்காய்த் திருகல் கூட்டி ஐந்தென்று கொள்ளுதலும்; அதனையும்

நீக்கி நீர்கூட்டி ஐந்தென்றலும்; பழவர்க்கம் ஒன்று, நெய் தயிர்பால் என்பன ஒன்று, இவற்றுடன் தேன், சருக்கரை, நீர்கூட்டி ஐந்தென்றலும்; உண்டு. ஆன் உதவும் ஐந்து: பால், தயிர், நெய், கோமயம், கோசலம், கோரோசனமும் கூட்டிக் கவ்வியம் ஆறெனவும் கூறுதலுண்டென்பர். மைவண்ணம் என்றது இலக்கணை வழக்கு. தேவரும் என்னும் உம்மை தொக்கது. (உச)

நல்லவகை முகமனீ ரேட்டுள்ளும்
　　வடித்தவிரை நன்னீ ராட்ட
வல்லவர்நூ றுயிரமா மேதமகப்
　　பயன்பெறுவர் வாச நானம்
எல்லவிர்குங் குமஞ்சாந்த மிவைபலவு
　　மட்டித்தோ ரேழிலார் தெய்வ
முல்லைநகை யாரோடும் விரைக்கலவை
　　குளித்தின்ப மூழ்கி வாழ்வார்.

(இ - ள்.) நல்லவகை முகமன் ஈர் எட்டு உள்ளும் - நல்ல வகையாயுள்ள சோடச உபசாரங்களுள்ளும், வடித்த விரை நல்நீர் ஆட்ட வல்லவர் - வடித்த மணமுள்ள நல்லநீரால் திருமஞ்சனம் செய்ய வல்லவர்கள், நூறு ஆயிரம் மாமேத மகப் பயன் பெறுவர் - நூறாயிரம் பரிவேள்வியாகிய யாகத்தைச் செய்தலால் வரும்பயனை அடைவர்; வாசம் நானம்-மணம்பொருந்திய கத்தூரியும், எல் அவிர் - ஒளி விளங்குகின்ற, குங்குமம்-குங்குமப்பூவும், சாந்தம் - சந்தனமுமாகிய, இவை பலவும் மட்டித்தோர்-இவை பலவற்றையும் சாத்தினோர்கள், எழில் ஆர்-அழகு நிறைந்த, தெய்வமுல்லை நகையாரோடும் - தெய்வப் பெண்களாகிய முல்லை யரும்புபோலும் பற்களையுடையவர்களோடும், விரைக்கலவை குளித்து-மணம் பொருந்திய கலவையைப் பூசி, இன்பம் மூழ்கி வாழ்வார் - இன்பக்கடலுள் திளைத்து வாழ்வார்கள் எ - று.

விரை நன்னீர்-பனிநீருமாம். தெய்வமுல்லை நகையார் என்பதனை விகுதி பிரித்துக் கூட்டுதலுமாம். (உரு)

நன்மலரொன் றுலவா யான்முடிமேற்
　　சாத்தினு னயந்து நூறு
பொன்மலர்கொண் டயற்பதியிற் பூசித்த
　　பயனெய்தும் புனித போகத்
தன்மைதரு சுந்தரற்குத் தூபமொரு
　　காற்கொடுப்போர் தமக்குத் தாங்கள்
சொன்மனமெய் யுறச்செய்த குற்றமா
　　யிரம்பொ றுப்பன் சுருதி நாதன்.

(இ - ள்.) ஆலவாயான் முடிமேல் - திருவாலவாயான் திருமுடிமேல், நல் மலர் ஒன்று சாத்தினால்-நல்ல மலர் ஒன்றைச் சாத்தினால்,

நயந்து-விரும்பி, நூறு பொன் மலர்கொண்டு-நூறு பொன்னாலாகிய மலர்களைக்கொண்டு, அயல்பதியில் பூசித்தபயன் எய்தும்-பிற தலங்களிற் பூசித்தலால் வரும் பயன் அடையும்; புனித போகத் தன்மை தரு சுந்தரற்கு-சிவபோகத் தன்மையைத் தந்தருளும் சோமசுந்தரக் கடவுளுக்கு, தூபம் ஒருகால் கொடுப்போர் தமக்கு – ஒருமுறை தூபம் கொடுப்பவர்களுக்கு, தாங்கள் - அக்கொடுத்தவர்கள், சொல் மனம் மெய் உறச்செய்த – மனம் வாக்குக் காயங்கள் பொருந்தச் செய்த, ஆயிரம் குற்றம் சுருதிநாதன் பொறுப்பன் – ஆயிரங் குற்றங்களை வேதத் தலைவனாகிய சோமசுந்தரக் கடவுள் பொறுத்தருள்வான் எ – று.

புனிதபோகம்-தூயபோகம்; சிவபோகம். தூபம்-நறும்புகை. மனமொழி மெய்யென மாற்றுக. மெய்யால் என விரித்தலுமாம். ஆயிரம் - அளவில்லன. (உசு)

திருவமுது நிவேதிப்போ ரவிழொன்றற்
குகமொன்றாச் சிவலோ கத்தின்
மருவிநிறை போகமுடன் வைகுவர்தாம்
பூலமுக வாச மீந்தோர்
பொருவரிய கடவுளராண் டொருநூறு
கோடிசிவ புரத்து வாழ்வார்
ஒருபளித விளக்கிடுவோர் வெண்ணிறமுங்
கண்ணுதலு முடைய ராவார்.

(இ - ள்.) திரு அமுது நிவேதிப்போர் – அவ்வாலவாய்ப் பெருமானுக்குத் திருவமுது படைப்போர்கள், அவிழ் ஒன்றற்கு உகம் ஒன்று ஆக-ஒரு அவிழுக்கு ஒரு யுகமாக, சிவலோகத்தில் மருவி-சிவலோகத்திற் பொருந்தி, நிறை போகமுடன் வைகுவர் - நிறைந்த போகத்துடன் வாழ்வார்கள்; தாம்பூலம் முகவாசம் ஈந்தோர் – தாம்பூலமும் முகவாசமைந்தும் கொடுத்தவர்கள், பொருவு அரிய - ஒப்பில்லாத, கடவுளர் ஆண்டு ஒரு நூறுகோடி - நூறுகோடி தேவ ஆண்டுகள், சிவபுரத்து வாழ்வார்-சிவலோகத்தில் வாழ்வார்கள்; ஒரு பளித விளக்கு இடுவோர்-ஒரு கற்பூர விளக்கு இடுபவர்கள்; வெள் நிறமும் கண் நுதலும் உடையர் ஆவர்-வெண்மை நிறத்தையும் நெற்றிக்கண்ணையும் உடையராவார்கள் எ - று.

அவிழ்-பருக்கை யெனப்படுவது. யுகம் உகமென்றாயது. முகவாசமாவன: தக்கோலம், ஏலம், இலவங்கம், கர்ப்பூரம், சாதி என்பன. கடவுளராண்டு-மக்கட்கு ஓராண்டு ஒருநாளாகக் கணிக்கப்பட்ட ஆண்டு. பளித விளக்கு-கர்ப்பூர நீராஞ்சனம். கர்ப்பூர திப வரலாறு ஆராய்ச்சிக்குரியது. விளக்கிடுவோர் சிவசாரூபம் பெறுவர் என்றதாயிற்று. (உஎ)

நறுந்திருமஞ் சனமெடுக்கக் குடமாட்ட
மணிக்கலச நல்ல வாசம்
பெறுந்தகைய தூபக்கால் தீபக்கால்
மணியின்ன பிறவுங் கங்குற்

றெறுங்கதிர்கால் மணிமாட மதுரைநா
யகற்கீந்தோர் செய்த பாவம்
வெறுந்துகள்செய் தைம்பொறிக்கு விருந்தூட்டும்
பெருங்காம வெள்ளத் தாழ்வார்.

(இ - ள்.) கங்குல் தெறும்-இருளை ஓட்டும், கதிர்கால்-ஒளியை வீசுகின்ற, மணிமாடம் மதுரை நாயகற்கு - மணிகள் பதித்த மாடங்களையுடைய மதுரை யிறைவனாகிய சோமசுந்தரக் கடவுளுக்கு, நறும் திருமஞ்சனம் எடுக்கக் குடம் - மணங்கலந்த திருமஞ்சன மெடுத்தற்குக் குடமும், ஆட்ட மணிக் கலசம்-அபிடேகிக்க இரத்தினக் கலசமும், நல்ல வாசம்பெறும் தகைய தூபக்கால் - இனிய மணத்தைத் தரும் தகுதியையுடைய தூபக்கால்களும், தீபக்கால் மணி இன்ன பிறவும்-தீபக்காலும் மணியும் இவைபோல்வன பிறவும், ஈந்தோர் - கொடுத்தவர்கள், செய்த பாவம் - தாங்கள் செய்த பாவங்களை, வெறும் துகள் செய்து-வெறுவிய பொடியாகச் செய்து, ஐம்பொறிக்கும் விருந்து ஊட்டும்-ஐந்து இந்திரியங்களுக்கும் விருந்துண்பிக்கும், பெருங்காம வெள்ளத்து ஆழ்வார் - பெரிய இன்பவெள்ளத்துள் மூழ்குவார்கள் எ - று.

தூபமும் தீபமும் இடுதற்குரிய கலன்கள் தூபக்கால், தீபக்கால் எனப் பெறும். சிறிதும் பயனின்றாகச் செய்து என்பார் 'வெறுந்துகள் செய்து' என்றார். காமம் என்றது இன்பத்தை. 'புணர்ந்தாற் புணருந் தொறும்பெரும் போகம்பின்னும் புதிதாய்..... வளர்கின்றதே' என்பவாகலின் 'விருந்தூட்டும்' என்றார். (உஅ)

கயலிசையுங்* கண்ணுமைகோன் றிருமுன்னர்ப்
பல்லியமுங் கல்லென் றார்ப்ப
இயலிசைய பாடலினே டாடலிவை
செய்விப்போ ரிறுமாப் பெய்திப்
புயலிசைய வியங்கலிப்ப மூவுலகுந்
தொழவரசாய்ப் பொலங்கொம் பாடுஞ்
செயலிசைய வணங்கனையா ராடரங்கு
கண்டின்பச் செல்வத் தாழ்வார்.

(இ - ள்.) கயல் இசையும் கண் உமைகோன் - கயலை ஒத்த கண்களையுடைய அங்கயற்கண்ணியின் தலைவனாகிய சோமசுந்தரக் கடவுளின், திருமுன்னர் - சன்னிதானத்தில், பல் இயமும் கல் என்று ஆர்ப்ப-பல இயங்களும் கல்லென்று ஒலிக்க, இயல் இசைய பாடலினேடு-இலக்கண வமைதியையுடைய பாடல்களோடு, ஆடல் இவை செய்விப்போர் - ஆடலுமாகிய இவற்றைச் செய்விப்பவர்கள், இறுமாப்பு எய்தி-இறுமாந்து, புயல் இசைய-முகிலை ஒக்க, இயம் கலிப்ப-இயம் ஒலிக்க, மூ உலகும் தொழ அரசு ஆய் - மூன்றுலகங்களும் வணங்குமாறு அரசராகி, பொலம் கொம்பு ஆடும் செயல் இசைய -

(பா - ம்.) * கயலிசைய.

பொற் கொம்புகள் ஆடும் செயலை ஒக்க, அணங்கு அனையார் - தேவ மகளிரை ஒத்த பெண்கள், அரங்கு ஆடு கண்டு - மேடையில் நடித்தலைக் கண்டு, இன்பச் செல்வத்து ஆழ்வார்-இன்பந்தரும் செல்வக் கடலுள் அழுந்துவார்கள் எ - று.

இயல் இசைய, அ: சாரியை; பொருந்தும் இசையினையுடைய வெனப் பெயரெச்சமுமாம். மற்றுள்ள இசைய இசையும் என்பன உவமச் சொற்கள். இறுமாத்தல்-களித்தல். அரங்கிலாடுதல்; ஆடு: முதனிலைத் தொழிற்பெயர். இன்பமாகிய செல்வமுமாம். (உகூ)

ஒருகாலட் டாங்கமுடன் பஞ்சாங்க
முடனுத* லோண்செங் கால்வெண்
குருகாலு† மலர்த்தடஞ்சூழ் கூடனா
யகற்பணிவோர் கோலோன் றோச்சிப்
பொருகாலின் வருபரித்தேர் மன்னவரா
யாவருந்தம் புடைவந் தெய்தி
இருகாலுந் தலைவருட வெக்காலும்
தமைவணங்க விருப்ப ரன்றே.

(இ - ள்.) ஒள் செங்கால் - ஒள்ளிய சிவந்த கால்களையுடைய, வெண் குருகு ஆலும்-வெண்மையான அன்னங்கள் ஒலிக்கும், மலர்த் தடம் சூழ்-தாமரை மலர்களையுடைய தடாகங்களாற் சூழப்பெற்ற, கூடல் நாயகன்-மதுரை நாயகனை, ஒருகால்-ஒருமுறை, அட்டாங்கம் உடனுதல் பஞ்சாங்கம் உடனுதல் - அட்டாங்கமோ டாவது பஞ்சாங்கமுடனாவது, பணிவோர்-வணங்குவோர், கோல் ஒன்று ஓச்சி - ஒப்பற்ற செங்கோலைச் செலுத்தி, பொரு-தாக்குகின்ற, காலின் வரு பரித்தேர் மன்னவர் ஆய் - காற்றைப்போலும் விரைந்து செல்லும் குதிரைகள் பூட்டிய தேரையுடைய அரசராகி, யாவரும்-எல்லா மன்னரும், தம் புடைவந்து எய்தி-தமது பக்கம் வந்து பொருந்தி, இரு காலும் தலைவருட-இரண்டு அடிகளும் அவர்கள் தலையில் தடவுமாறு, எக்காலும் தமை வணங்க இருப்பர் - எஞ்ஞான்றும் தம்மை வணங்க வீற்றிருப்பர் எ - று.

அட்டாங்கம் - தலை, கையிரண்டு, செவி யிரண்டு, மோவாய், தோள் இரண்டு என்னும் எட்டுறுப்பும் நிலந்தோயப் பணிதல். பஞ்சாங்கம்-தலை, கையிரண்டு, முழந்தாள் இரண்டு என்னும் ஐந்துறுப்பும் நிலந்தோயப் பணிதல். ஆதல் என்னுமிடைச்சொல் முன்னும் இயைந்தது. பொருபரி என்னலுமாம். எய்தி வணங்க எனக் கூட்டுக. அன்று, ஏ: அசை. (௩0)

இத்தகைய திருவால வாயுடையான்
றிருமுன்ன ரியற்று மோமம்
மெய்த்தவமந் திரந்தான மின்னவனு
வளவேனினு மேரு வாகும்

(பா - ம்.) * உடனுக. † குருகாரும்.

உத்தமமா மிவ்விலிங்கப் பெருமையெலாம்
யாவரளந் துரைப்பர் வேத
வித்தகரே சிறிதறிந்த வாறுரைத்தே
மினிப்பலகால் விளம்பு மாறென்.

(இ - ள்.) இத்தகைய திருவாலவாயுடையான் - இத்தன்மையையுடைய திருவாலவாயையுடைய சோம சுந்தரக் கடவுளின், திரு முன்னர்-சந்நிதானத்தில், இயற்றும் - செய்கின்ற, ஓமம் மெய்த் தவம் மந்திரம் தானம் இன்ன - ஓமங்களும் உண்மைத் தவங்களும் மந்திரங்களும் தானங்களும் இவை போல்வன பிறவும், அணு அளவு எனினும்-அணுவின் அளவின ஆயினும், மேரு ஆகும்-மகா மேருவின் அளவின ஆகும்; உத்தமம் ஆம் - சிறந்தது ஆகிய, இ இலிங்கப் பெருமை எலாம்-இந்த இலிங்க மூர்த்தியின் பெருமைகள் அனைத்தையும், அளந்து உரைப்பார் யாவர் - அளவிட்டுக் கூறவல்லார் யார் (ஒருவருமில்லை எனினும்), வேத வித்தகரே-வேதங்களில் வல்லமுனிவர்களே, சிறிது அறிந்தவாறு உரைத்தேம்-சிறிது அறிந்தபடி கூறினேம், இனிப் பலகால் விளம்புமாறு என் - இனிப் பலமுறை சொல்லுவது என்னை எ - று.

அணுவும் மேருவும் சிறுமை பெருமைகட்கு எடுத்துக் காட்டாவன. பயனுற் பெரிதாம் என்றார். அறிந்தவாறு சிறிது உரைத்தேம். விளம்பினும் அளவு படாமையின் இஃதே யமையு மென்பார், விளம் புமாறென்' என்றார். (௩௧)

இத்தலத்துக் கொப்பாக வொருதலமும்
பொற்கமல மென்னு மிந்த
உத்தமமா தீர்த்தத்துக் கொப்பதொரு
தீர்த்தமுமெய் யுணர்வானந்த
வித்தனைய விலிங்கமிதற் கொப்பாவோ
ரிலிங்கமும்பார் விண்மே லென்னும்
முத்தலத்து மிலையந்த மூர்த்திதிரு
நாமங்கண் மொழியக் கேண்மின்.

(இ - ள்.) இத்தலத்துக்கு ஒப்பு ஆக ஒரு தலமும்-இந்தத் திருப்பதிக்கு இணையாக ஒரு பதியும், பொன் கமலம் என்னும் - பொற்றாமரை என்று கூறப்படும், இந்த உத்தம மா தீர்த்தத்துக்கு ஒப்பது - இந்தச் சிறந்த பெருமை பொருந்திய தீர்த்தத்துக்கு ஒப்பதாகிய, ஒரு தீர்த்தமும் - ஒரு பொய்கையும், மெய் உணர்வு ஆனந்த வித்து அனைய-உண்மை அறிவு இன்பங்களின் மூலம் போலும், இலிங்கம் இதற்கு-இந்த இலிங்கத்துக்கு, ஒப்பா ஓர் இலிங்கமும் - இணையாக ஓர் இலிங்கமும், பார் விண்மேல் என்னும் - பூமி அந்தரம் சுவர்க்க மென்கின்ற, முத்தலத்தும் இலை - மூன்றுலகங்களிலுமில்லை; அந்த மூர்த்தி திருநாமங்கள் மொழியக் கேண்மின் - அந்தச் சோமசுந்தரக் கடவுளின் திருப்பெயர்களைச் சொல்லக் கேளுங்கள் எ - று.

மெய்யுணர் வானந்தம்-சச்சிதானந்தம். பார்விண்மேல்-இவை பூலோகம், புவர்லோகம், சுவர்லோகம் என்றும் கூறப்படும்; புறப் பாட்டில்,

"கீழது, முப்புண ரடுக்கிய முறைமுதற் கட்டின்
நீர்நிலை நிவப்பின் கீழு மேலது
ஆனிலை யுலகத் தானும்"

என வருவது நோக்கற் பாலது. தலவிசேடத்துட் கூறிய 'திருவால வாய்க் கிணையாமொரு தலமும்' என்னுஞ் செய்யுளோடு இது பெரி தும் ஒத்துள்ளமை காண்க. (௩உ)

கருப்பூர சுந்தரன்பூங் கடம்பவன
சுந்தரனுட் கரவாத் தொண்டர்
விருப்பூருங் கலியாண சுந்தரனல்
லறவடிவாய் விளங்கு மேற்றுப்
பொருப்பூரு மபிராம சுந்தரன்றேன்
புடைகவிழப் பொன்னிற் பூத்த
மருப்பூசு சண்பகசுந் தரன்மகுட
சுந்தரன்றான் வாழி மன்னோ.

(இ - ள்.) கருப்பூர சுந்தரன் - கருப்பூர சுந்தரன் என்றும், பூங் கடம்பவன சுந்தரன்-பூக்களையுடைய கடம்பவன சுந்தரன் என்றும், உள் கரவாத் தொண்டர் - உள்ளத்தில் வஞ்சனை யில்லாத அடியார் களின், விருப்பு ஊரும் கலியாண சுந்தரன் - அன்பு மிக்க கலியாண சுந்தரன் என்றும், நல் அறவடிவாய் விளங்கும்-நல்ல தரும வடிவாகி விளங்குகின்ற, ஏற்றுப் பொருப்பு ஊரும் - இடபமாகிய மலையை நடாத்தியருளும், அபிராம சுந்தரன் - அபிராம சுந்தரன் என்றும், தேன்புடை கவிழ-தேன் பக்கத்தில் நிரம்பச் சொரிய, பொன்னில் பூத்த - பொன்னைப் போல மலர்ந்த, மரு பூசும் - மணம் நிறைந்த, சண்பக சுந்தரன்-சண்பக சுந்தரன் என்றும், மகுட சுந்தரன் - மகுட சுந்தரன் என்றும் எ - று.

அடைகளைக் கடம்பிற்கும் சண்பகத்திற்கும் கொள்க. எண்ணி வரும் பெயர்கள் பின்னே 'இவை முதலா நாமம் அளப்பிலவாகும்' என்பது கொண்டு முடியும். வாழி, உட்கோள். தான், மன், ஓ என் பன அசைகள். (௩௩)

மான்மதசுந் தரன்கோடிய பழியஞ்சு
சுந்தரனோர் மருங்கின் ஞானத்
தேன்மருவி யுறைசோம சுந்தரன்றேன்
செவ்வழியாழ் செய்யப் பூத்த
கான்மருவு தடம்பொழில்* சூ ழாலவாய்ச்
சுந்தரன்மீன் கணங்கள் சூழப்
பான்மதிசூழ் நான்மாடக் கூடனு
யகன்மதுரா பதிக்கு வேந்தன்.

---

(பா - ம்.) * கடம்பொழில்.

(இ - ள்.) மான்மத சுந்தரன் - மான்மத சுந்தரன் என்றும், கொடிய பழி அஞ்சு சுந்தரன்-கொடுமையான பழியஞ்சிய சுந்தரன் என்றும், ஓர் மருங்கில் - ஒரு பக்கத்தில், ஞானத்தேன் மருவி உறை சோமசுந்தரன் - உமையம்மையார் விரும்பி உறைகின்ற சோமசுந்தரன் என்றும், தேன்-வண்டுகள், செவ்வழி யாழ் செய்ய - செவ்வழிப் பண்ணைப் பாட, பூத்த - மலர்ந்த, கான் மருவு - மணம் பொருந்திய, தடம் பொழில் சூழ் - பெரிய சோலைகள் சூழ்ந்த, ஆலவாய்ச் சுந்தரன் - ஆலவாய்ச் சுந்தரன் என்றும், மீன் கணங்கள் சூழ - உடுத் தொகுதிகள் சூழ, பால்மதி சூழ் - வெள்ளிய சந்திரன் வலம் வருகின்ற, நான் மாடக் கூடல் நாயகன்-நான் மாடக் கூடனாயகன் என்றும், மதுராபதிக்கு வேந்தன்-மதுராபதி வேந்தன் என்றும் எ - று.

கொடிய: பழிக்கு அடை. ஞானவுருவாகிய தேன்; உமாதேவியார். தேன் செவ்வழியாழ் செய்ய-வண்டு செவ்வழிப் பண் பாட; செவ்வழி. நெய்தற் பண். தடமும் பொழிலும் சூழ்ந்த என்றுமாம்.

சிரநாலோன் பரவரிய சமட்டிவிச்சா
 புரநாதன் சீவன் முத்தி
புரநாதன் பூவுலக சிவலோகா
 திபன்கன்னி புரேசன் யார்க்கும்
வரநாளுந் தருமூல விலிங்கமேன
 விவைமுதலா மாடக் கூடல்
அரனாம மின்னமளப் பிலவாகு
 முலகுய்ய வவ்வி லிங்கம்.

(இ - ள்.) சிரம் நாலோன் - நான்கு தலைகளையுடைய பிரமன், பரவு அரிய - வணங்குதற்கரிய, சமட்டி விச்சாபுர நாதன் - சமட்டி விச்சாபுர நாதன் என்றும், சீவன் முத்திபுரநாதன் - சீவன் முத்திபுர நாதன் என்றும், பூ உலக சிவலோகாதிபன் - பூலோக சிவலோகாதிபன் என்றும், கன்னி புரேசன்-கன்னி புரேசன் என்றும், யார்க்கும் - எவருக்கும், நாளும்-எப்போதும், வரம்தரு - வரம் தருகின்ற, மூல இலிங்கம் என-மூலலிங்கமென்றும், இவை முதலா-இவை முதலாக, மாடக் கூடல் அரன் நாமம் - நான்மாடக் கூடலில் எழுந்தருளியிருக்கும் சோமசுந்தரக் கடவுளின் திருப்பெயர்கள், இன்னம்அளப்பு இல ஆகும்-இன்னும் அளவிறந்தனவாம்; அ இலிங்கம் உலகு உய்ய-அந்த இலிங்கமானது உலகத்தார் உய்திகூடுதற் பொருட்டு எ - று.

அவ்விலிங்கம் என்பது வரும் பாட்டில் முளைத்தெழுந்தது என்பது கொண்டு முடியும். (ருகு)

பாதாள மேழுருவ முளைத்தெழுந்த
 தவ்விலிங்கப் படிவந் தன்னுள்
ஆதார மாகவமர்ந் தறுபத்து
 நாலுவிளை யாடல் செய்த
போதானந் தன்பெருமை நங்குரவன்
 மொழிப்படியே புகன்றே மென்றான்
வேதாதி கலைதெரிந்த மலயமுனி
 கேட்டறவோர் வினுதல் செய்வார்.

(இ - ள்.) பாதாளம் ஏழ் உருவ முளைத்து எழுந்தது-பாதாள முடியவுள்ள ஏழுலகங்களும் ஊடுருவ முளைத்து மேலெழுந்தது; அ இலிங்கப் படிவம் தன்னுள் - அந்த இலிங்கத் திருமேனியுள், ஆதாரமாக அமர்ந்து - எல்லாவற்றுக்கும் ஆதாரமாக இருந்து, அறுபத்து நாலு விளையாடல் செய்த - அறுபத்து நான்கு திருவிளையாடல்களைச் செய்தருளிய, போதானந்தன் பெருமை - ஞானானந்தனாகிய இறைவனது பெருமையை, நம் குரவன் மொழிப்படியே - நம் குரவனாகிய முருகக் கடவுள் அருளிச் செய்தபடியே, புகன்றோம் என்றான் - கூறினோம் என்றான், வேதாதி கலை தெரிந்த மலயமுனி-வேத முதலிய பல கலைகளையு முணர்ந்த அகத்திய முனிவன்; கேட்டு அறவோர் வினுதல் செய்வார் - முனிவர்கள் அதனைக் கேட்டு மேலும் வினவுவாராயினர் எ - று.

கீழுலகு ஏழாவன:—அதலம், விதலம், சுதலம், தராதலம், ரசாதலம், மகாதலம், பாதாளம் என்பன. படிவம்-வடிவம். மலயமுனி என்றானென்க. போதானந்தன், வேதாதியென்பன வடசொல்நெடிற் சந்தி. கேட்ட என்னும் பெயரெச்சத்து அகரம் தொக்கதுமாம். (௩சு)

அருட்கடலே யிறைவிளையாட் டறுபத்து
நான்கென்று யவையா னந்தப்
பொருட்கடவு ளெக்காலத் தியாவர்பொருட்
டாடினனெம் போதந் தேறித்
தெருட்படர வரன்முறையாற் செப்புகெனக்
கரங்குவித்தார் தென்பால் வெற்பில்
இருப்பவனும் வினயபடிக் கிறைநிரம்பத்
தொகுத்துவிரித் தியம்பு கின்றான்.

(இ - ள்.) அருட் கடலே-கருணைக்கடலே, இறை விளையாட்டு அறுபத்து நான்கு என்றாய் - இறைவன் திருவிளையாடல்கள் அறுபத்து நான்கு என்று கூறியருளினாய்; அவை - அவ் விளையாடல்களை, ஆனந்தப் பொருட்கடவுள் - ஆனந்தப் பொருளாகிய இறைவன், எக்காலத்து யாவர் பொருட்டு ஆடினன் - எந்தக் காலத்தில் யாவர் பொருட்டு ஆடியருளினன்; எம்போதம் தேறித் தெருள்படர - எங்கள் கலங்கிய அறிவு தெளிந்து தூயதாக, வரன் முறையால் செப்புக என-வரன் முறைப்படி கூறியருளுக என்று, கரம் குவித்தார் - கைகளைக் கூப்பி வணங்கினார்கள்; தென்பால் வெற்பில் இருப்பவனும் - பொதியின் மலையிலிருப்பவனாகிய குறுமுனியும், வினயபடிக்கு-கேட்டபடி, இறை நிரம்ப - விடை நிரம்ப, தொகுத்து விரித்து இயம்புகின்றான்-தொகுத்தும் விரித்தும் கூறுகின்றான் எ - று.

தேறி என்றமையால் கலங்கிய என்றுரைக்கப்பட்டது. செப்புகென: அகரம் தொகுத்தல். படிக்கு, கு: அசை. இறை - விடை. தொகுத் துரைத்தல்-பதிகமாக வுரைப்பது. (௩எ)

ஆகச் செய்யுள்—௩உஎ

---

## பதிகம்

வானவர்கோன் பழிதோலைத்த விளையாட்டுங்
கரிசாப மாய்த்த வாறும்
மீனவர்கோன் காடெறிந்து புரங்கண்ட
பெருஞ்சிறப்பு மீன நோக்கி
ஆனதடா தகையழல்வா யவதரித்துப்
பாராண்ட வருளு மீசன்
தானவளை மணஞ்செய்த முடிதரித்து
மண்காத்த தகைமைப் பாடும்.

(இ - ள்.) வானவர் கோன் பழிதொலைத்த விளையாட்டும் - தேவேந்திரனது பழியைத் தீர்த்த திருவிளையாடலும், கரிசாபம் மாய்த்தவாறும் - வெள்ளையானையின் சாபத்தைத் தீர்த்த தன்மையும், மீனவர்கோன் - பாண்டியன், காடு எறிந்து - காட்டை அழித்து, புரம் கண்ட பெருஞ் சிறப்பும் - திருநகரங்கண்ட பெரிய சிறப்பும், மீன நோக்கி ஆன தடாதகை - மீன்போலும் கண்ணை யுடையவளாகிய தடாதகைப் பிராட்டியார், அழல் வாய் அவதரித்து - வேள்வித் தீயில் அவதாரம்செய்து, பார் ஆண்ட அருளும் - பூமியை ஆட்சி செய்த கருணையும், ஈசன் - சிவபெருமான், அவளை மணஞ் செய்து - அப் பிராட்டியாரைத் திருமணம் செய்து கொண்டு, முடிதரித்து மண் காத்த தகைமைப் பாடும் - முடி சூடிக்கொண்டு பூமியை ஆண்ட தகுதியும் எ - று.

விளையாட்டு என்பதனை எல்லாவற்றுக்கும் கொள்க. மீனவர் கோன் - குலசேகர பாண்டியன். மலயத்துவச பாண்டியன் செய்த வேள்வித் தீ. (க)

புலிமுனியும் பணிமுனியுந் தொழவெள்ளி
மன்றுணடம் புரிந்த வாறும்
வலிகெழுதோட் குண்டகட்டுக் குறட்கன்னக்
குன்றளித்த வகையும் பின்னும்
நலிபசிநோய் கெடவன்னக் குழியழைத்துக்
கொடுத்துநீர் நசைக்கு வையை
அலைபுனல்கூ யருத்தியதும் பொன்மாலைக்
கேழுகடலு மழைத்த வாறும்.

(இ - ள்.) புலி முனியும் பணி முனியும் தொழ - வியாக்கிரபாதரும் பதஞ்சலியும் வணங்க, வெள்ளி மன்றுள் நடம்புரிந்த வாறும் - வெள்ளியம்பலத்தின்கண் திருக்கூத்தாடிய தன்மையும், வலி கெழு தோள் - வலிமை பொருந்திய தோளையுடைய, குண்டு அகட்டுக் குறட்கு - குண்டோதர பூதத்திற்கு, அன்னக்குன்று அளித்தவகையும் -

அன்னமாகிய மலையை இட்ட தன்மையும், பின்னும் நலி பசி நோய் கெட-மீண்டும் வருத்துகின்ற பசிநோயானது அழிய, அன்னக்குழி அழைத்துக்கொடுத்து - அன்னக்குழியை வருவித்து அளித்து, நீர் நசைக்கு - நீர்வேட்கைக்கு, அலைபுனல் வையை கூய் அருத்தியதும் - அலைகின்ற நீரையுடைய வையை நதியை அழைத்துக் குடிப்பித்ததும், பொன்மாலைக்கு - காஞ்சன மாலைக்கு (நீராடற்பொருட்டு), எழுகடலும் அழைத்தவாறும் - ஏழுகடலையும் அழைத்துக்கொடுத்த தன்மையும் எ - று.

குண்டு-ஆழம். அகடு-வயிறு. குண்டோதரன்-ஆழ்ந்தவயிற்றையுடையவன். குறள்-குறியது. அதனை நலிகின்ற. கூவி யென்பது கூய் என்றாயது. காஞ்சன மாலை-மலயத்துவசன் றேவி. (உ)

அந்தரர்கோ ளுதனத்தி லுறைமலயத்
துவசனைமீண் டழைத்த வாறும்
சுந்தரவுக் கிரகுமர னவதரித்த
வாறும்வளை சுடர்வேல் செண்டு
தந்தையிடத் தவன்பெற்ற வாறுமவ
னவ்வடிவேல் சலதி வீறு
சிந்தவிடுத் ததுமகவான் முடியைவளை
யெறிந்திறைவன் சிதைத்த வாறும்.

(இ - ள்.) அந்தரர்கோன் ஆதனத்தில் உறை - தேவேந்திரனுடைய ஆசனத்தில் இருந்த, மலயத்துவசனை மீண்டு அழைத்தவாறும் - மலயத்துவச பாண்டியனைப் பூவுலகில் மீளவும் வரும்படி அழைத்த தன்மையும், சுந்தர உக்கிர குமரன் அவதரித்தவாறும்-அழகிய உக்கிர குமாரபாண்டியன் அவதரித்த தன்மையும், அவன் - அப் பாண்டியன், தந்தையிடத்து (தன்)-தந்தையிடத்து, வளை சுடர்வேல் செண்டு பெற்றவாறும் - வளையும் ஒளியினையுடைய வேலும் செண்டும் பெற்றுக் கொண்ட தன்மையும், அவன் - அவ் வுக்கிரகுமார பாண்டியன், அவ்வடிவேல் - அந்தக் கூரிய வேற்படையை, சலதி வீறு சிந்த விடுத்ததும் - கடலின் தருக்குக் கெடுமாறு விட்டதும், இறைவன் - அப் பாண்டியன், வளை எறிந்து - திகிரிப்படையை வீசி, மகவான் முடியைச் சிதைத்தவாறும் - இந்திரன் முடியை அழித்த தன்மையும் எ - று.

அந்தரர் - தேவர். மீண்டு - மீள: செய வெனெச்சம் திரிந்தது. வளைவேல் செண்டு-படைக்கலங்கள்; வளை-சக்கரம். உக்கிரகுமரன்-முருகக் கடவுளின் அவதாரம். தந்தை - சோமசுந்தர பாண்டியனாகிய இறைவன். இறைவன் - குமரன். (ங)

பொன்னசலந் தனைச்சேண்டாற் புடைத்துநிதி
யெடுத்ததுவும் புனிதர்க் கீசன்
பன்னரிய மறைப்பொருளைப் பகர்ந்ததுவு
மாணிக்கம் பகர்ந்த வாறுந்

தொன்னகர்மே னீர்க்கிழவன் வரவிடுத்த
　　கடல்சுவறத் தொலைத்த வாறும்
அன்ன தனித் தொன்மதுரை நான்மாடக்
　　கூடனக ரான வாறும்.

(இ - ள்.) பொன் அசலம் தனை - பொன் மலையாகிய மேருவை, செண்டால் புடைத்து - செண்டாலடித்து, நிதி எடுத்ததுவும் - பொருளை எடுத்ததுவும், புனிதர்க்கு - முனிவர்களுக்கு, ஈசன் - சிவபெருமான், பன் அரிய மறைப் பொருளைப் பகர்ந்ததுவும் - சொல்லுதற்கரிய வேதப் பொருளைக் கூறியதும், மாணிக்கம் பகர்ந்தவாறும் - மாணிக்கம் விற்ற தன்மையும், தொல் நகர்மேல் - பழமையான மதுரை நகரத்தின் மேல், நீர்க் கிழவன் - நீருக்குரியவனாகிய வருணனானவன், வரவிடுத்த - வரச்செய்த, கடல் சுவறத் தொலைத்த வாறும் - கடல் சுவறுமாறு (அதை) அழித்த தன்மையும், அன்ன தனி - அந்த ஒப்பற்ற, தொல் மதுரை - பழைய மதுரையானது, நான் மாடக் கூடல் நகர் ஆனவாறும் - நான் மாடக் கூடல் நகராகிய தன்மையும் எ - று.

அசலம் - அசைவில்லாதது; மலை. புனிதர் - தூயர். (ச)

வட்டங்கொள் சடையுடைய சித்தர்விளை
　　யாடியதோர் வனப்புங் கையிற்
கட்டங்கந் தரித்தபிரான் கல்லானை
　　கரும்பருந்தக் காட்டு மாறும்
உட்டங்கு வஞ்சனையா லமணர்விடு
　　வாரணத்தை யொழித்த வாறும்
இட்டங்கொள் கௌரிமுனம் விருத்தனிளை
　　யோன்குழவி யான வாறும்.

(இ - ள்.) வட்டம் கொள் சடையுடைய சித்தர் - வட்டமாகக் கட்டிய சடையையுடைய எல்லாம்வல்ல சித்தர், விளையாடியது ஓர் வனப்பும் - விளையாடியதாகிய ஓர் அழகும், கையில் கட்டங்கம் தரித்த பிரான் - கையில் மழுவை ஏந்திய இறைவனாகிய அந்தச் சித்தர், கல் ஆனை கரும்பு அருந்தக் காட்டுமாறும் - கல்லானை கரும்பு தின்னக் காட்டிய தன்மையும், உள் தங்கு வஞ்சனையால் - உள்ளத்தில் நிலை பெற்ற வஞ்சனையினாலே, அமணர் விடு - சமணர்கள் ஏவிய, வாரணத்தை ஒழித்தவாறும் - யானையை எய்த தன்மையும், இட்டம் கொள் கௌரி முனம் - அன்புடைய கௌரியின்முன், விருத்தன் இளையோன் குழவி ஆனவாறும் - விருத்தனும் குமாரனும் பாலனும் ஆகிய தன்மையும் எ - று.

'சுத்திய பொக்கணத் தென்பணி கட்டங்கம்' என்னும் திருக்கோவையார்ச் செய்யுளுரையில் 'கடங்கமென்பது மழு; இது கட்டங்கமென நின்றது' என்று பேராசிரியர் உரைத்திருப்பது காண்க. கட்டங்கம் - கட்வாங்கம் என்பதன் றிரிபென்றும், யோக தண்டமென்றும் கூறுவாருமுளர். (ரு)

செய்யதாண் மாறிநட மாடியதும்
புழியஞ்சு திறனுந் தாயை
மையலாற் புணர்ந்தமகன் பாதகத்தை
மாற்றியது மதியா தாசான்
தையலாள் தனைவிரும்பு மாணவனை
வாளமரிற் றடிந்த வாறும்
பையரா வெய்ததுவும் படிற்றமணர்
விடுத்தபசுப் படுத்த வாறும்.

(இ - ள்.) *செய்யதாள் மாறி நடம் ஆடியதும்* - சிவந்த திருவடி மாறி ஆடியதும், *பழி அஞ்சு திறனும்*-பழியஞ்சிய வகையும், *தாயை*-தன் தாயை, *மையலால்* - காம மயக்கத்தினாலே, *புணர்ந்த மகன்* - சேர்ந்த மகனுடைய, *பாதகத்தை மாற்றியதும்* - மாபாதகத்தைத் தீர்த்ததுவும், *மதியாது ஆசான் தையலாள் தனைவிரும்பும் மாணவனை* - ஆராயாது குரவன் பன்னியை விரும்பிய மாணவனை, *வாள் அமரில் தடிந்தவாறும்*-வாட்போரில் வெட்டின தன்மையும், *படிற்று அமணர் விடுத்த* - வஞ்சனையுடைய அமணர்கள் ஏவிய, *பை அரா எய்ததுவும்* - படத்தையுடைய நாகத்தை எய்ததுவும், *பசுப் படுத்த வாறும்* - மாயப்பசுவை வதைத்த தன்மையும் எ - று.

மதியாது-பொருளாக்காது எனலுமாம். படுத்தல்-கோறல். (சு)

அறவேற்றுப் பரியுகைத்து மெய்க்காட்டுக்
கொடுத்தவிளை யாட்டுங் காட்டுச்
சுறவேற்றுக் கொடி*யரசன் றனக்குலவாக்
கிழிகொடுத்த தொடர்பு நாய்கர்
நறவேற்ற மலர்க்குழலார் மனங்கவர்ந்து
வளைபகர்ந்த நலனு மாறு
மறவேற்கண் மாதரார்க் கட்டமா
சித்திபெற வகுத்த வாறும்.

(இ - ள்.) *அற ஏற்றுப் பரி உகைத்து* - தரும விடையாகிய புரவியைச் செலுத்தி, *மெய்க்காட்டுக் கொடுத்த விளையாட்டும்* - மெய்க்காட்டிட்ட திருவிளையாடலும், *காட்டுச் சுறவு ஏற்றுக்கொடி அரசன் தனக்கு* - நீரில் வாழும் ஆண்சுறுவை எழுதிய கொடியையுடைய பாண்டி மன்னனுக்கு, *உலவாக் கிழி கொடுத்த தொடர்பும்* - உலவாக்கிழி யருளிய தொடர்ச்சியும், *நாய்கர் நறவு ஏற்ற மலர்க் குழலார்*-வணிகருடைய தேன்பொருந்திய மலர்களையணிந்த கூந்தலையுடைய மகளிரின், *மனம் கவர்ந்து* - மனத்தைக் கவர்ந்து, *வளை பகர்ந்த நலனும்* - வளையல் விற்ற நன்மையும், *மற வேல் கண் ஆறு மாதரார்க்கு*-வீரவேல் போலுங் கண்களையுடைய ஆறு மகளிருக்கு, *அட்டமா சித்தி பெற வகுத்தவாறும்* - அட்டமாசித்தி உபதேசித் தருளிய தன்மையும் எ - று.

---

(பா - ம்.) * நாட்டுஞ் சுறவேற்றுக்கொடி.

ஏற்றையே பரியாகச் செய்து உகைத்தனர்; இதனை,

"கொற்றப்போர் விடையைத்தானே குரங்குளைப் பரியாமேற்
டொற்றைச்சேவகராய்மாறி யாடியவொருவர்வந்தார்"[கொண்

என அப்படலத்திற் கூறுமாற்ரு னறிக. காடு-வனம்; வனம் - நீர். சுறவின் ஆண் ஏறெனப் படுதலே, 'கடல்வாழ் சுறவும் ஏறெனப் படுமே' என்னும் தொல்காப்பியச் சூத்திரத்தா னறிக. அரசன் - குல பூடண பாண்டியன். உலவாக்கிழி - எடுக்கக் குறையாத பொன் முடிப்பு. காட்டுதலையுடைய கொடியென் றுரைப்பாரும், நாட்டும் எனப் பாடங்கொண்டு, நாட்டுங்கொடியென் றுரைப்பாரும் உளர்.()

சென்னிபொருட் டெயில்வாயி றிறந்தடைத்து
விடைபொறித்த செயலுஞ் சென்னி
மன்னிகலிட் டமர்விளைப்ப மீனவர்க்கு
நீர்ப்பந்தர் வைத்த வாறும்
பொன்னனையாள் பொருட்டிரத வாதவினை
முடித்ததுவும் புகார்க்கு வேந்தன்
தன்னையகன் குழிவீட் டித் தென்னவற்கு
மறவாகை தந்த வாறும்.

(இ - ள்) சென்னி பொருட்டு-சோழன் காரணமாக, எயில் வாயில் திறந்து - மதில் வாயிலைத் திறந்து, அடைத்து விடை பொறித்த செயலும் - திருக்காப்பிட்டு விடையிலச்சினை வைத்தசெய் கையும், சென்னிமன் இகல் இட்டு அமர்விளைப்ப - சோழன் நிலை பெற்ற பகைகொண்டு போர்விளைப்ப, மீனவற்கு நீர்ப்பந்தர் வைத்த வாறும் - பாண்டியனுக்குத் தண்ணீர்ப் பந்தல் வைத்த தன்மையும், பொன்னனையாள் பொருட்டு இரதவாத வினை முடித்ததுவும் - திருப் பூவணத்திருந்த பொன்னனையாளுக்கு இரசவாத வினையை முடித் ததுவும், புகார்க்கு வேந்தன் தன்னை-காவிரிப்பூம் பட்டினத்திற்கு அர சனுகிய சோழனை, அகன் குழி வீட்டி-அகன்ற குழியில் வீழ்ப்பித்து, தென்னவற்கு-பாண்டியனுக்கு, மறவாகை தந்தவாறும் - வெற்றிக் குரிய வாகை மாலையை அளித்த தன்மையும் எ - று.

சென்னி - காடுவெட்டிய சோழன். மீனவன் - இராச புரந்தர பாண்டியன். புகார்க்கு வேந்தன்-சேவக சோழன்; புகார் - காவிரிப் பூம் பட்டினம்; காவிரி கடலொடு கலக்குமிடத்துள்ளது;சோழர்தலை நகரங்களிலொன்று. தென்னவன்-சுந்தரேசபாத சேகரபாண்டியன். மறம்-வீரம்; ஈண்டு வெற்றி. அகன் குழி: மரூஉ முடிபு. வீட்டி: வீழ்த்தியென்பதன் மரூஉ. (அ)

மனக்கவலை கெடவுலவாக் கோட்டையடி
யாற்களித்த வகையு மாமன்
எனக்கருணை வடிவாகி வழக்குரைத்துப்
பொருவணிகற் கீந்த வாறுஞ்

சினக்கதிர்வேல் வரகுணற்குச் சிவலோகங்
காட்டியதுந் திவவுக் கோலான்
தனக்கடிமை யெனவிறகு திருமுடிமேற்
சுமந்துபகை தணித்த வாறும்.

(இ - ள்.) மனக்கவலை கெட - மனத்திலுள்ள துன்பம் நீங்கு மாறு, அடியாற்கு - தொண்டனுக்கு, உலவாக் கோட்டை அளித்த வகையும் - உலவாக் கோட்டை யளித்தருளிய தன்மையும், மாமன் என - மாமன்போல, கருணை வடிவு ஆகி - அருள் வடிவு கொண்டு, வழக்கு உரைத்து - வழக்குக் கூறி, வணிகர்க்குப் பொருள் ஈந்தவாறும் - வணிகனுக்குப் பொருள் கொடுத்த தன்மையும், சினக் கதிர் வேல் வரகுணற்கு - சினத்தையுடைய ஒளி பொருந்திய வேற் படையை யுடைய வரகுண பாண்டியனுக்கு, சிவலோகம் காட்டியதும் - சிவலோகங் காட்டியருளியதும், திவவுக் கோலான் தனக்கு - நரம்புக் கட்டினையுடைய யாழ் வல்ல பாணபத்திரனுக்கு, அடிமை என - அடிமை என்று கூறி, திருமுடிமேல் விறகு சுமந்து - திருமுடியின்கண் விறகைச் சுமந்து, பகை தணித்தவாறும் - பகையைவென்ற தன்மையும், எ - று.

உலவாக்கோட்டை - கொள்ளக் குறையாத அரிசிக்கோட்டை. அடியான்-உழுதொழிலாளனை ஒரு சிவபத்தன். திவவு-யாழ் நரம்பின் கட்டு. கோல் என்றது யாழினை. கோலான் - பாண பத்திரன். பகை - பகைவன்; ஏமநாதன். (கூ)

அப்பாணற் கிருநிதியஞ் சேரனிடைத்
திருமுகமீந் தளித்த வாறும்
அப்பாணன் பாடமழை யரையிரவிற்
பொற்பலகை யளித்த வாறும்
அப்பாணன் மனைவியிசைப் பகைவெல்ல
வண்ணலவை யடைந்த வாறும்
அப்பாண னாளென்றோன் முலையருத்திப்
பன்றியுயி ரளித்த வாறும்.

(இ - ள்.) அப் பாணற்கு-அந்தப் பாண பத்திரனுக்கு, சேரன் இடைத் திருமுகம் ஈந்து - சேரமான் பெருமாளிடத்துத் திருமுகம் கொடுத்து, இரு நிதியம் அளித்தவாறும்-பெரிய பொருளைக் கொடுப்பித்த தன்மையும், அப் பாணன் பாட-அவன் பாடுதற்கு, மழைஅரை இரவில் - மழை பெய்கின்ற நள்ளிரவில், பொன் பலகை அளித்த வாறும்-பொன் பலகை அருளிய தன்மையும், அப் பாணன் மனைவி - அவன் மனைவி, இசைப்பகை - இசைக்குப் பகையாய் வந்தவளை, வெல்ல-வெல்லுதற் பொருட்டு, அண்ணல் அவை அடைந்தவாறும்- இறைவன் பாண்டியன் சபைக்குப்போன தன்மையும், அப் பாணன் ஆள் என்றோன்-அந்தப் பாணபத்திரன் அடிமை நான் என்று கூறிய சோமசுந்தரக் கடவுள், முலையருத்தி - முலைகொடுத்து, பன்றி உயிர் அளித்தவாறும் - பன்றிக் குட்டிகளின் உயிரைக் காப்பாற்றிய தன்மையும் எ - று.

சேரன் - கழறிற்றறிவாராகிய சேரமான் பெருமான்; அறுபத்து மூன்று தனியடியாருள் ஒருவர். திருமுகம்-'மதிமலி புரிசை'என்னும் பாசுரம். பகை - ஈழநாட்டுப் பாடினி. அவை - இராசராச பாண்டியன் அவைக்களம். (க0)

வயவேனக் குருளைகளை மந்திரிக
ளாக்கியதும் வலியுண் டாகக்
கயவாய்க்குக் குருமொழிவைத் தருளியது
நாரைக்குக் கருணை நாட்டந்
தயவால்வைத் தருண்முத்தி நல்கியதுங்
கூடனகர் தன்னைச் சித்தர்
புயநாகம் போய்வளைந்து திருவால
வாயாக்கிப் போந்த வாறும்.

(இ - ள்.) வய ஏனக் குருளைகளை - வெற்றியையுடைய அந்தப் பன்றிக் குட்டிகளை, மந்திரிகள் ஆக்கியதும்-அமைச்சர்களாகச் செய்தருளியதும், கயவாய்க்கு - கரிக்குருவிக்கு, வலி உண்டாக - ஏனைய பறவைகளைவிட வலிமை உண்டாகுமாறு, குருமொழி வைத்தருளியதும் - உபதேசித் தருளியதும், நாரைக்குக் கருணை நாட்டம் தயவால் வைத்தருள் - நாரைக்கு அருட் பார்வையைக் கருணையோடு வைத்தருளி, முத்தி நல்கியதும்-வீடுபேற்றை அருளியதும், சித்தர் புயநாகம் போய் - எல்லாம் வல்ல சித்தரின் கையில் அணிந்த கங்கணமாகிய நாகமானது சென்று, கூடல் நகர் தன்னை வளைந்து - நான்மாடக்கூடலாகிய நகரை வளைந்து, திருவாலவாய் ஆக்கிப் போந்தவாறும் - அதனைத் திருவாலவாய் என்னும் பெயருடைய தாக்கி வந்த தன்மையும் எ - று.

கயவாய் - கரிக்குருவி. குருமொழி வைத்தல் - உபதேசித்தல். வைத்தருளி யென்பது இகர விகுதி குறைந்து நின்றது; அருள் என்பதனை முத்திக்கு அடையாக்கலுமாம். (கக)

சுந்தரனென் றெழுதியகூ ரம்பெய்து
செம்பியன்போர் தொலைத்த வாறுஞ்
செந்தமிழோர்க் கியற்பலகை யருளியதுந்
தருமிக்குச் செம்பொன் பாடித்
தந்ததுவு மாறுபடு கீரற்குக்
கரையேற்றந் தந்தவாறும்
விந்தமடக் கியமுனியாற் கீரனியற்
றமிழ்தெளிய விடுத்த வாறும்.

(இ - ள்.) சுந்தரன் என்று எழுதிய - சுந்தரன் என்று பெயர் எழுதப்பட்ட, கூர் அம்பு எய்து-கூரிய அம்பினை விடுத்து,செம்பியன் போர்-சோழன் செய்த போரினை, தொலைத்தவாறும் - அழித்த தன்மையும், செந்தமிழோர்க்கு இயல்பலகை அருளியதும் - தூய தமிழை

உணர்ந்த சங்கப் புலவர்கட்குச் சங்கப் பலகை அருளிச் செய்ததும், தருமிக்குப்பாடிச் செம்பொன் தந்ததுவும் - தருமிக்குப் பாடிக் கொடுத்து சிவந்த பொன்முடிப்பைக் கொடுப்பித்தருளியதும், மாறுபடு கீரற்கு-(தன்னொடு) மாறுகொண்ட நக்கீரனுக்கு, கரை ஏற்றம் தந்தவாறும்-கரையேறுதலை அளித்த தன்மையும், விந்தம் அடக்கிய முனியால் - விந்தமலையை அடக்கிய அகத்திய முனிவனால், கீரன் இயல் தமிழ் தெளிய விடுத்தவாறும் - அவன் இலக்கணம் அறிந்து கொள்ளும்படி ஏவியருளிய தன்மையும் எ - று.

செம்பியன்-விக்கிரமசோழன். செந்தமிழோர்-கபிலர் பரணர் நக்கீரர் முதலாயினோர்; பொய்யடிமை யில்லாத புலவர். இயல்-இலக்கணம். 'கொங்குதேர் வாழ்க்கை' என்னும் செந்தமிழ்ப்பாவினைப் பாடி. பொற்றாமரையினின்றும் கரையேற்றுவித்தது. இயற்றமிழ் - தமிழ் இயல்; தமிழிலக்கணம். கீரற்கு என்பதை உருபு மயக்கமாகக் கொண்டு, கீரனைக்கரையேற்றிய என்னலுமாம். (கஉ)

ஊமனாற் புலவரிக லகற்றியது
மிடைக்காட னுடன்போய்க் கொன்றைத்
தாமனார் வடவால வாயமர்ந்த
பரிசும்வலை சலதி வீசிப்
பூமனாய் குழலியைவேட் டருளியதும்
வாதவூர்ப் புனிதர்க் கேறத்
தேமனாண் மலரடிகண் முடிசூட்டி
யுபதேசஞ் செய்த வாறும்.

(இ - ள்.) ஊமனால் புலவர் இகல் அகற்றியதும் - மூங்கையாகிய உருத்திரசன்மரால் சங்கப் புலவர்கள் மாறுபாட்டைப்போக்கியருளியதும், கொன்றைத் தாமனார் - கொன்றை மாலையை அணிந்த சோமசுந்தரக் கடவுள், இடைக்காடனுடன் போய் - இடைக்காடனோடு சென்று, வட ஆலவாய் அமர்ந்த பரிசும்-வட மதுரையின்கண் தங்கிய தன்மையும், சலதி வலைவீசி-கடலில் வலையை வீசி, பூமன் ஆய் குழலியை வேட்டு அருளியதும் - மலர்கள் பொருந்திய ஆய்ந்து வகிர்ந்த கூந்தலையுடைய உமையம்மையை மணந்தருளியதும், வாதவூர் புனிதர்க்கு-திருவாத வூரின்கண் தோன்றியருளிய தூயவருக்கு, ஏற-(அவர்) வீடுபேற்றை அடைய, தேம் மன் நாள் மலர் அடிகள் முடிசூட்டி உபதேசம் செய்தவாறும்-தேன் பொருந்திய அன்றலர்ந்த மலர் போலுந் திருவடிகளை (அவர்) முடியின்கண் சூட்டி உபதேசித் தருளிய தன்மையும் எ - று.

ஊமை-முருகக்கடவுளின் அமிசமாய் வைசியர் மரபில் உதித்து மூங்கைப் பிள்ளையாயிருந்த உருத்திரசன்மர். வடவாலவாய் - மதுரைக்கு வடக்கிலும் வையை நதிக்குத் தெற்கிலுமுள்ள வடமதுரை. வாதவூர்ப் புனிதர்-திருவாதவூரடிகள்; மாணிக்க வாசகர். (கங)

நரிகள்பரி யாக்கியதும் பரிகணரி
யாக்கியது நாகம் பூண்டோன்
அரியதிரு மேனியின்மே லடிசுமந்து
மண்சுமந்த வருளுந் தென்னன்

எரியடுவெஞ் சுரந்தணித்த வாறுமம
ணரைக்கழுவி லிட்ட வாறுங்
கரியதென வன்னிகிண றிலிங்கங்கூய்
வணிகமகட் காத்த வாறும்.

(இ - ள்.) நரிகள்பரி ஆக்கியதும்-நரிகளைப் பரிகள் ஆக்கியதும், பரிகள் நரி ஆக்கியதும் - பரிகளை நரிகள் ஆக்கியதும், நாகம் பூண்டோன்-நாகத்தை அணிந்த சோமசுந்தரக் கடவுள், அரிய திருமேனியின்மேல் - (தனது) அரிய திருமேனியிலே, அடிசுமந்து மண்சுமந்த அருளும்-பிரம்படி சுமந்து மண்சுமந்தருளியதும், தென்னன்-பாண்டியனது, எரி அடுவெஞ்சுரம் தணித்தவாறும்-அழல் போலும் வருத்தாநின்ற கொடிய வெப்பு நோயைத் தணித்தருளிய தன்மையும், அமணரைக்கழுவில் இட்டவாறும்-சமணர்களைக் கழுவி லேற்றிய தன்மையும், கரி வன்னி கிணறு இலிங்கம் கூய்-சான்றாக வன்னி கிணறு இலிங்கம் ஆகிய இம் மூன்றையும் அழைத்து, வணிக மகள் காத்தவாறும்- வணிகப்பெண்ணைக் காத்தருளிய தன்மையும் எ-று.

வானோராலுங் காண்டற் கரிய திருமேனி. சுமந்த அருளின் றன்மையும். தென்னன்-கூன்பாண்டியன்; நெடுமாறர். கரியது, அது: பகுதிப் பொருள் விகுதி. (கச)

எனத்தொகையா லறுபத்து நான்கிவற்றை
நிறுத்தமுறை யீறி லாத
வினைத்தொகையா றகன்றீரேக் காலமெவர்
பொருட்டெனநீர் வினவ வாற்றான்
மனத்தளவி லன்புமடை யுடைந்தொழுகத்
திருவால வாயான் றாளை
நினைத்தளவி லானந்தம் பெருகவிரித்
துரைப்பலென நெறியாற் கூறும்.

(இ - ள்.) எனத் தொகையால் அறுபத்து நான்கு - என்று தொகையினால் அறுபத்து நான்கு திருவிளையாடல்களாம்; ஈறு இலாத வினைத்தொகை ஆறு அகன்றீர்-முடிவில்லாத வினைத் தொகுதியின் நெறியைக் கடந்த முனிவர்களே, எக்காலம் எவர்பொருட்டு என நீர் வினவவாற்றால்-எந்தக் காலத்தில் எவர்பொருட்டு என்று நீர் கேட்ட படியால்,இவற்றை நிறுத்த முறை-இவைகளை இங்கு வைத்த முறைப் படியே, விரித்து உரைப்பல் என-விரித்துக் கூறுவேன் என்று, மனத்து அளவு இல் அன்பு-மனத்தின்கண் அளவிறந்த அன்பானது, மடை உடைந்து ஒழுக-மடை திறந்து பாய, திருவாலவாயான் தாளை நினைந்து-திருவாலவாயுடைய பெருமான் திருவடிகளைச் சிந்தித்து, அளவு இல் ஆனந்தம் பெருக-அளவற்ற இன்பம் மிக, நெறியால் கூறும்-முறைப்படி கூறுவான் எ-று.

வினவினமை மூர்த்தி விசேடப்படலத்திறுதிச் செய்யுளிற் காண்க. மனத்து நினைத்தென்றுமாம். மடை யுடைந்தாற்போல.

விரைத்த மறையென்பதுபாடமாகாமையுணர்க.பல்வகைப் பொருளை யும் தொகுத் துரைத்தமையின் இப் பதினைந்து செய்யுளும் பதிகம் எனப்படும் ;

"பதிகக் கிளவி பல்வகைப் பொருளைத்
தொகுதி யாகத் தொகுத்துரைப் பதுவே"

என்னுஞ் சூத்திரமும் காண்க (கரு)

ஆகச் செய்யுள்—ருசஉ.

———

## க. இந்திரன் பழிதீர்த்த படலம்

[அறுசீரடியாசிரிய விருத்தம்]

மின்பயில் குலிசப் புத்தேள் விருத்திரா சுரனைக் கொன்ற
வன்பழி விடாது பற்றக் கடம்பமா வனத்தி லெய்தி
என்பர வாரம் பூண்ட விறைவனை யருச்சித் தேத்திப்
பின்பது கழிந்து பெற்ற பேற்றினை யெடுத்துச் சொல்வாம்.

(இ - ள்.) மின்பயில்-ஒளிதங்கிய, குலிசப்புத்தேள் - வச்சிரப் படையையுடைய இந்திரன், விருத்திராசுரனைக் கொன்ற-விருத்திரன் என்னும் அசுரனைக் கொன்றதனாலாகிய, வன்பழி-வலிய பழியானது, விடாது பற்ற-நீங்காதுபற்ற, மா கடம்பவனத்தில் எய்தி - (அது நீங்கப்) பெரிய கடம்பவனத்தில் வந்து, என்பு அரவு ஆரம் பூண்ட இறைவனை-எலும்பினையும் பாம்பினையும் மாலையாக அணிந்த சிவ பெருமானை, அருச்சித்து ஏத்தி-அருச்சித்துத் துதித்து, பின்பு அது கழிந்து-பின் அப்பழியானது நீங்கி, பெற்ற பேற்றினை எடுத்துச் சொல்வாம்-பெற்ற பயனை எடுத்துக் கூறுவாம் எ-று.

விருத்திராசுரன் : தீர்க்க சந்தி. கழிந்து-கழிய : எச்சத்திரிபு ; அதினீங்கி யெனலுமாம். (க)

முன்னதா முகத்தில் வண்டு மூசுமந் தாரநீழற் [போற்பூண்
போன்னவிர் சுணங்குண் கோங்கைப்புலோமசை மணாளன்
மின்னவிர்ந் திமைப்பச் சிங்கஞ் சுமந்தமேல் லணைமேன் மேவி
அன்னமேன் னடையா ராடு மாடன்மே லார்வம் வைத்தான்.

(இ - ள்.) முன்னது ஆம் உகத்தில்-முற்பட்டதாகிய கிரேதா யுகத்தில், வண்டு மூசும்மந்தார நீழல்-வண்டுகள் மொய்க்கும் மந்தார மரத்தினது நிழலின்கண், சிங்கம்சுமந்த-சிங்கங்களாற் றாங்கப்பெற்ற, மெல் அணை மேல்-மெத்தென்ற ஆதனத்தின்மேல். பொன் அவிர் சுணங்கு உண் கொங்கை-பொற் பிதிர்போல விளங்கும் தேமலைக் கொண்டிருக்கிற கொங்கைகளையுடைய, புலோமசை மணாளன்-இந்தி ராணியின் தலைவனாகிய இந்திரன், பொன் பூண்-பொன்னாலாகிய அணிகள், மின் அவிர்ந்து இமைப்ப-மின்போலும் விளங்கி ஒளிவிட, மேவி-வீற்றிருந்து, அன்னம் மெல்நடையார் ஆடும்-அன்னம் போலும் மெதுவான நடையையுடைய மகளிர் ஆடுகின்ற, ஆடல்மேல் ஆர்வம் வைத்தான்-கூத்தின்மேல் விருப்பம் வைப்பானாயினன் எ - று.

யுகம் உகமெனத் திரிந்தது; இது தமிழில் ஊழி யெனப்படும். எக்காலம் என்னும் வினாவிற்கு விடை கூறுவாராய் 'முன்னதா முகத்தில்' என்றார். மர மென்னும் பொதுமைபற்றி வண்டு மொய்த்தல் கூறுவர். மந்தாரம்-ஐந்தருக்களில் ஒன்று; கற்பகம்முதலியவற்றுக்கும் உபலக்கணம்-

"உண்டற் குரிய வல்லாப் பொருளை
உண்டன போலக் கூறலு மரபே"

என்பது இலக்கணமாகலின் 'உண் கொங்கை' என்றார். ஆடலை நோக்குதற்கண். நீழற்கண் அணைமேல் மேவி ஆர்வம் வைத்தான் என முடிக்க. (உ)

மூவகை மலரும் பூத்து வண்டுளே முழங்கத் தெய்வப்
பூவலர் கொடிபேர்ந் தன்ன பொன்னனார் கூத்து மன்னார்
நாவல ரமுத மன்ன பாடலு நாக நாட்டுக்*
காவலன் கண்டு கேட்டுக் களிமதுக் கடலு ளாழ்ந்தான்.

(இ - ள்.) தெய்வப்பூ-தெய்வத் தன்மை பொருந்திய தாமரை மலரானது, வண்டு உளே முழங்க-வண்டு உள்ளே ஒலிக்கா நிற்க, மூவகை மலரும்-ஏனைய கோட்டுப்பூ நிலப்பூ கொடிப்பூ என்ற மூவகை மலர்களையும், பூத்து-மலர்வித்து, அலர்-மலரப் பெற்ற, கொடி பேர்ந்து அன்ன-கொடிகள் ஆடினாற் போன்ற, பொன் அனார் கூத்தும்-திருமகளை ஒத்த தேவமகளிரின் கூத்தையும், அன்னார்-அம்மகளிரின், நா அலர் - நாவினின்றும் தோன்றும், அமுதம் அன்ன பாடலும்-அமுதத்தை யொத்த பாடலையும், நாக நாட்டுக் காவலன்-விண்ணுலகிற்குத் தலைவனாகிய இந்திரனானவன், கண்டு கேட்டு-(முறையே) கண்டும் கேட்டும்,களிமதுக்கடலுள் ஆழ்ந்தான்-களிப்பாகிய மதுக்கடலுள் அழுந்தியிருப்பானாயினன் எ - று.

தெய்வப்பூ என்றது திருமகள் முதலாயினோர்க்கு இருக்கையாய்ச் சிறந்துள்ள தாமரைப்பூவை. நால்வகை மலருள் நீர்ப்பூவாகிய தாமரை ஏனைய மூவகை மலரையும் பூத்துக்கொண்டிருக்கப் பெற்ற கொடி. மகளிர்க்குக் கொடியும், அவர் முகத்திற்கு நீர்ப்பூவாகிய தாமரையும், கண்ணிற்கும் இதழுக்கும் கோட்டுப் பூவாகிய கருவிளை மலரும்,முருக்கிதழும், மூக்கிற்கு நிலப்பூவாகிய எட்பூவும், பல்லுக்குக் கொடிப்பூவாகிய முல்லை யரும்பும், பாட்டுக்கு வண்டு உள்ளே முழங்குதலும், ஆட்டத்திற்குக் கொடியின் பெயர்ச்சியும் உவமையாம். பூவலர் என்பதைக் கொடிக்கு அடையாக்கித் தெய்வத் தன்மையுள்ள கொடி ஏனை மூவகை மலரையும் பூத்து என்றுரைப்பாருமுளர்; வண்டு உள்ளே முழங்க என்றமையால் இப்பொருள் சிறவாமை காண்க. பேர்ந்தாலன்ன என்பது விகாரம். கண்டும் கேட்டும் என்னும் உம்மைகள் தொக்கன. தன்னை மறந்தானென்பார், 'களிமதுக் கடலுளாழ்ந்தான்' என்றார். கூத்தும் பாடலும் கண்டு கேட்டு என்றது நிரனிறை. கொடி பேர்ந்தன்ன என்றது இல்பொருளுவமை. (ங)

பையரா வணிந்த வேணிப் பகவனே யனைய தங்கள்
ஐயனும் வியாழப் புத்தே ளாயிடை யடைந்தா னாகச்
செய்யதாள் வழிபா டின்றித் தேவர்கோ னிருந்தா னந்தோ
தையலார் மயலிற் பட்டோர் தமக்கொரு மதியுண் டாமோ.

(இ - ள்.) பை அரா அணிந்த வேணி-படத்தையுடைய பாம்புகளை அணிந்த சடையையுடைய, பகவனே அனைய-சிவபெருமானையே ஒத்த, தங்கள் ஐயனும்-தங்கள் குரவனாகிய,வியாழப்புத்தேள்-வியாழ

(பா - ம்) * நாக நாடு.

தேவன், ஆயிடை அடைந்தானாக - அவ்விடத்து வர, செய்யதாள் வழிபாடு இன்றி - (அவனுடைய) சிவந்த திருவடிகளுக்கு வழிபாடு செய்யாமல், தேவர்கோன் இருந்தான் - தேவேந்திரன் வாளாவிருந்தான்; அந்தோ - ஐயோ, தையலார் மயலில் - மகளிரின் மயக்கத்தில், பட்டோர் தமக்கு ஒரு மதி உண்டாமோ - வீழ்ந்தவர்கட்கு நல்லறிவு உண்டாகுமோ (இல்லை என்றபடி) எ-று.

பகவன்-ஆறு குணங்களையுடையவன்; சிவன். ஏகாரம்: பிரிநிலை. ஐயன் - ஆசான். வியாழப்புத்தேள் - பொன், பிருகற்பதி. ஆயிடை - சுட்டு நீண்டு யகரம் பெற்றது; 'எகர வினா' என்னும் நன்னூற் சூத்திரத்து 'தூக்கிற் சுட்டுநீளின் யகரமுந் தோன்றுதனெறியே'என்பது காண்க. முற்றுடன் ஆக என்னும் இடைச் சொல் சேர்ந்து செயவெனெச்சமாயிற்று. அந்தோவென்பது இரங்குதற் பொருட்டாய இடைச்சொல். ஒரு: இசை நிறைக்க வந்தது: சிறிது என்னும் பொருட்டுமாம். ஓகாரம்: எதிர்மறை. இருந்தானென்னும் சிறப்புப் பொருளை முடித்தற்கு மதியுண்டாமோ என்னும் பொதுப் பொருள் கூறப்பட்டது. இது வேற்றுப் பொருள் வைப்பு என்னும் அணி. (ச)

ஒல்லெனக் குரவ னேக வும்பர்கோன் றிருவி னாக்கம்
புல்லெனச் சிறிது குன்றப் புரந்தர னறிந்திக் கேடு
நல்லதோல் குரவற் பேணு நவையினால் விளைந்த தென்னா
அல்லலுற் றறிவன் றன்னைத் தேடுவா னாயி னானே.

(இ-ள்) குரவன் ஒல்லென ஏக-(அதனை உணர்ந்த)குரவனாகிய வியாழன் விரைந்து சென்றுவிட, உம்பர்கோன் திருவின் ஆக்கம் - தேவர்க்கரசனது செல்வத்தின் மிகுதி, புல்லெனச் சிறிது குன்ற - பொலிவின்றிச் சிறிதாகக் குறைதலால், புரந்தரன் அறிந்து-இந்திரன் (அதனை) உணர்ந்து, இக்கேடு - இந்தக் கெடுதியானது, நல்ல தொல் குரவன் - நல்ல தொன்றுதொட்ட குரவனாயுள்ளானை, பேணு நவையினால் விளைந்தது என்னா-வழிபாடு செய்யாத குற்றத்தினால் வந்தது என்று, அல்லல் உற்று - துன்பமுற்று, அறிவன் தன்னைத் தேடுவான் ஆயினான்-குரவனைத் தேடத் தொடங்கினான் எ - று.

ஒல்லென : விரைவுக் குறிப்பு. ஆக்கம் - பெருக்கம். புல்லென - பொலிவின்றாக. சிறிது - சிறிதாக வென்க; ஒழுகக் குன்ற வெனலுமாம். புரந்தரன் முதலாகப் பின்வரும் பெயர்களைச் சுட்டு மாத்திரமாகக் கொள்க. (ரு)

அங்கவ னிருக்கை புக்கான் கண்டில னவித்த பாசப்
புங்கவ ருலகு மேனோர் பதவியும் புவன மூன்றில்
எங்கணுந் துருவிக் காணா னெங்குற்றான் குரவ னென்னுஞ்
சங்கைகோண் மனத்த னாகிச் சதுர்முக னிருக்கை சார்ந்தான்.

(இ-ள்) அவன் இருக்கை புக்கான்-அக்குரவன் இருப்பிடத்திற் சென்று, அங்கு கண்டிலன் - அங்குக் காணாதவனாய், அவித்த பாசம் புங்கவர் உலகும் - பாசங்களைக் கெடுத்த முனிவர்களுலகத்திலும், ஏனோர் பதவியும் - மற்றையோர் இருப்பிடங்களிலும், புவனம்

மூன்றில் எங்கனும் - மூன்று உலகத்துமுள்ள எல்லாவிடங்களிலும், துருவிக்காணுன் - தேடியுங் காணுதவனாய், குரவன் எங்கு உற்ருன் என்னும் - ஆசிரியன் எங்குற்ருனே என்னும், சங்கை கொள் மனத்தன் ஆகி - ஐயங்கொண்ட மனத்தை யுடையவனாய், சதுர் முகன் இருக்கை சார்ந்தான் - சதுர்முகன் இருப்பிடமாகிய சத்தியலோகத்தை அடைந்தான் எ - று.

புக்கான் முதலியன முற்றெச்சங்கள். அவித்த பாசப் புங்கவர் என்றது 'அருங்கேடன்' என்பதுபோல நின்றது. (சு)

துருவின னங்குங் காணுன் றிசைமுகற் றெழுது தாழ்ந்து
பரவிமுன் பட்ட வெல்லாம் பகர்ந்தனன் பகரக் கேட்டுக்
குரவனை யிகழ்ந்த பாவங் கொழுந்துபட் டருந்துஞ் செவ்வி
வருவது நோக்கிச் சூழ்ந்து மலர்மக னிதனைச் சொன்னுன்.

(இ - ள்.) அங்கும் துருவினன் காணுன் - அங்கும் தேடிக் காணுதவனாய், திசைமுகன் தாழ்ந்து தொழுது பரவி - நான்முகனை வீழ்ந்து வணங்கித் துதித்து, முன்பட்ட எல்லாம் பகர்ந்தனன் - முன் நிகழ்ந்தவற்றை எல்லாம் எஞ்சாது கூறினுன்; பகர - கூற, மலர்மகன் கேட்டு - பிரமன் கேட்டு, குரவனை இகழ்ந்த பாவம் கொழுந்து பட்டு - குரவனை இகழ்ந்ததனுலாகிய பாவமானது கொழுந்து விட்டோங்கி, அருந்தும் செவ்வி வருவது நோக்கி - அவனை விழுங்குங் காலம் வருதலை யறிந்து, சூழ்ந்து இதனைச் சொன்னுன் - ஆராய்ந்து இதனைச் சொல்வானாயினன் எ - று.

கொழுந்து படுதல் - கிளைத்தல். 'அண்ணுத்தல் செய்யாதளறு' என்புழிப் போல ஈண்டுப் பாவம் அருந்தும் என்ருர்; நுகரப்படும் எனினுமாம். வருவது : தொழிற்பெயர். (எ)

அனையதோல் குரவற் காணு மளவுநீ துவட்டா வீன்ற
தனையன்முச் சென்னி யுள்ளான் றானவர் குலத்தில் வந்தும்
வினையின லறிவான் மேலான் விச்சுவ வுருவ னென்னும்
இனையனைக் குருவாக் கோடி யென்னலு மதற்கு நேர்ந்தான்.

(இ - ள்.) அனைய தொல் குரவன் காணும் அளவும் - அந்தப் பழமையான குரவனைக் காணும் வரையும், நீ துவட்டா ஈன்ற - நீ துவட்டா வானவன் பெற்ற, தனையன் - புதல்வனும், முச்சென்னி உள்ளான் - மூன்று தலைகளையுடையவனும், தானவர் குலத்தில் வந்தும் - அசுரர்குலத்திற் ருேன்றியும், வினையினல் அறிவால் மேலான் - தொழிலாலும் அறிவாலும் சிறந்தவனுமாகிய, விச்சுவ உருவன் என்னும் இனையனை - விச்சுவ உருவனென்னும் பெயரையுடைய இவனை, குருவாக் கோடி என்னலும் - குரவனுகக் கொள்வாயாக என்று கூறலும், அதற்கு நேர்ந்தான் - அதற்கு உடன்பட்டவனுய் எ - று.

தானவர் - காசிபனுக்குத் தனு என்பாள் வயிற்றில் வந்தவர். உம்மை இழிவு சிறப்பு; என்னுும்மைவிரிக்க. குருவா - தொகுத்தல். கோடி - கொள் பகுதி : த் எழுத்துப் பேறு. நேர்ந்தான் : முற்று எச்சமாய் நின்றது. (அ)

அழலவிர்ந் தனைய செங்கே ழடுக்கிதழ் முளரி வாழ்க்கைத்
தொழுதகு செம்ம றன்னைத் தொழுதுமீண் டகன்று நீங்கா
விழைதகு* காதல்கூர விச்சுவ வுருவன் றன்னை
வழிபடு குருவாக் கொண்டான் மலர்மகன் சூழ்ச்சி தேருன்.

(இ - ள்.) *அழல் அவிர்ந்து அனைய செங்கேழ்* - தீயானது ஒளி விட்டாலொத்த செந்நிறத்தையுடைய, *அடுக்கு இதழ் முளரி*-அடுக்கிய இதழ்களையுடைய தாமரை மலரில், *வாழ்க்கை*-வாழ்தலையுடைய, *தொழுதகு செம்மல் தன்னை* - வணங்கத் தக்க பெருமையுடைய பிரமனை, *மீண்டு தொழுது அகன்று நீங்கா* - மீளவும் வணங்கி (அவனின்றும்) நீங்கிப்போய், *மலர் மகன் சூழ்ச்சி தேருன்* - பிரமனது உபாயத்தை அறியாதவனாய், *விழைதகு காதல் கூர* - விரும்பத் தக்க அன்பு மிக, *விச்சுவ உருவன் தன்னை*-விச்சுவ வுருவனை, *வழிபடு குருவாக் கொண்டான்* - தான் வழிபடும் குரவனாகக் கொண்டான் எ - று.

*அவிர்ந்தா லனைய என்பது விகாரமாயிற்று. தொழுதல் தகு - விழைதல் தகு. கூர-மிக; கூர்: உரிச்சொல்.* (க)

கைதவக் குரவன் மாயங் கருதிலன் வேள்வி யொன்று
செய்திட லடிக ளென்னத் தேவர்கட் காக்கங் கூறி
வெய்தழல் வளர்ப்பா னுள்ளம் வேறுபட் டவுணர்க் கெல்லாம்
உய்திற நினைந்து வேட்டான் றனக்குமே லுறுவ தோரான்.

(இ - ள்.) *கைதவக் குரவன் மாயம் கருதிலன்* - வஞ்சனையையுடைய குரவனது தீய கருத்தை உணராதவனாய், *அடிகள் வேள்வி ஒன்று செய்திடல் என்ன* - அடிகளே ஒரு வேள்வி செய்க என்று வேண்ட, *தேவர்கட்கு ஆக்கங் கூறி* - தேவர்களுக்கு நலன் உண்டாக எனச் சொல்லி, *வெய்து அழல் வளர்ப்பான்* - வெம்மையாகிய தீயை வளர்க்கின்றவன், *தனக்கு மேல் உறுவது ஓரான்* - தனக்குமேல் விளைவதை உணராதவனாய், *உள்ளம் வேறுபட்டு* - மனம் வேறுபட்டு, *அவுணர்க்கு எல்லாம் உய்திறம் நினைந்து வேட்டான்*-அசுரர்களுக்கெல்லாம் ஆக்கங் கருதி வேள்வி செய்தான் எ - று.

*செய்திடல்: அல்லீற்று வியங்கோள்; 'மக்கட் பதடியெனல்'என்புழிப் போல. அடிகள்,குரவர் முதலாயினாரை விளித்தற்குரிய உயர்வுப் பன்மைச்சொல். ஆக்கமுண்டாகவென-உய்திற முண்டாதலை.*()

வாக்கினுன் மனத்தால் வேருய் மகஞ்செய்வான் செயலை யாக்கை
நோக்கினு னேதி தன்னு னேக்கினுன் குலிச வேலால்
தாக்கினுன் றலைகண் மூன்றுந் தனித்தனி பறவை யாகப்
போக்கினு னலகை வாயிற் புகட்டினுன் புலவுச் சோரி.

(இ-ள்.) *வாக்கினுல் மனத்தால் வேருய்*-சொல்லால் வேருகவும் நினைப்பால் வேருகவும், *மகம் செய்வான் செயலை*-வேள்வி செய்கின்றவன் செய்கையை, *ஆக்கை நோக்கினுன்* - உடலிற் கண்களையுடைய

(பா - ம்.) * விழைதரு.

இந்திரனானவன், ஓதி தன்னால் நோக்கினன் - ஞானப் பார்வையால் நோக்கி, குலிச வேலால் தாக்கினன் - வச்சிரப் படையால் மோதி, தலைகள் மூன்றும் - மூன்று தலைகளையும், தனித் தனி பறவையாகப் போக்கினன் - தனித் தனியே வெவ்வேறு பறவைகளாகப் போக்கி, அலகை வாயில்-பேய்களின் வாய்களில், புலவுச் சோரி புகட்டினன்-ஊனோடு கூடிய குருதியைப் புகச் செய்தான் எ - று.

வேருய் - வேருக: எச்சத்திரிபு. ஓதி - ஞானம். நோக்கினன் முதலியவற்றை எச்சமாகக் கொள்க. சோமபானஞ் செய்யுமுகம் காடையாகியும், சுராபானஞ் செய்யுமுகம் ஊர்க்குருவி யாகியும், அன்னபானங் கொள்ளுமுகம் சிச்சிலியாகியும் பறந்தனவென வட நூல் கூறுமென்ப. புகட்டினன், புகட்டு: பகுதி; புகவிடு என்பதன் மரூஉ. (கக)

தெற்றெனப் பிரம பாவஞ் சீறிவந் தமரர் வேந்தைப்
பற்றலு மதனைத் தீர்ப்பான் பண்ணவர் மரமேன் மண்மேற்
பொற்றொடி யார்மே னீர்மேல் வேண்டினர் புகுத்த லோடும்
மற்றவ ரிஃதியாந் தீர்க்கும் வண்ணம்யா தென்ன விண்ணோர்.

(இ - ள்.) தெற்றென-விரைவாக, பிரமபாவம்-பிரமக்கொலைப் பாவமானது, சீறி வந்து - முனிந்து வந்து, அமரர் வேந்தைப் பற்றலும்-தேவர்க் கரசனைப் பற்றியவுடனே, அதனைத் தீர்ப்பான்-அதனை நீக்கும் பொருட்டு, பண்ணவர் வேண்டினர்-தேவர்கள் விரும்பினவர் களாகி, மரமேல் மண்மேல் பொன் தொடியார் மேல் நீர்மேல்புகுத்த லோடும் - மரங்களின் மேலும் பூமியின் மேலும் பொன்னாலாகிய வளையலையணிந்த மகளிர்மேலும் நீர்மேலும் கூறுசெய்து புகுத்திய வுடனே, அவர் இஃது யாம் தீர்க்கும் வண்ணம் யாது என்ன - அவர் கள் இதனை யாங்கள் நீக்கும் வகை எவ்வாறு என்று கேட்க, விண் ணோர் - தேவர்கள் எ - று.

புகுத்தல் - புகச்செய்தல், இருதிணையும் விரவிச் சிறப்பால் உயர் திணை முடிவு பெற்றன; வழுவமைதி; பிறவற்றைத் தெய்வமாகக் கருதி உயர்திணையாற் கூறினரென்னலுமாம். (கஉ)

அப்பிடை நுரையாய் மண்ணி லருவருப் புவரா யம்போற்
சேப்பிளங் கொங்கை யார்பாற் றீண்டுதற் கரிய பூப்பாய்க்
கப்பிணர் மரத்திற் காலும் பயினதாய்க் கழிக வென்றார்
இப்பழி சுமந்த வேங்கட் கென்னல மென்றார் பின்னும்.

(இ - ள்.) அப்பு இடை நுரையாய்-நீரினிடத்து நுரையாகியும், மண்ணில் அருவருப்பு உவராய்-நிலத்தினிடத்து அருவருக்கத் தக்க உவராகியும், அம்பொன் செப்பு இளங் கொங்கையார் பால்-அழகிய பொன்னாலாகிய சிமிழை ஒத்த இளமையான கொங்கைகளையுடைய மகளிரிடத்து, தீண்டுதற்கு அரிய பூப்பாய் - தீண்டுதற்காகாத பூப் பாகியும், கப்பு இணர் மரத்தில் - கிளைகளையும் பூங் கொத்துக்களையு முடைய மரங்களிடத்து, காலும் பயின் ஆய்-கசிந்தொழுகும் பிசினா கியும், கழிக என்றார் - நீங்குக என்று கூறினார்; பின்னும் - மீளவும், இப்பழி சுமந்த எங்கட்கு என் நலம் என்றார்-இப்பழியைத் தாங்கிய எங்களுக்கு என்ன பயன் என்று அந்நால்வரும் வினவினார் எ - று.

அருவருப்பு - இழிந்தவற்ருலுளதாகும் மனம் பொருந்தாத் தன்மை. கப்பு, கவர்ப்பு என்பதன் மரூஉ. பயினது, அது: பகுதிப் பொருள் விகுதி. (கஙு)

[வேறு]

கருவின் மாதர் கருவுயிர்க்கு மளவு முறையாற் கணவர்தோண்
மருவி வாழ்க மண்ணகழ்ந்த குழியு மதனல் வடுவொழிக
பொருவி னீரு மிறைத்தோறு மூறிப் பொலிக மரங்குறைபட்
டொருவி னுலுந் தழைகவென வொழியா நலனு முதவினர்.

(இ - ள்.) *கருவின் மாதர்* - சூலினையுடைய மகளிர், *கரு உயிர்க்கும் அளவும்* - அக்கருப்பத்தை ஈனும் வரையிலும், *முறையால் கணவர் தோள் மருவி வாழ்க என* - முறைப்படி தங்கணவரின் தோளைச் சேர்ந்து வாழக் கடவர் என்றும், *மண் அகழ்ந்த குழியும்* - மண் தோண்டிய குழியும், *அதனல் வடு ஒழிக என*-அம் மண்ணினலேயே வடுவொழிந்து நிரம்பக் கடவது என்றும், *பொருவு இல் நீரும்* - ஒப்பில்லாத நீரும், *இறைத்தோறும்* - இறைக்குந் தோறும், *ஊறிப் பொலிக என* - ஊறி விளங்கக் கடவது என்றும், *மரம் குறைபட்டு ஒருவினுலும்*-மரம் வெட்டுண்டு வளங்குன்றினுலும், *தழைக என* - தழையக் கடவது என்றும், *ஒழியா நலனும் உதவினர்* - என்றும் நீங்காத பலனையும் அளித்தார்கள் எ - று.

கருவுயிர்த்தல் - மகப்பெறுதல் அதனல் - தானே யென்னலுமாம். இறைக்குந்தோறும் என்பது விகாரமாயிற்று. ஒருவுதல் - வெட்டுண்ட துண்டு நீங்குதலுமாம். மூன்று செய்யுளிலும் நான்கும் முறை பிறழக் கூறப்பட்டன; செய்யுளாகலின். இவற்றுட் கூறியன புணர்ந்துரை வழக்கெனக் கொள்க. (கச)

மாசிற் கழிந்த மணியேபோல்
　　வந்த பழிதீர்ந் திந்திரனுந்
தேசிற் றிகழத் துவட்டாதன்
　　செல்வன் றன்னைத் தேவர்பிரான்
வீசிக் குலிசத் துயிருண்ட
　　விழுமங் கேட்டு வெகுண்டுயிர்த்துக்
கூசிப் பழிகோள் கருதியொரு
　　கொடிய வேள்வி கடிதமைத்தான்.

(இ - ள்.) *மாசில் கழிந்த மணியேபோல்* - குற்றத்தினின்றும் நீங்கிய மாணிக்கத்தைப்போல், *வந்த பழி தீர்ந்து இந்திரனும் தேசில் திகழ*-அடைந்த பாவமானது நீங்கப்பெற்று இந்திரனும் ஒளியோடு விளங்க, *துவட்டா* - துவட்டாவானவன், *தன் செல்வன் தன்னை* - தன் புதல்வனுகிய விச்சுவ உருவனை, *தேவர்பிரான்* - தேவேந்திரன், *குலிசத்து வீசி உயிர் உண்ட விழுமம் கேட்டு* - வச்சிரப்படையால் ஓச்சி (அவன்) உயிரைப் பருகிய துன்பச் செய்தியைக் கேட்டு,

வெகுண்டு-கோபித்து, உயிர்த்து-பெருமூச் செறிந்து, கூசி - மனங் கூசி, பழி கோள் கருதி-பழிவாங்குதலை யெண்ணி,ஒரு வேள்வி கடிது அமைத்தான்-ஒரு வேள்வியை விரைந்து செய்தான் எ - று.

குலிசத்தால் வீசி யென்க. விழுமம் - துன்பம்; ஈண்டு துன்பச் செய்தி. கூசுதல்-பரிபவத்திற்கு நாணுதல். கோள்: முதனிலைதிரிந்த தொழிற்பெயர். (கஙி)

அந்தக் குண்டத் தேரிசிகைபோ
லழலுங்* குஞ்சி யண்டமுக
டுந்தக் கோடிய தூமம்போ
லுயிர்த்துச் செங்கண் சினச்சேந்தீச்
சிந்தப் பிறைவா ளேயிறதுக்கித்
திசைவான் சேவிடு படநகைத்து
வந்தக் கோடிய விடம்போல
வெழுந்தா னொருவாண் மறவீரன்.

(இ - ள்.) அந்தக் குண்டத்து-அந்த வேள்விக் குண்டத்தினின் றும், எரிசிகைபோல் அழலும் குஞ்சி - எரிகின்ற தீயின் கொழுந்து போலச் செந்நிறத்தால் விளங்கும் முடியானது, அண்டம் முகடு உந்த-அண்டத்தினுச்சியைத் தாக்க, கொடிய தூமம்போல் உயிர்த்து-கொடிய புகைபோல மூச்செறிந்து, செங்கண்-சிவந்த கண்கள்,சினச் செந்தீ சிந்த - கொடிய கோபத்தீயைச் சிதற, பிறைவாள் எயிறு அதுக்கி - பிறைபோல் வளைந்த ஒள்ளிய பற்களைக் கடித்து, திசை வான் செவிடுபட நகைத்து - திக்குகளும் வானமும் செவிடுபடும்படி சிரித்து, வந்த அக் கொடிய விடம்போல - கடலினின்றும் தோன்றிய அந்த ஆலால விடம்போல, ஒரு வாள் மற வீரன்-ஒரு வெற்றியை யுடைய வாட்படையை யேந்திய வீரன், எழுந்தான் - தோன்றினன் எ - று.

அழலல் - ஈண்டு விளங்குதல். வாள்-கொடுமையுமாம். எயி றதுக்கி - எயிற்றால் இதழையதுக்கி யென்னலுமாம். வந்த என்னும் பெயரெச்சத்தகரம் தொக்கது. அகரச் சுட்டு மிகுதிமேல் நின்றது. மறவீரம்-மறமாகிய வீரம்; மறத்தையுடைய வீரன் எனக்கொண்டு, வீரன் பெயர்மாத்திரையாய் நின்றதென்னலுமாம். (கசு)

[கலிவிருத்தம்]

ஈங்குவன் விருத்திர னேன்ப வாரழற்
றாங்குவன் கணைவிடு தூர நீண்டுநீண்
டோங்குவ னேங்குதற் கோப்ப வைகலும்
†வீங்குவ னறனிலார் வினையி னேன்பவே.

(இ - ள்.) ஈங்கு உவன்-இங்குத் தோன்றிய இவனையே, விருத் திரன் என்ப-விருத்திராசுரன் என்று சொல்லுவர், ஆர் அழல் தாங்கு-

(பா - ம்.) * சிகை நின்றழலும்.
† வீங்குவன் றனிலரா; றனிலரு.

நிறைந்த தித்தங்கிய, வன்கணை விடு தூரம்-வலிய அம்பு விடுகின்ற தூரம் வரை, நீண்டு நீண்டு ஓங்குவன்-(ஒவ்வொரு நாளும்) நீண்டு நீண்டு உயருவான்; ஓங்குதற்கு ஒப்ப-அங்ஙனம் உயருதற்கேற்ப, வைகலும்-நாடோறும், அறன் இலார் வினையின்-அறவினை இல்லாதார் பாவம்போல, வீங்குவன் என்ப-பருப்பான் என்று சொல்லுவர் எ - று.

உவன் என்னுஞ் சுட்டுச் சேய்மை அண்மை யிரண்டிடத்தையுங் குறிக்கும்; ஈண்டு அண்மைக் காயிற்று. ஆரழல் - தீண்டுதற்கரிய அழலுமாம். கணை விடுதூரம்-வில்லினின்றும் விடப்பட்ட கணை செல்லுந் தூரம். அடுக்கு விரைவு குறித்தது. இறுதியினின்ற என்ப; அசையுமாம். ஏ: ஈற்றசை (கஎ)

வீங்குடல் விருத்திரன் றன்னை விண்ணவர்
ஏங்குற வருதுவட் டாவே னும்பெயர்த்
தீங்குறு மனத்தினேன் றேவர் கோனுயிர்
வாங்குதி பொருதென வரவிட் டானரோ.

(இ - ள்.) துவட்டா எனும் பெயர்-துவட்டா என்ற பெயரையுடைய, தீங்கு உறுமனத்தினேன்-தீமைமிக்க மனத்தினையுடையவன், விண்ணவர் ஏங்குற வரு-தேவர்கள் வருந்தும்படி தோன்றிய, வீங்கு உடல் விருத்திரன் தன்னை-பருத்த உடலையுடைய விருத்திராசுரனை, தேவர் கோன் உயிர்-தேவேந்திரன் உயிரை, பொருது வாங்குதி என-போர் செய்து வாங்குவாயென்று, வரவிட்டான்-ஏவினன் எ - று.

அரோ : அசை. (கஅ)

மதித்துணி யெயிற்றினேன் வடவை போற்சினை இக்*
கோதித்தெதிர் குறுகினன் கொண்ட லூர்தியும்
எதிர்த்தனன் களிற்றின்மே லிமயத் துச்சிமேல்
உதித்ததோர் கருங்கதி ரோக்கு மேன்னவே.

(இ - ள்.) துணிமதி எயிற்றினேன்-பிறைச் சந்திரனை ஒத்த வளைந்த பற்களையுடைய விருத்திரன், வடவைபோல்சினை இ-வடவைத் தீயைப்போல் வெகுண்டு, கொதித்து-துள்ளி, எதிர் குறுகினன்-போர் முனையில் வந்தான்; கொண்டல் ஊர்தியும்-மேகவாகனனாகிய இந்திரனும், இமயத்து உச்சிமேல்-பனி மலையின் சிகரத்தில், உதித்தது ஓர் கருங் கதிர் ஒக்கும் என்ன-தோன்றியதாகிய ஒரு கரிய ஞாயிறு போலும் என்று சொல்லுமாறு, களிற்றின்மேல்எதிர்த்தனன்-வெள்ளை யானையின்மேலேறி எதிர்த்தான் எ - று.

வடவை-பெண் குதிரை; கடல் நாப்பண் இருக்கும் ஊழித்தீ பெண் குதிரையின் முகம் போலும் வடிவினதாகலின் வடவா முகாக்கினி யெனப்படும்; இது குறைந்து வடவை யெனவும் நிற்கும். சினை இ-சினந்து : சொல்லிசை நிறைக்கும் அளபெடை. கொண்டலாகிய

(பா - ம்) * வடவை போற்றின்ன.

ஊர்தியையுடையன் என அன்மொழித்தொகையை விரிக்க. வெள்ளை யானையின்மேலிருக்கும் கரிய நிறமுடைய இந்திரனுக்குப் பனி மலை மேலுதித்த கருஞாயிறு உவமம். இஃது இல்பொருளுவமை யணி. (கக)

அறத்தோடு பாவநேர்ந் தென்ன வார்த்திரு
திறத்தரு மூண்டமர் செய்யக் கற்சிறை
குறைத்தவன் றகுவன்மேற் குலிச வேலெடுத்
துறைத்திட வீசினா னுடன்று கள்வனும்.

(இ - ள்.) அறத்தொடு பாவம் நேர்ந்தது என்ன—அறமும் பாவமும் எதிர்ந்தாற்போல, ஆர்த்து-ஆரவாரித்து, இருதிறத்தரும்-இரண்டு பகுதியாரும், மூண்டு அமர் செய்ய-எதிர்ந்து போரினைச் செய்ய, கல்சிறை குறைத்தவன்-மலைகளின் சிறையை அறுத்தவனாகிய இந்திரன், தகுவன்மேல்-அசுரனாகிய விருத்திரன் மேல், குலிசவேல் எடுத்து உறைத்திட வீசினான்-வச்சிரப் படையை எடுத்து உறைக்கும்படி வீசினான்; கள்வனும் உடன்று-விருத்திரனும் சினந்து எ-று.

ஒடு: எண்ணொடு; நேர்ந்தது. விகாரமாயிற்று. நேர்ந்தென்பதற்கேற்ப மூண்டு என்பதற்கு எதிர்ந்து எனப்பொருளுரைக்கப்பட்டது; சின மூண்டு என்றுமாம். வானவனும் தானவனும் என்பது தோன்ற இருவரென்னாது இரு திறத்தரும் என்றார்; படைகளை உளப்படுத்தியுமாம். வானவனுக்கு அறமும், தானவனுக்குப் பாவமும் உவமம். அறமும் பாவமும் உருவெடுத்து எதிர்ந்தாற் போல என்றுமாம். தகுவன்-அசுரன். குலிசவேல்: இருபெயரொட்டு (உ0)

இடித்தனன் கையி*லோ ரிருப்பு லக்கையைப்
பிடித்தனன் வரையெனப் பெயர்ந்து தீயெனத்
துடித்தனன் சசிமுலைச் சுவடு தோய்புயத்
தடித்தன னிந்திர னவச மாயினான்.

(இ - ள்.) இடித்தனன்-ஆரவாரித்து, ஓர் இருப்பு உலக்கையை கையில் பிடித்தனன்-ஒரு இருப்புலக்கையைக் கரத்திற்றாங்கி, வரையெனப் பெயர்ந்து-மலைபோல அடிபெயர்ந்து, தீ எனத் துடித்தனன்-தீப்போலத் துள்ளி, சசிமுலைச் சுவடுதோய் புயத்து அடித்தனன்-இந்திராணியின் தனச்சுவடு பொருந்திய தோளின்கண் தாக்கினான்; இந்திரன் அவசம் ஆயினான்-இந்திரன் மூர்ச்சையானான் எ - று.

இடித்தனன் முதலிய மூன்றும் முற்றெச்சம். வரை பெயர்தல் போலப் பெயர்ந்து என விரிக்க: இல்பொருளுவமை. அடித்தனன் என்பதனுடன் ஆக என்னும் இடைச்சொற் கூட்டி எச்சப்படுத்தலுமாம். அவசம்-வசமிழத்தல். (உக)

அண்டரே றனையவ னவச மாறிப்பின்
கண்டகன் கைதவ நினைந்திக் கள்வனோர்
மண்டம ராற்றுவான் வலியி லோமெனப்
புண்டரீ கத்தவ னுலகிற் போயினான்.

(பா - ம்) * எடுத்தனன் கையில்.

(இ - ள்.) அண்டர் ஏறு அனையவன் - தேவர்களுள் ஆண் சிங்கம் போன்றவனாகிய இந்திரன், அவசம் மாறி-மூர்ச்சைதெளிந்து, பின் கண்டகன் கைதவம் நினைந்து-பின்பு அக் கொடியவனது வஞ்சனையை உணர்ந்து, இக் கள்வன் நேர்மண்டு அமர் ஆற்றுவான் - இந்தக் கள்வனுக்கு நேர் நின்று மிக்க போரைச் செய்வதற்கு, வலியிலோம் என - வன்மையுடைய மல்லோம் என்று கருதி, புண்டரீகத்தவன் உலகில் போயினான் - தாமரை மலரில் வசிக்கும் பிரமனுலகத்திற் சென்றான் எ - று.

நேர் நின்று என ஒரு சொல் வருவிக்க. ஆற்றுவான்: வினையெச்சம். (உஉ)

தாழ்ந்துதான்* படுதுயர் விளம்பத் தாமரை
வாழ்ந்தவன் வலாரியோ டணைந்து மாமகள்
வீழ்ந்தமார் பினனடி வீழ்ந்து செப்பமால்
சூழ்ந்துவா னுடனை நோக்கிச் சொல்லுவான்.

(இ - ள்.) தாழ்ந்து - வணங்கி, தான் படுதுயர் விளம்ப-தான் விருத்திரனாற்பட்ட துன்பங்களைக் கூற, தாமரை வாழ்ந்தவன் - தாமரை மலரில் வசிப்பவனாகிய அயன், வலாரியோடு அணைந்து - இந்திரனோடுஞ் சென்று, மாமகள் வீழ்ந்த மார்பினன் அடி-திருமகள் விரும்பி வசிக்கும் மார்பையுடைய திருமாலின் அடிகளில், வீழ்ந்து-வீழ்ந்து வணங்கி, செப்ப-சொல்ல, மால்-திருமால், சூழ்ந்து-ஆலோசித்து, வான் நாடனை நோக்கிச் சொல்லுவான்-இந்திரனைப் பார்த்துக் கூறுவான் எ - று.

படுகின்ற துயருமாம். வாழ்ந்தவன்: காலங் கருதிற்றிலது, வலாரி - வலனுக்குப் பகைவன்: நெடிற் சந்தி. மாவாகிய மகள். வீழ்ந்த - விரும்பிய. (உக)

ஆற்றவும் பழையதுன் னங்கை வச்சிரம்
மாற்றவ ருயிருண வலியின் றாதலால்
வேற்றொரு புதியது† வேண்டு மாலினிச்
சாற்றுது மதுபெறுந் தகைமை கேட்டியால்.

(இ - ள்.) உன் அங்கை வச்சிரம் ஆற்றவும் பழையது - உனது கையிலுள்ள வச்சிரப்படையானது மிகவும் பழையது; மாற்றவர் உயிர் உண வலி இன்று - (அதனால்) பகைவர்களின் உயிரை உண்ணுதற்கு வலிமையிலதாயிற்று; ஆதலால் வேறு ஒரு புதியது வேண்டும் - ஆகலான் வேறு ஒரு புதிய படைவேண்டும்; இனி அது பெறும் தகைமை சாற்றுதும் கேட்டி-இப்பொழுது அதை யடையுந் தன்மையைச் சொல்லுவேம் கேட்பாயாக எ - று.

இன்று - உடையதன்று. வேற்றொரு: றகர வொற்று விரித்தல். ஆல் இரண்டும் அசை. மால் எனப் பிரித்து இந்திரனெனப்பொருள் கொண்டு விளியாக்குவாருமுளர். கேட்டி: ஏவன் முற்று; கேள்: பகுதி. ட்: எழுத்துப்பேறு, இ: விகுதி. (உச)

(பா - ம்.) * தாழ்ந்து தன். † புதியதா.

தோடையகன் மார்பநாந் தூய பாற்கடல்
கடையுநா* ளசுரருஞ் சுரருங் கையில்வெம்
படையோடு மடையன்மின் பழுதென் றப்படை
அடையவுந் ததீசிபா லடைவித் தாமரோ.

(இ-ள்.) தொடை அகல் மார்ப - மாலையை யணிந்த பரந்த மார்பையுடையவனே, நாம் தூய பால்கடல் கடையும் நாள்-நாம் புனிதமான பாற்கடலைக் கடையுங்காலத்து. அசுரரும் சுரரும் - அசுரர்களும் தேவர்களும், கையில் வெம்படையொடும் அடையன்மின் - கரத்தில்கொடிய படைக்கலங்களோடு வாராதிர்கள்; பழுது என்று- (அங்ஙனம் வருதல்) குற்றமாகும் என்று, அப்படை அடையவும் - அப் படைகள் அனைத்தையும்- ததீசிபால் அடைவித்தாம்-ததிசிமுனிவனிடத்தே சேர்ப்பித்தோம் எ - று.

தொடைய, கல் எனப் பிரித்து, மாலையையுடைய மலைபோன்ற என்றுரைத்தலுமாம். சுரரும் அசுரரும் என்னும் படர்க்கைப் பெயர்கள் அடையன்மின் என முன்னிலை கொண்டன: இடவழு வமைதி. அங்ஙனம் வருதல் என்பது அவாய் நிலையால் வருவிக்கப்பட்டது. அடையவும் - முழுதும். அடைவித்தாம் : தனித் தன்மைப் பன்மை; இந்திரனை உளப்படுத்திற்றுமாம். அரோ : அசை. (உரு)

சேட்படு நாணனி செல்லத் தேவரா
வாட்படை யவுணரா வந்து கேட்டிலர்
ஞாட்படை படையெலா ஞான நோக்கினல்
வேட்படை வென்றவன் விழுங்கி னனரோ.

(இ-ள்.) நனி சேண்படு நாள் செல்ல - மிக நீட்டிப்புடைய நாள்கள் கழியவும், தேவரா - தேவராதல், வாள் படை அவுணரா- வாட்படைகளையுடைய அவுணராதல், வந்து கேட்டிலர்-வந்துகேட்கவில்லை (அதனல்), ஞான நோக்கினல்-ஞானப்பார்வையோடு கூடிய, வேள்படை வென்றவன்-மன்மதனுடைய அம்புகளை வென்றவனாகிய ததீசிமுனிவன், ஞாட்பு அடைபடை எலாம்-போருக்குப் பொருந்திய அப்படைகளை எல்லாம், விழுங்கினன் - விழுங்கினன் எ - று.

ஆதல் அல்லது ஆவது என விகற்பப் பொருளில் வரும் இடைச்சொற்கள் ஈறு தொக்கு நின்றன. ஞான நோக்குடன் கூடிய ததீசியென்க. நோக்கினல் அறிந்து விழுங்கினன் எனலுமாம். வேள்படையென்பது எதுகை நோக்கி வேட்படையென விகாரமாயிற்று. அரோ : அசை. (உசு)

விழுங்கிய படையெலாம் வேற றத்திரன்
டொழுங்கிய தான்முது கந்தண் டொன்றியே
எழுங்கதிர்க் குலிசமா மதனை† யெய்துமுன்
வழங்குவன் கருணையோர் வடிவ மாயினன்

(பா-ம்.) * கடையுநர், † இதனை.

(இ-ள்.) விழுங்கிய படை எலாம்-(அங்ஙனம்) விழுங்கப்பட்ட படைகள் அனைத்தும், வேறு அறத் திரண்டு - வேறாக இன்றி ஒன்றாகத் திரண்டு, முதுகந் தண்டு ஒன்றியே - முதுகெலும்பைப் பொருந்தி, ஒழுங்கியது-ஒழுங்குபட்டது ; எழும் கதிர் குலிசம் ஆம்-(அஃது) எழுகின்ற ஒளியையுடைய வச்சிரப்படையாகும் ; எய்தும் முன் - நீ சென்று கேட்பதற்கு முன்னே, கருணை ஓர் வடிவம் ஆயினான் - கருணையே ஒரு உருவமாகிய அம்முனிவன், அதனை வழங்குவன் - அதனைக் கொடுப்பான் எ - று .

விழுங்கிய: விழுங்கப்பட்ட வெனச் செயப்பாட்டு வினை. வேறு அற-ஒன்றாக. முதுகந் தண்டு-முதுகின் நடுவிலுள்ள பெரிய என்பு ; இது வீணா தண்டமெனவும் படும். எய்து முன்: உபசாரம். வடிவமாயினான் ஆகலின் வழங்குவன் என்க. ஆலும் ஏயும் அசை. (உஎ)

[ஷை வேறு]

என்று மாதவ னியம்ப வும்பர்கோன்
ஒன்றும் வானவர் தம்மோ டொல்லெனச்
சென்று மாயையின் செயலை நோன்பினால்
வென்ற மாதவ னிருக்கை மேவினான்.

(இ - ள்.) என்று மாதவன் இயம்ப - என்று திருமால் கூற, உம்பர் கோன்-தேவேந்திரன், ஒன்றும் வானவர் தம்மொடு-பொருந்திய தேவர்களோடும், ஒல்லெனச் சென்று-விரைந்து சென்று, மாயையின் செயலை-மாயையின் செய்கைத் திறங்களை, நோன்பினால் வென்ற மாதவன் - தவவலியால் வெற்றி கொண்ட பெரிய தவத்தினையுடைய ததிசிமுனிவனது, இருக்கை மேவினான் - இருப்பிடத்தை அடைந்தான் எ - று.

மாதவன் இரண்டனுள் முன்னது இலக்குமிக்கு நாயகன் என்னும் பொருளது ; பின்னது பெரிய தவத்தினையுடையான் என்னும் பொருளது. (உஅ)

[ஷை வேறு]

அகமலர்ந் தருந்தவ னமரர்க் கன்புகூர் *
முகமலர்ந் தின்னுரை முகமன் கூறிநீர்
மிகமெலிந் தெய்தினீர் விளைந்த தியாதது
தகமொழிந் திடலென வலாரி சாற்றுவான்.

(இ - ள்.) அகம் மலர்ந்து அருந்தவன் - மன மகிழ்ந்து அரிய தவத்தினையுடைய முனிவன், அமரர்க்கு அன்பு கூர் முகமலர்ந்து - தேவர்களை நோக்கி அன்பு மிகுந்த இன்முகஞ் செய்து, முகமன் இன் உரை கூறி-உபசாரமாக இனிய சொற்களைக் கூறி, நீர் மிக மெலிந்து எய்தினீர்-நீவிர் மிகவும் வருந்தி வந்தீர்கள் ; விளைந்தது யாது-நடந்தது என்ன, அது தகமொழிந்திடல் என-அதைப் பொருந்தச் சொல்லுக என்று கேட்க, வலாரி சாற்றுவான் - இந்திரன் கூறுவான் எ - று.

---

(பா - ம்.) * அன்பினால்.

விருந்தோம்புவார்க்கு அகமகிழ்ச்சி, முகமலர்ச்சி, இன்னுரையென்னும் மூன்றும் வேண்டு மென்பதனை,

"முகத்தா னமர்ந்தினிது நோக்கி யகத்தானும்
இன்சொ லினதே யறம்"

என்னும் தமிழ்மறையானறிக. அன்பினைப் புலப்படுத்தும் முகமலர்ச்சியென்க. முகமன்-உபசாரம்: முகமனுக இன்னுரை கூறி: குற்றியலிகரம். மொழிந்திடல் என்பது வியங்கோளாகலின் நீர் என்னும் பன்மையோடு இயைந்தது. (உகூ)

அடிகணீர் மருததொன் றதனை வேண்டியிம்
முடிகொள்வா னவரொடு முந்தி னேர்னது
செடிகொள்கா ரிருளுட லவுணர்த் தேய்த்தெமர்
குடியெலாம் புரப்பதோர் கொள்கைத் தாயது.

(இ - ள்.) அடிகள்-அடிகளே, நீர் மருதது ஒன்று-நீர் மருதளிப்பதாகிய ஒரு பொருள் உளது, அதனை வேண்டி-அப் பொருளைப் பெற விரும்பி, இம்முடிகொள் வானவரொடும் முந்தினேன்-இந்த முடியையுடைய தேவர்களோடும் முந்துற வந்தேன்; அது-அப்பொருள், செடி கொள்-முடை நாற்றத்தையுடைய, கார்இருள் உடல் அவுணர்-கரிய இருள்போன்ற உடலினையுடைய அவுணர்களை, தேய்த்து அழித்து, எமர்-எம்மவர்களின், குடி எலாம் புரப்பது-குடிகளையெல்லாம் காப்பதாகிய, ஓர் கொள்கைத்து ஆயது-ஒரு கொள்கையினை உடையதாகியது எ - று.

செடி-முடை நாற்றம், குற்றம். புரப்பது: தொழிற் பெயர். ஓர்: இசை நிறைக்க வந்தது. கொள்கை-இயல்பு. (௩0)

யாதெனி னினையதுன் யாக்கை யுள்ளதென்
றோதலும் யாவையு முணர்ந்த மாதவன்
ஆதவற் கண்டதா மரையி னானனப்
போதலர்ந் தின்னன புகல்வ தாயினன்.

(இ - ள்.) இனையது யாது எனின்-இத்தன்மையுள்ள பொருள் யாதென்றால், உன் யாக்கை உள்ளது என்று ஓதலும்-உனது உடலினுள்ளது என்று கூறிய வளவில், யாவையும் உணர்ந்த மாதவன்-முக்காலங்களிலும் நிகழும்எவற்றையும்அறிந்தபெரியதவத்தினையுடைய முனிவன், ஆதவன் கண்ட தாமரையின்-சூரியனைக் கண்ட தாமரையைப்போல, ஆனனப் போது அலர்ந்து-முகமாகிய மலர் விரிந்து இன்னன புகல்வது ஆயினன்-இவைகளைக் கூறுவானாயினன் எ - று.

உணர்தற் குரிமையுடைய என்பதனை உணர்ந்த என்றார்; 'அறிவறிந்தமக்கட்பேறு'என்புழிப்போல; எல்லாக்கலைகளையும் உணர்ந்த எனலுமாம். தாமரைப் போதின் ஆனனமலர்ந்து எனப் பிரித்துக் கூட்டலுமாம். புகல்வது:தொழிற் பெயர் (௩க)

(பா - ம்.) * முன்னினேன்.

நாய்நம தேனநரி நமதே னப்பிதா
தாய்நம தேனநமன் றனதே னப்பிணி
பேய்நம தேனமன மதிக்கும் பெற்றிபோல்
ஆய்நம தேனப்படும் யாக்கை யாரதே.

(இ - ள்.) நாய் நமது என-நாய்கள் எம்முடையது எனவும், நரி நமது என-நரிகள் எம்முடையது எனவும், பிதா தாய் நமது என-தந்தையும் தாயும் எம்முடையது எனவும், நமன் தனது என-கூற்றுவன் என்னுடையது எனவும், பிணிபேய் நமது என-நோய்களும்பேய்களும்எம்முடையதுஎனவும்,மனம்மதிக்கும்பெற்றிபோல்ஆய்-மனத்தால் கருதுந் தன்மை போலாக, நமது எனப்படும் யாக்கை-நாமும் நம்முடையது எனக் கருதப் படுகின்ற உடல், யாரது-யாருக்கு உரியது எ - று.

உயிர் நீங்கிய பொழுதில் தமக்குணவாதல் கருதி நாய் நரிகள் தமதென்னும்; உயிருள்ள பொழுதில் தமக்குப் பயன் படுதல் கருதித் தம்மால் வந்ததென்னும் உரிமைபற்றித் தந்தை தாயர் தமதென்பர்; வருத்தும் உரிமையால் கூற்றமும், பிணி பேய்களும் தமதென்னு நிற்கும்; யாம் எமதென்பதும் சிறிது நாள் அதில் வசிக்கும் அத்துணையுரிமைகொண்டே; ஆகலின் அதனை எமக்கே யுரியதெனக் கோடல் அமையாதென்றவாறு. ஆய்-ஆக : எச்சத்திரிபு. ஏ : அசை. (௯௨)

விடம்பயி லெயிற்றர வுரியும் வீநுழை
குடம்பையுந் தானெனுங்* கொள்கைத் தேகோலாம்
நடம்பயில் கூத்தரி னடிக்கு மைவர்வாழ்
உடம்பையும் யானென வுரைக்கற் பாலதோ.

(இ -ள்.) நடம்பயில் கூத்தரின்-ஆடுகின்ற கூத்தர்களைப்போல, நடிக்கும் ஐவர்வாழ்-நடிக்கின்ற ஐம்பொறிகள் வாழா நின்ற; உடம்பையும்-உடலையும், யான் என-நான் என்று, உரைக்கற் பாலதோ-(உயிர்) கூறும்பகுதியையுடையதாமோ(அங்ஙனம்கொள்ளின்அது), விடம்பயில்-நஞ்சு தங்கிய, எயிற்று அரவு-பற்களையுடைய பாம்பு, உரியும்-தனது தோலையும், வீ - பறவை, நுழை குடம்பையும்-தான் நுழைகின்ற கூட்டையும், தான் எனும் கொள்கைத்து-தான் என்று கொள்ளும் கொள்கையை யுடையதாம் எ-று.

குடம்பை-கூடு. தானெனுங் கொள்கைத்தென்பது அரவோடும் வீயோடும் தனித்தனி யியையும். ஐவர் என்பது உடம்பென்னுங் குறிப்பால் பொறிகளை யுணர்த்திற்று; தொகைக் குறிப்பு: இழித்தற்கண் வந்த திணைவழுவமைதி. உம்மை: இழிவு சிறப்பு. இகாரம் சாரியையெனக்கொண்டு உடம்பும் உரைக்கற்பாலதோ எனினுமாம். ஏ : தேற்றம். கொல், ஆம் : அசை. ஓ : எதிர்மறை. 'குடம்பை தனித்தொழிய' என்னும் குறளும், 'ஓம்பினேன் கூட்டை வாளா' 'கூட்டமாயைவர் வந்து கொடுந்தொழிற் குணத்த ராகி, ஆட்டுவார்க் காற்றகில்லேன்' என்னும் திருநேரிசைகளும் இங்கு நோக்கற் பாலன. (௯௩)

(பா - ம்.) * நானெனும்.

நடுத்தயா விலார் தமை நலியத் துன்பநோய்
அடுத்தயா வருந்திரு வடைய யாக்கையைக்
கொடுத்தயா வறம்புகழ் கோள்வ னேயெனின்
எடுத்தயாக் கையின்பய னிதனின் யாவதே.

(இ-ள்.) ஐயா-இந்திரனே, நடு தயா இலார்-நடுவுநிலைமையும் கருணையும் இல்லாதவர்கள், தமை நலிய-தங்களை வருத்துதலால், துன்ப நோய் அடுத்த யாவரும்-துன்பமாகிய பிணியைப் பொருந்திய அனைவரும், திரு அடைய-(அத்துன்ப நீங்கி) இன்பத்தைப் பெறுமாறு, யாக்கையைக் கொடுத்து-என் உடலை அளித்து, அறம் புகழ் கொள்வனே எனின்-அறத்தையும் புகழையும் பெறுவேனாயின், எடுத்த ஆக்கையின்பயன்-எடுத்தஉடம்பினாலடையும்பயன், இதனின் யாவது-இதனினும் வேறு யாதுளது எ - று.

தயா தயையெனத் திரிதற்பாலது திரியாது நின்றது. தயாவிலார் அவுணரும், துன்பமுற்றவர் அமரரும் ஆம். ஐயா என்பது போலியாயிற்று. எனின் என்பது அருமை தோன்ற நின்றது;

"நத்தம்போற் கேடு முளதாகுஞ் சாக்காடும்
வித்தகர்க் கல்லா லரிது"

என்னும் திருக்குறள் இங்கு நோக்கற்பாலது. யாவது:விரித்தல். (௬௪)

[அறுசீரடியாசிரியவிருத்தம்]

என்றனன் கரண மொன்றி யெழுகருத் தறிவை யீர்ப்ப
நின்றனன் பிரம நாடி நெறிகோடு* கபாலங் கீண்டு
சென்றனன் விமான மேறிச் சேர்ந்தன னுலகை நோன்பால்
வென்றவன்† றுறக்கம் புக்கு வீற்றினி திருந்தா னம்மா.

(இ - ள்.) என்றனன் - என்று கூறி, உலகை நோன்பால் வென்றவன்-உலக மாயையைத் தவத்தால் வென்ற ததீசிமுனிவன், கரணம் ஒன்றி-கரணங்கள் ஒன்றுபட்டு, எழு கருத்து-ஒன்று யெழுகின்ற மெய்யுணர்வானது, அறிவை ஈர்ப்ப-விகற்ப அறிவுகளை இழுத்து அடக்கிக்கொள்ள, நின்றனன் - சிவயோக சமாதியில் நின்று, பிரம நாடி நெறி கொடு - சுழுமுனை நாடியின் வழியால், கபாலம் கீண்டு சென்றனன்-கபாலத்தைக் கிழித்துச் சென்று, விமானம் ஏறிச்சேர்ந்தனன்-வானவூர்தியில் ஏறிப்போய், துறக்கம் புக்கு-சிவலோகத்தையடைந்து, இனிது வீற்றிருந்தான்-இன்பமுடன் வீற்றிருந்தான் எ - று.

என்றனன் முதலிய நான்கும் முற்றெச்சங்கள். கரணம் ஒன்றுதலாவது உடல் பொறி பிராணன் அந்தக்கரணமெல்லாம்பதைப்பின்றி ஒடுங்கி நிற்றல். 'எழு கருத்து அறிவை யீர்ப்ப' என்பதற்கு, 'நான் என்று எழும் போத விருத்தி மெய்யறிவைப் பற்றிப் பின்செல்ல' என்று பிறர் பொருள் கூறுவாராயினர்; ஈர்ப்ப என்பதற்குப் பின்

(பா-ம்.) * நெறிக்கோடு. † வென்றனன்.

செல்ல என்பது பொருளாகாமையால் அது பொருந்தா தென்க. பிரம நாடி - சுழுமுனை நாடி; இதனை,

"கொன்படு நலஞ்சேர் சுழிமுனை நாடி கோதறு மந்தநா டியையே
தென்பொலி பிரம நாடியென் றுரைப்பர்"

என்று சூதசங்கிதை கூறுதலானறிக. ஆதார யோகத்தாலேனும், நிராதார யோகத்தாலேனும் மீதானத்தை யெய்த லுறுவார்க்கு வழியாயிருப்பது இச்சுழிமுனை நாடி. மீதானம்-பிரமரந்திரம். கபாலம்-தலையின் மேலோடு. விமானம் - வலவன் செலுத்தாத வானவூர்தி. துறக்கம் என்றது ஈண்டுச் சிவலோகத்தை. இனிது வீற்றிருந்தான் எனப் பிரிக்க. அம்மா: வியப்பின்கண் வந்த இடைச்சொல். (௩௫)

அம்முனி வள்ள லீந்த வடுபடை முதுகந் தண்டைத்
தெம்முனை யடுபோர் சாய்க்குந் திறல்கெழு குலிசஞ் செய்து
கம்மியப் புலவ னாக்கங் கரைந்துகைக் கொடுப்ப வாங்கி
மைம்முகி லூர்தி யேந்தி மின்விடு மழைபோ னின்றான்.

(இ - ள்.) அம்முனிவள்ளல் ஈந்த-அந்த முனியாகிய வள்ளலால் கொடுக்கப்பட்ட, அடுபடை முதுகந் தண்டை-கொல்லுதற் றொழிலையுடைய படைகள் திரண்ட முதுகெலும்பினை, தெவ்முனை - பகைவர் முனைகின்ற, அடுபோர் சாய்க்கும் - கொல்லுகின்ற போரைப் பின்னிடச் செய்யும், திறல் கெழு - வலிபொருந்திய, குலிசம் செய்து - வச்சிரப் படையாகச் செய்து, கம்மியப் புலவன் - தேவதச்சன், ஆக்கம் கரைந்து-ஆக்கங் கூறி; கைக்கொடுப்ப - கையிற் கொடுக்க, வாங்கி - பெற்று, மைமுகில் ஊர்தி - கரிய மேகத்தை ஊர்தியாகவுடைய இந்திரன், ஏந்தி - கையிற்றாங்கி, மின்விடு மழைபோல் நின்றான் - மின்னலை வீசும் முகில் போல் நின்றான் எ - று.

'அன்புடையார் என்பு முரியர் பிறர்க்கு' என்னும் முதுமொழிக்கு எடுத்துக் காட்டாகத் தன் அரிய வுடம்பையும் அன்புடனளித்தானாகலின் 'வள்ளல்' என்றார். முனை - போர்செய்யிடமுமாம். ஆக்கங் கரைந்து - ஆக்கமுண்டாக வாழ்த்துக் கூறி. ஆக்கம்-வெற்றி முதலியன; கரைதல் - சொல்லுதல். வச்சிரப்படைக்கு மின்னலும், இந்திரனுக்கு மழையும் உவமம். (௩௬)

மறுத்தவா வஞ்சப் போரால் வஞ்சித்து வென்று போன
கறுத்தவா ளவுணற் கொல்வான் கடும்பரி நெடுந்தேர் நீழல்
வெறுத்தமால் யானை மள்ளர் வேலைபுக் கெழுந்து குன்றம்
அறுத்தவா னவர்கோ னந்த வவுணர்கோ மகனைச் சூழ்ந்தான்.

(இ - ள்.) மறுதவா - குற்றத்தினீங்காத, வஞ்சப் போரால் - மாயப் போரினால், வஞ்சித்து வென்று போன - வஞ்சனை செய்து வென்றுபோன, கறுத்தவாள் அவுணன் கொல்வான் - சினத்தினையுடைய வாளை ஏந்திய விருத்திரனைக் கொல்லும் பொருட்டு, குன்றம் அறுத்த வானவர்கோன் - மலையின் சிறகை அரிந்த தேவேந்திரனானவன், கடும்பரி - கடிய நடையினையுடைய குதிரைகளும், நெடுதேர் -

பெரிய தேர்களும், நீழல் வெறுத்த மால்யானை-நிழலை வெகுளுகின்ற மத மயக்கத்தையுடைய யானைகளும், மள்ளர்-வீரர்களுமாகிய, வேலை புக்கு எழுந்து-நால்வகைச் சேனைக் கடலின் நடுவிற் றோன்றி, அந்த அவுணர்கோ மகனைச் சூழ்ந்தான் - அந்த அவுணர் தலைவனை வளைத்தான் எ - று.

தவா - தாவா என்றதன் குறுக்கம்: ஈறு கெட்ட எதிர்மறைப் பெயரெச்சம். கறுத்த - வெகுண்ட;

"கறுப்புஞ் சிவப்பும் வெகுளிப் பொருள"

என்பது தொல்காப்பியம். யானை மதமயக்கத்தால் தன் நிழலைப் பகை யானையென்று கருதி வெகுளும். ஆகிய என்னுஞ் சொல் வருவிக்கப் பட்டது. (௬எ)

வானவர் சேனை மூண்டு வளைத்தலும் வடவைச் செந்தீ
யானது வரையி னோங்கி யழன்றுருத் தெழுந்தா லென்னத்
தானவர் கோனு மானந் தலைக்கொள வெழுந்து பொங்கிச்
சேனையுந் தானு மூண்டு சீறிநின் றடுபோர் செய்வான்.

(இ - ள்.) வானவர் சேனை மூண்டு வளைத்தலும் - தேவர் படை கோபங்கொண்டு சூழ்ந்ததும், தானவர் கோனும்-அசுரர் தலைவனாகிய விருத்திரனும், வடவைச் செந்தீ ஆனது-வடவா முகாக்கினியானது, வரையின் ஓங்கி - மலைபோல உயர்ந்து, அழன்று உருத்து எழுந்தால் என்ன-கொதித்துச் சினந்து எழுந்தாற்போல, மானம் தலைக்கொள-மான மீதூர, எழுந்து பொங்கி - எழுந்து கொதித்து, சேனையும் தானும் மூண்டு - சேனையுந் தானுமாகச் சினமூண்டு, சீறி நின்று அடு போர் செய்வான்-சீறிக் கொல்லுதற்குரிய போர் செய்யத் தொடங்கினான் எ - று.

செந்தி, செம்மை யென்னும் அடை தன்னோ டியையின்மை மாத்திரை நீக்கியது. ஆனது: எழுவாய்ச் சொல். நின்றென்பது இசை நிறைக்க வந்தது. அடுபோர், ஒரு சொல்லாகக் கொள்ளலுமாம். தானும் சேனையும் எனத் திணைவிரவிச் செய்வான் என உயர்திணை வினைகொண்டது சிறப்பின் வந்த திணைவழுவமைதி. (௬அ)

அடுத்தன ரிடியே றென்ன வார்த்தன ராக்கங் கூறி
எடுத்தனர் கையிற் சாப மெறிந்தனர் சிறுநா ணோசை
தொடுத்தனர் மீளி* வாளி தூர்த்தனர் குந்த நேமி
விடுத்தனர் வானோர் சேனை வீரர்மே லவுண வீரர்.

(இ - ள்.) அவுண வீரர்-அசுர வீரர்கள், வானோர்-தேவர்களின், சேனை வீரர் மேல் - படைவீரர்கள் மேல், அடுத்தனர்-நெருங்கி, இடி ஏறு என்ன ஆர்த்தனர் - இடியேற்றைப்போல ஆரவாரித்து, கையில் சாபம்-கையில் வில்லை, ஆக்கம்கூறிஎடுத்தனர்-வெற்றிகூறி எடுத்து, சிறு நாண் ஓசை எறிந்தனர் – சிறிய குணத்தொனி யுண்டாமாறு

(பா - ம்.) * மீள.

எறிந்து, மீளி வாளி - வலிமையுடைய அம்புகளை, தொடுத்தனர் தூர்த்தனர் - தொடுத்து நிறைத்தார்கள்; குந்தம் நேமி விடுத்தனர் - (அவருட் சிலர்) கைவேலையும் திகிரியையும் எறிந்தார்கள் எ - று.

எறிதல் - நாணினைத் தெறித்தல். குந்தம் - கைவேல். வானோராகிய வீரரென்பதே கருத்து. அடுத்தனர் முதலிய ஐந்தும் எச்சமாய் முன்னைய நான்கும் முறையே ஒன்று ஒன்றனைக்கொண்டு முடிய ஈற்றது தூர்த்தனர் என்னும் வினைகொண்டு முடிந்தது. (ருகூ)

கிட்டினர் கடகக் கையாற் கிளர்வரை யனைய திண்டோள்
கோட்டினர் சாரி மாறிக் குதித்தனர் பலகை நீட்டி
முட்டின ரண்டம் விள்ள முழங்கினர் வடிவா ளோச்சி
வெட்டின ரவுணச் சேனை* வீரரை வான வீரர்.

(இ - ள்.) வானவீரர் - தேவவீரர்கள், அவுணச் சேனை வீரரை - அசுரப்படை வீரர்களை, கிட்டினர் - நெருங்கி, கடகக் கையால் - தொடியணிந்த கைகளால், கிளர்வரை அனைய திண் தோள் கொட்டினர் - விளங்கா நின்ற மலையை ஒத்த வலிய தோள்களைத் தட்டி, சாரி மாறிக் குதித்தனர் - இடசாரி வலசாரியாக மாறிக்குதித்து, பலகை நீட்டி முட்டினர் - கேடகத்தை நீட்டி மோதி, அண்டம் விள்ள முழங்கினர் - அண்டம் பிளக்க ஆரவாரித்து, வடிவாள் ஓச்சி வெட்டினர் - கூரிய வாளை வீசி வெட்டினார்கள் எ - று.

கடகம் - வீரவளை. வடிவாள் - வடித்த வாளுமாம். வானவ வீரர் என்பது விகாரமாயிற்று. (சo)

வீழ்ந்தனர் தோளுந் தாளும் விண்டனர் சோரி வெள்ளத்
தாழ்ந்தனர் போருந் தாரு மகன்றன ரகன்ற மார்பம்
போழ்ந்தனர் சிரங்க ளெங்கும் புரண்டனர் கூற்றூர் புக்கு
வாழ்ந்தன ரடுபோ ராற்றி வஞ்சகன் சேனை மள்ளர்.

(இ - ள்.) வஞ்சகன் சேனை மள்ளர் - வஞ்சகனாகிய விருத்திரன் படைவீரர்கள், அடுபோர் ஆற்றி - கொல்லுதலையுடைய போரினைச் செய்து, தோளும் தாளும் வீழ்ந்தனர் - தோள்களும் கால்களும் அறுபட்டவர்களும், சோரி விண்டனர் - குருதி சொரிந்தவர்களும், வெள்ளத்து ஆழ்ந்தனர் - அவ் வெள்ளத்தில் மூழ்கினவர்களும், போரும் தாரும் அகன்றனர் - போரினையும் தும்பை மாலையினையும் நீங்கினவர்களும், அகன்ற மார்பம் போழ்ந்தனர் - பரந்த மார்பு பிளக்கப்பட்டவர்களும், சிரங்கள் எங்கும் புரண்டனர் - எவ்விடத்தும் தலைகள் புரளப்பட்டவர்களும், கூற்று ஊர் புக்கு வாழ்ந்தனர் - கூற்றுவனுலகு சென்று வாழ்ந்தவர்களும் (ஆயினார்) எ - று.

ஈழே விழுந்தனர் தோளும் தாளும் விண்டனர் என்றும், விண்டனர் வீழ்ந்தனரெனக் கூட்டித் தோளும் தாளும் அற்று வீழ்ந்தனர் என்றும் உரைத்தலுமாம். ஆயினார் என ஒரு சொல் வருவித்து முடிக்கப்பட்டது. மள்ளருட் சிலர் வீழ்ந்தனர், சிலர் விண்டனர் என இங்

(பா - ம்.) * அவுணர் சேனை.

னனம் முற்றுகவே யுரைத்தலுமாம். அஃறிணைச் சினைப் பெயர்கள் உயர்திணையோடு சார்த்தப்பட்டு உயர்திணை முடிபு பெற்றன; திணை வழுவமைதி; இதனை,

''உயர்திணை தொடர்ந்த பொருண்முத லாறும்
அதனொடு சார்த்தி னத்திணை முடிபின''

என்னும் நன்னூற் சூத்திரத்தா னறிக. (௪௧)

தாளோடு கழலு மற்றுர் தலையோடு முடியு மற்றுர்
தோளோடு வீர மற்றுர் தும்பையோ டமரு மற்றுர்
வாளோடு கரமு மற்றுர் மார்போடு கவச மற்றுர்
கோளோடு மாண்மை யற்றுர் குறைபடக் குறையா மெய்யர்.

(இ - ள்.) குறைபட குறையா மெய்யர்-(படைகளால்) குறைக்கப்படினும் குறையாத உடலையுடைய தேவவீரர்களுட் சிலர், தாளொடு கழலும் அற்றுர்-கால்களோடு வீரகண்டையும் அறுபட்டார்கள்; தோளொடு வீரம் அற்றுர் -சிலர் தோளோடு வீரமும் அறுபட்டார்கள்; தும்பையோடு அமரும் அற்றுர் - சிலர் தும்பை மாலையோடு போரும் நீங்கினுர்கள்; வாளொடு கரமும் அற்றுர்-சிலர் வாட்படையோடு கையும் அறுபட்டார்கள்; மார்பொடு கவசம் அற்றுர் - சிலர் மார்போடு கவசமும் பிளக்கப்பட்டார்கள்; கோளொடும் ஆண்மை அற்றுர் - சிலர் வலிமையோடு ஆண் தன்மையும் நீங்கினுர்கள் எ - று.

அமரராகலின் குறையா மெய்யர் என்றுர். தாள் முதலியவற்றுக்கு ஏற்ப அற்றுர் என்பதற்கு அறுபட்டார் எனவும் நீங்கினுர் எனவும் இங்ஙனம் உரைத்துக் கொள்க. கோள்-வலிமை. ஒடு: எண்ணிடைச்சொல். இதுவும் மேலதுபோல் திணை வழுவமைதி. (௪௨)

தோக்கன கழுகு சேனஞ் சோரிகுடர் பிடுங்கி யீர்ப்ப
உக்கன குருதி மாந்தி யோட்டல்வாய் நெட்டைப் பேய்கள்
நக்கன பாடல் செய்ய ஞாட்பினுட் கவந்த மாடப்
புக்கன பிணத்தின் குன்றம் புதைத்தபார் சிதைத்த தண்டம்.

(இ - ள்.) ஞாட்பினுள்-போர்க்களத்தில், கழுகு சேனம் தொக்கன - கழுகுகளும் பருந்துகளும் நிறைந்து, சொரி குடர் பிடுங்கி ஈர்ப்ப-சொரிகின்ற குடலை இழுத்துப் பிடுங்கா நிற்பவும், ஒட்டல் வாய் நெட்டைப் பேய்கள்-ஒட்டிய வாயையுடைய நீண்ட பேய்கள், உக்கன குருதி மாந்தி-சொரிவனவாகிய குருதிகளைக்குடித்து, நக்கன பாடல் செய்ய-சிரித்துப் பாடவும், கவந்தம் ஆடப் புக்கன - தலையிழந்த உடல்கள் ஆடத் தொடங்கின; பார் புதைத்த பிணத்தின் குன்றம் - பூமியை மூடிய பிணமலையானது, அண்டம் சிதைத்தது - அண்டத்தைச் சிதைவு படுத்தியது எ - று.

தொக்கன, நக்கன என்பன வினையெச்சங்களும்,உக்கன என்பது பெயரெச்சமும் ஆயின. ஒட்டல்: தொழிற் பெயர். நெட்டை - நெடுமையுடைய.ஒட்டலாகியவாய்எனவும்,நெட்டையாகியபேய்கள் எனவும் உரைத்தலுமாம். புதைத்தது என்பது விகாரமாயிற்றுமாம்.

இவ்வகை மயங்கிப் போர்செய் திறந்தவ ரொழியப் பின்னுங்
கைவகை யடுபோர் செய்து கரையிறந் தார்கண் மாண்டார்
அவ்வகை யறிந்து வானத் தரசனு மவுணர் வேந்துந்
தெய்வதப் படைகள் வீசிச் சீறிநின் றடுபோர் செய்வார்.

(இ - ள்) இவ்வகை மயங்கி-இங்ஙனம் கலந்து, போர் செய்து, இறந்தவர் ஒழிய-போர் செய்து மாண்டவர்கள் நீங்க, பின்னும்-பின்பும், கைவகை - கைவரிசையின் வகையால், அடுபோர் செய்து-கொல்லுதலையுடைய மற்போரினைச் செய்து, கரை இறந்தார்கள் மாண்டார்-அளவிறந்தவர்கள் இறந்தனர்; அவ்வகை அறிந்து-அவ்வாறு மாண்டதை அறிந்து, வானத்து அரசனும் அவுணர் வேந்தும்-தேவேந்திரனும் அசுரேந்திரனும், தெய்வதப் படைகள் வீசி-தெய்வத் தன்மையுடைய படைகளை விடுத்து, சீறி நின்று அடுபோர் செய்வார்-கனன்று நின்று கொல்லுதலையுடைய போரினைச் செய்வாராயினர் எ - று.

கை-கைத்திறம். கை வகை-ஒழுங்காகிய படை வகுப்பு என்பாரும் உளர். (௪௪)

அனற்படை விடுத்தான் விண்ணோ
ராண்டகை யதனைக் கள்வன்
புனற்படை விடுத்துச் சீற்றந்
தணித்தனன்* புனிதன் காற்றின்
முனைப்படை விடுத்தான் வெய்யோன்
முழங்குகால் விழுங்கு நாகச்
சினப்படை தொடுத்து வீசி
விலக்கினன் றேவ ரஞ்ச.

(இ - ள்.) விண்ணோர் ஆண் தகை-தேவர்கள் தலைவனாகிய இந்திரன், அனல் படை விடுத்தான்-தீக் கணையை விட்டான்; கள்வன்-விருத்திரன், புனல் படை விடுத்து-நீர்க்கணையை விடுத்து, அதனைச் சீற்றம் தணித்தனன்-அதனுடைய வெகுளியைத் தணித்தான்; புனிதன்-தூயவனாகிய இந்திரன், காற்றின் முனைப் படை விடுத்தான்-கூரிய காற்றுக் கணையை விடுத்தான்; வெய்யோன்-கொடியவனாகிய விருத்திரன், முழங்கு கால்-ஒலிக்கின்ற காற்றினை, விழுங்கும்-உண்ணுகின்ற, நாகச் சினப்படை - கோபத்தையுடைய பாம்புக்கணையை, தொடுத்து வீசி-வில்லிற் பூட்டி விடுத்து, தேவர் அஞ்ச விலக்கினன்-தேவர்கள் அஞ்சும்படி (அக்கணையைத்) தடுத்தான் எ - று.

அனற்படை முதலியன ஆக்கினேயாஸ்திரம் முதலிய பெயர்களால் வடமொழியில் வழங்கப்பெறும். ஆண்டகை-ஆண்மையாகிய தகுதியை யுடையான்; வீரன்: அன்மொழித் தொகை. அதனை: அதனுடைய; வேற்றுமை மயக்கம்; சீற்றந் தணித்தனன் என்பதனை ஒரு சொல்லாகக் கொண்டு அதனை யென்னும் இரண்டாவதற்கு முடிபாக்கினும் அமையும். (௪௫)

---

(பா - ம்.) * சிந்தத் துணிந்தனன்.

நாகமாப் படைவிட் டார்த்தா னுகர்கோ னுவணச் செல்வன்
வேகமாப் படையை வீசி விலக்கினுன் றகுவர் வேந்தன்
மோகமாப் படையைத் தொட்டு முடுக்கினுன் முனைவனன்ன
தேகமாப் படிறன் ஞானப் படைவிடுத் திருள்போ னின்ருன்.

(இ - ள்.) நாகர்கோன்-தேவர்க்கரசன், நாகம் மாப்படை விட்டு ஆர்த்தான்-பெரிய பாம்புக் கணையை விடுத்துப் பேரொலி செய்தான்; உவணச் செல்வன்-கருடனுகிய செல்வனது, மாவேகப் படையை வீசி-பெரிய வேகத்தையுடைய கணையை விடுத்து, தகுவர் வேந்தன் விலக்கினுன்-அசுரர் மன்னன் (அக் கணையை) மாற்றினுன்; முனைவன்-இந்திரன், மா மோகப்படையைத் தொட்டு முடுக்கினுன்-பெரிய மயக்கத்தைத் தருகின்ற கணையை எடுத்து விரைந்து தூண்டினுன், மா படிறன்-பெரிய வஞ்சகனுகிய அசுரன், அன்னது ஏக-அம் மையற் கணை ஒழிய, ஞானப்படை விடுத்து-ஞானக் கணையை விடுத்து, இருள் போல் நின்ருன்-இருளைப்போல நின்ருன் எ - று.

தகுவர்-அசுரர். மோகப்படை - மோகனுஸ்திரம். முனைவன்-முதல்வன். 'படிறன் ஞானப்படை விடுத்து இருள்போல் நின்ருன்' என்பதில் விரோதமாகிய அழகு அமைந்திருத்தல் காண்க. இச்செய்யுட்கு, முதலில் அசுரன் என்னுஞ் சொல்லை வருவித்து, அசுரன் நாகமாப் படை விட்டார்த்தான் என் றிம்முறையாற் பொருள் கூறினரு முளர்; சொற்கிடக்கை முறை அதற்கேலாமை காண்க. (சுசு)

மட்டிடு தாரான் விட்ட வானவப் படைக்கு மாறு
விட்டுடன் விலக்கி வேறும் விடுத்திடக் கனன்று வஞ்சன்
முட்டிட மான வெங்கான் மூட்டிடக் கோபச் செந்தீச்
சுட்டிடப் பொருது பொங்கிச் சுராதிப னிதனைச் செய்தான்.

(இ-ள்.) மட்டு இடு தாரான் விட்ட - தேனைப் பொழிகின்ற மாலையையுடைய இந்திரன் விடுத்த, வானவப் படைக்கு-தெய்வக் கணைகளுக்கு, மாறுவிட்டு உடன் விலக்கி-பகைக் கணைகளை விடுத்து உடனே விலக்கி, வேறும்விடுத்திட-வேறுகணைகளையும் விடுப்பதற்கு, வஞ்சன் கனன்று முட்டிட - வஞ்சகனுகிய விருத்திரன் சினந்து நெருங்க, சுராதிபன்-தேவேந்திரன், மானவெம்கால் மூட்டிட-மானமாகிய வெவ்விய காற்ருனது மூட்ட, கோபச் செந்தீ-கோபமாகிய சிவந்த தீயானது, சுட்டிட-சுடுதலால், பொருது பொங்கி - ஆற்ருது சீறி, இதனைச் செய்வான்-இதனைச் செய்வானுயினன் எ - று.

வேறும்-வேறு கணையும். மானவெங்கால், கோபச் செந்தீ என்பன உருவகம், முட்டிட, சுட்டிட என்பவற்றில் இடு: துணைவினை. சுராதிபன் : தீர்க்க சந்தி.

வீங்கிரு ளோதுங்க மேக மின்விதிர்த் தென்னக் கையில்
ஓங்கிருங் குலிச வேலை யோல்லென விதிர்த்த லோடுந்
தீங்குளம் போன்றி ருண்ட திணியுடற் கள்வ னஞ்சி
வாங்கிருங் கடலில் வீழ்ந்தான் மறைந்தமை நாக மோத்தான்.

(இ - ள்.) வீங்கு இருள் ஒதுங்க-மிகுந்த இருள் ஓடுமாறு, மேகம் மின் விதிர்த்து என்ன-முகிலானது மின்னலை வீசினாற்போல, கையில் ஓங்கு இருங் குலிச வேலை - கையிற் றூங்கிய மிகப் பெரிதாகிய வச்சிரப் படையை, ஒல்லென விதிர்த்தலோடும் - விரைவாக அசைத்தவுடனே, தீங்கு உளம்போன்று - தனது தீய உள்ளத்தைப்போல, இருண்ட திணி உடல் கள்வன் - கருமையுற்ற வலிய உடலையுடைய திருடனாகிய விருத்திரன், அஞ்சி-பயந்து, வாங்கு இருங்கடலில் வீழ்ந்தான்-வளைந்த பெரிய கடலினுள் வீழ்ந்து மறைந்து, மறைந்த மைநாகம் ஒத்தான்-முன்கடலில் மறைந்த மைநாகமலையை ஒத்தான் எ-று.

விதிர்த்தென்ன: விகாரம். ஓங்கிரு: ஒருபொரு ளிருசொல். குலிச வேல்: பண்பொட்டு. உளமும் உடலும் இருண்ட; உளம் கரிதாதலை 'அகம் குன்றி மூக்கிற் கரியார்' என்னும் குறளானும், 'கூழின் மலி மனம் போன்றிரு ளாகின்ற கோகிலமே' என்னும் திருக்கோவையானும் அறிக. போன்று - போல: எச்சத்திரிபு. வீழ்ந்தான்: எச்சம்; வீழ்ந்து மறைந்து என்க. கரிய வுருவானும் பெரிய வடிவானும் வச்சிரத்திற் கஞ்சிக் கடலுள் ஒளித்தலானும் மைநாகம் உவமையாயிற்று. மைநாகம் - இந்திரன் வச்சிரத்தால் மலைகளின் சிறகுகளை யறுத்த ஞான்று வாயுவின் உதவியாற் கடலுளொளித்த ஓர் மலை.

(௪௮)

ஒக்கவிந் திரனும் வீழ்ந்தா னுடல்சின வுருமே றன்னான்
புக்கிடந் தேடிக் காணான் புண்ணிய முளரி யண்ணல்
பக்கம்வந் தனைய செய்தி பகர்ந்தனன் பதகன் மாளத்
தக்கதோர் சூழ்ச்சி முன்னிச் சராசர மீன்ற தாதை.

(இ - ள்.) ஒக்க - அவனோடு கூட, இந்திரனும் வீழ்ந்தான்-இந்திரனும் விழுந்து, உடல் சினம்-மாறுபடும் சினத்தையுடைய, உரும் ஏறு அன்னான் புக்க இடம் தேடிக் காணான்-இடியேற்றை ஒத்த விருத்திரன் புகுந்து ஒளித்த இடத்தைத் தேடிக் காணாமல், புண்ணியம் முளரி அண்ணல் பக்கம் வந்து-தூய்மையாகிய தாமரை மலரில் வசிக்கும் பிரமனிடம் வந்து, அனைய செய்தி பகர்ந்தனன் - அந்தச் செய்தியைக் கூறினன்; சராசரம் ஈன்ற தாதை - இயங்குவனவும் நிற்பனவுமாகிய எல்லாவற்றையும் தந்தருளிய தந்தையாகிய பிரமனானவன், பதகன் மாளத்தக்கது ஓர் சூழ்ச்சி முன்னி - பாதகனாகிய அசுரன் மாளத் தகுந்ததாகிய ஒருபாயத்தை எண்ணி எ - று.

ஒக்க - உடனாக. உடல் சினம்: பொருபோர் என்பதுபோல நின்றது; உடலுதல் - சினத்தல். புக்கவிடம் புக்கிடமென விகாரமாயிற்று. புண்ணியம் - தூய்மை. அனைய: சுட்டு. தாதை - பிரமன்; பெயர்.

(௪௯)

விந்தவெற் படக்கி னாற்கீ துரையென விடுப்ப மீண்டு
சந்தவெற் படைந்தான் வானோர் தலைவனை முகமன் கூறிப்
பந்தவெற் பறுத்தான் வந்த தேவனேனப் பறைக ளெல்லாஞ்*
சிந்தவெற் பறுத்தான் வந்த செயலெலா முறையாற் செப்பி.†

(பா - ம்.) * பகைகளெல்லாம். † செப்ப; சொல்வான்.

(இ - ள்.) விந்த வெற்பு அடக்கினற்கு-விந்தமலையை அடக்கிய அகத்திய முனிவனுக்கு, ஈது உரை என விடுப்ப - இச்செய்தியைக் கூறுவாயென அனுப்ப, மீண்டு-திரும்பி, சந்தவெற்பு அடைந்தான் - சந்தன மரங்களையுடைய பொதியின் மலையையெய்தினன்; பந்த வெற்பு அறுத்தான்-பாச பந்தமாகிய மலையைத் தொலைத்த அம்முனிவன், வானோர் தலைவனை முகமன் கூறி வந்தது எவன் என - தேவேந்திரனை நோக்கி உபசார வார்த்தைகள் கூறி வந்த காரணம் யாதென்று வினவ, வெற்பு பறைகள் எல்லாம் சிந்த அறுத்தான்-மலைகளின்சிறகுகளெல்லாம் சிதற அறுத்த இந்திரன், வந்த செயல் எல்லாம் முறையால் செப்பி-வந்த செய்திகளனைத்தும் வரிசையாகக் கூறி எ - று.

பொதியிலிற் சந்தனமர மிக்கிருத்தலின் அது 'சந்த வெற்பு' எனப்பட்டது; 'பொதியிலே விளைகின்ற சந்தவம்' என்றார் நாட்டுச் சிறப்பிலும். வந்தது - வந்த காரணம். எவன் - யாது. பறை - சிறகு. (ங0)

யாவையு முணர்ந்த வெந்தைக் கியானெடுத் துணர்த்து கின்ற
தாவதென் னமருக் காற்ரு தாழிபுக் கொளித்தா னுவி
வீவது மவனல் வந்த விழுமநோ யெல்லா மின்று
போவதுங் கருதி நம்பாற் புகுந்தன மடிக ளென்றான்.

(இ - ள்.) யாவையும் உணர்ந்த எந்தைக்கு-அனைத்தையுமறிந்த எம் தந்தையாகிய நுமக்கு, யான் எடுத்து உணர்த்துகின்றதாவது என் - யான் எடுத்துத் தெரிவிப்பது யாது, அமருக்கு ஆற்ருது - போருக்கு ஆற்ருமல், ஆழி புக்கு ஒளித்தான் ஆவி வீவதும் - கடலிற் புகுந்து மறைந்த விருத்திரனுடைய உயிர் நீங்குவதும், அவனல் வந்த விழுமநோய் எல்லாம் - அவனல் நேர்ந்த துன்ப நோயனைத்தும், இன்று போவதும் கருதி-இன்றே நீங்குவதும் குறித்து, அடிகள் நும்பால் புகுந்தனம் என்ருன் - அடிகளே நும்மிடத்து வந்தோம் என்ருன் எ - று.

ஆவது: இடைச்சொல். வீவது, போவது என்பன தொழிற்பெயர்கள். இன்று புகுந்தனம் எனினுமாம். ஏனைத் தேவரையும் உளப்படுத்திப் புகுந்தனம் எனப் பன்மையாற் கூறினன். (ஙக)

என்றவ னிடுக்கண் டீர்ப்பா னிகல்புரி புலன்க ளைந்தும்
வென்றவ னெடியோன் றன்னை விடையவன் வடிவமாக்கி
நின்றவ னறிவா னந்த மெய்ம்மையாய் நிறைந்த வெள்ளி
மன்றவ னுழிச் சேந்தீ வடிவினை மனத்துட் கொண்டான்.

(இ - ள்.) என்றவன்-என்று கூறின இந்திரனுடைய, இடுக்கண் தீர்ப்பான் - துன்பத்தை நீக்கும் பொருட்டு, இகல் புரி புலன்கள் ஐந்தும் வென்றவன் - பகை செய்கின்ற ஐம்புலன்களையும் வென்றவனும், நெடியோன் தன்னை - திருமாலின் வடிவத்தை, விடையவன் வடிவம் ஆக்கி நின்றவன் - சிவபிரான் திருவுருவமாகச் செய்து நின்றவனுமாகிய அகத்திய முனிவன், மெய்ம்மை அறிவு ஆனந்தமாய் - உண்மை அறிவு ஆனந்த வடிவாய், நிறைந்த - வியாபித்த, வெள்ளி

மன்றவன் - வெள்ளியம்பல வாணனின், ஊழிச் செந்தீ வடிவினை - சிவந்த ஊழித்தீயை யொத்த திருவுருவை, மனத்துள் கொண்டான் - உள்ளத்திற் சிந்தித்தான் எ - று.

புலன்கள் இகல் புரிதலை,

"கூட்டமா யைவர் வந்து கொடுந்தொழிற் குணத்த ராகி
ஆட்டுவார்க் காற்ற கில்லே னடர வசைத்த கோவே"

என்னும் திருநேரிசையிற் காண்க. கடல் நீர் சுவறக் கருதினமையின் 'ஊழிச் செந்தீ வடிவினை மனத்துட் கொண்டான்' என்றார்.

திருமாலைச் சிவனுருவாக்கிய வரலாறு:-அகத்தியர் வடக்கினின்றும் புறப்பட்டுப் பொதியிலுக்குச் செல்லுங்கால் திருக்குற்றாலத்தை யடைய அங்குள்ள வேதியர்கள் அவரது சைவ தவவேடப் பொலிவை நோக்கி உள்ளம் பொறாதவர்களாய் இகழ்ந்து அவ்விடத்தை விட்டுப் போகுமாறு கூற, அவர் அங்ஙனமே திரும்பிச் சென்று அம் மறையோரின் அகந்தையைப் போக்கக் கருதித் திருமாலடியார் கோலங் கொண்டு மீண்டு வந்து அவர்களால் உபசரிக்கப் பெற்றுத் திருமால் கோயிலை யடைந்து மாயோனது திருமுடிமேல் தமது திருக்கையை வைத்துச் சிவலிங்கப் பெருமான் வடிவமாக்கினர் என்பது; இதனை,

"அறுகுமதி நதிபுனையுஞ் செஞ்சடையெம்
பெருமானை யகத்துட் கொண்டு
சிறுகுமுரு வுடையமுனி நாரணனார்
திருமுடிமேற் செங்கை யோச்சிக்
குறுகுகுறு கெனவிருத்தி யொள்ளரக்கிற்
புனைபாவைக் கோலமீது
மறுகுதழ லுற்றென்னக் குழைவித்தோர்
சிவலிங்க வடிவஞ் செய்தான்"

என்னும் கந்தபுராணச் செய்யுளா னறிக. (௩௨)

கைதவன் கரந்து வைகுங் கடலைவெற் படக்குங் கையிற்
பெய்துழுந் தெல்லைத் தாக்கிப் பருகினன் பிறைசேர் சென்னி
ஐயன தருளைப் பெற்றார்க் கதிசய மிதேன்கோன் மூன்று
வையமுத் தொழிலுஞ் செய்ய வல்லவ ரவரே யன்றோ.

(இ - ள்.) கைதவன்-வஞ்சகனாகிய விருத்திரன், கரந்துவைகும் கடலை-மறைந்துறையும் கடலை, வெற்பு அடக்கும் கையில் பெய்து - விந்தமலையை அடக்கிய கையிற் கொண்டு, உழுந்து எல்லைத்து ஆக்கி - உழுந்தினளவினதாகச் செய்து, பருகினன் - குடித்தான்; பிறைசேர் சென்னி ஐயனது அருளைப் பெற்றார்க்கு - பிறைமதி பொருந்திய திருமுடியையுடைய சிவபெருமானது திருவருளைப் பெற்ற அடியார்கட்கு, இது அதிசயம் என் - இது அதிசய மென்பதென்னை, மூன்று வையம்-மூன்றுலகத்தும், முத்தொழிலும் செய்ய வல்லவர் - படைத்தல் காத்தல் அழித்தலாகிய மூன்று தொழில்களையும் செய்ய வல்லவர்கள், அவரே அன்றோ-அவ்வடியார்களே அல்லவா எ - று.

வைகும், அடக்கும் என்னும் பெயரெச்சங்கள் முறையே இடப்பெயரும், கருவிப் பெயரும் கொண்டன. உழுந்து அமிழுமள வென்க. இதென்: விகாரம். ஈதோரதிசயமாமா என்றவாறு. கொல்: அசை. வையமும் என்னும் உம்மை தொக்கது. இது வேற்றுப் பொருள் வைப்பணி. (௩௩)

அறந்துறந் தீட்டு வார்த மரும்பெறற் செல்வம் போல
வறந்தன படுநீர்ப் பௌவம் வடவைகட் புலப்பட் டாங்கு
நிறைந்த செம் மணியு மத்தீ நீண்டெரி சிகைபோ னீண்டு
சிறந்தெழு பவளக் காடுந் திணியிருள் விழுங்கிற் றம்மா.

(இ-ள்.) அறம் துறந்து ஈட்டுவார்தம்-அறத்தைக் கைவிட்டுத் தேடுபவர்களின், அரும் பெறல் செல்வம்போல-பெறுதற்கரிய செல்வத்தைப்போல, படு நீர்ப் பௌவம் வறந்தன - ஆழமாகிய நீரினையுடைய கடல் முழுதும் வற்றின; வடவைகண் புலப்பட்டாங்கு-அங்குள்ள வடவைத் தீ கண்களுக்குத் தோன்றினாற்போல, நிறைந்த செம் மணியும்-மிகுந்த செந்நிறத்தையுடையமாணிக்கங்களும், அத்தீ நீண்டு எரி சிகைபோல்-அந் நெருப்பு உயர்ந்து எரிகின்ற கொழுந்து போல, நீண்டு சிறந்து எழு பவளக்காடும்-ஓங்கிச் சிறப்புற்றெழுந்த பவளக் காடும், திணி இருள் விழுங்கிற்று-மிக்க இருளை விழுங்கின எ - று.

அறந்துறந் தீட்டுதல்-பழிபாவங்களான் ஈட்டுதல். பெறலரும் என மாற்றுக. படுநீர்-மிக்க நீர்; ஒலிக்கின்ற நீருமாம். வறந்தன எனப் பன்மையாகக் கூறினமையால் கடலின் எல்லா இடங்களும் என்றாவது எல்லாக் கடல்களும் என்றாவது கொள்க. திணி இருள்-செறிந்த இருள். விழுங்கிற்று என்னும் வினையைச் செம்மணி, பவளக்காடு என்பவற்றுடன் தனித்தனி கூட்டுக, அம்மா:வியப்பிடைச்சொல். 'விழுங்குமன்றே' எனப்பாடங்கொண்டாருமுளர்; அவர்பலவிடத்தும் தாமாகவே பாடங்களை மாற்றிக் கொண்டிருத்தலின் அவைகொள்ளற் பாலன வல்லவென்க. (௩௪)

பணிகளின் மகுட கோடிப் பரப்பென விளங்கிப் பல்கா
சணிகலப் பேழை பேழ்வாய் திறந்தனைத் தாகி யொன்பான்
மணிகிடந் திமைக்கு நீரான் மகபதி வேள்விக் காவாய்த்
திணியுட லவுணன் பட்ட செங்கள மனைய தன்றே.

(இ-ள்.) பணிகளின் மகுடகோடிப் பரப்பு என - (கடலானது, பாதலத்திலுள்ள) பாம்புகளின் மகுட வரிசையின் பரப்பைப்போல, விளங்கி-ஒளி வீசி, பல்காசு அணிகலப் பேழை-பல மணிகள் பதித்த அணிகலன்களை வைத்த பெட்டியின், பேழ்வாய் திறந்து அனைத்து ஆகி-பெரிய வாயைத் திறந்து வைத்ததுபோலாகி, ஒன்பான் மணி கிடந்து இமைக்கு நீரால் - ஒன்பது வகை மணிகளும் தங்கி ஒளிவிடுந் தன்மையால், மகபதி வேள்விக்கு ஆவாய்-இந்திரன் வேள்விக்குப் பசுவாகி, திணி உடல் அவுணன் பட்ட-வலிய உடலையுடைய வலாசுரன் இறந்துபட்ட, செங்களம் அனையது-போர்க்களம் போன்றது எ-று.

பணி-படத்தையுடையது எனக் காரணக்குறி; பணம்-படம். கோடி-வரிசை; மிகுதியுமாம். பல் காசினையும் அணிகலங்களையு

முடைய பேழை என்றுமாம். திறந்தனைத்து: தொகுத்தல் விகாரம். ஒன்பான்-ஒன்பது. மகபதி - வேள்விக்குத் தலைவன்: நூறுவேள்விகள் இயற்றியவன். வலனுடைய உடம்பின் குருதி முதலியவெல்லாம் நவமணிகளாயினமையின் 'செங்கள மணியது' என்றார்; இதனை மாணிக்கம் விற்ற படலத்திற் காண்க. செங்களம் - போர்க்களம்; 'செங்களந் துழவுவோள்' என்பது புறப்பாட்டு. அன்று, ஏ: அசை. (ருடு)

வறந்தநீர் தன்னின் மின்னு வாள்விதிர்த் தென்னப் பன்மீன்
எறிந்தன நெளிந்த நாக மிமைத்தன வளையு முத்துஞ்
செறிந்தன கரந்த யாமை சேர்ந்தபல் பண்டஞ் சிந்தி
முறிந்தன வங்கங் கங்க முக்கின* சிறுமீ னெல்லாம்.

(இ - ள்.) வறந்த நீர் தன்னில்-நீர் வற்றிய இடத்தில், மின்னு வாள் விதிர்த்து என்ன - ஒளியினையுடைய வாட்படையை அசைத்தாற் போல, பல்மீன் எறிந்தன - பலமீன்கள் துள்ளின; நாகம் நெளிந்த - பாம்புகள் நெளிந்தன; வளையும் முத்தும் இமைத்தன - சங்குகளும் முத்துக்களும் ஒளி வீசின; யாமை செறிந்தன கரந்த - யாமைகள் நெருங்கி ஒளித்தன; சேர்ந்த பல் பண்டம் சிந்தி வங்கம் முறிந்தன - பொருந்திய பல பொருள்களையும் சிதறிக் கப்பல்கள் உடைந்தன; கங்கம் சிறுமீன் எல்லாம் முக்கின - பருந்துகள் சிறிய மீன்களையெல்லாம் விழுங்கின எ - று.

விதிர்த்தென்ன: விகாரம். நெளிந்த, கரந்த என்பன அன்பெறாத பலவின்பால் முற்றுக்கள். செறிந்தன: முற்றெச்சம். முக்குதல் - வாய் நிறையக் கொண்டுண்ணுதல். (ருசு)

செருவினி லுடைந்து போன செங்கண்வா ளவுண னங்கோர்
அருவரை முதுகிற் கார்போ லடைந்துவா னுடர் செய்த
உருகெழு பாவந் தானோ ருருவெடுத் திருந்து நோற்கும்
பரிசென நோற்றா னின்னும்† பரிபவ விளைவு பாரான்.

(இ - ள்.) செருவினில் உடைந்துபோன - போரில் தோல்வியடைந்துபோன, செங்கண் - சிவந்த கண்களையுடைய, வாள் அவுணன் - வாட் படையையுடைய அசுரன், அங்கு ஓர் அருவரை முதுகில் - அவ்விடத்து ஓர் அரிய மலையின் உச்சியில், கார்போல் அடைந்து - முகிலைப்போலச் சென்று தங்கி, வானுடர் செய்த - தேவர்களாற் செய்யப்பட்ட, உருகெழு பாவம்தான் - அஞ்சத்தக்க பாவமானது, ஓர் உருவு எடுத்து இருந்து நோற்கும் பரிசு என - ஒரு வடிவெடுத்து இருந்து தவஞ் செய்யுந் தன்மைபோல, இன்னும் பரிபவ விளைவு பாரான் நோற்றான் - இன்னமும் மேலே வருகின்ற துன்பத்தைப் பாராதவனாகித் தவஞ் செய்தான் எ - று.

இன் : சாரியை. வாள் - கொடுமையுமாம். முதுகு - மலையின் நடுவுமாம். நிறத்தானும் மலையைச் சார்தலானும் கார் உவமம். தேவர்க்குத் துன்பம் விளைதலின் 'வானுடர் செய்த பாவம்' என்றார். உரு - அச்சம்; 'உருவுட் காகும்' என்பது தொல்காப்பியம். தான்: அசை.

(பா - ம்.) * கங்க மூக்கின. † இன்னம்.

கைதவ நோன்பு நோற்குங் கள்வனைக் கண்டு வானோர்
செய்தவ மனையான் யாணர் வச்சிரஞ் சீரிப் பான்போற்
பொய்தவன் றலையைக் கொய்தான் புணரிவாய் நிறையச் சோரி
பெய்தது வலாரி தன்னைப் பிடித்தது பிரமச் சாயை.*

(இ - ள்.) வானோர் செய்தவம் அனையான் - தேவர்கள் செய்த தவத்தினை ஒத்த இந்திரன், கைதவ நோன்பு நோற்கும் கள்வனைக் கண்டு-வஞ்சனையையுடைய தவத்தினைச் செய்யும் கள்வனாகிய விருத்திரனைக் கண்டு, யாணர் வச்சிரம் சீரிப்பான் போல் - புதிய குலிசப் படையைப் பழக்குவான்போல, பொய்தவன் தலையைக் கொய்தான் - பொய்க்கின்ற தவத்தினையுடைய விருத்திரனது தலையை அறுத்தான்; புணரிவாய் நிறையச் சோரி பெய்தது - கடலினிடம் நிறையுமாறு குருதி பொழிந்தது; வலாரி தன்னைப் பிடித்தது பிரமச் சாயை-இந்திரனைப் பிரமக் கொலைப் பாவம் பற்றியது எ - று.

போருக்குடைந்து நோற்பான் போல் ஒளித்திருந்தமையின் 'கைதவ நோன்பு நோற்கும்' என்றார். 'உயிர்க்குறுகண் செய்யாமை' தவத்திற் கிலக்கணமாகவும் வானோர்க்குத் துன்பமுண்டாதல் கருதி நோற்றமையில் என்னலுமாம். நோன்பென வந்தமையின் நோற்றல் செய்தல் என்னும் மாத்திரையாய் நின்றது. யாணர் புதுவருவாய் என்னும் பொருட்டு; 'புதிது படற்பொருட்டே யாணர்க் கிளவி' என்பது தொல்காப்பியம்; பின்னுளில் இது புதுமை, அழகு என்னும் பொருள்களில் வழங்குகிறது. சீரித்தல்-பரிக்கித்தல். பொய்-பொய்த் தலை யுடைய: வினைத்தொகை. உடலினின்றும் சோரி பெய்தது என்றுதல், உடல் சோரியைப் பெய்தது என்றுதல் கொள்க. வேள்வியிற் றோன்றியவனும் தவஞ் செய்வோனும் ஆகியவனைக் கொன்றமையின் பிரமச் சாயை பிடித்தது. (கஅ)

உம்மெனு மார்பைத் தட்டு முருத்தெழு மதிர்க்கும் போர்க்கு
வம்மெனும் வாய்ம டிக்கும் வாளெயி† றதுக்கும் வீழுங்
கோம்மென வோடு மீளுங் கோதித்தெழுஞ் சிரிக்குஞ் சீறும்
இம்மெனு மளவு நீங்கா தென்செய்வா னஞ்சி னானே.

(இ - ள்.) இம் எனும் அளவு நீங்காது - (அக்கொலைப் பாவம்) இம் என்று கூறும் அளவும் நீங்காததாய், உம் எனும் - உம் என்று அதட்டும்; மார்பைத் தட்டும் - தனது மார்பைத் தட்டும்; உருத்து எழும்-கோபித்து எழும்; அதிர்க்கும்-பேரொலி செய்யும்; போர்க்கு வம் எனும்-போருக்கு வாருங்கள் என்னும்; வாள் எயிறு அதுக்கும் - ஒள்ளிய பற்களை அதுக்கும்; வீழும் - குப்புற்று வீழும்; கொம்மென ஓடும்-விரைந்து ஓடும்; மீளும்-திரும்பும்; கொதித்து அழும்-பொங்கி அழும்; சிரிக்கும் - பெருநகை செய்யும்; சீறும் - சீறுகிற்கும்; என் செய்வான் - (ஆதலால்) என்ன செய்வான் இந்திரன், அஞ்சினான் - பயந்தான் எ - று.

உம்மெனும்: ஒலிக்குறிப்பு. கொம்மென, இம்மெனும் என்பன விரைவுக் குறிப்புகள். வம்மின் என்பது ஈறு கெட்டு நின்றது. எயிற்றால் அதுக்கு மென்றுமாம். (கக)

(பா - ம்.) * பிரமசாயை. † வாலெயிறு.

விரைந்தரன் றிசையோர் வாவி வீழ்ந்தொரு கமல நூலுட்
கரந்தனன் மகவா னிப்பால் கற்பக நாடு புல்லென்
றிருந்ததா லிருக்கு மெல்லை யிம்பரி னகுட னென்போன்
அரும்பரி மேத வேள்வி யாற்றினு னுற்று மெல்லை.

(இ - ள்.) மகவான் - இந்திரனுனவன், அரன் திசை ஓர் வாவி - ஈசான திசையில் உள்ள ஒரு குளத்தில், விழைந்து வீழ்ந்து ஒரு கமல நாலுள் கரந்தனன் - விரைவாகக் குதித்து ஒரு தாமரைத்தண்டின் நூலினுள் மறைந்தான்; இப்பால் கற்பக நாடு புல்லென்று இருந்தது - இப்புறம் தேவவுலகம் பொலிவழிந்திருந்தது; இருக்கும் எல்லை - அங்ஙனமிருக்குங் காலத்தில், இம்பரில் நகுடன் என்போன் - நிலவுலகில் நகுடனென்னும் மன்னன், அரும்பரி மேதவேள்வி ஆற்றினன் - அரிய அசுவமேதமாகிய வேள்வியைச் செய்தான்; ஆற்றும் எல்லை - அங்ஙனம் செய்துவரும் பொழுதில் எ - று.

அரன் திசை - ஈசான திசை, வடகிழக்கு; ஈசான திசையிலுள்ள உருத்திர வுலகத்தில் என்று சிலர் கூறுவர். தாமரை நாளத்திலுள்ள நூல். ஆல்: அசை. நகுடன் சந்திர வமிசத்து ஆயுவின் மகன், யயாதி முதலானோர்க்குத் தந்தை. (சுo)

அரசிலா வறுமை நோக்கி யவனைவா னுடர் யாரும்
விரைசெய்தார் மகுடஞ் சூட்டி வேந்தனுக் கோண்டார் வேந்தாய்
வருபவன் சசியை யீண்டுத் தருகென மருங்கு ளார்போய்த்
திரைசெய்நீ ரமுத னுட்குச் செப்பவக் கற்பின் மிக்காள்.

(இ - ள்.) வானுடர் யாரும் - தேவர்களனைவரும், அரசு இலா வறுமை நோக்கி - தங்கட்கு மன்னனில்லாத வறுமையைக் கருதி, அவனை - அந் நகுடனை, விரைசெய்தார் மகுடம் சூட்டி - மணம் வீசும் மாலையையுடைய முடியைச் சூட்டி, வேந்தனுக் கொண்டார் - அரசனுகக் கொண்டார்கள்; வேந்தாய் வருபவன் - அரசனாய் வந்த நகுடன், சசியை ஈண்டுத் தருகென - இந்திராணியை இங்கு அழையுங்கள் என்ன, மருங்குளார் போய் - பக்கத்திலுள்ளவர்கள் போய், திரை செய் நீர் அமுது அன்னாட்கு - அலைகளை வீசுகின்ற கடலிற் றோன்றிய அமுதத்தை யொத்த இந்திராணிக்கு, செப்ப - சொல்ல அக் கற்பின் மிக்காள் - அந்தக் கற்பின் மேம்பட்டவள் எ - று.

யாரும் என்பது எஞ்சாமை குறித்தது. மகுடஞ் சூட்டி யென்பதனை ஒரு சொல்லாகக் கொண்டு அவனை யென்னும் இரண்டாவதற்கு முடிபாக்குக. ஆக என்பது ஈறு தொக்கது. ஆய் - ஆகி. தருகென: அகரம் தொகுத்தல். (சுக)

பொன்னுயிர்த் தனைய காட்சிப்
புண்ணியக் குரவன் முன்போய்
மின்னுயிர்த் தனையா ணின்று
விளம்புவா ளிதென்கோல் கேட்டேன்.

என்னுயிர்த் துணைவ னுங்கே
யிருக்கமற் றொருவ னென்னைத்
தன்னுயிர்த் துணையாக் கோள்கை
தருமமோ வடிக ளென்றாள்.

(இ - ள்.) மின் உயிர்த்து அனையாள் - மின்னல் ஒரு வடிவு கொண்டதை ஒத்த அவள், பொன் உயிர்த்து அனைய காட்சி - பொன் ஓர் உருப்பெற்றதை ஒத்த தோற்றத்தையுடைய, புண்ணிய குரவன் முன் போய் நின்று விளம்புவாள்-அற வடிவாகிய குரவன் முன்னர்ச் சென்று நின்று கூறுவாள், அடிகள் - அடிகளே, இது என் கொல் கெட்டேன் - இஃது என்ன வியப்பு, என் உயிர்த்துணைவன் ஆங்கே இருக்க-என் உயிர்த்துணைவன் அவ்விடத்து உயிரோடிருக்கவும், மற்றொருவன்-வேறொருவன், என்னைத் தன் உயிர்த்துணையாக் கொள்கை- என்னைத் தன் உயிர்த்துணைவியாகக் கொள்ளுதல், தருமமோ என்றாள் - அறமோ என்று கூறினாள் எ - று.

உயிர்த்தல் - உருவுகொள்ளுதல். உயிர்த்தது இரண்டும் விகாரமாயின. இதென்: விகாரம். கொல்: அசை நிலை. கெட்டேன்: வியப்பிடைச் சொல்; அவலமுமாம். என்னுயிர், தன்னுயிர் என்பன உடையதும் உடைமையும் வேறாகாத ஒற்றுமைக் கிழமைப் பொருளில் வந்த ஆறும் வேற்றுமைத் தொகைநிலைத் தொடர்கள். (சுஉ)

மாதவ ரேழுவர் தாங்க மாமணிச் சிவிகை மீது
போதரி னவனே வானோர் புரந்தர னவனே யுன்றன்
காதல ளுகு மென்றான் கைதொழு ததற்கு நேர்ந்தம்
மேதகு சிறப்பா லிங்கு வருகென விடுத்தா டூது

(இ - ள்.) மாதவர் எழுவர் தாங்க-முனிவர் எழுவரும் தாங்க, மாமணிச் சிவிகைமீது போதரின் - பெருமை பொருந்திய மணிகள் அழுத்திய சிவிகையின்மேல் வந்தால், அவனே வானோர் புரந்தரன் - அவனே தேவர்களைப் புரக்கின்ற வேந்தனுவான்; அவனே உன்றன் காதலன் ஆகும் என்றான் - அவனே நின் நாயகனுமாவான் என்றான்; கைதொழுது - வணங்கி, அதற்கு நேர்ந்து-அதற்குடன்பட்டு, அம் மேதகு சிறப்பால் இங்கு வருகென-அந்த மேன்மையான சிறப்போடு நகுடன் இங்கே வருகவென்று, தூது விடுத்தாள் - தூதினைப் போக்கினாள் எ - று.

மாதவர் எழுவர்-சத்தமுனிகள்: அகத்தியன், ஆங்கிரசன், கோதமன், காசிபன், புலத்தியன், மார்க்கண்டன், வசிட்டன் என்போர். தன்: சாரியை. வருகென: தொகுத்தல். (சுங)

மனிதரின் மகவா னுகி வருபவன் சிவிகை தாங்கும்
புனிதமா தவரை யெண்ணுன் புன்கணேய் விளைவும் பாரான்
கனிதரு காமந் துய்க்குங் காதலால் விரையச் செல்வான்
இனிதயி ராணி பாற்கோண் டேகுமின் சர்ப்ப வென்றான்.

(இ - ள்.) மனிதரின் மகவான் ஆகி வருபவன் - மனிதருள் இந்திரனாகி வருகின்ற நகுடன், சிவிகை தாங்கும்-சிவிகையினைச் சுமந்து வருகின்ற, புனிதமாதவரை எண்ணான் - தூய முனிவர்களின் பெருமையை அறியாதவனாயும், புன்கண்நோய் விளைவும் பாரான் - துன்ப நோய் மேலே விளைவதையும் பாராதவனாயும், கனிதரு காமம் துய்க்கும் காதலால்-கனிந்த காம இன்பத்தை நுகருமாசையால், விரையச் செல்வான்-விரைந்து செல்லும் பொருட்டு, இனிது அயிராணி பால் - இனிதாக இந்திராணியிடத்து, கொண்டு ஏகுமின் சர்ப்ப என்றான் - எடுத்துக்கொண்டு செல்லுங்கள் விரைய என்று கூறினான் எ - று.

வருபவன்: நிகழ்கால முணர்த்திற்று. மாதவர் பெருமையை என்க. புன்கண் நோய்: ஒரு பொருளிருசொல். எண்ணான், பாரான் என்பன முற்றெச்சங்கள். தரு: துணைவினை. சர்ப்ப: விரைந்து செல்க என ஏவுதற் சொல். (கூச)

சர்ப்பமா கெனமுற் கொம்பு தாங்கிமுன் னடக்குந் தென்றல்
வெற்பனு முனிவன் சாபம் விளைத்தனன் விளைத்த லோடும்
போற்பமா சுணமே யாகிப் போயினு னறிவி லாத
அற்பரா னவர்க்குச் செல்வ மல்லது பகைவே றுண்டோ.

(இ - ள்.) முன்கொம்பு தாங்கி - சிவிகையின் முன் கொம்பைத் தாங்கி, முன் நடக்கும் தென்றல் வெற்பனும் முனிவன் - முன்னே நடக்கின்ற தென்றலுக்குப் பிறப்பிடமாகிய பொதியின் மலையையுடைய அகத்தியன், சர்ப்பம் ஆகென - பாம்பாகக் கடவாயென்று, சாபம் விளைத்தனன்-சாபம் கொடுத்தான்; விளைத்தலோடும் - அங்ஙனம் சாபமிட்டவுடனே, பொற்ப மாசுணமே ஆகிப் போயினான் - பொலிவு பெறப் பெரும்பாம்பு வடிவாகிப் போயினான்; அறிவு இலாத அற்பர் ஆனவர்க்கு-அறிவற்ற கீழ்மைக்குண முடையவர்களுக்கு, செல்வம் அலலது பகை வேறு உண்டோ-செல்வத்தையன்றி பகையாயுள்ளது மற்றொன்று உண்டோ (இல்லை) எ - று.

ஆகென: தொகுத்தல்; ஆகு என ஏவலுமாம்.

"குணமென்னுங் குன்றேறி நின்றார் வெகுளி
கணமேயுங் காத்த லரிது"

என்பவாகலின் விளைத்தலோடும் ஆகியென்றார். மாசுணம் – பெரும்பாம்பு. இவ்வரலாறு,

"ஏந்திய கொள்கையார் சீறி னிடைமுரிந்து
வேந்தனும் வேந்து கெடும்"

என்பதற்கு எடுத்துக் காட்டாதல் காண்க. அறியாமையுடன் கூடிய செல்வக்களிப்பாற் பாம்பாயினமையின் செல்வத்தைப் பகையென்றார். இது வேற்றுப்பொருள் வைப்பணி. (கூரு)

பின்னர்த்தங் குரவ னான பிரானடி பணிந்து வானோர்
பொன்னகர் வேந்த னின்றிப் புலம்படை கின்ற தைய
என்னலுங் குரவன் போயவ் விலஞ்சியு ளொளித்தாற் கூவித்
தன்னுரை யறிந்து போந்த சதமகற் கொண்டு மீண்டான்.

(இ - ள்.) வானோர்-தேவர்கள், பின்னர் தம் குரவனை பிரான் அடிபணிந்து - பின்பு தம் குரவனாகிய வியாழபகவான் திருவடியைப் பணிந்து, ஐய-ஐயனே, பொன் நகர்-பொன்னுலகமானது, வேந்தன் இன்றி-மன்னனில்லாமல், புலம்பு அடைகின்றது - வருந்துகின்றது, என்னலும்-என்று வேண்டிக் கோடலும், குரவன் போய் - ஆசிரியன் சென்று, இலஞ்சியுள் ஒளித்தான் கூவி - அந்தக் குளத்தில் மறைந்த இந்திரனை அழைத்து, தன் உரை அறிந்து போந்த - தன் சொல்லை அறிந்து வெளிவந்த, சதமகன் கொண்டு மீண்டான்-இந்திரனை உடன் கொண்டு திரும்பினான் எ - று.

தன் உரை அறிதல் - ஒலி யியற்கையால் தனது மொழியென அறிதல். ஒளித்தான், சதமகன் என்னும் உயர்திணைப் பெயர்கள் இரண்டாம் வேற்றுமை யாகலின் ஈறு திரிந்தன. (சுசு)

கொடும்பழி கோட்பட் டான்றன் குரவனை வணங்கி யென்னைச்
சுடும்பழி கழிவ தெங்ஙன் சொல்லெனத் தொலைவ தோர்ந்தான்
அடும்பழி மண்மே லன்றி யருதுநீ வேட்டைக் கென்னப்
படும்பழி யிதனைத் தீர்ப்பான் பார்மிசை வருதி யென்றான்.

(இ - ள்.) கொடும்பழி கோட்பட்டான் - கொடிய பாவத்தால் பீடிக்கப்பட்டவனாகிய இந்திரன், தன் குரவனை வணங்கி - தன் குருவைத் தொழுது, என்னைச் சுடும்பழி கழிவது எங்ஙன் சொல் என - என்னை வருத்துகின்ற இப்பாவமானது நீங்குவது எவ்வாறு சொல்லுக என்று கேட்க, தொலைவது ஓர்ந்தான் - தீரும் வழியை அறிந்தவனாகிய அக் குரவன், அடும்பழி மண்மேல் அன்றி அருது - வருத்தும் பாவமானது நிலவுலகத்தல்லாமல் (வேறு இடத்தில்) நீங்காது, நீ வேட்டைக்கு என்ன - நீ வேட்டையைக் காரணமாகக் கொண்டு, படும்பழி இதனைத் தீர்ப்பான் - உண்டாகிய இப்பாவத்தைத் தீர்க்கும் பொருட்டு, பார்மிசை வருதி என்றான் - பூவுலகின்கண் வருவாய் என்று கூறினான் எ - று.

கோட்பட்டான்-கொள்ளப்பட்டான். பழி கோட்பட்டான் என்பது தம்மினாகிய தொழிற்சொல் வந்தமையின் இயல்பாயிற்று. சுடும்பழி, அடும்பழி ஒரு பொருளன. சுடும்பழி முதலியவற்றைச் சுட்டாகக் கொள்க. எங்ஙனம் என்பது குறைந்து நின்றது. அடும்பழி-கொலைப் பாவம் என்பாருமுளர். வேட்டையை வியாசமாகக் கொண்டு என்க. படும்: இறந்தகாலத்தில் வந்தது. (சுஎ)

ஈசனுக் கிழைத்த குற்றந் தேசிக னெண்ணித் தீர்க்குந்
தேசிகற் கிழைத்த குற்றங் குரவனே தீர்ப்ப தன்றிப்
பேசுவ தேவனோ தன்பாற் பிழைத்தகா ரணத்தால் வந்த
வாசவன் பழியைத் தீர்ப்பான் குரவனே வழியுங் கூற.

(இ - ள்.) ஈசனுக்கு இழைத்த குற்றம்-கடவுளுக்குச் செய்த குற்றத்தை, தேசிகன் எண்ணித் தீர்க்கும் - குரவன் தீரும் வழியை ஆராய்ந்து தீர்ப்பான்; தேசிகற்கு இழைத்த குற்றம் - குரவனுக்குச் செய்த குற்றத்தை,குரவனே தீர்ப்பது அன்றி-அத்தேசிகனே நீக்குவ தல்லாமல்,பேசுவது எவன்-வேறு கூறுவதுயாது; தன்பால் பிழைத்த

காரணத்தால் வந்த-தன்னிடம் தவறு செய்தமையால் வந்த, வாசவன் பழியைத் தீர்ப்பான் - இந்திரன் பழியைத் தீர்ப்பதற்கு, குரவனே வழியும் கூற - அவ்வியாழ பகவானுகிய தேசிகனே வழியையும் சொல்ல எ - று.

பேசுவது - வேறொருவர் தீர்ப்பரெனக் கூறுவது. ஏ: இரண்டும் பிரிநிலை. ஓ: அசைநிலை. (சுஅ)

வாம்பரி யுகைத்துத் தன்னுல் வழிபடு குரவன் வானோர்
தாம்பரி வோடுஞ் சூழத் தராதலத் திழிந்து செம்பொற்
காம்பரி தோளி பங்கன் கயிலைமால் வரையுந் தாழ்ந்து
தேம்பரி யலங்கன் மார்பன் றென்றிசை நோக்கிச் செல்வான்.

(இ-ள்.) தேம்பரி அலங்கல் மார்பன்-தேனைத் தாங்கிய மாலையை யணிந்த மார்பினையுடைய இந்திரன், வாம்பரி உகைத்து-தாவுகின்ற குதிரையைச்செலுத்தி, தன்னுல் வழிபடு குரவன்-தன்னுல் வழிபடப் பட்ட குரவனும், வானோர் - தேவர்களும், பரிவோடும் சூழ - அன் போடுஞ் சூழ்ந்துவர, தராதலத்து இழிந்து - நிலவுலகத்தி லிறங்கி, செம்பொன் காம்பு அரிதோளிபங்கன்-சிவந்த பொன்போலும் நிறத் தினையுடைய மூங்கிலை ஒத்த தோளையுடைய உமாதேவியை ஒரு பாகத்தில் வைத்த சிவபிரானது, மால் கயிலை வரையும் தாழ்ந்து - பெரிய கயிலை மலையையும் வணங்கி, தென்திசை நோக்கிச் செல் வான்-தென்றிசையை நோக்கிச் செல்வானுயினன் எ - று.

வாம்பரி-வாவும் பரி: ஈறு நிற்றலின் வினைத்தொகையன்று. குர வனும் வானோரும் என உம்மை விரிக்க. தரையாகிய தலம். காம்பு அரி என்பன மூங்கில் என்னும் ஒரு பொருளில் வந்த இருசொல்; அரி-துண்டமுமாம். தேம்-தேன். பரிதல்-ஒழுகுதலுமாம். (சுகூ)

[௸ வேறு]

கங்கைமுத லளவிறந்த தீர்த்த மேலாம்
　　போய்ப்படிந்து காசி காஞ்சி
அங்கனக கேதார முதற்பதிகள்
　　பலபணிந்து மவுணற் கோன்ற
பொங்குபழி விடாதழுங்கி யராவுண்ண
　　மாசுண்டு பொலிவு மாழ்குந்
திங்களனை யான்கடம்ப வனத்தெல்லை
　　யணித்தாகச் செல்லு மேல்வை.

(இ - ள்.) கங்கைமுதல் அளவு இறந்த தீர்த்தம் எல்லாம் போய் படிந்து-கங்கை முதலிய அளவற்ற தீர்த்தங்கள் அனைத்திலும் சென்று நீராடி, காசி காஞ்சி அம் கனக கேதாரம் முதல் - காசியும் காஞ்சியும் அழகிய பொன்மயமான கேதாரமும் முதலாகிய, பதிகள் பல பணிந் தும்-பல திருப்பதிகளிற் சென்று வணங்கியும், அவுணன் கொன்ற - அசுரனைக் கொன்றதனுல் வந்த, பொங்கு பழி - மிக்க பாவமானது,

விடாது - விடப் பெருமையால், அழுங்கி - வருந்தி, அரா உண்ண - பாம்பு விழுங்க, மாசுண்டு பொலிவு மாழ்கும் திங்கள் அனையான் - குற்றப்பட்டுப் பொலிவினை யிழக்கும் சந்திரனை ஒத்த இந்திரன், கடம்பவனத்து எல்லை அணித்தாக - கடம்பவனத்து எல்லையின் அருகாக, செல்லும் எல்வை - செல்லும் பொழுது எ - று.

விடாது - விடாமையால். அணித்து - அணிமை; து: பகுதிப் பொருள் விகுதி; எல்லையானது அணித்தாக என்னலுமாம். அங்கு அனகம் எனப் பிரித்து, அங்கு அசை யென்னலுமாம்; அனகம் - களங்கமின்மை. (எ0)

தொடுத்தபழி வேறாகி விடுத்தகன்ற
திந்திரன்றான் சுமந்த பாரம்
விடுத்தவனேத் தளவிறந்த மகிழ்வெய்தித்
தேசிகன்பால் விளம்பப் பாசங்
கெடுத்தவன்மா தலம்புனித தீர்த்தமுள
விவணமக்குக் கிடைத்தல் வேண்டும்
அடுத்தறிக வெனச்சிலரை விடுத்தவ்வே
றாநிலைநின் றப்பாற் செல்வான்.

(இ - ள்.) தொடுத்த பழி வேறு ஆகி-பற்றிய பழியானது வேறுபட்டு, விடுத்து அகன்றது-விட்டு நீங்கியது; இந்திரன் தான் சுமந்த பாரம் விடுத்தவன் ஒத்து - இந்திரனானவன் தாங்கிய சுமையை இறக்கினவன் போன்று, அளவு இறந்த மகிழ்வு எய்தி-அளவில்லாத களிப்புற்று, தேசிகன்பால் விளம்ப - குரவனிடங் கூற, பாசம் கெடுத்தவன்-பாசபந்தத்தை அறுத்தவனாகிய அத் தேசிகன், இவண் மாதலம் புனித தீர்த்தம் உள - இங்குச் சிறந்த தலமும் தூய தீர்த்தமும் உள்ளன; நமக்குக் கிடைத்தல் வேண்டும் - அவை நமக்குக் கிட்டுதல் வேண்டும்; அடுத்து அறிக என-சென்று அவற்றைத் தெளிவாயாக என்று கூற, சிலரை விடுத்து-அவற்றைத் தேடச் சிலரை ஏவி, அவ்வேறு ஆம் நிலை நின்று-அந்தப் பழி நீங்கிய இடத்தினின்றும், அப்பால் செல்வான்-அப்புறம் செல்லுகின்ற இந்திரன் எ - று.

அகன்றதென்பதை எச்சமாக்கலுமாம். தான்: அசை. மகிழ்வினையெய்தியென விரிக்க. தலமும் தீர்த்தமுமென எண்ணும்மை விரிக்க. அவ்வேறா நிலை யென்பதற்குப் பிறர் கூறும் வேறு பொருள்கள் பொருந்தா வென்க. செல்வான்: வினைப்பெயர்; பின் 'இன்ன' என்னுஞ் செய்யுளிற் 'செயனோக்கி' என்பதனோடியையும்; எச்சமாக்கியும் முற்றாக்கியும் உரைத்தலுமாம். (எக)

அருவிபடிந் தருவியெறி மணியெடுத்துப்
பாறையிலிட் டருவி நீர்தூய்க்
கருவிரல்கோய் தலர்சூட்டிக் கனியூட்டி
வழிபடுவ கல்லா மந்தி

ஒருதுறையில் யாளிகரி புழைக்கைமுகந்
தொன்றற்கொன் றூட்டி யூட்டிப்
பருகுவன புலிமுலைப்பால் புல்வாய்க்கன்
றருத்தியிடும்* பசிநோய் தீர†.

(இ - ள்.) கல்லா மந்தி-அறிவில்லாத குரங்குகள், அருவி படிந்து-அருவியில் நீராடி, அருவி எறி மணி எடுத்து-அருவி வீசிய மணியை எடுத்து, பாறையில் இட்டு-பாறையில் வைத்து, அருவி நீர் தூய்-அருவி நீரால் ஆட்டி, கருவிரல் கொய்து அலர் சூட்டி-கரிய விரல்களாற் பறித்துப் பூக்களைச் சூட்டி; கனி ஊட்டி வழிபடுவ-கனிகளை உண்பித்து வழிபடுவன; ஒரு துறையில் யாளிகரி-ஒரேநீர்த்துறையில் யாளிகளும்,யானைகளும்,புழைக்கைமுகந்து-தொளையுடையகைகளால் நீரை மொண்டு, ஒன்றற்கு ஒன்று ஊட்டி ஊட்டிப் பருகுவன-ஒன்றினுக்கு ஒன்று ஊட்டி ஊட்டிப்பருகாநிற்பன; புலி முலைப்பால்-புலிகள் தங்கள் முலைப்பாலை, புல்வாய்க் கன்று பசி நோய் தீர அருத்தியிடும்-மான் கன்றுகள் பசிப்பிணி நீங்க உண்பிக்கும் எ - று

மணியைச் சிவலிங்கமாகப் பாவித்து வைத்தென்க. வழிபடுதல்-சிவ பூசை செய்தல். கல்லா மந்தியும் வழிபடுவன எனத் தலமேன்மை கூறினார். கல்லாமை, இயற்கை; ஐங்குறு நூற்றின் குரக்குப் பத்தில், 'கல்லாக் கடுவன்', 'கல்லாமந்தி', 'கல்லா வன்பார்ப்பு' என வருதல் காண்க. யாளி-சிங்கம் போல்வதும், யானை போற் கையுடையது மாகிய ஒரு விலங்கு. அடுக்குத் தொழிற் பயில்வு குறித்தது. (எ)

நெளியராக் குருளைவெயில் வெள்ளிடையிற்
கிடந்துயங்கி நெளியப் புள்ளே
றொளியருச் சிறைவிரித்து நிழல்பரப்பப்
பறவைநோ யுற்ற தேகோல்
அளியவா யச்சோ‡வென் றோதியயன்
மடமந்தி யருவி யூற்றுந்
துளியநீர் வளைத்தசும்பின் முகந்தெடுத்துக்
கருங்கையினாற் சொரிவ மாதோ.

(இ - ள்.) நெளி அராக் குருளை-நெளிகின்ற பாம்பின் குட்டிகள், வெயில் வெள்ளிடையில் கிடந்து - வெயில் மிக்க வெளியிடங்களிற் கிடந்து, உயங்கி நெளிய-வருந்திநெளிய, புள் ஏறு-பறவை யேறுகிய கருடன்,ஒளி அருச் சிறை விரித்து நிழல் பரப்ப-ஒளி நீங்காத சிறைகளை விரித்து நிழலைப் பரப்ப, அயல் மடமந்தி-பக்கத்திலுள்ள அறியாமையையுடைய குரங்குகள், அளியவாய்-கருணை யுடையனவாய், அச்சோ-ஐயோ, பறவை நோய் உற்றதே கொல் என்று ஓதி-இந்தக் கருடன் வெயிலால் துன்பமடைந்ததோ என்று கூறி, அருவி ஊற்றும் துளிய நீர்-அருவிகள் சொரிகின்ற துளிகளையுடைய நீரை, வளை தசும்பின்-சங்காகிய குடத்தில், கருங் கையினால் முகந்து எடுத்துச் சொரிவ-கரிய கையினால் மொண்டு எடுத்துச் சொரியா நிற்பன எ - று.

---

(பா - ம்.) * அருந்தியிடும். †பசிகடீர. ‡அளியவாவச்சோ.

புள் ஏறு-பறவைகளுக் கிறையாய கலுழன். கொல்: ஐயப் பொருட்டு. உற்றதே கொல் என்று கருதி, அச்சோவென் ருேதி என்னலுமாம். அச்சோ: இரக்கக் குறிப்பையுணர்த்தும் இடைச்சொல். 'அளியவா வச்சோ' என்னும் பாடத்திற்கு அளிய ஆ அச்சோ என்று ஓதி எனப் பிரித்துப் பொருள் கொள்க; இதில் அளியது என்னும் துவ்வீறு குறைந்ததெனல் வேண்டும். மாது, ஓ: அசை. (எங)

படவரவ மணியீன்று நொச்சிப்பா
சிலையன்ன பைந்தாண் மஞ்ஞை
பெடைதழுவி மணஞ்செய்ய மணவறையில்
விளக்கிடுவ பெருந்தண் கானத்
தடர்சிறைமென் குயிலோமென் ருர்ப்பமடக்
கிள்ளையெழுத் தைந்து மோசைத்
தொடர்புபெற வுச்சரிப்பக் குருமொழிகேட்
டாங்குவப்ப தொடிக்கட் பூவை.

(இ-ள்.) நொச்சி பசு இலை அன்ன-நொச்சியின் பசிய (பிளந்த) இலையை ஒத்த, பைந்தாள் மஞ்ஞை-பசிய (பிளந்த) கால்களையுடைய மயில்கள், பெடை தழுவி மணம் செய்ய-பெண்மயில்களைக் கூடி மணஞ் செய்யா நிற்க, மண அறையில்-மணஞ்செய்யும் அவ் விடத்தில், பட அரவம்-படத்தினையுடைய பாம்புகள், மணி ஈன்று விளக்கு இடுவ-மணிகளை உமிழ்ந்து விளக்கிடுவன; அடர்சிறைமென் குயில்-அடர்ந்த சிறகினையுடைய மெல்லிய குயில்கள், பெருந்தண் கானத்து-பெரிய குளிர்ந்த காட்டின்கண், ஓம் என்று ஆர்ப்ப-ஓ மென்று ஒலிக்கா நிற்கவும், மடக்கிள்ளை-இளமையுடைய கிளிகள், எழுத்து ஐந்தும்-திருவைந்தெழுத்தினையும், ஓசைத் தொடர்பு பெற-ஓசையின் தொடர்ச்சிபெற, உச்சரிப்ப-உச்சரிக்கவும், தொடி கண் பூவை-வளைபோன்ற வட்டமாகிய கண்களையுடைய நாகணவாய்ப் பறவைகள், குருமொழிகேட்டாங்கு உவப்ப-குரு மொழியைக் கேட்டு மகிழ்வது போல் (அவற்றைக் கேட்டு) மகிழ்வன எ - று.

அடர்-தகடுமாம். ஓமென்ருர்த்தல்-பிரணவ வொலிசெய்தல். திருவைந்தெழுத்தை விதிப்படி உச்சரிக்க என்றவாறு. அவற்றைக் குருவின் உபதேசமாகக் கேட்டு என விரித்து, ஆங்கு என்பதற்கு அவ் விடத்தில் எனப் பொருள் கூறலுமாம். இடுவ, உவப்ப என்பன அன் பெருத பலவின்பால் முற்றுக்கள். (எச)

இன்னவிலங் கொடுபுள்ளின் செயற்கரிய
செயனேக்கி யிறும்பூ தெய்திப்
பொன்னகரான் புளகமுடல் புதைப்பநிறை
மகிழ்ச்சியுளம் புதைப்பப் போவான்
அன்னபொழு தொற்றுவர்மீண் டடிவணங்கி
யின்சுவைப்பா லருந்து வான்முன்
பின்னரிய* தேன்சொரிந்தாங் குவகைமேற்
பெருவகை பெருகச் சொல்வார்.

---

(பா - ம்.) * பின்னறிய.

(இ - ள்.) விலங்கொடு புள்ளின்-மிருகங்களோடு பறவைகளின், இன்ன செயற்கு அரிய செயல் நோக்கி-இத்தன்மையவான செயற்கருஞ் செயல்களைக் கண்டு, இறும்பூது எய்தி-வியப்புற்று, புளகம் உடல் புதைப்ப-புளகமானது உடல் முழுதையும் போர்க்கவும், நிறை மகிழ்ச்சி உளம்புதைப்ப - நிறைந்த களிப்பானது உள்ளத்தை மூடவும், போவான் பொன் நகரான்-செல்கின்றவனாகிய பொன் நகரத்தையுடைய இந்திரனுக்கு, அன்ன பொழுது-அப்பொழுது, இன் சுவைப் பால் அருந்துவான் முன்-இனிய சுவையையுடைய பாலைப் பருகுகின்றவன் முன்னர், பின் அரிய தேன் சொரிந்தாங்கு-பின்பு கிடைத்தற்கரியதேனைப் பொழிந்ததுபோல, உவகைமேல் பேருவகை பெருக-மகிழ்ச்சிமேல் பெரு மகிழ்ச்சி மிக, ஒற்றுவர் மீண்டு அடிவணங்கிச் சொல்வார்-தூதுவர் திரும்பி வந்து அடியில் வணங்கிக் கூறுவாராயினர் எ - று.

ஒடு:எண்ணொடு. புளகம்-மயிர் முகிழ்ப்பு. அன்ன பொழுது-அப்பொழுது: சுட்டு. நறிய என்னும் பாடத்திற்கு நன் மணமுள்ள என்று பொருள் கூறிக்கொள்க. (எரு)

எப்புவனத் திலுமென்றுங் கண்டறியா
　　வதிசயமு மெண்ணுக் கெய்தாத்
திப்பியமு மிக்கடம்ப வனத்தின்று
　　கண்டுவகை திளைத்தே மங்கண்
வைப்பனைய வொருபுனித வாவிமருங்
　　கொருகடம்ப வனத்தி னீழல்
ஒப்பிலொளி யாய்முளைத்த சிவலிங்க
　　மொன்றுளதேன் றுரைப்பக் கேட்டான்.

(இ-ள்.) எப்புவனத்திலும் என்றும் கண்டு அறியா அதிசயமும்-எந்த உலகத்திலும் எக்காலத்திலும் கண்டறியாத வியப்பும், எண்ணுக்கு எய்தாத் திப்பியமும் - அளவைக்கு எட்டாத சிறப்பும், இக்கடம்ப வனத்து-இக்கடம்ப வனத்தின்கண், இன்று கண்டு உவகை திளைத்தேம் - இன்று பார்த்து மகிழ்ச்சியில் மூழ்கினோம்; (என்னவெனில்), அங்கண்-அவ்விடத்து, வைப்பு அனைய-சேம நிதிபோன்ற, ஒரு புனித வாவி மருங்கு-ஒரு தூய தீர்த்தக் கரையின் பக்கத்தில், ஒரு கடம்ப வனத்தின் நீழல்-ஒரு கடம்ப மரத்தின் நீழலில், ஒப்பு இல் ஒளியாய் முளைத்த-ஒப்பற்ற ஒளிப் பிழம்பாய்த் தோன்றிய, சிவலிங்கம் ஒன்று உளது என்று - சிவலிங்கம் ஒன்று இருக்கிறதென்று, உரைப்பக் கேட்டான்-சொல்லக் கேட்டான் எ - று.

எண்ணுக்கு-கருதலுக்கு என்றுமாம். ஒரு கடம்ப வனம்-ஒரு கடம்பமரம்; மரம் என்று பாடமிருத்தல் சிறப்பு. ஒற்றுவர் உரைப்ப இந்திரன் கேட்டானென்க. (எசு)

செவித்தோளையி லமுதோழுக்கு முழையரோடும்
　　வழிக்கோண்டு சென்னி மேற்கை
குவித்துளமெய் மோழிகரணங் குணமூன்று
　　மோன்றித்தன் கோடிய பாவம்*

---

(பா - ம்.) கொடிய பாசம்.

அவித்துளயர் வொழிக்கமுளைத் தருள்குறிமே
லன்பீர்ப்ப வடைவான் கானங்
கவித்துளபூந் தடம்படிந்து கடம்பவனத்
துழைநுழைந்தான் கவலை தீர்வான்.

(இ - ள்.) செவித்தொளையில் அமுது ஒழுக்கும் உமையரொடும்-(இங்ஙனம்) செவித்தொளையின்கண் அமுதத்தைப்பொழிகின்ற ஒற்றரோடும், வழிக்கொண்டு-சென்று, சென்னிமேல் கைகுவித்து-முடியின்மீது கைகூப்பி, உளம் மெய் மொழி-உளம் உடல் உரைகளும், கரணம்-அந்தக் கரணமும், குணம் மூன்றும்-முக்குணங்களும், ஒன்றி-ஒரு வழிப்பட்டு, தன் கொடிய பாவம் அவித்து-தனது கொடிய கொலைப் பாவமாகிய தீயைத் தணித்து, உள் அயர்வு ஒழிக்க-மனத் துயரத்தைக் கெடுக்க, முளைத்தருள் குறிமேல்-தோன்றி யருளிய அருட் குறியாகிய சிவலிங்கத்தின் மீது, அன்பு ஈர்ப்ப-அன்பானது இழுக்க, அடைவான்-செல்லும் இந்திரன், கானம் கவித்துள-காட்டினுற் கவியப்பட்டுள்ள, பூந்தடம் படிந்து-பொற்ருமரைத்தீர்த்தத்தில் நீராடி, கடம்பவனத்து உழை நுழைந்தான் - கடம்பவனத்துட் புகுந்து, கவலை தீர்வான்-துன்பம் நீங்குவானுயினன் எ - று.

அமுதுபோல் இன்பஞ் செய்யும் மொழிகளை அமுதென்ருர். மொழிக்கரணம்என்றிருப்பின் மூன்று என்பதனை அதனெடுங் கூட்டி, உளம் உடல் உரையென்னும் கரண மூன்றும் எனப்பொருள் கொள்ளல் சாலும். அந்தக் கரணம்-மனம், புத்தி, சித்தம், அகங்காரம் என்பன. முக்குணம்-சாத்துவிகம், இராசதம், தாமதம் என்பன. ஒன்றி-ஒன்ற என்பதன் றிரிபுமாம். அடைவான்: பெயர். கவித்து, கவிந்து என்பது வலித்த தென்னலுமாம். நுழைந்தான்: முற்றெச்சம். (எஎ)

அருவாகி யுருவாகி யருவுருவங்
கடந்துண்மை யறிவா னந்த
உருவாகி யளவிறந்த வுயிராகி
யவ்வுயிர்க்கோ ருணர்வாய்ப் பூவின்
மருவாகிச் சராசரங்க ளகிலமுந்தன்
னிடையுதித்து மடங்க நின்ற
கருவாகி முளைத்தசிவக் கொழுந்தையா
யிரங்கண்ணுங் களிப்பக் கண்டான்.

(இ - ள்.) அருவு ஆகி-அருவமாகியும், உருவு ஆகி-உருவமாகியும், அருவுருவம் (ஆகி)-அருவுருவமாகியும், கடந்து-இவற்றைக் கடந்து, உண்மைஅறிவு ஆனந்த உரு ஆகி-சச்சிதானந்த வடிவாகியும், அளவு இறந்த உயிர் ஆகி-எண்ணிறந்த உயிர்களாகியும், அவ்உயிர்க்கு ஓர் உணர்வு ஆய்-அவ்வுயிர்களின் அறிவுக்கோர் அறிவாகியும் (நிற்றலின்), பூவின் மரு ஆகி-மலரின் மணம்போலாகியும், சராசரங்கள் அகிலமும்-சரமும் அசரமுமாகிய அனைத்தும், தன் இடை உதித்து மடங்க நின்ற கரு ஆகி-தன்னிடத்துத் தோன்றி அடங்க நின்ற மூல காரணமாகியும், முளைத்த சிவக்கொழுந்தை-தோன்றியருளிய சிவக்

கொழுந்தினை, ஆயிரம் கண்ணும் களிப்பக் கண்டான் - ஆயிரங்கண்களும் களிக்கும்படி பார்த்தான் எ - று.

அரு, உரு எனப் பிரித்தலுமாம். அருவம்-சிவம், சத்தி, நாதம், விந்து என்பன. உருவம்-மகேசுரன், உருத்திரன், மால், அயன் என்பன. அருவுருவம்-சதாசிவம். ஆகி என்பதனை அருவுருவம் என்பதனோடும் கூட்டுக. இம் மூன்றும் இறைவற்குத் தடத்தவிலக்கணம்; இவற்றைக் கடந்து நின்றது சொரூப விலக்கணம்; இவ்வியல்பினை,

"உருமேனி தரித்துக் கொண்ட தென்றலு முருவி றந்த
அருமேனி யதுவுங் கண்டோ மருவுரு வான போது
திருமேனி யுபயம் பெற்றேஞ் செப்பிய மூன்று நந்தம்
கருமேனி கழிக்க வந்த கருணையின் விளைவு காணே"

என்னும் சிவஞானசித்தித் திருவிருத்தத்தா லறிக. 'அளவிறந்த வுயிராகி அவ்வுயிர்க்கோ ருணர்வாய்ப் பூவின் மருவாகி' என்றது இறைவன் உயிர்களிடத்து 'உடலுயிர் கண்ணருக்கன் அறிவொளி' போல் நிற்கு முறைமை கூறியவாறு. கரு - காரணம். (எஅ)

கண்டுவிழுந் தெழுந்துவிழி துளிப்பவெழு
களிப்பென்னுங் கடலி* லாழ்ந்து
விண்டுமொழி தழுதழுப்ப வுடல்பனிப்ப
வன்புருவாய் விண்ணோர் வேந்தன்
அண்டர்பிரா னருச்சனைக்கு வேண்டுமுப
கரணமெலா மகல்வா னெய்திக்
கொண்டுவரச் சிலரைவிடுத் தவரேகப்
பின்னுமொரு குறைவு தீர்ப்பான்.

(இ - ள்.) கண்டு விழுந்து எழுந்து - பார்த்துக் கீழே விழுந்து வணங்கி எழுந்து, விழி துளிப்ப - கண்கள் அன்பு நீர் துளிக்க, எழு களிப்பு என்னும் கடலில் ஆழ்ந்து-(கரையின்றி)எழுகின்ற மகிழ்ச்சியென்னும் கடலில் மூழ்கி, தழு தழுப்ப மொழி விண்டு - நாத் தழுதழுக்கத் துதிகள் கூறி, உடல் பனிப்ப அன்பு உருவாய்-உடல் நடுங்க அன்பு வடிவாகி, விண்ணோர் வேந்தன் - தேவேந்திரன், அண்டர் பிரான் அருச்சனைக்கு - தேவர்கள் தலைவனாகிய சோமசுந்தரக் கடவுளின் அருச்சனைக்கு, வேண்டும் உபகரணம் எலாம் - வேண்டிய பொருள்களனைத்தும், அகல்வான் எய்திக்கொண்டு வர - அகன்ற விண்ணுலகிற் சென்று கொண்டு வருமாறு, சிலரை விடுத்து - சில தேவர்களை ஏவி, அவர் ஏக-அவர் செல்ல, பின்னும் ஒரு குறைவு தீர்ப்பான்-பின்பும் ஒரு குறையினை நீக்குவானாய் எ - று.

எழு என்பதனை இரட்டுற மொழிதலாக்கி எழுகடல் என இயைத்தலுமாம். விண்டு - கூறி. நாவென்பது வருவிக்க. குறைவு தீர்த்தல் - விமானம் அமைத்தல். (எகூ)

(பா - ம்.) * களியென்னுங் கடலில்.

தங்குடிமைத் தச்சனையோர் விமானமமைத்
திடவிடுத்தத் தடத்தின் பாற்போய்
அங்கணனைக் கடிதருச்சித் திடநறிய
மலர்கிடையா தயர்வா னந்தச்
சங்கெறிதண் டிரைத்தடத்தி லரனருளாற்
பலபரிதி சலதி யொன்றிற்
பொங்குகதிர் பரப்பிமுளைத் தாலென்னப்
பொற்கமலம் பூப்பக் கண்டான்.

(இ - ள்.) தம் குடிமைத் தச்சனை - தமது குடிக்குரிய தேவ தச்சனை, ஓர் விமானம் அமைத்திட விடுத்து-ஓர் விமானம் படைக்குமாறு ஏவி, அ தடத்தின்பால் போய்-அந்தத் தீர்த்தத்தின் பக்கத்திற் சென்று, அங்கணனை - அழகிய அருட்பார்வையுடைய இறைவனை, கடிது அருச்சித்திட - விரைந்து அருச்சிப்பதற்கு, நறிய மலர் கிடையாது அயர்வான்-நல்ல மலர்கள் கிடைக்கப் பெறாமல் வருந்துகின்றவன், சங்கு எறி-சங்குகளை வீசுகின்ற, தண் திரை-குளிர்ந்த அலைகளையுடைய, அந்தத் தடத்தில் - அந்தத் தீர்த்தத்தில், அரன் அருளால் - சிவபெருமான் திருவருளால், பல பரிதி - பல சூரியர்கள், சலதி ஒன்றில் - ஒரு கடலில், பொங்கு கதிர் பரப்பி முளைத்தால் என்ன - நிறைந்த ஒளியை வீசிக்கொண்டு தோன்றினாற்போல, பொன் கமலம் பூப்பக் கண்டான் - பொற்றாமரைகள் மலரப் பார்த்தான் எ - று.

குடிமை, மை: பகுதிப் பொருள் விகுதி; குடியாந் தன்மையையுடைய தச்சன் எனலுமாம். கிடையாது-கைவரப் பெறாது. அயர்வான்: பெயர். அயர்வான் கண்டான் என முடிக்க. (அ0)

அன்புதலை சிறப்பமகிழ்ந் தாடினான்
காரணத்தா லதற்கு நாமம்*
என்பதுபொற் றாமரையென் றேழுலகும்
பொலிகவென விசைத்துப் பின்னும்
மின்பதுமத் தடங்குடைந்து பொற்கமலங்
கொய்தெடுத்து மீண்டு நீங்காத்
தன்பிணிநோய் தணியமுளைத் தெழுந்தமுழு
முதன்மருந்தின் றன்பால் வந்து.

(இ - ள்.) அன்புதலை சிறப்ப மகிழ்ந்து - அன்பானது ஓங்கக் களித்து, ஆடினான் - நீராடினான்; காரணத்தால் - (பொற்றாமரை மலர்ந்த) ஏதுவினால், அதற்கு நாமம்-அந்தத் தீர்த்தத்திற்குப் பெயர், பொற்றாமரை என்று ஏழ் உலகும் பொலிக என இசைத்து-பொற்றாமரை யென்று ஏழுலகங்களிலும் விளங்குக என்று கூறி, பின்னும் - மீளவும், மின் பதுமத்தடம் குடைந்து-விளங்குகின்ற பொற்றாமரைத் தடத்தில் நீராடி, பொன் கமலம் கொய்து எடுத்து - பொற்றாமரை

(பா - ம்.) * இதற்கு நாமம்.

மலர்களைப் பறித்தெடுத்து, மீண்டு-திரும்பி, நீங்காத்தன் பிணிநோய் தணிய-நீங்காத தன் பழியாகிய நோய் கெடுமாறு, முளைத்து எழுந்த-தோன்றியருளிய, முழுமுதல் மருந்தின் தன் பால் வந்து - முழுமுதலாகிய மருந்திடம் வந்து எ - று.

தலை சிறத்தல் - மிகுதல்; ஒரு சொல். ஆடினன் என்பதற்குக் கூத்தாடினன் என்றுரைப்பாருமுளர்; மேல்,பின்னுங் குடைந்து என வருதலின் அது பொருளன்றென்க. என்பது இடைச்சொல். மீண்டு நீங்காத என்னலுமாம். பிணி நோய்-ஒருபொருளிருசொல். முழுமுதல் - எல்லா முதன்மையுமுடைய முதற் பொருள்; மருந்துச் செடியின் முதலெனவும் பொருள் தோன்றுதல் காண்க. தன்: அசை. (அ௧)

மோய்த்தபுனக் காடெறிந்து நிலந்திருத்தி
வருமளவின் முளைத்த ஞான
வித்தனைய சிவக்கொழுந்தின் றிருமுடியிற்
பரிதிகர மேல்லத் தீண்டச்
சித்தநேகிழ்ந் திந்திரன்றன் வெண்கவிகைத்
திங்கணிழல் செய்வா னுள்ளம்
வைத்தனனப் போதிரவி மண்டலம்போ
லிழிந்ததோரு மணிவி மானம்.

(இ - ள்.) மொய்த்த புனக்காடு எறிந்து-நெருங்கிய காடுகளை வெட்டி, நிலம் திருத்தி வரும் அளவில் - நிலத்தைத் திருத்தி வரும் பொழுதில், முளைத்த ஞானவித்து அனைய-தோன்றிய ஞானவித்தை ஒத்த,சிவக்கொழுந்தின் திருமுடிமேல்-சிவக்கொழுந்ினது திருமுடியின்கண், பரிதிகரம் மெல்ல தீண்ட - சூரியனது ஒளி மெல்லப்படுதலால், இந்திரன் சித்தம் நெகிழ்ந்து - இந்திரனானவன் தனது மனம் வருந்தி, தன் திங்கள் வெண்கவிகை நிழல் செய்வான் - தனது சந்திரனை யொத்த வெண் குடையினால் நிழலைச் செய்ய, உள்ளம் வைத்தனன்-கருதினான்; அப்போது இரவி மண்டலம்போல்-அதுகாலை சூரிய மண்டலம் போல், ஒரு மணி விமானம் இழிந்தது - ஒரு மாணிக்க விமானம் இறங்கியது எ - று.

மரங்கள் மொய்த்த வென்க. புனக்காடு-ஒருபொருளிருசொல். புனமென்பதைக் கொல்லையாக்கிப் புனத்தினையுடைய காடென்னலுமாம். வித்தனைய கொழுந்தென்றது பொருள் முரண். கொழுந்தாகலின் தீண்டியதற் காற்றாது சித்தநெகிழ்ந்தான் என்னும் நயந்தோன்றுதல் காண்க. கரம்-கிரணம், கை. கவிகையாகிய திங்களென்னலுமாம். உள்ளம் வைத்தல் - சிந்தித்தல்; ஒரு சொல். திங்கள் இரவி என்னும் முரணுங் காண்க. (அஉ)

கிரியேட்டு மேனமழையைக் கிழித்தேட்டும்
புழைக்கைமதிக் கீற்றுக் கோட்டுக்
கரியேட்டுஞ் சினமடங்க ஞலேட்டு
மேட்டேட்டுக் கணமுந் தாங்க

விரியெட்டுத் திரைபரப்ப மயனிருமித்
துதவியவவ் விமானஞ் சாத்தி
அரியெட்டுத் திருவுருவப் பரஞ்சுடரை
யருச்சிப்பா ணுயி ஞனே.*

(இ - ள்.) எட்டுக் கிரியும் என - எட்டு மலைகளும் என்னும்படி, மழையை கிழித்து எட்டும் - முகிலைக் கிழித்து மேலோங்கும், புழை கை - தொளையினையுடைய துதிக்கையினையும், மதிக்கீற்றுக் கோட்டு - சந்திரனது பிளவுபோன்ற கொம்பினையுமுடைய, கரி எட்டும் - எட்டு யானைகளும், நால்எட்டுச் சினம் மடங்கலும் - முப்பத்திரண்டு கோபத் தினையுடைய சிங்கங்களும், எட்டெட்டுக் கணமும் தாங்க - அறுபத்து நான்கு சிவகணங்களும் தாங்க, விரி எட்டுத் திசை பரப்ப - விரிந்த எட்டுத் திக்குகளிலும் பரவி நிற்க, மயன் நிருமித்து உதவிய - தேவ தச்சனுல் ஆக்கிக் கொடுக்கப்பட்ட, அவ்விமானம் அரி சாத்தி - அந்த விமானத்தை இந்திரனுனவன் சாத்தி, எட்டுத் திரு உருவப் பரஞ் சுடரை - எட்டுத் திருவுருவங்களையுடைய பரஞ்சோதியை, அருச்சிப் பான் ஆயினுன் - அருச்சனை செய்வானுயினன் எ - று.

கிரி எட்டு - குலமலையெட்டு; அவை முற் கூறப்பட்டன. எட்டுத் திசையும் என்னும் உம்மை தொக்கது. நிருமித்தல் - மனத்தால் நினைந்து செய்தல். சாத்துதல் - இறைவற்கு இருக்கையாக வமைத்தல். அரி - இந்திரன். எட்டுத் திருவுருவம் - அட்ட மூர்த்தம்; ஐம்பூதம்: ஞாயிறு, திங்கள், ஆன்மா என்பன. ஏ: அசை; சொற்பின் வருநிலை.

முந்தவம ருலகடைந்து பூசனைக்கு
வேண்டுவன முழுதுந் தேர்வார்
வந்துதரு வைந்தீன்ற பொன்னுடை
மின்னுமிழ மணிப்பூண் வாசச்
சந்தனமந் தாகினிமஞ் சனந்தூபந்†
திருப்பள்ளித் தாமந் தீபம்
அந்தமிலா னைந்துநறுங் கனிதீந்தேன்
றிருவமுத மனைத்துந் தந்தார்.

(இ - ள்.) முந்த அமர் உலகு அடைந்து - முதலில் தேவருலகிற் சென்று, பூசனைக்கு வேண்டுவன முழுதும் - பூசைக்கு வேண்டிய பொருள்கள் அனைத்தும், தேர்வார் - தேடலுற்றவர்கள், வந்து - மீண்டு வந்து, ஐந்து தரு ஈன்ற பொன் ஆடை - ஐந்தருக்களும் கொடுத்த பொன்னுடையும், மின் உமிழும் மணிப்பூண் - ஒளியை வீசும் மணியா லாகிய அணிகலன்களும், வாசச் சந்தனம் - மணம் பொருந்திய சாந்த மும், மந்தாகினி மஞ்சனம் - கங்கை நீராகிய திருமஞ்சனமும், தூபம் - நறும்புகையும், திருப்பள்ளித் தாமம் - திருப்பள்ளித் தாமமும், தீபம் - திருவிளக்கும், அந்தம் இல் ஆன் ஐந்து - அழிவில்லாத பஞ்சகவ்விய மும், நறுகனி - இனிய பழங்களும், தீந்தேன் - மதுரமாகிய தேனும்,

(பா - ம்.) * அருச்சிப்பதாயினுன். † தூமம்.

திருவமுதம் அனைத்தும் தந்தார்-திருவமுதும் ஆகிய இவை அனைத்தையும் கொடுத்தார்கள் எ - று.

அமரருலகு என்பது அமருலகு என விகாரமாயிற்று. தருவைந்தும் என்னும் உம்மை தொக்கது. மந்தாகினி-ஆகாய கங்கை. திருப்பள்ளித்தாமம்-மலர் மாலை. (அச)

தெய்வத்தா மரைமுளைத்த தடம்படிந்து
பவந்தொலைக்குந் திருநீ றாடிச்
சைவத்தாழ் வடந்தாங்கி யன்புருவா
யருளுருவந் தானுய்த் தோன்றும்
பைவைத்தா டரவார்த்த பசுபதியை
யவனுரைத்த பனுவ லாற்றின்
மெய்வைத்தா தரம்பெருக வருச்சனைசெய்
தானந்த வெள்ளத் தாழ்ந்தான்.

(இ-ள்.) தெய்வத் தாமரை முளைத்த தடம் படிந்து-தெய்வத் தன்மை பொருந்திய பொற்றாமரை முளைத்த தடாகத்தில் நீராடி, பவம் தொலைக்கும் திருநீறு ஆடி-பிறவியைப் போக்கும் திருநீறு தரித்து, சைவத் தாழ்வடம் தாங்கி-சைவ வேடத்திற்குரிய உருத்திராக்க மாலையை அணிந்து, அன்பு உருவாய்-அன்பே வடிவாய், அருள் உருவம் தானுய்த் தோன்றும்-அருள்வடிவமாகத் தோன்றுகின்ற, பைவைத்து ஆடு அரவு ஆர்த்த-படமெடுத்து ஆடுகின்ற பாம்பினைக் கட்டிய, பசு பதியை-பசுக்களுக்கெல்லாம் பதியாகிய இறைவனை, அவன் உரைத்த பனுவல் ஆற்றின்-அவன் திருவாய் மலர்ந்தருளிய ஆகம வழியால், மெய் வைத்த ஆதரம் பெருக-உண்மையான அன்பானது பெருக, அருச்சனை செய்து ஆனந்த வெள்ளத்து ஆழ்ந்தான்-அருச்சனை புரிந்து இன்பவெள்ளத்தில் மூழ்கினுன் எ - று.

அன்புருவாய் அருச்சனைசெய்து ஆழ்ந்தான் என முடிக்க; அன்புருவாய் என்பதனை இறைவனுக்கேற்றித் தோன்றும் என்பதனேடு முடித்தலுமாம். பனுவல்-ஆகமம். மெய்வைத்த என்பதில் அகரந் தொக்கது. (அரு)

பாரார வட்டாங்க பஞ்சாங்க
விதிமுறையாற் பணிந்துள் வாய்மெய்
நேராகச் சூழ்ந்துடலங் கம்பித்துக்
கும்பிட்டு நிருத்தஞ் செய்து
தாராருந் தொடைமிதப்ப வானந்தக்
கண்ணருவி ததும்ப நின்றன்
பாராமை மீக்கொள்ள வஞ்சலித்துத்
துதிக்கின்ரு னமரர் கோமான்.

(இ - ள்.) அமரர் கோமான்-தேவர்க் கரசனானவன், பார் ஆர விலங்தோய,அட்டாங்கபஞ்சாங்கவிதிமுறையால்பணிந்து-அட்டாங்க பஞ்சாங்க விதிப்படி வணங்கி, உள் வாய் மெய்-மனம் மொழி மெய் என்னு மூன்றும், நேராக-ஒன்று பட, சூழ்ந்து-வலம் வந்து, உடலம் கம்பித்து-உடல் நடுங்கி, கும்பிட்டு-தொழுது, நிருத்தம் செய்து-கூத்தாடி, தார் ஆரும் தொடை மிதப்ப-மலர்களால் நிறைந்த (மார்பின் மாலையானது மிதக்கும்படி, ஆனந்தக் கண் அருவி ததும்ப-கண்களினின்றும் இன்ப அருவியானது பெருக, நின்று-உருகி நின்று, ஆராமை அன்பு மீக்கொள-(சிவானந்தம்) தெவிட்டாமையால் அன்பு மேன்மேல் மிக, அஞ்சலித்துத் துதிக்கின்றான்-கைகூப்பித் துதிப்பானாயினான் எ - று.

அட்டாங்கம்-எட்டுறுப்பு; பஞ்சாங்கம்-ஐந்துறுப்பு; அவை முற்கூறப்பட்டன. தார் என்பது ஈண்டு மலரைக் குறிக்கின்றது. அன்பும் ஆராமையும் என்னலுமாம். (அசு)

[ஷை வேறு]

அங்கணா போற்றி வாய்மை யாரணா போற்றி நாக
கங்கணா போற்றி மூல காரணா போற்றி நெற்றிச்
செங்கணா போற்றி யாதி சிவபரஞ் சுடரே போற்றி
எங்கணா யகனே போற்றி யீறிலா முதலே போற்றி.

(இ - ள்.) அங்கணா போற்றி-அழகிய கண்களையுடையவனே வணக்கம்; வாய்மை ஆரணா போற்றி-உண்மையாகிய மறைகளை அருளியவனே வணக்கம்; நாககங்கணாபோற்றி-அரவ கங்கண முடையவனே வணக்கம்; மூலகாரணா போற்றி-மூலகாரணனே வணக்கம்; நெற்றிச் செங்கணாபோற்றி-நெற்றியில் சிவந்தகண்ணையுடையவனே வணக்கம்; ஆதி சிவ பரஞ்சுடரே போற்றி-(எல்லாவற்றுக்கும்) முதலாயுள்ள சிவமாகிய பரஞ்சோதியே வணக்கம்; எங்கள் நாயகனே போற்றி-எங்கள் தலைவனே வணக்கம்; ஈறு இலா முதலே போற்றி-முடிவு இல்லாத முதற்பொருளே வணக்கம் எ - று.

கண்ணுக்கு அழகாவது அருளுடைத்தாதல். போற்றி: வணக்கம் எனப் பொருள்படும் தொழிற் பெயர்; காக்க என்னும் பொருட்டாய வியங்கோளுமாம். காரண மெல்லாவற்றுக்கும் மூலமாகிய காரணமானவன். (அஎ)

யாவையும் படைப்பாய் போற்றி யாவையுந் துடைப்பாய் போற்றி
யாவையு மானாய் போற்றி யாவையு மல்லாய் போற்றி
யாவையு மறிந்தாய் போற்றி யாவையு மறந்தாய் போற்றி
யாவையும் புணர்ந்தாய் போற்றி யாவையும் பிரிந்தாய் போற்றி.

(இ- ள்.) யாவையும்படைப்பாய் போற்றி-அனைத்தையும் ஆக்குபவனே வணக்கம்; யாவையும் துடைப்பாய் போற்றி-அவையனைத்தையும் அழிப்பவனே வணக்கம்; யாவையும் ஆனாய் போற்றி-எல்லாமுமானவனே வணக்கம்; யாவையும் அல்லாய்போற்றி-அவை முற்றும்

அல்லாதவனே வணக்கம்; யாவையும் அறிந்தாய் போற்றி-எல்லாவற்றையும் உணர்ந்தவனே வணக்கம்; யாவையும் மறந்தாய் போற்றி - அவை முற்றவும் அறியாதவனே வணக்கம்; யாவையும் புணர்ந்தாய் போற்றி-எல்லாவற்றுள்ளும் கலந்தவனேவணக்கம்;யாவையும் பிரிந்தாய் போற்றி—அவற்றுள் ஒன்றிலும் கலவாதவனே வணக்கம்எ-று.

இறைவன் எல்லாமாய் அல்லதுமாய் இருக்குந்தன்மை முற்கூறப்பட்டது; ஆண்டுக் காண்க. (அஅ)

இடருறப் பிணித்த விந்தப் பழியினின் றென்னை யீர்த்துன்
அடியிணைக் கன்ப னுக்கு மருட்கடல் போற்றி சேற்கண்
மடவரல் மணாள போற்றி கடம்பமா வனத்தாய் போற்றி
சுடர்விடு விமான மேய சுந்தர விடங்க போற்றி.

(இ - ள்.) இடர் உறப்பிணித்த - துன்பத்தை யடையுமாறுபற்றிய, இந்தப் பழியில் நின்று - இந்தக் கொலைப் பாவத்தினின்றும்; என்னை ஈர்த்து-அடியேனை விடுவித்து, உன் அடி இணைக்கு அன்பன் ஆக்கும்-உன் இரண்டு திருவடிகளுக்கும் அன்பனாகச் செய்த, அருள் கடல் போற்றி - கருணைக்கடலே வணக்கம்; சேல் கண் மடவரல் மணாள போற்றி - மீன்போன்ற கண்களையுடைய அங்கயற்கணம்மையின் நாயகனே வணக்கம்; கடம்ப மா வனத்தாய் போற்றி – பெரிய கடம்பவனத்தினையுடையவனே வணக்கம்; சுடர்விடு விமானம் மேய-ஒளி வீசும் விமானத்திற் பொருந்திய, சுந்தர விடங்கபோற்றி-சுந்தர விடங்கனே வணக்கம் எ - று.

உற-மிக வென்றுமாம். ஈர்த்து - இழுத்து; 'ஈர்த்தென்னையாட் கொண்ட' என்பது திருவாசகம். மேய-மேவிய என்பதன் விகாரம். விடங்கன் - அழகன்; முன்னர்க் கூறினமை காண்க. சுந்தரனாகிய விடங்கனென்க. (அகூ)

பூசையும் பூசைக் கேற்ற பொருள்களும் பூசை செய்யும்
நேசனும் பூசை கொண்டு நியதியிற் பேறு* நல்கும்
ஈசனு மாகிப் பூசை யான்செய்தே னெனுமென் போத
வாசனை யதுவு மான மறைமுத லடிகள் போற்றி.

(இ - ள்.) பூசையும்-பூசனையும், பூசைக்கு ஏற்ற பொருள்களும்-பூசைக்குத் தகுதியான, உபகரணங்களும், பூசைசெய்யும் நேசனும் - பூசை செய்கின்ற அன்பனும், பூசைகொண்டு - பூசையை ஏற்றுக் கொண்டு, நியதியில் பேறு நல்கும் ஈசனுமாகி - முறைப்படி பயனை அருளுகின்ற இறைவனுமாய், பூசை யான் செய்தேன் எனும்-பூசை யான் செய்தேனென்கின்ற, என் போத வாசனை அதுவும் ஆன - என்னுடைய தற்போத வாசனையுமான, மறை முதல் அடிகள் போற்றி - வேதமுதலாகிய இறைவ வணக்கம் எ - று.

'செய்வானும் செய்வினையும் சேர்பயனும் சேர்ப்பவனும்' இறைவனென்றார்; அவன் ஆன்மாவோடு ஒற்றித்து நின்று செய்வித்துச் செய்

(பா - ம்.) * நியதியின் பேறு.

எய்

ள எ - று.

தலால்; சிவஞான போதத்தின் பதினொன்ருஞ் சூத்திரக் கருத்து நோக்கியது இது; 'அவன் அநந்யமின்றிச் செய்பவர் செய்திப்பயன் விளைத்து நிற்றலான்' என்னும் வார்த்திகமும் காண்க.

"அறிவானுந் தானே யறிவிப்பான் ருனே
அறிவா யறிகின்ருன் ருனே—அறிகின்ற
மெய்ப்பொருளுந் தானே விரிசுடர்பா ராகாசம்
அப்பொருளுந் தானே யவன்"

என்னுங் காரைக்கா லம்மையார் திருவாக்கும் இக்கருத்தே யுடையது. பூசனை புரிவார் எல்லாவற்றையும் இறைவன்பால் ஒப்புவித்தல் வேண்டுமென்பதும் இதனுற் பெறப்படும். (கூ0)

என்னநின் றேத்தி ஞனை யின்னகை சிறிது தோன்ற
முன்னவ னடியா ரெண்ண முடிப்பவ னருட்க ணேக்கால்
உன்னது வேட்கை யாதிங் குரையென விரையத் தாழ்ந்து
சென்னிமேற் செங்கை கூப்பித் தேவர்கோ னிதனை வேண்டும்.

(இ-ள்.) என்ன நின்று ஏத்திஞனை - என்று சொல்லி நின்று துதித்தவனை நோக்கி, முன்னவன்-யாவருக்கும் முதல்வனும், அடியார் எண்ணம் முடிப்பவன் - அடியார்கள் எண்ணியதை எண்ணிய வண்ணம் முடிப்பவனுமாகிய இறைவன், இன் நகை சிறிது தோன்ற - இனிய புன்னகை தோன்ற, அருட்கண் நோக்கால்-அருள் நோக்கத்தோடு, உன்னது வேட்கை யாது-உன்னுடைய விருப்பம் யாது, இங்கு உரை என -இங்குச் சொல்லுவாயென, தேவர் கோன்-தேவேந்திரன், விரையத் தாழ்ந்து - விரைவில் வணங்கி, சென்னிமேல் செங்கை கூப்பி-முடியின் மேல் சிவந்த கைகளைக் குவித்து, இதனை வேண்டும்-இதனை வேண்டுவானுயினன் எ - று.

நோக்கியென ஒரு சொல் வருவிக்க. அருட்க ணேக்கால், கண்: நோக்கிற்கு அடை; ஆல்; ஒடுவின் பொருட்டு. உன்னது: னகரம் விரித்தல். இதனை-பிற்கூறப் படுவதனை. (கூக)

ஐயநின் னிருக்கை யெல்லைக் கணியனு மளவி னீங்கா
வெய்யவென் பழியிஞேடு மேலைநா ளடியேன் செய்த
மையல்வல் வினையு மாய்ந்துன் மலரடி வழுத்திப் பூசை
செய்யவு முரிய ஞனேன் சிறந்தபே றிதன்மேல் யாதோ.

(இ-ள்.) ஐய - ஐயனே, நின் இருக்கை எல்லைக்கு அணியனும் அளவில் - உன் இருப்பிடத்தின் எல்லைக்கு அணியனுகிய உடனே, நீங்கா-நீங்காத,வெய்ய-கொடிய, என் பழியிஞேடு-எனது கொலைப் பாவத்தோடு, மேலை நாள் அடியேன் செய்த-முற் பிறப்புக்களில் அடியேனுல் செய்யப்பட்ட, மையல் வல்வினையும் - மயக்கத்தைத் தரும் வலிய தீவினையும், மாய்ந்து - அழிந்து, உன் மலர் அடி வழுத்தி-நின் தாமரை மலர்போலும் திருவடிகளைத் துதித்து, பூசை செய்யவும் உரியனுனேன் - பூசனை புரியவும் தகுதி யுடையவனுனேன்; இதன் மேல் - இதைவிட, சிறந்த பேறு யாது - பெறத்தக்க சிறந்த பயன் யாதுளது எ - று.

நீங்கா, வெய்ய என்னும் பெயரெச்சங்கள் பழியென்பதனோடு தனித்தனி முடியும். மாய்ந்து-மாயப்பெற்று; சினைவினை முதன்மேல் நின்றதுமாம். உம்மை வியப்புணர்த்திற்று. ஓ: அசை. (கஉ)

இன்னநின் பாதப் போதே யிவ்வாறே யென்றும் பூசித்
துன்னடி யாருள் யானும் மோரடித் தொண்ட னாவேன்
அன்னதே யடியேன் வேண்டத் தக்கதென் றடியில் வீழ்ந்த
மன்னவன் றனக்கு முக்கண் வரதனுங் கருணை பூத்து.

(இ - ள்.) இவ்வாறே-இப்படியே, இன்ன நின் பாதப்போதே-இந்த நின் திருவடித் தாமரைகளையே, என்றும் பூசித்து - எப்பொழுதும் வழிபட்டு, உன் அடியாருள் - நின் தொண்டருள்ளே, யானும் ஓர் அடித்தொண்டன் ஆவேன் - அடியேனும் ஓர் தாழ்ந்த தொண்டனாவேன்; அன்னதே - அதுவே, அடியேன் வேண்டத்தக்கது என்று - அடியேனால் வேண்டத்தகுவது என்று, அடியில் வீழ்ந்த மன்னவன் தனக்கு - திருவடிகளில் வீழ்ந்து வணங்கிய இந்திரனுக்கு, முக்கண் வரதனும் கருணை பூத்து - மூன்று கண்களையுடைய வள்ளலும் அருள் சுரந்து எ - று.

அடித்தொண்டன் - தாழ்ந்த தொண்டன்; 'அருட்பெருந் தீயி லடியோ மடிக்குடில்' எனத் திருவாசகத்திலும், 'அடியே னடிவண்ணன்' எனத் திருத்தொண்டர் புராணத்திலும் அடியென்பது தாழ்மையைக் குறித்தல் காண்க. வரதன் - வேண்டியவற்றை வழங்குவோன். (கங)

[எழுசீரடியாசிரியவிருத்தம்]

இருதுவிற் சிறந்த வேனிலு மதியா
றிரண்டினிற் சிறந்தவான் றகரும்
பொருவிறு ரகையிற் சிறந்தசித் திரையுந்
திதியினிற் சிறந்தபூ ரணையும்
மருவுசித் திரையிற் சித்திரை தோறும்
வந்துவந் தருச்சியோர் வருடந்
தெரியுநாண் முந்நூற் றறுபது மைந்துஞ்
செய்தவர்ச் சனைப்பய னெய்தும்.

(இ - ள்.) இருதுவில் சிறந்த வேனிலும்-பருவங்களுள் உயர்ந்த வேனிற் பருவமும், மதி ஆறிரண்டினில் - மாதம் பன்னிரண்டனுள், சிறந்த வான் தகரும் - மிகச்சிறந்த சித்திரை மாதமும், பொருவு இல் தாரகையில்-ஒப்பற்ற நாண்மீன்களுள், சிறந்த சித்திரையும்-உயர்ந்த சித்திரை நாளும், திதியினில் சிறந்த பூரணையும்-திதிகளுள் உயர்ந்த பௌர்ணமியும், மருவு-(ஆகிய இவைகள்) கூடிய, சித்திரையில் சித்திரை தோறும் - சித்திரைத் திங்களின் சித்திரை நாள்தோறும், வந்து வந்து அருச்சி - வந்து வந்து வழிபடுவாயாக; ஓர் வருடம் தெரியும் - ஓர் ஆண்டுக்கு வரையறுத்த, நாள் முந்நூற்று அறுபதும் ஐந்தும் - முந்நாற் றறுபத்தைந்து நாட்களிலும், அர்ச்சனை செய்த பயன் எய்தும்-அருச்சனை செய்தலால் வரும் பயன் (உன்னை) அடையும் எ - று.

இருது-பருவம்; கார், கூதிர், முன்பனி, பின்பனி, இளவேனில், முதுவேனில் என்பன; ஈண்டுக் கூறியது இளவேனிலே. தகர் - ஆடு; மேடம். தாரகை-அசுவதி முதலிய இருபத்தேழு நட்சத்திரங்கள். சித்திரையிற் சித்திரை யென்றது அநுவாதம். (கூச)

துறக்கநா டணைந்து சுத்தபல் போகந்
துய்த்துமேன் மலபரி பாகம்
பிறக்கநான் முகன்மான் முதற்பெருந் தேவர்
பெரும்பதத் தாசையும் பிறவும்
மறக்கநாம் வீடு வழங்குது மென்ன
வாய்மலர்ந் தருளிவான் கருணை
சிறக்கநால் வேதச் சிகையெழு மனாதி
சிவபரஞ் சுடர்விடை கொடுத்தான்.

(இ - ள்.) துறக்க நாடு அணைந்து-துறக்க வுலகத்தையடைந்து, சுத்த பல்போகம் துய்த்து - தூய பல போகங்களை நுகர்ந்து, மேல்-பின், மல பரிபாகம் பிறக்க - மலபரிபாகம் உண்டாக, நான்முகன் மால் முதல்-பிரமன் திருமால் முதலிய, பெருந் தேவர் பெரும் பதத்து ஆசையும் - பெரிய தேவர்களின் பெரும்பதவியிலுள்ள விருப்பமும், பிறவும் மறக்க-மற்றைய விருப்பமும் ஒழிய, நாம் வீடு வழங்குதும் என்ன வாய்மலர்ந்தருளி - நாம் வீடுபேற்றை அருளுவோம் என்று திருவாய் மலர்ந்தருளி, வான் கருணை சிறக்க - சிறந்த அருள் ததும்ப, நால்வேதச் சிகை எழும் - நான்கு மறைகளின் முடிவில் விளங்கும், அனாதி சிவபரஞ் சுடர்-அனாதியாகிய சிவபரஞ்சோதி, விடைகொடுத்தான் - விடைகொடுத் தனுப்பினான் எ - று.

மல பரிபாகம்-ஆணவமல நெகிழ்ச்சி; இருவினையொப்பும், சத்திநிபாதமும் உபலக்கணத்தாற் கொள்க. பிறக்க, காரணப்பொருட்டு. மறக்க - மறந்தவளவில். சிகை - முடி; 'அதர்வசிகை' என்பது காண்க. (கூரு)

முடினான் புளகப் போர்வையால் யாக்கை
முடிமிசை யஞ்சலிக் கமலஞ்
சூடினான் வீழ்ந்தா னெழுந்துகண் ணருவி
துளும்பினான் பன்முறை துதிசெய்
தாடினா னைய னடிபிரி வாற்றா
தஞ்சினா னவனரு ளாணை
நாடினான் பிரியா விடைகொடு
துறக்க நண்ணினான் விண்ணவர் நாதன்.

(இ - ள்.) விண்ணவர் நாதன்-தேவேந்திரன், புளகப் போர்வையால் யாக்கை மூடினான் - புளகமாகிய போர்வையினால் உடல் மூடப்பட்டான்; முடிமிசை - சென்னியின்மேல், அஞ்சலிக் கமலம் சூடினான் - கைத்தாமரைகளைக் கூப்பினான்; வீழ்ந்தான் - கீழேவிழுந்து

வணங்கினுன்; எழுந்து கண் அருவி துளும்பினுன் - எழுந்து கண்களி னின்றும் இன்பவருவியை ஒழுக்கினுன்; பல்முறை துதிசெய்து ஆடினுன் - பலமுறையுந் துதிமொழி கூறிக் கூத்தாடினுன்; ஐயன் அடி பிரிவு ஆற்ருது அஞ்சினுன் - இறைவன் திருவடிகளைப் பிரிவதற்கு ஆற்ருமல் அஞ்சினுன்; அவன் அருள் ஆணை நாடினுன் - அவன் அருளிய ஆணையை நாடி, பிரியா விடைகொடு - உள்ளம் பிரியாத விடை பெற்று, துறக்கம் நண்ணினுன்-துறக்க வுலகிற் சென்ருன் எ - று.

அஞ்சலி - கூப்பிய கை. ஆணை - அருளிப்பாடு. பிரியாவிடை- பிரிதற்கு மனம் பொருந்தாத விடை. (கூகூ)

[எண்சீரடியாசிரிய விருத்தம்]

வந்தரமங் கையர்கவரி மருங்கு வீச
　　மந்தாரங் கற்பகம்பூ மாரி தூற்ற
அந்தரநாட் டவர்முடிக ளடிகள் சூட
　　வயிராணி முலைத்தடந்தோய்ந் தகலந் திண்டோள்
விந்தமெனச் செம்மாந்து விம்மு காம
　　வெள்ளத்து ளுடலழுந்த வுள்ளஞ் சென்று
சுந்தரநா யகன்கருணை வெள்ளத் தாழ்ந்து
　　தொன்முறையின் முறைசெய்தான் றுறக்க நாடன்.

(இ - ள்.) அரமங்கையர் மருங்கு வந்து கவரி வீச-தேவமகளிர் பக்கத்தில் வந்து சாமரை இரட்டவும், மந்தாரம் கற்பகம் பூமாரி தூற்ற-மந்தாரமும் கற்பகமும் மலர் மழை பொழியவும், அந்தரநாட்டவர்கள் முடிகள் அடிகள் சூட - துறக்க நாட்டினையுடைய தேவர்களின் முடிகள் அடிகளாகிய (மலரை) அணியவும், அயிராணி முலைத் தடம் தோய்ந்து-இந்திராணியின் பெரிய கொங்கைகளி லழுந்தி, அகலம் திண்தோள் - மார்பும் வலிய தோள்களும், விந்தம் எனச் செம் மாந்து-விந்த மலையைப்போல இறுமாந்து, விம்மு காமவெள்ளத்துள் உடல் அழுந்த-பெருகிய காம வெள்ளத்தினுள் உடலானது அழுந்தி நிற்க, உள்ளம் சென்று-மனமானது சென்று, சுந்தரநாயகன் கருணை வெள்ளத்து ஆழ்ந்து-சோமசுந்தரக் கடவுளின் அருள் வெள்ளத்தில் அழுந்தி நிற்க, துறக்க நாடன்-தேவ வுலகத்தினையுடைய இந்திரன், தொல் முறையில்-பழைய முறைப்படியே, முறை செய்தான் - அரசு புரிந்தான் எ - று.

ஐந்தருக்களில் இரண்டு கூறினமையால் ஏனையவுங் கொள்க. செம்மாந்து என்னுஞ் சினைவினை முதன்மேல் நின்றது; செம்மாக்க என்பதன் திரிபுமாம். ஆழ்ந்து: எச்சத்திரிபு. (கஎ)

ஆகச் செய்யுள் - சஙக.

---

## உ. வெள்ளையானைச் சாபந்தீர்த்த படலம்

[கொச்சகக்கலிப்பா]

மட்டவிழுங் கோன்றைச் சடையான் மகவானைத்
தோட்ட பழியின் றொடக்கறுத்த வாறீது*
பட்டமத வேழம் பரனைப் பராய்முனிவன்
இட்டகோடுஞ் சாபநீத் தேகியவா றோதுவாம்.

(இ - ள்.) மட்டு அவிழும் கொன்றைச் சடையான் மணத்தொடு மலர்ந்த கொன்றை மலர் மாலையை யணிந்த சடையையுடைய இறைவன், மகவானைத் தொட்ட பழியின் தொடக்கு அறுத்தவாறு ஈது - இந்திரனைப் பற்றிய பழியின்கட்டினை அறுத்த தன்மை இதுவாகும்; பட்ட மத வேழம் - (இனி) நெற்றிப் பட்டத்தினையும் மதப்பெருக்கினையுமுடைய வெள்ளை யானையானது, பரனை - அச்சோமசுந்தரக் கடவுளை-பராய் வழிபட்டு, முனிவன் இட்ட - துருவாச முனிவனால் இடப்பட்ட, கொடும் சாபம் நீத்து ஏகியவாறு ஓதுவாம் - கொடிய சாபத்தினை நீக்கிச் சென்ற திருவிளையாடலைக் கூறுவாம் எ - று.

மட்டு அவிழும் - மணம் விரியும் என விரித்தலுமாம்; மட்டு - தேனுமாம். அவிழும் மலர் எனச் சினையோடியையும். ஈதென்றது முற்கூறிய வதனை: சுட்டு நீண்டது. பராவி என்பது பராய் எனத் திரிந்தது. இது கூறினும் இது கூறுவாம் என இங்ஙனமாகத்தொகுத்துச் சுட்டுவது ஆன்றோர் வழக்கமென்பதனைத் திருத் தொண்டர் புராணத்தானும் அறிக. (க)

கருவா சனைகழிக்குங் காசிநகர் தன்னில்
துருவாச வேதமுனி தோல்லா கமத்தின்
பேருவாய்மை யாற்றன் பேயர்விளங்க வீசன்
ஒருவா விலிங்க வோளியுருவங் கண்டான்.

(இ - ள்.) கருவாசனை கழிக்கும்-கருப்ப வாசனையைப் போக்குகின்ற, காசி நகர் தன்னில் - காசிப்பதியில், வேத துருவாசமுனி - மறைகளை யுணர்ந்த துருவாச முனிவன், தொல் ஆகமத்தின் பெரு வாய்மையால்-பழைய ஆகமத்தின் சிறந்த உண்மையால், தன் பெயர் விளங்க - தனது பெயர் விளங்குமாறு, ஈசன் ஒருவா-இறைவன் நீங்காத, ஒளி இலிங்க உருவம் கண்டான் - ஒளிவடிவாகிய சிவலிங்கத் திருவுருவத்தை நிறுவினன் எ - று.

பொன்றக் கெடுக்கு மென்பார் 'வாசனை கழிக்கும்' என்றார். ஆகமங் கூறுமுறைமையா லென்க. வாய்மையாற் கண்டான் என முடிக்க. காணுதல் - பிரதிட்டித்தல். (உ)

---

(பா - ம்) * தொடக்கறுத்த வாறேதி.

இன்புற் றருச்சனைசெய் தேத்துவா னவ்வேலை
அன்புக் கெளிய னருளாற் றிருமுடிமேன்
மின்போற் கடிக்கமலப் போதொன்று வீழ்த்திடலுந்
தன்போற் கரகமலப் போதலர்த்தித் தாங்கினான்.

(இ - ள்.) இன்புற்று-மகிழ்ந்து, அருச்சனை செய்து-அருச்சித்து, ஏத்துவான் - துதிப்பானாகிய முனிவன், அவ்வேலை - அப்போது, அன்புக்கு எளியன்-அடியார்களின் அன்புக்கு எளியவனாகிய இறைவன், அருளால்-தனது திருவருளால், திருமுடிமேல் மின் பொன் கடிகமலப் போது ஒன்று வீழ்த்திடலும் - திருமுடியினின்றும் ஒளியையுடைய பொன்னிறம் வாய்ந்த மணம் பொருந்திய தாமரை மலர் ஒன்றை விழச்செய்த வளவில், தன் பொன் கர கமலப்போது அலர்த்தித் தாங்கினான்-தனது அழகிய தாமரை மலரை விரித்துத் தாங்கினான் எ - று.

ஏத்துவான்: பெயர்; தாங்கினான் என்பது கொண்டு முடியும். இறைவன் அன்புக் கெளியனாதலை,

"பத்திவலையிற் படுவோன் காண்க"
"யாவ ராயினு மன்ப ரன்றி யறியொ ணாமலர்ச் சோதியான்"

என்னும் மணிவாசகங்களா னறிக. வீழ்ந்திடலும் என்பது பாடமாயின், எளியனதருளால் என விரிக்க. கரகமலம்: வடநூன் முடிபு. ()

தாங்கிக்கண் சென்னி தடமார் பணைத்துடலம்
வீங்கித் தலைசிறந்த மெய்யுவகை மேற்கொள்ள
நீங்கிக் கழிந்த கருணை நிதியனையான்
பூங்கற் பகநாட்டிற் போகின்றா னவ்வேலை.

(இ - ள்.) தாங்கி - அங்ஙனம் ஏந்தி, கண் சென்னி தடம் மார்பு அணைத்து-கண்களிலும் முடியிலும் பெரிய மார்பிலும் ஒற்றி, உடலம் வீங்கி-மெய் பூரித்து, தலை சிறந்த மெய் உவகை மேற்கொள்ள - மிக ஓங்கிய உண்மை மகிழ்ச்சி மீதூர, நீங்கி-அவ்விடத்தினின்றும் நீங்கி, கழிந்த - சென்ற, கருணை நிதி அனையான் - அருணிதியை ஒத்த துருவாசமுனிவன், பூங்கற்பக நாட்டில் - பொலிவினையுடைய கற்பகத் தருப் பொருந்திய துறக்க நாட்டில், போகின்றான்-செல்வானாயினான்; அவ் வேலை - அப்பொழுது எ - று.

தாங்கி யென்பது பணிவைக் குறிப்பிடுகின்றது. உடலம், அம்: சாரியை. வீங்கி என்னும் சினைவினை முதல் வினையோடு முடிந்தது. தலைசிறந்த-மிக்க: ஒரு சொல். கழிந்த-மிக்க எனலுமாம், கருணையையுடைய நிதியனையான் என்னலுமாம். அவ்வேலை என்பதனை வரும் பாட்டுடன் கூட்டுக. (௪)

(பா - ம்) * வீழ்ந்திடலும், வீழ்த்திடவும்.

சங்கலறச் செங்களத்துத் தானவரைத் தேய்த்துவிறற்
கோங்கலர்தார் வேய்ந்தமரர் கோமான்றன் கோநகரிற்
செங்க ணமரர்பெருஞ் சேனைக் கடல்கலிப்ப
மங்கலப்பல் லாண்டு மறைமுழங்க வந்தணைவான்.

(இ - ள்.) சங்கு அலற-வெற்றிச் சங்க முழங்க, செங்களத்து - போர்க்களத்தில், தானவரைத் தேய்த்து - அவுணர்களை அழித்து, கொங்கு அலர்-மணம் பரந்த, விறல் தார் வேய்ந்து - வெற்றி மாலை சூடி, அமரர் கோமான்-தேவேந்திரன், தன் கோ நகரில் - தனது தலை நகராகிய அமராவதியில், பெரு செங்கண் அமரர் சேனைக் கடல் கலிப்ப - பெரிய சிவந்த கண்களையுடைய தேவர் சேனையாகிய கடல் (ஒருபால்) ஒலிக்கவும், மங்கலப் பல்லாண்டு மறை முழங்க-மங்கல மாகிய பல்லாண்டும் வேதமும் (ஒருபால்) ஒலிக்கவும், வந்தணை வான்-வருகின்றவன் எ - று.

செங்களம் - போர்க்களம்; 'செங்களந் துழவுவோள்' என்பது புறம். கொங்கு-தேனும், பராகமும் ஆம். விறற்றார் எனக் கூட்டுக. வேய்ந்த என்னும் பெயரெச்சத்து அகரம் தொக்க தென்னலுமாம். கோநகர் - தலைநகர், அரசநகர். பல்லாண்டு - பல ஆண்டுகள் வாழ வேண்டுமென வாழ்த்தும் பாட்டு. எண்ணும்மை விரிக்க. (ரு)

எத்திக்குங் கல்லென் றியங்கலிப்ப வேந்திழையார்
தித்தித் தமுதொழுக்கும்* கீதஞ் செவிமடுப்பப்
பத்திக் கவரிநிறை தானைப் படுகடலில்
தத்திப் புரளுந் திரைபோற் றலைப்பனிப்ப.

(இ - ள்.) எத்திக்கும் கல்லென்று - எல்லாத் திசைகளிலும் கல்லென்னும் ஒலியோடு, இயம் கலிப்ப - இயங்கள் ஒலிக்கவும், ஏந்து இழையார் - ஏந்திய அணிகளையுடைய தேவ மகளிரின், தித்தித்து அமுது ஒழுக்கும் - இனிமையுற்று அமுதத்தினைப் பொழியும், கீதம் செவி மடுப்ப-இசைப்பாட்டுச் செவியின் கண் ஏறவும், பத்திக் கவரிநிரை - வரிசையாகிய சாமரைக் கூட்டங்கள், தானைப் படுகடலில் - சேனையாகிய ஆழமுள்ள கடலின்கண், தத்திப் புரளும் திரை போல் தலைபனிப்ப-தவழ்ந்து புரளுகின்ற அலைகளைப்போல அசையவும் எ - று.

இயம்-வாச்சியம். தித்தித்த என்பது விகாரமாயிற்றுமாம். இனிமையால் அமுதத்தைப் பொழிந்தா லொக்குமென்க. (சு)

அங்கட் கடலி னெடுங்கூம் பகநிமிர்ந்த
வங்கத் தலையுய்க்கு மீகான் றனைமானத்
திங்கட் குடைநிழற்றத் தீந்தே மதங்கவிழ்க்கும்
வெங்கட் களிற்றின் மிசைப்பவனி போந்தணைந்தான்.

(பா - ம்.) * அமுதொழுகும்.

(இ - ள்.) அம்கண் கடலின்-அழகிய இடமகன்ற கடலின்கண், அகம்நெடுங் கூம்பு நிமிர்ந்த-தன்னிடத்து நீண்ட பாய் மரம் உயர்ந்த, வங்கத் தலை உய்க்கும் மீகான் தனை மான - கப்பலின் தலையிலிருந்து அதனைச் செலுத்தும் மாலுமியை ஒக்க, திங்கள் குடை நிழற்ற - சந்திரவட்டக் குடை நிழலைச் செய்ய, தீந்தேம் மதம் கவிழ்க்கும் - மிக இனிய மதத்தினைக் கொட்டுகின்ற, வெங்கண் களிற்றின் மிசை-வெவ்விய கண்களையுடைய வெள்ளை யானையின்மேல், பவனி போந்தனன்தான் - திருவுலாப் போந்தான் எ - று.

களிற்றுக்கு நாவாய் உவமையாதலை மதுரைக்காஞ்சியினும், மணிமேகலையினுங் காண்க. யானைக்கு வங்கமும், குடைக்குக் கூம்பும், யானையின் பிடர்மேலிருப்போனுக்கு வங்கத்தின் மேலிடத்திருக்கும் மீகானும் உவமமாம். மீகான்-இச் சொல் மீயான் எனவும், மீகாமன் எனவும் வழங்குகிறது. தீந்தேம்: ஒரு பொருளிருசொல். வெங்கண் - அஞ்சாமையுமாம். (எ)

அத்தலைவிண் ணாட ரருகணைந்து வெவ்வேறு
தத்த மனக்கிசைந்த கையுறைக டாங்கொடுத்துக்
கைத்தலங்கள் கூப்பினர் கண்டான்* கடவுளரில்
உத்தமனை யர்ச்சித்துப் போந்தமுனி யுத்தமனும்.

(இ - ள்.) அத்தலை-அவ்விடத்து, விண் நாடர் அருகு அணைந்து-தேவர்கள் (இந்திரன்) மருங்கில் வந்து, தத்தம் மனக்கு இசைந்த - தங்கள் தங்கள் மனத்திற்குப் பொருந்திய, வெவ்வேறு கையுறைகள் தாம் கொடுத்து-வேறு வேறு வகையான கையுறைகளைக் கொடுத்து, கைத்தலங்கள் கூப்பினர்-கைகளைக் குவித்து வணங்கினார்கள்; கடவுளரில் உத்தமனை - தேவர்களிற் சிறந்த சிவபெருமானை, அர்ச்சித்துப் போந்த - வழிபட்டு வந்த, முனி உத்தமனும் - முனிவருட் சிறந்த துருவாசனும், கண்டான் - அதனைக் கண்டு எ - று.

மனக்கு: சாரியை தொக்கது. கையுறை - காணிக்கை. (அ)

தீங்கரிய வாசிமொழி செப்பித்தன் செங்கரத்தின்
நீங்கரிய தாமரையை நீட்டினான் மற்றதனைத்
தாங்கரிய செல்வத் தருக்காலோர் கையோச்சி
வாங்கிமத யானையின்மேல் வைத்தான் மதியில்லான்.

(இ - ள்.) தீங்கு அரிய-குற்றமில்லாத, ஆசி மொழி செப்பி - வாழ்த்து மொழிகளைக் கூறி, தன் செங்கரத்தின் நீங்கு அரிய - தனது சிவந்த கையினின்று நீங்குதலில்லாத, தாமரையை நீட்டினான் - தாமரைமலரைக் கொடுத்தான்; அதனை - அம்மலரை, தாங்கு அரிய செல்வத்தருக்கால் - பொறுத்தற்கரிய செல்வச் செருக்கினால், மதி இல்லான் - அறிவு இல்லானாகிய இந்திரன், ஓர் கை ஓச்சி வாங்கி-ஒரு கையை நீட்டி வாங்கி, மதயானையின்மேல் வைத்தான் - மதத்தையுடைய தன் யானையின் மேலே வைத்தான் எ - று.

---

(பா - ம்.) * கண்டார்.

அருமை இன்மை குறிப்பது. மற்று: அசை. தாங்கரிய செல்வம்—மிக்க செல்வம். செல்வத்தருக்கு - செல்வத்தாலாய உவகை மிகுதி; களிப்பு. இருகையானும் பணிந்து வாங்கிச் சென்னிமேற் சூடற்பாலதனை ஒரு கை நீட்டி வாங்கி யானைமேல் வைத்தான் என்றார். (கூ)

கீறிக் கிடந்த மதியனைய கிம்புரிக்கோட்
டூறிக் கடங்கவிழ்க்கு மால்யானை யுச்சியின்மேல்
நாறிக் கிடந்த நறுமலரை வீழ்த்தியுரற்
சீறிக் கிடந்தநெடுந் தாளாற் சிதைத்தன்றே.

(இ-ள்.) கீறிக் கிடந்த மதி அனைய-பிளவுண்டு கிடந்த சந்திரனை ஒத்த, கிம்புரிக் கோட்டு - பூண் அணிந்த கொம்புகளையுடைய, கடம் ஊறி கவிழ்க்கும் - மதத்தைச் சுரந்து கொட்டும், மால் யானை-மயக்கத்தையுடைய அவ்வெள்ளையானை, உச்சியின்மேல் நாறிக்கிடந்த-தன் முடியின்மீது மணம் வீசிக்கிடந்த, நறுமலரை-நறியமலரை, வீழ்த்தி-கீழே தள்ளி, உரல் சீறிக் கிடந்த - உரலொடு மாறுபட்டுக் கிடந்த, நெடுந் தாளால் - நீண்ட காலால், சிதைத்தன்று-தேய்த்தது எ-று.

நாறிக்கிடந்த-தோன்றிக் கிடந்த என்னலுமாம். யானைக்கால் உரல்போலுதலின் உரையடியென்பதும் யானைக்கொருபெயராயிற்று. சிதைத்தன்று-சிதைத்தது: உடன்பாட்டு முற்று. ஏ: அசை; (க0)

கண்டான் முனிகாமற் காய்ந்தா னுதற்கண்போல்
விண்டா ரழல்சிதற நோக்கினான் வெங்கோபங்
கொண்டா னமர ரோதுங்கக் கொதித்தாலம்
உண்டா னெனநின் றுருத்தா னுரைக்கின்றான்.

(இ-ள்.) முனிகண்டான் - அதனைத் துருவாச முனிவன் கண்டான்; காமன் காய்ந்தான் நுதல் கண்போல் - மன்மதனை யெரித்த சிவனது நெற்றிக்கண்போல, ஆர் அழல் விண்டு சிதற நோக்கினான்-நிறைந்த நெருப்பு வெளிப்பட்டுச் சிதற நோக்கி, வெங்கோபம் கொண்டான் - கொடிய சினங்கொண்டான்; அமரர் ஒதுங்கக் கொதித்து-தேவர்கள் அஞ்சி ஒதுங்கும்படி பொங்கி, ஆலம் உண்டான் என நின்று - நஞ்சினை உண்ட உருத்திரன்போல நின்று, உருத்தான் உரைக்கின்றான்-மேலும் வெகுண்டு கூறுகின்றான் எ - று.

விண்டு-வெளிப்பட்டு. நோக்கினான், உருத்தான் என்பன முற்றெச்சங்கள். (கக)

புள்ளியதோ லாடை புனைந்தரவப் பூணணிந்த
வெள்ளிய செங்கண் விடையா னடிக்கமலம்
உள்ளிய மெய்யன் புடையா ரருவருத்துத்
தள்ளிய செல்வத் தருக்கினா யென்செய்தாய்.

(இ - ள்.) புள்ளியதோல் ஆடை புனைந்து - புள்ளிகளையுடைய தோலாடையைஉடுத்து, அரவப்பூண் அணிந்த-பாம்பணிகளை அணிந்த,

செங்கண்-சிவந்த கண்களையுடைய, வெள்ளிய விடையான் - வெண்ணிறம் பொருந்திய ஏற்றையுடைய இறைவனது, அடிக்கமலம்-திருவடித்தாமரையை, உள்ளிய மெய்யன்பு உடையார் - இடையறுது நினைக்கின்ற மெய்யன்புடைய அடியார்கள், அருவருத்துத் தள்ளிய செல்வத்தருக்கினுய்-உவர்த்து ஒதுக்கிய செல்வத் தருக்கினையுடையவனே, என் செய்தாய்-நீ என்ன காரியஞ் செய்தாய் எ - று.

புள்ளிய, அ: அசை. புள்ளித்தோல். வெள்ளிய செங்கண்:முரண். தள்ளிய செல்வம் என வியையும். மெய்யன்புடையார் அருவருத்துத் தள்ளுதலை,

"கொள்ளேன் புரந்தரன் மாலயன் வாழ்வு"
"போகம் வேண்டி வேண்டிலேன் புரந்தராதி யின்பமும்"

என்னும் மணிவாசகங்களாற் காண்க. செய்தது சிறிதும் அடாதென்பார் 'என் செய்தாய்' என்ருர். (கஉ)

கதிர்த்தார் முடியமரர் கையுறையே நன்கு
மதித்தாயெம் மீசன் மதிமுடிமேற் சாத்தும்
போதித்தா தவிழ்மலரைப் போற்ருது வாங்கி
மிதித்தானை சிந்தவதன் மேல்வைத்தாய் பேதாய்.

(இ - ள்.) பேதாய்-அறிவில்லாதவனே, கதிர் தார் முடி அமரர்-ஒளி பொருந்திய மாலையை யணிந்த முடியினையுடைய தேவர்களின், கையுறையே நன்கு மதித்தாய்-கையுறைப் பொருளையே நன்கு மதித்தாய்; எம் ஈசன் மதி முடிமேல் சாத்தும் - எம் சிவபெருமானின் பிறையினையணிந்த திருமுடிமேற் சாத்தப்பட்ட, போதிதாது அவிழ் மலரை-நிறைந்த மகரந்தத்தோடு மலர்ந்த மலரை, போற்ருது - பேணுது, வாங்கி-ஒரு கரத்தால் வாங்கி, ஆனை மிதித்து சிந்த - யானையானது மிதித்துச் சிதைக்குமாறு, அதன்மேல் வைத்தாய் - அந்த யானையின்மேல் வைத்தனை எ - று.

நன்கு மதித்தல்-பெரிது மதித்தல்: ஒருசொல். இகழற் பாலதனை மதித்தும் மதிக்கற் பாலதனை யிகழ்ந்தும் போந்தாய் நின் அறிவிருந்தவா றென்னே என்றவாறு. எம்மீசன் என்றது எம்மை யெல்லாம் ஆளாகவுடைய தலைவன் என்றபடி. போற்ருது-குறிக்கொண்டு வழிபடுதலின்றி. (கங)

வண்டுளருந் தண்டுழாய் மாயோ னிறுமாப்பும்
புண்டரிகப் போதுறையும் புத்தே ளிறுமாப்பும்
அண்டர்தொழ வாழுன் னிறுமாப்பு மாலாலம்
உண்டவனைப் பூசித்த பேறென் றுணர்ந்திலையால்.

(இ-ள்) வண்டு உளரும்-வண்டுகள் கிண்டுகின்ற, தண் துழாய் மாயோன் இறுமாப்பும்-குளிர்ந்த துழாய்மாலையையுடைய திருமாலின் களிப்பும், புண்டரிகப் போது உறையும் புத்தேள் இறுமாப்பும்-தாமரை மலரில் இருக்கும் பிரமனது களிப்பும், அண்டர் தொழ வாழ் உன் இறுமாப்பும் - தேவர்கள் பணிய வாழுகின்ற உனது களிப்பும்,

ஆலாலம் உண்டவனைப் பூசித்த பேறு என்று உணர்ந்திலை - நஞ்சினை உண்டருளிய இறைவனை வழிபட்டதனாலாகிய பயன் என்று நீ அறியாது போயினாய் எ - று.

உளர்தல்-கிண்டுதல். இறுமாப்பு-மிக்க களிப்பு; திருவங்கமாலையுள்.

"இறுமாந் திருப்பன் கொலோ"

என வருதல் காண்க. ஆலால முண்டவன் என்றது,

"விண்ணோ ரமுதுண்டுஞ் சாவ ஒருவரும்
உண்ணாத நஞ்சுண் டிருந்தருள் செய்யும்"

இறைவனுடைய அளவிலாற்றலையும் பேரருளையும் குறிப்பிடற் கென்க. தேவர்கள் சிவபெருமானை வழிபட்டு வாழ்வதனை,

"வாழ்த்துவதும் வானவர்கள் தாம்வாழ்வான் மனநின்பாற்
றாழ்த்துவதுந் தாமுயர்ந்து தம்மையெல்லாந் தொழவேண்டி"

என்னும் திருவாசகத்தா னறிக. (கச)

சேட்டானை வானவநின் சென்னி செழியரிலோர்
வாட்டானை வீரன் வளையாற் சிதறுகநின்
கோட்டான நாற்கோட்டு* வெண்ணிறத்த குஞ்சரமுங்
காட்டானை யாகவென விட்டான் கடுஞ்சாபம்.

(இ - ள்.) சேடு ஆனை வானவ - பெரிய வெள்ளை யானையையுடைய இந்திரனே, நின் சென்னி-உனது முடியானது, செழியரில் - பாண்டியருள், ஓர் வாள் தானை வீரன் வளையால் சிதறுக-ஒரு வாளினையுடைய சேனையையுடைய வீரனது திகிரியினால் சிதறக்கடவது; நின்-உனது, கோள் தானம் நால்கோடு - வலிமையையும் மதத்தையும் நான்கு கொம்புகளையும் உடைய, வெள் நிறத்த குஞ்சரமும் - வெண்மையான நிறத்தினையுடைய யானையும், காட்டு ஆனை ஆக - காட்டானையாகக் கடவது; என-என்று, கடுஞ் சாபம் இட்டான்-கொடிய சாபத்தைக் கொடுத்தான் எ - று.

சேடு-பெருமை, யானை ஆனையென மருவிற்று. வட்டமாயிருத்தலின், திகிரி வளையெனப்பட்டது. வீரன்-உக்கிரகுமார பாண்டியன்; ஓர் வீரன் என்க. கோட்ட என்று குறிப்புப் பெயரெச்சமாகப் பாடமோதுவாருமுளர். உம்மை இறந்தது தழீஇயிற்று. (கரு)

சவித்தமுனி பாதந் தலைக்கொண்டு செங்கை
குவித்தமரர் தங்கோன் குறையிரப்பா ரைய
அவித்தபொறி யாயெம் மரசுங்கா றள்ளுஞ்
செவித்தறுகண் வேழமுந் தீங்குடைய ரன்றே.

(இ - ள்.) அமரர்-தேவர்கள், சவித்தமுனி பாதம் தலைக்கொண்டு-சாபமிட்ட துருவாச முனிவனுடைய திருவடிகளை முடியிற் சூடி,

(பா - ம்.) * நாற்கோட்ட.

செங்கை குவித்து-சிவந்த கைகளைக் கூப்பி, தம் கோன் குறை இரப்பார் - தம் தலைவன் பொருட்டுக் குறையிரந்து வேண்டிக் கொள்வாராகி, ஐய - ஐயனே, அவித்த பொறியாய் - ஐம்பொறிகளைக் கெடுத்தவனே, எம் அரசும் - எம் அரசனும், கால் தள்ளும் செவி-காற்றை வீசும் காதுகளையும், தறு கண்-அஞ்சாமையையுமுடைய, வேழமும் - வெள்ளையானையும், தீங்கு உடையர் அன்றோ - குற்ற முடையவர்கள் அல்லவா எ - று.

சவித்த, சபித்தவென்பது திரிந்து நின்றது. தங்கோனுக்கென்க. குறையிரத்தல்: ஒரு சொல். இரப்பார்: எச்சம்; பெயருமாம். அவித்தல்-அடக்குதல். பொறி அவித்தாய் என விகுதி பிரிந்து சென்றியையும். பொறிகளை யவித்தவனென முனிவன்பால் தீங்கின்மை கூறிற்று. வெகுண்டாரது பொறுதி வேண்டுவார் தம் குற்றத்தை யுடன்படல் வேண்டுமாகலின் 'தீங்குடைய ரன்றோ' என்றார். திணை விரவிச் சிறப்பால் உயர்திணை முடிபேற்றன. (கசு)

அத்தகைய நீராற் சபித்தீ ரடிகேண்மற்
றித்தகைய சாப மினிவிடுமி னென்றிரந்து
கைத்தலங்கள் கூப்பிக் கரைந்தார்க் கிரங்கியருள்
வைத்த முனிபிறிது சாபம் வகுக்கின்றான்.

(இ - ள்.) அத்தகைய நீரால் சபித்தீர் - அங்ஙனமாய குற்றத்தால் சாபமிட்டீர், அடிகேள்-அடிகளே, மற்று - யாங்கள் வேண்டிக் கோடலினால், இத்தகைய சாபம் - இந்தச் சாபத்தை, இனிவிடுமின் என்று இரந்து - இப்பொழுதே நீக்கியருள வேண்டுமென்று குறையிரந்து, கைத்தலங்கள் கூப்பிக் கரைந்தார்க்கு - கைகளைக் குவித்து முறையிட்ட தேவர்களின் பொருட்டு, இரங்கி அருள் வைத்த முனி - மனம் இரங்கிக் கருணை கூர்ந்த முனிவன், பிறிது சாபம் வகுக்கின்றான் - வேறு சாபமிடுகின்றான் எ - று.

நீர் - தன்மை; ஈண்டுக் குற்றமாந்தன்மை. மற்று: வினைமாற்று: உயர்த்துக் கூறுதற்குச் சபித்தீர் அடிகேள் விடுமின் எனப் பன்மையாற் கூறினார். கரைதல்-சொல்லுதல்; முறையிடுதல். பிறிதாகிய சாபமென்க. (கஎ)

[அறுசீரடியாசிரிய விருத்தம்]

சிந்தனை வாக்கிற் கெட்டாச் சிவனரு ளளித்த சேட
நிந்தனை பரிகா ரத்தா னீங்காது தலைமட் டாக
வந்தது முடிமட் டாக மத்தமா வனமா வாகி
ஐந்திரு பஃதாண் டெல்லை யகன்றபின் பண்டைத் தாக.

(இ - ள்.) சிந்தனை வாக்கிற்கு எட்டாச் சிவன் - மனத்திற்கும் வாக்கிற்கும் எட்டாத சிவபெருமான், அருள் அளித்த சேட நிந்தனை - திருவருளா லருளிய சேடத்தை நிந்தித்த குற்றம், பரிகாரத்தால் நீங்காது-கழுவாயினால் அகலாது (ஆதலால்), தலைமட்டாக வந்தது-தலையளவாக வந்தது, முடிமட்டு ஆக-முடியளவாகக் கடவது; மத்தம்மா-மதமயக்கத்தையுடைய வெள்ளையானை, வனம்மா ஆகி - காட்டானை

யாகி, ஐந்து இருபஃது ஆண்டு எல்லை-நூறுண்டுவரை, அகன்றபின்-கழிந்த பின், பண்டைத்து ஆக-முன்னியல்பினை உடையதாகுக எ-று.

சிந்தனைக்கும் வாக்கிற்கும் என விரிக்க. சிவனது திருவருள் என விரித்தலுமாம். சேடம் - பிரசாதம்; 'சேடங்கொண்டு சிலர்நின் றேத்த' எனச் சிலப்பதிகாரத்து வருதலுங் காண்க. பரிகாரம் - பிராயச்சித்தம். வந்தது-வந்ததாகிய அபாயம்: வினைப்பெயர். 'தலைக்கு வந்தது தலைப்பாகையோடு' என்னும் உலக வசனமும் இங்கே நினைக்கற்பாலது. மத்தம் - உன் மத்தம்; மத்தகமுமாம். ஆக மூன்றனுள் முன்னது வினையெச்சம்; பின்னையவை வியங்கோள் முற்றுக்கள். (கஅ)

என்றனன் பிறிது சாப மிந்திரன் மகுட பங்கம்
ஒன்றிய செய்கை பின்ன ருரைத்துமற் றஃது நிற்க
நின்றவெள் ளானை வான நீத்தறி விழந்து நீலக்
குன்றென வனத்து வேழக் குழாத்தொடு குழீஇய தன்றே.

(இ-ள்.) என்றனன் - என்று கூறினன்; பிறிது சாபம்-அவ்வேறு சாபத்தினால், இந்திரன் மகுடபங்கம் ஒன்றிய செய்கை-இந்திரன் மகுட பங்கமுற்ற செய்தியை, பின்னர் உரைத்தும் - பின்பு கூறுவேம் (ஆகலின்); அஃது நிற்க-அது நிற்க, நின்ற வெள்ளானை - சாபம் பெற்று நின்ற வெள்ளானையானது, வானம் நீத்து - தேவ உலகினை அகன்று, அறிவு இழந்து-அறிவு கெட்டு, நீலக்குன்று என - நீல மலை போலக் (கருநிற முடையதாகி), வனத்து வேழக் குழாத்தொடு குழீஇயது-காட்டானைக் கூட்டத்தோடு கலந்தது எ-று.

பிறிது சாபம் என்பதனை என்றனன் என்பதனோடு கூட்டின் கூறியது கூறலாகும். மகுட பங்கம்-முடி சிதறுதலாகிய பரிபவம். அஃது - அது: விரித்தல் விகாரம். குழீஇயது, சேர்ந்தது என்னும் பொருட்டு. அன்று, ஏ: அசைகள்; அப்பொழுதே யெனினுமாம். ( )

மாவோடு மயங்கிச் செங்கண் மறம்பயில் காடு முல்லைப்
பூவோடு வழங்கு நீத்தப் புறவமுங் குறவர் தங்கள்
தேவோடு பயிலுங் கல்லுந் திரிந்துநூ றியாண்டுஞ் செல்லக்
காவோடு பயிலுந் தெய்வக் கடம்பமா வனம்புக் கன்றே.

(இ-ள்.) மாவொடு மயங்கி-(இவ்வாறு) காட்டானைகளோடு கலந்து, செங்கண் மறம்பயில் காடும்-சிவந்த கண்களையுடைய மறவர்கள் தங்கிய பாலை நிலத்திலும், முல்லைப் பூவொடு வழங்கு நீத்தப் புறவமும் - முல்லைப் பூக்களோடு செல்லா நின்ற காட்டாறுகளையுடைய முல்லை நிலத்திலும், குறவர் தங்கள் தேவொடு பயிலும் கல்லும் - குறவர்கள் தங்கள் கடவுளாகிய முருகவேளோடு பொருந்தியிருக்கும் குறிஞ்சி நிலத்திலும், திரிந்து நூறு ஆண்டும் செல்ல - திரிந்து நூறு ஆண்டுகளும் கழிய, காவொடு பயிலும் தெய்வக்கடம்பமா வனம் புக்கன்று-சோலைகளாற் சூழப்பெற்ற தெய்வத் தன்மை பொருந்திய பெரிய கடம்பவனத்திற் புகுந்தது எ-று.

மறம் என்னும் பண்புப் பெயர் அதனையுடையார்க்கு ஆகுபெயர் ; மறக்குடி எனினுமாம். பூவொடு நீத்தத்தையுடைய வென்க; பூவொடு வழங்குகின்ற எனலுமாம். முருகன்குறிஞ்சித்தெய்வமாகலின் ஆண்டு வாழும் குறவர்க்குத் தெய்வ மென்றார். கல்-மலை. பாலை, முல்லை, குறிஞ்சி என்னும் மூன்றும் காடெனப்படுமாகலின் அவற்றில் திரிந் தென்றார். புக்கன்று-புக்கது. ஏ : அசை. (உ0)

புக்குரல் வட்டத் திண்காற் பொருவிறே வியலிற் றீர்ந்த
மைக்கருங் களிறு முக்கண் மாதவ னருள்வந் தெய்தத்
தக்கதோ ரமையஞ் சார மரகதந் தழைத்து மின்னு
நக்கபொன் முளரி பூத்த நளிர்கயந் தலைக்கண் டன்றே.*

(இ - ள்.) புக்க-புகுந்த, உரல்வட்டம்-உரல்போலும் வட்ட மாகிய, திண்கால்-வலிய கால்களையுடைய, பொருவு இல்-ஒப்பில் லாத, தே இயலில் தீர்ந்த-தெய்வத் தன்மையினின்று நீங்கிய, மைக் கருங் களிறு-மைபோலுங் கரிய யானையானது, முக்கண் மாதவன்-மூன்று கண்களை யுடைய பெரிய தவத்தினையுடைய சிவபெருமானது, அருள் வந்து எய்தத் தக்கது ஓர் அமையம் சார-திருவருள் வந்து கூடப் பெறுவதாகிய ஓர் காலம் பொருந்த, மரகதம் தழைத்து-மர கதம் போலுந் தழைத்து, மின்னு நக்க-மின்போலும் ஒளி விளங்க, பொன்முளரி பூத்த-பொற்றாமரைகள் மலர்ந்த, நளிர் கயம் தலைக்கண் டன்று-குளிர்ந்த தடாகத்தைக் கண்டது எ- று.

புக்க என்பதன் அகரந் தொக்கது ; புக்கு என வினை யெச்சமு மாம். தெய்வத்தன்மையி னீங்கியபின் கருமை யெய்திய களிறு. சிவ பிரான் பெரிய தவத்தினையுடையானென்பது,

"தாழ்சடைப் பொலிந்த வருந்தவத் தோற்கே"

என்னும் புறநானூற்றுக் கடவுள் வாழ்த்தானு மறியப்படும். மரகதம் போலும் இலை தழைத்து மலர் பூத்த எனத் தாமரையாகிய முதன்மே லேற்றியுரைக்க. நக என்பது நக்கவென விரிந்தது. தலைக்கண்டன்று: ஒரு சொல்; அவ்விடத்துக் கண்டது எனலுமாம். கயந்தலை கண் டன்று என இயல்பாயின் கயந்தலை என்பதற்குக் கயத்தை யென் றுரைக்க. ஏ : அசை. (உக)

கண்டபோ தறிவு தோன்றக் கயந்தலைக் குடைந்த†போது
பண்டைய வடிவந் தோன்றப் பரஞ்சுட ரருட்கண் டோன்றக்
கொண்டதோர் பரமா னந்தக் குறியெதிர் தோன்றக் கும்பிட்
டண்டர்நா யகனைப் பூசை செய்வதற் கன்பு தோன்ற.

(இ - ள்.) கண்டபோது-(அவ்வாறு) கண்டபோது, அறிவு தோன்ற-முன் அறிவு உண்டாகவும், கயந்தலைக் குடைந்தபோது-வாவியில் நீராடியவுடன், பண்டையவடிவுதோன்ற-முன்னையவடிவந் தோன்றவும், பரஞ்சுடர் அருட் கண் தோன்ற-பின் பரஞ்சோதியின் அருட்பார்வை தோன்றுதலால், பரம ஆனந்தம் கொண்டது ஓர் குறி-

(பா - ம்) * தலைகண் டன்றே. † கயந்தலை குடைந்த.

மேலான ஆனந்தமே வடிவமாகக் கொண்டதாகிய ஒப்பற்ற சிவலிங்கமானது, எதிர் தோன்ற-எதிரே தோன்றாநிற்க, கும்பிட்டு-வணங்கி, அண்டர் நாயகனைப் பூசை செய்வதற்கு அன்பு தோன்ற-தேவர்கட்கு நாயகனாகிய அச் சொக்கலிங்கப் பெருமானைப் பூசிப்பதற்கு அன்பு உண்டாக எ-று.

காட்சி அறிவுக்கும், அறிவு குடைதற்கும், குடைதல் வடிவந் தோன்றலுக்கும், அருட்கண் தோன்றல் குறியெதிர் தோன்றுதலுக்கும் காரணங்களாம். அச்சிவலிங்கத்தில் எழுந்தருளியிருக்கின்ற நாயகனை எனலுமாம். அன்பு தன் மனத்திற் றோன்ற வென்க. (உஉ)

தூம்புடைக் கையான் மோண்டு மஞ்சனத் தூநீ ராட்டித்
தேம்புடை யொழுகப் பள்ளித் தாமமுந் தெரிந்து சாத்திப்
பாம்புடைத் தாய வேணிப் பரனையர்ச் சிக்க வுள்ளத்
தாம்புடை யறிந்த வெந்தை யானையை நோக்கிக் கூறும்.

(இ - ள்.) தூம்பு உடை கையில் மொண்டு-தொளையையுடைய துதிக்கையினால் முகந்து, மஞ்சனத் தூநீர் ஆட்டி-திருமஞ்சனமாகிய தூயநீரால் ஆட்டி, தேம்புடை ஒழுக-தேன் புறத்தில் ஒழுக, பள்ளித் தாமமும் தெரிந்து சாத்தி-திருப்பள்ளித் தாமத்தையும் ஆராய்ந்து சாத்தி, பாம்பு உடைத்து ஆய வேணிப் பரனை-பாம்பினை அணியாக உடையதாகிய சடையினையுடைய இறைவனை, அர்ச்சிக்க-வழிபட, உள்ளத்து ஆம்புடை அறிந்த-உள்ளத்தின்கண் எழுந்த (அன்பின்) திரட்சியை உணர்ந்த, எந்தை-எம் தந்தையாகிய சோம சுந்தரக் கடவுள், ஆனையை நோக்கிக் கூறும்-யானையைப் பார்த்து அருளிச் செய்வான் எ-று.

மொண்டு: முகந்து என்பதன் மரூஉ. தேன் தேமெனத் திரிந்தது. தெரிந்து-குற்றமற ஆராய்ந்து. புடை-பக்கம்; பக்கம்-அன்பு; எனக் கொள்ளலுமாம். (உங)

வந்ததை யெவனீ வேண்டும் வரமேவ னுரைத்தி யென்னச்
சிந்தையி லன்பு கூர்ந்த தெய்வத வேழந் தாழ்ந்து
முந்தையில் விளைவும் வந்த முறைமையு முறையாற் கூறி
எந்தையை யடையப் பெற்றேற் கினியொரு குறையுண் டாமோ.

(இ - ள்.) நீ வந்தது எவன்-நீ வந்த காரணம் என்னை, வேண்டும் வரம் எவன்-நீ விரும்புகின்ற வரம் யாது, உரைத்தி என்ன-கூறுவாயென்ன, சிந்தையில் அன்பு கூர்ந்த-உள்ளத்தில் அன்பு மிகுந்த, தெய்வத வேழம்-தெய்வத் தன்மை பொருந்திய வெள்ளை யானை, தாழ்ந்து-வணங்கி, முந்தையில் விளைவும்-முற்பொழுதில்நிகழ்ந்ததனையும், வந்த முறைமையும்-வந்த தன்மையையும், முறையால் கூறி-முறைப்படச் சொல்லி, எந்தையை அடையப் பெற்றேற்கு-எம் தந்தையாகிய நின்னை அடையப்பெற்ற எனக்கு, இனி ஒரு குறை உண்டாமோ-மேல் ஒரு குறை உண்டாகுமோ (ஆகாது) எ-று.

வந்தது-வந்த காரணம்; ஐ: சாரியை; திரி சொல்லுமாம். எவன். வினைப்பெயர். முந்தையில்: காலம் இடமாயிற்று. ஓகாரம்: எதிர்மறை. (உச)

என்பதா மாரம்* பூண்ட வெந்தையிக் கரிக ளேட்டோ
டோன்பதா யடிய னேனு முன்னடி பிரியா துன்றன்
முன்பதா யிவ்வி மான முதுகுறச் சுமப்ப லென்றோர்
அன்பதா யொன்றென் னுள்ளத் தடுத்தலா லஃதே வேண்டும்.

(இ - ள்.) என்பு ஆம் ஆரம் பூண்ட எந்தை-என்பாகிய அணியைப் பூண்ட என் தந்தையே, இக்கரிகள் எட்டோடு - (விமானத்தைத் தாங்கும்) இவ் யானைகள் எட்டினோடு, அடியனேனும் ஒன்பது ஆய்-அடியேனும் ஒன்பதாவது யானையாகி, உன் அடி பிரியாது-உனது திருவடியை நீங்காது, உன்றன் முன்பு ஆய்-நினது திருமுன்பாகி, இவ் விமானம்-இந்த விமானத்தை, முதுகு உற-முதுகிற் பொருந்த, சுமப்பல் என்று-சுமப்பேன் என்று, ஓர் அன்பு ஒன்று ஆய்-ஒப்பற்ற அன்பொன்றுண்டாகி, என் உள்ளத்து அடுத்தலால்-எனது நெஞ்சின் கண் பொருந்துதலால், அஃதே வேண்டும்-அங்ஙனம் சுமத்தலாகிய ஒன்றுமே எனக்கு வேண்டும் ; (என்று) எ - று.

என்பது முன்பது அன்பது என்பவற்றில் அது: பகுதிப் பொருள் விகுதிகள். என்பரா வாரம் பூண்ட என்பது பாடமாயின் என்பையும் பாம்பையும் ஆரமாகப் பூண்ட வென்க. ஒன்பதாய்-ஒன்பதாவதாய். என் உள்ளத்து அன்பு ஒன்று ஆய் அடுத்தலால் என இயைக்க. அன்பு-விருப்பம். என்று என ஒரு சொல் வருவிக்க. (உடு)

இடையறு வன்பின் வேழ மிங்ஙனங் கூற விண்ணா
டுடையவ னம்பான் மெய்யன் புடையவ னவனைத் தாங்கி
அடைவதே நமக்கு வேண்டு மகமகிழ் வென்னாப் பின்னும்
விடையவன் வரங்க ணல்கி விடைகொடுத் தருளி னானே.

(இ - ள்.) இடையறு அன்பின் வேழம்-நீங்காத அன்பினை யுடைய அவ்வியானையானது, இங்ஙனம் கூற-இவ்வாறு வேண்ட, விண் நாடு உடையவன்-தேவ உலகத்தை உடையவனாகிய இந்திரன், நம்பால் மெய் அன்பு உடையவன் -நம்மிடம் உண்மையன்புடையவன் (ஆதலால்), அவனைத் தாங்கி அடைவதே-அவனைச் சுமந்து செல்வதே, நமக்கு வேண்டும் அகம் மகிழ்வு என்னா-நமக்கு வேண்டிய உள்ளக் களிப்பு என்று கூறி, விடையவன் பின்னும் வரங்கள் நல்கி-இடபவாகனத்தையுடைய இறைவன்பின்னரும்வேண்டியவரங்களைக்கொடுத்து, விடை கொடுத்தருளினான்-விடைகொடுத்தனுப்பினான் எ - று.

அன்பினாற் கூற என இயைத்தலுமாம். நாம் விரும்பும் அகமகிழ்ச் சிக் குரியதென்க. (உசு)

[எழுசீரடியாசிரிய விருத்தம்]

விடைகொடு வணங்கி யேகும்வெள் ளானை
மேற்றிசை யடைந்துதன் பெயரால்
தடமுமற் றதன்பா லரனையுங் கணேசன்
றன்னையுங் கண்டருச் சனைசெய்

(பா - ம்.) என்பராவாரம்.

திடையரு வன்புந் தானுமங் கிருக்கு
மெல்லையிச் செய்திகேட் டருள்கூர்
கடவுளர் பெருமா னுழையரை விளித்தெங்
களிற்றினைக் கோணர்கென விடுத்தான்.

(இ - ள்.) விடைகொடு வணங்கி ஏகும் வெள்ளானை-விடை பெற்று வணங்கிச் செல்லும் வெள்ளையானையானது, மேல் திசை அடைந்து - மேற்குத் திக்கினை யடைந்து, தன் பெயரால்-தனது பெயரால், தடமும்-ஓர் பொய்கையினையும், அதன் பால் அரனையும் கணேசன் தன்னையும் கண்டு-அப்பொய்கையில் சிவபிரானையும் மூத்த பிள்ளையாரையும் பிரதிட்டை செய்து, அருச்சனை செய்து-அருச்சித்து, இடையரு அன்பும் தானும் அங்கு இருக்கும் எல்லை-நீங்காத அன்புந் தானுமாக அங்கிருக்கும் பொழுதில், இச்செய்தி கேட்டு-இச் செய்தியைக் கேள்வியுற்று, அருள்கூர் கடவுளர் பெருமான்-கருணைமிக்க தேவேந்திரன், உழையரை விளித்து-ஏவலாளரை அழைத்து, எம் களிற்றினைக் கோணர்க என விடுத்தான்-எமது யானையைக் கொண்டு வாருமென அனுப்பினான் எ - று.

தடத்தையும் என உருபு விரிக்க. அன்பு ஓர் வடிவு கொண்டாற் போல வென்பார் 'அன்புந்தானும்' என்றார்; இங்ஙனம் விசேடணம் விசேடியத்துடன் சேர்த்தெண்ணப் படுதலை,

"சிந்தையிடை யருவன்புந் திருமேனி தனிலசைவும்
கந்தைமிகை யாங்கருத்துங் கையுழவா ரப்படையும்
வந்திழிகண் ணீர்மழையும் வடிவிற்பொலி திருநீறும்
அந்தமிலாத் திருவேடத் தரசுமெதிர் வந்தணைய"

என்னுந்திருத்தொண்டர்புராணச்செய்யுளானுமறிக. கோணர்கென: அகரம் தொகுத்தல். (உஎ)

வல்லைவந் தழைத்தார் தம்மைமுன் போக்கி
வருவலென் றெழுந்துகீழ்த் திசையோர்
எல்லைவந் தோரூர் தன்பெய ராற்கண்*
டிந்திரேச் சரனெனா† விறைவன்
றேல்லைவண் பெயரா லொன்றுகண் டரனைத்
தூயபூ சனைசெய்தங் கிருப்பக்
சல்லைவன் சிறகு தடிந்தவ னின்னுங்
களிறுவந் திலதெனப் பின்னும்.

(இ - ள்.) வல்லை வந்து அழைத்தார் தம்மை-விரைந்து வந்து அழைத்தவர்களை, வருவல் என்று-வருவேன் என்று கூறி, முன் போக்கி-முன்னே போகச் செய்து, எழுந்து கீழ்த்திசை ஓர் எல்லை வந்து-அவணின்றும் எழுந்து கிழக்குத் திக்கில் ஓர் இடத்தை எய்தி,

(பா-ம்.) *தனது பேராற்கண்டு. †இந்திரேச்சரமென; சுரமென.

ஓர் ஊர் தன்பெயரால் கண்டு-ஒரு ஊர் தனது பெயரால் அமைத்து, இறைவன் தொல்லை வண்பெயரால் - தன் தலைவனது பழமையான அழகிய பெயரால், இந்திரேச்சுரன் என ஒன்று கண்டு - இந்திரேச்சுரன் என்று ஓர் சிவலிங்க மமைத்து, அரனைத் தூய பூசனைசெய்து அங்கு இருப்ப - அவ்விறைவனைத் தூய்மையான பூசனை செய்து கொண்டு அங்கேயே இருக்க, கல்லைவன் சிறகு தடிந்தவன்-மலைகளைச் சிறகின் கண் வெட்டியவனாகிய இந்திரன், இன்னும் களிறு வந்திலது எனப் பின்னும்-இன்னமும் யானை வரவில்லை என்று மீளவும் எ-று.

வருவலென்று முன்போக்கி என மாற்றுக. மலையின் சிறகைத் தடிந்தவன் என்பது கருத்து; சிறகு தடிந்தவன் என்பதனை ஒரு சொல்லாக்கி இரண்டனுருபிற்கு முடிபாக்கலுமாம். (உஅ)

மனத்தினுங் கடிய தூதரை விடுப்ப
வானடைந் திறைவனை வணங்கிப்
புனத்தினுங் கடிய கல்லினும் பன்னாட்
புன்கணோ யுறவரு சாபங்
கனத்தினுங் கரிய கண்டனைக் கண்டு
களைந்ததுங் கிளந்துதிக் கயத்தின்
இனத்தினுங் கழிந்த தெய்வத வேழ
மினிதுவீற் றிருந்தது மாதோ.

(இ - ள்.) மனத்தினும் கடிய தூதரை விடுப்ப-மனத்தினைவிட விரைந்த செலவினையுடைய தூதர்களை அனுப்ப (அவர்களோடும்), வான் அடைந்து இறைவனை வணங்கி-விண்ணுலகை எய்தி இந்திரனை வணங்கி, புனத்தினும் கடிய கல்லினும் - காட்டிலும் வலிய மலைகளிலும், பல்நாள் - பலநாட்கள் வரை, புன்கண் நோய் உறவரு சாபம் - துன்ப நோயானது மிக வந்த சாபத்தினை (நுகர்ந்ததும்), கனத்தினும் கரிய கண்டனை - முகிலினுங் கரிய மிடற்றினையுடைய சோமசுந்தரக் கடவுளை, கண்டு - தரிசித்து, களைந்ததும்-(அச்சாபத்தைப்) போக்கியதும், கிளந்து-கூறி, திக்கயத்தின் இனத்தினும்-எண்டிசை யானைகளாகிய இனத்தினும், கழிந்த தெய்வத வேழம்-மிக்க தெய்வத்தன்மை பொருந்திய வெள்ளை யானையானது, இனிது வீற்றிருந்தது-இனிதாக வீற்றிருந்தது எ - று.

தூதர் வந்து அழைக்க அவர்களோடும் என்பதனைச் சுருங்கச் சொல்லல் என்னும் அழகுபெறத் தொகுத்துக் கூறினர். புன்கணாகிய நோய் என்க. களைந்ததும் என்னும் எச்சவும்மையால் நுகர்ந்ததும் என்பது வருவிக்கப்பட்டது. இனி, சாபத்தைக் களைந்ததும் பிறவும் என்னலுமாம். இனத்தில் பிறவற்றினுமென்க. கழிந்த-மிக்க. மாது ஓ: அசை. (உகூ)

குடவயி னயிரா வதப்பெருந் தீர்த்தங்
குடைந்தயி ராவத கணேசக்
கடவுளைத் தொழுதை ராவதேச் சுரத்துக்
கடவுளைப் பணிந்தவர் சாபத்

தொடர்பினும் பாவத் தொடர்பினும் கழிவர்
சுராதிபன் களிறுசென் னெறிபோய்
இடர்கெட வையை படிந்துதென் கரையி
லிந்திரேச் சுரனடி பணிவார்.

(இ - ள்.) குடவயின் - மேற்குத் திசையிலுள்ள, அயிராவதப் பெருந் தீர்த்தம் குடைந்து - பெருமை பொருந்திய அயிராவத தீர்த்தத்தில் நீராடி, அயிராவத கணேசக் கடவுளைத் தொழுது - அயிராவத விநாயகக் கடவுளை வணங்கி, அயிராவ தேச்சுரத்துக் கடவுளைப் பணிந்தவர்-அயிராவதேச்சுரப் பெருமானைத் தொழுதவர்கள், சாபத் தொடர்பினும்-சாபத் தொடர்ச்சியினின்றும், பாவத் தொடர்பினும்-தீவினைத் தொடர்ச்சியி னின்றும், கழிவர் - நீங்குவர்; சுராதிபன் களிறு-தேவேந்திரனது வெள்ளையானையானது, செல் நெறிபோய் - சென்ற வழியிலே சென்று, இடர்கெட வையை படிந்து - துன்பம் ஒழிய வையையாற்றில் நீராடி, தென்கரையில் இந்திரேச்சுரன் அடி பணிவார்-அதன் தென்கரையி லெழுந்தருளி யிருக்கும் இந்திரேச்சுரனுடைய திருவடிகளை வணங்குபவர்கள் எ - று.

பணிவார் என்பது வரும்பாட்டுட னியையும். (௩0)

[அறுசீரடியாசிரிய விருத்தம்]

இம்மையி லறமுன் மூன்று லெய்திய பயனை யெய்தி
அம்மையின் மகவா னீரே ழரும்பத மளவும் வானில்
வெம்மையில் போக மூழ்கி வெறுப்புவந் தடைய வுள்ளச்
செம்மையில் விளைபே ரின்பச் சிவகதிச் செல்வ ராவார்.

(இ - ள்.) இம்மையில் - இப்பிறவியில், அறம் முன் மூன்றால் எய்திய பயனை எய்தி-அற முதலிய மூன்றானும் வரும்பயனை நுகர்ந்து, அம்மையில்-மறுமையில், ஈர் ஏழ் மகவான் அரும்பதம் அளவும் - பதினான்கு இந்திரர்களின் அரிய காலம் வரையும், வெம்மை இல் போகம் மூழ்கி-வெப்பமில்லாத (குளிர்ந்த) போகத்தில் திளைத்து, வெறுப்பு வந்து அடைய - (பின் அதில்) உவர்ப்புத் தோன்ற, உள்ளச்செம்மையில் விளை - மனத்தூய்மையில் விளைகின்ற, பேர் இன்பச் சிவகதிச் செல்வர் ஆவார் - பேரின்பத்தை யளிக்கும் பரமுத்தியாகிய செல்வத்தையுடையவராவார் எ - று.

மூன்று-அறம் பொருள் இன்பம் என்பன. பதினான்கு இந்திரப் பட்டங்காறும் இம்மை மறுமை யின்பங்களில் உவர்ப்புண்டாக. உள்ளச் செம்மை-இருவினையொப்பு முதலியன. (௩க)

ஆகச் செய்யுள்—சஎ0.

---

## ௩. திருநகரங்கண்ட படலம்

[கலிநிலைத்துறை]

தான வாறிழி புகர்முகத் தடுகரி சாபம்
போன வாறுரை செய்துமேற் புதுமதி முடிமேல்
வான வாறினன் கடம்பமா வனமுது நகரம்
ஆன வாறது தனைச்சிறி தறிந்தவா றறைவாம்.

(இ - ள்.) தான ஆறு இழி - மதமாகிய ஆறு ஒழுகுகின்ற, புகர் முகத்து அடுகரி - புள்ளிகளையுடைய முகத்தினையுடைய (பகைவர்களைக்) கொல்லும் வெள்ளையானையினது, சாபம் போனவாறு உரை செய்தும்-சாபம் நீங்கிய தன்மையைக் கூறினோம்; மேல் - இனி, புது மதி முடிமேல்-பிறை மதியை அணிந்த திருமுடியின்கண், வான ஆறினன் - கங்கையாற்றினையுடைய இறைவனது, கடம்ப மா வனம் - பெரிய கடம்பவன மானது, முது நகரம் ஆனவா றதுதனை - மிக்க சிறப்பினையுடைய நகரமான தன்மையை, அறிந்தவாறு சிறிது அறைவாம்-தெரிந்தபடி சிறிது கூறுவாம் எ - று.

உரைசெய்தும்-உரைத்தாம். பிறை புதுவதாகத் தோன்றுதலின் அதனைப் புதுமதி யென்றார். ஆற்றினன் எனற்பாலது தொக்கது. முதுமை - சிறப்பு மிகுதியை யுணர்த்தும். அது: பகுதிப் பொருள் விகுதி. (௧)

இன்ன ரம்புள ரேழிசை யெழான்மிடற் றளிகள்
கின்ன ரம்பயில் கடம்பமா வனத்தினின் கீழ்சார்த்
தென்னர் சேகர னெனுங்குல சேகர னுலக
மன்னர் சேகர னரசுசெய் திருப்பது மணவூர்.

(இ - ள்.) இன் நரம்பு உளர் - இனிய நரம்புகளைத் தடவுதலினுண்டாகின்ற, ஏழ் இசை-ஏழிசைபோலும், மிடற்று எழால் அளிகள் - கண்டத்தினின்று முண்டாகும் ஓசையினையுடைய வண்டுகள், கின்னரம் பயில்-இசைபாடுகின்ற, மா கடம்ப வனத்தினின் கீழ்சார்-பெரிய கடம்பவனத்தின் கீழ்ப்பக்கத்தில், உலக மன்னர் சேகரன் - உலகின்கண் உள்ள மன்னர்களுக்கு முடிபோல்பவனும், தென்னர் சேகரன் - பாண்டிய மரபிற்கு மகுடம் என்று சொல்லப்படுபவனுமாகிய, குலசேகரன் அரசுசெய்து இருப்பது மணவூர்-குலசேகரபாண்டியன் ஆட்சி புரிந்திருப்பதற் கிடமாயுள்ளது மணவூராகும் எ - று.

எழால்-மிடற்றெழு மொலி; யாழெனக்கொண்டு, எழால் நரம்புளர் என இயைத்தலு மொன்று. கின்னரம்-யாழும், இசைபாடும் ஓர் பறவையும்;

"யாழின் பெயருநீர்ப் பறவையுங் கின்னரம்"

என்பது பிங்கலம்; இசைக்கு ஆகுபெயர். இன்னுருபிற்கு இன் சாரியை சிறுபான்மை வருமெனக் கொள்க. இது மணவூர் எனப் பழைய திருவிளையாடலிலும், மணலூர் புரம் என வடமொழி வியாச பாரதத்தும் கூறப்பட்டுளது. (௨)

குலவு மப்பெரும் பதியிளங் கோக்களி லொருவன்
நிலவு மாநிதி போலருச் சனைமுத னியதி
பலவு மாஞ்சிவ தருமமுந் தேடுவான் பரன்பாற்
றலைமை சான்றமெய் யன்பினன் றனஞ்சய னென்பான்.

(இ-ள்.) குலவும்-விளங்காநின்ற, அப் பெரும்பதி இளங்கோக்களில் ஒருவன் - அந்தப் பெரிய நகரத்திலுள்ள வணிகருள் ஒருவன், நிலவு மா நிதிபோல் - விளங்குகின்ற பெரிய பொருளை யீட்டுவது போலவே, அருச்சனைமுதல் நியதி பலவும் ஆம் - அருச்சனை முதலிய கடமைகள் பலவுமாகிய, சிவதருமமும் தேடுவான் - சிவ புண்ணியங்களையும் ஈட்டுவான்: பரன்பால் - இறைவனிடத்து, தலைமைசான்ற மெய் அன்பினன்-தலைமைபொருந்திய உண்மை யன்பை உடையவன்; தனஞ்சயன் என்பான் - தனஞ்சயன் என்று சொல்லப்படுவான் எ-று.

இளங்கோக்கள்-வைசியர் பொதுப்பெயர். ஒருவன்: எழுவாய். தேடுவான் முதலியன பயனிலைகள்; உளன் என வருவித்து முடித்தலுமாம். (௩)

செல்வ மாநக ரிருந்துமேற் றிசைப்புலஞ் சென்று
மல்லல் வாணிகஞ் செய்துதன் வளம்பதி மீள்வான்
தொல்லை யேழ்பவக் கடற்கரை தோற்றுவித் தடியார்
அல்ல றீர்ப்பவன் கடம்பமா வனம்புகு மளவில்.

(இ-ள்.) செல்வம் மாநகர் இருந்து-செல்வம் நிறைந்த பெரிய (தன்) நகரத்தினின்றும், மேல்திசைப் புலம் சென்று - மேற்றிசை யிடங்களிற் சென்று, மல்லல் வாணிகம் செய்து-செல்வமிகும் வாணிபம் புரிந்து, தன்வளம் பதி மீள்வான் - தனது வளப்பமிக்க நகரத்திற்கு மீண்டு வருகின்றவன், தொல்லை ஏழ்பவக் கடல்கரை தோற்றுவித்து-தொன்றுதொட்டு வரும் ஏழு பிறப்பாகிய கடலின் கரையைத் தோன்றச் செய்து, அடியார் அல்லல் தீர்ப்பவன்-அடியார்களின் பிறவித் துன்பத்தைப் போக்குவோனாகிய சோமசுந்தரக் கடவுள் எழுந்தருளிய, மா கடம்பவனம் புகும் அளவில் - பெரிய கடம்பவனத்திற் புகுகின்ற பொழுதில் எ-று.

மல்லல் வாணிகமாவது, 'கொள்வதூஉ மிகைகொளாதுகொடுப்பதூஉங் குறைபடாது தமவும் பிறவு மொப்ப நாடிச்' செய்தலால் ஊதியம் மிகும் வாணிகமாம். ஏழென்பதனைக் கடற்குங் கூட்டுக. ஏழ் பிறப்பும் ஏழ்கடலும் முன் உரைக்கப்பட்டன. கரையென்றது முத்தியை: ஏகதேச வுருவகம். (௪)

இரவி கண்மறைந் தேழ்பரி யிரதமுந் தானும்
உரவு நீர்க்கருங் கடலில்வீழ்ந் தொளித்தனனாக
இரவு நீண்மயங்* கிருள்வயிற் றமியனாய் மேலியும்
அரவு நீர்ச்சடை யண்ணலுக் கன்பினோ னங்கண்.

(பா-ம்.) * விரவுநீல் மயங்கு.

(இ - ள்) இரவி-சூரியன், கண் மறைந்து-கண்ணுக்குத் தோன்ருமல், ஏழ் பரி இரதமும் தானும்-ஏழு குதிரைகள் பூட்டிய தேரும் தானும், உரவு நீர்க்கருங்கடலில்- மிக்க நீரினையுடைய கரிய கடலின் கண், வீழ்ந்து ஒளித்தனன் ஆக-விழுந்து மறைந்தானாக, இரவு-இரவினது, நீள்-நீண்ட, மயங்கு-மயங்குதற்குக் காரணமாயுள்ள, இருள் வயின்-இருளினிடத்து, தமியனுய் மெலியும்-ஒருவனுய் வருந்துகின்ற, அரவு நீர்ச்சடை அண்ணலுக்கு அன்பினேன்-பாம்பையும் கங்கையையு முடைய சடையினையுடைய இறைவனுக்கு அன்புடையவனுகிய வணிகன், அங்கண்-அவ்விடத்தில் எ - று.

கண் மறைந்து: ஒரு சொல்லுமாம். இரதமும் தானுமெனத் திணை விரவிச் சிறப்பினல் ஒளித்தனனென உயர்திணை முடிபேற்றது;

"தானுந் தேரும் பாகனும் வந்தென் னலனுண்டான்"

என்புழிப்போல: திணைவழு வமைதி. விரவுநீல் என்பது பாடமாயின் விரவிய கருமையையுடைய என்றுரைக்க. மெலியும் அன்பினேன் எனக் கூட்டுக. (௫)

வாங்கு நான்மரூப் பேந்திய மதமலை யெருத்தந்
தாங்கி யாயிரங் கரங்களாற் றடவியெண் டிசையுந்
தூங்கு காரிரு ரேத்துசெஞ் சுடரெனச் சூழ்போய்
வீங்கு காரிரு ளோதுக்கிய விமானநேர் கண்டான்.

(இ - ள்.) வாங்கு நால் மருப்பு ஏந்திய-வளைந்த நான்கு கொம்புகளையுடைய, மதமலை எருத்தம் தாங்கி-எட்டு யானைகளின் பிடர்களால் தாங்கப்பெற்று, ஆயிரம் கரங்களால் தடவி-ஆயிரங் கிரணங்களாலும் துருவி, எண் திசையும் தூங்கு-எட்டுத் திக்குகளிலும் தங்கியிராநின்ற, கார் இருள் துரத்து செஞ்சுடர் என-கரிய இருளை ஓட்டுகின்ற செஞ்ஞாயிறு போல, சூழ் போய்-திசைதோறும் சுற்றிலும் சென்று, வீங்கு கார் இருள்-நிறைந்த கரிய இருளை, ஒதுக்கிய-போக்கிய, விமானம் நேர் கண்டான்-விமானத்தை நேரிற் பார்த்தான் எ - று.

தாங்கி: செயப்பாட்டு வினை. தாங்கி ஒதுக்கிய விமானம் எனவியையும். கரம்-கிரணம், கை. தூங்கு-செறிந்த வென்னலுமாம். (௬)

அடுத்த ணைந்தன னவிர்சுடர் விமானமீ தமர்ந்த
கடுத்த தும்பிய கண்டனைக் கண்டுதாழ்ந் துவகை
மடுத்த நெஞ்சின னங்ஙனம் வைகிருள் கழிப்பான்.
எடுத்த சிந்தையி னிருந்தன னிருக்குமவ் விருள்வாய்.

(இ - ள்.) அடுத்து அணைந்தனன்-பக்கத்தில் நெருங்கி, அவிர் சுடர் விமானம் மீது அமர்ந்த-விளங்குகின்ற ஒளியினையுடைய விமானத்தின்மேல் எழுந்தருளிய, கடு ததும்பிய கண்டனைக் கண்டு-நஞ்சக் கறை மிக்கு விளங்கும் திருமிடற்றினையுடைய இறைவனைத் தரிசித்து, தாழ்ந்து - வணங்கி, உவகை மடுத்த நெஞ்சினன்-களிப்பு நிறைந்த உள்ளத்தை யுடையவனாய், வைகு இருள்-தங்கிய இருளை,

அங்ஙனம் கழிப்பான் எடுத்த சிந்தையின்—அவ்வகையே (தரிசித்துக்) கழிக்கு மாறு கிளர்ந்த உள்ளத்தோடு, இருந்தனன்—இருந்தான், இருக்கும் அ இருள்வாய் (அங்ஙனம்) இருக்கப்பெற்ற அந்த இருட்பொழுதில் எ-று.

சிந்தையின்-சிந்தையோடு. (எ)

சோம வாரமன் ருதலாற் சுரர்களங் கெய்தி
வாம மேகலை மலைமக டலைமகன் மலர்ந்த
காமர் சேவடி பணிந்தவன் கங்குல்போற் கருதி
யாம நான்கினு மருச்சனை யின்புறப் புரிவார்.

(இ - ள்.) அன்று சோமவாரம் ஆதலால்-அந்த நாள் திங்கட் கிழமை ஆகலின்; அங்கு சுரர்கள் எய்தி-அங்கே தேவர்கள் வந்து, வாமம் மேகலை மலைமகள் தலைமகன்-ஒளியினையுடைய மேகலையை அணிந்த பார்ப்பதியின் தலைவனாகிய சிவபெருமானுடைய, மலர்ந்த காமர் சேவடி பணிந்து-மலர்ந்த அழகியசிவந்ததிருவடிகளை வணங்கி, அவன் கங்குல்போல் கருதி-அவன் இரவாகிய சிவராத்திரிபோல எண்ணி, யாமம் நான்கினும்-நான்கு யாமங்களிலும், இன்பு உற அருச்சனை புரிவார்-இன்பம் பொருந்த அருச்சிப்பாராயினர் எ - று.

வாமம்-அழகுமாம்; 'வாமமேகலை மங்கையர்' என்றார் பிறரும். தலைமகன்-மணாளன். காமர்-விருப்பம் பொருந்திய வென்றுமாம்; இதற்குக் காமம் மருவென்பன காமர் எனத் தொக்கு ஒரு சொல்லாயின வெனக் கொள்க. அவன் கங்குல்-சிவராத்திரி. (அ)

அண்டர் வந்தது மருச்சனை புரிவது மனைத்துந்
தொண்ட ரன்பினுக் கெளியவன் சுரர்தொழக் கறுத்த
கண்ட னின்னருட் கண்ணினாற் கண்டன னுதலிற்
புண்ட ரம்பயி லன்புடைப் புண்ணிய வணிகன்.

(இ - ள்.) அண்டர் வந்ததும் - அமரர்கள் வந்ததும், அருச்சனை புரிவதும் அனைத்தும்-அருச்சனை செய்வதுமாகிய எல்லாச் செயல் களையும், தொண்டர் அன்பினுக்கு எளியவன் - அடியார்களின் அன்புக்கு எளிவருபவனும், சுரர் தொழக் கறுத்த கண்டன்-தேவர்கள் வணங்கி முறையிடக் கறுத்தருளிய திருமிடற்றையுடையவனுமாகிய இறைவனுடைய, இன் அருள் கண்ணினால்-இனிய அருட் பார்வை யால், நுதலில் புண்டரம் பயில்-நெற்றியில் மூன்று கீற்றாகத் தங்கிய திருநீற்றினையுடைய, அன்புடைப் புண்ணிய வணிகன் கண்டனன் - அன்பு நிறைந்த அறத்தினையுடைய வணிகனாகிய தனஞ்சயன் பார்த்தான் எ - று.

நஞ்சுண்ட வென்பதனைக் கறுத்தவெனக் காரியத்தாற் கூறினார். வணிகன் அனைத்தும் கண்டனன் என வினையும். அருளன்றித் தன் கண்ணினாற் காணலாகாமையின் 'அருட் கண்ணினாற் கண்டனன்' என்றார். (கூ)

நான மேன்பனி நறும்புன ஞயகன் பூசைக்
கான நல்விரை வருக்கமு மமரர்கைக் கொடுத்து
ஞான வெண்மதிச் சடையவன் கோயிலின் ஞாங்கர்த்
தான மர்ந்தருச் சனைசெய்வான் றங்கணு யகனே.

(இ - ள்.) மெல் நானம்-மெல்லிய கத்தூரியையும், நறும் பனி புனல்-மணமுடைய பனிநீரையும், நாயகன் பூசைக்கு ஆன நல் விரை வருக்கமும்-இறைவன் பூசைக்குரிய நல்ல கந்தவருக்கங்களையும், அமரர் கைக் கொடுத்து-தேவர்கள் கையில் கொடுத்து, ஞானம்-ஞான வடிவாகிய, வெண்மதிச் சடையவன் கோயிலின் ஞாங்கர்-வெள்ளிய சந்திரனை யணிந்த சடையினையுடைய சோமசுந்தரக் கடவுளின் விமானத்தின் திருமுன், தான் அமர்ந்து-தானிருந்து, தங்கள் நாயகனை அருச்சனை செய்வான்-தங்கள் இறைவனை அருச்சனை புரிவிப்பானாயினன் எ - று.

நானம், புனல் என்பவற்றில் எண்ணும்மை விரிக்க. பனிநீர் பன்னீர் என இக் காலத்து வழங்கும். ஞாங்கர்-முன் செய்வித்தலைச் செய்தலாகக் கூறினார்; இங்ஙனம் வழங்குமாறுங் காண்க. அவன் குடி முழுதையும் உளப்படுத்தித் தங்கணுயக னென்றார். (கய)

வள்ள றன்னைமெய் யன்பினு லருச்சிசெய் வானோர்
உள்ள வல்வினை யீட்டமுங் கங்குலு மோதுங்கக்
கள்ள மில்லவன் யாரையுங் கண்டிலன் கண்டான்
தள்ள ருஞ்சுடர் விமானமேற் றனித்துறை தனியை.

(இ-ள்.) வள்ளல் தன்னை-சோமசுந்தரக் கடவுளை, மெய் அன்பினுல்-உண்மை யன்பினுல், அருச்சிசெய் வானோர் (ஈட்டமும்)-அருச்சித்த தேவர்களின் கூட்டமும், உள்ள வல்வினை ஈட்டமும்-தன் மனத்தைப் பற்றிய வலிய வினைக் கூட்டமும், கங்குலும் ஒதுங்க-இரவும் நீங்க, கள்ளம் இல்லவன்-வஞ்சனையில்லாதவனுகிய வணிகன், யாரையும் கண்டிலன்-ஒருவரையுங் காணுதவனுகி, தள் அரும் சுடர் விமானம் மேல்-நீங்காத ஒளியையுடைய விமானத்தின்கண், தனித்து உறைதனியைக் கண்டான்-தனித்து எழுந்தருளியிருக்கும் சொக்கலிங்கப் பெருமானையே கண்டான் எ - று.

அருச்சி, முதனிலைத் தொழிற் பெயர். ஈட்டமும்என்பது வானோர் என்பதனோடுங் கூட்டப்பட்டது; ஓர் என்பதனை அசையாக்கிச் செய்வானது வினை யீட்டமும் எனலுமாம்; அனுதியேயுள்ள வல்வினை என்றுரைத்தலுமாம். கண்டிலன்: முற்றெச்சம். (கக)

ஆழ்ந்த சிந்தைய னதிசய மடைந்துசே வடிக்கீழ்த்
தாழ்ந்தெ ழுந்திரு கைகளுந் தலைமிசைக் கூப்பிச்
சூழ்ந்து தன்பதிக் கேகுவா னெருதலை துணிந்து
வாழ்ந்த வன்பினன் விடைகோடு வழிக்கோடு வந்தான்.

(இ-ள்.) ஆழ்ந்த சிந்தையன்-(அன்பில்) அழுந்திய சிந்தையையுடைய வணிகன், அதிசயம் அடைந்து-வியப்புற்று, சேவடிக்கீழ்

தாழ்ந்தெழுந்து-சிவந்த திருவடிக்கீழ் விழுந்து வணங்கி எழுந்து, இருகைகளும் தலைமிசைக் கூப்பி-இரண்டு கைகளையும் தலையின்மேல் குவித்து, சூழ்ந்து-வலம் வந்து, தன் பதிக்கு ஏகுவான் ஒருதலை துணிந்து-தன் நகருக்குப் போக ஒருவாறு துணிந்து, வாழ்ந்த அன்பினன்-அன்பாகிய வாழ்க்கையை யுடையவன், விடை கொடு-விடை பெற்று, வழிக்கொடு வந்தான்-வழிக்கொண்டு வந்தான் எ - று.

சூழ்ந்து-ஆலோசித்து என்றுமாம். ஒருதலை துணிந்து என்றது பிரிந்து செல்லுதலருமையால். வாழ்ந்த அன்பினன்-அவனெனச் சுட்டாகக் கொள்க; விகுதி பிரித்துக் கூட்டப்பட்டது- (கஉ)

முக்க டம்படு களிற்றினன் முகிறவழ் கோயில்
புக்க டங்கலர் சிங்கமன் னனெதிர் புகல்வான்
திக்க டங்கலுங் கடந்தவெந் திகிரியாய் நெருநல்
அக்க டம்பமா வனத்திலோ ரதிசயங் கண்டேன்.

(இ - ள்.) முக்கடம்படு களிற்றினன்-மூன்று மதங்களையுடைய யானையையுடைய பாண்டி மன்னனது, முகில் தவழ் கோயில் புக்கு-மேகந் தவழுங் கோயிலை அடைந்து, அடங்கலர் சிங்கம் அன்னன் எதிர்-பகைவராகிய யானைகளுக்குச் சிங்கம்போல்பவனது எதிரே நின்று, புகல்வான்-கூறுவான், திக்கு அடங்கலும் கடந்த-எல்லாத் திசைகளையும் வென்ற, வெம் திகிரியாய்-வெவ்விய சக்கரத்தையுடையவனே, நெருநல்-நேற்று, அக் கடம்ப மா வனத்தில் ஓர் அதிசயம் கண்டேன்-அந்தப் பெரிய கடம்பவனத்தின்கண் ஓர் அதிசயத்தைப் பார்த்தேன் எ - று.

திகிரி-ஆணை; சக்கரப்படையுமாம். சுட்டு மேன்மையை உணர்த்துவது (கங)

வல்லை வாணிகஞ் செய்துநான் வருவழி மேலைக்
கல்ல டைந்தது வெங்கதிர் கங்குலும் பிறப்பும்
எல்லை காணிய கண்டன னிரவிமண் டலம்போல்
அல்ல டுஞ்சுடர் விமான்மு மதிற்சிவக் குறியும்.

(இ - ள்.) நான் வாணிகம் செய்து வல்லை வரு வழி, நான் வியாபாரம் செய்து விரைந்து வரும் பொழுது, வெங்கதிர் மேலைக்கல் அடைந்தது - வெப்பத்தையுடைய ஞாயிறு மேற்கிலுள்ள மலையை அடைந்தது; கங்குலும் பிறப்பும் எல்லை காணிய-இரவின் எல்லையையும் பிறப்பின் எல்லையையுங் காணுமாறு, இரவி மண்டலம் போல்-சூரியமண்டலம் போல, அல் அடுவிரி சுடர் விமானமும்-இருளைக் கொல்லும் ஒளியினையுடைய விமானத்தையும், அதில் சிவக்குறியும் கண்டனன் - அவ்விமானத்தின்கண் உள்ள சிவலிங்கத்தையும் பார்த்தேன் எ - று.

மேலைக்கல்-அத்தகிரி. காணிய: செய்யிய வென்னும் வினையெச்சம். கங்குல் எல்லை காணிய கண்டே னென்றது இரவு முடியுங்காறும் இருந்து கண்டே னென்றபடி. இனிப் பிறவியில்லையென்பான்

பிறப்பு எல்லை காணிய கண்டேன் என்ருன். அன் விகுதி தன்மையில் வந்தது. அடுதல் — ஈண்டு மாய்த்தல். (கச)

மாவ லம்புதார் மணிமுடிக் கடவுளர் வந்தத்
தேவ தேவனை யிரவெலா மருச்சனை செய்து
போவ தாயினர் யானுமப் பொன்னெடுங் கோயின்
மேவு மீசனை விடை கோடு மீண்டன னென்ருன்.

(இ - ள்.) மா அலம்பு தார் - வண்டுகள் ஒலிக்கும் மாலையை அணிந்த, மணிமுடிக் கடவுளர் வந்து-மணிகள் அழுத்திய முடிகளை யுடைய தேவர்கள் வந்து, அத் தேவ தேவனை - அந்தத் தேவர்களுக்குத் தேவனாகிய சோமசுந்தரக் கடவுளை, இரவு எலாம் அருச்சனை செய்து போவது ஆயினர்-இரவு முழுதும் அருச்சித்துப் போனார்கள்; யானும்-நானும், அ பொன் நெடுங்கோயில் மேவும் ஈசனை - அந்தப் பொன்னாலாகிய நீண்ட விமானத்தில் எழுந்தருளிய இறைவனிடத்து, விடைகொடு மீண்டனன் என்ருன்-விடை பெற்றுக்கொண்டு வந்தேன் என்று கூறினான் எ - று.

மா என்னும் பலபொரு ளொருசொல் சார்பினால் வண்டினைக் குறித்தது. தேவர் மாலையிலும் வண்டு மொய்த்தல் கூறுவார். போவது: தொழிற் பெயர். ஈசனை: வேற்றுமை மயக்கம். (கரு)

மூளு மன்பினன் மொழிந்திட முக்கணெம் பெருமான்
தாளு மஞ்சலி கரங்களுந் தலையில்வைத் துள்ளம்
நீளு மன்புமற் புதமுமே நிரம்பநீர் ஞாலம்
ஆளு மன்னவ னிருந்தனன் போயின னருக்கன்.

(இ - ள்.) மூளும் அன்பினன் மொழிந்திட-மேன் மேல் வளரும் அன்பினையுடைய தனஞ்சயன் கூற, நீர் ஞாலம் ஆளும் மன்னவன் — கடல் சூழ்ந்த உலகினை ஆளுகின்ற குலசேகர பாண்டியன், முக்கண் எம்பெருமான் தாளும் - மூன்று கண்களையுடைய எம் பெருமானாகிய சோம சுந்தரக் கடவுளின் திருவடிகளையும், அஞ்சலி கரங்களும் — குவித்த கைகளையும், தலையில் வைத்து - சென்னியில் வைத்து, உள்ளம்-உள்ளத்தில், நீளும்-ஓங்குகின்ற, அன்பும் அற்புதமுமே நிரம்ப— அன்பும் அதிசயமுமே நிறைய, இருந்தனன் - இருந்தான்; அருக்கன் போயினன்-சூரியன் மறைந்தான் எ - று.

தாளினைத் தலை வைத்தல் பாவனையால். அஞ்சலித்த கரமென விரியும்: வினைத்தொகை. பிறிதோ ரெண்ணுமின்றி யென்பார், அன்பு மற்புதமுமே நிரம்ப வென்ருர். நீர்: கடலுக்கு ஆகுபெயர். (கசு)

ஈட்டு வார்வினை யொத்தபோ திருண்மலங் கருக
வாட்டு வாரவர் சென்னிமேன் மலரடிக் கமலஞ்
சூட்டு வார்மறை கடந்ததந் தொல்லுரு விளங்கக்
காட்டு வாரொரு சித்தராய்த் தோன்றினர் கனவில்.

(இ - ள்.) ஈட்டுவார் வினை ஒத்தபோது-வினைகளை ஈட்டுகின்ற வர்களின் வினை ஒப்புவந்தபோது, இருள் மலம் கருக வாட்டுவார் - (அவர்கள்) ஆணவ மலங் கருகும்படி வாட்டி, அவர் சென்னிமேல் மலர் அடிக்கமலம் சூட்டுவார்-அவர் தலையின்மீது திருவடித்தாமரை மலரைச் சூட்டி, மறைகடந்த தம் தொல் உரு விளங்கக் காட்டுவார்-வேதங்களாலறியப்படாத தமது உண்மை வடிவை விளக்கமாகக் காட்டுகின்ற இறைவர், ஒரு சித்தராய் கனவில் தோன்றினர் - ஒரு சித்தராகி அப்பாண்டியனது கனவின்கண் தோன்றினர் எ - று.

வினைகள் உயிர்களால் ஈட்டப்படுதலின் ஈட்டுவார் என்றார்; ஈட்டப்பட்ட மிக்கவினை யென்னலுமாம். வினை யொத்தல்-நல்வினைப் பயனையும் தீவினைப் பயனையும் ஒருபெற்றியே நுகர்தல்; இன்ப துன் பங்களில் விருப்பு வெறுப்பில்லாமை. இருள் மலம் - ஆணவமலம். கருக வாட்டுதல்-வறுத்த வித்துப்போல் வலிகெடச் செய்தல். இரு வினை யொப்புவந்த காலத்தில் இறைவனே ஆசானு யெழுந்தருளிப் பாச நீக்கஞ் செய்து திருவடி சூட்டித் தமதுண்மை யுருவைக் காட்டி யருளுவரென முறையாற் கூறினர். வாட்டுவார், சூட்டுவார் என் பன எச்சங்கள். காட்டுவார்: பெயர். (௧௭)

வடிகோள் வேலினாய் கடம்பமா வனத்தினைத் திருந்தக்
கடிகோள் காடகழ்ந் தணிநகர் காண்கென வுணர்த்தி
அடிக ளேகினர் கவுரிய ராண்டகை கங்குல்
விடியும் வேலைகண் விழித்தனன் பரிதியும் விழித்தான்.

(இ - ள்.) வடிகொள் வேலினாய்-கூர்மையைக் கொண்ட வேற் படையை யுடையவனே, காடு அகழ்ந்து - காட்டினை அழித்து, மா கடம்ப வனத்தினை - பெரிய கடம்ப வனத்தை, திருந்த-திருத்தமாக, கடிகொள்-காவலைக் கொண்ட, அணிநகர் காண்க என - அழகிய நக ராகுமாறு செய்வாய் என்று, உணர்த்தி - அறிவித்து, அடிகள் ஏகி னர்-சோமசுந்தரக் கடவுள் மறைந்தார்; கவுரியர் ஆண்டகை - பாண் டியர் மரபிலுதித்த ஆண்தன்மை மிக்க குலசேகரன், கங்குல் விடியும் வேலை கண் விழித்தனன் - இரவு புலரும் வரையும் உறங்காதவனாயி னன்; பரிதியும் விழித்தான் - சூரியனும் உதயமானான் எ - று.

வடிகொள்-வடித்தலைக்கொண்ட எனலுமாம். அகழ்தல் - வேரு டன் போக்குதல். காண்கென: அகரந் தொகுத்தல். வேலையு மென் னும் உம்மை தொக்கது; விடியும் பொழுதில் துயிலொழிந்தான் என் னில் கனவும் அப்பொழுதே நிகழ்ந்த தென்க. சூரியன் உதித்தா னென்பதனை விழித்தானென்றார்; இதனைக் குணவணி யென்பர். (௧௮)

கனவிற் றீர்ந்தவ னியதியின் கடன்முடித் தமைச்சர்
சினவிற் றீர்ந்தமா தவர்க்குந்தன் கனத்திறஞ் செப்பி
நனவிற் கேட்டதுங் கனவினிற் கண்டது நயப்ப
வினவித் தேர்ந்துகொண் டெழுந்தனன் மேற்றிசைச் செல்வான்.

(இ - ள்.) கனவில் தீர்ந்தவன்-கனவினின்று நீங்கிவிழித்திருந்த பாண்டியன், நியதியின் கடன் முடித்து - செய்தற்குரிய நாட் கடமை களை முடித்து, அமைச்சர் - மந்திரிகட்கும், சினவில் தீர்ந்த மாதவர்க்-

கும் - வெகுளுதலினின்று நீங்கிய முனிவர்கட்கும், தன் கனத்திறம் செப்பி-தனது கனவின் வகையைக் கூறி,நனவில் கேட்டதும்-பகலில் வணிகன்பாற் கேட்டதையும்; கனவில் கண்டதும் - இரவில் கனவிற் கண்டதையும், நயப்ப வினவி தேர்ந்துகொண்டு - விருப்பமுற உசாவித் தெளிந்து, எழுந்தனன் மேல்திசை செல்வான்-புறப்பட்டு மேற்குத் திசைக்கண் செல்வானாயினான் எ - று.

நியதியின்-இன்: சாரியை. அமைச்சர்க்கும் என விரிக்க. சினவு-சினத்தல்: தொழிற் பெயர். பயனை வினவி யென்க. (கக)

அமைச்ச ரோடுமந் நீபமா வனம்புகுந் தம்போன்
சமைச்ச விழ்ந்தபொற் றாமரைத் தடம்படிந் தொளிவிட்
டிமைச்ச லர்ந்தபொன் விமானமீ தினிதுவீற் றிருந்தோர்
தமைச்ச ரண்பணிந் தஞ்சலி தலையின்மேன் முகிழ்த்தான்.

(இ - ள்.) அமைச்சரோடும்-மந்திரிகளோடும், அ நீபம் மா வனம் புகுந்து - பெரிய அக் கடம்பவனத்தினுள் நுழைந்து, அம் பொன் சமைச்சு - அழகிய பொன்னாலியற்றப்பட்டன போலும், அவிழ்ந்த-(மலர்கள்) மலர்ந்த, பொற்றாமரைத் தடம் படிந்து-பொற்றாமரை வாவியில் மூழ்கி, ஒளிவிட்டு-ஒளிவீசி, இமைச்சு அலர்ந்த - விளங்கிப் பரந்த, பொன் விமானமீது-பொன்னாலாகிய விமானத்தின் கண், இனிது வீற்றிருந்தோர் சரண்தமை - இனிதாக வீற்றிருக்கும் சோமசுந்தரக் கடவுளின் திருவடிகளை, பணிந்து - வணங்கி, அஞ்சலி தலையின்மேல் முகிழ்த்தான் - அஞ்சலியாகக் கைகளைத் தலையின்மீது கூப்பினான் எ - று.

சமைச்சு-சமைக்கப்பட்டாற் போலும். சமைச்சு இமைச்சு என்பவற்றில் தகரத்திற்குச் சகரம் போலி. சரண்தமை என மாற்றுக. சரண்புகுந்து பணிந்து என்னலுமாம். (உ0)

அன்பு பின்றள்ள முன்புவந் தருட்கணீர்த் தேக*
என்பு நெக்கிட வேகிவீழ்ந் திணையடிக் கமலம்
பொன் புனைந்ததார் மௌலியிற் புனைந்தெழுந் திறைவன்
முன்பு நின்றுசொற் பதங்களாற் றோத்திர மொழிவான்.

(இ - ள்.) அன்பு பின் தள்ள-அன்பானது பின் நின்று தள்ளவும், அருள் கண்-(இறைவன்) அருட்பார்வையானது, முன்பு வந்து ஈர்த்து ஏக-முன்னே வந்து இழுத்துச் செல்லவும்,என்பு நெக்கிட - எலும்புகள் கரைந்துருகுமாறு, ஏகி-சென்று, வீழ்ந்து-கீழே விழுந்து, இணை அடிக்கமலம் - இரண்டு திருவடித்தாமரைகளையும், பொன்புனைந்த தார் மௌலியில் புனைந்து-பொன்னாற் செய்த மாலையை யணிந்தமுடியின்மீது சூடி, எழுந்து இறைவன் முன்பு நின்று - எழுந்து சோமசுந்தரக் கடவுளின் திருமுன் நின்று, சொல் பதங்களால் தோத்திரம் மொழிவான்-சிறந்த மொழிகளால் துதிசெய்வானாயினான் எ - று.

அவனைவணங்குதற்கு அவனருளும், அதனாலுண்டாம் அன்பும் காரணமாதல் தோன்ற அன்பு தள்ள அருட்கண் ஈர்த்தேக என்றார்.

(பா - ம்.) * அருட்கணீர் தேங்க.

புனைந்த மௌலியென்க, புனைந்த தார் எனினுமாம். சொற்பதம்: ஒரு பொருளிரு சொல்;

"சொற்பதங் கடந்த தொல்லோன் காண்க"

என்பது திருவாசகம். (உக)

சரண மங்கையோர் பங்குறை சங்கர சரணஞ்
சரண மங்கல மாகிய தனிமுதல் சரணஞ்
சரண மந்திர வடிவமாஞ் சதாசிவ சரணஞ்
சரண மும்பர்க ணாயக பசுபதி சரணம்.

(இ - ள்.) சரணம் - வணக்கம்; மங்கை ஓர் பங்கு உறை சங்கர சரணம்-உமையம்மை ஒருபாதியி லுறையப்பெற்ற சங்கரனே வணக்கம்; சரணம்-வணக்கம்; மங்கலம் ஆகிய தனிமுதல் சரணம் - மங்கல வடிவாகிய ஒப்பற்ற முதற்பொருளே வணக்கம்; சரணம்-வணக்கம்; மந்திர வடிவம் ஆம் சதாசிவ சரணம்-மந்திர வடிவாகிய சதாசிவமூர்த்தியே வணக்கம்; உம்பர்கள் நாயக சரணம் - தேவர்கள் தலைவனே வணக்கம்; பசுபதி சரணம்-உயிர்களின் தலைவ வணக்கம் எ - று.

சரணம்-அடைக்கலம் என்றுமாம். ஈரிடத்து இரட்டித்துக் கூறினார். இறைவனுக்கு மந்திரம் வடிவமாதலை,

"சுத்தமாம் விந்துத் தன்னிற் றோன்றிய வாத லானுஞ்
சத்திதான் பிரேரித் துப்பின் றனதிட் டித்துக் கொண்டே
அத்திறற் புத்தி முத்தி யளித்தலா லரனுக் கென்றே
வைத்தவா மந்தி ரங்கள் வடிவென மறைக ளெல்லாம்"

என்னும் சிவஞானசித்தித் திருவிருத்தத்தா லறிக. (உஉ)

ஆழி ஞாலமே லாசையு மமரர்வான் பதமேல்
வீழு மாசையும் வெறுத்தவர்க் கன்றிமண் ணுண்டு
பீழை மூழ்கிவா னரகோடு பிணிபடச் சுழலும்
ஏழை யேங்களுக் காவதோ வெந்தைநின் கருணை.

(இ - ள்.) ஆழி ஞாலம் மேல் ஆசையும்-கடலாற் சூழப்பட்ட நிலவுலகின் மேலுண்டாகும் இச்சையையும், அமரர் வான் பதம்மேல் வீழும் ஆசையும் - தேவர்களின் உயர்ந்த பதவிகளின்மேல் சென்று பொருந்தும் அவாவையும், வெறுத்தவர்க்கு அன்றி - உவர்த்தவர்களுக்கு எய்துவதே அல்லாமல், மண் ஆண்டு-பூமியை ஆண்டு, பீழை மூழ்கி-துன்பத்தில் அழுந்தி, வான் நரகொடு பிணிபடச் சுழலும் - சுவர்க்கத்திலும் நரகத்திலும் கட்டுண்டு சுழலுகின்ற, ஏழை யேங்களுக்கு-அறிவிலேமாகிய எங்களுக்கும், எந்தை எம் தந்தையே, நின் கருணை ஆவதோ-நினது திருவருள் எய்தக் கடவதோ எ - று.

ஞாலமே லாசை, பதமேல் வீழு மாசை-அவற்றை ஆளவேண்டுமென்னும் ஆசை; அவற்றிலுள்ள போக விச்சையுமாம். வீழும் - விரும்புமெனினுமாம். வான் நரகொடு புவியிலுஞ் சுழலும் என வருவித் துரைத்தலுமாம்.

“நரகொடு சுவர்க்க நானிலம் புகாமற்
பரகதி பாண்டியற் கருளினை போற்றி”

என்னும் திருவாசகமும் காண்க. பட்டு என்பது படவெனத் திரிந்தது. நோயுண்டாக என்னலுமாம். (உ௩)

சூள தாமறைச் சென்னியுந் தொடத்தொட நீண்ட
நீள னீ*யுனக் கன்பில மாயினு நீயே
மூள வன்புதந் தெங்குடி முழுவதும் பணிகொண்
டாள வேகொலிக் கானகத் தமர்ந்தனை யென்னா.

(இ - ள்.) சூளது ஆம் மறைச் சென்னியும்- (தொடுவேனென்னும்) சபதத்தையுடையதாகிய வேதத்தின் அந்தமும், தொடத்தொட நீண்ட நீளன் நீ-எட்டுந்தோறும் எட்டுந்தோறும் நீண்ட நீட்சியையுடையவன் நீ; உனக்கு அன்பிலம் ஆயினும்-உனக்கு யாம் அன்பில்லேம் ஆனாலும், நீயே அன்பு மூள தந்து-நீயே அன்பு பெருகும்படி அருளி, எம் குடிமுழுவதும் பணிகொண்டு ஆளவே கொல்-எமது குடி முழுதையும் ஏவல் கொண்டு ஆளுதற்கோ, இக் கானகத்து அமர்ந்தனை என்னா-இக் காட்டின்கண் எழுந்தருளினை என்று கூறி எ - று.

சூள்-வஞ்சினம்; வேதமானது இறைவனைக் காண்டற்கு ஆராய்ச்சி செய்யுமுறையை அவனை எவ்வாற்றாலேனும் தொடுவேனென வஞ்சினங் கூறித் தேடுதல் போலுமென்றார். தொடத் தொட - தொடும்படி நெருங்குந் தோறும். நீளன் -சேய்மையன், ஆளுதற்கே அமர்ந்தனை யாவாயென்க. அவனது அருமையும், தமது எளிமையுந்தோன்ற நீளன் என்றும், அன்பிலம் என்றுங் கூறி, அரியனாகிய அவன் தம்து திறத்தும் எளியனாய் வரும் பெருங் கருணையை அமர்ந்தனை யென்பதனாற் குறிப்பித்த வாறாயிற்று. (உ௪)

சுரந்த வன்பிரு கண்வழிச் சொரிவபோற் சொரிந்து
பரந்த வாறொடு சிவானந்தப் பரவையுட் படிந்து
வரந்த வாதமெய் யன்பினால் வலங்கொடு புறம்போந்
தரந்தை தீர்ந்தவ னொரு†சிறை யமைச்சரோ டிருந்தான்.

(இ - ள்.) சுரந்த அன்பு-(அகத்தில்) ஊற்றெடுத்த அன்பானது, இரு கண்வழி சொரிவபோல் - இரண்டு கண்களின் வழியாகவும் பொழிவது போல், சொரிந்து பரந்த ஆறொடு-பொழிந்தமையாற் பரந்த ஆனந்தக் கண்ணீராகிய நதியோடு, சிவானந்தப் பரவையுள் படிந்து-சிவானந்தமாகிய கடலுள் மூழ்கி, வரம் தவாத மெய் அன்பினால்-மேன்மை குன்றாத உண்மை யன்பினால், வலங்கொடு-வலம் வந்து, அரந்தை தீர்ந்தவன்- துன்ப நீங்கியவனாகிய பாண்டியன், புறம் போந்து அமைச்சரோடு ஒரு சிறை இருந்தான்-புறத்தே வந்து மந்திரிகளோடு ஒரு பக்கத்தில் இருந்தான் எ - று.

சொரிவ: துவ்வீறு தொக்கது; தொழிற்பெயர். தீர்ந்தவன் என்று பாடமாயின் தீர்ந்து அவன் எனப் பிரிக்க. (உ௫)

---

(பா - ம்.) * நீள நீ. † அரந்தை தீர்ந்தவ னொரு.

ஆய வேலையின் மன்னவ னாணையா லமைச்சர்
மேய வேலவர் துறைதுறை மேவினர் விடுப்பப்
பாய வேலையி னார்த்தனர் வழிக்கொடு படர்ந்தார்
சேய காடெறிந் தணிநகர் செய்தொழின் மாக்கள்.

(இ - ள்.) ஆய வேலையின்-அப்போது, மன்னவன் ஆணையால்-அரசன் ஆணையினால், அமைச்சர்-மந்திரிகள், மேய ஏவலர்-அங்குள்ள ஏவலாட்களை, துறை துறை மேவினர் விடுப்ப-பல இடங்களிலும் செல்லுமாறு அனுப்ப, சேய காடு எறிந்து-நீண்ட காட்டினை அழித்து, அணிநகர் செய் தொழில் மாக்கள் அழகிய நகரமாகுமாறு செய்யும் வினைஞர்கள், பாய வேலையின் ஆர்த்தனர்-பரந்த கடல் போல ஒலித்து, வழிக்கொடு படர்ந்தார்-வழிக்கொண்டு வந்தார்கள் எ - று.

ஆய-ஆகிய:சுட்டு. மேய-அருகில் மேவிய. மேவினர் விடுப்ப-மேவினராகுமாறு விடுப்ப; சென்று கொணருமாறு விடுப்ப. அங்ஙனஞ் சென்றவர்களாற் செலுத்தப்பட்டு என்பது தொக்கு கின்றது. சேய-சேய்மையுடைய. (உசு)

வட்ட வாய்மதிப் பிளவின்வெள் வாய்க்குய நவியம்
இட்ட தோளினர் யாப்புடைக் கச்சின ரிரும்பின்
விட்ட காரொளி மெய்யினர் விசிகொள்வார் வன்றோல்
தொட்ட காலினர் வனமெறி தொழிலின ரானார்.

(இ-ள்.) இரும்பின் கார் ஒளி விட்ட மெய்யினர்-இரும்பின் ஒளிபோலும் கரிய ஒளி வீசும் உடலினையுடைய வினைஞர்கள், வட்ட வாய்-வட்டமாகிய இடத்தினையுடைய, மதிப் பிளவின்-சந்திரனது பிளவு போலும், வெள் வாய்க்குயம்-வெள்ளிய வாயினையுடைய கொடு வாளையும், நவியம்-கோடரியையும், இட்ட தோளினர்-வைத்த தோளினையுடையவராய், யாப்பு உடைக் கச்சினர்-அரையிற் கட்டிய கச்சினையுடையவராய், வார் விசிகொள் வன் தோல் தொட்ட காலினர்-வாராற் கட்டிய வலிய செருப்புத் தொடுத்த காலினையுடைய வராய், வனம் எறி தொழிலினர் ஆனார்-காடு வெட்டும் தொழிலை யுடையவராயினார்கள் எ - று.

குயம்-வளைந்த வாள்; யாப்பு-இறுகப் பிணித்தல். விசி-கட்டு தல்: முதனிலைத் தொழிற்பெயர். தொட்ட-தொடுத்த; 'தொடு தோல்' என்பதுங் காண்க. (உஎ)

மறியு மோதைவண் டரற்றிட மரந்தலை பனிப்ப
எறியு மோதையு மெறிபவ ரோதையு மிரங்கி
முறியு மோதையு முறிந்துவீ ழோதையு முகில்வாய்ச்
செறியு மோதையுங் கீழ்ப்பட மேற்படச் செறியும்.

(இ - ள்.) மறியும் ஓதை வண்டு அரற்றிட-(போய்) மீளும் ஒலியையுடைய வண்டுகள் ஒலிக்கவும், மரம் தலை பனிப்ப-மரங்கள் தலை நடுங்கவும், எறியும் ஓதையும்-வெட்டுகின்ற ஓசையும், எறிபவர்

ஓதையும் - வெட்டுகின்றவர்களின் ஓசையும், இரங்கி முறியும் ஓதையும்-ஒலித்து முறிகின்ற ஓசையும், முறிந்து வீழ் ஓதையும்-முறிந்து கீழே விழுகின்ற ஓசையும் (ஒன்றுகி), முகில் வாய்ச் செறியும் ஓதையும் கீழ்ப்பட-முகிலின் கண் மிக்க இடி ஓசையும் கீழ்ப்பட, மேற்படச் செறியும்-மேற்பட்டு ஒலிக்கும் எ - று.

மறியும் ஓதை, வண்டுக்கு அடை. இரங்கி-கலங்கி, மேற்பட-மேற்பட்டு. (உஅ)

ஒளிறு தாதோடு போதுசெந் தேனுக வொளித்து
வெளிறில் வன்மரஞ் சினையிற வீழ்வசெங் களத்துப்
பிளிறு வாயவாய் நிணத்தோடு குருதிநீர் பெருகக்
களிறு கோடிற மாய்ந்துவீழ் காட்சிய வனைய.

(இ - ள்.) வெளிறு இல்-வெள்ளடை யில்லாத (சேகு ஏறிய) வல் மரம்-வலிய மரங்கள், ஒளிறு தாதொடு-விளங்கா நின்ற மகரந்தத்தோடு, போது-மலர்களும், செந்தேன்-சிவந்த தேனும், உகசிந்த, ஒலித்துச் சினை இற வீழ்வ-ஒலி செய்து கிளைகள் முறிய வீழ்கின்ற தோற்றம், களிறு-யானைகள், செங்களத்து-போர்க்களத்தில், பிளிறு வாயவாய்-ஒலிக்கின்ற வாயினையுடையவாய், நிணத்தொடு குருதிநீர் பெருக-நிணத்துடன் உதிரம் பெருக, கோடு இற மாய்ந்து வீழ் காட்சிய அனைய-கொம்புகள் முறிய இறந்து வீழும் தோற்றத்தைப் போல்வன எ - று.

வெளிறு-வயிர மின்மை; வெள்ளடை யென வழங்கும். வீழ்வ: தொழிற் பெயர். தாதுடன் கூடிய போதுக்கு நிணமும், தேனுக்குக் குருதியும், கிளைக்கு யானைக் கோடும், மரம் ஒலித்தலுக்கு யானை பிளிறுதலும், மரம் வீழ்தலுக்கு யானை வீழ்தலும் உவமம், காட்சிய, அ : அசை. (உகூ)

பூவ டைந்தவண் டினமயற் புறவோடும் பழனக்
காவ டைந்தன பறவைவான் கற்பக மடைந்த
கோவ டைந்திட வோதுங்குறுங் குறும்புபோற் செறிந்து
மாவ டைந்தன மாடுள வரைகளுங் காடும்.

(இ - ள்.) பூ அடைந்த வண்டு இனம்-மலர்களிற் பொருந்திய வண்டுக் கூட்டங்கள், அயல் புறவொடும் பழனக் கா அடைந்தன-பக்கத்திலுள்ள முல்லை நிலங்களிலும் மருத நிலங்களின் சோலைகளிலும் சென்று சேர்ந்தன; பறவை வான் கற்பகம் அடைந்த-பறவைகள் உயர்ந்த கற்பக மரங்களிற் சென்று தங்கின; கோ அடைந்திட-பெருவேந்தர்கள் வர, ஒதுங்குறும் குறும்பு போல் நீங்குகின்ற குறுநில மன்னரைப் போல, மா மாடு உள வரைகளும் காடும் செறிந்து அடைந்தன-விலங்குகள் பக்கத்திலுள்ள காடுகளிலும் மலைகளிலும் நெருங்கிச் சேர்ந்தன எ - று.

பறவைகள் கற்பகம் அடைந்தனவென வனத்தின் உயர்ச்சி கூறினர். கோ-பெருவேந்து. குறும்பு-குறுநிலம் ஆளுவது : சொல்லால்

அஃறிணை, பொருளால் உயர்திணை; அவர் மலையினும் காட்டினும் வாழ்வ ரென்க. (௩௦)

இருணி ரம்பிய வனமெலா மெறிந்துமெய் யுணர்ந்தோர்
தெருணி றைந்தசிந் தையின்வெளி செய்துபல் லுயிர்க்கும்
அருணி றைந்துபற் றறுத்தர னடிநிழ லடைந்த
கருணை யன்பர்தம் பிறப்பென வேரோடுங் களைந்தார்*.

(இ - ள்.) இருள் நிரம்பி வனம் எலாம் எறிந்து-இருள் மிகுந்த காடு அனைத்தையும் வெட்டி, மெய் உணர்ந்தோர்-மெய்ப்பொருளை உணர்ந்தவர்களின், தெருள் நிறைந்த சிந்தையின்-தெளிவு நிரம்பிய உள்ளத்தைப்போல, வெளிசெய்து-வெட்டவெளி யாக்கி, பல் உயிர்க்கும் அருள் நிறைந்து-பல உயிர்களிடத்தும் கருணை நிரம்பி, பற்று அறுத்து-இருவகைப் பற்றையும் போக்கி, அரன் அடி நிழல் அடைந்த-சிவபெருமான் திருவடி நிழலை அடைந்த, கருணை அன்பர்-திருவருளுடையராகிய அடியார்கள், தம் பிறப்பு என-தங்கள் பிறவியை வேரொடுங் களைதல்போல, வேரொடுங் களைந்தார்-(வினை செய்வோர்) மரங்களை வேரோடும் அகழ்ந்தார்கள் எ-று.

"நெஞ்சப் புனத்து வஞ்சக் கட்டையை
வேரற வகழ்ந்து போக்கித் தூர்வை செய்து"

என்று பட்டினத்தடிகள் அருளியாங்கு, மெய்யுணர் வுடையோர் மன மாசு களைந்திருப்பராகலின் அவரது சிந்தைபோல் வெளிசெய்து என்றார். மனம் தூய்மையுற்ற வழி உயிர்களிடத் தருளும், பற்றறுதியும், இறைவன் திருவடியைப் பற்றுதலும், பிறப்புநீக்கமும்முறையே யுண்டாமாறு குறிப்பிக்கப்பட்டமை காண்க. அன்பரது பிறப்பு வேருடன் ஒழிதல்போல் ஒழியுமாறு களைந்தார் எனலுமாம். (௩௧)

களைந்து நீணிலந் திருத்திச்செந் நெறி†படக் கண்டு
வளைந்து நன்னக ரெடுப்பதெவ் வாறெனத் தேறல்
விளைந்து தாதுகு தார்முடி வேந்தன்மந் திரரோ
டளைந்த ளாவிய சிந்தையோ டிருந்தன னங்கண்.

(இ - ள்.) களைந்து-(இங்ஙனம்) மரங்களை அகழ்வித்து, நீள் நிலம் திருத்தி-நீண்ட நிலத்தைச் செப்பஞ் செய்வித்து, செம் நெறி படக் கண்டு-செவ்வியவழி உண்டாக்குவித்து, தேறல் விளைந்து-தேன் மிகுந்து, தாது உகு தார் முடிவேந்தன்-மகரந்தஞ் சிந்தும் மாலையை யணிந்த முடியினையுடைய பாண்டியன், வளைந்து நல்நகர் எடுப்பது-வளைவாக நல்ல நகராக்குவது, எவ்வாறு என-எங்ஙன மென்று, மந்திரரோடு அளைந்து அளாவிய-அமைச்சர்களோடு அளவளாவிய, சிந்தையோடு இருந்தனன்-உள்ளத்தோடு இருந்தான்; அங்கண்-அவ்விடத்து எ - று.

வளைந்து-வட்டமுறஎச்சத்திரிபு. தாதுடன் உகும் என்னலுமாம்; உகுதார் என முதற்பெயர் கொண்டது. அளவளாவிய என்பது அளைந்-

(பா - ம்.) * களைந்தான். † சென்னெறி:

தளாவிய என நின்றது; அளவளாவுதல் - சிந்தை கலத்தல்; கலந்து சூழ்தல். (கூஉ)

மெய்ய ரன்புதோய் சேவடி வியனிலந் தீண்டப்
பொய்ய கன்றவெண் ணீறணி மேனியர் பூதிப்
பையர் நள்ளிருட் கனவில்வந் தருளிய படியே
ஐயர் வல்லைவந் தருளினா ரரசுளங் களிப்ப.

(இ - ள்.) ஐயர்-முதல்வராகிய சோமசுந்தரக் கடவுள், மெய்யர் அன்பு தோய் சே அடி-உண்மை அடியார்களின் அன்பிலே தோய்ந்த சிவந்த திருவடிகள், வியன் நிலம் தீண்ட-அகன்ற நிலத்திலே பொருந்த, பொய் அகன்ற - உண்மையாகிய, வெள் நீறு அணி மேனியர் - வெள்ளிய திருநீற்றினைப் பூசிய திருமேனியராய், பூதிப்பையர்-திருநீற்றுப் பையையுடைவராய், நள் இருள் கனவில் வந்தருளிய படியே - நடு நிசியில் கனவில் எழுந்தருளியவண்ணமே, அரசு உளம் களிப்ப - மன்னன் மனம் மகிழ்ச்சியடைய, வல்லை வந்தருளினார் - விரைந்து (நனவில்) தோன்றியருளினார் எ - று.

மெய்யர் - சலமில்லாதவர் அடியை நிலந் தீண்டுமாறு என்னலுமாம். 'சத்தியமாவது நீறு' 'ஆகலின் பொய்யகன்ற வெண்ணீறு' என்றார்; பொய்யை யொழிக்கும் எனினுமாம். (கூங)

கனவி லும்பெருங் கடவுளர் காண்பதற் கரியார்
நனவி லும்வெளி வந்தவர் தமையெதிர் நண்ணி
நினைவி னின்றதா ளிறைஞ்சிநேர் நின்றுநல் வரவு
வினவி யாதனங் கொடுத்தனன் மெய்புணர் வேந்தன்.

(இ - ள்.) மெய் உணர் வேந்தன்-உண்மைப் பொருளை உணர்ந்த மன்னன், பெருங் கடவுளர்-பெரிய தேவர்களாகிய அரி அயன் முதலியோர், கனவிலும் காண்பதற்கு அரியார்-கனவிலும் காணுதற்கு அரியராய், நனவிலும் வெளிவந்தவர் தமை-தனக்கு நனவிலும் எளியராய் வெளிவந்த சித்தரை, எதிர் நண்ணி - எதிர் சென்று, நினைவில் நின்ற தாள் இறைஞ்சி-மனத்தில் நின்ற திருவடிகளை வணங்கி, நேர் நின்று-திருமுன் நின்று, நல்வரவு வினவி-நல்வரவு கேட்டு, ஆதனம் கொடுத்தனன்-(எழுந்தருள) ஆசனம் கொடுத்தான் எ - று.

கடவுளரும் என உம்மை விரிக்க. அரியரா யிருந்தே வெளிவந் தவரென்க;

"கனவிலுந் தேவர்க் கரியாய் போற்றி
நனவிலு நாயேற் கருளினை போற்றி"

என்னும் திருவாசகம் சிந்திக்கற் பாலது. தன்னால் இடைவிடாது நினைக்கப்படுகின்ற தாள், கனவிற் றோன்றியது முதல் மனத்தில் நிலைபெற்ற தாள் என்றுமாம். மெய்யுணர் - மெய்யுணர்வு தலைப் பட்ட எனலுமாம். (கூச)

தென்ன ரன்பினி லகப்படு சித்தர்தா முன்னர்ச்
சொன்ன வாதிநூல் வழிவரு சார்புநூற் றொடர்பால்
நன்ன ராலய மண்டபங் கோபுர நகரம்
இன்ன வாறுசெய் யெனவகுத் திம்மென மறைந்தார்.

(இ - ள்.) தென்னர் அன்பினில் அகப்படு சித்தர் - பாண்டியர் அன்பு வலையில் அகப்படுஞ் சித்த மூர்த்திகள், தாம் முன்னர் சொன்ன ஆதி நூல்-தாம் முன்னே கூறியருளிய முதனூல், வருவழி (நூல்) - அதன்வழி வந்த வழிநூல், சார்புநூல் தொடர்பால் - சார்புநூல் ஆகிய இவைகளிற் கூறிய முறையால், நன்னர் ஆலயம் மண்டபம் கோபுரம் நகரம்-நன்றாகக் கோயிலும் மண்டபமும் கோபுரமும் நகரமும், இன்னவாறு செய்யென வகுத்து - இவ்வகையாற் செய்வாயாக என்று வகுத்துரைத்து, இம்மென மறைந்தார்-விரைந்து மறைந்தார். எ - று.

இறைவன் 'பத்திவலையிற் படுவோன்' என்பது தோன்ற அகப்படு என்றார். ஆதிநூல் - முதனூல்; ஆகமம். வழிநூல் சார்புநூல்-சிற்பநூல் முதலியன. நன்னர் - நன்கு: பண்புப்பெயர். ஆலயம் - கருப்பக் கிருகம். இம்முறையானே செய்யவேண்டுமென்றார். இம்மென: விரைவுக் குறிப்பு. (கூ0)

மறைந்தெ வற்றினு நிறைந்தவர் மலரடிக் கன்பு
நிறைந்த நெஞ்சுடைப் பஞ்சவ னிலத்துமேம் பட்டுச்
சிறந்த சிற்பநூற் புலவராற் சிவபரஞ் சுடர்வந்
தறைந்து வைத்தவா றாலய மணிநகர் காண்பான்.

(இ - ள்.) எவற்றினும் மறைந்து நிறைந்தவர்-எல்லாப் பொருளினும் மறைந்து நிறைந்த இறைவனுடைய, மலர் அடிக்கு அன்பு நிறைந்த நெஞ்சு உடைப் பஞ்சவன் - மலர்போன்ற திருவடிகளில் அன்பு மிகுந்த உள்ளத்தையுடைய பாண்டியன், நிலத்து மேம்பட்டுச் சிறந்த-நிலவுலகத்தில் உயர்ந்து சிறந்த, சிற்பநூல் புலவரால்-சிற்பநூல் வல்ல அறிவுடையோர்களால், சிவபரஞ்சுடர் வந்து-சிவபரஞ் சோதியார் சித்தராய் எழுந்தருளி, அறைந்து வைத்தவாறு - கூறியருளிய முறைப்படி, ஆலயம் அணிநகர் காண்பான் - திருக்கோயில் திருநகர முதலியன ஆக்கத் தொடங்கினான் எ - று.

இறைவன் மறைந்திருத்தலை,

"விறகிற் றீயினன் பாலிற் படுநெய்போல்
மறைய நின்றுளன் மாமணிச் சோதியான்"

என்னுந் தேவாரத்தா லறிக. எள்ளினுள் எண்ணெய்போல் உள்ளும் புறம்பும் வியாபித்திருத்தலின் நிறைந்தவர் என்றார். பஞ்சவன்-பாண்டியன். மண்டப கோபுரம் முதலியவற்றையும் அடக்கி ஈண்டு ஆலய மென்றார். (கூகூ)

[எழுசீரடியாசிரியவிருத்தம்]

மறைபயில் பதும மண்டப மருத்த
மண்டப மழைநுழை வளைவாய்ப்
பிறைபயில் சிகைமா மண்டப மறுகாற்
பீடிகை திசையெலாம் பிளக்கும்
பறைபயி னிருத்த மண்டபம் விழாக்கோள்
பன்மணி மண்டபம் வேள்வித்
துறைபயில் சாலை திருமடைப் பள்ளி
சூழுறை தேவர்தங் கோயில்.

(இ - ள்.) *மறைபயில் பதும மண்டபம்* - வேதம் ஓதும் பதும மண்டபமும், *அருத்த மண்டபம்*-அருத்த மண்டபமும், *மழை நுழை*-முகிலில் நுழைகின்ற, *வளைவாய்* - வளைந்த வாயினையுடைய, *பிறை பயில் சிகைமா மண்டபம்*-பிறைமதி தவழும் முடியினையுடைய மகா மண்டபமும், *அறுகால் பீடிகை* - அறுகாற் பீடமும், *திசை எலாம் பிளக்கும்*-திசை அனைத்தையும் பிளக்கின்ற ஒலியையுடைய, *பறை பயில் நிருத்த மண்டபம்* - இயங்கள் இரட்டுகின்ற நிருத்த மண்டபமும், *விழாக்கோள்*-இறைவன் திருவிழாக் கோலங்கொண்டருளும், *பல் மணி மண்டபம்*-பல மணிகளழுத்திய மண்டபமும், *வேள்வித் துறை பயில்சாலை*-பல துறைகளையுடைய வேள்விகள் செய்யும் யாக சாலைகளும், *திருமடைப்பள்ளி* - திருமடைப்பள்ளியும், *சூழ் உறை தேவர் தம் கோயில்* - சுற்றிலும் வசிக்கும் பரிவார தெய்வங்களின் கோயில்களும் எ - று.

மழை நுழையும்படி உயர்ந்த மண்டபம் எனினுமாம். பிளப்பது போலும் ஒலி. சூழ் - சூழ. தேவர்-கணபதி, கந்தர், சண்டேசர் முதலாயினர். (கஎ)

வலவயி னிமய வல்லிபொற் கோயின்
மாளிகை யடுக்கிய மதில்வான்
நிலவிய கோடிய நெடியசூ ளிகைவா
னிலாவிரி தவளமா ளிகைமீன்
குலவிய குடுமிக் குன்றிவர் செம்பொற்
கோபுரங் கோண்டல்கண் படுக்குஞ்
சுலவெயி லகழிக் கிடங்குகம் மியநூற்
றேல்வரம் பேல்லைகண் டமைத்தான்.

(இ - ள்.) *வலவயின்* - இறைவன் வலப்பாகத்தில், *இமயவல்லி பொன் கோயில்* - இமயக்கொடியாகிய அங்கயற்கண்ணம்மைக்குப் பொன்னாலாகிய திருக்கோயிலும், *மாளிகை அடுக்கிய மதில்* - திரு மாளிகை வரிசையையுடைய திருமதில்களும், *வான் நிலவிய கொடி*-ஆகாயத்தை அளாவிய கொடிகளையும், *நெடிய சூளிகைய* - நீண்ட இறப்புக்களையுமுடைய, *வால் நிலாவிரி தவள மாளிகை* - வெள்ளிய

நிலாவை விரிக்கின்ற தவள மாளிகைகளும், மீன் குலவிய குடுமி - வான்மீன்கள் விளங்கும் முடியினையுடைய, குன்று இவர் - மலைபோல வும் உயர்ந்த, செம்பொன் கோபுரம்-சிவந்த பொன்னாலாகிய கோபு ரங்களும், கொண்டல் கண்படுக்கும்-முகில் உறங்கும், சுலவு எயில்- சுற்று மதில்களும், அகழிக் கிடங்கு - அகழ்க்கிடங்குமாகிய இவை களை, கம்மிய நூல் தொல்வரம்பு எல்லை கண்டு அமைத்தான் - சிற்ப நூலின் பழமையான வரம்பினை ஆராய்ந்து செய்தான் எ - று.

கொடிய என்பதிலுள்ள அகரம் சூளிகை யென்பதனோடு பிரித் துக் கூட்டப்பட்டது. சூளிகையும் மாளிகையும் என்னலுமாம். தவளமாளிகை - சுதை பூசினமையால் வெண்மையாகிய மாளிகை; நிலவு விரிதலால் வெண்மையாகிய மாளிகை யென்றுமாம். இவர்: உவம வுருபுமாம். அகழிக்கிடங்கு, வரம்பெல்லை யென்பன ஒரு பொருட் பன்மொழிகள். செய்வித்தானைச் செய்தானாகக் கூறினார். இதுகாறும் திருக்கோயி லமைப்புக்கூறி, மேல் நகரமமைப்புக் கூறு கின்றார்; இறுதியிலுள்ள எயில் அகழி என்பவற்றை நகருக் குரிய வாக உரைப்பாருமுளர். (௩அ)

சித்திர நிரைத்த பீடிகை மறுகு
தெற்றிகள் வாணிலாத் தெளிக்கும்
நித்தில நிரைத்த விழாவரு வீதி
நிழன்மணிச் சாளர வொழுக்கப்
பித்திகை மாடப் பெருந்தெருக் கவலை
பீடுசால் சதுக்கநற் பொதியில்
பத்தியிற் குயின்ற மன்றுசெய் குன்று
பருமணி மேடையா டரங்கு.

(இ - ள்.) சித்திரம் நிரைத்த பீடிகை மறுகு - சித்திரங்களை வரிசைப்பட எழுதிய கடைவீதிகளும், தெற்றிகள்-தெற்றியம்பலங் களும், வாள் நிலாத் தெளிக்கும் - ஒள்ளிய நிலவினை வீசும், நித்திலம் நிரைத்த - முத்துக்கோவைகளை வரிசைப்படத் தொடுத்த, விழா வரு வீதி - திருவிழாவில் இறைவன் எழுந்தருளுகின்ற வீதிகளும், நிழல் மணி - ஒளியினையுடைய மணிகள் பதித்த, சாளர ஒழுக்கம் - சாளர வரிசைகளையுடைய, பித்திகை மாடப் பெருந்தெரு-சுவர்களையுடைய மாளிகைகள் நெருங்கிய பெரிய வீதிகளும், கவலை - கவர் வழிகளும், பீடுசால் சதுக்கம் - பெருமை நிறைந்த நான்கு தெருக் கூடுமிடங் களும், நல் பொதியில் - நல்ல அம்பலங்களும், பத்தியில் குயின்ற மன்று -.வரிசைப்பட இயற்றிய மன்றங்களும், செய் குன்று - செய் குன்றுகளும், பருமணி மேடை - பெரிய மணிகளழுத்திய மேடை களும், ஆடு அரங்கு-கூத்தவைகளும் எ - று.

நடுவில் மரமும் சுற்றிலும் வேதிகையுமுடையது தெற்றியம் பலம் எனப்படும். பெருந்தெரு-அரச வீதி. கவலை-கவர் வழி; இரண்டு தெருக்கள் கூடுமிடம். பொதியில் - பொது விடம்; அம் பலம்; நீதிமன்றம் முதலியன. மன்று-காட்சி மன்றம். (௩௯)

அருந்தவ ரிருக்கை யந்தண ருறையு
　　ளரசரா வணங்குல வணிகப்
பெருந்தெரு நல்வே ளாளர்பே ரறஞ்சால்
　　பெருங்குடி யேனைய கரிதேர்
திருந்திய பரிமா நிலைக்களங் கழகந்
　　தீஞ்சுவை யாறுநான் குண்டி
இரந்தவர்க் கருத்து நல்லறச் சாலை
　　யினையன பிறவுநன் கமைத்தான்.

(இ - ள்.) அருந்தவர் இருக்கை - அரிய முனிவர்கள் தங்கும் மடங்களும், அந்தணர் உறையுள் - மறையவர் வசிக்கும் வீடுகளும், அரசர் ஆவணம்-அரசர் வீதிகளும், குல வணிகப் பெருந்தெரு-சிறந்த வணிகரின் பெரிய வீதிகளும், பேர் அறம் சால் - பெரிய அறம் நிறைந்த, நல்வேளாளர் பெருங்குடி - நல்ல வேளாளர்களின் பெரிய குடிகள் நிறைந்த வீதிகளும், ஏனைய - மற்ற, கரி தேர் திருந்திய பரிமா - யானைகள் தேர்கள் இலக்கணமமைந்த குதிரைகள் ஆகிய இவைகளின், நிலைக்களம் - தங்கு மிடங்களும், கழகம் - கல்விச்சாலை களும், ஆறு தீம் சுவை நான்கு உண்டி - இனிய அறுவகைச் சுவை யோடு கூடிய நால்வகை உணவுகளை, இரந்தவர்க்கு அருத்தும் நல் அறச்சாலை - வறியராய் இரந்தவருக்கு ஊட்டும் நல்ல தரும சத்தி ரங்களும். இனையன பிறவும் - இன்னும் இவை போல்வன பிறவும், நன்கு அமைத்தான் - நன்றாகச் செய்தான் எ - று.

அருந்தவர் - துறவோர், சிவனடியார்; ஆவணம், வீதி யென்னுந் துணையாய் நின்றது. குடி-குடியிருக்குமிடம். ஏனைய-இவையொழிந்த. கழகம்-கற்குமிடம்; நாலாராயுமிடம், வாது புரியுமிடம் முதலியன. நான்கு உண்டி-உண்பன, தின்பன, நக்குவன, பருகுவன. (சo)

துணிகயங் கீழ்நீர்க் கூவல்பூ வோடை
　　தொடுகுளம் பொய்கைநந் தவனந்
திணிமலர்ச் சோலை துடவையுய் யானந்
　　திருநகர்க் கணிபெறச் செய்து
மணிமலர்த் தாரோன் மாளிகை தனக்கம்
　　மாநகர் வடகுண பாற்கண்
டணிநகர் சாந்தி செய்வது குறித்தா
　　னண்ணலா ரறிந்தது* செய்வார்.

(இ - ள்.) துணிகயம்-தெளிந்த நீரையுடைய சிறு குளங்களும், கீழ் நீர்க் கூவல்-கீழே நீரையுடைய கிணறுகளும், பூ ஓடை-மலரோ டைகளும், தொடு குளம் - தோண்டப்பட்ட பெரிய குளங்களும், பொய்கை-பொய்கைளும், நந்தவனம்-நந்தவனங்களும், திணி மலர்ச் சோலை-நெருங்கிய மலர்களையுடைய சோலைகளும், துடவை - தோட்

(பா - ம்.) * அறிந்தது.

டங்களும், உய்யானம் - உத்தியானங்களும் ஆகிய இவைகளை, திரு நகர்க்கு அணிபெறச் செய்து - செல்வ நிறைந்த நகரத்திற்கு அழகு பொருந்த அமைத்து, மணி மலர்த் தாரோன்-அழகிய மலர்களாலாகிய மாலையை அணிந்த பாண்டியன். தனக்கு மாளிகை அ மாநகர் வட குணபால் கண்டு - தனக்கு அரண்மனை அந்தத் திருநகருக்கு வடகீழ்த் திசையில் அமைத்து, அணிநகர் சாந்தி செய்வது குறித்தான்-அழகிய அந் நகருக்குச் சாந்தி செய்தலைக் கருதினன்; அண்ணலார் அறிந்து இது செய்வார்-சோமசுந்தரக் கடவுள் அதனை அறிந்து இதனைச் செய்வாராயினர் எ - று.

துணி-தெளிந்த; 'துணிநீர் மெல்லவல்' என்னும் மதுரைக்காஞ்சியின் உரையை நோக்குக. கீழ்நீர்க் கூவல் - சுரப்புநீர்க் கேணியுமாம். (சுக)

பொன்மய மான சடைமதிக் கலையின்
புத்தமு துகுத்தன ரதுபோய்ச்
சின்மய மான தம்மடி யடைந்தார்ச்
சிவமய மாக்கிய செயல்போற்
றன்மய மாக்கி யந்நகர் முழுதுஞ்
சாந்திசெய் ததுவது மதுர
நன்மய மான தன்மையான் மதுரா
நகரென வுரைத்தனர் நாமம்.

(இ- ள்.) பொன்மயமான சடைமதிக் கலையின்-பொன்மயமாகிய தமது சடையிலுள்ள சந்திரகலையின், புது அமுது உகுத்தனர் -புதிய அமுதத்தைச் சிந்தினர்; அதுபோய் - அவ்வமுதஞ் சென்று, சின்மயமான தம் அடி அடைந்தார்-ஞானமயமாகிய அவ்விறைவருடைய திருவடிகள் தம்மை அடைந்தவரை, சிவமயம் ஆக்கிய செயல்போல்-சிவமயமாகச் செய்த செய்கையைப்போல, தன்மயம் ஆக்கி - தனது (அமிர்த)மயமாக்கி, அ நகர்முழுதும் சாந்திசெய்தது-அந்நகர் முழுதையும் தூய்மைசெய்தது; அது நல்மதுரமயம் ஆன தன்மையால்-அவ்வமுதம் நல்ல மதுரமயமாகிய தன்மையினால் (அந்நகருக்கு), மதுராநகர் என நாமம்உரைத்தனர்-மதுரைமாநகர் எனப்பெயர் கூறினர் எ - று.

சந்திரனிடத்து அமிழ்த முண்டென்பர். சின்மயம் - ஞானமயம். அடியை யடைந்தவரை அவர் சிவமயமாக்கிய செயல்போல் எனலுமாம். சாந்திசெய்தல் வாலாமை நீக்கித் தூய்மை செய்தல். (சஉ)

கீட்டிசைக் கரிய சாத்தனுந் தென்சார்
கீற்றுவெண் பிறை* நுதற் களிற்றுக்
கோட்டிளங் களபக் கோங்கையன் னையருங்
குடவயின் மதுமடை புடைக்குந்

(பா - ம்) * கீற்றிளம் பிறை.

தோட்டிளந் தண்ணந் துழாயணி மௌலித்
　　தோன்றலும் வடவயிற் றோடு
நீட்டிரும் போந்தி னிமிர்குழ லெண்டோ
　　ணீலியுங் காவலா நிறுவி.

(இ - ள்.) கீழ்திசை கரிய சாத்தனும் - கிழக்குத்திக்கில் கரிய நிறமுடைய ஐயனாரையும், தென்சார்-தென் திக்கில், கீற்று வெண் பிறை நுதல்-கீற்றாகிய வெள்ளிய பிறையை ஒத்த நெற்றியினையும், களிற்றுக் கோட்டு - யானையின் கொம்பு போன்ற, இளம் களபக் கொங்கை - இளமையாகிய சாந்தணிந்த கொங்கைகளையுமுடைய, அன்னையரும் - சத்த மாதரையும், குடவயின் - மேற்குத் திசையில், மதுமடை உடைக்கும் தோட்டு - தேன் மடை யுடைத்தோடா நின்ற இதழ்களையுடைய, இளந்தண்ணம் துழாய் அணி - பசுமையாகிய குளிர்ந்ததுழாய்மாலையை அணிந்த, மௌலித் தோன்றலும்-முடியினை யுடைய திருமாலையும், வடவயின் - வடதிசையில், தோடுநீடு இரும் போந்தின் நிமிர்குழல் - மடல் நீண்ட பெரிய பனையின் மலரணிந்த நிமிர்ந்த கூந்தலையும், எண்தோள் - எட்டுத் தோள்களையுமுடைய, நீலியும் - காளியையும், காவலாநிறுவி - நகரத்திற்குக் காவலாக நிறுத்தி எ - று.

கீழ்த்திசை கீட்டிசை யென்றாயது மரூஉ. அன்னையர்-எழுமாதர்; பிராமி, நாராயணி, உருத்திராணி, மகேசுவரி, வராகி, கௌமாரி, இந்திராணி என்போர். மடை யுடைந்தாற்போலப் பாயுமெனக. இளமை-பசுமை. தண்ணம், அம்; சாரியை. நீட்டு: விகாரம் ஆக வென்பது குறைந்து நின்றது. (௩௩)

கைவரை யெருத்திற் கனவரை கிடந்த
　　காட்சியிற் பொலிந்தொளிர் கோயின்
மைவரை மிடற்று மதுரைநா யகரை
　　மரபுளி யருச்சனை புரிவான்
பொய்வரை மறையா கமநெறி யொழுகும்
　　புண்ணிய முனிவரை யாதி
சைவரைக் காசிப் பதியினிற் கோணர்ந்து
　　தலத்தினிற் றாபனஞ் செய்தான்.

(இ - ள்.) கைவரை எருத்தில்-யானையின் பிடரியில், கனவரை கிடந்த காட்சியில்-பொன் மலை தங்கிய தோற்றம் போல், பொலிந்து ஒளிர் கோயில்-பொலிவு பெற்று ஒளி வீசும் விமானத்தில் எழுந் தருளிய, மைவரை மிடற்று மதுரை நாயகரை-கருமை தாங்கிய திரு மிடற்றினையுடைய மதுரை நாயகரை, மரபுளி அருச்சனை புரிவான் - விதிப்படி பூசிப்பதற்கு, பொய்வரை-பொய்ம்மை நீக்குகின்ற, மறை ஆகமநெறி ஒழுகும்-வேதாகமவழியில் ஒழுகாநின்ற, புண்ணிய முனி வரை ஆதி சைவரை-அறவுருவுடைய முனிவர்களையும் ஆதி சைவர் களையும், காசிப்பதியினில் கொணர்ந்து-காசியென்னும் திருப்பதியி னின்றும் கொண்டுவந்து, தலத்தினில் தாபனம் செய்தான் - அப்பதி யில் நிலைபெறுத்தினான் எ - று.

கனம் - கனகம். வரைதல்-கொள்ளலும், நீக்கலுமாம். பொய் வரை - பொய்ம்மைநீங்கிய எனினுமாம். மரபுளி, உளி: மூன்றன் பொருள்படுவதோ ரிடைச்சொல், முனிவராகிய ஆதி சைவருமாம். (சச)

உத்தம குலத்து நாற்பெருங் குடியு
முயர்ந்தவு மிழிந்தவு மயங்க
வைத்தவு மான புறக்குடி மூன்று
மறைவழுக் காமனு வகுத்த
தத்தம நெறிநின் றொழுகவை திகமுஞ்
சைவமுந் தருமமுந் தழைப்பப்
பைத்தெழு திரைநீர் ஞாலமேற் றிலகம்
பதித்தென நகர்வளம் படுத்தான்.

(இ - ள்.) உத்தம குலத்து நால்பெருங் குடியும்-உத்தம குலமாகிய அந்தணர் அரசர் வணிகர் வேளாளர் என்னும் நான்கு பெருங் குடிகளும், உயர்ந்தவும் இழிந்தவும் மயங்க வைத்தவும் ஆன புறக்குடி மூன்றும்-உயர்ந்தனவும் இழிந்தனவும் கலந்தனவுமான மூன்று புறக் குடிகளும், மறை வழுக்கா மனு வகுத்த - வேத விதி வழுவாது மனுவால் வகுக்கப்பெற்ற, தத்தம் நெறி நின்று ஒழுக - தங்கள் தங்களுக் குரிய ஒழுக்கத்தில் வழுவாதொழுகவும், வைதிகமும் சைவமும் தருமமும் தழைப்ப-வேதநெறியும் சைவநெறியும் அறமும் செழித்தோங்கவும், பைத்து எழுதிரை நீர் ஞாலமேல் - பசுமையுடையதாய்த் தோன்றும் அலைகளையுடைய கடல் சூழ்ந்த நிலவுலகத்தில், திலகம் பதித்தென-(பாண்டி நாட்டிற்கு) ஓர் திலகம் பதித்தாற்போல, நகர் வளம் படுத்தான் - நகரை வளப்படுத்தினன் எ - று.

குலத்து, அத்து: வேண்டாவழிச் சாரியை. புறக்குடியுள் உயர்ந்தன-நான்கு வருணத்தில் உயர்குல ஆணும் இழிகுலப் பெண்ணும் கூடிப் பிறந்த அநுலோமரின் வகையெனவும், இழிந்தன-உயர்குலப் பெண்ணும் இழிகுல ஆணும் கூடிப் பிறந்த பிரதிலோமரின் வகையெனவும் மயங்கவைத்தன - அநுலோம பிரதிலோம ஆண் பெண் கூடிப் பிறந்த அந்தராளரும் விராத்தியரு மென்போரின் வகையெனவும் கொள்க; இவற்றை விரிவாக அறிய வேண்டுவோர் மிருதிகள் முதலியவற்றுட் காண்க; இவையெல்லாம் ஆராயற்பாலன தத்தம, அ: ஆறனுருபு; தத்தமக்குரிய வென்க. (சரு)

அன்றுதோட் டரச னங்கக ரெய்தி
யணிகெழு மங்கல மியம்ப
என்றுதோட் டிமைக்கு மனையின்மங் கலநா
ளெய்தின னிருந்துமுப் புரமுங்
குன்றுதோட் டெய்தான் கோயின்முன் றுறப்புங்
குறைவில்பூ சனைவழா தோங்கக்
கன்றுதோட் டெறிந்து கனியுகுத் தான்போற்
கலிதுரந் தரசுசெய் நாளில்.

(இ - ள்.) அரசன் அன்று தொட்டு-மன்னன் அன்றுமுதல், அந் நகர் எய்தி - அம்மதுரை நகரை அடைந்து, அணிகெழு மங்கலம் இயம்ப-அழகு பொருந்திய மங்கல வாத்தியங்கள் ஒலிக்க, என்று தொட்டுஇமைக்கும் மணியில்-சூரியனை அளாவி ஒளி வீசும் அரண்மனை யில், மங்கல நாள் எய்தினன் இருந்து - நன்னாளிற் புகுந்து இருந்து, முப்புரமும் குன்று தொட்டு எய்தான் - மூன்று புரங்களையும் பொன் மலையை வில்லாக வளைத்து அழித்த இறைவனது, கோயில் - திருக் கோயிலில், மூன்று உறுப்பும் குறைவு இல் பூசனை - மூன்று அங்கங் களும் குறைவில்லாத பூசனையானது, வழாது ஓங்க - வழுவாமல் மேலோங்க, கன்று தொட்டு எறிந்து கனி உகுத்தான் போல் - கன்றி னைப் பிடித்து வீசி விளாங்கனியை வீழ்த்திய திருமாலைப்போல, கலி துரந்து அரசுசெய் நாளில்-தீமையையோட்டி அரசு புரிந்து வரும் நாளில் எ - று.

என்று-சூரியன். எய்தினன்: முற்றெச்சம். மூன்றுறுப்பாவன:— நித்தியம், நைமித்திகம், பிராயச்சித்தம் என்பன. கண்ணன் நிரை மேய்க்கின்றபொழுது கஞ்சனுக்கு நண்பனாகிய அசுரனொருவன் அவனைக் கொல்லவென வந்து ஓர் ஆன் கன்றில் ஆவேசித்திருக்கக் கண்ணன் அஃதறிந்து அக்கன்றினைக் குறுந்தடியாகக் கொண்டு விள வின்கனிமீதெறிந்து அவனைக் கொன்றானென்பது வரலாறு; சிலப்பதி கார ஆய்ச்சியர் குரவையில்,

"கன்று குணிலாக் கனியுதிர்த்த மாயவன்"

என வருதலுங் காண்க. உலகம் புரக்கும் அரசன் காத்தற் கடவு ளாகிய திருமாலின் அமிசமென்ப வாகலின் அவன்போல் என்றார்;

"திருவுடை மன்னரைக் காணிற் றிருமாலைக் கண்டேனே யென்னும்"

என்கிற ஆழ்வார் வாக்குங் காண்க. (சசு)

பவநெறி கடக்கும் பார்த்திவன் கிரணம்
பரப்பிளம் பரிதிபோன் மலயத்
துவசனைப் பயந்து மைந்தன்மேன் ஞாலஞ்
சுமத்திநாள் பலகழித் தொருநாள்
நவவடி விறந்தோ னாலயத் தெய்தி
நாதனைப் பணிந்துமு வலஞ்செய்
துவமையி லின்ப வருணிழ லெய்தி
யொன்றியோன் றாநிலை நின்றான்.

(இ - ள்.) பவநெறி கடக்கும் பார்த்திவன்-பிறவிக்குக் காரண மாகிய வழியினைக் கடக்கின்ற பாண்டியன், கிரணம் பரப்பு இளம் பரிதிபோல் - ஒளியை விரிக்கின்ற இள ஞாயிறுபோலும், மலயத்து வசனைப் பயந்து-மலயத்துவச னென்பவனைப் பெற்று, மைந்தன்மேல் ஞாலம் சுமத்தி-அப்புதல்வன் மீது அரசபாரத்தைச் சுமத்தி, பலநாள் கழித்து ஒருநாள்-பலநாட் போக்கி ஒருநாள், நவவடிவு இறந்தோன்- ஒன்பது வடிவங்களையுங் கடந்த சோம சுந்தரக் கடவுளின், ஆல

யத்து எய்தி - திருக்கோயிலுள் சென்று, நாதனைப் பணிந்து - இறைவனை வணங்கி, மூவலம் செய்து-மும்முறை வலம் வந்து, உவமை இல்-ஒப்பில்லாத, இன்ப அருள் நிழல் எய்தி-பேரின்பமயமாகிய திருவருள் நீழலையடைந்து, ஒன்றி ஒன்று நிலை நின்றான் - சேர்ந்தும் சேராத இரண்டற்ற நிலையில் நின்றான் எ - று.

பார்த்திவன்-அரசன்; பிருதிவியை ஆளுபவன் என்பது பொருள். ஞாலம் - பூமி: ஈண்டு அரசபாரம் எனக் கொள்க. கழித்து: கழிய வென்பது திரிந்ததுமாம். நவவடிவு முற்கூறப்பட்டன: 'நவந்தரு பேத மேக நாதனே நடிப்பன்' என்றதனால் இறைவன் அவற்றுக்கு அப்பாற்பட்டவனென்ப துணர்க. ஒன்றி-இரண்டறக் கலந்து, ஒன்றும் நிலை நின்றான் - அவ்வத்துவித நிலையில் நின்றான் எனப் பொருளுரைத்தலுமாம். (௪௭)

ஆகச் செய்யுள் - ௩௬௪.

---

## ரு. தடாதகைப் பிராட்டியார் திருவவதாரப் படலம்

[கலிவிருத்தம்]

கன்னியொரு பங்கினர் கடம்பவன மெல்லாம்
நன்னகர மானது நவின்றுமுல கீன்ற
அன்னைமக ளாகிமல யத்துவச னுகுந்
தென்னனிடை வந்துமுறை செய்ததுரை செய்வாம்.

(இ - ள்.) கன்னி ஒரு பங்கினர் - உமையவளை யொருபாகத்தி லுடைய இறைவரது, கடம்பவனம் எல்லாம்-கடம்பவனம் முழுதும், நல் நகரம் ஆனது நவின்றும்-நல்ல நகரமாகிய தன்மையைக் கூறினோம்; உலகு ஈன்ற அன்னை - உலகங்கள் அனைத்தையும் பெற்ற அன்னையாகிய உமாதேவியார், மலயத்துவசன் ஆகும் தென்னனிடை-மலயத்துவசனென்னும் பாண்டி மன்னனிடத்து, மகளாகி வந்து - புதல்வியாய்த் தோன்றி, முறைசெய்தது உரைசெய்வாம் - செங்கோலோச்சிய திருவிளையாடலைக் கூறுவாம் எ - று.

உலகீன்ற அன்னையாயினும் கன்னி என்றார்;

"பவன்பிரம சாரியாரும் பான்மொழி கன்னியாகும்"

என்பது சிவஞானசித்தி. நவின்றும்: தனித் தன்மைப் பன்மை; றும்: விகுதி. உலகீன்ற அன்னை மகளாயினள், ஈதொரு வியப்பிருந்தவாறென்னே யென்க. (க)

மனுவற முவந்துதன் வழிச்செல நடத்தும்
புனிதன்மல யத்துவசன் வென்றிபுனை பூணன்
கனியமுத மன்னகரு ணைக்குறையுள் காட்சிக்
கினியன்வட சொற்கட றமிழ்க்கட லிகந்தோன்.

(இ - ள்.) மலயத்துவசன் - அம் மலயத்துவசனென்பான், மனு அறம் உவந்து தன்வழி செல நடத்தும் புனிதன் - மனுதருமமானது மகிழ்ந்து தனதுவழி நடக்கும்படி செங்கோலோச்சும் தூய்மையன்; வென்றி புனை பூணன்-வெற்றியையே தான் அணியும் பூணாகவுடையவன்; கனி அமுதம் அன்ன-சுவை முதிர்ந்த அமுதத்தைப் போலும், கருணைக்கு உறையுள் - அருளுக்குத் தங்குமிடமானவன்; காட்சிக்கு இனியன்-(முறைவேண்டினருக்கும் குறைவேண்டினருக்கும்) காண்டற்கு எளியனாய் இன்முகத்தை யுடையவன்; வடசொல் கடல் தமிழ்க் கடல் இகந்தோன் - வடமொழிக்கடலையும் தென்மொழிக் கடலையும் நிலைகண்டு கடந்தவன் எ - று.

மனு தருமமும் தனது செங்கோலின் வழிப்பட ஆட்சி நடத்துமென இவனது நீதியின் மேன்மை கூறினார்; வழிச்செல என்பதற்கு அதற்குரிய வழியில் நடக்க என்றுரைத்தலுமாம். வென்றியாகிய பூண் உயிர்கள் பசியும் பிணியுமின்றி வாழுமாறு செய்தலால் 'அமுத

மன்ன கருணை' யென்றார். காட்சிக் கெளியனாதலும் கடுஞ்சொல்ல னல்லனாதலும் அடங்க 'இனியன்' என்றார்;

"காட்சிக் கெளியன் கடுஞ்சொல்ல னல்லனேல்
மீக்கூறு மன்ன னிலம்"

என்பது தமிழ்மறை. கடல்போல் அளவிடப் படாதனவாகிய இரு மொழிகளையும் முற்றவும் கற்றவனென்றார்;

"தென்சொற் கடந்தான் வடசொற்கடற் கெல்லை தேர்ந்தான்"

எனக் கம்பர் இராமனைக் கூறுவது இங்கு நோக்கற் பாலது. (உ)

வேனில்விறல் வேள்வடிவன் வேட்கைவிளை பூமி
ஆனமட வார்கள்பதி னாயிரவ ருள்ளான்
வானொழுகு பானுவழி வந்தொழுகு சூர
சேனன்மகள் காஞ்சனையை மன்றல்வினை செய்தான்.

(இ - ள்.) வேனில் விறல் வேள்வடிவன் - வேனிற்காலத்து வெற்றிகொள்ளும் மதவேள் போலும் வடிவத்தையுடையவன்; வேட்கை விளை பூமி ஆன - காமப் பயிர் விளைகின்ற பூமியாகிய, மட வார்கள் பதினாயிரவர் உள்ளான் - காமக் கிழத்தியர்கள் பதினாயிர வரை உடையவன்; வான் ஒழுகு - வானிற் செல்லாநின்ற, பானுவழி வந்து - சூரியன் மரபில் தோன்றி, ஒழுகு சூரசேனன் - அறத்தின் வழி ஒழுகும் சூரசேனனது, மகள் காஞ்சனையை மன்றல் வினைசெய்தான் - புதல்வியாகிய காஞ்சனமாலையை மணஞ்செய்தவன் எ - று.

காமுகரை வெல்லுமென்க. வேனிலுக்குரிய வெற்றியையுடைய வேல் என விரித்தலுமாம். வேட்கை - காமம்;

"ஊரவர் கௌவை யெருவாக அன்னைசொல்
நீராக நீளுமிந் நோய்"

என்பதனாலும் காமம் பயிராத லுணர்க. இன்பம் விளைகின்ற: ஏகதேச வுருவகம். பானுவழி யென்றமையாற் சோழனென்று கொள்க (௩)

கண்ணுதலை முப்பொழுதும் வந்துபணி கற்றோன்
எண்ணில்பல நாண்மக விலாவறுமை யெய்திப்
பண்ணரிய தானதரு மம்பலவு மாற்றிப்
புண்ணிய நிரம்புபரி வேள்விபுரி குற்றான்.

(இ - ள்.) கண் நுதலை - சோமசுந்தரக் கடவுளை, முப்பொழுதும் வந்து பணி கற்றோன் - மூன்று காலங்களிலும் சென்று வணங்குதலைக் கற்றவன்; என் இல் பலநாள் - அளவிறந்த பல நாட்கள் வரை, மகவு இலா வறுமை எய்தி - பிள்ளைப் பேறு இன்மையாம் வறுமையை அடைந்து (அதனையொழிக்க), பண் அரிய தான தருமம் பலவும் ஆற்றி - செய்தற்கு அரிய பல தானங்களையும் தருமங்களையுஞ் செய்து, புண்ணியம் நிரம்பு பரிவேள்வி புரிகுற்றான் - அறம் நிரம்பிய அசுவ மேதம் செய்யலுற்றான் எ - று.

கண்ணுதல்: நுதலில் நாட்டமுடையோனெனக் காரணக்குறி. பணி - பணிதல்: முதனிலைத் தொழிற்பெயர். நூலறிவிற்குப் பயன் வாலறிவனது நற்றாள் தொழலாகலின் பணிதல் கற்றனென்றார். மகவில்லாமையை வறுமையென்றார்;

''பெறுமவற்றுள் யாமறிவ தில்லை யறிவறிந்த
மக்கட்பே றல்ல பிற''

என்பவாகலின். (௪)

ஈறின்மறை கூறுமுறை யெண்ணியொரு தொண்ணூற்
றாறினொடு மூன்றுமக மாற்றவம ரேசன்
நூறுமக மும்புரியி னென்பதனொ டிப்பின்
மாறுமென மற்றதனை மாற்றியிது சாற்றும்.

(இ - ள்.) ஈறு இல் மறை கூறும் முறை - அழிவில்லாத மறைகள் கூறிய முறையை, எண்ணி - ஆராய்ந்து (அதன்படி) ஒரு தொண்ணூற்று ஆறினொடு மூன்று மகம் ஆற்ற - தொண்ணூற்றொன்பது வேள்விகளைச் செய்ய, அமரேசன் - தேவேந்திரனானவன், நூறு மகமும் புரியின் - நூறு வேள்விகளையும் செய்து முடிப்பானாயின், நொடிப்பில் என் பதம் மாறும் என - நொடிப்பொழுதில் எனது பட்டம் மாறுமேயென்று கருதி, மற்று அதனை மாற்றி இது சாற்றும் - அவ்வேள்வியை விலக்கி இதனைக் கூறுகின்றான் எ - று.

முறையாலே எண்ணிச் செய்ய எனினுமாம். ஒரு, வழக்கு நோக்கியது. பரிவேள்வி நூறு புரிந்தவன் இந்திரனாவன்; சதமகன் என்னும் பெயரும் அது பற்றியது. நொடிப்பு: தொழிற்பெயர்; நொடித்தற்கண்; நொடியின் பின் என்றுமாம். மற்று: வினைமாற்று. (௫)

நன்பொருள் விரும்பினை யதற்கிசைய ஞாலம்
இன்புறு மகப்பெறு மகத்தினை யியற்றின்
அன்புறு மகப்பெறுதி யென்றமரர் நாடன்
தன்புல மடைந்திடலு நிம்பநகு தாரான்.

(இ - ள்.) நன்பொருள் விரும்பினை - நல்ல மகப்பேற்றை விரும்பினாய்; அதற்கு இசைய - அவ்விருப்பத்திற்குப் பொருந்த, ஞாலம் இன்பு உறு மகப் பெறும் மகத்தினை - உலகம் இன்பத்தை யடையும் மகப்பெறுதற் கேதுவாகிய வேள்வியை, இயற்றின் - செய்தாயானால், அன்பு உறு மகப் பெறுதி என்று - அன்புமிக்க பிள்ளையைப் பெறுவாயென்று கூறி, அமரர் நாடன் - தேவேந்திரன், தன்புலம் அடைந்திடலும் - தனது நாட்டினை யடைந்தவுடனே, நிம்பம் நகு தாரான் - வேப்ப மலர் விளங்கும் மாலையையுடைய பாண்டியன் எ - று.

'தம்பொருளென்பதம் மக்கள்' என்பதனால் பிள்ளையைப் பொருளென்றார். சிந்தாமணியில் 'நன்பொருள்' என்றும், திருத்தாண்டகத்துள் 'ஒண்பொருள்' என்றும் புதல்வன் கூறப்படுதலுங் காண்க. 'மாநிலத்து மன்னுயிர்க் கெல்லா மினிது' என்பவாகலின், 'ஞாலமின்

புறு' மகவென்ருர். மகப்பெறு மகம் - புத்திரகாமேஷ்டி. நகு நிம்பத் தாரான் என மாற்றுதலுமாம். (௬)

மிக்கமக வேள்விசெய் விருப்புடைய னுகி
அக்கண மதற்குரிய யாவையு மமைத்துத்
தக்கநிய மத்துரிய தேவியொடு சாலை
புக்கன னிருந்துமக வேள்விபுரி கிற்பான்.

(இ - ள்.) மிக்க மக வேள்வி செய் விருப்பு உடையனுகி - நல மிக்க மக வேள்வி செய்யும் விருப்பத்தையுடையவனுய், அக்கணம் அதற்கு உரிய யாவையும் அமைத்து - அப்பொழுதே அவ்வேள்விக்கு வேண்டும் பொருள்களனைத்தையும் சேர்த்து, தக்க நியமத்து-தகுந்த நியமத்துடன், உரிய தேவியொடு சாலை புக்கனன் இருந்து - உரிய மனைவியோடு வேள்விச்சாலையிற் சென்றிருந்து, மகவேள்வி புரிகிற்பான்-மகப்பேற்று வேள்வியைச் செய்யத் தொடங்கினுன் எ - று.

நியமம் - கடன்; முறைமை. உரியதேவி - யாகபத்தினி யாதற்குரிய மா தேவி. புக்கனன்: முற்றெச்சம். (எ)

ஆசறு*ம றைப்புலவ ராசிரியர் காட்டும்
மாசறுச டங்கின்வழி மந்திரமு தாத்த
ஓசையனு தாத்தசோரி தந்தழுவ வோதி
வாசவ னிருக்கையி லிருந்†தேரி வளர்ப்பான்.

(இ - ள்.) ஆசு அறும் மறைப்புலவர் ஆசிரியர் - குற்றமற்ற வேத நூற் புலமையுடையவராகிய குரவர், காட்டும் மாசு அறு சடங்கின் வழி-காட்டுகின்ற குற்றமற்ற கரணத்தின் வழியே, மந்திரம் - மந்திரங்களை, உதாத்தம் அனுதாத்தம் சொரிதம் ஓசை தழுவ ஓதி - எடுத்தல் படுத்தல் நலிதல் என்னும் ஓசை தழுவும்படி உச்சரித்து, வாசவன் இருக்கையில்இருந்து எரி வளர்ப்பான்-(திருக்கோயிலுக்குக்) கீழ்த்திசையிலிருந்து வேள்வித் தீயை வளர்ப்பானுயினன் எ - று.

புலவரும் ஆசிரியரும் என்றுமாம். உதாத்தம் - எடுத்தல், அனுதாத்தம்-படுத்தல், சொரிதம்-நலிதல். இந்திரனுக் கிருப்பிடம் கீழ்த்திசை யாகலின் அதனை வாசவனிருக்கை யென்ருர். (அ)

விசும்புநில னுந்திசையும் வேள்வியடு சாலைப்
பசும்புகை படர்ந்தொரு படாமென மறைப்பத்
தசும்புபடு நெய்பொரி சமித்தினெடு வானேர்க்
கசும்புபடு மின்னமுதி னுகுதி மடுத்தான்.

(இ - ள்.) வேள்வி அடுசாலைப் பசும் புகை - வேள்விபுரிகின்ற சாலையினின் றெழுந்த பசிய புகையானது, விசும்பும் நிலனும் திசையும் படர்ந்து-வானிலும் நிலத்திலும் திசைகளிலும் பரவி, ஒருபடாம் எனமறைப்ப - ஒரு போர்வைபோல மறைக்க, தசும்பு படு நெய்

---

(பா - ம்.) * ஆசற. † இருக்கையினிருந்து.

பொரி சமித்தினொடு-குடத்திலுள்ள நெய் பொரி சமித்துக்களால், வானோர்க்கு அசும்புபடும் இன் அமுதின்-தேவர்களுக்கு ஊற்றெடுக்கும்இனிய அமுதம்போல, ஆகுதி மடுத்தான்-ஆகுதி செய்தான் எ-று.

நெய்யாலும் பொரியாலும் சமித்தாலும். ஒடு: கருவிப் பொருட்டு; எண்ணொடுவாக்கி ஐயுருபு விரித்து ஆகுதியாகக் கொடுத்தான் என முடித்தலுமாம். சமித்து - ஓம விறகு; அத்தி, அரசு, பலாசு, வன்னி முதலியன. (௯)

ஐம்முக னனாதிபர மாத்தனுரை யாற்றால்
நெய்ம்முக நிறைத்தழ னிமிர்த்துவரு* மெல்லை
பைம்முக வராவணி பரஞ்சுடர் தனிப்ப
மைம்முக நெடுங்கணிம வான்மனைவி நாண.

(இ - ள்.) ஐம்முகன் அனாதி பரமாத்தன்-ஐந்து திருமுகங்களையுடையவனும் அனாதியாயுள்ளவனும் பரமாத்தனுமாகிய சிவபெருமானுடைய, உரை ஆற்றால் - திருவாக்காகிய மறை வழிப்படி, நெய்முகம் நிறைத்து-நெய்யை வேள்விக் குண்டத்தில் நிறைத்து, அழல் நிமிர்த்து வரும் எல்லை - தீயை வளர்த்து வரும்பொழுது, பைமுக அரா அணி பரஞ்சுடர் தனிப்ப - படத்தைத் தன்னிடத்துடைய பாம்பை அணிந்த சிவபரஞ்சோதி தனிக்கவும், மைமுக நெடுங்கண் இமவான் மனைவி நாண-மைதீட்டிய இடத்தினையுடைய நீண்ட கண்களையுடைய மலையரசன் மனைவியாகிய மேனை நாணுறவும் எ - று.

ஐந்து முகங்கள்-ஈசானம், தற்புருடம், அகோரம், வாமம், சத்தியோசாதம் என்பன. ஆத்தன்-உண்மையுரைப்போன், தோழன்; பரம ஆத்தன்-மேலாகிய ஆப்தன்; கடவுள். நிமிர்ந்து என்பதுபாடமாயின் நிறைத்து என்பதை நிறைக்க வெனத் திரித்துரைக்க. இது முதல் பத்துச் செய்யுட்களால் திருவவதாரத்தின் சிறப்பைக் கூறுகின்றார். (௧0)

வள்ளன்மல யத்துவச மீனவன் வலத்தோள்
துள்ளமனை காஞ்சனை சுருங்கிய மருங்குல்
தள்ளவெழு கொங்கைக டதும்பநிமிர் தீம்பால்
வெள்ளமொழு கக்கரிய வேற்கணிட னாட.

(இ - ள்.) வள்ளல் மலயத்துவச மீனவன் - வள்ளலாகிய மலயத்துவச பாண்டியனது, வலத்தோள் துள்ள - வலத்தோள் துடிக்கவும், மனை காஞ்சனை சுருங்கிய மருங்குல் தள்ள - (அவன்) மனைவியாகிய காஞ்சனையினது நுண்ணிய இடை ஒசியும்படி, எழு கொங்கைகள் ததும்ப நிமிர் திம்பால் வெள்ளம் ஒழுக - பருத்தெழுந்த கொங்கைகளினின்றும் தளும்பப் பெருகிய இனிய பால் வெள்ளம் ஒழுகவும், கரியவேல் இடக்கண் ஆட-அவளது வேல்போன்ற கரிய இடதுகண் துடிக்கவும் எ - று.

---

(பா - ம்.) * நிமிர்ந்துவரும்.

தோள், கண் முதலியவை ஆடவர்க்கு வலமும், பெண்டிர்க்கு இடமும் துடிப்பின் நலமுண்டாகும்; மாறித் துடிப்பின் தீங்குண்டாகும். அன்பினால் கொங்கை பூரித்துப் பால் சுரக்கும் என்க. (கக)

இவ்வுலக மன்றியுல கேழுமகிழ் வெய்தச்
சைவமுத லாயின தவத்துறை நிவப்ப
ஔவிய மறங்கெட வறங்குது கலிப்பத்
தெய்வமறை துந்துபி திசைப்புல னிசைப்ப.

(இ - ள்.) இவ்வுலகம் அன்றி - இந்த நிலவுலகத்திலுள்ளாரே யல்லாமல், ஏழு உலகும் மகிழ்வு எய்த - ஏழு உலகங்களிலுள்ளவர்களும் மகிழ்ச்சியடையவும், தவத்துறை சைவமுதலாயின நிவப்ப - தவநெறியாகிய சைவமுதலிய அகச் சமயங்கள் மேலோங்கவும், ஔவியம் மறம் கெட - பொறாமை முதலிய பாவங்கள் ஒழியவும், அறம் குதுகலிப்ப-அறமானது களி கூரவும், தெய்வமறை துந்துபி - தெய்வத்தன்மையையுடைய மறைகளும் தேவ துந்துபிகளும்; திசைப்புலன் இசைப்ப-திசையிடங்களனைத்திலும் ஒலிக்கவும் எ-று.

அகச்சமயம்-சைவம், பாசுபதம், மாவிரதம், காளாமுகம், வைரவம், வாமம் என்பன; பிறவா றுரைத்தல் அமையுமாயினுங் கொள்க. ஔவியத்தால் விளையும் மறங்கெட எனினுமாம். (கஉ)

மைம்மலர் நெடுங்கணர மங்கையர் நடிப்ப
மெய்ம்மன மொழிச்செயலின் வேறுபட லின்றி
அம்மதுரை மாநகரு ளாரக மகிழ்ச்சி
தம்மையறி யாதன தலைத்தலை சிறப்ப.

(இ - ள்.) மை மலர் நெடுங்கண் - மை திட்டிய மலர்போன்ற நெடிய கண்களையுடைய, அரமங்கையர் நடிப்ப - அரம்பையர் கூத்தயரவும், அ மதுரை மாநகர் உளார் - அந்த மதுரையாகிய பெரிய நகரத்திலுள்ளவர்கள், மெய் மனம் மொழி செயலின் வேறுபட லின்றி - உடல் உள்ளம் உரையாகிய மூன்றின் செயலினாலும் வேறுபடாது, தம்மை அறியாதன - தம்மை அறியாமைக்குக் காரணமாகிய, அகமகிழ்ச்சி - உள்ளக் களிப்பு, தலைத்தலை சிறப்ப - மேலும் மேலும் ஓங்கப் பெறவும் எ - று.

மைம்மலர் என்பதற்கு மை பரந்த என்றும், நீலோற்பல மலரென்றும் பொருள் கூறலுமாம். மெய்ம்மையாகிய மனமொழி செயல் என விரிப்பினும் அமையும்; மூன்று கரணங்களும் ஒற்றுமைப்பட வென்க. நகருளார் மகிழ்ச்சி சிறக்கப் பெற. (கங)

மாந்தர்பயில் மூவறுசோன் மாநில வரைப்பில்
தீந்தமிழ் வழங்குதிரு நாடது சிறப்ப
ஆய்ந்ததமிழ் நாடர சளித்துமுறை செய்யும்
வேந்தர்களின் மீனவர்* விழுத்தகைமை யெய்த.

(பா - ம்.) * மீனவன்.

(இ - ள்.) மாந்தர் பயில் மூவாறு சொல் மாநில வரைப்பில் - மக்கள் வழங்குகின்ற பதினெட்டு மொழிகளுள்ள பெரிய நிலவுலகத்தில், தீந்தமிழ் வழங்கு திருநாடு சிறப்ப - இனிய தமிழ் மொழி வழங்குகின்ற அழகிய நாடு சிறந்து ஓங்கவும், ஆய்ந்த தமிழ் நாடு - சங்கமிருந்து ஆராய்ந்த அத் தமிழ்நாட்டின் மண்டலங்களை, அரசு அளித்து முறை செய்யும் - அரசாண்டு நீதி செலுத்துகின்ற, வேந்தர்களில் - மன்னர்களில், மீனவர் விழுத்தகைமை எய்த - பாண்டியர்கள் சிறந்த பெருமையைப் பெறவும் எ - று.

மாந்தர் பயிலாத நிலமு முண்டாகலின் 'பயில்' என்றார். பதினெண்மொழி முன்பு உரைக்கப்பட்டன. தமிழகத்திற்குத் திருநாடு என்பதும் ஒரு பெயர் போலும். அது: பகுதிப்பொருள் விகுதி. வேந்தர்கள் - சேர, பாண்டிய, சோழர்கள். திருத்தொண்டர் புராணத்துள் திருஞானசம்பந்தரின் திருவவதாரம் கூறும் வழி 'திசையனைத்தின் பெருமையெலாம் தென்றிசையே வென்றேற' என்பது முதலாகக் கூறியுள்ளன இங்கு நோக்கற்பாலன. (௧௪)

நோய்தழ லெரிக்கடவு ணோற்றபய னெய்தக்
கோய்தளி ரெனத்தழல் கொழுந்துபடு குண்டத்
தைதவி* ழிதழ்க்கமல மப்பொழு தலர்ந்தோர்
மோய்தளிர் விரைக்கொடி முளைத்தெழுவ தென்ன.

(இ - ள்.) அழல் எரிக் கடவுள் - தீக் கடவுள், நோற்ற பயன் நொய்து எய்த - தவஞ் செய்த பயனை எளிதில் அடையவும், கொய் தளிர் என - கொய்யப்பட்ட தளிர்போல், தழல் கொழுந்து படு குண்டத்து - நெருப்புக் கொழுந்து விட்டெரிகின்ற வேள்விக் குண்டத்தின்கண்; ஐது அவிழ் இதழ் கமலம் - அழகியதாக விரிந்த இதழ்களையுடைய தாமரை மலர், அப்பொழுது அலர்ந்து - அப்போதே விரியப்பெற்று, ஓர் மொய் தளிர் விரைக்கொடி - நெருங்கிய தளிர்களையுடைய மணமுள்ள ஒரு கொடியானது, முளைத்து எழுவது என்ன - தோன்றி மேலெழுவதைப் போலவும் எ - று.

நொய்து - விரைய. அழல் எரி, ஒரு பொருளன. கொய்தளிர் குழைவுக்கும் நிறத்துக்கும் உவமை. ஐது-அழகிது; நுண்ணிதுமாம். ஐதவழ் என்னும் பாடத்திற்கு அழகு தவழும் என வுரைக்க. அலர்ந்த என்னும் பெயரெச்சம் ஈறு தொக்கதுமாம். இச்செய்யுளின் மூன்றுமடி முதல் குழவியின் எழிலும் தோற்றமும் கூறுகின்றார். (௧௫)

விட்டிலகு சூழியம் விழுங்குசிறு கொண்டை
வட்டமதி வாய்க்குறு முயற்கறையை மானக்
கட்டியதி ணுற்றிய கதிர்த்தரள மாலை
சுட்டியதில் விட்டொழுகு சூழ்கிரண மொப்ப.

(இ - ள்.) விட்டு இலகு சூழியம் விழுங்கு - ஒளிவிட்டு விளங்காநின்ற முத்துச் சூழியத்தால் விழுங்கப்பட்ட, சிறு கொண்டை - சிறிய கொண்டையானது, வட்டம் மதிவாய் - வட்டமாகிய சந்திரனிடத்

(பா - ம்.) * ஐதவழ்.

துள்ள, குறுமுயல் கறையை மான - சிறிய முயலாகிய களங்கத்தை ஒக்கவும், அதில் கட்டி நாற்றிய - அச்சூழியத்தில் கட்டித் தொங்க விட்ட, கதிர்த் தரள மாலை-ஒளியினையுடைய முத்துமாலை, சுட்டியதில் - மேல் சுட்டப்பட்ட சந்திரனினின்றும், விட்டு ஒழுகு சூழ் கிரணம் ஒப்ப-விலகி வீழ்கின்ற சூழ்ந்த கிரணத்தை ஒக்கவும் எ - று.

சூழியம்-கொண்டையைச் சுற்றியணியும் முத்தானியன்ற அணி. அதனாற் கவரப்பட்டுக் கொண்டை சிறிதே தோன்றிற்று. மதியினிடத்துள்ள கறையை மானென்றும் முயலென்றும் கூறுதல் வழக்கு. சூழியத்திற்கு வட்டமாகிய மதியும், கொண்டைக்கு அதனுட் களங்கமும், முத்துத் தொங்கலுக்குக் கீழ்நோக்கிச் செல்லும் அதன் கிரணமும் உவமைகளாம். சுட்டி யென்பதனை ஓர் அணியாகக் கொண்டுரைப்பாருமுளர்; பொருந்துமேற் கொள்க. (௧௬)

தீங்குதலை யின்னமுத மார்பின்வழி சிந்தி
யாங்கிள நிலாவொழுகு மாரவட மின்ன
வீங்குட லிளம்பரிதி வெஞ்சுடர் விழுங்கி
வாங்குகடல் வித்துரும மாலையொளி கால.

(இ - ள்.) தீங்குதலை இன் அமுதம்-இனிய குதலையுடன்கூடிய இனிய அமுதமானது, மார்பின் வழி சிந்தியாங்கு-மார்பின் வழியாகச் சிந்தியதுபோல, இளநிலா ஒழுகும் ஆரவடம் மின்ன-இளநிலவு சிந்தும் முத்துமாலை ஒளிவிடவும், வீங்கு உடல் இளம்பரிதி - ஒளிமிக்க வடிவத்தினையுடைய இளஞாயிற்றின், வெஞ்சுடர் விழுங்கி-வெப்பமாகிய ஒளியை உண்டு, வாங்குகடல் வித்துருமமாலை ஒளிகால-வளைந்த கடலிற்றோன்றிய பவளத்தின் மாலையானது ஒளி வீசவும் எ - று.

குதலை-பொருளறிய வாராத இளஞ்சொல். அமுதம் - வாயூறல்; பேசும்பொழுது ஊறல் ஒழுகுமாகலின் 'குதலை யின்னமுதம்' என்றார்.

"கல்லா மழலைக் கனியூறல் கலந்து கொஞ்சும்" என்றும்,
"துகிர்வா யூறுநீர் நனைமார்பி னோடு" என்றும்

பிறருங் கூறுதல் காண்க. குதலையாகிய அமுதம் என்றுரைப்பாருமுளர். சிந்தப் பெற்று அவ்விடத்து வடம் மின்ன என்றுரைத்தலுமாம். ஆரம் - முத்து. வித்துருமம் - பவளம். (௧௭)

சிற்றிடை வளைந்தசிறு மென்றுகில் புறஞ்சூழ்
பொற்றிரு மணிச்சிறிய மேகலை புலம்ப
விற்றிரு மணிக்குழை விழுங்கிய குதம்பை
சுற்றிருள் கடிந்துசிறு தோள்வருடி யாட.

(இ - ள்.) சிறுஇடை வளைந்த-சிறிய இடையைச்சூழ்ந்த, மென் சிறுதுகில் புறம் சூழ்-மெல்லிய சிற்றுடையின் புறத்தே சூழப்பெற்ற, பொன் திருமணி - பொன்னாலாகிய அழகிய மணிகள் பதித்த, சிறிய மேகலை புலம்ப-சிறிய மேகலை ஒலிக்கவும், வில் திருமணிக் குழை - ஒளி பொருந்திய அழகிய மாணிக்கக் குழையை, விழுங்கிய குதம்பை-தன்னுட்படுத்திய குதம்பைகள், சுற்று இருள் கடிந்து-சூழ்ந்த இருளை

ஒட்டி, சிறுதோள் வருடி ஆட-சிறிய தோள்களைத் தடவி அசையவும் எ - று.

துகிலின் புறமெனல் பொருந்தாமை காண்க. மேகலை - எண் கோவை யுடையது. பொன் மேகலையெனக் கூட்டுக. (கஅ)

தெள்ளமுத மென்மழலை சிந்தவிள மூரல்
முள்ளெயி றரும்பமுலை மூன்றுடைய தோர்பெண்
பிள்ளையென மூவொரு பிராயமொடு நின்றாள்
எள்ளரிய பல்லுயிரு மெவ்வுலகு மீன்றாள்.

(இ - ள்.) தெள் அமுதம் - தெளிந்த அமுதம் போன்ற, மெல் மழலை சிந்த - மெல்லிய மழலைச் சொற்கள் தோன்றவும், இளமூரல் முள் எயிறு அரும்ப-புன்னகையினையுடைய கூரிய பற்கள் வெளிப் படவும், எள் அரிய - இகழ்தலில்லாத, பல் உயிரும் எ உலகும் ஈன் றாள் - பல வுயிர்களையும் எல்லா வுலகங்களையும் பெற்றவளாகிய உமையவள், முலை மூன்று உடையது ஓர் பெண்பிள்ளை என-மூன்று முலைகளை யுடையதாகிய ஒருபெண் மகவாக, மூவொரு பிராயமொடு நின்றாள் - மூன்று வயதுடன் நின்றாள் எ - று.

அமுதம் என் எனப் பிரித்தலுமாம். உடையதோர் பெண்பிள்ளை: வழக்கு. ஒரு மூன்று பிராயமென்க. ஈன்றாள்: பெயர். (கக)

[அறுசீரடி யாசிரிய விருத்தம்]

குறுந்தளிர்மெல் லடிக்கிடந்த சிறுமணிநூ
புரஞ்சதங்கை குழறி யேங்க
நறுந்தளிர்போ லசைந்துதளர் நடையொதுங்கி
மழலையிள நகையுந் தோன்றப்
பிறந்தபெரும் பயன்பெறுபொன் மாலைமடி
யிருந்தொருபெண் பிள்ளை யானாள்
அறந்தழுவு நெறிநின்றோர்க் கிகபோகம்*
வீடளிக்கு மம்மை யம்மா.

(இ-ள்.) அறம் தழுவும் நெறி நின்றோர்க்கு-அறத்தைப்பொருந் திய நன்னெறியில் ஒழுகுவோருக்கு, இகபோகம் வீடு அளிக்கும் - அம்மை-இம்மை மறுமை யின்பங்களையும் வீடு பேற்றையும் அருளும் உமையம்மையார், தளிர் குறுமெல் அடிகிடந்த-தளிர்போன்ற சிறிய மெல்லிய திருவடிகளிற் கிடந்த, சிறுமணி நூபுரம் சதங்கை - சிறிய மணிகளையுடைய சிலம்பும் சதங்கையும், குழறி ஏங்க-கலந்து ஒலிக் கவும், மழலை இளநகையும் தோன்ற-மழலைச் சொற்களும் புன்னகை யுந் தோன்றவும், நறுந்தளிர்போல் அசைந்து-நறிய தளிர் அசைவது போல் அசைந்து, தளர்நடை ஒதுங்க-தளர்ந்த நடை நடந்து, பிறந்த பெரும் பயன் பெறு-பிறந்ததனாலாகிய பெரிய பயனைப் பெறுகின்ற,

(பா - ம்.) * இகம்போகம்.

பொன்மாலை மடி - காஞ்சன மாலையின் மடியின்கண், இருந்து ஒரு பெண் பிள்ளை ஆனாள்-ஒரு பெண்ணாக விருந்தாள் எ - று.

குழறி யேங்கல்-மயங்கி யொலித்தல். தளர் நடையாக. மழலை யென்பதனோடும் உம்மையைக் கூட்டுக. இருந்து ஆனாள் என்பதை ஆகியிருந்தாள் என மாற்றுக. அறம்—அறநாலுமாம். மறுமையின்பம் உபலக்கணத்தாற் கொள்ளப்பட்டது. அம்மா: வியப்பிடைச்சொல்.

செய்யவாய் வெளிறாது துணைமுலைக்கண்
கருகாது சேல்போ னீண்ட
மையவாய் மதர்த்தகருங் கண்பசவா
தையிரண்டு மதியந் தாங்கா
தையவா லிலைவருந்தப் பெறாதுபெறு
மகவையெடுத் தணைத்தாண் மோந்தாள்
துய்யவாய் முத்தங்கொண் டின்புற்றாள்
முன்பெற்ற தோகை யன்னாள்.

(இ - ள்.) செய்யவாய் வெளிறாது - சிவந்த வாய் விளர்க்காமலும், துணை முலைக்கண் கருகாது-இரண்டு முலைக்கண்களும் கறுக்காமலும், சேல் போல் நீண்ட - சேல் மீன் போலும் காதளவு நீண்ட, மையவாய் மதர்த்த கருங்கண் பசவாது - மையையுடையனவாய் மதர்த்த கரிய கண்கள் பசக்காமலும், ஐயிரண்டு மதியம் தாங்காது- பத்து மாதங்கள்சுமக்காமலும், ஐய ஆல் இலை வருந்தப் பெறாது - நொய்மையாகிய ஆலிலை போலும் வயிறு வருந்தப் பெறாமலும், முன் பெற்ற தோகை அன்னாள் - முன்னே பெற்ற மயில்போலும் மேனையை ஒத்தவளாகிய காஞ்சனை, பெறுமகவை - தான்பெற்ற மகவை, எடுத்து அணைத்தாள் - வாரியெடுத்து மார்போடு அணைத்தாள்; மோந்தாள் - உச்சிமோந்தாள்; துய்யவாய் முத்தங்கொண்டு இன்புற்றாள்-புனிதமான வாயால் முத்தமிட்டு இன்பமிக்காள் எ-று.

வாய் விளர்த்தல் முதலியன கருப்பக்குறிகள். வெளிறாதுமுதலிய எதிர்மறை வினை யெச்சங்கள் பெறும் என்பது கொண்டு முடியும். மையை அளாவி என வுரைத்தலுமாம். ஐய-நுண்ணிய. ஆலிலை:வயிற்றுக்கு ஆகுபெயர். துய்ய-தூய. மேனையும் கருவுறாமல் மகளாகப் பெற்றாளாகலின் 'முன்பெற்ற தோகையன்னாள்' என்றார். உமாதேவியார் சிவபெருமானை வணங்கித், தக்கனுக்குப் புதல்வியாய் வளர்ந்த இவ்வுடலைச் சுமக்கிலேன் எனச்சொல்லி, இறைவனருள் பெற்றுச் சென்று இமயமலையிலுள்ள ஒரு தடாகத்திலலர்ந்த தாமரை மலர் மீது குழவியாய் அமர்ந்திருக்க, அங்கே தம்மைப் புதல்வியாகப்பெறு தற்குத் தவம்புரிந்துகொண்டிருந்த மலையரசன் அக்குழவியைக்கண்டு ஆராமகிழ்ச்சியுடன் எடுத்துத் தன் மனைவியாகிய மேனையின் கையிற் கொடுக்க அவள் பெரு மகிழ்ச்சியுடன் பெற்றுவளர்த்தாள் என்பது வரலாறு. (௨௧)

பரையாதி விருப்பறிவு தொழிலாகி
யுலகமெலாம் படைத்துக் காத்து
வரையாது துடைத்துமறைத் தருளியவை
நின்றாந்தன் வடிவு வேறாய்

உரையாதி மறைகடந்த வொருமுதல்வி
திருமகளா யுதித்தற் கிந்தத்
தரையாளு மன்னவன்செய் தவமிதுவோ
வதற்குரிய தவந்தான் மன்னே.

(இ - ள்.) பரை ஆதி விருப்பு அறிவு தொழில் ஆகி - பராசத்தி ஆதிசத்தி இச்சாசத்தி ஞானசத்தி கிரியாசத்தி என்னும் ஐவகைச் சத்திகளாகி, உலகம் எலாம்-எல்லாவுலகங்களையும், படைத்துகாத்து வரையாது துடைத்து மறைத்து அருளி - படைத்தல் காத்தல் ஒழிவின்றி அழித்தல் மறைத்தல் அருளல் என்னும் ஐவகைத் தொழில்களைப் புரிந்து, அவை நின்றும் தன் வடிவு வேறு ஆய்-அவ்வைவகைச் சத்திகளினின்றும் தன் உண்மை வடிவு வேறாகி, உரை ஆதி - வாக்கு மனங்களையும், மறை-வேதங்களையும், கடந்த-தாண்டி நிற்கின்ற, ஒரு முதல்வி-ஒப்பற்ற தலைவியானவள், திருமகளாய் உதித்தற்கு-திருமகளாய்த் தோன்றுதற்கு, இந்தத் தரை ஆளும் மன்னவன் - இந்நிலத்தினை ஆளும் மலயத்துவச பாண்டியன், செய் தவம் இதுவோ - இம்மையிற் செய்த இத்தவமோ அமைவது, அதற்கு உரிய தவம் மன் - அதற்குப் பொருந்திய தவம் பெரிதாகும் எ - று.

சிவசத்தி யொன்றே காரிய வேறுபாட்டால் ஐவகைச் சத்தியாகி நிற்றலை,

"ஈறிலா தவ ளொருத்தியே யைந்தொழி லியற்ற
வேறு வேறுபேர் பெற்றெனன".

என முன்னுங் கூறினர். ஐந்தொழில் - சிருட்டி, திதி, சங்காரம், திரோபவம், அநுக்கிரகம் என வடமொழியிற் பெயர் பெறும். அவற்றினின்றும் என்பது சாரியை தொக்கு அவை நின்றும் என நின்றது. ஆதியென்றதனால் மனம் கொள்ளப்பட்டது; உடலையும் கொள்ளுதலுமாம். தவம் இது வென்றது மகப்பேற்று வேள்வியை. மன் - பெரிது; முற்பிறவிகளிற் பெருந்தவம் செய்திருக்க வேண்டுமென்பது. தான், ஓ: இரண்டும் அசைகள். (௨௨)

கள்ளமா நெறியொழுகும் பொறிகடந்து
கரணமெலாங் கடந்தா னந்த
வெள்ளமாம் பரஞான வடிவுடையா
டன்னன்பின் வெளிவந் தின்றோர்
பிள்ளையா யவதரித்த கருணையுந்தன்
மணுட்டிதவப் பேறுந் தேறான்
பள்ளமா கடற்றானைப் பஞ்சவர்கோ
னெஞ்சத்துட் பரிவு* கூர்ந்தான்.

(இ-ள்.) கள்ளம் ஆம்நெறி ஒழுகும் பொறிகடந்து-வஞ்சமாகிய வழியில் ஒழுகும் ஐம்பொறி உணர்வையும் கடந்து, கரணம் எலாம்

(பா - ம்.) * நெஞ்சகத்துப் பரிவு.

கடந்து-அந்தக்கரண உணர்வனைத்தையுங் கடந்து, ஆனந்தவெள்ளம் ஆம் - பேரின்பப் பெருக்காகிய, பரஞான வடிவு உடையாள் - பரஞானமே திருவுருவாகிய உமையம்மை, தன் அன்பின் - தன் அன்பினாலே, வெளிவந்து - யாவர்க்கும் புலனாகும்படி வந்து, இன்று ஓர் பிள்ளையாய் அவதரித்த கருணையும்-இப்பொழுது ஒரு பெண்மகவாய் அவதரித்த அருளையும், தன் மனாட்டி தவப்பேறும் தேறான் - தனது மனைவியின் தவப்பயனையும் தெளியாதவனாய், பள்ளம் மா கடல் தானை-பள்ளமாகிய பெரிய கடல்போன்ற சேனைகளையுடைய, பஞ்சவர்கோன்-பாண்டி மன்னன், நெஞ்சத்துள் பரிவு கூர்ந்தான் - மனத்தின்கண் துன்பமிகுந்தான் எ - று.

"சத்திதன் வடிவே தென்னிற் றடையிலா ஞான மாகும்"

என்னும் சிவஞானசித்தியால் சத்தியின் வடிவு ஞானமாதலை யுணர்க. மணவாட்டி யென்பது மனாட்டியென மருவிற்று. மா கடல், மா உரிச்சொல்லாதலின் இயல்பாயிற்று. பரிவு கூர்ந்த வியல்பினை வருஞ் செய்யுளிற் காண்க. (உரு)

மகவின்றிப் பலபகல்யான் வருந்தியருந்
தவம்புரிந்தேன் மைந்தற் பேறு
தகவிந்த மகஞ்செய்தே னதுவுமொரு
பெண்மகவைத் தந்த தந்தோ
முகவிந்து நிலவொழுக வருபெண்ணு
முலைமூன்றாய் முகிழ்த்து மாற்றார்
நகவந்த தென்னேயோ வென்றுவகை
யிலனாகி நலியு மெல்லை.

(இ - ள்.) மகவு இன்றி - பிள்ளையில்லாமல், யான் பலபகல் வருந்தி அருந்தவம் புரிந்தேன்-யான் பலகாலம் வருந்தி அரிய தவத்தைச் செய்தேன்; (அதனால் எய்தாமையின் பின்னும்), மைந்தன்பேறு தக இந்த மகம் செய்தேன்-புதல்வற் பேறு பொருந்த இந்த வேள்வியினைச் செய்தேன்; அதுவும் ஒரு பெண்மகவைத் தந்தது-அந்த வேள்வியும் ஒரு பெண்பிள்ளையைக் கொடுத்தது; அந்தோ - ஐயோ, முக இந்து நிலவு ஒழுக வரு பெண்ணும் - முகமாகிய மதியினின்றும் நிலவொழுகத் தோன்றிய இப்பெண்ணும், முலை மூன்றாய் முகிழ்த்து - முலைகள் மூன்றாக அரும்பப்பெற்று, மாற்றார் நக வந்தது - பகைவர் சிரிக்கத் தோன்றியது; என்னேயோ என்று - இஃது என்னையோ வென்று கருதி, உவகை இலனாகி நலியும் எல்லை-மகிழ்ச்சி இல்லாதவனாய் வருந்தும் பொழுதில் எ - று.

தக - பொருந்த. மகனை விரும்பிச் செய்ய மகளை யளித்தது. அந்தோ: இரக்க விடைச்சொல்; அதனைப் பெண்ணும் என்பதன் பின்னே கூட்டுக. நக - எள்ளி நகும்படி. என்னேயோ-இதற்குக் காரணம் என்னையோ, நான் செய்த தவறு என்னையோ; ஓ: இரக்கத்தில் வந்தது. (உச)

மன்னவநின் றிருமகட்கு மைந்தர்போற்
சடங்கனைத்தும் வழாது வேதஞ்
சொன்னமுறை செய்துபெயர் தடாதகையென்
றிட்டுமுடி சூட்டு வாயிப்
பொன்னனையா டனக்கிறைவன் வரும்பொழுதோர்
முலைமறையும் புந்தி மாழ்கேல்
என்னவர னருளாலோர் திருவாக்கு
விசும்பிடைநின் றெழுந்த தன்றே.

(இ - ள்.) *மன்னவ-அரசனே, நின் திருமகட்கு - உன்னுடைய திருமகளுக்கு, மைந்தர் போல்-புதல்வருக்குச் செய்வதுபோல், சடங்கு அனைத்தும் வழாது-சடங்குகள் எல்லாம் வழுவாமல், வேதம்சொன்ன முறைசெய்து - மறை கூறியபடி செய்து, தடாதகை என்று பெயர் இட்டு-தடாதகை என்று பெயர் சூட்டி, முடி சூட்டுவாய் - மகுடஞ் சூட்டுவாய்; இப்பொன் அனையாள் தனக்கு இறைவன் வரும் பொழுது-இந்தப் பொன்போலும் வடிவினையுடையாளுக்குத் தலைவன் வருங்காலை, ஓர் முலை மறையும்-ஒரு கொங்கை மறைந்துவிடும் (ஆதலால்), புந்திமாழ்கேல் என்ன-மனம் வருந்தாதே என்று, அரன் அருளால் ஓர் திருவாக்கு விசும்பிடை நின்று எழுந்தது - சிவபெருமான் திருவருளால் ஒரு திருவாக்கு வானினின்றும் தோன்றியது எ - று.*

*பெயரிட்டு எனக் கூட்டுக. மாழ்குதல்-மயங்குதல். அன்று, ஏ: அசைகள்.* (உ௧)

அவ்வாக்குச் செவிநிரம்ப வன்புவகை
யகநிரம்ப வகல மெல்லாம்
மெய்வாக்கு மனமோன்ற விழிவாக்கும்
புனனிரம்ப விமலற் போற்றி
நெய்வாக்கு மகநிரப்பி யெழுந்துமனை
யொடுஞ்சாலை நீத்தி ரண்டு
கைவாக்கு மியங்கலிப்பக் கடிமாட
மனைப்புகுந்தான் கழற்கால் வேந்தன்.

(இ - ள்.) *அவ்வாக்குச் செவி நிரம்ப-அந்த வான் வாக்குச் செவியில் நிரம்பியவுடன், அன்பு உவகை அகம் நிரம்ப - அன்பும் மகிழ்ச்சியும் உள்ளத்தில் நிறையவும், மெய்வாக்கு மனம் ஒன்ற-உடல் உரை உள்ளம் மூன்றும் ஒருவழிப்பட, விழிவாக்கும் புனல் அகலம் எல்லாம் நிரம்ப-கண்கள் பொழியும் இன்ப நீர் மார்பு முழுதும் நிறையவும், கழல் கால் வேந்தன்-வீரகண்டை யணிந்த காலினையுடைய மன்னன், விமலன்போற்றி-நின்மலனாகிய இறைவனைத் துதித்து, நெய் வாக்கும் மகம் நிரப்பி-நெய்யினைச் சொரியும் வேள்வியினை முடித்து, எழுந்து மனையொடும் சாலைநீத்து-மனைவியொடும் எழுந்துவேள்விச்சாலையை விடுத்து, இரண்டுகை வாக்கும்இயம் கலிப்ப-இரண்டுபக்கங்களிலும்*

இயங்கள் ஒலிக்க, கடிமாட மனைபுகுந்தான்-காவலைக் கொண்ட மாளிகையையுடைய அரமனையை அடைந்தான் எ - று.

அன்பும் உவகையும். அகலமெல்லாம் புனல் நிரம்ப வென்க. நெய்வாக்கு என்பதில் வாக்குதல் - வார்த்தல். நிரப்பி - பூரணாகுதி செய்து முடித்து. கைவாக்கு - கைப்பக்கம்; வழக்கு; வாகு எனவும் வழங்கும்; கைகளால் தாக்கப்படும் என்றுரைப்பாரு முளர்; வாக்கும் என்பதற்கு அது பொருளாகாமை யுணர்க. (௨௬)

முரசதிர்ப்ப மங்கலங்கோண் டெதிர்வருவார்
முகத்துவகை முறுவல் பூப்ப
அரசிருக்கு மண்டபம்புக் கினிதமர்ந்து
கனகமழை யான்ற கேள்வி
விரசிருக்கு மறையவர்கைப் பெய்தேவர்க்கு
மம்முறையால் வெறுப்ப நல்கிப்
பரசிருக்குங் கரதலத்தெம் பரன்கோயி
னனிசிறப்புப் பல்க நல்கா.

(இ - ள்) முரசு அதிர்ப்ப - பேரிகை ஒலிக்கவும், மங்கலம் கொண்டு எதிர் வருவார் - எட்டு மங்கலங்களையும் ஏந்தி எதிர் வருகின்ற மகளிரின், முகத்து உவகை முறுவல் பூப்ப - முகத்தின்கண் மகிழ்ச்சி நகை தோன்றவும், அரசு இருக்கும் மண்டபம் புக்கு இனிது அமர்ந்து-அரசிருக்கை மண்டபத்திற் புகுந்து இனிதாகக் கொலுவீற்றிருந்து, ஆன்ற கேள்வி விரசிருக்கும் மறையவர் கை - நிறைந்த கேள்வி பொருந்தப்பெற்ற மறையவர் கைகளில், கனக மழை பெய்து-பொன் மழையைப் பொழிந்து, எவர்க்கும் அம்முறையால் வெறுப்ப நல்கி - ஏனை யாவர்க்கும் அங்ஙனமே (அவர்) வெறுக்கும் படி கொடுத்து, பரசு இருக்கும் கரதலத்து எம்பரன் கோயில்-மழுப்படை தங்கிய திருக்கரத்தினையுடைய எம் இறைவன் திருக்கோயிலில், நனி சிறப்புப் பல்க நல்கா-மிகவும் திருவிழா முதலிய பெருகும்படி வேண்டியவற்றைக் கொடுத்து எ - று.

எட்டுமங்கலம்-சாமரம்,நிறைகுடம், கண்ணாடி, தோட்டி, முரசு, விளக்கு, கொடி, இணைக்கயல் என்பன. ஆன்ற - நிறைந்த; அகன்ற என்பதன் மரூஉ. விரசியிருக்குமென்பது விகாரமாயிற்று. வெறுத்தல் செறிதலாகலின் வெறுப்ப என்பதற்கு மிக என்றுரைத்தலுமாம். நல்கா - நல்கி: செயப்படுபொருள் வருவிக்க. (௨௭)

சிறைவிடுமின் சிறைக்களமுஞ் சீத்திடுமி
னேழாண்டு தேயத் தீட்டும்
இறைவிடுமி னயல்வேந்தர் திறைவிடுமி
னிறைநிதிய மீட்டு மாயத்
துறைவிடுமி னறப்புறமு மாலயமும்
பெருக்குமேனத் தொழாரைக் காய்ந்த
கறைவிடுமின் னயில்வேலான் வள்ளுவனைக்
கூய்முரசங் கறங்கச் சாற்றி.

(இ - ள்.) சிறை விடுமின்-சிறைசெய்யப்பட்டவர்களை விட்டு விடுங்கள்; சிறைக்களமும் சீத்திடுமின்-சிறைச்சாலையையும் தூய்மை செய்யுங்கள்; ஏழு ஆண்டு தேயத்து ஈட்டும் இறைவிடுமின் - ஏழு ஆண்டுவரை நாட்டில் வாங்கும் வரிகளை விட்டு விடுங்கள்; அயல் வேந்தர் திறை விடுமின்-வேற்று நாட்டு மன்னர்களின் திறைகளை வாங்காது விடுங்கள்; நிறை நிதியம் ஈட்டும் ஆயத்துறை விடுமின்-நிறைந்த பொருளைத் தேடும் சுங்கத் துறையை நீக்கி விடுங்கள்; அறப்புறமும் ஆலயமும் பெருக்கும் - அறச்சாலைகளையும் ஆலயங்களையும் ஓங்கச் செய்யுங்கள், என-என்று, தொழாரைக் காய்ந்த கறை-பகைவர்களைக் கொன்ற குருதிக் கறையையுடைய, மின் விடும் அயில் வேலான் - ஒளி வீசும் கூரிய வேற்படையையுடைய பாண்டியன், வள்ளுவனை கூய்-வள்ளுவனை அழைத்து, முரசங் கறங்கச் சாற்றி-பேரிகை சாற்றும்படி ஏவி எ-று.

சீத்தல் - தூய்மை செய்தல். ஏழாண்டு, பால கிரகாரிட்ட நிவிர்த்தியின் பொருட்டு; பன்னிரண்டும் கொள்வர். அயல் வேந்தர் - பணிந்த மன்னர். திறை-கப்பம். கறை - உதிரம். அயில்-கூர்மை. வள்ளுவன்-முரசறையும் முதுகுடிப் பிறந்தோன். கூவி யென்பது விகாரமாயிற்று. இன்னின்ன செய்கவென முரச மொலிக்கும்படி சொல்லி யென்க. சாற்றி-சாற்றுவித்து எனினுமாம்.

"கறைபன் னீராண் டுடன்விடுமின் காமர் சாலை தளிநிறுமின்" என்னும் சித்தாமணிச் செய்யுள் இங்கு நோக்கற்பாலது. (உ௮)

கல்யாண மணிமௌலி வேந்தரையுங்
காலியாப்புக் கழல நீத்துக்
கோல்யானை பரிநெடுந்தே ரரசுரிமை
தொன்முறையாற் கொடுத்துப் போக்கிப்
பல்லாருங் கொள்கவெனப் பண்டாரந்
தலைதிறந்து* பசும்பொ னாடை
வில்லாரு மணிக்கொடும்பூண் வெறுக்கைமுத
லெனைப்பலவும் வெறுப்ப வீசி.

(இ - ள்.) கல்யாணம் மணி மௌலி வேந்தரையும்-பொன்னாற் செய்த மணிகளழுத்திய முடிகளையுடைய மன்னர்களையும், கால் யாப்பு கழல நீத்து-(அவர்கள்) கால் விலங்குகளைக் கழற்றி, கொல் யானை பரி நெடுந்தேர் அரசு உரிமை-கொல்லுகின்ற யானைகளையும் குதிரைகளையும் நெடிய தேர்களையும் அரசியலுரிமையையும், தொல் முறையால் கொடுத்துப் போக்கி - முன்னுள்ளவாறே கொடுத்துப் போக விடுத்து, பல்லாரும் கொள்க என-பலரும் எளிதிற் கொள்ளக் கடவரென்று, பண்டாரம் தலை திறந்து-பொருள் அறையைத் திறந்து, பசும் பொன் ஆடை - பசிய பொன்னுடைகளையும், வில் ஆரும் மணி-ஒளி நிறைந்த மணிகளையும், கொடும் பூண்-வளைந்த அணிகளையும், வெறுக்கை முதல் எனைப் பலவும்-பொருள் முதலிய பலவற்றையும், வெறுப்ப வீசி-(அவர்கள்) வெறுக்கும்படி நிறையக் கொடுத்து எ-று.

---

(பா-ம்.) * தனைத்திறந்து.

கல்யாணம்-பொன்னைக் குறிப்பது. வேந்தர் - பகைவராய்ச் சிறைப்பட்டவர். கழல நீத்து: ஒரு சொல்; கழலுமாறு விடுத்துமாம். தொன்முறையாற் பெறுமாறு. பொன்னும் ஆடையும் என்றும், மணி யானியன்ற பூண் என்றும், பூண் முதலிய வெறுக்கை என்றும் கூறுதலுமாம். எனைப் பலவும் - எனைத்தும் பலவாகியவும். வீசி-வரைவின்றி வழங்கி. (௨௯)

தூமரபின் வருபெருமங் கலகவிகட்
கிருநிதியந் துகில்பூண் பாய்மா
காமர்கரி பரித்தடந்தேர்* முதலாய
பலபொருளுங் களிப்ப நல்கிக்
கோமறுகு களிதூங்கச் சுண்ணமோடு
மெண்ணெய்விழாக் குளிப்ப நல்கி
மாமதுரா நகரன்றி மற்றுமுள
நகரெங்கு மகிழ்ச்சி தூங்க.

(இ-ள்.) தூமரபில் வரு-தூய மரபில் வருகின்ற, பெரு மங்கல கவிகட்கு-பெரிய மங்கலப் பாடகர்களுக்கு, இருநிதியம் - பெரும் பொருளும், துகில் பூண்-ஆடைகளும் அணிகளும், பாய் மா-தாவுகின்ற குதிரைகளும், காமர் கரி-அழகிய யானைகளும், பரித் தடந்தேர்-குதிரைகள் பூட்டிய பெரிய தேர்களும், முதலிய பல பொருளும்-இவை முதலிய பல பொருள்களையும், களிப்ப நல்கி-(அவர்கள்) மகிழக் கொடுத்து, கோ மறுகு-மன்னர் வீதிகளில், களி தூங்க-மகிழ்ச்சி மிக, சுண்ணமொடும் எண்ணெய்-மணப் பொடியையும் எண்ணெயையும், விழாக் குளிப்ப நல்கி-நெய்யணி விழாக் கொண்டாடுதற்குக் கொடுத்து, மா மதுரா நகர் அன்றி-பெரிய மதுரைப்பதியே அல்லாமல், மற்றும் உள நகர் எங்கும் மகிழ்ச்சி தூங்க-ஏனைய பதிகளும் களிப்பு மீக்கூர எ-று.

மங்கல கவி: வடநூன் முடிபு. நிதியம்-பொன். விழா-நெய்யணி விழா ; இதனை,

"புதல்வற் பயந்த புனிறுசேர் பொழுதில்
நெய்யணி மயக்கம் புரிந்தோள்"

என ஆசிரியர் தொல்காப்பியர் கூறுமாற்றானும் அறிக. (௩0)

இவ்வண்ண நகர்களிப்ப விறைமகனுங்
களிப்பெய்தி யிறைவர் சொன்ன
அவ்வண்ணஞ் சாதமுதல் வினைநிரப்பித்
தடாதகையென் றழைத்துத் தேவி
மெய்வண்ண மறையுணரா விறைவிதனை
மேனைபோன் மேனு ளேற்ற
கைவண்ணத் தளிர்தீண்டி வளர்ப்பவிம
வான்போலக் களிக்கு நாளில்.

(பா-ம்.) *பரிநெடுந்தேர்.

(இ - ள்.) இவ்வண்ணம் நகர் களிப்ப-இவ்வாறு நகரமெல்லாம் மகிழ, இறைமகனும் களிப்பு எய்தி-மலயத்துவச பாண்டியனும் மகிழ்ச்சி மிக்கு, இறைவர் சொன்ன அவ்வண்ணம்-இறைவர் அசரீரியாக அருளிச்செய்த அத் திருவாக்கின்படியே, சாதம் முதல் வினை நிரப்பி - சாதகன்ம முதலாகிய சடங்குகளை முடித்து, தடாதகை என்று அழைத்து - தடாதகை என்று பெயர்கூறி, தேவி - தன் தேவியாகிய காஞ்சனமாலை, மெய்வண்ணம் மறை உணரா-உண்மைத் தன்மையையுடைய வேதங்களாலும் அறியப்படாத, இறைவிதனை-தடாதகைப் பிராட்டியாரை, மேனைபோல்-மேனையைப்போல், மேல் நாள் நோற்று-முற்பிறப்பில் தவங்கிடந்த, கைவண்ணத் தளிர் தீண்டி வளர்ப்ப-கைகளாகிய அழகிய தளிர்களால் தொட்டு வளர்க்க, இமவான் போலக் களிக்கும் நாளில்-தான் மலையரையன்போல மகிழுங் காலத்தில் எ-று.

சாதம்-பிறப்பு; சாதகன்மம், மறை மெய்வண்ணமுணராத என்றுமாம். தேவி வளர்ப்ப இறைமகனும் களிக்கு நாளில். (௩௧)

திருந்தாத விளங்குதலை யாயமோடு
புறம்போந்து சிறூர்க்குச் சிற்றில்
விருந்தாக மணற்சிறுசோ றட்டும்வரை
யுரங்கிழித்த வேளும் வாய்வைத்
தருந்தாத விளமுலைவாய் வைத்தருந்தப்
பாவைதனக் களித்தும் போதில்
வருந்தாதை யண்டமெலாஞ் சிற்றிலிழைப்
பாளாய்க்கு மகிழ்ச்சி செய்தாள்.

(இ - ள்.) திருந்தாத இளங்குதலை ஆயமொடு-திருத்தம் பெறாத இளமையாகிய மழலைச் சொற்களையுடைய சிறுமிகளின் குழுவொடு, புறம்போந்து-வீதிகளிற் சென்று, சிறு இல்-சிறு வீடு (அமைத்து), சிறூர்க்கு விருந்தாக மணல் சிறு சோறு அட்டும்-சிறுவர்களுக்கு விருந்தாகுமாறு மணலால் சிறு சோறு சமைத்தும், வரை உரம் கிழித்த வேளும் - கிரவுஞ்ச மலையின் மார்பைப் பிளந்த முருகக் கடவுளும்; வாய்வைத்து அருந்தாத-வாயினை வைத்து உண்ணப் பெறாத, இள முலை வாய் வைத்து அருந்த-இளமையாகிய தனத்தில் வாய்வைத்து உண்ணுமாறு, பாவை தனக்கு அளித்தும்-பாவைக்குக் கொடுத்தும், போதில் வரும் தாதை அண்டம் எலாம் - தாமரை மலரில் தோன்றிய பிரமனுடைய அண்டங்களை யெல்லாம், சிற்றில் இழைப்பாள் - (நினைப்பளவில்) சிறுவீடாக இயற்றும் இறைவி, ஆய்க்கு மகிழ்ச்சி செய்தாள்-தன் தாயாகிய காஞ்சன மாலைக்குக் களிப்பை உண்டாக்கினாள் எ-று.

வேளும்: உம்மை உயர்வு சிறப்பு. வாய்வைத்தருந்தாமை உண்ணா முலையாள் என்னும் பெயரானுமறிக. சோறடுதல் முதலியன பாவனை. பாவை-மரப்பாவை முதலியன. தாதை-பிரமன்; பெயர். தாதையண்டம் - பிரமாண்டம். சிற்றிலிழைத்தல்போல் அண்டங்களையெல்லாம் எளிதாகச் செய்வாள். ஆய், திரிபு: திசைச் சொல்லுமென்ப; சிறூர் என்பதற்குச் சிறுமியர் என்று பொருள் கூறுவாருமுளர்; அது சிறவாமை காண்க. (௩௨)

தீட்டுவா ளிரண்டனைய கண்களிப்பத்
தோழியர்க்குத் தெரிய வாடிக்
காட்டுவா ளெனக்*கழங்கு பந்துபயின்
றம்மனையுங் கற்றுப் பாசம்
வீட்டுவான் மேலோடுகீழ் தள்ளவேமை
வினைக்கயிறு வீக்கி யூசல்
ஆட்டுவாள் காட்டுதல்போ லாடினு
ணித்திலத்தாம் பசைத்த வூசல்.

(இ - ள்.) பாசம் வீட்டுவாள்-அடியார்கள் பாசத்தைப் போக்குவாளாகிய அம்மை, தீட்டுவாள் இரண்டு அனைய - தீட்டிய வாட்கள் இரண்டனை ஒத்த, கண்களிப்ப-இருகண்களும் களிக்குமாறு, தோழியர்க்கு தெரிய ஆடிக்காட்டுவாள் என-தோழிமார்களுக்கு (அவர்கள்) அறிய ஆடிக் காட்டுவாளைப்போல, கழங்கு பந்து பயின்று - கழங்காடலையும் பந்தாடலையுஞ் செய்து, அம்மனையும் கற்று-அம்மனையாடலையும் கற்று, மேல் கீழ்தள்ள ஏமைவினைக்கயிறு வீக்கி-மேலும் கீழும் புகுமாறு எங்களை வினைகளாகிய கயிற்றால் பிணித்து, ஊசல் ஆட்டுவாள்-ஊசலாட்டுகின்ற அவ்வம்மை, காட்டுதல்போல்-(இங்கு அதனைக்) காட்டல்போல, நித்திலத் தாம்பு அசைத்த ஊசல் ஆடினுள்-முத்து வடத்தாற் கட்டிய ஊசலில் ஆடினுள் எ - று.

வீட்டுவாள்: பெயர். மேலொடு கீழ் - துறக்க நிரயம்; ஒடு: எண்ணிடைச் சொல். ஆட்டுவாள்: தொழிற் பெயருமாம். ஊசல்-ஊஞ்சல். (௩௩)

இம்முறையாற் றயர்க்குந் தோழியர்க்கு
மகத்துவகை யீந்தா ளாகி
அம்முறையாற் றதைக்கு மகத்துவகை
யீவாளா யாத்த வாய்மைச்
செம்மறையா ரணமுதனு லீரெட்டுக்
கலைமுழுதுந் தெளிந்தா ளந்த
மெய்ம்மறையார் கலையனைத்து மேகலையா
மருங்கசைத்த விமலை யம்மா.

(இ - ள்.) இம்முறையால்-இவ்வகையான விளையாட்டுக்களால், தாயர்க்கும் தோழியர்க்கும் - அன்னைக்கும் தோழிகளுக்கும், அகத்து உவகை ஈந்தாளாகி - உள்ளத்து மகிழ்ச்சியைக் கொடுத்தருளி, அம்முறையால்-அங்ஙனமே, தாதைக்கும் அகத்து உவகை ஈவாளாய் - தந்தைக்கும் மனத்தின்கண் மகிழ்ச்சியைக் கொடுத்தருள, ஆத்த வாய்மைச் செம்மறை ஆரணம் முதல்-கடவுளின் வாய்மொழியாகிய செவ்விய மறையாகிய வேதமுதலாகவுள்ள, நால் ஈரெட்டுக் கலைமுழுதும் தெளிந்தாள் - அறுபத்துநான்கு கலைகளையும் முற்றும் குற்றமறத் தெளிந்தாள்; அந்த மெய்ம்மறை ஆர்கலை அனைத்தும்-அந்த உண்மை

(பா - ம்.) * காட்டுவாள்போல்.

யாகிய மறைமுதலிய நிறைந்த கலைகளனைத்தையும், மேகலையாமருங்கு அசைத்த விமலை-மேகலையாக அரையிற் கட்டிய அம்மை எ - று.

ஈவாளாய்-ஈவாளாக: எச்சத்திரிபு. கல்வியால் மகிழ்தல் தந்தை யியல்பாகலின் இங்ஙனங் கூறினர். வாய்மை-வாய்மொழி; வாக்கு. மறை ஆரணம், ஒரு பொருளன. அம்மா: வியப்பிடைச் சொல். அறுபத்து நான்கு கலைகள் இவை யென்பதனைச் சுக்கிரநீதி நான்காம் அத்தியாயம் மூன்றும் பிரகரணத்திற் காண்க. (௩௪)

சொல்வாய்மைக் கலைத்தெளிவு முழுமதியைப்
பிளந்திருபாற் சொருகி யன்ன
பல்வாய்மைக் கடகரிதேர் பரியுகைக்குந்
திறனுமழற் பகழி தூர்க்கும்
வில்வாள்வச் சிரமுதற்பல் படைத்தொழிலுங்
கண்டிளமை விழுங்கு மூப்பிற்
செல்வாய்மைத் திறலரசன் றிருமகட்கு
முடிசூட்டுஞ் செய்கை பூண்டான்.

(இ - ள்.) வாய்மை சொல் கலைத்தெளிவும் - உண்மையைக் கூறும் கலைகளின் தெளிவையும், முழுமதியைப் பிளந்து-நிறைந்த சந்திரனை இருபிளவாக்கி, இருபால் சொருகி அன்ன - இரண்டு பக்கங்களிலும் சொருகி வைத்தாற் போன்ற, பல் வாய்மை கட கரி - தந்தங்கள் அமைந்த கரிய மதத்தினையுடைய யானையையும், தேர்பரி - தேரையும் குதிரையையும், உகைக்கும் திறனும்-செலுத்தும் வகையையும், அழல் பகழி தூர்க்கும் வில்-கொடிய அம்புகளைப்பொழியும் வில்லும், வாள் வச்சிர முதல் பல்படைத் தொழிலும் கண்டு - வாட் படையும் வச்சிரப்படையு முதலிய பல படைக்கலத் தொழிலின் தேர்ச்சியையும் பார்த்து, இளமை விழுங்கு மூப்பில் செல் - இளமையைப்போக்கிய மூப்புப் பருவத்திற் செல்கின்ற, வாய்மைத் திறல் அரசன் - உண்மையையுடைய வெற்றி பொருந்திய மன்னனாகிய தந்தை, திருமகட்கு முடிசூட்டும் செய்கை பூண்டான் - தன் திருமகளுக்கு மகுடஞ் சூட்டுகின்ற செய்கையில் அமைந்தான் எ - று.

தெளிவும் திறனும் தொழிலும் கண்டு. மூப்பிற் செல்லுதல் - முதுமையுற்று நடத்தல். (௩௫)

முடிகவிக்கு மங்கலநாள் வரையறுத்துத்
திசைதோறு முடங்கல் போக்கிக்
கடிகெழுதார் மணிமௌலிக் காவலரை
வருவித்துக் காவல் சூழ்ந்த
கோடியணிமா நகரெங்கும் விழாவெடுப்ப
வழகமைத்துக் குன்ற மன்ன
தோடிகெழுதோட் சுமதிதிரு மணத்தினுக்கு
வேண்டுவன சூழ்ந்து செய்தான்.

(இ - ள்.) குன்றம் அன்ன தொடி கெழுதோள் சுமதி - மலையை ஒத்த வளையணிந்த தோளையுடைய சுமதி என்னும் அமைச்சன், முடி கவிக்கு மங்கல நாள் வரையறுத்து - முடி சூட்டுதற்குரிய மங்கல மாகிய நன்னாளை நிச்சயித்து, திசைதோறும் முடங்கல் போக்கி - திக்குகள் தோறும் ஓலை விடுத்து, கடிகெழுதார் - மணம் பொருந்திய மாலையை யணிந்த, மணிமௌலிக் காவலரை வருவித்து - மணி முடி தரித்த மன்னர்களை வரச்செய்து, காவல்சூழ்ந்த கொடி அணி மா நகர் எங்கும் விழா எடுப்ப - மதில் சூழ்ந்த கொடிகளையுடைய அழகிய பெரிய நகரத்திலுள்ளார் எவ்விடத்தும் சிறப்புச் செய்ய, அழகு அமைத்து - ஒப்பனை செய்வித்து, திருமணத்தினுக்கு வேண்டுவன சூழ்ந்து செய்தான் - அழகிய முடிசூட்டு விழாவுக்கு வேண்டும் பொருள்களை ஆராய்ந்து திரட்டினான் எ - று.

முடங்கல் - திருமுகம்; ஓலையைச் சுருளாக்குதலின் முடங்கல் என்பது பெயராயிற்று. காவல் - மதிலும் பிறவுமாம். கொடிகளை யணிந்த எனலுமாம். குன்ற மன்ன தோள். தொடி - வீரவளை. வேண்டுவன - வேண்டுங் காரியங்களுமாம். (௩௬)

மங்கலதூ ரியமுழங்க மால்யானை
யுச்சிமிசை வந்த பூத
கங்கைமுத லொன்பதுதீர்த் தமுநிரப்பிக்
கதிர்விடுபொற் கடம்பூ சித்துப்
புங்கவரை மந்திரத்தீ வளர்த்தமுத
மருத்தியெரி பொன்னாற் செய்த
சிங்கமணி யாதனத்தை நேசித்துப்
பூசித்துத் தெய்வ மேத்தி.

(இ-ள்.) மங்கல தூரியம் முழங்க-மங்கல வாத்தியங்கள் ஒலிக்க-மால் யானை உச்சிமிசை வந்த பூத கங்கைமுதல் - பெரிய யானையின் முடியில் வைத்துக்கொண்டுவந்த தூய்மையான கங்கைமுதலிய, ஒன்பது தீர்த்தமும் நிரப்பி-ஒன்பது தீர்த்தங்களையும் நிரப்பி, கதிர் விடு பொன் கடம் பூசித்து - ஒளி வீசும் பொன்னாற் செய்த குடத்தைப் பூசித்து,மந்திரத்தீ வளர்த்து-மந்திரத்தால் வேள்வித்தீயைவளர்த்து, புங்கவரை அமுது அருத்தி - தேவர்களை அவியுண வுண்பித்து, எரி பொன்னால் செய்த-ஒளி வீசும் பொன்னாற்செய்யப்பட்ட, மணிசிங்க ஆதனத்தை - மணிகள் இழைத்த சிம்மாதனத்தை, நேசித்து பூசித்து தெய்வம் ஏத்தி-அன்போடு பூசித்துத் தெய்வத்தைப் பராவி எ - று.

பூதம்-தூய்மை. ஒன்பது தீர்த்தம் - கங்கை, யமுனை, சரச்சுவதி, நருமதை, காவிரி, குமரி, கோதாவரி, துங்கபத்திரி, தாமிரபன்னி என்பன; பிறவாறுங் கூறுப. அமுதம் அருத்தி என்பது ஒரு சொல்லாய்ப் புங்கவரை யென்னும் இரண்டாவதற்கு முடிபாயிற்று. தெய்வம் - ஆதனத்திற்குரிய தெய்வம்; கடவுளுமாம். (௩௭)

திருமுடியை மதயானை மிசைவைத்து
நகரைவலஞ் செய்து பூசித்
தருமணியாற் சுடிகையிழைத் தாடகத்தாற்
குயிற்றியதோ ரைவாய் நாகம்

பெருமணிநீள் படம்பரப்பி மிசைகவிப்ப
வச்சிங்க பீடத் தேற்றிக்
குருமணிவா ணகைமயிலைக் கும்பத்துப்
புண்ணியநீர் குளிர வாட்டி.

(இ-ள்.) திருமுடியை மதயானை மிசைவைத்து - அழகிய கிரீடத்தை மதத்தினையுடைய யானையின்மேல் வைத்து, நகரை வலம் செய்து பூசித்து-நகர்வலஞ் செய்வித்துப் பூசித்து, அருமணியால் சுடிகை இழைத்து-அரிய மணிகளால் சூட்டுச் செய்து, ஆடகத்தால் குயிற்றியது ஓர் ஐவாய் நாகம்-பொன்னாற் செய்யப்பட்டதாகிய ஒரு ஐந்தலை நாகமானது, பெருமணி நீள் படம்-பெரிய மணிகளையுடைய நீண்ட படங்களை, மிசை பரப்பி கவிப்ப-மேலே பரப்பிக் கவிக்குமாறு (செய்த), அச் சிங்க பீடத்து-அந்தச் சிம்மாதனத்தில், குருமணி வாள் நகை மயிலை ஏற்றி-நிறம் பொருந்திய முத்துப் போலும் வெள்ளிய பற்களையுடைய மயில் போலும் பிராட்டியாரை ஏற்றி, கும்பத்துப் புண்ணிய நீர் குளிர ஆட்டி-கடத்தில் நிறைந்த புண்ணிய நீரினால் குளிருமாறு திருமஞ்சனஞ் செய்வித்து எ-று.

செய்வித்து என்பது செய்து என நின்றது. குயிற்றியது: செயப்பாட்டு வினைப் பெயரெச்சமாயிற்று. கவிப்ப ஏற்றி எனினுமாம். நீரால் ஆட்டி. (௩அ)

புங்கவர்மந் தாரமழை பொழியவருந்
தவராக்கம் புகலத் தெய்வப்
பங்கயமென் கோம்பனையா ராடமுனி
பன்னியர்பல் லாண்டு பாட
மங்கலதூ ரியமுழங்க மறைதழங்க
மாணிக்க மகுடஞ் சூட்டி
எங்கருணைப் பெருமாட்டிக் கரசமைச்சர்
பணியுந்தன் னிறைமை நல்கா.

(இ-ள்.) புங்கவர் மந்தார மழைபொழிய-தேவர்கள் மந்தார மலர் மழையைப் பொழியவும், அருந்தவர் ஆக்கம் புகல-அரிய முனிவர்கள் ஆசி கூறவும், தெய்வப் பங்கய மென் கொம்பு அனையார் ஆட-தெய்வத்தன்மை பொருந்திய தாமரை மலர்ந்த மெல்லிய பூங்கொம்பினை ஒத்த தேவமகளிர்கள் ஆடவும், முனி பன்னியர் பல்லாண்டு பாட-முனிபத்தினிகள் பல்லாண்டு பாடவும், மங்கல தூரியம் முழங்க-மங்கள வாத்தியங்கள் ஒலிக்கவும், மறை தழங்க-வேதம் முழங்கவும், எம் கருணைப் பெருமாட்டிக்கு-எம் பெருங் கருணைப் பிராட்டியாருக்கு, மாணிக்க மகுடம் சூட்டி-மணிமுடி சூட்டி, அரசு அமைச்சர் பணியும் தன் இறைமை நல்கா-அரசர்களும் அமைச்சர்களும் வணங்கப் பெறும் தன் தலைமையைக் கொடுத்து எ-று.

பொழிய என்பது முதலிய செயவெனெச்சங்கள் சூட்டி யென்பதனோடு தனித்தனி முடியும். ஏனை அரசரும் அமைச்சரும் பணியும் தலைமையைப் பெருமாட்டிக்கு நல்கி. (௩௯)

பாலனைய மதிக்கவிகை மிசைநிழற்ற
மதிகிரணம்* பரப்பி யன்ன
கோலமணிக் கவரிபுடை யிரட்டமலர்
மழைதேவர் குழாங்க டூற்றக்
காலையிளங் கதிர்கயிலை யுதித்தெனவெண்
கடாயானைக் கழுத்தில் வேப்ப
மாலைமுடிப் பெண்ணரசை மங்கலதூ
ரியமுழங்க வலஞ்செய் வித்தான்.

(இ-ள்.) பால் அனைய மதிக் கவிகை மிசை நிழற்ற-பால்போலும் வெண்ணிறமுடைய சந்திரவட்டக் குடையானது மேலே நிழலைச் செய்யவும், மதி கிரணம் பரப்பியன்ன-அந்தச் சந்திரன் தன் கிரணங்களைப் பரப்பினாற்போல, கோல மணிக் கவரி புடை இரட்ட-அழகிய வெண்கவரிகள் இருபக்கங்களிலும் வீசவும், தேவர் குழாங்கள் மலர் மழை தூற்ற-அமரர் கூட்டங்கள் மலர்மாரியைப் பொழியவும், காலை இளங்கதிர் கயிலை உதித்தென-காலையிற் றோன்றும் இளஞாயிறு வெள்ளிமலையில் உதித்தாற்போல, வேப்பம் மாலை முடிப்பெண் அரசை-வேப்பமலர் மாலையை அணிந்த முடியினையுடைய பெண்ணரசாகிய தடாதகைப்பிராட்டியாரை, கடா வெள் யானைக் கழுத்தில்-மதத்தினையுடைய வெள்ளை யானையின் பிடரியில் (ஏற்றி), மங்கல தூரியம் முழங்க வலஞ் செய்வித்தான்-மங்கல வாச்சியங்கள் ஒலிக்க நகர்வலஞ் செய்வித்தான் எ-று.

பரப்பினாலன்ன என்பது பரப்பியன்ன வென்றாயிற்று. கவரி-சாமரை. இரட்டுதல்-மாறி வீசுதல். உதித்தென-உதித்ததென, பெண்ணரசு-பெண்களுக்கு அரசும், பெண்ணாகிய அரசுமாம். ஏற்றி யென ஒரு சொல் வருவிக்கப்பட்டது. (௪0)

விண்ணாடு மொழிகேட்ட மகிழ்ச்சியினுந்
திருமகடன் விளக்க நோக்கி
உண்ணாடு பெருங்களிப்புத் தலைசிறப்பச்
சிலபகல்சென் றேழிய மேனாட்
புண்ணாடு வேன்மங்கை குதுகலித்து
நடிப்பத்தன் புயமேல் வைத்த
மண்ணாடு மகட்களித்து வானாடு
பெற்றானம் மகவு பெற்றான்.

(இ-ள்.) விண் ஆடு மொழி கேட்ட மகிழ்ச்சியினும்-விண்ணின்கண் தோன்றிய அசரீரியைக் கேட்ட பொழுது உண்டான மகிழ்ச்சியை விட, திருமகள் தன் விளக்கம் நோக்கி-செல்வப் புதல்வியாரின் விளக்கத்தைப் பார்த்து உள்நாடு பெருங்களிப்புத் தலை சிறப்பு-உள்ளத்தில் விரும்புகின்ற பெரிய மகிழ்ச்சியானது மிகச்

(பா-ம்.) * மதிக்கிரணம்.

சிறக்குமாறு, சில பகல் சென்று ஒழிய-சின்னாட்கள் கழிந்தொழிய, மேல் நாள்-முன்னாளில், புண் நாடு வேல் மங்கை குதுகலித்து நடிப்ப - (பகைவர்களின்) தசையினை நாடுகின்ற வேலையுடைய வீரமகள் மகிழ்ந்து கூத்தாடுமாறு, தன்புயம் மேல்வைத்த மண் நாடு-தனது தோளில் வைத்தாற்றிய நிலவுலகத்தை, மகட்கு அளித்து - புதல்வியாருக்குக் கொடுத்து, வான் நாடு பெற்றான்-வானுலகத்தை யடைந்தான்; அம்மகவு பெற்றான் - அந்தப் புதல்வியைப் பெற்றவனாகிய மலயத்துவசன் எ-று.

கேட்ட மகிழ்ச்சி-கேட்டதனாலாகிய மகிழ்ச்சி. வேல் மங்கை-கொற்றவை; வீரலக்குமி. பகைவென்று ஆண்டமை கூறினார். மண்ணாடு மகட்களித்து வானாடு பெற்றான் என்பது பரிவருத்தனையணி. ()

விரதநெறி யடைந்தீற்றுக் கடன்பிறவுந்
தாதைக்கு விதியா லாற்றி
அரதன்மேல் லணைமேற்கொண் டுலகமெலா
மொருகுடைக்கீ ழாள்வா ளானாள்
சரதமறை யாய்மறையின் பொருளாயப்
பொருண்முடிவு தானாய்த் தேனின்
இரதமெனப் பூவின்மண மெனப்பரம
னிடம்பிரியா வெம்பி ராட்டி.

(இ-ள்.) சரத மறையாய்-உண்மை மறையாயும், மறையின் பொருளாய் - அம்மறையின் பொருளாயும், அப்பொருள் முடிவு தானாய்-அந்தப் பொருளின் முடிவாயும், தேனின் இரதமென-தேனின் சுவை போலவும், பூவின் மணமென-பூவின் மணம் போலவும், பரமனிடம் பிரியா எம்பிராட்டி-இறைவனிடத்தினின்றும் நீங்காத எம் பிராட்டியார், விரத நெறி அடைந்து-விரத நெறியை எய்தி, தாதைக்கு ஈற்றுக்கடன் பிறவும் விதியால் ஆற்றி - தந்தைக்குப் பிற்கடன் முதலிய பிறவற்றையும் முறைப்படி செய்து, அரதனமெல் அணைமேற் கொண்டு - மணிகளிழைத்த மெல்லிய சிம்மாதனத்தில் வீற்றிருந்து, உலகம் எலாம் ஒரு குடைக்கீழ் ஆள்வாளானாள்-உலகமனைத்தையும் ஒரு குடையின் கீழ் ஆளலுற்றாள் எ-று.

கடனும் பிறவுமென விரிக்க. ஈற்றுக்கடன்-அந்தியேட்டி. பொது வறப் புரந்தாரென்பார் உலகமெலாம் ஒரு குடைக்கீழ் ஆள்வாளானாள் என்றார். 'நீரின் றண்மையனல் வெம்மையெனத் தனையகலாதிருந்து' என முற்கூறியதுங் காண்க. இடம்பிரியா-இடப்பாகம் பிரியாத என்றுமாம். (௬௨)

[வேறு ஷை]

மண்ணர சிறைஞ்ச ஞால மனுவழி புரந்து மாறன்
விண்ணர சிருக்கை யெய்தப் பெற்றபின் விடையோ னுள்ளத்
தெண்ணர சன்ன மென்னத் தென்னவ னீன்ற கன்னிப்
பெண்ணர சிருந்து நேமி யுருட்டிய பெருமை சொல்வாம்.

(இ - ள்.) மண் அரசு இறைஞ்ச ஞாலம் மனுவழி புரந்து-நில வுலகத் தரசரெல்லாம் வணங்குமாறு இம் மண்ணுலகை மனுமுறை யால் ஆண்டு, மாறன் விண் அரசு இருக்கை எய்தப் பெற்றபின்-மலயத்துவச பாண்டியன் விண்ணுலகத்தில் இந்திரனது ஆதனத்தை அடையப் பெற்ற பின்பு, விடையோன் உள்ளத்து என் - இடப வாகனத்தையுடைய இறைவன் திருவுள்ளத்தின்கண் கருதுகின்ற, அரசு அன்னமென்ன-அரச அன்னத்தைப்போல, தென்னவன் ஈன்ற கன்னிப்பெண் அரசு-அப்பாண்டியன் பெற்ற கன்னியாகிய பெண்ணரசியார், இருந்து-அரியணையில் வீற்றிருந்து, நேமி உருட்டிய பெருமை சொல்வாம் - ஆணையாகிய திகிரியைச் செலுத்திய பெருமையைக் கூறுவாம் எ-று.

இந்திரனது ஆதனமென்பதனை,

"அலையத்திரி யட்டவ னாதன நீத்து"

எனப் பின் வருதலா னறிக. என் : வினைத்தொகை. என்னும் கன்னி என்ன, ஈன்ற கன்னி எனத் தனித்தனியியையும் மூன்றுமடியிற் சிரேதுகை பயின்றிருத்தல் காண்க. ஆணையைத் திகிரியாகக் கூறுதல் வழக்கு. (௪௩)

இன்னிய மியம்பு மாக்க* ளேழுப்பவா னிரவி தோன்றக்
கன்னலைந் தென்னப் பள்ளித் துயிலெழீஇக் கடிநீ ராடித்
தன்னிறை மரபுக் கேற்ற நியதிமா தான மன்பு
துன்னிய கடவுட் பூசைத் தொழின்முத லனைத்து முற்று.

(இ - ள்.) இன் இயம் இயம்புமாக்கள் எழுப்ப-இனிய இயங்களை ஒலிக்கு மக்கள் (அவ்வொலியால்) எழுப்ப, வான் இரவி தோன்ற-வானின்கண் ஞாயிறு உதிக்க, கன்னல் ஐந்து என்ன-நாழிகை ஐந்து என்று சொல்ல (உள்ள அது போது), பள்ளித்துயில் எழீஇ - படுக்கையினின்றும் துயில் நீத்தெழுந்து, கடி நீர் ஆடி-மணமுள்ள நீரில் மூழ்கி, தன் இறை மரபுக்கு ஏற்ற-தன் மன்னர் மரபுக்குத் தக்க, நியதிமா தானம் - கடன்கள் பெரிய தானங்கள், அன்பு துன்னிய கடவுள் பூசைத் தொழில்-அன்பு மிக்க சிவபூசையாகிய கிரியை, முதல் அனைத்தும்-முதலாகிய யாவற்றையும், முற்று-செய்து முடித்துஎ-று.

அன்பு மிக்குச் செய்யும் பூசையினை அன்புமிக்க பூசையென உபசரித்தார் ; துன்னிய கடவுள் என்னலுமாம். (௪௪)

திடம்படு மறிஞர் சூழச் சிவபிரான் கோயின் முன்னிக்
கடம்படி முளைத்த முக்கட் கரும்பினை மறைவண்டார்க்கும்
விடம்போதி கண்டத் தேனை விதிமுறை வணங்கி மீண்டு
குடம்பயில் குடுமிச் செம்போற் குருமணிக் கோயி னண்ணி.

(இ-ள்.) திடம்படும் அறிஞர் சூழ-கலங்காத அறிவினையுடைய அமைச்சர்கள் புடைசூழ, சிவபிரான் கோயில் முன்னி-சோமசுந்தரக் கடவுளின் திருக்கோயிலை யடைந்து, கடம்பு அடி முளைத்த முக்கண் கரும்பினை-கடம்ப மரத்தினடியில் முளைத்த மூன்று கண்களையுடைய

(பா - ம்.) * இயக்குமாக்கள்.

கரும்பும், மறைவண்டு ஆர்க்கும் - வேதமாகிய வண்டுகள் ஒலிக்கப் பெறும், விடம்பொதிகண்டத்தேனை-நஞ்சு பொதிந்த திருமிடற்றினை யுடைய தேனும் ஆகிய பெருமானை, விதிமுறை வணங்கி மீண்டு - விதிப்படி பணிந்து (அங்கு நின்றும்) திரும்பி, குடம்பயில் குடுமி - கலசங்கள் பொருந்திய முடியினையுடைய, செம்பொன் குருமணிக் கோயில் நண்ணி-சிவந்த பொன்னாலாகிய நிறம் பொருந்திய மணிகள் பதித்த தமது மாளிகையை யடைந்து எ - று.

கரும்பென்றும், தேனென்றும் உவமையாற் கூறினார்; இன்பம் விளைத்தலின். கண் - விழியையும் கணுவையுங் குறிக்கும், "கண்கள் மூன்றுடையதோர் கரும்பே" என்பது திருவிசைப்பா. இறைவனைத் தேனென்றும் மறையினை வண்டென்றும் உருவகித்தல்,

"மன்றுளாடுமது வின்னசையாலே மறைச்சுரும்பறை
புறத்தின் மருங்கே"

என்னும் திருத்தொண்டர் புராணச் செய்யுளிலும் காணப்படுமா றறிக. கண்டத்தோனை என்னும் பாடம் சிறவாமை காண்க. (சரு)

அரசிறை கோள்ளுஞ் செம்பொ னத்தாணி யிருக்கை யெய்தி
நிரைசெறி மடங்க லாறு முடங்கின நிமிர்ந்து தாங்க
விரைசெறி மலர்மீப் பெய்த வியன்மணித் தவிசின் மேவித்
திரைசெறி யமுதிற் செய்த பாவைபோற் சிறந்து மாதோ.

(இ - ள்.) அரசு இறைகொள்ளும்-அரசர்கள் தங்கியிருக்கும், செம்பொன் அத்தாணியிருக்கை எய்தி-சிவந்த பொன்னாலாகிய அத் தாணி மண்டபத்தை யடைந்து, நிரை செறி ஆறு மடங்கல்முடங்கின நிமிர்ந்து தாங்க - வரிசையாக நெருங்கிய ஆறு சிங்கங்கள் வளைந்தன வாய்க் கழுத்தை நிமிர்த்தித் தாங்குமா றியற்றிய, விரை செறி மலர் மீப்பெய்த - மணம் நிறைந்த மலர்களை மேலே பெய்த, வியன்மணித் தவிசில் மேவி - பெரிய மணியாதனத்தில் வீற்றிருந்து, திரை செறி அமுதில் செய்த பாவைபோல் சிறந்து - கடலிற்றோன்றிய அமுதத் தாற் செய்த பாவை போலப் பொலிந்து எ - று.

இறைகொள்ளல்-தங்கல்: ஒரு சொல்; அரசிறை - பகுதியுமாம். தாங்க வியற்றிய என்க. மீ-மேல். திரை: ஆகுபெயர். தூய்மைக் கும் இனிமைக்கும் அமுது கூறினார்;

"ஆதரித் தமுதிற் கோல்தோய்த் தவயவ மமைக்குந் தன்மை
யாதெனத் திகைக்கு மல்லான் மதனற்கு மெழுத வொண்ணா"

என்றார் பிறரும். மாது, ஓ: அசைகள். (சசு)

அனிந்திதை யமுதின் சாயற் கமலினி யணங்கு காதல்
கனிந்தபார் மகளி ராய்வந் தடைப்பைபோற் களாஞ்சி யேந்த
இனந்திரி பதுமக் கோயி லிருவரு மனைய ராகிப்
புனைந்தவெண் கவரிக் கற்றை யிருபுடை புரட்டி வீச.

(இ - ள்.) அனிந்திதை அமுதின் சாயல் கமலினி அணங்கு - (திருக்கயிலாய மலையில் அகம்படித்தொண்டு செய்யும்) அனிந்திதை

யும் அமுதைப்போலும் மென்மைத் தன்மையையுடைய கமலினியும் ஆகிய தெய்வமகளிர், காதல் கனிந்த பார்மகளிராய் வந்து - அன்பு முதிர்ந்த மானிட மகளிராய்த் தோன்றி, அடைப்பை பொன்களாஞ்சி ஏந்த-அடைப்பையையும் பொன்னாற் செய்த களாஞ்சியையும் ஏந்தவும், இனம்திரி பதுமக் கோயில் இருவரும் - நிறம் மாறுபட்ட தாமரைமலரைக் கோயிலாகவுடைய திருமகளும் கலைமகளும், அனையராகி-அம் மானிட மகளிராகி, புனைந்த வெண் கற்றை கவரி-அலங்கரித்த வெள்ளிய கற்றையாகவுள்ள சாமரைகளை, இருபுடை புரட்டி வீச-இருபுறங்களிலும் புரட்டி வீசவும் எ - று.

கமலினி அனிந்திதை யென்னும் இவ்விருவருமே பரவை நாய்ச்சியாராகவும் சங்கிலி நாய்ச்சியாராகவும் திருவவதாரஞ் செய்தவர்கள். அடைப்பை-இலையமுதிடும் பை. களாஞ்சி - படிக்கம்; தட்டமுமாம். செந்தாமரை வெண்டாமரை யென்பார் இனந்திரிபதுமம் என்றார்.

சேடியுட லெயினச் செல்வன் சென்னிமேற் சுமந்து சாத்துங்
கடியவிழ் மலரிற் பொன்னிக் காவலன் குடக்கோ னேனை
முடிகெழு வேந்த ருள்ளார் முடிமிசை மிலைந்த தாமம்
அடிமிசைச் சாத்தி நங்கை யாணையா றேவல் செய்ய.

(இ - ள்.) செடி உடல் எயினச் செல்வன்-முடைநாறும் உடம்பினையுடைய வேடுவக்குலத் தலைவராகிய கண்ணப்பர், சென்னிமேல் சுமந்து சாத்தும் - முடியின்மேல் சுமந்து வந்து இடும், கடி அவிழ் மலரின் - மணம் விரிந்த திருப்பள்ளித்தாமம் போல, பொன்னிக் காவலன் - காவிரிக்கரசனாகிய சோழனும், குடக்கோன் - மேற்புல அரசனாகிய சேரனும், ஏனை முடிகெழு வேந்தர் உள்ளார் - மற்றைய முடிசூடிய மன்னராயுள்ளவர்களும், முடிமிசை மிலைந்த தாமம்-(தங்கள்) முடியின்கண் அணிந்த மாலைகளை, அடிமிசைச் சாத்தி - திருவடியின்கண் இட்டு, நங்கை ஆணை ஆறு ஏவல் செய்ய - அம்மையாரின் ஆணைவழி நின்று ஏவல் செய்யவும் எ - று.

செடியுடல் என்பதனை 'முடுகு நாறு குடிலை யாக்கையன்' எனவும், சென்னி மேற் சுமந்து சாத்துதலை 'தன்றலை தங்கிய துவர்ப்பூ வேற்றி' எனவும் முறையே, கல்லாடரும் நக்கீரரும் திருக்கண்ணப்பர் திருமறத்துட் கூறுதலா னறிக. பொன்னி பாயும் நாட்டுக்கரசனைப் பொன்னிக் காவலன் என்றார்; நாயகனுமாம்;

''கருங்கயற்கண் விழித்தொல்கி நடந்ததெல்லா நின்கணவன்
திருந்து செங்கோல் வளையாமை யறிந்தேன்வாழி காவேரி''

என்று சிலப்பதிகாரம் கூறுதலுங் காண்க. சேரன் குடக்கோவெனப்படுதலைக் 'குடக்கோச் சேரல்' என வருதலா னறிக. வணங்கி என்பதனைப் பிறிதோராற்றாற் கூறினார்; இது பிறிதினவிற்சியணி. (௩அ)

வையுடை வாள ராகி மார்புறப் பின்னி யார்த்த
கையின ராகி யன்னை யென்றுதன் கருணை நோக்கஞ்*
செய்யுமேன் றிமையார் நோக்கி† நோக்குமேற் செங்கை கூப்பி
உய்குந மெனவாய் பொத்தி யுழையர்தம் பணிகேட் டுய்ய.

---

(பா - ம்.) * கருணை நாட்டம். † இமையா நோக்கி.

(இ - ள்.) உழையர்-ஏவல் செய்வோர், வை உடை வாளராகி- கூரியவாளை யுடையவராகியும், மார்பு உறப் பின்னி ஆர்த்த கையினர் ஆகி - மார்பிலே பொருந்தப் பின்னிக்கட்டிய கையையுடையவராகி யும், அன்னை என்று தன் கருணை நோக்கம் செய்யும் என்று - அன்னை யார் எப்பொழுது தம் அருட் பார்வையைச் செலுத்துவாரோஎன்று, இமையார் நோக்கி - கண்மூடாமல் பார்த்து, நோக்குமேல் - அரு ளுக்கஞ் செய்வாராகில், செங்கைகூப்பி-சிவந்த கரங்களைக்குவித்து, உய்குநம் என வாய் பொத்தி - பிழைத்தோம் என்று வாய்பொத்தி, தம்பணி கேட்டு உய்ய-தமது ஏவலைக் கேட்டு உய்தி பெறவும் எ-று.

வை - கூர்மை. இமையார்: முற்றெச்சம். உய்குநம்: எதிர் காலச் சொல், இறந்தகாலங் குறித்தது. (௪௯)

ஆங்கவன் மராட வேந்த னவன்கரு நாடர் வேந்தன்
ஈங்கிவன் விராடர் வேந்த னிவன்குரு நாடர் வேந்தன்
ஊங்குவன் சேரன் சென்னி யுவனெனக் கோலாற் சுட்டிப்
பாங்கிரு மருங்குங் காட்டக் கஞ்சுகப் படிவ மாக்கள்.

(இ - ள்.) கஞ்சுகப் படிவமாக்கள்-சட்டை தரித்த வடிவத்தை யுடைய கஞ்சுக மாக்கள், ஆங்கு அவன் மராடர் வேந்தன் - அங்கு நிற்கின்ற மன்னன் மராடநாட்டினர்க்கு அரசன், அவன் கருநாடர் வேந்தன் - அவ்விடத்து நிற்பவன் கருநாட்டாரரசன்; ஈங்கு இவன் விராடர் வேந்தன்-இங்குநிற்கும் இவன் விராட நாட்டினர் வேந்தன்; இவன் குருநாடர் வேந்தன் - இங்கு நிற்போன் குருநாட்டவர்க்கு மன்னன்; ஊங்கு உவ்ன் சேரன் - நடுவில் நிற்கும் உவன் சேரன்; உவன் சென்னி என - ஊங்கு நிற்போன் சோழன் என்று, கோலால் சுட்டி பாங்கு இருமருங்கும் காட்ட - பிரப்பங் கோலால் சுட்டி வரி சையாக இரு பக்கங்களிலும் நின்று காட்டவும் எ - று.

ஆங்கு முதலியவற்றின் பின்னுள்ள அவன் முதலியன பெயர் மாத்திரையாய்நின்றன; ஆங்கு முதலியன அசையுமாம். உகரச்சுட்டு நடுவையும் முன்னையும் பின்னையும் குறிக்கும். கஞ்சுகமாக்கள்-தூத ரெனவும், சட்டையிட்ட பிரதான ரெனவும் கூறுவர்;

''சஞ்சயன் முதலாத் தலைக்கிடு பெற்ற
கஞ்சுக முதல்வ ரீரைஞ் ஞூற்றுவரும்''

என்னும் சிலப்பதிகார வடிகளின் அரும்பதவுரை நோக்குக. (௫௦)

செந்தமிழ் வடநூ லெல்லை தெரிந்தவர் மறைநூ லாதி
அந்தமி லெண்ணெண் கேள்வி யளந்தவர் சமய மாறும்
வந்தவர் துறந்தோர் சைவ மாதவர் போத மாண்ட
சிந்தனை யுணர்வான் மாயை வலிகெடச் செற்ற வீரர்.

(இ-ள்.) செந்தமிழ் வடநூல் எல்லை தெரிந்தவர்-செந்தமிழின் முடிவையும் வடநூலின் முடிவையும் தெரிந்தவர்களும், மறை நூல் ஆதி-வேதநூல் முதலிய, அந்தம் இல் எண் எண் கேள்வி அளந்தவர்- அளவில்லாத அறுபத்து நான்கு கலைகளையும் வரையறுத் துணர்ந்த

வர்களும், சமயம் ஆறும் வந்தவர் - அறுவகைச் சமய நூல்களும் கைவந்தவர்களும், துறந்தோர் - பற்றற்றவர்களும், சைவமாதவர் - சிவபிரான் திருத்தொண்டர்களும், போதம் மாண்ட - பசுபோதங் கெட்ட, சிந்தனை உணர்வால்-தியானத்தோடு கூடிய மெய்யுணர்ச்சியால், மாயை வலிகெடச் செற்ற வீரர் - மாயையினது வலிகெடுமாறு வென்ற மெய்ஞ்ஞானிகளாகிய வீரர்களும் எ - று.

ஆறு சமயம் முற் கூறப்பட்டன. வருதல் - கைவருதல். மாயை வலிகெடச் செற்றலைத் திருவாசகத்துத் திருப்படை யெழுச்சியுள்,

"வானவூர் கொள்வோநா மாயப்படை வாராமே"

எனக் கூறுதலா னறிக. (௧௧)

முன்னிருந் தினிய தேற்று மூத்தவ ரெண்ணி யெண்ணிப்
பன்னுமைந் துறுப்பிற் கால மளந்தறி பனுவன் மாந்தர்
பின்னுமுன் னோக்குஞ் சூழ்ச்சிப் பெருந்தகைச் சுமதி யோடும்
இன்னமு தனைய கேள்வி மந்திரர் யாருஞ் சூழ.

(இ - ள்.) முன் இருந்து இனிய தேற்றும் மூத்தவர் - எதிரிருந்து உறுதிப் பொருள்களை அறிவிக்கின்ற பெரியோர்களும், எண்ணி எண்ணிப் பன்னும்-ஆய்ந்தாய்ந்து கூறுகின்ற, ஐந்து உறுப்பில்காலம் அளந்து அறிபனுவல் மாந்தர் - ஐந்து அங்கங்களால் காலங்களை அறியும் சோதிடநூல் உணர்ந்தவர்களும், பின்னும் முன் நோக்கும் சூழ்ச்சிப் பெருந்தகைச் சுமதியோடும் - மேல் வருவனவற்றையும் முன் நிகழ்ந்தனவற்றையும் ஆராய்ந்து காணும் சூழ்ச்சித் திறத்தில் பெரிய தகுதியினையுடைய முதல் மந்திரியாகிய சுமதியோடும், இன் அமுது அனைய கேள்வி மந்திரர் யாரும் சூழ - இனிய அமுதத்தைஒத்த கேள்வி நலமுடைய அமைச்சர் அனைவரும் சூழவும் எ-று.

மூத்தவர் - அறிவால் முதிர்ந்தோர்; உறுதி கூறும் புரோகிதர். ஐந்துறுப்பு - பஞ்சாங்கம்; திதி, வாரம், நட்சத்திரம், யோகம், கரணம் என்பன. பனுவன் மாந்தர் - கணிகள். முன்னும் என விரிக்க. சுமதி - முதலமைச்சன்; பட்டம். (௧௨)

கற்றறி யந்த ணாளர் விருத்திகள் கடவுட் டானத்
தற்றமில் பூசைச் செல்வ மறப்புற நடக்கை யேனைச்
செற்றமில் குடிகள் மற்று மமைச்சராற் றெளிந்தும் வெவ்வே[ம்-
றொற்றுவிட் டுணர்ந்தும் வேறு குறையுண்டே லோறுத்துத் தீர்த்து

(இ - ள்.) கற்று அறி அந்தணாளர் விருத்திகள் - (மறை முதலிய நூல்களைக்) கற்றுணர்ந்த அந்தணர்கள் விருத்திகளையும், கடவுள் தானத்து அற்றம்இல் பூசைச்செல்வம் - தேவாலயங்களில் நடக்கும் குற்றமில்லாத பூசனைச் சிறப்புக்களையும், அறப்புறம் நடக்கை-அறச்சாலைகளின் நிகழ்ச்சிகளையும், ஏனைச் செற்றம் இல் குடிகள் - அவையொழிந்த வெறுப்பு இல்லாத குடிகளின் (வாழ்க்கைகளையும்), மற்றும் - பிறவற்றையும், அமைச்சரால் தெளிந்தும் - மந்திரிகளால் உணர்ந்தும், வெவ்வேறு ஒற்றுவிட்டு உணர்ந்தும்-வேறு வேறு ஒற்

றர்களை அனுப்பி அறிந்தும், வேறு குறை உண்டேல் ஒறுத்துத் தீர்த்தும் - அவைகளுள் வேறு குறைகள் இருக்குமானால் தண்டித்து அக் குறைகளைப் போக்கியும் எ-று.

விருத்திகள்-பிரமதேயமாக விடப்பட்ட மானியம் முதலியன; தொழில்களுமாம். கடவுட்டானம்-திருக்கோயில்; திருமடம் முதலியவுமாம். நடக்கை-நடைபேறு. ஏனை-மற்றும்: இடைச்சொல். செற்றமின்மை-அன்புடைமை. வெவ்வேறு ஒற்றுவிடவேண்டும் என்பது,

"ஒற்றொற் றுணராமை யாள்க வுடன்மூவர்
சொற்றொக்க தேறப் படும்"

என்னும் திருக்குறளா லறிக. வேறுகுறை-மாறாகிய குறை; அதற்குக் காரணமானவரை யொறுத்தென்க. (௩௩)

ஆதியுத் தேசத் தானு மிலக்கண வமைதி யானுஞ்
சோதனை வகைமை யானுஞ் சொன்னநூ லனுவா தித்து
நீதியி னவற்றாற் கண்டித் தவ்வழி நிறுத்தித் தம்மில்
வாதிகள் வாதஞ் செய்யுங் கோட்டிமேன் மகிழ்ச்சி கூர்ந்தும்.

(இ-ள்.) ஆதி உத்தேசத்தானும்-முதலாகிய உத்தேசத்தினாலும், இலக்கண அமைதியானும்-இலக்கண அமைவினாலும், சோதனை வகைமையானும்-சோதனை வகையாலும், சொன்ன நூல்-பிறர் கூறிய நூற் பொருள்களை, அநுவாதித்து-எடுத்து மொழிந்து, நீதியின்-முறைமையினையுடைய, அவற்றால்-தாங் கூறும் உத்தேசம் முதலியவற்றால், கண்டித்து-அவற்றை மறுத்து, அவ்வழி நிறுத்தி-தாம் கூறியவற்றை அந்நெறியிலே நிலைபெறச் செய்து, வாதிகள்-வாதியராயினோர், தம்மில் வாதம் செய்யும் கோட்டி மேல்-தம்முள் வாதம் புரியுங் கூற்றினிடத்து, மகிழ்ச்சி கூர்ந்தும்-மகிழ்ச்சிமிக்கும் எ-று.

உத்தேசம்-தான் கூறும் பொருளைப் பெயர் மாத்திரையான் எடுத்தோதல்; இலக்கியம். இலக்கணம்-இலக்கியத்தின் சிறப்பியல்பு; அவ்வியாத்தி அதிவியாத்தி அசம்பவம் என்னும் முக்குற்றங்களும் இல்லாத தன்மை. சோதனை-இலக்கியத்தில் இலக்கணமுளதாதலை ஆராய்தல். நூல் என்றது ஈண்டுப் பிறர் கூறிய பொருளை. அநுவாதித்தல்-பிறர் கூறியவற்றை ஒரு பயன் நோக்கித் தான் எடுத்து மொழிதல். நீதியின்-தருக்க முறைமையால். அவற்றால்-அவ்வுத்தேசம் முதலியவற்றால்: தாம் கூறும் அவற்றாலென்க. நிறுத்தல்-தங்கொள்கையைத் தாபித்தல். வாதிகள்-பிறர்மத மறுத்துத் தம்மத நிறுத்துவோர். கோட்டி-கூட்டம்; அவை; ஈண்டு வாதஞ் செய்யுங் கூற்று; 'கோட்டி கொளல்' என்பதுங் காண்க. (௩௪)

பையுள பகுவாய் நாகப் பள்ளியோ னாதி வானோர்
கையுள வலியா லட்ட கடலமு தனைத்தும் வாரிப்
பொய்யுள மகலக் கற்ற புனிதநூற் புலவர் நாவிற்
செய்யுளின் விளைவித் தூட்டத் திருச்செவி தேவிட்ட வுண்டும்.

(இ-ள்.) பை உள பகுவாய் நாகப் பள்ளியோன் ஆதி வானோர்-படத்தின்கண் உள்ள பிளந்த வாயையுடைய பாம்பாகிய படுக்கையை யுடைய திருமால் முதலிய தேவர்கள், கையுள வலியால் அட்ட கடல் அமுது அனைத்தும்-கைகளில் உள்ள வலிமையால் கடைந்த கடலில் தோன்றிய அமுத மனைத்தையும், வாரி-அள்ளி, பொய் உளம் அகலக் கற்ற புனிதநூல் புலவர்-அறியாமை உளத்தினின்றும் நீங்குமாறு தூய நூல்களைக் கற்றுணர்ந்த புலவர்கள், நாவில் செய்யுளின் விளைவித்து ஊட்ட-நாவன்மையாற் செய்யுளில் விளையச் செய்து உண்பிக்க, திருச்செவி தெவிட்ட உண்டும்-(தமது) திருச்செவிகள் தேக்கிடுமாறு நுகர்ந்தும் எ-று.

வாரி விளைத்தூட்ட எனக் கூட்டுக. பொய்ம்மை யொழிதலே புலமைக்குச் சான்றென்பார் 'பொய்யுள மகலக்கற்ற புலவர்' என்றார். விளைவித்தல்-ஒன்பான் சுவைகளையும் உண்டாக்கல். விளைவித்தென்பதற்கேற்பச் செய்யுளின் என்பதற்குச் செய்யின்கண்ணே யெனப் பொருள் தொனித்தலுங் காண்க; இதற்கு நாவாகிய ஏரால் எனவும் விரிக்க. அமிழ்தத்தை முழுதும் பெய்து வைத்தாற்போலச் சுவைமிக்குடைய செய்யுட்கள் என்றார். (௩௫)

தொல்லைநான் மறையோர் சைவர் துறந்தவர் யார்க்கு மின்பம்
புல்லவா னமுதுங் கைப்பப் பாகநூற் புலவ ரட்ட
முல்லைவான் முகையி னன்ன வறுசுவை முரியா மூரல்
நல்லவூ ணருத்தி யன்னார் நாவிருந் தமுது செய்தும்.

(இ-ள்.) தொல்லை நான்மறையோர் - பழைய நான்குமறைகளையுங் கற்ற அந்தணர்களும், சைவர் துறந்தவர் யார்க்கும்-சைவர்களும் துறவிகளும் ஆகிய அனைவருக்கும், இன்பம் புல்ல-மகிழ்ச்சி பொருந்த, வான் அமுதும் கைப்ப-தேவாமுதமும் கைக்குமாறு, பாக நூல் புலவர் அட்ட-அடுநூல் வல்லவர் சமைத்த, முல்லை வால்முகையின் அன்ன முரியா மூரல்-முல்லையினது வெள்ளிய அரும்பினை ஒத்த முரியாத அன்னமும், அறுசுவை நல்ல ஊண் அருத்தி-அறுசுவை யமைந்த கறிகளுமுதலிய நல்ல உணவுகளை உண்பித்து, அன்னார் நாவிருந்து அமுதுசெய்தும்-அவர்களின் நாவால் வரும் புகழாகிய விருந்தினைத் தாம் நுகர்ந்தும் எ-று.

அட்ட மூரலும் சுவையுமுதலிய ஊண் என்றும், யார்க்கும் அருத்தி என்றும் கூட்டுக. கைப்ப-கைப்பென்னுமாறு. பாக நூல்-பாக சாத்திரம்; மடை நூல். முகையினன்ன மூரலும் அறுசுவையும் என வியையும். அறுசுவை-கறி முதலியவற்றிற் காதலால் அடையடுத்த பண்பாகு பெயர். நாவிருந்து-நாவாற் கூறும் புகழ் மொழியாகிய விருந்து. (௩௬)

எல்லவ னுச்சி நீந்து மெல்லையி னான்கு மாறும்
வல்லவர் சூத னோதி வகுத்தமு வாறு கேள்வி
சொல்லவுண் மலர்ந்து மேனை மனுமுதற் றுறைமாண் கேள்வி
நல்லன நயந்து கேட்டு நன்பகற் போது* நீத்தும்.

---

(பா-ம்.) * நண்பகற்போது.

(இ-ள்.) எல்லவன் உச்சி நீந்தும் எல்லையில் - சூரியன் உச்சியி னின்றுங் கடந்து செல்லுங் காலத்தில், நான்கும் ஆறும் வல்லவர் — நான்கு வேதங்களையும் ஆறு அங்கங்களையும் (கற்று) வல்லவர், சூதன் ஓதி வகுத்த மூவாறு கேள்வி சொல்ல - சூதமுனிவன் கூறிப் பாகுபாடு செய்த பதினெண் புராணங்களையுஞ் சொல்ல, உள் மலர்ந் தும் - அகமகிழ்ந்தும், ஏனை மனுமுதல் துறைமாண் கேள்வி நல்லன — மற்றும் மனு நூல் முதலிய நீதியின் மாண்பமைந்த நூல்களுள் நல்ல வற்றை, நயந்து கேட்டும் - விரும்பிக் கேட்டும், நல் பகற்போது நீத்தும் - (இங்ஙனம்) நல்ல பகற்பொழுதினைக் கழித்தும் எ - று.

உச்சி நீந்தும் எல்லை - பிற்பகல். நான்கு, ஆறு என்னும் எண்ணுப் பெயர்கள் அத்தொகையையுடைய வேதங்களையும் அங்கங்களையும் குறிப்பன வாயின. கேள்வி, கேட்கப்படும் நூலைக் குறித்தது. (௩எ)

கலைக்குரை விரிப்பா ரென்ன வறுமையிற் கல்வி போலப்
புலப்படா மருங்கு னல்லா ரெந்திரப் புலவன் பூட்டி
அலைத்திடு பாவை போனின் றுடல்செய் யாடற் கண்ணும்
நலத்தகு பாடற் கண்ணு நல்லரு ணுட்டஞ் செய்தும்.

(இ-ள்.) வறுமையில் கல்விபோல - வறுமைக் காலத்திலே கல்வி (விளங்காமை) போல, புலப்படா மருங்குல் நல்லார் - கண்ணுக்குத் தோன்றாத இடையையுடைய பெண்கள், எந்திரப்புலவன் - சூத்திரப் பாவை ஆட்டும் உணர்ச்சியின்மிக்கான் ஒருவனால், பூட்டி அலைத்திடு பாவைபோல் நின்று - அக்கயிற்றிற் பூட்டி ஆட்டப் பெறுகின்ற பாவைபோல நின்று, கலைக்கு உரை விரிப்பார் என்ன - பரத நூலுக் குப் பொருள் கூறுவார்போன்று, ஆடல் செய் ஆடல் கண்ணும் - ஆடு கின்ற ஆடலின் கண்ணும், நலத்தகு பாடல் கண்ணும் - நலம் நிறைந்த பாடலின் கண்ணும், நல் அருள் நாட்டம் செய்தும் - நல்ல அருட்பார்வை வைத்தும் எ - று.

"நற்பொரு ணன்குணர்ந்து சொல்லினு நல்கூர்ந்தார்
சொற்பொருள் சோர்வு படும்"

என்பது தமிழ்மறையாகலின் 'வறுமையிற் கல்விபோலப் புலப்படா' என்றார். பாவை யாடலின் வேற்றுமை யின்றென்றார். பொருள்நன்கு விளங்கலின் 'உரை விரிப்பாரென்ன' என்றார்; இவரது ஆடல் கொண்டு அந்நூற் பொருள் தெளியலாகும் என்பதாயிற்று. என்ன ஆடல் செய் எனக் கூட்டுக. (௩அ)

இன்னிலை யொழுகுந் தொல்லோ ரியற்றிய தருமம் வேறும்
அந்நிலை நிறுத்தும் வேள்வி யறம்பல வாக்கஞ் செய்ய
நன்னிதி யளித்தும் வேள்வி நடாத்தியுஞ் செல்வங் கல்வி
தன்னிரு கண்க ளாகத் தழைந்திட வளர்க்கு நாளும்.

(இ-ள்.) இல் நிலை ஒழுகும் தொல்லோர் இயற்றிய தருமம் - இல் லறத்தி லொழுகும் முன்னோர்செய்த அறங்களையும், வேறும் - மற்றும், அந்நிலை நிறுத்தும் வேள்வி - அந்த இல் நிலையை நிலைபெறச் செய்யும்

வேள்விகளையும், பல அறம் - பல அறங்களையும், ஆக்கம் செய்ய - விருத்தி செய்தற்பொருட்டு, நல் நிதி அளித்தும்-நல்லபொருள்களைக் கொடுத்தருளியும், வேள்வி நடாத்தியும் - தாம் வேள்விகளைச் செய்தருளியும், செல்வம் கல்வி-செல்வப் பொருளையும் கல்விப்பொருளையும், தன் இரு கண்களாக - தம் இரண்டு விழிகளாகக் (கொண்டு), நாளும் தழைத்திட வளர்க்கும் - நாடோறும் தழைத் தோங்கும்படி அவற்றை வளர்த்தும் வருவார் எ - று.

வேறு என்பதற்குப் பிரமசரிய முதலிய ஏனைய நிலைகள் எனப் பொருள் கொள்வாருமுளர். ஆக்கஞ்செய்தல்-வளர்த்தல்; ஒருசொல். நாட்டிற்குச் செல்வமும் கல்வியும் இன்றியமையாதன வென்றார்;

"நற்றவஞ்செய் வார்க்கிடந் தவஞ்செய் வார்க்கு மஃதிடம்
நற்பொருள்செய் வார்க்கிடம் பொருள்செய் வார்க்கு மஃதிடம்"

என்னும் சிந்தாமணிச் செய்யுள் நினைக்கற்பாலது. வளர்க்கும் என்பதை வளர்த்தும் வருவார் என விரிக்க. 'இன்னிய மியம்பும்'என்னுஞ் செய்யுள் முதல் இதுகாறும் ஒரு தொடர். (௪௯)

ஒப்புரு முதலீ றில்லா வொருத்திதன் சத்தி பெற்ற
முப்பெருந் தேவ ராலே முத்தொழி னடாத்து மேன்று
செப்பலும் புகழன் றென்னிற் றென்னவன் கன்னி யாகி
இப்புவி மனுவிற் காக்கு மென்பதேன் பேதை மைத்தே.

(இ - ள்.) ஒப்பு உரு முதல் ஈறு இல்லா ஒருத்தி-ஒப்பும் வடிவமும் முதலும் முடிவுமில்லாத சிவசத்தி, தன் சத்தி பெற்ற-தன் சத்திகளாலே பெறப்பட்ட, முப்பெருந் தேவராலே-மூன்று பெரிய தேவர்களாலே, முத்தொழில் நடாத்தும் என்று செப்பலும்-மூன்று தொழில்களையும் நடாத்தாநிற்கும் என்று கூறுதலும். புகழ் அன்று என்னில்-புகழன்று என்றால், தென்னவன் கன்னியாகி - (அவள்) பாண்டியன் மகளாகி, இப்புவி மனுவிற் காக்கும் என்பது என் பேதைமைத்தே - இந்நிலவுலகை மனுமுறையால் ஆளும் என்று கூறுவது என் அறியாமையைக் காரணமாக உடையதே எ - று.

தன் சத்தியென்றது மகேசை முதலிய சக்திகளை. முப்பெருந் தேவர்-அயன், அரி, அரன். காக்குமென்பது - காக்கு மென்பதை ஒரு புகழாகக் கூறுவது. (௫௦)

வரைசெய் பூண்முலைத் தடாதகை மடவரற் பிராட்டி
விரைசெய் தார்முடி வேய்ந்துதண் குடைமனு வேந்தன்
கரைசெய் நூல்வழி கோல்செலக் கன்னியாம் பருவத்
தரசு செய்தலாற் கன்னிநா டாயதந் நாடு.

(இ - ள்.) வரைசெய் பூண்முலைத் தடாதகை மடவரற் பிராட்டி-மலையை ஒத்த அணிகளை அணிந்த கொங்கைகளையுடைய தடாதகை என்னும் பெயருடைய மடவரலாகிய பிராட்டியார், விரைசெய் தார் முடிவேய்ந்து - மணம் வீசுகின்ற மாலையணிந்த முடியினைத் தரித்து,

தண்குடை - குளிர்ந்த குடைநிழலில் அமர்ந்து, மனுவேந்தன் கரைசெய் நூல்வழிகோல்செல-மனுவரசனால் வரையறை செய்யப்பட்ட நூலின் வழியே தனது செங்கோல் செல்லுமாறு, கன்னியாம் பருவத்து அரசு செய்தலால் - கன்னியாகிய பருவத்திலே ஆட்சி புரிந்தமையால், அந்நாடு கன்னிநாடு ஆயது-அப்பாண்டி நாடானது கன்னிநாடு என்னும் பெயரினைப் பெறுவதாயிற்று எ - று.

வரைசெய், செய்: உவமச்சொல். மடம்என்னும்குணம்பொருந்துதலையுடைமையால் மடவரல் என்பது பெண்களுக்கு ஒரு பெயர்; மடம்-மகளிர்க்குரிய நாற்குணங்களில் ஒன்று; 'கொளுத்தக்கொண்டு கொண்டது விடாமை' என்பர் நச்சினார்க்கினியர். (௬௧)

இன்ன வாறுமை யவதரித் திருந்தன ளென்னப்
பொன்ன வாவினர் பெறவெறி பொருநைகால் பொருப்பன்
சொன்ன வாய்மைகேட் டகங்களி தூங்கினர் தொழுது
மின்னு வார்சடை முனிவரோர் வினவுரை செய்வார்.

(இ - ள்.) இன்னவாறு உமை அவதரித்து இருந்தனள் என்ன-இவ்வாறு உமையம்மையார் திருவவதாரஞ் செய்திருந்தனரென்று, பொன் அவாவினர்பெற எறிபொருநை கால் பொருப்பன்-பொன்னை விரும்பினவர்கள் பெறுமாறு வீசுகின்ற தாமிரபன்னி நதியைப் பெற்ற பொதியின் மலையையுடைய குறுமுனிவன், சொன்ன வாய்மை கேட்டு - கூறிய உண்மையைக் கேட்டு, மின்னுவார் சடை முனிவர் - மின்னலைப் போன்ற நீண்ட சடையையுடைய முனிவர்கள், அகங்களி தூங்கினர்-மனங் களிப்புற்றவராய், தொழுது ஓர் வினவுரை செய்வார் - வணங்கி ஒரு வினவுரை நிகழ்த்துவார்கள் எ - று.

அவாவினர் பெறப் பொன்னை யெறியும் பொருநை என்னும் அடையானது அந்நாட்டினர் விரும்பினோர்க்குப் பொன் வழங்கும் வண்மையர் என்னுங் கருத்தினைக் கொண்டிருக்கிறது. வாய்மை - வாய்மொழி; உண்மை. மின்னு, உ: சாரியை. (௬௨)

திருந்து நான்மறைச் சென்னியுந் தீண்டுதற் கரிதாய்
இருந்த நாயகி யாவையு மீன்றவெம் பிராட்டி
விரிந்த வன்புகூர் தக்கனும் வெற்பனும் பன்னாள்
வருந்தி நோற்றலா லவர்க்கொரு மதலையாய் வந்தாள்.

(இ - ள்.) திருந்தும் நான்மறை சென்னியும் தீண்டுதற்கு அரிதாய் இருந்த நாயகி - திருத்தமாகிய நான்கு மறைகளின் முடிவுந் தொடுதற்கு அருமையாய் இருந்த இறைவியாகிய, யாவையும் ஈன்ற எம்பிராட்டி - அனைத்தையும் பெற்ற எம் பிராட்டியார், விரிந்த அன்புகூர் தக்கனும் வெற்பனும் - அளவில்லாத அன்பு மிகுந்த தக்கனும் மலையரசனும், பன்னாள் வருந்தி நோற்றலால் - பல நாட்கள் வருந்தித் தவஞ்செய்தலால், அவர்க்கு ஒரு மதலையாய் வந்தாள் - அவர்களுக்கு ஒரு மகவாய்த் தோன்றியருளினார் எ - று.

சென்னியும்-சென்னியாலும். அரிதென்பது அருமை யென்னும் பண்பு மாத்திரையாய் நின்றது. (௬௩)

மனித்த னாகிய பூழியன் மகளென வீங்குத்
தனித்த காரணம் யாதெனத் தமனியப் போதுவிற்*
குனித்த சேவடிக் கன்புடைக் குடமுனி யருள்கூர்ந்
தினித்த தோர்கதை கேண்மினென் றெடுத்துரை செய்வான்.

(இ-ள்.) மனித்தன் ஆகிய பூழியன் மகள் என-மானிடனாகிய பாண்டியனுக்குத் திருமகளாராக, ஈங்கு தனித்த காரணம் யாது என-இந்நிலவுலகில் இறைவனினின்றும் தனித்து வந்த காரணம் யாது என்று வினவ, தமனியப் பொதுவில்-பொன்னம்பலத்தில், குனித்த சேவடிக்கு-ஆடுகின்ற சிவந்த திருவடிக்கண், அன்பு உடை-அன்புடைய, குடமுனி - கும்ப முனிவனாகிய அகத்தியன், அருள் கூர்ந்து - கருணை மிகுந்து, இனித்தது ஓர் கதை கேண்மின் என்று - இனிமை யுடையதாகிய ஒரு கதை உண்டு (அதனைக்) கேளுங்கள் என்று, எடுத்து உரை செய்வான்-எடுத்துக் கூறுவான் எ-று.

தக்கனும் வெற்பனும் தேவரினத்தைச் சார்ந்தவரென்பார் 'மனித்தனாகிய பூழியன்' என்றார். தேவராயுள்ளாரும் பன்னாள் வருந்தி நோற்றமையால் அவர்க்குப் புதல்வியாகிய இறைவி, அங்ஙன மின்றியே ஒருமனிதனுக்குப் புதல்வியாய காரணம் என்னை யென்று வினவ வென்க. மனித்தன்: விரித்தல் விகாரம். அடிக்கு-அடிக்கண். குனித்த சேவடி- ஆடிய திருவடி; சிவபெருமான் திருவடி. (௬௪)

விச்சு வாவசு வெனுமோரு விச்சையன் பயந்த
நச்சு வாள்விழி மடந்தைவிச் சாவதி நாமம்
அச்சு வாகத மோழியினா ளம்பிகைக் கன்பு
வைச்சு வாழ்வுறு மனத்தினா டாதையை வணங்கா.

(இ-ள்.) விச்சுவாவசு எனும் ஒரு விச்சையன் பயந்த-விச்சுவாவசு என்ற பெயரினையுடைய ஒரு விஞ்சையன் பெற்ற, நச்சு வாள் விழி மடந்தை-நஞ்சு பூசிய வாளை ஒத்த விழிகளையுடைய பெண் ஒருத்தியிருந்தனள்; நாமம் விச்சாவதி-அவள் பெயர் விச்சாவதி, அச்சுவாகத மொழியினாள்-அந்தக் கிளிபோலும் மொழியினையுடையாள், அம்பிகைக்கு அன்பு வைச்சு வாழ்வு உறு மனத்தினாள்-உமையவள் பால் அன்பு வைத்து வாழுகின்ற மனத்தையுடையவளாய், தாதையை வணங்கா-தன் தந்தையை வணங்கி எ-று.

விச்சையன்-விஞ்சையன்; வித்தியாதரன்; கந்தருவன் என்றுமாம். நச்சு-நஞ்சு; வலித்தல் விகாரம். இருந்தாள் என ஒரு சொல் வருவிக்க. அச்சுவாகதம்-அழகிய கிளி யென்றுமாம். நெடுநல் வாடையுள் 'அவ்விதழ்' என்பதற்கு 'அழகிய இதழ்' என நச்சினார்க்கினியர் பொருள் கூறுதலுங் காண்க. கு: உருபு மயக்கம். வைச்சு: மரூஉ; போலியு மென்ப. (௬௫)

ஐய வம்பிகை தன்னையா னன்பினால் வழிபட்
டுய்ய வேண்டுமேன் றுளவ னுலகேலாம் பயந்த
தையன் மந்திரந் தனைமக டனக்குப தேசஞ்
செய்ய வந்நெறி யோழுகுவாள் சேப்புவாள் பின்னும்.

---

(பா-ம்.) * தபனியப் பொதுவில்.

(இ - ள்) ஐய - தந்தையே, யான் அம்பிகை தன்னை அன்பினுல் வழிபட்டு - யான் உமையம்மையை அன்பினலே வழிபாடு செய்து, உய்யவேண்டும் என்ருள் - பிழைக்க வேண்டுமென்று கூறினுள்; அவன் அவ்விச்சுவாவசு, உலகு எலாம் பயந்த தையல் மந்திரம் தனை - உலக மனைத்தையும் பெற்ற உமாதேவியின் திருமந்திரத்தை, மகள் தனக்கு உபதேசம் செய்ய - மகளுக்கு உபதேசிக்க, அந்நெறி ஒழுகுவாள் - அவ்வுபதேசவழி நடக்கின்ற அவள், பின்னும் செப்புவாள் - மேலும் தன்தந்தையை நோக்கிக் கூறுகின்ருள் எ - று.

ஒழுகுவாள், பெயர். (௬௬)

இறைவி தன்னையா தரிப்பதற் கிம்பரிற் சிறந்த
குறைவி னன்னகர் யாதெனக் கூறுவான் கேள்வித்
துறைவி ளங்கிஞேர் பயில்வது துவாதச முடிவென்
றறைவ ளம்பதி யவனிமேற் சிவபுர மாமால்.

(இ - ள்) இறைவி தன்னை ஆதரிப்பதற்கு - அவ்வுமையவளை அன்பினுல் வழிபடுதற்கு, இம்பரில் சிறந்த குறைவு இல் நல் நகர் யாது என - இவ்வுலகில் மேலான குறைவில்லாத நல்ல பதியாதென்று வினவ, கூறுவான் - விச்சுவாவசு சொல்வான்; துவாதச முடிவு என்று அறை வளம்பதி - துவாத சாந்தம் என்று கூறப்படும் வளப்பத்தையுடைய பதியானது, கேள்வித்துறை விளங்கிஞேர் பயில்வது - கற்றல் கேட்டல் வழிகளில் வல்லார் வதியப் பெறுவதாய், அவனிமேல் சிவபுரம் ஆம் - பூவுலகில் சிவலோக மாகும் எ - று.

செப்புவாளாய் யாதென என மேற்செய்யுளோடு கூட்டிப் பொருள் கொள்க. சிறந்த நகர், குறைவில் நகர் எனத் தனித்தனி முடிக்க. கேள்விகல்வியுமாம். பயில்வதாகிய வளம்பதி சிவபுரமாம் என்னலுமாம். ஆம் - ஆகும். ஆல் : அசை. (௬௭)

சேடு தாங்குமூ வுலகினுட் சிறந்தன சத்தி
பீட மூவிரு பத்துநான் கவற்றின்முற் பீடம்
மாட மோங்கிய மதுரையா மற்றது போகம்
வீடும் வேண்டிய சித்தியும் விளைப்பதென் றெண்ணு.

(இ - ள்.) சேடு தாங்கு மூவுலகினுள் - பெருமையைத் தாங்கிய மூன்று உலகங்களிலும், சிறந்தன சத்திபீடம் மூவிருபத்து நான்கு - மேம்பட்டனவாகிய சத்திபீடங்கள் அறுபத்து நான்காகும்; அவற்றின் முற்பீடம் - அவற்றுள் முதற்பீடமாயுள்ளது, மாடம் ஓங்கிய மதுரையாம் - மாளிகைகள் உயர்ந்த மதுரைப் பதியாகும்; அது - அப்பதி, போகம் வீடும் வேண்டிய சித்தியும் விளைப்பது என்று எண்ணு - போகத்தையும் வீடுபேற்றையும் வேண்டுவார் வேண்டிய சித்திகளையும் அளிக்க வல்லது என்று கருதி எ - று.

பெருமையைத் தாங்கிய. சிறந்தன: வினை முற்று பெயரெச்சப் பொருளில் வந்தது. மூவிருபதோடு கூடிய நான்கு என்க. மற்று அசை. போகமும் என உம்மை விரிக்க. போகம் - இம்மை யின்பம்.

சத்திபீடம் அறுபத்து நான்காவன :—கோபாலபுரத்தில் உள்ள இலக்குமி பீடமும், மாதுபுரத்திலுள்ள இரேணுகா பீடமும், துளசாபுர பீடமும், சத்த சிருங்க பீடமும், இங்குலையிலுள்ள சுவாலாமுகி பீடமும், சாகம்பரியிலுள்ள பிராமரி பீடமும், ஸ்ரீரத்த தந்திகையிலுள்ள துர்க்கை பீடமும், விந்தியாசல பீடமும், திருக்காஞ்சியிலுள்ள அன்ன பூரணி பீடமும், விமலையிலுள்ள பீமாதேவி பீடமும், திருச்சந்திரலையிலுள்ள கௌசிகி பீடமும், நீல பருவதத்திலுள்ள நீலாம்பரி பீடமும், திருநகரத்திலுள்ள சாம்புநதேச்சுவரி பீடமும், நேபாளத்திலுள்ள இரகசிய காளி பீடமும், மதுரையிலுள்ள மீனாட்சி பீடமும், வேதாரணியத்திலுள்ள சுந்தரி பீடமும், ஏகாம்பர பீடமும், மகாலசத்திலுள்ள யோகேச்சுவரி பீடமும், சீனாவிலுள்ள நீல சரச்சுவதி பீடமும், வைத்திய நாதத்திலுள்ள வகலை பீடமும், மணித்திபத்திலுள்ள புவனேச்சுவரி பீடமும், காமயோனி மண்டலமென்கிற திரிபுர பைரவி பீடமும், புட்கரத்திலுள்ள காயத்திரி பீடமும், அமரேசத்திலுள்ள சண்டிகை பீடமும், பிரபாசத்திலுள்ள புட்கரேட்சனி பீடமும், நைமிசத்திலுள்ள தேவி பீடமும், புட்காட்சத்திலுள்ள புருகூத பீடமும், ஆசாடத்திலுள்ள இரதி பீடமும், சண்டமுண்டியிலுள்ள தண்டினி பீடமும், பாரபூதியிலுள்ள பூதிபீடமும், நாகுலத்திலுள்ள நகுலேச்சுவரி பீடமும், அரிச்சந்திரத்திலுள்ள சந்திரிகை பீடமும், திருக்கிரியிலுள்ள சாரதா பீடமும், பஞ்ச நதத்திலுள்ள திரிசூல பீடமும், ஆம்பிராத கேச்சுவரத்திலுள்ள சூக்கும பீடமும்; மகாகாளத்திலுள்ள சாங்கரி பீடமும், மத்திய மாபீதத்திலுள்ள சர்வாணி பீடமும், கேதாரத்திலுள்ள மார்க்க தாயினி பீடமும், வைரவத்திலுள்ள பைரவி பீடமும், கயையிலுள்ள மங்கள பீடமும், குருட்சேத்திரத்திலுள்ள தாணுப்பிரியை பீடமும், வியபிநாகுலத்திலுள்ள சுவாயம்பு பீடமும், கனகலத்திலுள்ள உக்கிர பீடமும், விமலேச்சுவரத்திலுள்ள விசுவேசை பீடமும். அட்டகாசத்திலுள்ள மகானந்த பீடமும், மகேந்திரத்திலுள்ள மகாந்தகைப் பீடமும், பீமத்திலுள்ள பீம பீடமும், வத்திராபதத்திலுள்ள பவானி பீடமும், அர்த்த கோடிகையிலுள்ள உருத்திராணி பீடமும், அவிமத்தத்திலுள்ள விசாலாட்சி பீடமும், கைலாயத்திலுள்ள மகாபாகை பீடமும், கோகன்னத்திலுள்ள பத்திரகாளி பீடமும், பத்திர கன்னிகத்திலுள்ள பத்திரை பீடமும், சுவர்னாட்சத்திலுள்ள உற்பலாட்சி பீடமும், தாணுவிலுள்ள தான்வீசை பீடமும், கமலாலயத்திலுள்ள கமலை பீடமும், சகண்டலத்திலுள்ள பிரசண்டை பீடமும், குரண்டலத்திலுள்ள திரிசந்திரிகை பீடமும், மாகோட்டத்திலுள்ள மகுடேச்சுவரி பீடமும், மண்டலேசத்திலுள்ள சாண்டகை பீடமும், காலஞ்சரத்திலுள்ள காளி பீடமும், சங்கு கன்னத்திலுள்ள தொனி பீடமும், தூலகேச்சுவரத்திலுள்ள தூல பீடமும், ஞானிகளிதயகமலத்திலுள்ள பரமேச்சுவரி பீடமுமாம். இவற்றை வடமொழியிலுள்ள தேவிபாகவதத்தில் காண்க. (௬௮)

அல்லு மேல்லும்வா னகர்க்கத வடைப்பின்றிச் சுவர்க்கச்
செல்வ ரங்கடைந் துமையருள் சித்தியால் வினையை
வெல்லு வாரதான் றெந்தையோ டைவர்கள் வேண்டி
நல்வ ரம்பல வடைந்தனர் நமர்களங் நகரில்.

(இ - ள்.) சுவர்க்கச் செல்வர் - துறக்க வாழ்க்கையாகிய தேவர்கள், அல்லும் எல்லும்-இரவும் பகலும், வான் நகர்க் கதவு அடைப்பு இன்றி - அந்நகரின் கதவு அடைபடுதலில்லாமல், அங்கு அடைந்து மதுரையை யெய்தி, உமை அருள் சித்தியால் - அங்கயற்கண்ணம்மை அருளுகின்ற சித்தியினால், வினையை வெல்லுவார் - வினைப்பகையை வெல்லுவார்கள்; அதான்று - அதுவேயன்றி, எந்தையோடு நமர்கள் ஐவர்கள் வேண்டி - என் தந்தையுடன் நம்மவர்கள் ஐவர் அவ்வுமையை வணங்கி, அந்நகரில் பல நல்வரம் அடைந்தனர் - அந்நகரத்தின்கண் பல நல்ல வரங்களைப் பெற்றனர் எ - று.

இடையருது சென்று மீளுதலின் கதவு அடைப்பின்றி யென்றார். இன்றி - இல்லையாக. அதான்று - அது அன்று; மரூஉ; குறிப்பு வினையெச்சம். கள் : விகுதிமேல் விகுதி. (௬௯)

எம்மை யாரையும் யாவையு மீன்றவங் கயற்கண்
அம்மை யாவரே யாயினு மன்பினு தரிப்போர்
இம்மை யாகிய போகம்வீ டெண்ணியாங் கெய்தச்
செம்மை யாகிய வின்னருள் செய்துவீற் றிருக்கும்.

(இ - ள்.) எம்மை யாரையும் யாவையும் ஈன்ற அங்கயற்கண் அம்மை - எம்மையும் மற்றுள்ள யாவரையும் யாவற்றையும் பெற்ற அங்கயற்கண்ணம்மையார், அன்பின் ஆதரிப்போர்-அன்பினால் வழிபடுவார், யாவரே ஆயினும் - எவராயினும், எண்ணியாங்கு - (அவர்கள்) எண்ணிய வண்ணமே, இம்மையாகிய போகம் வீடு-இம்மைப் பயனாகிய போகத்தையும் வீடுபேற்றையும், எய்த - அடையுமாறு, செம்மையாகிய இன் அருள் செய்து வீற்றிருக்கும்-கோட்டமில்லாத இனிய கருணையைப் புரிந்து வீற்றிருப்பார் எ - று.

எம்மையும் என உம்மை விரிக்க; தம்மை வேறுபிரித் தோதியது அன்பின் உரிமையால்; என் அம்மை எனலுமாம். உயர்திணையும் அஃறிணையு மென்பார் 'யாரையும் யாவையும்' என்றார். ஆதரித்தல் - ஈண்டு வழிபடுதல். இம்மைப்பயனை, இம்மை யென்றார். செம்மை - சிறப்புமாம். (௭0)

என்ற தாதையை யிறைஞ்சினு ளனுச்சை*கொண் டெழுந்தாள்
மன்றன் மாமலர் வல்லிபோல் வழிக்கொடு கானங்
குன்ற மாறுபின் கிடப்பமுன் குறுகினு ளன்பின்
நின்ற வாதியெம் பரையரு ணிறைந்தவந் நகரில்.

(இ - ள்.) என்ற தாதையை இறைஞ்சினுள் - என்று கூறிய தந்தையை வணங்கி, அனுச்சை கொண்டு எழுந்தாள் -விடைபெற்று எழுந்து, மன்றல் மாமலர் வல்லிபோல் வழிக்கொடு-மணமும் பெருமையு முடைய பூங்கொடிபோல் நடந்து, கானம் குன்றம் ஆறு பின் கிடப்ப - காடும் மலையும் ஆறும் பிற்பட, அன்பில் நின்ற ஆதி எம்பரை அருள் நிறைந்த அந்நகரில் முன் குறுகினுள் - அடியார்கள் அன்பில் நிலைபெற்றுத் தங்கிய முதல்வியாகிய எம் பராசத்தியாரின் திருவருள் நிறைந்த அம் மதுரைப் பதியிற் சேர்ந்தாள் எ - று.

---

(பா - ம்.) * அநுஜ்ஞை.

அனுச்சை - அநுஞ்ஞை. மா - வண்டுமாம். மலர்வல்லி - திருமகள் என்னலுமாம். எண்ணும்மைகள் விரிக்க. இறைஞ்சினள், எழுந்தாள்: முற்றெச்சங்கள். (எக)

அடைந்தி ளம்பிடி யாடல்போ லாடக கமலங்
குடைந்து நான்மறைக் கொழுந்திடங் கொண்டுறை குறிபாற்*
படர்ந்த பொன்மலை வல்லியைப் பணிந்துவெங் கதிரோன்
தொடர்ந்த வான்சுறு மதியமே யாதியாத் தொடங்கா.

(இ-ள்.) அடைந்து இளம்பிடி ஆடல்போல் - அப்பதியை அடைந்து பெண்யானை நீராடுதல்போல, ஆடக கமலம் குடைந்து - பொற்றாமரையில் நீராடி, நால்மறைக் கொழுந்து - நான்கு வேதங்களின் கொழுந்தாகிய சிவபெருமான், இடங்கொண்டு உறை குறிபால் - இடமாகக்கொண்டு எழுந்தருளி யிருக்கின்ற சிவலிங்கத்தின் கண், படர்ந்த பொன்மலை வல்லியை - படர்ந்த இமயவல்லியாகிய அங்கயற்கணம்மையை, பணிந்து-வணங்கி, வெங்கதிரோன்-சூரியன் வான் சுறுத் தொடர்ந்த மதியமே ஆதியாத் தொடங்கா-பெரிய மகர ராசியிற் புகுந்த தைத் திங்கள் முதலாகத் தொடங்கி எ - று.

குறிப்பால் எனப் பாடங் கொண்டு, கொழுந்தினது இடப்பாகத்தைக் கொண்டுறையும் குறிப்போடு என்று பொருளுரைப்பாருமுளர். இமயம் பொன்மலை யெனப்படுவ துண்டாகலின் 'பொன்மலை வல்லி' என்றார். வானின் கண்ணுள்ள சுறு என்றுமாம். சுறு-மகரம்; மகர ராசியில் ஆதித்தன் சேர்ந்திருக்குங் காலம் தை மாதம். ஆதியாக வென்பது விகாரமாயிற்று. (எஉ)

[எழுசீரடியாசிரியவிருத்தம்]

பெரும்பக னல்லூண் கங்குலூ ணுதவப்
பெற்றவூ ணிலைமுதற் பல்லூண்
அரும்பொடி யெள்ளூண் சாந்திரா யணமா
வூனந்துபா னறியநீர் தருப்பை
இரும்புத னுனிநீர் காலிவை நுகர்ந்து
மியற்றரும் பட்டினி யுற்றும்
வரம்புற விராறு திங்களு நோற்று
வாடிமேல் வருஞ்சுறு மதியில்.

(இ-ள்.) பெரும்பகல் நல் ஊன் நுகர்ந்தும்-(தொடங்கிய தைத் திங்களில்) பெரிய பகற்காலத்தில் நல்ல உணவை உண்டும். கங்குல் ஊன் நுகர்ந்தும்-(மாசித் திங்களில்) இரவில் உணவு உண்டும், உதவப்பெற்ற ஊன் நுகர்ந்தும் - (பங்குனித் திங்களில்) கொடுக்கப் பெற்ற உணவு உண்டும், இலை முதல் பல் ஊன் நுகர்ந்தும் - (சித்திரைத் திங்களில்) இலை முதலிய பல உணவுகளை உண்டும், எள் அரும் பொடி ஊன் நுகர்ந்தும் - (வைகாசித் திங்களில்) எள்ளினது அரிய

(பா-ம்.) * குறிப்பால்.

பொடியாகிய உணவு உண்டும், சாந்திராயணம் நுகர்ந்தும் - (ஆனித் திங்களில்) சாந்திராயண நோன்பின் உணவு உண்டும், ஆன் ஐந்து நுகர்ந்தும் - (ஆடித் திங்களில்) பஞ்ச கவ்வியமாகிய உணவு உண்டும், பால் நுகர்ந்தும் - (ஆவணித் திங்களில்) பாலை அருந்தியும், நறிய நீர் நுகர்ந்தும் - (புரட்டாசித் திங்களில்) நல்ல நீரைப்பருகியும், தருப்பை இரும் புதல் நுனி நீர் நுகர்ந்தும் - (ஐப்பசித் திங்களில்) தருப்பை யாகிய பெரிய புல்லின் நுனியிலுள்ள நீரைப் பருகியும், கால் நுகர்ந் தும் - (கார்த்திகைத் திங்களில்) வாயுவை உண்டும், இயற்றரும் பட் டினி உற்றும் - (மார்கழித் திங்களில்) செய்தற்கரிய பட்டினியாயிருந் தும், இவை வரம்பு உற - இவைகளை வரம்பு பட, இராறு திங்களும் நோற்று - பன்னிரு மதியும் செய்து, வாடி - (உடல்) மெலிந்து, மேல் வருஞ் சுருமதியில் - மேலே வருகின்ற தைத்திங்களில் எ - று.

நல்லூன் முதலியவற்றிற்கு ஐயுருபு விரித்து நுகர்ந்து என்பத னைத் தனித்தனி கூட்டுக. தைத் திங்கள் முதல் பன்னிரு திங்கட்கும் நல்லூன் முதலியவற்றில் ஓரோவொன்று முறையானே இயையும். உதவப்பெற்ற ஊன் நுகர்தல் - பகல் இரவு என்னு நியதியின்றிப் பிற ரளிக்கக் கிடைத்த வுணவினைக் கிடைத்தபொழுதுண்டல். சாந்திரா யணம் - மதியின் கலை வளருந்தோறும் ஒவ்வொரு கவளம் உயர்த்தும், குறையுந்தோறும் ஒவ்வொரு கவளம் குறைத்தும் உண்டு நோற்கும் விரதம் முன்னும் உரைக்கப்பட்டது. ஈராறு எனற் பாலது குறு கிற்று: விகாரம். (எ௩)

சந்நிதி யடைந்து தாழ்ந்துநின் றிளமாந்
தளிரடிக் காஞ்சிசூழ் கிடந்த
மின்னிகர் மருங்கு லிடையிடை நுழையா
வெம்முலைச் செம்மலர்க் காந்தட்
பொன்னிரை வளைக்கை மங்கலக் கழுத்திற்
பூரண மதிக்கலை முகத்தின்
இன்னிசை யளிசூ ழிருட்குழற் கற்றை
யிறைவியை யிம்முறை நினையா.

(இ - ள்.) சந்நிதி அடைந்து தாழ்ந்து நின்று - திருமுன் சென்று பணிந்து நின்று, மா இளம் தளிர் அடி - மாவின் இளமையாகிய தளிர் போன்ற திருவடிகளையும், காஞ்சி சூழ் கிடந்த மின் நிகர் மருங்குல் - காஞ்சி என்னும் அணி புறஞ்சூழ்ந்து கிடந்த மின்னலை ஒத்த இடை யினையும், இழை இடை நுழையா வெம்முலை - நூல் இடையிற்புகுதா வாறு நெருங்கிய விருப்பத்தைத் தருகின்ற திருத்தனங்களையும், செம் பொன் வளை நிரை காந்தள் மலர்க்கை - செம்பொன்னாலாகிய வளை யல்களின் வரிசைகளையுடைய காந்தள் மலர்போன்ற திருக்கரங்களை யும், மங்கலக் கழுத்தின் - மங்கல நாண் அணிந்த திருக்கழுத்தினையும், பூரணம் கலைமதி முகத்தின் - நிறைந்த கலைகளையுடைய சந்திரன் போன்ற திருமுகத்தினையும், இன் இசை அளி சூழ் இருள் கற்றை குழல் - இனிய இசையையுடைய வண்டுகள் சூழ்ந்த இருள் போன்ற திரளாகிய கூந்தலையுமுடைய, இறைவியை - தேவியை, இம்முறை நினையா - இவ்வாறு பாதாதி கேசமாகத் தியானித்து எ - று.

காஞ்சி-இடையிலணியும் அணிவிசேடம்; இருகோவையுள்ளது. காந்தள் மலர்க்கை எனக் கூட்டுக. இம்முறை-இங்கே கூறியமுறை; பாதம் முதலாகக் கூந்தல் இறுதியாக. இவ்விலக்கணத்தால்நினைத்துமாம். (எ௪)

கோலயாழ்த் தெய்வம் பராய்க்கரங் குவித்துக்
கொழுஞ்சுடர்ப் பசுங்கதிர் விளக்கம்
போலநூற் பொல்லம் பொத்துபொன் னிறத்த
போர்வைநீத் தவிழ்கடி முல்லை
மாலைமேல் வீக்கிப் பத்தர்பின் கிடப்ப
மலர்க்குழ றேய்சுவற் கிடத்திச்
சேலைநேர் விழியாண் மாடகந் திரித்துத்
தெறித்தனள் பண்ணறிந் திசைப்பாள்.

(இ - ள்.) சேலைநேர் விழியாள் - சேலை ஒத்த கண்களையுடைய விச்சாவதி என்பாள், கோல யாழ்த் தெய்வம் பராய்-அழகிய யாழிற்குரிய தெய்வத்தைத் துதித்து, கரம் குவித்து - கை கூப்பி, கொழுஞ்சுடர்ப் பசுங்கதிர் விளக்கம்போல-கொழுவிய ஒளியையுடைய இளஞாயிற்றின் ஒளிபோல விளங்கும், நூல்பொல்லம் பொத்து பொன் நிறத்த போர்வை நீத்து - நூலால் தைத்த பொன்னின் நிறத்தினையுடைய போர்வையைக் கழற்றி, அவிழ் கடி முல்லை மாலைமேல்வீக்கி-இதழ்விரிந்த மணமுடைய முல்லை மாலையை அதன்மேற் சூட்டி, பத்தர் பின் கிடப்ப மலர்க்குழல் தோய் சுவல் கிடத்தி - பத்தர் பின்புறத்திலிருக்கப் பூவையணிந்த கூந்தல் தோய்ந்த பிடரியிற் சார்த்தி, மாடகம் திரித்து - முறுக்காணியை முறுக்கி, தெறித்தனள் பண் அறிந்து இசைப்பாள்-(நரம்பைத்) தெறித்துப் பண்ணின் வகையை அறிந்து பாடுகின்றாள் எ - று.

யாழ்த் தெய்வம்-மாதங்கி யென்னுந் தெய்வம் என்பர்;

"அணங்கு மெய்ந் நின்ற வமைவரு காட்சி"

என்னும் பொருநராற்றுப்படையுங் காண்க. பொல்லம் பொத்தல் இரண்டு தலையுங் கூட்டித் தைத்தல்: ஒரு சொல். மாடகம்-முறுக்காணி. யாழின் உறுப்புக்களை,

"கோடே பத்த ராணி நரம்பே
மாடக மெனவரும் வகையின தாகும்"

என்பதனாலறிக. பண்-பாலை, குறிஞ்சி, மருதம், செவ்வழி யென்பனவும், அவற்றின் திறங்களுமாம்.

"விளக்கழ லுருவின் விசியுறு பச்சை
யெய்யா விளஞ்சூற் செய்யோ ளவ்வயிற்
றைதுமயி ரொழுகிய தோற்றம் போலப்
பொல்லம் பொத்திய பொதியுறு போர்வை"

எனப் பொருநராற்றுப்படையுள் பொல்லம் பொத்திய போர்வையினியல்பு கூறியிருப்பது இங்கு நோக்கற் பாலது. (எ௫)

[அறுசீரடியாசிரிய விருத்தம்]

ஒளியா லுலகீன் றுயிரனைத்து மீன்போற் செவ்வி யுறநோக்கி
அளியால் வளர்க்கு மங்கயற்க ணன்னே கன்னி யன்னமே
அளியா லிமவான் றிருமகளா யாவியன்ன மயில் பூவை
தெளியா மழலைக் கிளிவளர்த்து விளையாட் டயருஞ் செயலென்னே.

(இ - ள்.) ஒளியால் உலகு ஈன்று-தனது ஒளியினால் உலகங்களனைத்தையும் பெற்று, உயிர் அனைத்தும்-எல்லாவுயிர்களையும், செவ்வி உற-பக்குவ முறும்படி, மீன்போல் நோக்கி-மீன்போலப் பார்த்து, அளியால் வளர்க்கும்-கருணையுடன் வளர்க்கின்ற, அம் கயல் கண் அன்னே-அழகிய கயல்போன்ற கண்களையுடைய தாயே, கன்னி அன்னமே-கன்னிப் பருவத்தினையுடைய அன்னமே, அளியால் இமவான் திருமகளாய்-நீ தான் கருணையால் மலையரையன் திருமகளாகி, ஆவி அன்னம் - தடாகத்தின் கண் உள்ள அன்னங்களையும், மயில் பூவை-மயில்களையும் நாகணவாய்ப் புட்களையும், தெளியா மழலைக் கிளி-பொருள் தெரியாத மழலைச் சொற்களையுடைய கிளிகளையும், வளர்த்து விளையாட்டு அயரும் செயல் என்னே-வளர்த்து விளையாடுகின்ற செய்கை யாது குறித்தோ எ-று.

ஒளி-ஞானம், அருளுமாம். மீனானது முட்டையிட்டு அவற்றை நோக்குதலினாலே பக்குவமடையச் செய்தல்போல உயிர்களையெல்லாம் ஈன்று தன் அருணோக்கத்தால் அவற்றிற்குப் பக்குவமுண்டாக்கி வளர்க்குங் காரணத்தால் அங்கயற் கண்ணி யென்பது பெயரென்றற்கு 'மீன்போற் செவ்வியுற நோக்கி வளர்க்கும் அங்கயற் கணன்னே' என்று கூறிற்று. மீன்கள் நோக்குதலால் அவற்றின் முட்டை குஞ்சாகு மென்ப. ஆவியன்னம் - உயிர்போன்ற அன்னம் எனலுமாம்; அன்ன வெனப் பிரித்து, உயிர்போன்ற மயில் முதலியன எனினும் அமையும். எல்லாவுயிர்களையும் வளர்க்கும் அன்னையாகிய நீ அவற்றுட் சிலவற்றை வளர்ப்பதாகக் காட்டுவது நீ கருணையாற் கொண்ட கோலத்திற் கேற்ற விளையாட்டன்றிப் பிறிதில்லை என்பது கருத்து. (எசு)

அண்டக் குவைவெண் மணற்சிறுசோ
றாக்கித் தனியே விளையாடுங்
கொண்டற் கோதாய் படியெழுத
லாகா வுருவக் கோகிலமே
கொண்டற் குடுமி யிமயவரை
யருவி கொழிக்குங் குளிர்முத்தால்
வண்டற் குதலை மகளிரோடும்
விளையாட் டயரும் வனப்பென்னே.

(இ-ள்.) அண்டக்குவை-அண்டக் கூட்டங்களை, வெள்மணல் சிறுசோறு ஆக்கி-வெள்ளிய மணலாற் சிறு சோறாக்குவதுபோல ஆக்கி, தனியே விளையாடும் கொண்டல் கோதாய்-தனிமையாக விளையாடுகின்ற முகில்போலும் கூந்தலையுடைய அன்னாய், படி எழுதலாகா உருவக் கோகிலமே-ஒப்பு எழுதமுடியாத வடிவத்தினையுடைய

குயிலே, கொண்டல் குடுமி-முகில் தவழும் முடியினையுடைய, இமய வரை அருவி கொழிக்கும் - இமயமலையின் அருவி ஒதுக்கிய, குளிர் முத்தால்-குளிர்ந்த முத்துக்களால், வண்டல் குதலை மகளிரொடும்-குதலைச் சொல்லையுடைய விளையாட்டுப் பெண்களோடும், விளையாட்டு அயரும்வனப்பு என்னே-நீ தான் விளையாடுகின்ற அழகு யாது குறித்தோ எ-று.

குவை-திரட்சி ; கூட்டம். சிறு சோறுக்கி-சிறு சோறுக்குவது போற்செய்து. பல்லாயிர கோடி அண்டங்களையும் படைப்பது இறைவிக்கு விளையாட்டு மாத்திரையே என்று கூறிற்று. கோதாய்: கோதையென்பதன் விளி. படி-ஒப்பு ;

"படியெடுத் துரைத்துக் காட்டும் படித்தன்று படிவம்" என்றூர் பிறரும்; அதுபோல் எழுதலாகாத உருவமென்க. வண்டல்-மகளிர் விளையாட்டு. (௭௭)

வேத முடிமே லானந்த வுருவாய் நிறைந்து விளையாடும்
மாத ரரசே முத்தநகை மானே யிமய மடமயிலே
மாத ரிமவான் றேவிமணி வடந்தோய் மார்புந் தடந்தோளும்
பாத மலர்சேப் புறமிதித்து விளையாட் டயரும் பரிசென்னே.

(இ - ள்.) வேதமுடிமேல் ஆனந்த உருவாய் நிறைந்து-மறையின் உச்சியில் இன்ப வடிவாக நிறைந்து, விளையாடும் மாதர் அரசே-விளையாடுகின்ற பெண்ணரசே, முத்தநகை மானே-முத்துப்போலும் பற்களையுடைய மானே, இமய மடமயிலே-இமயமலையிற் றேன்றிய இளமையாகிய மயிலே, மாதர் இமவான் தேவி-அழகிய மலையரசன் தேவியாகிய மேனையின், மணிவடம் தோய் மார்பும்-முத்துமாலை பொருந்திய மார்பிலும், தடம் தோளும்-பருத்த தோள்களிலும், பாத மலர் சேப்பு உற-அடிமலர்கள் சிவக்குமாறு, மிதித்து விளையாட்டு அயரும் பரிசு என்னே-குதித்து விளையாடுகின்ற தன்மை யாது குறித்தோ எ-று.

சேப்பு: செம்மை யென்னும் பண்படியாக வந்த தொழிற்பெயர். பரிசு-தன்மை. விளையாட்டு அயரும்-விளையாடுதலைச் செய்யும்: விளையாடும் என்பது விரிந்து நின்றது.

இவை மூன்றும் முன்னிலைப் பரவல்; கந்தருவ மார்க்கத்தால் இடை மடக்கி வந்தன. (௭௮)

[எழுசீரடியாசிரியவிருத்தம்]

யாழியன் மொழியா* லிவ்வழி பாடி
யேத்தினு ளாகமேய் யுள்ளத்
தாழிய வன்பின் வலைப்படு கருணை
யங்கயற் கண்மடமானேர்

(பா - ம்.) * மொழியாள்.

சூழிய நுழைமேல் லிளங்குழற் குதலைத்
தொண்டைவா யகவைமூன் றெய்தி
வாழிளங் குழவி யாகியா லயத்து
வந்துநின் றருள்வரங் கொடுப்பாள்.

(இ-ள்.) யாழ் இயல் மொழியால்-யாழில் அமைந்த இசைப் பாட்டால், இவ்வழிபாடி ஏத்தினுள் ஆக-இங்ஙனம் பாடித் துதிக்க, மெய் உள்ளத்து ஆழிய அன்பின் வலைப்படு-உண்மையுடைய உள்ளத்தின் கண் ஆழ்ந்த அன்பாகிய வலையில் அகப்படுகின்ற, கருணை அங்கயற்கண் மடமான்-கருணையுடைய இளமானைப் போன்ற அங்கயற் கண்ணம்மை, ஓர்-ஒரு, சூழியம் நுழை மெல் இளங்குழல்-கொண்டையணி பொருந்திய மெத்தென்ற சிறிய கூந்தலையும், குதலை-மழலைச் சொல்லையும், தொண்டைவாய்-கொவ்வைக் கனிபோன்ற வாயினையும் உடைய, மூன்று அகவை எய்தி-மூன்று ஆண்டினைப் பொருந்தி, வாழ் இளங் குழவியாகி-விளங்குகின்ற இளமையாகிய பெண்மகவாகி, வரம் கொடுப்பாள் ஆலயத்து வந்து நின்றருள்-(விச்சாவதி வேண்டிய) வரத்தை யளித்தற் பொருட்டுத் திருக்கோயிலின்கண் வந்து நின்றருளினாள் எ-று.

மொழி: பாட்டிற்கு ஆகுபெயர். ஏத்தினுள் என்னும் வினைமுற்றுடன் ஆக என்னும் இடைச்சொற் சேர்ந்து எச்சப்படுத்தது. ஆழிய-ஆழமாகிய: பெயரெச்சம். வலைப்படு என்றதற் கேற்க மான் எனக் கூறிய நயம் பாராட்டற்பாலது, ஓர் குழவியாகி யென்க. சூழியம்-குழற்சூட்டு. வாயினையுமுடைய குழவி, எய்திவாழ் இளங்குழவி எனத் தனித்தனி கூட்டுக. கொடுப்பாள்-கொடுக்க: எச்சம். நின்றருள் என்பதனை யெச்சமாக்கலும் ஒன்று. (௭௧)

இறைஞ்சியஞ் சலித்தா டன்னையெம் மன்னை
யாதுவேண் டினையென வென்று
நிறைந்தபே ரன்பு நின்னடிப் போதி
னீங்கலா நிலைமைதந் தருளென்
றறைந்தன ளின்னும் வேண்டுவ தேதென்
றருளவிம் மகவுரு வாகிச்
சிறந்துவந் தென்பா லருள்சுரந் திருக்கத்
திருவுளஞ் செய்யெனப் பணிந்தாள்.

(இ-ள்.) இறைஞ்சி அஞ்சலித்தாள் தன்னை-வணங்கிக் கை குவித்து நிற்கும் விச்சாவதியை (நோக்கி), எம் அன்னை-எம் திருத்தாயாகிய மீனாட்சியம்மை, யாது வேண்டினை என-நீ எதனை விரும்பினாய் என்று கேட்க, நின் அடிப்போதில் நிறைந்த பேர் அன்பு என்றும் நீங்கலா நிலைமை தந்தருள் என்று அறைந்தனள்-நினது திருவடி மலரின்கண் நிறைந்த பேரன்பானது எப்பொழுதும் நீங்காத நிலைமையினைத் தந்தருள வேண்டுமென்று வேண்டினள்; இன்னும் வேண்டுவது ஏது என்று அருள-இன்னும் நீ விரும்பியது யாது என்று வினவியருள, இம்மகவு உருவாகி-இக்காட்சி தந்த குழந்தை

யுருவாய், சிறந்து வந்து என்பால் அருள் சுரந்து இருக்க-சிறப்புடன் என்னிடந் தோன்றிக்கருணை கூர்ந்திருக்குமாறு, திருவுளம் செய் யெனப் பணிந்தாள் - திருவுளஞ் செய்ய வேண்டு மென்று வணங்கினுள் எ-று.

போதின் னிறைந்த வெனக் கூட்டுக. நீங்கலா: எதிர்மறைப் பெய ரெச்சம்; அல்: எதிர்மறை யிடைநிலை; ஆ: சாரியை. சிறந்து-சிறக்க. (அ0)

சிவபரம் பரையு மதற்குநேர்ந் தருள்வா
டென்னவர் மன்னனுய் மலயத்
துவசனேன் றொருவன் வருமவன் கற்பின்
றுணைவியாய் வருதியப் போதுன்
தவமக வாக வருவலென் றன்பு
தந்தனள் வந்தவா றிதுவேன்
றுவமையில் பொதியத் தமிழ்முனி முனிவர்க்
கோதினு னுள்ளவா றுணர்ந்தார்.

(இ-ள்.) சிவபரம்பரையும் அதற்கு நேர்ந்து அருள்வாள்-சிவ சத்தியாகிய அங்கயற்கண்ணம்மையும் அவ் வேண்டுகோளுக்கு உடன் பட்டு அருள் செய்கின்றவள், தென்னவர் மன்னனுய் மலயத்துவசன் என்று ஒருவன் வரும்-பாண்டியர் குலத்து மன்னனுகிய மலயத்துவச னென்பான் ஒருவன் இங்கு வந்து தோன்றுவான், அவன் கற்பின் துணைவியாய் வருதி-நீ அவனுடைய கற்பின்மிக்க மனைவியாய் வரு வாய், அப்போது உன் தவமகவு ஆக வருவல் என்று அன்பு தந்தனள்- அது காலை உன் தவப்புதல்வியாக வருவேன் என்று கருணைசெய்தாள், வந்தவாறு இது என்று-அம்மை பாண்டியனிடம் புதல்வியாக வந்த முறைமை இது என்று, உவமை இல் பொதியத் தமிழ்முனி-ஒப்பில் லாத பொதியின் மலையையுடைய அகத்திய முனிவன், முனிவர்க்கு ஓதினுன் - முனிவர்களுக்குக் கூறினுன்; உள்ளவாறு உணர்ந்தார்- அவர்களும் உள்ளபடி உணர்ந்தார்கள் எ-று.

பரம்பரை-சத்தி. வருதி-வருவாய்: இ எதிர்கால விகுதி; த்: எழுத்துப் பேறு. அன்பு தந்தனள்-அருள் புரிந்தாள். உவமையில் தமிழ் முனியென்க; தமிழ் முனி: பெயர். (அக)

ஆகச் செய்யுள்—ருகஅ.

---

## ரு. திருமணப்படலம்

[அறுசீரடியாசிரிய விருத்தம்]

தரைபுகழ் தென்னன் செல்வத் தடாதகைப் பிராட்டி தானே
திரைசெய்நீர் ஞாலங் காத்த செயல்சிறி துரைத்தேன் றெய்வ
விரைசெய்பூங் கோதை மாதை விடையவன் மணந்துபாராண்
டரசுசெய் திருந்த தோற்ற மறிந்தவா றியம்ப லுற்றேன்.

(இ - ள்.) தரை புகழ் தென்னன் செல்வத் தடாதகைப் பிராட்டி-புவியிலுள்ளார் புகழும் மலயத்துவச பாண்டியன் புதல்வியாராகிய செல்வத்தையுடைய தடாதகைப் பிராட்டியார், தானே-தாம் தனிமையாக, திரைசெய் நீர் ஞாலம் காத்த செயல் சிறிது உரைத்தேன் - அலைகளை வீசும் கடல் சூழ்ந்த நிலவுலகைப் புரந்தருளிய திருவிளையாடலைச் சிறிது கூறினேன்; தெய்வ விரை செய் பூங் கோதை மாதை - தெய்வ மணம் வீசும் மலரையணிந்த கூந்தலையுடைய அப்பிராட்டியாரை, விடையவன் மணந்துபார் ஆண்டு-இடபவாகனத்தையுடைய சிவபெருமான் திருமணஞ் செய்தருளி அந்நிலவுலகை ஆண்டு, அரசுசெய்து இருந்த தோற்றம் அறிந்தவாறு இயம்பலுற்றேன் - அரசியல் நடாத்திய திருவிளையாடலை அறிந்த வண்ணம் கூறுகின்றேன் எ - று.

தென்னன் புதல்வியாராகிய என விரித்துக்கொள்க. பெண்ணரசாகவிருந்து ஆண்ட பெருமை தோன்றத் 'தானே காத்த' என்றார். அரசியல் நடாத்து முறைமையிதுவெனக் காட்டுவார் போன்று ஆண்டன ரென்பார் 'பாராண்டு' என அமையாது, 'அரசு செய் திருந்த தோற்றம்' எனவுங் கூறினார். முழுதும் அறியவாரா தென்பார் 'அறிந்தவாறு' என்றார். (க)

காயிரும் பரிதிப் புத்தேள் கலியிருள் துமிப்பச் சோதி
பாயிருங் குடைவெண் டிங்கட் படரொளி நீழல் செய்ய,
மாயிரும் புவன மெல்லா மனுமுறை யுலக மீன்ற
தாயிளங் குழவி யாகித் தனியர சிருக்கு நாளில்.*

(இ - ள்.) காய் இரும் பரிதிப் புத்தேள்-ஒளிவீசும் பெரிய திகிரியாகிய சூரியதேவன், கலி இருள் துமிப்ப - துன்பமாகிய இருளைக் கெடுக்கவும், சோதிபாய் இருகுடை வெண் திங்கள் - ஒளிபரந்த பெரிய குடையாகிய வெள்ளிய சந்திரன், படர் ஒளி நீழல் செய்ய - படர்ந்த ஒளியாகிய நிழலைச் செய்யவும், மா இரும் புவனம் எல்லாம்-பெரிய உலகங்களை எல்லாம், மனுமுறை - மனு நூல் வழி, உலகம் ஈன்ற தாய்-அவ் வுலகங்களைப் பெற்றருளிய உமையம்மை,இளங் குழவியாகி - இளமையாகிய கன்னியா யிருந்து, தனி அரசு இருக்கும் நாளில் - தனிமையாக ஆட்சி புரியுங்காலத்தில் எ - று.

---

(பா - ம்.) * தனியரசளிக்கு நாளில்.

பரிதி - ஆக்கினை சக்கரமும் ஆதித்தனும்: இரட்டுற மொழிதல். சக்கரம் காய்தலாவது, பகைவரையும் கொடியோரையும் ஒறுத்தல். ஒளி-புகழ்; நிழலாகிய ஒளியெனினுமாம். நீழல், நீட்டல். மாயிரு: உரிச்சொல்லாகலின் யகர உடம்படுமெய் வந்தது. அரச பத்தினிகள் தம் கணவரோடு அரியணை யமர்ந்து அரசாளு முரிமை யுடையவர்; இவர் அங்ஙனமின்றித் தனியாக விருத்தலைக் கருதித் 'தனியரசிருக்கும்' என்றார். பொதுவின்றி அரசாளுதல் எனினுமாம். (உ)

மருங்குறேய்ந் தொளிப்பச் செம்பொன்
வனமுலை யிறுமாப் பெய்தக்
கருங்குழற் கற்றை பானாட்
கங்குலை வெளிறு செய்ய
இரங்குநல் யாழ்மென் றீஞ்சொ
லின்னகை யெம்பி ராட்டிக்
கருங்கடி மன்றல் செய்யுஞ்
செவ்விவந் தடுத்த தாக.

(இ - ள்.) மருங்குல் தேய்ந்து ஒளிப்ப-இடையானது தேய்ந்து மறையுமாறு, செம்பொன் வனம் முலை இறுமாப்பு எய்த - சிவந்த பொன்னிறம் வாய்ந்த அழகிய கொங்கைகள் பணைத்து அண்ணாந்திருக்கவும், கருங் குழல் கற்றை-கரிய கூந்தற்கற்றை, பால் நாள் கங்குலை வெளிறு செய்ய - நள்ளிரவின் கருமையை வெண்ணிறஞ் செய்யவும், இரங்கும் நல்யாழ் மென் தீஞ்சொல் இன் நகை எம்பிராட்டிக்கு-ஒலிக்கின்ற நல்ல யாழின் இசைபோன்ற மெல்லிய இனிய சொல்லையும் இனிய புன்முறுவலையுமுடைய எம் பிராட்டியாருக்கு, அருங்கடி மன்றல் செய்யும் செவ்வி வந்து அடுத்தது ஆக-அரிய திருமணம் செய்யும் பருவமானது வந்து பொருந்த எ - று.

ஒளிக்குமாறு இறுமாப் பெய்த. வனம்-தொய்யிலுமாம். கங்குலும் வெளிறென்னுமாறு கரிதாக. யாழ் இரங்குந் தன்மையுடைய வென்றுமாம். கடிமன்றல்: ஒருபொருளிருசொல்: விளக்கமமைந்த மன்றலுமாம். (௩)

பனிதரு மதிக்கோம் பன்ன பாவையைப் பயந்தா ணோக்கிக்
குனிதர நிறையப் பூத்த கோம்பனைக் கின்னுங் கன்னி
கனிதரு செவ்வித் தாயுங் கடிமணப் பேறின் றென்னாத்
துனிதரு நீரளாகிச் சொல்லினாள் சொல்லக் கேட்டாள்.

(இ - ள்.) பனிதரு மதி கொம்பு அன்ன பாவையை - குளிர்ந்த சந்திரனை யேந்திய கொம்பினை ஒத்த பிராட்டியாரை, பயந்தாள் நோக்கி - பெற்ற காஞ்சனமாலை பார்த்து, குனிதர நிறையப் பூத்த கொம்பு அனாய்க்கு-வளையுமாறு நிறைய மலர்ந்த பூங்கொம்பினைப் போன்ற உனக்கு, கன்னி கனி தரு செவ்வித்து ஆயும் - கன்னிப் பருவமானது முதிர்ந்த செவ்வியுடையதாகியும், இன்னும் கடிமணப் பேறு இன்று என்னா - இன்னமும் திருமணமாகிய பேறு கூடிற்

றில்லையே என்று, துனிதரு நீரளாகிச் சொல்லினுள் - வருந்துந் தன்மையை உடையவளாய்க் கூறினுள்; சொல்லக் கேட்டாள் - பிராட்டியார் அங்ஙனம் கூறுவதைக் கேட்டார் எ - று.

எல்லா வுறுப்புக்களும் குறைவின்றி நிறைந்தன வென்னும் குறிப்புத் தோன்ற 'நிறையப் பூத்த கொம்பு' என்றார். கொம்பனுய், பெயர். செவ்வித்து என்பதில் து: பகுதிப்பொருள் விகுதியுமாம். கடி, மணம்: ஒரு பொருளன; 'கடி மன்றல்' போல. கேட்டாள்: பெயருமாம். (சு)

அன்னைநீ நினைந்த வெண்ண
மாம்பொழு தாகும் வேறு
பின்னைநீ யிரங்கல் யான்போய்த்
திசைகளும் பெருநீர் வைப்பும்
என்னது கோற்ற நாட்டி
மீள்வலிங் கிருத்தி* யென்னுப்
போன்னவிர் மலர்க்கோம் பன்னுள்
போருக்கென வெழுந்து போனுள்.

(இ - ள்.) அன்னை - தாயே, நீ நினைந்த எண்ணம் ஆம்பொழுது ஆகும் - நீ எண்ணிய எண்ணம் முடியுங்காலத்து முடியும்; பின்னை நீ வேறு இரங்கல் - பின்பு நீ பல்வேருகக் கருதி வருந்தற்க; யான் போய் - நான் சென்று, திசைகளும் - எட்டுத் திக்குகளிலும், பெருநீர் வைப்பும் - கடல் சூழ்ந்த இந்நிலவுலகத்திலும், என்னது கொற்றம் நாட்டி மீள்வல் - என்னுடைய வெற்றியை நாட்டி வருவேன்; இங்கு இருத்தி என்னு - நீ இங்கு இருப்பாய் என்று கூறி, பொன் அவிர் மலர்க்கொம்பு அன்னுள் - பொன்போலும் விளங்கும் மலர்களையுடைய கொம்பினை ஒத்த பிராட்டியார், பொருக்கென எழுந்து போனுள் - விரைந்து எழுந்து சென்றார் எ - று.

வேறு - பிறிதாக வென்றுமாம். இரங்கல்: எதிர்மறை வியங்கோள்; 'மகனெனல்' என்புழிப்போல. பெருநீர் - கடல்; 'பெருநீரோச்சுநர்', 'பெருநீர் போகும் இரியன் மாக்கள்' எனவுள்ள மேற்கோள்களுங் காண்க. என்னது: வகரம் விரித்தல். பொருக்கென: விரைவுக் குறிப்பு. (ரு)

தேம்பரி கோதை மாதின் றிருவுளச் செய்தி நோக்கி
ஆம்பரி சுணர்ந்த வேந்த ரமைச்சரும் பிறரும் போந்தார்
வாம்பரி கடாவித் திண்டேர் வலவனுங் கோணர்ந்தான்வையந்
தாம்பரி வகல வந்தா ளேறினுள் சங்க மார்ப்ப.

(இ - ள்.) தேம்பரி கோதை மாதின் திருவுளச் செய்தி நோக்கி - மணமிக்க மாலையையணிந்த பிராட்டியாரின் திருவுள்ளக் குறிப்பை நோக்கி, ஆம் பரிசு உணர்ந்த வேந்தர் - ஆக்க முண்டாகுந் தன்மையை

---

(பா - ம்) * நாட்டி யீண்டுவ லிருத்தி.

உணர்ந்த அரசர்களும், அமைச்சரும் பிறரும் போந்தார் - மந்திரிகளும் மற்றையோர்களும் வந்தார்கள் ; வலவனும் - தேர்ப்பாகனும், வாம்பரி கடாவித் திண் தேர் கொணர்ந்தான் - தாவிச் செல்லுங் குதிரைகளைச் செலுத்தித் திண்ணிய தேரைக்கொண்டு வந்தான் ; வையம் பரிவு அகல வந்தாள்-உலகமானது துன்பத்தினின்றும் நீங்க அவதரித்த பிராட்டியார், சங்கம் ஆர்ப்ப ஏறினான் - சங்குகள் ஒலிக்க (அத்தேரில்) ஏறினார் எ - று.

கோதை - கூந்தலுமாம். தேம்பரி-தேனொழுகுகின்ற என்னலுமாம். நோக்கி: நோக்கனேக்கம். ஆம் பரிசு என்பதற்குப் போர்க்குரிய தன்மை யென்றும், ஆட்சிக்குப் பொருந்திய தன்மை யென்றும் மேல் விளைவு என்றும் பொருள் கோடலுமாம். வேந்தரும் என உம்மை விரிக்க. பிறர் என்றது படைத்தலைவர் முதலாயினாரை. ஆகும், வாவும் என்பன விகாரமாயின. தாம் : அசை. வந்தான்: பெயர். (௬)

ஆர்த்தன தடாரி பேரி யார்த்தன முருடு மொந்தை
ஆர்த்தன வுடுக்கை தக்கை யார்த்தன படகம் பம்பை
ஆர்த்தன முழுவந் தட்டை யார்த்தன சின்னந் தாரை
ஆர்த்தன காளந்தாள மார்த்தன திசைக ளெங்கும்.

(இ - ள்.) தடாரி பேரி ஆர்த்தன - தடாரிகளும் பேரிகளும் ஒலித்தன ; முருடு மொந்தை ஆர்த்தன - முருடுகளும் மொந்தைகளும் ஒலித்தன ; உடுக்கை தக்கை ஆர்த்தன-உடுக்கைகளும் தக்கைகளும் ஒலித்தன ; படகம் பம்பை ஆர்த்தன - படகங்களும் பம்பைகளும் ஒலித்தன ; முழவம் தட்டை ஆர்த்தன முழவங்களுந் தட்டைகளும் ஒலித்தன ; சின்னம் தாரை ஆர்த்தன - சின்னங்களும் தாரைகளும் ஒலித்தன ; காளம் தாளம்ஆர்த்தன-காளங்களும் தாளங்களும் ஒலித்தன ; திசைகள் எங்கும் ஆர்த்தன - (இவைகளால்) எட்டுத் திக்குகளும் ஒலித்தன எ - று.

தடாரி முதலியன வாத்திய விசேடங்கள். எட்டுத்திசைகளிலும் இவ் வொலிகள் நிறைந்தன வென்பார் 'ஆர்த்தன திசைகளெங்கும்' என்றார் ; எதிரொலி செய்தன வென்னலுமாம். (௭)

வீங்கிய கோங்கை யார்த்த கச்சினர் விழிபோற் றைப்ப
வாங்கிய சிலையே றிட்ட கணையினர் வட்டத் தோல்வாள்
தாங்கிய கையர் வைவேற் றளிர்க்கையர் பிணாத்தெய் வம்போல்
ஓங்கிய வாயத் தாரு மேறினா ருடனத் திண்டேர்.

(இ - ள்.) வீங்கிய கொங்கை ஆர்த்த கச்சினர்-பருத்த கொங்கைகளிற் கட்டிய கச்சினையுடையராய், விழிபோல் தைப்ப - (தங்கள்)கண்கள் போலத்தைக்குமாறு, வாங்கிய சிலை ஏறிட்டகணையினர்-வளைந்த வில்லிற்பூட்டிய அம்பினையுடையராயும், வட்டத்தோல் வாள் தாங்கிய கையர் - கேடகத்தையும் வாளையும் ஏந்திய கையையுடையராயும், வைவேல் தளிர்க்கையர் - கூரிய வேலையுடைய தளிர்போன்ற கையையுடையராயும், பிணாத்தெய்வம்போல் ஓங்கிய - பெண் தெய்வம் போலச் சிறந்த, ஆயத்தாரும்-மகளிர் கூட்டங்களும், உடன்

அத்திண் தேர் ஏறினர் - பிராட்டியாரோடும் அந்தத் திண்ணிய தேரில் ஏறினர்கள் எ - று.

ஆயத்தார்-மகளிருள் மெய்க்காவலராயினர். ஆயத்தாருட் சிலர் கணையினரும், சிலர் தாங்கிய கையரும், சிலர் தளிர்க் கையருமாகி உடன் ஏறினரென்க. கச்சினர் என்பதனை யெல்லாவற்றோடும் ஒட்டுக. வட்டத்தோல் – பரிசை; கேடகம். பிணைத்தெய்வம்-பெண் தெய்வம்; அழகு மிக்கவரென்க; கொற்றவை போன்று வெற்றி மிக்காரென்றுமாம். (அ)

கிடைப்பன வுருளாற் பாரைக் கீண்டுபா தலத்தி னெல்லை
அடைப்பன பரந்த தட்டா லடையவான் றிசைக ளேட்டும்
உடைப்பன வண்ட முட்டி யோற்றிவான் கங்கை நீரைத்
துடைப்பன கோடியாற் சாரி சுற்றுவ பொற்றிண் டேர்கள்.

(இ - ள்.) சாரி சுற்றுவ பொன்திண் தேர்கள்-இடசாரி வலசாரியாகச் சுழலும் பொன்னாலாகிய திண்ணிய தேர்கள், கிடைப்பன உருளால் - பூண்டனவாய உருளைகளால், பாரைக் கிண்டு பாதலத்தின் எல்லை அடைப்பன - நில வுலகத்தைக் கிழித்துப் பாதலத்தின் எல்லையை அடைப்பனவும், பரந்த தட்டால் - இடம் விரிந்த தட்டினால், வான் திசைகள் எட்டும் அடைய உடைப்பன-பெரிய திக்குகள் எட்டினையும் முற்றும் தகர்ப்பனவும், கொடியால் அண்டம் முட்டி ஒற்றி வான் கங்கை நீரைத் துடைப்பன - கொடிகளால் அண்டத்தைப் பெரிது மளாவி வான் யாற்றின் நீரை வற்றச்செய்வனவுமாயின எ-று.

கிடைப்பன, சுற்றுவ முற்றெச்சங்கள். கீண்டு, கிழ்ந்து என்பதன் மரூஉ. முட்டி, ஒற்றி யென்பன ஒரு பொருளன; அண்டத்தை முட்டி நீரை ஒற்றி யென்றுமாம். தட்டால் அடைப்பன, முட்டி உடைப்பன, ஒற்றித் துடைப்பன என வியைத்தலுமாம். (க)

செருவின்மா தண்டந் தாங்கிச் செல்லும்வெங் கூற்ற மேன்ன
அருவிமா மதநீர் கால வரத்தவெங் குருதிக் கோட்டாற்
கருவிவான் வயிறு கீண்டு கவிழுநீர் வாயங் காந்து
பருகிமால் வரைபோற் செல்வ பரூஉப்பெருந் தடக்கை யானை.

(இ - ள்.) பரூஉப் பெருந் தடக்கை யானை - பருத்தலையுடைய பெரிய கைகளையுடைய யானைகள், அருவி மா மதநீர் கால - அருவி போலப் பெரிய மதநீர் பொழிய, அரத்தம் குருதி வெம் கோட்டால்—சிவந்த உதிரந்தோய்ந்த கொடிய கொம்புகளால், கருவி வான் வயிறு கீண்டு - தொகுதியுடைய முகிலின் வயிற்றைக் கிழித்து, கவிழும் நீர் வாய் அங்காந்து பருகி-(அதனால்) ஒழுகும் நீரை வாயைத் திறந்து உண்டு, செருவில் மா தண்டம் தாங்கிச் செல்லும் வெம் கூற்றம் என்ன - போரில் பெரிய தண்டினை ஏந்திச் செல்லுகின்ற கொடிய கூற்றுவனைப் போலவும், மால் வரை போல் - பெரிய மலையைப் போலவும், செல்வ - செல்வன வாயின எ – று.

குருதிக் கோட்டுடன் கூடிய கொடுந் தோற்றத்தால் கூற்றம் போலவும், மதப் பெருக்குடன் கூடிய உயர்ந்த தோற்றத்தால் மலை

போலவும் யானைகள் பொலிந்தன வென்றார். அரத்தம் - ஈண்டுச் செந்நிறம். கருவி: மின் முதலியவற்றின் தொகுதி. செல்வ: அன் பெறாத பலவின்பால் முற்று. பரூஉ - பருத்தல்;

"மகர வுகர நீடிட னுடைத்தே
உகரம் வருத லாவயி னான"

என்னும் தொல்காப்பியச் சூத்திரத்து ஒன்றெனமுடித்தலால் ரகர வுகரம் நீண்டு உகரம் பெற்றதெனக் கொள்க. வரைபோற் செல்வ என்றது இல்பொருளுவமையணி. (௧0)

ஒலியவார் திரையி னன்ன வொழுங்கின யோக மாக்கள்
வலியகா லடக்கிச் செல்லு மனமெனக் கதியிற் செல்வ
கலியநீர் ஞாலங் காப்பான் கடையுக முடிவிற் றோற்றம்
பொலியும்வாம் புரவி யொன்றே போல்வன புரவி வெள்ளம்.

(இ - ள்.) கலிய நீர் ஞாலம் காப்பான்-ஒலியினையுடைய கடல் சூழ்ந்த வுலகைக் காக்கும்பொருட்டு, கடையுகம் முடிவில் தோற்றம் பொலியும்-கலியுக இறுதியில் தோன்றும், வாம் புரவி ஒன்றே போல்வன புரவி வெள்ளம் - தாவுகின்ற குதிரை ஒன்றையே ஒத்தனவாய குதிரைக் கூட்டங்கள், ஒலிய வார் திரையின் அன்ன ஒழுங்கின - ஒலியினையுடைய நீண்ட அலைகளை யொத்த ஒழுங்கினையுடையனவும், யோகமாக்கள் வலிய கால் அடக்கிச் செல்லும் மனம் என-யோகிகள் வலியகாற்றை அடக்கி (ஒருவழிபடச்) செலுத்தச் செல்லும் மனம் போல, கதியில் செல்வ - (பாகர் தம் வசப்படுத்திச் செலுத்த ஒரு வழிப்பட்டு) விரைவிற் செல்வனவுமாயின எ - று.

ஒலிய, கலிய என்பவற்றில் அ: அசை. திரையின், இன்:சாரியை. கால்-காற்று; பிராணவாயு. கால் அடக்கல் - பிராணாயாமம் செய்தல். செலுத்த வென ஒரு சொல் வருவிக்கப்பட்டது. கதியிற் செல்லுதல் - நடத்தப்படு நெறியில் விரைந்து செல்லுதல். ஞாலங் காத்தல் - உலகைத் தீமையி னீக்கிக் காத்தல். திருமாலின் கடைசியவதாரமாகிய குதிரை; கற்கி. (௧௧)

காலினுங் கடிது செல்லுஞ் செலவினர் கடுங்கட் கூற்ற
மேலினு மிகையுண் டாயின் வெகுண்டுவென் கண்டு மீளும்
பாலினர் பகுவாய் நாகப் பல்லினும் பில்கு மால
வேலினர் வீயா வென்றி வீக்கிய கழற்கால் வீரர்.

(இ - ள்.) வீயா வென்றி வீக்கிய கழல் கால் வீரர் - கெடாத வெற்றியினையும் கட்டப்பட்ட வீரகண்டையையுமுடைய காலினையுமுடைய வீரர்கள், கடுங்கண் கூற்றம் மேலினும் மிகை உண்டாயின்-தறுகண்மையையுடைய கூற்றுவன்மேலும் குற்றம் உளதாயின், வெகுண்டு வென் கண்டு மீளும் பாலினர்-சினந்து புறங்கண்டு வருந் தன்மையையுடையவரும், பகுவாய் நாகப் பல்லினும் பில்கும் ஆல வேலினர் - பிளந்த வாயினையுடைய பாம்பின் பல்லைவிடச் சிந்தும் நஞ்சினையுடைய வேற்படையையுடையவரும், காலினும் கடிது செல்லும் செலவினர் - காற்றினும் விரைந்து செல்லும் செலவினையுமுடையராயினர் எ - று.

காலினும், பல்லினும் என்பவற்றில் இன் உருபு உறழ்ச்சிப் பொருளில் வந்தது. மேலினும், இன் : சாரியை. வென்கண்டு என்றமையால் போர் புரிந்து என விரித்துக் கொள்க. பால் - தன்மை. வென்றியால் வீக்கிய எனலுமாம். ஆயினர் என விரித்துரைத்துக் கொள்க. (௩௨)

எண்புதைத் தெழுந்த வீர ரிவுளிதேர் யானை வெள்ள
மண்புதைத் தனப தாகை மாலைவெண் கவிகை பீலி
விண்புதைத் தனநுண் டூளி வெயில்விடு பரிதிப் புத்தேள்
கண்புதைத் தனபே ரோதை கடலொலி புதைத்த தன்றே.

(இ - ள்.) எண் புதைத்து எழுந்த-இங்ஙனம் எண்ணின் அளவைக் கடந்து எழுந்த, வீரர் இவுளி தேர் யானை வெள்ளம்-வீரர் குதிரை தேர் யானை என்பவற்றின் கூட்டங்கள்; மண் புதைத்தன - நிலவுலகை மறைத்தன; பதாகை மாலை வெண் கவிகை பீலி-கொடிகளும் மாலையையுடைய வெள்ளிய குடைகளும் மயிற் பீலிகளும், விண் புதைத்தன - வானினை மறைத்தன; நுண் தூளி வெயில் விடு பரிதிப்புத்தேள் கண் புதைத்தன - நுண்ணிய புழுதிகள் வெயிலை வீசும் சூரிய தேவனின் கண்களை மறைத்தன; பேர் ஓதை கடல் ஒலி புதைத்தது-(இவற்றாலாய) பெரிய ஒலியானது கடலின் ஒலியை மறைத்தது எ - று.

எண் புதைத்து எண்ணினை மறைத்து; இல்லையாக்கி; கடந்தென்றபடி. வெள்ளம் என்பது வீரர் முதலியவற்றொடும் இயையும், பதாகை - பெருங்கொடி, அன்று, ஏ: அசைகள்; அடுத்த செய்யுளுக்குங் கொள்க. (௩௩)

தேரொலி கலினப் பாய்மான்*
சேலவொலி கொலைவெண் கோட்டுக்
காரொலி வீர ரார்க்குங்
கனையொலி புனைதார்க் குஞ்சி
வாரொலி கழற்காற் செங்கண்
மள்ளர்வன் றிண்டோள் கொட்டும்
பேரொலி யண்ட மெல்லாம்
பிளந்திடப் பெருத்த வன்றே.

(இ - ள்.) தேர் ஒலி - தேர்களின் ஒலியும், கலினப் பாய்மான் செலவு ஒலி - கடிவாளத்தையுடைய குதிரைகள் செல்லுகின்ற ஒலியும், கொலை வெள் கோட்டு கார் ஒலி - கொல்லுதலையுடைய வெள்ளிய கொம்புகளையுடைய முகில் போன்ற யானைகளின் ஒலியும், வீரர் ஆர்க்கும் கனை ஒலி-மள்ளர்கள் ஒலிக்கின்ற மிக்க ஒலியும், தார்புனை குஞ்சி-மாலையை யணிந்த சிகையையும், வார் ஒலி கழல் கால்-மிக்க ஒலியையுடைய வீரகண்டையை யணிந்த கால்களையும், செங்கண்-சிவந்த கண்களையுமுடைய, மள்ளர் - வீரர்கள், வல் திண் தோள் கொட்டும் பேர் ஒலி - வலிமை மிக்க தோள்களைத் தட்டுகின்ற பெரிய ஒலியும் ஆகிய இவைகள், அண்டம் பிளந்திடப் பெருத்த- அண்டங்கள் வெடிக்குமாறு மிக்கன எ - று.

---

(பா - ம்.) * பாய்மா.

பாய்மான் - குதிரை. செலவு - செல்கை. அடைகளால் கார் யானையை யுணர்த்திற்று. கனை - செறிவு. வல்திண்: ஒருபொருட் பன் மொழி. பெருத்த: பண்படியாகப் பிறந்த அன்பெறுத பலவின்பால் வினைமுற்று. (௧௪)

பரந்தெழு பூழி போர்ப்பப் பகலவன் மறைந்து முந்நீர்க்
கரந்தவன் போன்ற ஞகக் கங்குல்வந் திறுத்த தேய்ப்பச்
சுரந்திரு ணிறைய முத்தின் சோதிவெண் குடையும் வேந்தர்
நிரந்த பூண் வயிர வாளு நிறைநிலா வெறிக்கு மன்னே.

(இ - ள்.) பரந்து எழு பூழி போர்ப்ப - (இவற்றால்) பரவி மேலெழுந்த புழுதி மறைத்தலால், பகலவன் மறைந்து முந்நீர் கரந்த வன் போன்றான் ஆக - சூரியன் மறைந்து கடலில் ஒளித்தவன் போலாக, கங்குல் வந்து இறுத்தது ஏய்ப்ப - (அதனால்) இரவு வந்து தங்கியதை ஒக்க, சுரந்து இருள் நிறைய - மிகுந்து இருளானது நிறைய, சோதிமுத்தின் குடையும் - ஒளியினையுடைய முத்துக் குடைகளும், வேந்தர் பூண் நிரந்த வயிரவாளும் - மன்னர்களின் பூண் அமைந்தவயிரத்தாற் செய்த வாட் படைகளும், நிறை நிலா எறிக்கும் - (அவ்விருளைப் போக்க) மிக்க நிலவை வீசும் எ - று.

பூழி - புழுதி. முந்நீர் - மூன்று நீர்மையுடையதென்றும், மூன்று நீரினையுடையதென்றும் கூறுப: முன் உரைத்தாம். இறுத்தது - தங் கினமை: தொழிற் பெயர். அணிகலன்களும் வாளும் என்னலுமாம். மன்னும், ஓவும் அசை நிலைகள். (௧௫)

தேர்நிரை கலனுய்ச் செல்லப் பரிநிரை திரையாய்த் துள்ள
வார்முர சொலியாய்க் கல்ல வாட்கலன் மீனுய்க் கோட்பத்
தார்நிரை கவரிக் காடு நுரைகளாய்த் ததும்ப வேழங்
கார்நிரை யாகத் தானைக் கடல்வழிக் கொண்ட தன்றே.

(இ - ள்.) தேர் நிரை கலனாய்ச் செல்ல - தேரின் வரிசைகள் மரக்கலங்களாய்ச் செல்லவும், பரி நிரை திரையாய்த் துள்ள - குதிரையின் வரிசைகள் அலைகளாய்த் துள்ளவும்; வார் முரசு ஒலியாய்க் கல்ல-வார்க் கட்டினையுடைய முரசின் ஒலி கடலொலி யாய் ஒலிக்கவும், வாள் கலன் மீனாய்க் கொட்ப - வாட்படைகள் மீனாய்ச் சுழன்று விளங்கவும், தார் நிரை கவரிக்காடு-(வெண்மலர்) மாலை வரிசைபோன்ற சாமரைக் காடு, நுரைகளாய்த்ததும்ப - நுரைகளாய் மேலெழவும், வேழம் நிரைகார் ஆக - யானையின் வரிசைகள் (கடலினீருண்ணவரும்) முகில்களாகவும், தானைக் கடல் வழிக்கொண்டது - (இவ்வாறு) சேனைக்கடலானது வழி நடந்தது எ - று.

முரசு: அதன் ஒலிக்கு ஆகுபெயர்: கல்ல - ஒலிக்க: கலிக்க என்ப தன் விகாரம்; கலி: பகுதி; கல்லென என்பதன் விகாரமுமாம். அவயவ அவயவிகள் முழுதும் உருவகஞ் செய்யப்பட்டமையால் இது முற்றுருவகவணி (௧௬)

கள்ளவிழ் கோதை மாத ரெடுத்தெறி கவரிக் காடு
துள்ளவந் தணர்வா யாசி யொருபுறந் துவன்றி யார்ப்பத்
தெள்விளி யமுத கீத மொருபுறந் திரண்டு விம்ம
வள்ளைவார் குழையெம் மன்னை மணித்திண்டேர் நடந்த தன்றே.

(இ-ள்.) கள் அவிழ் கோதை மாதர் - தேனொடு மலர்ந்த மாலையை யணிந்த மகளிர், எடுத்து எறி கவரி காடு துள்ள - எடுத்து வீசுகின்ற கவரிக்காடு (ஒருபால்) துள்ளவும், அந்தணர் வாய் ஆசி ஒருபுறம் துவன்றி ஆர்ப்ப - மறையவர் வாயாற் கூறும் வாழ்த்து மொழிகள் ஒருபால் மிக்கொலிக்கவும், அமுத தெள்விளி கீதம் ஒருபுறம் திரண்டு விம்ம - அமுதம்போன்ற தெளிந்த ஓசையையுடைய இசைப்பாட்டுக்கள் ஒருபால் திரண்டொலிக்கவும், வள்ளை வார் குழை எம் அன்னை - வள்ளைத்தண்டு போன்ற நீண்ட காதினையுடைய எம் அன்னையாகிய தடாதகைப் பிராட்டியாரின், மணி திண் தேர் நடந்தது - மணிகள் அழுத்திய வலிய தேரானது சென்றது எ - று.

மிகுதியை யுணர்த்தக் காடு என்றார். தெள் விளி - தெளிந்த ஓசை;

"ஆம்பலங் தீங்குழற் றெள்விளி பயிற்ற"

என்னும் குறிஞ்சிப்பாட் டடிக்கு நச்சினார்க்கினியர் கூறிய உரை காண்க. இவ்வரு செய்யுளிலும் அன்றும், ஏயும் அசைகள். (கஎ)

மீனவன் கொடியுங் கான வெம்புலிக் கொடியும் செம்பொன்
மானவிற் கொடியும் வண்ண மயிற்றழைக் காடுந் தோட்டுப்
பானலங் கருங்கட் செவ்வாய் வெண்ணகைப் பசுந்தோணிம்பத்
தேனலம் பலங்கல் வேய்ந்த செல்விதேர் மருங்கிற் செல்ல.

(இ-ள்.) வல் மீனக் கொடியும் - வலிய மீனக்கொடியும், கானம் வெம்புலிக் கொடியும் - காட்டிலுள்ள கொடிய புலி எழுதிய கொடியும், செம்பொன் மான வில் கொடியும் - சிவந்த பொன்னாலாகிய பெரிய விற்கொடியும், வண்ணம் மயில் தழைக்காடும் - அழகிய மயிற் பீலிக் (குடைக்) கூட்டமும், தோட்டுப் பானல் அம் கருங்கண் - இதழையுடைய நீலோற்பல மலர்போன்ற அழகிய கரிய கண்களையும், செவ்வாய் சிவந்த வாயையும், வெள் நகை - வெள்ளிய பற்களையும், பசுந்தோள் - பசிய தோள்களையுமுடைய, தேன் அலம்பு நிம்ப அலங்கல் வேய்ந்த - வண்டுகள் ஒலிக்கும் வேப்பமலர் மாலையையணிந்த, செல்விதேர் மருங்கில் செல்ல - பிராட்டியாரின் தேரின் பக்கத்திற் செல்லாநிற்கவும் எ-று.

*மீன் புலி வில்:* இவை முறையே பாண்டிய சோழ சேரர்கட்குக் கொடிகள்; மூவேந்தருள் வலியுடைய ஒருவரைக் கூறுங்கால் அவருடைய கொடி முதலியவற்றுடன் ஏனை இருவரின் கொடி முதலியவற்றையும் அவர்க்குரியவாகச் சேர்த்துக் கூறுதல் மரபு;

"வடதிசை மருங்கின் மன்னர்க் கெல்லாம்
தென்றமிழ் நன்னாட்டுச் செழுவிற் கயற்புலி
மண்டலை யேற்ற வரைக வீங்கென"

எனச் சிலப்பதிகாரத்து வருதலுங் காண்க. நிம்ப அலங்கல் எனக் கூட்டுக. மூன்றாமடியில் முரண் என்னும் அணியமைந்துள்ளது. (௧௮)

மறைபல முகங்கோண் டேத்தி வாய்தடு மாறி யெய்ப்ப
நிறைபரம் பரைநீ யெங்க ணிருபர்கோன் மகளாய் வையம்
முறைசெய்து மாசு தீர்ப்பா யடியனேன் முகத்து மாசுங்
குறையென நிழற்றுந் திங்கட் கொள்கைபோற் கவிகை காப்ப.

(இ-ள்.) மறை பல முகம் கொண்டு ஏத்தி-வேதங்கள் பல முகங்களால் துதித்தும் (காணமாட்டாமையின்), வாய் தடுமாறி எய்ப்ப-வாய் தடுமாறி இளைக்குமாறு, நிறை பரம்பரை நீ-எங்கும் நிறைந்த சிவசத்தியாகிய நீ, எங்கள் நிருபர்கோன் மகளாய்-எம் வழித்தோன்றலாகிய மன்னர் மன்னனும் மலயத்துவச பாண்டியனுக்குத் திருமகளாய் வந்து, வையம் முறைசெய்து-பூமியில் செங்கோலோச்சி, மாசு தீர்ப்பாய்-குற்றத்தைப் போக்குகின்றாய் (அதுபோல), அடியனேன் முகத்து மாசும் குறை என-அடியேனுடைய முகத்திலுள்ள களங்கத்தையும் ஒழித்தருள் என்று, நிழற்றும் திங்கள் கொள்கைபோல்-நிழலைச் செய்கின்ற சந்திரனது கொள்கை போல, கவிகை காப்ப-வெண் கொற்றக் குடை நிழல் செய்யவும் எ-று.

பலமுகம்-பல சாகைகள். எங்கள் என ஒருமையிற் பன்மை கூறினர்; அயன் படைப்பிலும், திருமால் உளத்திலும், அங்கியின் முகத்திலும், அத்திரி விழியிலும், பாற்கடலிலும் தோன்றிய ஐவகை மதியையுங் கருதிச் சொன்னாரெனினுமாம். பாண்டியர் திங்கண் மரபினராகலின் இங்ஙனங் கூறினர். நிழற்றுவதாகிய கொள்கை: இது தற்குறிப்பேற்றவணி. (௧௯)

அங்கய னோக்கி மான்றேர்க் கணித்தொரு தடந்தே ரூர்ந்து
வெங்கதிர் வியாழச் சூழ்ச்சி மேம்படு சுமதி யென்போன்
நங்கைதன் குறிப்பு நோக்கி நாற்பெரும் படையுஞ் செல்லச்
செங்கையிற் பிரம்பு நீட்டிச் சேவகஞ் செலுத்திச் செல்ல.

(இ-ள்.) வெம் கதிர் வியாழச் சூழ்ச்சி மேம்படு சுமதி என்போன்-விரும்பும் ஒளியினையுடைய வியாழனது சூழ்ச்சியினும் சிறந்த சூழ்ச்சியினையுடைய சுமதி என்னும் முதலமைச்சன், அம் கயல் நோக்கிமான் தேர்க்கு-அழகிய கயல்போலுங் கண்களையுடைய பிராட்டியாரின் தேருக்கு, அணித்து ஒரு தடம் தேர் ஊர்ந்து-அணித்தாக ஒரு பெரிய தேரினைச் செலுத்தி, நங்கைதன் குறிப்பு நோக்கி-அப்பிராட்டியாரின் குறிப்பினை ஆராய்ந்து, நால் பெரும்படையும் செல்ல-பெரிய நால்வகைச் சேனைகளும் செல்லுமாறு, செம் கையில் பிரம்பு நீட்டி-சிவந்த கையிலுள்ள பிரம்பினாற் சுட்டிக் காட்டி, சேவகம் செலுத்திச் செல்ல-சேவகத்தைச் செலுத்திச் செல்லாநிற்கவும் எ-று.

அணித்து-அணியதாக. வெம்மை-விருப்பம். வியாழன்-பிருகஸ்பதி; தேவர்க்கு அமைச்சுப் பூண்டவ னென்பதுபற்றி யெடுத்துக் கூறினர். சூழ்ச்சியினும் என உருபும் உம்மையும் விரிக்க. சேவகம்-வீரமும், பணியுமாம். இங்கே படையினைப் பணிகொள்ளுதலாகிய வீரமும், பிராட்டிக்குப்பணிசெய்தலாகிய தொண்டும் கொள்க. (௨௦)

அலகினுற் கருவிச் சேனை யாழ்கட லனைத்துந் தன்போல்
மலர்தலை யுலக மன்றி மகபதி யுலக மாதி
உலகமும் பிறவுஞ் செல்ல வுலப்பிலா வலிய தாக்கித்*
திலகவா ணுதலாள் மன்னர் திருவெலாங் கவரச் செல்வாள்.

(இ - ள்.) அலகு இல்-அளவில்லாத, நால் கருவிச் சேனை ஆழ் கடல் அனைத்தும்-நால்வகைப் படையாகிய கடல் முழுதையும், தன் போல் - தன்னைப்போல், மலர்தலை உலகம் அன்றி-பரந்த இடத்தினையுடைய இந்நிலவுலகையல்லாமல், மகபதி உலகம் ஆதி உலகமும்-இந்திரன் உலகம் முதலிய உலகங்களிலும், பிறவும் செல்ல - பிறவிடங்களினும் செல்லுமாறு, உலப்பு இலா வலியது ஆக்கி-அழியாத வலிமையுடையதாகச் செய்து, திலக வாள் நுதலாள் - திலகமணிந்த ஒளிபொருந்திய நெற்றியையுடைய தடாதகைப்பிராட்டியார், மன்னர் திரு எலாம் கவரச் செல்வாள்-அரசர்களின் செல்வங்களனைத்தையும் கொள்ளை கொள்ளப் போவாராயினர் எ-று.

சேனையைக் கருவியாக்கிக் 'கருவிச்சேனை' என்றார். தொகுதியாகிய சேனையுமாம். ஆழ் என்றது கடலுக்கு இயற்கையடை. தன் போல் செல்ல எனக்கூட்டுக. அனைத்தும் என்பதை ஒருமையாக்கி 'வலியது' என்றார். (உக)

கயபதி யாதி யாய வடபுலக் காவல் வேந்தர்
புயவலி யடங்க வென்று புழைக்கைமான் புரவி மான்றேர்
பயன்மதி நுதல்வே லுண்கட் பாவைய ராய மோடு
நயமலி திறையுங் கொண்டு திசையின்மே னாட்டம் வைத்தாள்.

(இ-ள்.) கயபதி ஆதி ஆய-கயபதி முதலாகிய, வடபுலக் காவல் வேந்தர்-வடநாட்டைக் காக்கும் மன்னர்களின், புயவலி அடங்க வென்று-தோள்வலி கெடுமாறு (அவர்களை) வென்று, புழைக்கை மான்-தொளையினையுடைய கையையுடைய யானைகளையும், புரவி-குதிரைகளையும், மான்தேர்-குதிரைகள் பூட்டிய தேர்களையும், பயல் மதி நுதல்-அரைமதியை ஒத்த நெற்றியையும், வேல் உண் கண்-வேலை யொத்த மையுண்ட கண்களையுமுடைய, பாவையர் ஆயமோடு மகளிர் கூட்டத்துடன், நயம் மலி திறையும் கொண்டு நலம் நிறைந்த திறைப் பொருளையும் ஏற்றுக்கொண்டு, திசையின்மேல் நாட்டம் வைத்தாள்-திசைகாப்பாளர்மேல் போருக்கு எழ எண்ணினார் எ-று.

கயபதி-கஜபதிகள்: வடநாட்டி லாண்ட ஓர் அரச வமிசத்தினர்; யானைமிக்குடையானெனப் பொதுப் பெயருமாம். பயல்: பையல் என்பதன் மரூஉவாகக் கொண்டு, குழவி மதியென உரைத்தல் வேண்டும்; அமுதமாகிய பயனுமாம். திறையும் என்றமையால் மேற் சொல்லியன கவர்ந்தவை. (௨உ)

வார்கழல் வலவன் றேரை வலியகா லுதைப்ப முந்நீர்
ஊர்கல னொப்பத் தூண்ட வும்பர்கோ னனிகத் தெய்திப்
போர்விளை யாடு முன்னர்ப் புரந்தரன் மிலைந்த தும்பைத்
தார்விழ வாற்றல் சிந்தத் தருக்கழிந் தகன்று போனான்.

---

(பா-ம்.) * வலியவாக்கித்.

(இ - ள்.) வலிய கால் உதைப்ப-வலிய காற்றானது தள்ள, முந்நீர் ஊர்கலன் ஒப்ப-கடலில் விரைந்து செல்லும் கப்பலை ஒக்க, வார் கழல் வலவன்-நீண்ட வீரகண்டையை யணிந்த தேர்ப்பாகன், தேரைத் தூண்ட-தேரினைச் செலுத்த, உம்பர்கோன் அனிகத்து எய்தி-தேவர்க் கரசனின் படையை அடைந்து, போர் விளையாடு முன்னர்-போரினைத் தொடங்கு முன்னரே, புரந்தரன்-இந்திரனானவன், மிலைந்த தும்பைத்தார் விழ-தான் அணிந்த தும்பை மாலையானது விழவும், ஆற்றல் சிந்த-வல்லமை கெடவும், தருக்கு அழிந்து அகன்று போனான்-(போரின் கண் உள்ள) மனவெழுச்சி கெட்டுப் போர்க் களத்தினின்றும் நீங்கினான் எ - று.

விளையாடுதல் என்றார் எளிதாகச் செய்தல் நோக்கி. தும்பை: தம் வலி காட்டுதலே பொருளாகச் சென்றும் எதிர்த்தும் பொருதல்; இதற்குத் தும்பை மாலை சூடுவர். (உ௬)

இழையிடை நுழையா வண்ண மிடையிற வீங்கு கொங்கைக்
குழையிடை நடந்துமீளுங் கோலக்கணார் குழுவுந் தான
மழைகவிழ் கடாத்து வெள்ளை வாரண மாவுங் கோவுந்
தழைகதிர் மணியுந் தெய்வ தருக்களுங் கவர்ந்து மீண்டாள்*.

(இ-ள்.) இடை இற-இடை ஒடியுமாறு, இழை இடை நுழையா வண்ணம் வீங்கு கொங்கை-நூல் இடையிற் புகாத வண்ணம் பருத்த கொங்கைகளையும், குழை இடை நடந்து மீளும் கோலக்கணார் குழுவும்-செவி வரையிற் சென்று திரும்பும் வருத்துதலையுடைய கண்களையுமுடைய மகளிர் கூட்டமும், மழை தானம் கவிழ் கடாத்து வெள்ளை வாரணம் மாவும்-முகில் போலும் மதத்தைக் கொட்டுகின்ற சுவட்டினையுடைய வெள்ளை யானையும் குதிரையும், கோவும்-காமதேனுவும், தழை கதிர் மணியும்-தழைந்த ஒளியினையுடைய சிந்தாமணியும், தெய்வ தருக்களும் - தெய்வத் தன்மையையுடைய கற்பக முதலிய தருக்களுமாகிய இவைகளை, கவர்ந்து மீண்டாள்-பற்றிக் கொண்டு திரும்பினார் எ-று.

கொங்கை யென்பது கண்ணார் என்பதன் விகுதியோ டியையும். தானமென முன் வந்தமையின் கடாம் என்றதற்குச் சுவடு என உரைக்கப்பட்டது. வாரணமும் என விரித்து, வெள்ளையை மாவோடுங் கூட்டுக. வாரணம்: ஐராவத மென்னும் யானை. மா-உச்சைச் சிரவ மென்னும் குதிரை. (உ௭)

[கலிநிலைத்துறை]

இவ்வாறு மற்றைத் திசைகாவலர்†யாரை யும்போய்த்
தேவ்வாண்மை சிந்தச் செருச்செய்து திறையுங் கைக்கொண்
டவ்வாறு வெல்வா ளெனமூன்றர ணட்ட மேருக்
கைவார் சிலையான் கயிலைக்கிரி நோக்கிச் செல்வாள்.

(இ - ள்.) இவ்வாறு - இவ்வண்ணமே, மற்ற திசை காவலர் யாரையும்-ஏனைய திசைகாப்பாளர்களனைவரையும், போய்-அத்திக்கு

(பா-ம்.) * கொண்டு மீண்டாள். † திசைக்காவலர்

களிற் சென்று, தெவ் ஆண்மை சிந்த செரு செய்து - பகைவரின் வீரங் கெடுமாறு போர் செய்து, திறையும் கைக்கொண்டு-(அவர்கள் பணிந்து தந்த) திறைப் பொருளையும் ஏற்றுக்கொண்டு, அவ்வாறு வெல்வாள் என - அங்ஙனமே வெல்ல வென்று, மூன்று அரண் அட்ட வார் மேருச்சிலைக் கையான்-மும் மதிலையும் அழித்த நீண்ட மேருமலையாகிய வில்லைக் கையிலுடைய சிவபெருமானது, கயிலைக்கிரி நோக்கிச் செல்வாள் - திருக் கயிலாய மலையை நோக்கிச் செல்வாராயினர் எ - று.

மற்றைத் திசை காவலர் - அங்கி, இயமன், நிருதி, வருணன், வாயு, குபேரன் ஈசானன் என்போர். யாரையும் செருச் செய்து எனவும், வார் மேருச்சிலைக் கையான் எனவும் இயைக்க. தெவ்-பகை; தெவ் ஆண்மை - போர் வீரம் எனினுமாம். (௨௫)

சலிக்கும் புரவித் தடந்தேருடைத் தம்பி ராட்டி
கலிக்கும் பலதூ ரியங்கைவரை தெய்வத் திண்டேர்
வலிக்கும் பரிமள் ளர்வழங்கொலி வாங்கி நேரே
ஒலிக்கும் படிகிட் டினளூழிதோ றோங்கு மோங்கல்.

(இ - ள்.) சலிக்கும் புரவித் தடம் தேர் உடைத் தம்பிராட்டி - செல்லுகின்ற குதிரைகள் பூட்டிய பெரிய தேரினையுடைய தடாதகைப் பிராட்டியார், கலிக்கும் பல தூரியம் - ஒலிக்கின்ற பல இயங்களின் ஒலியையும், கைவரை - யானைகளும், தெய்வத் திண் தேர் - தெய்வத் தன்மையையுடைய வலிய தேர்களும், வலிக்கும் பரி - கருத்தறிந்து செல்லும் குதிரைகளும், மள்ளர் - வீரர்களும், வழங்கு ஒலி - செல்கின்ற ஒலியையும், வாங்கி நேரே ஒலிக்கும்படி - ஏற்றுக் கொண்டு எதிரொலி செய்யுமாறு, ஊழி தோறு ஓங்கும் ஓங்கல் கிட்டினள் - ஊழிக்காலந் தோறும் வளர்கின்ற கயிலை மலையை அடைந்தார் எ - று.

தூரியம் அதன் ஒலிக்காயிற்று ; தூரியமும் நால்வகைச் சேனையும் ஒலிக்கின்ற வொலி யென்னலுமாம். வலித்தல் - கருதுதல். ஓங்கல்வாங்கி எதிரொலி செய்ய. ஊழி தோறும் ஓங்குதலை,

"ஊழிதோ றூழிமுற்று முயர்பொன் னொடித்தான் மலையே" என்னும் ஆளுடைய நம்பிகள் தேவாரத்தா னறிக ; முன்னரும் உரைக்கப்பெற்றது. (௨௬)

வானார் கயிலை மலையான்மக டன்னை நீத்துப்
போனாள்வந் தாளென் றருவிக்கட் புனலுக் கந்நீர்
ஆனா வொலியா லணைவாவென் றழைஇத்தன் றேசு
தானா நகையாற் *றழீஇயெதி ரேற்பச் சென்றாள்.

(இ - ள்.) வான் ஆர் கயிலை - வானுலகைப் பொருந்திய திருக்கயிலை மலையானது, மலையான் மகள் தன்னை நீத்துப் போனாள் - மலையரசன் புதல்வியாகிய பார்வதிதேவியார் (அன்று) தன்னை நீங்கிப் போயினவர், வந்தாள் என்று - (இன்று) வந்தனர் என்று, அருவிக்கண் புனல் உக்கு - அருவியாகிய கண்ணீரைச் சிந்தி, அந்நீர் ஆனா ஒலியால்

---

(பா - ம்.) * தானானகையால்.

அந்நீரின் நீங்காத ஒலியினால், அனைவா என்று அழைஇ-அன்னையே வா என்று அழைத்து, தன் தேசுதான் ஆம் நகையால் தழீஇ - தனது வெள்ளொளியாகிய புன்முறுவலால் தழுவி,எதிர் ஏற்பச் சென்றாள்-எதிர் கொள்ளுமாறு சென்றருளினார் எ - று.

போனாள் : பெயர். அழைத்து, தழுவி யென்னும் வினையெச்சங்கள் விகாரப்பட்டு அளபெடையாயின. இது தற்குறிப்பேற்றவணி (உஎ)

கிட்டிப் பொருப்பைக் கிரியோடு கிரிக டாக்கி
முட்டிப் பொருதா லெனவேழ முழங்கிப் பாயப்
புட்டிற் புறத்தார் மறத்தார்கணை பூட்டு வில்லார்
வட்டித் துருமே றெனவார்த்து வளைந்து கொண்டார்.

(இ - ள்.) பொருப்பைக் கிட்டி - (இவ்வாறு) திருக்கயிலை மலையை நெருங்கி, கிரியோடு கிரிகள் தாக்கி - மலைகளோடு மலைகள் தாக்கி, முட்டிப் பொருதாலென - மோதிப் போர் செய்தாற்போல, வேழம் முழங்கிப் பாய - யானைகள் பிளிறிட்டுப் பாய, மறத்தார் - வீரத்தினையுடையவரும், புட்டில் புறத்தார் - அம்புக்கூடு தாங்கிய முதுகினை யுடையவரும், கணை பூட்டு வில்லார் - கணை பூட்டிய வில்லை யுடையவருமாய்; வட்டித்து - சுழன்று, உரும் ஏறு என - இடியேற்றைப்போல, ஆர்த்து-ஆரவாரித்த, வளைந்து கொண்டார் - (படைவீரர்கள்) சூழ்ந்து கொண்டார்கள் எ - று.

புட்டில் - அம்புக்கூடு ; துணி ;

"கணைப்புட்டிலுங் கட்டமைந்த, வில்லுஞ் சுமக்கப் பிறந்தேன்"

என்பது இராமாயணம்; வட்டித்து - சுழன்று ; இது சுழற்றியெனப் பிறவினை யாகியும் வரும் ;

"மருந்தில் கணிச்சி வருந்த வட்டித்து"

எனப் புறத்துள் வருதல் காண்க; இதற்கு வஞ்சினங்கூறி யெனப் பொருளுரைப்பாருமுளர். (உஅ)

ஓடித் திருமா மலைகாவல ரும்ப ரார்க்கு
நாடிப் பணிதற் கரிதாகிய நந்தி பாதங்
கூடிப் பணிந்தித் திறங்கூறலுங் கொற்ற வேனந்
தேடிக் கிடையா னுளந்தேர்ந்தன னந்தி யெந்தை.

(இ - ள்.) மா திருமலை காவலர் ஓடி - பெரிய திருக்கயிலை மலையைக் காப்பவர் ஓடி, உம்பரார்க்கும் - தேவர்களுக்கும், நாடிப் பணிதற்கு அரிது ஆகிய - காலமறிந்து வணங்குதற்கு அருமையாகிய, நந்தி பாதம் கூடிப் பணிந்து - நந்திதேவர் திருவடிகளை யடைந்து வணங்கி, இத்திறம் கூறலும் - இச்செய்தியைக் கூறியவுடன், எந்தை நந்தி - எம் தந்தையாகிய திரு நந்திதேவர், கொற்ற ஏனம் தேடிக் கிடையான் - வெற்றி பொருந்திய திருமாலாகிய பன்றி தேடிக் காணப்படாத இறைவனது, உளம் தேர்ந்தனன் - திருவுள்ளக் குறிப்பை ஆராய்ந் தறிந்தார் எ - று.

உம்பரானும் என்க. உம்பரார்-தேவர்; உம்பர்-மேலிடம். அரிது, பண்பு மாத்திரையாய் நின்றது; பாதமென்னும் ஒருமைபற்றி அரி தெனக் கூறினா ரெனலுமாம். கொற்றவேனம் தேடிக் கிடையா னென்ற கருத்தினை.

“ நான்முகன் முதலா வானவர் தொழுதெழ
ஈரடி யாலே மூவுல களந்து
நாற்றிசை முனிவரு மைம்புலன் மலரப்
போற்றிசெய் கதிர்முடித் திருநெடு மாலன்
றடிமுடி யறியு மாதர வதனிற்
கடுமுர ணேன 'மாகி முன்கலந்
தேழ்தல முருவ விடந்து பின்னெய்த்
தூழி முதல்வ சயசய வென்று
வழுத்தியுங் காணா மலரடி யிணைகள்”

என்னும் திருவாசகத்தா லறிக. முதற்குரு நாதனுகலின் ‘எந்தை’ என்றார். (உக)

வென்றிக் கணத்தை விடுத்தான் கனமீது*பெய்த
குன்றிக் கணம்போற் சுழல்கண்ணழல் கோப்ப ளிப்பச்
சென்றிக் கனைய மொழியாள்பெருஞ் சேனை யோடும்
ஒன்றிக் கடலுங் கடலும்பொரு தோத்த தன்றே.

(இ - ள்.) வென்றிக் கணத்தை விடுத்தான்-(அவ்வாறு உணர்ந்த நந்தி தேவர்) வெற்றி பொருந்திய பூதகணங்களை ஏவினார்; கனம்மீது பெய்த -(அவை) முகிலிற் பெய்துவைத்த, குன்றிக் கணம்போல் - குன்றிமணிக் கூட்டம்போல, சுழல்கண் - சுழலுங் கண்களினின்றும், அழல் கொப்பளிப்ப - தீயானது சிந்த, சென்று-போய், இக்கு அனைய மொழியாள் - கரும்பின் சாற்றையொத்த இனிய மொழிகளையுடைய பிராட்டியாரின், பெருஞ்சேனையோடும் ஒன்றி-பெரிய படைகளோடு கலந்து போர்புரிதலால் (அச்செயல்), கடலும் கடலும் பொருதது ஒத்தது - கடலுங் கடலும் தம்முட் போர்செய்தலை ஒத்தது எ - று.

மேகங்கள் பூதகணங்கட்கும், குன்றிமணிகள் அவற்றின் சுழலும் கண்கட்கும் உவமை. இக்கு-கரும்பு; அதன் சாற்றிற்காயிற்று. ஒன்றிப் போர்புரிய அது என விரித்துக்கொள்க. பொருதது என்பது பொருது என விகார மாயிற்று; பொருதது: தொழிற்பெயர். அன்றும் ஏயும் அசைகள். (கூ0)

சூலங் கண்மழுப் படைதோமர நேமி பிண்டி
பாலங் கள்கழுக் கடைவாட்படை தண்ட நாஞ்சில்
ஆலங் கவிழ்க்கின்ற வயிற்படை வீசி யூழிக்
காலங் கலிக்குங் கடல்போன்ற களமு ரார்ப்பு.

(பா - ம்.) * கனன்மீது

(இ - ள்.) சூலங்கள்-சூலப்படைகளையும், மழுப்படை-மழுவாட் படைகளையும், தோமரம் - பெரிய ஈட்டிகளையும், நேமி - திகிரிப் படைகளையும், பிண்டி பாலங்கள் - எறிபடைகளையும், கழுக்கடை - சிறிய ஈட்டிகளையும், வாட்படை - வாட்படைகளையும், தண்டம் - தண்டங்களையும், நாஞ்சில் - கலப்பைகளையும், ஆலம் கவிழ்க்கின்ற அயில் படை - நஞ்சினைக் கொட்டுகின்ற வேற்படைகளையும், களமர் வீசி ஆர்ப்பு-வீரர்கள் (ஒருவர்மேல் ஒருவர்) வீசி ஆரவாரிக்கும் ஆரவாரங்கள், ஊழிக்காலம் கலிக்கும் கடல்போன்ற-ஊழிக்காலத்தில் ஒலிக்கும் கடலின் ஒலிகளை ஒத்தன எ - று.

கடல் அதன் ஒலிக்காயிற்று. போன்றவெனப் பன்மையாற் கூறினமையால் ஆர்ப்புகள் என்க. போன்றது என்பதன் துவ்விறு கெட்டது என்னலுமாம். (௬௧)

எறிகின் றனவோச் சுவவெய்வன வாதியாகச்
செறிகின் றனபல் படைசெந்நிறப் புண்ணீர் மூழ்கிப்
பறிகின் றனவும் பிழைக்கின்றனவும் பட்டுத் தாக்கி
முறிகின் றனவு முயன்றார்வினைப் போக மொத்த.

(இ - ள்.) எறிகின்ற - எறியப்படுவனவும், ஓச்சுவ-ஓச்சப்படுவனவும், எய்வன - எய்யப்படுவனவும், ஆதி ஆகச் செறிகின்ற - முதலாகப் பொருந்திய, பல்படை - பலபடைகளும், செந்நிறப் புண்ணீர் மூழ்கி - சிவந்த நிறத்தினையுடைய உதிர நீரில் முழுகி, பறிகின்றனவும் - கழன்றோடுவனவும், பிழைக்கின்றனவும் - உடம்பிலே தாக்காது தவறிப்போவனவும், பட்டுத்தாக்கி முறிகின்றனவும்- உடம்பிலே பட்டுத் தாக்குதலால் முறிவனவுமாய், முயன்றார் வினைப் போகம் ஒத்த - முயன்று செய்தவர்களின் இருவினைக் கீடாகவரும் போகங்களை ஒத்தன எ - று.

எறிகின்றன-வேல் முதலியன: ஓச்சுவ-தண்டம் முதலியன; எய்வன - அம்பு முதலியன; ஆதியென்றமையால் வெட்டுவனவாகிய வாள் முதலியன கொள்க. எறிகின்றன முதலியன வினையாலணையும் பெயர்கள்: படுசொற்றொக்கு நின்றன. செறிகின்றன: பெயரெச்ச முற்று. புண்ணீர் மூழ்கி, என்றமையால் உடம்பிற்றைத்து எனக் கொள்க. போகங்கள் பொருந்துதலும் பொருந்தாமையும் ஒருகாற் பொருந்தி யொருகாற் பொருந்தாமையு மாகிய வேறுபாடுடைமை போல இவைகளும் படுதலும் படாமையும் பட்டு அழிவெய்துதலும் ஆகிய வேறுபாடுடையன வென்க. ஆகி என விரிக்க: ஓச்சுவ. ஒத்த என்பவற்றில் அன் சாரியை தொக்குநின்றது. (௬௨)

தெரிசிக்க வந்த சிலதேவர் சிறைப்பு ளூர்தி
வெருவிப் பறந்த வொழிந்தோர்விலங் கூர்தி மானங்
கருவிப் படையாற் சிதைபட்டன கால னூர்தி
குருதிப் புனலுக் கதுகோற்றவை யுண்ட தென்ன.

(இ - ள்.) தெரிசிக்க வந்த சில தேவர் - கண்டு வணங்குதற்கு வந்த திருமால் முதலிய சில தேவர்களின், சிறைப்புள் ஊர்தி-கலுழன் முதலியசிறைகளையுடைய பறவையூர்திகள், வெருவிப்பறந்த-அஞ்

சிப் பறந்தன; ஒழிந்தோர் விலங்கு ஊர்தி-மற்றைத் தேவர்களின் விலங்கூர்திகளும், மானம்-விமானங்களும், கருவிப் படையால் சிதைபட்டன-படைக் கலங்களினால் அழிந்தன; கொற்றவை உண்டது என்ன-காளியினால் உயிருண்ணப்பட்ட அசுரனாகிய கடாவானது ஒழுக்கியது போல, காலன் ஊர்தி-கூற்றுவன் ஊர்தியாகிய எருமைக் கடா, குருதிப் புனல் உக்கது-குருதி நீரைக் கக்கியது எ - று.

இறைவனைத் தரிசிக்க வந்தவென்க; போரினைக் காணவந்த எனலுமாம். விலங்கு-ஐராவதம் முதலியன. மானம்-விமானம். கருவியாகிய படை; படைக்கலம். கொற்றவை யுண்டதென்றது மகிடாசுரனை,

"ஆனைத்தோல் போர்த்துப் புலியி னுரியுடுத்துக்
கானத் தெருமைக் கருந்தலைமே னின்றாயால்"

என்றும்,

"வரிவளைக்கை வாளேந்தி மாமயிடற் செற்று"

என்றும் சிலப்பதிகாரத்து வேட்டுவ வரியுள் வருதல் காண்க. கடாவென்பதுபற்றி உண்டதென அஃறிணையாற் கூறினார். பறந்த, உண்டது என்பவற்றிற்கு மேல் உரைத்தாங் குரைக்க. (௩௩)

போருகின் றதுகண்டு விச்சாதரர் போகம் வீடு
தருகின் றவனைத் தொழவானெறி சார்ந்து நேரே
வருகின் றவாவேறு வழிக்கோடு போவ ரன்புக்
குருகின் றளிர்மேல் லடியாரோடு மூற்ற மஞ்சா.

(இ - ள்) போகம் வீடு தருகின்றவனைத் தொழ-போகத்தையும் வீடுபேற்றையும் அளிக்கின்ற இறைவனை வணங்க, வான்நெறி சார்ந்து-வானின் வழியைப் பொருந்தி, நேரே வருகின்றவர் விச்சாதரர்-நேரே வருகின்றவர்களாகிய வித்தியாதரர்கள், பொருகின்றது கண்டு-போர் செய்தலைக் கண்டு, ஊற்றம் அஞ்சா-(தமக்கு வரும்) இடையூற்றிற்கு அஞ்சி, அன்புக்கு உருகு இன் தளிர் மெல் அடியாரோடு - அன்பினால் உருகுகின்ற இனிய தளிர்போலும் மெல்லிய அடிகளையுடைய மாதராருடன், வேறு வழிக்கொடு போவர்-வேறு வழியால் திருக்கைலைக்குச் செல்வார்கள் எ - று.

பொருகின்றது: தொழிற் பெயர். வருகின்றவராகிய விச்சாதரர் எனக் கூட்டுக: அன்புக்கு-அன்பால். ஊற்றம் ஊறு; அம்: பகுதிப் பொருள் விகுதி. (௩௪)

திங்கட் படைசெங் கதிரோன்படை சீற்ற மேற்ற
அங்கிப் படைதீம் புனலான்படை நார சிங்க
துங்கப் படைசிம்பு ணேடும்படை சூறைச் செல்வன்
வேங்கட் படைபன் னகவெம்படை மாறி விட்டார்.

(இ - ள்.) திங்கள் படை-சந்திரக் கணைக்கு, செம் கதிரோன் படை-சூரியக் கணையையும், சீற்றம் ஏற்ற அங்கிப் படை-சினத்தைப்

பொருந்திய அக்கினிக் கணைக்கு, தீம்புனலான் படை-இனிய வருணக் கணையையும், துங்க நாரசிங்கப் படை-உயர்ச்சி பொருந்திய நரசிம்மக் கணைக்கு, நெடுஞ் சிம்புள் படை-நீண்ட சரபக் கணையையும், வெம் கண் குறைச்செல்வன் படை-கொடிய முனையை யுடைய வாயுக் கணைக்கு, வெம் பன்னகப் படை-கொடிய நாகக் கணையையும், மாறி விட்டார்-மாறிமாறி விடுத்தார்கள் எ-று.

திங்கள் முதலியவற்றைத் தெய்வமாகவுடைய அத்திரங்கள் அப் பெயர்களால் வழங்கப்படும். சந்திராத்திரம் முதலியவற்றை அழிக்க வல்லன சூரியாத்திரம் முதலியன வாகலின், அவற்றை மாறித் தொடுத்தாரென்க. சிம்புள் - சரபம்; சிங்கத்தை யழிக்கவல்லது; இதனை எண்காற்பறவை யென்பர்; பெருங்கதையுள் 'பல்வலிப் பறவை' என்று கூறப்பட்டுள்ளது; இங்கே நாரசிங்கம் என்றதற் கேற்பச் சிவபெருமானாகிய சரபம் என்று கொள்ளவேண்டும். குறை-கடுங்காற்று. பாம்பு காற்றை யுண்பதாகலின் அதற் கெதிராயிற்று. (௩௫)

கோட்புற் றமராடு மிக்கோள்கையர் தம்மி னந்தி
நட்புற் றவர்கைப் படைதூட்பட ஞான மூர்த்தி
பெட்புற் றருள வருமெங்கள் பிராட்டி வெய்ய
கட்புற் றரவின் கணைமாரிகள் தூற்றி நின்றாள்.

(இ - ள்) கோட்புற்று அமர் ஆடும் இ கொள்கையர் தம்மில்-சூழ்ன்று போர்செய்யும் இத்தன்மையர் தங்களுள், நந்தி நட்பு உற்றவர்-நந்தியெம் பெருமானிடம் அன்பு பொருந்திய படைவீரர்களின், கைப்படை தூள்பட-கையிலுள்ள படைக்கலங்கள் துகளாகு மாறு, ஞான மூர்த்தி பெட்பு உற்று அருளவரும் எங்கள் பிராட்டி-ஞானவடிவினனாகிய சிவபெருமான் விரும்பியருள வருகின்ற எம் இறைவியாகிய தடாதகைப்பிராட்டியார், புற்று வெய்ய கண் அரவின்-புற்றிலுள்ள கொடிய கண்களையுடைய பாம்புகளைப் போலும், கணை மாரிகள் தூற்றி நின்றாள்-அம்பு மழைகளைப் பொழிந்து நின்றார் எ-று.

அமராடல்-அமர் செய்தல். தலைவரிடம் அன்புள்ள வீரரென்பார் 'நட்புற்றவர்' என்றார். சந்தத்தின் பொருட்டுத் 'தூட்பட' எனத் திரிந்தது. பெட்புற்று அருள எனவும், பெட்பு உற்றருள எனவும் இரு வகையாகப் பிரித்தலுமையும். புற்றினின்று அரவு வெளிப்படுதல் போலத் தூணியினின்று வெளிப்படுதலின் 'புற்றரவின்' என உவமை கூறினார்; கொடுமை மிகுதி தோன்றவுமாம். (௩௬)

கையிற் படையிற் றனர்கற்படை தோட்டு வீரர்
மெய்யிற் படுகென்று விடுக்குமுன் வீரக் கன்னி
பொய்யிற் படுநெஞ் சுடையார்தவம் போல மாய
நெய்யிற் படுவச் சிரவேலை நிமிர்த்து வீசி.

(இ-ள்.) கையில் படை அற்றனர்-கையிலுள்ள படைக்கலங்கள் அழியப்பெற்றவராகிய சிவகண வீரர்கள், கல்படை தொட்டு-கற்களாகிய படைகளை எடுத்து, வீரர் மெய்யில் படுக என்று விடுக்குமுன்-(பிராட்டியாரின்) படைவீரர்கள் உடம்பில் படுக என்று விடுப்பதற்கு

முன் (அவை), பொய்யில் படுநெஞ்சு உடையார் தவம்போல மாய-பொய்யிற் றலைப்பட்ட உள்ளத்தை யுடையவர்கள் செய்யும் தவம் அழிவதுபோல அழிய, வீரக் கன்னி-வீரத்தையுடைய கன்னியாகிய தடாதகைப் பிராட்டியார், நெய்யில் படு வச்சிரவேலை நிமிர்த்து வீசி-நெய் பூசிய வச்சிரப்படையை ஓங்கி வீசி எ-று.

கற்களே படையாக, தொட்டு என்பது ஈண்டு எடுத்து என்னும் பொருளது. படுசென்று, அஃகம் தொக்கது. பொய்யொன் றுடைய ராயின் அவர் செய்யுந் தவமெல்லாம் பொன்றக்கெடுமென்றார். (௬௭)

துண்டம் படவே துணித்தக்கண வீரர் தம்மைத்
தண்டங் கொடுதாக் கினள்சாய்ந்தவர் சாம்பிப் போனார்
அண்டங்கள் சராசரம் யாவையும் தாமே யாக்கிக்
கொண்டெங்கு நின்றாள் வலிகூற வரம்பிற் றாமோ.

(இ - ள்.) துண்டம் பட துணித்து-துண்டு துண்டாக (அவற்றைத்) துணித்து, அ கண வீரர் தம்மைத் தண்டம் கொடு தாக்கினள்-அந்தக் கணவீரர்களைத் தண்டப்படையா லடித்தார்; அவர் சாம்பிச் சாய்ந்துபோனார் - அவர்கள் வலியிழந்து புறங்கொடுத்து ஓடினர்; அண்டங்கள் சராசரம் யாவையும்-அண்டங்களையும் (அவற்றிலுள்ள) சராசரங்கள் அனைத்தையும், தாமே ஆக்கிக் கொண்டு-தாமே தோற்றுவித்து, எங்கும் நின்றாள் வலி-அவை யெல்லாவற்றுள்ளும் கலந்து நின்ற பராசத்தியினது வலிமை, கூற வரம்பிற்று ஆமோ-கூறுதற்கு ஓரளவின உடையதாகுமோ (ஆகாது) எ-று.

சாய்ந்து-சரிந்து; புறங்கொடுத்து. சாம்பி-கூம்பி; சோர்வுற்று. கொண்டு: இசை நிறைக்க வந்தது; உடைமையாகக்கொண்டு என்றுமாம். கூற-கூறின், ஓகாரம்: எதிர்மறை. (௬௮)

படையற்று விமானமும்* பற்றற வற்றுச் சுற்றுந்
தொடையற் றிகன்மூண் டெழுதோள்வலி யற்றுச் செற்றம்
இடையற்று வீர நகையற்றடலேறு போலும்
நடையற் றடைவார் நிலைகண்டன னந்தி யண்ணல்.

(இ - ள்) படை அற்று-படைக்கலங்கள் அழிந்தும், விமானமும் பற்று அற அற்று-ஊர்திகளும் சிறிதுமின்றி அழிந்தும், சுற்றும் தொடை அற்று-அணிந்த மாலைகள் அழிந்தும், இகல் மூண்டு எழு தோள்வலி அற்று-போரின்கண் மிக்கெழுகின்ற தோள்வலி அழிந்தும், செற்றம் இடை அற்று-சினம் இடையில் அழிந்தும், வீரநகை அற்று-வீரச் சிரிப்பு அழிந்தும், அடல் ஏறு போலும் நடை அற்று-வலிமை பொருந்திய ஆண் சிங்கம் போலும் நடை அழிந்தும், அடைவார் நிலை-வருகின்ற வீரர்களின் நிலைமையை, நந்தி அண்ணல் கண்டனன்-திரு நந்தி தேவர் பார்த்தருளினார் எ-று.

விமானமும்: உம்மை உயர்வு சிறப்பு. பற்றற - ஒழிவில்லையாக ; முழுதும். செற்றம் அவர்கட்கு இயற்கை யென்பார் 'இடையற்று' என்றார். பெருமித முடையானுக்கு ஏறு நடையாலுவமம் ;

(பா-ம்.) * படையற்றபிமானமும்.

" ஏறுபோற் பீடு நடை "

என்றார் வள்ளுவனாரும்; இடப்முமாம். 'அற்று' என்னும் சினைவினைகள் 'அடைவார்' என்னும் முதல்வினையைக் கொண்டன. (ருக)

உடையா னடிதாழ்ந் திவையோதலு மோத நீத்தச்
சடையா னிளவா ணகைசெய்து தருமச் செங்கண்
விடையான் சிலையா னிகல்வென்றி விளக்குந் தேய்வப்
படையா னெழுந்தா னமராடிய பாரிற் சென்றான்.

(இ-ள்.) உடையான் அடி தாழ்ந்து-இறைவன் திருவடியை வணங்கி, இவை ஓதலும்-இந்நிகழ்ச்சிகளைக் கூறுதலும், ஓதம் நீத்தம் சடையான்-அலைகளையுடைய கங்கையைச் சடையிலுள்ள இறைவன், இள வாள்நகைசெய்து-ஒளி பொருந்திய புன்முறுவலைச் செய்து, செம் கண் தருமவிடையான்-சிவந்த கண்களையுடைய அறவேற்றினையுடையவனாய், சிலையான் - வில்லையுடையவனாய், இகல் வென்றி விளக்கும்-போரில் வெற்றியைத் தரும், தெய்வப்படையான்-தெய்வத்தன்மையுடைய படைகளையுடையவனாய், எழுந்தான் அமர் ஆடிய பாரில் சென்றான்-எழுந்து போர் செய்யும் களத்திற் சென்றான் எ-று.

உடையான்-உலகுயிர்களையெல்லாம் உடைமையாகவும் அடிமையாகவும் உடையவன். நீத்தம்-வெள்ளம்; கங்கை. அறக்கடவுளாகிய விடை. விடையான் முதலியன முற்றெச்சம். ஆடிய: செய்யிய வென்னும் எச்சமுமாம். (ச0)

[அறுசீரடி யாசிரியவிருத்தம்]

மேவி யாகவப் பாரிடைப் பாரிட வீரரை யமராடி
ஓவி லாவலி கவர்ந்தது மன்றினி யுருத்தேவ ரெதிர்ந்தாலுந்
தாவி லாவலி கவரவு மடங்கலின் றனிப்பிணை வெனநிற்குந்
தேவி யார்திரு வுருவமுஞ் சேவகச் செய்கையு மெதிர்கண்டான்.

(இ-ள்.) மேவி-சென்று, ஆகவப் பாரிடை - போர்க்களத்தில், பாரிட வீரரை அமர் ஆடி-பூதகண வீரரோடு போர்புரிந்து (அவர்களின்), ஓவு இலா வலி கவர்ந்ததும் அன்று-நீங்காத வலிமையைக் கொண்டதும் அல்லாமல், இனி உருத்து எவர் எதிர்ந்தாலும்-இனி எவர் சினந்து எதிர்த்தாலும், தாவு இலா வலி கவரவும்-(அவர்களின்) கெடாத வலியைக்கொள்ளவும், தனி மடங்கலின் பிணை என நிற்கும்-ஒப்பற்ற பெண் சிங்கத்தைப்போல நிற்கின்ற, தேவியார் திரு உருவமும்-அம்மையாரின் திருவுருவத்தையும் சேவகச் செய்கையும் எதிர் கண்டான்-வீரச் செயல்களையும் நேரிற் கண்டருளினான் எ-று.

ஆகவம்-போர். பாரிடம் - பூதம். அன்றியென்னும் வினையெச்சத்திகரம் உகரமாயிற்று. வலியும் கவர என உம்மையை மாற்றினுமமையும். பிணை-பெண். (சக)

ஒற்றை வார்கழற் சரணமும்
பாம்பசைத் துடுத்தவெம் புலித்தோலுங்
கோற்ற வாண்மழுக் கரமும்வெண்
ணீறணி கோலமுந் நூன்மார்புங்
கற்றை வேணியுந் தன்னையே
நோக்கிய கருணைசெய் திருநோக்கும்
பெற்ற தன்வலப் பாதியைத்
தடாதகைப் பிராட்டியு மெதிர்கண்டாள்.

(இ - ள்.) ஒற்றை வார் கழல் சரணமும்-ஒன்றாகிய நீண்ட வீர கண்டையைத் தரித்த திருவடியையும், பாம்பு அசைத்து உடுத்த வெம் புலித் தோலும் - பாம்பாகிய கச்சினால் இறுகப் பிணித்து உடுத்திய கொடிய புலித்தோலையும், கொற்றவாள் மழுக்கரமும்-வெற்றியையும் ஒளியையுமுடைய மழுப்படை யேந்திய திருக்கரத்தையும், வெள் நீறு அணிகோலம்-வெள்ளிய திருநீறு தரித்த கோலத்தினையுடைய, முந்நூல் மார்பும் - பூணூலணிந்த திருமார்பையும், கற்றை வேணியும் - திரண்ட சடையையும், தன்னையே நோக்கிய கருணைசெய் திரு நோக்கும்-தன்னையே பார்க்கின்ற அருள் புரியும் திருக்கண்களையும், பெற்ற-உடைய, தன் வலப் பாதியைத் தடாதகைப் பிராட்டியும் எதிர்கண்டாள்-தன் வலப்பாதியாகிய சிவபெருமானைத் தடாதகைப் பிராட்டியாரும் நேரே கண்டருளினார் எ - று.

வெம்மை: புலிக்கு அடை. வாளாகிய மழுவுமாம்: கோலமும் நூன் மார்பும் எனப் பிரித்தலுமாம்; இதற்கு நகரம் விரித்தல். பிராட்டி திருவுருவம் இடப் பாதியாகலின் பெருமான் திருவுருவை வலப்பாதியென்றார்;

"தோலுந் துகிலுங் குழையுஞ் சுருள்தோடும்
பால்வெள்ளை நீறும் பசுஞ்சாந்தும் பைங்கிளியும்
சூலமுந் தொக்க வளையு முடைத்தொன்மைக்
கோலமே நோக்கிக் குளிர்ந்தூதாய் கோத்தும்பீ"

என்னும் திருவாசகம் சிந்திக்கற் பாலது. (சஉ)

கண்ட வெல்லையி லொருமுலை
மறைந்தது கருத்தினாண் மடனச்சங்
கொண்ட மைந்திடக் குனிதர
மலர்ந்தபூங் கொம்பரி னேசிந்தோல்கிப்
பண்டை யன்புவந் திறைகொளக்
கருங்குழற் பாரமும் பிடர்தாழக்
கெண்டை யுண்கணும் புறவடி
நோக்கமண் கிளைத்துமின் னெனநின்றாள்.

(இ - ள்) கண்ட எல்லையில் - பார்த்த அளவில், ஒரு முலை மறைந்தது - ஒரு கொங்கை மறைந்தது (அதனால்), கருத்தில் நாண் மடன் அச்சம் கொண்டு அமைந்திட - உள்ளத்தின்கண் நாணமும் மடமும் அச்சமும் இடங்கொண்டு பொருந்திட, குனிதர மலர்ந்த பூங்கொம்பரின் - வளையும்படி பூத்த பூங்கொம்பைப் போல, ஒசிந்து ஒல்கி - வளைந்து துவண்டு, பண்டை அன்பு வந்து இறைகொள - தொல்லையன்பானது வந்து தங்க, கருங்குழல் பாரமும் பிடர் தாழ - கரிய குழற் கற்றை பிடரியிற் சரியவும், கெண்டை உண்கணும் புற அடி நோக்க - சேல்போன்ற மையுண்ட கண்கள் புறவடியை நோக்கவும், மண் கிளைத்து மின் என நின்றாள் - மண்ணைத் திருவிரலாற் கீறிக்கொண்டு மின்னலை ஒத்து நின்றருளினார் எ - று.

"அச்சமு நாணு மடனு முந்துறுத்த
நிச்சமும் பெண்பாற் குரிய வென்ப"

எனத் தொல்காப்பியனார் கூறியவாறு அவை யென்றும் உளவேனும் ஈண்டு நாயகனெதிர்ப்பாட்டினால் முலை மறைந்தமையின் மிக்கு விளங்கின வென்றார்; அன்றி இதுகாறும் ஆண்டன்மை தோற்றி வந்தமையால் ஈண்டுப் பெண்மை தோன்றிற்று என்றுருமாம். குனிதர மலர்ந்த வென்றது நிறையப் பூத்த என்படி; முன்னரும் 'குனிதர நிறையப் பூத்த கொம்பு' என்றார். கொம்பர்: ஈற்றுப் போலி. பண்டை அன்பு - தொன்றுதொட்டுள்ள அன்பு. வருதல் - வெளிப்படுதல். பாரமும், கண்ணும் என்பவற்றிலுள்ள உம்மைகள் முறையே தாழ, நோக்க என்பவற்றுடன் பிரித்துக் கூட்டப்பட்டன, திருவடியின் பெருவிரலால் மண்ணைக் கிளைத்து: தன்மைநவிற்சியணி. (௪௧)

நின்ற மேன்கோடிக் ககல்விசும்
பிடையர னிகழ்த்திய திருமாற்றம்
அன்ற றிந்தமு தறிவனுஞ்
சுமதிசீ றடிபணிந்* தன்னயிக்
கோன்றை யஞ்சடைக் குழகனே
நின்மணக் குழகனேன் றலுமன்பு
துன்ற நின்றவட் பார்த்தருட்
சிவபரஞ் சோதிமற் றிதுகூறும்.

(இ - ள்.) நின்ற மென் கொடிக்கு - (இங்ஙனம்) நின்றமெல்லிய கொடி போல்பவராகிய பிராட்டியாருக்கு, அகல் விசும்பிடை அன்று அரன் நிகழ்த்திய திருமாற்றம் - அகன்ற விசும்பின்கண் முன் இறைவன் அருளிச்செய்த திருவாக்கினை, அறிந்த மூது அறிவனும் சுமதி - தெரிந்த பேரறிவினை யுடையவனாகிய சுமதியென்பான், சிறு அடி பணிந்து - பிராட்டியாரின் திருவடிகளை வணங்கி, அன்னாய் - தாயே; இகொன்றை அம் சடைக் குழகனே - இந்தக் கொன்றைமாலையை யணிந்த அழகிய சடையையுடையபேரழகனே, நின்மணக் குழகன் என்றலும் - நின் மணவாளன் என்று கூற, அன்பு துன்ற நின்றவள்

(பா - ம்) * சுமதி சென்றடி பணிந்து.

பார்த்து-அன்பு நிறைய நிற்கின்ற பிராட்டியாரை நோக்கி, அருள் சிவபரஞ் சோதி இது கூறும்-கருணையையுடைய சிவபரஞ் சுடராகிய இறைவன் இதனைச் சொல்வான் எ - று.

கொடிக்கு என்றலும் எனக் கூட்டுக. திருமாற்றம், 'இப் பொன்னனையாள் தனக்கிறைவன் வரும்பொழுதோர் முலைமறையும்' என்பது. குழகன்-அழகன்; மணமகன். மற்று: அசை; வினைமாற்றுமாம். (௪௪)

என்று தொட்டுநீ திசையின்மேற்
சயங்குறித் தெழுந்துபோந் தனையாமும்
அன்று தொட்டுநம் மதுரைவிட்
டுனைவிடா தடுத்துவந் தனமுன்னைத்
தோன்று தொட்டநான் மறையுரை
வழிவரு சோமவா ரத்தோரை
நன்று தொட்டநாண் மணஞ்சேய
வருதுநின் னகர்க்குநீ யேகென்றான்.

(இ - ள்.) என்று தொட்டு நீ-எந்தக் காலம் முதலாக நீ, திசையின்மேல் சயம் குறித்து எழுந்து போந்தனை-திக்குகளின்மேல் வெற்றியைக் குறித்து எழுந்து போந்தாயோ, அன்று தொட்டு-அந்தக் கால முதல், யாமும் நம் மதுரை விட்டு-யாமும் நம்முடைய மதுரைப் பதியை விட்டு, உனை விடாது அடுத்து வந்தனம்-உன்னை நீங்காது உடன் வந்தோம்; தோன்று தொட்ட நால் மறை உரைவழி-பழைய நான்மறைகளிற் கூறியவாறு, வரு சோமவாரத்து-வருகின்ற திங்கட்கிழமை யன்று, நன்று ஓரை தொட்ட நாள்-நல்ல முழுத்தங் கூடிய பொழுதில், மணம் செய வருதும்-திருமணஞ் செய்ய வருவேம்; நீ நின் நகர்க்கு ஏகு என்றான்-நீ உன் நகரமாகிய மதுரைக்குச் செல்வாயாக என்று கூறியருளினான் எ - று.

திசையின்மேற் சயம்-திக்கு விசயம். போந்தனையோ என விரிக்க. தொட்டு - தொடங்கி. நம்மதுரை விட்டு என்றது அதுவே தாம் என்றும் எழுந்தருளியிருக்கும் 'பழம்பதி' என்று குறிப்பித்தவாறு. விடாது அடுத்து வந்தது வென்றி தருதற்கு; காதலானுமாம். தொன்று தொட்ட-பழமையாகவுள்ள. 'மறை உரைவழி' என்பதனை, மறையினது உரைவழி, மறையானது உரைத்தவழி, மறையாகிய உரைவழி எனப் பலவகையாக விரித்துரைத்தலும் சாலும். சோமவாரமாகிய நாள் என்னலுமாம். ஓரை-முழுத்தம் ;

"மறைந்த வொழுக்கத் தோரையு நாளுந்
துறந்த வொழுக்கம் கிழவோற் கில்லை"

எனத் தொல்காப்பியம் கூறுதலால் பல்லாயிரம் ஆண்டுகளின் முன்னரே தமிழ்மக்கள் ஓரை முதலியவற்றை அறிந்துளா ராதல் பெறப்படும். (௪௫)

என்ற நாதன்மே லன்பையு முயிரையு மிருத்தியா யஞ்சூழக்
குன்ற மன்னதேர் மேற்கொடு தூரியங் குரைகட லெனவார்ப்ப
நின்ற தெய்வமால் வரைகளும் புண்ணிய நீத்தமு நீத்தேகி
மன்றன் மாமது ராபுரி யடைந்தனள் மதிக்குல விளக்கன்னாள்.

(இ - ள்.) என்ற நாதன்மேல்-என்று கூறியருளிய தலைவனிடத்தில், அன்பையும் உயிரையும் இருத்தி-தம் அன்பையும் ஆவியையும் வைத்து, ஆயம் சூழ-மகளிர் கூட்டம் புறஞ்சூழ, குன்றம் அன்ன தேர் மேற்கொடு-மலையினை ஒத்த தேரின்மேல் ஏறியருளி, தூரியம் குரை கடல் என ஆர்ப்ப-வாத்தியங்கள் ஆர்க்கின்ற கடலினைப்போல ஒலிக்க, நின்ற தெய்வமால் வரைகளும்-இடை நின்ற தெய்வத்தன்மை பொருந்திய பெரியமலைகளையும், புண்ணிய நீத்தமும் நீத்து ஏகி-புண்ணிய நதிகளையுங் கடந்து சென்று, மதிக்குல விளக்கு அன்னாள்-திங்கள் மரபிற்கு விளக்குப் போல்பவராகிய தடாதகைப் பிராட்டியார், மன்றல் மா மதுராபுரி அடைந்தனள்-மணம் மிக்க பெருமையுடைய மதுரையம்பதியை அடைந்தார் எ - று.

மன்றல்-மலர் மணமும், கல்யாணமும் ஆம். குலத்தை விளங்கச் செய்தலின் விளக்கன்னாள் என்றார். (௬௬)

மங்கை நாயகி மங்கல மெதிர்கோள
வந்து வானிழி செல்வம்
பொங்கு மாளிகை புகுந்தன ளாகமேற்
புதுமணத் திறந்தீட்டி
எங்கு மோலையுய்த் தமைச்சர்மங் கலவினைக்
கியைவன வமைக்கின்றார்
அங்கண் மாநக ரெங்கணுங் கடிமுர
சானைமே லறைவித்தார்.

(இ - ள்.) மங்கை நாயகி-மங்கையர்க் கரசியாகிய பிராட்டியார், மங்கலம் எதிர்கொள வந்து-எட்டு மங்கலமும் ஏந்தியவர்கள் எதிர் கொள்ள வந்து, வான் இழி செல்வம் பொங்குமாளிகை புகுந்தனள் ஆக-வானுலகத்தி னின்றும் உய்த்த செல்வம் மிக்க திருமாளிகையிற் புகுந்தருளினர்; மேல்-பின், புதுமணத்திறம் தீட்டி எங்கும் ஓலை உய்த்து-கடிமணச் செயலை எழுதி எவ்விடங்கட்கும் ஓலை அனுப்பி, அமைச்சர் மங்கல வினைக்கு இயைவன அமைக்கின்றார்-மந்திரிகள் மண விழாவுக்குப் பொருந்துவன சமைப்பவர்கள், அம் கண் மா நகர் எங்கணும்-அழகிய இடத்தினையுடைய பெரிய நகர் முழுதும், கடி முரசு ஆனைமேல் அறைவித்தார்-மணமுரசினை யானையின்மே லேற்றிச் சாற்றுவித்தார்கள் எ-று.

வான் இழிசெல்வம்-தாம் முன்பு வென்று கைப்பற்றிக் கொணர்ந்த செல்வம். ஆக: அசை; புகுந்தருள என எச்சமுமாம். அமைக்கின்றாராகிய அமைச்சரென்க. யானை, ஆனையெனத் திரிந்தது. (௬௭)

[ஷை வேறு]

கன்னிதன் மணமுர சறைதலுங்
கடிநக ரூறைபவர் கரைகேடத்
துன்னிய வுவகையர் கடவுளைத்
தொழுகைய ருடல முகிழ்ப்பெழப்

பன்னிய துதியின ரியலெழின்
மகளிரை யழகுசெய் பரிசென
இன்னிய லெழில்வள நகரெலாஞ்
செயல்வினை யணிபெற வெழில்செய்வார்.

(இ-ள்.) கன்னி தன் மணம் முரசு அறைதலும்-பிராட்டியாரின் திருமண முரசு அறையப்பெற்ற வளவில், கடிநகர் உறைபவர்-காவலை யுடைய அம் மதுரைப் பதியில் வசிப்பவர் அனைவரும், கரைகெட துன்னிய உவகையர்-எல்லையில்லாது ஓங்கிய மகிழ்ச்சியை யுடையவ ராய், கடவுளைத் தொழு கையர்-இறைவனை வணங்கிக் கூப்பிய கையினை யுடையவராய், உடலம் முகிழ்ப்பு எழ-உடல் முழுதும் புளகம் அரும்ப, பன்னிய துதியினர் - பாடிய துதிப்பாட்டுக்களை யுடையவராய், இயல் எழில் மகளிரை அழகுசெய் பரிசென-இயற்கை யழகுள்ள மகளிரை அணிமுதலியவற்றால் செயற்கை யழகு செய்யுந் தன்மை போல, இன் இயல் எழில் வள நகர் எலாம்-இனிய இயற்கையழகும் வளப்பமுமுடைய நகர் முழுதையும், செயல்வினை அணிபெற-செய்தலை யுடைய தொழிற் றிறங்களால் அலங்காரம் பெற, எழில் செய்வார்-அழகுசெய்யத் தொடங்குவார்கள் எ - று.

மணத்தை முரசு அறைதலும் என்றுமாம். தொழுகையர்-தொழு தலையுடையவர், தொழும் கையினை யுடையவர் என இருவகையாற் பொருள் கூறலாகும். உடலம், அம்: சாரியை. இயல்-இலக்கண முமாம். இங்கே கூறிய உவமம் பாராட்டற் குரியது. (௬அ)

கோதையோ டும்பரி சந்தனக் குப்பை களைந்தனர் வீசுவார்
சீதள மென்பனி நீர்கடுய்ச் சிந்தின பூழி யடக்குவார்
மாதரு மைந்தரு மிறைமகள் மன்றல் மகிழ்ச்சி மயக்கினாற்
காதணி குழைதொடி கண்டிகை கழல்வன தெரிகில தொழில் செய்வார்.

(இ - ள்.) மாதரும் மைந்தரும்-மகளிரும் ஆடவரும், கோதை யொடும் பரி சந்தனக்குப்பை-மாலையோடும் நீங்கிய சந்தனக் குப்பை களை, களைந்தனர் வீசுவார்-களைந்து (புறத்தே கொண்டுபோய்) எறிவார்கள், சீதளம் மென் பனி நீர்கள் தூய்-குளிர்ந்த மெல்லிய பனிநீரைத் தெளித்து, சிந்தின பூழி அடக்குவார்-சிதறிய புழுதியை அடக்குவார்கள்; இறைமகள் மன்றல் மகிழ்ச்சி மயக்கினால் - அரச குமாரியாகிய பிராட்டியாரின் திருமணங் காரணமாக எழுந்த மகிழ்ச்சி மயக்கத்தால்; காது அணிகுழை-காதில் அணிந்த குழைகளும், தொடி - வளைகளும், கண்டிகை - கண்டிகைகளு மாகிய இவைகள், கழல்வன தெரிகிலர் தொழில் செய்வார்-கழலுதலைத் தெரியாதவர் களாய் அலங்காரம் செய்வார்கள் எ-று.

பரி என்பதனைக் கோதைக்குங் கூட்டுக. பரிதல், நீங்குதல் எனத் தன்வினையும், நீக்குதல் எனப் பிறவினையுமாகும். களைந்தனர்கள், தெரிகிலர்: முற்றெச்சங்கள். நீர், கள்: இசைநிறை; விகுதியாயின் நீரின்வகை கருதிற்றும். இறைமகள்-அரசன் புதல்வியும், அரசியும் ஆம். கண்டிகை-கழுத்தணி. (௬௯)

மங்கல மேன்றென வினவுவார்
வருமதி நாளென வுரைசெய்வார்
தங்களை யொல்லை தழீஇக்கொள்வார்
தாங்கரு மோகை தலைக்கொள்வார்
திங்களி னெல்லையு மாறுநா
ளாறுக மென்று செலுத்துவார்
நங்கை யருங்கடி காணவோ
துடித்தன தோள்க ணமக்கென்பார்.

(இ - ள்.) மங்கலம் என்று என வினவுவார்-திருமணம் எப்பொழுது என்று (ஒருவரை ஒருவர்) கேட்பார்கள்; வரும் மதிநாள் என-வருகின்ற திங்கட் கிழமை என்று, உரைசெய்வார் தங்களை-கூறுகின்றவர்களை, ஒல்லை தழீஇக்கொள்வார்-விரையத் தழுவிக் கொள்பவர்களாய், தாங்கரும் ஓகை தலைக் கொள்வார்-தாங்குதற்கரிய மகிழ்ச்சி மீக்கொள்வார்கள்; திங்களின் எல்லையும் ஆறுநாள்-அம் மதிநாள் வருமளவு ஆறுநாள் (ஆயினும் அவற்றை), ஆறு உகம் என்று செலுத்துவார்-ஆறு யுகங்களைப்போலக் கழிப்பார்கள்; நங்கை அருங்கடி காணவோ-நம் பிராட்டியாரின் திருமண விழாவைக் காணுதற் பொருட்டோ, நமக்குத் தோள்கள் துடித்தன என்பார்-நமக்குத் தோள்கள் துடித்தன என்று கூறுவார்கள் எ - று.

உரை செய்வார்; தாங்கள் ஒருவரை யொருவர் தழுவிக் கொள்வார், எனப் பிரித் துரைத்தலுமாம். ஓகை-உவகை. உடன்காணும் அவாவினால் ஒருநாள் ஒரு யுகம் போலாயிற்று என்றார். தோள் துடித்தல் ஆடவர்க்கு வலமும் மகளிர்க்கு இடமும் ஆம். பிராட்டி இறைவனைச் சந்தித்து மீண்டநாளும் திங்கட்கிழமையெனக் கொள்க. (௬0)

பித்திகை வெள்ளை புதுக்குவார் பேட்புறு வார்களும் பேட்புறச்
சித்திர பந்தி நிறுத்துவார் தெற்றிகள் குங்கும நீவுவார்
வித்திய பாலிகை மென்றழை விரிதலை நீர்நிறை பொற்குடம்
பத்தியின் வேதி நிரப்புவார் தோரணம் வாயில் பரப்புவார்.

(இ - ள்.) பித்திகை வெள்ளை புதுக்குவார் - சுவர்த்தலங்களைச் சுண்ணத்தாற் புதுப்பிப்பார்கள்; பெட்பு உறுவார்களும் பெட்புற-(யாவரும்) விரும்புகின்ற சிற்பநூல் வல்லாரும் விரும்புமாறு, சித்திர பந்தி நிறுத்துவார்-சித்திர வரிசைகளை நிற்பிப்பார்கள்; தெற்றிகள் குங்குமம் நீவுவார்-திண்ணைகளைக் குங்குமக் குழம்பால் மெழுகுவார்கள்; வேதி-அத்திண்ணைகளில், வித்திய பாலிகை - முளைத்த பாலிகைகளையும், மென்தழை விரிதலை நீர் நிறை பொன் குடம்-மெல்லிய (மாந்) தழை விரிந்த தலையையுடைய நீர் நிரம்பிய பொன்னாலாகிய பூரண கும்பங்களையும், பத்தியின் நிரப்புவார்-வரிசைப்பட வைப்பார்கள்; தோரணம் வாயில் பரப்புவார்-தோரணங்களை வாயிலிற் கட்டுவார்கள் எ - று.

வித்திய-விதைத்த; முளை தோன்றிய. (௬க)

நீளிடை மணிமறு கெங்கணு
நெடுநடைக் காவண நாட்டுவார்
பாளைகொள் கமுகு சுவைக்கழை
பழுக்குலை வாழை யொழுக்குவார்
கோளிறை கொண்டெனெ வாடிகள்
கோத்தணி வார்மிசை கொடிநிரை
வாளரி யெழுபரி யடிபட
மத்திகை நிரையென வைப்பரால்.

(இ-ள்.) நீள் இடை மணி மறுகு எங்கணும் - நீண்ட இடத்தினை யுடைய அழகிய வீதிகள் முழுதும், நெடு நடைக் காவணம் நாட்டுவார் - நெடிய நடைப் பந்தர் இடுவார்கள்; பாளைகொள் கமுகு - பாளைகளையுடைய பாக்கு மரங்களையும், சுவைக்கழை - சுவையினையுடைய கரும்புகளையும், பழுக்குலை வாழை - பழுத்த குலையையுடைய வாழை மரங்களையும், ஒழுக்குவார் - வரிசையாகக் கட்டுவார்கள்; கோள் இறை கொண்டென - ஒன்பது கோள்களும் தங்கியிருத்தல் போல, ஆடிகள் கோத்து அணிவார் - கண்ணாடிகளைக் கோவையிட்டுக் கட்டுவார்கள்; மிசை - மேலே, வாள் அரி எழு பரி அடிபட - ஒளியை யுடைய சூரியனுடைய ஏழு குதிரைகளும் அடிபடுமாறு, மத்திகை நிரை என - சம்மட்டியின் வரிசைபோல, கொடி நிரை வைப்பர் - கொடிகளை வரிசையாக நிறுத்துவார்கள் எ - று.

இறைகொள்ளல் - தங்கல்; குடியிருத்தல். கொண்டென - கொண்டாலென. வாளரி, அரி யென்னும் பலபொரு ளொருசொல் அடையானும் சார்பானும் ஞாயிற்றை யுணர்த்திற்று. மத்திகை - குதிரைச் சம்மட்டி. ஆல் : அசை. (௩௨)

பூவொடு தண்பனி சிந்துவார் பொரியொடு பொற்சுணம் வீசுவார்
பாவை விளக்கு நிறுத்துவார் பைந்தொடை பந்தரி னாற்றுவார்
ஆவண மென்ன வயிர்ப்புற வணிமறு கெங்கணு மரதனக்
கோவையு மரகத மாலையுங் கோப்பமை யாரமுந் தூக்குவார்.

(இ-ள்.) பூவொடு தண்பனி சிந்துவார் - மலர்களோடு குளிர்ந்த பனி நீரைத் தெளிப்பார்கள்; பொரியொடு பொற்சுணம் வீசுவார் - பொரிகளோடு பொன்னாலாகிய பொடியை இறைப்பார்கள்; பாவை விளக்கு நிறுத்துவார் - பாவை விளக்குக்களை நிற்க வைப்பார்கள்; பைந்தொடை பந்தரில் நாற்றுவார் - பசிய மாலைகளைக் காவணங்களில் கட்டித் தொங்கவிடுவார்கள்; ஆவணம் என்ன அயிர்ப்பு உற - கடை வீதியோ என்னக் (கண்டோர்) ஐயுறுமாறு, அணிமறுகு எங்கணும் - அழகிய வீதிகளெங்கும், அரதனக் கோவையும் - அரதன மாலைகளையும், மரகத மாலையும் - மரகத மாலைகளையும், கோப்பு அமை ஆரமும் - கோவையாக அமைந்த முத்துமாலைகளையும், தூக்குவார் - நிரல்படத் தொங்க விடுவார்கள் எ - று.

பனி - பனிநீர். சுண்ணம் என்பது தொக்கது. பாவை விளக்கு - பெண் வடிவாகிய பிரதிமை கையில் விளக்கினை யேந்தி நிற்குமாறு

இயற்றப்பட்டது. பந்தர்-போலி. நாற்றுவார்: நால் என்பதன் பிற வினையாகிய நாற்று பகுதி. ஆவணம்-ஈண்டு அரதன வாணிகம் புரியும் கடைத்தெரு. அரதனம்-இரத்தினம். பொதுப்பெயர். ஆரம்-முத்து; கோப்பமை என்றமையால் முத்துமாலை யென்றாயிற்று. (௩௩)

அடுகரி சிந்துர மப்புவா ரழன்மணி யோடை மிலேச்சுவார்
கடுநடை யிவுளி கழுத்தணி காலணி கலனை திருத்துவார்
சுடர்விடு தேர்பரி பூட்டுவார் தொடையொடு கவரிக டூக்குவார்
வடுவறு பொற்கல நவமணி மங்கல தீப மியற்றுவார்.

(இ-ள்.) அடுகரி சிந்துரம் அப்புவார் - கொல்லுதலையுடைய யானைகளின் (நெற்றியில்) சிந்தூரத் திலகம் சாத்துவார்கள்; அழல் மணி ஓடை மிலேச்சுவார் - நெருப்புப்போலும் மணிகள் பதித்த பட்டத்தைச் சூட்டுவார்கள்; கடு நடை இவுளி - விரைந்த செலவினை யுடைய குதிரைகளின், கழுத்து அணி கால் அணி கலனை திருத்துவார்- கழுத்திலணியும் அணிகளையும் காலில் அணியும் அணிகளையும் சேணத்தையும் (அவைகட்குத்) திருத்தமுற அணிவார்கள்; சுடர் விடு தேர் பரி பூட்டுவார் - சுடர்வீசும் தேர்களிற் குதிரைகளைப் பூட்டுவார்கள்; தொடையொடு கவரிகள் தூக்குவார் - மாலைகளையும் சாமரைகளையும் (அத்தேர்களிற்) கட்டித் தொங்க விடுவார்கள்; வடு அறு பொன்கலம் - குற்றமற்ற பொன்னாலாகிய தட்டங்களில், நவமணி மங்கல தீபம் இயற்றுவார்-நவரத்தினங்களாலாகிய மங்கல விளக்குகளை வைப்பார்கள் எ - று.

அழல்மணி - மாணிக்கம். ஓடை - யானை நெற்றியிலணியும் பட்டம். (௩௪)

பழையன கலனை வெறுப்பராற் புதியன பணிகள் பரிப்பராற்
குழைபனி நீரளை குங்குமங் குவிமுலை புதைபட மெழுகுவார்
மெழுகிய வீரம் புலர்த்துவார் விரைபடு கலவைக ளப்புவார்
அழகிய கண்ணடி நோக்குவார் மைந்தரை யாகுல மாக்குவார்.

(இ-ள்.) பழையன கலனை வெறுப்பர், - (பெண்கள்) பழைய அணிகளை வெறுத்துக் களைவார்கள்; புதியன பணிகள் பரிப்பர் - புதியனவாகிய அணிகளைத் தரிப்பார்கள்; குழை பனிநீர் அளை குங்குமம்- குழைத்த பனிநீர் அளாவிய குங்குமக் குழம்பை, குவிமுலை புதைபட மெழுகுவார்-குவிந்த முலைகள் மறையுமாறு அப்புவார்கள்; மெழுகிய ஈரம் புலர்த்துவார்-(அவ்வாறு) மெழுகிய ஈரத்தை (அகிற் புகையால்) புலரவைப்பார்கள்; விரைபடு கலவைகள் அப்புவார்-மணம் பொருந்திய கலவைகளைப் பூசுவார்கள்; அழகிய கண்ணடி நோக்குவார் - அழகிய கண்ணாடியைப் பார்ப்பார்கள்; மைந்தரை ஆகுலம் ஆக்குவார் - இவற்றால் ஆடவரை வருத்துவார்கள் எ - று.

பழையன, புதியன பெயரெச்சங்கள். பழைய கலன் - முன் அணிந்தவை. பனிநீர் அளைந்து குழைத்த குங்குமம் என்பது கருத்தாகக் கொள்க. மைந்தர் என்னும் பொதுப்பெயர் ஈண்டுச் சிறப்பாக நாயகரை யுணர்த்தும்; நாயகர்க்குச் சிறப்புப் பெயருமாம்; ஆகுல மாக்கல்-வேட்கை நோயால் மெலியச் செய்தல். வெறுப்பர், மெழுகு

வார், அப்புவார் என்பவற்றை வினையெச்சமாக்கலுமாம். ஆல் இரண்டும் அசை. (௰௭)

அஞ்சனம் வேல்விழி தீட்டுவா ராடவர் மார்பிடை நாட்டுவார்
பஞ்சுகள் பாத மிருத்துவார் பரிபுர மீது திருத்துவார்
வஞ்சியர் தேற லருந்துவார் மருங்கு றளாட வருந்துவார்
கொஞ்சிய கனிமொழி கழறுவார் குழுவொடு குரவைகள் குழறுவார்.

(இ - ள்.) வஞ்சியர்-வஞ்சிக் கொடிபோலும் மகளிர்கள், வேல் விழி அஞ்சனம் தீட்டுவார் - வேல் போன்ற கண்களுக்கு மை எழுதுவார்கள்; ஆடவர் மார்பிடை நாட்டுவார்-(அவற்றை) ஆடவர்களின் மார்பிலே ஊன்றுவார்கள்; பாதம் பஞ்சுகள் இருத்துவார்-அடிகளில் செம்பஞ்சுக் குழம்பை இடுவார்கள்; மீது பரிபுரம் திருத்துவார்-அவ்வடிகளின்மேல் சிலம்பைத் திருந்த அணிவார்கள்; தேறல் அருந்துவார்-மதுவினைக் குடிப்பார்கள்; மருங்குல் தள்ளாட வருந்துவார் -(அம் மயக்கத்தால்) இடைதள்ளாட (நடந்து) வருந்துவார்கள்; கொஞ்சிய கனிமொழி கழறுவார் -(நாயகர்) பாராட்டச் சுவை முதிர்ந்த மொழிகளைக் கூறுவார்கள்; குழுவொடு குரவைகள் குழறுவார் - மகளிர் கூட்டத்தோடு குரவைப் பாட்டினைக் குழறிப் பாடுவார்கள் எ - று.

தீட்டுவார், இருத்துவார், அருந்துவார் என்பவற்றை எச்சமாக்கலுமாம். தள்ளாட என்பது விகாரமாயிற்று. கொஞ்சிய: செய்யிய வென்னும் வினை யெச்சம்; கொஞ்சுதலையுடைய வெனப் பெயரெச்சமுமாம். குரவை - கைகோத்தாடுங் கூத்து; இது காமமும் வென்றியும் பொருளாக வரும்;

> "குரவை யென்பது கூறுங் காலைச்
> செய்தோர் செய்த காமமும் விறலும்
> எய்த வுரைக்கு மியல்பிற் றென்ப"

என்பது காண்க. நான்கடியிலும் மூன்றுஞ் சீரும் ஆறுஞ் சீரும் இயைபுடையவாய்த் திகழ்கின்றன. (௰௮)

கின்னர மிதுனமெனச்செல்வார் கிளைகெழு பாணொடு விறலியர்
கன்னிய ராசை வணங்குவார் கடிமண மெய்து களிப்பினால்
இன்னிசை யாழொடு பாடுவா ரீந்தன துகில்விரித் தேந்துவார்
சென்னியின் மீதுகொண்டாடுவார் தேறலை யுண்டு செருக்குவார்.

(இ - ள்.) விறலியர்-பாண்மகளிர், கிளை கெழு பாணொடு-சுற்றமாகிய பாணரோடு, கின்னர மிதுனம் எனச் செல்வார் - யாழேந்திய மிதுனராசியைப்போலச் சென்று, கன்னியர் அரசை வணங்குவார் - மங்கையர்க் கரசியான பிராட்டியாரை வணங்குவார்கள், கடிமணம் எய்து களிப்பினால்-திருமணம் நிகழும் மகிழ்ச்சியால், இன் இசை யாழொடு பாடுவார்-இனிய இசைப்பாட்டினை யாழொடு (வேறுபடாமல்) பாடுவார்கள்; ஈந்தன துகில் விரித்து ஏந்துவார்-(அவர்)கொடுக்கும் பொருள்களை ஆடையை விரித்து வாங்குவார்கள்; சென்னியின் மீது கொண்டு ஆடுவார்-அவற்றை முடியின்மேற் கொண்டு ஆடுவார்

கள் ; தேறலை உண்டு செருக்குவார் - மதுவை உண்டு களிப்பார்கள் எ - று.

கின்னரம்-வீணை. வீணையைக் கையிலேந்திய ஆணும் பெண்ணும் கூடிய வடிவாக விருப்பது மிதுனராசி யென்ப. கின்னர மிதுனம் - ஆணும் பெண்ணுமாகிய இசையறியும் கின்னரப் பறவைகள் என்னலுமாம் ;

"பாடுகின்றன கின்னர மிதுனங்கள் பாராய்"

என்பது இராமாயணம். கிளை யென்றது கணவரை. பாண் - பாணர். பாணராற்றுப்படையைப் பாணாற்றுப்படை யெனலுங் காண்க. விறலியர் - பாணர், கூத்தர், பொருநர் என்போரின் பெண்பாலார்; விறல் பட ஆடுதலின் விறலியர் எனப்பட்டார் ; விறல் - சத்துவம்; மெய்ப்பாடு. இன்னிசை - மிடற்றுப் பாடல். ஈந்தன: பெயர். 'கிளை கெழு பாணொடு' என்பதற்கு 'வீணையின் நரம்பி லெழுந்த இசையோடு' என்று பொருள் கூறுதல் சிறவாமை யுணர்க. (௩௭)

ம்ன்னவர் மகளிரு மறையவர்
மகளிரும் வந்துபொன் மாலையைத்
துன்னினர் சோபனம் வினவுவார்
கோதைதன் மணவணி நோக்குவார்
கன்னித னேவலர் வீசிய
காசறை கர்ப்புர வாசமேன்
பொன்னறுங் கலவையின் மெய்யெலாம்
புதைபட வளனொடும் போவரால்.

(இ - ள்) மன்னவர் மகளிரும் - அரசர் மகளிரும், மறையவர் மகளிரும் - பார்ப்பன மாதரும், பொன் மாலையை வந்து துன்னினர் - காஞ்சன மாலையை வந்து பொருந்தி, சோபனம் வினவுவார் - திருமண விழாவை உசாவுவார்கள்: தோகை தன் மண அணி நோக்குவார் - பிராட்டியாரின் திருமணக் கோலத்தைக் கண்டுகளிப்பார்கள்; கன்னி தன் ஏவலர் வீசிய - அப் பிராட்டியாரின் ஏவலர்கள் வீசிய, காசறை - மயிர்ச்சாந்து, கர்ப்புர வாசம் மென் பொன் நறுங் கலவையின் - பச்சைக் கர்ப்புரமணங்கலந்தமெல்லிய பொன்னிறமுள்ள நறியகலவை ஆகிய இவைகளால், மெய் எலாம் புதைபட - உடல்முழுதும் மறைய, வளனொடும் போவர் - மகிழ்ச்சியோடும் தங்கள் மனைகட்குச் செல்வார்கள் எ - று.

சோபனம் - சுபம் ; மங்கலம். வீசிய - சொரிந்த; வழங்கிய, காசறை - மயிர்ச்சாந்து ; இன்னுருபை இதனொடுங் கூட்டுக. வளன்; ஈண்டு மகிழ்ச்சி. துன்னினர் : முற்றெச்சம். ஆல்: அசை. (௩௮)

அங்கன கஞ்சேய் தசும்பின வாடை போதிந்தன தோடவிழ்
தொங்கல் வளைந்தன மங்கையர் துள்ளிய கவரியி னுள்ளன
கங்கையும் வாணியும் யமுனையுங்காவிரி யும்பல துறைதோறு
மங்கல தூரிய மார்ப்பன மதமலை மேலன வருவன.

(இ - ள்.) கங்கையும்-கங்கை நீரும், வாணியும் - வாணி நீரும், யமுனையும் - யமுனைநீரும், காவிரியும் - காவிரி நீரும், பலதுறை தொறும் - பல துறைகளிலுமிருந்து, அம் கனகம்செய் தசும்பின - அழகிய பொன்னாற் செய்த குடத்தில் நிறைக்கப்பெற்றனவாய், ஆடை பொதிந்தன - துகிலாற் போர்க்கப் பெற்றனவாய், தோடு அவிழ் தொங்கல் வளைந்தன - இதழ்கள் விரிந்த மாலைகளால் வளைந் தணியப்பட்டனவாய், மங்கையர் துள்ளிய கவரியின் உள்ளன - மகளிர் வீசும் சாமரையினுள் அடங்கியனவாய், மதமலை மேலன - மதத்தையுடைய மலைபோன்ற யானையின் மத்தகத்திலுள்ளனவாய், மங்கலதூரியம் ஆர்ப்பன வருவன - மங்கல இயங்கள் ஒலிக்கப்பெற்றனவாய் வாரா நிற்பன எ - று.

தசும்பின முதலியன முற்றெச்சங்கள். துள்ளுமாறு வீசிய என்பதனைத் துள்ளிய என்றார் வாணி-சரச்சுவதி. யமுனை - காளிந்தி. துறை-தீர்த்தக் கட்டம். துறைதொறுமிருந்து என விரிக்க. (௪௯)

அங்கவர் மனைதோறு மணவினை யணுகிய துழனிய ரெனமறைப்
புங்கவ ரினிதுண வறுசுவைப் போனக மடுவினை புரிகுவார்
இங்கடு வனபலி யடிகளுக் கெனயதி களையெதிர் பணிகுவார்
சங்கர னடியரை யெதிர்கொள்வார் சபரியை விதிமுறை புரிகுவார்.

(இ - ள்.) அங்கவர் - அந்நகரத்தவர், மனைதொறும் மணவினை அணுகிய துழனியர் என - (தத்தம்) வீடுகள் தோறும் மணச்செயல்கள் வந்த ஆரவாரத்தை யுடையார் போன்று, மறைப்புங்கவர் இனிது உண - வேத உணர்ச்சியையுடைய தூய மறையவர்கள் இனிதாக அருந்துமாறு, அறுசுவைப் போனகம் அடுவினை புரிகுவார்-அறுவகைச் சுவையினையுடைய உண்டிகளைச் சமைப்பார்கள்; அடிகளுக்கு பலி இங்கு அடுவன என-தேவரிருக்குத் திரு அமுதுகள் இங்கே சமைக்கப்படுவன என்று, யதிகளை எதிர் பணிகுவார் - துறவிகளை எதிர் சென்று வணங்குவார்கள்; சங்கரன் அடியரை எதிர் கொள்வார் - சிவனடியார்களை எதிர்கொண்டு, சபரியை விதிமுறை புரிகுவார் - பூசனையை விதிப்படி செய்வார்கள் எ - று.

அணுகினமையாலான துழனியரென வென்க. அடுவினை புரிகுவார், அடுதலாகிய வினையைப் புரிகுவார் என விரியும். பலி-பிச்சை; துறந்தோர்க்கிடுவது. யதி-துறவி. சபரியை - பூசை. (௫0)

இன்னண நகர்சேய லணிசெய
　　வினையிலி மணமகன் மணவினைக்
கன்னியு மனையவ ளென்னினிக்
　　கடிநகர் செயுமெழில் வளனையாம்
என்னவ ரியநகர் சேயலெழி
　　லினையென வுரைசெய்வ தேவனிதன்
முன்னிறை மகடமர் மணவணி
　　மண்டப வினைசெயு முறைசொல்வாம்.

(இ - ள்.) இன்னணம் நகர் செயல் அணி செய-இவ்வாறு அப்பதியைச் செயற்கை யழகு செய்யாநிற்க. மணமகன் இணை - இலி -

மணவாளனே ஒப்பற்றவன், மணவினைக் கன்னியும் அனையவள் என்னின்-மணச்செயலுக்குரிய பெண்ணும் அத்தன்மையள் என்றால், இ கடி நகர் செய்யும் எழில் வளனை - இக்காவலையுடைய பதியிற் செய்யப்பட்டிருக்கும் அழகின் மேன்மைக்கு, என்ன அரிய நகர் செயல் எழில்-எப்படிப்பட்ட அரிய நகரின் ஒப்பனை யழகினையும், யாம் இணை என உரை செய்வது எவன் - யாம் ஒப்பு என்று கூறுவது எவ்வாறு; இதன் முன்-இனி, இறை மகள் தமர்-பிராட்டியாரின் சுற்றத்தார், மண அணி மண்டபம் - அழகிய திருமண மண்டபத்தை வினைசெயும் முறை சொல்வாம் - அலங்காரம் செய்யும் தன்மையைக் கூறுவாம் எ - று.

இக்கடிநகர் செயும் எழில் வளனை, சுட்டு. வளனை: வேற்றுமை மயக்கம். அணிசெய் அதனை உரை செய்வது எவன் என வியையும். நகர் என்பதற்கு நகரத்திலுள்ளார் என்று கூறலுமாம். என்னின் என்பது உரைசெய்வது கூடாதென்பதற்கு ஏதுவாய் நின்றது. என்ன - எத்தன்மையுடைய. செயலெழிலையும் என உம்மை விரிக்க. செயலெழில் - ஒப்பித்த அழகு. முன் என்பது வருவதனையுங் குறிக்கும். இதற்கு முன்னரே தொடங்கி யென உரைத்தலுமாம். (சுக)

[ஷை வேறு]

கருவி வான்முகி லூர்தியைப்
பொருதநாட் கலைமதி மருமாட்டி
செருவில் வாங்கிய விமானமா
லைகளெனத் தெய்வத வரையெல்லாம்
மருவி யங்நகர் வைகிய
தம்மிறை மடமக டனைக்காண்பான்
துருவி நின்றென நட்டன
ரேட்டிவான் றேடுநிலை நெடுந்தேர்கள்.

(இ - ள்.) கலைமதி மருமாட்டி - கலைகளையுடைய சந்திரனது மரபிற் றோன்றிய பிராட்டியார், கருவிவான் முகில் ஊர்தியை - தொகுதியாக வானின்கண் உள்ள முகிலை ஊர்தியாகவுடைய இந்திரனை, செருவில் பொருத நாள்-போரில் வென்ற காலத்து, வாங்கிய விமான மாலைகள் என - (திறையாக) வாங்கிய விமான வரிசைகள் நின்றாற் போலவும், தெய்வதவரை எல்லாம் மருவி-தெய்வத்தன்மை பொருந்திய மலைகளெல்லாம் வந்து, அ நகர் வைகிய - அத் திருப்பதியில் எழுந்தருளிய, தம் இறை மடமகள் தனைக் காண்பான்-தம் இறைவனுகிய மலையரையனின் புதல்வியாரைக் காண, துருவி நின்றென- தேடி (வரிசைப்பட) நின்றாற் போலவும், எட்டி வான்தொடு நெடுநிலைத்தேர்கள் நட்டனர்-எட்டி வானுலகை அளாவும் நெடிய நிலைத் தேர்களை வரிசையாக நிறுத்தினர் எ - று.

பொருத - பொருதுவென்ற. மருமாட்டி - வழித்தோன்றியவள். மருமானுக்குப் பெண்பால். காண்பான்: வினையெச்சம். நின்றென- நின்றாலென: விகாரம். எட்டி - தாவி: தற்குறிப்பேற்றவணி. (சுஉ)

பளிக்கி னேழுயர் களிறுசெய்
    தமைத்தபோற் படியது பசுஞ்சோதி
தேளிக்கு நீலத்தி ஞளிக
    ணிரைமணித் தெற்றிய துற்ரோர்சாய்
வேளிக்கு ளாடிய வோவியப்
    பாவைபோன் மிளிர்பளிங் காற்சோதி
தளிர்க்கும் பித்திய திடையிடை
    மரகதச் சாளரத் ததுமாதோ.

(இ - ள்.) ஏழு உயர் களிறு - ஏழு முழம் உயர்ந்த யானைகளை, பளிக்கின் செய்து அமைத்த - பளிங்கினுற் செய்து இருபாலும் அமைத்த, பொன் படியது - பொன்னுலாகிய படிகளையுடையதும், பசும்சோதி தெளிக்கும் - பசிய ஒளியை வீசும், நீலத்தின் ஆளிகள் நிரை - நீல மணியாற் செய்த ஆளிகளின் வரிசையை யுடைய, மணித் தெற்றியது - மணிகளழுத்திய திண்ணைகளை யுடையதும், உற்ரோர் சாய் - நெருங்கினவர்களின் சாயல், வெளிக்குள் ஆடிய ஓவியம் பாவை போல் மிளிர் - வெளிப்புறத்தில் ஆடுகின்ற ஓவியப்பிரதிமைகள் போல விளங்கப்பெற்ற, பளிங்கால் சோதி தளிர்க்கும் பித்தியது - பளிங்கினுலாகிய ஒளி வீசும் சுவர்த்தலங்களை யுடையதும், இடை இடை மரகதச் சாளரத்தது - இடை யிடையே மரகதத்தாலாகிய சாளரங்களையுடையதும் எ - று.

ஏழு - ஏழு முழத்திற்காயிற்று: ஏழ் என மெய்யீருகத் தொல் காப்பியனுரும், ஏழு என உயிரீருக நன்னூலாரும் கொண்டனர். ஏழு முழ உயரமும் ஒன்பது முழ நீளமும் உடைத்தாதல் அரசயானையின் இலக்கணம். சாய் - சாயல். வெளிக்குள்: உள் ஏழனுருபு. பளிங்கின் தெளிவும் உற்ரோரின் எழிலும் புலப்பட 'வெளிக் குளாடிய ஓவியப் பாவைபோல்' என உவமங் கூறினுர். மாது ஓ: அசைகள். (௬௩)

பல்லுருச் செய்த பவளக்கா லாயிரம் படைத்ததிந் திரநீலக்
கல்லு ருத்தலைப் போதிய தாடகக் கவின்கோளுத் தரமேல
தல்லு ருக்கிய செம்மணித் துலாத்ததா லமுதுடற் பசுந்திங்கள்
வில்லு ருக்குகன் மாடம தாகிய வேள்விமண் டபஞ்செய்தார்.

(இ - ள்.) பல் உருச் செய்த பவளக்கால் ஆயிரம் படைத்தது - பலவடிவங்களாகச் செய்த ஆயிரம் பவளத் தூண்களை உடையதும், தலை - அவற்றின்மேல், இந்திர நீலக்கல் உருப் போதியது - இந்திர நீலமணிகளால் வடிவு பொருந்தச் செய்த போதிகைகளை உடையதும், ஆடகம் கவின் கொள் உத்தரம் மேலது - பொன்னுற் செய்த அழகிய உத்தரங்களையுடையதும், அல் உருக்கிய - இருளை ஓட்டிய, செம்மணி துலாத்தது - மாணிக்க மணிகளாற்செய்த துலாங்களையுடையதும், அமுது உடல் பசுந்திங்கள் - அமுத வுடம்பினையுடைய குளிர்ந்த மதியினது, வில் உருக்கு கல் மாடமது - கிரணங்களினுல் உருக்கப்படுகின்ற சந்திர காந்தக் கல்லாற் செய்த மேனிலையை உடையதும், ஆகிய வேள்வி மண்டபம் செய்தார் - ஆகிய திருமண மண்டபத்தைச் செய்தமைத்தார்கள் எ - று.

உரு-செதுக்கியமைத்த வடிவுகள். போதி - தூணின்மேலுள்ள உறுப்பு; போதிகை யெனவும் படும். துலாம் - போதிகையின் இரு பக்கத்தின் கீழே வாழைப் பூ வடிவமாகச் செய்யப்படும் உறுப்பென் பர்; 'துகிர்துலா மண்டபத் தகிற்புகை கமழ' என்னும் பெருங்கதை யடியின் குறிப்புரை பார்க்க; இது 'துலா' எனவும் வழங்கும்; சிலப் பதிகார அடைக்கலக் காதையில் 'ஐயவித் துலாம்' என்பதற்கு எழு திய விசேடவுரையும் நோக்கற் பாலது. உருக்கிய-கெடுத்த என்னும் பொருளது. வில் - ஒளி, கிரணம். இரு செய்யுளிலுமுள்ள குறிப்பு முற்றுக்கள் 'ஆகிய' என்பதனோ டியைந்து எச்சமாம். (௬௪)

முத்திற் பாளைசெய் தவிர்மர
கதத்தினுன் மொய்த்தபா சிலைதுப்பின்
கோத்திற் றீம்பழம் வெண்பொனுற்
கோழரை குயின்றபூ கமுந்துப்பின்
றொத்திற் றூங்குபூச் செம்பொனுற்
பழுக்குலை தூக்கிப்பொன் ஞற்றண்டு
வைத்துப் பாசொளி மரகத
நெட்டிலை வாழையு நிரைவித்தார்.

(இ - ள்.) முத்தில் பாளை - முத்தினுற் பாளையும், அவிர் மரக தத்தினுல் மொய்த்த பசு இலை-விளங்காநின்ற மரகதத்தினுல் நெருங் கிய பசிய இலையும், துப்பின் கொத்தில் தீம்பழம் - பவளக்கொத்தி னுல் இனிய பழங்களும், வெண்பொனுல் கோழ் அரை - வெள்ளியி னுல் வழுவழுப்பான அரையும், செய்து குயின்ற பூகமும் - செய் தமைத்த கமுகுகளையும், துப்பின் தொத்தில் தூங்கும்பூ - பவளக் கொத்தினுல் தொங்கும் பூவோடு, செம்பொனுற் பழுக்குலை தூக்கி - சிவந்த பொன்னுற் பழுத்தலுடைய குலையையும் தொங்கவிட்டு, பொன்னுல் தண்டு வைத்து - பொன்னுல் தண்டு செய்து, பசு ஒளி மரகத நெடு இலை - பசிய ஒளியையுடைய மரகதத்தினுல் நெடிய இலையை (அமைத்த), வாழையுர் நிரைவித்தார் - கதலிகளையும் (அத் திருமண மண்டபத்தில்) வரிசைப்படக் கட்டினுர்கள் எ - று.

பாளை முதலியவற்றின் நிறங்களுக் கேற்ப முத்து முதலியவற் றுல் இயற்றினுர். பாசிலை, கோழரை, பாசொளி என்பன பசுமை கொழுமை யென்பவற்றின் மை விகுதிகெட்டு ஆதிநீண்டு முடிந்தன. நெட்டிலை: நெடு என்பதன் ஒற்றிரட்டிற்று. இலை அமைத்த என வொரு சொல் வருவிக்க. (௬௫)

பித்தி மாதவி சண்பகம்
பாதிரி பிறவுமண் டபஞ்சூழப்
பத்தி யாவளர்த் தளிகள்வாய்
திறந்துபண் பாடவின் மதுக்காலத்
தத்தி யாய்மணங் கவர்ந்துசா
ளரந்தோறுந் தவழ்ந்தோமு கிளந்தென்றல்
தித்தி யாநிற்கு மதுத்துளி
தெளித்திடச் செய்தன ருய்யானம்.

(இ - ள்.) பித்தி மாதவி சண்பகம்பாதிரி பிறவும்-சிறுசண்பகம் குருக்கத்தி சண்பகம் பாதிரி என்பனவும் பிறவும், மண்டபம் சூழ - அம்மண்டபத்தைச் சூழ, பத்தியா வளர்த்து - வரிசையாக வளர்த்து; அளிகள் வாய்திறந்து பண்பாட-வண்டுகள் வாயினைத் திறந்து இசை பாடவும், இன்மதுக் கால - (மலர்கள்) இனிய மதுவைச் சிந்தவும், தத்தி ஆய் மணம் கவர்ந்து - (அவற்றுட்) சென்று மென்மையாகிய மணங்களைக் கொள்ளைகொண்டு, சாளரம் தொறும் தவழ்ந்து ஒழுகு- சாளரங்கள்தோறும் தவழ்ந்து செல்லுகின்ற, இளந் தென்றல்-இளந் தென்றற் காற்று, தித்தியா நிற்கு மதுத்துளி தெளித்திட-இனிக்கும் தேன் துளியைத் தெளிக்கவும், உய்யானம் செய்தனர் - பூங்காவினைச் செய்தமைத்தார்கள் எ - று.

பித்தி-பித்திகை; பிச்சி; இதனைச் சிறு சண்பக மென்பர். பாதிரியும் பிறவும் என்க. பத்தியாக, ஆய்-நுண்மை; சிறப்புமாம். உய்யானம் - உத்தியானம்;

"உய்யா னத்திடை யுயர்ந்தோர் செல்லார்"

என்பது மணிமேகலை. (௬௬)

வேள்விச் சாலையும் வேதியுங்
குண்டமு மேகலை யோடுதொன்னூற்
கேள்விச் சார்பினுற் கண்டுகண்
ணடிவிடை கிளர்சுடர் சீவற்சம்
நீள்விற் சாமரம் வலம்புரி
சுவத்திக நிறைகுட மேனவெட்டு
வாள்விட் டோங்குமங் கலந்தொழில்
செய்பொறி வகையினு னிருமித்தார்.

(இ - ள்.) வேள்விச்சாலையும் வேதியும் குண்டமும் மேகலையொடு-வேள்விச் சாலைகளையும் வேதிகைகளையும் ஓமகுண்டங்களையும் (அவ்வவற்றின்) வரம்புகளோடு, தொல்நூல் கேள்விச் சார்பினுல் - பழைய நூலாகிய வேதத்தின் சார்பினுல், கண்டு - செய்து, கண்ணடி விடைகிளர்சுடர் சீவற்சம் நீள் வில் சாமரம் வலம்புரி சுவத்திகம் நிறைகுடம் என - கண்ணுடியும் இடபமும் விளாங்கா நின்ற விளக்கும் சீவற்சமும் மிக்க ஒளியையுடைய சாமரமும் வலம்புரிச் சங்கும் சுவத்திகமும் நிறை குடமும் என்று சொல்லப் பட்ட, வாள்விட்டு ஓங்கும் எட்டு மங்கலம்-ஒளி வீசிச் சிறந்த எட்டு மங்கலங்களையும், தொழில் செய் பொறிவகையினுல் நிருமித்தார் - தொழில் செய்கின்ற இயந்திரவகையினுல் அமைத்தார்கள் எ - று.

வேதி - மேடை. மேகலை - வரம்பு. கேள்வி யென்பது வேதத்திற்கு ஒரு பெயர்; கேள்வி என்பதற்கு ஆகமமென்றும் சார்பு என்பதற்குச் சார்புநூலென்றும் கூறினுமாம்; முன் திருநகரங்கண்ட படலத்தில்.

"தென்ன ரன்பினி லகப்படு சித்தர்தா முன்னர்ச்
சொன்ன வாதிநூல் வழிவரு சார்புநூற் றொடர்பால்"

எனக் கூறியிருத்தலுங் காண்க. நீள்வில் - மிக்க ஒளி. சிவற்சம்-திருமகள் வடிவாகிய பாவை. சுவத்திகம்-மண்டப வடிவாகியது, இங்கே கூறிய மங்கலம் எட்டனுள் விடை, சிவற்சம், வலம்புரி, சுவத்திகம் என்பவற்றை விலக்கி, தோட்டி, முரசு, கொடி, இணைக்கயல் என்பன கூட்டி எட்டெனக் கொள்ளுதலும் உண்டு; மங்கலம் பதினாறெனவு முண்டாகையால் இவையெல்லாம் மங்கலமே யாமென்க; பெருங்கதையில்,

"அயின்முனை வாளும் வயிரத் தோட்டியும்
கொற்றக் குடையும் பொற்பூங் குடமும்
வலம்புரி வட்டமு மிலங்கொளிச் சங்கும்
வெண்க ணாடியுஞ் செஞ்சுடர் விளக்கும்
கவரியுங் கயலுந் தவிசுந் திருவும்
முரசும் படாகையு மரசிய லாழியும்
ஒண்வினைப் பொலிந்த வோமா லிகையுமென்
றெண்ணிரண் டாகிய பண்ணமை வனப்பிற்
கடிமாண் மங்கலங் கதிர்வளை மகளிர்
முடிமிசை யேந்தி முன்னர் நடப்ப"

எனப் பதினாறு மங்கலம் கூறப்பட்டிருத்தல் காண்க. (கூஎ)

மணங்கொள் சாந்தோடு குங்குமப்
போதளாய் மான்மதம் பனிநீர்தோய்த்
திணங்கு சேறுசெய் திருநிலந்
தடவிவா னிரவிமண் டலநாணப்
பணங்கொ ணாகமா மணிவிளக்
கிருகையும் பாவைக ளேடுத்தேந்தக்
கணங்கொ டாரகை யெனநவ
மணிகுயில் கம்பலம் விதானித்தார்.

(இ - ள்.) மணம் கொள் சாந்தொடு-மணங்கொண்ட சந்தனத்தோடு, குங்குமப்போது மான் மதம் அளாய் - குங்குமப்பூவையும் மிருக மதத்தையுங் கலந்து, பனிநீர் தோய்த்து இணங்கு சேறு செய்து - பனி நீரிற் கரைத்து ஒன்றுபட்ட குழம்பு ஆக்கி, இருநிலம் தடவி - அதனால் பெரிய நிலத்தை மெழுகி, வான் இரவி மண்டலம் நாண-வானின்கண் உள்ள சூரிய மண்டலமும் நாணுமாறு, பணம் கொள் நாகம் மாமணி விளக்கு - படத்தைக்கொண்ட பாம்புகளின் பெரிய மணிகளாகிய விளக்குகளை, இரு கையும் பாவைகள் எடுத்து ஏந்த - இரண்டு கைகளிலும் பாவைகள் எடுத்து ஏந்தா நிற்க, கணம் கொள் தாரகை என - கூட்டங் கொண்ட உடுக்களைப்போல, நவமணி குயில் கம்பலம் விதானித்தார் - ஒன்பது வகை மணிகளும் இடை யிடை கோவையாக அமைத்த கம்பலங்களை மேலே விரித்துக் கட்டினார்கள் எ - று.

இருகையும் - இரண்டு கரங்களிலும், இரண்டு புறங்களிலும். குயிற்றிய எனற்பாலது குயில் எனத் தன்வினைப் பகுதியாய் நின்றது. குயிற்றுதல் - நண்டுக் கோவையாக அமைத்தல். விதானித்தார்; விதானம் என்னும் பெயரடியாக வந்தது. (கூஅ)

செம்போற் கோயின்முன் சேண்டோடு
　　காவணந் திசையெலாம் விழுங்கச்சேய்
தம்போற் பாலிகைப் பாண்டில்வாய்
　　முளைதேளித் தம்புயத் தவனுதி
உம்பர்க் கேற்றபோற் கம்பல
　　மேல்விரித் தின்ளுறத் தவிசிட்டுத்
தும்பைத் தாழ்சடை யான்றமர்க்
　　காதனஞ் சூழவிட் டதனுப்பண்.

(இ-ள்.) செம்பொன் கோயில் முன்-செம் பொன்னாலாகிய திருமண மண்டபத்தின் முன், சேண் தொடு காவணம் திசை எலாம் விழுங்கச் செய்து-வானை அளாவிய பந்தரைத் திக்குகளை யெல்லாம் கவருமாறு போடுவித்து, அம் பொன் பாலிகைப் பாண்டில் வாய்-அழகிய பொன்னாலாகிய பாலிகை வட்டில்களில், முளை தெளித்து-முளைகளை வித்தி, அம்புயத்தவன் ஆதி-பிரமன் முதலிய, உம்பர்க்கு ஏற்ற-தேவர்களுக்குத் தகுதியான, பொன் கம்பலம் மேல் விரித்து-பொற்கம்பலத்தை மேலே விரித்து, உள் உறத் தவிசு இட்டு-அதனுள்ளே பொருந்த ஆதனமிட்டு, தும்பை தாழ்சடையான் தமர்க்கு-தும்பைமாலையை அணிந்த நீண்ட சடையையுடைய சிவபெருமான் தமராகிய அடியார்களுக்கு, சூழ ஆதனம் இட்டு-சுற்றிலும் தவிசு அமைத்து, அதன் நாப்பண்-அதன் நடுவில் எ-று.

விழுங்கல்-அகப்படுத்தல். பாண்டில்-வட்டம்; வட்டமாகிய கலத்திற்கு ஆயிற்று. ஏற்ற கம்பலம், ஏற்ற தவிசு எனக்கூட்டுக. மேல்விரித்தல்-மேற்கட்டியாக அமைத்தல். அதன் எனச் சாதியொருமையாற் கூறினர். (௬௧)

கற்ப கந்தரு வயிரவா
　　ளரிப்பிடர் கதுவப்போற் குறடேற்றி
எற்ப டுந்துகி ராற்குடஞ்
　　சதுரமா வியற்றிய வேருத்தத்தூண்
விற்ப டும்பளிக் குத்தரந்
　　துப்பினுல் விடங்கமே னிலமுன்றுப்
போற்ப நூல்வழி விமானம்பன்
　　மணிகளாற் போலியச்சேய் துள்ளாக.

(இ-ள்.) கற்பகம் தரு வயிரவாள் அரிப்பிடர் கதுவ-கற்பகத் தரு அளித்த வயிரத்தாற்செய்த ஒளி பொருந்திய சிங்கத்தின் பிடரியிற் பொருந்த, பொன்குறடு ஏற்றி-பொற் குறடு எழுப்பி, எற்படும் துகிரால்-ஒளிபொருந்திய பவளத்தாலாகிய, குடம்-குடத்தோடு, சதுரமா இயற்றிய எருத்தத் தூண்-சதுரமாகச் செய்த கழுத்தையுடைய தூண்களை (நிறுத்தி), வில்படும் பளிக்கு உத்தரம்-ஒளி பொருந்திய பளிங்கினால் உத்தரங்களையும், துப்பினுல் விடங்கம்-பவளத்தினுற் கொடுங்

கைகளையும் (பரப்பி), மேல்நிலம் மூன்றுகப் பொற்ப-(இங்ஙனம்) மேல் நிலம் மூன்ருக அழகு செய்ய, நால்வழி பல் மணிகளால் விமானம் பொலியச்செய்து-சிற்ப நான்முறைப்படி பல மணிகளால் விமானத்தை விளங்கச்செய்து, உள்ளாக-அதன் உள்ளிடத்தே எ-று.

வாள் கொடுமையெனக் கொண்டு, வாளரி-சிங்கம் எனலுமாம். துகிரால் ஆகிய, தூண் நிறுத்தி, உத்தரம் விடங்கம் பரப்பி என ஏற்ற பெற்றி வினைகள் விரிக்கப்பட்டன. விடங்கம்-கொடுங்கை. நிலம் மூன்று-மூன்றடுக்கு. சதுரமா, மூன்ரு என்பன விகாரம், (எ0)

அங்க மாறுமே கால்களாய்
முதலெழுத் தம்பொற்பீ டிகையாகித்
துங்க நான்மறை நூல்களே
நித்திலந் தொடுத்தசை தாம்பாகி
எங்க ணுயக னெம்பெரு
மாட்டியோ டிருப்பதற் குருக்கொண்டு
தங்கி ணுலென நவமணி
குயின்றபொற் றவிசது சமைத்திட்டார்.

(இ-ள்.) எங்கள் நாயகன்-எங்கள் இறைவனுகிய சோமசுந்தரக் கடவுள், எம் பெருமாட்டியோடு இருப்பதற்கு-எம் இறைவியாகிய தடாதகைப்பிராட்டியோடு வீற்றிருப்பதற்கு, அங்கம் ஆறுமே கால்களாய்-ஆறு அங்கங்களுமே கால்களாகவும், முதல் எழுத்து அம்பொன் பீடிகையாகி-பிரணவம் அழகிய பொற்பீடமாகவும், துங்கம் நால் மறை நூல்களே-உயர்ந்த நான்கு வேதங்களாகிய நூல்களே, நித்திலம் தொடுத்து அசை தாம்பாகி-முத்தினுல் தொடுத்து அசைகின்ற தாம்புகளாகவும், உருக்கொண்டு-வடிவங்கொண்டு, தங்கினுலென-தங்கினுற்போல, நவமணி குயின்ற பொன் தவிசு சமைத்திட்டார்-நவரத்தினங்கள் இழைத்த பொற்றவிசு ஒன்றைச் செய்து அமைத்தார்கள் எ-று.

முதலெழுத்து-எல்லா வேதங்களுக்கும் மந்திரங்களுக்கும் முதலாகிய பிரணவ எழுத்து. ஆக என்பன ஆய் எனவும் ஆகி எனவும் திரிந்து நின்றன, குயின்ற-இழைக்கப்பட்ட: பிறவினைப்பொருள் பயப்பதுமாம். தவிசது: அது பகுதிப்பொருள் விகுதி. (எக)

புரந்த ரன்றரு கற்பகம் போலந்துகில் பூண்முத லியநல்கச்
சுரந்த ரும்பெற லமுதமை வகையறு சுவையுணு முதலாகப்
பரந்த தெய்வவான் பயப்பச்சிந் தாமணி பற்பல வுஞ்சிந்தித்
திரந்து வேண்டுவ தரத்தர வீட்டினு ரிந்திர னகர்நாண.

(இ-ள்.) புரந்தரன் தரு கற்பகம்-இந்திரன் திறையாகத் தந்த கற்பகத்தரு, பொலம் துகில் பூண்முதலிய நல்க-பொன்னுடை அணி முதலியவற்றை நல்கவும், தெய்வ ஆன்-காமதேனு, பெறல் அரும் அமுதம்-பெறுதற்கரிய அமுதமும், அறுசுவை ஐவகை உணுமுதலாக-அறுசுவையோடு கூடிய ஐந்து வகை உணவும் முதலாக, பரந்த சுரந்து பயப்ப-மிக்க பல்வகை யுணவுகளையும் சுரந்து கொடுக்கவும், சிந்தித்து

இரந்து வேண்டுவ-நினைத்து இரந்து கேட்பனவாய, பற்பலவும்-பல பல பொருள்களையும், சிந்தாமணி தரத்தர-சிந்தாமணி தந்துகொண்டிருக்கவும், இந்திரன் நகர் நாண ஈட்டினார்-இந்திரனுலகமும் நாணுமாறு (அவற்றை வாங்கித்) தொகுத்தார்கள் எ - று.

பொலம் - பொன்;

"பொன்னென் கிளவி ஈறுகெட முறையின்
முன்னர்த் தோன்றும் லகார மகாரஞ்
செய்யுண் மருங்கிற் றொடரிய லான"

என்பது தொல்காப்பியம். பொலந்துகில் - பீதாம்பரம். தெய்வ வான்பரந்த சுரந்து பயப்ப வென்க. ஐவகை யுணவு-உண்பன, தின்பன, நக்குவன, பருகுவனவோடு உறிஞ்சுவன என்பர்; ஐவகை அமுதம் என இயைத்தலுமாம். பரந்த: வினையாலணையும் பெயர். சிந்தாமணி-சிந்தித்தவற்றைத் தருமணி எனக் காரணக்குறி. இரந்து என்றது பொதுவகையாற் கூறியது. (எ௨)

தென்னர் சேகரன் றிருமக
டிருமணத் திருமுகம் வரவேற்று
மன்னர் வந்தெதிர் தொழுதுகைக்
கொண்டுதம் மணிமுடி மிசையேற்றி
அன்ன வாசகங் கேட்டனர்
கொணர்ந்தவர்க் கருங்கலந் துகினல்கி
முன்ன ரீர்த்தெழு களிப்புற
மனத்தினு முந்தினர் வழிச்செல்வார்.

(இ - ள்.) தென்னர் சேகரன் திருமகள்-பாண்டியர்களின் முடி போல்புவனாகிய மலயத்துவச பாண்டியன் திருப்புதல்வியாரின், திருமணத் திருமுகம் - திருமணங் குறித்த ஓலையை, வரவேற்று - வர வேற்பாராய், மன்னர் எதிர் வந்து-மன்னர்கள் எதிர்கொண்டு வந்து, தொழுது - வணங்கி, கைக்கொண்டு-கையில் வாங்கி, தம் மணிமுடி மிசை ஏற்றி-தம்முடைய மணிகள் அழுத்திய முடியின்மேல் ஏற்றி, அன்ன வாசகம் கேட்டனர் - அத்திருமுகச் செய்தியைக் கேட்டு, கொணர்ந்தவர்க்கு - கொண்டு வந்தவர்களுக்கு, அருங்கலம் துகில் நல்கி-அரிய அணிகளும் ஆடைகளும் அளித்து, முன்னர் ஈர்த்து எழு களிப்பு உற-முன் இழுத்துச் செல்லும் களிப்பு மிக, மனத்தினும் முந்தினர் வழிச் செல்வார்-மனத்திலும் விரைந்து வழிக்கொண்டு செல்வார்கள் எ - று.

வரவேற்றல்-வருகையை உவகையுடன் தழுவுதல்; ஏற்று - ஏற்பாராய்; ஏற்கத்தொடங்கி யென்பது கருத்து. வரவினை மன்னர் வந்து எதிர் ஏற்று எனப் பிரித்தியைப்பாரு முளர். கேட்டல் - திருமுகம் வாசிப்பார் வாசிக்கக் கேட்டல். திருமுக வாசகத்தைத் தூதர்கள் வாயாற் சொல்லக் கேட்டலுமாம். கேட்டனர், முந்தினர்:முற்றெச்சங்கள். (எ௩)

கொங்கர் சிங்களர் பல்லவர் வில்லவர் கோசலர் பாஞ்சாலர்
வங்கர் சோனகர் சீனர்கள் சாளுவர் மாளவர் காம்போசர்
அங்கர் மாகத ராரியர் நேரிய ரவந்தியர் வைதர்ப்பர்
கங்கர் கொங்கணர் விராடர்கள் மராடர்கள் கருநடர் குருநாடர்.

(இ - ள்.) *கொங்கர் - கொங்கு நாட்டரசரும், சிங்களர்-சிங்கள நாட்டரசரும், பல்லவர்-பல்லவநாட்டரசரும், வில்லவர் - சேரவரசரும், கோசலர்-கோசல நாட்டரசரும், பாஞ்சாலர்-பாஞ்சால நாட்டரசரும், வங்கர்-வங்க நாட்டரசரும், சோனகர்-சோனக நாட்டரசரும், சீனர்கள்-சீன நாட்டரசரும், சாளுவர் - சாளுவ நாட்டரசரும், மாளவர் - மாளவ நாட்டரசரும், காம்போசர் - காம்போச நாட்டரசரும், அங்கர்-அங்க நாட்டரசரும், மகதர் - மகத நாட்டரசரும், ஆரியர் - ஆரிய நாட்டரசரும், நேரியர் - சோழ வரசரும், அவந்தியர் - அவந்தி நாட்டரசரும், வைதர்ப்பர்-விதர்ப்ப நாட்டரசரும், கங்கர் - கங்க நாட்டரசரும், கொங்கணர்-கொங்கண நாட்டரசரும், விராடர்கள் - விராட நாட்டரசரும், மராடர்கள் - மராட நாட்டரசரும், கருநடர்-கருநட நாட்டரசரும், குருநாடர்-குரு நாட்டரசரும் எ - று.*

*இவருள் கொங்கர், பல்லவர், வில்லவர், நேரியர் என்போர் தமிழ் மண்டலத்தினர்; சிங்களர், கங்கர், கொங்கணர், கருநடர் என் போர் தமிழ் மண்டலத்தின் சார்பிலுள்ளவர். வில்லவர்-விற்கொடியையுடைய சேரர். நேரியர் - நேரி மலையையுடைய சோழர். மாகதர், வைதர்ப்பர் தத்திதாந்தங்கள்: முதல் திரிந்தன.* (எச)

கலிங்கர் சாவகர் கூவிள
　　ரோட்டியர் கடாரர்கள் காந்தாரர்
குலிங்கர் கேகயர் விதேகர்கள்
　　பௌரவர் கோல்லர்கள் கல்யாணர்
தேலுங்கர் கூர்ச்சரர்* மச்சர்கள்
　　மிலேச்சர்கள் செஞ்சையர் முதலேனைப்
புலங்கோண் மன்னருந் துறைதோறு
　　மிடைந்துபார் புதைபட வருகின்றார்.

(இ - ள்.) *கலிங்கர்-கலிங்க நாட்டரசரும், சாவகர்-சாவக நாட்டரசரும், கூவிளர் - கூவிள நாட்டரசரும், ஓட்டியர் - ஓட்டிய நாட்டரசரும், கடாரர்கள் - கடார நாட்டரசரும், காந்தாரர் - காந்தார நாட்டரசரும், குலிங்கர்-குலிங்க நாட்டரசரும், கேகயர்-கேகய நாட்டரசரும், விதேகர்கள்-விதேக நாட்டரசரும், பௌரவர் - பூருமரபினரசரும்,கொல்லர்கள்-கொல்ல நாட்டரசரும், கல்யாணர்-கலியாண நாட்டரசரும், தெலுங்கர்-தெலுங்க நாட்டரசரும்,கூர்ச்சரர்-கூர்ச்சர நாட்டசசரும், மச்சர்கள்-மச்ச நாட்டரசரும், மிலேச்சர்கள்-மிலேச்ச நாட்டரசரும், செஞ்சையர் - செஞ்சை நாட்டரசரும், முதல் - முதலாக, ஏனைப் புலங் கோள் மன்னரும்-பிற நாட்டரசர்களும், துறை-தோறும் - வழிகள் தோறும், மிடைந்து - நெருங்கி, பார் புதைபட வருகின்றார் - பூமி மறையும்படி வருகின்றார்கள் எ - று.*

---

(பா - ம்.) * குர்ச்சரர்.

கலிங்கம்-வடக்கே கீழ்கடலோரத்திலுள்ளது. சாவகம்-தெற்கிலுள்ள தீவு; ஜாவா. கடாரம்-கிழக்கிலுள்ளது; பர்மாவின் ஒருபகுதி. பௌரவர்-பூருமரபினர்: தத்திதாந்தம். கல்யாணர்-சளுக்கியர். (எ௫)

இத்த கைப்பல தேயமன்
 னவர்களு மெண்ணிடம் பெருதீண்டிப்
பைத்த வாழிபோ னில்மகள்
 முதுகிறப் பரந்ததா னையராகித்
தத்த நாட்டுள பலவகை
 வளனுெடுந் தழீஇப்பல நெறிதோறும்
மொய்த்து வந்தனர் செழியர்கோன்
 திருமகள் முரசதிர் மணமூதூர்.

(இ-ள்.) இத்தகைப் பல தேய மன்னவர்களும்-இத்தன்மையையுடைய பல நாட்டு மன்னர்களும், எண் இடம் பெருது ஈண்டி-எள்ளிடவும் இடமில்லையாக நெருங்கி, பைத்த ஆழிபோல்-பசிய கடலைப் போல, நிலமகள் முதுகு இற-பார்மகளின் முதுகு ஒடியுமாறு, பரந்த தானையராகி-(எங்கும்) பரந்த சேனையையுடையவராகி, தத்தம் நாட்டு உள - தங்கள் தங்கள் நாட்டிலுள்ள, பலவகை வளனொடும் தழீஇ - பலவகை வளங்களையும் எடுத்துக்கொண்டு, பலநெறி தோறும் - பல வழிகள் தோறும், மொய்த்து - நெருங்கி, செழியர் கோன் திருமகள்-பாண்டியர் மன்னனாகிய மலயத்துவசன் திருமகளாரது, மணம் முரசு அதிர் மூதூர் - மணமுரசு முழங்காநின்ற பழமையாகிய மதுரை நகர்க்கு, வந்தனர் - வந்தார்கள் எ - று..

எண்-எள்; எள் இடுதற்கும். இடம் பெருது - இடமில்லையாக. ஆழிபோற் பரந்த தானை யென்க. வளனொடும் - வளத்தையும்; உருபு மயக்கம்; வளனொடும் பொருந்தி யெனின் மயக்கமின்று. (எசு)

வந்த காவல ருழையர்சென்
 றுணர்த்தினர் வருகென வருகுய்ப்பச்
சந்த வாளரிப் பிடரணை
 மீதறந் தழைத்தருள் பழுத்தோங்கும்
கந்த நாண்மலர்க் கொம்பினைக்
 கண்டுகண் களிப்புற முடித்தாமஞ்
சிந்த வீழ்ந்தருள் சுரந்திடத்
 தொழுதுபோய்த் திருந்துதம் மிடம்புக்கார்.

(இ - ள்.) வந்த காவலர் - வந்த அரசர்கள்; உழையர் சென்று உணர்த்தினர்-தம் வருகையை வாயில் காப்போர் சென்று பிராட்டியாருக்கு அறிவித்தவர்களாய், வருக என-வரக்கடவ ரெனப்பணித்த வளவில், அருகு உய்ப்ப-தம்மை அண்மையிற் செலுத்த, சந்தவாள் அரிப்பிடர் அணைமீது - அழகிய சிங்கத்தின் பிடரியின்கண் உள்ள ஆதனத்தின்மேல், அறம் தழைத்து அருள்பழுத்து ஓங்கும் - தருமந்

தழைத்துக் கருணை கனிந்து ஓங்கும், கந்தம் நாள் மலர்க்கொம்பினை மணம் பொருந்திய அன்றலர்ந்த மலர்களையுடைய கொம்புபோன்ற பிராட்டியாரை, கண் களிப்பு உற கண்டு - (தம்) கண்கள் மகிழ்ச்சி மிகக் கண்டு, முடித்தாமம் சிந்த வீழ்ந்து தொழுது - முடியின் கண் உள்ள மாலைகள் கீழே சிதற விழுந்து வணங்கி, அருள் சுரந்திடப் போய்-பிராட்டியார் திருவருள் பாலிக்கச் சென்று, தம் திருந்து இடம் புக்கார் - தத்தமக் கமைந்த திருந்திய இடங்களை யடைந்தார்கள் எ - று.

உழையர் உய்ப்பக் காவலர் கண்டு வீழ்ந்து தொழுதுபோய்ப் புக்கார் என முடிக்க. வருகென - வருகவென்று பிராட்டியார் கட்டளையிட: அகரந் தொகுத்தல். அறமாகிய தழையெனவும், அருளாகிய பழம் எனவும் விரிக்க: உருவகம். (எள)

வரைவ ளங்களும் புறவினில்
வளங்களு மருதத்தண் பணைவேலித்
தரைவ ளங்களும் சலதிவாய்
நடைக்கலந் தருவளங் களுமீண்டி
உரைவ ரம்பற மங்கலம்
பொலிந்ததிவ் வூரினி நால்வேதக்
கடைக டந்தவன் திருமணஞ்
செயவரு காட்சியைப் பகர்கின்றேன்.

(இ - ள்.) வரை வளங்களும் - மலைபடு பொருள்களும், புறவினில் வளங்களும் - கான்படு பொருள்களும், மருதத் தண்பணை வேலி தரை வளங்களும் - குளிர்ந்த கழனிகளை வேலியாக வுடைய மருதநிலத்துப் பொருள்களும், சலதிவாய் நடைக்கலம் தரு வளங்களும் - கடலின்கண் மரக்கலந்தந்த பொருள்களும், ஈண்டி - நிறையப்பெற்று, இவ்வூர் - இம்மதுரை நகரானது, உரை வரம்பு அற - சொல்லின் எல்லையில் அடங்காது, மங்கலம் பொலிந்தது - மங்கலமாக விளங்கியது; இனி - மேல், நால் வேதக்கரை கடந்தவன் - நான்கு மறைகளின் வரம்பைக் கடந்தவனாகிய சிவபெருமான், திரு மணம் செய வரு காட்சியைப் பகர்கின்றேன் - திருமணம் செய்ய வருகின்ற அழகினைக் கூறுகின்றேன் எ - று.

மருதமாகிய தரை யென்க. நடைக்கலம் - செல்லுதலையுடைய கலம். ஈண்டி: செயப்பாட்டு வினைப்பொருளது. உரை வரம்பு அற - சொல்லினெல்லை யில்லையாக. (எஅ)

ஏக நாயகி மீண்டபின் ஞாட்பிகந் திரசித கிரியெய்தி
நாக நாயக மணியணி சுந்தர நாயக னுயிர்க்கெல்லாம்
போக நாயக னாகிப்போ கம்புரி புணர்ப்பறிந் தருணந்தி
மாக நாயகன் மாலய னுருத்திரர் வரவின்மேன் மனம்வைத்தான்.

(இ-ள்.) ஏகநாயகி - ஒப்பற்ற தலைவியாகிய தடாதகைப்பிராட்டியார், மீண்டபின் - (மதுரைக்குச்) சென்றபின், நாகம் நாயகம் அணி

அணி - பாம்புகளுக்குத் தலைமைபூண்ட அனந்தனாகிய அணியைத் தரித்த, சுந்தர நாயகன் - சோமசுந்தரக் கடவுள், ஞாட்பு இகந்து இரசிதகிரி எய்தி-போர்க்களத்தினீங்கி வெள்ளியங்கிரியை அடைந்து. போக நாயகனாகி உயிர்க்கு எல்லாம் போகம்புரி புணர்ப்பு - போக நாயகனாகி உயிர்களுக்கெல்லாம் போகத்தை அருளவிரும்புகின்ற திருக்குறிப்பை, அருள் நந்தி அறிந்து - கருணையையுடைய நந்தியெம் பெருமான் உணர்ந்து, மாக நாயகன் மால் அயன் உருத்திரர் வரவின் மேல் மனம் வைத்தான்-வானுலகிற்கிறையாகிய இந்திரன் திருமால் பிரமன் உருத்திரர்கள் ஆகிய இவர்களின் வருகையைக் கருதி எ-று.

போக நாயகன்-போகத்தை யளிக்கு நாயகன்; இறைவன் உமையோடு கூடியே உயிர்களுக்குப் போக மளித்தலை,

"பெண்பா லுகந்திலனேற் பேதா யிருநிலத்தோர்
விண்பா லியோகெய்தி வீடுவர்காண் சாழலோ"

என்னும் திருவாசகத்தானும்.

"கண்ணுத லியோகி ருப்பக் காமனின் றிடவேட் கைக்கு
விண்ணுறு தேவ ராதி மெலிந்தமை யோரார் மாறன்
எண்ணிவேண் மதனை யேவ வெரிவிழித் திமவான் பெற்ற
பெண்ணினைப் புணர்ந்து யிர்க்குப் பேரின்ப மளித்த தோரார்"

என்னும் சிவஞான சித்தியாரானும் அறிக. புணர்ப்பு-சூழ்ச்சி, குறிப்பு.

சங்கு கன்னனை யாதிய கணாதிபர் தமைவிடுத் தனனன்னார்
செங்க ணேற்றவர் மாலயன் முதற்பெருந் தேவர்வான் பதமெய்தி
எங்க ணாயகன் திருமணச் சோபன மியம்பினா ரதுகேட்டுப்
பொங்கு கின்றபே ரன்புபின் தள்ளுறப் பொள்ளென வருகின்றார்.

(இ-ள்.) சங்கு கன்னனை ஆதிய கணாதிபர் தமை விடுத்தனன்- சங்கு கன்னனை முதலாகவுடைய கணத்தலைவர்களை விடுத்தான்; அன்னார் - அவர்கள், செங்கண் ஏற்றவர் - சிவந்த கண்களையுடைய உருத்திரரும், மால் அயன் முதல் - திருமாலும் பிரமனும் முதலாகிய, பெருந்தேவர் வான் பதம் எய்தி - பெரிய தேவர்களின் உயர்ந்த உலகங்களை அடைந்து, எங்கள் நாயகன் திருமணச் சோபனம் இயம்பினார் - எங்கள் தலைவனாகிய சிவபெருமானது திருமணத் திருவிழாவைக் கூறினார்கள், அது கேட்டு - அச்செய்தியைக் கேட்டு, பொங்குகின்ற-மேலெழுகின்ற, பேர் அன்பு பின் தள்ளுற-பெரிய அன்பானது பின்னின்று தள்ள, பொள்ளென வருகின்றார் - விரைந்து வருகின்றார்கள் எ - று.

கன்னனை யென்பதில் ஐகாரம் சாரியையுமாம். ஏற்றவர்-பொருந்தியவர்; இடபத்தினையுடையரென்னலுமாம். பொள்ளென; விரைவுக் குறிப்பு. (அ0)

அஞ்சு கோடியோ சனைபுகைந் திருமடங் கழன்றவர் தமைப்போலீ
ரஞ்சு தீயுருத் திரர்புடை யுடுத்தவ ரழற்கணாற் பூதங்கள்
அஞ்சு நூறுருத் திரரண்டத் துச்சிய ரரியயன் முதற்றேவர்
அஞ்சு மாணையு மாற்றலும் படைத்தவ ரடுகுறட் படைவீரர்.

(இ - ள்.) அஞ்சு கோடி யோசனை புகைந்து - அஞ்சு கோடி யோசனை அளவு புகைந்து, இருமடங்கு அழன்றவர் - பத்துக் கோடி யோசனைஅளவுதிக்கொழுந்து விட்டெரியும் காலாக்கினியுருத்திரரும், தமைப்போல் ஈரஞ்சு தி உருத்திரர் - அவரைப்போல (அவரைச் சுற்றிலு முள்ள) பத்துக் காலாக்கினியுருத்திரரும், புடை உடுத்தவர் (அவருள் ஒவ்வொருவரையும்) புடை சூழ்ந்து சேவித்து நிற்கும் ஒவ்வொரு கோடி யுருத்திரர்களும், அழல்கண் நால் பூதங்கள் - நெருப்புப் போலுங் கண்களையுடையநால்வகைப்பூதங்களும் அண்டத்துஉச்சியர் அஞ்சு நூறு உருத்திரர் - அண்டத்து உச்சியிலுள்ளவராகிய (எவரும்) அஞ்சத் தக்க நூறு உருத்திரர்களும், அரி அயன் முதல் தேவர் அஞ்சும் - திருமால் பிரமன் முதலிய தேவர்களும் அஞ்சுதற் கேதுவாகிய, ஆணையும் ஆற்றலும் படைத்தவர் - ஆணையையும் வலியையும் படைத்தவராகிய, அடுகுறள் படைவீரர் - (பகைவரைக்) கொல்லும் பூதப் படைவீரர்களும் எ - று.

அவர் தமைப்போல் என்க. நாற்பூதங்கள் - வருணப் பூதங்கள். யாவரும் அஞ்சத்தக்க நூறு உருத்திரர் கீழண்ட கடாகத்தில் காலாக்கினி யுருத்திரர் கோடியோசனை யளவுள்ள பொன்மயமான மண்டபத்தில், ஆயிர யோசனை யுயரமும் இரண்டாயிர யோசனை அகலமும் உள்ள சிங்காதனத்தில், தமது திருமேனியின் அழற்கொழுந்துபத்துக் கோடி யோசனையும் புகை ஐந்துகோடி யோசனையும் உடையராய் வீற்றிருப்பர் என்றும், இவரைச் சூழ்ந்து இவரைப்போல் பதின்மர் உருத்திரர் இருப்பர் என்றும் இவருள் ஒவ்வொருவரையும் ஒவ்வொரு கோடி உருத்திரர்கள் பரிவாரமாகச் சூழ்ந்து சேவித்திருப்பார்கள் என்றும் கூறுப; இவற்றைச் சிவதருமோத்தரம் கோபுரவியலில்.

"அண்டகடா கக்கனமுன் டொருகோடி யதனடியுட்
கண்டிடுக காலாங்கி யுருத்திரர்க்குக் கனகமனை
யுண்டதற்குள் ளதங்கோடி யோசனையீ ரைங்கோடி
மண்டியமெய்த் தழற்கொழுந்தைங் கோடியுறும் வளர்புகையும்"

"யோசனையா யிரமணையு ளரியணையி னுயரந்தான்
யோசனையி ராயிரமென் றதன்விரிவை யுணர்ந்திடுக
தேசுடைய காலாங்கி யுருத்திரர்தந் திருமேனி
யோசனையு முண்டமுலா லயுதமென வுன்னுகவே"

"தரித்துடையர் வலக்கரத்திற் றயங்கொளிவாள் சரத்தினையும்
பரித்துடைய ரிடக்கரத்திற் பலகையினைத் தனுவினையு
முருத்திரர்க ளொருபதின்ம ருறைவரவ ருழையவர்போ
லுருத்திரர்க ளொவ்வொருவர்க் கொருகோடி பரிச்சிதமே"

எனவருஞ் செய்யுள்களா னுணர்க. அண்டத் துச்சியிலுள்ள நூறு உருத்திரராவார் பொன்மயமான அண்டகடாகப் புறம்பே இந்திர திக்கு முதலிய பத்துத் திக்குகளுள் இந்திர திக்கில் - கபாலீசன், அதன், புத்தன், வச்சிரதேவன், பிரமத்தனன், விபூதி, அவ்வியன், சாத்தா, பினாகி, திரிசோதியன், எனப்பதின்மர்; அக்கினி திக்கில் - உருத்திரன், உதாசனன், பிங்கலன், காதகன், அயன், சுவலன், தகனன், வெப்புரு, பிரமாந்தகன், சயாந்தகன் எனப் பதின்மர்; இயம திக்கில்

யாமியன், மிருத்தியு, அரன், தாதா விதாதா, கத்திரு, காலன், தன்மன், சங்கியோத்தா, வியோக்கிருதன் எனப் பதின்மர்; நிருதி திக்கில் நிருதி, மாரணன் அரந்தா, குரூரதிருட்டி, பயாந்தகன், ஊர்த்துவகாயன், விருபாட்சன், தூமிரு, லோகிதன், தெங்கிட்டிருணன் எனப் பதின்மர்; வருண திக்கில் - பெலன், அதிபெலன், பாச அத்தன், மகாபெலன், சுவேதா, செயபத்திரன், தீர்க்கவாகு, செலாந்தகன், வடவாமுகன்; திமான் எனப் பதின்மர்; வாயு திக்கில் - சீக்கிரன், லகு, வாயுவேகன், திட்சணன், சூக்குமன், சியாந்தகன், பஞ்சாந்தகன், பஞ்சசிகன், கபத்தி, மேகவாகனன் எனப்பதின்மர்; குபேர திக்கில் - நிதீசன், ரூபவான், தன்னியன், சௌமியன், சௌமியதேகன், பிரமத்தனன், சுப்பிரகடன், பிரகாசன், இலக்குமிவரன், சோமேசன் எனப்பதின்மர்; ஈசான திக்கில் - வியாத்தியாதிபன், ஞானபுகன், சருவன், வேதபாரகன், மாத்துருவிருத்தன், பிங்கலாட்சன், பூதபாலன், பெலிப்பிரியன், சருவவித்தியாதிபன், தாதா எனப் பதின்மர்; அண்டகடாக வோட்டுக்குக்கீழே விட்டுணுதிக்கில் - அனந்தன், பாலன், வீரன், பாதாளாதிபதி, விபு, இடபத்துவசன், உக்கிரன், சுப்பிரன், உலோகிதன் சருவன் எனப் பதின்மர்; அண்டகடாகத்தின்மேலே பிரம திக்கில் - சம்பு, விபு, கெணுத்தியட்சன் திரியட்சன், திரிதேசகவாதகன், சன்வாகன், விவாகன், நபன், லீபசு, விலட்சணன் எனப் பதின்மர்; ஆகிய இவர்களாம். (அக)

புத்தி யட்டகர் நாலிரு கோடிமேற் புகப்பெய்த நரகங்கள்
பத்தி ரட்டியுங் காப்பவர் பாரிடப் படையுடைக் கூர்மாண்டர்
சத்தி யச்சிவ பரஞ்சுட ருதவிய சதவுருத் திரரன்னார்
உய்த்த ளித்தவீ ரைம்பது கோடிய ருருத்திர கணநாதர்.

(இ - ள்.) புத்தி அட்டகர் - அட்ட வித்தியேச்சுரர்களும், நாலிரு கோடி மேல் புகப் பெய்த பத்திரட்டி நரகங்களும் காப்பவர் - இருபத்தெட்டுக்கோடி நரகங்களையும் காப்பவர்களாகிய, பாரிடப்படை உடைக் கூர்மாண்டர் - பூதப்படையினையுடைய கூர்மாண்டரும், சத்தியம் - உண்மை வடிவமான, சிவபரஞ் சுடர் உதவிய - சிவபரஞ்சோதி அருளிய, சத உருத்திரர் - நூறு உருத்திரர்களும், அன்னார் உய்த்து அளித்த ஈரைம்பது கோடியர் உருத்திரர் - அவர்கள் தந்தருளிய நூறு கோடியராகிய உருத்திரர்களும், கணநாதர் - கணத்தலைவர்களும் எ - று.

நாலிரண்டு மேற் பெய்தபத்திரட்டியாகிய கோடி யென்க. காப்பவராகிய பாரிடப் படையென்க.

புத்தியட்டகராவார் - சூக்கும புவனமெட்டின் அதிபதிகளாம்; அவர்கள் - அனந்தர், சூக்குமர், சிவோத்தமர், ஏகநேத்திரர், ஏகருத்திரர், திரிமூர்த்தி, சீகண்டர், சிகண்டி என்போர். சூக்கும புவனமாவன - பைசாசம், இராட்சசம், யாட்சம், காந்தர்வம், மாகேந்திரம், சௌமியம், பிராசேச்சுவம், பிராமம் என்பன ஆம். நாலிருகோடிமேற் புகப்பெய்த நரகங்களென்றவை - காலாக்கினி உருத்திரதேவ நாயனார் புவனத்திற்குமேலுள்ளன; அவை அதிபாதகமுதலிய பாவங்களைச் செய்தோர் வகித்தற்கு இருபத்தெட்டுத் தளங்களாகக் கட்டின நிலை மாடங்கள் போல ஒன்றின்மேலொன்று யிருக்கும்; இதனைச் சிவதருமோத்தரம் கோபுரவியலில்.

"இனையபுரி மிசைநிரய மெழுநான்கு கோடியுறும்
நினையினவை யெழுநான்கு நிலமடமே யெனநிலவுந்
துனியுறுவ ரவைதன்னிற் றுரிசரவற் றினுக்களவு
முனிலிருநா ருயிரமு முப்பஃது கோடியுமே''

எனவருஞ் செய்யுளாலுமறிக. அவற்றைக் காப்போர்-பிரளய காலாக்கினியும், பிரளயகாலத்துச் சூரியனும்போன்ற திருவுருவமும் கறுத்த முகமும் மழுவேந்திய கையுமுடைய கூர்மாண்ட தேவநாயனாரைப் புடைசூழ்ந்து அவரைத் துதித்து அவரைப்போலும் உருவாய்ந்த அனேக உருத்திரர்கள்; கூர்மாண்ட தேவநாயனார் அந் நிரயங்களின் மேற்பாகமாகிய கனக பூமியில் அந்நரகங்களுக்கும் அவற்றைக் காப்போருக்கும் அதிபராயுள்ளவர்; இவற்றை ஷ. இயலில்.

''மேலைய கனகபுரி வீற்றிருப்பர் கூர்மாண்டர்
காலவழ லிரலியுருக் காளமுக மழுவுங்கை
கோலமுறு வட்டவிழி கொண்டுடைய ரவர்தம்மைப்
போலுமுருத் திரர்பலரும் புடையடைவர் போற்றிசைத்தே"

எனவருஞ் செய்யுளானுமுணர்க சதவுருத்திரராவார்-மந்திரம், பதம், வன்னம், புவனம், தத்துவம், கலை ஆகிய ஆறத்துவாக்களில் முறையாய் அமர்ந்துள்ளவர். ஈரைம்பது கோடி யுருத்திரர்கள் பிரமாண்டதர உருத்திரர்களுக்கு உள்ளிட்டவர்கள். (அஉ)

பட்ட காரிவா யரவணி பவர்பசு பதியுருத் திரராதி
அட்ட மூர்த்திகள் மேருவி னவிர்சுட ராடகர் தோடேந்தும்
மட்ட ருமலா மகன்செருக் கடங்கிட மயங்கிய விதிதேற்ற
நிட்டை யாலவ னெற்றியிற் றேன்றிய நீலலோ கிதநாதர்.

(இ-ள்.) காரிபட்டவாய் அரவு அணி-நஞ்சு பொருந்தியவாயினை யுடைய பாம்புகளை அணிந்த, பவர் பசுபதி உருத்திரர் ஆதி அட்ட மூர்த்திகள் - பவர் பசுபதி உருத்திரர் முதலான எட்டு மூர்த்திகளும், மேருவின் அவிர் சுடர் ஆடகர்-மேருவைப்போல் விளங்கும் ஒளியினை யுடைய ஆடகேச்சுரர்களும், தோடு ஏந்தும் - இதழ்களை ஏந்திய, மட்டு அரு - தேன் நீங்காத, மலர்மகன் செருக்கு அடங்கிட-தாமரை மலரில் வசிக்கும் பிரமனின் தருக்கு அடங்க, மயங்கிய விதி தேற்ற - அவன் மயங்கிய ஆக்கற்றொழிலைத் தெளிவிக்க, நிட்டையால் அவன் நெற்றியில் தோன்றிய நீல லோகித நாதர் - நிட்டையினால் அவனது நெற்றியிலுதித்த நீல லோகித உருத்திரரும் எ - று.

காரி - நஞ்சு. தோடேந்தும், மட்டரு என்னும் அடைகள் மலருக்குரியன. விதி - விதித்தல்; படைத்தல்.

பவர் முதலிய அட்ட மூர்த்திகளாவார்:- பவன், சருவன். ஈசானன், பசுபதி, வீமன், மாதேவன், உக்கிரன், உருத்திரன் என்போர்: இதனைக் கூர்மபுராணம் அட்ட மூர்த்தி யியல்புரைத்த அத்தியாயத்தில்.

''எய்து நாமமென் னெனிற்பவன் சருவ னீசானன்
வைதி கந்தரு பசுபதி விமன் மாதேவ
னெய்தி ளம்பிறை யணிந்திடு முருத்திர னென்ப
மைதி கழ்ந்தோளிர் கண்டனென் வடிவமும் வகுப்பாம்''

எனவருஞ் செய்யுளாலறிக. ஆடகேசுரர் பாதாளத்துக்கு மேலுள்ள புவனத்தில் ஆயிரம் யோசனை உயரமுள்ள பொன்மயமான திருக்கோயிலுள் அசுரரும், நாகரும், அரக்கரும் சேவிக்க வீற்றிருப்பர். இதனைச் சிவதருமோத்தரம் கோபுரவியலில்.

"அதன்மேலே நவலக்க மாடகநா யகர்புரிதான்
புதுமைதிகழ் மணிபொன்னுல் யோசனையா யிரம்புகலிற்
கதமுடைய தயித்தியர்கள் கட்டரவர் வெட்டரக்கர்
விதிமுறையிற் பதம்பணிய வீற்றிருப்பா ராடகரே"

எனவருஞ் செய்யுளாலறிக. முன்னொரு கற்பத்தில் பிரமனானவன் மூன்று உலகங்களையுஞ் சிருட்டித்துத் தானே பரமென்றகங்காரங் கொண்டு சிவபெருமானை மறந்து சராசரங்களைச் சிருட்டிக்க; அவை பெருகாமையால் வருந்தி நிற்கும்போது திருமால்வந்து எம் முதல் வணங்கிய சிவபெருமானை மறந்தமையால் அவை பெருக லொழிந்தன ஆதலின், இனியேனும் அவனது திருவருளைப் பெறத் தவம்புரிக என்றனன்; அவ்வாறு தவம்புரிந்தும் சிவபெருமான் வெளிப்படாமையால் வருந்தி அழும்போது கண்ணீர்த் துளிகள் பசாசுகளாய் நெருங்க, அதனைக் கண்டு இறந்தவன்போல மூர்ச்சிக்க, அச்சிவபெருமான் கனவில் வந்தருளி உன்னைப் பரமென்று மதித்தமையால் சிருட்டித் தொழில் உனக்குக் கைகூடாமற் போயிற்று; அது கைகூடும் வண்ணம் நமது பதத்திலுள்ள உருத்திரகணத்தை அனுப்புவோம் என்றருளி மறைந்தனன்; அக்கன வுணர்ந்தெழுந்த பிரமன் நல்லொழுக்கம் பூண்டு மனந்தெளிந்து சிவபெருமானை நிட்டை கூடிச் சிந்திக்க, அப்பெருமான் றிருவருளால் பதினொரு உருத்திரர்கள் அவனெற்றியினின்றும் வெளிப்பட்டு வந்து நின்றனர்; அவர்களைப் பிரமன் பார்த்து என் னெற்றியினின்று நீங்கள் வந்த காரணம் யாதென்று வினவ உன் சிருட்டித் தொழிலை முடித்தற்பொருட்டுச் சிவபெருமான் எங்களை யேவினன் என்றனர்; இதனைக் கந்த புராணத்து உருத்திரர் கேள்விப் படலத்தாலுணர்க. நீலலோகித நாதராவார் அப்பதினொருவருள் ஒருவர். அவர்களின் பெயர்களை வருஞ் செய்யுளுரையிற்காண்க. (அ௩)

பால மேற்றசெந் தழல்விழி
 யுருத்திரர் பதினொரு பெயர்வாகைச்
சூல மேற்றகங் காளக
 பாலியர் துரகத நெடுங்காரி
நீல மேற்றபைங் கஞ்சுகப்
 போர்வையி னெடியவர் நிருவாணக்
கோல மேற்றவ ரெண்மர்ஞா
 ளிப்புறங் கோண்டகேத் திரபாலர்.

(இ - ள்.) பாலம் ஏற்ற செந்தழல் விழி உருத்திரர் பதினொரு பெயர்-நெற்றியிற் பொருந்திய சிவந்த அழற் கண்ணையுடைய பதினொரு உருத்திரர்களும், வாகைச் சூலம் ஏற்ற கங்காள கபாலியர்-வெற்றியையுடைய சூலத்தை யேந்திய முழுவெலும்பைத்

தரித்தவரும் கபாலத்தைக் கையிலேந்தியவருமான சிவகணத் தலைவர்களும், துரகத நெடுங்காரி-குதிரையையுடைய பெரிய சாத்தனும், நீலம் ஏற்ற பைங்கஞ்சுகப் போர்வையின் நெடியவர்-கரிய நிறம் பொருந்திய பசிய சட்டையைத் தரித்த சிவகணத் தலைவர்களும், நிருவாணக் கோலம் ஏற்றவர்-ஆடையில்லாக் கோலமுடைய ராய், ஞாளிப்புறம் கொண்ட கேத்திர பாலர் எண்மர்-ஞாளியின் முதுகிற் றங்குதலைக் கொண்ட கேத்திர பாலர் எண்மரும் எ-று.

பாலம்-நெற்றி. பெயர் என்பது வழக்கு. ஏற்ற வென்பது கபாலியர் என்பதன் விகுதியைக் கொண்டு முடியும். கங்காளர்-முழு வெலும் பணிந்தவர். ஏற்றவராகிய கேத்திர பாலர் எண்மரெனக, ஞாளி-நாய். கேத்திரம்-க்ஷேத்திரம். உருத்திரர் பதினொருவர்: மாதேவன், அரன், உருத்திரன், சங்கரன், நீலலோகிதன், ஈசானன் விசையன், வீமதேவன், பவோற்பவன், கபாலி, சௌமியன் என்போர். கேத்திர பாலர் எண்மர்: அசிதாங்கா, ருரு, சண்டர், குரோதனர், உன்மத்தர், கபாலி, பீடணர், சங்கரர் என்போர். (அச)

செய்ய தாமரைக் கண்ணுடைக்
 கரியவன் செம்மலர் மணிப்பீடத்
தையன் வாசவ னாதியெண்
 டிசைப்புலத் தமரரெண் வசுதேவர்
மையில் கேள்விசா லேழேழு
 மருத்துகள் மருத்துவ ரிருவோர்வான்
வெய்ய வாள்வழங் காறிரண்
 டருக்கரோர் வெண்சுடர் மதிச்செல்வன்.

(இ-ள்.) செய்யதாமரைக் கண் உடை கரியவன்-செந்தாமரை மலர்போன்ற கண்களையுடைய திருமாலும், செம்மலர் மணிப்பீடத்து ஐயன்-செந்தாமரைமலரை அழகிய பீடமாகக் கொண்ட பிரமனும், வாசவன் ஆதி எண் திசைப் புலத்து அமரர்-இந்திரன் முதலான எட்டுத் திக்குப்பாலர்களும், எண்வசுதேவர்-எட்டு வசுக்களும், மை இல் கேள்வி சால் ஏழேழு மருத்துகள்-குற்றமற்ற நூற் கேள்விமிக்க நாற்பத்தொன்பது மருத்துக்களும், மருத்துவர் இருவோர்-அச்சுவனி தேவரிருவரும், வான் வெய்ய வாள் வழங்கு ஆறிரண்டு அருக்கர்-வானினின்றும் வெப்பமாகிய ஒளியை வீசும் பன்னிரண்டு சூரியர்களும், வெண்சுடர் ஓர் மதிச் செல்வன்-வெள்ளிய ஒளியினையுடைய ஒரு சந்திரனும் எ-று.

திசைப்பாலகர் பெயர்கள் முற் கூறப்பட்டன. அட்ட வசுக்கள்: அனலன், அனிலன், ஆபத்சைவன், சோமன், தரன், துருவன், பிரத்தியூடன், பிரபாசன் என்போர். மருத்துகள்-காசிபர்க்குத் திதியிடம் உதித்தவர்கள்; இந்திரனால் கருஏழு கூறுக்கப்பட ஒவ்வொரு கூற்றிலிருந்தும் எவ்வேழு மைந்தர்களாக நாற்பத்தொன்பதின்மர் தோன்றினர்; இவர்கள் காற்றினுருவாய் இயங்குவர். மருத்துவர் இருவர்-சூரியன் புதல்வர். ஆறிரண்டருக்கர்-காசிபருக்கு அதிதியிடம் பிறந்தவர்கள்; தாதை, மித்திரன், அரியமான், சுக்கிரன், வருணன், அஞ்சு

மான், பகன், விவச்சுவந்தன், பூடன், சவிதன், துவட்டா, விட்டுணு என்போர். (அ௰)

கையுங் கால்களுங் கண்பெற்றுக்
கதிபெற்ற கடும்புலி முனிச்செல்வன்
பைய ராமுடிப் பதஞ்சலி
பாற்கடல் பருகிமா தவன்சென்னி
செய்ய தாள்வைத்த சிறுமுனி
குறுமுனி சிவமுணர் சனகாதி
மெய்யு ணர்ச்சியோர் வாமதே
வன்சுகன் வியாதனா ரதன்மன்னோ.

(இ-ள்.) கையும் கால்களும் கண்பெற்று-கைகளிலும் கால்களிலும் கண்களைப் பெற்று, கதிபெற்ற கடும்புலி முனிச் செல்வன்-வீடு பேற்றையடைந்த கடிய தவமாகிய செல்வத்தினையுடைய புலிக்கால் முனியும், பைமுடி அரா பதஞ்சலி-படத்தைக் கொண்ட முடியினையுடைய பாம்பாகிய பதஞ்சலி முனியும், பால்கடல் பருகி-பாற்கடலைக் குடித்து, மாதவன் சென்னி-திருமாலின் முடியில், செய்ய தாள் வைத்த-சிவந்த அடிகளை வைத்த, சிறுமுனி-உபமன்னியு முனியும், குறுமுனி-அகத்திய முனியும், சிவம் உணர் சனக ஆதி மெய் உணர்ச்சியோர்-சிவத்தை உணர்ந்த சனகர் முதலிய மெய்யுணர்வையுடைய நான்கு முனிவர்களும், வாமதேவன் சுகன் வியாதன் நாரதன்-வாமதேவ முனியும் சுகமுனியும் வியாத முனியும் நாரத முனியும் எ-று.

கடுமை தவத்தின்மேற்று; புலியென்பது குறித்துமாம். மன்னும் ஓவும் அசைகள்.

புலிமுனி-வியாக்கிர பாதர்; இவர் மத்தியந்தன முனிவரின் புதல்வர்; மழமுனிவர் என்னும் பெயருடையவர்; இவர் தில்லைத் திருப்பதியை யடைந்து சிவபெருமானை வணங்கி, அருச்சித்தற்குப் பழுதில்லாத மலர்களை விடியுமுன் மரங்களிலேறிக் கொய்தற் பொருட்டாகப் புலிக்காலும் கையும் அவற்றிற் கண்களும் பெற்றார். பதஞ்சலி-அத்திரி முனியின் பத்தினியாகிய அனசூயையிடம் தோன்றியவர்; ஆதிசேடன் அவதாரம்; சேடன் சிவசிந்தனையுடன் அஞ்சலிசெய்திருக்கும் அனசூயையின் கையில் விழுந்து பின் பாதத்தில் விழுந்து அக்காரணத்தால் பதஞ்சலியெனப் பெயரெய்தினனென்ப. இவ்விருவரும் தவம்புரிந்து சிதம்பரத்தில் சிவபெருமான் புரியும் ஆனந்தத்தாண்டவத்தைத் தரிசித்துக் கொண்டிருப்போராவர். உபமன்னியு-வியாக்கிர பாதருக்கு வசிட்டரின் தங்கையிடம் உதித்தவர்; குழந்தையாயிருக்கும் பொழுது சிவபெருமானைக் குறித்துத் தவம் புரிந்து இறைவனால் அளிக்கப்பட்ட பாற்கடலை யுண்டவர்; கண்ணனுக்குச் சிவதீக்கை செய்வித்தவர்; இவர் பாற்கடலுண்ட செய்தி,

"பாலுக்குப் பாலகன் வேண்டி யழுதிடப் பாற்கடலீந்த பிரான்" எனத் திருப்பல்லாண்டிலும்,

'' அத்தர் தந்த வருட்பாற் கடலுண்டு ''

எனத் திருத்தொண்டர் புராணத்திலும், கண்ணனுக்குச் சிவதீக்கை செய்வித்தது,

"யாத வன்றுவ ரைக்கிறை யாகிய
மாத வன்முடி மேலடி வைத்தவன்"

எனத் திருத்தொண்டர் புராணத்திலும் கூறப்பட்டுள்ளன. இவ் வரலாறுகளைக் கோயிற் புராணத்திலும் பிறவற்றிலுங் காண்க. ஏனையரைப்பற்றிய குறிப்புக்கள் புராண வரலாற்றிற் கூறப்பட்டன. (௮௬)

எழுவ ரன்னையர் சித்தர்விச் சாதர
ரியக்கர் கின்னரர் வேத
முழுவ ரம்புணர் முனிவர்யோ
கியர்மணி முடித்தலைப் பலநாகர்
வழுவில் வான்றவ வலியுடை
நிருதர்வாள் வலியுடை யசுரேசர்
குழுவோ டும்பயில் பூதவே
தாளர்வெங் கூளிக ளரமாதர்.

(இ - ள்) எழுவர் அன்னையர்-ஏழு மாதரும், சித்தர்-சித்தரும், விச்சாதரர்-வித்தியாதரரும், இயக்கர்-இயக்கரும், கின்னரர்-கின்னரரும், வேதவரம்பு முழு உணர் முனிவர் யோகியர்-மறையின் எல்லை முடிய உணர்ந்த முனிவர்களும் யோகிகளும், மணி முடித்தலை பல நாகர்-மணி விளங்கும் உச்சியையுடைய தலையினையுடைய பல உரகர்களும், வழு இல் வான் தவ வலி உடை நிருதர்-குற்றமில்லாத சிறந்த வலிமையையுடைய அரக்கர்களும், வாள் வலி உடை அசுரேசர்-வாளின் வலியுடைய அசுரர் தலைவர்களும், குழுவோடும் பயில் பூத வேதாளர்-கூட்டத்தோடு உலாவும் பூத வேதாளர்களும், வெம் கூளிகள்-கொடிய கூளிகளும், அரமாதர்-தேவமாதரும் எ - று.

எழுவராகிய அன்னையர் என்க: சத்தமாதர். (௮௭)

ஆண்டி னோடய னம்பரு
வந்திங்க ளாறிரண் டிருபக்கம்
ஈண்டு மைம்பொழு தியோகங்கள்
கரணங்க ளிராப்பக லிவற்றோடும்
பூண்ட நாழிகை கணமுதற்
காலங்கள் பொருகட னதிதிக்கு
நீண்ட மால்வரை திக்கய
மேகமின் னிமிர்ந்தவைம் பெரும்பூதம்.

(இ-ள்.) ஆண்டினோடு அயனம் பருவம் ஆறிரண்டு திங்கள் இரு பக்கம்-ஆண்டுகளும் அயனங்களும் பருவங்களும் பன்னிரண்டு மாதங்களும் இரண்டு பக்கங்களும், ஈண்டும் ஐம்பொழுது யோகங்கள்

கரணங்கள் இராப்பகல் இவற்றோடும்-நெருங்கிய ஐந்து பொழுது களும் யோகங்களும் கரணங்களும் இரவும் பகலுமாகிய இவற்றி னோடும், பூண்ட நாழிகை கணம் முதல் காலங்கள் பொருந்திய நாழிகையும் கணமும் முதலிய காலங்களும், பொருகடல் நதி திக்கு-மோதும் கடல்களும் ஆறுகளும் திசைகளும், நீண்ட மால்வரை-நெடிய பெரிய மலைகளும், திக்கயம்-திக்கு யானைகளும். மேகம்-மேகங்களும், மின்-மின்னல்களும், நிமிர்ந்த ஐம்பெரும் பூதம்-உயர்ந்த ஐந்து பெரிய பூதங்களும் எ - று.

அயனம்-உத்தராயணம், தக்ஷிணாயனம். பருவம்-கார், கூதிர், முன்பனி, பின்பனி, இளவேனில், முதுவேனில். இருபக்கம்-முற்பக்கம், பிற்பக்கம்; சுக்கில பக்கம், கிருட்டின பக்கம். ஐம்பொழுது-மாலை, யாமம், வைகறை, காலை, நண்பகல். யோகங்கள்-விட்கம்பம் முதலிய இருபத்தேழு. கரணங்கள்-பவம் முதலிய பதினொன்று. திக்குவரை யென்னலுமாம். இவையெல்லாம் இவற்றிற் குத் தெய்வங்களுண்டென்னுங் கொள்கையாற்கூறப்பட்டன. (அஅ)

மந்தி ரம்புவ னங்கடத் துவங்கலை வன்னங்கள்* பதம்வேதந்
தந்தி ரம்பல சமயநூற் புறந்தழீ இச் சார்ந்தநூ றருமாதி
முந்தி ரங்கிய சதுர்விதஞ் சரியையே முதலிய சதுட்பாதம்
இந்தி ரங்குநீர் முடியவ ரடியவ ரிச்சியா வெண்சித்தி.

(இ - ள்.) மந்திரம்-மந்திரங்களும், புவனங்கள்-புவனங்களும், தத்துவம்-தத்துவங்களும், கலை-கலைகளும், வன்னங்கள்-எழுத்துக் களும், பதம்-பதங்களும், வேதம்-மறைகளும், தந்திரம்-ஆகமங்களும், பல சமயநூல் - பலவகைச் சமய நூல்களும், புறம்தழீஇ சார்ந்த நூல்-இவற்றின் புறமாக இயைந்து பொருந்திய நூல்களும், தருமம் ஆதி முந்து இரங்கிய-அறமுதலாக முதன்மையாகச் சொல்லப்பட்ட, சதுர் விதம்-உறுதிப் பொருள் நான்கும், சரியை முதலிய சதுட் பாதம்-சரியை முதலிய நான்கு பாதங்களும், இந்து இரங்கு நீர் முடியவர் அடியவர் இச்சியா எண்சித்தி-சந்திரனையும் ஒலிக்குங் கங்கையினையும் அணிந்த முடியினையுடைய சிவபெருமானுடைய அடியார்கள் விரும்பாத எட்டுச் சித்திகளும் எ-று.

மந்திரம் முதலிய ஆறும் அத்துவாக்கள் எனப்படும்; மந்திரம், பதம், வன்னம் என்பன ஒலிவடிவும், கலை, தத்துவம் புவனம் என்பன பொருள் வடிவும் ஆம். புறந்தழுவிய நூல்கள். பொருணூல், இசை நூல் முதலியன. இரங்கிய-ஒலித்த; ஈண்டுக் கூறப்பட்ட என்னும் பொருளது. சதுட்பாதம்: வடசொல் திரிந்து நின்றது. எண் சித்தி: அணிமா, மகிமா, லகிமா, கரிமா, பிராத்தி, பிராகாமியம், ஈசத்துவம், வசித்துவம் என்பன; சிவனடியார்கள் எட்டுச் சித்தியும் விரும்பா ரென்பதனை,

"இந்திரச் செல்வமும் எட்டுச் சித்தியும்
வந்துழி வந்துழி மறுத்தன ரோதுங்கி"

எனப் பட்டினத்துப் பிள்ளையார் கூறுமாற்றானு மறிக. (அக)

(பா-ம்.) * வருணங்கள்.



ஆயி ரங்கட லனையவாய்ப் பரந்தெழு மாயிர மனிகத்துள்
ஆயி ரங்கதி ரனையரா யுருத்திர ரந்தரத் தவரண்டம்
ஆயி ரந்தகர் பட்டெனத் துந்துபி யாயிரங் கலந்தார்ப்ப
ஆயி ரஞ்சதகோடியோ சனைவழியரைக்கணத் திடைச்செல்வார்.

(இ - ள்.) ஆயிரம் கடல் அனையவாய்ப் பரந்து எழும் ஆயிரம் அனிகத்துள் - ஆயிரங்கடல்களை ஒப்பனவாய்ப் பரந்து எழுந்த எல்லை அற்ற சேனைகளுள், ஆயிரம் கதிர் அனையராய் உருத்திரர் அந்தரத்தவர் - அளவற்ற சூரியர்களை ஒத்தவர்களாய் உருத்திரர்களும் தேவர்களும், ஆயிரம் அண்டம் தகர்பட்டெ(ன) - பல்லாயிர அண்டங்களும் உடைபட்டனவென்று சொல்லுமாறு, ஆயிரம் துந்துமி கலந்து ஆர்ப்ப - எண்ணிறந்த வாத்தியங்கள் தம்முட் கலந்து ஒலிக்க, ஆயிரம் சதகோடி யோசனை வழி - நூறாயிரங்கோடி யோசனை வழியை, அரைக் கணத்திடைச்செல்வார் - அரைக் கணப்பொழுதிற் சென்று கடப்பாராயினர் எ - று.

ஆயிரம் முதலியன அளவின்மை குறிப்பன. பட்டென - பட்டாலென. சதம் - நூறு. சத ஆயிரம் என மாறுக. (௧0)

சித்தந் தேர்முனி வேந்தருந்
தேவருஞ் சிவனுருத் தரித்தோருந்
தத்தந் தேர்முத லூர்தியர்
வார்திகழ் சந்தன மணிக்*கொங்கைக்
கோத்தந் தேமலர்க் குழன்மனை
யாரோடுங் குளிர்விசும் பாருச்சென்
றத்தந் தேரிடை யாள்பங்க
னணிவரைக் கணியராய் வருகின்றார்.

(இ - ள்.) சித்தம் தேர் முனிவேந்தரும் - மனந்தெளிந்த முனி புங்கவர்களும், தேவரும் - தேவர்களும், சிவன் உரு தரித்தோரும் - உருத்திரர்களும், தத்தம் தேர் முதல் ஊர்தியர் - தங்கள் தங்கள் தேர் முதலிய ஊர்திகளையுடையராய், வார்திகழ் - கச்சு விளங்கும், சந்தனம் - களபமணிந்த, மணிக்கொங்கை - குசுகத்தினையுடைய கொங்கைகளையும், அம் தேம் மலர்க்கோத்து - அழகிய தேனையுடைய பூங்கொத்தினை யணிந்த, குழல் - கூந்தலையுமுடைய, (தத்தம்) மனையாரோடும் - தங்கள் தங்கள் மனைவியரோடும், குளிர் விசும்பு ஆருச் சென்று - குளிர்ந்த வான் வழியாகச் சென்று, அ தந்து ஏர் இடையாள் பங்கன் - அந்த நூல் போலும் இடையினையுடைய உமையவளை ஒரு பாகத்திலுடைய சிவ பிரானது, அணிவரைக்கு அணியராய் வருகின்றார் - அழகிய கயிலைமலைக்கு நெருங்கியவராய் வருகின்றார்கள் எ - று.

தேர்தல் - ஆராய்தல்; ஈண்டு ஆராய்ந்த தெளிவைக் குறிக்கும். தத்தம் என்பதனை மனையாரொடுங் கூட்டுக. ஆரு - வழியாக: விகாரம். அ : பண்டறி சுட்டு. (௧௧)

---

(பா - ம்.) * சந்தனமணி கொங்கை.

இழிந்த வூர்தியர் பணிந்தெழும்
யாக்கைய ரிறைபுகழ் திருநாமம்
மொழிந்த நாவினர் பொடிப்பெழு
மெய்யினர் முகிழ்த்தகை முடியேறக்
கழிந்த வன்பினர் கண்முதற்
புலங்கட்குங் கருணைவான் சுவையூறப்
பொழிந்த வானந்தத் தேனுறை
திருமலைப் புறத்துவண் டெனமொய்த்தார்.

(இ - ள்.) இழிந்த ஊர்தியர்-(இங்ஙனம் வந்தவர்கள்) ஊர்திகளினின்றும் இறங்கினவர்களாய், பணிந்து எழும் யாக்கையர் - விழுந்து பணிந்தெழும் உடலையுடையவர்களாய், இறைபுகழ் திருநாமம் மொழிந்த நாவினர்-இறைவன் திருப்புகழ்களையும் திருப்பெயர்களையும் பரவும் நாவினை யுடையவர்களாய், பொடிப்பு எழுமெய்யினர் - புளகங்கொண்ட மெய்யினை யுடையவர்களாய், முகிழ்த்தகை முடி ஏறக் கழிந்த அன்பினர்-கூப்பிய கைகள் உச்சியில் ஏற மிக்க அன்பினையுடையவர்களாய், கண்முதல் புலங்கட்கும் - கண் முதலிய ஐம்பொறிகளுக்கும், கருணைவான் சுவை ஊற - அருளாகிய சிறந்த சுவை சுரக்குமாறு, பொழிந்த ஆனந்தத் தேன் உறை - பொழிந்த ஆனந்தத்தேனாகிய இறைவன் வதியும், திருமலைப் புறத்து - திருமலையின் வெளியில், வண்டு என மொய்த்தார் - வண்டுகள்போல நெருங்கினார்கள் எ - று.

இழிந்த வூர்தியர் முதலியவற்றில் விகுதி பிரித்துக் கூட்டுக. கழிந்த-மிக்க: கழியென்னும் உரிச்சொல்லடியாக வந்தது. 'கண் முதற் புலனாற் காட்சியுமில்லோன்' ஆகிய இறைவன் அப்புலங்கட்கும் எளி வந்த பெருங் கருணையைக் கூறினார்;

"உணர்வி னேர்பெற வருஞ்சிவ
போகத்தை யொழிவின்றி யுருவின்கண்
அணையு மைம்பொறி யளவினு
மெளிவர வருளினை யெனப்போற்றி"

எனத் திருத்தொண்டர் புராணம் கூறுமாறும் காண்க; ஆனந்தத் "தேனுறை திருமலை" என்பது மிக்க நயமுடைத்து;

"அந்த விடைமருதி லானந்தத் தேனிருந்த
பொந்தைப் பரவிநாம் பூவல்லி கொய்யாமோ"

என்னும் திருவாசகம் இங்கே சிந்திக்கற்பாலது. (௧௨)

விரவு வானவர் நெருக்கற
வோதுக்குவான் வேத்திரப் படையோச்சி
அரவு வார்சடை நந்தியெம்
பிரானவ ரணிமணி முடிதாக்கப்

பரவு தூளியிற் புதைபடு
கயிலையம் பருப்பதம் பகல்காலும்
இரவி மண்டலத் தோடுங்குநா
ளோடுங்கிய விந்துமண் டலமானும்.

(இ-ள்.) விரவு வானவர் நெருக்கு அற ஒதுக்குவான்-நெருங்கிக் கூடிய தேவர்களின் நெருக்கமற ஒதுக்கும்பொருட்டு, அரவுவார்சடை-பாம்பினையணிந்த நீண்ட சடையினையுடைய, எம்பிரான் நந்தி - எம் பிரானாகிய திருநந்தி தேவர். வேத்திரப்படை ஓச்சி-பிரம்புப்படையை வீசி, அவர் அணிமணி முடி தாக்க - அத்தேவர்கள் அணிந்த மணி முடிகளிற்றாக்குதலால், பரவு தூளியில் (சிந்திப்) பரந்தமணித் துகளினுள், புதைபடு கயிலை அம் பருப்பதம்-மறைந்த அழகிய கயிலைமலையானது, பகல் காலும் இரவி மண்டலத்து - ஒளிவீசும் சூரிய மண்டலத்துள், ஒடுங்கு நாள் ஒடுங்கிய - அமாவாசையில் ஒடுங்கிய, இந்து மண்டலம் மானும் - சந்திர மண்டலத்தை ஒக்கும் எ - று.

ஒதுக்குவான்; வினையெச்சம். மணித்துகளின் பரப்பு இரவி மண்டலமும், அதனுள் மறைந்த வெள்ளிமலையாகிய திருக்கயிலை சந்திர மண்டலமும் போன்றன வென்றார். ஒடுங்கு நாள் - கலைகள் ஒடுங்கிய நாள்: அமாவாசை. (கரு)

வந்த வானவர் புறநிற்ப
நந்தியெம் வள்ளலங் குள்ளேய்தி
எந்தை தாள்பணிந் தையவிண்
ணவரேலா மீண்டினா ரெனவீண்டுத்
தந்தி டென்னவந் தழைத்துவேத்
திரத்தினாற் றராதரந் தெரிந்துய்ப்ப
முந்தி முந்திவந் திறைஞ்சினார்
சேவடி முண்டக முடிசூட.

(இ - ள்.) வந்த வானவர் புறம் நிற்ப-வந்ததேவர்கள் புறத்தில் நிற்க, எம் வள்ளல் நந்தி அங்கு உள் எய்தி - எம் வள்ளலாகிய திருநந்தி தேவர் அங்கு உள்ளே சென்று, எந்தை தாள் பணிந்து-எம் அப்பனாகிய இறைவன் திருவடிகளை வணங்கி, ஐய - ஐயனே, விண்ணவர் எலாம் ஈண்டினார் என - தேவர்கள் அனைவரும் வந்திருக்கின்றார்களென்று கூற, ஈண்டு தந்திடு என்ன - (ஆயின்) இங்கு அழைப்பாயென்று கட்டளையிட, வந்து அழைத்து தராதரம் தெரிந்து வேத்திரத்தினால் உய்ப்ப - வந்து அவர்களை அழைத்து அவரவர் தகுதியையறிந்து பிரப்பங்கோலாற் குறித்துச் செலுத்த, சேவடி முண்டகம் முடிசூட - சிவந்த திருவடிகளாகிய தாமரை மலர்களைத் தங்கள் முடிகள் சூடுமாறு. முந்தி முந்தி வந்து இறைஞ்சினார் - முற்பட்டு முற்பட்டு வந்து வணங்கினார்கள் எ - று.

தந்திடல் - கொணர்தல். தரம் - தகுதி. தராதரம் - தகுதி வேற்றுமை. பிரம்பாற் குறித்துக்காட்டி உய்ப்ப. (கச)

தீர்த்தன் முன்பணிந் தேத்துகின்
　　றார்களிற் சிலர்க்குத்தன் றிருவாயின்
வார்த்தை நல்கியுஞ் சிலர்க்கருண்
　　முகிழ்நகை வழங்கியுஞ் சிலர்க்குக்கண்
பார்த்து நீண்முடி துளக்கியுஞ்
　　சிலர்க்கருட் பரிசிறந் தெழுந்தண்டங்
காத்த கண்டனோர் மண்டபத்
　　திடைபுக்குக் கடிமணக் கவின்கோள்வான்.

(இ-ள்.) தீர்த்தன்-சிவபெருமான், முன்பணிந்து ஏத்துகின்றார்களில்-தமது திருமுன் வணங்கிப் பரவுகின்றார்களில், சிலர்க்குத் தன் திருவாயின் வார்த்தை நல்கியும் - சிலருக்குத் தமது திருவாயால் வார்த்தையருளியும், சிலர்க்கு அருண் முகிழ் நகை வழங்கியும் - சிலருக்கு அருளோடு கூடிய புன்னகை அரும்பியும், சிலர்க்குக் கண் பார்த்தும்-சிலருக்குத் திருநோக்கருளியும், சிலர்க்கு நீண் முடி துளக்கியும்-சிலருக்கு நீண்ட முடியினை அசைத்தும், அருள் பரிசில் தந்து - (இவ்வாறு) அருட்கொடை நல்கி, அண்டம் காத்த கண்டன் எழுந்து - அண்டங்கள் பொன்றாது (நஞ்சினையுண்டு) காத்தருளிய திருமிடற்றினையுடைய இறைவன் எழுந்து, ஓர் மண்டபத்திடை புக்கு-ஒரு மண்டபத்துட் புகுந்து, கடிமணக் கவின் கொள்வான்-திருமணக் கோலம் கொள்ளுதற்குத் திருவுள்ளங்கொள்ள எ - று.

தீர்த்தன் - தூயன். தகுதிக்கேற்ப வார்த்தை முதலியன வழங்கியருளினன்; அவையெல்லாம் அருட்கொடையேயென்றார். நஞ்சினைத் தரித்ததாகலின் கண்டம் காத்ததென்றார். கொள்வான் - கொள்ளக் கருத.　(௬௯)

ஆண்ட நாயகன் றிருவுளக்
　　குறிப்புணர்ந் தளகைநா யகனுள்ளம்
பூண்ட காதன்மேற் கொண்டெழு
　　மன்புந்தன் புனிதமெய்த் தவப்பேறும்
ஈண்ட வாங்கணைந் தெண்ணிலா
　　மறைகளு மிருவரு முனிவோருந்
தீண்ட ருந்திரு மேனியைத்
　　தன்கையாற் றீண்டிமங் கலஞ்செய்வான்*.

(இ-ள்.) ஆண்ட நாயகன் திரு உளக் குறிப்பு உணர்ந்து அளகை நாயகன்-எல்லா உயிர்களையும் ஆண்டருளிய இறைவனது திருவுள்ளக் குறிப்பினை அறிந்து அளகைப் பதியின் தலைவனாகிய குபேரன், உள்ளம்பூண்ட காதல் மேற்கொண்டு-உள்ளத்திலுள்ள விருப்பத்தை மேற்கொண்டு, எழும் அன்பும் - எழுந்த அன்பும், தன் புனித மெய்த் தவப்பேறும் ஈண்ட - தனது தூய உண்மைத் தவப்பயனும் வந்து

(பா - ம்.) * செய்தான்.

கைகூட, ஆங்கு அணைந்து-அம் மண்டபத்திற் சென்று, எண் இலா மறைகளும் - அளவில்லாத வேதங்களும், இருவரும்-திருமால் அயன் என்னும் இருவரும், முனிவோரும் - முனிவர்களும், தீண்டு அரும் திருமேனியை - தீண்டுதற்கரிய திருமேனியை, தன் கையால் தீண்டி மங்கலம் செய்வான் - தன் கையாற் றொட்டுத் திருமணக்கோலம் செய்யத் தொடங்கினான் எ - று.

குபேரன் தோழனாகலின் மணக்கோலஞ்செய்வானாயினான். (௬௬)

பூந்து கிற்படாங் கோய்சகத்
தானைபின் போக்குகோ வணஞ்சாத்தி
ஏந்தி ரட்டைஞாண் பட்டிகை
யிறுக்கிவண் டிரைக்குநாண் மலர்க்குஞ்சி
வேய்ந்து கற்பகப் புதுமலர்ச்
சிகழிகை மிலைந்துநீ றணிமெய்யிற்
சாந்த மான்மதந் தண்பனி
நீரளாய்த் தடக்கையான் மட்டித்தான்.

(இ - ள்.) பூந்துகில் படாம் - அழகிய ஆடையை, கொய்சகத் தானை-(முன் புறத்தில்) கொய்சக ஆடையாகவும். பின்-பின்புறத்தில், போக்கு கோவணம் சாத்தி-போக்குகின்ற கோவணமாகவும் சாத்தி, ஏந்து இரட்டை ஞாண் பட்டிகை இறுக்கி - அழகு மிக்க இரட்டையாகிய அரைஞாணைப் பட்டிகையோடு இறுக்கி, வண்டு இரைக்கும் நாள் மலர்க் குஞ்சி வேய்ந்து-வண்டுகள் ஒலிக்கும் அன்றலர்ந்த மலர்களை யணிந்த குஞ்சியைக் கொண்டையாகப் புனைந்து, கற்பகம் புது மலர் சிகழிகை மிலைந்து-கற்பகத்தின் புதிய மலர்களாற் றொடுத்த மாலையை (அக்கொண்டையில்) சூடி, நீறு அணி மெய்யில் - திருநீறு தரித்த திருமேனியில், சாந்தம் மான் மதம் தண் பனிநீர் அளாய் - சந்தனத்தோடு மிருக மதத்தையும் குளிர்ந்த பனி நீரையுங் கலந்து, தடக்கையால் மட்டித்தான்-நீண்ட கையாற் பூசினான் எ - று.

துகிலாகிய படாம். கொய்சகம்-அடுக்கடுக்காக மடித்துச் செருகுவது. பட்டிகை-அரைக்கச்சு. குஞ்சியை வேய்ந்து. அளாய்: அளாவியெனபதன் விகாரம். மட்டித்தல்-அப்புதல், பூசுதல். (௬௭)

இரண்டு செஞ்சுடர் நுழைந்திருந் தாலென
விணைமணிக் குழைக்காதிற்
சுருண்ட தோடுபோற் குண்டலந் திணியிரு
டுரந்துதோட் புறந்துள்ள
மருண்ட தேவரைப் பரமென மதிப்பவர்
மையல்வல் லிருண்மான*
இருண்ட கண்டமேன் முழுமதி கோத்தென
விணைத்தகண் டிகைசாத்தி.

(பா - ம்.) * மாள.

(இ - ள்.) இணைமணிக் குழைக்காதில்-இரண்டாகிய அழகிய சங்கக் குழைகள் அணிந்த திருச் செவிகளில், இரண்டு செஞ்சுடர் நுழைந்து இருந்தாலென-இரண்டு சூரியர்கள் குடிபுகுந்துஇருந்தாற் போல, சுருண்ட பொன்தோடு குண்டலம்-சுருண்ட பொற்றோடும் பொற் குண்டலமும், திணி இருள் துறந்து தோள் புறம் துள்ள - செறிந்த இருளை ஓட்டித் தோட்புறத்தில் அசைந்தாடத் (தரித்தும்), மருண்ட தேவரை-மயக்கமுற்ற தேவர்களை, பரம் என மதிப்பவர் - பரம் பொருளென்று கருதுபவரின், மையல் வல் இருள்மான இருண்ட-மயக்கமாகிய வலிய இருளையொக்க இருண்ட,கண்டமேல்- திருமிடற்றின்மேல், முழுமதி கோத்தென - நிறைமதியைக் கோவை செய்தாற்போல, இணைத்த கண்டிகை சாத்தி - இணைத்துச் செய்த வயிரக் கண்டிகையைத் தரித்தும் எ - று.

துள்ளுமாறு தரித்து என வருவித்துரைக்க. மருண்ட தேவர் - பாசத்தாற் கட்டுண்ட தேவர்; மயக்கத்தால் தம்மையே பரமெனக் கருதிய ஏனைத் தேவர்; ஈறிலாதவனாகிய ஈசனையன்றி ஏனைத் தேவரைப் பரமென நினைப்பது அறியாமை யென்றார்;

> "சாவமுன் னாட்டக்கன் வேள்வித் தகர்தின்று நஞ்சமஞ்சி
> ஆவவெந் தாயென் றவிதா விடுநம் மவரவரே
> மூவரென் றேயெம் பிரானொடு மெண்ணிவிண் ணாண்டுமண்
> தேவரென் றேயிறு மாந்தென்ன பாவந் திரிதவரே" [மேல்

என்னும் திருவாசகமும் காண்க. கோத்தென: விகாரம். முதலடி: இல்பொருளுவமம். (௬௮)

> வலங்கி டந்தமுந் நூல்வரை யருவியின்
> 　　வயங்குமார் பிடைச்சென்னித்
> தலங்கி டந்தவெண் டிங்களூற் றமுதெனத்
> 　　தரளமா லிகைசாத்தி
> இலங்கி டந்தமா லிகைப்பரப் பிடையியைத்
> 　　திருண்*முகம் பிளந்தாரங்
> கலங்கி டந்தபாற் கடல்முளைத் தெழுமிளங்
> 　　கதிரெனக் கவின்செய்து.

(இ -ள்.) வலம் கிடந்த முந்நூல்-வலப்புறங்கிடந்த முந்நூலானது, வரை அருவியின் வயங்கு மார்பிடை - மலையினின்று ஒழுகும் அருவிபோல விளங்கும் திருமார்பின்கண், சென்னித் தலம் கிடந்த வெண் திங்கள் ஊற்று அமுது என-முடியின்கண் தங்கிய வெள்ளிய திங்களால் பொழியப்பெற்ற அமுதத்தைப்போல. தரள மாலிகை சாத்தி-முத்துமாலையைத் தரித்தும், இலங்கிடு அந்த மாலிகைப் பரப்பிடை - விளங்குகின்ற அந்த முத்துமாலைப் பரப்பின் நடுவில், இருள் முகம்பிளந்த ஆரம்-இருள் முகத்தைக் கிழித்த மாணிக்க மாலையை, கலம் கிடந்த பால் கடல் முளைத்து எழும்-மரக்கலங்கள் தங்கிய பாற் கடலின்கண் தோன்றி எழுந்த, இளங்கதிர் என இயைத்து - இளஞ் சூரியனைப்போலத் தரித்து, கவின் செய்து-அழகு செய்தும் எ - று.

---

(பா - ம்.) * இமைத்திருள்.

இலங்கிடு, இடு: துணைவினை. பிளந்தஎன்னும் பெயரெச்சத்தின் அகரம் தொக்கது. கடலென்னும் பொதுமைபற்றிக் கலம் கூறினர். (௯௯)

திசைக டந்தநாற் புயங்களிற் பட்டிகை
சேர்த்துவா ளெறிக்குந்தோள்
நசைக டந்தநல் லார்மனங் கவர்ந்துயிர்
நக்கவங் கதஞ்சாத்தி
அசைக டங்கலுழ் வாரண வுரிவைநீத்
தணிகொளுத் தரீயம்பெய்
திசைக டந்தமந் திரபவித் திரமெடுத்
தெழில்விர னுழைவித்து.

(இ - ள்.) திசை கடந்த நால் புயங்களில் - திக்குகளைக்கடந்த நான்கு திருத்தோள்களிலும், பட்டிகை சேர்த்து - பட்டிகைகளைத் தரித்தும், வாள் எறிக்கும் தோள் - ஒளி வீசும் அத்தோள்களில், நசைகள் தந்த நல்லார் மனம் கவர்ந்து - விருப்ப மிக்க (முனிவர்) பன்னியர்களின் மனத்தைக்கவர்ந்து-உயிர் நக்க (அவர்கள்) உயிரையுமுண்ட, அங்கதம் சாத்தி-தோளணிகளை அணிந்தும், கடம் கலுழ் - மதத்தைப் பொழியும், அசை-அசைகின்ற, வாரண உரிவை நீத்து - யானையின் தோலை அகற்றி, அணிகொள் உத்தரீயம் பெய்து - அழகிய மேலாடையைச் சாத்தியும், இசைகடந்த மந்திர பவித்திரம் எடுத்து-சொல்லைக் கடந்த மந்திர வடிவமான பவித்திரத்தை எடுத்து, எழில் விரல் நுழைவித்து-அழகிய விரலில் அணிந்தும் எ - று.

நக்கிய வென்பது விகாரமாயிற்று; நல்லாரைப் பொதுமையிற் கொண்டு. உயிரைப் பருகுமாறு என்றுரைத்தலுமாம்; விருப்பத்தினிங்கிய நல்லார் என்றுமாம். அங்கதம்-தோள்வளை. அசை வாரணமென்க. இசை-புகழ்ச்சியுமாம். பவித்திரம்-மோதிரம். (௪௦௦)

உடுத்த கோவண மிசைப்பொலங் துகிலசைத்
துரகமைந் தலைநால
விடுத்த போல்வெயின் மணித்தலைக் கொடுக்குமின்
விடவிரு புறந்தூக்கித்
தொடுத்த தார்புயந் தூக்கிநூ புரங்கழல்
சொற்பதங் கடந்தன்பர்க்
கடுத்த தாளிலிட் டிருநிதிக் கோமக
னருந்தவப் பயன்பெற்றான்.

(இ - ள்) உடுத்த கோவணம் மிசை - உடுத்த கோவணத்தின் மேல், பொலம் துகில் அசைத்து - பொன்னுடையை இறுகக்கட்டி (அதன்மேல்), உரகம் ஐந்தலை நால விடுத்தபோல்-பாம்பு ஐந்து தலைகளையும் தொங்கவிட்டமை போல, வெயில் மணித்தலைக் கொடுக்கு-ஒளி பொருந்திய மாணிக்கத் தலைக்கொடுக்கு, மின்விட-ஒளிவீச, இரு

புறம் தூக்கி-இரண்டு பக்கங்களிலும் தொங்க விட்டும், தொடுத்த தார் புயம் தூக்கி-மலர்களாற் றொடுத்த மாலையினைத் திருத்தோளிற் சாத்தியும், சொல்பதம் கடந்து அன்பர்க்கு அடுத்த தாளில்-சொல்லின் அளவையுங் கடந்தும் அடியார்களுக்கு அண்மையிற் பொருந்திய திருவடிகளில், நாபுரம் கழல் இட்டு-சிலம்பையும் வீரகண்டையையும் அணிந்தும், இருநிதிக் கோமகன்-சங்கம் பதுமம் என்னும் இரண்டு, நிதிகளுக்குந் தலைவனாகிய குபேரன், அருந்தவப் பயன் பெற்றான்-அரிய தவங்களின் பயனை அடைந்தான் எ-று.

கொடுக்கு-ஒருவகையணி; தொய்சகமென்பாருமுளர். சொற்பதம்-சொல்லினளவு: சொல்லாகிய பதமுமாம்;

"சொற்பதங் கடந்த தொல்லோன் காண்க"

என்பது திருவாசகம்; முன்னும் வந்தது. அன்பர் - அவனருள்வழி நிற்போர். இருநிதி-பெரிய நிதியுமாம். கோமகன்-கோமான்; தலைவன்.

செங்கண் மாலய னிந்திரன் முதற்பெருந்
　　தேவர்க்கும் யாவர்க்கும்
மங்க லந்தரு கடைக்கணு யகனொரு
　　மங்கலம் புனைந்தான்போற்
சங்கை கொண்டுகும் போதரன் முதுகின்மேற்
　　சரணம்வைத் தெதிர்போந்த
துங்க மால்விடை மேற்கொடு நடந்தனன்
　　சுரர்கள்பூ மழைதூர்த்தார்.

(இ-ள்.) செங்கண்மால் அயன் இந்திரன் முதல்-சிவந்த கண்களையுடைய திருமால் பிரமன் இந்திரன் முதலிய, பெருந்தேவர்க்கும் யாவர்க்கும் - பெரிய தேவருக்கும் மற்றியாவருக்கும், கடைக்கண் மங்கலம் தரு நாயகன்-கடைக்கணோக்கத்தால் எல்லா நன்மைகளையும் அளிக்கவல்ல இறைவன், ஒரு மங்கலம் புனைந்தான் போல் சங்கை கொண்டு - (தான்) ஒரு மங்கலக் கோலஞ் செய்து கொண்டவன் போலத் திருவுளங்கொண்டு, கும்போதரன் முதுகின்மேல் சரணம் வைத்து-கும்போதரன் முதுகின்மேல் தனது திருவடியை வைத்து, எதிர் போந்த துங்க மால்விடை மேற்கொடு-எதிரே வந்த உயர்ந்த பெரிய இடபத்திலேறி, நடந்தனன் - நடந்தருளினான்; சுரர்கள் பூமழை தூர்த்தார்-தேவர்கள் மலர்மாரி பொழிந்தனர் எ-று.

மங்கலம் - சுபம்; நன்மை. தன் கடைக்கணோக்கத்தாலேயே யாவர்க்கும் மங்கலத்தை யருள்பவன் என்றும் எல்லா மங்கலங்கட்கும் உறைவிடமா யிருக்கச் செய்தே புதுவதாக மங்கல மெய்தினான்போல் ஒரு விளையாடல் புரிந்தானென்றார்;

"மாவணி நோக்கினார் தம் மங்கலக் கழுத்துக் கெல்லாம்
தானணி யானபோது தனக்கணி யாதுமாதோ"

என்னும் கம்பராமாயணக் கருத்து ஒருசார் ஒப்புமையுடையது. சங்கை-எண்ணம். கும்ப உதரன்-குடம்போலும் வயிறுடையன்; கணங்களிலொருவன்.　　(௧௦௨)

அந்த ரத்தவ ரந்தர துந்துபி
யைந்துமார்த் தனர்சூழ
வந்த ரக்கரு மியக்கரும் பூதரு
மங்கல வியங்கல்லக்
கொந்த லர்க்கருங் குழலர மடந்தையர்
கோளைவல்விஞ் சையர்தாளந்
தந்த சைத்திட மலர்ந்தபூங் கொம்பர்போற்
சாய்ந்தசைந் தனராட.

(இ-ள்.) அந்தரத்தவர் அந்தர துந்துபி ஐந்தும் ஆர்த்தனர் சூழ-தேவர்கள் தேவ துந்துபி ஐந்தனையும் முழக்கிச் சூழவும், அரக்கரும் இயக்கரும் பூதரும் வந்து மங்கல இயம் கல்ல-அரக்கர்களும் இயக்கர்களும் பூதர்களும் வந்து மங்கல இயங்களைக் கல்லென்று முழக்கவும், கோளைவல் விஞ்சையர் தாளம் தந்து அசைத்திட-இசையில் வல்ல வித்தியாதரர் தாளம் போட்டு ஆட்டுவிக்க, கொந்து அலர் கருங்குழல் அரமடந்தையர்-கொத்தோடு பூக்களையணிந்த கரிய கூந்தலையுடைய தேவ மகளிர், மலர்ந்த பூங்கொம்பர்போல் சாய்ந்து அசைந்தனர் ஆட-அலர்ந்த பூக்களையுடைய கொம்புபோல் சாய்ந்து அசைந்து ஆடவும் எ-று.

கல்ல: கலிக்க வென்பதன் விகாரம்; முன்னும் உரைத்தமை காண்க. கோளை-பாட்டு;

"கோளைவல் பாண்மகனும்"

என்பது புறம். கொம்பர்: ஈற்றுப் போலி. ஆர்த்தனர், அசைந்தனர் என்னும் வினை முற்றுக்கள் எச்சங்களாய் நின்றன. (௧0௫)

துங்க மாயிரங் கருவியா யிரமலைத்
தூங்கிருண் முழைதோறுஞ்
சிங்க மாயிரம் வாய்திறந் தார்த்தெனச்
சிரங்களா யிரந்திண்டோள்
அங்க மாயிர மாயிர முடையவ
னுயிர முகந்தோறுஞ்
சங்க மாயிர மாயிர மாயிரந்
தடக்கையும் பிடித்தூத.

(இ-ள்) துங்கமாய் இரங்கு அருவிமலை-மிகுதியாய் ஒலிக்கும் அருவிகளையுடைய மலையின்கண், இருள் தூங்கு ஆயிரம் முழைதோறும்-இருள் குடிகொண்ட ஆயிரங் குகைகள்தோறும், சிங்கம் ஆயிரம் வாய்திறந்து ஆர்த்தென-ஆயிரம் சிங்கங்கள் வாய்திறந்து ஒலித்தாற்போல, ஆயிரம் சிரங்கள்-ஆயிரந் தலைகளையும், ஆயிரம் ஆயிரம் திண் தோள் அங்கம் உடையவன்-இரண்டாயிரம் திண்ணிய தோள்களாகிய உறுப்புக்களையுமுடைய பானுகம்பன், ஆயிரம்

முகந்தோறும் - ஆயிரம் வாய்கள்தோறும், ஆயிரம் சங்கம்-ஆயிரம் சங்குகளை வைத்து, ஆயிரம் ஆயிரம் தடக்கையும் பிடித்து ஊத- இரண்டாயிரம் நீண்ட கைகளாலும் பிடித்து ஊதவும் எ-று.

தோளாகிய அங்கம். முகம் - வாய். ஒவ்வொன்றிலு மென்பார் தோறுமென்றார். (க0சா)

போக்கு மாயவன் புணர்ப்பையு மிருண்மலப்
புணர்ப்பையுங் கடந்தெம்மைக்
காக்கு நாயக னருச்சனை விடாதருட்
கதியடைந்துள வாணன்
தூக்கு நேர்பட வாயிரங் கரங்களாற்
றொம்மென முகந்தோறுந்
தாக்க வேறுவே றெழுகுட முழாவொலி
தடங்கட லொலிசாய்ப்ப.

(இ-ள்) போக்கும் மாயவன் புணர்ப்பையும் - போக்கத்தக்க மாயையினது வலிய தொடக்கையும், இருள்மலப் புணர்ப்பையுங் கடந்து-ஆணவ மலத்தின் தொடக்கையும் (இயல்பாகவே) நீங்கி, எம்மைக் காக்கும் நாயகன்-எம்மை ஆளும் சிவபெருமானது, அருச்சனைவிடாது-பூசனையை இடையறாது கொண்டு, அருள் கதி அடைந்துள வாணன்-(அவனது) திருவருளால் வீடுபேற்றையடைந்த வாணனென்பான், தூக்கு நேர்பட-பாடலுக்குப் பொருந்த, ஆயிரம் கரங்களால்-ஆயிரங் கைகளினாலும், முகந்தோறும் தாக்க-வாய்கள் தோறும் மோத, தொம் என வேறு வேறு எழு குட முழா ஒலி-தொம் என்று வேறுவேறாக எழுகின்ற குடமுழவின் ஒலியானது, தடங்கடல் ஒலி சாய்ப்ப-பெரிய கடலின் ஒலியைக் கீழ்ப்படுத்தவும் எ-று.

கடந்து கதியடைந்துள என வாணனுக்கேற்றி யுரைத்தலுமாம். தூக்கு-தாளமுமாம். தொம்மென: குறிப்பு. முகம்-கண்; அடிக்குமிடம். (க0ரு)

முனிவ ரஞ்சலி முகிழ்த்தசெங் கையினர்
மொழியுமா சியருள்ளங்
கனிவ ரும்பிய வன்பினர் பரவவுட்
கருத்தொடு* வழிக்கொண்டோர்
துனிவ ருங்கண நாதர்கோட் டதிர்கரத்
துணையினர் மழைபோலப்
பனிவ ருங்கண ராடிய தாளினர்
பாடுநா வினரேத்த.

(இ-ள்.) முனிவர் அஞ்சலி முகிழ்த்த செங்கையினர்-முனிவர்கள் வணங்கிக் கூப்பி சிவந்த கைகளை யுடையவர்களாய், மொழியும்

(பா-ம்.) * கருத்தொரு.

ஆசியர் - கூறுகின்ற வாழ்த்து மொழிகளையுடையவராய், உள்ளம் கனிவு அரும்பிய அன்பினர் - உள்ளத்தின்கண் கனிந்து வெளித் தோன்றிய அன்பினையுடையவர்களாய், பரவ-(ஒருபால்) துதித்து வரவும், உள் கருத்தொடு வழிக்கொண்டோர் - ஒன்றிய கருத்துடன் வழிக் கொண்டோராகிய, துனி அருங் கணநாதர் - துன்பமில்லாத கணத்தலைவர்கள், கொட்டு அதிர்கரத் துணையினர் - கொட்டி அதிர்க்கின்ற இரண்டு கைகளையுடையவர்களாய், மழைபோல பனிவரும் கண்ணர் - மழைபோல ஆனந்தவருவி பொழியும் கண்களையுடையவர்களாய், ஆடிய தாளினர் - ஆனந்தக் கூத்து ஆடும் அடிகளையுடையவர்களாய், பாடும் நாவினர் - பாடுகின்ற நாவினையுடையவர்களாய், ஏத்த-(ஒருபால்) பரவி வரவும் எ - று.

கையினர், ஆசியர், அன்பினர் என்னும் குறிப்பு முற்றுக்கள் எச்சமாய்ப் பரவ என்பதனையும், துணையினர், கண்ணர், தாளினர் என்னும் குறிப்பு முற்றுக்கள் எச்சமாய் ஏத்த என்பதனையும் கொண்டன. கண்ணர் கணரென விகாரமாயிற்று. (௧௦௬)

இந்தி ரன்மணிக் களாஞ்சிகோண் டோருமருங்
கெய்தமேல் லிலைவாசந்
தந்தி லங்குபோன் னடைப்பைகோண் டீசனோர்
சார்வர மருத்துக்கோ
வந்தி ரங்கோலி யாலவட் டம்பணி
மாறவா ரழறாபந்
தந்து நேரநீர்க் கடவுள்போற் கோடிகந்
தாமரைக் கரந்தூக்க.

(இ-ள்). இந்திரன் மணிக்களாஞ்சி கொண்டு ஒருமருங்கு எய்த- இந்திரன் மணிகள் பதித்த களாஞ்சியைக் கையிலேந்திக் கொண்டு ஒருபால் வரவும், ஈசன் - ஈசானன், மெல்லிலை வாசம் தந்து இலங்கு பொன் அடைப்பை கொண்டு ஓர் சார் வர - வெற்றிலையையும் வாசப் பொருளையுந் தந்து விளங்காநின்ற பொன்னாலாகிய அடைப்பையை ஏந்தி ஒருபால் வரவும், மருத்துக்கோ - காற்றுக் கடவுள், வந்து இரங்கு ஒலி ஆலவட்டம் பணிமாற - வந்து ஒலிக்கும் ஒலியினையுடைய ஆலவட்டம் வீசி ஒருபால் வரவும், ஆர் அழல் - நிறைந்த தீக்கடவுள், தூபம் தந்து நேர - தூபத்தைத் தந்து (ஒருபால்) வரவும், நீர்க்கடவுள் பொன் கோடிகம் தாமரைக் கரம் தூக்க - வருணதேவன் பொற்பூந் தட்டைத் தாமரை மலர் போன்ற கையில் ஏந்தி (ஒருபால் வரவும்) எ - று.

மெல்லிலை - வெற்றிலை: வினைத்தொகை! திருநகரச் சிறப்பில் 'மெல்லிலைப் பசுங் கொடியினெல்' என்புழி உரைத்ததனையும் நோக்குக. பணிமாறல், மரபு. கோடிகம் - பூந்தட்டு. (௧௦௭)

நிருதி யாடிகோண் டேதிர்வர வடிக்கடி
நிதிமுகந் தளகைக்கோன்
கருதி யாயிரஞ் சிதறிடத் தண்டிநன்*
காஞ்சுகர் வினைசெய்யப்

---

(பா-ம்.) * தண்டினன்.

பரிதி யாயிரம் பணாடவி யுரகரும்
பன்மணி விளக்கேந்தச்
சுருதி நாயகன் றிருவடி முடியின்மேற்
சுமந்துபின் புறஞ்செல்ல.

(இ - ள்.) சிருதி ஆடி கொண்டு எதிர்வர - சிருதியானவன் கண்ணாடியை யேந்தி எதிரே வரவும். அளகைக் கோன் கருதி - அளகைக்கிறையாகிய குபேரன் திருமணச் சிறப்பை எண்ணி அடிக்கடி ஆயிரம் நிதி முகந்து சிதறிட - அடிக்கடி அளவிறந்த பொருளை மொண்டு வீசவும், தண்டி - தண்டத்தையுடைய கூற்றுவன். நல் காஞ்சுகர் வினை செய்ய - நல்ல கஞ்சுகமாக்கள் செய்தல்போல நெருக்கத்தை விலக்கி வரவும், பரிதி ஆயிரம் பணாடவி உரகரும் - சூரியனைப்போல் விளங்கும் ஆயிரம் பணாடவியையுடைய சேடனும், பல் மணி விளக்கு ஏந்த - பல மாணிக்க விளக்குகளை ஏந்திவரவும், சுருதி - வேதபுருடன், நாயகன் திருவடி - இறைவன் திருவடியை, முடியின்மேல் சுமந்து பின் புறம் செல்ல - தன் முடியின்மேல் தாங்கிப் பின்புறத்தே வரவும் எ - று.

காஞ்சுகர் - கஞ்சுகர் விகாரர்; சட்டையிட்டவர். பணாடவி - பண அடவி: தீர்க்கசந்தி: படத்தின் காடு என்பது பொருள். உரகர், பொதுவுமாம். சுருதி - வேதம், வேதபுருடன் (௪0௮)

கங்கை காவிரி யாதிய நவநதிக்
கன்னியர் குளிர்தூங்கப்
பொங்கு வார்திரைக் கொழுந்தெனக் கவரிகள்
புரட்டவெண் பிறைக்கீற்றுத்
துங்க வாளெயிற் றிருளுடற் குழிவிழிச்
சுடரழற் செம்பங்கிச்
சங்க வார்குழைக் குறியகுண் டோதரன்
றண்மதிக் குடைதாங்க.

(இ - ள்) கங்கை காவிரி ஆகிய நவநதிக் கன்னியர் - கங்கை காவிரி முதலிய ஒன்பது தீர்த்தங்களாகிய மகளிரும், குளிர் தூங்க - குளிர்ச்சி மிக. பொங்குவார் திரைக் கொழுந்து என - மேலெழுகின்ற நீண்ட அலைக் கொழுந்துபோல. கவரிகள் புரட்ட - சாமரைகளைப் புரட்டி வீசவும், வெண்பிறைக்கீற்று துங்க வாள் எயிற்று - வெள்ளிய பிறையின் கீற்றைப்போன்ற உயர்ந்த ஒளி பொருந்திய பற்களையும், இருள் உடல் - கரிய உடலையும், குழி விழி - குழிந்த கண்களையும், சுடர் அழல் செம்பங்கி - எரியும் தீப்போன்ற சிவந்த மயிரையும், சங்கவார் குழை - சங்காலாகிய நீண்ட குழைகளையுமுடைய, குறிய குண்டோதரன் - குறிய வடிவமுள்ள குண்டோதரன், தண்மதிக் குடை தாங்க - குளிர்ந்த சந்திரவட்டக் குடையினைத் தாங்கிவரவும் எ - று.

நவநதி முன் உரைத்தாம்; ஆண்டுக் காண்க. பிறையாகிய கீற்றெனக. பங்கி - மயிர். (௪0௯)

இடிக்கும் வானுரு மேறுயர் நெடுங்கோடி
யேகினவெண் கோடிஞாலம்
முடிக்கு மூழிநா ளுளர்கடுங் காலென
மூச்செறி விடநாகந்
துடிக்க வாய்விடு* முவணவண் கோடிமுதற்
சூழ்ந்துசே வகஞ்செய்யுங்
கோடிக்கு ழாத்தினுட் கோடியர சாய்விடைக்
கோடிபுடை பெயர்ந்தாட.

(இ-ள்.) சூழ்ந்து சேவகம் செய்யும் - சூழ்ந்து சேவகம் செய்கின்ற, வான் இடிக்கும் உரும் ஏறு உயர் நெடுங்கொடி - வானின்கண் இடிக்கின்ற இடியேறாகிய உயர்ந்த நெடிய கொடியும், வெள் எகினக் கொடி - வெள்ளிய அன்னக் கொடியும், ஞாலம் முடிக்கும் ஊழி நாள் - உலகத்தை அழிக்கும் ஊழிக்காலத்தில், உளர் சுடுங்கால் என - வீசுகின்ற சண்டமாருதத்தைப்போல, மூச்சு எறி விடநாகம் - மூச்சு விடுகின்ற நஞ்சினையுடைய பாம்புகள், துடிக்க வாய்விடும்-துடிக்குமாறு ஆர்க்கின்ற, வள் உவணக் கொடிமுதல் கொடிக் குழாத்தினுள்-வளப்பத்தினையுடைய கலுழக் கொடியும் முதலாகிய கொடிக் கூட்டங்களுள், விடைக் கொடி - இடபக் கொடியானது, கொடி அரசாய்-கொடிகளுக்கரசாய், புடை பெயர்ந்து ஆட - அசைந்தாடவும் எ-று.

உயர் நெடும்: ஒருபொருட் சொற்கள். எகினம், அம்: சாரியை. இடியேறு இந்திரனுக்கும், அன்னம் பிரமனுக்கும், உவணம் திருமாலுக்கும் கொடிகளாதலின் அவற்றை யெடுத்தோதினர். 'நாகந் துடிக்க வாய்விடும் உவணவண் கொடி' என்னுங் கருத்தினை,

"கடுவோ டொடுங்கிய தூம்புடை வாலெயிற்
றழலென வுயிர்க்கு மஞ்சுவரு கடுந்திறற்
பாம்புபடப் புடைக்கும் பல்வரிக் கொடுஞ்சிறைப்
புள்ளணி நீள்கொடிச் செல்வனும்"

என்னும் திருமுருகாற்றுப்படையினுங் காண்க. (கக0)

கண்ணு தற்பிரான் மருங்கிரு கடவுளர்
கப்புவிட் டெனத்தோன்றும்
வண்ண முத்தலைப் படையெடுத் தொருகுட
வயிறுடைப் பெரும்பூதம்
பண்ண வப்பதி னெண்படைக் கலமுந்தன்
பக்கமாச் சேவிப்ப
அண்ணன் முச்சுடர் முளைத்தொரு வரைநடந்
தனையதோர் மருங்கெய்த.

(இ-ள்.) நுதல்கண் பிரான்-நெற்றியிற் கண்ணையுடைய இறைவனின், மருங்கு - இரண்டு பக்கங்களிலும், இரு கடவுளர் கப்பு விட்

---

(பா-ம்.) * வாயிடு.

டெனத் தோன்றும் - அயனும் அரியுமாகிய இரண்டு தேவர்களும் கிளைத்தாற்போலக் காணப்படும், வண்ணம் முத்தலைப்படை - அழகிய மூன்று தலையையுடைய சூலப்படையை, பண்ணவப் பதினெண் படைக்கலமும் - தெய்வத்தன்மையுடைய பதினெட்டுப் படைகளும், தன் பக்கமாய்ச் சேவிப்ப - அதன் பக்கத்தே சேவித்து வர, குட வயிறு உடை ஒரு பெரும்பூதம் - குடம்போலும் வயிறுடைய ஒரு பெரிய பூதமானது, எடுத்து - அதனை யேந்தி, அண்ணல் முச்சுடர் முளைத்து - பெருமை பொருந்திய மூன்று சுடர்களும் உதிக்கப் பெற்று, ஒருவரை நடந்து அனையது ஓர் மருங்கு எய்த - ஒருமலை நடந்ததை யொக்க ஒருபால் வரவும் எ - று.

சிவபிரானிடத்தில் ஏனையிருவரும் தோன்றினமையை,

"படைத்தளித் தழிப்பமும் மூர்த்திக ளாயினை"

"ஒருவனு யுலகேத்த நின்ற நாளோ
ஓருருவே மூவுருவ மான நாளோ"

என்னும் தேவாரத் திருவாக்குகளிற் காண்க;

"மைந்த நின்னையென் வலப்புறத் தின்றன னறிய
பைந்து ழாய்முடிக் கண்ணனை யெனதிடப் பாலில்
தந்த ளித்தன னிவிர்வெங் கரிமுகன் றழல்வேற்
கந்த னேரெனக் கருணையி னுச்சிமோந் துரைப்பான்"

என்று கூர்மபுராணங் கூறுவதும் நோக்கற் பாலது. கப்பு - கிளை; கவர்பு என்பது மருவிற்று. பூதம் - கும்போதரன். தன் பக்கம் - சூலத்தின் பக்கம். ஆகவென்பது விகாரம். முளைத்து - முளைக்கட்டு; முளைத்த என்பது விகாரமாயிற்றுமாம். நடந்தது என்பது நடந்து என விகாரமாயிற்று. அனையதாக எய்தவென்க. (ககக)

பந்த நான்மறைப் பொருட்டிரட் டெனவட
பாடல்செய் தெதிர்புட்ப
தந்த னேத்தவா னுயிருண வுருத்தெழு
தழல்விடத் தெதிர்நோக்கும்
அந்த மாதியி லானிழல் வடிவமா
யாடியி னிழல்போல
வந்த சுந்தரன் சாத்துநீ றேடுதிரு
மாலையு மெடுத்தேந்த.

(இ - ள்.) பந்தம் நான் மறைப் பொருள் திரட்டு என - தளையினையுடைய நான்கு வேதங்களின் பொருளைத் திரட்டிக் கூறினாற் போல, வடபாடல் செய்து எதிர் புட்பதந்தன் ஏத்த - வடமொழிப் பாடல்களைக் கூறி எதிரே புட்பதந்தன் துதித்துவரவும், வான் உயிர் உண உருத்து எழுதழல் விடத்து எதிர் நோக்கும் - தேவர்களின் உயிரை உண்ணச் சினந்து எழுந்த தீயைப்போலும் நஞ்சினுக்கு எதிரே செல்லும், அந்தம் ஆதி இலான் நிழல் வடிவமாய் - ஈறும் முதலுமில்லாத இறைவனது சாயையாகிய வடிவமாய், ஆடியின் நிழல்

போல வந்த சுந்தரன் - கண்ணாடியின் நிழல்போலத் தோன்றியருளிய சுந்தரப் பெருமான், சாத்தும் நீறோடு திருமாலையும் எடுத்து ஏந்த-அணியுந் திருநீற்றோடு திருப்பள்ளித் தாமத்தையும் ஏந்தி வரவும் எ - று.

பந்தம் - தளை; இசைக்கட்டு. சுந்தரன்-சிவபெருமான் ஒருகால் கண்ணாடியிற் பிரதிவிம்பித்த தமது நிழலை வாவென்றருள வந்தவர்; திருக்கைலையில் சிவபெருமானுக்குத் திருநீறும் திருப்பள்ளித் தாமமும் எடுத்தேந்தும் அணுக்கத் தொண்டராயுள்ளவர்; பாற்கடல் கடைந்த பொழுதுண்டாகிய ஆலால விடத்தைச் சிவபெருமான் பணித்தபடி கொண்டுவந்து ஆலால சுந்தரர் எனப் பெயர் பெற்றவர்; இவரே சைவ சமய குரவராகிய நம்பியாரூரராகவும் பிறந்தனர்;

"அருளி னீர்மைத் திருத்தொண் டறிவரும்
தெருளி னீரிது செப்புதற் காமெனில்
வெருளின் மெய்ம்மொழி வானிழல் கூறிய
பொருளி னாகு மெனப்புகல் வாமன்றே"

என்னும் பெரியபுராணச் செய்யுள் இங்கு நோக்கற்பாலது. (கக௨)

அன்னத் தேரின னயன்வலப் பாங்கரு
மராவலி கவர்சேன
வன்னத் தேரினன் மாலிடப் பாங்கரு
மலர்ச்கரங் குவித்தேத்தப்
பொன்னத் தேமலர்க் கொன்றையான் வெள்ளியம்
பொருப்பொடு மெழீஇப்போந்தா
லென்னத் தேரணி மதுரைமா நகர்ப்புறத்
தெய்துவா னவ்வேலை.

(இ - ள்.) அன்னத்தேரினன் அயன்வலப் பாங்கரும் - அன்னமாகிய தேரையுடைய பிரமன் வலப்பக்கத்திலும், அரா வலி கவர் சேன வன்னத் தேரினன் மால் - பாம்பின் வலியைக் கொள்ளை கொள்ளும் கலுழனாகிய அழகிய தேரையுடைய திருமால், இடப் பாங்கரும் - இடப்பக்கத்திலும், மலர்க் கரம் குவித்து ஏத்த-தாமரை மலர் போன்ற கைகளைக் கூப்பிப் பரவவும், பொன் அம் தேம் மலர்க் கொன்றையான் - பொன்போன்ற அழகிய தேனையுடைய கொன்றை மலர் மாலையையுடைய சிவபெருமான், வெள்ளியம் பொருப்பொடும் எழீஇப் போந்தால் என்ன - வெள்ளியங்கிரியோடும் எழுந்து வந்தாற் போல (இடபத்தின் மேல் எழுந்தருளி), தேர் அணி மா மதுரை நகர்ப் புறத்து எய்துவான் - நிலைத்தேரின் வரிசையையுடைய பெரிய மதுரைப்பதியின் புறத்தே வருகின்றான்; அவ்வேலை-அது போது எ - று.

ஊர்தியுட் சிறந்தன தேரும் புரவியும் யானையுமாதலின் ஏனையவற்றையும் அப்பெயர்களோடு சார்த்திக் கூறு முறைமை பற்றி அன்னத்தேர் சேனத்தேர் என்றார். தேரினன் இரண்டும் எச்சம். பொன்னத்தேமலர்: எதுகை நோக்கி வலித்தது. ந எனப் பிரித்துச் சிறந்த வென்றுரைப்பாருமுளர். (ககங)

தேவர்க டேவன் வந்தான் செங்கண்மால் விடையான் வந்தான்
மூவர்கண் முதல்வன் வந்தான் முக்கணெம் பெருமான் வந்தான்
பூவல ரயன்மால் காணாப் பூரண புராணன் வந்தான்
யாவையும் படைப்பான் வந்தா னென்றுபொற் சின்ன மார்ப்ப.

(இ - ள்.) தேவர்கள் தேவன் வந்தான் - தேவர்களுக்கெல்லாம் தேவனாயுள்ளான் வந்தருளினான்; செங்கண்மால் விடையான் வந்தான்-சிவந்த கண்களையுடைய திருமாலாகிய இடபத்தையுடையவன் வந்தருளினான்; மூவர்கள் முதல்வன் வந்தான்-மூன்று கடவுளர்க்கும் முதல்வனாயுள்ளவன் வந்தருளினான்; முக்கண் எம்பெருமான் வந்தான்-மூன்று கண்களையுடைய எம் பெருமான் வந்தருளினான்; பூ அலர் அயன் மால் காணா - தாமரை மலரில் வதியும் பிரமனும் திருமாலுங் காணாத, பூரண புராணன் வந்தான் - எங்கும் நிறைந்த பழையோன் வந்தருளினான்; யாவையும் படைப்பான் வந்தான் - எல்லாவற்றையும் ஆக்குவான் வந்தருளினான்; என்று பொன் சின்னம் ஆர்ப்ப - என்று பொன்னாலாகிய சின்னங்கள் ஒலிக்க எ - று.

மூவர்கள் - படைத்தல், காத்தல், அழித்தல் புரியும் மும்மூர்த்திகள்; இறைவன் மூவர்க்கும் முதல்வனென்பதனை,

"தேவர்கோ வறியாத தேவ தேவன்
செழும்பொழில்கள் பயந்துகாத் தழிக்கு மற்றை
மூவர்கோ னாய்நின்ற முதல்வன்"

என்னும் திருவாசகத்தானுமறிக. பூவலர் என்பதற்கு அழகிய அலரென்றும், பூவிற்றோன்றிய வென்றும் உரைத்தலுமாம். ஒருபொருள் மேற் பலபெயர் வந்த விடத்துத் தனித்தனி வினை கொடுக்கப்பட்டது. (௧௧௪)

பெண்ணினுக் கரசி வாயிற் பெருந்தகை யமைச்ச ரேனை
மண்ணினுக் கரசர் சேனை மன்னவர் பிறரு மீண்டிக்
கண்ணினுக் கினியான் றன்னைக் கண்டெதிர் கொண்டு தாழ
விண்ணினுக் கரச னூரின் வியத்தகு நகரிற் புக்கான்.

(இ - ள்.) பெண்ணினுக்கு அரசி வாயில் பெருந்தகை அமைச்சர்-மங்கையர்க்கரசியாகிய பிராட்டியாரின் அரண்மனை வாயிலுள்ள பெரிய தகுதியையுடைய மந்திரிகளும், ஏனை மண்ணினுக்கு அரசர் - ஏனைய நாடுகட்கு அரசரானவர்களும், சேனை மன்னவர் - சேனைத் தலைவர்களும், பிறரும் ஈண்டி - மற்றையோரும் (மதில் வாயிலின்) நெருங்கி, கண்ணினுக்கு இனியான் தன்னை-கட்புலனுக்கினிய கோலங் கொண்டுள்ள இறைவனை, கண்டு-தரிசித்து, எதிர்கொண்டு தாழ-எதிர் கொண்டு வணங்க (அவர்களோடும்) விண்ணினுக்கு அரசன் ஊரின்-வானுலகிற்கு அரசனாகிய இந்திரனது நகரத்தினும், வியத்தகும் - வியக்கத்தக்க, நகரில் புக்கான்-நகரத்தினுள் புகுந்தருளினான் எ - று.

எண்ணும்மைகள் விரிக்க. ஊரின், இன்: உறழ்; பொருவு. வியக்கத்தகு என்பது வியத்தகு என்றாயிற்று. (௧௧௫)

முகிறவழ் புரிசை மூதூர் முதற்பெரு வாயி*னீந்தி
அகிறவழ் மாட வீதி வலம்பட வணைவா னாக
நகிறழை பொலங்கோம் பன்ன நன்னகர் மகளி ரம்பொன்
துகிறழை மருங்கு லாயத் தோகைபுறந் தழுவச் சூழ்ந்தார்.

(இ - ள்.) முகில் தவழ் புரிசை மூதூர் - மேகந் தவழுகின்ற மதிலையுடைய பழைய பதியாகிய மதுரையின், முதல் பெருவாயில் நீந்தி - முதற்பெருங் கோபுர வாயிலைக் கடந்து, அகில்தவழ் மாடவீதி வலம்பட அணைவான் ஆக - அகிற் புகை தவழ்கின்ற மாளிகைகளையுடைய வீதியில் வலமாக எழுந்தருள, நல் நகர் - நல்ல அந்நகரிலுள்ள, நகில் தழை பொலம் கொம்பு அன்ன மகளிர் - கொங்கைகளாகிய அரும்புகள் தோன்றிய பொற்கொம்பினை ஒத்த பெண்கள், அம் பொன் துகில் தழை மருங்குல் ஆயத் தொகை - அழகிய பொன்னுடை தழைந்த இடையினையுடைய தோழிகள் கூட்டம், புறம் தழுவச் சூழ்ந்தார் - புறத்தே நெருங்கி வர அங்கே சூழ்ந்தார்கள் எ - று.

நகில் - கொங்கை. (ககசு)

தமிழ்முதற் பதினெண் டேத்து மகளிருந் தாரு நாட்டின்
அமிழ்தமன் னவரு முல்லை யம்புயங் குமுத நீலங்
குமிழ்நறுங் கோங்கு காந்தள் கோழிண ரசோகம் வாசம்
உமிழ்தர மலர்ந்த நந்த வனமென வொருங்கு மொய்த்தார்.

(இ - ள்.) தமிழ் முதல் பதினெண் தேத்து மகளிரும் - தமிழ் நாடு முதல் பதினெட்டு நாட்டிலுமுள்ள மாதரும், தாருநாட்டின் அமிழ்தம் அன்னவரும் - கற்பக நாட்டிலுள்ள அமுதமொத்த மகளிரும், முல்லை - முல்லையும், அம்புயம் - தாமரையும், குமுதம் - ஆம்பலும், நீலம் - நீலோற்பலமும், குமிழ் - குமிழும், நறுங்கோங்கு - நறிய கோங்கும், காந்தள் - செங்காந்தளும், கோழ் இணர் அசோகம் - கொழுவிய பூங்கொத்துகளையுடைய அசோகமுமாகிய இவைகள், வாசம் உமிழ்தர - மணம் வீச, மலர்ந்த நந்தவனம் என - பூத்த நந்தவனம்போல, ஒருங்கு மொய்த்தார் - ஒருசேர நெருங்கிச் சூழ்ந்தார்கள் எ - று.

தேத்து: தேம் என்பது அத்துச்சாரியை பெற்று ஈறு முதலுங் கெட்டு முடிந்தது: தேம் - தேசம். பதினெண்டேயம் முற்கூறப்பட்டன. பல், முகம், வாய், கண், மூக்கு, தனம், கை, மேனி என்பவற்றுக்கு முல்லை முதலியன முறையே உவமமாகலின் அவை மலர்ந்த நந்தவனம்போல என்றார். (ககஎ)

எம்மைநீர் விடுதி ரேயோ வென்பபோற் கலையுஞ் சங்கும்
விம்மநாண் மடனு முங்க ணேஞ்சுடை வெளியா ருக
உம்மைநீத் தோடு மந்தோ வுரைத்தன முரைத்தோ மென்று
தம்மைநூ புரங்கால் பற்றித் தடுப்பபோ லார்ப்பச் சென்றார்.

(பா - ம்.) * முகப்பெருவாயில்.

(இ-ள்.) எம்மை நீர் விடுதிரேயோ என்பபோல்-எங்களை நீங்கள் கைவிடுகின்றீர்களோ என்று முறையிடுதல்போல, கலையும் சங்கும் விம்ம-(சோருகின்ற) மேகலையும் வளையும் ஒலிக்கவும், நாண்மடனும்-நாணமும் மடமும், உங்கள் உடை நெஞ்சு வெளி ஆறு ஆக-உங்கள் உடைந்த மனவெளியையே வழி ஆகக்கொண்டு, உம்மை நீத்து அந்தோ ஓடும் - உங்களை விட்டு ஐயோ ஓடிவிடும்; உரைத்தனம் உரைத்தோம் என்று-(அதனைச்) சொன்னேம் சொன்னேம் என்று, தம்மை கால் பற்றி தடுப்பபோல் நாபுரம் ஆர்ப்பச் சென்றார் - தங்களைக் காலைப்பிடித்துத் தடுப்பனபோலச் சிலம்புகள் ஒலிக்கவும் சென்றார் எ - று.

விடுதிரேயோ, ஏ: அசை. கலை-மேகலை. உடை நெஞ்சு என மாறுக. அடுக்கு இரக்கத்தில் வந்தது. என்ப, தடுப்ப: தொழிற் பெயராய் நின்றன. வேட்கையால் உடல் மெலிந்து கலையும் சங்கும் கழலா நிற்கும். இச்செய்யுள் தற்குறிப்பேற்றவணி. (ககஅ)

கடியவிழ் கமலக் காடு பூத்ததோர் கருணை வாரி
அடிமுதன் முடியீ றாக வலர்விழிக் குவளை சாத்திக்
கொடியசெம் பதுமப் போது குழன்மிசைச் சூடு வார்போற்
றொடியணி கரங்கள் கூப்பித் துதியென வினைய சொல்வார்.

(இ - ள்.) கடி அவிழ் கமலக் காடுபூத்தது ஓர் கருணைவாரி - மணம் விரிந்த தாமரைக்காடு பூத்த ஓர் அருட்கடலாகிய இறைவனின், அடி முதல் முடி ஈறாக-திருவடி முதல் திருமுடி முடிய, விழிக் குவளை அலர்சாத்தி-கண்களாகிய நீலமலரைச் சூட்டி, கொடிய செம் பதுமப்போது - கொடியையுடைய செந்தாமரை மலர்களை, குழல் மிசைச் சூடுவார்போல் - (தமது) கூந்தலின் மேலே அணிந்து கொள்வாரைப்போல, தொடி அணி கரங்கள் கூப்பி-வளையல் அணிந்த கைகளைத் தலைமிசைக் குவித்து, துதி என இனைய சொல்வார் - துதி மொழிகள் போல இத்தன்மையவற்றைக் கூறுவார்கள் எ - று.

முகம் கண் கை முதலியன செந்தாமரை மலர் போலுதலின் கமலக்காடு பூத்ததென்றார்;

''கருமுகில் தாமரைக் காடுபூத்து''

என்றார் கம்பரும்; இறைவன் திருமேனி முழுதும் செந்நிறமாதலின் இங்ஙனம் கூறினாரென்னலுமாம்;

''செந் தாமரைக்கா டனைய மேனித் தனிச்சுடரே''

என மாணிக்கவாசகப் பெருமான் அருளிச் செய்தமையுங் காண்க. நோக்கினாரென்பார் 'விழிக்குவளை சாத்தி' என்றார். கமலக்காடு பூத்த வாரியில் குவளை சாத்தி யென்ற நயம் போற்றற்பாலது. அங்கையின் மேல் தோள்காறும் நாளம் போறலின் 'கொடிய செங்கமலப் போது' என்றார். (ககக)

நங்கையேன் னேற்றாள் கோல்லோ
நம்பியைத் தினைத்தற் கென்பார்
மங்கையை மணப்பா னென்னோ
வள்ளலு நோற்றா னென்பார்

அங்கடி மதுரை யென்னோ
வாற்றிய தவந்தா னென்பார்
இங்கிவர் வதுவை காண்பா
னென்னநா நோற்றோ மென்பார்.

(இ - ள்.) நங்கை நம்பியைத் திளைத்தற்கு என் நோற்றாள் என்பார்-(நம்) பிராட்டி இந்த நம்பியைக் கூடித் திளைப்பதற்கு என்ன தவஞ் செய்தாளோ என்று (சிலர்) சொல்லுவார்; வள்ளலும் மங்கையை மணப்பான் என் நோற்றான் என்பார்-இந்த வள்ளலும் (நம்) நங்கையைக் கூட என்ன தவஞ் செய்தானோ என்று (சிலர்) சொல்லுவார்; அம் கடி மதுரை ஆற்றிய தவம் தான் என் என்பார்-அழகிய விளக்கமமைந்த இம்மதுரைப் பதியானது செய்த தவந்தான் யாதோ என்று (சிலர்) சொல்லுவார்; இங்கு இவர் வதுவை காண்பான் நாம் என்ன நோற்றோம் என்பார்-இங்கு இவர்களின் திருமணத்தைக் காணுதற்கு நாம் என்ன தவஞ் செய்தோமோ என்று (சிலர்) சொல்லுவார் எ-று.

நங்கை - மகளிரிற் சிறந்தாள்; பெருமாட்டி. நம்பி - ஆடவரிற் சிறந்தான்; பெருமான். ஓகாரங்கள் வியப்பின்கண் வந்தன. கொள், தான்: அசை. திளைத்தற்கு, மணப்பான், காண்பான் என்பன வினையெச்சங்கள். என்ன-எத்தன்மையவான தவங்கள். இராமாயணத்திலுள்ள,

"நம்பியைக் காண நங்கைக் காயிர நயனம் வேண்டும்
கொம்பினைக் காணுந் தோறுங் குரிசிற்கு மன்ன தேயாம்
தம்பியைக் காண்மி னென்பார் தவமுடைத் துலக மென்பார்
இம்பரிந் நகரிற் றந்த முனிவனை யிறைஞ்சு மென்பார்,"

என்பது முதலிய செய்யுட்களின் கருத்து நயங்கள் இங்கே ஒத்து நோக்கற்பாலன. (௧௨௦)

தென்னவன் வருந்தி மேனாட் செய்தவப் பேறுப் பெற்ற*
தன்மகள் வதுவை காணத் தவஞ்செய்தா னிலனே யென்பார்
கன்னிதன் னழகுக் கேற்ற வழகனிக் காளை யென்பார்
மன்னவ னிவனே யன்றி வேறிலை மதுரைக் கென்பார்.

(இ-ள்.) தென்னவன்-மலயத்துவச பாண்டியன், வருந்தி மேல் நாள் செய்-வருத்தமுற்று முன்னாளிற் செய்த, தவப்பேறுப் பெற்ற-தவப்பயனைப் பெற்ற, தன்மகள் வதுவை காண - தன் புதல்வியாரின் திருமணத்தைக் காணுதற்கு, தவம்செய்தானிலனே என்பார்-தவஞ் செய்திலனே என்று (சிலர்) சொல்லுவார்; கன்னி தன் அழகுக்கு ஏற்ற அழகன் இக்காளை என்பார் - பிராட்டியாரின் அழகுக்குப் பொருந்திய பேரழகுடையவன் இத்தோன்றல் என்று (சிலர்) சொல்லுவார்; மதுரைக்கு மன்னவன் இவனே அன்றி வேறு இலை என்பார்-மதுரைமா நகருக்கு மன்னன் இப்பேரழகனே யல்லாமல் மற்றி யாரும் இல்லை என்று (சிலர்) சொல்லுவார் எ - று. (௧௨௧)

---

(பா - ம்.) * தவப்பேறுற பெற்ற

நங்கைதன் னலனுக் கேற்ப நம்பியைத் தந்த திந்தத்
துங்கமா மதிநூல் வல்ல சுமதிதன் சூழ்ச்சி யென்பார்
அங்கவ டவப்பே றென்பா ரன்னைதன் கன்னிக் கன்றி
இங்கிவன் மருக னாக வெத்தவ முடைய ளென்பார்.

(இ - ள்.) நங்கைதன் நலனுக்கு ஏற்ப - மகளிருட் சிறந்த (நம்) பிராட்டியாரின் அழகுக்குப் பொருந்த, நம்பியைத் தந்தது-ஆடவருட் சிறந்த இந் நம்பியைக் கொணர்ந்தது, இந்தத் துங்கம் மா மதி நூல் வல்ல சுமதிதன் சூழ்ச்சி யென்பார் - இந்த உயர்ந்த பெருமை பொருந்திய அறிவு நூலில் வல்ல சுமதியினுடைய சூழ்ச்சித்திறன் என்று (சிலர்) சொல்லுவார்; அங்கு அவள் தவப்பேறு என்பார் - அங்கு அப் பிராட்டியின் தவப்பயன் என்று (சிலர்) சொல்லுவார்; அன்னை தன் கன்னிக்கு அன்றி - தாயாகிய காஞ்சனமாலை பிராட்டியாரை மகளாகப் பெறுதற்குச் செய்த தவமல்லாமல், இங்கு இவன் மருகன் ஆக எத் தவம் உடையாள் என்பாள் - இங்கு இந் நம்பியை மருகனாகப் பெறுதற்கு என்ன தவத்தை உடையாளோ என்று (சிலர்) சொல்லுவார் எ - று.

மதியையுடைய நூல்வல்ல சுமதி யென்னலுமாம்;
"மதிநுட்ப நூலோ டுடையார்க் கதிநுட்பம்
யாவுள முன்னிற் பவை"

என்னுந் திருக்குறளுங் காண்க. கன்னிக்கு - கன்னியைப் பெறுதற் பொருட்டு. (கஉஉ)

பூந்துகி னெகிழ்ப்பர் சூழ்வர் புணர்முலை யலைப்பர் பூசு
சாந்தினை யுகுப்பர் நாணந் தலைக்கொண்டார் போலச் சாய்வர்
கூந்தலை யவிழ்ப்பர் வாரிக் கூட்டுவர் முடிப்பர் மேனி
மாந்தளி ரெங்கு மாரன் வாளிகள் புதையச் சோர்வார்.

(இ - ள்.) பூந்துகில் நெகிழ்ப்பர், சூழ்வர் - அழகிய ஆடையை நெகிழச் செய்து பின் உடுப்பர்; புணர் முலை அலைப்பர் - நெருங்கிய கொங்கைகளை வருத்துவார்; பூசுசாந்தினை உகுப்பர்-பூசிய சந்தனத்தை உதிர்ப்பார்; நாணம் தலைக்கொண்டார்போலச் சாய்வர் - நாண மீக்கொண்டவரைப் போலத் தலைகுனிவர்; கூந்தலை யவிழ்ப்பர் வாரிக் கூட்டுவர் முடிப்பர் - முடித்த கூந்தலை அவிழ்த்து வாரிச் சேர்த்துப் பின்னும் முடிப்பர்; மேனி மாந்தளிர் எங்கும்-உடலாகிய மாந்தளிர் முழுதும், மாரன் வாளிகள் புதையச் சோர்வார் - மன்மதனுடைய பாணங்கள் தைக்க ஆவி சோர்வார் எ - று.

துகில் நெகிழ்த்தல் முதலியன வேட்கை நோயால் நிகழும் மெய்ப்பாடுகள்;

"கூழை விரித்தல் காதொன்று களைதல்
ஊழணி தைவரல் உடைபெயர்த் துடுத்தலோ
டூழி நான்கே யிரண்டெடன மொழிப"

என்னும் தொல்காப்பியமெய்ப்பாட்டியற் சூத்திரம் நோக்குக. (கஉஙு)

தண்ணளி யொழுக்கஞ் சார்ந்த குணத்தினைச் சார்ந்து மிந்த
வண்ணமேன் மலர்க ளென்னே வாளியாய்த் தைத்த வென்பார்
கண்ணறுங் கூந்தல் வேய்ந்த கடியவிழ் நீலத் தாரும்
வெண்ணகை யரும்பு முல்லைத் தாமமும் வெறுத்து வீழ்ப்பார்.

(இ - ள்.) தண் அளி ஒழுக்கம் சார்ந்த - தண்ணிய அருள் ஒழுக்கத்தைப் பொருந்திய, குணத்தினைச் சார்ந்தும்-குணத்தினை அடுத்தும் (தண்ணிய வண்டுகளின் வரிசையாகிய வில்லின் நாணினை அடுத்தும்), இந்த வண்ணம் மெல் மலர்கள் வாளியாய்த் தைத்த என்னே என்பார்- இந்த நிறம் வாய்ந்த மெல்லிய மலர்கள் கணைகளாய்த் தைத்தன இஃது என்ன அதிசயமென்பார்; கள் நறும் கூந்தல் வேய்ந்த - தேன் மணங் கமழும் கூந்தலி லணிந்த, கடி அவிழ் நீலத்தாரும் - மணத்தொடு மலர்ந்த நீலமலர் மாலையையும், வெள் நகை அரும்பு முல்லைத் தாமமும் - தம் வெள்ளிய பற்கள்போல அரும்பிய முல்லை மாலையையும், வெறுத்து வீழ்ப்பார் - வெறுத்து நீக்குவார்கள் எ - று.

அளி-அருள், வண்டு. ஒழுக்கம் - நடை, வரிசை. குணம்-பண்பு, வில்லின் நாண். அருளொழுக்கத்தோடு கூடிய நற்குணமுடையார் எப்பொழுதும் யார்க்கும் எத்துணையும் இன்னா செய்யாரென்ப; இம் மலர்கள் 'தண்ணளி யொழுக்கஞ் சார்ந்த குணத்தினைச் சார்ந்து' வைத்தும் இன்னாமை செய்யும் விரோத மிருந்த வாறென்னே யென்று சிலேடைப் பொருள்கொண்டு கூறினாரென்க. முல்லை மயக்கத்தையும், நீலம் சாக்காட்டையும் விளைக்கும் காமனம்புகளாதலின் அவற்றை வெறுத்து வீழ்த்தன ரென்க. (கஉச)

விம்மிச்செம் மாந்த கோங்கை மின்னனார் சிலர்விற் காமன்
கைம்மிக்க கணையே றுண்டு கலங்கிய மயக்காற் றங்கள்
மைம்மிக்க நெடுங்கண் மூரல் வதனமு மவனம் பென்றே
தம்மிற்றம் முகத்தை நோக்கார் தலையிறக் கிட்டுச் செல்வார்.

(இ-ள்.) விம்மி செம்மாந்த கொங்கை மின் அனார் சிலர்-பருத்து இறுமாந்த கொங்கைகளையுடைய மின்னை ஒத்த மகளிர் சிலர், வில் காமன் கை மிக்க கணை ஏறுண்டு கலங்கிய மயக்கால்-வில்லையுடைய மதவேளின் வலிமிக்க கணைகள் தைத்துக் கலங்கிய மயக்கத்தால், தங்கள் மை மிக்க நெடுங் கண் - தங்களுடைய மை மிகுந்த நீண்ட கண்களும், மூரல் வதனமும் - பற்களும் முகங்களும், அவன் அம்பு என்று - அவ்வேளின் கணைகளென்று கருதி, தம்மில் தம்முகத்தை நோக்கார்-ஒருவருக்கொருவர் முகத்தை நோக்காதவராகி, தலை இறக்கிட்டுச் செல்வார்-தலையை இறங்கச்செய்து செல்வார்கள் எ - று.

கைம்மிக்க கணை - கையிகந்த துன்ப மிழைக்குங் கணை. கண்ணை நீல மென்றும், மூரலை முல்லையென்றும், முகத்தைத் தாமரையென்றும் கருதினர். இறக்கி யென்பது இடு என்னும் துணைவினை பெற்று விகாரமாய் இறக்கிட்டு என்றாயது. கண் முதலியவற்றைக் காம னம்புகளாகிய மலர்களென மயங்கினமையால் இது மயக்கவணி. (கஉரு)

பற்றிய பைம்பொன் மேனிப் பசப்பது தேரு ரண்ணல்
ஒற்றைமால் விடையின் மேற்கொண் டிருந்துநம் முளத்து மேவப்
பெற்றன மிதேன்கொன் மாயம் பேதைமீர் பெருமா னீண்ட
கற்றைவார் சடைப்பூங் கொன்றை யிதுவன்றே காண்மி னென்பார்.

(இ - ள்.) பைம்பொன் மேனி பற்றிய பசப்பது தேரார் - பசிய பொன்போல மேனியிற் பற்றிய பசப்பு நிறத்தை அறியாதவராய், அண்ணல்-இறைவன், ஒற்றைமால் விடையின் மேற்கொண்டு இருந்தும் - ஒப்பற்ற பெரிய இடபத்தின்மேல் எழுந்தருளியிருந்தும், நம் உளத்தும் மேவப் பெற்றனம்-நமது உள்ளத்தினும் வந்து பொருந்தப் பெற்றேம்; இது என் மாயம் - இஃது என்ன மாயம்; பேதைமீர்-பெண்காள்; பெருமான் - அச் சிவபெருமானது, நீண்ட கற்றைவார் சடைப்பூங் கொன்றை - திரட்சியான நீண்ட சடையிலுள்ள கொன்றை மலர், இது அன்றே-நம்முடம்பிற்றோன்றும் இஃதன்றே, காண்மின் என்பார்-பாருங்களென்று (பசப்பினைக் குறித்துக் காட்டிச்) சொல்லுவார்கள் எ - று.

நம் கண்ணெதிரே புறத்திலுள்ளவன் அகத்தினும் மேவப்பெற்றதொரு விசித்திரம் இருந்தவாறென்னே யென்பார், அவன் நம் அகத்தினும் மேவியுளனென்பதற்கு அடையாளம் என்னை யென்பார்க்கு உடம்பின் பசப்பினைக் காட்டி இஃதவன் கொன்றைமாலை யென்பாரென்க. பசப்பு - வேட்கை நோயுற்றார்க்கு மெய்யிலுளதாகும் நிற வேறுபாடு; அது பொன்னினையும் கொன்றைப் பூவையும் நிறத்தாலொப்பது. மேனி பற்றிய வென்க. பசப்பது, அது: பகுதிப்பொருள் விகுதி. தேரார் கொன்றை யிதுவன்றே என்பார் எனக் கூட்டுக; தேரார்: முற்றெச்சம். இதென்: விகாரம். கொல்: அசை. (௧௬௬)

திங்களென் றெழுந்து நம்மைச் சுடுவதேன்*செந்தீ யென்பார்
புங்கவன் சென்னி மீதுங் கிடப்பதே போலு மென்பார்
அங்கவற் கிந்த வெப்ப மிலைகொலென் றயிர்ப்பா ராற்றக்
கங்கைநீர் சுமந்தா னென்பா ரதனையுங் காண்மி னென்பார்.

(இ - ள்.) செந்தீ-செந் நெருப்பானது, திங்கள் என்று எழுந்து நம்மைச் சுடுவது என் என்பார் - சந்திரன் என்ற பெயரோடு தோன்றி நம்மைச் சுடுவது என்ன காரண மென்பார் (சிலர்); புங்கவன் சென்னி மீதும் கிடப்பதே போலும் என்பார் - இவ்விறைவனது முடியின் கண்ணும் (இது) கிடக்கின்றதே என்பார் (சிலர்); அவற்கு இந்த வெப்பம் இலை கொல் என்று அயிர்ப்பார்-அவனுக்கு இந்த வெம்மை இல்லையோ வென ஐயுறுவார் (சிலர்); ஆற்றக் கங்கை நீர் சுமந்தான் என்பார் - அவ் வெப்பத்தை ஆற்றுதற்கே கங்கை நீரை முடியிற் றாங்கினான் என்பார் (சிலர்); அதனையும் காண்மின் என்பார் - அதனையும் பாருங்கள் என்பார் (சிலர்) எ - று.

திங்கள் முதலிய தண்ணிய பொருளெல்லாம் விரக நோயுற்றார்க்கு அந் நோயை மிகுவித்து வெம்மையவாய்த் தோன்றுமென்க. போலும்: ஒப்பில் போலி. அங்கு: அசை. கொல்: ஐயப்பொருட்டு. ஆற்ற-மிகவு மென்றுமாம். (௧௬௭)

---

(பா - ம்.) * சுடுவதே.

கலையோடு நாணம் போக்கிக் கருத்தோடு வண்ணம் வேருய்
உலையோடு மெழுகிட் டென்ன வுருகுகண் ணீர ராகிக்
கோலையோடு பயில்வேற் கண்ணார் குரிசிறன் பவனி நோக்கி
அலையோடு மதியஞ் சூடு மையன்மெய் யன்ப ரோத்தார்.

(இ-ள்.) கொலையொடுபயில்வேல் கண்ணார்-கொலையிற் பழகும் வேல் போன்ற கண்களையுடைய மகளிர், குரிசில் தன் பவனி நோக்கி-இறைவன் திருவுலாவைக் கண்டு, கலையொடு நாணம் போக்கி-ஆடையோடு நாணினையும் போக விடுத்து, கருத்தொடு வண்ணம் வேருய்-உள்ளத்தோடு நிறமும் வேறுபட்டு, உலையொடு மெழுகு இட்டென்ன-உலையில் மெழுகை இட்டாற்போல, உருகு கண்ணீரராகி-உள்ளம் உருகுதலால் ஒழுகுங் கண்ணீரை யுடையராகி, அலையொடு மதியம் சூடும் ஐயன் மெய் அன்பர் ஒத்தார்-கங்கையோடு சந்திரனையு மணிந்த இறைவனுடைய உண்மை யன்பர்களை ஒத்தார்கள் எ-று.

கலை - மேகலையுமாம். கலையொடு, கருத்தொடு, அலையொடு என்பவற்றில் ஒடு எண்ணுதற் பொருளில் வந்தன. உலையொடு, கொலையொடு: வேற்றுமை மயக்கம். இட்டென்ன - இட்டாலென்ன. அலை: ஆகுபெயர். மதியம், அம்: சாரியை. இறைவனிடத்து மெய்யன்புடையார் 'கற்பனவும் இனியமையும்' என்று நூலறிவைப் போக விடுத்தும், 'நாணது வொழிந்து நாடவர் பழித்துரை பூணது வாகக் கொண்டும், 'தந்த துன் றன்னைக் கொண்டதென் றன்னை' என்றபடி பசுகரணமெல்லாம் சிவகரணமாக மாறப்பெற்றும், 'அழல் சேர்ந்த மெழுகே யன்ன'ராய்'கண்ணீர் ததும்பி' நிற்பராகலின் 'அன்பரொத்தார்' என்ருர். கலை - நிவிர்த்தி முதலிய ஐங்கலையுமாம். (கஉஅ)

நட்டவர்க் கிடுக்க ணேய்த நன்றிகோன் றவர்போற் கையில்
வட்டவாய்த் தோடியுஞ் சங்கு மருங்குசூழ் கலையு நீங்க
இட்டபோற் சிலம்பிட் டாங்கே நன்றியி னிகவார் போற்கால்
ஒட்டியே கிடப்ப நின்ரு ருகுத்தபூங் கோம்ப ரன்னார்.

(இ-ள்.) நட்டவர்க்கு - நண்பினருக்கு, இடுக்கண் எய்த - வறுமை வர, நன்றி கொன்றவர்போல் - அவரை விட்டு நீங்கும் நன்றி கொன்றவர்போல, கையில் வட்டவாய்த் தொடியும் - கையிலணிந்த வட்டமாகிய வாயினையுடைய தொடியும், சங்கும்-வளைகளும், மருங்கு சூழ் கலையும் நீங்க - இடையைச் சூழ்ந்த மேகலையும் நீங்கவும், நன்றியின் இகவார்போல் - நன்றியினின்று நீங்காதவர் போல, இட்ட பொன் சிலம்பு இட்டாங்கே - அணிந்த பொற் சிலம்பு அணிந்தபடியே, கால் ஒட்டியே கிடப்ப - காலில் ஒட்டிக் கிடக்கவும், உகுத்தபூங் கொம்பர் அன்னர் நின்ருர் - உதிர்த்த பூக்களையுடைய கொம்பு போன்றவராய் (அம் மகளிர்) நின்ருர்கள் எ - று.

நீங்க, ஒட்டியே கிடப்ப என்னும் பொருள்களின் ருெழிலை உவமைகட்கும் ஏற்றுக. நன்றி கொன்றவரென்றமையால் முன் நன்றி பெற்றவரென்க. நீங்க உகுத்த பூங்கொம்ப ரன்னராய் நின்ருர் என வியையும். "பூவுதிர் கொம்பென மகளிர் போயினர்" என்று கம்பர் கூறுவது இங்கு ஒத்து நோக்கற்பாலது. இட்டாங்கே: அகரந் தொகுத்தல். (கஉக)

மின்னகு வேற்க ணுளோர் விளங்கிழை விடைமே லையன்
புன்னகைப் போது நோக்கப் போதுமுப் புரமும் வேனின்
மன்னவன் புரமுஞ் சுட்ட வல்லவோ கெட்டேன் வாளா
இன்னவை சுடாது போமோ வேழையேன்* புரமு மென்றாள்.

(இ - ள்.) மின் நகு வேல் கண்ணாள் ஓர் விளங்கு இழை - மின்போல் விளங்கும் வேல்போன்ற கண்களையுடைய ஓர் விளங்கிய அணிகளையுடையாள், விடைமேல் ஐயன்-இடபத்தின்மேல் அமர்ந்தருளும் இவ்வையனுடைய, புன்னகைப் போதும் - புன்னகையாகிய மலரும், நோக்கப் போதும்-நோக்கமாகிய மலரும் (முறையே), முப்புரமும் வேனில் மன்னவன் புரமும் சுட்ட அல்லவோ-மூன்று புரங்களையும் வேனிற் காலத்திற் குரிய மதவேளின் உடலையும் சுட்டன அல்லவா, கெட்டேன் - ஆ கெட்டேனே, இன்னவை - இவைகள், ஏழையேன் புரமும் சுடாது வாளா போமோ என்றாள் - எளியேனது உடலாகிய புரத்தையும் சுடாமல் வீண்போமோ எ - று.

மின்னலைச் சிரிக்கு மெனலுமாம். புரம்-ஊர், உடம்பு. கெட்டேன்: வியப்புப் பொருளில் வந்த இடைச் சொல். ஓகாரங்கள் எதிர்மறை. (கஙo)

உழைவிழி யொருத்தி தன்க ணுருவெளி யாகித் தோன்றுங்
குழகனை யிரண்டு செம்பொற் கொங்கையு மொன்றாய் வீங்கத்
தழுவுவா ளூற்றங் காணா டடமுலை யிரண்டே யாகி
இழையிடை கிடக்க நீங்கி யிருக்கைகண் டிடைபோலெய்த்தாள்.

(இ-ள்.) உழைவிழி ஒருத்தி-மான்போன்ற பார்வையையுடைய ஒரு பெண், தன் கண்-தன் கண்களுக்கு, உருவெளியாகித் தோன்றும் குழகனை-உருவெளியாகிக் காணப்படும் மணவாளக் கோலமுடைய இறைவனை, செம்பொன் கொங்கை இரண்டும் ஒன்றாய் வீங்கத்தழுவுவாள்-செம்பொன்னி னிறம் வாய்ந்த இரண்டு கொங்கைகளும்விம்மி ஒன்றாகுமாறு தழுவுகின்றவள், ஊற்றம் காணாள் - பரிசங் காணாதவளாய், இழை இடைகிடக்க தடமுலை நீங்கி-நூலிழை இடையேதங்குமாறு பெரிய முலைகள் பிரிந்து, இரண்டேயாகி இருக்கை கண்டு-இரண்டாகி யிருத்தலைக் கண்டு, இடைபோல் எய்த்தாள் - தனது இடை மெலிந்திருப்பதுபோல் மெலிந்தாள் எ - று.

உருவெளி-வெளியிற்றோன்றும் பொய்யுருத்தோற்றம்; ஒன்றையிடையறுது சிந்திப்பார்க்கு அது முன்னிற்பதுபோல் தோற்றமுண்டாதலியல்பு. அஃதவன் கண்ணின் குற்றமன்றென்பார் 'உழைவிழியொருத்தி' என அடையடுத்தார். ஊற்றம் - ஊறு; அம்: பகுதிப்பொருள் விகுதி. இழையிடைகிடக்க வென்றமையால் முன் கிடவாமை பெற்றாம். இருக்கை: தொழிற்பெயர். (கஙக)

---

(பா - ம்.) * ஏழையேம்.

வாரிருங் கொங்கை யாளோர் மாதராள் வானோ ருய்யக்
காரிருள் விடமு ண்டன்று கறுத்ததே யன்று கொன்றைத்
தாரிருஞ் சடையார் கண்டந் தையன்மீர் தமது நெஞ்சங்
காரிரும் பென்றே காட்டக் குறியிட்ட கறுப்பே யென்றாள்.

(இ - ள்.) வார் இருங் கொங்கையாள் ஓர் மாதராள் - கச்சினை யணிந்த பெரிய கொங்கையையுடைய ஒருபெண், தையன்மீர்-பெண்களே, கொன்றைத்தார் இருஞ் சடையார் கண்டம் - கொன்றை மாலையையணிந்த நீண்ட சடையையுடைய இவர் திருமிடறானது, அன்று வானோர் உய்ய - முன்னொரு காலத்தில் தேவர்கள் உயிர் பிழைக்க, கார் இருள் விடம் உண்டு கறுத்ததே அன்று - கரிய இருள் போன்ற நஞ்சினை உண்டதனால் கறுத்ததேயன்று; (அதிலுள்ள கருமை), தமது நெஞ்சம் - தமது உள்ளம், கார் இரும்பு என்றே காட்ட - கரிய வலிய இரும்பே யென்பதைக் காட்டும் பொருட்டு, குறியிட்ட கறுப்பே என்றாள் - அடையாளமாக இட்ட கறுப்பே யாகும் என்று கூறினாள் எ - று.

மாதர்-காதல்; உரிச்சொல்; அதனடியாக மாதராள் எனவந்தது. ஏகாரங்கள் தேற்றத்தில் வந்தன. இரும்பே என ஏகாரத்தைப் பிரித்துக் கூட்டுக. நெஞ்சம்: ஆகுபெயர். (௪௨௨)

பொன்னவிர் சடையான் முன்னே
போனதென் னெஞ்சு தூதாய்*
அன்னது தாழ்த்த தென்னென்
றழுங்குவா ளொருத்தி கேட்டேன்
என்னது நெஞ்சம் போன
தென்றன ளொருத்தி கேட்ட
மின்னனாள் வேற்கண் சேந்தாள்
விளைத்தன ளவளும் பூசல்.

(இ - ள்.) என் நெஞ்சு தூதாய்-எனது மனம் தூதாக,-பொன் அவிர் சடையான் முன்னே போனது - பொன்போல் விளங்கும் சடையையுடைய இறைவனிடத்துச் சென்றது; அன்னது - அது, தாழ்த்தது என் என்று-(என்பால் மீண்டுவரத்) தாமதித்தது என்னை யென்று, ஒருத்தி அழுங்குவாள்-ஒருமாது வருந்துவாள்; ஒருத்தி - மற்றொருத்தி, கேட்டேன் - ஆ கேட்டேன், என்னது நெஞ்சம் போனது என்றனள்-என்னுடைய நெஞ்சும் (தூதாகப்) போயிற்று என்றாள்; கேட்ட மின் அனாள் வேல்கண் சேந்தாள் - (அதனைக்) கேட்ட மின்போன்ற அப்பெண் (எனக்குரியவரிடத்து நீ காதல்வைத்தது என்னையெனச் சினந்து) வேல்போன்ற கண்கள் சிவந்தாள்; அவளும் பூசல் விளைத்தனள் - மற்றொருத்தியும் அவளோடு அங்ஙனமே போர்விளைத்தாள் எ - று.

இறைவனைத் தனித்தனி தமக்குக் காதலனாகக் கருதியிருந்த இருமகளிர் தம்முட் பூசல் விளைத்தமை கூறினார்; கண்கள் சேவந்து

---

(பா - ம்) * நெஞ்சந் தூதாய்.

அவளும் போர்செய்தனள் என ஒருத்திக்கே யேற்றிப் பிறர் கூறிய பொருள் பொருந்தாமை காண்க.என்னது:னகரம் விரித்தல். (௧௩௩)

செப்பிளங் கோங்கை யாளோர் தெரிவைநீர் திருநோக் கெம்பால்
வைப்பதேன் மதன்போ லெம்மைச் சுடுவதே* மதனுக் காவி
அப்பொழு தளித்தாற் போலெம் மாவியு மளித்தா லின்று
மெய்ப்புக ழுமக்குண் டின்றேற் பெண்பழி விளையு மென்றாள்.

(இ - ள்.) செப்பு இளங் கொங்கையாள் ஓர் தெரிவை-செப்பினை ஒத்த இளமையாகிய கொங்கையையுடைய ஒருபெண், எம்பால் நீர் திருநோக்கு வைப்பது என்-எம்மிடத்து நீர் திருக்கண் பார்வை வைப்பது எற்றுக்கு, மதன் போல் எம்மைச் சுடுவதே-மதவேளை எரித்தது போல எம்மையும் சுடுகின்றதே,அப்பொழுது மதனுக்கு ஆவி அளித்தாற்போல்-எரித்தஅப்பொழுதே அம்மன்மதனுக்கு உயிரைக்கொடுத்தது போல, எம் ஆவியும் இன்று அளித்தால்-எமது உயிரையும் இப்பொழுதே கொடுப்பீராஞல், உமக்கு மெய்ப்புகழ் உண்டு - உமக்கு உண்மையாகிய புகழ் உளது; இன்றேல் - கொடாவிடில், பெண்பழி விளையும் என்றாள்-பெண்பழி உண்டாகும் என்று கூறினாள் எ - று.

மதனைச் சுட்டதுபோல என விரிக்க. பெண்பழி - பெண்ணைக் கொன்ற பழி; பெண்ணினைக் கொல்லலாகாதென்பது,

“ஆவு மானியற் பார்ப்பன மாக்களும்
பெண்டிரும் பிணியுடையீரும் பேணித்
தென்புல வாழ்நர்க் கருங்கட னிறுக்கும்
பொன்போற் புதல்வர்ப் பெறாஅ தீரும்
எம்மம்பு கடிவிடுது நும்மரண் சேர்மினென
அறத்தாறு நுவலும் பூட்கை.”

என்னும் புறப்பாட்டா னறிக. (௧௩௪)

கவனமால் விடையான் றன்னைக்
கடைக்கணித் திலனேன் றங்கோர்
சுவணவான் கொடியோ ரோவத்
தொழில்வல்லான் குறுக நோக்கி
இவனைநீ யெழுதித் தந்தால்
வேண்டுவ வீவ னென்றாள்
அவனையா ரேழுத வல்லா
ரேன்றன ளாவி சோர்ந்தாள்.

(இ-ள்.) ஓர் வான் சுவணக்கொடி-சிறந்த பொற்கொடிபோன்ற ஒரு நங்கை, கவனம் மால் விடையான் – விரைந்த செலவினையுடைய திருமாலாகிய இடபத்தையுடைய இறைவன், தன்னைக் கடைக்கணித்திலன் என்று - தன்னைக் கடைக்கணிக்காது செல்கின்றானென்று

---

(பா - ம்.) * சுடுவதென்.

கருதி, அங்கு ஓர் ஓவத்தொழில் வல்லான் குறுக - அவ்விடம் ஓவியத் துறையில் கைபோய ஒருவன் வர, நோக்கி - (அவனைப்) பார்த்து, இவனை நீ எழுதித்தந்தால்-இங்குச் செல்லும் குமரனை நீ எழுதித் தர வல்லையேல், வேண்டுவ ஈவன் என்றாள் - நீ வேண்டுவனவற்றைக் கொடுப்பேன் என்றாள், யார் அவனை எழுதவல்லார் என்றனன்-யாவர் அவனை எழுதவல்லவர் (ஒருவருமில்லை) என்று அவன் கூறினான்; ஆவி சோர்ந்தாள்-(அதுகேட்டு அவள்) உயிர் சோர்ந்தாள் எ - று.

கவனம் - வேகம். கடைக்கணித்தல்: பெயரடியாகவந்த வினை. ஓவம்-ஓவியம்: விகாரம். ஈவன், அன்: தன்மையில் வந்தது. அவன் எனவும், என்றலும் அவள் எனவும் வருவித்துரைக்க. (கஙூ)

வலத்தயன் வரவு காணாள் மாலிடங் காணாள் விண்ணோர்
குலத்தையுங்காணாள் மண்ணோர் குழாத்தையுங் காணாள் ஞானப்
புலத்தவர் போலக் கண்ட பொருளெலா மழுமான் செங்கைத்
தலத்தவன் வடிவாக் கண்டா ளொருதனித் தையன் மாது.

(இ - ள்.) ஒரு தனித் தையல் மாது - ஓர் ஒப்பற்ற அழகிய மாது, வலத்து அயன் வரவு காணாள்-வலத்தின்கண் பிரமன் வருதலையும் காணாது, மால் இடம் காணாள்-திருமால் இடத்தின்கண் வருதலையும் காணாது, விண்ணோர் குழாத்தையும் காணாள்-தேவர்கூட்டத்தையும் காணாது, மண்ணோர் குழாத்தையும் காணாள்-மக்கள் கூட்டத்தையும் காணாது, ஞானப் புலத்தவர் போல - மெய்யுணர்வுடைய ஞானியர்போல, கண்டபொருளெலாம் - பார்த்தபொருள் அனைத்தையும், மழுமான் செங்கைத் தலத்தவன் வடிவாக் கண்டாள் - மழுவையும் மானையும் சிவந்த கையிடத்துடைய சிவபெருமானது திருவுருவமாகவே பார்த்தாள் எ - று.

மெய்ஞ்ஞானிகட்கு, 'பிரபஞ்ச பேதமெலாந் தானாய்த்தோன்றி,' என்றபடி எல்லாம் சிவனுருவாய்த் தோன்றுமாகலின் ஞானப்புலத்தவர்போலஎன்றார். அவனையன்றி வேறொருவரையும்கண்டிலளென்பது கருத்து. காணாள் என்பன முற்றெச்சங்கள். வடிவா-வடிவாக. (கஙௌ)

முன்பெற்றங் காலிற்செல்ல வண்ணலை முன்போய்க் காண்பான்
பின்பற்றி யாசைப் பாசம் பிணித்தெழ வோடு வாளோர்
பொன்பெற்ற முலையாள் கோம்ப ருகுமலர் போலத் தாளின்
மின்பெற்ற காஞ்சி தட்ப விலங்கோடு நடப்பா ளோத்தாள்.

(இ - ள்.) பெற்றம் காலின் முன் செல்ல - இடபமானது காற்றைப்போல விரைந்து முன்னே செல்ல, அண்ணலை - இறைவனை, முன் போய்க் காண்பான் - முன்னே சென்று காணுதற்பொருட்டு, பின்பற்றி ஆசைப் பாசம் பிணித்து எழ - பின் றொடர்ந்து ஆசைக் கயிறானது கட்டி இழுத்துச்செல்ல, ஓடுவாள் ஓர் பொன்பெற்றமுலையாள் - ஓடுகின்றவளாகிய ஒரு பொன்போலும் தேமல் பூத்த கொங்கையையுடைய பெண், கொம்பர் உகுமலர் போல மின்பெற்றகாஞ்சி -கொம்பினின்றும் உதிர்கின்ற மலர்போல(இடையினின்றும்நழுவிய) ஒளிமிக்க மேகலையானது, தாளில் தட்ப-தனது காலின்மேல்விழுந்து

தடுக்க, விலங்கொடு நடப்பாள் ஒத்தாள் - விலங்கொடு நடக்கும் ஒரு பெண்ணைப் போன்ருள் எ - று.

காண்பான்: வினையெச்சம். ஓடுவாள்: பெயரெச்சமாயது. கொம்பர்: போலி. உகுமலர்போல என்றமையால் இடையினின்றும் நழுவிய என வருவிக்கப்பட்டது. தட்ப-தடுக்க; தளை: பகுதி (கஅஎ)

விதுக்கலை மிலைந்து செங்கண் விடையின்மேல் வருமா னந்த
மதுக்கட றனைக்கண் வாயான் முகந்துண்டு மகளி ரெல்லாம்
புதுக்கலை சரிவ தோரார் புரிவளை கழல்வ தோரார்
முதுக்குறை வகல்வ தோரார் மூழ்கினர் காம வெள்ளம்.

(இ - ள்.) விதுக்கலை மிலைந்து-சந்திரனது ஒரு கலையையணிந்து, செங்கண் விடையின் மேல் வரும் - சிவந்த கண்களையுடைய இடபத்தின்மேல் வருகின்ற, ஆனந்த மதுக் கடல்தனை - பேரின்பமாகிய தேன் கடலை, மகளிர் எல்லாம் - மாத ரனைவரும், கண் வாயால் முகந்து உண்டு - கண்களாகிய வாயால் மொண்டு குடித்து, புதுக் கலை சரிவது ஓரார்-புதிய ஆடை சோர்வதை உணராமலும், புரிவளை கழல்வது ஓரார் - விரும்பியணிந்த கைவளைகள் கழலுவதை உணராமலும், முதுக் குறைவு அகல்வது ஓரார் - பேரறிவு தம்மினின்றும் நீங்குதலை உணராமலும், காம வெள்ளம் மூழ்கினர் - காம வெள்ளத்தில் மூழ்கினர்கள் எ - று.

இறைவன் ஆனந்தக் கடலாதலை,

"ஆனந்த மாக்கட லாடுசிற் றம்பலம்"

எனவும்,

"ஆனந்த வெள்ளத் தறைகழலோன்"

எனவும் மாணிக்கவாசகப்பெருமான் திருக்கோவையாருட் கூறுதலானு மறிக; அளவுபடாத ஆனந்தமே வடிவாகவுடையவனென்பது கருத்து. சுவை மிகுதியானும் மயங்கச் செய்தலானும் 'மதுக்கடல்' என்ருர்; ஏழுகடலுள் மதுக்கடல் ஒன்ருதலு முணர்க. உண்டற்கருவி வாயாகலின் 'கண்வாயால்' என்ருர். அளவுபடாத அதனுள் தாம் உண்ணலாமளவு உண்டனரென்பார் 'முகந்துண்டு' என்ருர். மதுவுண்டோர் அம்மயக்கத்தால் கலை முதலியன சோர்தலையும் அறிவு கெடுதலையும் உணராமைபோல இவரும் உணராராயினு ரென்க. சரிவது, கழல்வது, அகல்வது: தொழிற்பெயர்கள். ஓரார் மூன்றும் முற்றெச்சம். (கஅஅ)

பைத்தழ கெறிக்கு மாடப் பந்திமே னின்று காண்பார்
கைத்தலங் கூப்பி யாங்கே கண்களு நோக்கி யாங்கே
சித்தமுங் குடிபோய்ச் சொல்லுஞ் செயலுமாண் டங்கண் மாண
வைத்தமண் பாவை யோடு வடிவுவே றற்று நின்ருர்.

(இ - ள்.) பைத்து எறிக்கும் அழகு மாடப் பந்திமேல் நின்று காண்பார் - பசிய ஒளியை வீசும் அழகிய மாட வரிசைகளின்மேல் நின்றுகாணும் பெண்கள், கைத்தலம் கூப்பி யாங்கே-கைகள் கூப்பிய

வண்ணமாகவும், கண்களும் நோக்கியாங்கே - கண்களும் பார்த்த வண்ணமாகவும் (நின்று), சித்தமும் குடிபோய் - மனமும் அவரிடம் குடிபோக, சொல்லும் செயலும் மாண்டு-சொல்லுஞ் செயலும் இறக்க, அங்கண்மாண வைத்த - அவ்விடத்தில் மாட்சிமைப்பட வைத்த, மண் பாவையோடு - சுதையாற் செய்த பாவைகளோடு, வடிவு வேறற்று நின்றார் - வடிவு வேறுபாடின்றி நின்றார்கள் எ-று.

பைத்து - பசியதாகிய ஒளி: பைத்த என்பதன் அகரந் தொக்கதுமாம். கூப்பிய கைகள் கூப்பியபடியும் நோக்கிய கண்கள் நோக்கியபடியும் ஒரு பெற்றியாக நின்றனென்க. போக, மாள என்னும் செயவெனெச்சங்கள் செய்தெனெச்சமாய்த் திரிந்து நின்றன; போய், மாண்டு என்னும் சினை வினைகள் நின்றார் என்னும் முதல் வினையோடு முடிந்தன என்னலுமாம். மண்-ஈண்டுச் சுதை; "மண்மாண் புனைபாவை யற்று" என்பதற்குப் பரிமேலழகர் எழுதிய உரையை நோக்குக. ()

அன்பட்ட புரமுங் காம னுகமுஞ் சுட்ட தீயிம்
மின்பட்ட சடிலத் தண்ணன் மெய்யென்ப தறியார் நோக்கிப்
பொன்பட்ட கலனு மெய்யும் பொரிகின்ற ரவனைப் புல்லின்
என்பட்டு விடுமோ வைய வேழைய ராவி யம்மா.

(இ - ள்.) அன்பு அட்ட புரமும் - அன்பை ஒழித்த திரிபுரத்தாரையும், காமன் ஆகமும் - மதவேளின் உடலையும், சுட்ட தீ - சுட்டெரித்த நெருப்பு, இ மின்பட்ட சடிலத்து அண்ணல் மெய் என்பது அறியார் - இந்த மின்போன்ற சடையையுடைய இறைவனது திருவுருவமே என்பதைச் சிறிதும் அறியாதவராய், ஏழையர் - இம் மகளிர்கள், நோக்கி - (விரும்பிப்) பார்த்து, பொன்பட்ட கலனும் மெய்யும் பொரிகின்றார் - பொன்னுலாகிய அணிகளும் உடலும் பொரியப்பெறுகின்றார்கள்; அவனைப் புல்லின் - அவனைத் தழுவுவாராயின், ஆவி - அவர்கள் உயிர், என் பட்டுவிடுமோ - என்ன பாடுபடுமோ எ-று.

அட்ட-கொன்ற; ஒழித்த. புரம், புரத்தை விடாமல் புரத்திலுள்ளாரையும் உணர்த்திற்று: இலக்கணை. மின்பட்ட, பட்ட: உவமவுருபு. நோக்கு மளவன்றிப் புல்லுதலுஞ் செய்வரேல் என்க. என் - என்ன வருத்தம். ஏழையரென்றார், எளிமை தோன்ற. ஐய என்னும் இடைச்சொல் இங்கு இரக்கக் குறிப்பின்மேனின்றது; ஐய-மென்மையுடைய எனினுமாம். அம்மா: அசைச்சொல். (கசு0)

கோடிகள்பூத் துதிர்ந்த போதிற் கோம்பனார் கலையுஞ் சங்குந்
தோடிகளுஞ் சுண்ணத் தூளுஞ் சுரர்பொழி மலரு நந்தி
அடிகள்கைப் பிரம்பு தாக்கச் சிந்திய வண்ட வாணர்
முடிகளின் மணியுந் தாருங் குப்பையாய் மொய்த்த வீதி.

(இ - ள்.) கொடிகள் பூத்து உதிர்ந்த போதில்-கொடிகளினின்றும் மலர்ந்து சிந்திய மலர்களைப்போல, கொம்பு அனார் கலையும் சங்கும் தொடிகளும் - பூங்கொம்பை ஒத்த மகளிர்பானின்றும் சிந்திய மேகலையும் வளைகளும் தொடிகளும், சுண்ணத் தூளும் - சுண்ணப் பொடியும், சுரர் பொழி மலரும் - தேவர்கள் பொழிந்த மலரும்,

நந்தி அடிகள் கைப்பிரம்பு தாக்கச் சிந்திய - திருநந்திதேவர் கையிலுள்ள பிரம்பு தாக்குதலால் சிதறிய, அண்டவாணர் முடிகளின் மணியும் - தேவர்கள் முடிகளிலுள்ள மாணிக்கங்களும், தாரும் - கற்பகப் பூமாலைகளும் (ஆகிய இவைகள்), வீதி குப்பையாய் மொய்த்த - வீதியின்கண் குப்பையாய் மிக்கன எ - று.

கொடிகளினின்றும் உதிர்ந்தவென்க. உதிர்ந்த வென்பதற்கேற்பக் கலை முதலியவற்றுக்குச் சிந்தியவென்பது வருவிக்கப்பட்டது. அண்டம்-வானுலகம். வாணர், வாழ்நர் என்பதன் மரூஉ. மொய்த்த: அன்பெறாதமுற்று: ஏழனுருபு இறுதிக்கண் தொக்கது;

"ஐயுங் கண்ணு மல்லாப் பொருள்வயின்
மெய்யுருபு தொகா விறுதி யான"

என்றார் ஆசிரியர் தொல்காப்பியனாராகலின். (கசக)

துன்னிய தருப்பை கூட வரசிலை துழாவித் தோய்த்துப்
பொன்னியல் கலச நன்னீர் பூசுரர் வீச வன்னார்
பன்னியர் வட்ட மாக வானவிற் பதித்தா லென்ன
மின்னிய மணிசெய் நீரா சனக்கலம்* விதியாற் சுற்ற.

(இ - ள்.) பூசுரர் - அந்தணர்கள், பொன் இயல் கலச நல் நீர் - பொன்னாலமைந்த கலசத்திலுள்ள நல்ல நீரில், துன்னிய தருப்பை கூட - நெருங்கிய தருப்பை பொருந்தி யிருக்க (அதில்), அரசிலை துழாவித் தோய்த்து வீச - அரசிலையாற் றுழாவித் தோய்த்து அந்நீரை வீசவும், அன்னார் பன்னியர் - அவர்களுடைய மனைவிமார்கள், வான வில் வட்டமாகப் பதித்தால் என்ன - இந்திர வில்லை வட்டமாக வைத்தாற் போல, மின்னிய மணிசெய் நீராசனக் கலம் - விளங்கிய மணிகளை வட்டமாக வைத்துச் செய்த நீராஞ்சனத் தட்டினை ஏந்தி, விதியால் சுற்ற - முறைப்படி சுழற்றவும் எ - று.

பூசுரர் - புவித்தேவர்; கல்வாணரைத் தேவரென்றல் வழக்கு. பன்னி: பத்நி யென்பதன் திரிபு. நீராசனம் - ஆலத்தி. (கசஉ)

கோடிமுர சாடி செம்பொற் குடமணி நெய்யிற் பூத்த
கடிமல ரனைய தீப மங்குசங் கவரி யென்னும்
படிவமங் கலங்க ளெட்டும் பரித்துநேர் பதுமக் கொம்பர்
வடிவினார் வந்து காட்ட மாளிகை மருங்கிற் செல்வான்

(இ - ள்.) பதுமக் கொம்பர் நேர் வடிவினார் - தாமரை மலரையுடைய பூங் கொம்பை யொத்த வடிவத்தையுடைய மகளிர், கொடி - கொடியும், முரசு - பேரிகையும், ஆடி - கண்ணாடியும், செம்பொன் குடம் - சிவந்த பொன்னாலாகிய குடமும், மணி-மணியும், நெய்யில் பூத்த கடிமலர் அனைய தீபம்-நெய்யிலேற்றிய மணம் பொருந்திய மலர் போன்ற விளக்கும், அங்குசம்-தோட்டியும், கவரி-சாமரையும், என்னும் படிவம் - என்று சொல்லப்படும் இவைகளின் வடிவத்தை

(பா - ம்.) * நீராஞ்சனக் கலம்.

யுடைய, மங்கலங்கள் எட்டும் - எட்டு மங்கலங்களையும், பரிந்து வந்து காட்ட - ஏந்தி வந்து காட்டவும், மாளிகை மருங்கில் செல்வான் - திருமாளிகையின் பக்கத்திற் செல்கின்றான் எ - று.

மேல் 'வேள்விச் சாலையும்' என்னுஞ் செய்யுளிற் கூறிய எட்டு மங்கலங்களுள் விடை, சிவற்சம், வலம்புரி, சுவத்திகம் என்பன விலக்கி; கொடி, முரசு, மணி, அங்குசம் என்பன கூட்டியுள்ளமை காண்க; இதனால் இவர் வெவ்வேறான கொள்கைகளையும் மேற்கொண்டிருத்தல் புலனாகும். நெய்யில் முளைத்துப் பூத்த மலர் போலும் என உவமையுமாம். படிவம் - அழகுமாம். பதுமக்கொம்பர்: இல்பொருளுவம; பதுமத்திலுள்ள கொம்பரென விரித்துத் திருமகள் என்றுரைத்தலுமாம். (கசஙு)

சேப்புரங் கவர்ந்த கொங்கை யரம்பையர் தீபங் காட்டுந்
துப்புர வன்பி னார்க்குத் தூயமெய்ஞ் ஞான நல்கும்
முப்புரங் கடந்தான் றன்னை மும்முறை யியங்க ளேங்கக்
கப்புர விளக்கந் தாங்கி வலஞ்செயக் கருணை பூத்தான்

(இ - ள்.) தீபம் காட்டும் துப்புரவு அன்பினார்க்கு - திருவிளக்கிடும் தூய அன்பினையுடைய தொண்டர்களுக்கு, தூய மெய்ஞ்ஞானம் நல்கும் - தூய்மையான மெய்யுணர்வைத் தந்தருளும், முப்புரம் கடந்தான் - மூன்று புரங்களையும் எரித்த இறைவன், செப்பு உரம் கவர்ந்த கொங்கை அரம்பையர் - செப்பினது வலியைப் போக்கிய கொங்கைகளையுடைய தேவமகளிர், கப்புர விளக்கம் தாங்கி-கர்ப்பூர விளக்கினை ஏந்தி, இயங்கள் ஏங்க-வாத்தியங்கள் ஒலிக்க, தன்னை மும்முறை வலஞ்செய - தன்னை மூன்று முறை வலமாக வர, கருணை பூத்தான் - அருள் செய்தான் எ - று.

அரம்பையர் வலஞ்செய எனவும், கடந்தான் கருணைபூத்தான் எனவும் இயையும். துப்புரவு - தூய்மை; உறுதியுமாம். நல்குமென்னும் பெயரெச்சம் கடந்தான் என்பதன் விகுதியைக்கொண்டு முடியும். கப்புரம்: சிதைவு. விளக்கிடுவார்க்கு ஞானம் நல்குதலை,

"விளக்கினார் பெற்றவின்ப மெழுக்கினாற் பதிற்றியாகும்
துளக்கினன் மலர்தொடுத்தாற் றூயவிண் ணேறலாகும்
விளக்கிட்டார் பேறுசொல்லின் மெய்ந்நெறி ஞானமாகும்
அளப்பில கீதஞ்சொன்னார்க் கடிகடா மருளுமாறே"

என்னும் ஆளுடைய வரசுகள் தேவாரத்தானறிக. (கசச)

கோயின்முன் குறுக லோடு மைம்புலக் குறும்பு தேய்த்த
தூயநால் வேதச்செல்வர் சுவத்திக ளோத நந்தி
சேயிருந் தடக்கை பற்றிச் செங்கணே றிழிந்து நேர்ந்து
மாயனு மயனு நீட்டு மலர்க்கர மிருபாற் பற்றி.

(இ - ள்.) கோயில் முன் குறுகலோடும் - திருக்கோயிலின் முன் சென்றவுடன், ஐம்புலக் குறும்பு தேய்த்த-ஐம்புலன்களாகிய குறும்புகளை அழித்த, தூய நால்வேதச் செல்வர் - புனிதமான நான்மறை

வாழ்க்கையையுடைய அந்தணர்கள், சுவத்திகள் ஓத-மங்கலங் கூற, நந்தி சேயிருந் தடக்கை பற்றி - திருநந்தி தேவரின் சிவந்த நீண்ட பெரிய கரங்களைப் பிடித்து, செங்கண் ஏறு இழிந்து-சிவந்தகண்களையுடைய இடபத்தினின்றும் இறங்கி, மாயனும் அயனும் இருபால் நேர்ந்து - திருமாலும் பிரமனும் இருபக்கத்தும் வந்து, நீட்டு மலர்க் கரம்பற்றி-நீட்டிய மலர் போன்ற கைகளைப் பற்றிக்கொண்டு எ-று.

குறும்பு - பகையாகிய குறு நிலவரசு; "அவமிகும் புலப்பகை கடந்து" என்றார் முன்னும். சுவத்தி - நல முண்டாகவெனக் கூறும் மங்கலமொழி. இரு தட: ஒருபொருட் பன்மொழியுமாம். (கசடு)

எதிர்ந்தரு மறைகள் காணா திளைத்தடி சுமந்து காணும்
முதிர்ந்தவன் புருவ மான பாதுகை முடிமேற் சத்தி
பதிந்தவர் தலைமேற் கொண்டு பாசவல் வினைதீர்த் துள்ளம்
பொதிந்துபே ரின்பநல்கும் பொன்னடிப் போது சாத்தி.

(இ - ள்.) அருமறைகள் எதிர்ந்து காணாது - அரிய வேதங்கள் தேடிக்காண மாட்டாமல், இளைத்து-மெலிந்து, அடி சுமந்து காணும் முதிர்ந்த அன்பு உருவமான - (இனி)திருவடிகளைச் சுமந்தாதல்காண வேண்டுமெனக் கருதி முறுகிய அன்புடன் வடிவமாகிய, பாதுகை முடிமேல் - பாதுகையின் முடியின்மேல், சத்தி பதிந்தவர் - சத்திநி பாதம் உற்றவர், தலைமேற்கொண்டு - முடியின்மேற் கொள்ளப் பெற்று, பாச வல்வினை தீர்த்து உள்ளம் பொதிந்து - (அவர்கள்) ஆணவ மாயைகளையும் வலிய வினையையும் போக்கி உள்ளத்தில் நீங்காதுநின்று, பேர்இன்பம் நல்கும் பொன் அடிப்போது சாத்தி-பேரின்பத்தை யருளும் பொன்போன்ற திருவடி மலர்களைச் சாத்தி எ - று.

மறைகள் எதிர்ந்து காணாமல் அன்மைச் சொல்லினாற் கூறியிளைக்கு மென்பது முன்னும் கூறப்பட்டது. காணும் அன்பு - காண வேண்டுமென்னும் அன்புடன். பாதுகை முடிமேல் அடிப்போது சாத்தி என வியையும். சத்தி பதிந்தவர்-சத்திநிபாத முற்றவர்; திருவருட் சத்தி பதியப்பெற்றவர். கொண்டு - கொள்ளப் பெற்று; கொள்ள வென்றுமாம். வினையென வேறு வருதலின் பாசமென்றது ஆணவத்தையும் மாயையும் ஆம்; பாசமாகிய வினையென்று கூறி, ஆணவ மாயைகளை உபலக்கணத்தாற் கொள்ளலுமாம். சத்தி பதிந்த பின் பாச நீக்கமும் இன்பப்பேறும் முறையே உண்டாமென்க. இறைவற்கு வேதமே பாதுகை யென்பதனை,

"மறையே நமது பீடிகையா மறையே நமது பாதுகையாம்"

என இந்நூலுட் பின் வருவதனாலு முணர்க. 'முடிமேற் சாத்தி' என ஒரு சாரார் கொண்ட பாடம் பொருந்தாமை யுணர்க. (கசசு)

பையர வுரியி னன்ன நடைப்படாம் பரப்பிப் பெய்த
கொய்யவிழ் போது நீத்தங்* குரைகழ லடிநனைப்பத்
தெய்வமந் தார மாரி திருமுடி நனைப்பத் தென்னர்
உய்யவந் தருளு மையன் உள்ளெழுந் தருளுமெல்லை.

---

(பா - ம்.) * போதினீத்தம்.

(இ - ள்.) பை அரவு உரியின் அன்ன நடைப் படாம் பரப்பி - படத்தினையுடைய பாம்பின் களைந்த தோலை யொத்த நடைப் பாவாடையை விரித்து (அதன்மேல்), பெய்த - பரப்பிய, கொய் - காம்பு களைந்த, அவிழ் - இதழ் விரிந்த, போது நீத்தம் - மலர்களின் வெள்ளம், குரைகழல் அடி நனைப்ப - ஒலிக்கும் வீரகண்டையை யணிந்ததிருவடிகளை நனைக்கவும், தெய்வ மந்தாரம் மாரி - (தேவர்கள் பொழியும்) தெய்வத்தன்மை பொருந்திய மந்தார மலர் மழை, திருமுடி நனைப்ப - திருமுடியை நனைக்கவும், தென்னர் உய்யவந்தருளும் ஐயன் - பாண்டியர்கள் ஈடேற வந்த தலைவனாகிய சிவபெருமான், உள் எழுந்தருளும் எல்லை - திருக்கோயிலி னுள்ளே எழுந்தருளும் பொழுது எ - று.

மென்மையும் பூத்தொழிலு முடைமையால் படாத்திற்கு அரவுரி உவமம்;

> "நோக்கு நுழைகல்லா நுண்மைய பூக்கனிந்
> தரவுரி யன்ன வறுவை நல்கி"

எனப் பொருநராற்றுப்படையுள் வருதல் காண்க, மந்தாரம் ஏனையவற்றிற்கும் உபலக்கணம். (கஎஎ)

மங்கல மகளி ரோடுங் காஞ்சன மாலை வந்து
கங்கையின் முகந்த செம்பொற் கரகநீ ரனையார் வாக்கத்
திங்களங் கண்ணி வேய்ந்த சிவபரஞ் சோதிபாத
பங்கயம் விளக்கி யந்நீர் தலைப்பெய்து பருகி நின்றாள்.

(இ - ள்.) மங்கல மகளிரோடும் காஞ்சனமாலை வந்து - மங்கல நாண் உடைய பெண்களோடும் காஞ்சனமாலை வந்து, கங்கையின் முகந்த - கங்கையினின்றும் மொண்டு கொண்டுவந்த, செம்பொன் கரகநீர் - சிவந்த பொன்னாலாகிய கரகத்திலுள்ள நீரை, அனையார் வாக்க - அப் பெண்கள் வார்க்க, திங்கள் அம் கண்ணி வேய்ந்த - திங்களாகிய அழகிய மாலையை அணிந்த, சிவபரம் சோதி பாத பங்கயம் விளக்கி - சிவபரஞ் சுடரின் திருவடித் தாமரைகளை விளக்கி, அந்நீர் தலைப்பெய்து பருகி நின்றாள் - அங்ஙனம் விளக்கிய தீர்த்தத்தைச் சென்னியிற் றெளித்து உள்ளும் பருகி நின்று எ - று.

மங்கல மகளிர் - சுமங்கிலிகள். காஞ்சனமாலை கணவனை யிழந்திருத்தலின் 'மங்கல மகளிரோடும் வந்து' என்றார். நின்றாள்: எச்சம். (கஎஅ)

பாதநாண் மலர்மே லீரம் புலரவெண் பட்டா னீவிச்
சீதமென் பனிநீ ராட்டி மான்மதச் சேறு பூசித்
தாதவிழ் புதுமந் தாரப் பொன்மலர் சாத்திச் சென்னி
மீதிரு கரங்கள் கூப்பி வேறுநின் றிதனைச் சொன்னாள்.

(இ - ள்.) நாள் மலர் பாதம்மேல் ஈரம் புலர - அன்றலர்ந்த தாமரை மலர் போன்ற திருவடிகளிலுள்ள ஈரம் புலருமாறு, வெண் பட்டால் நீவி - வெள்ளிய பட்டாடையால் துடைத்து, சீத மென்பனிநீர் ஆட்டி - குளிர்ந்த மெல்லிய பனிநீரால் திருமஞ்சனம் செய்து,

மான்மதச் சேறு பூசி - மிருக மதத்தோடு கலந்த சந்தனக் குழம்பை அப்பி, தாது அவிழ் புது மந்தாரப் பொன் மலர் சாத்தி - மகரந்தத்தோடு விரிந்த புதிய மந்தாரத்தின் பொன்னிறம் வாய்ந்த மலர்களைச் சூட்டி, வேறு நின்று-ஒரு சிறை ஒதுங்கி நின்று, சென்னி மீது இரு கரங்கள் கூப்பி - முடியின் மேல் இரண்டு கைகளையும் குவித்து, இதனைச் சொன்னாள் - இதனைக் கூறுகின்றாள் எ - று.

நீவுதல் - துடைத்தல். இருகரங்களும்என்னும் உம்மை தொக்கது. வேறு நின்று-ஒதுங்கி நின்று. இதுவென்றது மேல்வருவதனை. (கசக)

அருமையா லடியேன் பெற்ற வணங்கினை வதுவை செய்தித்
திருநகர்த் திருவுங் கன்னித் தேயமுங் கைக்கொண் டாள்கென்
றுரை செய்தா ளதற்கு நேர்வா ருண்ணகை யுடைய ராகி
மருகனா ரியங்க ளார்ப்ப வதுவைமண் டபத்தைச் சார்ந்தார்.

(இ-ள்.) அருமையால் அடியேன் பெற்ற அணங்கினை - அரிய தவத்தால் அடியாளாகிய யான் பெற்ற தெய்வக் கன்னியை, வதுவை செய்து-திருமணம் செய்து, இ திருநகர்த் திருவும் கன்னித் தேயமும்- இந்த அழகிய நகரின் செல்வத்தையும் கன்னி நாட்டையும், கைக்கொண்டு ஆள்க என்று உரை செய்தாள்-பெற்று ஆள்வீராக என்று கூறி வேண்டினாள்; அதற்கு நேர்வார் மருகனார் - அதற்கு உடன்படுவாராகிய மருமகனார், உள் நகை உடையராகி - புன்னகை உடையவராகி, இயங்கள் ஆர்ப்ப வதுவை மண்டபத்தைச் சார்ந்தார்-இயங்கள் ஒலிக்கத் திருமண மண்டபத்தை அடைந்தார் எ - று.

ஆள்கென்று அகரந் தொக்கது. நேர்வாராகிய மருமகனாரென்க. மருமகனார் நேர்வாராய் என வுரைத்தலுமாம். நேர்தற் குறிப்பைப் புலப்படுத்தினா ரென்பார் 'உண்ணகை யுடையராகி' என்றார். (கஉ0)

அருத்தநான் மறைக ளார்ப்ப வரிமணித் தவிசி லேறி
நிருத்தனாங் கிருந்து சூழ நின்றமா லயனை யேனை
உருத்திரா தியரைப் பின்னு மொழிந்தவா னவரைத் தத்தந்
திருத்தகு தவிசின் மேவத் திருக்கடை நாட்டம் வைத்தான்.

(இ-ள்.) நிருத்தன் - இறைவன், அருத்தம் நால் மறைகள் ஆர்ப்ப - பொருளமைந்த நான்கு மறைகளும் ஒலிக்க, மணி அரித் தவிசில் ஏறி ஆங்கு இருந்து - இரத்தின சிங்காதனத்திலேறி வீற்றிருந்து, சூழ நின்ற - சுற்றிலும் நின்ற, மால் அயனை - திருமாலையும் பிரமனையும், ஏனை உருத்திர ஆதியரை-மற்றை உருத்திரர் முதலானவரையும், பின்னும் ஒழிந்த வானவரை - மற்றும் எஞ்சிய தேவரையும், தத்தம் திருத்தகு தவிசில் மேவத் திருக்கடை நாட்டம் வைத்தான்-அவரவர்க் கமைந்த அழகு பொருந்திய ஆதனங்களில் இருக்குமாறு திருக்கடைக்கண் செய்தருளினான் எ - று.

ஆங்கு: அசை. சிறப்பு நோக்கி 'உருத்திராதியரை' யென்றும், 'ஒழிந்த வானவரை' யென்றும் பிரித்தோதினார். கடைநாட்டம் வைத்தல் - கடைக்கணித்தல். (கஉக)

விண்டல வானே ரேனோர் மிடைதலான் ஞாலச் செல்வி
பண்டைய ளன்றி யின்று பரித்தனள் பௌவ மேழும்
உண்டவன் றன்னைத் தானின் றுத்தரத் திருத்தி னானே
அண்டர்நா யகன்ற னாணை வலியினோ வறியே மம்மா.

(இ - ள்.) விண் தல வானோர் ஏனோர் மிடைதலால் - வானுலகத்தவராய தேவர்களும் ஏனைய உலகத்தவர்களும் நெருங்குதலால், ஞாலச் செல்வி - புவிமகள், பண்டையள் அன்றி இன்று பரித்தனள் - முன்போல ஒருபுறஞ் சாயாது இன்று சம நிலையில் நின்றே தாங்கினள்; பௌவம் ஏழும் உண்டவன் தன்னை - ஏழுகடலையும் பருகிய குறுமுனியை, தான் இன்று உத்தரத்து இருத்தினானே - தான் இப்பொழுது வடதிசையிலிருக்கச் செய்தானோ (அன்றி), அண்டர் நாயகன் தன் ஆணை வலியினோ - தேவர்களுக்கு நாயகனாகிய சிவபெருமானது ஆணை வலிமையினாலோ, அறியேம்-நாம் அறியோம் எ - று.

மிடைதலாற் பண்டு எய்திய தன்மையாளன்றி யென்க. முன்மலயரையன் புதல்வியாக விருந்த இறைவியைத் திருமணஞ் செய்யுங் காலத்தில் வானோரும் ஏனோரும் கூடியிருந்தமையால் புவியின் தெற்கெல்லை உயர்ந்து வடக்கெல்லை தாழ்ந்ததாகலின் 'பண்டையளன்றி' என்றார். அப்பொழுது அகத்தியனைத் தெற்கிலிருத்திப் புவியைச் சமனுறச் செய்தானாகலின் 'இன்றுத்தரத் திருத்தினானே, என்றார். தான் : இறைவன். இருத்த அதனானோ அன்றி வலியினானோ என்க. அவனது திருவருளின் பெற்றி உணர்தற் கரிதென்பார் 'அறியேம்' என்றார். அம்மா: வியப்பிடைச்சொல். (கஙஉ)

மாமணித் தவிசில் வைகி மணவினைக் கடுத்த வோரை
தாம்வரு மளவும் வானத் தமனிய மலர்க்கோம் பன்னார்
காமரு நடன நோக்கிக் கருணைசெய் திருந்தா னிப்பாற்
கோமகள் வதுவைக் கோலம் புனைதிறங் கூற லுற்றேன்.

(இ - ள்.) மாமணித் தவிசில் வைகி - பெரிய மணிகள் பதித்த சிங்காதனத்தில் வீற்றிருந்தருளி, மண வினைக்கு அடுத்த ஓரை வரும் அளவும் - திருமணச் செயலுக்குப் பொருந்திய முழுத்தம் வருங்காறும், வானத் தமனிய மலர்க் கொம்பு அன்னார் - வானுலகத்துள்ள பொற்பூங் கொம்பை யொத்த அரம்பையர் புரியும், காமரு நடனம் நோக்கிக் கருணைசெய்து இருந்தான்-அழகிய ஆட்டத்தைப் பார்த்து அருள் செய்து இருந்தான்; இப்பால் - இனி, கோமகள் வதுவைக் கோலம் புனைதிறம் கூறலுற்றேன்-அரச குமாரியாகிய தடாதகைப் பிராட்டியார் திருமணக்கோலம் செய்துகொள்ளும் வகையைச்சொல்லத் தொடங்கினேன் எ - று.

அடுத்த-பொருந்திய; ஓரை - இலக்கினம்; முழுத்தம். தாம்: அசை. காமரு, உ: சாரியை; காமம் மரு என்பது காமரு என்றாயிற்று எனலுமாம். (கஙங)

மாசறுத் தெமையா னந்த வாரிநீ ராட்டிப் பண்டைத்
தேசுரு விளக்க வல்ல சிவபரம் பரையைச் செம்பொன்
ஆசனத் திருத்தி நான மணிந்துகுங் குமச்சே றப்பி
வாசநீ ராட்டி ஞர்கண் மதிமுகக் கோம்ப ரன்னார்.

(இ - ள்.) மாசு அறுத்து எம்மை ஆனந்த வாரி நீர் ஆட்டி-பாச மாகிய குற்றத்தைப்போக்கி எம்மைப் பேரின்ப வெள்ள நீரில்மூழ்கு வித்து, பண்டைத் தேசு உரு விளக்க வல்ல சிவ பரம்பரையை-அநாதியேயுள்ள ஒளி யுருவை விளக்க வல்ல சிவசத்தியாகிய பிராட்டியாரை, மதிமுகக் கொம்பர் அன்னார் - சந்திரன்போலு முகத்தையுடைய பூங்கொம்பு போன்ற மகளிர் செம்பொன் ஆசனத்து இருத்தி-சிவந்த பொற்றவிசி லிருக்கச் செய்து, நானம் அணிந்து குங்குமச் சேறு அப்பி-கத்தூரி திமிர்ந்து குங்குமச் சேற்றைப்பூசி, வாசநீர்ஆட்டினார்கள்-மணமூட்டிய நீரால் திருமஞ்சனஞ் செய்வித்தார்கள் எ-று.

ஆனந்த வாரிநீர் என்பதனை,

''வான்வந்த சிந்தை மலங்கழுவ வந்திழியும்
ஆனந்தங் காணுடையா னாறு''

எனத் திருவாசகம் திருத்தசாங்கத்துட் கூறுதலானுமறிக. ஆன்மாவானது சொரூபத்தில் கறையற்ற தாகலின் ''பண்டைத்தேசுரு' என்றார்; தேசு - ஒளி; சிவத்துவ மென்னலுமாம்;

''சிவனுளத்தே தோன்றித் தீயிரும்பைச் செய்வதுபோற்
சீவன் றன்னைப்
பந்தனையை யறுத்துத்தா னாக்கித்தன் னுருவப்
பரப்பையெலாங் கொடுபுகுந்து பதிப்பனிவன் பாலே''

எனச் சிவஞானசித்தி கூறுவது காண்க. இறைவன் தன் அருட் சத்தியால் ஆன்மாக்களின் பாசத்தை யகற்றிச் சொரூபத்தை விளக்குதல் கூறினார். (௩௫)

முரசோடு சங்க மேங்க மூழ்கிநுண் டூசு சாத்தி
அரசிய லறத்திற் கேற்ப வந்தணர்க் குரிய தானம்
விரைசெறி தளிர்க்கை யார வேண்டுவ வெறுப்பத் தந்து
திரைசெய்நீ ரமுத மன்னா டிருமணக் கோலங் கொள்வாள்.

(இ - ள்.) முரசொடு சங்கம் ஏங்க - பேரிகையும் சங்கமும் ஒலிக்க, மூழ்கி-நீராடி, நுண் தூசு சாத்தி-மெல்லிய ஆடை உடுத்து, அரசியல் அறத்திற்கு ஏற்ப-அரச தருமத்துக்குப் பொருந்த, அந்தணர்க்கு உரிய தானம் - அந்தணர்க்குப் பொருந்திய தானங்களாக, வேண்டுவ வெறுப்ப. அவர்கள் வேண்டும் பொருள்களை வெறுக்குமாறு, விரை செறி தளிர்க்கை ஆரத் தந்து-மண மிக்க தளிர் போன்ற கையால் நிறையக்கொடுத்து, திரைசெய் நீர் அமுதம் அன்னாள்-அலைகளை வீசுகின்ற கடலிற்றோன்றிய அமுதம்போன்ற பிராட்டியார், திருமணக் கோலம் கொள்வாள்-திருமணக் கோலம் செய்து கொள்ளத் தொடங்கினார் எ - று.

வேண்டுவ: வினையாலணையும் பெயர். அவாவற என்பார் 'வெறுப்ப' என்றார். (கஙஉ)

செம்மலர்த் திருவும் வெள்ளைச் செழுமலர்த் திருவுந் தங்கள்
கைம்மலர்த் தவப்பே றின்று காட்டுவார் போல நங்கை
அம்மல ரனிச்ச மஞ்சு மடியிற்செம் பஞ்சு தீட்டி
மைம்மலர்க் குழன்மேல் வாசக் காசறை வழியப் பெய்து.

(இ-ள்.) செம்மலர்த் திருவும்-செந்தாமரை மலரில் இருக்கும் திருமகளும், வெள்ளைச் செழுமலர்த் திருவும்-செழுமையாகிய வெண்டாமரை மலரில் இருக்குங் கலைமகளும், தங்கள் கைமலர் தவப்பேறு இன்று காட்டுவார்போல - தங்கள் கைகளாகிய மலர் செய்த தவப் பயனை இன்று காட்டுகின்றவர்போல, நங்கை அம் அனிச்ச மலர் அஞ்சும் அடியில் - பிராட்டியாரின் அழகிய அனிச்சப் பூவை மிதிக்க அஞ்சுகின்ற திருவடிகளில், செம்பஞ்சு தீட்டி-செம்பஞ்சுக்குழம்பை ஊட்டி, மை மலர்க் குழல்மேல் - முகில் போன்ற மலரை யணிந்த கூந்தலில், வாசக்காசறை வழியப் பெய்து - மணமுள்ள மயிர்ச் சாந்தை நிறையப் பூசி எ - று.

கல்வியும் செல்வமாகலின் கலைமகளைத் திருவென்னும் பெயராற் கூறினார். மென்மைக்கு ஆற்றாது அனிச்சமும் அஞ்சும் அடி யென்னலுமாம். (கஙச)

கோங்கையின் முகட்டிற் சாந்தங் குளிர்பனி நீர்தோய்த் தட்டிப்
பங்கய மலர்மே லன்னம் பவளச்சேவ் வாய்விட் டார்ப்பத்
தங்கிய வென்ன வார நூபுரந் ததும்பச் செங்கேழ்
அங்கதிர் பாதசாலங் கிண்கிணி யலம்பப் பெய்து.

(இ-ள்.) கொங்கையின் முகட்டில்-கொங்கைகளின் உச்சியில், சாந்தம் குளிர் பனி நீர் தோய்த்து அட்டி - சந்தனத்தைக் குளிர்ந்த பனிநீரில் குழைத்துச் சொரிந்து, பங்கய மலர்மேல்-தாமரை மலரின் மேல், அன்னம் - அன்னங்கள், பவளச் செவ்வாய் விட்டு ஆர்ப்பத் தங்கிய என்ன-(தமது) பவளம் போன்ற சிவந்த வாயைத் திறந்து ஒலிக்கத் தங்கினமைபோல, ஆர-பொருந்த, நூபுரம் ததும்ப-சிலம்பு ஒலிக்கவும், செம் கேழ் அம் கதிர் பாத சாலம் கிண்கிணி அலம்ப - சிவந்த நிறத்தையும் அழகிய ஒளியையுமுடைய பாதசாலமும் கிண்கிணியும் ஒலிக்கவும், பெய்து - அவற்றைத் திருவடிகளில் அணிந்து எ - று.

குளிர் பனிநீர் என்புழிப் பனிநீர் பெயர். சிலம்பொலிக்கு அன்னத்தினொலி உவமம். அடிகள் தாமரை மலர் போலுதலின் 'பங்கய மலர்மேல் அன்னம்......தங்கிய வென்ன' என்றார். தங்கிய: தொழிற் பெயர். பாதசாலம் - பரியகம் என்றும் கூறப்படும்; பரியகம் இன்னதென்பதனை,

"பொன்னிதழ் பொதிந்த பன்னிற மணிவடம்
பின்னிய தொடரிற் பெருவிரன் மோதிரம்
தன்னொடு தொடக்கித் தமனியச் சிலம்பின்
புறவாய்ச் சூழ்ந்து புணரவைப் பதுவே"

என்னுஞ் சூத்திரத்தாலறிக. (கஙரு)

கோடிரண் டிரட்டி கோத்த விரிசிகை யிருபத் தோன்றிற்
பண்ணிய கலாப மீரேழ் பருமநா லிரண்டிற் செய்த
வண்ணமே கலையி ரண்டிற் காஞ்சியிவ் வகையோ ரைந்தும்
புண்ணியக் கோடிவண் டார்ப்பப் பூத்தபோற் புலம்பப் பூட்டி.

(இ - ள்.) எண் இரண்டு இரட்டி கோத்தவிரிசிகை - முப்பத்திரண்டு கோவையாகக் கோத்த விரிசிகையும், இருபத்தோன்றில் பண்ணிய கலாபம் - இருபத்தொரு கோவையாகச் செய்த கலாபமும், ஈர் ஏழ் பருமம் - பதினான்கு கோவையாக இயற்றிய பருமமும், நால் இரண்டில் செய்தவண்ணம் மேகலை - எட்டுக் கோவையாகச் செய்த அழகிய மேகலையும், இரண்டில் காஞ்சி - இரண்டு கோவையாகச் செய்த காஞ்சியுமென, இவ்வகை ஓர் ஐந்தும் - இவ் வேறுபாட்டையுடைய ஐந்து அணிகளையும், புண்ணியக் கோடி வண்டு ஆர்ப்பப் பூத்தது போல் - ஓர் அறக்கொடியானது வண்டுகள் ஒலிக்கப் பூத்திருத்தல் போல், புலம்பப் பூட்டி - ஒலிக்கும்படி இடையிலணிந்து எ - று.

கோத்த வென்றதனால் கோவையென்பது கொள்க. இருபத்தொன்று முதலியவற்றோடும் கோவை யென்பதனைக் கூட்டி, ஆக வென விரித்துரைக்க. இவையெல்லாம் இடையிலணியும் அணிகள். பூத்த: தொழிற்பெயர் ஈறு தொக்கது. (சுகூஅ)

பொன்மணி வண்டு வீழ்ந்த காந்தளம் போது போல
மின்மணி யாழி கோத்து மெல்விரற் செங்கைக் கேற்ப
வன்மணி வைர யாப்புக் கடகமுந் தோடியும் வானத்
தென்மணிக் கரங்கள் கூப்ப விருதடந் தோளி லேற்றி.

(இ - ள்.) பொன் மணி வண்டு வீழ்ந்த - பொன்னிறமும் நீலமணியின் நிறமும் வாய்ந்த வண்டுகள் தங்கிய, காந்தள் அம் போது போல - அழகிய காந்தள் மலர்போல, மெல் விரல் - மெல்லிய விரல்கள் (தோன்ற), மின் மணி ஆழி கோத்து - (அவற்றில்) ஒளிவிடும் நீலமணி பதித்த பொன் மோதிரத்தை அணிந்தும், செங்கைக்கு ஏற்ப - சிவந்த கைகளுக்குப் பொருந்த, வல் மணி வைர யாப்புக் கடகமும் - வலிய வைரத்தாற் செய்த தலைப்பூட்டையுடைய கடகங்களையும், இருதடம் தோளில் - இரண்டு பிணைத்த தோள்களில், தொடியும் - தொடிகளையும், வானத்து எல் மணி கரங்கள் கூப்ப - வானிலுள்ள சூரியன் கரங்களைக் குவிக்குமாறு, ஏற்றி - அணிந்து எ - று.

மணியாழி - மரகதத்தாள் செறியுமாம்;

"வாங்குவில் வயிரத்து மரகதத் தாள்செறி
காந்தண் மெல்விரல் கரப்ப வணிந்து"

என்பது சிலப்பதிகாரம். மெல்விரல் தோன்றக் கோத்தென்க. பத்திகளில் வயிரங்களழுத்தப்பட்ட கடகமுமாம்;

"மத்தக மணியொடு வயிரங்கட்டிய
சித்திரச் சூடகம்"

என்பது சிலப்பதிகாரம். வானத்தினுள்ள எல்லாகிய மண்டலன்பாக்; வான்மணி யென்பது சூரியனுக் கொரு பெயர். கைகுவித்து வணங்க வெனவும், ஒளி சுருங்கவெனவும் பொருள்படக் 'கரங்கள் கூப்ப' என்றார்; கரம் - கை, கிரணம். (கருக)

மரகத மாலை யம்போன் மாலைவித் துரும மாலை
நிரைபடு* வான வில்லி னிழல்பட வாரத் தாமம்
விரைபடு களபச் சேறு மெழுகிய புளகக் கோங்கை
வரைபடு மருவி யன்றி வனப்புநீர் நுரையு மான.

(இ - ள்.) விரைபடு களபச் சேறு மெழுகிய புளகக் கொங்கை - மணம் பொருந்திய களபக்குழம்பால் மெழுகப்பட்ட புளகமரும்பிய கொங்கைகளில், மரகத மாலை அம் பொன் மாலை வித்துரும மாலை - மரகத மாலையும் அழகிய பொன் மாலையும் பவள மாலையும், நிரைபடு வான வில்லின் நிழல்பட - வரிசைப்பட்ட இந்திர வில்லைப்போல ஒளி வீசவும், ஆரத் தாமம் - முத்துமாலை, வரைபடும் அருவியன்றி - மலையினின்றும் வீழும் அருவியை யொத்திருப்பதன்றி, வனப்பு நீர் நுரையு மான - அழகாகிய நீரின் நுரையையும் ஒத்திருக்கவும் எ - று.

பன்னிற மாலைகளாதலின் இந்திரவில்லை உவமை கூறினர். வித்துருமம் - பவளம். ஆரம் - முத்து. களபம் - கலவை. வனப்பாகிய நீர் என உருவகம். (கசுo)

உருவமுத் துடுவா யம்முத் துடுத்தபல் காசு கோளாய்
மருவ்வக் காசு சூழ்ந்த மாமணி கதிராய்க் கங்குல்
வெருவவிட் டிமைக்கு மார மேருவின் புறஞ்சூழ்ந் தாடுந்
துருவசக் கரம்போற் கோங்கை துயல்வர விளங்கச் சூட்டி.

(இ - ள்.) உருவம் முத்து உடுவாய் - பருத்த முத்துக்கள் விண்மீன்களாகவும், அ முத்து உடுத்த பல்காசு கோளாய் - அம் முத்துக்களைச் சூழ்ந்த பல மணிகள் கோட்களாகவும், அ காசு சூழ்ந்த மாமணி கதிராய் மருவ - அம்மணிகளாற் சூழப்பட்ட பெரிய நடு நாயக மணி சூரியனாகவும் பொருந்தப் (புனைந்த), கங்குல் வெருவ விட்டு இமைக்கும் ஆரம் - இருளஞ்சியோட ஒளிவிட்டு விளங்கும் பதக்கமானது, மேருவின் புறம் சூழ்ந்து ஆடும் துருவ சக்கரம் போல் - மேரு மலையின் புறத்தைச் சூழ்ந்து செல்லும் துருவ சக்கரம் போல, கொங்கை துயல் வர - அக் கொங்கைகளில் அசையவும், விளங்கச் சூட்டி - விளக்கமுற அணிந்து எ - று.

கோள் - ஈண்டு ஞாயிறும் இராகு கேதுக்களும் ஒழிந்த ஏனைய கிரகங்கள். ஆய் : செயவெனெச்சத் திரிபு. ஆரம்-பதக்கம். துருவசக்கரத்தில் கோட்களும் நாட்களும் உடுக்களும் அடங்கியிருத்தலின் அதனை உவமை கூறினர். கொங்கையை மேருவாகக் கொள்க. மேற் பாட்டிலுள்ள நிழல்பட, மான என்னும் எச்சங்களையும், இப்பாட்டிலுள்ள துயல்வர என்னும் எச்சத்தையும் சூட்டி யென்பதனைக் கொண்டு முடிக்க. இச்செய்யுளில் உருவகத்தை அங்கமாகக்கொண்டு உவமையணி வந்தது. (கசுக)

(பா - ம்.) * நிரைபட.

கோடிக்கய லினமாய் நின்ற கோட்சுரு வேறும் வீறு
தோடிக்கலை மதியுந் தங்கோன் றேல்குல விளக்காய்த் தோன்றும்
பிடிக்கிரு காதி னூடு மந்தணம் பேசு மாபோல்
வடிக்குழை மகரத் தோடு பரிதிவாண் மழுங்கச் சேர்த்து.

(இ - ள்.) கொடி கயல் இனமாய் நின்ற கோள் சுரு ஏறும் - கொடியில் எழுதிய கயலுக்குச் சுற்றமாக நின்ற வலிய மகர வேறும், வீறு கலைதொடி மதியும் - உயரும் கலைகளையுடைய வட்டமாகிய சந்திரனும், தம் கோன் தொல் குல விளக்காய்த் தோன்றும் பிடிக்கு - தம் தலைவனாகிய மலயத்துவச பாண்டியனுக்குப் பழைய குலவிளக்காய்த் தோன்றியருளிய பெண்யானை போன்ற பிராட்டியாரின், இரு காதின் ஊடும் மந்தணம் பேசுமா போல் - இரண்டு திருச்செவிகளினும் இரகசியம் பேசுந் தன்மைபோல. வடிக்குழை - வடித்த குழைகளை, மகரத்தோடு - மகர குண்டலங்களோடு, பரிதிவாள் மழுங்கச் சேர்த்து - சூரியன் ஒளி மழுங்குமாறு அணிந்து எ - று.

கோள் - வலிமை. தொடி - வட்டம். தங்கோன் என்பதற்குச் சுறவுக்கேற்பத் தம் தலைவன் என்றும், மதிக் கேற்பத் தம் வழியில் வந்த தலைவன் என்றும் பொருள் கொள்க. பாண்டியர் குலம் 'படைப்புக் காலந் தொடங்கி மேம்பட்டு வரு'வதாகலின் 'தொல் குலம்' என்றார்; பாண்டியர்க்குப் பழையர் என்பது ஓர் பெயராதலும் நோக்குக. மந்தணம் - மறை; மந்தணம் பேசுவார் பிறரறியாவாறு காதிற் பேசுவரென்க; "செவிச் சொல்லும்" என்றார் வள்ளுவனாரும். மகரம்-மகர குண்டலம்; தோடு எனப் பிரித்தல் பொருந்தாது. (கசுஉ)

மழைக்குமா மதிக்கு நாப்பண் வாணவிற் கிடந்தா லோப்ப
இழைக்குமா மணிசூழ் பட்ட மிலம்பக மிலங்கப் பெய்து
தழைக்குமா முகிலை மைந்தன் றளையிடல் காட்டு மாபோற்
குழைக்குநீர்த் தகர ஞாழற் கோதைமேற் கோதை யார்த்து.

(இ - ள்.) மழைக்கும் மாமதிக்கும் நாப்பண்-முகிலுக்கும் நிறை மதிக்கும் நடுவில், வானவில் கிடந்தால் ஒப்ப - இந்திரவில் கிடந்தாற்போல, இழைக்கும் மாமணி சூழ் பட்டம் - அழுத்திய பெரிய மணிகள் சூழ்ந்த பட்டமும், இலம்பகம்- நுதலணி மாலையும், இலங்கப் பெய்து-விளங்க அணிந்து, தழைக்கும் மா முகிலை-செழித்த கரிய முகிலை, மைந்தன் தளையிடல் காட்டுமாபோல்-புதல்வனாகிய உக்கிர குமார பாண்டியன் (பின்) தளையிடுதலைக் காட்டுதல் போல, நீர் குழைக்கும் தகர ஞாழல் கோதைமேல் - பனிநீரில் குழைத்த மயிர்ச் சாந்தணிந்த கூந்தலின்மேல், கோதை ஆர்த்து-மாலையைச் சூட்டி எ-று.

இலம்பகம் - நெற்றிச் சூட்டாகிய மாலை. காட்டுமாறு: ஈறு தொக்கது. தகர ஞாழல்: தகரமும் ஞாழலும் கூடிய சாந்து என அன்மொழித் தொகை. (கசுங)

கற்பகங் கோடுத்த விந்தக் காமரு கலன்க ளேல்லாம்
போற்பமெய்ப் படுத்து முக்கட் புனிதனுக் கீறி லாத
அற்புத மகிழ்ச்சி தோன்ற வழகுசெய் தமையந் தோன்றச்
சோற்கலை யாளும் பூவின் கிழத்தியுந் தோழுது நோக்கி.

(இ - ள்.) கற்பகம் கொடுத்த இந்தக் காமரு கலன்கள் எல்லாம்-கற்பகத்தரு அளித்த இந்த அழகிய அணிகளையெல்லாம், பொற்ப மெய்ப் படுத்து - அழகுபடத் திருமேனியில் அணிந்து, முக்கண் புனிதனுக்கு - மூன்று கண்களையுடைய சிவபெருமானுக்கு, ஈறு இலாத - முடிவில்லாத, அற்புதம் மகிழ்ச்சி தோன்ற - வியப்பும் மகிழ்வும் உண்டாக, அழுகு செய்து - ஒப்பனை செய்து, அமையம் தோன்ற - நல்லோரை வர, சொல் கலையாளும் பூவின் கிழத்தியும் - கலைமகளும் திருமகளும், தொழுது - வணங்கி, நோக்கி - (அழகைக் கண்குளிரக்) கண்டு எ - று.

காமரு என்பதற்கு முன் உரைத்தமை காண்க. அற்புதம் மகிழ்ச்சிக்கு அடையுமாம். சொல் - புகழுமாம். கமலை யென்பது திருமகட்குச் சிறந்த பெயராகலின் 'பூவின் கிழத்தி' என்றார். நோக்கித் தொழுது என மாறி யுரைத்தலும் அமையும். (கசச)

சுந்தர வல்லி தன்னைச் சோபன மேன்று வாழ்த்தி
வந்திரு கையுந் தங்கண் மாந்தளிர்க் கைக ணீட்டக்
கொந்தவிழ் கோதை மாது மறமேலாங் குடிகோண் டேறும்
அந்தளிர்ச் செங்கை பற்று வெழுந்தனண் மறைக ளார்ப்ப.

(இ - ள்.) சுந்தரவல்லி தன்னைச் சோபனம் என்று வாழ்த்தி - சுந்தரவல்லியாகிய தடாதகைப் பிராட்டியாரை மங்கலம் என்று வாழ்த்துப் பாடி, இரு கையும் வந்து - இரு பக்கமும் வந்து, தங்கள் மாந்தளிர்க் கைகள் நீட்ட - தங்களுடைய மாந்தளிர்போன்ற (மெல்லிய) கைகளை நீட்ட (அவைகளை), கொந்து அவிழ் கோதை மாதும் - பூங்கொத்து அலர்ந்த கூந்தலையுடைய பிராட்டியாரும், அறம் எலாம் குடிகொண்டு ஏறும் - முப்பத்திரண்டு அறங்களும் குடிகொண்டு ஏறிய, அம் தளிர்ச் செங்கை பற்று - அழகிய தளிர் போன்ற சிவந்த கைகளாற் பற்றிக்கொண்டு, மறைகள் ஆர்ப்ப எழுந்தனள் - வேதங்கள் ஒலிக்க எழுந்தருளினர் எ - று.

தன்னை வாழ்த்தியென இயையும். இரு கை - இரு பக்கம். கையால் அறம் வளர்த்தாளாகலின் அறமெலாம் குடிகொண்டேறும் செங்கை யென்றார். கையாற் பற்றி யென்க. (கசரு)

[கலிவிருத்தம்]

அறைந்தன தூரிய மார்த்தன சங்கம்
நிறைந்தன வானவர் நீண்மலர் மாரி
எறிந்தன சாமரை யேந்திழை யார்வாய்ச்
சிறந்தன* மங்கல வாழ்த்தெழு சேல்வம்.

(இ-ள்.) தூரியம் அறைந்தன-திருமண முரசங்கள் ஒலித்தன; சங்கம் ஆர்த்தன - சங்கங்கள் முழங்கின; வானவர் நீண்டுமலர் மாரி நிறைந்தன-தேவர்கள் (பொழியும்) மிக்க மலர் மழை நிறைந்தன; சாமரை எறிந்தன-சாமரைகள் வீசப்பெற்றன; மங்கல வாழ்த்து எழு

(பா - ம்.) * செறிந்தன.

செல்வம் - மங்கல வாழ்த்து என எழுகின்ற செல்வங்கள், ஏந்து இழையார் வாய் சிறந்தன - ஏந்திய அணிகளையுடைய மகளிர் வாயி னின்றும் தோன்றிச் சிறந்தன எ - று.

எறிந்தன: செயப்பாட்டு வினைப் பொருளில் வந்த செய்வினை. மங்கல வாழ்த்தைச் செல்வமென்றார்;

"செல்வன் கழலேத்துஞ் செல்வம் செல்வமே"

என்னும் ஆளுடைய பிள்ளையார் திருவாக்கைச் சிந்திக்க. (கசுசு)

அடுத்தனள் சுந்தரி யம்போன டைப்பை
எடுத்தன ளாடி திலோத்தமை யேந்திப்
பிடித்தனள் விந்தை பிடித்தனள் போற்கோல்
உடுத்த நெருக்கை யொதுக்கி நடந்தாள்.

(இ-ள்.) சுந்தரி அடுத்தனள் அம்பொன் அடைப்பை எடுத்தனன் - இந்திராணி வந்து அழகிய பொன்னாலாகிய அடைப்பையை ஏந்தினாள்; திலோத்தமை ஆடி ஏந்திப் பிடித்தனள் - திலோத்தமை கண்ணாடியை ஏந்திப் பிடித்தாள்; விந்தை பொன்கோல் பிடித்தனள்- வீரமகள் பொற் பிரம்பு கொண்டு, உடுத்த நெருக்கை ஒதுக்கி நடந்தாள் - சூழ்ந்த நெருக்கினை விலக்கி நடந்தாள் எ - று.

முற்றுக்களுள் எச்சமாய் வருவன காண்க. (கசுஎ)

கட்டவிழ் கோதை யரம்பை களாஞ்சி
தொட்டன ளூர்ப்பசி தூமணி யால
வட்ட மசைத்தனள் வன்ன மணிக்கா
சிட்டிழை கோடிகை மேனகை கொண்டாள்.

(இ - ள்.) கட்டு அவிழ் கோதை அரம்பை - முறுக்கு விரிந்த மலர் மாலையை அணிந்த அரம்பை, களாஞ்சி தொட்டனள்-காளாஞ் சியை ஏந்தினள், ஊர்ப்பசி தூமணி ஆலவட்டம் அசைத்தனள் - ஊர்வசி புனிதமான மணிகள் பதித்த ஆலவட்டத்தை அசைத்தனள்; மேனகை வன்னம் மணிக்காசு இட்டு இழை கோடி கை கொண் டாள் - மேனகை நிறமும் அழகும் பெற்ற மணிகள் அழுத்திய பூந் தட்டினை ஏந்தினள் எ - று.

ஊர்ப்பசி, ஊர்வசி யென்பதன் றிரிபு; பிரமனது ஊருவிற் றோன்றினமைபற்றி வந்த பெயர்; ஊரு - தடை. ஆலவட்டம் - சாந்தாற்றி. கோடிகை - பூந்தட்டு. (கசுஅ)

கோடிகளே னக்குளிர் போதொடு சிந்தும்
வடிபனி நீரினர் வீசுபோன் வண்ணப்
பொடியின ரேந்திய பூம்புகை தீபத்
தொடியணி கையினர் தோகையர் சூழ்ந்தார்.

(இ - ள்.) தோகையர் - பல மகளிர், கொடிகள் என-கொடிகள் போல, குளிர் போதொடு சிந்தும் வடி பனி நீரினர் - குளிர்ந்த மலர்

களுடன் சிந்துகின்ற வடித்த பனி நீரை உடையவரும், வீசு பொன் வண்ணப் பொடியினர்-வீசுகின்ற பொன்னிறப் பொடியினை உடையவரும், பூம் புகை திபம் ஏந்திய தொடி அணி கையினர் - அழகிய தூபத்தையும் தீபத்தையும் ஏந்திய வளையலணிந்த கையினை உடையவருமாய், சூழ்ந்தார் - மொய்த்தார்கள் எ - று.

கொடிகள் போதும் பனிநீரும் சிந்துமாறு சிந்துவா ரென்க. அழகிய பொற்பொடி யென்னலுமாம். ஏந்தப்பட்ட புகையையும் தீபத்தையும் உடைய கை யென்பதே சொற்றொடருக் கியைந்த பொருள். (௧௬௯)

தோடவி ழோதியர் சோபன கீதம்
பாட விரைப்பனி நீரோடு சாந்தம்
ஏடவிழ் மென்மல ரிட்ட படத்திற்
பாடக மெல்லடி யைப்பைய வையா.

(இ - ள்.) தோடு அவிழ் ஓதியர் சோபன கீதம் பாட - இதழ் விரிந்த மலரை யணிந்த கூந்தலையுடைய மகளிர் மங்கலப் பாட்டுப் பாட விரைப்பனி நீரொடு சாந்தம் ஏடு - அவிழ் மெல் மலர்-மணம் பொருந்திய பனி நீருடன் சந்தனத்தையும் இதழ் விரிந்த மெல்லிய மலரையும், இட்ட படத்தில் - இட்ட நடைப்பாவாடையில், பாடகம் மெல் அடியை பையவையா - பாடகமணிந்த மெல்லிய திருவடிகளை மெல்லென வைத்து எ - று.

மேல் மூன்று செய்யுளிற் கூறிய முற்றுக்களை எச்சப்படுத்தெண்ணி, இச் செய்யுளிலுள்ள வையா என்பதனுடன் முடிக்க. (௧௭௦)

செம்மல ராளோடு நாமக டேவி
கைம்மலர் பற்றின கல்வியோ டாக்கம்
இம்மையி லேபெறு வார்க்கிது போதென்
றம்மணி நூபுர மார்ப்ப நடந்தாள்.

(இ - ள்.) செம்மலராளொடு நாமகள் - செந்தாமரை மலரில் வசிக்கும் திருமகளையும் கலைமகளையும், தேவி கை மலர் பற்றின - இறைவியின் கைகளாகிய மலர்கள் பற்றிக்கொண்டன ஆதலின், கல்வியோடு ஆக்கம் இம்மையிலே பெறுவார்க்கு - கல்விப் பொருளையும் செல்வப்பொருளையும் இப்பிறப்பிலே ஒருசேரப் பெறுவார்க்கு, இது போது என்று அம் மணி நூபுரம் ஆர்ப்ப நடந்தாள் - இதுவே சமயமென்று அழகிய மணிகள் பதித்த நூபுரங்கள் ஒலிக்க நடந்தருளினர் எ - று.

தேவியைப் பணிந்தால் இம்மையிலே செல்வமும் கல்வியும் பெறலாமென்பது குறிப்பிட்டவாறு. போது - செவ்வி. இது தற்குறிப்பேற்றவணி. (௧௭௧)

ஒல்கினண் மெல்ல வோதுங்கின ளன்பு
பில்கி யிருந்த பிரானரு கெய்தி
மெல்கி யெருத்த மிசைத்தலை தூக்கிப்
புல்கிய காஞ்சி புலம்ப விருந்தாள்.

(இ - ள்.) ஒல்கினள் மெல்ல ஒதுங்கினள் - அசைந்து மெல்ல ஒதுங்கி, அன்பு பில்கி இருந்த பிரான் அருகு எய்தி-(தம்மேல்) அன்பு நிறைந்திருந்த இறைவன் பக்கலிற் சென்று, மெல்கி - மென்மைக் குணம் நிரம்பி, எருத்த மிசைத்தலை தூக்கி - பிடரின்மேல் தமது திருமுடியை வைத்து, புல்கிய காஞ்சி புலம்ப இருந்தாள் - பொருந்திய காஞ்சி ஒலிக்க அமர்ந்தருளினர் எ - று.

ஒதுங்கினள் - நடந்தாள்: அநுவாதம். நாணத்தால் மென்மையுற்று இருக்கும்பொழுது காஞ்சி யொலித்தல் கூறினர். முன்னுள்ள முற்றுக்கள் எச்சமாயின. (கஎஉ)

[அறுசீரடியாசிரியவிருத்தம்]

அற்பக விமைக்குஞ் செம்பொ னரதன பீடத் தும்பர்ப்
போற்பக லாத காட்சிப் புனிதனே டிருந்த நங்கை
எற்பகல் வலங்கோண் டேகு மேரிகதிர் வரையி னுச்சிக்
கற்பக மருங்கிற் பூத்த காமரு வல்லி யோத்தாள்.

(இ - ள்.) அல்பக இமைக்கும் செம்பொன் அரதன பீடத்து உம்பர் - இருள்கெட ஒளி வீசும் செம்பொன்னுலாகிய மணிகள் இழைத்த தவிசின்மேல், பொற்பு அகலாத காட்சிப் புனிதனேடு - பொலிவு நீங்காத தோற்றத்தையுடைய தூய இறைவனேடு, இருந்த நங்கை-இருந்தபிராட்டியார், எரி கதிர் - ஒளியினையுடைய சூரியன், எல் பகல் வலம் கொண்டு ஏகும்-இரவும் பகலும் வலமாகப் போகப் பெற்ற, வரையின் உச்சி-மேரு மலையின் உச்சியில், கற்பக மருங்கில்-கற்பகத் தருவின் பக்கத்திலே, பூத்த காமருவல்லி ஒத்தாள் - மலர்ந்த அழகிய கொடியினை ஒத்தார் எ - று.

எற்பகல் என்பதற்கு ஒளியையுடைய சூரியன் என்று பொருள் கூறி, எரி கதிர் என்பதனை வரைக்கு அடையாக்கலுமாம். பூத்த - பொலிந்த வென்றுமாம். பொற்பீடத்திற்கு மேருவும், இறைவற்குக் கற்பகமும், இறைவிக்கு வல்லியும் உவமம். காமவல்லி யெனப் பெயருமாம். (கஎங)

பண்ணுமின் னிசையு நீருந் தண்மையும் பாலும் பாலில்
நண்ணுமின் சுவையும் பூவு நாற்றமு மணியு மங்கேழ்
வண்ணமும் வேறு வேறு வடிவுகோண் டிருந்தா லோத்த
தண்ணலு முலக மீன்ற வம்மையு மிருந்த தம்மா.

(இ - ள்) அண்ணலும் உலகம் ஈன்ற அம்மையும் இருந்தது - சிவபெருமானும் உலகங்களை யெல்லாம் பெற்றருளிய அன்னையாகிய பிராட்டியும் வெவ்வேறு வடிவங் கொண்டிருந்தது, பண்ணும் இன் இசையும்-பண்ணும் இனிய இசையும், நீரும் தண்மையும்-நீரும்தட்பமும், பாலும் பாலில் நண்ணும் இன்சுவையும்-பாலும் அப்பாலின்கட் பொருந்திய இனியசுவையும், பூவும் நாற்றமும்-பூவும் மணமும், மணியும் அம் கேழ் வண்ணமும்-மணியும் அழகிய ஒளியும் (ஆகிய இவைகள்), வேறு வேறு வடிவு கொண்டு இருந்தால் ஒத்தது-வேறு வேருக வடிவங்கொண்டு ஓரிடத்திலிருந்த தன்மையைப் போன்றது எ - று.

நண்ணும் என்பதனைப் பண் முதலியவற்றோடுங் கூட்டி, அதன்கட் பொருந்திய எனப் பொருளுரைத்துக்கொள்க. முழுமுதற் பொருளொன்றே சிவமும் சத்தியுமெனத் தாதான்மியத்தால் இருதிறப்பட்டுப் பிரிப்பின்றி நிற்பதாகலின் அதற்கு அங்ஙனம் பிரிப்பின்றி நிற்கும் பண்ணும்இசையும் போல்வனவற்றை உவமை கூறினார்; 'தன்னை விளக்குவதூஉம் விடயங்களை விளக்குவதூஉந் தானேயாகிய ஞாயிறொன்றுதானே விடயங்களை விளக்குழிக் கதிரெனவும் தன்னை விளக்குழிக் கதிரோனெனவும் தாதான்மியத்தால் இருதிறப்பட்டியைந்து நிற்றல்போலப் புறப்பொருளை நோக்காது அறிவு மாத்திரையாய்த் தன்னியல்பி னிற்பதூஉம் புறப்பொருளை நோக்கி நின்றுணர்த்துவதூஉமாகிய இருதன்மையையுடைய பேரறிவாய சைதன்னியமொன்றே அங்ஙனம் புறப்பொருளை நோக்கி நிற்கு நிலையிற் சத்தியெனவும், புறப்பொருளை நோக்காது அறிவு மாத்திரையாய் நிற்கு நிலையிற்சிவமெனவும்தாதான்மியத்தால் இருதிறப்பட்டியைந்துநிற்குமென வுணர்க' என்னும் சிவஞானபோத மாபாடிய வுரை இங்கு நோக்கற்பாலது. இறைவனும் இறைவியும் ஒரு காரணம் பற்றி இங்ஙனம் வெவ்வேறு வடிவு கொண்டிருப்ப தல்லது அவர் தம்முள் வேறல்லரென வுணர்க. கேழ் வண்ணம் - நிறம்: ஒரு பொருட் பன்மொழி; ஈண்டு ஒளியை உணர்த்திற்று. அம்மா: வியப்பிடைச் சொல். (௧௭௪)

விண்ணுளார் திசையி னுள்ளார் வேறுளார் பிலத்தி னுள்ளார்
மண்ணுளார் பிறரும் வேள்வி மண்டபத் தடங்கி யென்றும்
பண்ணுளா ரோசை போலப் பரந்தெங்கு நிறைந்த மூன்று
கண்ணுளா ரடியினீழல் கலந்துளார் தம்மை யொத்தார்.

(இ - ள்.) விண்ணுளார்-துறக்கத்திலுள்ளவர்களும், திசையின் உள்ளார்-திக்குகளிலுள்ளவர்களும், வேறுளார் - ஏனைய இடங்களிலுள்ளவர்களும், பிலத்தின் உள்ளார் - பாதலத்திலுள்ளவர்களும், மண்ணுளார்-நிலவுலகத்திலுள்ளவர்களும், பிறரும்-மற்றையோரும், வேள்வி மண்டபத்து அடங்கி-திருமண மண்டபத்தின்கண் (தம்முட் பேதமின்றி ஒருசேர) அடங்கி, என்றும்-எப்பொழுதும், பண்ணுள் ஆர் ஓசை போலப் பரந்து - பண்ணின்கண் நிறைந்த இசைபோலப் பரவி, எங்கு நிறைந்த மூன்று கண்ணுளார்-எங்கும் நிறைந்துநிற்கும் மூன்று கண்களையுடைய சிவபெருமானது, அடியின் நீழல் கலந்துளார் தம்மை ஒத்தார்-திருவடி நீழலிற் கலந்தவரை ஒத்தார் எ - று.

திருவடி நீழலிற் கலந்தார் தம்முள் வேற்றுமையின்றி அதன்கண் அடங்கியிருத்தல் போல மண்டபத்துள் விரவினோரும் தம்முள் வேற்றுமையின்றி அதன்கண் அடங்கியிருந்தா ரென்க; மண்டபத்தின் விரிவு கூறியதூஉ மாயிற்று. பண்ணின்கண் ஓசை போல இறைவன் பரந்து நிறைந்து அத்துவிதமா யிருக்கு மியல்பினை,

"பண்ணையு மோசையும் போலப் பழமதுவும்
எண்ணுஞ் சுவையும்போ லெங்குமாம்—அண்ணல்தாள்
அத்துவித மாத லருமறைக ளொன்றென்ன
தத்துவித மென்றறைய மாங்கு"

என்னும் சிவஞானபோதத்துள் வரும் திருவெண்பாவா னறிக. (௧௭௫)

ஆயபோ தாழி யங்கை யண்ணல்பொற் கரக நீராற்
சேயவான் சோதி யாடற் சேவடி விளக்கிச் சாந்தந்
தூயபோ தவிழச் சாத்தித் தூபமுஞ் சுடருங் கோட்டி
நேயமோ டருச்சித் தைய னிறையருள் பெற்று நின்றான்.

(இ - ள்.) ஆயபோது-அப்பொழுது, ஆழி அம் கை அண்ணல்-திகிரிப் படையை அழகிய கையிற் கொண்ட திருமால், பொன் கரக நீரால்-பொன்னாலாகிய கரகத்திலுள்ள நீரினால், சேய வான் சோதி - சிவந்த சிறந்த ஒளிப் பிழம்பாகிய இறைவனது, ஆடல் சேவடி விளக்கி-திருக்கூத்தாடும் சிவந்த திருவடிகளை விளக்கி, சாந்தம் தூய போது அவிழச்சாத்தி - சந்தனத்தையும் புனிதமான மலர்களையும் மணம் வீசச் சாத்தி, தூபமும் சுடரும் கோட்டி-தூப தீபங்களை (விதி முறையாற்) சுழற்றி, நேயமோடு அருச்சித்து - அன்போடு அருச்சனை செய்து, ஐயன் நிறை அருள் பெற்று நின்றான்-இறைவனுடைய நிறைந்த அருளைப் பெற்று நின்றான் எ - று.

அங்கை-அகங்கையுமாம். சேய-செம்மையாகிய; விகாரமில்லாத என்றுரைத்தலுமாம். அவிழ - விரிய; மணமென்பது வருவிக்க. கோட்டி-வளைத்து; சுழற்றி யென்றபடி. (கஎசு)

விண்டலத் தவரு ளாதி வேதியன் பாத தீர்த்தம்
முண்டகத் தவனு மாலு முனிவரும் புரந்த ராதி
அண்டரு நந்தி தேவு மடுகணத் தவரு மேனைத்
தொண்டரும் புறம்பு முள்ளு நனைத்தனர் சுத்தி செய்தார்.

(இ - ள்.) விண் தலத்தவருள் ஆதி வேதியன் - தேவர்களில் முதன்மை பெற்ற அந்தணனாகிய இறைவனது, பாத தீர்த்தம் - திருவடித் தீர்த்தத்தால், முண்டகத்தவனும் மாலும் - தாமரை மலரில் வசிக்கும் பிரமனும் திருமாலும், முனிவரும் - முனிவர்களும், புரந்தர ஆதி அண்டரும் - இந்திரன் முதலான தேவர்களும், நந்தி தேவும் - திருநந்தி தேவரும், அடு கணத்தவரும் - அவரை அடுத்த சிவகணங்களும், ஏனைத் தொண்டரும்-மற்றை அடியார்களும்; புறம்பும் உள்ளும் நனைத்தனர் சுத்தி செய்தார் - தங்கள் புறத்தையும் அகத்தையும் நனைத்துத் தூய்மை யாக்கினார்கள் எ - று.

சிவபெருமானைத் தேவர்களுள் அந்தணனென்று மெய்ந் நூல்கள் கூறும். அடு கணம்: அடுத்த கணம் என வினைத்தொகை; இங்ஙனம் அருகியன்றி வாராது. தலையிற் றெளித்து உள்ளும் பருகினாரென்பார் 'புறம்பும் உள்ளும் நனைத்தனர்' என்றார். நனைத்தனர்: முற்றெச்சம். (கஎஎ)

அத்தலை நின்ற மாயோ* னுதிசெங் கரத்து நங்கை
கைத்தலங் கமலப் போது பூத்ததோர் காந்த ளொப்ப
வைத்தரு மனுவா யோதக் கரகநீர் மாரி பெய்தான்
தொத்தலர் கண்ணி விண்ணோர் தொழுதுபூ மாரி பெய்தார்.

(பா - ம்.) * அனுதி.

(இ - ள்.) அத்தலை நின்ற மாயோன் – அங்கு நின்ற திருமால், ஆதி செங்கரத்து - முதல்வனது சிவந்த திருக்கையின்கண், கமலப் போது பூத்தது ஓர் காந்தள் ஒப்ப - தாமரை மலரில் மலர்ந்ததாகிய ஒரு காந்தள்மலரை ஒக்க, நங்கை கைதலம் வைத்து – இறைவியின் திருக்கரத்தை வைத்து, அரு மனு வாய் ஓத - அரிய மந்திரத்தை வாய் கூற, கரக நீர் மாரி பெய்தான்-கரகத்திலுள்ள நீரைப் பொழிந்தான் (தாரை வார்த்தான்); தொத்து அலர் கண்ணி விண்ணோர்—பூங் கொத் தலர்ந்த மாலையையுடைய தேவர்கள், தொழுது பூமாரி பெய்தார் - வணங்கி மலர்மழை பொழிந்தார்கள் எ - று.

மலயத்துவச பாண்டியன் இன்மையானும் திருமால் உமைக்கு உடன்பிறப்பா முரிமையுடைய ஞகலானும் அவன் தாரைவார்த் தளித்தானென்க; அயனும் மாலும் இத்தகை உரிமையுடைய ரென்பது,

"அறுகெடுப் பாரய னும்மரியு
மன்றிமற் றிந்திர னோடமரர்
நறுமுறு தேவர்க ணங்களெல்லா
நம்மிற்பின் பல்ல தெடுக்கவொட்டோம்"

என்னும் திருப்பொற் சுண்ணத்தா னறிக. நீரை மிகுதியாகச் சொரிந்தா னென்பார் ''நீர்மாரி பெய்தான்' என்றார்; பின் 'பூமாரி பெய்தார்' என்பதை நோக்க நயமுடைத்தாதலுங் கருதி. கமலப் போது பூத்ததோர் காந்தளொப்ப' என்றது இல்பொருளுவமை. (களஅ)

ஆடினா ரரம்பை மாதர் விஞ்சைய ரமுத கீதம்
பாடினா ரரவென் றார்த்துப் பரவினார் முனிவர் வானோர்
மூடினார் புளகப் போர்வை கணத்தவர் முடிமேற் செங்கை
சூடினார் பலரு மன்றற் றொடுகட லின்பத் தாழ்ந்தார்.

(இ-ள்.) அரம்பைமாதர் ஆடினார்-அரம்பையர்கள் ஆடினார்கள். விஞ்சையர் அமுத கீதம் பாடினார்-வித்தியாதரர்கள் அமுதம்போன்ற இசைகளைப் பாடினார்கள்; முனிவர் அர என்று ஆர்த்துப் பரவினார் - முனிவர்கள் அரகர வென்று முழங்கித் துதித்தார்கள்; வானோர் புக ளப் போர்வை மூடினார் - தேவர்கள் புளகமாகிய போர்வையாற் பொதியப் பெற்றார்கள்; கணத்தவர் முடிமேல் செங்கை சூடினார் - சிவ கணத்தவர்கள் முடியின்மேல் சிவந்த கைகளைக் குவித்தார்கள்; பலரும் மன்றல் இன்பத் தொடு கடல் ஆழ்ந்தார் - அனைவரும் திரு மண இன்பமாகிய கடலில் அமிழ்ந்தார்கள் எ – று.

கடலி னொருபுறம் சகரரால் தோண்டப் பட்டமையின் 'தொடு கடல்' என்றார். (களகூ)

புத்தனா ரேறிந்த கல்லும் போதென மிலைந்த வேத
வித்தனா ரடிக்கீழ் வீழ விண்ணவர் முனிவ ரேனோர்
சத்தநா வாசிகூறிக்* குங்குமத் தோயந் தோய்ந்த
முத்தவா லரிசி வீசி மூழ்கினார் போக வெள்ளம்.

(பா - ம்.) * ஆசிகூற.

(இ - ள்.) புத்தனார் எறிந்த கல்லும் - சாக்கிய நாயனார் எறிந்த கல்லையும், போது என மிலைந்த வேத வித்தனார் - மலரைப்போலச் சூடியருளிய வேத காரண ராகிய இறைவனது, அடிக்கீழ் வீழ - திருவடியின் கீழ் வீழுமாறு, விண்ணவர் முனிவர் ஏனோர் - தேவர்களும் முனிவர்களும் மற்றையரும், சுத்தநா ஆசி கூறி - புனித நாவினால் ஆக்க மொழி கூறி, குங்குமத் தோயம் தோய்ந்த - குங்கும நீரில் நனைந்த, முத்தவால் அரிசி வீசி - முத்துப் போன்ற வெள்ளிய அரிசியை வீசி, போக வெள்ளம் மூழ்கினார் - இன்ப வெள்ளத்தில் அழுந்தினார்கள் எ - று.

புத்தனார் - சாக்கிய நாயனார்; பெரிய புராணத்திற் கூறப்பட்ட தனி யடியார்களில் ஒருவர்; இவர் ஒருகால் சிவலிங்கப் பெருமானைக் கண்டு அன்பு மீக் கூர்ந்து பதைத்துக் கல்லெறிந்தவர், அது திருவருட் குறிப்பால் நிகழ்ந்ததெனக்கொண்டு பின்புநாடொறும் மறவாதுகல் லெறிதலாகிய திருத்தொண்டினைச் செய்து முத்தி பெற்றார்; இதனை,

"வார்கொண்ட வனமுலையா ளுமைபங்கன் கழலே
மறவாது கல்லெறிந்த சாக்கியர்க்கு மடியேன்"

என்னும் திருத்தொண்டத் தொகையா லறிக. இவர் தாம் முன் பிருந்த புத்த சமயக் கோலத்தோடிருந்தே வழிபட்டமையின் சாக்கியரெனப்பட்டார். சாக்கியர் என்பது பௌத்தருக்கொரு பெயர். வேதவித்து - வேதங்களை யறிந்தவனுமாம். அடிக்கீழ் வீழ அரிசி வீசி யென்க. (கஅ0)

அம்மையோ டப்ப னென்ன வலர்மணம் போல நீங்கார்
தம்மருள் விளையாட் டாலே யாற்றநாட் டமியர் போல
நம்மனோர் காணத் தோன்றி நன்மணம் புணர ஞாலம்
மும்மையு முய்ந்த வென்னாத் தத்தமின் மொழிய லுற்றார்.

(இ - ள்.) அம்மையோடு அப்பன் என்ன-அம்மையும் அப்பனுமென்று, அலர்மணம் போல நீங்கார்-பூவும் மணமும் போலப் பிரியாதவராகிய பெருமானும் பிராட்டியும், தம் அருள் விளையாட்டாலே - தமது அருள் விளையாடலினால், ஆற்ற நாள் தமியர் போல நம்மனோர் காணத்தோன்றி - மிகவும் பலவாகிய நாள் பிரிந்தவர் போல நம்போன்றார் காணுமாறு தோன்றி, நல் மணம் புணர-நல்ல திருமணஞ் செய்தருள, ஞாலம் மும்மையும் உய்ந்த என்னா - மூன்று உலகங்களும் ஈடேறின என்று, தத்தமில் மொழியல் உற்றார் - யாவரும் தங்கள் தங்களுக்குள் கூறி மகிழ்ந்தனர் எ - று.

என்ன - என்று, இதனாலும் தாதான்மியத்தான் இருதிறப்பட்டியைந்து நிற்கும் தன்மை கூறினார்; இங்ஙனம் பிரிப்பின்றி யிருந்து அம்மையும் அப்பனும் எனப்படுதலை,

"அம்மையப்ப ரேயுலகுக் கம்மையப்ப ரென்றறிக"

என்னும் திருக்களிற்றுப்படியாரா லறிக. ஆற்ற: மிகவெனப்பொருள் படும் உரிச்சொல்; செய வெனெச்சமாகும்;

"ஆற்றவும் பழையதுன் னங்கை வச்சிரம்"

என இந்நூலுள்ளும்,

"ஆற்றநாள் போக்கினேனே''

எனத் தேவாரத் துள்ளும் வருதல் காண்க; மிக நாள் என இமையாமையின் ஈண்டு மிகவும் பலவாகிய என விரிக்கப்பட்டது. புணர-புணர்தலால். ஞாலம் ஈண்டு உலகப் பொது. மும்மை: மை பகுதிப் பொருள் விகுதி. (௧௮௧)

காமரு சுரபித் தீம்பால் கற்பகக் கனிநெய் கன்னல்
நாமரு சுவைய வின்ன நறுமது பருக்கஞ் செம்பொன்
ஆமணி வட்டத் திண்காற் பாசனத் தமையப் பெய்து
தேமரு கொன்றை யானைத் திருக்கைதொட் டருள்க வென்றார்.

(இ - ள்.) காமரு சுரபித் தீம்பால் - அழகிய காமதேனுவின் இனிய பாலும், கற்பகக் கனி - கற்பகம் அளித்த பழமும், நெய் கன்னல் - நெய்யும் சருக்கரையும் (கலந்த), நாமரு சுவைய இன்ன நறுமது பருக்கம் - நாவிற்குப் பொருந்திய சுவையையுடைய இந்த நறிய மது பருக்கத்தை, செம்பொன் ஆம் மணி வட்டம் தின்கால் பாசனத்து - செம்பொன்னலாகிய மணிகள் இழைத்த வட்டமாகிய வலிய காலையுடைய கலத்தின்கண், அமையப் பெய்து - பொருந்த இட்டு, தேமரு கொன்றையானை - தேன் பொருந்திய கொன்றை மாலையை யணிந்த சிவபெருமானை, திருக்கை தொட்டருள்க என்றார்-திருக்கை தொட்டருள்க என்று வேண்டினர் எ - று.

காமரு சுரபி - கற்பகக் காவிற் பொருந்திய சுரபி யென்றுமாம்; கற்பகம் அளித்த கனியென்க. இவற்றை மது பர்க்கம் என்ப. பாசனம்-உண் கலன். திருக்கை தொட்டருள்க-உண்க: மரபு. நாமருவு, தேமருவு என்பன உகரந் தொக்கு நின்றன. (௧௮௨)

அங்கைவைத் தமுது செய்தாங் ககமகிழ்ந் தட்ட மூர்த்தி
கொங்கவிழ் குமுதச் செவ்வாய் கோட்டிவாண் முறுவல்பூத்தான்
புங்கவர் முனிவர் கற்பின் மகளிரும் போதின் மேய
மங்கைய ரிருவ ரோடு மங்கலம் பாட லுற்றார்.

(இ - ள்.) அட்ட மூர்த்தி - எட்டு மூர்த்தங்களை யுடையவன், அம் கை வைத்து - அழகிய கை யாற் றொட்டருளி, அமுது செய்தாங்கு அகமகிழ்ந்து - அமுது செய்தருளினாற்போல மன மகிழ்ந்து, கொங்கு அவிழ் குமுதச் செவ்வாய் கோட்டி - மணத்தோடு மலர்ந்த ஆம்பல் போன்ற சிவந்த திருவாயைக் குவித்து, வாள் முறுவல் பூத்தான்-ஒள்ளிய புன்னகை செய்தருளினான்; புங்கவர் முனிவர் கற்பின் மகளிரும்-தவத்தாலுயர்ந்தவராகிய முனிவர்களின் பன்னியர்களும், போதில் மேய மங்கையர் இருவரோடு-தாமரை மலரில் வசிக்கும் திருமகளும் கலைமகளும், மங்கலம் பாடலுற்றார் - மங்கலம் பாடத் தொடங்கினார்கள் எ - று.

புங்கவர் - தேவருமாம். (௧௮௩)

மாக்கடி முளரி வாணன் மைந்தரோ டொருங்கி வைகி
நாக்களி னடுநா வாரத் துடுவையா னறுநே யார்த்தி
வாக்கிட வார மாந்தி வலஞ்சுழித் தகடு வீங்கித்
தேக்கிடு மொலியி னார்த்து நிமிர்ந்தது தெய்வச் செந்தீ.

(இ - ள்.) மாக் கடி முளரிவாணன்-பெருமை பொருந்தியமண முடைய தாமரை மலரில் வசிக்கும் பிரமன், மைந்தரோடு ஒருங்கு வைகி-புதல்வர்களோடு ஒருசேர இருந்து, நாக்களின் நடுநா ஆர - ஏழு நாக்களில் நடு நாவால் சுவை யறியுமாறு, துடுவையால் நறுநெய் ஆர்த்திவாக்கிட-சுருக்கு சுருவங்களால் நறியநெய்யை நிரப்பிவார்க்க, தெய்வச் செந்தீ - தெய்வத் தன்மையுடைய சிவந்த தீயானது, ஆர மாந்தி - நிரம்ப உண்டு, வலம் சுழித்து - வலமாகச் சுழித்து, அகடு வீங்கி-வயிறு நிரம்பி, தேக்கிடும் ஒலியின் ஆர்த்து - தேக்கெறியும் ஒலிபோல ஒலித்து, நிமிர்ந்தது-மேலெழுந் தோங்கியது எ - று.

வாணன்-வாழ் நன். மைந்தர் இவரென்பது புராணவரலாற்றுள் உரைக்கப்பட்டது. ஆர்த்தி-நிறையச் செய்து. தேக்கெறிதலை இப் பொழுது ஏப்பமிடல் என்பர். செந்தீத் தெய்வம் என மாற்றுதலு மாம். (கஅச)

சுற்றுநான் மறைக ளார்ப்பத் தூரியஞ் சங்க மேங்கக்
கற்றநான் முகத்தோன் வேள்விச் சடங்குநூல் கரைந்த வாற்றான்
முற்றமங் கலநாண் சாத்தி முழுதுல கீன்றாள் செங்கை
பற்றினன் பற்றி லார்க்கே வீடருள் பரம யோகி.

(இ - ள்.) சுற்றும் நால் மறைகள் ஆர்ப்ப - நான்கு புறத்திலும் நான்கு வேதங்களும் ஒலிக்கவும், தூரியம் சங்கம் ஏங்க - இயங்களும் சங்கங்களும் ஒலிக்கவும், கற்ற நான் முகத்தோன் - வேதங்களை உணர்ந்த பிரமன், நூல் கரைந்த வாற்றால் - வேத சிவாகமம் கூறிய முறையால், வேள்விச் சடங்கு முற்ற-திருமணச் சடங்குகளைக் குறை வின்றி முடிக்க,பற்று இலார்க்கே வீடு அருள் பரமயோகி-இருவகைப் பற்றும் அற்றவர்க்கே வீட்டின்பத்தை அருளும் பரமயோகியாகிய இறைவன், மங்கல நாண் சாத்தி- திருமங்கல நாணைப் பூட்டி, முழுது உலகு ஈன்றாள் செங்கை பற்றினன்-எல்லா உலகங்களையும் பெற்றரு ளிய பிராட்டியாரின் சிவந்த திருக்கரங்களைப் பற்றியருளினான் எ-று.

முற்றுவிக்க என்பது முற்ற வென நின்றது.இறைவன் யோகியா யிருத்தல் உயிர்களுக்கு முத்தியளித்தற் பொருட்டன்றித் தனக்கொரு பயன் கருதியன்றென்பார் 'வீடருள் பரமயோகி' என்றார்;

"யோகியா யின்பமுத்தி யுதவுத லதுவு மோரார்"

எனச் சிவஞான சித்தியார் கூறுவதுங் காண்க. உலகங்களையெல்லாம் ஈன்றவளை மணந்தானென்பதும் பற்றற்றவர்க்கே அருளும் பரம யோகியாயுள்ளவன் ஒருத்தி செங்கை பற்றின னென்பதும் முரணுகி அணி செய்தல் காண்க. கை பற்றுதல் - பாணிக்கிரகணம். ஏகாரம் பிரிநிலை. (கஅரு)

இணரெரித் தேவுந் தானே யெரிவளர்ப் பவனுந் தானே
உணவுகொள் பவனுந் தானே யாகிய வொருவன் வையம்
புணர்வுறு போக மூழ்கப் புருடனும் பெண்ணு மாகி
மணவினை முடித்தா னன்னான் புணர்ப்பையார் மதிக்க வல்லார்.

(இ - ள்.) இணர் எரித் தேவும் தானே-பல சுடரையுடைய தீக் கடவுளுந்தானே, எரி வளர்ப்பவனும் தானே-அத்தீயை வளர்க்கின்றவனும் தானே, உணவு கொள்பவனும் தானே-அத் தீ முகமாக அவியைக் கொள்ளுபவனும் தானே, ஆகிய ஒருவன் - ஆகிய இறைவன் ஒருவனே, வையம் புணர்வுறு போகம் மூழ்க - உயிர்கள் புணர்தல் பொருந்திய போகத்தில் அழுந்த, புருடனும் பெண்ணுமாகி-ஆணும் பெண்ணுமாகி, மணவினை முடித்தான் - மணச் செயலை முடித்தருளினான்; அன்னான் புணர்ப்பை மதிக்க வல்லார் யார் - அவ்விறைவனது செயலை அளந்தறிய வல்லவர் யாவர் (ஒருவருமில்லை என்றபடி) எ - று.

இப்புராணத்தில் முன் வந்துள்ள,

"பூசையும் பூசைக் கேற்ற பொருள்களும் பூசை செய்யு
நேசனும் பூசை கொண்டு நியதியிற் பேறு நல்கும்
ஈசனு மாகிப் பூசை யான்செய்தே னெனுமென் போத
வாசனை யதுவு மான மறைமுத லடிகள் போற்றி"

என்னுஞ் செய்யுட் பொருள் இதனோடு ஒத்து நோக்கற்பாலது. இதன் முன்னிரண்டடியிற் கூறிய பொருள்,

"வேதமும் வேள்வியு மாயினார்க்கு"

எனத் திருவாசகத்துள் சுருங்க வுரைக்கப்பட்டது.

"வேள்வியுந் தானே வேள்விப் பொருள்களுந் தானே வெய்ய
வேள்விவேட் பவனுந்தானே வேள்விகொ ளிறையுந் தானே
வேள்வியின் பயனுந் தானே யென்பது விளக்கி யெம்மான்
வேள்விசெய் திக்கை யுற்றான் விளங்கருட் சத்தி யோடும்"

எனக் காஞ்சிப்புராணத்துள் இது விரித்துரைக்கப்பட்டது. இறைவன் இங்ஙனம் மணம் புரிந்தது உயிர்களுக்குப் போகம் அருளுதற் பொருட்டன்றித் தனக்கொரு பயன் கருதியன் றென்பார் 'வையம் போக மூழ்க மணவினை முடித்தான்' என்றார்.

"போகமா யிருந் துயிர்க்குப் போகத்தைப் புரித லோரார்"
எனச் சித்தியார் கூறுவதுங் காண்க. புணர்ப்பு-சூழ்ச்சி. (கஅசு)

பின்புதன் பன்னி யோடு பிறைமுடிப் பெருமான் கையில்
நன்பொரி வாங்கிச் செந்தீ நாமடுத் தேனைத்து மான
தன்படி வுணர்ந்த வேத முனிவர்க்குத் தக்க தானம்
இன்பகந் ததும்ப நல்கி யெரிவல முறையால் வந்து.

(இ - ள்.) பின்பு பிறை முடிப் பெருமான் - பின்பு சந்திரனை யணிந்த முடியினையுடைய இறைவன், தன் பன்னியோடு - தன் தேவியாரோடும், கையில் நன்பொரி வாங்கி - திருக்கையில் நல்ல பொரியை வாங்கி, செந்தீ நா மடுத்து - சிவந்த தீயின் நாவிற் பெய்து, எனைத்தும் ஆன தன் படிவு உணர்ந்த - எல்லாமாகிய தனது திருவுருவத்தை யுணர்ந்த, வேத முனிவர்க்கு - வேதங்களை யுணர்ந்த முனிவர்களுக்கு; தக்க தானம் - ஏற்ற தானங்களை, அகம் இன்பு ததும்ப நல்கி - உள்ளத்தில் மகிழ்ச்சி மீக்கூரக் கொடுத்து, முறையால் எரி வலம் வந்து - விதிப்படி தீயை வலமாக வந்து எ - று.

நா மடுத்தல் - நாவில் அகப்படச் செய்தல். படிவம் என்பது ஈறு தொக்கது. (கஅஎ)

மங்கலம் புனைந்த செம்பொ னம்மிமேன் மணட்டி பாத
பங்கய மலரைக் கையாற் பரிபுரஞ் சிலம்பப் பற்றிப்
புங்கவன் மனுவா லேற்றிப் புண்ணிய வசிட்டன் றேவி
எங்கெனச் செங்கை கூப்பி யெதிர்வர வருட்கண் சாத்தி

(இ - ள்.) புங்கவன் - இறைவன், மங்கலம் புனைந்த செம்பொன் அம்மிமேல் - மங்கலமாக அலங்கரித்த செம்பொன்னாலாகிய அம்மியின்மேல், மணட்டி பாத பங்கய மலரை - தேவியாரது திருவடித் தாமரை மலரை, பரிபுரம் சிலம்ப - சிலம்பு ஒலிக்க, கையால் பற்றி - திருக்கையால் பிடித்து, மனுவால் ஏற்றி - மந்திரத்தோடு தூக்கி வைத்து, புண்ணிய வசிட்டன் தேவி எங்கென - அற வடிவாகிய வசிட்டன் மனைவியாகிய அருந்ததி எங்கே என்று கேட்க, செங்கை கூப்பி எதிர் வர - (அவ்வருந்ததி) சிவந்த கைகளைக் கூப்பி எதிரே வர, அருள் கண் சாத்தி - (அவள் மீது) அருட்பார்வையை வைத்து எ-று.

மனுவால் - மந்திரத்தோடு. அம்மி மிதிப்பித்தலும் அருந்ததி பார்த்தலும் கூறினர். (கஅஅ)

விதிவழி வழாது வேள்வி வினையெலா நிரம்ப விங்ஙன்
அதிர்கட லுலகந் தேற வாற்றிநான் மறைக ளார்ப்பக்
கதிர்மணி நகையார் வாழ்த்தக் காமனைக் காய்ந்த நம்பி
மதிநுதன் மங்கை யோடு மணவறை தன்னிற் புக்கான்.

(இ - ள்.) இங்ஙன் - இவ்வாறு, விதி வழி வழாது - விதி முறை சிறிதும் தவறாது, வேள்வி வினையெலாம் நிரம்ப - மணச் சடங்குகளெல்லாம் முற்றுப் பெற, அதிர் கடல் உலகம் தேற ஆற்றி - ஒலிக்கின்ற கடல் சூழ்ந்த உலகிலுள்ளோர் தெளிந்துய்யச் செய்து முடித்து, நான் மறைகள் ஆர்ப்ப - நான்கு வேதங்களும் ஒலிக்கவும், கதிர் மணி நகையார் வாழ்த்த - ஒளியினையுடைய முத்துப்போன்ற பற்களையுடைய மகளிர் வாழ்த்தவும், காமனைக் காய்ந்த நம்பி - மன்மதனையெரித்தருளிய பெருமான், மதி நுதல் மங்கையோடும் - சந்திரனையொத்த நெற்றியையுடைய தடாதகைப் பிராட்டியாரோடும், மண அறை தன்னில் புக்கான் - திருமண வறையிற் புகுந்தருளினான் எ - று.

எல்லா முழுமுதன்மையு முடைய இறைவன் இங்ஙனம் சடங்குக ளெல்லாம் செய்தது தானியற்றிய வேத நெறியை உயிர்களெல்லாம் உணர்ந்து கடைப்பிடித்து உய்தற் பொருட்டென்பார் 'உலகந் தேற ஆற்றி' என்றார். 'காமனைக் காய்ந்த நம்பி மங்கையோடு மணவறை தன்னிற் புக்கான்' என முரணென்னும் அணி தோன்றக் கூறினர்; இதனால் இறைவன் காம விகார மில்லாதவனென்னுங் கருத்தும், இறைவன் இறைவியைக் கூடியிருந்துழி யல்லது உயிர்கட்கு வேட்கை விளைவிக்குமாற்றலும் காமனுக்கின்றென்னுங் கருத்தும் போதருதல் காண்க.

"கண்ணுத லியோகி ருப்பக்காமனின் றிடவேட் கைக்கு
விண்ணுறு தேவ ராதி மெலிந்தமை யோரார் மால்தான்
எண்ணிவேள் மதனை யேவ வெரிவிழித் திமவான் பெற்ற
பெண்ணினைப் புணர்ந்து யிர்க்குப் பேரின்ப மளித்த தோரார்"

என்னும் சிவஞான சித்தித் திருவிருத்தமும் நோக்குக. இங்ஙன்: ஈறு தொக்கது. (கஅகூ)

மனிதரு மிமையா தையன் மங்கல வனப்பு நோக்கிப்
புனிதவா னவரை யொத்தா ரவர்க்கது புகழோ வெந்தை
கனிதரு கருணை நாட்டம் பெற்றவர் கடவு ளோராற்
பனிதரு மலரிட் டேத்தி வழிபடற் பால ரன்றே.

(இ - ள்.) மனிதரும் - மக்களும், இமையாது - கண் இமையாமல், ஐயன் மங்கல வனப்பு நோக்கி-இறைவனது திருமணக்கோலப் பொலிவினைப் பார்த்து, புனித வானவரை ஒத்தார் - தூய தேவர்களை ஒத்தனர்; அவர்க்கு அது புகழோ - அம் மக்களுக்குத் தேவரை யொத்தன ரென்பது ஒரு புகழாமோ, எந்தை கனிதரு கருணை நாட்டம் பெற்றவர் - எம்பெருமானாகிய சோமசுந்தரக் கடவுளின் முதிர்ந்த அருட் பார்வையைப் பெற்ற மக்கள், கடவுளோரால் - தேவர்களால், பனி தரும் மலர் இட்டு ஏத்தி வழிபடற் பாலர் அன்றே - குளிர்ந்த மலரால் அருச்சித்துத் துதித்து வழிபாடு செய்யப் பெறும் தன்மையை யுடையவர் அல்லவா எ - று.

வானவர் இமையா நாட்டமுடைய ராகலின் 'வானவரை யொத்தார்' என்றார். புகழோ என்பதில் ஓகாரம் எதிர்மறை. அன்று என்பது உண்டு என்பதுபோல் திணைபால்களுக்குப் பொதுவாய் நிற்றலின் வழா நிலை யென்க; இரண்டு எதிர் மறை ஓர் உடன்பாடாயிற்று. (ககூ0)

மானிட ரிமையோ ரென்னும் வரம்பில ராகி வேள்வி
தானிட ரகல நோக்கித் தலைத்தலை மயங்கி நின்றார்
கானிட நடனஞ் செய்யுங் கண்ணுத லருட்க ணோக்கால்
ஊனிட ரகலு நாளி லுயர்ந்தவ ரிழிந்தோ ருண்டோ.

(இ - ள்.) மானிடர் இமையோர் என்னும் வரம்பு இலராகி - மக்கள் தேவர் என்னும் வரம்பில்லாதவராய், வேள்வி-திருமணத்தை, இடர் அகல நோக்கி - துன்பம் நீங்குமாறு கண்டு, தலைத்தலை மயங்கி

நின்றார் - இடங்கள் தோறும் மயங்குதலுற்று நின்றார்கள்; கான் இடம் நடனம் செய்யும் கண்ணுதல் - புறங் காட்டிலே திருக்கூத் தாடியருளும் நெற்றிக் கண்ணனாகிய இறைவனது, அருள்கண் நோக்கால் - திருவருட் பார்வையால், ஊன் இடர் அகலும் நாளில் உயர்ந்தவர் இழிந்தோர் உண்டோ - பிறவித் துன்பம் நீங்கும் காலத்தில் உயர்ந்தவரென்றும் தாழ்ந்தவரென்றும் வேற்றுமை யுண்டோ (இல்லையென்றபடி) எ - று.

தான் : அசை. மயங்கி - கலந்து; களி மயக்குற்று என்றுமாம். ஊன்: ஈண்டுப் பிறவிக்காயிற்று;

"ஊன டைந்த வுடம்பின் பிறவியே"

என்பது திருத்தொண்டர் புராணம். மேல் சுஎ-ஆம் செய்யுளில் 'அடியினிழல் கலந்துளார் தம்மை யொத்தார்' என்பதனையும் ஈண்டு நோக்குக. இவ்விரு செய்யுளும் வேற்றுப்பொருள் வைப்பணி. (சுசுசு)

மணவறைத் தவிசினீங்கி மன்றன்மண் டபத்திற் போந்து
கணமணிச் சேக்கை மேவிக் கருநெடுங் கண்ணன் வாணி
துணைவனே* முதல்வா னோர்க்குஞ் சூழ்கணத் தொகைக்கு மென்றுந்
தணவறு செல்வந் தந்தோன் சாறுசால் சிறப்பு நல்கி.

(இ - ள்.) கருநெடுங் கண்ணன் வாணி துணைவனே முதல் வானோர்க்கும் - கரிய நெடிய திருமால் கலைமகள் தலைவனாகிய பிரமன் முதலிய தேவருக்கும், சூழ்கணத் தொகைக்கும் - சூழ்ந்த சிவகணக் கூட்டத்திற்கும், என்றும் தணவு அறு செல்வம் தந்தோன் - எப்பொழுதும் நீங்குதலற்ற செல்வத்தை அருளிய இறைவன், மண அறைத் தவிசின் நீங்கி - திருமண அறையிலுள்ள இருக்கையினின் றும் நீங்கி, மன்றல் மண்டபத்தில் போந்து - திருமண மண்டபத்தில் வந்து, கண மணிச் சேக்கை மேவி - கூட்டமாகிய மணிகள் இழைத்த அரியணையில் வீற்றிருந்து, சாறுசால் சிறப்பு நல்கி - திருமணத்திற்கு அமைந்த வரிசைகளை (அவ்வனைவருக்கும்) கொடுத்தருளி எ - று.

கருமையென முன்வந்தமையின் கண்ணன் என்பது பெயர் மாத் திரையாய் நின்றது; "கருங்கண் ணனையறி யாமை நின்றோன்" என் னும் திருக்கோவையார்ச் செய்யுளுரையில் "கண்ண னென்பது கரியோ னென்னும் பொருளதோர் பாதகச் சிதைவு; அஃது அப் பண்பு குறியாது ஈண்டுப் பெயராய் நின்றமையின், கருங்கண்ண னென்றார்; சேற்றிற் பங்கய மென்றாற் போல" எனப் பேராசிரியர் விளக்கியிருத்தல் காண்க. ஏகாரம் கண்ணனென்பதனோடும் இயையும். தணவு - தணத்தல்: தொழிற் பெயர். சாறு - விழா. தந்தோன் அவர்க்கு நல்கி யென்க. (சுசுஉ)

எட்டுவாய் முளரி யான்மா லேனைவா னவருந் தத்தம்
நாட்டுவாழ் பதியிற் செல்ல நல்விடை கொடுத்து வேந்தர்க்
காட்டுவா னடிக் காட்டுந் தன்மைபோ லரசு செய்து
காட்டுவா னாகி யையன் றிருவுளக் கருணை பூத்தான்.

(பா - ம்.) * துணைவனே.

(இ - ள்.) ஏடுவாய் முளரியான் மால் ஏனை வானவரும் - இதழ்கள் வாய்ந்த தாமரைமலரில் வசிப்போனாகிய பிரமனும் திருமாலும் மற்றைத் தேவர்களும், தத்தம் நாட்டு வாழ் பதியில் செல்ல - தங்கள் தங்கள் நாடுகளாகிய செல்வமிக்க பதவிகளிற் செல்லுமாறு, நல்விடை கொடுத்து - அருள் விடை கொடுத்து, வேந்தர்க்கு - மன்னர்களுக்கு, ஆட்டுவான் ஆடிக் காட்டும் தன்மை போல் - ஆட்டுவிப்பானொருவன் தான் முன்னர் ஆடிக் காட்டுந் தன்மையைப்போல, அரசு செய்து காட்டுவானாகி - செங்கோலோச்சிக் காட்டுவானாய், ஐயன் - இறைவன், திருவுளக் கருணை பூத்தான் - திருவுளங் கொண்டருளினான் எ - று.

ஏடு, நாடு என்பன விரித்தல் விகாரம் பெற்றன. நாட்டிலுள்ள பதியுமாம். நல் விடை - அருள் விடை. நாட்டியம் ஆட்டுவிப்பான் ஆடு முறைமை யுணர்த்துதலன்றித் தான் ஆடிக்காட்டுதலும் இன்றியமையாமைபோல இறைவன் உயிர்களறிந் தொழுகற் பாலவற்றை வேத முதலியவற்றால் உணர்த்தியிருப்பினும் தாமே வந்தொழுகிக் காட்டுதலும் இன்றியமையாத தென்பார் 'ஆடிக்காட்டுந் தன்மை போல் அரசு செய்து காட்டுவானாகி' என்றார். செய்விப்பான் செய்து காட்டினானென்க. (சகங)

[எழுசீரடியாசிரியவிருத்தம்]

அதிர்விடைக் கொடியங் கயற்கொடி யாக
வராக்கலன் போற்கல னாகப்
போதியவிழ் கடுக்கை வேம்பல ராகப்
புலியதள் போலந்துகி லாக
மதிமுடி வைர மணிமுடி யாக
மறைகிடந் தலம்புமா மதுரைப்
பதியுறை சோம சுந்தரக் கடவுள்
பாண்டிய னாகிவீற் றிருந்தான்.

(இ - ள்.) அதிர்விடைக் கொடி அம் கயல் கொடி ஆக - ஒலிக்கும் இடபக்கொடி அழகிய மீனக் கொடியாகவும், அராக்கலன் பொன்கலன் ஆக - பாம்பணிகள் பொன்னணிகளாகவும், போது அவிழ் கடுக்கை வேம்பு அலர் ஆக - இதழ் விரிந்த கொன்றை மலர் மாலை வேப்பம்பூ மாலையாகவும், புலி அதள் பொலம் துகில் ஆக - புலித்தோல் ஆடை பொன்னுடையாகவும், மதி முடி வைர மணிமுடி ஆக - சந்திரனை அணிந்த சடாமுடி அழகிய வைரமுடியாகவும், மறை கிடந்து அலம்பும் மாமதுரைப் பதி உறை - வேதங்கள் தங்கி ஒலிக்கின்ற பெரிய மதுரைப் பதியில் வீற்றிருக்கும், சோமசுந்தரக் கடவுள் பாண்டியனாகி வீற்றிருந்தான் - சோமசுந்தரக் கடவுள் சுந்தர பாண்டியனாய் வீற்றிருந்தருளினான் எ - று.

சிவபெருமான் பாண்டியனாகக் கோலங் கொண்டதற் கேற்ப அவனுடைய விடைக்கொடி முதலியனவே கயற்கொடி முதலியனவாக உருமாறின என்றார். இறைவன் திருக்கயிலையினின்று வழிக் கொண்டு வந்தானாயினும் அவன் என்றும் மதுரையிலிருப்பவனே யென்பார் 'மதுரைப் பதியுறை சோமசுந்தரக் கடவுள்' என்றார்; மேல் சகு-ஆம் செய்யுளில்,

"என்று தொட்டுநீ திசையின்மேற் சயங்குறித்
தெழுந்து போந்தனை யாமும்
அன்று தொட்டுநம் மதுரைவிட் டுனைவிடா
தடுத்து வந்தனம்"

என இறைவன் பிராட்டிக்குக் கூறினமையும் நோக்குக. (௧௧௪)

[அறுசீரடியாசிரியவிருத்தம்]

விண்டவழ் மதியஞ் சூடுஞ் சுந்தர விடங்கப் புத்தேள்
கொண்டதோர் வடிவுக் கேற்பக் குருதிகோப் பளிக்குஞ் சூலத்
திண்டிறற் சங்கு கன்னன் முதற்கணத் தேவர்* தாமும்
பண்டைய வடிவ மாறிப் பார்த்திவன் பணியி னின்றார்.

(இ - ள்.) விண் தவழ் மதியம் சூடும் சுந்தர விடங்கப்புத்தேள் - வானின் கண் தவழும் சந்திரனை யணிந்த பேரழகனாகிய சோமசுந்தரக் கடவுள், கொண்டது ஓர் வடிவுக்கு ஏற்ப - கொண்டருளிய ஒப்பற்ற திருக்கோலத்திற்குப் பொருந்த, குருதி கொப்பளிக்கும் சூலம் - உதிரம் கொப்பளிக்கும் சூலப்படையை யுடைய, திண் திறல் சங்கு கன்னன் முதல் கணத்தேவர் தாமும் - மிகுந்த வலியையுடைய சங்கு கன்னன் முதலான சிவகணத்தவர்களும், பண்டைய வடிவம் மாறி - முன் உருவம் நீங்கி (அரசர் பணி செய்தற் கேற்ற உருக்கொண்டு), பார்த்திவன் பணியில் நின்றார் - அம்மன்னன் ஏவலில் நின்றார்கள் எ - று.

சுந்தர விடங்கம், திண்டிறல் என்பன ஒருபொருட் பன்மொழிகள். கணமாகிய தேவர். (௧௧௫)

தென்னவர் வடிவங் கொண்ட சிவபர னுலகங் காக்கும்
மன்னவர் சிவனைப் பூசை செய்வது மறையா றென்று
சொன்னது மன்ன ரெல்லாந் துணிவது பொருட்டுத் தானும்
அந்நகர் நடுவூ ரென்றோ ரணிநகர் சிறப்பக் கண்டான்.

(இ - ள்.) உலகம் காக்கும் மன்னவர் - உலகத்தைக் காவல் பூண்ட வேந்தர்கள், சிவனைப் பூசை செய்வது - சிவ பெருமானைப் பூசிப்பது, மறை ஆறு என்று சொன்னது - வேத நெறி என்று தான் திருவாய்மலர்ந்தருளியதை, மன்னர் எல்லாம் துணிவது பொருட்டு - அரசரனைவரும் துணிந்து மேற்கொள்ளுதற் பொருட்டு, தென்னவர் வடிவம் கொண்ட சிவபரன் தானும் - பாண்டியர் திருக்கோலங் கொண்ட இறைவனும், அ நகர் - அந்நகரில், நடுவூர் என்று ஓர் அணி நகர் சிறப்பக் கண்டான் - நடுவூர் என்று சொல்லப்படும் ஓர் அழகிய நகரை மேன்மைப்பட ஆக்கினான் எ - று.

கோலம் பாண்டியரனைவர்க்கும் பொதுவாகலின் 'தென்னவர்' எனப் பன்மை கூறினார். வேத நெறியென்று வேதத்திற் சொன்ன தென்க. செய்வது, துணிவது: தொழிற் பெயர்கள். (௧௧௬)

---

(பா - ம்.) * கணதேவர்.

மெய்ம்மைநூல் வழியே கோயில் விதித்தருட் குறிநி றீஇப்பேர்
இம்மையே நன்மை நல்கு மிறையென நிறுவிப் பூசை
செம்மையாற் செய்து நீப வனத்துறை சிவனைக் காலம்
மும்மையுந் தொழுது வைய முழுவதுங் கோன டாத்தும்.

(இ - ள்.) மெய்ம்மை நூல் வழியே கோயில் விதித்து-உண்மை நூலின் நெறிப்படியே திருக்கோயிலெடுத்து, அருள் குறி நிறீஇ - அருள் வடிவாகிய சிவலிங்கத்தை நிலை பெறுத்தி, இம்மையே நன்மை நல்கும் இறை எனப் பேர் நிறுவி-இம்மையே பேறு தரும் இறைவன் என்று திருப்பெயர் இட்டு, செம்மையால் பூசை செய்து-முறைப்படி பூசனை புரிந்து, நீப வனத்து உறை சிவனை -கடம்ப வனத்திலுறை கின்ற சோமசுந்தரக் கடவுளை, காலம் மும்மையும் தொழுது-மூன்று காலங்களிலும் வணங்கி, வையம் முழுவதும் கோல் நடாத்தும்-உலக முற்றும் தனது செங்கோலை நடாத்தியருளுவான் எ - று.

மெய்ம்மை நூல் - ஆகமமும், அதன் வழிப்பட்ட சிற்ப நூலும். பேர் நிறுவி வழிபட்ட இச்செய்தி,

"முலைமூன் றணைந்த சிலைநுதற் றிருவினை
அருமறை விதிக்கத் திருமணம் புணர்ந்து
மதிக்குலம் வாய்த்த மன்னவ னாகி
மேதினி புரக்கும் விதியுடை நன்னாள்
நடுவூர் நகர்செய் தடுபவந் துடைக்கும்
அருட்குறி நிறுவி யருச்சனை செய்த
தேவர் நாயகன்"

எனக் கல்லாடத்துட் கூறப்படுதலுங் காண்க. (கஙஎ)

பூவரு மயன்மா லாதிப் புனிதரு முனிவ ரேனோர்
யாவருந் தனையே பூசித் திகபர மடைய நின்ற
மூவருண் மேலா முக்கண் மூர்த்தியே பூசை செய்த
தாவர விலிங்க மேன்மைத் தகுதியா ரளக்க வல்லார்.

(இ - ள்.) பூவரும் அயன்மால் ஆதிப் புனிதரும்-தாமரை மலரில் வசிக்கும் பிரமன் திருமால் முதலிய தேவர்களும், முனிவர் ஏனோர் யாவரும்-முனிவரும் மற்றைய அனைவரும், தனையே பூசித்து இகபரம் அடைய நின்ற - தன்னையே வழி பட்டு இம்மை மறுமைப் பயன்களை அடையுமாறு அருள் புரிந்து நின்ற, மூவருள் மேலாம் முக்கண் மூர்த்தியே-மூவருக்கும் மேலான முக்கண்ணனாகியஇறைவனே, பூசை செய்த தாவர இலிங்க மேன்மைத் தகுதி அளக்க வல்லார் யார் - வழிபட்ட நிலைபெற்ற இலிங்கத்தின் சிறப்புத் தன்மையை அளந்து கூற வல்லவர் யார் (ஒருவருமில்லை யென்றபடி) எ - று.

"மூவர் கோனாய் நின்ற முதல்வன்" எனத் திருவாதவூரடிகள் கூறுதல் நோக்கி, 'மூவருள் மேலாம்' என்பதற்கு மூவருக்கும் மேலான என்றுரைக்கப்பட்டது; மூவருள்ளே யெனினும் இழுக்கின் றென்க. தாவரமாகிய இலிங்கமென்க. (கஙஅ)

[வேறு]

மனித்த ருக்கர சாகித்தெவ்
வேந்தர்க்கு மடங்கலாய் மடநல்லார்க்
கினித்த வைங்கணைக் காளையாய்
நிலமகட் கிணர்த்துழா யணிமாலாய்
அனித்த நித்தமோர்ந் திகபரத்
தாசைநீத் தகந்தெளிந் தவர்க்கொன்றாய்த்
தனித்த மெய்யறி வானந்த
மாம்பர தத்துவமாய் நின்றான்.

(இ - ள்) (இங்ஙனம் பாண்டியர் கோலம் பூண்ட இறைவன்) மனித்தருக்கு அரசாகி-மக்களுக்கு மன்னனாகியும், தெவ் வேந்தர்க்கு மடங்கலாய்-பகை மன்னராகிய யானைகளுக்குச் சிங்கமாகியும், மட நல்லார்க்கு இனித்த ஐங்கணைக்காளையாய் - மகளிருக்கு இனிமையை யுடைய ஐந்து பாணங்களையுடைய மதவேளாகியும், நிலமகட்கு இணர்த்துழாய் அணி மால் ஆய்-புவி மகளுக்குக் கொத்தாகிய துழாய் மாலையை யணிந்த திருமாலாகியும், அனித்தம் நித்தம்ஓர்ந்து-அனித்த நித்தக் கூறுபாடுகளையுணர்ந்து, இகபரத்து ஆசைநீத்து - இம்மை மறுமை யின்பங்களை வெறுத்து, அகம் தெளிந்தவர்க்கு - மனந் தூய்மை யெய்திய மெய்ஞ்ஞானியர்க்கு, ஒன்றாய் - ஒன்றாகி, தனித்த மெய் அறிவு ஆனந்தமாம் பரதத்துவமாய் நின்றான் - ஒப்பற்ற சச்சி தானந்தமாகிய பரதத்துவப் பொருளாகியும் நின்றருளினான் எ - று.

மனித்தர்: விரித்தல். அரசாகி யென்றதனால் குடிகளைத் தாய் போற் புரக்கும் தண்ணளியும் நீதியும் முதலிய வெல்லாங்கொள்ளப் படும். இச்செய்யுளின் முன்னிரண்டடியோடு,

"தருமன் றண்ணளி யாற்றன தீகையால்
வருணன் கூற்றுயிர் மாற்றலின் வாமனே
அருமை யாலழ கிற்கணை யைந்துடைத்
திரும கன்றிரு மாநில மன்னனே"

என்னுஞ் சிந்தாமணிச் செய்யுளை ஒத்து நோக்குக. நில முழுதையும் தனக்குரிமை யாக்கிக் கோடலின் 'மாலாய்' என்றார்; மால் புவி மகட்குக் கணவனாகலின். அகந்தெளிந்தார்க்குப் பதிப்பொருள் விளங்குதலை,

"திரையற்ற நீர்போற் சிந்தை தெளிந்தார்க்குப்
புரையற் றிருந்தான் புரிசடை யானே"

என்னும் திருமந்திரத்தாலு மறிக. பதிப்பொருள் ஒன்றே யாகலின், 'ஒன்றாய்' என்றார்; இதனை,

"ஒன்றென்ற தொன்றேகா ணொன்றே பதி"

எனச் சிவஞானபோதத்துள் வரும் திருவெண்பா விளங்க வுணர்த்தும். ஆய் என்னும் செய்தெனெச்சம் ஆம் என்னும் பெயரெச்சங் கொண்டு முடியும். தத்துவம் - உண்மை; கடவுளைப் பரதத்துவம் எனக் கூறுவது மரபு. பலபடப்புனைவணி. (கககூ)

ஆகச் செய்யுள்—எகூஎ.

## ௬. வெள்ளியம்பலத் திருக்கூத்தாடிய படலம்

[அறுசீரடியாசிரியவிருத்தம்]

உலகிய னிறுத்து வான்வந் தோருபரஞ் சுடர்வான் றிங்கட்
குலமணி விளக்கை வேட்டுக் கோமுடி கவித்துப் பாராண்
டிலகுறு தோற்ற மீதான் முனிவர ரிருவர் தேற
அலகிலா னந்தக் கூத்துச் செய்தவா றறைய லுற்றாம்.

(இ - ள்.) ஒரு பரஞ் சுடர்-ஒப்பற்ற பரஞ்சோதியாகிய இறைவன், உலகு இயல் நிறுத்துவான் வந்து - உலகியலை நிறுத்துதற் பொருட்டுச் சுந்தர பாண்டியனாய் வந்து, வான் திங்கள் குல மணி விளக்கை - வானின்கண் உலவும் சந்திரன் மரபுக்கு மாணிக்க விளக்காகிய தடாதகைப் பிராட்டியாரை, வேட்டு - திருமணஞ் செய்து கொண்டு, கோமுடி கவித்துப் பார் ஆண்டு - அரசமுடிசூடி உலகை ஆண்டு; இலகுறு தோற்றம் ஈது - விளங்கும் வரலாறு இது; முனிவரர் இருவர் தேற - இரண்டு முனிவர்கள் தெளிந்துய்யுமாறு, அலகு இல் ஆனந்தக்கூத்து செய்தவாறு - அளவில்லாத ஆனந்தக் கூத்தை ஆடியருளிய திருவிளையாடலை, அறையலுற்றாம் - இனிக் கூறத் தொடங்கினோம் எ - று.

உலகியல்-உலகம் நடத்தற்கேதுவாகிய அறம் பொருள் இன்பங்கள்; 'உலகிய னிறுத்தும் பொருண்மர பொடுங்க,' 'உலகியல் கூறிய பொருளிது வென்ற வள்ளுவன்' என்னும் கல்லாடப் பகுதிகளிலும் உலகியல் என்பதற்குப் பொருள் இதுவாகல் வேண்டும். நிறுத்துவான்: வினையெச்சம். ஒரு என்றது தனி முதல் என்றபடி. குலத்தை என்றும் விளங்கச் செய்தமையின் 'குலமணி விளக்கு' என்றார். கோமுடி என்றது நிலமுழுதாளும் பெரு வேந்தர்க் குரிய முடியென்றவாறு. ஆல்: அசை. முனிவரர்-முனிவருள் மேலாயவர். (௧)

புண்ணிய மலர்மேன் கோம்பை வேட்டபின் புவனந் தாங்குங்
கண்ணுதன் மூர்த்தி யாய கவுரியன் மணத்தில் வந்த
மண்ணியல் வேந்தர் வானோர் மாதவர் பிறரு முண்ண
நண்ணுதி ரேன்ன லோடு நண்ணுவார் விரைவி னெய்த.

(இ - ள்.) புண்ணியம் மலர் மென் கொம்பை-அறவடிவமாகிய மெல்லிய பூங்கொம்புபோலும் பிராட்டியை, வேட்டபின் புவனம் தாங்கும் - திருமணம் செய்து கொண்டபின் உலகையாளும், கண் நுதல் மூர்த்தியாய கவுரியன் - நெற்றிக் கண்ணையுடைய இறைவனாகிய சுந்தரபாண்டியன், மணத்தில் வந்த - திருமணத்தில் வந்த, மண் இயல் வேந்தர் - மண்ணுலகை ஆளுதலமைந்த மன்னர்களும், வானோர்-தேவர்களும், மாதவர்-முனிவர்களும், பிறரும் - ஏனையோர்களும், உண்ண நண்ணுதிர் என்னலோடும் - அமுதுண்ண வருவீர் எனக் கட்டளையிட, விரைவின் எய்த நண்ணுவார்-விரைந்து அடைதற்கு வருகின்றவர்கள் எ - று.

இறைவி அறவுருவின ளென்பது 'அறப்பெருஞ் செல்வி, என முற் கூறியிருத்தலானுமறிக. 'புண்ணியக்கொடி வண்டார்ப்பப் பூத்தல்போல்' என முற்போந்த தொடருடன் 'புண்ணிய மலர்மென் கொம்பை' என்னு மிதனை ஒத்து நோக்குக. நண்ணுதிர்: படர்க்கையில் முன்னிலை வந்த வழு வமைதி. என்னலோடும் - என்று அவர்கட்குக் கட்டளை யிட்டவளவில். நண்ணுவார்: பெயர். (உ)

பொன்னவிர் கமலம் பூத்த புனிதநீ ராடித் தத்தம்
நன்னெறி நியம முற்றி நண்ணினர் புலிக்கா லோனும்
பன்னக முனியுந் தாழ்ந்து பரவியம் பலத்து ளாடும்
நின்னரு ணடங்கண் டுண்ப தடியேங்க ணியம மென்றார்.

(இ - ள்.) அவிர் பொன் கமலம் பூத்த புனித நீர் ஆடி-விளங்காநின்ற பொற்றாமரை மலர்ந்த தூய வாவியில் நீராடி, நல் நெறி தத்தம் நியமம் முற்றி நண்ணினர்-நல்ல நெறிப்படியே தங்கள் தங்கள் நியமங்களை முடித்து வந்தனர்; புலிக்காலோனும் பன்னக முனியும் - வியாக்கிரபாத முனிவரும் பதஞ்சலி முனிவரும், தாழ்ந்து பரவி - விழுந்து வணங்கித் துதித்து, அம்பலத்துள் ஆடும்-சிற்றம்பலத்தின் கண் ஆடப்பெறுகின்ற, நின் அருள் நடம் கண்டு-தேவரீரது கருணைத் திருக் கூத்தினைக் கண்டபின், உண்பது அடியேங்கள் நியமம் என்றார்-அருந்துவது அடியேங்களுடைய நியமம் என்று கூறினர் எ - று.

நியமம்-கடன், முறைமை. அருள் நடம்-உயிர்களை வாழ்விக்கும் பெருங் கருணையாற் புரியும் திருக்கூத்து. உண்பது: தொழிற் பெயர். (ங)

என்னலு மந்தங் கூத்தை யிங்குநாஞ் செய்துந் தில்லைப்
பொன்னக ருலக மெல்லா முருவமாம் புருடற் குள்ளம்
இன்னதாந் துவாத சாந்த மென்றிறை யருளிச் செய்ய
மன்னவ வேனை யங்கம் யாவென மன்னன் சொல்வான்.

(இ - ள்.) என்னலும்-என்று கூறிய வளவிலே, இறை-இறைவன், அந்தக் கூத்தை இங்கு நாம் செய்தும்-அந்நடத்தினை இம் மதுரைப் பதியிலே யாம் செய்வோம்; உலகம் எல்லாம் உருவம் ஆம் புருடற்கு-உலக மனைத்தும் வடிவமாகிய புருடனுக்கு, பொன் தில்லை நகர் உள்ளம்-அழகிய தில்லையம்பதியானது இதயமாகும்; இன்னது துவாத சாந்தம் ஆம் என்று அருளிச் செய்ய - இம் மதுரைப்பதி துவாத சாந்தமாகும் என்று அருளிச் செய்ய (முனிவர்கள்), மன்னவ ஏனையங்கம் யா என-அரசே மற்றைய உறுப்புக்கள் யாவை என்று கேட்க, மன்னன் சொல்வான் - இறைவனாகிய சுந்தர பாண்டியன் கூறுவான் எ - று.

செய்தும் - செய்வோம்; தன்மைப் பன்மை யெதிர்காலமுற்று. உலகமெல்லாம் உருவமாம் புருடன்-உலக புருடன்; விராட் புருடன். துவாதசாந்தம்-உச்சிக்குமேற் பன்னிரண்டு அங்குல அளவிலுள்ளது: தீர்க்கசந்தி; தல விசேடப் படலம் உக-ஆம் செய்யுளுரை நோக்குக.

அரைக்குமே லுலகே ழென்று மரைக்குக் கீழுலகே ழென்றும்
உரைக்கலா லுலக மெல்லா முருவமாம் புருடற் கிந்தத்
தரைக்குமே லனந்தந் தெய்வத் தானமுண் டனைத்துங் கூறின்
வரைக்குறு சிலதா னங்கள் வகுத்துரை செய்யக் கேண்மின்.

(இ - ள்.) அரைக்கு மேல் உலகு ஏழ் என்றும்-இடைக்குமேல் ஏழுலக மென்றும், அரைக்குக் கீழ் உலகு ஏழ் என்றும்-இடைக்குக் கீழ் ஏழுலகென்றும், உரைக்கலால் - சொல்லப்படுதலால், உலகம் எல்லாம் உருவம் ஆம் புருடற்கு-உலகமனைத்தும் உருவமாகிய புருடனுக்கு. இந்தத் தரைக்குமேல் அனந்தம் தெய்வத்தானம் உண்டு - இந்நிலவுலகில் அளவிறந்த தெய்வத்தன்மை பொருந்திய தானங்கள் உள; அனைத்தும் கூறின் வரைக்கு உறு-அவை முழுதும் எடுத்துச் சொல்லப்புகின் ஓரளவுக்கு உட்படா; சில தானங்கள் வகுத்து உரை செய்யக் கேண்மின் - (ஆதலான்) சில திருப்பதிகளை மட்டும் வகுத்துக் கூறக்கேளுங்கள் எ - று.

அரை: இடைக்கு எண்ணலளவையால் வந்தபெயர். உரைக்கலால்-நூல்களிற் கூறப்படுதலால்; நூல்கள் கூறுதலால் எனலுமாம்; கு: சாரியை, அல்: தொழிற் பெயர் விகுதி. உலகமெல்லாம் - பதினன்கு உலகங்களும். தரைக்குமேல் - தரையில்; கு: சாரியை, மேல்: ஏழனுருபு. வரைக்கு - அளவுக்கு. உறு - உட்படா. (ரு)

திருவள ராரூர் மூலந் திருவானைக் காவே குய்யம்*
மருவளர் பொழில்சூ ழண்ணு மலைமணி பூர நீவிர்
இருவருங் கண்ட மன்ற மிதயமாந் திருக்கா ளத்தி
பொருவருங் கண்ட மாகும் புருவமத் தியமாங் காசி.

(இ - ள்.) திருவளர் ஆரூர் மூலம்-செல்வமோங்கும் திருவாரூர் மூலத்தானமாம்; திருவானைக்காவே குய்யம்-திருவானைக்கா சுவாதிட்டானத்தானமாம்; மருவளர் பொழில் சூழ் அண்ணுமலை மணி பூரம் - மணம் ஓங்கும் சோலைகள் சூழ்ந்த திருவண்ணுமலை மணிபூரத்தானமாம்; நீவிர் இருவரும் கண்ட மன்றம் இதயம் ஆம்-நீங்கள் இருவரும் தரிசித்த தில்லைப்பதி இதயத்தானமாகும்; திருக்காளத்தி பொருவு அரும் கண்டம் ஆகும் - திருக்காளத்தி ஒப்பில்லாத கண்டத்தானமாகும்; காசி புருவ மத்தியம் ஆம்-காசி புருவ மத்தியத்தானமாகும் எ-று

குய்யம் - மறைவிடம்; சுவாதிட்டானத்தைக் குறிக்கின்றது. இதயம் - அநாகதம். கண்டம் - விசுத்தி. புருவமத்தியம்-ஆஞ்ஞை. ஆதார முறையாற் கூறப்பட்டமையின் பஞ்சபூதத்தானங்களுள் ஆகாயத்தானம் வாயுத்தானத்தினும் முற்கூறப்பட்டது. மன்றத்தையுடைய பதியை மன்றமென்ருர். ஆம் என்பதனை மூலம் முதலியவற்ருேடும் கூட்டிக் கொள்க. ஏ: அசை, (சு)

பிறைதவழ் கயிலைக் குன்றம் பிரமரந் திரமாம் வேதம்
அறைதரு துவாத சாந்த மதுரையீ ததிக மேந்த

(பா - ம்.) * காவே நாபி.

முறையினு லென்னின் முன்னர்த்தோன்றிய முறையாலென்றக்
கறையறு தவத்த ரோடு கவுரியன் கோயில் புக்கான்.

(இ - ள்.) பிறை தவழ் கயிலைக்குன்றம் பிரம ரந்திரம் ஆம் - சந்திரன் தவழும் திருக்கயிலைமலை பிரமரந்திரத்தானம் ஆகும்; வேதம் அறை தரு மதுரை துவாத சாந்தம் - மறைகள் கூறுகின்ற இம் மதுரைப்பதி துவாதசாந்தத் தானமாகும், ஈது எந்த முறையினல் அதிகம் என்னில் - இஃது எந்த வகையினல் மேலாகிய தென்ருல், முன்னர்த்தோன்றிய முறையால் என்று - முதலில் உண்டாகிய காரணத்தாலென்று கூறி, அகறை அறு தவத்தரோடு - அந்தக் குற்றமற்ற தவத்தினையுடைய முனிவரோடு, கவுரியன் கோயில் புக்கான் - சுந்தர பாண்டியன் திருக்கோயிலுட் புகுந்தருளினுன் எ - று.

பிரமரந்திரம் - பிரமநாடி; சுழுமுனையின் உச்சியாகிய இடம். ஈது அதிகமாம் என வேறு தொடராக்கலும் பொருந்தும். (எ)

தன்னரு ளதனு னீத்த தன்னையே தேடிப் போந்த
மின்னவிர் கயிலை தானோ விடையுரு மாறி யிங்ஙன்
மன்னிய தேயோ திங்கண் மண்டல மேயோ வென்னப்
பொன்னவிர் விமானக் கீழ்பால் வெள்ளியம் பொதுவுண் டாக.

(இ - ள்.) தன் அருளதனுல் நீத்த தன்னையே தேடிப்போந்த - தனது திருவருளால் தன்னை விடுத்து வந்த சிவபெருமானையே தேடி வந்தமர்ந்த, மின் அவிர் கயிலை தானோ-ஒளி விளங்கும் திருக் கயிலைமலைதானு (அன்றி), விடை உருமாறி இங்ஙன் மன்னியதோ - இடபவூர்தியானது தனது வடிவம் வேருகி இம்மன்றமாய் நிலைபெற்றதோ (அன்றி), திங்கள் மண்டலமோ என்ன-சந்திர மண்டலமோ என்று கூறுமாறு, பொன் அவிர் விமானம் கீழ்பால் - பொன்னுலாகி விளங்கும் விமானத்தின் கீழ் பக்கத்தில், வெள்ளியம் பொது உண்டாக - வெள்ளியம்பலம் ஒன்று தோன்ற எ - று.

தன்-சிவபெருமான். நீத்த-கயிலையை விடுத்துவந்த. தான் ஏ: அசைகள். என்ன - என்று ஐயுற, என்று நினைக்க; என்று கூற: (அ)

மின்பயில் பரிதிப் புத்தேள் பாற்கடல் விளங்கி யாங்குப்
பின்பதன் மிசைமா ணிக்கப் பீடிகை தோன்றிற் றன்ன
தன்பர்த முளமே யாகு மல்லது வேதச் சென்னி
என்பதா மஃதே யன்றி யாதேன விசைக்கற் பாற்றே.

(இ - ள்.) பால் கடல் - திருப்பாற் கடலின்கண், மின்பயில் பரிதிப்புத்தேள் விளங்கி யாங்கு - ஒளிதங்கிய சூரியதேவன் தோன்றினுற்போல, பின்பு அதன் மிசை மாணிக்கப் பீடிகை தோன்றிற்று - வெள்ளியம்பலம் தோன்றிய பின் அதன்மேல் மணிப்பீடம் ஒன்று தோன்றியது; அன்னது அன்பர்தம் உளமே ஆகும்-அஃது அடியார்களின் உள்ளத் தாமரையே ஆகும்; அல்லது வேதச்சென்னி என்பது ஆம்-அன்றி மறை முடி என்று சொல்லப்படுவதாகும்; அன்றி-இங்ங

னம் கூறுவதல்லாமல், யாது என இசைக்கற் பாற்று - வேறு யாதெனக் கூறும் பகுதியை யுடையது எ - று.

என்பது: அசையுமாம். ஈற்றிலுள்ள ஏகாரம் அசை. (௯)

அன்னதோர் தவிசி னும்ப ராயிரங் கரத்தா லள்ளித்
துன்னிருள் விழுங்குங் கோடி சூரிய ரோரு காலத்து
மன்னின ருதித்தா லோப்ப மனமொழி பக்கங் கீழ்மேற்
பின்முதல் கடந்த ஞானப் பேரொளி வடிவாய்த் தோன்றி.

(இ - ள்.) அன்னது ஓர் தவிசின் உம்பர் - அத் தன்மையதாகிய ஒப்பற்ற பீடிகையின் மேல், ஆயிரம் கரத்தால் அள்ளித் துன் இருள் விழுங்கும் - ஆயிரங் கைகளினால் அள்ளிச் செறிந்த இருளை விழுங்குகின்ற, கோடி சூரியர் ஒருகாலத்து மன்னினர் உதித்தால் ஒப்ப - கோடி சூரியர்கள் ஒரே காலத்தில் நிலைபெற்று உதித்தாற்போல, மனம் மொழி பக்கம் கீழ்மேல் பின் முதல் கடந்த-உள்ளம் உரை பக்கம் கீழ் மேல் பின் முன் என்னும் இவற்றைக் கடந்த, ஞானப் பேர் ஒளி வடிவாய்த் தோன்றி - மெய்ஞ்ஞானமாகிய பெரிய ஒளி வடிவமாகத் தோன்றி எ - று.

கரம் - கை, கிரணம். இறைவன் எல்லாவற்றையும் கடந்திருக்குமியல்பினை,

"ஒன்றன் றிரண்டன் றுளதன் றிலதன்று
நன்றன்று தீதன்று நானன்று—நின்ற
நிலையன்று நீயன்று நின்னறிவு மன்று
தலையன் றடியன்று தான்"

எனத் திருக்களிற்றுப்படியார் கூறுகின்றது. (௧0)

முந்துறு கணங்கள் மோந்தை தண்ணுமை முழக்கஞ் செய்ய
நந்திமா முழவந் தாக்க நாரண னிடக்கை யார்ப்ப
வந்துகந் தருவ நூலின் மரபுளி யிருவர் பாட
ஐந்துதுந் துபியுங் கல்லென் றார்கலி முழக்கங் காட்ட.

(இ - ள்.) முந்துறு கணங்கள்-முதன்மையான சிவகணங்கள், மொந்தை தண்ணுமை முழக்கம் செய்ய-மொந்தை தண்ணுமைகளை முழக்கவும், நந்திமா முழவம் தாக்க - திருநந்திதேவர் பெரிய மத்தளத்தை அடிக்கவும், நாரணன் இடக்கை ஆர்ப்ப - திருமால் இடக்கையை ஒலிக்கவும், இருவர் வந்து - தும்புரு நாரதர் என்னு மிருவரும் வந்து, கந்தருவ நாலின் மரபுளிபாட-இசை நாலின்வழியேபாடவும், துந்துபி ஐந்தும் கல்லென்று ஆர்கலி முழக்கம் காட்ட-ஐந்து துந்துபிகளும் கல்லென்னும் ஒலியோடு கடலின் ஒலியைக் காட்டவும் எ-று.

ஆர்ப்பிக்கவென்பது, ஆர்ப்பவென நின்றது. கந்தருவ நால் - இசை நால். மரபுளி - முறையால்; உளி, மூன்றன் பொருள்படும் இடைச்சொல். கல்லென்று: ஒலிக் குறிப்பு. (௧௧)

மதுமுகத் தலர்ந்த வெண்டா மரைமகள் சுருதி கூட்டச்
சதுமுகத் தோருவன் சாம கீதயாழ் தடவிப் பாட
விதுமுகத் தருகு மோய்க்கு மீனேன ஞான வெள்ளிப்
போதுமுகத் தமரர் தூற்றும் பூமழை யெங்கும் போர்ப்ப

(இ - ள்.) மதுமுகத்து அலர்ந்த வெள்தாமரை மகள் சுருதி கூட்ட - தேன் ஒழுகும் முகத்தொடு மலர்ந்த வெள்ளிய தாமரை மலரில் வசிக்குங் கலைமகள் சுருதி கூட்டவும், சதுமுகத்து ஒருவன் - நான்கு முகங்களையுடைய பிரமன், யாழ் தடவி சாமகீதம் பாட - யாழினைத் தடவிச் சாமகீதம் பாடவும், விதுமுகத்து அருகு மொய்க்கும் மீன் என - திங்கள் மண்டிலத்தின் அருகிற் சூழும் உடுக்களைப் போல, ஞான வெள்ளிப் பொதுமுகத்து - ஞானமயமாகிய வெள்ளியம்பலத்தில், அமரர் தூற்றும் பூமழை எங்கும் போர்ப்ப - தேவர்கள் பொழியும் மலர்மாரி எங்கும் மூடவும் எ - று.

கீதம் என விரிக்க. தடவல் - நரம்பினை வருடல். விதுமுகத்து: பொது முகத்து என்பவற்றில் முகம் ஏழனுருபு, (௧௨)

போருங்கட னிறத்த செந்தீப் போங்குளைக் குறளின் மீது
பெருங்கடல் வடவைச் செங்கண் பிதுங்கமேற் றிரிந்து நோக்கி
முருங்கட லெரியிற் சீற முதுகிற வலத்தா ளூன்றிக்
கருங்கடன் முளைத்த வெய்யோன் காட்சியிற் போலிந்து நின்று

(இ - ள்.) பொரும் கடம் நிறத்த - (அலை) மோதுங் கடல் நிறம் போலும் நிறத்தையுடைய, செந்தி பொங்கு உளை குறளின் மீது - சிவந்த தீப்போலும் விளங்கும் புறமயிரையுடைய முயலகன் மேல், பெரு கடல் வடவை செங்கண் பிதுங்க - பெரிய கடலின் வடவைத் தீப்போல அவன் சிவந்த கண்கள் பிதுங்கவும், மேல் திரிந்து நோக்கி - மேலே சுழன்று பார்த்து, முருங்கு அடல் எரியில் சீற - (உலகினை) அழிக்கும் வலியினையுடைய அவ்வடவைபோற் கோபிக்கவும், முதுகு இற - அவன் முதுகு முறிய, வலத்தாள் ஊன்றி - வலது திருவடியை ஊன்றி, கருங்கடல் முளைத்த வெய்யோன் காட்சியில் பொலிந்து நின்று - கரிய கடலின்கண் தோன்றிய சூரியனது தோற்றம்போல விளங்கி நின்று எ - று.

நிறத்த என்னும் குறிப்புப் பெயரெச்சம் குறளன் என்பதன் விகுதியைக் கொண்டு முடியும். குறளன்-குறிய வடிவுடையவன்; முயலகன். மீது ஊன்றி யென்க. முருக்கு என்பது மெலிந்து நின்றது. (௧௩)

கோய்யுஞ்சேங் கமலப் போது குவிந்தேன வேடுத்துக் கூத்துச்
செய்யும்புண் டரிகத் தாளுந் திசைகடந் துளவீ ரைந்து
கையுந்திண் படையுந் தேய்வ மகளிர்மங் கலநாண் காத்த
மையுண்ட மிடறுஞ் சங்க வார்குழை நுழைந்த காதும்.

(இ - ள்.) கொய்யும் செங்கமலப் போது குவிந்தென - கொய்தற்குரிய செந்தாமரை மலர் குவிந்தாற் போல, எடுத்து - தூக்கி கூத்துச்

செய்யும் புண்டரிகத் தாளும் - திருக்கூத் தியற்றுகின்ற திருவடித் தாமரையும், திசை கடந்துள ஈரைந்து கையும் - திக்குகளைக் கடந்த பத்துத் திருக்கைகளும், திண் படையும் - (அவற்றிலுள்ள) வலிய படைகளும், தெய்வ மகளிர் - தெய்வப் பெண்களின், மங்கல நாண் காத்த - மங்கல நாணைக் காத்தருளிய, மை உண்ட மிடறும் - கரு நிறம் பொருந்திய திருமிடறும், வார் சங்கம் குழை நுழைந்த காதும் - நீண்ட சங்க குண்டலம் பூண்ட திருச்செவியும் எ - று.

எடுத்து - குஞ்சித்து. அயன்மால் உள்ளிட்ட தேவர்கள் பொன்றாமற் காத்த வென்பார் 'தெய்வ மகளிர் மங்கல நாண் காத்த' என்றார்;

"செற்றால முயிரனைத்து முண்டிடவே
நிமிர்ந்தெழலுஞ் சிந்தை மேற்கொள்
பற்றாலங் கதுநுகர்ந்து நான்முகனே
முதலோர்தம் பாவைமார்க்குப்
பொற்றாலி தனையளித்தோன்"

என்னும் கந்தபுராணச் செய்யுள் இங்கே நோக்கற்பாலது. காத்த மிடறென மிடற்றின்மே லேற்றிக் கூறினார்; முன்பும் இங்ஙனம் வந்தமையோர்க. (கச)

சேக்கரஞ் சடையுந் தேசார் வெண்டிரு நீறுந் தெய்வ
முக்கணு முரகக் கச்சு முள்ளெயி றிமைக்கு மார்பும்
மைக்கருங் கயற் கணங்கை வல்லியி னொதுங்கி நிற்கும்
பக்கமு மவண்மேல் வைத்த பார்வையு நகையுந் தோன்ற.

(இ - ள்.) அம் செக்கர் சடையும் - அழகிய சிவந்த சடையும், தேசு ஆர் வெள் திருநீறும் - ஒளி நிறைந்த வெள்ளிய திருநீறும், தெய்வ முக்கணும் - தெய்வங்களாகிய மூன்று கண்களும், உரகக் கச்சும் - அரவக் கச்சையும், முள் எயிறு இமைக்கும் மார்பும் - முள் போன்ற பன்றிக் கொம்பு விளங்கும் திருமார்பும், மைக்கருங்கயல் கண் நங்கை - மை எழுதிய கரிய கயல்போலுங் கண்களையுடைய உமையம்மையார், வல்லியின் ஒதுங்கி நிற்கும் பக்கமும் - கொடி போன்று ஒதுங்கி நிற்கும் பக்கமும், அவள்மேல் வைத்த பார்வையும் நகையும் - அவ்வம்மை மேல் வைத்த நோக்கமும் புன்னகையும், தோன்ற - தோன்றவும் எ - று.

செக்கர் - செவ்வானம் போலும் என்றுமாம். ஆதித்தன் திங்கள் அங்கி யென்னும் தெய்வங்கள் கண்களாதலின் 'தெய்வமுக்கணும்' என்றார். இவ்விரு செய்யுளிலும் எண்ணி வந்த தாள் முதலியவற்றைத் தோன்ற என்பதனோடு முடிக்க. (கரு)

கங்கையா றலம்பு மோசை கடுக்கைவண் டிரங்கு மோசை
மங்கல முழவி னோசை மந்திர வேத வோசை
செங்கையா டேரியி னோசை திருவடிச் சிலம்பி னோசை
எங்கணு நிரம்பி யன்ப ரிருசெவிக் கமுத மூற்ற.

(இ - ள்.) கங்கை ஆறு அலம்பும் ஓசை - கங்கையாறு ஒலிக்கும் ஒலியும், கடுக்கை வண்டு இரங்கும் ஓசை - கொன்றை மாலையிலுள்ள

வண்டுகள் ஒலிக்கும் ஒலியும், மங்கல முழவின் ஓசை - மங்கலமாகிய மத்தள ஒலியும், மந்திர வேத ஓசை - மந்திர ஒலியும் மறை ஒலியும், செங்கை ஆடு எரியின் ஓசை - சிவந்த கையின்கண் அசைகின்ற தீயின் ஒலியும், திருவடிச் சிலம்பின் ஓசை - திருவடியிலுள்ள சிலம்பின் ஒலியும் ஆகிய இவைகள், எங்கணும் நிரம்பி - எங்கும் பரவி, அன்பர் இரு செவிக்கு அமுதம் ஊற்ற - அடியார்களின் இரண்டு செவிகளுக்கும் அமுதத்தைப் பொழியவும் எ - று.

கங்கையொலி, வண்டொலி, எரியொலி, சிலம்பொலி என்னும் இவை ஆடுதலால் நிகழ்வன. எரியினோசை - தீயிலுண்டாகும் சடுலவொலி. செவிக்கு மென்னும் முற்றும்மை தொக்கது. (கசு)

ஆடினு னமல மூர்த்தி யஞ்சலி முகிழ்த்துச் சென்னி
சூடினு ரடியில் வீழ்ந்தார் சுருதியா யிரநா வாரப்
பாடினுர் பரமா னந்தப் பரவையிற் படிந்தா ரன்பு
நீடினுர் நிருத்தா னந்தங் காண்பது நியமம் பூண்டார்.

(இ - ள்.) அமல மூர்த்தி ஆடினுன் - தூயனுகிய சோமசுந்தரக் கடவுள் திருக்கூத்தாடியருளினுன்; நிருத்தானந்தம் காண்பது நியமம் பூண்டார் - ஆனந்தக் கூத்தைக் காண்பதையே நியமமாக மேற்கொண்ட முனிவரிருவரும், அஞ்சலி முகிழ்த்துச் சென்னி சூடினுர் - கைகளைக் கூப்பி முடியின்கண் தரித்தார்கள்; அடியில் வீழ்ந்தார் - திருவடியில் வீழ்ந்து வணங்கினுர்கள்; நா ஆர ஆயிரம் சுருதி பாடினுர் - நா நிரம்ப அளவற்ற சுருதிகளைப் பாடினுர்கள்; பரமானந்தப் பரவையில் படிந்தார் - பேரின்பக் கடலில் மூழ்கினுர்கள்; அன்பு நீடினுர் - அன்பு விஞ்சினுர்கள் எ - று.

'அன்னதோர் தவிசினும்பர்' என்னுஞ் செய்யுண் முதல் இதில் 'ஆடினுனமல மூர்த்தி' என்பது காறும் ஒரு தொடர். செயவெனெச்சமெல்லாம் ஆடினுன் என்னும் முற்றுவினை கொண்டு முடியும். பரமானந்தம், நிருத்தானந்தம் என்பன தீர்க்க சந்திகள். காண்பது: தொழிற்பெயர். (கஎ)

முனிவர்கந் தருவுர் வானோர் தானவர் மோன யோகர்
புனிதகிம் புருட ராதிப் புலவரு மிறைஞ்சி யன்பின்
கனிதரு மின்பத் தாழ்ந்தார் திருமணங் காண வந்த
மனிதருங் காணப் பெற்ருர் மாதவர் பொருட்டான் மன்னே.

(இ - ள்.) மாதவர் பொருட்டால் - அம் முனிவரிருவர் பொருட்டால், முனிவர்-முனிவர்களும், கந்தருவர்-கந்தருவர்களும், வானோர் - தேவர்களும், தானவர் - அவுணர்களும், மோன யோகர் - மவுன நிலையையுடைய யோகிகளும், புனித கிம்புருடர் ஆதிப்புலவரும்-தூய கிம்புருடர் முதலிய தேவ கணங்களும், இறைஞ்சி-வணங்கி, அன்பின் கனிதரும் இன்பத்து ஆழ்ந்தார்-அன்பின் முதிர்ந்த இன்பத்திலமிழ்ந்தினுர்கள்; திருமணம் காண வந்த மனிதரும் காணப் பெற்ருர்-திருமணத்தைக் காணுதற்கு வந்த மக்களும் அதனைக் காணப்பெற்ருர்கள் எ-று.

புலவர்-தேவர். சிறப்பிலராகிய மக்களுமென்பார் 'காணவந்த மனிதரும்' என உம்மை கொடுத்தார். மாதவராற் கண்டமையை மாதவர் பொருட்டாற் கண்டாரென்றார்; மாதவர் நிமித்தமாயின மையா லென்க. மன்னும் ஓவும் அசைகள். (கஅ)

அனந்தனு முனிவர் வேந்த னளவிலா னந்த மூறி
மனந்தனி நிரம்பி மேலும் வழிவது போல மார்பம்
புனைந்தபுண் ணியவெண் ணீறுகரைந்திடப் பொழிகண் ணீருள்*
நனைந்திரு கரமுங் கூப்பி நாதனைப் பாடு கின்றான்.

(இ - ள்.) அனந்தனும் முனிவர் வேந்தன்-சேடனாகிய முனிவர் மன்னன், அளவு இல் ஆனந்தம் ஊறி - அளவில்லாத இன்பமானது ஊற்றெடுத்து, மனம் தனில் நிரம்பி - உள்ளத்தில் நிரம்பி, மேலும் வழிவதுபோல-மேலேயும் வழிந்து வருவதுபோல, மார்பம் புனைந்த புண்ணிய வெள் நீறு கரைந்திட - மார்பில் தரித்த புண்ணியமாகிய வெள்ளிய திருநீறு கரையுமாறு, பொழிகண் நீருள் நனைந்து-பொழி கின்ற ஆனந்தக் கண்ணருவியில் நனைந்து, இருகரமும் கூப்பி - இரண்டு கைகளையும் குவித்து, நாதனைப் பாடுகின்றான்-இறைவனைத் துதிப்பாராயினர் எ - று.

ஆதிசேடனே பதஞ்சலியாக வந்தனனென்பார் 'அனந்தனு முனிவர் வேந்தன்' என்றார். வழிவதுபோலப் பொழி கண்ணி ரென்க. திருநீறானது புண்ணியராற் பூசப்படுவதும் புண்ணியத்தைப் பயப் பதுமாகலின் 'புண்ணிய வெண்ணிறு' என்றார்.

"புண்ணிய மாவது நீறு"
"புண்ணியர் பூசும்வெண் ணீறு"

எனத் தமிழ் மறை கூறுதல் காண்க. கண்ணீரும் என்னும் பாடம் சிறப்பின்றென்க. (கக)

பராபர முதலே போற்றி பத்தியில் விளைவாய் போற்றி
சராசர மாகி வேறாய் நின்றதற் பரனே போற்றி
கராசல வுரியாய் போற்றி கனகவம் பலத்து ளாடும்
நிராமய பரமா னந்த நிருத்தனே போற்றி போற்றி.

(இ - ள்.) பராபர முதலே போற்றி - முன்னும் பின்னுமாகிய முதல்வனே வணக்கம்; பத்தியில் விளைவாய் போற்றி - அன்பின் விளைவானவனே வணக்கம்; சராசரம் ஆகி வேறாய் நின்ற தற்பரனே போற்றி - சரமும் அசரமும் ஆகியும் அவற்றின் வேறாகியும் நின்ற சிவபரம் பொருளே வணக்கம்; கராசல உரியாய் போற்றி - யானைத்தோலைப் போர்த்தவனே வணக்கம்; கனக அம்பலத்துள் ஆடும்-பொன்னம்பலத்தின்கண் திருநிருத்தம் செய்தருளும், நிராமய பரமானந்த நிருத்தனே போற்றி போற்றி - பிறவிப் பிணியைப் போக்கும் பேரின்பத் திருக்கூத்தினை உடையவனே வணக்கம் வணக்கம் எ - று.

---

(பா - ம்.) * கண்ணிரு நனைந்து.

பரம் - முன்; அபரம் - பின்; பராபரன் - முன்னும் பின்னு மானவன்;

"முன்னைப் பழம்பொருட்கு முன்னைப் பழம்பொருளே
பின்னைப் புதுமைக்கும் பேர்த்துமப் பெற்றியனே"

என்பது திருவாசகம். பத்தியாகிய வித்தின் விளைவானவ னென்க;

"அருச்சனை வயலு ளன்பு வித்திட்டு"

என மணிவாசகப் பெருமானும்,

"பத்தித்தனி வித்திட்டு"

எனப் பட்டினத்துப் பிள்ளையாரும் அருளிச் செய்தமை காண்க; இவ் வாசிரியரும் "அன்புறு பத்தி வித்தி" என முற்கூறினர். தற்பரம் - யாவற்றையும் கடந்து நிற்கும் சிவம்; "தற்பரமு மல்லை தனி" எனச் சிவஞான போதத்துள் வருந் தொடர்க்குச் சிவஞான முனிவர் கூறிய பொருளை நோக்குக. கராசலம் - கைம்மலை; யானை. நிராமயம் - நோயின்மை. (௨0)

ஒன்றாகி யைந்தா யையைந் துருவாகி வருவாய் போற்றி
இன்றாகிச் சென்ற நாளா யெதிர்நாளா யெழுவாய் போற்றி
நன்றாகித் தீய தாகி நடுவாகி முடிவாய் மன்றுள்
நின்றாடும் பரமா னந்த நிருத்தனே போற்றி போற்றி.

(இ - ள்.) ஒன்று ஆகி ஐந்து ஆய் ஐயைந்து உருவாகி - ஓருரு வாகியும் ஐந்து உருவாகியும் இருபத்தைந்து உருவாகியும், வருவாய் போற்றி - (உயிர்களின் பொருட்டு) வந்தருளுபவனே வணக்கம்; இன்றாகி சென்ற நாளாய் எதிர் நாளாய் எழுவாய் போற்றி - நிகழ் கால மாகியும் இறந்த காலமாகியும் எதிர் காலமாகியும் தோன்றுபவனே வணக்கம்; நன்றாகி தீயதாகி - நன்மையாகியும் தீமையாகியும், நடு வாகி முடிவாய் - நடுவாகியும் முடிவாகியும், மன்றுள் நின்று ஆடும் பரமானந்த நிருத்தனே போற்றி போற்றி - அம்பலத்தில் நின்று ஆடியருளும் பேரின்ப மயமாகிய திருக்கூத்தினை உடையவனே வணக்கம் வணக்கம் எ - று.

ஒன்று - சுத்த சிவம். ஐந்து - நிட்களமும், சகள நிட்களமும், சகளமுமாகிய சிவன், நாத சிவன், சதாசிவன், மகேசன், உருத்திரன் என்னும் ஐந்தும். ஐயைந்து - சந்திர சேகரர், உமாமகேசர், இடபாரூடர், சபாபதி, கலியாண சுந்தரர், பிச்சாடனர், காமாரி, அந்தகாரி, திரிபுராரி, சலந்தராரி, விதித்துவம்சர், வீரபத்திரர், நரசிங்க நிபாதனர், அர்த்தநாரீசர், விக்கிராதரர், கங்காளர், சண்டேசானுக்கிரகர், நீலகண்டர், சக்கரப்பிரதர், கசமுகானுக்கிரகர், சோமாஸ்கந்தர், ஏகபாதர், அனந்த சுகவிருது, தக்கிணாமூர்த்தி, இலிங்கோற்பவர் என்னும் இருபத்தைந்து மூர்த்தமுமாம். உயிர்களின் பிராரத்தம், சஞ்சிதம், ஆகாமியம் என்னும் வினைகளின் பயன்களை நுகர்வித்தலின் 'இன்றாகிச் சென்ற நாளா யெதிர் நாளாய்' என்றார்; இருவினைப் பயன்களாகிய துறக்க நிரய இன்ப துன்பங்களை நுகர் வித்தலின் 'நன்றாகித் தீயதாகி' என்றார்; நின்ற திருத்தாண்டகத்துள்,

"நெருநலையா யின்றாகி நாளையாகி"

"பெருநலமுங் குற்றமும்"

எனக் கூறப்பட்டிருத்தலுங் காண்க. நடுவும் முடிவுங் கூறினமையின் முதலுங் கொள்க. (உக)

அடியரேம் பொருட்டு வெள்ளி யம்பலத் தாடல் போற்றி
பொடியணி தடந்தோள் போற்றி புரிசடை மகுடம் போற்றி
கடியவிழ் மலர்மென் கூந்தற் கயல்விழி பாகம் போற்றி
நெடியதற் பரமா னந்த* நிருத்தனே போற்றி போற்றி.

(இ - ள்.) அடியரேம் பொருட்டு - அடியேங்கள் நிமித்தமாக, வெள்ளி அம்பலத்து ஆடல்போற்றி - வெள்ளியம்பலத்தின்கண் ஆடப்பெறும் திருக்கூத்துக்கு வணக்கம்; பொடி அணி தடம் தோள் போற்றி - திருநீறு தரித்த பெரிய திருத்தோள்களுக்கு வணக்கம்; புரிசடை மகுடம் போற்றி-முறுக்கமைந்த சடைமுடிக்கு வணக்கம்; கடி அவிழ் மலர் மென் கூந்தல் கயல்விழி பாகம் போற்றி - மணத்தொடு மலர்ந்த மலர்களை அணிந்த மெல்லிய கூந்தலையுடைய அங்கயற்கண்ணம்மையார் அமர்ந்திருக்கும் இடப்பாகத்துக்கு வணக்கம்; நெடியதற் பரமானந்த நிருத்தனே போற்றி போற்றி-என்றும் அழியாத மேலான சிவானந்தத் திருக்கூத்தினை உடையவனே நினக்கு வணக்கம் வணக்கம் எ - று.

அடியரேம்: படர்க்கை விகுதி கெடாது தன்மை விகுதியும் பெற்றது. தற்பரம ஆனந்தம்-மேலாகிய சிவானந்தம். (உஉ)

என்றுநின் றேத்தி னான்பின் னிருவரை நோக்கி வெள்ளி
மன்றுணின் றாடா நின்ற மறைமுதல் கருணை கூர்ந்து
நன்றுநீர் வேட்ட தென்னென் றருள்செய நாதன் பாதந்
துன்றுமெய் யன்பிற் றாழ்ந்து தொழுதுநின் றிதனைச் சொல்வார்.

(இ - ள்.) என்று நின்று ஏத்தினான் - என்று வணங்கி நின்று துதித்தான்; வெள்ளி மன்றுள் நின்று ஆடாநின்ற மறைமுதல் - வெள்ளியம்பலத்துள் நின்று திருக்கூத்தாடும் வேதமுதல்வனாகிய இறைவன், பின்-பின்பு, இருவரை நோக்கி கருணை கூர்ந்து-பதஞ்சலி வியாக்கிரபாதர் இருவரையும் பார்த்துக் கருணைமிகுந்து, நன்று - நல்லது; நீர் வேட்டது என்னென்று அருள் செய - நீவிர் விரும்பியது யாதென்று வினவியருள, நாதன் பாதம் துன்றும் மெய் அன்பில்-அவ்விறைவன் திருவடியில் மிக்க உண்மை யன்பினால், தாழ்ந்துதொழுது நின்று இதனைச் சொல்வார் - விழுந்து வணங்கி நின்று இதனை வேண்டுவாராயினர் எ - று.

நன்று என்றது உவப்பின் குறிப்பு; நன்று வேட்ட தென்னலுமாம். (உங)

(பா - ம்.) * நெடியதற் பரமானந்த; நெடியவ பரமானந்த.

எந்தையித் திருக்கூத் தென்று மிங்கிலே நின்றியா வர்க்கும்*
பந்தவெம் பாச நீங்கப் பரிந்தருள்† செய்தி யென்னச்
செந்தமிழ்க் கன்னி நாடு செய்தமா தவப்பே றெய்தத்
தந்தன மென்றான் வேதந் தலைதடு மாற நின்றான்.

(இ - ள்.) எந்தை - எம் தந்தையே, இத் திருக்கூத்து - இந்தத் திருக்கூத்துடன, என்றும் இங்கிலே நின்று - எப்பொழுதும் இவ் வெள்ளியம்பலத்துளே நின்று, யாவர்க்கும் பந்த வெம் பாசம் நீங்க- யாவருக்கும் பந்தமாகிய வெய்ய பாசம் நீங்குமாறு, பரிந்து அருள் செய்தி என்ன - இரங்கி அருள் செய்வாயென்று வேண்ட, வேதம் தலை தடுமாற நின்றான் - மறைகள் (தன்னைத் துருவித்) தட்டழிய நின்ற இறைவன், செந்தமிழ்க் கன்னி நாடு செய்த-செந்தமிழுக்கு நிலைக்களமாகிய கன்னிநாடு செய்த, மாதவப்பேறு எய்த-பெரிய தவப்பயன் அதற்குப் பொருந்த, தந்தனம் என்றான் - அங்ஙனமே அளித்தோம் என்று அருள் புரிந்தான் எ - று.

வெம் பாசபந்தமென மாறுக; பாசபந்தம் - பாசத்தொடக்கு. செந்தமிழ் நாடாகிய கன்னிநாடு என விரித்தலுமாம். (உச)

அராமுனி யீது வேண்டு மாதியெம் பெரும விந்த
நிராமய பரமா னந்த நிருத்தநேர் கண்டோ ரெல்லாந்
தராதல மிசைவந் தெய்தாத் தனிக்கதி பெறுதல் வேண்டும்
பராபர வென்று தாழ்ந்தான் பகவனு மதற்கு நேர்ந்தான்.

(இ - ள்.) அராமுனி ஈதுவேண்டும்-பதஞ்சலி முனிவன் இதனை வேண்டுவான்; ஆதி எம்பெரும - ஆதியாகிய எம்பெருமானே, பராபர-பரமும் அபரமுமானவனே, இந்த நிராமய பரமானந்த நிருத்தம் நேர் கண்டோர் எல்லாம் - நிராமயமாயும் பரமானந்தமாயும் உள்ள இத்திருக்கூத்தை நேரே தரிசித்தவரனைவரும், தராதலம் மிசை வந்து எய்தாத் தனிக்கதி பெறுதல் வேண்டும் - பூமியில் மீண்டு வந்து பிறவாத ஒப்பற்ற சிவகதியை அடைதல் வேண்டும், என்று தாழ்ந்தான்- என்று கூறி வணங்கினான்; பகவனும் அதற்கு நேர்ந்தான் - இறைவனும் அதற்கு உடன்பட்டான் எ - று.

ஈது - பின்வருவது. ஈது வேண்டும் என்பதனை எச்சப்படுத்து முடிக்க. பிறவிநோயை யொழிக்கும் திருக்கூத்தை நோயில்லதெனக் கூறினார். தராதலம்-தரையாகிய தலம். (உரு)

ஆர்த்தனர் கணத்தோர் கைகோத் தாடின ரலர்பூ மாரி
தூர்த்தனர் விண்ணோர் கண்ணீர் துளும்பினர் முனிவ ராகம்
போர்த்தனர் புளக மன்பிற் புதைந்தனர் விழுங்கு வார்போற்
பார்த்தனர் புல்லிக் கொண்டார் பரவியவ் விருவர் தம்மை.

(இ - ள்.) கணத்தோர் ஆர்த்தனர் கை கோத்து ஆடினர் - சிவ கணத்தவர் ஆரவாரித்துக் கைகளைக் கோத்துக் குரவையாடினர்;

---

(பா - ம்.) * நின்றியார்க்கும். † பரித்தருள்

விண்ணோர் அலர் பூமாரி தூர்த்தனர்-தேவர்கள் மலர்ந்த மலர் மழையைப் பொழிந்தனர்; முனிவர்-முனிவர்கள், கண் நீர் துளும்பினர் - கண்ணீர் ததும்பி, ஆகம் புளகம் போர்த்தனர் - உடல் புளகம் போர்த்து, அன்பில் புதைந்தனர்-அன்பினால் மூடப்பட்டு, அவ்விருவர் தம்மைப் பரவி-அந்த இரண்டு முனிவரையும் துதித்து, விழுங்குவார் போல் பார்த்தனர் - கண்களால் விழுங்குகின்றவரைப் போலப் பார்த்து, புல்லிக் கொண்டார் - தழுவிக் கொண்டனர் எ - று.

ஆர்த்தனர் என்னும் முற்றும் துளும்பினர் என்பது முதலிய நான்கு முற்றுக்களும் எச்சமாயின. விருப்பத்துடன் இமையாது நோக்குதலை விழுங்குதல்போற் பார்த்தல் என்பர்;

"பருகுவன்ன வருகா நோக்கமொடு''

என்பது பொருநராற்றுப்படை. (உசு)

[வேறு]

அனித்த மாகிய பூதமைம்
பொறிபுல னாதியா றாறுகி
இனித்த மாயையோ டிருவினைத்
தொடக்கினு மிருளினும் வேறாகித்
தனித்த யோகிக ளகநிறைந்
தாடிய தனிப்பெருந் திருக்கூத்தைக்
குனித்த வண்ணமாக் கண்டவர்க்
கிகபரங் கொடுத்தவ னுறைகின்றான்.*

(இ - ள்.) அனித்தம் ஆகிய பூதம் ஐம்பொறி புலன் ஆதி ஆறாறுகி-நிலையுடைய வல்லவாகிய பூதமைந்தும் பொறியைந்தும் புலனைந்தும் முதலிய முப்பத்தாறு தத்துவங்களாய், இனித்த மாயையோடு (உயிர்களுக்குச்) சுவையைக் கொடுக்கும் மாயையோடு, இருவினைத் தொடக்கினும் இருளினும் வேறாகித் தனித்த-இருவினைக் கட்டினின்றும் ஆணவத்தினின்றும் வேறாகித் தனித்து நிற்கும், யோகிகள் அகம் நிறைந்து-யோகிகளின் உள்ளத்தில் நிறைந்து, ஆடிய தனிப்பெரும் திருக்கூத்தை-ஆடியருளும் ஒப்பற்ற பெரிய திருக்கூத்தினை, குனித்த வண்ணமாக் கண்டவர்க்கு-ஆடிய கோலமாகப் புறத்தில் தரிசித்தவருக்கு, இகபரம் கொடுத்து அவண் உறைகின்றான்-இம்மை மறுமைப் பயன்களைக் கொடுத்து அவ்வெள்ளியம்பலத்துள் எழுந்தருளியிருக்கின்றான் எ - று.

புலன் என்றது ஈண்டுத் தன்மாத்திரையை. முப்பத்தாறு தத்துவங்களாவன:—நிலம், நீர், தீ, வளி, வான் என்னும் பூதங்கள் ஐந்தும்; மெய், வாய், கண், மூக்கு, செவி என்னும் ஞானேந்திரியங்கள் ஐந்தும்; வாக்கு, பாதம், பாணி, பாயுரு, உபத்தம் என்னும் கன்மேந்திரியங்கள் ஐந்தும்; நாற்றம், சுவை, ஒளி, ஊறு, ஓசை, என்னும் தன்மாத்திரைகள்

(பா - ம்.) * உறைகின்றாம்.

ஐந்தும்; மனம், அகங்காரம், புத்தி, சித்தம் என்னும் அந்தக் கரணங்கள் நான்கும் ஆகிய ஆன்ம தத்துவங்கள் இருபத்து நான்கும்; காலம், நியதி, கலை, வித்தை, அராகம், புருடன், மாயை ஆகிய வித்தியா தத்துவங்கள் ஏழும்; சுத்தவித்தை, ஈசுரம், சாதாக்கியம், சத்தி, சிவம் ஆகிய சுத்த தத்துவங்கள் ஐந்தும் ஆம். ஆருறு என்பதற்குச் சுத்த தத்துவம் ஐந்துமொழிந்த முப்பத்தொரு தத்துவங்களோடு பூத குணங்களாகிய சத்தம் முதலிய புலன்கள் ஐந்தையும் கூட்டி யுரைத்தலுமாம். போகத்தில் விருப்பினை யுண்டாக்கி மயக்குதலின் 'இனித்த' என்றார். தனித்த வென்றது பாசங்களின் நீங்கிய நிலைமையைக் குறிப்பிட்டவாறு. (உ௭)

குனிவி லாதிரைத் தினந்தோடுத்
தெதிர்வரு கோடுவிலா திரையெல்லை
புனித வாடக முளரிதோய்ந்
தத்தனிப் போதுநடந் தரிசித்தங்
கினித மர்ந்துநூற் றெண்மடங்
கைந்தெழுத் தெண்ணியிந்* நிலைநிற்குங்
கனியு மன்பின ரெண்ணியாங்
கெய்துவர் கருதிய வரமெல்லாம்.

(இ - ள்.) குனிவில் ஆதிரைத் தினம் தொடுத்து-வளைந்த தனுசாகிய மார்கழித் திங்கள் ஆதிரை நாள் தொட்டு, எதிர்வரு கொடுவில் ஆதிரை எல்லை - எதிர்வருகின்ற மார்கழித் திருவாதிரை காறும், புனித ஆடக முளரி தோய்ந்து - தூய்மையுடைய பொற்றாமரையில் நீராடி, அத்தனிப் பொதுநடம் தரிசித்து - அவ்வொப்பற்ற வெள்ளியம்பலத் திருக்கூத்தைத் தரிசித்து, அங்கு இனிது அமர்ந்து - அங்கே இனிது தங்கி, நூற்றெண்மடங்கு ஐந்து எழுத்து எண்ணி - நூற்றெட்டு முறை திருவைந்தெழுத்தை உச்சரித்து, இந்நிலை நிற்கும் கனியும் அன்பினர் - இந்நிலையில் வழுவாது நிற்கும் முதிர்ந்த அன்பினையுடையவர், கருதிய வரம் எல்லாம் எண்ணி யாங்கு எய்துவர்-எண்ணிய வரங்களை யெல்லாம் எண்ணியபடியே அடைவர் எ-று.

வில் - தனுசிராசி; இவ்விராசியில் ஆதித்தன் நிற்கும் மார்கழித் திங்களை வில் என்றார்; வில் என்னும் பெயருக்கேற்பக் குனி, கொடு என்னும் அடைகள் கொடுக்கப்பட்டன; குனிவில்: வினைத்தொகை; கொடுவில்: பண்புத்தொகை. இவ்விரு செய்யுளும் ஆசிரியர் கூற்று; பாடபேதப்படி சிவபிரான் கூற்றாகும். (உ௮)

ஆகச் செய்யுள்—௮௨௫.

---

(பா - ம்.) * இனிது வைகியா யிரத்தெட்டம் மந்திரமெண்ணி.

## எ. குண்டோதரனுக்கு அன்னமிட்ட படலம்

[கலிநிலைத்துறை]

பன்ன கேசனு மடுபுலிப் பாதனும் பணிய
மின்னு வார்சடை மன்னவன் வெள்ளிமன் றுடல்
சொன்ன வாறிது பசித்தழல் சுடவொரு பூதம்
அன்ன மாமலை தொலைத்தவா றெடுத்தினி யறைவாம்

(இ - ள்.) மின்னுவார் சடை மன்னவன் - ஒளிவீசும் நீண்ட சடையையுடைய இறைவனாகிய சுந்தரபாண்டியன், பன்னகேசனும்- பாம்புகளின் இறையாகிய பதஞ்சலி முனியும், அடு புலிப் பாதனும் - கொல்லும் புலியின் காலையுடைய வியாக்கிரபாத முனியும், பணிய- வணங்க, வெள்ளி மன்று - வெள்ளியம்பலத்துள், ஆடல் சொன்ன வாறு இது - ஆடி யருளிய திருவிளையாடலைக் கூறிய வரலாறு இது வாகும்; பசித்தழல் சுட ஒரு பூதம் - பசித் தீயானது சுட்டு வருத்துத லால் ஒரு பூதமானது, அன்னம் மாமலை தொலைத்தவாறு - அன்ன மாகிய பெரிய மலையை உண்டொழித்த திருவிளையாடலை, எடுத்து இனி அறைவாம் - இனி எடுத்துக் கூறுவாம் எ - று.

பன்னகேசன் - அரவரசன்: குணசந்தி. அடு: புலிக்கு அடை. சோமசுந்தரக் கடவுளே சுந்தரபாண்டியனாகலின் 'சடைமன்னவன்' என்றார். இவ்வரலாறு ஆடலைச் சொன்னபடி யெனலுமாம். உண்டு தீர்த்தலைத் தொலைத்தல் என்பது வழக்கு;

''வெங்கட் டொலைச்சியும்''

''மான்கணந் தொலைச்சிய''

என்பன புறநானூறு. (க)

கன்னி யர்க்கர சாயினள் கடிமனை புகுந்த
மின்னி யற்சடை மாதவர் வேதிய ரேனோர்
எந்நி லத்துள மன்னவர் யாவர்க்கு முறையே
பொன்னி யற்கலத் தறுசுவைப் போனக மருத்தா.

(இ - ள்.) கன்னியர்க்கு அரசு ஆயினள் - மங்கையர்க்கு அரசி யாகிய தடாதகைப் பிராட்டியார், கடிமனை புகுந்த - (திருமணத்தின் பொருட்டு) அரண்மனையில் வந்த, மின் இயல் சடை மாதவர் - மின் போலும் ஒளி பொருந்திய சடையையுடைய முனிவரும், வேதியர் - மறையோரும், ஏனோர் - ஏனையரும், எந்நிலத்துள மன்னவர் - எந் நாட்டிலுமுள்ள மன்னவருமாகிய, யாவர்க்கும் - அனைவருக்கும், முறையே - முறைப்படி, பொன் இயல் கலத்து - பொன்னாலமைந்த தலங்களில், அறுசுவைப் போனகம் அருத்தா - அறுசுவையுடன் கூடிய உணவை உண்பித்து எ - று.

மின்னியல் - மின்னின்தன்மை. எந்நிலத்தும் என உம்மை விரித்து, ஏனேரென்பதனை மன்னவரென்பதன் பின்னே கூட்டுக. உண்டற்குச் சிறந்தது பொற்கலமென்பதனை,

"பொற்கலத்துப் பெய்த புலியுகிர் வான்புழுக்கல்"

"பொற்கலத் தூட்டிப் புறந்தரினும்"

என்பவற்ருலறிக. அருத்தா: செய்யா என்னும் உடன்பாட்டெச்சம். (௨)

பூசு கின்றவு முடுப்பவும் பூண்பவும் பழுக்காய்
வாச மெல்லிலை யேனவு மம்முறை வழங்காத்
தேச மன்னவ ரேனையோர்ச் செல்லுநர்ச்* செலுத்தி
ஈச னன்புறு கற்பினு ளிருக்குமவ் வேலை.

(இ - ள்.) பூசுகின்றவும் - பூசப்படும் சாந்த முதலியவைகளை யும், உடுப்பவும் - உடுக்கப்படும் பொன்னுடை முதலியவைகளையும், பூண்பவும் - பூணப்படும் இரத்தினுபரணம் முதலிய அணிகலன்களை யும், பழுக்காய் வாசம் மெல்லிலை ஏனவும் - பாக்கும் வாசமும் வெற்றிலையும் பிறவும் ஆகியவற்றையும், அம்முறை வழங்கா - அந்த முறையே கொடுத்து, தேசமன்னவர் ஏனையோர்-பல நாட்டு மன்னர் களுள்ளும் பிறருள்ளும், செல்லுநர் செலுத்தி - போகும் குறிப்பின ரைப் போக்கி, ஈசன் அன்பு உறு கற்பினுள் இருக்கும் அவ்வேலை - சோமசுந்தரக் கடவுளாகிய வேந்தனுல் அன்பு செய்யப்பட்ட கற்பினை யுடைய தடாதகைப் பிராட்டியார் இருக்கும் அப்பொழுதில் எ-று.

வாசம் - பஞ்சவாசம்; அவற்றை,

"தக்கோலம் தீம்பூத் தகைசால் இலவங்கம்
கர்ப்பூரம் சாதியோ டைந்து"

என்பதனுலறிக. மெல்லிலைக்கு முன் உரைத்தமை காண்க. (௩)

மடைவளத் தொழிற் புலவர்வந் தடியிணை வணங்கி
அடிய ரேமட்ட போனக மாயிரத் தொன்றின்
இடைய தாயினுந் தொலைந்தில தியாங்கண்மேற் செய்யக்
கடவ தேதெனப் பிராட்டிதன் கணவர்முன் குறுகா.

(இ - ள்.) மடைவளத் தொழில் புலவர் - சமைத்தலாகிய வளப்ப மிக்க தொழிலில் வல்ல புலவர்கள், வந்து அடியிணை வணங்கி - வந்து திருவடிகளை வணங்கி, அடியரேம் அட்ட போனகம்- அடியேங்கள் சமைத்த அடிசிலில், ஆயிரத்து ஒன்றின் இடையது ஆயினும் - ஆயிரத்தில் ஒரு கூறு அளவுடையதாயினும், தொலைந் திலது - அழியவில்லை; யாங்கள் - அடியேம், மேற்செய்யக் கடவது ஏது என - மேலே செய்யத் தகுவது யாதென்று வினவ, பிராட்டி தன் கணவர் முன் குறுகா - பிராட்டியார் தம் நாயகராகிய சவுந்தர பாண்டியர் திருமுன் சென்று எ - று.

---

(பா - ம்.) * ஏனையோர் செல்லுநர்.

மடை - சோறு. ஒன்றினிடையது - ஒன்றி னிடைப்பட்டது; அவ்வளவிற்று என்றபடி. (௬)

பணிந்தோ துங்கிநின் றடிகண்முப் பத்துமுக் கோடி
கணங்க டம்மோடு மிங்கெழுந் தருள்வது கருதி
இணங்கு மின்சுவைப் போனக மெல்லையின் றாக்கி
உணங்கு கின்றதுண் டெஞ்சிய தெனைத்தென வுரைக்கின்.

(இ - ள்.) பணிந்து ஒதுங்கி நின்று - வணங்கி ஒரு சிறை ஒதுங்கி நின்று, அடிகள் - தேவரீர், முப்பத்து முக்கோடி கணங்கள் தம்மொடும் - முப்பத்து முக்கோடி தேவகணங்களோடும், இங்கு எழுந்தருள்வது கருதி - இங்கு எழுந்தருளுவதைக் குறித்து, இன் சுவை இணங்கு போனகம் எல்லை இன்று ஆக்கி - இனியசுவை பொருந்திய அமுது அளவின்றிச் சமைத்து, உணங்குகின்றது-வறிதே உணங்கா நின்றது; உண்டு எஞ்சியது எனைத்தென உரைக்கின் - உண்டு மிகுந்தது எவ்வளவிற் றென்று கூறப்புகின் எ - று.

இன்றியென்னும் வினையெச்சத் திகரம் உகரமாயிற்று. ஆக்கி - அடப்பட்டு. உண்ண எஞ்சியது என்பது உண்டெஞ்சிய தெனத் திரிந்தது. (௭)

இமையக் குன்றமு மடைகலா யிதன்புறங் கிடந்த
சிமையக் குன்றுக ளீட்டமுஞ் சேர்ந்தென நிமிரச்
சமையக் கோட்டிய வாலரிப் புழுக்கலுஞ் சாதக்
கமையக் கோட்டிய கறிகளின் வருக்கமு மாகும்.*

(இ - ள்.) இமையக் குன்றமும் - இமயமலையும், இதன்புறம் அடைகலாய் கிடந்த - இதன் புறத்தே அடுக்கமாய்க் கிடந்த, சிமையக் குன்றுகள் ஈட்டமும் சேர்ந்தென - உச்சியையுடைய மலைக் கூட்டமும் சேர்ந்தாற்போல, நிமிரச் சமையக் கொட்டிய வால் அரிப் புழுக்கலும் - வானையளாவப் பொருந்தச் சமைத்துக் கொட்டிய வெள்ளிய அரிசியாலமைந்த சோறும், சாதக்கு அமையக் கொட்டிய கறிகளின் வருக்கமும் ஆகும் - அப் புழுக்கலுக்குப் பொருந்தக் கொட்டிய கறிகளின் வகைகளும் ஆகும் எ - று.

அடைகல் - பக்கமலை; அடுக்க மென்னும் பெயரானு மறிக; தாங்குங் கல்லுமாம். சேர்ந்தென ஆகும் என்க. அரி - அரிசி; சாதக்கு: அத்துச் சாரியை தொக்கது. (௮)

என்ற போதிறை யெம்பிரான் றேவியா ரிடத்தில்
ஒன்று மன்பினு லொருவிளை யாடலை நினைத்தோ
தன்ற னிக்குடைப் பாரிடத் தலைவனை தாற்றல்
அன்றி யாவரு மறிந்திடக் காட்டவோ வறியேம்.

(பா - ம்.) * வருக்கமுமனைய; வருக்கமு மனைத்தே.

(இ - ள்.) என்றபோது-என்று கூறியபோது, இறை எம்பிரான்-சுந்தர பாண்டியனாகிய எம் பெருமான், தேவியார் இடத்தில் ஒன்றும் அன்பினால்-பிராட்டியாரிடத்தில் பொருந்திய அன்பினாலே, ஒரு விளையாடலை நினைத்தோ-ஒரு திருவிளையாடலைக் கருதியோ (அன்றி), தன் தனிக் குடைப்பாரிடத் தலைவனது ஆற்றல் - தனது ஒப்பற்ற குடையைத் தாங்கிவரும் பூதகணத் தலைவனாகிய குண்டோதரனது வன்மையை, அன்று யாவரும் அறிந்திடக் காட்டவோ-அப்பொழுது யாவரும் அறியுமாறு காட்டக் கருதியோ, அறியேம்-(யாம்) அறியவில்லேம் எ - று.

அறியேம் என்றது பின் நிகழச் செய்ததன் காரணத்தை. அன்றியெனப் பிரித்துநினைத்தோ வென்பதனுடன் இயைத் துரைத்தலுமாம். (எ)

சிறிது வாணகை செய்துமூ வேந்தரிற் சிறந்த
மறுவின் மீன்வ னரும்பெறன் மகளுனக் கரிதிற்
பெறுவ தேதுவான் றருவுநின் பணிசெயப் பெற்றிங்
குறைவ தேற்பிறர் திருவெலா முன்னதே யன்றே.

(இ - ள்.) சிறிதுவாள் நகை செய்து-சிறிது ஒள்ளிய புன் முறுவல் செய்து, மூவேந்தரில் சிறந்த-மூவரசருள் மேம்பட்ட, மறு இல் மீனவன் - குற்றமற்ற மலயத்துவச பாண்டியனுக்கு, அரும் பெறல் மகள்-அரும் பெரும் புதல்வியாகிய, உனக்கு அரிதில்பெறுவது ஏது-நினக்கு அரிதிற்பெறும் பொருள் யாது, வான் தருவும் நின்பணிசெயப் பெற்று இங்கு உறைவதேல் - கற்பகத் தருவும் நினது பணிசெய்யும் பேற்றினைப் பெற்று இங்கு இருப்பதாயின், பிறர் திருவெலாம் உன்னதே அன்றே - ஏனையோர் செல்வமெல்லாம் உன்னுடையதேயல்லவா எ - று.

மூவேந்தர்-சேர பாண்டிய சோழர். சேர சோழரினும் பாண்டியன் சிறந்தவனென்றார்; பாண்டியர் பிறரினும் மலயத்துவசன் மேம்பட்டவனென்பார் 'மூவேந்தரிற் சிறந்த' என்றாரெனலுமாம். அரும்பெறல் என்பதற்குப் பெருது பெற்ற என்றுரைப்பாருமுளர். தருவும் நின் பணிசெய் துறைவதாயின் பிறர் திருவெலாம் நின்னுடையவெனல் கூறவேண்டா என்றவாறு; விரும்பியவெல்லாந் தரும் கற்பகத்தரு பணிசெய்தலின் பிறர் செல்வமெல்லாம் வேண்டிடின் அஃதளிக்கு மென்னுங் கருத்தாற் கூறியதூஉமாம். உன்னதே: னகரம் விரித்தல்; ஏ: தேற்றம்; பன்மையி லொருமை வந்தது. (அ)

அளவி லாதநின் செல்வத்தின் பெருக்கைநா மறிய
விளைவு செய்தனை போலுநின் விருந்துணப் பசியாற்
களைய டைந்தவ ராகி*நங் கணத்தினுட் காணேந்
தளவ மூரலா யாஞ்செயத் தக்கதே தென்றான்.

(இ-ள்.) தளவ மூரலாய்-முல்லை யரும்புபோலும் பல்வரிசையையுடையாய், அளவு இலாத நின் செல்வத்தின் பெருக்கை-அளவிலாத நினதுசெல்வத்தின் மிகுதியை, நாம்அறிய விளைவுசெய்தனைபோலும்-

(பா - ம்.) * களையடைந்தவராக.

நாம் அறியுமாறு இங்ஙனம் செய்தனைபோலும்; நின் விருந்து உண - நினது விருந்தை உண்ணுதற்கு, பசியால் களை அடைந்தவராகி - பசியால் களைப்புற்றவராகி யிருப்பாரை, நம் கணத்தினுள் காணேம்-நம் கணங்களுள்ளே கண்டிலேம்; யாம் செயத் தக்கது ஏது என்றான் - எம்மாற் செய்யத் தக்கது யாது என்று கூறி யருளினன் எ - று.

நின் விருந்து - நீ அளிக்கும் விருந்து; விருந்தினர்க் களிக்கும் உணவுக்கு விருந்தென்பது ஒரு பெயராயிற்று. இருப்பாரை யென ஒரு சொல் வருவிக்கப்பட்டது. (கூ)

அடுக்க நின்றகுண் டோதர னகட்டிடை வடவை
மடுக்க வுன்னின னதுவந்து வயிற்றெரி பசியாய்த்
தொடுக்க வாலமுண் டாங்குடல் சோர்ந்து*வேர்த் தாவி
ஒடுக்க முற்றைய பசியின லுயங்கினே னென்றான்.

(இ - ள்.) (அங்ஙனங்கூறி) அடுக்க நின்ற குண்டோதரன் அகட்டிடை - அயலில் நின்ற குண்டோதரன் வயிற்றினிடத்து, வடவை மடுக்க உன்னினன் - வடவைத்தீப் புகுமாறு திருவுள்ளங் கொண்டான்; அது வந்து வயிற்று எரி பசியாய்த் தொடுக்க-அத் தீ வந்து வயிற்றின் கண் காந்துகின்ற பசியாய்த் தொடர, ஆலம் உண்டாங்கு - நஞ்சுண்டவன்போல, உடல் சோர்ந்து ஆவி ஒடுக்க முற்று - உடல் தளர்ந்து உயிர் ஒடுங்கி, ஐய-பெருமானே, பசியினால் உயங்கினேன் என்றான்.பசியினால் வாடினேன் என்று கூறினான் எ - று.

அடுக்க - அணுக. தொடுக்க - வளைத்துக் கொள்ள. மதுரை ஞானசம்பந்தப் பிள்ளை பதிப்பில் இச் செய்யுள் மிக்க பேதத்துடன் காணப்படுகின்றது. (கO)

குடையெ டுக்குமிக் குறியதாட் குறட்கொரு பிடிசோ
றிடுமி னப்புறஞ் சோறுமா லெனத்தொழு தெல்லாம்
உடைய நாயகி போயினள் குறியனு முடனே
நடைத ளர்ந்துகண் புதைந்துவாய் புலர்ந்திட நடந்தான்.

(இ - ள்.) மின் - மின்போன்ற பெண்ணே, குடை எடுக்கும் குறிய தாள் இக் குறட்கு - எனது குடையைத் தாங்கிவரும் சிறிய காலையுடைய இப்பூதத்திற்கு, ஒரு பிடி சோறு இடு - ஒரு பிடிசோறு கொடுப்பாயாக, அப்புறம் சோறும் என-பின்னர்க் கூறுவேம் என்று கூறியருள, எல்லாம் உடைய நாயகி தொழுது போயினள் - எல்லாவற்றையும் உடைய பிராட்டியார் வணங்கிப்போயினார்; குறியனும் உடனே - குண்டோதரனும் பின்னாகவே, நடை தளர்ந்து கண் புதைந்து வாய்புலர்ந்திட நடந்தான்-நடை சோர்ந்து கண் குழிந்து வாய் புலர நடந்தான் எ - று.

குறள் - குறிய பூதம். இடுமின் என மதுரையிலுள்ளார் பிறரையும் உளப்படுத்திக் கூறிற்றுமாம். அப்புறம்-இட்டபின். சோறும்:

---

(பா - ம்.) * அகட்டிடை யழலை யிடுக்கண் செய்திடு வடவைபோ லெரிவுற நினைத்தான் துடைக்கு மால முண்டாங்குடன் சோர்ந்து.

தன்மைப் பன்மை யெதிர்கால வினை முற்று; சொல் பகுதி, தும் விகுதி. ஆல்: அசை. தளர்ந்து, புதைந்து என்னும் சினை வினையாய செய்தெ னெச்சங்கள் நடந்தான் என்னும் முதல் வினையைக்கொண்டு முடிந்தன. (கக)

படைக்க ணேவல ரிறைமகள் பணியினாற் பசிநோய்
தொடுத்த வன்றனைக் கொண்டுபோய்ச் சொன்றிமுன் விடுத்தார்
அடுத்தி ருந்ததே கண்டன ரன்னமா மலையை
எடுத்த யின்றது மடிசிலங் கிருந்ததுங் காணார்.

(இ - ள்.) படைக்கண் ஏவலர் - வாட்படைபோலுங் கண்களை யுடைய ஏவல்மகளிர், இறைமகள் பணியினால்-தங்கள் இறைவியின் ஏவலால், பசிநோய் தொடுத்தவன்தனை-பசிநோயாற் பீடிக்கப்பட்ட குண்டோதரனை, கொண்டுபோய்ச் சொன்றி முன் விடுத்தார்-அழைத்துக் கொண்டுபோய்ச் சோற்றின் முன் விட்டார்கள்; அடுத்து இருந்ததே கண்டனர் - (அங்ஙனம் விட்டவர்கள்) அவன் போய் அச் சோற்றை அடுத்து இருந்ததையே கண்டனர்; அன்னம் மாமலையை எடுத்து அயின்றதும் - அன்னமாகிய பெரிய மலையை எடுத்து உண்டதையும், அங்கு இருந்த அடிசிலும் காணார் - அங்கிருந்த அன்னத்தையும் கண்டிலர் எ - று.

படை யென்பதை முதனிலைத் தொழிற் பெயராகக் கொண்டு படைத்தற் றொழிலினின்ற ஏவலர் என்றுரைப்பாருமுளர்; வரும் பாட்டிலும் மகளிரையே கூறுதலின் அவ்வுரை பொருந்தாதென்க. சொன்றி: திசைச் சொல். அன்னம் ஆம் மலையெனப் பிரித்தலுமாம். எடுத்தயின்றதுங் காணார் என்றது உண்ட விரைவினைக் குறிப்பிட்ட வாறு. (கஉ)

சிலம்பு நூபுரச் சீறடிச் சேடியர் சில்லோர்
அலம்பு வால்வளைக் கைநெரித் ததிசய மடைந்தார்
புலம்பு மேகலை யார்சிலர் பொருக்கென வெருண்டார்
கலம்பெய் பூண்முலை யார்சிலர் கண்புதைத் திரிந்தார்.*

(இ - ள்.) சிலம்பும் நூபுரம் சிறு அடிச் சேடியர் சில்லோர் - ஒலிக்கும் சிலம்பினை யணிந்த சிறிய அடியையுடைய பணிப்பெண்டிர் சிலர், அலம்பு வால் வளைக்கை நெரித்து அதிசயம் அடைந்தார்-ஒலிக்கும் வெள்ளிய வளையணிந்த கையை நெரித்து வியப்புற்றார்; புலம்பு மேகலையார் சிலர்-ஒலிக்கும் மேகலை யணிந்த சிலர், பொருக்கென வெருண்டார் - பொருக்கென்று பயந்தார்; கலம் பெய் பூண் முலையார் சிலர் - அணிகலம் அணிந்த கொங்கைகளையுடைய சிலர், கண் புதைத்து இரிந்தார் - கண்களை மூடிக்கொண்டு ஓடினார் எ- று.

கை நெரித்தலும் கண் புதைத்தலும் அச்சத்தால் நிகழ்வன; அச்சம் மகளிர்க்கு இயல்பாய குணங்களி லொன்றாதலும் நோக்குக. பொருக்கென, விரைவுக் குறிப்பு. பூண் கலம் எனக் கூட்டுக. (கங)

(பா - ம்.) * கண்புதைத்திருந்தார்.

முரவை போகிய முருவில்வான் மூரல்பால் வறையல்
கருனை தீம்பய றடுதுவை பலவகைக் கறிகள்
விரவு தேம்படு பாறயி ரிழுதுதேன் வெள்ளம்
வரைவி லாதன மிடாவோடு வாரிவாய் மடுத்தான்.

(இ - ள்.) முரவை போகிய - வரி நீங்கிய, முரிவு இல் வால் மூரல் - முரிதலில்லாத வெள்ளிய அரிசியாலாகிய அன்னத்தையும், பால் வறையல்-பால் பெய்து அட்டதுவட்டலும், கருனை - பொரிக் கறியும், தீம்பயறு அடுதுவை பலவகைக் கறிகள் - இனிய பயற்றொடு கலந்து சமைத்த புளியங்கறியும் ஆகிய பலவகைக் கறிகளையும், விரவு தேம்படு பால் தயிர் இழுது தேன் வெள்ளம் - பொருந்திய இனிமை பெற்ற பாலும் தயிரும் நெய்யும் தேனுமாகிய இவற்றின் பெருக்கினையும், வரைவு இலாதன - (மற்றும்) அளவில்லாத பண்டங்களையும், மிடாவொடு வாரி வாய் மடுத்தான் - மிடாக்களோடு வாரி வாரி உண்டான் எ - று.

முரவை - தவிடு நீங்குமுன் அரிசியிலிருக்கும் சிவந்த வரி.

"முரவை போகிய முரியா வரிசி"

என்னும் பொருநராற்றுப்படையடிக்கு நச்சினார்க்கினியர் கூறிய பொருள் காண்க; அதிலுள்ள "பால்வறைக் கருனை" என்பதற்கு அவர் "பாலைப் பொரித்ததனோடே கூட்டிய பொரிக்கறிகள்' என்பர். துவை - இக்காலத்துத் துவையலென வழங்கும். (௧௪)

பல்பழக்குவை வேற்றுருப் பண்ணியங் கன்னல்
மேல்சு வைத்தண்டு தேங்கிவை யன்றியும் வேவா
வல்சி காய்களின் வருக்கமு நுகர்ந்துமா றுமல்
எல்லை தீர்நவ பண்டமு மெடுத்துவாய் மடுத்தான்.

(இ - ள்.) பல் பழக் குவை - பல கனிக் குவியல்கள், வேறுஉரு பண்ணியம் - வெவ்வேறு வடிவப் பண்ணிகாரங்கள், கன்னல் - சருக்கரை, மெல் சுவைத் தண்டு - மெல்லுதற்குரிய சுவையினையுடைய கரும்பு, தெங்கு-தேங்காய், இவை அன்றியும் - ஆகிய இவை அல்லாமலும், வேவா வல்சி - அரிசியும், காய்களின் வருக்கமும் - காய்களின் கூட்டமும் என்னும் இவற்றையெல்லாம், நுகர்ந்தும் மாறுமல்-உண்டும் பசி தீராமையினால், எல்லைதீர் நவபண்டமும் எடுத்துவாய் மடுத்தான் - அளவிறந்த நவதானியங்களையும் வாரி உண்டான் எ - று.

பண்ணியம்-பண்ணிகாரம்; சுவைத் தண்டு எனப் பின்வருதலின் கன்னல் என்பது சருக்கரைக்காயிற்று. மெல் சுவைத் தண்டு: வினைத் தொகை. தெங்கு ஆகுபெயர். வல்சி-உணவு; வேவாவல்சி - அரிசி. நவபண்டம்-எள் முதலியன; புதியபண்டம் என்றுமாம். (௧௫)

பாரித் துள்ளவிப் பண்டமும் பருஉக்குறுங் கையால்
வாரித் தன்பெரு வயிற்றிடை வைப்பவுந் துடுவை
பூரித் தாகுதி பண்ணிய தழலெனப் பொங்கிக்
கோரித் தோன்பது வாயிலும் பசித்தழல் கொளுத்த.

(இ - ள்.) பாரித்துள்ள இப்பண்டமும் - நிறைந்துள்ள இப் பொருள்களையும், பரூஉ குறுங்கையால் - பரிய குறிய கையினால், வாரி தன் பெரு வயிற்றிடை வைப்பவும் - அள்ளித் தனது பெரிய வயிற்றின்கண் போடவும், துடுவை பூரித்து-துடுவையால் (நெய்யை) நிரப்பி, ஆகுதி பண்ணிய தழல் என-ஆகுதி செய்த வேள்வித்தீயைப் போல, பசித்தழல் பொங்கிக் கோரித்து - பசித் தீயானது கோர மாய்ப் பொங்கி, ஒன்பது வாயிலும் கொளுத்த - நவத்துவாரங்களி லும் கொளுத்த எ - று.

பாரித்து - பரந்து; இது தன் வினைக்கும் பிறவினைக்கும் பொது வானசொல். மரூஉ வென்பதுபோற் பரூஉ வென்றாயது. பூரித்தல் -- நிரப்புதல். கோரித்து-கொடுமையுற்று; கோரம் என்னும் பெயரடி யாகப் பிறந்தவினை. (௧௬)

அலங்க லோதிகண் டதிசய மடைந்துதன் னன்பின்
நலங்கோ ளுயகன் முன்புபோய் நாணமுட் கிடப்ப
இலங்கு பூங்குழல் சுவன்மிசை யிறக்கியிட் டொல்கி
நிலங்கி ளைத்துநின் றாணிலை கண்டனன் நிருபன்.

(இ - ள்) அலங்கல் ஓதி கண்டு அதிசயம் அடைந்து-மாலையை யணிந்த கூந்தலையுடைய பிராட்டியார் இதனைக் கண்டு வியப்புற்று, தன் அன்பின் நலம்கொள் நாயகன் முன்பு போய் - தம் அன்பினது நலத்தைக் கொள்ளும் நாயகனது திருமுன் சென்று, நாணம் உட் கிடப்ப-நாணம் உள்ளத்திற் கிடப்ப, இலங்கு பூங்குழல் - விளங்கு கின்ற பூவையணிந்த கூந்தலை, சுவல்மிசை இறக்கியிட்டு - தோளிலே தாழ்த்தி, ஒல்கி நிலம் கிளைத்து நின்றாள்-துவண்டு (திருவடிப் பெரு விரலால்) நிலத்தைக் கிண்டிக்கொண்டு நின்றார்; நிலை நிருபன் கண்ட னன் - அந்நிலைமையை அரசனாகிய சுந்தர பாண்டியன் கண்டனன்.

'போனகம் எல்லையின்றாக்கி உணங்குகின்றது' எனக் கூறியவர் அவையனைத்தும் ஒருவன் பசியை யாற்றுதற்கும் போதாமை கண் டமையின் நாணமுடையராயினர். தலை சாய்த்தலும் நிலங்கிளைத் தலும் நாணத்தால் நிகழ்வன. (௧௭)

அஞ்சி லோதியை வினவுவா னறிகலான் போலக்
குஞ்சி யாரழ லன்னவக் குடவயிற் றவனுண்
டெஞ்சி யுள்ளவேற் பூதங்க ளின்னமும் விடுத்துன்
நெஞ்சு வப்பவே யருத்துது மென்னலு நிமலை.

(இ - ள்.) அஞ்சில் ஓதியை-அழகிய சிலவாகிய கூந்தலையுடைய பிராட்டியாரை, அறிகலான் போல வினவுவான்-தெரியாதவன்போல வினவுகின்றவன், ஆர் அழல் அன்ன குஞ்சி - நிறைந்த நெருப்பைப் போலும் சிகையினையுடைய, அக்குட வயிற்றவன் - அக்குண்டோத ரன், உண்டு எஞ்சி உள்ளவேல்-உண்டு உணவு எஞ்சியிருக்குமாயின், இன்னமும் பூதங்கள் விடுத்து-இன்னும் பூத கணங்களை அனுப்பி, உன் நெஞ்சு உவப்ப அருத்துதும் என்னலும் - உன் உள்ளம் மகிழுமாறு உண்பிப்போம் என்று கூறலும், நிமலை - பிராட்டியார் எ - று.

அஞ்சிலோதியென்பதற்கு யாம் கூறியதே பொருளாதலை,

"அஞ்சிலோதியசையல்"

என்னும் குறிஞ்சிப்பாட்டடிக்கு நச்சினார்க்கினியர் கூறிய வுரையா னறிக; சில - வட்டத் தகட்டணி யென்பர் சிலர்; அது சிறப்பின் றென்க. அறிகலான் - கு: சாரியை, அல்: எதிர்மறை யிடை நிலை. குடவயிறு - குடம் போலும் ஆழமாகிய வயிறு. (௧அ)

ஐய வின்னுமிக் குறட்பசி யடங்கிடா வேறு
வெய்ய பாரிட வீரரை விடுத்தியே லெடுத்து
வையம் யாவையும் வயிற்றிடை வைப்பரே யிதனாற்
செய்ய காலருத் திரப்பெயர் தேற்றமா முனக்கே.

(இ - ள்.) ஐய-ஐயனே, இக்குறள் பசி இன்னும் அடங்கிடா - இக்குறிய பூதத்தின் பசிதானும் இன்னமும் அடங்கவில்லை; வேறு வெய்ய பாரிட வீரரை விடுத்தியேல்-வேறு கொடிய பூதகண வீரரை விடுப்பாயானால் (அவர்), வையம் யாவையும் எடுத்து வயிற்றிடை வைப்பர் - உலகம் அனைத்தையும் எடுத்து வயிற்றின்கண் வைத்து விடுவர்; இதனால் - இந்நிகழ்ச்சியினால், உனக்குச் செய்ய கால ருத் திரப் பெயர் தேற்றம் ஆம் - உனக்குச் செந்நிறமுடைய கால உருத் திரனென்னும் பெயர் உறுதியாம் எ - று.

குறள், சொல்லால் அஃறிணையாகலின் ஈறு திரிந்தது. அடங் கிடா: துவ்வீறு தொக்கது. ஏ: தேற்றம். (௧௯)

சங்க வார்குழைக் குறண்மகன் றன்செய றானே
இங்கு வந்துரை செய்திட வறிதியென் றிறைமுன்
மங்கை நாயகி குமுதவாய் மலர்பொழு தெயிற்றுத்
திங்கள் வாய்முழை யான்பசித் தீச்சுட வந்தான்.

(இ - ள்.) சங்க வார் குழைக் குறள் மகன்-சங்காலாகிய நீண்ட குண்டலத்தையுடைய குண்டோதரன், தன் செயல்தானே இங்கு வந்து உரை செய்திட அறிதி என்று-தன் செயலைத் தானே இங்கே வந்து கூற அறிவாய் என்று, இறை முன்-இறைவன் முன், மங்கை நாயகி - மங்கையர்க் கரசியாகிய பிராட்டியார், குமுத வாய் மலர் பொழுது - சேதாம்பல் போன்ற திருவாய் மலர்ந்து கூறும்பொழுது, எயிற்றுத் திங்கள் வாய் முழையான் - கோணற் பல்லாகிய அரைமதி யையும் வாயாகிய குகையினையுமுடைய குண்டோதரன், பசித் தீச் சுட வந்தான் - பசித்தழல் கொளுத்த வந்தான் எ - று.

குறள்மகன் - குறளாகிய மகன்; ஈண்டு மகன் என்றது பாலுணர்த்து மாத்திரையாய் நின்றது. வாய்மலர்தலாகிய காரணம் கூறுதலாகிய காரியத்தை உணர்த்தும். (௨0)

நட்ட மாடிய சுந்தர நங்கையெம் பிராட்டி
அட்ட போனகம் பனிவரை யனையவாய்க் கிடந்த
தோட்டு வாய்மடுத் திடவுமென் சுடுபசி தணியா
திட்டே ணுதவர் வயிறுபோற் காந்துவ தென்றான்.

(இ - ள்.) நட்டம் ஆடிய சுந்தர - வெள்ளியம்பலத்தில் திருக்கூத்தாடிய சுந்தரபாண்டிய, நங்கை எம்பிராட்டி - மகளிருட் சிறந்த எம் பிராட்டியார், அட்ட போனகம் - சமைப்பித்தருளிய அமுது வகைகள், பனிவரை அனையவாய்க் கிடந்த - இமயமலைபோற் கிடந்தன; தொட்டுவாய் மடுத்திடவும் - அவற்றை எடுத்து உண்ணவும், என் சுடுபசி தணியாது - எனது சுடுகின்ற பசி தணியாமல், இட்டு உணாதவர் வயிறுபோல் - (முற்பிறப்பில்) ஐயமிட்டு உண்ணாதவர் வயிறு (இப்பிறப்பில் வறுமையினால் காந்துவது) போல, காந்துவது என்றான்-எரிகின்றது என்றான் எ - று.

கிடந்தவெனப் பன்மை வினை வந்தமையின் உணவுகள் எனக் கொள்க. பிறர்க்கு ஈயாது சேமித்து வைத்தவர் அப்பொருளை யிழந்த பொழுது அவர் வயிறு எரிவதுபோல் என வுரைப்பாரு முளர். (உக)

கையர் முப்புரத் திட்டதீக் கடும்பசி யுருவாய்ப்
போய்ய னேன்வயிற் றிடைக்குடி புகுந்ததோ வென்னுங்
கையே றிந்திடு மண்டங்கள் வெடிபடக் கதறும்
ஐய கோவெனு முயிர்த்திடு மாவிசோர்ந் தயரும்.

(இ - ள்.) கையர் முப்புரத்து இட்ட தீ - வஞ்சகர்கள் மூன்று புரங்களிலும் இட்ட நெருப்பானது, கடும்பசி உருவாய் - கடிய பசி வடிவமாய் (வந்து), பொய்யனேன் வயிற்றிடை - பொய்மையேனது வயிற்றின்கண், குடி புகுந்ததோ என்னும் - குடி புக்கதோ என்பான், கை எறிந்திடும் - கையை ஒன்றோடொன்று தாக்குவான்; அண்டங்கள் வெடிபடக் கதறும் - அண்டங்கள் பிளக்குமாறு கதறுவான்; ஐயகோ எனும் - ஐயகோ என்பான்; உயிர்த்திடும் - பெருமூச்செறிவான்; ஆவிசோர்ந்து அயரும்-உயிர் சோர்ந்து அயருவான் எ - று.

ஐயகோ: இரக்க விடைச் சொல்; ஐயோவென வழங்கும். (உஉ)

ஆகச் செய்யுள்—அசஎ.

———

## அ. அன்னக்குழியும் வையையும் அழைத்த படலம்

வேத நாயகன் பாரிட வேந்தனுக்கமையா
ஓத ஞாதிக ளருத்திய தன்மையீ துவையும்
போத ராமையா லமைவுறப் போனகக் குழிதந்
தோத மாநதி யருத்திய செய்தியு முரைப்பாம்.

(இ - ள்.) வேத நாயகன் - மறை முதல்வனாகிய சோமசுந்தரக் கடவுள், பாரிட வேந்தனுக்கு - பூதகணத் தலைவனாகிய குண்டோதரனுக்கு, அமையா ஓதன ஆதிகள் அருத்திய முறை ஈது - நிரம்பாத அன்ன முதலியவைகளை உண்பித்த திருவிளையாடல் இது; உவையும் போதராமையால் - அவை போதாமையால், அமைவு உற - நிரம்புதல் பொருந்த, போனகக் குழி தந்து - அன்னக்குழியைத் தந்தருளி, ஓதம் மா நதி அருத்திய செய்தியும் உரைப்பாம் - பெரிய வெள்ளத்தினையுடைய நதியை அழைத்து உண்பித்த திருவிளையாடலையும் கூறுவாம் எ - று.

அமைதல் - பசியினளவுக்குப் பொருந்துதல். போதாமை யென்பது விரிந்து நின்றது. பசிக்கு அன்னக்குழியும், நீர் வேட்கைக்கு நதியுமென்க. (க)

கவன மால்விடை யாளிபின் கடிகமழ் தென்றற்
பவன மாமலை யாட்டியைப் பார்த்துளே நகைத்துத்
தவன மாபசி யுடையவன் றன்பொருட் டன்ன
புவன மாதினை நினைத்தன னினைக்குமுன் போந்தாள்.

(இ - ள்.) கவனம் மால் விடை யாளி - விரைந்த செலவினையுடைய பெரிய இடப ஊர்தியையுடைய சோமசுந்தரக் கடவுள், பின் - பின்பு, கடிகமழ் தென்றல் பவனம் மா மலையாட்டியைப் பார்த்து - மணங்கமழுந் தென்றற்காற்றினையுடைய பெரிய பொதியின் மலையையுடைய தடாதகைப் பிராட்டியாரை நோக்கி, உள்ளே நகைத்து - திருவாய்க்குள்ளே முறுவலித்து, தவனம் மா பசி உடையவன் தன் பொருட்டு - எரிக்கின்ற பெரிய பசியை யுடைய குண்டோதரன் பொருட்டு, அன்ன புவன மாதினை - (தனது சத்தியாகிய) அன்ன புவனத்திற்குரிய அன்ன பூரணியை, நினைத்தனன் - கருதியருளினான்; நினைக்குமுன் போந்தாள் - நினைத்தவளவில் (அன்ன வடிவமாய்) வருகின்றாள் எ - று.

மலையாட்டி - மலையை ஆள்பவள். சிறிதே நகைத் தென்பார் 'உள்ளே நகைத்து' என்றார். தவனம் என்பதற்குத் தாகம் என்றும், அன்ன புவன மாது என்பதற்கு அன்னந் தரும் பூமிதேவி என்றும் உரைப்பாரு முளர். (உ)

நாற்ற டந்திசைத் தயிர்க்கட னனந்தலை நிலங்கீண்
டூற்றெ ழுந்துநாற் கிடங்கரா யுதித்தெழுந் தாங்கு
மாற்ற ருஞ்சுவைத் தீந்தயிர் வாலரிப் பதத்தோ
டேற்றெ ழுந்தது நாற்குழி யிடத்திலும் பொங்கி.

(இ – ள்.) நால் தடந்திசை - நான்கு பெரிய திசைகளினுஞ் சூழ்ந்த, தயிர்க் கடல் - தயிர்க்கடலானது, நிலம் நனந்தலை கீண்டு - பூமியின் நடுவைக் கிழித்து, ஊற்று எழுந்து நால் கிடங்கராய் உதித்து எழுந்தாங்கு - ஊறுதலுற்று நான்கு குழிகளாய்த் தோன்றி யெழுந்தாற் போல, மாற்று அறுசுவைத் தீந்தயிர்-நீங்குதல் இல்லாத சுவையினையுடைய தயிர், வால் அரிபதத்தோடு - வெள்ளிய அரிசியா லாகிய அன்னத்தோடு, நால்குழி இடத்திலும் ஏற்று பொங்கி எழுந் தது - நான்கு குழிகளிலும் உயர்ந்து பொங்கி எழுந்தது எ – று.

மாறு அரும் என்பது மாற்றரும் என்ருயது; நீக்க வொண்ணுத என்றுமாம். கீண்டு மரூஉ. கிடங்கர்: போலி. (௩)

குரும திக்குல மன்னவன் மருகனக் குண்டப்
பெருவ யிற்றிரு பிறையெயிற் றெரிசிகைப் பேழ்வாய்
ஒருகு டைக்குடை வீரனை யுன்பசி தணியப்
பருகெ னப்பணித் தருளலும் பாரிடத் தலைவன்.

(இ – ள்.) குரு மதி குல மன்னவன் -நிறம் பொருந்திய சந்திர குலத்தில் வந்த மலயத்துவச பாண்டியனுக்கு, மருகன் - மருகனாகிய சுந்தரபாண்டியன், அக் குண்டப் பெருவயிற்று - அந்தக்குழிந்த பெரிய வயிற்றினையும், இருபிறை எயிற்று-இரண்டு பிறைபோலும் வளைந்த பற்களையும், எரி சிகை - நெருப்புப்போலும் சிகையினையும், பேழ்வாய் - பிளந்த வாயினையுமுடைய, ஒரு குடை குறள் வீரனை - ஒப்பற்ற குடை தாங்கிவரும் பூத வீரனை (நோக்கி), உன் பசி தணிய- உன் பசி நீங்குமாறு, பருகு எனப் பணித்தருளலும் - உண்பாய் என்று கட்டளையிட் டருளலும், பாரிடத் தலைவன்-பூதகணத் தலைவ ஞகிய குண்டோதரன் எ – று.

குரு - நிறம்; ஒளி; திருமுகப்பாசுரத்தில்,

"குருமா மதிபுரை குலவிய குடைக்கீழ்"

என வருதலுங் காண்க. பருகென்பது ஓரோ விடங்களில் பொது வினையாயும் வரும். (௪)

அத்த யிர்ப்பதக் கிடங்கரி லலைகடல் கலக்கும்
மத்தெ னக்கரம் புதைத்தெடுத் தெடுத்துவாய் மடுத்துத்
துய்த்தி டப்பசி விடுத்தது சுருதிநா யகன்றாட்*
பத்தி வைத்துவீ டுணர்ந்தவர் பழவினைத் தொடர்போல்.

---

(பா - ம்.) * சுந்தரன்ருளில்.

(இ - ள்.) அத்தயிர்ப் பதக் கிடங்கரில் - அந்தத் தயிர்ச் சோற்றுக் குழியிலே, அலைகடல் கலக்கும் மத்து என - அலைக்கின்ற கடலைக் கலக்கும் மத்தைப் போல, கரம் புதைத்து எடுத்து எடுத்து வாய் மடுத்துத் துய்த்திட - கையைச் செருகி வாரி வாரி வாயில் வைத்து உண்ண, சுருதி நாயகன் தாள் பத்தி வைத்து வீடு உணர்ந்தவர் - வேத நாயகனாகிய சோமசுந்தரக் கடவுளின் திருவடிகளில் அன்பு செய்து வீட்டினை யுணர்ந்த பெரியாரது, பழவினைத் தொடர்போல் - சஞ்சித வினையின் தொடர்ச்சி ஒழிதல்போல், பசி விடுத்தது - பசி நோய் விட்டொழிந்தது எ - று.

அலைத்தல் - அலைவிசுதல். கையாற் சுழற்றி யெடுத்தலின் 'மத்தென' என்றார். அடுக்கு ஆர்வத்தில் வந்தது. (௫)

வாங்கி வாங்கிவாய் மடுத்தலு முடம்பெலாம் வயிறாய்
வீங்கி னான்றரை கிழிபடப் பொருப்பென வீழ்ந்தான்
நீங்கு நீளுயிர்ப் பிலனுடல் புரண்டன னீர்வேட்
டாங்கு நீர்நிலை தேடுவா னாயின னெழுந்தான்.

(இ - ள்.) வாங்கி வாங்கி வாய் மடுத்தலும் - அங்ஙனம் வாரி வாரி உண்ட வளவில், உடம்பு எலாம் வயிறாய் வீங்கினான் - உடலெல்லாம் வயிறாகப் பருத்து, தரை கிழிபட பொருப்பு என வீழ்ந்தான் - பூமி கிழியுமாறு மலைபோல விழுந்து, நீங்கும் நீள் உயிர்ப்பு இலன் - வெளியே செல்லும் நீண்ட உயிர்ப்பில்லாதவனாய், உடல் புரண்டனன் - உடம்பு புரண்டனன்; நீர் வேட்டு எழுந்தான் ஆங்கு நீர் நிலை தேடுவானாயினான் - பின் நீரை விரும்பி எழுந்து அவ்விடத்துள்ள நீர் நிலைகளைத் தேடுவானாயினான் எ - று.

வயிறுபோலாதலை 'வயிறாய்' என்றார். வீங்கினான், வீழ்ந்தான், எழுந்தான் என்னும் தெரிநிலை வினை முற்றுக்களும், இலன் என்னும் எதிர் மறைக் குறிப்பு முற்றும் எச்சங்களாயின. (௬)

ஆவி யன்னவர்ப் பிரிந்துறை யணங்கனார் போலக்
காவி நாண்மலர் தாமரைக் கடிமலர் வாட
வாவி யோடையுங் குளங்களும் வறப்பவாய் வைத்துக்
கூவ நீணிலை நீர்களும் பசையறக் குடித்தான்.

(இ - ள்.) ஆவி அன்னவர்ப் பிரிந்து உறை அணங்கு அனார் போல - உயிரினை யொத்த தலைவரைப் பிரிந்துறையும் அணங்கனைய தலைவியரைப்போல, நாள் காவி மலர் தாமரைக் கடி மலர் வாட - அன்றலர்ந்த நீலோற்பல மலர்களும் நறிய தாமரை மலர்களும் வாட்டமடைய, வாவி ஓடையும் குளங்களும் வறப்ப வாய் வைத்து - நடை கிணறுகளும் ஓடைகளும் குளங்களும் வறளுமாறு வாயினை வைத்து உரிஞ்சி, கூவம் நீள் நீர் நிலைகளும் பசை அறக் குடித்தான் - கிணறுகளும் நீண்ட நீர் நிலைகளும் பசையில்லையாகக் குடித்தான் எ - று.

அணங்கு - தீண்டி வருத்தும் தெய்வப்பெண் என்பர். அணங்கனார் வாடுதல் போல வாடவென்க. நிலை நீர் என்பதனை நீர் நிலையென மாற்றுக. கூவனீணிலை எனப் பாடங்கொள்ளலுமாம். (௭)

அனைய னாகியு நீர்நசை யாற்றலன் வருந்தும்
வினைய னாகிவா னதிச்சடை வேதியன் பாதத்
தினைய நாதனுந் தன்றிரு முடியின்மீ திருக்கும்
நனைய நாண்மல ரோதியைப்* பார்த்தொன்று நவில்வான்.

(இ - ள்.) அனையன் ஆகியும்-அங்ஙனம் குடித்தலையுடையனாகி யும், நீர் நசை ஆற்றலன் வருந்தும் வினையனாகி - நீர் வேட்கையைப் பொறுதவனாகி வருந்துந் தன்மையுடையவனாய், வான் நதிச்சடை வேதியன் பாதத்து இனைய-சிறந்த கங்கையாற்றினையுடைய சடையை யுடைய அந்தணனாகிய சோமசுந்தரக் கடவுளின் திருவடிகளில் வீழ்ந்து வருந்த, நாதனும் - அவ்விறைவனும், தன் திருமுடியின் மீது இருக்கும் - தனது திருமுடியின்கண் இருக்கின்ற, நனைய நாள் மலர் ஓதியைப் பார்த்து ஒன்று நவில்வான் - தேனையுடைய புதிய மலரை யணிந்த கூந்தலையுடைய கங்கையை நோக்கி ஒன்று கூறுவான் எ - று.

ஆற்றலன்: எச்சமாயிற்று. வினை - ஈண்டுத் தன்மை. பாதத்தில் விழுந்து என விரிக்க. நனைய: குறிப்புப் பெயரெச்சம். நீர் வேட்கை யைத் தணிக்கவல்லவனென்பது தோன்ற 'வானதிச்சடை வேதியன்' என அபிப்பிராயத்தோடு கூடிய விசேடணந் தந்தமையின் கருத் துடை யடையணி. (அ)

தேங்கு நீர்த்திரை மாலிகைச் செல்விநீ யிந்த
வாங்கு நீர்த்தடம் புரிசைசூழ் மதுரையின் மாடோர்
ஓங்கு நீத்தமா யொல்லென வருதியென் றுரைத்தான்
நீங்கு நீர்த்திரு மாதவ ளொருமொழி நிகழ்த்தும்.

(இ - ள்.) தேங்கும் நீர் திரை மாலிகைச் செல்வி - ததும்பு கின்ற நீரினையும் அலை மாலையினையுமுடைய நங்காய், நீ இந்த வாங்கு நீர்த்தடம்புரிசை சூழ் மதுரையின் மாடு - நீ இந்த வளைந்த அகழியும் பெரிய மதிலும் சூழ்ந்த மதுரைப் பதியின் அருகில், ஓர் ஓங்கு நீத்த மாய் ஒல்லென வருதி என்று உரைத்தான்-ஒரு பெரிய வெள்ளமாக விரைந்து வருவாய் என்று கட்டளையிட் டருளினன்; நீங்கு நீர்த் திருமாது - உடன் சடையினின்றும் நீங்காநின்ற தெய்வத்தன்மையை யுடைய கங்கா தேவி, அவண் ஒருமொழி நிகழ்த்தும் - அங்கு ஒரு வார்த்தை கூறுவாள் எ - று.

வாங்கு நீர் - வளைந்த தன்மை யெனலுமாம். (கூ)

அன்று மெம்பிரா னாணையாற் பகீரதன் பொருட்டுச்
சென்று நீயொரு தீர்த்தமாய்த் திளைப்பவர் களங்கம்
ஒன்று தீவினைத் தொடக்கறத் தொழுகெனப் பணித்தாய்
இன்று மோர்நதி யாகெனப் பணித்தியே லென்னை.

(இ - ள்.) எம்பிரான் - எம் பெருமான், அன்றும் - அக்காலத் தும், ஆணையால் - நம் கட்டளையால், நீ பகீரதன் பொருட்டு சென்று-

(பா - ம்.) * நனைய வார்குழ லோதியை.

நீ பகீரதன் நிமித்தமாகப் போய், ஒரு தீர்த்தம் ஆய் - ஒரு தீர்த்த மாகி, திளைப்பவர் - முழுகுவோரின், களங்கம் ஒன்று தீவினைத் தொடக்கு - குற்றம் பொருந்திய பாவத்தொடக்கினை, அறுத்து ஒழுகு என - போக்கி நடப்பாய் என்று, பணித்தாய் - பணித்தருளி னாய்; இன்றும் என்னை - இப்பொழுதும் என்னை, ஓர் நதி ஆகு என - ஒருநதியாவாய் என்று, பணித்தியேல்-கட்டளை யிடுவாயாயின் எ-று.

எம்பிரானாகிய நீ 'நம் ஆணையாற் சென்று அறுத்து ஒழுகு' எனப் பணித்தாய் என்க. எம்பிரான்: விளியுமாம். 'பகீரதன் பொருட்டுச் சென்று' என்றமையால் அதற்கு முன்னும் கங்கை சிவ பிரான் திருமுடிமேல் தரிக்கப்பட்டிருந்த தென்பது போதரும்; உமா தேவியாரின் திருக்கை விரல்களிற் றோன்றிய கங்கையைச் சிவ பெருமான் தமது திருச்சடையிற் றரித்தருளி, தம்மை யடைந்து வேண்டிய திருமால் பிரமன் இந்திரன் என்பவர்கட்கு அதனிற் சிறி துதவ, அவர்கள் அதனைத் தத்தம் உலகிற் கொண்டு சென்று செலுத் தினர் எனவும், பிரமனுலகிலுள்ள கங்கையே பகீரதன் தவத்தால் நிலவுலகில் வந்தது எனவும் கந்தபுராணம் கூறுநிற்கும்;

"அந்நதி மூன்று தன்னி லயனகர் புகுந்த கங்கை
தன்னருந் திறலின் மிக்க பகீரதன் றவத்தான் மீளப்
பின்னரு மிமையா முக்கட் பெருந்தகை முடிமேற் றுங்கி
இந்நில வரைப்பிற் செல்ல விறையதில் விடுத்தல் செய்தான்"

என்பது கந்தபுராணம், ததிசி யுத்தரப் படலம். (கௗ)

தெரிசித் தோர்படிந் தாடினோர் செங்கையா லேனும்
பரிசித் தோர்பவத் தொடர்ச்சியின் பற்றுவிட் டுள்ளத்
துருசித் தோர்வுறு பத்தியும் விச்சையு முணர்வாய்
விரிசித் தோர்வுறு மெய்யுணர் வால்வரும் வீடும்.

(இ - ள்.) தெரிசித்தோர் - கண்ணாற் கண்டவர், படிந்து ஆடி னோர் - திளைத்து மூழ்கினவர், செங்கையாலேனும் பரிசித்தோர் - சிவந்த கையினாலேனும் தொட்டவர் ஆகிய இவர்கட்கு, பவத் தொடர்ச்சியின் பற்றுவிட்டு - பிறவித் தொடர்பின் பற்று நீங்க, உள்ளத்து உருசித்து - உள்ளத்தில் இனிக்க, ஓர்வுறு பத்தியும் - சிந் தித்தல் பொருந்திய அன்பும், விச்சையும் - மெய்ஞ்ஞானமும், உணர் வாய் விரிசித்து ஓர்வுறும் - அறிவாகி (எங்கும்) விரிந்த சித்தாகிய (நின்னை) உணரும், மெய் உணர்வால் வரும் வீடும் - அம் மெய்ஞ் ஞானத்தால் வரும் வீடு பேறும் எ - று.

விட்டு, உருசித்து என்பன செயவெனெச்சத் திரிபுகள். உணர் வாய் அதனாற் சித்தெனப்படுவது; விரிசித்து - வியாபக சித்து;

"அகர வுயிர்போ லறிவாகி யெங்கும்
நிகரிலிறை நிற்கு நிறைந்து"

என்பது திருவருட்பயன். பத்தி, ஞானம், வீடு ஆகிய மூன்றையு மென்க. (கக)

தந்தி டப்பணித் தருளெனுத் தடம்புனற் செல்வி
சுந்த ரப்பெருங் கடவுளை வரங்கொண்டு தொழுது
வந்த ளப்பிலா வேகமோ டெழுந்துமா நதியாய்
அந்த ரத்துநின் றிழிபவ ளாமென வருமால்.

(இ - ள்.) தந்திட பணித்தருள் எனு-(யான்) தருமாறு கட்டளையிட்டருள்வாய் என்று, தடம் புனல் செல்வி-பெரிய கங்கையானவள், சுந்தரப் பெருங் கடவுளைத் தொழுது வரம் கொண்டு-ஒப்பற்றசோமசுந்தரக் கடவுளை வணங்கி அவ்வரத்தினைப் பெற்றுக்கொண்டு, வந்து அளப்பிலா வேகமோடு எழுந்து - வந்து அளவிறந்த வேகத்துடன் எழுந்து, மாநதியாய் - பெரிய நதிவடிவாய், அந்தரத்து நின்று இழிபவள் ஆம் என வரும் - வானினின்றும் இறங்குபவள் போல வருகின்றாள் எ - று.

கடவுளை வணங்கி அவர்பால் வரங்கொண்டெனக. பெருக்கெடுத்துக் கீழ் மேலாக வருதலை யுணர்த்த 'அந்தரத்துநின் றிழிபவளாமென' என்றார். ஆல்: அசை. (கஉ)

[கலி விருத்தம்]

திரைவளையணி கரமுடையவள் செழுமணிநகை யுடையாள்
நுரைவளைதுகி லுடையவள்கொடி நுணுகிடையவ ளறனீள்
விரைவளைகுழ லுடையவள்கயல் விழியுடையவள் வருவாள்
வரைவளைசிலை யவன்முடிபட வரனதிவடி வினுமே.

(இ - ள்.) வரை வளை சிலையவன் - மேரு மலையாகிய வளைந்த வில்லையுடைய இறைவனது, முடி மடவரல் - முடியின்கண் உள்ள கங்கையானவள், நதிவடிவினும்-ஆற்றின் வடிவமாக வரும் பொழுதும், திரை வளை அணி கரம் உடையவள்-அலைகளாகிய வளையணிந்த கைகளை யுடையவளாகியும், செழு மணி நகை உடையவள் - கொழுவிய முத்துக்களாகிய பல் வரிசைகளை யுடையவளாகியும், நுரைவளை துகில் உடையவள் - நுரைகளாகிய வளைந்த ஆடைகளை யுடையவளாகியும், கொடி நுணுகு இடையவள் - பூங்கொடியாகிய சிறுகிய இடையை யுடையவளாகியும், அறல் நீள் விரை வளை குழல் உடையவள்-கருமணலாகிய நீண்ட மணம் பொருந்திய கடைகுழன்ற கூந்தலை யுடையவளாகியும், கயல் விழி உடையவள் - கயல்களாகிய கண்களை யுடையவளாகியும், வருவாள் - வருகின்றாள் எ - று.

கங்கைநங்கை நதியாகிய விடத்தும் பெண்ணியல்பு குன்றாமல் வந்தன ளென்பார் திரை முதலியவற்றை வளைக்கை முதலியவாக உருவகித்து 'நதி வடிவினும் வருவாள்' என்றார். வளையைத் திரைக்குங் கொள்க. இதுமுதல் "ஆறொடுமடலவிழ்" என்னும் செய்யுள் காறும் ஐஞ்சீரடியாக வகை செய்தற்கும் இயையுமேனும் உருட்டு வண்ணமாகிய ஓசை நோக்கி நாற்சீரடி நான்கு கொண்ட கலிவிருத்தமாகக் கொள்ளப்பட்டன.

"உருட்டு வண்ணம் அராகந் தொடுக்கும்"
என்பது தொல்காப்பியம். (கங)

விரைபடுமகி லரைபொரிதிமில் வெயில்விடுமணி வரையோ
டரைபடமுது சினையலறிட வடியொடுகடி தகழாக்
குரைபடுகழ லிறவுளர்சிறு குடியடியொடு பறியாக்
கரைபடவெறி வதுவருவது கடுவிசைவளி யெனவே.

(இ-ள்.) விரைபடும் அகில்-மணம் பொருந்திய அகிலும், பொரி அரை திமில் - பொருக்கினையுடைய அடியையுடைய வேங்கையும், வெயில் விடுமணி வரையோடு அரைபட-ஒளிவீசும் மணிகளையுடைய மலையோடு (தாக்கி) அரைபடவும், முது சினை அலறிட - அவற்றின் பெரிய கிளைகள் புலம்பவும், அடியொடு கடிது அகழா - அவற்றை அடியோடு விரைந்து பறித்தும், குரைபடு கழல் இறவுளர் சிறுகுடி - ஒலிக்கின்ற வீரக்கழலையணிந்த வேட்டுவர்களின்சிறூரை, அடியொடு பறியா - அடியோடு பெயர்த்தும், கரைபட எறிவது - கரைகளிற் பொருந்த வீசுவதாகிய அந்நதி, கடுவிசை வளி என வருவது - மிக்க விரைவினையுடைய பெருங் காற்றுப் போல வாராநின்றது எ - று.

பொரியரை என மாறுக. திமில்-வேங்கையின் ஒரு சாதி; திமிசு எனவும் படும். சிறுகுடி குறிஞ்சி நிலத்தூர்; ஈண்டு ஊரிலுள்ள குடிசைகள். எறிவது பெயர். (கச)

பிணையொடுகலை பிடியொடுகரி பிரிவிலவொடு பழுவப்
பணையொடுகரு முசுவயிறணை பறழொடுதழு வியதன்
றுணையொடுகவி பயின்மரநிரை தொகையொடுமிற வுளர்வெங்
கணையொடுசிலை யிதணொடுமெறி கவணொடுகொடு வருமால்.

(இ - ள்.) பிரிவில பிணையொடு கலை - சேர்ந்திருப்பனவாகிய பெண் மானோடு ஆண் மானையும், பிடியொடு கரி-பெண் யானையோடு ஆண் யானையையும், பழுவம் ஒடு பணையொடு - காட்டிலுள்ள ஒடு மரத்தைக் கிளைகளோடும், கரு முசு-கரிய ஆண் முசுவை, வயிறு அணை பறழொடு தழுவிய தன் துணையொடு - வயிற்றில் பற்றிய குட்டியோடு கூடிய அதன் பெண் குரங்கோடும், கவி பயில் மரம் நிரை தொகையொடு-குரங்குகள் உலாவும் மரங்களை வரிசையாகிய தொகுதியோடும், இறவுளர் சிலை வெங்கணை யொடு-வேடர்கள் வில் லைக் கொடிய அம்புகளோடும், இதணொடும் எறி கவணொடு - (அவர் கள் தினைப்புனத்துப்) பரணினை வீசும் கவணோடும், கொடு வரும் - வாரிக்கொண்டு வரும் (அந்நதி) எ - று.

பிணையொடு கலையும் பிடியொடு கரியும் பிரிவில்லாத வற்றோடு என்றும், பறழொடு தழுவிய துணையொடு கூடிய முசுவைப் பணை யொடு என்றும், முசுவைப் பெண்ணும் கவியை ஆணுமாக்கி, பற ழொடு முசுவையும் துணையொடு கவியையும் என்றும், கவிகளைத் தொகையொடு என்றும், இறவுளரைச் சிலையொடும் இதணொடும் என்றும், பிறவாறும் இயைத் துரைத்தலுமாம். முசு-குரங்கின் ஓர் வகை. உம்மை விரித்துக் கொள்க. ஆல்: அசை. (கரு)

அடியிறநெடு வரைதைவன வகழ்வனவகழ் மடுவைத்
திடரிடுவன மழைசெருகிய சினைமரநிரை தலைகீழ்
படவிடிகரை தோறுநடுவன படுகடலுடை முதுபார்
நெடுமுதுகிரு பிளவுறவரு நெடுநதியின வலையே.

(இ - ள்.) படுகடல் உடை முதுபார் - கடலாகிய ஆடையினை யுடைய பெரிய பூமியின், நெடுமுதுகு இரு பிளவு உற - நீண்ட முதுகு இரண்டு பிளவுபட, வரும் நெடு நதியின் அலை - வருகின்ற நீண்ட நதியின் கூட்டமாகிய அலைகள், நெடுவரை அடி இற உதைவன அகழ்வன-பெரிய மலைகளின் அடிகெட மோதித் தோண்டுவனவும், மடுவைத் திடர் இடுவன-பள்ளங்களை மேடாக்குவனவும், மழை செருகிய சினை மரம் - மேகத்தை ஊடுருவிய கிளைகளையுடைய மரங்களை, இடிகரை தொறும் நிரை தலை கீழ்பட நடுவன - இடிந்த கரைகள் தோறும் வரிசையாகத் தலை கீழாக நடுவனவும் ஆயின எ - று.

படுதல் - ஒலித்தல்;

"படுகண் முரசங் காலை யியம்ப"

என்னும் மதுரைக்காஞ்சி யடியின் உரையை நோக்குக. நதியின-நதியினுடைய வென அகரம் ஆறனுருபுமாம். ஏ: அசை. (கசு)

பிளிறொலியின முதுமரமகழ் பெருவலியின வசையா
வெளிறடிவன வெறிமணியின விரைசெலவின மதமோ
டொளிறளியின நுரைமுகபட முடையனவென வரலால்
களிறனையன மதுவிதழிகள் கவிழ்சடையணி குடிஞை.

(இ - ள்.) மது இதழிகள் கவிழ்சடை அணி குடிஞை - இறைவனது தேனொழுகும் கொன்றை மலர் மாலைகள் தொங்குகின்ற சடையிலணிந்த கங்கை யாற்றின் அலைகள், பிளிறு ஒளியின - ஒலிக்கும் போரொலியை உடையனவும், முது மரம் அகழ்பெரு வலியின - பெரிய மரங்களைப் பறிக்கும் பெரிய வலியினை உடையனவும், அசையா வெளில் தடிவன-அசையாத விளாமரங்களை முறிப்பனவும், எறிமணியின - வீசா நின்ற முத்துக்களை உடையனவும், விரை செலவின - விரைந்த செலவினை யுடையனவும், மதமோடு ஒளிறு அளியின-மான் மதத்தோடு விளங்கும் வண்டுகளை உடையனவும், நுரை முக படம் உடையன என வரலால் - நுரையாகிய முதன்மையான ஆடையை உடையனவுமாக வருதலால், [பிளிறு ஒலியின - பேரொலியையுடையனவும், முது மரம் அகழ்பெரு வலியின-பெரிய மரங்களைப் பெயர்க்கும் பெரிய வலியினை யுடையனவும், அசையா வெளில் தடிவன-அசையாத கட்டுத்தறியை முறிப்பனவும், எறி மணியின - மாறி யடிக்கின்ற மணிகளை யுடையனவும், விரைசெலவின-விரைந்த செலவினை யுடையனவும், மதமோடு ஒளிறு அளியின - மதத்துடன் (அதை உண்ணவரும்) ஒள்ளிய வண்டுகளை யுடையனவும், நுரைமுகபடம் உடையன-நுரைபோலும் (வெள்ளிய) முகபடாத்தை யுடையனவுமாகிய] களிறு அனையன-யானைகளை ஒத்தன எ - று.

ஒலியின, வலியின, செலவின என்பன யாற்றின் அலைக்கும் களிற்றுக்கும் பொது. வெளில் தடிவன, எறிமணியின, மதமோடு ஒளிறு அளியின, நுரை முகபட முடையன என்பன செம்மொழிச்சிலேடையாய் யாற்றுக்கும் களிற்றுக்கும் இயைய வெவ்வேறு பொருள் தருவன. என: ஆக வென்னும் பொருட்டு. இதழி மாலைக்கும், குடிஞை அலைக்கும் ஆகுபெயர்கள். இதழிகள் மதுவைக் கவிழ்க்கும் என்னலுமாம். ஒலியின என்பதுமுதல் யாவும் பன்மையர்கலின் குடிஞை என்பதற்கு அலைகள் என்று பொருள் கூறப்பட்டது. விளா என்னும் பொருளில் வெள்ளில் என்பது வெளில் எனத் தொக்கதாகக் கொள்க. (கஎ)

நீடியபில முறுநிலையன நிருமலன்மதி முடிமீ
தாடியசெய லினவெயிலுமி ழருமணிதலை யினநீள்
கோடியகதி யினநிரைநிரை குறுகியபல காலின்
ஓடியவலி யினவளையுட லுரகமுமென வருமால்.

(இ-ள்.) (அந்நதியின் அலைகள்) நீடிய பிலம் உறு நிலையின - ஆழ்ந்த பாதலத்திற் பொருந்தும் தன்மையை யுடையனவும், நிருமலன் மதி முடிமீது ஆடிய செயலின - இறைவனது பிறையை யணிந்த முடியின் மேல் அசையும் செயலையுடையனவும், வெயில் உமிழ் அருமணி தலையின - ஒளி வீசும் அரிய மணிகளைத் தம்மிடத்துடையனவும், நீள் கோடிய கதியின் - மிக்க வளைந்த நடையினையுடையனவும், நிரைநிரை குறுகிய பலகாலின் ஓடிய வலியின - வரிசை வரிசையாக நெருங்கிய பல கால்களின் வழியாக ஓடுகின்ற வலியினையுடையனவுமாய், [நீடிய பிலம் உறும் நிலையின - ஆழ்ந்த பிலத்திற் பொருந்தும் நிலையினையுடையனவும், நிருமலன் மதி முடிமீது ஆடிய செயலின - இறைவன் மதியணிந்ததிருமுடிமேல் ஆடுகின்ற செயலினையுடையனவும், வெயில் உமிழ் அரு மணி தலையின - ஒளி வீசும் அரிய மணிகளைச் சுடிகையிலுடையனவும், நீள் கோடிய கதியின - மிக்க வளைந்த செலவினையுடையனவும், நிரை நிரை குறுகிய பலகாலின் ஓடிய வலியின - வரிசை வரிசையாய்ச் சிறுத்துள்ள (கண்ணுக்குப் புலனாகாத) பல்கால்களினால் ஓடும் வலியினையுடையனவுமாகிய] வளை உடல் உரகமும் என வரும் - வளைந்த உடலினையுடைய பாம்புகள் போலவும் வரும் எ - று.

பிலம்-பாதலமும், வளையும். நீள்-மிக்க: வினைத்தொகை. உரகமெனவும் என உம்மையை மாற்றுக. ஆல்: அசை. இதுவும் செம்மொழிச் சிலேடை. (கஅ)

மண்ணகழ்தலின் வளையணிகரு மாவனையது மிசைபோய்
விண்ணளவலி னவுணர்களிறை விடுபுனலோடு நெடுகும்
அண்ணலையனை யதுசுவையிழு தளையளவுறு செயலாற்
கண்ணனையனை யதுநெடுகிய கடுகியகதி நதியே.

(இ-ள்.) கடுகிய கதி நெடுகிய நதி - விரைந்த செலவினையுடைய நீண்ட அந் நதியானது, மண் அகழ்தலின் - மண்ணைத் தோண்டிச் செல்லுதலால், வளை அணி கருமா அனையது - சங்கினை ஏந்திய வராக மூர்த்தியை ஒத்தது; மிசைபோய் விண் அளவலின் - மேலேபோய் வானுலகத்தைத் தடவலால், அவுணர்கள் இறைவிடு புனலொடுநெடு

கும் அண்ணலை அனையது - அவுணர்கள் தலைவனாகிய மாபலிச்சக்கரவர்த்தி தாரை வார்த்த நீரோடு பேருருக் கொண்ட வாமனமூர்த்தியை ஒத்தது; சுவை இழுது அளை அளைவுறு செயலால் கண்ணனை அனையது - சுவையையுடைய வெண்ணெயும் தயிரும் அளைந்து வருதலாற் கண்ணபிரானை ஒத்தது எ - று.

கருமா - பன்றி; சிவபெருமான் திருவடியைக் காண்டற்கு நிலத்தைக் கீழ்ந்து சென்ற திருமாலாகிய பன்றி. புனலொடு - நீர்வார்த்த உடனாக. திருமால் வாமனனாக விருந்து மாபலியின்பால் மூன்றடிமண் இரந்து பெற்றுத் திரிவிக்கிரமனாக வளர்ந்து, புவியையும் வானத்தையும் இரண்டடியால் அளந்த கதை கூறிற்று; நெடுகும் அண்ணல்-திரிவிக்கிரமன் என்னலுமாம். இழுது-நெய்; அளை - தயிர்; அளைதல் - முல்லை நிலத்திலுள்ளன நீரில் விரவி வருதலும், ஆய்ச்சியர் இல்லங்களிற் கையாற் பிசைதலும் ஆம். ஒன்றற்கே பலபொருள் உவமையாகக் கூறப்படுதலின் பல்பொருளுவமையும், ஏதுவுடன் கூடி வருதலின் ஏதுவுவமையும் ஆம்; மேல் இங்ஙனம் வருவனவும் இவை. (௧௯)

திகழ்தருகரி பரிகவரிகள் செழுமணியோடு வருமா
றிகழ்தருகுட புலவரசர்க ணெறிசெய்துகவர் திருவோ
டகழ்தருபதி புகுமதிகுல வரசனையதை யலதேற்
புகழ்தருதிறை யிடவருகுட புலவரசனு நிகரும்

(இ - ள்.) திகழ்தரு கரி பரி கவரிகள் செழுமணியொடு வரும் ஆறு - விளங்கா நின்ற யானைகள் குதிரைகள் சாமரைகள் கொழுவிய முத்துக்களாகிய இவைகளோடும் வருகின்ற அந்நதி, இகழ்தரு குட புல அரசர்கள் நெறிசெய்து-இகழ்ந்த மேற்புல மன்னர்களை (வெற்றியினால் தன்) ஆணை வழிப்படுத்தி, கவர் திருவோடு அகழ்தரு பதி புகும்-அவர்கள்பா னின்றும் கவர்ந்த செல்வங்களோடும் அகழி சூழ்ந்த மதுரைப்பதியிற் புகும், மதி குல அரசு அனையது - சந்திரகுலத்து அரசாகிய பாண்டியனை ஒத்தது; அலதேல் - அல்லதாயின், திறை இடவரு புகழ்தரு குடபுல அரசனும் நிகரும்(மதுரைப்பதிக்குத்)திறை இறுக்க வரும் புகழமைந்த மேற்புல மன்னனையும் ஒக்கும் எ - று.

அகழ்தரு - அகழி பொருந்திய. மதிகுலம்: வடநூன் முடிபு. அனையதை, ஐ: சாரியை. அலது, அன்றென்னுந் துணையாய் நின்றது. புகழ்தரு, திறைக்கு அடையுமாம். குடபுலவரசன் - சேரன். (௨௰)

ஆரோடுமட லவிழ்பனையோடு மரநிகரிலை நிம்பத்
தாரோடுபுலி யோடுசிலையோடு தகுகயலோடு தழுவாப்
பாரோடுதிசை பரவியதமிழ் பயிலரசர்கள் குழுமிச்
சீரோடுபல திருவோடுவரு செயலனையது நதியே.

(இ - ள்.) நதி-அந்நதியானது, ஆரோடும்-ஆத்தி மாலையோடும், மடல் அவிழ் பனையொடும்-இதழ் விரிந்த பனை மாலையோடும், அரம் கர் இலை நிம்பத்தாரொடு-அரத்தினை ஒத்த இலையை யுடைய வேப்பமாலையோடும், புலியொடு சிலையொடு தகு கயலொடு தழுவா - புலியோடும் வில்லோடும் தக்க கயலோடும் தழுவி வருதல், பாரொடு

திசை பரவிய தமிழ் பயில் அரசர்கள் - மண்ணுலகுடன் எட்டுத் திக்குகளினும் புகழ் பரவிய தமிழ் பயிலும் மன்னர்களாகிய சோழ சேர பாண்டியர்கள், குழுமி - தம்முட்கூடி, சிறொடு பல திருவொடு வரு செயல் அனையது - சிறப்போடும் பல செல்வங்களோடும் வருகின்ற செயலினை யொத்திருந்தது எ - று.

ஆர், பனை, நிம்பம் என்பன முறையே சோழ சேர பாண்டியர்க்குக் கண்ணியும்; புலி, சிலை, கயல் என்பன கொடியு மாகலின் நதி அவற்றை அடித்துக்கொண்டு வருதல் அம் மூவேந்தரும் சேனையோடு வருதல் போலு மென்க. அரம் நிகர் இலை - வாளரத்தின் வாயை நிகர்த்த இலை;

"அரவாய் வேம்பி னங்குழைத் தெரியலும்"

என்பது பொருநராற்றுப்படை. தழுவா, செய்யா என்னும் வாய்பாட் டெச்சம்; வருதல் என ஒரு சொல் வருவிக்கப்பட்டது. புகழ் பரவிய வென்க; பரவிய - போற்றிய என்னலுமாம்; தமிழ், புவி முழுதும் பரவி யிருந்தென வரலாறு கூறிற்றுமாம். தமிழ் - தமிழ்நாடென்னலும் பொருந்தும். ஒடுக்களில் உம்மை யில்வழி விரிக்க. (உக)

[கலிநிலைத்துறை]

கல்லார் கவிபோற் கலங்கிக்கலை மாண்ட கேள்வி
வல்லார் கவிபோற் பலவான்றுறை தோன்ற வாய்த்துச்
செல்லாறு தோறும் பொருளாழ்ந்து தெளிந்து தேயத்
தெல்லாரும் வீழ்ந்து பயன்கொள்ள விறுத்த தன்றே.

(இ - ள்.) கல்லார் கவிபோல் கலங்கி - (நூல்களை முறையே) கல்லாதவர் இயற்றிய கவி (தெளிவின்றிக் கலங்கி நிற்றல் போல முதலிற்) கலங்கி, கலைமாண்ட கேள்வி வல்லார் கவிபோல் - கலைகளில் மாட்சிமைப்பட்ட கேள்வி வல்லுநர் இயற்றிய செய்யுள் (பல சிறந்த அகப்புறத்துறைகள் பொருந்தப் பெற்றுச் செல்லுந் துறை தோறும் நுண் பொருளுடைத்தாய்த் தெளிந்து அனைவரும் விரும்பி அற முதலிய பயன் கொள்ளத் தங்கியது) போல, பல வான் துறை தோன்ற வாய்த்து - பலவாகிய பெரிய நீர்த்துறைகள் பல விடங்களிலும் காணப் பொருந்தி, செல் ஆறு தோறும் பொருள் ஆழ்ந்து தெளிந்து - செல்லுமிடந்தோறும் மணி பொன் முதலிய பொருள்களை யுடையதாய் ஆழமுடைத்தாகிப்(பின்)தெளிவடைந்து, தேயத்து எல்லாரும் வீழ்ந்து பயன் கொள்ள-தேயத்திலுள்ள அனைவரும் விரும்பிப் பயனைப் பெறுமாறு, இறுத்தது-நிலைபெற்றது(அந்நதி) எ-று.

'கல்லார் கவிபோற் கலங்கி' என்பது இராமாயணத்தில் வரும் "புன்கவி யெனத் தெளிவின்றி" என்னுந் தொடருடன் ஒத்துளது. 'பலவான் துறை.........பயன் கொள்ள' என்பது வல்லார் செய்யுளுக்கும் யாற்றுக்கும் பொது. செய்யுளுக்குச் செல்லாறு தோறும் பொருளாழ்தலாவது ஆராயுந் தோறும் வெளிப்படும் நுண் பொருளுடைத்தாதல்; புலவன் கருதியவற்றின் மேலும் நோக்குடைத் தாதலுமாம். அன்று, ஏ: அசை. (உஉ)

வண்டோதை மாரு மலர்வேணியின் வந்த நீத்தங்
கண்டோத நஞ்சுண் டருள்கண்ணுதல் மூர்த்தி பேழ்வாய்
விண்டோ தணியாதேன் விடாயென வெம்பி வீழ்ந்த
குண்டோ தரனை விடுத்தானக் குடினைு ஞாங்கர்.

(இ - ள்.) வண்டு ஓதை மாரு மலர் வேணியின் வந்த - வண்டுகளின் ஒலி நீங்காத (கொன்றை) மலரை யணிந்த சடையினின்றும் வந்த, நீத்தம் - வெள்ளத்தை, ஓதம் நஞ்சு உண்டருள் கண்ணுதல் மூர்த்தி கண்டு - கடலிற் றோன்றிய நஞ்சினை உண்டருளிய நெற்றிக் கண்ணனுகிய இறைவன் நோக்கி, பேழ் வாய் விண்டு ஓ என் விடாய் தணியாது என வெம்பி வீழ்ந்த குண்டோதரனை - பெரிய வாயைத் திறந்து ஐயகோ என் நீர் வேட்கை தணிந்திலது என்று வெதும்பி வீழ்ந்த குண்டோதரனை, அக் குடினைு ஞாங்கர் விடுத்தான் - அந் நதியின் பக்கலிற் செல்ல விடுத்தான் எ - று.

யாவரும் உண்ணுத அரு நஞ்சுண்டும் வானேரைப் புரந்த பேரருளாளன் இப்பூதத்தின் துயரை யொழித்தல் ஒருதலை யென்பார், 'நஞ்சுண்டருள் கண்ணுதன் மூர்த்தி' என்ருர். ஓகாரம் அரற்றின் கண் வந்தது (உரு)

அடுத்தா னதியின் னிடைபுக்கிருந் தாற்ற லோடும்
எடுத்தான் குறுங்கை யிரண்டுங்கரை யேற நீட்டித்
தடுத்தான் மலைபோ னிமிர்தண்புனல் வாயங் காந்து
மடுத்தான் விடாயுங் கடலுண்ணு மழையு நாண.

(இ - ள்.) அடுத்தான் நதியின் இடைபுக்கு இருந்து - அடுத்து நதியின்கண் போயிருந்தும், ஆற்றலோடும் குறுங்கை இரண்டும் எடுத்தான் - வலிமையோடும் தனது குறிய இரண்டு கைகளையும் எடுத்து, கரை ஏற நீட்டி தடுத்தான் - கரையிற் செல்ல நீட்டி (நீரைத்) தடுத்து, வாய் அங்காந்து - வாயைத் திறந்து, விடாயும் கடல் உண்ணும் மழையும் நாண - நீர் வேட்கையும் கடல் குறைபடப் பருகும் முகிலும் நாணுமாறு, மலைபோல் நிமிர் தண்புனல் மடுத்தான்-மலைபோல உயர்ந்த குளிர்ந்த புனலைப் பருகினுன் எ-று.

தன்வலி குன்றினமையின் விடாயும், தன்னினும் மிகுதியாகப் பருகினமையின் மழையும் நாணின என்ருர். அடுத்தான், எடுத்தான், தடுத்தான் என்னும் முற்றுக்கள் எச்சமாயின. (உசு)

தீர்த்தன் சடைநின் றிழிதீர்த்த மருந்தி வாக்குக்
கூர்த்தின்பு கொண்டு குழகன்றிரு முன்ன ரெய்திப்
பார்த்தன் பணிந்த பதமுன்பணிந் தாடிப் பாடி
ஆர்த்தன் புருவாய்த் துதித்தானள வாத கீதம்.

(இ - ள்.) தீர்த்தன் சடை நின்று இழி தீர்த்தம் அருந்தி-இறைவன் சடையினின்றும் இறங்கிய அந்நீரைப் பருகி, வாக்குக் கூர்த்து-வாக்கு மிகுத்து, இன்பு கொண்டு - மகிழ்ந்து, குழகன் திருமுன்னர்

எய்தி - இறைவன் திருமுன் சென்று, பார்த்தன் பணிந்த பதமுன் அன்பு உருவாய்ப் பணிந்து - அருச்சுனன் வழிபட்ட திருவடிகளில் அன்புருவாய் வணங்கி, ஆடி - கூத்தாடி, ஆர்த்து - முழக்கஞ் செய்து, அளவாத கீதம் பாடித் துதித்தான் - அளவில்லாத கீதங்களைப் பாடித் துதித்தான் எ - று.

தீர்த்தன் - தூயன், உயிர்களின் அழுக்கைப் போக்குவோன். கூர்த்தல் - துதித்தற்கு முற்படல்; தழுதழுத்தலுமாம். பார்த்தன் - அருச்சுனன்; பிருதை மைந்தன் என்னும் பொருட்டு; தத்திதாந்தம். பிருதை - பாண்டுவின் மனைவி. அருச்சுனன் சிவபெருமானைக் குறித்து அருந்தவம் புரிந்து பாசுபதம் பெற்ற சிவபத்தனாகலின் 'பார்த்தன் பணிந்த பதம்' என்றார்; சிவபெருமான் வேடுருத்தாங்கிச் சென்று அருச்சுனற்கு அருள் புரிந்த செய்தி திருமுறைகளிற் பலவிடத்துப் பயின்றுளது;

"ஏவார்சிலை யெயினன் னுருவாகி யெழில்விசயற்
கோவாத வின்னருள் செய்தவெம் மொருவற்கிடம்"

என்பது ஆளுடைய பிள்ளையார் திருவாக்கு. அளவிலாத என்பது அளவாத என நின்றது. (உரு)

பாட்டின் பொருளா னவன்பாரிட வீரன் பாடல்
கேட்டின்ப மெய்திக் கணங்கட்குக் கிழமை நல்கி
மோட்டின் புனன்மண் முறைசெய் திருந்தா னளகக்
காட்டின் புறம்போய் மடங்குங் கயற் கண்ணி யோடும்.

(இ - ள்.) பாட்டின் பொருளானவன் - சொல்லின் பொருளாயுள்ள சுந்தர பாண்டியனாகிய இறைவன், பாரிடவீரன் பாடல் கேட்டு - பூதப்படை வீரனாகிய குண்டோதரன் பாடலைக்கேட்டு, இன்பம் எய்தி - இன்புற்று, கணங்கட்குக்கிழமை நல்கி - பூதகணங்களுக்குத் தலைமையாம் உரிமையைத் தந்தருளி, அளகக்காட்டின் புறம் போய் மடங்கும் கயல் கண்ணியோடும் - கூந்தலாகிய காட்டின் பக்கத்திற் சென்று மீளும் கயல்போன்ற கண்ணையுடைய பிராட்டியோடும், மோட்டின் புனல் மண் முறை செய்து இருந்தான் - பெருமையையுடைய கடலாற் சூழப்பட்ட நிலவுலகைச் செங்கோன் முறை புரிந்து வீற்றிருந்தான் எ - று.

பாட்டு - சொல்; இறைவி சொல் வடிவும் இறைவன் பொருள் வடிவு மாகலின் 'பாட்டின் பொருளானவன்' என்றார். பண்ணின் பயனாயுள்ளவன் என்னலுமாம். தலைமையாங் கிழமை யென்க. மோடு - பெருமை; முதுமையுமாம். இன் சாரியை. (உசு)

[அறுசீரடியாசிரியவிருத்தம்]

தீர்த்த னிதழிச் சடைநின்று மிழிந்து வரலாற் சிவகங்கை
தீர்த்த னுருவந் தெளிவோர்க்கு ஞானந் தரலாற் சிவஞான
தீர்த்தங் காலிற் கடுகிவரு செய்தியாலே வேகவதி
தீர்த்தங் கிருத மாலையென வையை நாமஞ் செப்புவரால்.

(இ - ள்.) தீர்த்தன் இதழிச் சடை நின்றும் இழிந்து வரலால்- இறைவனது கொன்றை மாலையை யணிந்த சடையினின்றும் இறங்கி வருதலால், சிவகங்கை-சிவகங்கை எனவும், தீர்த்தன் உருவம் தெளிவோர்க்கு - இறைவன் எண்வகை உருவங்களில் இஃது ஒன்று எனத் தெளிகின்றவருக்கு, ஞானம் தரலால் சிவஞான தீர்த்தம்-ஞானத்தை அருளுவதால் சிவஞான தீர்த்தம் எனவும். காலில் கடுகி வரு செய்தியாலே-காற்றைப் போல விரைந்து வருகின்ற செய்கையாலே, வேகவதி தீர்த்தம் - வேகவதி ஆறு எனவும், கிருதமாலை என - (செய்யப்பட்ட மாலைபோல மதுரைப்பதியைச் சூழ்ந்து வருதலால்) கிருதமாலை எனவும், வையை நாமம் செப்புவர் - வையை நதிக்குப் பெயர் கூறுவர் பெரியோர் எ - று.

என வென்பது சிவகங்கை முதலியவற்ருேடும் சென்று இயையும். கிருதமாலை யென்னும் பெயர்க்கு ஏது வருவித் துரைக்கப்பட்டது. ஆல்: அசை. (௨௭)

ஆகச் செய்யுள் - ௮௭௪.

---

## ௰. எழுகடலழைத்த படலம்

[கொச்சகக்கலிப்பா]

முடங்கன்மதி முடிமறைத்த முடித்தென்னன் குறட்கன்னக்
கிடங்கரோடு நதியழைத்த கிளர்கருணைத் திறனிதுமேன்
மடங்கல்வலி கவர்ந்தான்பொன் மாலைபடிந் தாடவெழு
தடங்கடலு மொருங்கழைத்த தன்மைதனைச் சாற்றுவாம்.

(இ-ள்.) முடங்கல் மதி முடிமறைத்த முடித்தென்னன்-வளைந்த பிறையை யணிந்த சடைமுடியை மறைத்த மகுடத்தை யுடைய சுந்தரபாண்டியன், குறட்கு - குண்டோதர பூதத்துக்கு, அன்னக் கிடங்கரொடு நதி-அன்னக்குழியையும் வையையையும், கிளர் கருணை-விளங்கும் கருணையினாலே, அழைத்த திறன் இது-அழைத்த திருவிளையாடல் இது; மேல் - பின், மடங்கல் வலி கவர்ந்தான் - நரசிங்கத்தின் வலியைக் கவர்ந்த அச் சுந்தரபாண்டியன், பொன்மாலை படிந்து ஆட - காஞ்சன மாலை திளைத்து நீராடுதற் பொருட்டு, எழுதடங் கடலும் ஒருங்கு அழைத்த தன்மைதனைச் சாற்றுவாம்-ஏழு பெரிய கடலையும் ஒருசேர அழைத்தருளிய திருவிளையாடலைக் கூறுவாம் எ - று.

கிடங்கர்: ஈற்றுப் போலி. திருமால் நரசிங்க வுருவாய்த்தோன்றி இரணியனைக் கொன்று செருக்கிய காலையில் இறைவன் சரபவுருவெடுத்து அந் நரசிங்கத்தின் வலி தொலைத்தான் என்பது வரலாறு; மடங்கல் - இயமனுமாம். (க)

ஓதவரும் பொருள் வழுதி யுருவாகி யுலகமெலாஞ்
சீதளவெண் குடைநிழற்றி யறச்செங்கோல் செலுத்துநாள்
போதவரும் பொருளுணர்ந்த விருடிகளும் புனிதமுனி
மாதவரும் வரன்முறையாற் சந்தித்து வருகின்றார்.

(இ - ள்.) ஓத அரும் பொருள்-சொல்லுதற்கரிய மெய்ப்பொருளாகிய சோமசுந்தரக் கடவுள், வழுதி உருவாகி - பாண்டியனுருத் தாங்கி, உலகம் எலாம் சீதள வெண் குடை நிழற்றி-உலகமனைத்திற்கும் குளிர்ந்த வெள்ளிய குடையால் நிழல் தந்து, அறம் செங்கோல் செலுத்து நாள்-அற நூல் வழியே செங்கோலோச்சி வருங் காலத்து, போத அரும் பொருள் உணர்ந்த இருடிகளும் - ஞான நூலின் அரிய பொருளை யுணர்ந்த இருடிகளும், புனித முனி மாதவரும் - (ஏனைய) தூய முனிவராகிய தவப்பெரியாரும், வரன் முறையால் சந்தித்து வருகின்றார்-வரன் முறைப்படி (அப் பாண்டிய மன்னனைச்) சந்தித்து வருகின்றார்கள் எ - று.

அறம், போதம் என்பன நூலுக்கு ஆகுபெயர். அறவடிவாகிய செங்கோல் என்றும், அறக்கடவுள் போலச் செங்கோல் செலுத்து நாள் என்றும் கூறுதலுமாம். புறப்பாட்டில் "அறம் புரிந்தன்ன செங்கோல் நாட்டத்து" என வருதலுங் காண்க; இருடிகள் - சத்த விருடிகள் எனக் கொள்க. (உ)

வேதமுனி கோதமனுந் தலைப்பட்டு மீள்வானோர்
போதளவில் கற்புடைய பொன்மாலை மனைபுகுந்தான்
மாதவளும் வரவேற்று முகமனுரை வழங்கிப்பொன்
ஆதனமிட் டஞ்சலிசெய் தரியதவத் திறங்கேட்பாள்.

(இ - ள்.) வேதமுனி கோதமனும் தலைப்பட்டு மீள்வான் - வேதங்களை யுணர்ந்த முனிவனாகிய கோதமனும் சந்தித்துத் திரும்புகின்றவன், ஓர் போது-ஒரு நாள், அளவு இல் கற்பு உடைய பொன் மாலை மனை புகுந்தான்-அளவில்லாத கற்பினையுடைய காஞ்சனமாலை மனையின்கட் சென்றான்; மாது அவளும் வரவு ஏற்று - அக்காஞ்சன மாலையும் அவன் வருகையை எதிர்கொண்டு, முகமன் உரை வழங்கிப் பொன் ஆதனம் இட்டு-உபசார மொழிகள் கூறிப் பொற்றவிசிட்டு (இருத்தி), அஞ்சலி செய்து-வணங்கி, அரிய தவத்திறம் கேட்பாள் - அரிய தவத்தின் பாகுபாடுகளைக் கேட்கின்றவள் எ - று.

தவத்திறங் கேட்டல்-தவத்தின் வகைகளைக் கூறக் கேட்டல். (௬)

கள்ளவினைப் பொறிகடந்து கரைகடந்த மறைச்சென்னி
உள்ளபொருள் பரசிவமென் றுணர்ந்தபெருந் தகையடிகேள்
தள்ளரிய பவமகற்றுந் தவமருள்செ யெனக்கருணை
வெள்ளமென முகமலர்ந்து முனிவேந்தன் விளம்புமால்.

(இ - ள்.) கள்ளவினைப் பொறி கடந்து-வஞ்ச வினைகளையுடைய ஐம்பொறிகளைக் கடந்து, கரைகடந்த மறைச் சென்னி உள்ள பொருள் - அளவு கடந்த மறை முடிவில் உள்ள பொருள், பரசிவம் என்று உணர்ந்த பெருந்தகை அடிகேள்-பரசிவமே என்று தெளிந்த பெரிய தகுதியை யுடைய அடிகளே, தள் அரிய பவம் அகற்றும்தவம் அருள் செய் என-நீக்குதற்கரிய பிறப்பினை நீக்கும் வலியினையுடைய தவத்தினைக் கூறி யருள்க என்று கேட்ப, கருணை வெள்ளம் என முக மலர்ந்து - கருணை வெள்ளம் போல முகமலர்ச்சி யுடையனாய், முனி வேந்தன் விளம்பும்-முனி மன்னனாகிய கோதமன் கூறுகின்றான் எ-று.

ஐம்பொறிகளின் வஞ்சத்தை "மாறிநின் றென்னை மயக்கிடும் வஞ்சப் புலனைந்து" என வாதவூரடிகள் கூறுதலுங் காண்க. பொறி கடத்தல் - பொறியை வென்று அடக்குதல். அடிகேள் அருள் செய் என்றது பன்மை யொருமை மயக்கம். ஆல்: அசை. (௭)

தவவலியா லுலகீன்ற தடாதகைக்குத் தாயானாய்
சிவபெருமான் மருகனேனுஞ் சீர்பெற்றாய் திறன்மலயத்
துவசனருங் கற்புடையாய் நீயறியாத் தோல்விரதம்
அவனியிடத் தேவரறிவா ரானாலு மியம்பக்கேள்.

(இ - ள்.) திறல் மலயத்துவசன் அருங் கற்புடையாய்-வெற்றி பொருந்திய மலயத்துவச பாண்டியனுக்கு வாழ்க்கைத் துணையாகிய அரிய கற்பினையுடைய பொன்மாலையே, தவ வலியால் உலகு ஈன்ற தடாதகைக்குத் தாய் ஆனாய்-(நீ முன் செய்த) தவத்தின் வலிமையால்

உலகங்களையெல்லாம் ஈன்றருளிய தடாதகைப் பிராட்டியாருக்குத் தாய் ஆனாய்; சிவபெருமான் மருகன் எனும் சீர் பெற்றாய் - சிவ பெருமானே உனக்கு மருகன் என்று கூறப்படும் சிறப்பினைப் பெற்றாய்; நீ அறியாத தொல்விரதம் அவனியிடத்து அறிவார் எவர்-(ஆதலால்) நீ அறியாத பழைய விரதங்களை இவ் வுலகின்கண் அறிபவர் வேறு யாவர், ஆனாலும் இயம்பக் கேள்-அங்ஙனமாயினும் நீ வினவினமையால் யான் சொல்லுதலைக் கேட்பாயாக எ - று.

தவ வலியால் ஆனாய் என வியையும். எவர் என்றது என் போலும் சிற்றறிவுடையார் யாவர் என்றபடி. (ரு)

மானதமே வாசிகமே காயிகமே யெனவகுத்த
ஈனமில்சீர்த் தவமூன்று மிவற்றின்மா னதந்தரும
தானமிசை மதிவைத்த றயைபொறுமை மெய்சிவனை
மோனமுறத் தியானித்த லைந்தடக்கன் முதலனந்தம்.

(இ - ள்.) வகுத்த ஈனம் இல் சீர்தவம்-(நூல்களால்) வகுக்கப்பட்ட குற்றமில்லாத சிறப்பினையுடைய தவம், மானதமே வாசிகமே காயிகமே என மூன்றும் - மானதமெனவும் வாசிகமெனவும் காயிகமெனவும் மூன்று வகைப்படும்; இவற்றில்-இம்மூன்றில், மானதம் - மனத்தாற் செய்யப்படுவன, தருமதானமிசை மதிவைத்தல்-தருமமும் தானமும் செய்வதிற் கருத்து வைத்தல், தயை - பிறவுயிர்களுக்கு இரங்கல், பொறுமை-பிறர் தீமையைப் பொறுத்தல், மெய்-உண்மை கூறல், மோனம் உறச்சிவனைத் தியானித்தல் - மோனநிலை பொருந்த இறைவனைச் சிந்தித்தல், ஐந்து அடக்கல்-ஐம்பொறிகளை அடக்குதல், முதல் அனந்தம்-முதலாக அளவில்லாதனவாம் எ - று.

மானதம் - மனத்தாற் செய்யப்படுவன. வாசிகம் - வாக்காற் செய்யப்படுவன. காயிகம் - காயத்தாற் செய்யப்படுவன. தானம்- அறநெறியால் வந்த பொருளைத் தக்கார்க்கு உவகையோடு அளிப்பது. மோனம் - சங்கற்ப விகற்ப மில்லாமை. ஏகாரங்கள் எண்ணுப் பொருளன. (சு)

வாசிகமைந் தெழுத்தோதன் மனுபஞ்ச சாந்திமறை
பேசுசத வுருத்திரந்தோத் திரமுரைத்தல் பெருந்தருமங்
காசகல வெடுத்தோதன் முதலனந்தங் காயிகங்கள்
ஈசனருச் சனைகோயில் வலஞ்செய்கை யெதிர்வணங்கல்.

(இ - ள்.) வாசிகம் - வாக்காற் செய்யப்படுவன, ஐந்துஎழுத்து ஓதல்-திருவைந் தெழுத்தைச் செபித்தலும், பஞ்சமனு சாந்தி-பஞ்சப் பிரம மந்திரங்களையும் உபநிடதப் பகுதிகளையும், மறை பேசு சத உருத்திரம்-வேதங் கூறும் சத உருத்திர மந்திரங்களையும் ஓதுதலும், தோத்திரம் உரைத்தல்-துதிப்பாட்டுக்களைக் கூறலும், பெருந்தருமம் காசு அகல எடுத்து ஓதல்-பெரிய அறங்களைக் குற்றமற எடுத்துக் கூறலும், முதல் அனந்தம் - முதலாக அளவில்லாதனவாம்; காயிகங்கள்-உடலாற் செய்யப்படுவன, ஈசன் அருச்சனை - சிவபெருமானைப் பூசித்தலும், கோயில் வலம் செய்கை-திருக்கோயில் வலம்வருதலும், எதிர் வணங்கல்-இறைவன் திருமுன் வணங்கலும் எ - று.

பஞ்சமனு என்பது முன் பின்னாக மாறி விகாரமாயிற்று. சாந்தியைச் செய்தலால் உபநிடதத்தைச் சாந்தி யெனவும், உபநிடதம் விசாரித்தலைச் சாந்திபாடம் எனவும் வழங்குவர். (எ)

நிருத்தனுறை பதிபலபோய்ப் பணிதல்பணி நிறைவேற்றல்
திருத்தன்முடி நதியாதி தீர்த்தயாத் திரைபோய்மெய்
வருத்தமுற வாடலிவை முதற்பலவவ் வகைமூன்றிற்
பொருத்தமுறு காயிகங்கள் சிறந்தனவிப் புண்ணியத்துள்.

(இ-ள்.) நிருத்தன் உறை பதி பல போய்ப் பணிதல்-சிவபெருமான் உறையும் பல திருப்பதிகளிலும் சென்று வணங்கலும், பணி நிறைவேற்றல் - திருப்பணி முடித்தலும், திருத்தன் முடி நதி ஆதி தீர்த்தயாத்திரை மெய்வருத்தமுறப் போய் ஆடல் - இறைவன் முடி நதியாகிய கங்கை முதலிய நதிகளில் யாத்திரையாக உடல் வருந்தச் சென்று நீராடலும், இவை முதல் பல - ஆகிய இவை முதலாகப் பலவாம்; அவ்வகை மூன்றில் - அம் மூவகையுள்ளும், பொருத்த முறு காயிகங்கள் சிறந்தன - பொருந்திய காயிகங்கள் சிறந்தன; இப் புண்ணியத்துள் - (உடம்பாற் செய்யப்படும்) இவ்வறங்களுள்ளே எ - று.

இப் புண்ணியத்துள் திருத்த யாத்திரை அதிகம் என வருஞ் செய்யுளோடு இயையும். (அ)

திருத்தயாத் திரையதிக மவற்றதிகஞ் சிவனுருவாந்
திருத்தமாங் கங்கைமுதற் றிருநதிக டனித்தனிபோய்த்
திருத்தமா டுவதரிதத் திருநதிக* ளவைவந்து
திருத்தமாய் நிறைதலினு லவற்றதிகந் திரைமுந்நீர்.

(இ-ள்.) திருத்தயாத்திரை அதிகம் - தீர்த்தங்களிற் சென்று நீராடல் சிறந்தது; அவற்று அதிகம் - அவ்வெல்லாத் தீர்த்தங்களினும் சிறந்த, சிவன் உருவு ஆம் திருத்தம் ஆம் கங்கை முதல் திருநதிகள் - சிவபெருமானுருவாகிய திருத்தம் பெற்ற கங்கை முதலிய நதிகளுக்கு, தனித்தனி போய் திருத்தம் ஆடுவது - தனித்தனியே சென்று நீராடுவது, அரிது - மேன்மையுடைத்து; அ திருநதிகள் அவை வந்து திருத்தமாய் நிறைதலினல் - அவ்வழகிய நதிகள் வந்து செப்பமாய் நிறைதலினல், அவற்று அதிகம் திரை முந்நீர் - அந்நதிகளில் ஆடுவதினும் அலைகளையுடைய கடலில் ஆடுவது சிறந்தது எ - று.

தீர்த்தமென்பது திருத்த மெனத் திரிந்தது. ஆடுவது அவற்றதிகம் என முடித்து, அரிதாகிய அத்திருநதி என்னலுமாம். அவை: பகுதிப் பொருள் விகுதி, முந்நீரில் ஆடுவது என விரிக்க. அவற்றென்னும் பன்மைக்கேற்ப யாத்திரைகள் ஆடுதல்கள் எனக் கொள்ளல் வேண்டும். (கூ)

என்றுமுனி விளம்பக்கேட் டிருந்தகாஞ் சனமாலை
துன்றுதிரைக் கடலாடத் துணிவுடைய விருப்பினளாய்த்
தன்றிருமா மகட்குரைத்தாள் சிறிதுள்ளந் தளர்வெய்திச்
சென்றிறைவற் குரைப்பலெனச் செழியர்தவக் கொழுந்தனையாள்.

---

(பா-ம்.) * அதிகத் திருநதிகள்.

(இ - ள்.) என்று முனி விளம்பக் கேட்டிருந்த காஞ்சன மாலை- என்று கோதம முனி கூறக்கேட்ட பொன் மாலை, துன்று திரைக் கடல் ஆடத் துணிவு உடைய விருப்பினளாய் - நெருங்கிய அலைகளை யுடைய கடலில் ஆடுவதற்குத் துணிந்த விருப்பத்தை யுடையவளாய், தன் திரு மா மகட்கு உரைத்தாள் - தன்னுடைய செல்வப் புதல்வியாருக்குக் கூறினள்; செழியர் தவக்கொழுந்து அனையாள் - பாண்டியர்களின் தவக் கொழுந்து போல்வாராகிய பிராட்டியார், சிறிது உள்ளம் தளர்வு எய்தி-சிறிது உள்ளந் தளர்ந்து, இறைவற்கு உரைப்பல் எனச் சென்று - இறைவனுக்கு இதனைக் கூறுவேன் என்று கருதிப்போய் எ - று.

உள்ளந் தளர்வெய்தியது தாய் புறம் போதலும், தாம் அவளைப் பிரிந்திருத்தலுங் கருதி யென்க. (௧௦)

தன்றன்னை யுடையபெருந் தகைவேந்தர் பெருமான்முன்
சென்றன்ன மேனநின்று செப்புவாள் குறள்வீரற்
கன்றன்னக் குழியினோடு மாறழைத்த வருட்கடலே
இன்றன்னை கடலாட வேண்டினா ளென்றிரந்தாள்.

(இ - ள்.) தன்னை உடைய பெருந்தகை வேந்தர் பெருமான் முன் சென்று-தன்னைக் கிழத்தியாகவுடைய பெரிய தகுதியையுடைய மன்னர் பெருமானாகிய சுந்தர பாண்டியர் திருமுன் சேர்ந்து, அன்னம் என நின்று செப்புவாள் - அன்னம்போல நின்று கூறுவாள், குறள் வீரற்கு அன்று அன்னக் குழியினொடு ஆறு அழைத்த அருட் கடலே- பூத வீரனுக்கு அன்று அன்னக் குழியையும் வையையையும் அழைத்துத் தந்த கருணைக்கடலே, இன்று அன்னை கடல் ஆட வேண்டினள் என்று - இதுபோது என் தாய் கடலிற் சென்று நீராட விரும்பினள் என்று கூறி, இரந்தாள் - குறையிரந்தாள் எ - று.

தன்றன்னை என்பதில் இரண்டாவது தன் சாரியை. அன்று ஒரு பூத வீரனுக்கு ஆற்றினை யழைத்த நீ இன்று என் அன்னை நீராடுதற்குக் கடலினை அழைத்துத் தருதல் தகவுடைத் தென்பார் 'ஆறழைத்த அருட் கடலே' என்றார். (௧௧)

தேவிதிரு மொழிகேட்டுத் தென்னவராய் நிலம்புரக்குங்
காவிதிகழ் மணிகண்டர் கடலொன்றோ வேழுகடலுங்
கூவிவர வழைத்துமென வுன்னினன் குணபாலோர்
வாவியிடை யெழுவேறு வண்ணமோடும் வருவனவால்.

(இ - ள்.) தேவி திருமொழி கேட்டு-தேவியாரின் திருவார்த்தையைக் கேட்டு, தென்னவராய் நிலம் புரக்கும் காவி திகழ் மணிகண்டர் - பாண்டி மன்னராய் நிலவுலகைக் காக்கும் நீலமலர்போல விளங்கும் அழகிய மிடற்றினையுடைய இறைவர், கடல் ஒன்றோ - ஒரு கடல் மாத்திரமோ, எழுகடலும் கூவி வரவழைத்தும் என - ஏழு கடலையும் கூவி வரவழைப்போம் என்று கூறி, உன்னினர் - அவை வருமாறு நினைத்தார் (நினைத்தலும்), குணபால்-அம் மதுரைப் பதியின் கீழ்பாலுள்ள, ஓர் வாவி இடை எழு வேறு வண்ணமோடும் வருவன - ஒரு வாவியிடத்தே எழுவகைப்பட்ட நிறங்களோடும் அவை வாராநின்றன எ - று.

கூவிவர - முழங்கிவர என்னலுமாம். அழைத்தும்: தனித் தன்மைப் பன்மை வினைமுற்று. ஆல்: அசை. (கஉ)

துண்டமதித் திரளனைய சுரிவளைவாய் விடவுதைத்து*
வெண்டவள நுரைததும்பச் சுறுவேறு மிசைகோட்பத்
தண்டரள மணித்தொகுதி யெடுத்தெறியுந் தரங்கநிரை
அண்டநெடு முகடுரிஞ்ச வார்த்தெழுந்த கடலேழும்.

(இ - ள்.) மதித் துண்டத் திரள் அனைய - சந்திரனது துண்டத்தின் தொகுதிபோலும், சுரிவளை வாய்விட உதைத்து - சுரிந்த முகத்தினையுடைய சங்குகள் வாய்விட் டொலிக்குமாறு தள்ளி, வெள்தவள நுரை ததும்ப - மிக வெள்ளிய நுரைகள் ததும்பவும், சுறு ஏறு மிசை கோட்ப-ஆண் சுறுக்கள் மேலே சுழலவும், தண் தரள மணித் தொகுதி எடுத்து எறியும் - குளிர்ந்த முத்துக் கூட்டங்களை எடுத்து வீசுகின்ற, தரங்க நிரை - அலை வரிசைகள், அண்ட நெடு முகடு உரிஞ்ச - அண்டத்தின் நெடிய முகட்டினைத் தடவவும், கடல் ஏழும் ஆர்த்து எழுந்த - ஏழு கடல்களும் ஆரவாரித்து எழுந்தன எ - று.

வெண் தவளம்: ஒரு பொருட் பன்மொழி. சுறவு ஏறெனப் படுதலை,

"கடல் வாழ் சுறவும் ஏறெனப் படுமே"

என்னும் தொல்காப்பிய மரபியற் சூத்திரத்தா னறிக. உதைத்து எறியும் தரங்க நிரை யெனவும், ததும்பவும் கோட்பவும் உரிஞ்சவும் ஆர்த்தெழுந்த எனவும் முடிக்க. எழுந்த: அன்பெறுத முற்று. (கங)

காணுமா நகர்பனிப்பக் கலிமுடிவி னயன்படைப்புக்
கோணுமா றெழுந்ததெனக் கோதித்தெழுந்த கடலரவம்
பூணுநா யகனகில புவனமேலாங் கடந்ததிரு
ஆணையா லவனடிசென் றடைந்தார்போ லடங்கியதால்.

(இ - ள்.) காணும் மா நகர் பனிப்ப - (அவ்வரவைக்) கண்ட (மதுரைப்) பெரும் பதியிலுள்ளார் நடுங்க, கலி முடிவின் அயன் படைப்புக் கோணுமாறு எழுந்தது என - கலியுக முடிவின்கண் பிரமனது படைப்புப் பொருள்கள் அழியுமாறு எழுதல் போல, கொதித்து எழுந்த கடல் - பொங்கி எழுந்த ஏழு கடல்களும், அரவம் பூணும் நாயகன்-பாம்பினை யணிந்த சிவபெருமானது, அகில புவனம் எலாம் கடந்த திரு ஆணையால் - எல்லாப் புவனங்களையும் கீழ்ப்படுத்திய திரு ஆணையினாலே, அவன் அடி சென்று அடைந்தார் போல் - அவ்விறைவனது திருவடியைச் சென்று அடைந்தவர் போல, அடங்கியது - (வாவியிற் சென்று) அடங்கின எ - று.

பனிப்ப வெழுந்த வென்க. எழுந்ததென-தாம் பொங்கி எழுதல் போல. அகிலம், எல்லாம் என்பன ஒரு பொருளன. கடந்த-சென்ற என்னலுமாம். கடல் என்பதனைச் சாதி பற்றிய ஒருமையாகக் கொண்டு, அடங்கியது என ஒருமை வினை கொடுத்தார். ஆல்: அசை.

(பா - ம்.) * உதைந்து.

தன்வண்ண மேழுகடலின் றனிவண்ண மோடுகலந்து
பொன்வண்ண நறும்பொகுட்டுப் பூம்பொய்கை பொலிவெய்தி
மின்வண்ணச் சடைதாழ வெள்ளிமணி மன்றாடும்*
மன்வண்ண மெனவெட்டு வண்ணமோடும் வயங்கியதால்.

(இ - ள்.) பொன் வண்ணம் நறும் பொகுட்டுப் பூம் பொய்கை- பொன்னிறமுடைய நறிய பொகுட்டினை யுடைய தாமரை பொருந்திய அவ்வாவியானது, தன் வண்ணமொடு எழு கடலின் தனி வண்ணம் கலந்து பொலிவு எய்தி - தன் நிறத்தோடு ஏழு கடலின் வெவ்வேறு நிறங்களும் கலந்து பொலிவுற்று, மின் வண்ணச் சடை தாழ மணி வெள்ளி மன்று ஆடும் மன் வண்ணமென - மின்போலும் நிறமுடைய சடைகள் தாழ அழகிய வெள்ளியம்பலத்துள் ஆடுகின்ற சிவபெருமானுடைய எண்வகை வண்ணங்கள் போல, எட்டு வண்ணமொடு வயங்கியது – எண்வகை நிறங்களோடும் விளங்கியது எ-று.

மன் – இறைவன். அட்ட மூர்த்தி யாகலின் மன் வண்ணமும் எட்டாயின. மேற் செய்யுளில் பொற்றாமரைப் பொய்கையைத் திருவடியோடு ஒப்பித்து, இதில் இறைவன் திருவுருவோடு ஒப்பித்தமை பாராட்டற் பாலது. ஆல்: அசை. (௧௫)

ஆகச் செய்யுள் அஅ௬.

---

(பா - ம்.) * வெள்ளி மன்று னின்றாடும்.

## ௩௦. மலையத்துவசனை யழைத்த படலம்

[கலிவிருத்தம்]

எழுகட லழைத்தவா றியம்பி னுமினிச்
செழுமதி மரபினோன் சேணி ழிந்துதன்
பழுதில்கற் பில்லோடும் பரவை தோய்ந்தரன்
அழகிய திருவுரு வடைந்த தோதுவாம்.

(இ - ள்.) எழு கடல் அழைத்தவாறு இயம்பினும்-ஏழுகடலை யும் அழைத்த திருவிளையாடலைக் கூறினும்; இனி-மேல், செழுமதி மரபினோன் -குளிர்ந்த சந்திரனது குலத்து வந்த மலயத்துவச பாண்டியன், சேண் இழிந்து-வானுலகினின்றும் இறங்கி, தன் பழுது இல் கற்பு இல்லொடும் - குற்ற மற்ற கற்பினையுடைய தன் மனைவி யோடும், பரவை தோய்ந்து - கடலிலே நீராடி, அரன் அழகிய திரு வுரு அடைந்தது-சிவபெருமானது அழகிய திருவுருவத்தைப் பெற்ற திருவிளையாடலை, ஓதுவாம் - கூறுவாம் எ - று.

திருவுரு வடைதல் - சாரூபம் பெறுதல். (௧)

புரவலன் தடாதகைப் பூவை யோடும்வந்
துரவுநீர்க் கடன்மருங் குடுத்த சந்தனம்
மரவமந் தாரமா வகுளம் பாடலம்
விரவுநந் தனத்தரி யணையின் மேவினான்.

(இ - ள்.) புரவலன்-சுந்தர பாண்டியனாகிய இறைவன், தடா தகைப்பூவையோடும் வந்து - தடாதகைப் பிராட்டியாராகிய பூவை யோடும் வந்து, உரவு நீர்க்கடன் மருங்கு உடுத்த-வலிய நீரினை யுடைய எழுகடல் வாவியின் அருகிற் சூழ்ந்த, சந்தனம் மரவம் மந் தாரம் மா வகுளம் பாடலம் விரவு நந்தனத்து - சந்தன மரமும் குங்கும மரமும் மந்தாரை மரமும் மாமரமும் பாதிரி மரமும் கலந்து நெருங்கிய நந்தவனத்தின்கண், அரி அணையில் மேவினான் - சிங்காத னத்தில் அமர்ந்தருளினான் எ - று.

மரவம் - குங்கும மரம். பாடலம் - பாதிரி மரம். (௨)

தாதவிழ் மல்லிகை முல்லை சண்பகப்
போதுகோய் திளைஞருஞ் சேடிப் பொற்றொடி
மாதருங் கோடுத்திட* வாங்கி மோந்துயிர்த்
தாதர மிரண்டற வமரு மெல்லையில்.

(இ - ள்.) தாது அவிழ் மல்லிகை முல்லை சண்பகப்போது - மக ரந்தத்தோடு மலர்ந்த மல்லிகை மலரையும் முல்லை மலரையும் சண்பக மலரையும், இளைஞரும் சேடிப் பொன் தொடி மாதரும் கொய்து

---

(பா - ம்.) * மாதருந் தொடுத்திட.

கொடுத்திட - பணியாளரும் தோழிகளாகிய பொன்வளைய லணிந்த மகளிரும் பறித்துக் கொடுக்க, வாங்கி மோந்து உயிர்த்து-(அம்மலர் களை) வாங்கி முகந்து சுவாசித்து, ஆதரம் இரண்டு அற-அன்புஇரண் டில்லையாக, அமரும் எல்லையில்-எழுந்தருளியிருக்கும் காலத்தில் எ-று

இளைஞர்-ஏவல் செய்வார்; ''யான்கண் டனையரென் னிளையரும்'' என்பது புறம். முகந்து என்பது மோந்து என மருவிற்று. இருவர் அன்பும் ஒன்றாக என்பார் 'ஆதரம் இரண்டற' என்றார். அன்பால் ஒன்றுபட்டு என்னலுமாம். (ங)

தன்னமர் காதலி தன்னை நோக்கியே
மன்னவ னுன்பொருட் டேழு வாரியும்
இந்நக ரழைத்தன மீண்டுப் போந்துநின்
அன்னையை யாடுவா னழைத்தியா லென்றான்.

(இ - ள்.) மன்னவன் - சுந்தரபாண்டியன், தன் அமர் காதலி தன்னை நோக்கி - தன்னால் விரும்பப்பட்ட காதலியாகிய பிராட்டி யாரைப் பார்த்து, உன் பொருட்டு - நினது பொருட்டு, ஏழுவாரியும் இந்நகர் அழைத்தனம் - ஏழு கடலையும் இப்பதியில் வருமாறு அழைத்தேம், ஈண்டுப் போந்து ஆடுவான் நின் அன்னையை அழைத்தி என்றான் - இங்கு வந்து கடலாடுதற்கு உன் தாயை அழைப்பாயாக என்று கூறி யருளினான் எ - று.

தன்னால் என விரிக்க. தன்: சாரியை. ஆல்: அசை. (ச)

மடந்தையு மன்னையைக் கொணர்ந்து வாவிமா
டடைந்தன ளாகமற் றவள்பு ராண நூற்
படர்ந்தகேள் வியர்தமை நோக்கிப் பௌவநீர்
குடைந்திடும் விதியேவன் கூறுமேன்னவே.

(இ - ள்.) மடந்தையும் - பிராட்டியாரும், அன்னையைக் கொணர்ந்து வாவி மாடு அடைந்தனளாக - தாயை அழைத்து வந்து பொய்கையின் பக்கத்தே அடைந்தனராக, அவள் புராண நூல் படர்ந்த கேள்வியர் தமை நோக்கி-அவ்வன்னையானவள் புராண முத லிய நூல்களின் பரந்த கேள்வியை யுடைய முனிவர்களை நோக்கி, பௌவ நீர் குடைந்திடும் விதி எவன் - நீரில் ஆடுதற் குரிய விதி யாது, கூறும் என்ன-கூறுவீராக என்று வினவ எ - று.

படர்ந்த - சென்ற என்னலுமாம். எவன்: வினைப் பெயர். கூறும்: ஏவலில் வந்த செய்யு மென்னும் வாய்பாட்டுச் சொல். (இ)

கோதறு கற்பினாய் கொழுநன் கைத்தலங்
காதலன் கைத்தல மன்றிக் கன்றின்வால்
ஆதலிம் மூன்றிலொன் றங்கை பற்றியே
ஓதநீ ராடுதன் மரபேன் றோதினார்.

(இ - ள்.) (அதற்கு அவர்), கோது அறு கற்பினாய்-குற்றமற்ற கற்பினையுடைய காஞ்சன மாலையே, கொழுநன் கைத்தலம்-நாயகன்

கையும், காதலன் கைத்தலம்-புதல்வன் கையும், அன்றி - அல்லாமல் கன்றின்வால்-ஆனினது கன்றின் வாலும் ஆகிய, இம்மூன்றில் ஒன்று ஆதல் - மூன்றனுள் ஒன்றினையாவது, அங்கை பற்றியே - அழகிய கையாற்பிடித்துக் கொண்டே, ஓத நீர் ஆடுதல் மரபு என்று ஓதினர்- கடல் நீர் ஆடுதல் விதி என்று கூறினர்.

கொழுநன் கைத்தலமே சிறந்த தென்பார் ஒன்றுதல் என்றார். அங்கை-அகங்கையுமாம் பற்றியே என்பதன் ஏகாரம் தேற்றம். (சு)

மறையவர் வாய்மைபோன் மாலை கேட்டுமேற்
குறைவறத் தவஞ்செயாக் கொடிய பாவியேற்*
கிறைவனுஞ் சிறுவனு மில்லை யேயினிப்
பெறுவது கன்றலாற் பிறிதுண் டாகுமோ.

(இ - ள்.) மறையவர் வாய்மை-அந்தணரது மெய்ம்மொழியை, பொன்மாலை கேட்டு - காஞ்சனமாலை கேட்டு, மேல் குறைவு அறத் தவம் செயாக் கொடிய பாவியேற்கு - முற்பிறப்பில் குறைவின்றித் தவஞ் செய்யாத கொடிய பாவியாகிய எனக்கு, இறைவனும் சிறுவனும் இல்லையே - நாயகனும் புதல்வனும் இல்லையே, இனிப்பெறுவது கன்று அலால் பிறிது உண்டாகுமோ-இனி யான் பெறுவது கன்றின் வாலல்லாமல் வேறுளதோ எ - று.

பிராட்டியாரைப் பெறும் தவஞ்செய்திருந்தும் இன்று இறைவனும் சிறுவனும் இல்லாத குறையை நோக்கிக் 'குறைவறத் தவஞ் செயா' என்றார். உண்டாகுமோ - உளதோ என்னும் பொருட்டு. ஏகாரம் இரக்கத்திலும், ஓகாரம் எதிர்மறையிலும் வந்தன. (எ)

ஆதலாற் கன்றின்வால் பற்றி யாடுகோ
மாதரா யென்றுதன் மகட்குக் கூறலும்
வேதன்மால் பதவியும் வேண்டி னூர்க்கருள்
நாதனு ருயிர்த்துணை யாய நாயகி.

(இ - ள்.) ஆதலால் - ஆகையால், மாதராய்-மடந்தையே, கன்றின் வால் பற்றி ஆடுகோ - கன்றினது வாலைப்பற்றியே நீராடுவேனோ, என்று தன் மகட்குக் கூறலும்-என்று தன் புதல்வியாருக்குச் சொல்லியவளவில், வேதன் மால் பதவியும்-பிரமன் பதவியையும் திருமால் பதவியையும், வேண்டினூர்க்கு அருள் - விரும்பி வழிபட்டவருக்கு அளித்தருளும், நாதனுர் உயிர்த்துணையாய நாயகி-தலைவராகிய சிவபெருமானுக்கு உயிர்த் துணையாகிய பிராட்டியார் எ - று.

உலக நாயகியாகிய நின்னை மகளாகவும், சிவபரஞ்சுடரை மருகனாகவும் பெற்று வைத்தும் கன்றின்வால் பற்றி ஆடுதல் முறையோ என்பாள் 'ஆடுகோ' என்றாள்; ஓகாரத்தை அசையாக்கி, ஆடுவேன் என்று பொருளுரைத்தலுமாம். ஆடுகு: தன்மை யொருமை யெதிர் கால முற்று. (அ)

---

(பா - ம்.) * பாவியெற்கு.

தன்னுயிர்க் கிழவனை யடைந்து தாழ்ந்துதன்
அன்னைதன் குறையுரை யாட வாண்டகை
மன்னவன் வலாரியோ டொருங்கு வைகிய
தென்னவன் மேன்மனஞ் செலுத்தி னனரோ.

(இ - ள்.) தன் உயிர்க் கிழவனை அடைந்து - தம் உயிருக்கு உரிமை பூண்ட நாயகனை அடைந்து, தாழ்ந்து-வணங்கி, தன் அன்னை தன் குறை உரையாட-தம் தாயின் குறையைக் கூறவும், ஆண் தகை மன்னவன் - ஆண்டன்மையுடைய வேந்தனாகிய அச் சுந்தரபாண்டியன், வலாரியோடு ஒருங்கு வைகிய தென்னவன் மேல்-இந்திரனோடு ஒரு சேர இருந்த மலயத்துவச பாண்டியன் மேல், மனம் செலுத்தினன் - உள்ளத்தைச் செலுத்தினான் எ - று.

கிழவன் - உரியவன்; கிழமை பகுதி. உயிர் போலும் கிழவன்என்னலுமாம். உற்றார் குறை முடிக்க வல்ல னென்பார் 'ஆண்டகை' என்றார். மனஞ் செலுத்தல் - நினைத்தல். அரோ: அசை. (௯)

[வேறு]

சிலையத் திரியார் திருவுள் ளமுணர்ந்
தலையத் திரியட் டவனா தனநீத்
துலையத் திரியோத் தவிமா னமோடு
மலயத் துவசச் செழியன் வருமால்.

(இ - ள்.) சிலை அத்திரியார் திருவுள்ளம் உணர்ந்து - மேரு மலையை வில்லாக உடைய இறைவர் திருவுள்ளத்தினை அறிந்து, அலை அத்திரி அட்டவன் ஆதனம் நீத்து - பறக்கின்ற மலைகளை வென்ற இந்திரனது ஆதனத்தை விடுத்து, உலை அத்திரி ஒத்த விமானமொடு-சஞ்சரிக்கின்ற மலைபோன்ற விமானத்தின் கண், மலையத்துவசச் செழியன் வரும் - மலையத்துவச பாண்டியன் வருகின்றான் எ - று.

அத்திரிச் சிலையார் எனப் பிரித்துக் கூட்டுக. அத்திரி மூன்றும் மலை யென்னும் பொருளன. உலை அத்திரி என்பதற்குக் 'கொல்லன் உலை மூக்கிலுள்ள துருத்தி' எனப் பொருள் கூறினாருமுளர். ஓடு: ஏழனுருபின் பொருளில் வந்தது. ஆல்: அசை. (௧௦)

மண்பே றடைவான் வருமேழ் கடல்வாய்
எண்பே றடையா வருளின் னமுதைப்
பெண்பே றதனாற் பெறுபே றிதெனாக்
கண்பே றடைவா னெதிர்கண் டனனே.

(இ - ள்.) மண்பேறு அடைவான் - நிலவுலகிலுள்ளார் பயன் அடைய, வரும் ஏழ் கடல் வாய் - வந்த எழு கடல் வாவியினிடத்து, எண்பேறு அடையா - அளவு பெறுதலை யெய்தாத, இன் அருள் அமுதை-இனிய அருளமுதமாகிய தன் மருகரை, பெண்பேறு அதனால் பெறு பேறு இது எனா - பெண் பெற்றதனால் பெற்ற பயன் இது

வென்று, கண் பேறு அடைவான், கண்கள் (தம்) பயனைப் பெறுமாறு, எதிர் கண்டனன் - நேரே கண்டான் எ - று.

அடைவான் இரண்டும் வினையெச்சம். எழு கடலுங் கூடிய பொய்கையின் பக்கத்தே யிருந்த இறைவனைக் கடல் வாய் அமுதென நயம்படக் கூறினர். என் பேறடையா - அளவறுப்பதற் கரிய என்றபடி. அருளையுடைய அமுதென்னலுமாம். இது வெனு என்பது விகாரமாயிற்று (கக)

வந்தான் மருகன் சரணம் பணிவான்
முந்தா முனமா மனெனும் முறையால்
அந்தா மரையங் கையமைத் துமகட்
டந்தா னையெதிர்ந் துதழீஇ யினனல்.

(இ - ள்.) வந்தான் - (அங்ஙனம் கண்டு) வந்த மலயத்துவச பாண்டியன், மருகன் சரணம் பணிவான் முந்தா முனம்-மருகனுடைய திருவடிகளை வணங்க முற்படுமுன்னே, மாமன் எனும் முறையால் - மாமன் என்ற முறையினல், அம் தாமரை அங்கை அமைத்து-அழகிய தாமரை மலர் போன்ற கைகளால் தடுத்து, மகள் தந்தானை எதிர்ந்து தழீஇனன் - மகட்கொடை நேர்ந்தானகிய அம்மலயத்துவசனைச் சுந்தரபாண்டியன் எதிர்ந்து தழுவினன் எ - று.

முந்துமுனம் எனற்பாலது வழக்கால் முந்தாமுனம் என நின்றது. கை அமைத்து-கையின் சைகையால் தடுத்து. ஆல்: அசை (கஉ)

ஆத்தன் றிருவுள் ளமகிழ்ந் தருளாற்
பார்த்தன் புநிரம் பியபன் னியொடுந்
தீர்த்தம் புகுந்தா டியசெல் கவெனப்
பூத்தண் பொருநைப் புனனா டவனும்.

(இ - ள்.) ஆத்தன் திருவுள்ளம் மகிழ்ந்து-இறைவனகிய சுந்தர பாண்டியன் திருவுள்ளங் களித்து, அருளால் பார்த்து - அருளால் நோக்கி, அன்பு நிரம்பிய பன்னியொடும் - (உம்) அன்பு நிறைந்த மனைவியாரொடும், தீர்த்தம் புகுந்து ஆடிய செல்க என - தீர்த்தத்தை யடைந்து ஆடுதற்குச் செல்லக் கடவீரென்று கட்டளையிட, பூத்தண் பொருநைப் புனல் நாடவனும்-மலர்களையுடைய குளிர்ந்த பொருநை யாற்றின் நீர்வள மிக்க பாண்டி நாட்டையுடைய மலயத்துவச பாண்டியனும் எ - று.

ஆத்தன் - பரமாத்தனகிய சிவபெருமான். ஆடிய: செய்யியவென்னும் வாய்பாட்டு வினையெச்சம். (கங)

முன்னைத் தவமெய் திமுயன் றுபெறும்
அன்னப் பெடையன் னவள்வந் தெதிரே
தன்னைத் தழுவத் தழுவிக் கிரிவேந்
தென்னக் குறையா மகிழ்வெய் தினனே.

(இ - ள்.) முன்னை - முற்பிறப்பில், தவம் எய்தி முயன்று பெறும் - தவங்கிடந்து அரிதிற் பெற்ற, அன்னப் பெடை அன்னவள்-பெண் அன்னம் போன்ற பிராட்டியார், எதிரே வந்து தன்னைத் தழுவ - எதிரில் வந்து தன்னைத் தழுவ, தழுவி - தானுந் தழுவி, கிரி வேந்து என்னக் குறையா மகிழ்வு எய்தினன் - மலையரையனைப் போலக் குறையாத மகிழ்ச்சியை எய்தி எ - று.

மலையரையன் பிராட்டியை மகவாகப் பெற்று மகிழ் கூர்ந்தவனாகலின் 'கிரிவேந்தென்ன' என்றார். (கச)

தண்டே மொழிவேள் விதவக் குறையாற்
கண்டே னிலனேன் றுகருத் தவலம்
உண்டே யஃதிவ் வுவகைக் களிதேன்
வண்டே யெனவுண் டுமறந் தனனால்.

(இ - ள்.) தண் தேம் மொழி வேள்வி-தண்ணிய தேன் போலும் மொழியினையுடைய புதல்வியாரின் திருமணக் கோலத்தை, தவக் குறையால் கண்டேன் இலன் என்று-தவத்தின் குறைவினால் காணப் பெற்றிலேனென்று, கருத்து அவலம் உண்டே - (தன்) உள்ளத்தே கவலையுண்டன்றே, அஃது - அதனை, இ உவகைக் களிதேன் வண்டே என உண்டு - இம் மகிழ்ச்சியாகிய களிப்பைத் தரும் மதுவை வண்டு போலப் பருகி, மறந்தனன் - மறந்தான் எ - று.

தேமொழி: அன்மொழித் தொகை. உவகை, பிராட்டியும் பெருமானும் உடனிருந்த திருக்கோலத்தைக் கண்டமையா லாயது. தேமொழியைவிளியாக்கி மறந்தேன் என்றுரைப்பாருமுளர்; இதற்கு, என்று கூறினன் என வருவித்து முடித்தல் வேண்டும். ஆல்: அசை.

சேணுற் றவனைச் சிலநாள் கழியக்
காணுற் றவள்போ னிறைகற் புடையாள்
பூணுற் றுமலர்ந் ததோர்பொற் கொடிபோல்
நாணுற் றெதிர்நண் ணியிறைஞ் சினளால்.

(இ - ள்.) சேண் உற்றவனை-தூரத்தே சென்ற தலைவனை, சில நாள் கழிய-சில காலம் நீங்க, காணுற்றவள் போல் - கண்ட தலைவியைப் போல, நிறை கற்பு உடையாள் - நிறைந்த கற்பினை யுடைய காஞ்சனமாலை, பூண் உற்று-மங்கல நாண் முதலிய அணிகள் அணிந்து (விளங்கி), மலர்ந்தது ஓர் பொன் கொடிபோல் எதிர் நண்ணி-மலர்ந்ததாகிய ஒரு பொற் கொடிபோல எதிர் சென்று, நாண் உற்று இறைஞ்சினள் - நாணமடைந்து வணங்கினாள் எ - று.

சேணுற்றவன் - பொருளீட்டல் முதலியன குறித்து நாடிடையிட்டும் காடிடையிட்டும் பிரிந்து சென்ற தலைவன். நாணுதல், கற்புடைய மகளிர்க்கு இயல்பாயதோர் பண்பு. ஆல்: அசை. (கசு)

மஞ்சோ தியகாஞ் சனமா லைகையிற்
பைஞ்சோ திவிளங் குபவித் திரையாய்ச்
செஞ்சோ திமுடிச் சிவநா மவெழுத்
தஞ்சோ திநெடுங் கடலா டுமரோ.

(இ - ள்.) மஞ்சு ஓதிய காஞ்சனமாலை-முகில் போலுங் கூந்தலை யுடைய காஞ்சனமாலை, கையில் பைஞ்சோதி விளங்கு பவித்திரையாய் - (தனது) கையில் பசிய ஒளி விளங்கும் பவித்திரத்தை உடையவளாய், செஞ்சோதி முடி-சிவந்த ஒளியினையுடைய சடை முடியை யுடைய, சிவநாம எழுத்து அஞ்சு ஓதி - சிவபெருமானது திருநாமமாகிய திருவைந்தெழுத்தையும் செபித்து, நெடுங்கடல் ஆடும் - நெடிய கடலின்கண் மூழ்கத் தொடங்குவாள் எ - று.

ஓதிய : குறிப்புப் பெயரெச்சம். பவித்திரம் - தருப்பையினாற் செய்யப்பட்டது. சிவனது நாமம் என விரிக்க. திருவைந் தெழுத்துச் சிவபிரானது நாமம் என்பதனை,

''நாத னுமை நமச்சி வாயவே''
''திருநாம மைந்தெழுத்துஞ் செப்பா ராகில்''

என்னும் தமிழ் மறைகளா னறிக. அரோ: அசை. (கஎ)

துங்கக் கலைவே தியர்தோன் மறைநூற்
சங்கற் பவிதிப் படிதன் றுணைகை
அங்கைத் தளிர்பற் றியகத் துவகை
பொங்கப் புணரிப் புனலா டினளே.

(இ - ள்.) துங்கக் கலை வேதியர் - உயர்ந்த கலைகளை உணர்ந்த அந்தணர் (கூறிய), தொல் மறை நூல் சங்கற்ப விதிப்படி - பழைய வேத நூலின் சங்கற்ப முறைப்படி, தன் துணை கை - தன் நாயகன் கையை, அம் கைத் தளிர் பற்றி - (தனது), அழகிய கையாகிய தளிராற் பிடித்துக்கொண்டு, அகத்து உவகை பொங்க - மனத்தின்கண் மகிழ்ச்சி மீக்கூர, புணரிப்புனல் ஆடினள்-கடல்நீரில் ஆடினாள் எ-று.

தளிராற் பற்றி யென மூன்ற னுருபு விரிக்க. (கஅ)

குடைந்தார் கரையே றினர்கோன் றைமுடி
மிடைந்தார் கருணைக் கண்விழிக் கமலம்
உடைந்தா ரனைமா ருதரங் குறுகா
தடைந்தா ருமைபா கரருட் படிவம்.

(இ - ள்.) குடைந்தார் கரை ஏறினர்-நீராடிக் கரை யேறியவராகிய காஞ்சனமாலையும் மலயத்துவச பாண்டியனும், கொன்றைமுடி மிடைந்தார்-கொன்றை மாலையை முடியின்கண் சூடினவராகிய சுந்தரேசர், கருணைக்கண் விழிக் கமலம் உடைந்தார்-திருவருள் நோக்கஞ் செய்தலாலே பாசம் ஒழிந்தவர்களாய், அனைமார் உதரம் குறுகாது - தாய்மாரின் கருப்பத்திற் புகுதலில்லையாக, உமை பாகர் அருள் படிவம் அடைந்தார் - உமையொரு பாகரது கருணை வடிவத்தைப் பெற்றார்கள் எ - று.

உமைபாகர் என்றமையால் காஞ்சனமாலை உமையின் உருவினையும், மலயத்துவசன் சிவபிரான் உருவினையும் பெற்றனராவர் என உரைப்பாருமுளர். விழிக்க-விழித்தலால்: செயவெனெச்சம் காரணப் பொருட்டு. குடைந்தார் உடைந்தார் என்பன முற்றெச்சம். (கசு)

ஒண்கோண் டன்மிடற் றொளியும் மோருநால்
எண்கோண் டபுயத் தெழிலும் மழல்சேர்
கண்கோண் டநுதற் கவினும் போலியா
மண்கண் டுவியப் பவயங் கினரால்.

(இ - ள்.) ஒண் கொண்டல் மிடற்று ஒளியும் - ஒள்ளிய முகில் போன்ற திருமிடற்றின் ஒளியும், ஒரு நால் எண் கொண்ட புயத்து எழிலும் - ஒரு நான்கு என்னும் எண்ணைக்கொண்ட புயங்களின் எழுச்சியும், அழல் சேர் கண் கொண்ட நுதல் கவினும்-நெருப்பினைப் பொருந்திய கண்ணையுடைய நெற்றியின் அழகும் ஆகிய இவைகளால், பொலியா-பொலிந்து, மண் கண்டு வியப்ப வயங்கினர் - மண்ணுலகத்தார் கண்டு வியக்குமாறு விளங்கினர் எ - று.

இவற்றால் என மூன்றனுருபு விரிக்க; மிடற்றொளி முதலியவற்றைச் சினையெனக்கொண்டு, சினைவினை முதலொடு முடிந்த தென்னலுமாம். மண்: ஆகுபெயர். ஆல்: அசை. (உ0)

விண்ணின் றுவழுக் கிவிழுங் கதிர்போற்
கண்ணின் றநுதற் கருணா கரன்வாழ்
எண்ணின் றபுரத் தினிழிந் திமையா
மண்ணின் றதோர்தேய் வவிமா னமரோ.

(இ - ள்.) விண் நின்று வழுக்கி விழும் கதிர்போல்-வானினின்றும் நழுவி நிலமிசை விழுகின்ற சூரியனைப்போல, கண் நின்ற நுதல்-கண் நிலைபெற்ற நெற்றியையுடைய, கருணாகரன் வாழ் - கருணைக்கு உறைவுளாகிய சிவபெருமான் வீற்றிருக்கும், எண் நின்ற புரத்தின் - மதிக்கத்தக்க சிவலோகத்தினின்றும், ஓர் தெய்வ விமானம் இழிந்து-ஒரு தெய்வத் தன்மையையுடைய விமானம் இறங்கி, இமையா - ஒளி வீசி, மண் நின்றது - மண்ணுலகில் நின்றது எ - று.

கருணாகரன் - கருணைக்கு ஆகரமானவன்; ஆகரம் - சுரங்கம். இமையா: செய்யா வென்னும் வாய்பாட்டு வினையெச்சம். ஓர்: விகாரம். அரோ: அசை. (உக)

அத்தேய் வவிமா னமடுத் திடலும்
முத்தேய் வதமுக் கணவன் பணியால்
நத்தேய் வதருக் கரனங் கையோடும்
எத்தேய் வதமுந் தொழவே றினனால்.

(இ - ள்.) அ தெய்வ விமானம் அடுத்திடலும்-அந்தத் தெய்வ விமானம் வந்தவுடன், மு தெய்வத முக்கணவன் - மூன்று தெய்வங்களை மூன்று கண்களாகவுடைய சிவபெருமான், பணியால் - ஆணையால், ந தெய்வ தரு கரன் - உயர்ந்த தெய்வத் தன்மை பொருந்திய கற்பகத்தருப்போன்ற (கொடைக்) கையையுடைய மலயத்துவச பாண்டியன், நங்கை யொடும் - மனைவியோடும், எ தெய்வதமும் தொழ ஏறினன்-எல்லாத் தெய்வங்களும் வணங்க ஏறினன் எ - று.

முத்தெய்வதம்-இரவி, மதி, எரி என்பன. அகரம் விரிந்து கணவன் என்ருயது. ந: சிறப்புப் பொருள் தரும் இடைச்சொல்; நப்பின்னை, நக்கீரன் என்பவற்றிற்போல கணவனும் மனைவியுமாய் இருந்தமைக் கேற்ப 'நங்கை யொடும்...ஏறினன்' என்ருர்; காஞ்சனமாலை உமையுரு வெய்தினமையால் நங்கையொடு மென்ருர் எனவும் கூறுப. ஆல்: அசை. (உஉ)

தேமா ரியெனும் படிசிந் தநறும்
பூமா ரிபொழிந் ததிபொன் னுலகந்
தூமா மறையந் தரதுந் துபிகார்
ஆமா மெனவெங் குமதிர்ந் தனவால்.

(இ-ள்.) மாரி என்னும்படி - (மண்ணுலகில்) மழை என்று சொல்லுமாறு, பொன் உலகம்-பொன்னுலகத்தார், தேம் சிந்த நறும் பூமாரி பொழிந்தது - தேன் பொழிய நறிய மலர் மழை பொழிந்தனர்; தூமா மறை அந்தர துந்துபி-தூய பெரிய மறைகளும் தேவ துந்துபிகளும், கார் ஆம் ஆம் என-மேக முழக்கமாம் மேக முழக்கமாம் என்று சொல்லுமாறு, எங்கும் அதிர்ந்தன-எங்கும் ஒலித்தன எ-று.

தேம் சிந்த எனக் கூட்டுக. தேமாரி-இனிய மாரி என்னலுமாம். எண்ணும்மைகள் தொக்கன. அடுக்கு துணிவின்கண் வந்தது. ஆல்: அசை. (உ௩)

[அறுசீரடியாசிரியவிருத்தம்]

எழுந்தது விமானம் வான மெழுந்ததுந் துபியு நாணி
விழுந்தது போலு மென்ன வரவொலி யெங்கும் விம்மத்
தொழுந்தகை முனிவ ரேத்தச் சுராதிகள்* பரவத் திங்கட்
கொழுந்தணி வேணிக் கூத்தர் கோநகர் குறித்துச் செல்வார்.

(இ-ள்.) விமானம் எழுந்தது - அத்திப்பிய விமானம் மேலே எழுந்தது; வானம் எழுந்த துந்துபியும் நாணி விழுந்தது போலும் என்ன - வானின்கண் எழுந்த தேவ துந்துபிகளின் ஒலியும் நாணித் தோற்றதுபோலு மென்று கூறுமாறு, அர ஒலி எங்கும் விம்ம - அரகரவென்னும் முழக்கம் எங்கும் பரவவும், தொழும் தகை முனிவர் ஏத்த-எவரும் வணங்கும் தகுதியையுடைய முனிவர்கள் வாழ்த்தவும், சுர ஆதிகள் பரவ-தேவர் முதலியோர் துதிக்கவும், திங்கள் கொழுந்து அணி வேணிக் கூத்தர் - மதியின் கொழுந்தினை அணிந்த சடையையுடைய கூத்தப் பெருமானது, கோநகர் குறித்துச் செல்வார் - தலைநகரினை (சிவலோகத்தை) நோக்கிச் செல்வாராயினர் எ-று.

நாணி நிலத்தில் விழுந்தது போலும் என்று உரைப்ப. இளம் பிறையை மதியின் கொழுந்தென்ருர். கோ-தலைமை; சிறப்புமாம்.

முன்புதம் முருவாய் வைய முறைபுரி கோல்கைக் கொண்டு
பின்புதன் னுருவந் தந்த மருகனும் பெருகு கேண்மை
அன்புதந் தருகு நின்ற தடாதகை யணங்கு மீண்டு
பொன்புனை குடுமிக் கோயில் புகுந்துநன் கிருப்பக் கண்டார்.

---

(பா-ம்.) * சுராதிபர்.

(இ - ள்.) (அங்ஙனம் செல்வார்), முன்பு - முதலில், தம் உருவாய்-தம் வடிவமாகி, வையம் முறை புரி கோல் கைக்கொண்டு-உலகினை முறைசெய்கின்ற செங்கோலைக் கையிலேற்றுக்கொண்டு, பின்பு தன் உருவம் தந்த மருகனும் - பின் தனது வடிவத்தைக் கொடுத்தருளிய மருகனாகிய சிவபெருமானும், பெருகுகேண்மை அன்பு தந்து-மிக்க நட்போடு அன்பு செய்து, அருகு நின்ற தடாதகை அணங்கும்-அருகில் நின்ற தடாதகைப் பிராட்டியாரும், மீண்டு-திரும்பி, பொன்புனை குடுமிக் கோயில் புகுந்து நன்கு இருப்ப - பொன்னாற் செய்யப்பட்ட சிகரத்தையுடைய அரண்மனையிற் சென்று இனிது வீற்றிருக்க, கண்டார் - தரிசித்தார்கள் எ - று.

இறைவன் பாண்டியர் கோலந் தாங்கியதனைத் 'தம் முருவாய்' என்றார். பின்பு தன்னுருவ மென்றது சிவ சாரூபத்தினை. தம் முருவந் தந்த எனப் பா[illegible]திப் பிராட்டி உருவளித்தமை கூறுவாருமுளர். (உரு)

முன்னைவல் வி[illegible] யாக்கை முறைதடு மாறித் தோற்றம்
மன்னிய மனிதர் போலப் பண்டைய வடிவ மாறி
அன்னையே மகளா வீன்ற வப்பனே மருக னாக
என்னயா நோற்றே மியார்க்கு மியற்றருந் தவந்தா னென்னா.

(இ - ள்.) முன்னை வல் வினையால் - தொன்று தொட்டுள்ள வலிய கன்மத்தினாலே, யாக்கை முறை தடுமாறி - உடம்பாலாய முறைகள் தடுமாற்ற மெய்தி, தோற்றம் மன்னிய மனிதர்போல - பிறப்பினைப் பொருந்திய மனிதர்போல, பண்டைய வடிவம் மாறி - பழைய திருவுருவம்மாறி, ஈன்ற அன்னையே மகளா-உலகங்களை ஈன்ற தாயேபுதல்வியாகவும், அப்பனே மருகன் ஆக-தந்தையாகிய சிவபெருமானே மருகனாகவும் (வந்தருளுமாறு), யார்க்கும் இயற்றரும் என்ன தவம் தான்-எவருக்கும் செய்தற்கரிய தவங்களுள் என்ன தவத்தினை, யாம் நோற்றேம் என்னா-யாம் செய்தேமோ என்று கருதி எ - று.

யாக்கைமுறை தடுமாறலாவது தந்தை தாய் மகன் மகள் மருகன் மருகி முதலிய முறைகளுள் ஒன்றினை யுடையார் பிறிதொரு முறையினை யுடையாராக மாறிப் பிறத்தல். மகளாக வென்பது குறைந்து நின்றது. ஈன்ற என்பதனை அன்னையொடுங் கூட்டுக. என்ன. எவன் என்பத னடியாகப் பிறந்த குறிப்புவினையா லணையும் பெயர், தான்; அசை. (உசு)

கன்றக லான்போ லையன் கனைகழல் விடாது பற்றி
ஒன்றிய வன்பு பின்னின் றீர்த்தெழ வுள்ளத் தோடுஞ்
சென்றிரு கண்ணு முட்டி யடிக்கடி திரும்பி நோக்கக்
குன்றுறழ் விமானந் தன்னை யஞ்சலி கூப்பிச் செல்வார்.

(இ - ள்.) கன்று அகல் ஆன் போல்-கன்றினை நீங்கிய பசு (அடிக்கடி திரும்பிப் பார்த்தல்) போல, ஐயன் கனைகழல் விடாது பற்றி ஒன்றிய அன்பு-இறைவனுடைய ஒலிக்கும் வீரகண்டையணிந்த திருவடிகளை விடாது பற்றிக் கலந்த அன்பானது, பின் நின்று ஈர்த்து

எழ - பின்னே நின்று இழுத்தலால், உள்ளத்தோடும் இரு கண்ணும் சென்று முட்டி அடிக்கடி திரும்பி நோக்க - (தமது) உள்ளத்துடன் இரண்டு விழிகளும் சென்று நெருங்கி அடிக்கடி திரும்பிப் பார்க்க, குன்று உறழ் விமானம் தன்னை-மலையை யொத்த விமானத்தை, அஞ்சலி கூப்பிச்செல்வார்-கை கூப்பி வணங்கிச் செல்லா நின்ருர் எ-று.

"போதுவர் மீண்டு செல்வர் புல்லுவர் மீளப் போவர்
காதலி னேக்கி நிற்பர் கன்றகல் புனிற்ருப் போல்வர்"

என்னும் பெரிய புராணத் திருவிருத்தம் ஈண்டுச் சிந்திக்கற்பாலது. ஈர்த்தெழ-ஈர்க்க வென்னும் மாத்திரையாய் நின்றது. அஞ்சலியாகக் கைகூப்பி யென்க. அஞ்சலி கூப்பி யென்பது ஒரு சொல்லாய் இரண்டாவதற்கு முடிபாயிற்று. (உஎ)

[ஷை வேறு]

புவலோகங் கடந்துபோய்ப் புண்ணியருக்
　　கெண்ணிறந்த போக மூட்டுஞ்
சுவலோகங் கடந்துபோய் மகலோகஞ்
　　சனலோகந் துறந்து மேலைத்
தவலோகங் கடந்துபோய்ச் சத்தியலோ
　　கங்கடந்து தண்து ழாயோன்
நவலோகங் கடந்துலக நாயகமாஞ்
　　சிவலோக நண்ணி ஞரே.

(இ - ள்.) புவலோகம் கடந்துபோய் - (பூலோகத்தி னீங்கிப்) புவலோகத்தைக் கடந்து சென்று, புண்ணியருக்கு எண் இறந்த போகம் ஊட்டும்-அறஞ்செய்தவருக்கு அளவிறந்த இன்பத்தை நுகர்விக்கும், சுவலோகம் கடந்துபோய்-சுவலோகத்தைக் கடந்துசென்று, மகலோகம் சனலோகம் துறந்து-மகலோகத்தையும் சனலோகத்தையும் கடந்து, மேலைத் தவலோகம் கடந்துபோய்-அவற்றின்மேலுள்ள தவலோகத்தையும் கடந்து சென்று, சத்தியலோகம் கடந்து - சத்தியலோகத்தையும் கடந்து, தண் துழாயோன் நவலோகம் கடந்து - தண்ணிய துழாய் மாலை அணிந்த திருமாலின் நவலோகத்தையும் கடந்து, உலக நாயகம் ஆம் சிவலோகம் நண்ணினர் - உலகங்களுக்கெல்லாம் தலைமையாகிய சிவலோகத்தினை அடைந்தார் எ - று.

புவலோகம் முதலியவற்றின் அளவையும், அவற்றில் வசிப்போரையும் பின் வரும் சிவதருமோத்தரச் செய்யுட்களால் அறிக.

"தரைக்கு மேற்புவ லோக மதுதனில்
அருக்கன் சோம னெனுமிவ ராதியர்
இருப்பர் தத்தம் பலத்தினை யெய்தியே
பரித்த நீளம் பதினை திலக்கமே"

"அதற்கு மேலம ரேச னரும்புரி
அதற்கு நீளம் அசீதியு மைந்துமாம்

அதற்கு மேன்மக லோக மதுதனில்
வதிப்பர் மாதவ ராதி மரீசியும்''
''உயரந் தானிரு கோடி யுறுமதற்
குயரு மெல்லை சனதல முன்னதம்
உயரு நாலிரு கோடியென் றுன்னுக
உயரு மாபிதிர் தேவ ருறைவரே''
''அதற்கு மேற்றவ லோக மருந்தவர்
அதற்குள் வாழ்வர் சனகனை யாதியர்
அதற்கு நீளமு மாறிரு கோடியாம்
அதற்கு மேலயன் றேசமென் றுய்கவே''
''அதற்கு நீளமு மாறுடன் பத்துறும்
அதற்கு மேலரி தேசமென் றுய்கவே
அதற்கு நீளநாற் கோடியென் றுய்கவே
அதற்கு மேற்சிவ லோகமோ ராறுறும்'' (உஅ)

அறக்கோடிபின் னிறைமகனை யடிபணிந்து
தனையீன்றார்க் காதி வேத
மறைப்பொருடன் வடிவளித்த வருளின்மன
நிறைமகிழ்ச்சி வாய்கொள் ளாமற்
புறப்படுவ தெனவிரண்டு திருசேவிக்குஞ்
செங்குமுதம் போதிந்த தீந்தேன்
நிறைப்பதெனப் பன்முறையாற் றுதிசெய்து
தொழுதொன்று நிகழ்த்தா நின்றாள்.

(இ - ள்.) அறக் கோடி - தருமவல்லியாகிய பிராட்டியார், பின் இறைமகனை அடி பணிந்து-பின்பு தம் தலைவனை அடி வணங்கி, தனை ஈன்றார்க்கு-தம்மைப் பெற்றவர்க்கு, ஆதி வேத மறைப்பொருள் தன் வடிவு அளித்த அருளின் - முதன்மையாகிய வேதத்தின் உட்பொருளாகிய பெருமான் தனது சாரூபத்தைக் கொடுத்தருளிய கருணை பற்றி, மனம் நிறை மகிழ்ச்சி வாய் கொள்ளாமல் புறப்படுவது என-உள்ளத்தில் நிறைந்த மகிழ்ச்சியானது வாயுளடங்காது வெளிப்படுகின்ற தென்னும்படி, இரண்டு திருச்செவிக்கும் செங்குமுதம் போதிந்த திம் தேன் நிறைப்பது என-இரண்டு திருச் செவிகளிலும் (தமது திருவாயாகிய) செவ்வாம்பல் மலரின் மிக்க இனிய தேனை நிறைப்பது போல, பன் முறையால் துதி செய்து தொழுது-பலவகையாகத் துதித்து வணங்கி, ஒன்று நிகழ்த்தா நின்றாள்-ஒன்று கூறுகின்றாள் எ - று.

அடி பணிந்து என்பது ஒரு சொல்லாய் இறைமகனை யென்னும் இரண்டாவதற்கு முடிபாயிற்று; இறை மகனது அடியை என விரித்தலுமாம். மறைப்பொருள் - மறையாகிய பொருள்; உட்பொருள்; வேதமாகிய மறை யென்னலுமாம். உவகை மிகுதியால் நிரம்பப் பேசுதலை வாய் கொள்ளாமற் பேசுதல் என்பர். செவிக்கும்-செவியிலிடத்தும்: வேற்றுமை மயக்கம். (உகூ)

எண்ணிறந்த தேவர்க்கும் யாவர்க்கும்
பயன்சுரக்கு மிமையோர் நாட்டுப்
புண்ணியவான் றன்புனிற்றுக் கன்றுக்குக்
குறைவேதேன் பொருட்டேன் னீன்றாள்
எண்ணியது கடலொன்றே யேழுகடலு
மீண்டழைத்தா யீன்று ளாட
விண்ணிருந்த கணவனையும் விளித்துனருள்
வடிவளித்துன் மேனா டீந்தாய்.

(இ - ள்.) எண் இறந்த தேவர்க்கும்-அளவில்லாத தேவர்களுக்கும், யாவர்க்கும்-மற்றுள்ளார் பலர்க்கும், பயன் சுரக்கும்-வேண்டிய பயனைத் தரும், இமையோர் நாட்டுப் புண்ணிய ஆன் புனிற்றுக் கன்றுக்கு-தேவருலகத்துப் புண்ணிய வடிவமாகிய காமதேனுவின் இளங் கன்றுக்கு, குறைவு ஏது-குறைவு யாது (அது போல நின்னை யடுத்த எனக்கும் ஒரு குறைவுமில்லை; ஆதலால்), என் ஈன்றாள் எண்ணியது கடல் ஒன்றே-என் தாய் நீராட விரும்பியது ஒரு கடலே யாகவும், என் பொருட்டு-என்னிமித்தமாக, எழு கடலும் ஈண்டு அழைத்தாய்-ஏழு கடலையும் இங்கு வரவழைத்தாய்; ஈன்றாள் ஆட விண் இருந்த கணவனையும் விளித்து-அவள் நீராடுதற்கு வானுலகத்திலிருந்த அவள் நாயகனையும் அழைத்து, உன் அருள் வடிவு அளித்து-உனது கருணை யுருவத்தையும் தந்து, உன் மேல் நாடு ஈந்தாய்-உனது மேலாகிய சிவ லோகத்தையும் கொடுத்தருளினாய் எ - று.

யாவர்க்கும் என்றது முனிவர் முதலாயினாரை. பயன்-பால், உண்டி. தன்: சாரியை; அசையுமாம். புனிற்றுக் கன்று-ஈன்றணிமை யுடைய கன்று;

"புனிறென் கிளவியீன் றணிமைப் பொருட்டே"

என்பது தொல்காப்பியம். ஒன்றே யாகவும் என விரித்து, என் பொருட்டு அழைத்தாய் என இயைக்க. அருள் வடிவு-சாரூபம். ஆன் கன்றுக்குக் குறைவேது என உவமை கூறிப் பொருள் தொக வைத்தது பிறிது மொழிதல் என்னும் அணி. (கூ0)

தென்னர்மர பிறந்ததெனப் படுபழியி
லாழவருஞ் செவ்வி நோக்கிப்
பொன்னவிர்தார் முடிபுனைந்து கோலோச்சி
வருகின்றாய் போலு மேலும்
இந்நிலைமைக் கிடையூறு மினியின்றே
யெனத்தலைவி யியம்ப லோடுந்
தன்னிறைவி யுட்கோளை யகங்கொண்டு
மகிழ்ந்திருந்தான் றமிழர் கோமான்.

(இ- ள்.) தென்னர் மரபு-பாண்டியர் குலம், இறந்தது எனப் படு பழியில்-ஒழிந்த தென்று சொல்லப்படும் பழியில், ஆழவரும் செவ்வி நோக்கி-அழுந்தவருங் காலத்தை நோக்கி, பொன் அவிர் தார் முடி புனைந்து-பொன்னாற் செய்யப்பட்டு விளங்கும் மாலையை யணிந்த முடியினைச் சூடி, கோல் ஓச்சி வருகின்றாய் போலும்-செங்கோல் செலுத்தி வருகின்றாய் போலும், இனிமேலும் இந் நிலைமைக்கு இடையூறு இன்றே என-இனியும் வழி வழியாய் வரும் இவ்வரசியல் நிலைமைக்கு இடையூறு இல்லையே என்று, தலைவி இயம்ப லோடும்-பிராட்டியார் விண்ணப்பித்த வளவில், தமிழர் கோமான்-பாண்டியர் பெருமானாகிய இறைவன், தன் இறைவி உட்கோளை அகம் கொண்டு-தன் நாயகியின் உள்ளக் கிடையைத் திருவுளத்திற் கொண்டு, மகிழ்ந் திருந்தான்-மகிழ்ச்சி யுற்றிருந்தான் எ - று.

தென்னர் மர பென்பது இறந்த தென்பத னோடும் ஆழ என்பத னோடும் தனித் தனி இயையும்; படு பழி எனப் பிரித்து, இறந்த தென்று சொல்ல மிக்கபழியில் ஆழவரும் என்றுரைத்தலுமாம். அவிர் முடி யென்க. போலும் என்பது கட்டுரைச் சுவைபட நின்ற அசைச் சொல். இனிமேலும் என்றது வழக்கு நோக்கியாம். இடையூறும், உம்: அசை. உட்கோள்-புதல்வற்பேறு வேண்டு மென்னும் எண் ணம். (நக)

ஆகச் செய்யுள் கூ௨0

---

## கக உக்கிரகுமாரபாண்டியரது திருவவதாரப் படலம்

[கலிநிலைத்துறை]

மன்ன வன்குல சேகரன் றிருமகன் மனைவி
தன்னோ டுங்கட லாடிய தகுதியீ தந்தத்
தென்ன வன்றனித் திருமக டிருவுளங் களிப்ப
உன்ன ருந்திற லுக்கிர னுதித்தவா றுரைப்பாம்.

(இ - ள்.) மன்னவன் குலசேகரன்-குலசேகரனென்னும் வேந்தனுடைய, திருமகன்-சிறந்த புதல்வனாகிய மலயத்துவச பாண்டியன், மனைவி தன்னொடும்-தன் மனைவியோடும், கடலாடிய தகுதி ஈது-கடலாடிய திருவிளையாடல் இது; அந்தத் தென்னவன் தனித் திருமகள்-அம் மலயத்துவச பாண்டியனுக்கு ஒப்பற்ற திருமகளாகிய தடாதகைப் பிராட்டியார், திருவுளம் களிப்ப-திருவுள்ளம் மகிழ, உன் அருந்திறல் உக்கிரன்-நினைத்தற்கரிய வெற்றியை யுடைய உக்கிர குமார பாண்டியன், உதித்தவாறு உரைப்பாம்-அவதரித்த திருவிளையாடலை இனிக் கூறுவாம் எ - று.

மன்னவனாகிய திருமகன் என்பதும் பொருந்தும். தகுதி-தக்க செய்தி. (க)

[அறுசீரடி யாசிரிய விருத்தம்]

தண்ணிலா மௌலி வேய்ந்த சுந்தர சாமி ஞாலத்
தெண்ணிலா வைக றன்ன திணையடி நிழல்போல் யார்க்குந்
தெண்ணிலாக் கவிகை நீழல் செய்தருட் செங்கோ லோச்சி
உண்ணிலா வுயிர்தா னாகி முறைபுரிந் தொழுகு நாளில்.

(இ - ள்.) தண் நிலா மௌலி வேய்ந்த சுந்தரசாமி-தண்ணிய பிறையை முடியில் அணிந்த சுந்தரபாண்டியனாகிய இறைவன், ஞாலத்து எண் இலா வைகல்-நிலவுலகில் அளவிறந்த காலம், தன்னது இணை அடி நிழல்போல்-தன்னுடைய இரண்டு திருவடிகளின் நிழலைப் போல, யார்க்கும்-அனைவர்க்கும், தெள் நிலாக் கவிகை நீழல் செய்து-தெளிந்த ஒளியை யுடைய வெண் கொற்றக் குடையால் நிழல் செய்து, அருள் செங்கோல் ஓச்சி-கருணையுடன் கூடிய செங்கோல் நடாத்தி, உள் நிலா உயிர் தானாகி-உள்ளே விளங்கும் உயிர் தானேயாகி, முறை புரிந்து ஒழுகு நாளில்-முறைசெய்து வருநாளில் எ - று.

சாமி - இறைவன். சுந்தரசாமி என்னும் இருபெய ரொட்டுப் பண்புத் தொகை வடநான் முடிபு, தன்னது: னகரம் விரித்தல். அடி நிழலின் மிக்க தொன்றின்மையால் அதனையே உவமை கூறினர். நிலாக் கவிகை-திங்கள்போலும் குடையுமாம். உயிர்கட் கெல்லாம் உயிராம் இயல்பினை யுடைய இறைவன் அரசு நடத்துங்காலும் அங்ஙனமே உயிரா யுள்ளான் என்றார்;

"நெல்லு முயிரன்றே நீரு முயிரன்றே
மன்ன னுயிர்த்தே மலர்தலை யுலகம்
அதனால்
யானுயி ரென்ப தறிகை
வேன்மிகு தானை வேந்தர்க்குக் கடனே"

என்னும் புறப்பாட்டு இங்கு நோக்கற் பாலது. முறையாவது இஃ தென்பதனை,

"ஓர்ந்துகண் ணோடா திறைபுரிந் தியார்மாட்டும்
தேர்ந்துசெய் வஃதே முறை"

என்னும் திருக்குறளா னறிக. (உ)

கரியவன் கமலச் செம்மன் மறைமுதற் கலைகள் காண்டற்
கரியவ னன்பர்க் கென்று மெளியவ னாகு மேன்மை
தெரியவன் பகன்ற சிந்தைத் தென்னவன் றனக்குங் கற்பிற்
குரியவ டனக்குங் காதன் மகளென வுமையைத் தந்தான்.

(இ - ள்.) கரியவன் கமலச் செம்மல் மறை முதல் கலைகள் காண்டற்கு அரியவன் - திருமாலும் தாமரை மலரில் வசிக்கும் பிரமனும் வேதம் முதலிய கலைகளும் காணுதற்கு அரியவனும், என்றும் அன்பர்க்கு எளியவன் ஆகும் மேன்மை - எஞ்ஞான்றும் அன்பர்களுக்கு எளியவனுமாகிய (தனது) பெருமையை, தெரிய - அனைவரும் அறியுமாறு, அன்பு அகன்ற சிந்தை தென்னவன் தனக்கும் - அன்பு பெருகிய உள்ளத்தினை யுடைய மலயத்துவச பாண்டியனுக்கும், கற்பிற்கு உரியவள் தனக்கும் - அவன் கற்பினுக்குரிய மனைவியாகிய காஞ்சன மாலைக்கும், உமையை மகள் எனத் தந்தான் - உமாதேவியைப் புதல்வியாகுமாறு அருளினான் எ - று.

இறைவன் இங்ஙனம் அரியனும் எளியனுமாம் தன்மையை,

"மூவரா லு மறியொ ணாமுத லாய வானந்த மூர்த்தியான்
யாவராயினு மன்ப ரன்றி யறியொ ணாமலர்ச் சோதியான்"

என்னும் திருவாசகத்தாலும் அறிக.

"தன்னடியார்க், கென்று மெளிவரும் பெருமை
யேழுலகு மெடுத்தேத்தும்"

எனத் திருத்தொண்டர் புராணங் கூறுவதும் ஈண்டுச் சிந்திக்கற் பாலது. அரியனாகியும் என விரித்தலுமாம். அகன்ற - விரிந்த; 'அஃகி யகன்ற வறிவு" என்புழிப் போல. (ங)

மற்றதற் கிசையத் தானு மருமக னாகி வையம்
முற்றும்வெண் குடைக்கீழ் வைக முறைசெய்தா னாக மூன்று
கோற்றவர் தம்மிற் றிங்கட் கோக்குடி விழுப்ப மெய்தப்
பெற்றது போலு மின்னும் பெறுவதோர் குறைவு தீர்ப்பான்.

(இ - ள்.) அதற்கு இசைய - அதற்குப் பொருந்த, தானும் மருமகனுகி - தானும் மருமகனுகி, வையம் முற்றும் வெண்குடைக் கீழ் வைக - உலகம் முழுதும் வெண்கொற்றக் குடையின் நிழலிலே தங்கியிருக்க, முறைசெய்தானுக - முறை புரிந்து வருதலால், மூன்று கொற்றவர் தம்மில்-சேர சோழ பாண்டிய ரென்னும் மூன்று மன்னர்களில், திங்கள் கோக்குடி விழுப்பம் எய்தப் பெற்றது-சந்திரகுலத்துத் தோன்றிய பாண்டியர் குடியானது மேன்மை யடைந்தது; இன்னும் பெறுவது ஓர் குறைவு தீர்ப்பான்-(அவ்விறைவனே) இன்னமும் அம்மரபு பெறக் கடவதாகிய ஒரு குறையை நீக்குவானுயினன் எ-று.

ஆக - ஆதலால்; உமையைத் தந்து மருகனுகி முறை செய்தமையால் என்க. திங்களின் வழிவந்த கோக்களின் குடியென விரிக்க. எய்தற் பாலதாகிய குறைவாவது வழிபொன்றி அரசு நிலை கெடல். மற்று, போலும் என்பன அசைச் சொற்கள். (ச)

ஒன்றினைச் செய்கை செய்யா தொழிகைவே றொன்று செய்கை
என்றிவை யுடையோ னாதி யீறிலாப் பரம யோகி
நன்றுதீ திகழ்ச்சி வேட்கை நட்பிகல் விளைக்கு மாயை
வென்றவன் செய்யு மாயை விருத்தியா ரளக்க வல்லார்.

(இ - ள்.) ஒன்றினைச் செய்கை-ஒன்றைச் செய்தலும், செய்யாது ஒழிகை - அதனைச் செய்யாது தவிர்தலும், வேறு ஒன்று செய்கை - மற்றொன்று செய்தலும், என்று இவை உடையோன்-என இவற்றை உடையவனும், ஆதி ஈறு இலாப் பரமயோகி-முதலு முடிவு மில்லாத பரமயோகியும், நன்று தீது இகழ்ச்சி வேட்கை நட்பு இகல் விளைக்கும் மாயை வென்றவன் - நன்மையும் தீமையும் வெறுப்பும் விருப்பும் நட்பும் பகையுமாகிய இவற்றை விளைக்கின்ற மாயையை இயல்பாகவே வென்றவனுமாகிய சிவபெருமான், செய்யும் மாயை விருத்தி அளக்க வல்லார் யார் - செய்கின்ற மாயையின் விருத்தியை அளந்து காண வல்லவர் யாவர்? (ஒருவருமில்லை என்றபடி) எ - று.

ஒன்றினைச் செய்கை முதலிய மூன்றும் வடமொழியில் கர்த்திருத்துவம், அகர்த்திருத்துவம், அந்நியதா கர்த்திருத்துவம் என்று கூறப்படும்; இவற்றால் தன்வயத்தனுதலாகிய இறைமைக் குணம் கூறியவாறாயிற்று;

"ஒன்றை நினைக்கி னதுவொழிந்திட் டொன்றாகும்
அன்றி யதுவரினும் வந்தெய்தும்—ஒன்றை
நினையாத முன்வந்து நிற்பினும் நிற்கும்
எனையாளு மீசன் செயல்"

என்னும் நல்வழி வெண்பாவில் இறைவனது தன்வய முடைமையும், உயிரினது தன்வய மின்மையும் ஒருங்கே கூறப்படுதல் காண்க. மாயை விருத்தி-விசித்திரச் செயல்கள். "மாயை வென்றவன் செய்யு மாயை விருத்தி" என முரணயந் தோன்றக் கூறினர். (ரு)

இந்திர சால விச்சை காட்டுவா னென்னத் தன்பாற்
சேந்தழ னாட்ட மீன்ற செல்வனைக் கருப்ப மெய்தா
தந்தமி லுயிரு ஞால மனைத்தையு மீன்ற தாயாஞ்
சுந்தர வல்லி தன்பாற் றோன்றுமா றுள்ளஞ் செய்தான்.

(இ - ள்.) இந்திர சால விச்சை காட்டுவான் என்ன - இந்திர சால வித்தை காட்டுபவனைப்போல, தன்பால் செந்தழல் நாட்டம் ஈன்ற செல்வனை - தன்னிடத்துள்ள சிவந்த அனற்கண் தந்தருளிய செல்வனை, கருப்பம் எய்தாது-கருப்ப முருமல், அந்தம் இல் உயிரும்-அளவிறந்த உயிர்களையும், ஞாலம் அனைத்தையும் - உலக முழுதையும், ஈன்ற தாயாம் சுந்தர வல்லி தன்பால் - பெற்றருளிய அம்மையாகிய தடாதகைப் பிராட்டியாரிடத்தே, தோன்றுமாறு உள்ளம் செய்தான் - உதிக்கும்படி திருவுள்ளங் கொண்டான் எ - று.

சாலம் - வலை; வலைபோல் அகப்படுத்தலின் விச்சைக்குச் சாலமென்பது பெயராயிற்று. இந்திரசாலம் - சாலங்களிற் றலையாயது;

"இந்திர சாலங் காட்டிய வியல்பும்"

என்பது திருவாசகம். தன்பால் நின்றும் நாட்டத்தால் ஈன்ற என விரித்தலுமாம். செல்வனைத் தோற்றுமாறு உள்ளஞ் செய்தான் என இயையும். செல்வன்-முருகன். வல்லி தன்பால் என்பதில் தன் சாரியை. (சு)

அங்கவன் வரவுக் கேற்ப வாயமும் பிறருந் தாழ்ந்து
மங்கைநின் வடிவுக் கேற்பக் கருவுரு வனப்புஞ் சீருந்
திங்கடோ ரூற்று மன்றற் சேவ்வியுங் காண வாசை
போங்கிய தேங்கட் கேன்ரூர் புனிதையப் படிபோ லானுள்.

(இ - ள்.) அங்கு அவன் வரவுக்கு ஏற்ப - அங்கு அச்செல்வன் வருகைக்கு இசைய, ஆயமும் பிறரும் தாழ்ந்து - தோழிகளும் மற்றவர்களும் வணங்கி, மங்கை - பிராட்டியாரே, நின் வடிவுக்கு ஏற்பக் கரு உரு வனப்பும் சீரும் - நினது திருவுருவத்திற்குப் பொருந்த (உண்டாகிய) கருப்பத் தோற்றத்தின் அழகையும் சிறப்பையும், திங்கள்தோறு ஆற்றும் மன்றல் செவ்வியும் - மாதந்தோறும் செய்யும் திருவிழாப் பொலிவையும், காண எங்கட்கு ஆசை பொங்கியது என்ரூர் - கண்டு களிக்க எங்களுக்கு விருப்பம் மேலோங்கியது எனக் கூறினர்கள்; புனிதை அப்படி ஆனுள் - பிராட்டியாரும் அங்ஙனம் ஆயினர் எ - று.

மன்றல் - சடங்கு. போல்: அசை. (எ)

கருமணிச் சிகரச் சேம்போற் கனவரை யனைய காட்சித்
திருமுலை யமுதம் பேய்த சேப்பிரண் டனைய வாக
வருமுலை சுமந்து மாய்ந்த மருங்குலும் வந்து தோன்ற
அருள்கனிந் தனையா ளுவிற் கின்சுவை யார்வம் போங்க.

(இ-ள்.) கருமணி சிகரச் செம்பொன் கனவரை அனைய காட்சி-கருமணியாகிய சிகரத்தையுடைய சிவந்த பொன் மலை போலும் தோற்றத்தையுடைய, திருமுலை - அழகிய கொங்கைகள், அமுதம் பெய்த செப்பு இரண்டு அனையவாக - அமுதம் நிரப்பிய இரண்டு செப்புகள் போலாகவும், வருமுலை சுமந்து மாய்ந்த மருங்குலும் வந்து தோன்ற - வளர்கின்ற கொங்கைகளைச் சுமத்தலால் மறைந்த

இடையும் வெளிப்பட்டுத் தோன்றவும், அருள் கனிந்தனையாள் - அருள் பழுத்தாலொத்த பிராட்டியார், நாவிற்கு இன் சுவை ஆர்வம் பொங்க-நாவினுக்கு இனிய சுவையின் கண் விருப்பம் ஓங்கவும் எ-று.

கருமணிபோலும் முலைக்கண்ணைக் கருமணியென்றார். நீலமணிச் சிகரத்தையுடைய பொன் மலைபோலும் என இல்பொருளுவமை யாக்கிச், சூசுகத்தையுடைய என வருவித்துரைத்தலுமாம். பொன், கனம் என்பன ஒரு பொருளன; கனவரை-பெரிய மலை யென்னலு மாம். மாய்ந்த-மறைந்த மருங்குலும் சுமந்து தோன்ற வென இயைத் தலுமாம். கனிந்தாலனையாள் என்பது கனிந்தனையாள் என்றாயிற்று.

"விரும்பார் முலைக்கண் கரிந்து திங்கள்
வெண்கதிர்கள் பெய்திருந்த பொற்செப்பே போல்
அரும்பால் பரந்து நுசுப்புங் கண்ணின் புலனாயிற்று"

என்னும் சிந்தாமணியின் கருத்து இதனுடன் ஒத்து நோக்கற் பாலது. (அ)

என்னவு மெளிய வேனு மரியன வென்ன வேட்டாள்*
அன்னவும் போக பூமி யரும்பெற லுணவு நல்கிப்
பன்னக ரமுதுந் திங்கட் படுசுவை யமுதுந் தெய்வப்
பொன்னக ரமுது மாசை புதைபடக் கணங்க ணல்க.

(இ - ள்.) என்னவும் - எத்துணையும், எளியவேனும் - எளிமை யுடைய பொருள்களாயினும், அரியன என்ன வேட்டாள்-அவற்றை அரியனவாகக் கருதி விரும்பினார்; அன்னவும் - அங்ஙனம் விரும்பும் பொருளையும், போகபூமி அரும் பெறல் உணவும் நல்கி - போக பூமியிலுள்ள பெறுதற்கரிய உணவுகளையும் கொடுத்தும், பன்னகர் அமுதும் - நாகருலகத்திலுள்ள அமிழ்தினையும், திங்கள் படு சுவை அமுதும் - சந்திர மண்டலத்துண்டாகும் சுவை மிக்க அமிழ்தினை யும், தெய்வப் பொன் நகர் அமுதும் - தேவருடைய பொன்னுலகத்தி லுள்ள அமிழ்தினையும், ஆசை புதைபட - விருப்பம் நீங்க, கணங்கள் நல்க - சிவகணங்கள் கொடுக்கவும் எ - று.

எனையவும் என்பது என்னவும் என்று திரிந்தது. வயாவுற்ற மகளிர் எளிய பொருள்களையும் அரியனபோல் விரும்புதல் இயல்பு. போகபூமி - உத்தர குரு முதலியன. பன்னக ருலகத்தைப் பன்னகர் என்றார். நாகருலகம் போகத்திற் சிறந்ததென்பதனை,

"நாக நீணகரொடு நாகநா டதனொடு
போகநீள் புகழ் மன்னும் புகார்நக ரதுதன்னில்"

என்னும் சிலப்பதிகார அடிகளின் உரைநோக்கியுணர்க. பாரதத்தி லும் நாகருலகத் தமிழ்து கூறப்பட்டுளது. பெறலரும் என்பது முன் பின்னாகத் தொக்கது. மேற் செய்யுளிலுள்ள ஆக, தோன்ற, பொங்க என்னுஞ் செயவெனெச்சங்கள் வேட்டாள் என்பதனைக் கொண்டு முடியும். (கூ)

(பா - ம்.) * வேட்டால்.

புண்ணிய முனிவர் வேத பண்டிதர் போந்து வேந்தர்க்
கண்ணிய சடங்குமூதூ ரருங்கடி வெள்ளத் தாழ
எண்ணிய திங்க டோறு மியற்றவிக் கன்னித் தேயம்
பண்ணிய தருமச் சார்பாற் படுபயன் றலைப்பா டெய்த.

(இ - ள்.) புண்ணிய முனிவர் - புண்ணியமே வடிவாகிய முனிவர்களும், வேத பண்டிதர் - வேதங்களில் வல்ல மறையோர்களும், போந்து - வந்து, வேந்தர்க்கு அண்ணிய சடங்கு - அரச மரபினர்க்குப் பொருந்திய சடங்குகளை, மூதூர் அருங்கடி வெள்ளத்து ஆழ-பழமையாகிய மதுரைப் பதியானது அரிய திருவிழா வென்னும் பெருக்கில் அழுந்த, எண்ணிய திங்கள்தோறும் இயற்ற-வரையறுத்த மாதங்கடோறும் செய்து முடிக்கவும், இ கன்னித் தேயம் பண்ணிய தருமச் சார்பால் படு பயன் தலைப்பாடு எய்த - இந்தக் கன்னி நாடானது இயற்றிய அற நெறியால் வரும் பயனை அடையவும் எ - று.

முனிவரும் பண்டிதரும் போந்து சடங்கினை இயற்றவு மென்க. நகர் முழுதும் விழாவாற் பொலிந்த தென்பார் 'மூதூர் அருங்கடி வெள்ளத்தாழ' என்றார்; ஊரிலுள்ளார்க்கு ஆகுபெயருமாம். எண்ணிய - இன்ன சடங்கு இன்ன திங்களிற் செயற்பாலதென எண்ணப் பட்ட; செய்யிய வென்னும் எச்சமாக்கி, மதிக்கும்படி யென்றலுமாம். தலைப்பாடு - தலைப்படுதல்: ஒரு சொல். (௧௦)

மாசறத் துறந்தோ ருள்ள மானவான் களங்க நீங்க
ஈசர்தங் கிழமை யென்னு மிந்துவா திரைநாள் செய்த
பூசையின் பயன்றா னெய்த வெரிபசும் பொற்கோள் வந்து
தேசோடு கேந்தி ரத்திற் சிறந்தநல் லோரை வாய்ப்ப.

(இ - ள்.) மாசு அறத் துறந்தோர் உள்ளம் மான - குற்றமறத் துறந்த பெரியாரின் மனத்தையொப்ப, வான் களங்கம் நீங்க-ஆகாயம் களங்கமின்றி விளங்கவும், ஈசர் தம் கிழமை என்னும் இந்து ஆதிரை நாள் - சிவபெருமானுக்கு உரியதெனப்படும் திங்கட் கிழமையும் திரு ஆதிரைநாளும், செய்த பூசையின் பயன் எய்த - செய்த வழிபாட்டின் பயனைப் பொருந்தவும், எரி பசும் பொன் கோள் வந்து - விளங்கா நின்ற பசிய பொன்னாகிய கோள்வந்து, கேந்திரத்தில் தேசொடு சிறந்த - கேந்திரத்தில் ஒளியுடன் விளங்கப்பெற்ற, நல் ஓரை வாய்ப்ப - நல்ல முழுத்தம் வாய்க்கவும் எ - று.

இந்து-திங்கள். சிவபிரானுக் குரிய கிழமையெனப்படும் திங்கட் கிழமை யென விரிக்க; சோமன் என்பதற்குச் சிவனென்னும் பொருளுண்மையும் காண்க. ஈசர்க்குரிய நாதல் ஆதிரைக்கும் கொள்க;

"மன்னிய நாண்மீன் மதிகனலி யென்றிவற்றை
முன்னம் படைத்த முதல்வனைப்—பின்னரும்
ஆதிரையா னாதிரையா னென்றென் றயர்வுறுமீ
ரூர்திரைநீர் வேலி யுலகு"

என்பது முத்தொள்ளாயிரம். பொன் - வியாழன்; பொன் என்பதற்கேற்ப அடைகள் கொடுத்தார். பண்டைத் தமிழ் நூலோர் கோட்களி

ளியல்பை நன்கறிந்து செந்நிற முடையதனைச் சேய் என்றும் செவ்வாய் என்றும், பொன்னிற முடையதனைப் பொன் என்றும், வெண்ணிற முடையதனை வெள்ளி என்றும், கருநிற முடைய சனியைக் கரியன் என்றும் பெயரிட்டு வழங்குவா ராயினரென்க. வியாழனாகிய நற்கோள் கேந்திர மேறியிருப்பது நன்மை பயப்பதாமெனல் குறி நூற் கொள்கை; கேந்திரம் - இலக்கினத்திற்கு ஒன்று நான்கு ஏழு பத்து ஆம் இராசிகள். சனி முதலிய தீக்கோளின் இயைபின்றியென் பார் 'தேசொடு சிறந்த' என்றார். ஓரை யென்றது ஈண்டு இலக்கினத்தை. தம்: சாரியை. தான்: அசை. (கக)

முந்தைநான் மறைக டாமே முழங்கமந் தார மாரி
சிந்தநாண் மலர்பூத் தாடு மின்னெனத் திசைக டோறும்
அந்தர மகளி ராடத் துந்துபி யைந்து மார்ப்ப
விந்தையுந் திருவும் வெள்ளைக் கிழத்தியும் வீறு வாய்ப்ப.

(இ - ள்.) முந்தைநால் மறைகள் தாமே முழங்க - முதன்மை பெற்ற நான்கு வேதங்களும் தாமே ஒலிக்கவும், மந்தாரம் மாரிசிந்த-(தேவர்கள்) மந்தார மலர்மழையைப் பொழியவும், நாள்மலர் பூத்து ஆடும் மின் என - புதிய மலர்களைப் பூத்து ஆடுகின்ற மின்னலைப் போல, திசைகள் தோறும்-திக்குகள் தோறும், அந்தர மகளிர் ஆட-தேவமகளிர் ஆடவும், துந்துபி ஐந்தும் ஆர்ப்ப - ஐவகை இயங்களும் ஒலிக்கவும், விந்தையும் திருவும் வெள்ளைக் கிழத்தியும் வீறு வாய்ப்ப-வீர மகளும் திருமகளும் கலைமகளும் இறுமாக்கவும் எ - று.

மறைகள் முழங்கலும், விந்தை முதலாயினார் வீறெய்துதலும் தத்தமக்கு உளவாகும் ஆக்கங் கருதி யென்க. மலர் பூத்தாடும் மின்னென என்றது இல்பொருளுவமை. வீறு-பிறிதொன்றற்கில்லாத சிறப்பு என்பர் நச்சினார்க்கினியர். (கஉ)

அந்தணர் மகிழ்ச்சி தூங்க வடுத்தவர் வளர்க்கு முன்னே
மந்திர வேள்விச் செந்தீ வலஞ்சுழித் தெழுந்தார்த் தாட
சிந்துர நுதன்மா வெட்டுஞ் சேடனும் பொறை யெய்ப்பாற
இந்திரன் மேருப் புத்தேள் புனலிறைக் கிடத்தோ ளாட.

(இ - ள்.) அந்தணர் மகிழ்ச்சி தூங்க - மறையவர்கள் களிகூரவும், அவர் அடுத்து வளர்க்கு முன்னே - அவர்கள் வந்து ஆகுதி செய்து வளர்ப்பதற்கு முன்னரே, மந்திர வேள்விச் செந்தீ வலம் சுழித்து எழுந்து ஆர்த்து ஆட - மந்திரப்படி செய்யும் வேள்விக்குண்டத்தின்கண் சிவந்த தீயானது வலமாகச் சுழித்து ஓங்கி ஒலித்தாடவும், சிந்துரம் நுதல் மா மட்டும் சேடனும் பொறை எய்ப்பு ஆற - சிந்துரம் அணிந்த நெற்றியையுடைய திசை யானைகள் எட்டும் அனந்தனும் சுமத்தலினின்று இளைப்பாறவும், இந்திரன் மேருப் புத்தேள் புனல் இறைக்கு இடத்தோள் ஆட - இந்திரனுக்கும் மேருமலைக்கும் வருணனுக்கும் இடத்தோள் துடிக்கவும் எ - று.

மகிழ்ச்சி இயல்பாலுண்டாயது. மாவெட்டும் சேடனும் பொறுக்கும் பாரத்தை இக் குமாரன் பொறுத்தலின் அவன் இளைப்பாற

வென்றார். பொறுத்தலினீங்கி இளைப்பாற வென்க; புரத்தலினருமை நோக்கி அதனைப் பொறுத்தல் என்ப. ஆடவர்க்கு இடத்தோள் ஆடுதல் தீங்கின் குறி; இந்திரன் முடிமேல் வளை யெறிந்தும், மேருவைச் செண்டாலடித்தும், கடல் சுவற வேல் விடுத்தும் அன்னார் செருக்கை யொழித்தலின், அவர்க்கு இடத்தோள் ஆட என்றார். மேரு முதலிய வற்றைத் தெய்வமாக்கியுரைத்தலும் மரபு;

> "அலைகடல் மேருநல்ல அவைநல்ல நல்ல
> அடியாரவர்க்கு மிகவே"

என்பதும் இதனை வலியுறுத்தும். (கங)

ஆலத்தை யமுத மாக்கு மண்ணலு மணக்குங் கோண்ட
கோலத்துக் கேற்பக் காலைக் குழந்தை வெங்கதிர்போ லற்றைக்
காலத்தி லுதித்த சேய்போற் கண்மழை பிலிற்று நிம்ப
மாலைத்தோட் செழியன் செல்வ மகள்வயிற் றோன்றி னானே.

(இ - ள்.) ஆலத்தை அமுதம் ஆக்கும் அண்ணலும் அணங்கும் - நஞ்சினை அமுதாக்கிய இறைவனும் பிராட்டியும், கொண்ட கோலத்துக்கு ஏற்ப - எடுத்த திருக்கோலத்திற்கு இசைய, காலைக் குழந்தை வெங்கதிர்போல் - காலையிலுதித்த விருப்பஞ் செய்யும் இள ஞாயிற்றைப் போலவும், அற்றைக் காலத்தில் உதித்த சேய்போல் - அந்நாளில் அவதரித்த கந்தவேள் போலவும், கள்மழை பிலிற்றும் நிம்ப மாலை - தேனாகிய மழையைப் பொழியும் வேப்ப மலர் மாலையை அணிந்த, தோள் - தோளையுடைய, செழியன் - மலயத்துவச பாண்டியனது, செல்வமகள் வயின் - செல்வப் புதல்வியாகிய தடாதகைப் பிராட்டியாரிடத்தே, தோன்றினான் - (உக்கிர குமாரன்) அவதரித் தருளினான் எ - று.

நஞ்சின் றன்மை யொழிந்து அமிழ்தஞ் செய்யும் காரியத்தைச் செய்தலின் 'அமுத மாக்கும்' என்றார்; உணவாக்கிய என்னலுமாம்.

"ஆலத்தி னாலமிர் தாக்கிய கோன்றில்லை யம்பலம்போல்"

என்னும் திருச்சிற்றம்பலக் கோவையாரின் அடியும், அதற்குப் பேராசிரியர் எழுதிய உரைக் குறிப்பும் இங்கு நோக்கற் பாலன. வெம்மை - விருப்பம். கதிர், ஞாயிற்றுக்கு ஆகுபெயர். அற்றை யென்பது காலத்தின் முன்மை சுட்டுவது. சேயின் அமிச மென்பார் 'சேய்போல்' என்றார். எழுவாய் வருவிக்க. வேல் எட்டாஞ் செய்யுள் முதலாகவந்த நல்க, இயற்ற, எய்த, நீங்க, எய்த, வாய்ப்ப, முழங்க, சிந்த. ஆட, ஆர்ப்ப, வாய்ப்ப, தூங்க, ஆற, ஆட என்னும் செயவெனெச்சங்கள் இப்பாட்டில் தோன்றினான் என்பது கொண்டு முடிந்தன; இவ்வெச்சங்களின் காலங்களை ஓர்ந்துணர்க. ஏ:அசை. (கச)

எடுத்தனண் மோந்து புல்லி
யேந்தினள் காந்தன் கையிற்
கொடுத்தனள் வாங்கி வீங்கு
கொங்கையின் றிழிபால் வெள்ளம்

விடுத்தனள் குமுதப் போதில்
வெண்ணிலா வெள்ளம் போல்வாய்
மடுத்தன ளருத்தி னுடன்
மைந்தனை யெம்பி ராட்டி.

(இ - ள்.) எம்பிராட்டி-எங்கள் பிராட்டியார், தன் மைந்தனை—அங்ஙனம் தோன்றிய தம் புதல்வனை, எடுத்தனள் மோந்து புல்லி ஏந்தினள் - எடுத்து உச்சி மோந்து தழுவி ஏந்தி, காந்தன் கையில் கொடுத்தனள் வாங்கி - தம் நாயகன் கையிற் கொடுத்து மீள வாங்கி, வீங்கு கொங்கை நின்று இழிபால் வெள்ளம்-பருத்த கொங்கைகளினின்றும் சொரியும் பால் வெள்ளத்தை, விடுத்தனள் - சொரிந்து, குமுதப் போதில் வெள் நிலா வெள்ளம்போல்-செவ்வாம்பல் மலரில் சந்திரன் தனது வெள்ளிய நிலவின் பெருக்கை (மடுத்தல்) போல, வாய் மடுத்தனள் அருத்தினுள்-திருவாயிற் புகட்டி உண்பித்தார் எ-று.

குழவியைக் கணவன் கையிற் கொடுத்தல் மரபு. பால் வெள்ளத்தை வள்ளத்தில் விடுத்தென்க;

"வரையுரங் கிழித்த வேளும் வாய்வைத் தருந்தாத விளமுலை"

எனப் பிராட்டி திருவவதாரத்திற் கூறியிருத்தல் காண்க.

சந்திரன் நிலா வெள்ளத்தை மடுத்தல்போல எனவிரிக்க; இவ்வுவமை மிக்க சிறப்புடைத்து. எடுத்தனள், ஏந்தினள், கொடுத்தனள், விடுத்தனள், மடுத்தனள் என்பன முற்றெச்சங்கள். (கரு)

சலத்தலைக் கிடக்கைப் புத்தே டருநிழல் வாழ்க்கைப் புத்தேள்
அலர்த்தலை யிருக்கைப் புத்தே ளாதிப்புத் தேளிர் வேதப்
புலத்தலைக் கேள்வி சான்ற புண்ணிய முனிவ ரேனோர்
குலத்தலை மகளி ரோடுங் கோமகன் கோயில் புக்கார்.

(இ - ள்.) சலத்தலைக் கிடக்கைப் புத்தேள்-திருப்பாற்கடலின் கண் அறிதுயில் கொள்ளும் திருமாலும், தரு நிழல் வாழ்க்கைப் புத்தேள் - கற்பகத் தருவின் நிழலில் வாழும் இந்திரனும், அலர்த்தலை இருக்கைப் புத்தேள் - தாமரை மலரின்கண் இருக்கும் பிரமனும், ஆதி - முதலாகிய, புத்தேளிர் - தேவர்களும், வேதப் புலத்தலைக் கேள்வி சான்ற புண்ணிய முனிவர் - வேதத்தின்கண் மிக்க கேள்வியால் மாட்சிமைப்பட்ட முனிவர்களும், ஏனோர்-மற்றவர்களும், குலத்தலை மகளிரோடும் - தலைமைபெற்ற குலமகளிரோடும், கோமகன் கோயில் புக்கார்-சுந்தரபாண்டியரது கோயிலுட் புகுந்தார்கள் எ-று.

கிடக்கை - கிடத்தலையுடைய. வேதப்புலம் - வேதத்தினிடம் தலைக் கேள்வி - மிக்க கேள்வி. (கசா)

குடபுலத் தரசும் பொன்னிக் குளிர்புனற் கோழி வேந்தும்
வடபுலத் தரசர் யாருங் குறுநில வாழ்க்கைச் செல்வத்
தடல்கெழு தொண்டைத் தண்டா ரரசோடு மனிகஞ் சூழக்
கடல்கணற் றிசையும் பொங்கி வருவபோற் கலிப்ப வந்தார்.

(இ - ள்.) குட புலத்து அரசும் - மேற்புலத் தரசனாகிய சேரனும், பொன்னிக் குளிர் புனல் கோழி வேந்தும்-காவிரியின் தண்ணிய நீர் சூழ்ந்த உறையூரிலுள்ள சோழ மன்னனும், வடபுலத்து அரசர் யாரும்-வடக்கின்கண் உள்ள அரசரனைவரும், குறுநில வாழ்க்கைச் செல்வத்து - குறுநில வேந்தரின் வாழ்க்கைச் செல்வத்தினையுடைய, அடல்கெழு - வலிமை பொருந்திய, தண் தார் - தண்ணிய மாலையையணிந்த, தொண்டை அரசொடும்-தொண்டை மன்னனோடும், அனிகம் சூழ-சேனைகள் சூழ, கடல்கள் நால் திசையும் பொங்கி வருவபோல் -கடல்கள் நான்கு திக்குகளிலும் புடை பெயர்ந்து வருவனபோல, கலிப்ப வந்தார்-ஆரவார முண்டாக வந்தார்கள் எ - று.

குளிர் புனலையுடைய பொன்னியென மாற்றலுமாம். ஒருகோழி யானையைப் போர்தொலைத்த விடத்துக் கண்ட நகர மாதலின் உறையூர்க்குக் கோழி யென்பது ஒரு பெயர்;

"முறஞ்செவி வாரண முன்சம முருக்கிய
புறஞ்சிறை வாரணம் புக்கனர்"

என்று சிலப்பதிகாரம் கூறுவதுங் காண்க. வடபுலத்தரசர் - வடுகவரசர் முதலாயினர். தொண்டை அரசு - தொண்டை நாடாளும் அரசன்; தொண்டைமான். தமிழகத்தில் முடியுடை வேந்தர் மூவருமொழிந்த ஏனை யரசரெல்லாம் குறுநில மன்னரெனப் படுவர். படைப்பெருமையாலும் ஆரவாரத்தாலும் கடல்கள் பொங்கி வருவபோல் என்றார். வருவ என்பது தொழிற் பெயராய் நின்றது. (கஎ)

மன்னனைத் தேவி தன்னை முறையினால் வழுத்தி வாழ்த்தி
நன்னர்கோ ளாகி யோகை நவின்றுவெண் மழுவா னீத்த
தென்னவர் பெருமான் றேவி திருமுகக் கருணை பெற்றுப்
பொன்னடி பணிந்து தம்மூர்ப் போகுவா ரினைய சொல்வார்.

(இ - ள்.) மன்னனைத் தேவி தன்னை - சுந்தர பாண்டியரையும் தடாதகைப் பிராட்டியாரையும், முறையினால் வழுத்தி வாழ்த்தி-முறைப்படி துதித்து வாழ்த்தி, நன்னர்கோள் ஆகி - (அவர்களால்) நன்கு ஏற்றுக் கொள்ளப்பட்டவர்களாய், ஓகை நவின்று - மகிழ்ச்சி மொழிகளைப் பேசி, வெண் மழுமான் நீத்த தென்னவர் பெருமான் தேவி திருமுகக் கருணைபெற்று - வெள்ளிய மழுவையும் மானையும் நீத்துவந்த அப் பாண்டியர் தலைவனும் பிராட்டியாருமாகிய இவர்களின் திருமுகக் கருணையைப்பெற்று, பொன் அடி பணிந்து தம்மூர் போகுவார் - (அவர்களுடைய) பொன்போலுந் திருவடிகளை வணங்கித் தத்தம் இடங்களுக்குச் செல்கின்றவர்கள், இனைய சொல்வார் - இத்தன்மையவற்றைக் கூறலுற்றார்கள் எ - று.

நன்னர் - நன்கு: பண்புப் பெயர். கோள் என்பது ஆகு பெயராய்க் கொள்ளப்பட்டவர் என்னும் பொருளில் வந்தது. ஓகை - உவகை; மொழிகளுக்காயிற்று. நவிலுதல் - வினவியும் விடுத்தும் அளவளாவுதல், பெருமான் கருணையும் தேவி கருணையும் எனக் கூட்டுக. ஊர் புகுவார்: ஏழாம் வேற்றுமையில் இயல்பாயிற்று; "வாய்புகுவதனினும்" என்புழிப்போல. புகுவார்: வினைப் பெயர். ()

வழுதியர் பெருமான் றன்பாற் கந்தனே வந்தா னென்பார்
பழுதறு கற்பி ளுடன் பாக்கிய மிதுவே யென்பார்
அழகினுன் மதனும் பெண்மை யவாவுறு மிவன்கோ லாணை
எழுகட லுலகோ வைய மேழையுங் காக்கு மேன்பார்.

(இ-ள்.) வழுதியர் பெருமான் தன்பால்-இப்பாண்டியர் பெருமானிடத்து, கந்தனே வந்தான் என்பார்-முருகனே வந்து தோன்றினன் என்று (சிலர்) கூறுவர்; பழுது அறு கற்பினள் தன் பாக்கியம் இதுவே என்பார்-குற்றமற்ற கற்பினையுடைய தடாதகைப் பிராட்டியாரின் புண்ணியம் இம்மகப்பேறே என்று (சிலர்) கூறுவர்; அழகினல் மதனும் பெண்மை அவாவுறும் இவன் கோல் ஆணை-கட்டழகினல் மன்மதனும் பெண்தன்மையை விரும்பற்கொத்த இக்குமாரனது செங்கோலின் ஆணையானது, எழுகடல் உலகோ-ஏழு கடலாற் சூழப்பட்ட இந்நில வுலகம் ஒன்றனை மட்டுமா காப்பது. வையம், ஏழையும் காக்கும் என்பார் - ஏழுலகங்களையும் பாதுகாக்குமென்று (சிலர் கூறுவர்) எ-று.

கந்தன்-ஆறு திருவுருவமும் ஒன்ருகச் சேர்க்கப் பட்டவன். பாக்கியமே இது என ஏகாரத்தைப் பிரித்துக் கூட்டலுமாம். மன்மதனும் பெண்ணுகி நுகர்தற்கு விரும்பும் அழகு ;

"அனங்கனுக் கவலஞ் செய்யு மண்ணல்"

எனச் சிந்தாமணியும்,

"ஆடவர் பெண்மையை யவாவுந் தோளினுய்"

எனக் கம்பராமாயணமும் கூறுவன இங்கு நோக்கற்பாலன. உலகென்பது நிலமென்னும் சிறப்புப் பொருளிலும், வைய மென்பது உலகமென்னும் பொதுப்பொருளிலும் வந்தன. (கக)

மனிதர்வான் றவமோ தேன்பார் வைகுவோர் தவமோ வானப்
புனிதர்வான் றவமோ வேள்விப் பூசுரர் தவமோ கேள்வி
முனிவர்வான் றவமோ வீறு முதலிலா முதல்வ னுள்ளக்
கனிதரு கருணை போலிக்காதலன் ருேற்ற மேன்பார்.

(இ-ள்.) ஈறு முதல் இலா முதல்வன்-முடிவும் முதலுமில்லாத இறைவனது, உள்ளம் கனிதரு கருணைபோல்-திருவுள்ளத்தின் கனிந்த கருணைபோலும், இ காதலன் தோற்றம்-இப்புதல்வனது அவதாரத்திற்குக் காரணம், மனிதர் வான் தவமோ-மக்களின் உயர்ந்த தவமோ, தென்பார் வைகுவோர் தவமோ-பாண்டி நாட்டிலுள்ளோர் செய்த தவமோ, வானப் புனிதர் வான் தவமோ-வானுலகத்துள்ள தூய தேவர்களின் மேலாய தவமோ, வேள்விப் பூசுரர் தவமோ-வேள்வி வேட்கும் மறையோரின் தவமோ, கேள்வி முனிவர் வான் தவமோ-கேள்வியில் வல்ல முனிவர்களின் சிறந்த தவமோ, என்பார் - என்று (பலர்) கூறுவார் எ - று.

நிலவுலகிலுள்ள எல்லா மக்களும் புரிந்த தவமோ என்பார் 'மனிதர் வான் றவமோ' என்ருர். மனிதர் தவம் முதலாகக் கூறிய இவற்றுள்

யாதோ என்க; இவை யெல்லாமும் காரண மாகல் வேண்டுமென்பது குறிப்பு. உள்ளக் கருணையென இயையும். தோற்றம் என்பது அதன் காரணத்திற்காயிற்று. போல் என்பது போலும் எனப் பெயரெச்சப் பொருட்டு. (௨௦)

தருமமா தவத்தின் பேறே அருத்தமா தவத்தின் பேறே
பெருமைசால் காம நோற்ற பெருந்தவப் பேறே வெய்தற்
கருமையாம் வீடு நோற்ற வருந்தவப் பேறே விந்தத்
திருமக னென்று தம்மில் வினாய்மகிழ் சிறப்பச் சென்றார்.

(இ - ள்.) இந்த திருமகன் - இச்செல்வப் புதல்வனின் (தோற்றம்), தருமம் மாதவத்தின் பேறே - அறத்தினது பெரிய தவத்தின் பயனோ, அருத்தம் மாதவத்தின் பேறே - பொருளினது பெருந் தவத்தின் பயனோ, பெருமை சால் காமம் நோற்ற பெருந்தவப் பேறே - பெருமை மிக்க இன்பமானது புரிந்த பெரிய தவத்தின் பயனோ, எய்தற்கு அருமையாம் வீடு நோற்ற அருந்தவப் பேறே - அடைதற்கு அரிய வீடானது இயற்றிய அரிய தவத்தின் பயனோ, என்று தம்மில் வினாய் - என்று தம்முள் (ஒருவருக்கொருவர்) வினாவிக்கொண்டு, மகிழ் சிறப்ப சென்றார் - மகிழ்ச்சி மிகச் சென்றார்கள் எ - று.

இத் திருமகன் உறுதிப் பயன்களாகிய அறம் முதலிய நான்கனையும் நிலவச் செய்வானென்பது கருதி அவற்றின் தவப் பேறே என்றாரென்க. பெருமை சால் காமம் - ஒத்த அன்புடைய தலைவனும் தலைவியும் ஈருடம்பிற் கோருயிரனையராய்க் கூடி நுகரும் இன்பம். மேற் செய்யுளில் உரைத்தாங்கும் உரைத்துக் கொள்க. இவ்விரு செய்யுளிலும் ஓகாரங்கள் வினாப் பொருளன. வினாவி யென்பது வினாய் எனத் திரிந்தது. (௨௧)

அவ்வவர் மனைக டோறு மங்கல வணிக ளாகக்
கௌவைமங் கலங்க ளார்ப்பக்* கடிநக ரெங்கும் பொங்க
நெய்விழா வெடுப்பக் கேள்வி நிரம்பிய மறையோர்க் கீந்த
தெய்வமா தான நீத்தந் திரைக்கடன் மடுத்த தம்மா.

(இ - ள்.) அவ்வவர் மனைகள் தோறும் - அவரவர்கள் இல்லங்கள் தோறும், மங்கல அணிகளாக - மங்கல விழாவாகக் கொள்ளுதலால், கௌவை மங்கலங்கள் ஆர்ப்ப - (யாவர் மனையிலும்) ஒலியையுடைய மங்கல வாத்தியங்கள் முழங்கவும், கடி நகர் எங்கும் - காவலையுடைய மதுரைப்பதி முற்றும், பொங்க நெய் விழா எடுப்ப - சிறக்க எண்ணெயாட்டு விழா எடுக்கவும், கேள்வி நிரம்பிய மறையோர்க்கு ஈந்த - கேள்வியில் வல்ல அந்தணர்களுக்குக் கொடுத்த, தெய்வ மா தான நீத்தம் - தெய்வத்தன்மை பொருந்திய பெரிய தான நீரின் பெருக்கு, திரைக்கடல் மடுத்தது - அலைகளையுடைய கடலிற் புகுந்தது எ - று.

மங்கல வணிகளாகக் கொள்ளப் படுதலால் என்க. ஆர்ப்பு எனப் பாடமோதி, ஆர்ப்புப் பொங்க என முடிப்பாருமுளர். நெய்விழா-

(பா - ம்.) * மங்கலங்க ளார்ப்பு.

கருவுயிர்த்த பத்தாம்நாளிற் செய்யப்படும் எண்ணெயாட்டுவிழா; இதனை 'நெய்யணி மயக்கம்' என்பர் தொல்காப்பியர்;

"புதல்வற் பயந்த புனிறுசேர் பொழுதில்
நெய்யணி மயக்கம் புரிந்தோ ணோக்கி"

என்பது காண்க; 'கோமறுகு களிதூங்கச் சுண்ணமொடு மெண்ணெய் விழாக் குளிப்ப நல்கி' எனப் பிராட்டியார் திருவவதாரத்திற் கூறுத லும் நோக்குக. ஆர்ப்ப, எடுப்ப என்னும் செயவெனெச்சங்கள் ஈந்த என்னும் பெயரெச்சவினை கொண்டன. தானம் - ஈண்டுத் தானஞ் செய்தற்கு வார்த்தநீர். அம்மா: வியப்பிடைச் சொல். (உஉ)

சுண்ணமும் பொரியுந் தூவெள் ளரிசியுந் தூர்வைக் காடுந்
தண்ணறுஞ் சிவிறி வீசு தண்பனி நீருஞ் சாந்தும்
எண்ணெயு நானச் சேறும் பசையற வெடுத்து வாரிக்
கண்ணக னகர மெங்குங் கழுவின தான வெள்ளம்.

(இ - ள்.) தான வெள்ளம் - அந்தத் தான நீர் வெள்ளமானது, சுண்ணமும் - (மகிழ்வாற் சிந்திய) பொற் சுண்ணத்தையும், பொரியும்-நெற் பொரியையும், தூவெள் அரிசியும்-தூய வெள்ளிய அரிசியையும், தூர்வைக் காடும் - அறுகின் குப்பையையும், சிவிறி வீசும் தண் நறும் பனி நீரும் - துருத்தியால் வீசப்பெற்ற குளிர்ந்த மணமுள்ள பனிநீரையும், தண் சாந்தும் - தட்பமுள்ள சந்தனத்தை யும், எண்ணெயும் - எண்ணெயையும், நானச்சேறும் - கத்தூரிக் குழம்பையும், பசை அற வாரி எடுத்து - பசை இல்லையாக வாரி யெடுத்து, கண் அகல் நகரம் எங்கும் கழுவினது-இடமகன்ற நகரம் முழுதையும் தூய்மை செய்தது எ - று.

தூர்வை - அறுகம்புல். சிவிறி - துருத்தி. கழுவினது என்னும் துவ்வீறு தொக்கது. (உங)

செம்பொன்செய் துருத்தி தூம்பு செய்குழல் வட்ட மாக
அம்பொன்செய் சிவிறி வெண்பொ னல்டைகொண் டாரந் தூங்கும்
வம்பஞ்சு முலையி னாரு மைந்தரு மாறி யாட
அம்பஞ்சு மாறி மாறி யனங்கனு மாடல் செய்வான்.

(இ - ள்.) ஆரம் தூங்கும் வம்பு அஞ்சும் முலையினாரும் - முத் தாரம் தொங்கி யசையும் கச்சு அஞ்சும் தனங்களையுடைய மகளிரும், மைந்தரும் - ஆடவரும், செம்பொன் செய் துருத்தி - சிவந்த பொன்னாற் செய்த துருத்தியையும், தூம்பு செய்குழல் - தொளை செய்த குழலையும், வட்டம் ஆக அம் பொன் செய் சிவிறி-வட்டமாக அழகிய பொன்னாற் செய்த சிவிறியையும், வெண் பொன் அண்டை கொண்டு - வெள்ளியாலாகிய அண்டையையுங் கொண்டு, மாறி ஆட - ஒருவர்மே லொருவர் மாறி மாறி வீச, அனங்கனும - மத வேளும், அம்பு அஞ்சும் மாறி மாறி ஆடல் செய்வான்-ஐந்து பாணங் களையும் (அவர்கள் மேல்) மாறி மாறி விடுவானாயினான் எ - று.

துருத்தி, குழல், சிவிறி, அண்டை யென்பன நீர் வீசுங் கருவி விசேடங்கள், ஆரந் தூங்கும் முலை, அஞ்சும் முலை யெனத் தனித்தனி

கூட்டுக கிழ்த்துவிடுமென வம்பு அஞ்சு மென்க. ஐந்து அஞ்சு எனப் போலியாயிற்று. வெவ்வேறம்புகளை விடுத்தா னென்பார் 'மாறி மாறி' என்றார்; மகளிர் மேலும் மைந்தர்மேலும் மாறி விடுத்தான் என்னலுமாம். ஆடல் செய்தல் - போர் புரிதல். (உச)

இன்னணங் களிப்ப மூதூ ரிந்துவா திரைநன் ஞளிற்
பொன்னவன் கேந்தி ரித்த புனிதலக் கினத்திற் போந்த
தென்னவர் பெருமான் சேய்க்குச் சாதகச் செய்தி யாதி
மன்னவர்க் கியன்ற வேத மரபினல் வயங்க வாற்றி.

(இ-ள்.) மூது ஊர் இன்னணம் களிப்ப - பழமையாகிய மதுரைப் பதி இவ்வாறு மகிழ, இந்து ஆதிரை நல் நாளில் - திருவாதிரையோடு கூடிய திங்கட்கிழமையாகிய நல்ல நாளில், பொன்னவன் கேந்திரித்த புனித லக்கினத்தில் போந்த - வியாழ கேந்திரித்த தூய லக்கினத்தில் அவதரித்த, தென்னவர் பெருமான் சேய்க்கு - செழியர் பெருமானாகிய சுந்தர பாண்டியரின் திருக் குமாரருக்கு, சாதகச்செய்தி ஆதி-சாதகன்ம முதலியவற்றை, மன்னவர்க்கு இயன்ற வேதமரபினல் வயங்க ஆற்றி - அரசர்களுக்குப் பொருந்திய வேத நெறியினல் விளங்கச்செய்து எ - று.

'இந்து வாதிரை நன்னளிற் பொன்னவன் கேந்திரித்த புனிதலக்கினம்' முன்னரே பெறப்படினும், ஈண்டுச் சாதகச்செய்தி ஆற்றி யென்பதற்கேற்ப அநுவதித்தார். ஆதி வேதமென இயைத்தலுமாம். (உரு)

கரியவெண் டிரைநீர்ச் செல்வன் கல்லிற கரிந்த வென்றித்
தெரியல னுலகந் தாங்கு தெய்வத வரைக்கோ னாதித்
தரியலர் வீரஞ் சிந்தத் தருக்கழிந் தச்சந் தோற்றற்
குரியகா ரணத்தா னும முக்கிர வரும னென்பார்.*

(இ-ள்.) கரிய வெள் திரை நீர்ச் செல்வன் - பெரிய வெள்ளிய அலைகளையுடைய கடற் செல்வனாகிய வருணனும், கல் இறகு அரிந்த வென்றித் தெரியலன் - மலையின் சிறைகளை அறுத்த வெற்றிமாலையைத் தரித்த இந்திரனும், உலகம் தாங்கு தெய்வத வரைக்கோன் - உலகினைத் தாங்குகின்ற தெய்வத்தன்மை பொருந்திய மேருவென்னும் மலையரசனும், ஆதி தரியலர் - முதலிய பகைவர்கள், வீரம் சிந்த தருக்கு அழிந்து அச்சம் தோற்றற்கு உரிய காரணத்தால் - தன்னைக் கண்ட பொழுதே (தங்கள்) வீரங்கெடச் செருக்கழிந்து அச்சந் தோன்றச் செய்தற்குரிய காரணத்தினல், நாமம் உக்கிர வருமன் என்பார் - பெயர் உக்கிர வருமன் என்றார்கள் எ - று.

கருமை-பெருமை; கரிய செல்வன் என இயைத்தலுமாம். அரிந்த வென்னும் பெயரெச்சம் தெரியலன் என்பதன் விகுதியைக் கொண்டது. மலைகள் உலகினைத் தாங்குதலைப் பூதரம் என்னும் பெயரானு மறிக. அழிந்து என்னும் வினையெச்சம் தோன்றுதலாகிய தன் வினை

---

(பா - ம்.) *சிந்தத் தக்க காரணமே யன்றி, உரியதன் பெயர்க்கு மேற்பவுக் கிரவரும னென்றான் (ம. இராம.)

கொண்டு முடியும்; அழிய வெனத் திரித்தலுமாம். மேல் 'இந்திரன் மேருப்புத்தேள் புனலிறைக் கிடத்தோ ளாட' என்றதன் உரையை நோக்குக. வருமன் ஆகும் என விரிக்க. (உசு)

நாலாகு மதியிற் சந்தி மிதிப்பது நடாத்தி யாறும்
பாலாகு மதியி லன்ன மங்கலம் பயிற்றி யாண்டின்
மேலாகு மதியிற் கேச வினைமுடித் தைந்தா மாண்டில்
நூலாறு தெரிந்து பூண நூற்*கடி முடித்துப் பின்னர்.

(இ - ள்.) நால் ஆகும் மதியில் சந்தி மிதிப்பது நடாத்தி - நான்காந் திங்களில் சந்தி மிதித்தலாகிய சடங்கினை முடித்து, ஆறும் பால் ஆகும் மதியில் - ஆறும் பகுதியாகிய திங்களில், அன்ன மங்கலம் பயிற்றி - சோறு ஊட்டலாகிய விழாவை நடாத்தி, ஆண்டின் மேல் ஆகும் மதியில் - ஓர் ஆண்டின் மேலாகிய திங்களில், கேசவினை முடித்து - மயிர் வினையை முடித்து, ஐந்தாம் ஆண்டில் - ஐந்தாவது ஆண்டில், நூல் ஆறு தெரிந்து பூண நூல் கடி முடித்து - மறை நெறி யுணர்ந்து (அவ்வழியே) பூண நூல் விழாவை முடித்து, பின்னர் - பின்பு எ - று.

ஆண்டின் மேலாகு மதி - பதின் மூன்றாந் திங்கள். சந்தி மிதித்தல், அன்ன மங்கலம், கேச வினை, பூண நூற் கடி இவற்றை முறையே பிரவேசம், அன்னப்பிரசனம், சௌளம், உபநயனம் என வடமொழியிற் கூறுவர். (உஎ)

பதநிரை பாழி சாகை யாரணம் பணைத்த வேதம்
முதனிரைக் கலையும் வென்றி மூரிவிற் கலையும் வாளும்
மதநிரை யொழுகு மையன் மாநிரை வையம் பாய்மா
விதநிரை யேற்ற மற்று முணர்த்தினன் வியாழப் புத்தேள்.

(இ - ள்.) பதம் நிரை பாழி சாகை ஆரணம் பணைத்த - பத வொழுங்கும் பாழியும் சாகையும் ஆரணமும் நிரம்பிய, வேதம் முதல் நிரைகலையும் - மறைகள் முதலாக வரிசைப்பட்ட கலைகளையும், வென்றி மூரிவில் கலையும்-வெற்றியைத் தரும் வலிய விற்றொழிலுக் குரிய கலையையும், வாளும்-வாட்பயிற்சியையும், மதம் நிரை ஒழுகும் மையல்மா ஏற்றம் - தொடர்ந்து மதநீர் ஒழுகும் மயக்கத்தையுடைய யானையின் ஏற்றத்தையும், நிரைவையம் ஏற்றம் - வரிசைப்பட்ட தேரின் ஏற்றத்தையும், விதம் நிரை பாய்மா ஏற்றம் - பலவகைப் பட்ட வரிசையாகிய குதிரையின் ஏற்றத்தையும், மற்றும் - பிறவற்றையும், வியாழப் புத்தேள் உணர்த்தினன்-வியாழ பகவான் உணர்த்தினன் எ - று.

பாழி - பதங்களை உச்சரிக்கும் முறையாகிய கனமும் சடையும். சாகை - கிளை. ஆரணம்-வேதத்தின் பகுதியாகிய பிராம்மணத்தின் ஒரு பகுதி; இச் சொல் ஆரண்யகம் என்பதன் திரிபென்றும், இப் பகுதி வனத்திற் சொல்லப் பட்டமையால் இப்பெயர் பெற்றதென்றும் கூறுப. பணைத்த - மிக்க. விற் கலை - வில் வேதம். வாள் ஏனைய படைகட்கும் உபலக்கணம். ஏற்ற மென்பதனை மையன்மா, வையம் என்பவற்றோடும் ஒட்டுக. (உஅ)

(பா - ம்.) * பூணனூல்.

குருமுகத் தறிய வேண்டு மென்பதோர் கோள்கை யாலே
ஒருமுறை கேட்டாங் கெண்ணெண் கலைகளு மொருங்கு தேறி
அரனல தொருவ ராலுந் தேற்றுவ தருமை யாலப்
பரனிடைத் தெளிந்தான் பாசு பதாத்திரப் படையு மன்னே.

(இ - ள்.) குருமுகத்து அறியவேண்டும் என்பது ஓர் கொள்கை யாலே - (நூல்களை) ஆசான் வாயிலாக அறிந்து கொள்ளல் வேண்டு மென்னும் ஒரு கோட்பாட்டினுல், ஒரு முறை கேட்டு ஆங்கு - ஒரு முறை கேட்டு அவ்வளவிலே, எண்ணெண் கலைகளும் ஒருங்கு தேறி- அறுபத்து நான்கு கலைகளையும் ஒருசேரத் தெளிந்து, அரன் அலது ஒருவராலும் தேற்றுவது அருமையால், சிவபெருமான் அல்லது வேறு யாவராலும் அறிவிப்பதற்கு அருமையால், அப்பரனிடை பாசுபதாத்திரப்படையும் தெளிந்தான் - அம்முதல்வனிடத்துப் பாசு பதப் படைப் பயிற்சியையும் உணர்ந்தான் எ - று.

முகம்-வாயில்; வழி. மெய்ந்நூற் பொருள்களைத் தாமாக அறிய லுறின் பொருளல்லவற்றைப் பொருளெனத் திரிய வுணர்ந்து ஐயுற் றும் இடர்ப்படல் கூடுமாகலின் குரு முகமாக அறியவேண்டுமென் பது ஒரு கொள்கையாயிற்று. குருவாவான் அஞ்ஞானத்தை நீக்கி மெய்ஞ்ஞானத்தை உதிப்பிக்கவல்லான். குரு என்பது வியாழனுக்குச் சிறப்புப் பெயராகியதொரு நயமும் உணரற்பாலது. இயற்கையா கவே எல்லா முணர்ந்த குருபரனுகிய குமரவேளுக்குப் பிறர்பால் ஓதி யுணர்வ தொன்றில்லையேனும் ஆன்றோரொழுக்கத்தைப் பாதுகாத்த லாகிய கடனை உலகினர்க்கு அறிவுறுத்தற்பொருட்டு ஒரு முறை கேட்டான் என்க. அலது, அன்றியென்னும் பொருட்டு. பாசுபதம் - பசுபதியாகிய சிவனுக்குரியது. மன்னும் ஓவும் அசைகள். (௨௯)

எல்லையில் கலைக ளெல்லா மகவைநா லிரண்டின் முற்றத்
தொல்லறி வுடையா ஞகிக் குரவரைத் தொழுது போற்ற
வல்லவ ஞகி யன்ஞர் மகிழ்ச்சிகோள் கலஞய் வென்றிச்
செல்வவேற் றிளஞ ரோடுந் திருவிளை யாடல் செய்வான்.

(இ - ள்.) எல்லை இல் கலைகள் எல்லாம் அகவை நாலிரண்டில் முற்ற - அளவிறந்த கலைகள் அனைத்தும் எட்டுவயதிலே நிரம்ப, தொல் அறிவு உடையான் ஆகி - பழைய முற்றுணர்வுடையவனுகி யும், குரவரைத் தொழுது போற்ற வல்லவனுகி - இரு முதுகுரவரை யும் வணங்கி வாழ்த்த வல்லுநனுகியும், அன்னர் மகிழ்ச்சி கொள் கலனுய்-அவர்கள் மகிழ்ச்சிகொள்ளும் பாத்திரமாகியும், வென்றிச் செல்வ ஏறு இளைஞரோடும் திருவிளையாடல் செய்வான் - வெற்றிச் செல்வத்தையுடைய ஆண் சிங்கம் போன்ற இளைஞர்களோடும் (சென்று) திருவிளையாடல் செய்வானுயினன் எ - று.

தகுதியுடையானைப் பாத்திரம் என்பவாகலின் 'கலனுய்' என்ருர்; அணிகலனுய் என்னலுமாம். "நன்கலன் நன்மக்கட் பேறு" என்ப தும் நோக்குக. வென்றியையும் செல்வத்தையுமுடைய என்றும், வேற்றிளைஞரோடும் என்றும் கூறலுமாகும். (௩௦)

புகர்மத வேழ முட்டிப்* போர்விளை யாடி வென்றுந்
தகரோடு தகரைத் தாக்கித் தருக்கம ராடி வென்றும்
வகிர்படு குருதிச் சூட்டு வாரண மாடி வென்றுந்
நகைமணிப் பலகை செம்போ னன்குறுப் பாடி வென்றும்.

(இ-ள்.) புகர் மத வேழம் முட்டிப் போர்விளையாடிவென்றும் - புள்ளிகளையுடைய முகத்தையும் மதத்தையுமுடைய யானைகளைப் பொருத்திப் போர்செய்வித்து வெற்றி பெற்றும், தகரோடு தகரைத் தாக்கி தருக்கு அமர் ஆடிவென்றும்-ஆட்டுக் கிடாய்களோடு ஆட்டுக் கிடாய்களைப் பொருத்திச் செருக்குடன் போர்புரிவித்து வெற்றியடைந்தும், வகிர்படு குருதிச் சூட்டு வாரணம் ஆடிவென்றும் - பிளவுபட்ட உதிரம்போலும் செந்நிறம் வாய்ந்த உச்சிக் கொண்டையையுடைய சேவல்களைப் போர் செய்வித்து வெற்றிபெற்றும், நகைமணிப் பலகை - ஒளியினையுடைய மணிகள் அழுத்திய பலகை வரையிலுள்ள, செம்பொன் நான்கு உறுப்பு ஆடி வென்றும்-சிவந்த பொன்னாற் செய்த தேரும் யானையும் குதிரையும் காலாளுமாகிய நான்கு உறுப்புக்களாற் பொருது வெற்றியடைந்தும் எ - று.

ஆடுவித்தலை ஆடியென்றார்; அவற்றின் வெற்றியும் தோல்வியும் செய்விப்போர் மேலவாகலின். முட்டுவித்து தாக்குவித்து என்பன, முட்டி தாக்கியென நின்றன. வாரணமென்னும் பலபொருளொரு சொல் குருதிச் சூட்டு என்னுங் குறிப்பால் சேவலையுணர்த்திற்று. நான்குறுப்பு - சதுரங்கம். (ருக)

காற்றினுங் கடிய மாவிற் காவதம் பலபோய் மீண்டும்
கூற்றினுங் கொடிய சீற்றக் குஞ்சர முகைத்தும் வையை
யாற்றினுய் யானத் தாவி யகத்தினு ளின்பந் துய்த்தும்
வேற்றிறன் மைந்த ரோடு மல்லமர் விளைத்து வென்றும்.

(இ-ள்.) காற்றினும் கடியமாவில் காவதம் பலபோய் மீண்டும்- காற்றைக் காட்டினும் விரைந்த செலவினையுடைய குதிரையிலேறிப் பலகாத வழி சென்று திரும்பியும், கூற்றினும் கொடிய சீற்றக் குஞ்சரம் உகைத்தும் - கூற்றுவனினும் கொடிய சினத்தையுடைய யானையைச் செலுத்தியும், வையையாற்றின் உய்யானத்து ஆவி அகத்தினுள் இன்பம் துய்த்தும் - வையை நதியிலும் பூங்காவிலும் பொய்கையிடத்தும் இன்பம் நுகர்ந்தும், வேல் திறல் மைந்தரோடு மல் அமர் விளைத்து வென்றும் - வேற்படையையுடைய வலிய இளைஞர்களோடு மற்போர் புரிந்து வெற்றி பெற்றும் எ - று.

ஆவி - பொய்கை; இயந்திரவாவியுமாம். யாற்றிலும் பொய்கையிலும் நீராடல் முதலியவற்றாலும், உய்யானத்தில் மலர் கொய்தல் முதலியவற்றாலும் இன்பந் துய்த்தென்க; உருபும். உம்மையும் விரிக்க. அகத்தினுள், இன்: சாரியை. (ருஉ)

(பா - ம்.) * மூட்டிப்.

சந்தவெற் படைந்து வேட்டஞ் செய்துமச் சைல வாழ்க்கை
அந்தண ராசி கூற வவர்தொழில் வினவு மன்னர்
கந்தமென் கனிவி ருத்தூண்* கைதழீஇக் களித்து மீண்டும்
இந்தவா றைம்மூ வாண்டு கழியமே லெய்து மாண்டில்.

(இ - ள்.) சந்தவெற்பு அடைந்து வேட்டம் செய்தும் - சந்தன மரங்களையுடைய பொதியின் மலையைச் சார்ந்து வேட்டையாடியும், அசைல வாழ்க்கை அந்தணர் ஆசிகூற - அம் மலையில் வாழ்தலையுடைய முனிவர்கள் வாழ்த்துக் கூற, அவர் தொழில் வினவும்-அவர் தவத்தொழில் (முட்டின்றி முடிதலை) வினவியும், அன்னர் கந்தம் மென்கனி விருத்து ஊண் கைதழீஇ களித்து மீண்டும் - அம்முனிவர் (மகிழ்ந்தளிக்கும்) கிழங்கும் மெல்லிய பழமும் ஆகிய விருந்துணவைக் கைக்கொண்டு மகிழ்ந்து திரும்பியும், இந்தவாறு ஐம் மூவாண்டு கழிய - இவ்வாறாகப் பதினைந்து ஆண்டுகள் செல்ல, மேல் எய்தும் ஆண்டில் - பதினாறும் ஆண்டின்கண் எ - று.

சைலம் - மலை; சிலையாலாயது. அந்தணர் - துறவோர்; "அந் தணரென்போ ரறவோர்" என்பது திருவள்ளுவப் பயன். தொழில்- தவத்தொழிலின் நடைபேறு. வினவி தழுவியென்பன வினவு் தழீஇ எனத் திரிந்தன. விருந்து விருத்து என வலித்தல் விகாரமாயிற்று. பதினைந்தின்மேலெய்தும் ஆண்டாவது பதினாறும் ஆண்டு. (ருரு)

சூர்முத றடிந்த தங்க டோன்றலே யிவனென் றெண்ணிக்
கார்முக மயிலும் வேலுங் கைவிடாக் காக்கு† மாபோல்
வார்முக முலையி னாரும் வடிக்கணு மருங்கு மொய்ப்பக்
கூர்முக வேலா னின்ன கொள்கைய னாகத் தாதை.

(இ - ள்.) சூர் முதல் தடிந்த தங்கள் தோன்றலே இவனென்று எண்ணி - சூரபன்மனாகிய மாமரத்தின் அடியைத் துணித்த தங்கள் தலைவனாகிய முருகக்கடவுளே இவனென்று கருதி, கார்முக மயிலும் வேலும் கைவிடாக் காக்குமாபோல் - கரிய முகமுள்ள மயிலும் வேற்படையும் நீங்காது காக்கின்ற தன்மைபோல, வார்முக முலையினாரும் - கச்சணிந்த இடத்தினையுடைய கொங்கைகளையுடைய மகளிரும், வடிக்கணும் - (அவர்) மாவடுவின் பிளவையொத்த கண்களும், மருங்கு மொய்ப்ப - பக்கத்தே சூழ, கூர்முக வேலான் இன்ன கொள்கையனாக - கூரிய முனைபொருந்திய வேற்படையையுடைய உக்கிரவழுதி இத்தன்மையுடையராக, தாதை - தந்தையாகிய சுந்தர பாண்டியர் எ - று.

"சூர்முத றடிந்த சுடரிலை நெடுவேல்"

என்பது திருமுருகாற்றுப்படை. மேகத்தை விரும்புதலையுடைய மயில் என்னலுமாம்; இப்பொருட்கு முக என்பது முகத்தல் என்ப தன் முதனிலை. விடா: ஈறு கெட்ட எதிர்மறை வினையெச்சம். காக்குமா: விகாரம். (ருசு)

(பா - ம்.) * விருந்தூண். † கைவிடா காக்கு.

பங்கயச் செவ்வித் தாகிக் கண்மனம் பருகு காந்தி
அங்கழற் காலுஞ் சொன்ன வடைவினிற் றிரண்டு நீண்ட
சங்கையும் வட்டந் தோன்றுச் செழுமுழந் தாளு நால்வாய்த்
துங்கவீர்ங் கவுண்மால் யானைத் துதிக்கைபோற் றிரள்க வானும்.

(இ - ள்.) பங்கயச் செவ்வித்து ஆகி - தாமரை மலர்போலும் அழகினையுடையதாய், கண் மனம் பருகு காந்தி அம் கழல் காலும் - (கண்டவர்) கண்ணையும் மனதையும் கொள்ளை கொள்ளும் ஒளியையுடைய அழகிய வீரகண்டையணிந்த அடியையும், சொன்ன அடைவினில் திரண்டு நீண்ட சங்கையும்-(உறுப்பிலக்கண நூலில்) கூறிய முறைப்படி திரண்டு நீண்ட கணைக்காலையும், வட்டம் தோன்றுச் செழு முழம் தாளும் - என்பின் வட்டவடிவு தோன்றாது தசைந்த முழங்காலையும், நால்வாய் - தொங்கிய வாயும், துங்க ஈர்ங்கவுள் - உயர்ந்த குளிர்ந்த கபோலமும் உடைய, மால்யானைத் துதிக்கை போல் - மதமயக்கத்தையுடைய யானையின் துதிக்கைபோல, திரள் கவானும் - திரண்ட தொடையையும் எ - று.

சங்கை - கணைக்கால்; இது சங்கு எனவும் படும். ஈர்ங்கவுள் - மதத்தால் நனைந்த ஈரிய கவுள். (ருடு)

சிறுகிய வயிறுந் தாழ்ந்த நாபியுஞ் செவ்வி நோக்கும்
மறுவில்கண் ணடியி னன்ன கடியகல் வரைகோண் மார்பும்
எறியிசை வீணைத் தண்டி னிணைந்துநீண் டிழிந்த கையும்
வெறியதார் கிடந்த மேரு வெற்பிரண் டனைய தோளும்.

(இ - ள்.) சிறுகிய வயிறும் - சிறுத்த வயிற்றினையும், தாழ்ந்த நாபியும் - ஆழ்ந்த உந்தியையும், செவ்வி நோக்கும்-அழகைப் பார்த்தற்குக் கருவியாகிய, மறு இல் கண்ணடியின் அன்ன-குற்றமில்லாத கண்ணுடியை ஒத்த, கடி - விளக்கத்தையுடைய, வரைகொள் அகல் மார்பும் - மூன்று வரிகளைக் கொண்ட அகன்ற மார்பினையும், எறி இசை வீணைத் தண்டின்-வருடுதலால் இசை எழுகின்ற வீணையினது கோல்போல, இணைந்து நீண்டு இழிந்த கையும் - தம்மு ளொத்து நீண்டு (முழந்தாளளவும்) தாழ்ந்த கைகளையும், வெறிய தார்கிடந்த-மணத்தினையுடைய மாலைதங்கிய, மேருவெற்பு இரண்டு அனைய தோளும்-இரண்டு மேருமலையை ஒத்த தோள்களையும் எ - று.

கண்ணடியின், இன்: சாரியை. வரை - மார்பின்கண்ணுள்ள உத்தம விலக்கணமாகிய மூன்று வரிகள்;

"ஆரந் தாழ்ந்த வம்பகட்டு மார்பிற்
செம்பொறி வாங்கிய மொய்ம்பின்"

என்று திருமுருகாற்றுப்படையிலும்,

"வரையகன் மார்பிடை வரியு மூன்றுள"

என்று சிந்தாமணியிலும் கூறப்படுதல் காண்க; மலையையொத்த என்றுமாம். வெறி-மணம்; வெறிய: குறிப்புப் பெயரெச்சம். (ருசு)

வலம்புரி யென்ன வாய்ந்த கண்டமு மலராண் மன்னும்
போலம்புரி கமல மன்ன வதனமும் போதுவா னேக்கி
நிலம்புரி தவப்பே றன்னான் வடிவெலா நின்று நின்று
நலம்புரி நூலா னேக்கிச் சோதிப்பா னடிக்க வல்லான்.

(இ - ள்.) வலம்புரி என்ன வாய்ந்த கண்டமும்-வலம்புரிச் சங்கினைப்போல அமைந்த கழுத்தையும், மலராள் மன்னும் பொலம்புரி கமலம் அன்ன வதனமும் - திருமகள் வதியும் பொன்னாற் செய்த தாமரை மலரையொத்த முகத்தையும், நடிக்க வல்லான் - திருக்கூத்தாட வல்லனாகிய சுந்தரபாண்டியன், பொதுவால் நோக்கி - (முன்) பொதுவகையாற் பார்த்துப் (பின்), நிலம்புரி தவப்பேறு அன்னான் வடிவு எலாம்-நிலவுலகத்தார் செய்த தவப்பயனை ஒத்த அவ்வுக்கிர வழுதியினது உறுப்புக்களனைத்தையும், நலம்புரி நூலால் நின்று நின்று நோக்கிச் சோதிப்பான் - அழகினைச் சொல்லுகின்ற நூலிற் கூறிய முறைப்படி உற்றுற்று நோக்கிச் சோதிப்பானாயினான். எ-று. நிலம்-நிலமகளுமாம். நலம்புரி நூல்-சாமுத்திரிகை நூல். (௩எ)

உன்னத மாறு நீண்ட வுறுப்பைந்து சூக்கந் தானும்
அன்னது குறுக்க நான்கா மகலுறுப் பிரண்டே ழாகச்
சொன்னது சிவப்பு மூன்று கம்பீரந் தொகுத்த வாறே
இன்னவை விரிக்கி லெண்ணான் கிலக்கண வுறுப்பா மேன்ப.

(இ - ள்.) உன்னதம் ஆறு - உயர்ந்த உறுப்புக்கள் ஆறும், நீண்ட உறுப்பு ஐந்து-நீண்ட உறுப்புக்கள் ஐந்தும், சூக்கம் தானும் அன்னது-சிறுகிய உறுப்புகள் ஐந்தும்,குறுக்கம் ஆம் நான்கு-குறுக்கமாகிய உறுப்புக்கள் நான்கும், அகல் உறுப்பு இரண்டு - அகன்ற உறுப்புக்கள் இரண்டும், சொன்னது சிவப்பு ஏழு - நூலிற் கூறிய சிவந்த உறுப்புக்கள் ஏழும், கம்பீரம் மூன்று-ஆழ்ந்த உறுப்புக்கள் மூன்றும், ஆக எண் நான்கு உறுப்பு இலக்கணம் என்ப-ஆக முப்பத்திரண்டு உறுப்புக்கள் இலக்கண முடையன என்று பெரியோர்கூறுவர்; தொகுத்தவாறே - (இங்ஙனம்) தொகுத்துக் கூறிய முறையே, இன்னவை விரிக்கின்-இவற்றை விரித்துக் கூறுங்கால் எ - று.

அன்னது - அத்தொகையினது. தான், ஆம்: என்பன அசைகள். (௩அ)

வயிறுதோ ணெற்றி நாசி மார்புகை யடியிவ் வாறும்
உயரில்வான் செல்வ னாகு மொளிகவர் கண்க போலம்
புயல்புரை வள்ளற் செங்கை புதுமணங் கவருந் துண்டம்
வியன்முலை நடுமோர் பைந்து நீண்டவேல் விளக்கு நன்மை.

(இ-ள்.) வயிறு தோள் நெற்றி நாசி மார்பு கைஅடி இவ்வாறும் உயரில் - வயிறும் தோளும் நெற்றியும் மூக்கும் மார்பும் கையினடியுமாகிய இந்த ஆறு உறுப்புக்களும் உயர்ந்திருந்தால், வான் செல்வன் ஆகும்-சிறந்த செல்வமுடையவனாவான்; ஒளி கவர் கண் கபோலம்

ஒளியைக்கொள்கின்ற கண்ணும் கபோலமும், புயல் புரை வள்ளல் செங்கை - முகிலை ஒத்த வண்மையையுடைய சிவந்த கையும், புது மணம் கவரும் துண்டம் - புதிய மணத்தினை நுகரும் மூக்கும், முலை நடு வியன்மார்பு ஐந்தும் - முலையின் நடுவிலுள்ள பரந்த மார்பும் ஆகிய ஐந்து உறுப்புக்களும், நீண்டவேல் நன்மை விளைக்கும் - நீண்டுள்ளனவாயின் (அவை) நன்மையைக் கொடுக்கும் எ - று.

வள்ளல் என்றது ஈண்டு வண்மையை யுணர்த்திற்று. நாசி யென்றது மூக்கின் அடியை யெனவும், துண்டம் என்றது மூக்கின் முனையை யெனவும் கொள்க. (௩௯)

நறியபூங் குஞ்சி தோக்கு விரற்கணு நகம்பல் லைந்துஞ்
சிறியவே லாயுள் கோசஞ் சங்கைநா முதுகிந் நான்குங்
குறியவேற் பாக்கி யப்பே றூஞ்சிரங் குளமேன் றாய்ந்தோர்
அறியுமிவ் வுறுப்பி ரண்டு மகன்றவே லதுவு நன்றாம்.

(இ - ள்.) நறிய பூங்குஞ்சி - நன்மணங் கமழும் மலரையணிந்த சிகையும், தொக்கு - தோலும், விரல்கணு - விரலின்கணுவும், நகம் - நகமும், பல் - பல்லும், ஐந்தும் சிறிய வேல் ஆயுள் - ஆகிய ஐந்துறுப்புகளும் சிறுகியவாயின் ஆயுள் (மிகும்); கோசம் சங்கை நா முதுகு இந்நான்கும் - ஆண்குறியும் கணைக்காலும் நாவும் முதுகும் ஆகிய இந்நான்குறுப்புக்களும், குறியவேல் பாக்கியப் பேறு ஆம் - குறுகிய வாயின் செல்வப்பயன் ஆகும்; ஆய்ந்தோர் அறியும் சிரம் குளம் என்று இவ்வுறுப்பு இரண்டும் அகன்றவேல் - தெளிந்தோர் அறியும் தலையும் நெற்றியும் ஆகிய இவ்விரண்டுறுப்புகளும் அகன்றனவாயின், அது நன்றாம் - அவ்வகற்சியும் நன்மையாகும் எ - று.

ஆய்ந்தோர் - நூல்களை ஆராய்ந்தோர். குளம் - நெற்றி. அதுவும், உம்: அசை. (௪0)

அகவடி யங்கை நாட்டக் கடையித ழண்ண நாக்கு
நகமிவை யேழுஞ் சேந்த நன்மையாற் பெறுமா வின்பம்
இகல்வலி யோசை நாபி யென்றிவை மூன்று மாழ்ந்த
தகைமையா லேவர்க்கு மேலா நன்மைசா றக்கோ னென்னு.

(இ - ள்.) அக அடி அங்கை நாட்டக் கடை இதழ் அண்ணம் நாக்கு நகம் இவை ஏழும் - உள்ளங்காலும் உள்ளங்கையும் கடைக் கண்ணும் உதடும் மேல்வாயும் நாவும் நகமும் ஆகிய இவ்வேழுறுப்புக்களும், சேந்த நன்மையால் மா இன்பம் பெறும் - சிவந்திருக்கும் நன்மையினாலே பெரிய இன்பத்தை அடைவான்; இகல் வலி ஓசை நாபி என்ற இவை மூன்றும் - மிக்க வலியும் ஓசையும் கொப்பூழும் என்று சொல்லப்பட்ட இம்மூன்றும், ஆழ்ந்த தகைமையால் - ஆழ்ந்திருக்குந் தகுதியாலே, எவர்க்கும் மேலாம் நன்மை சால் தக்கோன் - யாவருக்கும் மேலாகிய நலம் நிறைந்த தக்கோனவன்; என்னு - என்று கருதி எ - று.

அங்கை - அகங்கை;

"அகமென் கிளவிக்குக் கைமுன் வரினே
முதனிலை யொழிய முன்னவை கெடுதலும்
வரைநிலை யின்றே ஆசிரியற்க
மெல்லெழுத்து மிகுத லாவயி னான"

என்றார் ஆசிரியர் தொல்காப்பியனார். சேந்த, சிவந்த என்பதன் மரூஉ. வலிக்குத் திட்பமும், ஓசைக்குக் கம்பீரமும் ஆழமாமென்க. (௬௧)

எல்லையின் மூர்த்தி மைந்த னிலக்கண நிறைவி னோடு
நல்லவாங் குணனு நோக்கிப் போதுவற ஞாலங் காக்க
வல்லவ னாகி வாழ்நா ணனிபெற வல்ல னென்னா
அல்லணி மிடற்றான் பின்னு மனத்தினா லளந்து சூழும்.

(இ - ள்.) எல்லை இல் மூர்த்தி-(அளவைகளால்) அளந்தறியப் படாத இறைவனாகிய, அல் அணி மிடற்றான் - (நஞ்சினால்) இருள் போன்ற அழகிய திருமிடற்றையுடைய சிவபெருமான், மைந்தன் இலக்கண நிறைவினோடு - புதல்வனுடைய நிறைந்த இலக்கணத் துடன், நல்லவாம் குணனும் நோக்கி - நல்லனவாகிய குணங்களையும் ஆராய்ந்தறிந்து, போது அற ஞாலம் காக்க வல்லவனாகி - பிறர்க்குப் பொதுவின்றாக உலகத்தைப் புரப்பதற்கு வன்மையுடையவனாகி, வாழ் நாள் நனிபெற வல்லன் என்னா - வாழ்நாளை மிகப் பெறவும் வல்லனவன் என்று கருதி, பின்னும்-மேலும், மனத்தினால் அளந்து சூழும்-மனத்தினால் அளவிட்டு ஆலோசிக்கின்றார் எ - று.

எல்லையில் மூர்த்தி - வரம்புபடாத வியாபகவுருவினன் என்னலு மாம். பெறவும் என எச்சவும்மை விரிக்க. அல்லினை அணிந்த என்று மாம்; அணியென்பதனை உவமவுருபாக்கலு மொன்று. (௬௨)

இத்தகு பண்பு சான்ற நீர்மையா லிசைமை நீதி
வித்தக நல்ல வுள்ள முடைமைமெய் வீறு தெய்வ
பத்திமை யுலகுக் கெல்லா மகிழ்ச்சிசெய் பண்பு சாந்த
சித்தமெவ் வுயிர்க்கு மன்பு செய்கைநல் லீகை கல்வி.

(இ - ள்.) இத்தகு பண்பு சான்ற நீர்மையால் - இந்தத் தகுதி யாய குணங்கள் நிறைந்த இயல்பினால், இசைமை-புகழும், நீதி-நீதி யும், வித்தகம் - சதுரப்பாடும், நல்ல உள்ளம் உடைமை - நன்மன முடைமையும், மெய்வீறு தெய்வபத்திமை - மெய்மை மிக்க பரசிவ பத்தியும், உலகுக்கு எல்லாம் மகிழ்ச்சிசெய் பண்பு - உலக முழுதுக் கும் மகிழ்ச்சி விளைக்கும் தன்மையும், சாந்த சித்தம்-அசைவிலாத சிந் தையும், எவ்வுயிர்க்கும் அன்பு செய்கை - எல்லா வுயிர்கள்மேலும் அருள்செய்தலும்,நல் ஈகை-நல்ல வண்மையும்,கல்வி-கல்வியும் எ-று.

நீர்மை, இசைமை, பத்திமை யென்பவற்றில் மை பகுதிப் பொருள் விகுதி. மெய் வீறு தெய்வபத்திமை-மெய்ம்மையும் பெரு மையும் தெய்வபத்தியும் என்றுரைத்தலுமாம். சாந்த சித்தம்-திரை யற்ற நீர்போல் அமைந்த சிந்தை. அருளும் அன்பும் வேற்றுமை யின்றியும் வழங்கும். (௬௩)

வெல்லுதற் கரியார் தம்மை வெல்லுத றேவராலுஞ்
செல்லுதற் கரிய தேத்துஞ் சென்றிடு திறையுங் கோடல்
புல்லுதற் கரிய ஞால மாலைபோற் புயத்தி லேந்திச்
சொல்லுதற் கரிய வீர* முலகெலாஞ் சுமப்ப வைத்தல்.

(இ - ள்.) வெல்லுதற்கு அரியார் தம்மை வெல்லுதல் - யாவராலும் வெல்ல வொண்ணாதவரை வெல்லுதலும், தேவராலும் செல்லுதற்கு அரிய தேத்தும் சென்று - அமரர்களாலும் செல்லமுடியாத தேயங்களினுஞ் சென்று (அத்தேயத்தாரை வென்று), இடு திறையும் கோடல் - அவரால் அளக்கப்பட்ட திறையையும் கைக்கொள்ளலும், புல்லுதற்கு அரிய ஞாலம் - (யாவராலும் ஒருசேர) அடைதற் கரிய உலகத்தினை, மாலைபோல் புயத்தில் ஏந்தி - பூமாலையைப்போல் தோளிற் றாங்கி, சொல்லுதற்கு அரிய வீரம் உலகு எலாம் சுமப்ப வைத்தல் - சொல்லுதற்கொண்ணாத (தனது) ஆணையை உலகத்தாரனைவரும் சுமக்குமாறு வைத்தலும் எ - று.

தேம் என்னும் இடப்பெயர் அத்துச் சாரியை பெற்று மகர வீறும் சாரியை அகரமும் கெட்டுத் தேத்து என்றாயது. எளிதினேந்தி யென்பார் 'மாலைபோல் ஏந்தி' என்றார். வீரம் என்றது ஈண்டு ஆணையை. இவ்விருசெய்யுளிலும் எண்ணும்மைகள் விரிக்க. (சச)

என்றிவை யாதி யாய வியற்குண முடைய னாகி
நன்றிசெய் துலகுக் கெல்லா நாயக னொருவ னாகி
நின்றிடு மிவற்குப் பின்னர் நீண்முடி கவித்து முன்னர்
மன்றல்செய் கென்று சூழ்ந்து மதிஞரோ டுசாவி னானே.

(இ - ள்.) என்ற இவை ஆதியாய இயல் குணம் உடையனாகி - என்று சொல்லப்பட்ட இவை முதலாகிய இயற்கைக் குணங்கள் உடையவனாகி, உலகுக்கு எல்லாம் நன்றி செய்து - உலக முழுதிற்கும் நன்மை புரிந்து, நாயகன் ஒருவனாகி நின்றிடும் - ஒரே தலைவனாகி நிற்பான்; இவற்கு - (இங்ஙனமாய) இவனுக்கு, நீண்முடி பின்னர் கவித்தும் - பெரிய மகுடத்தினைப் பின்பு சூட்டுவோம்; முன்னர் மன்றல் செய்க என்று சூழ்ந்து - முதற்கண் திருமணம் செய்யப்பெறுக என்று ஆலோசித்து, மதிஞரோடு உசாவினான் - அமைச்சரோடும் ஆராய்ந்தார் எ - று.

என்ற செய்க என்பவற்றின் அகரம் தொக்கது. என்று என்பதனை எண்ணிடைச் சொல்லெனக் கொண்டு மேல் எண்ணிய எல்லாவற்றோடும் கூட்டலுமாம். கவித்தும்: தன்மைப் பன்மை. செயப்படுக வென்பது செய்கவென நின்றது; செய்கும் என்பது விகாரமாயிற் றெனலுமாம். மதிஞர்-மதிநுட்பம் நூலோடுடைய அமைச்சர். (சரு)

ஆகச் செய்யுள் - கூரு.

---

(பா - ம்.) * சொல்லுதற்கரிய கீர்த்தி.

## கஉ. உக்கிரபாண்டியருக்கு வேல்வளைசெண்டு கொடுத்த படலம்

[அறுசீரடி யாசிரிய விருத்தம்]

உருக்குந் திறலுக் கிரவழுதி
யுதய மிதுவான் மதியுநதிப்
பெருக்குங் கரந்த சடைக்கற்றைப்
பெருந்தேர்ச் செழியர் பிரானவற்குச்
செருக்குஞ் செல்வ மணமுடித்துச்
செவ்வேல் வளைசெண் டளித்துள்ளந்
தருக்கு முடிதந் தரசுரிமை
தந்த செயலுஞ் சாற்றுவாம்.

(இ-ள்.) உருக்கும் திறல் உக்கிர வழுதி உதயம் இது - (பகை வரைக்) கெடுக்கும் வலியுடைய உக்கிரகுமார பாண்டியனது திருவவதாரமாகிய திருவிளையாடல் இதுவாகும்; வால் மதியும் நதிப் பெருக்கும் கற்றைச் சடை கரந்த - வெள்ளிய சந்திரனையும் கங்கை யாற்றின் பெருக்கையும் திரண்ட சடையையும் மறைத் தருளிய, பெருந் தேர்ச் செழியர் பிரான் - பெரிய தேரினை யுடைய தென்னர் பெருமானுகிய சுந்தரபாண்டியர், அவற்கு - அவ்வுக்கிர வழுதிக்கு, செருக்கும் செல்வ மணம் முடித்து-களிப்பிற்குரிய திருமண முடித்து, செவ்வேல் வளை செண்டு அளித்து - சிவந்த வேற்படையையும் வளை யையும் செண்டையும் கொடுத்து, உள்ளம் தருக்கும் முடி தந்து - மனங் களிப்பதற் கேதுவாகிய திரு முடி சூட்டி, அரசு உரிமை தந்த செயலும் சாற்றுவாம் - அரச வுரிமையும் கொடுத்தருளிய திருவிளை யாடலையும் கூறுவாம் எ - று.

உருக்கும் - புவியிலுள்ளாரை அன்பால் உருகச் செய்யும் என்று மாம்; "மண் கனிப்பான்" என்னும் சிந்தாமணித் தொடர்க்குக் 'குழவிப் பருவத்தாலும் அரச நீதியாலும் வீடுபேற்ருலும் மண்ணை யுருக்கு மவன்' என்று நச்சினார்க்கினியர் கூறிய வுரை இங்கு நோக்கற் பாலது. வான்மதி - வானிலுள்ள மதி யென்றுமாம். இது வால் எனப் பிரித்து, ஆல் அசை யெனினும் பொருந்தும். மதியும் நதியும் கரந்த சடையை யுடைய சிவன் என்று கொண்டு, சிவபெருமானுகிய செழியற்கு என்றுரைத்தலுமாம். பெருந்தேர் - மகாரதம். குருதி தோய்வேலென்பார் 'செவ்வேல்' என்ருர். உரிமையும் என உம்மை பிரித்துக் கூட்டப்பட்டது. (க)

வையைக் கிழவன் றன்னருமைக்
குமரன் றனக்கு மணம்புணர்ச்சி
செய்யக் கருதுந் திறனேக்கி
யறிஞ ரோடுந் திரண்டமைச்சர்

மையற் றழியா நிலத்திருவு
மரபுங் குடியும் புகழ்மையுநம்
ஐயற் கிசையத் தக்ககுலத்
தரசர் யாரேன் றளக்கின்றார்.

(இ - ள்.) வையைக் கிழவன் - வையை யாற்றுக் குரியனாகிய சுந்தரபாண்டியன், தன் அருமைக் குமரன் தனக்கு - தன் அருமைப் புதல்வனுக்கு, மணம் புணர்ச்சி செய்யக் கருதும் திறன் நோக்கி - திருமண முடிக்கக் கருதிய தன்மையை நோக்கி, அமைச்சர் அறிஞ ரோடும் திரண்டு - மந்திரிகள் மூதறிஞரோடும் கூடி, மை அற்று - குற்றமற்று, அழியா நிலத்திருவும் - அழியாத நிலச் செல்வமும், மரபும் குடியும் புகழ்மையும் - மரபும் குடிப்பிறப்பும் புகழும் ஆகிய இவற்றால், நம் ஐயற்கு இசையத் தக்க குலத்து அரசர் - நம் இறைவ னுக்குப் பொருந்தத் தக்க குலத்தினையுமுடைய மன்னர், யார் என்று அளக்கின்றார் - யாவர் என்று ஆராய்கின்றார் எ - று.

நதிகளை மகளிராக்கி அரசர்களை வையைக் கிழவன், காவிரிக் கிழவன் என்றிங்ஙனம் கூறுதல் மரபு;

" கங்கை தன்னைப் புணர்ந்தாலும் புலவாய் வாழி காவேரி"

என்னும் ஆற்றுவரியுங் காண்க. அரச குமாரர்க்கு மணம்புரிதல், முடிசூட்டுதல் முதலியவற்றை அமைச்சரும் நகரத்து மாசனங்களும் உள்ளிட்டாருடன் கலந்து சூழ்ந்து முடிப்பது பண்டு தொட்டுள்ள வழக்கமாகும். அற்று என்னும் வினையெச்சம் அழியா என்பதன் விகுதி கொண்டு முடியும்; இசையத் தக்க என்பதனோடு இயைத்தலு மாம். மரபு-திங்கள் மரபு, பரிதி மரபு என்றாற் போல்வன. ஆலுருபு விரித்துக் கொள்க. அளத்தல் - அறிவான் ஒத்துப் பார்த்தல். (உ)

தீந்தண் புனல்சூழ் வடபுலத்து மணவூ ரேன்னுந் திருநகர்க்கு
வேந்தன் பரிதி திருமரபின் விளங்குஞ் சோம சேகரனேன்
றாய்ந்த கேள்வி யவனிடத்துத் திருமா தேன்ன வவதரித்த
காந்தி மதியை மணம்பேச விருந்தா ரற்றைக் கனையிருள்வாய்.

(இ - ள்.) (ஆராய்ந்த வழி எல்லா வகையாலும் ஒத்தவன்), தீந்தண் புனல் சூழ் வட புலத்து மணவூர் என்னும் திரு நகர்க்கு வேந்தன் - இனிய தண்ணிய நீரால் சூழப்பட்ட வடக்கண் உள்ள கல்யாண புரம் என்னும் அழகிய நகரத்துக்கு மன்னனாகிய, பரிதி திருமரபின் விளங்கும் சோம சேகரன் என்று-சூரியனது திருக்குலத் தில் வந்து விளங்கா நின்ற சோமசேகரனென்னும் அரசனுவான் என்று கருதி, ஆய்ந்த கேள்வி அவனிடத்து - ஆராய்ந்த கேள்வியினை யுடைய அம்மன்னனிடத்து, திருமாது என்ன அவதரித்த காந்தி மதியை மணம் பேச இருந்தார்-திருமகளைப் போல அவதரித்திருந்த காந்திமதியை மணம் பேசக் கருதியிருந்தார்கள்; அற்றைக் கனை இருள்வாய் - அன்று செறிந்த இருளை யுடைய நள்ளிரவில் எ - று.

வேந்தனுகிய சோமசேகரனென்று கருதியென விரிக்க. திருமாது - திருவாகிய மாது. கனைதல் - செறிதல். வடி வணங்கு என்று பெயர் கூறுவர் பெரும்பற்றப் புலியூர் நம்பி. (ந)

வெள்ளைக் களிற்றின் பிடர்சுமந்த குடுமிக் கோயின் மேயவிளம்
பிள்ளைக் கதிர்வெண் மதிமௌலிப் பெருமா னிரவி மருமானும்
வள்ளற் கரத்தான் கனவிலெழுந் தருளி வானோர் நனவிற்குங்
கள்ளத் துருவாந் திருமேனி காட்டி யிதனை விளம்புவார்.

(இ - ள்.) வெள்ளைக் களிற்றின் பிடர் சுமந்த குடுமிக் கோயில் - வெள்ளை யானையின் பிடர் சுமந்த சிகரத்தை யுடைய திருக்கோயிலில், மேய - வீற்றிருந்த, இளம்பிள்ளை - இளங் குழவியாகிய, வெள் கதிர் மதி - வெள்ளிய ஒளியை யுடைய சந்திரனை யணிந்த, மௌலிப் பெருமான் - சடையை யுடைய சோமசுந்தரக் கடவுள், இரவி மருமான் ஆம் வள்ளல் கரத்தான் - சூரியன் வழித் தோன்றலாகிய வள்ளன்மையை யுடைய கையையுடைய சோமசேகரனது, கனவில் எழுந்தருளி - கனவின்கண் எழுந்தருளி, வானோர் நனவிற்கும் கள்ளத்து உருவாம் திருமேனி காட்டி - தேவர்கள் நனவிற்கும் கிட்டாது மறையும் திருவுருவமாகிய திருமேனியைக் காட்டி, இதனை விளம்புவார் - இதனைக் கூறுவார் எ - று.

மேய பெருமான் என வியையும். மருமான் - வழித் தோன்றல். வள்ளல் வண்மை யென்னும் பொருளில் முன்னும் வந்தது. வெளிப்பட்டு நின்ற வழியும் வானோரால் அறியலாகாத உருவ மென்பார் "வானோர் நனவிற்கும் கள்ளத் துருவாம்" என்றார்; "மன்றுளே மாலயன் றேட ஐயர்தாம் வெளியே யாடுகின்றாரை" என்பதன் நயமும் ஓர்ந்துணர்க. (ச)

அன்ன மிறைகோள் வயன்மதுரைச்
சிவன்யா மரச நீயீன்ற
பொன்னை யனையா ளைமதுரா
புரியிற் கொடுபோய் மறுபுலத்து
மன்னர் மகுட மணியிடற
மழுங்குங் கழற்காற் சுந்தரனுந்
தென்னர் பெருமான் குமரனுக்குக்
கொடுத்தி யென்று செப்புதலும்.

(இ - ள்.) அரச-மன்னனே, யாம் அன்னம் இறைகொள் வயல் மதுரைச் சிவன் - யாம் அன்னங்கள் தங்குதலைக் கொண்ட கழனிகள் சூழ்ந்த மதுரைப் பதியிலிருக்கும் சிவபிரான், நீ ஈன்ற பொன்னை அனையாள் தனை-நீ பெற்ற திருமகளை யொத்த காந்திமதியை, மதுரா புரியில் கொடுபோய்-மதுரைப்பதிக்கு அழைத்துக்கொண்டு சென்று, மறு புலத்து மன்னர் மகுடமணி இடற-வேற்று நாட்டு மன்னர்களின் முடியிலுள்ள மணிகள் (அவர்கள் வணங்குங்கால்) இடறுதலால், மழுங்கும் கழல்கால் - தேய்கின்ற வீரக் கழலை யணிந்த காலினை

யுடைய, சுந்தரன் ஆம் தென்னர் பெருமான் குமரனுக்கு - செழியர் பெருமானுகிய சுந்தரபாண்டியனுடைய திருக்குமாரனுக்கு, கொடுத்தி என்று செப்புதலும் - கொடுப்பாய் என்று கூறிய வளவில் எ - று.

"அன்னம் பயில்பொழி லாலவாயின்
மன்னிய சிவன்யான்"

எனத்திருமுகப் பாசுரத்தில்வரும் தொடர் ஈண்டுச் சிந்திக்கற்பாலது; ஆம் என்பது பிரித்துக் கூட்டப்பட்டது. கொடுத்தி: ஏவலொருமை. இ: விகுதி; த்: எழுத்துப் பேறு. செப்புதலும்: வினையெச்சம். (ரு)

உள்ளக் கமல முககமல முடனே மலர விருதடங்கண்
அள்ளற் கமல மலர்ந்துதன தங்கைக் கமல முகிழ்த்தெழுந்து
வள்ளற் பரமன் கருணையெளி வந்த செயலை நினைந்தன்பின்
வெள்ளத் தழுந்தி யெழுந்திரவி வேலை முளைக்கும் வேலையினில்.

(இ - ள்.) உள்ளக் கமலம் முக கமலம் உடனே மலர - நெஞ்சத் தாமரை முகத்தாமரை யுடனே மலரா நிற்க, இருதடம் கண் அள்ளல் கமலம் மலர்ந்து - சேற்றிலுண்டாகிய தாமரை மலர் போலும் பெரிய இரு கண்களும் விழித்து, தனது அம் கைக்கமலம் முகிழ்த்து எழுந்து - தனது அழகிய கைத் தாமரைகளைக் கூப்பி எழுந்து; வள்ளல் பரமன் கருணை எளி வந்த செயலை நினைந்து - வள்ளலாகிய சிவபெருமான் கருணை தனக்கு எளிதிற் கிட்டிய செயலை நினைந்து, அன்பின் வெள்ளத்து அழுந்தி எழுந்து - அன்பாகிய வெள்ளத்தில் மூழ்கி யெழுந்து, இரவி வேலை முளைக்கும் வேலையினில் - சூரியன் கடலிற் றோன்றும் வேளையில் எ - று.

கமலக் கண் மலர்ந்து என வியைக்க. கண் மலர்தல் - விழித்தல். எளிவந்த: ஒரு சொல். தடங்கண் அள்ளற் கமலம் மலர்ந்து அங்கைக் கமலம் முகிழ்த்து என்பது பொருள் முரண். வேலை முளைக்கும் வேலையினில் என்பது ஓர் வகை எதுகை நயம். (சு)

நித்த நியமக் கடனிரப்பி நிருப னமைச்ச ரோடுநான்கு
பைத்த கருவிப் படையினெடு பலவே றியமுங் கலிப்பத்தன்
பொய்த்த மருங்குற் றிருமகளைப் பொன்ன னரோ டிரதமிசை
வைத்துமணஞ்சேர் திருவினெடும் மதுரைநோக்கிவழிக்கொண்டான்.

(இ - ள்.) நித்தம் நியமக் கடன் நிரப்பி - நாடொறுஞ் செய்யும் நியமமாகிய கடன்களைக் குறைவின்றி முடித்து, நிருபன் - சோமசேகரன், அமைச்சரொடு நான்கு பைத்த கருவிப் படையினெடு - மந்திரிகளோடும் நான்காகிய பரந்த சேனைகளோடும், பலவேறு இயமும் கலிப்ப - பல வேறு பட்ட இயங்களும் ஒலிக்க, தன் பொய்த்த மருங்குல் திருமகளை - பொய்யாகிய இடையினை யுடைய தன் புதல்வியாகிய காந்திமதியை, பொன் அனரோடு - திருமகள் போலும் தோழிகளோடு, இரத மிசை வைத்து - தேரின்மேல் வைத்து, மணம் சேர் திருவினெடு மதுரை நோக்கி வழிக்கொண்டான் - திருமணத்திற்குப் பொருந்திய செல்வத்தோடு மதுரைப்பதியை நோக்கிச் செல்லுதலுற்றான் எ - று.

பைத்த - பரந்த வென்னும் பொருட்டு, கருவியாகிய படையென இரு பெயரொட்டு; கருவி சேனை யாதலை "பொருள் கருவி காலம்" என்னும் திருக்குறளானறிக. பொய்த்த - இடை யுண்டென்பதே பொய்யாகிய; இடை மிகவும் சிறிதா யிருத்தலை அதிசயோக்தி வகையால் இங்ஙனம் கூறுவர்;

"கண்கொளா நுடங் கிடையை
உண்டெனத் தமர்மதிப்பர் நோக்கினர் பிறரெல்லாம்
உண்டில்லை யெனவைய மல்லதொன் றுணர்வரிதே"

என்பது சீவகசிந்தாமணி. (எ)

நென்ன லெல்லை மணம்பேச
நினைந்த வாறே யமைச்சர்மதி
மன்னர் பெருமான் றமரோடு
மணவூர் நோக்கி வழிவருவார்
அன்ன வேந்தன் றனைக்கண்டா
ரடல்வேற் குமர னனையானெந்
தென்னர் பெருமான் குமரனுக்குன்
றிருவைத் தருதி யெனவனையான்.

(இ - ள்.) அமைச்சர்-மந்திரிகள், நென்னல் எல்லை மணம் பேச நினைந்தவாறே-நேற்றைப் பொழுதில் மணவினை பேசுதற்கு நினைந்த வண்ணமே, மதி மன்னர் பெருமான் தமரோடும்-சந்திர மரபில் வந்த அரசர் பெருமானாகிய சுந்தரபாண்டியனுடைய சுற்றத்தாரோடும், மணவூர் நோக்கி வழி வருவார் - மணவூரை நோக்கி வழிக்கொண்டு வருகின்றவர்கள், அன்னவேந்தன் தனைக் கண்டார் - அச்சோமசேகர மன்னனைக் கண்டு, அடல் வேல் குமரன் அனையான்-வெற்றி பொருந்திய வேலை யேந்திய முருகக் கடவுளை ஒத்தவனாகிய, எம் தென்னர் பெருமான் குமரனுக்கு - எம் பாண்டியர் பெருமான் திருப்புதல்வனாகிய உக்கிரவழுதிக்கு, உன் திருவைத் தருதி என-உன் புதல்வியைத் தருவாய் என்று கூற, அனையான் - அம் மன்னன் எ - று.

அமைச்சர் வருகின்றவர் கண்டு தருதியென என்றும், குமரனனையானாகிய குமரனுக்கு என்றும் இயைக்க. வருவார்: வினைப்பெயர். கண்டார்: எச்சமுற்று. (அ)

குலனுங் குடியுங் கனவின்கட்
கொன்றை முடியார் வந்துரைத்த
நலனுங் கூறி மணநேர்ந்து
நயப்ப வதனை நன்முதியோர்
புலனென் றுழையர் தமைவிடுத்துப்
பொருளைத் துறைவர்க் குணர்த்திவரு
வலனுந் தயில்வேன் மன்னனொடு
மதுரை மூதூர் வந்தணைந்தார்.

(இ - ள்.) கனவின்கண் கொன்றை முடியார் வந்து உரைத்த - (நேற்றிரவு)கனவினிடத்துக் கொன்றை வேணியர் எளிவந்து கூறியருளிய, குலனும் குடியும் நலனும் கூறி-குலமும் குடிப்பிறப்பும் மேம்பாடும் கூறி, மணம் நேர்ந்து நயப்ப-(வினவிய) மணத்திற்கு உடன்பட்டு விரும்ப, அதனை-அச்செய்தியை, நல் முதியோர்-நல்லறிவுடைய முதியோர்கள், புலன் ஒன்று உழையர் தமை விடுத்து-அறிவு பொருந்திய தூதரை அனுப்பி, பொருனைத் துறைவற்கு உணர்த்தி-பொருனை நீர்த்துறையையுடைய சுந்தரபாண்டியனுக்கு அறிவித்து, வரு வலன் உந்து அயில் வேல் மன்னனொடும்-தம்மொடு வருகின்ற வெற்றியுண்டாகப்(பகைவர்மேற்)செலுத்தப்படும் கூரிய வேற்படையையுடைய சோமசேகர மன்னனோடும், மதுரை மூது ஊர் வந்தணைந்தார்-தொன்மையுடையதாகிய மதுரை நகரத்தை வந்தடைந்தார்கள் எ - று.

குலனும் குடியும் நலனும் கொன்றை முடியார் வந்துரைத்தமையைக் கூறியென்பது கருத்தாகக் கொள்க; தன் குலனையும், குடியையும், உரைத்த நலனையும் கூறி யென்றுமாம். புலனொன்றல் - மனம் வேறுபடாமையுமாம். (சு)

இரவி மருமான் மதிமருமா
 னெதிரே பணியத் தழீஇமுகமன்
பரவி யிருக்கை செலவுய்த்துப்
 பாண்டி வேந்த னிருந்தான்மேல்
விரவி யமைச்சர் திருமுகங்கள்
 வேந்தர் யார்க்கும் விடுத்துநகர்
வரைவு நாள்செய் தணிசெய்ய
 மன்றன் முரச மறைவித்தார்.

(இ - ள்.) இரவி மருமான் மதி மருமான் எதிரே பணிய-சூரியன் வழித்தோன்றலாகிய சோமசேகரன் சந்திரன் வழித்தோன்றலாகிய சுந்தரபாண்டியனை எதிரே சென்று வணங்க, பாண்டி வேந்தன்-அப்பாண்டிமன்னன், தழீஇ முகமன் பரவி - அவனைத் தழுவி உபசார மொழிகள் கூறி, இருக்கை செல உய்த்து இருந்தான் - அவனுக்கு அமைத்த இருப்பிடத்திற் செல்லுமாறு அனுப்பியிருந்தான்; மேல் - பின்பு, அமைச்சர் விரவி - மந்திரிகள் தம்முட்கூடி, வரைவுநாள் செய்து - திருமணநாளை வரையறுத்து, வேந்தர் யார்க்கும் திருமுகங்கள் விடுத்து - அரச ரனைவருக்கும் திருமணவோலை போக்கி, நகர் அணி செய்ய மன்றல் முரசம் அறைவித்தார் - நகரை அலங்கரிக்குமாறு மண முரசம் அறைவித்தார்கள் எ - று.

முகமன் பரவி - இன்மொழி கூறி. வரைவுநாள் - மணநாள். செய்தல் - அறுதியிடல். (௬0)

மாடம் புதுக்கிப் பூகதமுங்
 கதலிக் காடு மறுகெங்கும்
நீட நிரைத்துப் பாலிகையு
 நிறைபோற் குடமு முறைநிறுத்தி

ஆடு கொடியுந் தோரணமும்
புனைவித் தழகுக் கழகாகக்
கூட நெருங்கு நகரைமணக்
கோலம் பெருகக் கொளுத்தினர்.

(இ - ள்.) மாடம் புதுக்கி - (அந்நகரத்தார்) தங்கள் தங்கள் மாளிகைகளைச் சுண்ணமுதலியவற்றால் புதுக்கி, பூகதமும் கதலிக்காடும் மறுகு எங்கும் நீட நிரைத்து - கமுகமரங்களையும் வாழைமரக் காடுகளையும் வீதிகளெங்கும் மிக வரிசையாக நிறுத்தி, பாலிகையும் பொன்நிறை குடமும் முறை நிறுத்தி - முளைப்பாலிகையையும் பொன்னாலாகிய நிறை குடங்களையும் முறைப்படி வேதிகைதோறும் அமைத்து, ஆடு கொடியும் தோரணமும் புனைவித்து - அசைகின்ற கொடிகளையும் தோரணங்களையும் கட்டி, அழகுக்கு அழகாக - அழகுக்கு அழகு செய்பவராக, கூடம் நெருங்கும் நகரை - கூடங்கள் நெருங்கிய அப்பதியை, மணக்கோலம் பெருகக் கொளுத்தினர் - திருமண அழகு பொலிய அலங்கரித்தார்கள் எ - று.

பூகதம், தகரம் விரித்தல். மிகுதி தோன்றக் 'காடு' என்றார். நீட-மிக. இயற்கையின் அழகெல்லாம் முற்றுப்பெற்ற அந்நகர்க்கு மேலும் அழகு செய்தாரென்பார் 'அழகுக் கழகாக' என்றார். கூடம்-மண்டபம் முதலாயின. (கக)

தென்ற னாடன் றிருமகளைத்
தேவர் பெருமான் மணம்புரிய
மன்ற லழகா லொருநகரொப்
பதிக மின்றி மதுரைநகர்
அன்று தானே தனக்கொப்ப
தாகும் வண்ண மணியமைத்தார்
இன்று தானே தனக்கதிக
மென்னும் வண்ண மெழிலமைத்தார்.

(இ - ள்.) தென்றல் நாடன் திருமகளை - தென்றல் தோன்றும் பாண்டி நாட்டினை உடையவனாகிய மலயத்துவசன் திருமகளாகிய தடாதகைப் பிராட்டியாரை, தேவர் பெருமான் மணம்புரிய - தேவ தேவனாகிய சுந்தரபாண்டியன் திருமணம் புரிய, மன்றல் அழகால் - அத் திருமண அழகினால், ஒரு நகர் ஒப்பு அதிகம் இன்றி - மற்றொரு நகரம் ஈடும் எடுப்புமில்லையாக, மதுரை நகர் தனக்குத் தானே ஒப்பது ஆகும் வண்ணம் - மதுரைப்பதியானது தனக்குத்தானே ஒப்பாகுமாறு, அன்று அணி அமைத்தார் - அந்நாளில் அணி செய்தார்கள்; இன்று - இப்பொழுது, தனக்குத்தானே அதிகம் என்னும் வண்ணம் எழில் அமைத்தார் - தனக்குத்தானே மிக்கது என்னும்படி அழகு செய்தார்கள் எ - று.

தென்றல் - தெற்கிலிருந்து வரும் காற்று. பாண்டி நாடு தெற்கெல்லையிலுள்ளதாகலின் அதனைத் தென்றல் நாடு என்றார். ஒரு நகர் - பிறிதொரு நகரும். ஒப்பதிகம் இன்றி யென்றமையாலே தனக்குத்

தானே ஒப்பென்பது பெறப்படுமாயினும் விளங்குதற்குப் பின்னும் கூறினர். ஒப்பது, அது: பகுதிப்பொருள் விகுதி; தன்னை யொப்பது தானேயாகும் வண்ணம் எனினுமாம். தனக்கு அதிகம் - தன்னினும் அதிகம். (கஉ)

[கலிவிருத்தம்]

முன்னர் மாலை முடியணி சுந்தரத்
தென்ன ரேற்றின் றிருமுகங் கண்டுதாழ்ந்
தன்ன வாசக முட்கொண் டயற்புல
மன்னர் மாதவர் யாரும் வருவரால்.

(இ - ள்.) மாலை முடி அணி - மாலை சூழ்ந்த முடியினை அணிந்த, சுந்தரத்தென்னர் ஏற்றின் திருமுகம் - ஆண்சிங்கம்போலும் சுந்தர பாண்டியனது திருமுகத்தை, முன்னர் கண்டு தாழ்ந்து - தமது முன் கண்டு வணங்கி, அன்ன வாசகம் உட்கொண்டு - அதில் வரைந்த வாசகங்களை மனத்திற் கொண்டு, அயல்புல மன்னர் மாதவர் யாரும் வருவர் - வேற்று நாட்டு மன்னர் யாவரும் பெரிய தவத்தினையுடைய முனிவர் யாவரும் வருகின்றார்கள் எ - று.

மாலையினையும் முடியினையும் அணிந்த வென்றுமாம். பாண்டியருள் ஏறுகிய சுந்தரனென்க. திருமுகம் - திருமணவோலை. கண்டு முன்னர்த் தாழ்ந்து என்றலுமாம். யாவரும் என்பது யாருமென்றாயிற்று: எஞ்சாமைப் பொருட்டு; யாருமென்பதனை மன்னரோடுங் கூட்டுக. ஆல்: அசை. (கங)

புரவி வெள்ளமும் போர்க்கரி வெள்ளமும்
வரவிற் கால்வலி* மள்ளரின் வெள்ளமும்
விரவி யாழிய வெள்ளமு முள்ளுற
இரவி தன்வழித் தோன்றல்வந் தெய்தினன்.

(இ - ள்.) புரவி வெள்ளமும் போர்க்கரி வெள்ளமும் - குதிரை வெள்ளமும் போர் செய்தலையுடைய யானை வெள்ளமும், வரவில் கால்வலி மள்ளரின் வெள்ளமும் - விரைந்த செலவில் காற்றினைப் போலும் வலியினையுடைய வீரர்களின் வெள்ளமும் ஆகிய இவற்றுடன், ஆழிய வெள்ளமும் விரவி உள்ளுற - தேர் வெள்ளமும் கலந்து உள்ளே பொருந்த (இந்நால்வகைச் சேனையுடன்), இரவி தன் வழித்தோன்றல் வந்து எய்தினன் - சூரியன் வழித்தோன்றலாகிய சோழ மன்னன் வந்து சேர்ந்தான் எ - று.

வெள்ளம்: ஒரு பேரெண்; ஈண்டு அளவில்லன வென்னும் பொருட்டு. கால்வலி - தாள் வலியுமாம். ஆழிய வெள்ளம் - உருள்களையுடைய வெள்ளம். ஆவது தேர் வெள்ளம்; அ: அசையுமாம்; கடல் வெள்ளமும் கீழ்ப்பட வென்றுரைப்பாருமுளர். வரைவில் கால்வலி என்று பாடங்கொண்டு, அளவில்லாத கால்வலியையுடைய என்றுரைப்பர் ஒரு சாரார். (கச)

---

(பா - ம்.) * வரைவில் கால்வலி.

கோடு வில்லோடு மேகக் குழாங்கண்மின்
நீடு வாளோடு நேர்ந்தென மார்புதாழ்ந்
தாடு குண்டலக் காதுடை யாடவர்
சேட னீகத்துச் சேரன்வந் தீண்டினன்.

(இ - ள்.) மேகக் குழாங்கள்-மேகக் கூட்டங்கள், கோடு வில்லோடும் மின் நீடு வாளோடும் நேர்ந்தென - வளைந்த வில்லோடும் மின்னலாகிய மிக்க வாளோடும் வந்தாற்போல (வில்லோடும் வாளோடும் வந்த), மார்பு தாழ்ந்து ஆடு குண்டலக் காது உடை-மார்புவரை தொங்கி அசையும் குண்டலத்தை யணிந்த காதுகளையுடைய, ஆடவர்-வீரர்களாகிய, சேடு அனீகத்து - பெரிய சேனையையுடைய, சேரன் வந்து ஈண்டினன்-சேரமன்னன் வந்து சேர்ந்தான் எ - று.

கருநிறமுடைய வீரர்கள் வில்லும் வாளும் ஏந்தி வருதற்குக் கரிய முகில் இந்திர வில்லோடும் மின்னலோடும் வருதல் உவமம். உவமையின்கண் வில்லொடும் வாளொடும் என அடையடுத்தமையால்அவை பொருளுக்குங் கொள்ளப்பட்டன. நேர்ந்தென: விகாரம். உடைய என்பது ஈறு தொக்கது. ஆடவர் - வீரர். சேடு - பெருமை. (௪௫)

கடலு முள்ளமுங் காற்றும்பல் வண்ணமும்
உடலுங் கோண்டேன* வுந்துறு வாம்பரிப்
படுக டற்குட் பரிதியிற் றோன்றினன்
அடுப ரிப்பதி யாகிய வேந்தனே.

(இ - ள்.) கடலும் உள்ளமும் காற்றும்-கடலும் மனமும் காற்றுமாகிய இம்மூன்றும், பல் வண்ணமும் உடலும் கொண்டென - பல நிறமும் பல உடலும் கொண்டாற்போல, உந்துறு வாம்பரி படு கடற்குள் - செலுத்தப்படுகின்ற தாவும் குதிரைப்படையாகிய ஆழ்ந்த கடலினுள், அடு பரிப்பதி ஆகிய வேந்தன் - கொல்லுதலுடைய துரகபதியாகிய மன்னன், பரிதியில் தோன்றினன் - ஆதித்தனைப் போலத் தோன்றி வந்தான் எ - று.

குதிரைகள் அணியணியாய் அளவின்றி யிருத்தலின் அலை வரிசையுடன் கூடிய அளவில்லாத கடல்உருவு கொண்டாற்போல எனவும், விரைந்த செலவுடைமையால் உள்ளமும் காற்றும் உருவுகொண்டாற்போல எனவும் உரைக்கப்பட்டன. குதிரைகள் பலநிறமுடையவாகலின், 'பல்வண்ணமும் உடலுங் கொண்டென' என்றார். கொண்டாலென என்பது விகாரமாயிற்று. உந்துதல்-செலுத்துதல். வாவும்என்பதன் ஈற்றுய லுயிர்மெய் கெட்டது. படு, அடு என்பன முறையே கடலுக்கும் பரிக்கும்அடை. இச்செய்யுள் இல்பொருளுவமையணி. (௪௬)

அலகி லாவுத யந்தோறு மாதவர்
அலகி லாருதித் தென்னப்போன் ஞேடைசேர்
அலகி லாவேய னீகமோ டேய்தினன்
அலகி லாற்றற் கயபதி யண்ணலே.

---

(பா - ம்.) * கொண்டன.

(இ - ள்.) அலகு இலா உதயம் தொறும் - அளவில்லாத உதய மலைதோறும், அலகு இலார் ஆதவர் உதித்தென்ன - அளவில்லாத சூரியர் தோன்றினாற்போல, பொன் ஓடை சேர் அலகு இல் ஆனை அனீகமொடு - பொன்னாலாகிய பட்டமணிந்த அளவிறந்த யானைப் படையொடும், அலகு இல் ஆற்றல் கயபதி அண்ணல் எய்தினான் - அளவற்ற வலியையுடைய கயபதி என்னும் மன்னன் வந்து சேர்ந் தான் எ - று.

உதயம் என்பது உதயஞ் செய்யும் மலைக்காயிற்று. ஓடை-நெற் றியிலணியும் பட்டம். யானைகட்கு உதய வெற்புக்களும், பொன் னோடைகட்கு ஆதித்தர்களும் உவமம். அலகிலாராகிய ஆதவர் என்க. உதித்தென்ன: விகாரம். யானை ஆனையென்றாயிற்று. இது வும் இல்பொருளுவமையணி. (கஎ)

தொக்க மள்ள ரடிப்படு தூளிபோய்த்
திக்க டங்க விழுங்கித் திரைக்கடல்
எக்கர் செய்ய வெழுந்தியங் கல்லென
நக்க வேற்கை நரபதி நண்ணினான்.

(இ - ள்.) தொக்க மள்ளர் அடிப்படு தூளிபோய் - நெருங்கிய வீரர்களின் அடிகளாலெழுந்த புழுதிபோய், திக்கு அடங்க விழுங்கி- திசைகள் அனைத்தையும் மூடி, திரைக்கடல் எக்கர் செய்ய - அலைகளை யுடைய கடலைத் திடர் செய்யவும், எழுந்து இயம் கல்லென-எங்கும் பரவி இயங்கள் கல்லென்று ஒலிக்கவும், நக்க வேல் கை நரபதி நண்ணினான் - விளங்கிய வேற்படையை ஏந்திய கையையுடைய நர பதி யென்னும் அரசன் வந்து சேர்ந்தான் எ - று.

நகுதல் - ஒளிவிடுதல். இச் செய்யுள் உயர்வு நவிற்சியணி. (கஅ)

மீன வேலையிற் கந்துக மேற்கொடு
கூனல் வார்சிலை வஞ்சக் கொடுஞ்சமர்க்
கான வாழ்க்கை யரட்டக் கரும்படை
மான வேற்குறு மன்னவர் நண்ணினார்.

(இ - ள்.) மீனவேலையில் கந்துகம் மேற்கொடு-மீன்களையுடைய கடலையொத்த குதிரைமேற் கொண்டு, கூனல் வார்சிலை - வளைந்து நீண்ட வில்லாற்புரியும், கொடும் வஞ்ச சமர்-கொடிய வஞ்சப்போரி னையும், கான வாழ்க்கை - காட்டில் வாழும் வாழ்க்கையையும் உடைய, அரட்டக் கரும்படை-குறும்பராகிய கரிய படையுடன்,மான வேல் குறுமன்னவர் நண்ணினார்-வலிய வேற்படையையுடைய குறு நில மன்னர்கள் வந்து சேர்ந்தார்கள் எ - று.

மீன் என்னுந் தமிழ்ச்சொல் மீனமென வடமொழியிற் றிரிந் தது. வேலைபோலும் கரும்படையெனக் கூட்டலுமாம். சிலையை யும் என எண்ணுதலும், சமர்க்கு ஆன எனப் பிரித்துப் போருக் கமைந்த என்று கூறுதலும் ஆம். அரட்டர் - துட்டர்;

"அரட்ட ரைவரை யாசறுத் திட்டு"

என்பது தேவாரம்; அரட்டராகிய குறுமன்னவர் என இயைத்தலுமாம்; இதற்கு அரட்டர் குறுநில மன்னர் என்னும் பொருட்டு. (கக)

சீனர் சோனகர் சிங்களர் கோங்கணர்
மான வேல்வல மாளவர் சாளுவர்
தான மாநிரைச் சாவக ராதியாம்
ஏனை நாட்டுள மன்னரு மீண்டினர்.

(இ - ள்.) சீனர் சோனகர் சிங்களர் கொங்கணர் - சீனரும் சோனகரும் சிங்களரும் கொங்கணரும், மானவேல் வல மாளவர் சாளுவர்-வலிய வேற் போரில் வல்ல மாளவரும் சாளுவரும், தானம் மா நிரைச் சாவகர் ஆதியாம்-மத நீரினையுடைய யானைக் கூட்டத்தையுடைய சாவகரும் முதலாகிய, ஏனை நாட்டு உள மன்னரும் ஈண்டினர் - மற்றை நாட்டிலுள்ள அரசர்களும் வந்து சேர்ந்தார்கள் எ-று.

மானம் - பெருமையுமாம். சாவகம் - தெற்கே கடல் நடுவண் உள்ளதொரு நாடு. (உ0)

நூலோ டுந்துவக் குண்டு நடங்குமான்
றோலர் தூங்கு சுருக்குடைத் தானையர்
கோல முஞ்சியர் கிஞ்சுகக் கோலினர்
நாலு நூல்பயி ளுவினர் நண்ணினர்.

(இ - ள்.) நூலொடும் துவக்குண்டு நுடங்கும் மான்தோலர் - பூணூலுடன் கட்டுண்டு அசையும் மான்றோலையுடையவரும், தூங்கு சுருக்குடைத் தானையர்-(முன்னே) தொங்குகின்ற மடித்தலையுடைய ஆடையினரும், கோல முஞ்சியர் - அழகிய முஞ்சிப் புல்லாலாகிய அரைஞாணை யுடையவரும், கிஞ்சுகக் கோலினர் - முள் முருக்கங் கோலினை யுடையவரும், நாலு நூல் பயில் நாவினர் நண்ணினர் - நான்கு மறைகளையும் பயிலுகின்ற நாவினையுடையவரும் ஆகிய மாணவகர்கள் வந்து சேர்ந்தார்கள் எ - று.

சுருக்கு-கொய்சகம். முஞ்சி - ஒருவகைப் புல். கிஞ்சுகம்-பலாசம். மாணவகராவார் பிரமசாரிகள்; இவர் ஆசாரியனிடத்திருந்து ஓதுதலும் விரதங்காத்தலுமாகிய ஒழுக்கத்தினையுடையர். (உக)

வட்ட நீர்க்கலக் கையினர் வார்ந்துதோள்
விட்ட குண்டலக் காதினர் வேட்டதீத்
தோட்ட கோலினர் வேள்வியிற் சுட்டநீ
றிட்ட நெற்றிய ரில்லோடு நண்ணினர்.

(இ - ள்.) வட்டம் நீர்க்கலம் கையினர்-வட்டமாகிய கமண்டல மேந்திய கையினரும், வார்ந்து தோள் விட்ட குண்டலக் காதினர் - நீண்டு தோள்வரையும் தொங்கவிட்ட குண்டலத்தையுடைய செவியினரும், வேட்ட தீ தொட்ட கோலினர் -வேள்வி செய்வதற்குக் கருவியாகிய திக்கடை கோலினரும், வேள்வியில் சுட்ட நீறு இட்ட நெற்

றியர் - வேள்வியின்கண் நீற்ற திருநீற்றினையணிந்த நெற்றியினரும் ஆகிய வானப் பிரத்தர்கள், இல்லொடு நண்ணினர் - மனைவியரோடும் வந்து சேர்ந்தார்கள் எ - று.

நீர்க்கலம் - நீரினையுடைய கமண்டலம்; இது கரகமெனவும் குண்டிகையெனவும் படும்; இதனை உறியின்கண் வைத்து எடுத்துச் செல்வர். தோள்காறும் தொங்குமாறிட்டவென்க. வேட்ட என்பது வேட்கும் கருவியாகிய வென்னும் பொருளில் வந்தது. தீத்தொட்ட கோல் - தீப்பொருந்திய கோல்; தீக்கடைகோல். வானப்பிரத்தராவார் இல்லை விட்டுத் தீயொடு வனத்தின்கட் சென்று மனைவி வழிபடத் தவஞ்செய்யும் ஒழுக்கத்தினையுடையர். (உஉ)

முண்ட நெற்றியர் வெண்ணிற மூரலர்
குண்டி கைக்கையர் கோவணம் வீக்கிய
தண்டு கையர்கற் றானையர் மெய்யினைக்
கண்டு பொய்யினைக் காய்ந்தவர் நண்ணினர்.

(இ - ள்.) முண்டம்நெற்றியர் - திருநீறணிந்த நெற்றியினரும், வெள் நிற மூரலர் - வெள்ளிய நிறத்தினையுடைய பல்லினரும், குண்டிகை கையர் - கமண்டல மேந்திய கையினரும், கோவணம் வீக்கிய தண்டு கையர் - கோவணம் யாத்த கோலினை யேந்திய கையினரும், கல் தானையர் - கல்லாடையினரும், மெய்யினைக் கண்டு பொய்யினைக் காய்ந்தவர் - மெய்ப்பொருளை யுணர்ந்து பொய்ப் பொருளை வெறுத்தவரும் ஆகிய துறவினர், நண்ணினர் - வந்து சேர்ந்தார்கள் எ - று.

மூரல் - புன்னகையுமாம். கற்றானை - காவிக்கற் குழம்பிற் றோய்த்த ஆடை;

"கற்றோய்த் துடுத்த படிவப் பார்ப்பான்"

என்பது முல்லைப்பாட்டு. பொய்யாவன நிலையில்லாதன. துறவினராவார் முற்றத் துறந்தயோகவொழுக்கத்தினர்; சன்னியாசிகள். (உ௩)

தீந்தண் பாற்கடல் செந்துகிர்க் காட்டொடும்
போந்த போன்மெயிற் புண்ணியப் பூச்சினர்
சேந்த வேணியர் வேத சிரப்பொருள்
ஆய்ந்த கேள்வி யருந்தவ ரெய்தினர்.

(இ - ள்.) தீந்தண்பால் கடல் செந்துகிர்க் காட்டொடும் போந்த போல் - இனிய குளிர்ந்த பாற்கடலானது சிவந்த பவளக்காட்டொடும் வந்ததுபோல், மெய்யில் புண்ணியப் பூச்சினர் - மேனியில் திருநீறு தரித்தவரும், சேந்த வேணியர் - சிவந்த சடையினை உடையவரும் ஆகிய, வேத சிரப்பொருள் ஆய்ந்த கேள்வி - உபநிடதப் பொருளை ஆராய்ந்த கேள்வியையுடைய, அருந்தவர் எய்தினர் - அரிய தவத்தினையுடைய சைவ முனிவர்கள் வந்து சேர்ந்தார்கள் எ - று.

நீறு பூசிய திருமேனிக்குப் பாற்கடலும், செஞ்சடைக்குத் துகிர்க்காடும் உவமம்; புண்ணியம் நீறுதல்.

"புண்ணியமாவது நீறு"

என்னும் தமிழ்மறையானு மறிக. முன்னும் உரைக்கப்பட்டது. போந்தது என்பது ஈறு தொக்கது. சேந்த: சிவந்த என்பதன் மரூஉ. கேட்டு ஆராய்ந்ததனை 'ஆய்ந்த கேள்வி' என்றார். உபநிடதப் பொருளாகிய சிவபிரானை ஆராய்தற் கேதுவாகிய சிவாகமக் கேள்வியுடைய என்றுரைப்பாருமுளர். இல் பொருளுவமை. (உ௪)

ஆதி சைவர் முதற்சைவ ரைவருங்
கோதி லாவகச் சைவக் குழாங்களும்
பூதி மேனியர் புண்ணிய வைந்தெழுத்
தோது நாவின ரோல்லைவந் தெய்தினார்.

(இ - ள்.) ஆதிசைவர் முதல் சைவர் ஐவரும் - ஆதிசைவர் முதலிய ஐவகைச் சைவர்களும், கோது இலா அகச் சைவக் குழாங்களும் - குற்றமில்லாத அகச் சமயிகளாகிய அறுவகைச் சைவக் கூட்டத்தாரும், பூதி மேனியர் - நீறு பூசிய மேனியராயும், புண்ணிய ஐந்து எழுத்து ஓது நாவினர் - புண்ணிய வடிவமாகிய திருவைந்தெழுத்தினைப் பயிலும் நாவினையுடையராயும், ஒல்லை வந்து எய்தினார் - விரைவில் வந்து சேர்ந்தார்கள் எ - று.

சைவ ரைவராவார் ஆதி சைவர், மகா சைவர், அநுசைவர், அவாந்தரசைவர், பிரவரசைவர் என்போரென்றும்; அநாதி சைவனாகிய சிவனை யருச்சிக்கும் சிவவேதியர் ஆதி சைவரென்றும்; சிவ தீக்கை பெற்ற வைதிகப் பிராமணர் மகா சைவரென்றும், இங்ஙனமே சிவ தீக்கை பெற்ற ஏனையர் ஏனைய சைவப் பெயர்கட்கு உரிய ராவாரென்றும் கூறுப. ஆதி சைவப் பெயரொன்றுமே இப்பொழுது வழக்கிலுள்ளது. அகச்சமயங்களாகிய அறுவகைச் சைவமாவன: சைவம், பாசுபதம், மாவிரதம், காளாமுகம், வாமம், வைரவம் என்பன; இவ்வாறனையுமே உட்சமயமெனப் பிங்கல நிகண்டு கூறிற்று; இவற்றுள் சைவமும், காளாமுகம் ஒழிந்த நான்கும் காபாலமும் ஐக்கிய வாத சைவமும் ஆகிய ஆறும் அகப்புறச் சமயமெனச் சிவஞான போத மாபாடியத்தில் உரைக்கப்பட்டுள; அவற்றின் இலக்கணங்களை ஆண்டுக்காண்க; சங்கற்ப நிராகரணத்துள் ஓதிய பாடாணவாத சைவம் முதலிய ஆறு சமயங்கள் அகச்சமயமென்று கூறப்படும். (உரு)

வெண்க ளிற்றவன் வேரியந் தாமரைப்
பெண்க ளிப்புறு மார்பன் பிரமனோ
டோண்க ளிப்புற வும்பர் முதற்பதி
னெண்க ணத்தவர் யாவரு மீண்டினார்.

(இ - ள்.) வெண்களிற்றவன் - வெள்ளையானையையுடைய இந்திரனும், வேரி அம் தாமரைப் பெண் களிப்புறு மார்பன் - தேனையுடைய அழகிய தாமரை மலரை இருக்கையாகவுடைய திருமகள் இருந்து களிக்கும் மார்பினையுடைய திருமாலும், பிரமனோடு - பிரமனும், உம்பர் முதல் பதினெண் கணத்தவர் - தேவர் முதலாகிய பதினெண் கணத்தவரும், யாவரும் - மற்றையரும், ஒள் களிப்பு உற - சிறந்த மகிழ்ச்சி பொருந்த, ஈண்டினார் - வந்து சேர்ந்தார்கள் எ - று.

ஓடு: எண்ணிடைச் சொல்; பிறவழியும் பிரிந்து சென்றியையும். ஒண்மை-சிறப்பு. பதினெண் கணத்தவர்: தேவர், அசுரர், முனிவர், கின்னரர், கிம்புருடர், கருடர், இயக்கர், இராக்கதர், கந்தருவர், சித்தர், சாரணர், வித்தியாதரர், நாகர், பூதர், வேதாளர், தாரா கணம், ஆகாய வாசிகள், போக பூமியோர் எனும் இவர்கள். (உசு)

அணைந்து கோயி லடைந்தரிச் சேக்கைமேற்
குணங்க டந்தவன் கோமள வல்லியோ
டிணங்கி வைகு மிருக்கைகண் டேத்தினர்
வணங்கி னர்வணங் கும்முறை வாழ்த்தினர்.

(இ - ள்.) அணைந்து கோயில் அடைந்து-வந்து திருக்கோயிலைச் சேர்ந்து, அரிச் சேக்கை மேல் - சிங்காசனத்தின்மேல், குணம் கடந்தவன் கோமளவல்லியோடு இணங்கி வைகும் இருக்கை கண்டு - குணங்களைக் கடந்த சுந்தர பாண்டியர் இளங்கொடிபோலும் தடாதகைப் பிராட்டியாரோடும் சேர வீற்றிருக்கும் இருப்பினைத் தரிசித்து, ஏத்தினர் வணங்கும் முறை வணங்கினர் வாழ்த்தினர் - துதித்து வணங்கு முறையால் வணங்கி வாழ்த்தினர்கள் எ - று.

குணம் - மாயையின் காரியமாகிய முக்குணம். கோமளம் - இளமை அழகு. ஏத்தினர், வணங்கினர் என்பன முற்றெச்சங்கள். (உஎ)

விரைசெய் தார்முடிச் சுந்தர மீனவன்
சுரர்கண் மாதவர் வேந்தர்க்குத் தொன்முறை
வரிசை நல்கி யிருந்தனன் மன்னவன்
திரும கன்மணஞ் செய்திறஞ் செப்புவாம்.

(இ - ள்.) விரைசெய் தார் முடிச் சுந்தர மீனவன் - மணம் பொருந்திய மாலையை யணிந்த முடியினையுடைய சுந்தரபாண்டியன், சுரர்கள் மாதவர் வேந்தர்க்கு - தேவர்களுக்கும் முனிவர்களுக்கும் அரசர்களுக்கும், தொன்முறை வரிசை நல்கி-தொன்றுதொட்டுள்ள முறைப்படி வரிசை அளித்து, இருந்தனன் - வீற்றிருந்தான்; மன்னவன் திருமகன் மணம் செய்திறம் செப்புவாம்-(இனி)அப்பாண்டியன் திருமகனாகிய உக்கிரவழுதி திருமணம் புரியும் தன்மையைக் கூறுவாம் எ - று.

குவ்வுருபும் எண்ணும்மையும் விரிக்க. வரிசை - தகுதிக்கேற்ற சிறப்பு. (உஅ)

சோம சேகரன் றோகை வனப்பெலாங்
கோம கன்கண் டுவப்பக் கோள்கைகண்
டேம மேனிய னூல்வழி யார்க்குமத்
தேமன் கோதை யுறுப்பிய றேற்றுவான்.

(இ - ள்.) சோமசேகரன் தோகை வனப்பு எலாம் - சோம சேகரன் புதல்வியின் அழகு முழுவதையும், கோமகன் கண்டு உவப்ப-

சுந்தரபாண்டியன் அறிந்து மகிழாநிற்க, அக் கொள்கை கண்டு-அத் தன்மையினை யுணர்ந்து, ஏம மேனியன் - பொன்மேனியனாகிய குரு, நூல் வழி-உறுப்பியல் நூலின்படியே, யார்க்கும்-யாவருக்கும், அத் தேமன் கோதை - அந்தத் தேன்பொருந்திய மாலையை யணிந்த கூந்தலையுடைய காந்திமதியின், உறுப்பு இயல் தேற்றுவான்-உறுப் புக்களின் இலக்கணத்தைத் தெளிவிக்கின்றான் எ - று.

சோமசேகரன் பெற்ற தோகை போல்வா ளென்க. உவப்ப வென்பதற்கு உவக்குமாறென்றும், அக்கொள்கை யென்பதற்கு அதனை யுரைக்கவேண்டு மென்னும் அக்குறிப் பென்றும் பொரு ளுரைத்தலுமாம். (உகூ)

[எழுசீரடி யாசிரிய விருத்தம்]

பெருகநீண் டறவுங் குறுகிடா வாகிப்*
பிளந்திடாக் கடையவாய்த்† தழைந்து
கருவிவான் வண்டின் கணமெனக் கறுத்துக்
கடைகுழன் றியன்மணங் கான்று
புரையறச் செறிந்து நெறித்துமெல் லென்று
புந்திகண் கவரநெய்த் திருண்ட
மருமலர்க் குழலா டன்பதிக் கினிய
மல்லல்வான் செல்வமுண் டாகும்.

(இ - ள்.) பெருக நீண்டு அறவும் குறுகிடா வாகி-மிக நீளாம லும் மிகக் குறுகாமலும், பிளந்திடாக் கடையவாய்த் தழைந்து - பிளவுபடாத நுனியினை யுடையவாய்த் தழைவுற்று, கருவிவான் வண்டின் கணம் எனக் கறுத்து - தொகுதியாகிய முகில்போன்றும் வண்டின் திரள்போன்றும் கறுத்து, கடை குழன்று - நுனி குழற்சி யுற்று, இயல்மணம் கான்று - இயல்பாக மணம் வீசி, புரை அறச் செறிந்து-குற்றமற நெருங்கி, நெறித்து - அறல்பட்டு, மெல்லென்று- மெத்தென்று, புந்தி கண் கவர-(கண்டோர்) மனத்தையும் கண்களை யும் கொள்ளை கொள்ள, நெய்த்து இருண்ட-நெய்ப்புற்று இருண்ட, மருமலர்க்குழலாள் - மணம் பொருந்திய மலர்களை யணிந்த கூந்தலை யுடையவளின், பதிக்கு - நாயகனுக்கு, இனிய - இனிமையாகிய, வான் - சிறந்த, மல்லல் செல்வம் உண்டாகும் - மிக்க செல்வ முண் டாகும் எ - று.

பெருக - மிக. மிக நீளாமலு மென்க; நீண்டு என்னில் குறுகிடா வாகி யென்பது பயனிலதாம். நெய்த்தல்-பசையுறல். தன்: சாரியை. மல்லல், செல்வம் என்பன ஒரு பொருளன. இனிய வளனும் சிறந்த செல்வமும் என்னலுமாம், (௩௦)

திண்மத வேழ மத்தகம் போலத்
திரண்டுயர் சென்னியா ளவடன்
உண்மகிழ் கணவ னுயுணீண் டகில
வுலகர சுரியனு மேட்டாங்

(பா - ம்.) * குறுகிடாதாகி. † கடையதாய். நெறிந்து. புன் மையதாகி. நெய்த்து.

தண்மதி போன்று மயிர்நரம் பகன்று
தசைந்துமூ விரலிடை யகன்ற
ஒண்மதி நுதறன் பதிக்குநற் றிருவோ
டுலப்பிலா ரோக்கிய முண்டாம்.

(இ-ள்.) திண் மத வேழ மத்தகம் போல-திண்ணிய மதயானையின் மத்தகம் போன்று, திரண்டு உயர் சென்னியானவள் - திரண்டு உயர்ந்த தலையினை யுடையாளின், உள் மகிழ் கணவன் - மனமகிழும் நாயகன், ஆயுள் நீண்டு அகில உலகு அரசு உரியனும் - வாழ்நாள் மிக்கு எல்லா வுலகங்களையும் அரசாளுதற் குரியனுவான்; தண் - குளிர்ச்சி பொருந்திய, எட்டாம் மதிபோன்று - எண்ணுட் பக்கத்து மதியைப் போன்று, மயிர் நரம்பு அகன்று - மயிரும் நரம்பும் இல்லாமல், தசைந்து - தசைப்பற்றுடையதாய், மூவிரல் இடை அகன்ற - மூன்று விரல் அளவு இடையே விரிந்த, ஒள்மதி நுதல் தன்பதிக்கு - ஒள்ளிய மதிக்கின்ற நெற்றியை யுடையாளின் நாயகனுக்கு, நல் திருவோடு உலப்பு இல் ஆரோக்கியம் உண்டாம் - நல்ல செல்வமும் கெடுதலில்லாத உடல் நலமும் உண்டாகும் எ - று.

சென்னியாள் யாவள் அவளுடைய என விரிக்க. மதிக்கத்தக்க ஒள்ளிய நெற்றி. தன் இரண்டும் சாரியை. (ருக)

கண்கடை சிவந்தான் பாலென வெளுத்து
நடுவிழி கழியவுங் கரிதாய்
எண்கவி னடைந்து கோமளமாகி
யிமைகரு மயிர்த்தெனி னினிய*
ஒண்கரும் புருவங் குனிசிலை யொத்த
தத்தமி லொத்திரு தொளையும்
பண்கொள வுருண்டு துண்டமேட் போது
பதுமமேற் பூத்தது போலும்.

(இ-ள்.) கண் கடை சிவந்து-கண்ணனது கடையிற் சிவந்து, ஆன்பாலென வெளுத்து - பசுவின் பால்போல வெளுத்து, நடுவிழி கழியவும் கரிதாய்-விழியின் நடு மிகவும் கருமையாயிருக்கப்பெற்று, எண் கவின் அடைந்து-மதிக்கத்தக்க அழகுபெற்று, கோமளம் ஆகி-(நோக்குவார்க்குப்) பொலிவினை யுடையதாய், இமை கரு மயிர்த்து எனின் - இமையானது கருமயிரினையுடையவாக இருக்கப் பெற்றால், இனியது - (அது) இன்பந்தருவதாம்; ஒண் கரும் புருவம் - ஒள்ளிய கரிய புருவங்கள், குனிசிலை ஒத்த - வளைந்த வில்லைப்போன்றன (ஆயின் நல்லனவாம்); துண்டம் - நாசியானது, இரு தொளையும் தத்தமில் ஒத்து-இரண்டு தொளையும் வேறுபாடின்றித் தம்மில்ஒத்து, பண் கொள உருண்டு-அழகு பெற உருட்சியுடைத்தாகி, எள் போது பதும மேல் பூத்ததுபோலும் - எள்ளின் மலர் தாமரை மலரின் மேல் மலர்ந்தது போலும் (முகத்தில் விளங்குமாயின் நன்மையாம்)எ - று.

---

(பா - ம்.) * இனியது.

இச்செய்யுளின் முதலடியை,

"சேலனைய சில்லரிய கடைசிவந்து கருமணியம்
பாலகத்துப் பதித்தன்ன படியவாய்"

என்னும் சிந்தாமணிச் செய்யுளோடும்,

"பாலிற் கிடந்த நீலம் போன்று"

என்னும் திருவிடை மருதூர் மும்மணிக்கோவை யடியோடும் ஒப்பிடுக. கண்ணென்னும் சினை ஈண்டு முதலாகக் கடை நடுவிழி இமை என்பன அதற்குச் சினையாகியும், துண்டமென்னும் சினை ஈண்டு முதலாகத் தொளை அதற்குச் சினையாகியும் வந்தமையின், சிவந்து முதலிய சினை வினைகள் முதலொடு பொருந்தின வெனக் கொள்க. சில சொற்கள் வருவித்துரைக்கப்பட்டன. இனியது என்பதில் துவ் வீறு தொக்கது. (கூஉ)

வள்ளைபோல் வார்ந்து தாழ்ந்திரு செவியு
மடற்சுழி நல்லவாய் முன்னர்த்
தள்ளிய காது மனோகர மாகுந்
தன்மையா னன்மையே தழைக்கும்
ஒள்ளிய கபோலம் வட்டமாய்த் தசைந்திட்
டுயர்ந்துகண் ணாடிமண் டிலம்போ
றேள்ளிய வூற்ற மினியது நன்றேன்
றோதினன் றிரைகடற் செல்வன்.

(இ - ள்.) இருசெவியும் - இரண்டு செவிகளும், வள்ளைபோல் வார்ந்து - வள்ளைத் தண்டுபோல வார்தலையுடையனவாய், தாழ்ந்து மடல் சுழி நல்லவாய் - தாழ்ந்து மடலின் சுழிகள் நல்லனவாய், முன்னர்த் தள்ளிய காது - முன்னே தள்ளியன (ஆயின் அச்) செவிகள், மனோகரமாகும் தன்மையால் நன்மையே தழைக்கும் - அழகியனவாந் தன்மையால் நன்மையே தழையச் செய்யும்; ஒள்ளிய கபோலம் - ஒளி பொருந்திய கபோலமானது, வட்டமாய் - வட்டவடிவினதாய், தசைந் திட்டு உயர்ந்து - தசைப்பற்றுடையதாய் உயர்ந்து, கண்ணாடி மண்டிலம்போல் - கண்ணாடி வட்டம் போல, தெள்ளிய ஊற்றம் இனியது நன்று என்று - தெளிவுடைய பரிசம் இனியதாயின் நன்மை என்று, திரை கடல் செல்வன் ஓதினன் - அலைதலையுடைய கடலின் செல்வனாகிய வருணன் கூறினன் எ - று.

தள்ளியவாயின் அக் காது என விரிக்க. மனோகரம் - மனத்திற்கு மகிழ்ச்சி விளைக்கும் அழகு முதலியன. தழைக்கும் - தழைவிக்கும்: பிறவினை; உடையார்க்கு நன்மை பெருகுமென்றலுமாம். ஊற்றம் இனியது - சருச்சரையில்லாத இனிய பரிசமுடையது. வருணன் உறுப்பியல் நாலுட் கூறினனென்க. (கூகூ)

கோவ்வைவா யதரந் திரண்டிரு புடையுங்
குவிந்துசேந் திரேகைநேர் கிடந்தால்
அவ்வணி யிழைதன் னன்பனுக் கேன்று
நண்புரு வாதுமேண் ணுங்கு

வல்லவா ளேயிறு மிடைவெளி யின்றி
வார்ந்துமேல் கீழிரண் டொழுங்குஞ்
செவ்வனேர்ந் தாவின் பாலென வெள்கித்
திகழினன் றென்பர்* நூ றெளிந்தோர்.

(இ - ள்.) கொவ்வை வாய் அதரம் - கொவ்வைக் கனிபோலும் வாயின் இதழ், திரண்டு இருபுடையும் குவிந்து சேந்து - திரண்டு இரண்டு பக்கமும் குவிந்து சிவந்து, நேர் இரேகை கிடந்தால்-நேரில் இரேகை இருக்குமாயின், அவ்வணி இழை-அந்த அழகிய அணியினை யுடைய பெண், தன் அன்பனுக்கு என்றும் நண்பு உருவாகும் - தன் நாயகனுக்கு எஞ்ஞான்றும் நட்பின் வடிவாகியிருப்பாள்; வல்ல வாள் எண்ணான்கு எயிறும் - வலிய ஒளியுள்ள முப்பத்திரண்டு பற்களும், இடைவெளி இன்றி வார்ந்து - இடைவெளியில்லாமல் நெருங்கிய ஒழுங்கினவாய், மேல் கீழ் இரண்டு ஒழுங்கும் - மேலும் கீழுமாகிய இரண்டு வரிசைகளும், செவ்வன் நேர்ந்து - நேராகத் தம்முள் ஒத்து; ஆவின் பாலென வெள்கி - பசுவின் பால்போல் வெண்மையுடையன வாய், திகழின் - விளங்குமாயின், நூல் தெளிந்தோர் நன்று என்பர் - உறுப்பு நூலுணர்ந்தோர் நன்மை என்று கூறுவர் எ - று.

அணி - அழகு; அணியிழை: அன்மொழித் தொகை. வல்ல-வன்மையுடைய. வெள்கி - வெண்ணிறமுற்று. (௩௪)

மெல்லிதாய்ச் சிவந்து கோமள மான
நாவினுள் வேட்டவேட் டாங்கே
வல்லைவந் தெய்த நுகர்ந்திடுந் தசைந்து
வட்டமா யங்குல மிரண்டின்
எல்லைய தாகி மஞ்சுள மாகி
யிருப்பது சுபுக† நன் றென்பர்
அல்லியங் கமலம் போன்மணந் திருடீர்ந்
தவிர்மதி போல்வது முகமே.

(இ - ள்.) மெல்லிது ஆய் சிவந்து கோமளம் ஆன நாவினுள் - மென்மையுடையதாய்ச் சிவந்து இளமைபொருந்திய நாவினையுடையாள், வேட்ட வேட்டாங்கே வல்லை வந்து எய்த நுகர்ந்திடும்-விரும்பியன விரும்பியவாறே விரைய வந்து பொருந்த நுகருவாள்; சுபுகம்-மோவாயானது, தசைந்து வட்டமாய் - தசைப் பற்றுடையதாய் வட்டமாய், அங்குலம் இரண்டின் எல்லையது ஆகி-இரண்டங்குல அளவினை யுடையதாய், மஞ்சுளமாகி இருப்பது நன்று என்பர்-அழகியதாயிருத்தல் நன்மை என்று கூறுவர் பெரியார்; முகம் - முகமானது, அல்லி அம் கமலம் போல் மணந்து - அகவிதழையுடைய அழகிய தாமரை மலர்போல மணம் வீசி, இருள் தீர்ந்து அவிர் மதி போல்வது - களங்கமின்றி விளங்கும் திங்களைப்போன்று (தண்ணொளி) உடைத்தாயிருத்தல் (நன்மையாம்) எ - று.

---

(பா - ம்.) * வெள்கிச் சிறிதுயர்ந்திருப்பினன்கென்பர் †சிபுகம்.

வேட்ட: வினையாலணையும் பெயர்; வேள்: பகுதி. வேட்டவாங் கென்பதுவேட்டாங் கென்றாயிற்று; ஆங்கு: உவமச்சொல். இருப்பது, போல்வது என்பன தொழிற்பெயர்கள். (௩௫)

திரைவளைக் கழுத்துத் தசைந்துநால் விரலி
னளவதாய்த் திரண்டுமூன் றிரேகை
வரைபடிற் கொழுந னகிலமன் னவனு
மார்பகந் தசைந்துமூ வாறு
விரலள வகன்று மயிர்நரம் பகன்று
மிதந்ததேல் விழுமிதாம் வேய்த்தோள்
புரையறத் தசைந்து மயிரகன் றென்பு
புலப்படா மொழியகோ மளமாம்.

(இ-ள்.) திரைவளைக் கழுத்து-கடலிற்றோன்றிய சங்குபோலும் கழுத்து, தசைந்து - தசைவுற்று, நால்விரலின் அளவது ஆய்-நான்கு அங்குல அளவினையுடையதாய், திரண்டு - உருட்சியாய், மூன்று இரேகை வரைபடின்-மூன்று இரேகையாகிய வரையினைப் பொருந்தி யிருக்குமாயின், கொழுநன் அகில மன்னவன் ஆம் - அப்பெண்ணின் கணவன் எல்லா வுலகிற்கும் அரசனுவான்; மார்பகம் - மார்பிடமானது, தசைந்து - தசையுடையதாய், மூவாறு விரல் அளவு அகன்று- பதினெட்டங்குல அளவுபரந்து, மயிர் நரம்பு அகன்று மிதந்ததேல் விழுமிது ஆம்-மயிரும் நரம்புமில்லாமல் உயர்ந்திருக்குமாயின் நன்மையுடையதாம்; வேய்த்தோள்-மூங்கில்போன்றதோள்கள், புரை அறத் தசைந்து - குற்றமறத் தசைப்பற்று உடையனவாய், மயிர் அகன்று-மயிரில்லாமல், என்பு புலப்படா மொழிய-எலும்பு தோன்றாத மொழிகளையுடையன(ஆயின்),கோமளம் ஆம்-நன்மையாம் எ-று.

திரை கடலுக்கு ஆகுபெயர். இரேகை, வரை யென்பன ஒரு பொருளன. மொழி, தோள் முதலியவற்றிலுள்ள கரடு; இது மூளி யெனவும் வழங்கும், மொழியவாயின் என விரிக்க. (௩௬)

செங்கைநீண் டுருண்டு கணுக்கள்பெற் றடைவே
சிறுத்திடிற்* செல்வமோ டின்பந்
தங்கும்வள் ளுகிர்சேந் துருண்டுகண் ணுள்ளங்
கவர்வதாய்ச் சரசரப் பகன்றால்
அங்கவை நல்ல வகங்கைமேல் லெனச்சேந்
திடைவெளி யகன்றிடை யுயர்ந்து
மங்கல மாய்ச்சில் வரைகளி னல்ல
விலக்கண வரையுள மாதோ.

(இ-ள்.) செங்கை சிவந்த கைகள், நீண்டு உருண்டு கணுக்கள் பெற்றுஅடையவே சிறுத்திடில்-நீண்டு உருண்டு கணுக்களையுடையன

(பா - ம்.) * செங்கையங் குலிநீண் டுருண்டுகண் மரீஇநேர் சிறுத்திடில்.

வாய் முறையே சிறுத்திருக்குமாயின்; செல்வமோடு இன்பம் தங்கும்-பொருளோடு இன்பமும் நிலைபெறும்; வள் உகிர் சேந்து உருண்டு-கூரிய நகங்கள் சிவந்து உருண்டு, கண் உள்ளம் கவர்வதாய் - (கண்டோரின்) கண்ணையும் மனத்தையும் கொள்ளை கொள்வனவாய், சரசரப்பு அகன்றால்-சருச்சரை ஒழிந்துளவாயின், அவை நல்ல - அவை நல்லனவாம்; அகங்கை-அகங்கைகள், மெல்லெனச்சேந்து-மென்மையுடையவாய்ச் சிவந்து, இடைவெளி அகன்று இடை உயர்ந்து-இடைவெளியின்றி நடுவில் உயர்ந்து, மங்கலமாய் - பொலிவையுடையனவாய், சில் வரைகளின் இலக்கணவரை உள - சிலவாகிய இரேகைகளில் உத்தம இலக்கணம் வாய்ந்த இரேகைகள் உள்ளன (ஆயின்), நல்ல-நன்மையுடையனவாம் எ - று.

கவர்ந்து: பன்மையிலொருமை வந்தது. அங்கு, மாது, ஓ என்பன அசைகள். 'செங்கையங் குலிநீண் டுருண்டுகண் மாறிநேர் சிறுத்திடில்' எனப் பாடங்கொண்டு, 'சிவந்த கைவிரல்கள் நீண்டு திரண்டு கணுக்கள் பொருந்தி முறையே சிறுத்துளவாயின்' எனப் பொருளுரைப்பர் மதுரை இராமசுவாமிப் பிள்ளை. (கஎ)

முத்தணி தனங்கள் கடினமாய்த் தசைந்து
　　வட்டமாய் முகிழ்த்திரு கடநேர்
ஒத்திறு மாந்தீர்க் கிடையற நெருங்கி
　　யுள்ளன மெலிந்தமர்ந் துரோம
பத்திபெற் றயலே மயிர்நரம் பகன்ற
　　பண்டியா ளுண்டிவேட் டாங்கே
துய்த்திடு நாபி வலஞ்சுழித் தாழ்ந்தாற்
　　றொலைவிலாத் திருவளம் பெருகும்.

(இ - ள்.) முத்து அணி தனங்கள்-முத்துமாலை அணிந்த கொங்கைகள், கடினமாய்-இறுகியனவாய், தசைந்து-தசைப்பற்றுடையனவாய், வட்டமாய் முகிழ்த்து - வட்டமாக அரும்பி, இருகடம் நேர் ஒத்து-இரண்டு குடங்களைப்போன்று, இறுமாந்து-இறுமாத்தலுற்று, ஈர்க்கு இடை அறநெருங்கி உள்ளன - ஈர்க்கானது இடையில் புகாத வண்ணம் நெருங்கி யிருப்பன (ஆயின் நன்மை யுடையனவாம்); மெலிந்து அமர்ந்து - குழைவுடையதாய்ப் பொருந்தி, உரோம பத்தி பெற்று - (நடுவில்) மயிர் வரிசை பெற்று, அயலே மயிர் நரம்பு அகன்ற பண்டியாள்-பக்கத்தே மயிரும் நரம்பும் இல்லாத வயிறுடையவள், வேட்டாங்கே உண்டி துய்த்திடும் - விரும்பியபடியே சிறந்த உணவினை நுகர்வாள்; நாபி வலம் சுழித்து ஆழ்ந்தால் - நாபியானது வலமாகச் சுழித்து ஆழமுடையதாயின், தொலைவு இலாத் திருவளம் பெருகும்-கெடுதலில்லாத செல்வ வளம் பெருகும் எ - று.

நேர் ஒத்து - நன்கொத்து. ஈர்க்கு இடையற நெருங்கி யென்ற கருத்து,

"ஈர்க்கிடை போகா விளமுலை"

எனத் திருவாசகத்திற் போந்துளது. நாபி வலஞ் சுழித்தல்,

"அங்கைபோல் வயிறணிந்த வலஞ்சுழி யமைகொப்பூழ்"
என்று சிந்தாமணியிற் கூறப்பட்டுள்ளது. உள்ளன வென்பதன்பின் சில சொற்கள் வருவிக்கப்பட்டன. (கூஅ)

இடைமயிர் நரம்பற் றிருபதோ டொருநான்
கெழில்விர லளவோடு வட்ட
வடிவதாய்ச் சிறுகி மெலிவது நிதம்ப
மத்தகம் யாமையின் புறம்போற்
படிவநே ரொத்த னன்றிரு குறங்கும்
படுமயி ரென்பகன் றியானைத்
தடவுடைக் கையுங் கரபமுங் கதலித்
தண்டுமொத் திருக்கினன் றென்ப.

(இ - ள்.) இடை - மருங்குலானது, மயிர் நரம்பு அற்று - மயிரும் நரம்பும் இன்றி, இருபதோடு ஒரு நான்கு எழில் விரல் அளவொடு - இருபத்து நான்கு அழகிய விரலினளவினோடு, வட்ட வடிவதாய்ச் சிறுகி மெலிவது - வட்ட வடிவினதாய்ச் சிறுத்துத் தளர்வது (ஆயின் நன்மையாம்); நிதம்பம் - அல்குலானது, மத்தகம் யாமையின் புறம் போல் - யானையின் மத்தகமும் யாமையின் முதுகும் போல, படிவம் நேர் ஒத்தல் நன்று - வடிவு சமமாயிருத்தல் நன்மையாம்; இருகுறங்கும் - இரண்டு தொடையும், படுமயிர் என்பு அகன்று - உண்டாகும் மயிரும் எலும்பும் நீங்கி, யானை தட உடைக் கையும் - யானையினது பெருமை பொருந்திய துதிக்கையையும், கரபமும் - கையினடியையும்; கதலித்தண்டும் - வாழைத் தண்டையும், ஒத்திருக்கில் நன்று என்ப - ஒத்திருக்குமாயின் நன்மை என்று கூறுவர் எ - று.

நிதம்பம் - இடையின் கீழ்ப்பக்கம்; பின்புறமாகிய சகனமென்றும் உரைப்பர். தட - பெருமை;

"தடவுங் கயவு நளியும் பெருமை"

என்பது தொல்காப்பியம். (கூக)

அங்கமுண் மறைந்து வட்டமாய்த் தசைவ
தணிமுழந் தாண்மயிர் நரம்பு
தங்கிடா தடைவே யுருட்சியாய்ச் சிறுத்துச்
சமவடி வாயழ கடைந்த
சங்கையாஞ் சிரையென் பறத்தசைந் தியாமை
முதுகெனத் திரண்டுயர்ந் தழகு
மங்கலம் பொலிந்த புறவடி மடந்தை
மன்னவன் பன்னியா மன்னே.

(இ - ள்.) அணி முழந்தாள் - அழகிய முழங்கால், அங்கம் உள் மறைந்து - எலும்பு வெளித்தோன்றாமல் உள்ளே மறைந்து, வட்ட

மாய் - வட்ட வடிவாய், தசைவது - தசைப்பற்றுடையதாயின் (நன்மையாம்); சங்கை - கணைக்கால்கள், மயிர் நரம்பு தங்கிடாது - மயிரும் நரம்பும் இல்லாமல், உருட்சியாய் அடைவே சிறுத்து-திரண்டு முறையே சிறுத்து, சமவடிவாய் அழகு அடைந்தவாம் - (தம்மில்) ஒத்த வடிவாய் அழகுடையனவாயின் (நன்மை) ஆகும்; சிரை என்பு அறத் தசைந்து - நரம்பும் எலும்பும் இன்றித் தசைந்து, யாமை முதுகு எனத் திரண்டு உயர்ந்து-யாமையின் முதுகுபோலத் திரண்டு உயர்ந்து, அழகு மங்கலம் பொலிந்த-அழகினாலும் பொலிவினாலும் விளங்கிய, புற அடி மடந்தை - புறவடியினையுடைய பெண், மன்னவன் பன்னி ஆம் - அரசனுக்கு மனைவியாவாள் எ - று.

ஆம் என்பதனை அடைந்தவாம் எனப் பிரித்துக் கூட்டுக. சிரை-நரம்பு. மன்னும் ஓவும் அசைகள். (சo)

அல்லியங் கமலக் கால்விர லுயர்ந்து
தூயவா யழக வாய்க் கழுநீர்
மெல்லிதழ் நிரைத்தாங் கொழுங்குறத் திரண்டு
வாலுகிர் வெண்மதிப் பிளவு
புல்லிய போன்று மெல்லிய வாகிப்
புகரறத் தசைந்தன வகத்தாள்
சொல்லிய தசைவு மென்மையுஞ் சமமுந்
துகளறப் படைத்தன நன்றால்.

(இ - ள்.) அல்லி அம் கமலக் கால் விரல் - அகவிதழையுடைய அழகிய தாமரை மலர் போன்ற காலின் விரல்கள், உயர்ந்து தூய வாய் அழகவாய் - உயர்ந்து தூய்மையுடையனவாய் அழகியனவாய், கழு நீர் மெல் இதழ் நிரைத்தாங்கு - செங்கழுநீர் மலரின் மெல்லிய இதழ்களை வரிசைப்பட வைத்தாற்போல, ஒழுங்கு உறத் திரண்டு - ஒழுங்கு பெறத் திரண்டு, வால் உகிர் - வெள்ளிய நகங்கள், வெள் மதிப் பிளவு புல்லிய போன்று-வெள்ளிய மதியின் பிளவுகள் அவ் விரல்களைப் பொருந்தியன போலப் (பொருந்தப் பெற்று), மெல்லிய வாகி - மென்மையுடையனவாய், புகர் அறத் தசைந்தன (நன்று) - குற்றமின்றித் தசையுடையனவாயின் நன்மையாம், அகத்தாள் - உள்ளங் கால்கள், சொல்லிய தசைவும் மென்மையும் சமமும் துகள் அறப் படைத்தன நன்று-நூலிற் கூறிய தசைப் பற்றும் மென்மைத் தன்மையும் சமனாதலும் குற்றமறப் பெற்றனவாயின் நன்மையாம் எ - று.

திரண்டு உகிர் பொருந்தப் பெற்று மெல்லியவாகி யென்க. நன்று என்பது முன்னும் கூட்டப்பட்டது. ஆல்: அசை. (சக)

வண்ணமாந் தளிர்போற் சிவந்தேரிபொன்போல்
வைகலும் வெயர்வையற் றகம்
உண்ணமா யிருக்கிற் செல்வமுண்
டாகு மோண்மணம் பாடலங் குவளை

தண்ணறு முளரி மல்லிகை
நறுந்தண் சண்பகம் போல்வன வாகும்
பண்ணவாங் கிளவி குயில்கிளி
யாழிற் படின்வரும் பாக்கிய மென்ன.

(இ – ள்.) ஆகம் - உடம்பு, வண்ணம் மாந்தளிர் போல் - செந்நிறமுடைய மாந்தளிர் போலவும், எரி பொன் போல் சிவந்து-விளங்கும் பொன் போலவும் செந்நிறம் வாய்ந்து, வைகலும் வெயர்வை அற்று - எஞ்ஞான்றும் வெயர் வரும்பாமல், உண்ணமாய் இருக்கில்-வெம்மையாய் இருக்குமாயின், செல்வம் உண்டாகும் - செல்வம் உள்தாகும்; ஒள்மணம் - (அவ்வுடலின்) மிக்க மணமானவை, பாடலம் - பாதிரி மலரும், குவளை - நீலோற்பல மலரும், தண் அறு முளரி - தட்பம் நீங்காத தாமரை மலரும், மல்லிகை-மல்லிகை மலரும், நறுந் தண் சண்பகம் - இனிய குளிர்ந்த சண்பக மலரும் ஆகிய இவற்றின் மணங்களை, போல்வன ஆகும் - ஒத்தன வாதல் வேண்டும்; பண் அவாம் கிளவி-இசையும் விரும்புகின்ற மொழி, குயில் கிளி யாழின் படின்-குயிலும் கிளியும் யாழுமாகிய இவற்றின் ஓசை போல இருக்கின், பாக்கியம் வரும் என்ன - பாக்கியம் வரும் என்று கூறி எ - று.

உண்ணம், உஷ்ணமென்பதன் சிதைவு. பாடலம் முதலியன அவற்றது மலரின் மணத்திற்கும், குயில் முதலியன அவற்றின் ஓசைக்கும் ஆயின. அவாவுமென்பது விகாரமாயிற்று. படின்-பொருந்தின். மேலைச் செய்யுளில் 'துகளிலா வழுகுமேயன்றி' என்றும், இச் செய்யுளில் 'உண்ணமுஞ் சிவப்பு முள்ளதாய் வேர்வை யொழிந்ததேற் செல்வமா மாகம், வண்ணமார் பொன்போ னன்னிறம் வாய்தல் வண்மணம்' என்றும், 'சம்பகம் போல்வது நன்றும்' என்றும் பாடங் கொண்டனர் இராமசுவாமிப் பிள்ளை. (சுஉ)

[அறுசீரடி யாசிரிய விருத்தம்]

கருங்குழற் கற்றை தொட்டுச் செம்மலர்க் காலி னெல்லை
மருங்குனல் கூர்ந்த கன்னி வடிவெலாம் வாக்கின் செல்வன்
ஒருங்குநூ லுணர்வாற் றெள்ளி யிம்பரின் றும்பர் தேத்தும்
இரங்குமிக் குயிலன் னாண்மெய் யிலக்கண மரிய தென்றான்.

(இ- ள்.) நல்கூர்ந்த மருங்குல் கன்னி - சிறுகிய இடையினையுடைய காந்திமதியின், கற்றைக் கருங்குழல் தொட்டு - திரண்ட கரிய கூந்தல் முதல், செம்மலர்க்காலின் எல்லை வடிவு எல்லாம்-செந்தாமரை மலர் போன்ற காலின் வரையுள்ள உறுப்புகளனைத்தையும், வாக்கின் செல்வன் - மொழிச் செல்வனாகிய வியாழ குரவன், நூல் உணர்வால் ஒருங்கு தெள்ளி - உறுப்பு நூலின் உணர்ச்சியால் ஒரு சேர ஆராய்ந்து, இரங்கும் இக்குயில் அன்னாள் மெய் இலக்கணம் - கூவுகின்ற குயில் போன்ற இக் காந்திமதியின் உறுப்பிலக்கணமும், இம்பர் இன்று - இவ்வுலகத்தில் இல்லை; உம்பர் தேத்தும் அரியது என்றான் - விண்ணுலகத்தும் இல்லை என்று கூறினான் எ - று.

வாக்கின் செல்வன் - சொல்லாலாகிய செல்வத்தையுடையவன்;

"யார்கொலிச் சொல்லின் செல்வன்"

என்பது இராமாயணம். உம்பர் தேத்தும் என்பதனை உம்பராகிய தேத்து மென்றுவது, உம்பரது தேத்து மென்றுவது விரித்துரைத் துக் கொள்க: தேம் - இடம்; தேத்துமென்னும் உம்மை எச்சமும் சிறப்புமாம். இரங்கல் - ஒலித்தல்; கூவுதல். (சங)

அங்கது கேட்டோர் யாரு மகங்களி துளும்ப விப்பாற்
கோங்கலர் நறுந்தார்க் குஞ்சி யுக்கிர வழுதி* போந்து
மங்கல வரிசை மாண மத்தமான்† சுமந்த வையைச்
சங்கெறி துறைநீ ராடித் தகுங்கடி வனப்புக் கோள்வான்.

(இ - ள்.) அங்கு அது கேட்டோர் யாரும் அகம் களி துளும்ப - அங்கு அதனைக் கேட்ட அனைவரும் மனம் மகிழ் சிறந்திருக்க, இப் பால் - பின்பு, கொங்கு அலர் நறுந்தார்க் குஞ்சி உக்கிர வழுதி போந்து - மகரந்தத்துடன் மலர்ந்த நறுமணமுடைய மலர் மாலையை அணிந்த சிகையினையுடைய உக்கிர வழுதி (அவணின்றும்) எழுந்து, மங்கல வரிசை மாண - அட்ட மங்கல வரிசைகளும் சிறக்க, மத்த மான் சுமந்த - மதச் செருக்குடைய யானையால் சுமந்து வரப்பெற்ற, வையை - வையை யாற்றின், சங்கு எறி துறை நீர் ஆடி - சங்குகளை வீசும், துறையின் நீரில் ஆடி, தகும் கடி வனப்புக் கொள்வான்-சிறந்த திருமணக்கோலம் கொள்ளத் தொடங்கினான் எ - று.

களி துளும்ப வென்னும் சினைவினை முதல் மேல் நின்றது. மத்தம் - மயக்கம்; மதக்களி. சுமந்த நீரி லென்க. (சச)

கட்டவிழ் கண்ணி வேய்ந்து மான்மதக் கலவைச் சாந்தம்
மட்டனஞ் செய்து முத்தான் மாண்கலன் முழுதுந் தாங்கி
விட்டவிர் கலைவான் றிங்கள் வெண்கதிர்ச் செல்வன் போல்வந்
திட்டபூந் தவிசின் மேற்கொண் டிருந்தனன் சங்க மேங்க.

(இ - ள்.) கட்டு அவிழ் கண்ணி வேய்ந்து - முறுக்கு அவிழ்ந்த மலர் மாலை சூடி, மான்மதக் கலவைச் சாந்தம் மட்டனம் செய்து - மிருக மதங் கலந்த கலவையாகிய சந்தனத்தை அப்பி, முத்தால் மாண்கலன் முழுதும் தாங்கி - முத்துக்களால் மாட்சிமைப்பட்ட அணிகளனைத்தையும் அணிந்து, விட்டு அவிர் கலைவான் திங்கள் வெண் கதிர்ச் செல்வன் போல் வந்து - விட்டு (விட்டு) விளங்கும் கலையினையுடைய வானின்கண் உள்ள திங்களாகிய வெள்ளிய கிரணத் தையுடைய சந்திரன் போல வந்து, இட்ட பூந்தவிசின் - கல்யாண மண்டபத்தில் இட்ட அழகிய ஆதனத்தின் மேல், சங்கம் ஏங்க மேற் கொண்டு இருந்தனன் - சங்கங்கள் ஒலிக்க ஏறி யிருந்தான் எ - று.

கண்ணி - முடியிற் சூடுமாலை. மட்டனஞ் செய்து - மட்டித்து; பூசி. முத்தானியன்ற கலன்களை முழுதுந் தாங்கியிருத்தலின் திங்கட் செல்வன்போ லென்றார்; தன் குல முதல்வனென்பது தோன்றக் கூறினார். (சரு)

---

(பா - ம்.) * உக்கிர குமரன். † மானமத்தமான்.

அந்நிலை மணநீ ராட்டி யருங்கலப் போர்வை போர்த்த
கன்னியைக் கோணர்ந்து நம்பி வலவயிற் கவின வைத்தார்
பன்னியோ டெழுந்து சோம சேகரன் பரனும் பங்கின்
மன்னிய வுமையு மாக மதித்துநீர்ச் சிரகந் தாங்கி.

(இ - ள்.) அந்நிலை - அப்பொழுது மண நீர் ஆட்டி - மணம் பொருந்திய நீரில் மூழ்குவித்து, அருங்கலப் போர்வை போர்த்த கன்னியைக் கொணர்ந்து - அரிய அணிகலனாகிய போர்வையில் போர்க்கப்பட்ட காந்திமதியைக் கொண்டு வந்து, நம்பி வலவயின் கவின வைத்தார் - உக்கிரகுமாரனது வலப்பக்கத்தில் அழகு பெற வைத்தனர்; சோம சேகரன் பன்னியோடு எழுந்து - சோம சேகரனு னவன் தன் மனைவியோடு மெழுந்து, பரனும் பங்கில் மன்னிய உமையுமாக மதித்து - (அம் மண மக்களைச்) சிவபிரானும் அவன் பாகத்தில் நிலைபெற்ற உமைப் பிராட்டியுமாகக் கருதி, நீர்ச் சிரகம் தாங்கி - நீர் நிறைந்த கரகத்தைக் கையில் ஏந்தி எ - று.

மண நீர் - பத்துத் துவரினும் ஐந்து விரையினும் முப்பத்திரு வகை ஓமாலிகையினும் ஊறிய நன்னீர்; மன்றலுக் குரிய நீராட்டுச் செய்து என்றுமாம். சிவனும் உமையுமாக மதித்துப் பூசித்தல் மரபு. சிகரம் - கமண்டலம். (௬௬)

மங்கல நீரா னம்பி மலரடி விளக்கி வாசக்
கொங்கலர் மாலை சூட்டிக் குளிர்மது பருக்க மூட்டி
நங்கைதன் கையைப் பற்றி நம்பிதன் கையி லேற்றிப்
புங்கவ ரறிய நன்னீர் மந்திரம் புகன்று பெய்வான்.

(இ - ள்.) மங்கல நீரால் நம்பி மலர் அடி விளக்கி - நலன் நிறைந்த அந்நீரினால் உக்கிர வழுதியின் மலர் போன்ற திருவடிகளை விளக்கி, வாசக் கொங்கு அலர்மாலை சூட்டி - மணம் பொருந்திய மகரந்தத்தொடு மலர்ந்த மலர் மாலையை அணிவித்து, குளிர் மது பருக்கம் ஊட்டி - குளிர்ந்த மது பருக்கத்தினை உண்பித்து, நங்கை தன் கையைப் பற்றி - பெண்ணின் கையைப் பிடித்து, நம்பி தன் கையில் ஏற்றி - மண மகன் கையில் வைத்து, புங்கவர் அறிய - தேவர்கள் அறிய, மந்திரம் புகன்று நல் நீர் பெய்வான் - மந்திரங் கூறி நல்ல நீரினை வார்ப்பவன் எ - று.

மதுபருக்கம் - பாலும் பழமும். நம்பி - ஆடவரிற் சிறந்தோன். நங்கை - பெண்டிரிற் சிறந்தவள். நீர் பெய்பவனென்க. தன் இரண்டும் சாரியை. (௬௭)

இரவிதன் மருமான் சோம சேகர னென்பேன்* றிங்கள்
மரபினை விளக்க வந்த சுந்தர மாறன் மைந்தன்
உரவுநீர் ஞாலந் தாங்கு முக்கிர வருமற் கின்றேன்
குரவலர்க் கோதை மாதைக் கொடுத்தன னெனநீர் வார்த்தான்.

(பா - ம்.) * என்பேர்.

(இ - ள்.) இரவி தன் மருமான் சோம சேகரன் என்பேன் - சூரியன் மரபினனாகிய சோமசேகரனென்னும் பெயரையுடையயான், திங்கள் மரபினை விளக்க வந்த சுந்தர மாறன் மைந்தன் - சந்திர குலத்தை விளக்கும்படி வந்தருளிய சுந்தர பாண்டியரின் திருப்புதல்வனாகிய, உரவு நீர் ஞாலம் தாங்கும் உக்கிர வருமற்கு - கடல் சூழ்ந்த உலகத்தைப் பாதுகாக்கும் உக்கிரவன்மனுக்கு, என் குரவு அலர் கோதை மாதை - என் புதல்வியாகிய குராமலரை யணிந்த கூந்தலையுடைய காந்திமதியை, இன்று - இப்பொழுது, கொடுத்தனன் என நீர் வார்த்தான் - கொடுத்தேனென்று தாரை வார்த்தான் எ - று.

என்பேன்-என்று பெயர் கூறப்படுவேன்: வினைப்பெயர்; என் பேர் என்னும் பாடம் சிறப்பின்றுதல் காண்க. உரவு நீர் - வலிய நீர்; கடல். மைந்தனாகிய உக்கிரவருமற் கென்க. தன்: சாரியை. (சஅ)

மைந்துறு மடங்கற் றிண்கான் மணிவட வயிர வூசல்
ஐந்துடன் பதஞ்செய் பஞ்சி யணையினோ டன்னத் தூவிப்
பைந்துகி லணையீ ரைந்து பவளவாய்ப் பசும்பொன் மேனி
இந்திர மணிக்கட் பாவை விளக்குநான் கிரட்டி யென்ப.

(இ - ள்.) மைந்து உறு மடங்கல் திண் கால் - வலிமை மிக்க சிங்கத்தின் திண்ணிய கால்போன்ற காலுள்ள, மணிவட வயிர ஊசல் ஐந்துடன்-முத்துவடம் பூட்டிய வயிரத்தாலாகிய ஊசல் ஐந்தும்,பதம் செய் பஞ்சி யணையினோடு-பதஞ் செய்த பஞ்சு பெய்த அணை (பத்தும்), அன்னத்தின் தூவி பைந்துகில் அணை ஈரைந்தும்-அன்னத்தின் தூவி பெய்த மெல்லிய ஆடையாலமைந்த அணை பத்தும், பவளவாய்-பவளத்தாலாகிய வாயும்,பசும் பொன்மேனி-பசிய பொன்னாலாகிய உடலும்.இந்திரமணிக்கண்-இந்திர நீலக்கல்லாலாகிய கண்களும்உடைய, பாவை விளக்கு நான்கு இரட்டி-பாவை விளக்கு எட்டும் எ-று.

ஊசல், இக்காலத்து ஊஞ்சலென வழங்கும். பஞ்சி - பஞ்சு. தூவி - அன்னத்தின் சிறையடியிலுள்ள மெல்லிய மயிர். அணைதற் குரியதாகலின் அணையெனப் பெயரெய்திற்று; இதனை மெத்தை யென்பர். பவள முதலியவற்றால் வாய் முதலிய செய்யப்பட்ட பாவை. பாவையானது விளக்கினை யேந்தி நிற்குமாறு அமைத்த படிவம் பாவைவிளக்கெனப்படும். ஊசல் முதலாக எண்ணப்படுவன பின் 'விளைவொடு' என்னுஞ் செய்யுளில், வழங்கினான் என்பது கொண்டு முடியும். என்ப: அசைநிலை; வருஞ் செய்யுளிலும் அது. (சகூ)

அட்டில்வா யடுக்குஞ் செம்பொற் கலங்கணா றம்பொன் வாக்கி
இட்டிழை மணிக்க ளாஞ்சி யேழுபொற் கவரி யெட்டு
விட்டொளிர் பசும்பொற் கிண்ணப் பந்திசூழ் விளங்க நாப்பண்
நட்டபொற் காலி னோடு நகைமணிக் கலநூ றென்ப.

(இ-ள்.) அட்டில் வாய் அடுக்கும் செம்பொன் கலங்கள் நூறு - அடுக்களையில் அடுக்கப்பெறும் சிவந்த பொன்னாலாகிய பாத்திரங்கள் நூறும், அம்பொன் வாக்கி-அழகிய பொன்னால் வார்த்து, மணி இட்டு இழை களாஞ்சி ஏழு-மணிகளைப் பதித்து இழைத்த படிக்கம்

ஏழும், பொன் கவரி எட்டு-பொன்னாலாகிய காம்பினையுடைய சாமரை எட்டும், விட்டு ஒளிர் பசும் பொன் கிண்ணப் பந்தி சூழ் விளங்க-ஒளி விட்டு விளங்கும் பசும் பொன்னாலாகிய கிண்ண வரிசை சூழ்ந்து விளங்க, நாப்பண் நட்ட பொன் காலினோடு-நடுவே நட்ட பொன்னா லாகிய காலுடன் கூடிய, நகை மணிக்கலம் நூறு - ஒளி பொருந்திய மாணிக்கப் பாத்திரங்கள் நூறும் எ - று.

வாக்கி - கருக்கட்டி வார்த்து. சூழ் விளங்க நட்ட காலுடன் கூடிய கலம் என்க. (௰)

பெருவிலை யாரப் பேழை யாயிரம் பெற்ற நண்டு
சருவிலைப் பட்டு வெவ்வே றமைத்தன பேழை முந்நூ
றுருவமு தெழுதிச் செய்த வோவியப் பாவை யன்னார்
திருமணிக் கலனோ டேவற் சேடிய ரேழுநூற் றைவர்.

(இ - ள்.) பெருவிலை ஆரப் பேழை - மிக்க விலையுள்ள முத்து மாலை வைத்திருக்கும் பெட்டி (முந்நூறும்), ஆயிரம் பெற்ற நுண் தூசு-ஆயிரம் பொன் விலையுடைய மெல்லிய வெண்டுகிலும், அரு விலைப்பட்டு - மதித்தற்கரிய விலையுள்ள பட்டும் ஆகிய இவைகளை, வெவ்வேறு அமைத்தன பேழை முந்நூறு - வேறு வேறாக வைக்கப் பெற்ற பெட்டி முந்நூறும், திருமணிக் கலனோடு - சிறந்த மாணிக்க அணிகளோடு, அமுது உருவு எழுதிச் செய்த ஓவியப் பாவை அன்னார்-அமிழ்தத்தில் (கோலினைத் தோய்த்து) உருவம் வரைந்து செய்த சித்திரப் பாவையை ஒத்தவராகிய, ஏவல் சேடியர் எழுநூற்று ஐவர்-ஏவல் செய்யும் சிலதியர் எழுநூற்றைவரும் எ - று.

ஆயிரம் காணம் விலைபெற்ற வென்க; ஆயிரம், மிகுதிக்கு ஓர் எடுத்துக் காட்டு. தூசு-பருத்தியாடை; துகிலெனவும் வழங்கும்.

"பட்டுநீக்கித் துகிலுடுத்து"

என்பது பட்டினப்பாலை. அமுதால் உருவெழுதுதல்

"ஆதரித் தமுதிற் கோல்தோய்த் தவயவ மமைக்குந் தன்மை"
என இராமாயணத்தில் வந்துளது. (௧௧)

விளைவோடு மூன்று மூதூர் மின்னுவிட் டெறியுஞ் செம்பொன்
அளவிரு கோடி யின்ன வரும்பெறன் மகட்குச் செல்வ
வளமுற வரிசை யாக வழங்கினான் முழங்கி வண்டு
திளைமதுக் கண்ணிச் சோம சேகர மன்னன் மாதோ.

(இ - ள்.) விளைவொடு மூன்று மூதூர்-விளைந்த கழனிகளுடன் கூடிய மூன்று பெரிய ஊர்களும், மின்னு விட்டு எறியும் செம்பொன் அளவு இரு கோடி - ஒளிவிட்டு வீசும் செம் பொன் இரண்டு கோடி அளவும், இன்ன-இவை போல்வன பிறவும், அரும் பெறல் மகட்கு - பெறுதற்கரிய தன் புதல்விக்கு, வண்டு முழங்கித் திளை மதுகண்ணிச் சோமசேகர மன்னன் - வண்டுகள் ஒலித்துத் திளைக்கின்ற தேனினை யுடைய மாலையை யணிந்த சோமசேகர மன்னன், செல்வவளம் உற

வரிசையாக வழங்கினன் - செல்வ வளத்திற்கேற்ப வரிசையாகக் கொடுத்தான் எ - று.

மாது, ஓ: அசைகள். (௩௨)

ஆர்த்தன வியங்க ளெல்லா மமரர்மந் தார மாரி
தூர்த்தனர் வேள்விச் செந்தீச் சுழித்தது வலமாய்த் துள்ளி
வார்த்தன மடவார் நாவின் முளைத்தன வாழ்த்து மன்றல்
பார்த்தனர் கண்க ளெல்லாம் பெற்றன படைத்த பேறு.

(இ - ள்.) இயங்கள் எல்லாம் ஆர்த்தன-பலவகை இயங்களெல்லாம் ஒலித்தன; அமரர் மந்தார மாரி தூர்த்தனர் - தேவர்கள் கற்பக மலர் மழையைப் பொழிந்தனர்; வேள்விச் செந்தீ வலமாய்த் துள்ளிச் சுழித்தது - வேள்விக் குண்டத்தின்கண் சிவந்த தீயானது வலமாகச் சுழன்று குதித் தெழுந்தது; வார் தனம் மடவார் நாவின் வாழ்த்து துளைத்தன - கச்சணிந்த கொங்கைகளையுடைய மகளிர் நாவின்கண் வாழ்த்துப் பாடல்கள் அரும்பின; மன்றல் பார்த்தனர் கண்கள் எல்லாம் - திருமண விழாவைப் பார்த்தவர்களின் கண்களனைத்தும், படைத்த பேறு பெற்றன - படைக்கப் பெற்றதனாலாகிய பயனை அடைந்தன எ - று.

சுழித்துத் துள்ளியது என விகுதி பிரித்துக் கூட்டுக. மன்றல் வாழ்த்து முளைத்தன எனலுமாம். (௩௩)

போதியவிழ் கடப்பந் தண்டார்ப் புயத்திளங் காளை யன்னான்
முதியவர் செந்தீ யோம்ப வின்னிய முழங்கக் காந்தி
மதியைமங் கலநாண் பூட்டி வரிவளைச் செங்கை பற்றி
விதிவழி யேனை மன்றல் வினையெலா நிரம்பச் செய்தான்.

(இ - ள்.) போதி அவிழ் கடப்பம் தண்தார் - முறுக் கவிழ்ந்த கடப்பமலரின் தண்ணிய மாலையணிந்த, புயத்து இளங்காளை அன்னான் - திருத்தோளினையுடைய முருகக்கடவுளை யொத்த உக்கிர வழுதி, முதியவர் செந்தீ ஓம்ப-முதறிவுடைய முனிவர் ஓமம் வளர்க்கவும், இன் இயம் முழங்க-இனிய இயங்கள் ஒலிக்கவும், காந்திமதியை மங்கல நாண் பூட்டி - காந்திமதி யம்மையை மங்கல நாண் அணிந்து, வரிவளை செங்கைபற்றி - வரிகளையுடைய வளையலணிந்த சிவந்த கையைப்பற்றி, ஏனைமன்றல் வினை எலாம் - மற்றைய மணவினைகளனைத்தையும், விதிவழி நிரம்பச் செய்தான்-வேத விதிப்படி நிரம்புமாறு செய்து முடித்தான் எ - று.

கடம்பு என்பது வலித்து அம் சாரியை பெற்றது. நாண் பூட்டி யென்பதும் செங்கைபற்றி யென்பதும் ஒருசொன்னீரவாய் இரண்டாவதற்கு முடிபாயின. எலாம் - எல்லாமும். (௩௪)

[வேறு]

எண்ணி லாத வளத்தினொடு
மிரவி மருமான் மடப்பிடியைப்
பண்ணி லாவி மறையொழுக்கம்
பயப்ப வேள்வி வினைமுடித்துத்

தண்ணிலா வேண் கலைமதியுந்
தாரா கணமுந் தவழ்ந்துழல
விண்ணி லாவு மணிமாட
வீதி வலமாய் வருமெல்லை.

(இ - ள்.) என் இலாத வளத்தினொடும்-அளவில்லாத செல்வத்துடன், இரவி மருமான் மடப் பிடியை-சூரியன் மரபில் வந்த சோம சேகரன் புதல்வியாகிய காந்திமதியை, பண் நிலாவு மறை ஒழுக்கம் பயப்ப வேள்வி வினை முடித்து - இசையமைந்த வேதத்தின் விதி நிரம்ப மண வினையை முடித்து, தண் நிலா வெண்கலை மதியும் தாரா கணமும் தவழ்ந்து உழல - தண்ணிய ஒளி பொருந்திய வெள்ளிய கலையையுடைய திங்களும் உடுக்கணங்களும் தவழ்ந்து வருமாறு, விண் நிலாவும் - வானின் கண் (உயர்ந்து) விளங்கும், மணி மாட வீதி - அழகிய மாடங்களையுடைய வீதியை, வலமாய் வரும் எல்லை-வலமாக உலாவரும் பொழுது எ - று.

மடப்பிடி-இளமை பொருந்திய பெண்யானை போல்வாள்; பிடி நடையாலுவமம். வேள்வி வினை முடித்து என்றது அநுவாதம். உழல நிலாவுமென்க. அணி மாடமெனப் பிரித்தலுமாம். வலமாக வெனத் திரிக்க. (ருரு)

மின்னேர் பொன்னந் தொடியினரு
மென்சேம் பஞ்சி யடியினரும்
பொன்னேர் மணிப்பூண் முலையினரும்
புலம்பு மணிமே கலையினரும்
அன்னே ரோதித் தாரினரு
மாகிக் கண்ணு மனமுமவன்
முன்னே தூது நடப்பதென
நடப்ப நடந்தார் முகிழ்முலையார்.

(இ - ள்.) மின்நேர் பொன் அம் தொடியினரும்-மின்னலையொத்த பொன்னாலாகிய அழகிய வளையலை அணிந்தவரும், மென் செம்பஞ்சி அடியினரும்-மெல்லிய செம்பஞ்சிக் குழம்பூட்டிய அடியினையுடையவரும், பொன் ஏர் மணிப்பூண் முலையினரும் - பொன்னாலாகிய அழகிய மணிக்கலன் விளங்கும் கொங்கையையுடையவரும், புலம்பும் மணி மேகலையினரும் - ஒலிக்கின்ற அழகிய மேகலையை அணிந்தவரும், அல் நேர் ஓதித் தாரினரும் ஆகி - இருள்போன்ற கூந்தலில் மாலையை யணிந்தவரும் ஆகி, கண்ணும் மனமும் அவன் முன்னே தூது நடப்பதென நடப்ப-கண்களும் மனமும் அவன் முன்னே தூது செல்லுதல்போல முன்னேசெல்ல,முகிழ் முலையார் நடந்தார்-தாமரை யரும்பினை யொத்த தனங்களை யுடைய மகளிர் சென்றார்கள் எ-று.

தொடியினரும் அடியினரும் எனவும், முலையினரும் கலையினரும் எனவும் இயைபெதுகை நயம் அமைந்திருத்தல் காண்க. ஏர்: உவம வுருபுமாம். நடப்பது: தொழிற் பெயர். முகிழ்-கோங்கரும்புமாம்; முகிழ்த்த வெனினும் பொருந்தும். (ருசு)

சுருங்கு மிடையார் தன்பவனி
　　தொழுது வருவார் தமக்கிரங்கி
மருங்குற் பாரங் கழிப்பான்போற்
　　கலையைக் கவர்ந்தும் வளைத்தோண்மேல்
ஒருங்கு பாரங் கழிப்பான்போல்
　　வளையைக் கவர்ந்து முள்ளத்துள்
நெருங்கு பாரங் கழிப்பான்போ
　　னிறையைக் கவர்ந்து நெறிச்செல்வான்.

(இ - ள்.) தன் பவனி தொழுது வருவார் - (உக்கிர குமாரன்) தனது திருவுலாவைத் தரிசித்து வருவாராகிய, சுருங்கும் இடையார் தமக்கு இரங்கி-சிறுகிய இடையினையுடைய மகளிர்க்கு இரங்கி,மருங்குல் பாரம் கழிப்பான் போல்-அவரது இடையின் பாரத்தைக் கழிப்பவன் போல, கலையைக் கவர்ந்தும்-மேகலையை வௌவியும், வளைத் தோள் மேல் பாரம் ஒருங்கு கழிப்பான் போல் - மூங்கிலையொத்த தோளின் பாரத்தை ஒருசேர நீக்குபவன் போல, வளையைக் கவர்ந்தும்-வளையல்களை அபகரித்தும், உள்ளத்துள் நெருங்கு பாரம் கழிப்பான் போல்-உள்ளத்தின்கண் மிக்க பொறையை ஒழிப்பவன்போல, நிறையைக் கவர்ந்தும் - கற்பினைக் கவர்ந்தும், நெறிச் செல்வான் - வீதியிற் செல்வான் எ - று.

வருவாராகிய இடையார் தமக் கென்க. கலை - மேகலை; முதற் குறை. மகளிர் வேட்கை நோயால் உடல் மெலிந்து கலையும் வளையும் கழலப் பெறுதலையும், நிறையிழத்தலையும் உக்கிரகுமாரன் அவர் மேல் இரக்கமுற்று மருங்குல் முதலியவற்றின் பாரத்தைக் கழிப்பான் போற் கவர்ந்து செல்வான் எனக்கூறினர். இது தற்குறிப்பேற்றவணி.

வான மதிசேர் முடிமறைத்த வழுதி மகனே யிவனென்றால்
ஆனை யெருத்திற் சிங்கவிள வடலே றென்ன வயல்வேந்தர்
சேனை தழுவ வரும்பவனிக் கொப்பே தொப்புச் செப்புங்கால்
யானை மகளை மணந்துவரு மிளையோன் பவனிச் செல்வமே.

(இ - ள்.) வானமதி சேர் முடி மறைத்த வழுதி மகனே இவன் என்றால்-வானின்கண் உள்ள பிறையை யணிந்த சடையை மறைத்து வந்தருளிய சுந்தர பாண்டியன் புதல்வனே இவ் வுக்கிரகுமரனென்றால், ஆனை எருத்தில் - யானையின் பிடரியில், இள அடல் சிங்க ஏறு என்ன-இளமையாகிய வலிய ஆண் சிங்கம்போல இவர்ந்தருளி,அயல் வேந்தர் சேனை தழுவ - வேற்று மன்னரின் படைகள் சூழ, வரும் பவனிக்கு ஒப்பு ஏது - வருகின்ற திருவுலாவிற்கு ஒப்பாவது வேறு யாது, செப்புங்கால் - சொல்லுமிடத்து, யானை மகளை மணந்து வரும் இளையோன் பவனிச் செல்வமே - தெய்வ யானையாரைத் திருமணஞ் செய்து வருகின்ற முருகக் கடவுளின் திருவுலாச் சிறப்பே, ஒப்பு-ஒப் பாகும் எ - று.

எருத்தில் ஏறி வரும் பவனி யென்க; யானை யெருத்தில் ஏறி வரும் சிங்க வேறு போல என இல்பொருளுவமை யாக்கலும் ஆம்.

செப்புங்கால் செல்வமே, ஒப்பு என மாறுக. செப்புங்கால்-உவமை கூறவேண்டுமென்னின்,முடி மறைத்த வழுதி மகனே இவன் என்பதனால் இவன் இளையோனின் வேறல்லன் என்பது தோன்ற நின்றமையின் இவனது பவனியும் தானே தனக்கு ஒப்பென்பதாயிற்று. இந்திரனது வெள்ளை யானையால் வளர்க்கப்பட்டமையால் ''யானை மகளை'' என்றார். யானை ஆனை யெனத் திரிந்தது. (ருஅ)

இம்மை தனிலு நன்மைதரு
மீசன் றனையும் வாசவற்கு
வெம்மை தருவன் பழிதவிர்த்த
விமலன் றனையு மங்கயற்கண்
அம்மை தனையும் பணிந்துமீண்
டரசன் கோயி லடைந்தீன்றோர்
தம்மை முறையா லடிக்கமலந்
தலையிற் பணிந்தான் றனிக்குமரன்.

(இ - ள்.) இம்மை தனிலும் நன்மை தரும் ஈசன் தனையும் - இம்மையிலேயே பயனை அளிக்கும் சிவபெருமானையும், வாசவற்கு வெம்மைதரு வன் பழி தவிர்த்த விமலன் தனையும் - இந்திரனுக்குத் துன்பந் தந்த வலிய பழியை நீக்கியருளிய சோமசுந்தரக் கடவுளையும், அங்கயற்கண் அம்மைதனையும்-அங்கயற்கண் ணம்மையாரையும், தனி குமரன் பணிந்து மீண்டு-ஒப்பற்ற உக்கிரகுமாரன் வணங்கித் திரும்பி, அரசன் கோயில் அடைந்து - அரசன் மாளிகையை அடைந்து,ஈன்றோர் தம்மை அடிக்கமலம் - தன்னைப்பெற்ற தந்தை தாயரின் திருவடித் தாமரைகளை, முறையால் தலையின் பணிந்தான் - முறைப்படி தலையினால் வணங்கினான் எ - று.

இம்மைதனிலும் நன்மை தரும் ஈசன் என்பது சுந்தர பாண்டியனாகிய இறைவனால் நடுவூரில் நிறுவி வழிபடப் பெற்ற சிவலிங்கப் பெருமான் திருப்பெயர்; இதனை,

''மெய்ம்மை நூல் வழியே கோயில் விதித்தருட்குறி நிறீஇப்பேர்
இம்மையே நன்மை நல்கும் இறையென நிறுவி''

என வரும் திருமணப்படலச் செய்யுளா லறிக. உம்மையை அசைநிலையாக்கி ஏகாரம் விரிக்க. தம்மை-தம்முடைய; வேற்றுமை மயக்கம்; பொருந்தவென ஒரு சொல் வருவித்து, அடிக் கமலம் தலையிற் பொருந்த ஈன்றோர் தம்மைப் பணிந்தான் என்றுரைத்தலுமாம். (ருக)

ஆறு வாறு சுவையடிசி
லயில்வோர் தம்மை யயில்வித்து
நாறு வரிசை வரன்முறையா
னல்கி விடையு நல்கிப்பின்
வாறு டவர்க்கும் விடைகோடுத்து
மதிக்கோ னேழுகி வைகுநாள்
தேனார் கண்ணித் திருமகனுக்
கிதனைச் செப்பி யிதுசெய்வான்.

(இ - ள்.) மதிக்கோன்-திங்கள் மரபுக்கு இறைவனாகிய சுந்தர பாண்டியன், ஆறுசுவை ஆனா அடிசில்-அறுவகைச் சுவையும் நீங்காது பொருந்திய உணவினை, அயில்வோர் தம்மை அயில்வித்து - உண்போரை உண்பித்து, வரன்முறையால் நானாவரிசை நல்கி-முறைப்படி பலவரிசைகளையும் அளித்து, விடையும் நல்கி-விடையுங் கொடுத்து, பின் - பின்பு, வானுடவர்க்கும் விடைகொடுத்து - தேவர்களுக்கும் விடைதந்து, ஒழுகி வைகு நாள் - ஆட்சி புரிந்துவரும் காலத்தில், தேன் ஆர் கண்ணித் திருமகனுக்கு இதனைச் செப்பி இது செய்வான் - தேன் நிறைந்த மாலையை யணிந்த புதல்வனுக்கு இதனைக் கூறி இதனைச் செய்வான் எ - று.

ஆறென்னும் எண்ணுப் பெயர் திரியாது நின்றது. செயப்படு பொருள் இரண்டாயின; பகைவரைச் சிறைச்சாலையை அடைவித்தான் என்பது போல. நானா-பல. இதுவென்பன பின்வருவன. (சுo)

மைந்த கேட்டி யிந்திரனுங்
கடலு முனக்கு வான்பகையாஞ்
சந்த மேருத் தருக்கடையுஞ்
சதவேள் விக்கோன் முடிசிதற
இந்த வளைகோண் டெறிகடலி
லிவ்வேல் விடுதி யிச்சேண்டால்
அந்த மேருத் தனைப்புடையேன்
றெடுத்துக் கோடுத்தா னவைமூன்றும்.

(இ - ள்.) மைந்த-புதல்வனே, கேட்டி - கேட்பாயாக, இந்திரனும் கடலும் உனக்கு வான்பகையாம் - தேவேந்திரனும் கடலும் நினக்குப் பெரிய பகையாகும்; சந்தம் மேரு தருக்கு அடையும் - அழகிய மேருமலை இறுமாப்புறும் (ஆகலின்), சதவேள்விக் கோன்முடி சிதற-இந்திரன் முடி சிதறுமாறு, இந்த வளை கொண்டு எறி - இந்த வளையினைக்கொண்டு எறிவாய், கடலில் இவ் வேல்விடுதி - கடலின்கண் இந்த வேற்படையை விடுவாய், இச்செண்டால்-இந்தச் செண்டினால், அந்த மேருதனைப் புடை - அந்த மேருவைத் தாக்குவாய், என்று - என்று கூறி, அவை மூன்றும் எடுத்துக் கொடுத்தான் - அம்மூன்றையும் எடுத்துக் கொடுத்தருளினான் எ - று.

கேட்டி, இகரவீற்று வியங்கோள். சதவேள்விக் கோன் - சதமகன்; இந்திரன். (சுக)

அன்ன மூன்று படைக்கலமுந் தொழுது வாங்கி யடலேறு
தன்னை நேரா யெதிர்நிற்குந் தனயன் றனையுக் கிரவழுதி
என்ன வாதி மறைமுழங்க வியங்க ளேங்க முடிகவித்துத்
தன்ன தாணை யரசுரிமைத் தனிச்சேங் கோலுங்* தானல்கா.

(இ - ள்.) அன்ன மூன்று படைக்கலமும் தொழுது வாங்கி - அந்த மூன்று படைக்கலங்களையும் வணங்கி வாங்கிக்கொண்டு, அடல்

(பா - ம்) * அரசுரிமை தனிச் செங்கோலும்.

ஏறு தன்னை நேராய் எதிர் நிற்கும் தனயன்தனை - வலிய ஆண்சிங்கத்தைப் போன்று எதிரே நிற்கும் புதல்வனை, உக்கிர வழுதி என்ன - உக்கிர பாண்டிய வேந்தன் என்று கூறும்படி, ஆதிமறை முழங்க - முதன்மையுடைய வேதங்கள் முழங்கவும், இயங்கள் ஏங்க-பல்லியங்கள் ஒலிக்கவும், முடி கவித்து-முடிசூட்டி, தன்னது ஆணை அரசு உரிமைத் தனிச் செங்கோலும் நல்கா - தனது ஆணையையும் அரசாட்சிக்குரிய ஒப்பற்ற செங்கோலையும் கொடுத்தருளி எ - று.

பாண்டி வேந்தாக உலகங்கூற வென்பார் 'உக்கிர வழுதி யென்ன' என்றார். தன்னை, தன்: சாரியை. தன்னது, னகரம் விரித்தல். ஆணை - ஆக்கினையாகிய சக்கரம். தான், அசை; எழுவாயுமாம். (சுஉ)

சூட்சி வினையிற் போன்னனைய
சுமதி தன்னைத் தோன்னூலின்
மாட்சி யறிஞர் தமைநோக்கி
வம்மி னிவனைக் கண்ணிமைபோற்
காட்சி பயக்குங் கல்விபோற்
காப்பீ ரிதுநுங் கடனிம்மண்
ஆட்சி யிவன தென்றிளைய
வரியே றனையான் றனைநல்கா.

(இ - ள்.) சூட்சி வினையில் பொன் அனைய சுமதி தன்னை - ஆலோசனைத் தொழிலில் பிருகற்பதியை ஒத்த சுமதியையும், தொல் நூலின் மாட்சி அறிஞர் தமை - பழமையாகிய நீதிநூல் ஆராய்ச்சியின் மாட்சியுடைய அறிஞரையும், நோக்கி . பார்த்து, வம்மின் - வாருங்கள், இவனை - இவ்வுக்கிர வழுதியை, கண் இமைபோல் - கண்ணின் இமைபோலவும், காட்சி பயக்கும் கல்விபோல் - அறிவினைக் கொடுக்கும் கல்விபோலவும், காப்பீர் - காக்கக் கடவீர்; இது நும் கடன் - இது நுமது கடமையாகும், இம் மண் ஆட்சி இவனது என்று - இந்நிலவுலகின் ஆட்சி இவனுடையதாம் என்று கூறி, இளைய அரி ஏறு அனையான் தனை நல்கா - இளைய ஆண் சிங்கம் போன்ற அவ்வுக்கிர வழுதியை அவரிடத்தில் அளித்து எ - று.

சூட்சி: சூழ்ச்சி யென்பதன் மரூஉ. சுமதி - முதலமைச்சன். கண்ணை இமை காப்பது போலவும், கல்வியுடையாரை அக்கல்வி காப்பது போலவும் இவனைக் காப்பீர் என்றான்; இம்மைக்கும் மறுமைக்கும் இடருண்டாகாமற் காக்க வேண்டு மென்ற தாயிற்று. நல்கா - கையடையாகத் தந்து; இதனை ஒப்புவித்தல் என்பர். (சுஙு)

[வேறு]

வெய்யவேற் காளை யன்னான் றன்னையும் வேறு நோக்கி
ஐயவிவ் வையந் தாங்கி யளித்தன நெடுநா ளிந்த
மையறு மனத்தார் சோல்லும் வாய்மையா றேமுகி நீயுஞ்
செய்யகோன் முறைசெய் தாண்டு திருவொடும் பொலிக வென்றான்.

(இ-ள்.) வெய்வேல் காளை அன்னான் தன்னையும் வேறு நோக்கி-வெவ்விய வேற்படையை யுடைய முருகனை யொத்த புதல்வனையும் தனியாக நோக்கி, ஐய - ஐயனே, இவ்வையம் தாங்கி நெடுநாள் அளித்தனம்-இவ்வுலகினைச் சுமந்து நெடுங் காலம் ஆட்சி புரிந்தனம்; நீயும் - (இனி) நீயும், இந்த மை அறு மனத்தார் சொல்லும் வாய்மை யாறு ஒழுகி - இந்தக் குற்றமற்ற உள்ளத்தினை யுடையார் சொல்லும் உண்மை வழியே நடந்து, செய்ய கோல் முறை செய்து ஆண்டு - செங்கோலால் முறை புரிந்து ஆண்டு, திருவொடும் பொலிக என்றான்-செல்வத்தோடும் விளங்குக என வாழ்த்தியருளினான் எ - று.

வேறு நோக்கி - சிறப்பாக நோக்கி. நெடுநாள் அளித்தனம் என்றது இனி நீ அளிக்க வேண்டு மென்னும் குறிப்பிற்று. முறை செய்தல் - நீதி செலுத்தல். வாய்மையாறொழுகி முறை செய்து என்றது உறுதி யுரைத்தலும், திருவொடும் பொலிக என்றது வாழ்த்துதலும் ஆம். தன்னையும், நீயும் என்பவற்றிலுள்ள உம்மை கள் எச்சப்பொருளன. (சுச)

பன்னருங் கணங்க ளெல்லாம் பண்டைய வடிவ மாகத்
தன்னருட் டுணையாய் வந்த தடாதகைப் பிராட்டி யோடும்
பொன்னெடுங் கோயில் புக்குப் பொலிந்தன னிச்சை தன்னால்
இன்னருட் படிவங் கொள்ளு மீறிலா வின்ப மூர்த்தி.

(இ - ள்.) இச்சை தன்னால்-தனது இச்சையானே, இன் அருள் படிவம் கொள்ளும் - இனிய அருளுருவம் கொள்ளா நிற்கும், ஈறு இலா இன்ப மூர்த்தி-முடிவில்லாத இன்பவடிவான சுந்தர பாண்டிய னாகிய இறைவன், பன் அரும் கணங்கள் எல்லாம் - சொல்லுதற்கரிய கணங்களனைத்தும், பண்டைய வடிவமாக - முன்னைய வடிவமாக, தன் அருள் துணையாய் வந்த - தனது அருட்டுணையாக வந்தருளிய, தடாதகைப் பிராட்டியோடும் - தடாதகைப் பிராட்டியாரோடும், பொன் நெடுங் கோயில் புக்குப் பொலிந்தனன் - பொன்னாலாகிய பெரிய திருக்கோயிலினுட் சென்று விளங்கினன் எ - று.

மேல், திருமணப் படலத்தில்,

> "திண்டிறற் சங்கு கன்னன் முதற்கணத் தேவர் தாமும்
> பண்டைய வடிவ மாறிப் பார்த்திபன் பணியி னின்றார்"

என்றாராகலின், ஈண்டு அவர் பண்டைய வடிவமாயினரென்றார். இறைவனது சத்தியே அவனுக்குத் துணையாகலின் 'தன்னருட் டுணை யாய் வந்த' என்றார். புக்குப் பொலிந்தனன்-சிவலிங்கப் பெருமானை அதிட்டித்து விளங்கினான். இறைவன் கொள்ளும் வடிவிற்கு அவன திச்சையே காரணமென்பார் 'இச்சை தன்னால்' என்றார்; பிறரால் உண் டாக்கப் படுபவன் அல்லனென்றவாறு. அவன் வடிவம் அருளாதலை

> "நிறுத்திடு நினைந்த மேனி நின்மல னருளி னாலே"

என்னும் சிவஞானசித்தியா லறிக. (சுரு)

[கலிவிருத்தம்]

பின்ன ருக்கிரப் பெயர் தரித்தவத்
தென்னர் கோமகன் றெய்வ நான்மறை
மன்னு நல்லறம் வளர வையகந்
தன்ன தாணையாற் றாங்கி வைகினன்.

(இ - ள்.) பின்னர்-பின்பு, உக்கிரப் பெயர் தரித்த அத் தென்னர் கோமகன் - உக்கிரனென்னும் பெயரைத் தாங்கிய அப்பாண்டியர் பெருமான், தெய்வ நான்மறை மன்னு நல் அறம் வரை-தெய்வத் தன்மை பொருந்திய நான் மறைகளிற் கூறிய நிலைபெற்ற நல்ல அறங்கள் வளருமாறு, வையகம் தன்னது ஆணையால் தாங்கி வைகினன் - நிலவுலகத்தைத் தனது ஆணையினாலே பாதுகாத்து அரசாண்டிருந்தான் எ - று.

தன்னது: விரித்தல். பகைவர் முதலாயினோரால் நலிவுண்டாகாமற் புரந்தா னென்பார் 'ஆணையாற்றாங்கி' என்றார். (சுசு)

ஆகச் செய்யுள்—சுசுஅ.

---

## கக. கடல்சுவற வேல்விட்ட படலம்

[கலிவிருத்தம்]

வளையோடு செண்டுவேன் மைந்தற் கஞ்சுரும்
பளையவேம் பணிந்தகோ னளித்த வாறிதத்
தளையவிழ் தாரினுன் றனயன் வேலைமேல்
இளையவ னேன்னவே லெறிந்த தோதுவாம்.

(இ - ள்.) அம் சுரும்பு அளைய வேம்பு அணிந்த கோன்-அழகிய வண்டுகள் மூச வேப்ப மலர் மாலையை யணிந்த சுந்தரபாண்டியன், மைந்தற்கு - புதல்வனாகிய உக்கிர வழுதிக்கு, வளையொடு செண்டு வேல் அளித்தவாறு இது - வளையும் செண்டும் வேலும் அளித்த திருவிளையாடல் இதுவாகும்; அத்தளை அவிழ் தாரினுன் தனயன் - அந்த முறுக்கவிழ்ந்த மலர் மாலையை யணிந்த சுந்தரபாண்டியன் புதல்வனாகிய உக்கிரவழுதி, வேலை மேல் இளையவன் என்ன வேல் எறிந்தது ஓதுவாம் - கடலின் மேல் முருகக் கடவுளைப் போல் வேற் படையை விடுத்த திருவிளையாடலை (இனிக்) கூறுவாம் எ - று.

கோன் மைந்தற்கு அளித்தவாறு இது வென்க. அத்தளையவிழ் தாரினுன் தனயன் - அம்மைந்தன். இளையவன் - இளைய பிள்ளையாராகிய முருகப்பிரான். அவன் சூரபன்மனுகிய மாவினைத் தடிதற்குக் கடலின்கண் வேல் விடுத்ததுபோல் என விரித்துக்கொள்க. (க)

திங்களி னுக்கிரச் செழியன் வெண்குடை
எங்கணு நிழற்றவீற் றிருக்கு நாள்வயிற்
சங்கையில் லாதமா தரும வேள்விகள்
புங்கவர் புடைதழீஇப் போற்ற வாற்றுநாள்.

(இ - ள்.) உக்கிரச் செழியன் - உக்கிர வழுதி, திங்களின் - சந்திரன்போல, வெண்குடை எங்கணும் நிழற்ற வீற்றிருக்கும் நாள் வயின் - தனது வெள்ளைக் குடையானது எங்கும் நிழல்செய்ய வீற்றிருக்கும் நாளில், சங்கை இல்லாத மா தருமம் வேள்விகள்-அளவில்லாத பெரிய தருமங்களையும் வேள்விகளையும், புங்கவர் புடைதழீஇப் போற்ற-தேவர்கள் புறம்பே சூழ்ந்து போற்ற, ஆற்றும் நாள்-செய்யும்பொழுது எ - று.

எங்கணும் - புவிமுழுதும். அரசு வீற்றிருக்கு நாளிலென்க. வயின்: ஏழனுருபு. சங்கை - எண். மா உரிச்சொல்லாகலின் வலியியல்பாயிற்று. (உ)

அரும்பரி மகந்தொணூற் ரூறு செய்துழிச்
சுரும்பரி பெரும்படைத் தோன்ற* றண்ணரு
விரும்பரி முரன்றுசூழ் வேம்பி னங்குழைப்
பொரும்பரி வீரன்மேற் பொருது பொங்கினன்.

---

(பா - ம்.) * சுரும்பரினிசைத்தருத் தோன்றல்.

(இ - ள்.) அரும்பரி மகம் தொண்ணூற்றாறு செய்துழி - செய்தற்கரிய பரிவேள்வி தொண்ணூற்றாறு செய்த விடத்து, சுரும்பு அரி பெரும்படைத் தோன்றல் - மலைகளின் சிறகினை அரிந்த பெரிய வச்சிரப் படையினையுடைய இந்திரனானவன், தண் நறா விரும்பு அரி முரன்று சூழ் - குளிர்ந்த தேனை விரும்பும் வண்டுகள் ஒலித்துச் சூழ்கின்ற, வேம்பின் அம் குழை-வேம்பினது அழகிய தளிரை யணிந்த, பொரும் பரிவீரன் மேல் - போர் செய்யும் குதிரைகளையுடைய வீரனாகிய உக்கிர வழுதியின் மேல், பொருது-மனம் பொறாது, பொங்கினான் - வெகுண்டான் எ - று.

தொண்ணூறா றென்பது விகாரமாயிற்று. வேம்பின் றளிராற் றொடுக்கப்பட்ட கண்ணி; "வேம்பினொண்டளிர்" எனப் புறப்பாட்டில் வருவது காண்க. நூறு வேள்வி புரிந்திடின் தன் பதவிக் குரியனாவன் என்னுங் கருத்தாற் பொறாதவனாயினான். (௩)

மன்னிய நாடெலாம் வளஞ்சு ரந்துவான்
பொன்னிய னாடுபோற் பொலித லாலிந்த
மின்னிய வேலினான் வேள்வி செய்வதென்
றுன்னிய மனத்தனோர் சூழ்ச்சி யுன்னினான்.

(இ - ள்.) மன்னிய நாடு எலாம் - நிலைபெற்ற தன் நாடு முழுதும், வான்வளம் சுரந்து-மழை வளம் மிகுந்து, இயல் பொன் நாடு போல் பொலிதலால் - அழகிய பொன்னுலகம் போல விளங்குதலானன்றே, இந்த மின்னிய வேலினான் - இந்த ஒளி பொருந்திய வேற்படையையுடைய உக்கிரவழுதி, வேள்வி செய்வது என்று உன்னிய மனத்தன் - வேள்வி செய்கின்றது என்று கருதிய மனத்தினனாய், ஓர் சூழ்ச்சி உன்னினான்-ஒரு வஞ்சனையை நினைத்தான் எ - று.

செய்வது பொலிதலானன்றே என்றுன்னிய வென்க. செல்வம் மிக்கு வானிலுள்ள பொன்னாடு போல் எனலுமாம். செய்வது: தொழிற்பெயர். (௪)

பொருங்கடல் வேந்தனைக் கூவிப் பொள்ளென
இருங்கட லுடுத்தபா ரேழு மூழிநாள்
ஒருங்கடு வெள்ளமொத் துருத்துப் போய்வளைந்
தருங்கடி மதுரையை யழித்தியா லென்றான்.

(இ - ள்.) பொரும் கடல் வேந்தனை-அலைகள் மோதும் கடலின் மன்னனாகிய வருணனை, கூவி - அழைத்து, பொள்ளென - விரைந்து, இருங்கடல் உடுத்த பார் ஏழும்-பெரிய கடல் சூழ்ந்த ஏழு தீவுகளையும், ஊழிநாள் ஒருங்கு அடு வெள்ளம் ஒத்து - ஊழிக்காலத்தில் ஒருசேர அழிக்கும் வெள்ளத்தைப் போன்று, உருத்துப்போய் வளைந்து-சினந்துபோய் வளைந்து, அருங்கடி மதுரையை அழித்தி என்றான் - அரிய காவலையுடைய மதுரையை அழிப்பாயாக என்று கூறினான் எ - று.

பொள்ளென அழித்தி யெனக்கூட்டுக. பொள்ளென: விரைவுக் குறிப்பு.

"பொள்ளென வாங்கே புறம் வேரார்"

என்பது திருக்குறள். ஆல்: அசை. (௫)

விளைவது தெரிகிலேன் வேலை வேந்தனும்
வளவயன் மதுரையை வளைந்திட் டிம்மெனக்
களைவது கருதினன் பேயுங் கண்படை
கோளவரு நனந்தலைக் குருட்டுக் கங்குல்வாய்.

(இ - ள்.) வேலை வேந்தனும் விளைவது தெரிகிலன் - கடற்கரசனாகிய வருணனும் மேலே விளைவதை உணராதவனாய், பேயும் கண்படை கொளவரும்-பேயும் கண்ணுறங்குமாறு வருகின்ற, நனந்தலை-நடு இரவின், குருட்டுக் கங்குல்வாய்-குருட்டிருளின்கண், வளவயல் மதுரையை வளைந்திட்டு-வளம் பொருந்திய கழனி சூழ்ந்த மதுரைப் பதியைச் சூழ்ந்து, இம் மெனக் களைவது கருதினன் - விரைய அழித்தலைக் கருதினன் எ - று.

விளைவது-மேலே தனக்குண்டாகும் தீங்கு. தெரிகிலன்: முற்றெச்சம். வளைந்திட்டு, இடு: துணைவினை. இம்மென: விரைவுக் குறிப்பு. களைவது: தொழிற் பெயர். நனந்தலை-நடு; நள்ளிரவுக் காயிற்று. பார்வையுடைய விழிகளைக் குருடு போலாக்கும் கங்குலைக் குருட்டுக் கங்குல் என்றார். (௬)

[எழுசீரடி யாசிரிய விருத்தம்]

கோதித்த லைக்க ரங்க ளண்ட கூட மெங்கு மூடுபோய்
அதிர்த்த லைக்க வூழி நாளி லார்த்த லைக்கு நீத்தமாய்
மதித்த லத்தை யெட்டி முட்டி வருமோ ரஞ்ச னப்பொருப்
புதித்த தோத்து* மண்ணும் விண்ணு முட்க வந்த துததியே.

(இ - ள்.) உததி - கடலானது, கொதித்து - பொங்கி, அலைக் கரங்கள் - அலையாகிய கைகள், அண்ட கூடம் எங்கும் ஊடுபோய்-அண்டகூட முழுதும் ஊடுருவிச் சென்று, அதிர்த்து அலைக்க-நடுக்க முண்டாக்கி வருத்த, ஊழி நாளில் ஆர்த்து அலைக்கும் நீத்தமாய் - ஊழிக்காலத்தில் ஆரவாரித்து அழிக்கும் வெள்ளமாய், மதித்தலத்தை எட்டி முட்டி - சந்திர மண்டலத்தை எட்டிப் பொருந்தி, வரும் ஒரு அஞ்சனப் பொருப்பு உதித்தது ஒத்து - வருகின்ற ஒரு கரிய மலை தோன்றினாற்போல, மண்ணும் விண்ணும் உட்க வந்தது-மண்ணுலகத்தாரும் விண்ணுலகத்தாரும் அஞ்சுமாறு வந்தது எ- று.

உததி கொதித்து உட்க நீத்தமாய் வந்த தென்க. அதிர்வு நடுக்கமாகலின் அதிர்ந்து என்பதற்கு நடுக்க முண்டாக்கி யென்று பொருளுரைக்கப்பட்டது; முழங்கி யென்றுமாம். நீத்தமாய் - நீத்தம் போலாகி, அஞ்சனப் பொருப்புதித்த தொத்து என்றது இல்பொருளுவமை. மண்ணும் விண்ணும்: ஆகுபெயர்கள். இது முதல் ஒன்பது செய்யுட்கள் நாற்சீரடியாகவும் பிரித்தற் கமையுமாயினும் ஓசையை நோக்குழி எழுசீரடியாகக் கோடலே சிறப்புடைத்தென்க. (௭)

---

(பா - ம்.) * உதித்த லொத்து.

வங்க வேல் வெள்ள மாட* மதுரை மீது வருசெயல்
கங்குல் வாய திங்கண் மீது காரி வாய காருடல்
வெங்கண் வாள ராவி ழுங்க வீழ்வ தொக்கு மலதுகார்
அங்கண்மூட வருவ தொக்கு மல்ல தேது சொல்வதே.

(இ - ள்.) வங்க வேலை வெள்ளம்-மரக்கலங்கள் செல்லும் கடலின் வெள்ளமானது, மாட மதுரை மீது வரு செயல் - மாடங்களையுடைய மதுரைப்பதியின் மீது வருகின்ற தன்மை, கங்குல் வாய திங்கள் மீது - இரவினிடத்ததாகிய சந்திரன்மேல், காரி வாய - நஞ்சு பொருந்திய வாயினையுடைய, கார் உடல் வெங்கண் வாள் அரா-கரிய உடலையும் வெவ்விய கண்களையும் உடைய கொடிய இராகு என்னும் பாம்பானது, விழுங்க வீழ்வது ஒக்கும் - அதனை விழுங்குதற்கு விரைந்து வருதலைப் போலும்; அலது-அன்றி, கார்-மேகங்கள், அங்கண் மூடவருவது ஒக்கும்-அம்மதுரையை மறைத்தற்கு வருதலை ஒக்கும்; அல்லது-அல்லாமல், சொல்வதுஏது-வேறு கூறுவது யாது எ-று.

வங்கத்தை யுடையவெனக் கடலுக்கு அடை கூறினார். கங்குல் வாயது காரி வாயது என்பன துவ்வீறு தொக்கு நின்றன. திங்களினமிழ்தால் தூய்மை செய்யப் பெற்ற மதுரைமீது கடல் வருவதற்குத் திங்கள்மீது கரும் பாம்பு வருதலை உவமையாகக் கூறியது பெரிதும் பொருத்த முடைத்தாம். கார் மூட வருவதென்றது பின்பு வருணனால் ஏவப்பட்டு ஏழு மேகங்களும் மதுரையை அழிக்க வென வருஞ் செய்தியை உட்கொண்டு கூறியது. வீழ்வது, வருவது என்பன தொழிற் பெயர்கள். அலது - அன்றி. ஒக்குமென்று கூறுவதல்லால் என விரிக்க. (அ)

வட்ட யாமை பலகை வீசு வாளை வாள்கள் மகரமே
பட்ட யானை பாய்தி ரைப்ப ரப்பு வாம்ப ரித்திரள்
விட்ட தோணி யிரத மின்ன விரவு தானை யோடுகடல்
அட்ட மாக வழுதி மேல மர்க்கெ ழுந்த தொக்குமே.

(இ - ள்.) வட்ட யாமை பலகை-(அன்றி) வட்டமாகிய ஆமைகள் கேடகங்களாக. வீசு வாளை வாள்கள்-எறிகின்ற வாளை மீன்கள் வாட் படைகளாக, மகரம் பட்ட யானை - சுறா மீன்கள் நெற்றிப் பட்டத்தையுடைய யானைகளாக, பாய் திரைப்பரப்பு வாம்பரித் திரள்-பரந்த அலைக்கூட்டங்கள் தாவுகின்ற குதிரைக்கூட்டங்களாக, விட்ட தோணி இரதம் - ஓடவிட்ட தோணிகள் தேர்களாக, இன்ன விரவு தானையொடு-இத்தன்மையன விரவிய சேனையோடு, கடல் - கடலானது, அட்டமாக - எதிராக, வழுதிமேல் அமர்க்கு எழுந்தது ஒக்கும்- உக்கிர பாண்டியன்மேல் போருக்கு எழுந்ததைப் போலும் எ - று.

அட்டம் - எதிர், குறுக்கு;

"மஞ்சலைக்கு மாமலைச் சரிப்புறத்து வந்தமா
அஞ்சவித் தடர்க்கு நாய்க ளட்டமாக விட்டு"

என்பது திருத்தொண்டர் புராணம். அட்டம் என்பதற்குப் பகையென்றும் பொருள் கூறுவர்; தமிழ் லெக்சிகன் காண்க. (கூ)

---

(பா - ம்.) * வெள்ளை மாடம்.

இன்ன வாறெ ழுந்த வேலை மஞ்சு றங்கு மிஞ்சிசூழ்
நன்ன கர்க்கு ணக்கின் வந்து நணுகு மெல்லை யரையிரா
மன்ன வன்க னவின் வெள்ளி மன்ற வாணர் சித்தராய்
முன்னர் வந்தி ருந்த ரும்பு முறுவ ரேன்ற மொழிகுவார்.

(இ - ள்.) இன்னவாறு எழுந்த வேலை - இங்ஙனம் எழுந்த கடலானது, மஞ்சு உறங்கும் இஞ்சி சூழ் நல் நகர்-முகில் உறங்கப் பெறும் மதில் சூழ்ந்த நல்ல அம்மதுரைப்பதியின், குணக்கின் வந்து நணுகும் எல்லை - கிழக்குத் திக்கில் வந்து நெருங்கு மளவில், அரை இரா - நடு இரவில், மன்னவன் கனவில்-பாண்டி மன்னன் கனவின் கண், வெள்ளி மன்ற வாணர் - வெள்ளியம்பலவாணர், சித்தராய் - ஒரு சித்த மூர்த்தியாய், முன்னர் வந்திருந்து - முன்னே தோன்றி, அரும்பு முறுவல் தோன்ற மொழிகுவார் - அரும்புகின்ற புன்னகை தோன்ற மொழிகின்றார் எ - று.

வாணர் : வாழ்நர் என்பதன் மரூஉ. மொழிகுவார், கு: சாரியை.

வழுதி யுன்ற னகர ழிக்க வருவ தாழி வல்லைநீ
எழுதி போதி வென்றி வேலெ றிந்து வாகை பெறுகெனத்
தொழுத செங்க ரத்தி னன்று திக்கு நாவி னனெழீஇக்
கழுது றங்கு கங்கு லிற்க னவு ணர்ந்து காவலான்.

(இ - ள்.) வழுதி - பாண்டியனே, உன் தன் நகர் அழிக்க - உனது நகரத்தை அழிக்கும் பொருட்டு, ஆழி வருவது - கடலானது வருகின்றது (ஆதலால்), நீ வல்லை எழுதி - நீ விரைந்து எழுந்து, போதி-போய், வென்றி வேல் எறிந்து வாகை பெறுக என-வெற்றி பொருந்திய வேற்படையை விடுத்து வென்றி பெறுவாயாக என்று கூற, காவலான் - உலகினைப் பாதுகாத்தலை யுடைய உக்கிர வழுதி, தொழுத செங்கரத்தினன் - கூப்பிய சிவந்த கைகளை யுடையனாய், துதிக்கும் நாவினன் - துதிக்கின்ற நாவினையுடையனாய், எழீஇ - எழுந்து, கழுது உறங்கு கங்குலில் கனவு உணர்ந்து - பேயும் உறங்குகின்ற நள்ளிரவில் தான் கண்ட கனவினை யுணர்ந்து எ - று.

எழுதி-எழுவாய்; போதி - போவாய்; இவற்றை எச்சமாக்குக. வாகை-வென்றி யெய்தினோர் சூடும் மாலை; வெற்றியைக் குறித்தது. பெறுகென: அகரந் தொகுத்தல். எழீஇ: சொல்லிசை யளபெடை. கழுதுமென்னும் உம்மை தொக்கது. (கக)

கண்ணி றைந்த வமளி யிற்க ழிந்து வாயில் பலகடந்
துண்ணி றைந்த மதிய மைச்ச ருடன்வி ரைந்து குறுகியே
மண்ணி றந்த* தெனமு ழங்கி வருத ரங்க வாரிகண்
டெண்ணி றந்த† வதிச யத்த னாகி நிற்கு மெல்லைவாய்.

(இ - ள்.) கண் நிறைந்த அமளியில் கழிந்து - கண்டுயின்ற சேக்கையினின்றும் நீங்கி, வாயில் பல கடந்து - அரண்மனை வாயில்

(பா - ம்.) * மண்ணிறைந்த † எண்ணிறைந்த.

பலவற்றையும் கடந்து, உள் நிறைந்த மதி அமைச்சருடன் -உள்ளே நிறைந்த அறிவினையுடைய மந்திரிகளுடன், விரைந்து குறுகி - விரைந்து சென்று, மண் இறந்தது என - நிலவுலகு அழிந்ததென்று கூறுமாறு, முழங்கி வரு தரங்கவாரி கண்டு - ஆரவாரித்து வருகின்ற அலைகளையுடைய கடலைநோக்கி, எண் இறந்த அதிசயத்தனுகி நிற்கும் எல்லைவாய் - அளவிறந்த வியப்படைந்தவனாகி நிற்குங்கால் எ - று.

(இ - ள்.) துயிலுதலைக் கண்வளர்தல் என்பவாகலின் வளர்தலை நிறைதலாக்கிக் 'கண்ணிறைந்த' என்ருர்; கண்ணுக்கு நிறைந்த அமளியென்றும், கள் நிறைந்த மலரமளி யென்றும் கூறலுமாம். இறந்ததென, இறந்த காலத்தாற் கூற. (கஉ)

கனவில் வந்த சித்த வேடர் நனவில் வந்து காவலோன்
நினைவு கண்டு பொழுது தாழ நிற்ப தென்கொ லப்பனே
சினவி வேலை போல வந்த தெவ்வை மான வலிகெட
முனைய வேலெ றிந்து ஞால முடிவு தீர்த்தி யாலென.

(இ-ள்.) கனவில் வந்த சித்த வேடர் - கனவிலே தோன்றிய சித்தமூர்த்தி, நனவில் வந்து - நனவிலும் எழுந்தருளி வந்து, காவலோன் நினைவுகண்டு-மன்னனது எண்ணத்தை உணர்ந்து, அப்பனே பொழுது தாழ நிற்பது என்-அப்பனே நீ காலந்தாழ்க்க நிற்பது என்னை, சினவி வேலை போல வந்த தெவ்வை - சினந்து கடல் வடிவாக வந்த பகையை, மான வலிகெட-அதனது மிக்க வலிகெட, முனைய வேல் எறிந்து - கூரிய வேற்படையை எறிந்து (வென்று), ஞாலம் முடிவு தீர்த்தி என - உலகிற்கு வரும் அழிவை நீக்குவாய் என்று கூற எ - று.

நனவிலுமென உம்மை விரிக்க. நினைவு - சிந்தனை செய்து தாழ்த்தல். கொல்: அசை. அப்பன் என்றது உவகையால்; மரபுவழுவமைதி; துறந்தோரான பெரியார் பிறரை விளிக்குங்காற் கூறும் மரபுச் சொல்லுமாம். சினவி-சினந்து. வேலையன்று, வேலைபோல வந்ததொரு பகை யென்ருர். மான வலி - மிக்க வலி, மானமும் வலியும் எனலுமாம். முனை - கூர்மை; நுதி. முனைய: குறிப்புப் பெயரெச்சம். ஆல்: அசை. (கந)

எடுத்த வேல்வ லந்தி ரித்தெ றிந்த வேலை வேன்முனை
மடுத்த வேலை சுஃறெ னவ்வ றந்து மான வலிகெட
அடுத்து வேரி வாகை யின்றி யடிவ ணங்கு தெவ்வரைக்
கடுத்த வேல்வ லான்க ணைக் காலின் மட்ட மானதே.

(இ - ள்.) எடுத்தவேல் வலம் திரித்து எறிந்த வேலை(உடனே) எடுத்த வேற்படையை வலமாகச் சுழற்றி வீசியபோது, வேலைமுனை மடுத்தவேலை - வேலின் நுதியிற் பொருந்திய கடலானது, சுஃறென வறந்து - சுஃறென்னும் ஒலியுண்டாக நீர் வற்றி, மான வலி கெட - மிக்க வலியானது அழிய, அடுத்து - நெருங்கி, வேரி வாகையின்றி அடிவணங்கு தெவ்வரைக் கடுத்து-மணம் பொருந்திய வெற்றி மாலை இல்லையாகத் தோல்வியுற்று அடிகளில் வணங்கும் பகைவரைப்

போன்று, அவேல் வலான் கணைக்காலின் மட்டம் ஆனது - அந்த வேற்போரில் வல்ல உக்கிரவழுதியின் கணைக்காலின் அளவில் ஆயிற்று எ - று.

கூறியவுடன் அவன் எறிந்த பொழுது என வருவித்துரைக்க. சுஃறெனா: ஒலிக்குறிப்பு. வகரம் விரித்தல். வறந்து காலின் மட்டமானது எனக் கூட்டுக; வறந்து அடுத்து ஆனது எனினும் பொருந்தும். வாகையில்லையாகத் தோல்வி யுற்றென விரிக்க. அவ்வேல் என்பதில் வகரம் தொக்கது. ஈற்றடியில் ஓரசைச்சீர் வந்தது. (கச)

சந்த வேத வேள்வி யைத்த டுப்ப தன்றி யுலகெலாஞ்
சிந்த வேறு சூழ்ச்சி செய்த தேவர் கோவி னேவலால்
வந்த வேலை வலிய ழிந்த வஞ்ச கர்க்கு நன்றிசெய்
திந்த வேலை வலியி ழப்ப தென்று முள்ள தேகொலாம்.

(இ - ள்.) சந்த வேத வேள்வியைத் தடுப்பது அன்றி - பண் அமைந்த வேதத்திற் கூறிய வேள்வியைத் தடுப்பதல்லாமல், உலகு எலாம் சிந்த வேறு சூழ்ச்சிசெய்த - உலகனைத்தும் அழியுமாறு பிறிது சூழ்ச்சி செய்த, தேவர் கோவின் ஏவலால் - தேவேந்திரனின் ஏவலினால், வந்த வேலை வலி அழிந்த-பெருகிவந்த கடலானது வலியழிந்தது; வஞ்சகர்க்கு நன்றி செய்து இந்தவேலை வலி இழப்பது என்றும் உள்ளதே கொல் - வஞ்சனையுடைய தீயோர்க்கு உதவி செய்து அதனால் இந்தக் கடலானது தன் வலிமையை இழப்பது எக்காலத்தும் உள்ள தொரு செயலே போலும் எ - று.

வேள்வி தனக்கு இடையூருயின் நேரே அதனைத் தடுத்தல் செய்யாது, உலகினை அழியச் செய்து அதனால் வேள்வியைத் தடுத்தல் கருதியது எத்துணையும் கொடியதொரு சூழ்ச்சியென்பார் 'வேறு சூழ்ச்சி செய்த' என்றார்; வேதத்திற் கூறப்பட்ட அறவினையாகிய வேள்வியைத் தடுக்கக் கருதிய தீவினையே யன்றி உலகெலாம் அழிவெய்துமாறு சூழ்ந்த தீவினையும் உடையானென்பதோர் பொருளும் தோன்ற நின்றது. அழிந்தது என்பது ஈறுதொக்கது; முன் சூரபன்மன், விருத்திரன் முதலாயினார்க்கு இடங்கொடுத்து வலியிழந்தமையின் என்று முள்ளதே போலும் என்றார். இந்த என்னும் சுட்டு இகழ்தலைக் கருதிற்று. ஆம்: அசை. இது வேற்றுப்பொருள் வைப்பின் பாற்படும். (கரு)

[அறுசீரடி யாசிரிய விருத்தம்]

புண்ணிடை நுழைந்த வேலாற்
புணரியைப் புறங்கண் டோன்பால்
மண்ணிடை நின்ற சித்தர்
வானிடை மறைந்து* ஞானக்
கண்ணிடை நிறைந்து தோன்றுங்
கருணையால் வடிவங் கொண்டு
விண்ணிடை யணங்கி னேடு
விடையிடை விளங்கி நின்றார்.

---

(பா - ம்.) * நிறைந்து.

(இ - ள்.) புன் இடை நுழைந்த வேலால் - பகைவருடலில் நுழைந்த வேலினல், புணரியைப் புறங் கண்டோன்பால் - கடலைப் புறங்கொடுக்கச் செய்த உக்கிர பாண்டியன் முன்னர், மண் இடை நின்ற சித்தர்-நிலத்தின்கண் நின்றருளிய சித்தமூர்த்தி, வான் இடை மறைந்து-விசும்பிலே மறைந்து (பின்), ஞானக்கண் இடைநிறைந்து தோன்றும் கருணையால் - ஞானக்கண்ணிலே நிறைந்து தோன்றும் தனது திருவருளினுல், வடிவம் கொண்டு-திருவுருவந் தாங்கி, அணங்கினேடு-உமை யம்மையாரோடும், விண் இடை-வானின்கண், விடை இடை விளங்கி நின்ருர் - இடப ஊர்தியில் வெளிப்பட்டு நின்றருளினுர் எ - று.

இறைவன் ஞானக்கண்ணில் நிறைந்து தோன்றுதலை,

"ஊனக்கண் பாச முணராப் பதியை
ஞானக் கண்ணினிற் சிந்தை நாடி"

என்னும் சிவஞானபோதத்தா னறிக. இடை எல்லாம் ஏழனுருபு. இச்செய்யுளை மூன் மூன்றடியும் வேறுபடப் பாடங்கொண்டனர் இராமசுவாமிப் பிள்ளை; அது,

'புண்ணுடை வேலோ யாதித் தமிழ்ச்சங்கம் புணரி கொள்ள
மண்ணிடைச் சங்க மின்று வைத்தனங் கடைச்சங் கந்தான்
கண்ணிடைக் காணக் கங்கைக் கரையினு மென்று சித்தர்
விண்ணிடை யணங்கி னேடு விடையிடை விளங்கி நின்ருர்'

என்பது. (கசு)

முக்கணும் புயங்க ணன்கு முளைமதிக் கண்ணி வேய்ந்த
செக்கரஞ் சடையுங் காள கண்டமுந் தெரிந்து தென்னன்
பக்கமே பணிந்தெ ழுந்து பரந்தபே ரன்புந் தானுந்
தக்கவஞ் சலிசெய் தேத்தித் தரைமிசை நடந்து செல்வான்.

(இ - ள்.) முக்கணும் புயங்கள் நான்கும் - மூன்று கண்களையும் நான்கு திருத்தோள்களையும், முளை மதிக் கண்ணி வேய்ந்த செக்கர் அம் சடையும் - குழவித் திங்களைக் கண்ணியாக அணிந்த சிவந்த அழகிய சடையையும், காளகண்டமும் - நீலகண்டத்தையும், தென்னன் தெரிந்து - பாண்டியன் தரிசித்து, பக்கமே பணிந்து எழுந்து-அப்பக்கத்தையே நோக்கி வணங்கி எழுந்து, பரந்த பேர் அன்பும் தானும் - விரிந்த பெரிய அன்பும் தானுமாக, தக்க அஞ்சலிசெய்து ஏத்தி-விதிப்படி அஞ்சலி செய்து துதித்து, தரைமிசை நடந்து செல்வான் - புவியின்மேல் நடந்து செல்கின்ருன் எ - று.

முளை மதி-குழவித் திங்கள்; புதுவதாகத் தோன்றிய மதி யென்னலுமாம். தான் அன்புடன் என்பதனை 'அன்புந் தானும்' என்ருர்; அன்பும் தானுமாகச் செல்வானென்க; "நாணனு மன்பு முன்பு நளிர்வரை யேற" என்ருற்போல அன்பிற்கொரு வடிவுகொடுத்துக் கூறினுர். பக்கமே நடந்து செல்வான் எனக் கூட்டினும் அமையும். (கஎ)

துந்துபி யைந்து மார்ப்பப் பாரிடந் தொழுது போர்ப்பத்
தந்திர வேத கீதந் ததும்பியெண் டிசையுந் தாக்க
அந்தர நாட ரேத்த வகல்விசும் பாற தாக
வந்துதன் கோயில் புக்கான் வரவுபோக் கிறந்த வள்ளல்.

(இ - ள்.) வரவு போக்கு இறந்த வள்ளல்-பிறப் பிறப்பில்லாத இறைவன், துந்துபி ஐந்தும் ஆர்ப்ப - ஐந்து துந்துபிகளும் முழங்கவும், பாரிடம் தொழுது போர்ப்ப-பூதகணங்கள் வணங்கிச் சூழவும், கீதம் தந்திரம் வேதம் ததும்பி எண் திசையும் தாக்க - கீதத்தோடு கூடிய சிவாகமங்களும் வேதங்களும் நிறைந்து எட்டுத் திக்கிலும் ஒலிக்கவும், அந்தர நாடர் ஏத்த-வான நாடர்கள் துதிக்கவும், அகல் விசும்பு ஆறதாக வந்து தன் கோயில் புக்கான் - அகன்ற வான்வழியாக வந்து தனது திருக்கோயிலுட் புகுந்தருளினான் எ - று.

தந்திரம் - நூல்; ஆகமம். தாக்க-நிறைய. ஆறது, அது: பகுதிப் பொருள் விகுதி. வரவு போக்கு என்பன பிறப்பிறப்பைக் குறிப்பன;

"போக்கும் வரவும் புணர்வுமிலாப் புண்ணியனே"

என்பது திருவாசகம்; எங்கும் நிறைந்த பொருளென்னும் உண்மைத் தன்மை கருதிக் கூறிற்றுமாம்.　(கஅ)

அஞ்சலி முகிழ்த்துச் சேவித் தருகுற வந்த வேந்தன்
இஞ்சிசூழ் கோயி லெய்தி யிறைஞ்சினன் விடைகொண் டேகிப்
பஞ்சின்மேல் லடியா ரட்ட மங்கலம் பரிப்ப நோக்கி
மஞ்சிவர் குடுமி மாட மாளிகை புகுந்தான் மன்னோ.

(இ - ள்.) அஞ்சலி முகிழ்த்து சேவித்து அருகுற வந்த வேந்தன்-அஞ்சலி கூப்பித் தொழுது அருகிலே வந்த பாண்டிய மன்னன், இஞ்சி சூழ் கோயில் எய்தி இறைஞ்சினன் - மதில் சூழ்ந்த திருக்கோயிலையடைந்து வணங்கி, விடை கொண்டு ஏகி - (அவரிடம்) விடைபெற்றுச் சென்று, பஞ்சின்மெல் அடியார் - பஞ்சினும் மெல்லிய அடிகளையுடைய மகளிர், அட்ட மங்கலம் பரிப்ப நோக்கி-எட்டு மங்கலங்களையும் தாங்கி எதிர்வரப் பார்த்து, மஞ்சு இவர் குடுமி மாட மாளிகை புகுந்தான் - மேகந் தவழும் சிகரத்தையும் மேன் மாடத்தையு முடைய மாளிகையிற் புகுந்தான் எ - று.

இறைஞ்சினன்: முற்றெச்சம். செம்பஞ்சி யூட்டிய அடியென்னலுமாம். மன்னும் ஓவும் அசைகள்.　(கக)

வளையெயின் மதுரை மூதூர் மறிகட லிவற்றி னாப்பண்
விளைவய னகர மெல்லாம் வெள்ளியம் பலத்து ளாடுந்
தளையவிழ் கொன்றை வேணித் தம்பிரான் றனக்கே சேர்த்துக்
களைகணா யுலகுக் கெல்லா மிருந்தனன் காவல் வேந்தன்.

(இ - ள்.) வளை எயில் மதுரை மூதூர் மறி கடல் இவற்றின் நாப்பண் - வளைந்த மதில் சூழ்ந்த மதுரையாகிய தொன்மையுடைய

நகரமும் அலைமடங்கும் கடலுமாகிய இவற்றின் நடுவிலுள்ள, விளை வயல் நகரம் எல்லாம்-விளை கழனிகளும் ஊர்களுமாகிய எல்லாவற்றையும், வெள்ளி அம்பலத்துள் ஆடும்-வெள்ளி யம்பலத்திலே திருநிருத்தம் புரியும், தளை அவிழ் கொன்றை வேணித் தம்பிரான் தனக்கே சேர்த்து - முறுக்கவிழ்ந்த கொன்றை மலர்மாலை யணிந்த சடையையுடைய இறைவனுக்கே சேர்த்து, காவல் வேந்தன் - புரவலனாகிய உக்கிர பாண்டியன், உலகுக்கு எல்லாம் - உலகங்களுக்கெல்லாம், களைகணாய் இருந்தனன் - பற்றுக்கோடாகி இருந்தான் எ - று.

கடலால் அழிவுறாமற் காத்தது சொக்கலிங்கப் பெருமான் திருவருளென்னுங் கருத்தால், மதுரைக்கும் கடலுக்கும் இடைப்பட்டவற்றை யெல்லாம் இறைவனுக்குரியவாக்கினன் என்க. வயல்களுடன் கூடிய நகர மென்னலுமாம். (௨0)

ஆகச் செய்யுள் - க0௬க.

---

## கச. இந்திரன் முடிமேல் வளையெறிந்த படலம்

[அறுசீரடி. யாசிரிய விருத்தம்]

மின்னவிர் மணிப்பூண் மார்பன்
வேலையை வேலால் வென்று
பொன்னவிர் வாகை வேய்ந்த
புகழுரை செய்தே நாக
நன்னக ராளி செம்பொ
னகைமுடி சிதற வந்த
மன்னவன் வளைகொண் டோச்சி
வென்றதும் வகுத்துச் சொல்வாம்.

(இ-ள்) மின் அவிர் மணிப் பூண் மார்பன்-மின்போல் விளங்கும் மணிகள் பதித்த அணிகலன் விளங்கும் மார்பினையுடைய உக்கிர வழுதி, வேலையை வேலால் வென்று-கடலை வேற்படையினால் வென்று, பொன் அவிர் வாகை வேய்ந்த புகழ் உரைசெய்தேம்-பொன் போல விளங்கும் வாகை மாலை சூடிய புகழாகிய திருவிளையாடலைக் கூறினேம்; நல் நாக நகர் ஆளி-(இனி) நல்ல வானுலகை ஆளும் இந்திரனது, செம் பொன் நகை முடிசிதற - சிவந்த பொன்னாலாகிய ஒளியினையுடைய முடி சிதறுமாறு, அந்த மன்னவன் - அவ்வுக்கிர பாண்டிய மன்னன், வளை கொண்டு ஓச்சி வென்றதும்-திகிரி கொண்டு எறிந்து வெற்றிபெற்ற திருவிளையாடலையும், வகுத்துச் சொல்வாம்-வகுத்துக் கூறுவாம் எ-று.

வாகை வேய்ந்து புகழ்கொண்ட திருவிளையாட லென்க. ஆளி-ஆள்பவன் ; இ : வினைமுதற்பொருள் விகுதி. கொண்டு: மூன்றும் வேற்றுமைச் சொல்லுருபு ; இரண்டன் பொருளில் வந்தது. (க)

கோமக னிகழு நாளிற் கோணிலை பிழைத்துக் கொண்மூ
மாமழை மறுப்பப் பைங்கூழ் வறந்துபுற் றலைக டீந்து
காமரு நாடு மூன்றுங் கையற வெய்த மன்னர்
தாமது தீர்வு நோக்கித் தமிழ்முனி யிருக்கை சார்ந்தார்.

(இ-ள்) கோமகன் நிகழும் நாளில்-(இங்ஙனம்) உக்கிர வழுதி செங்கோல் ஓச்சுங் காலத்தில், கோள் நிலை பிழைத்து-ஒன்பது கோட்களும் தத்தம் நிலையினின்றும் பிறழ்தலால், மாகொண்மூ மழை மறுப்ப-கரிய முகில்கள் மழை பெய்யாதொழிய, காமரு நாடு மூன்றும்-அழகிய தமிழ் நாடு மூன்றும், பைங்கூழ் வறந்து-பயிர்கள் தீந்து, புல் தலைகள் தீந்து-புல்லின் தலைகளுங் கருகி, கையறவு எய்த-வறுமை மிக, மன்னர்-அந்நாட்டினை ஆளும் வேந்தர் மூவரும், அது தீர்வு நோக்கி - அவ்வறுமை ஒழிதலைக் கருதி, தமிழ் முனி இருக்கை சார்ந்தார் - அகத்திய முனிவரின் இருப்பிடமாகிய பொதியின்மலையை அடைந்தனர் எ-று.

பிழைத்து-பிழைத்தலால்; கோள் நிலை திரிதலால் மழையின்றாகு மென்பதனை,

"கோணிலை திரிந்திடின் மாரி வறங்கூரும்"

என மணிமேகலை கூறுதலானு மறிக. மா-கருமை; பெருமையுமாம். காமரு, உ : சாரியை; விருப்பம் பொருந்திய வென்றுமாம். கையறவு-மிக்க துன்பம்; ஈண்டு வறுமைத்துன்பம் ;

"இன்மையி னின்னாத தியாதெனி னின்மையின்
இன்மையே யின்னா தது"

என்று தமிழ் மறை கூறுவது காண்க. தாம்: அசை. நோக்கி, நோக்க னோக்கம். (உ)

முனிவனை யடைந்து வேந்தர் மூவருந் தங்க ணாட்டிற்
பனிவரு மாரி யின்றி வறந்தமை பகர மேருக்
குனிவரு சிலையார்க் கன்பன் கோணிலை குறித்து நோக்கி
இனிவரு மாரி யில்லை யாதினு லென்னிற்* கேண்மின்.

(இ-ள்.) வேந்தர் மூவரும்-மூவேந்தரும், முனிவனை அடைந்து-அகத்திய முனிவனை அடைந்து, தங்கள் நாட்டில் பனிவரு மாரி இன்றி-தங்கள் நாட்டினில் குளிர்ச்சிபொருந்திய மழை இன்மையால், வறந்தமை பகர - வறுமை மிக்கதைக் கூற, மேரு குனிவரு சிலையார்க்கு அன்பன்-மேருமலையாகிய வளைந்த வில்லையுடைய சிவபெருமானுக்கு அன்பனாகிய அம்முனிவன், கோள் நிலை குறித்து நோக்கி-கோட்கள் நிற்கும் நிலையை ஆராய்ந்து பார்த்து, இனிவரும் மாரியில்லை-இனியும் மழை பெய்தல் இல்லை; யாதினுல் என்னில்-எதனுலென்றால், கேண்மின் - கேளுங்கள் எ - று.

மாரி இன்றி வறந்தமை-மழை பெய்யாது வறங்கூர்ந்தமையுமாம். குனிவரு-வளைதல் பொருந்திய; குனி: முதனிலைத் தொழிற்பெயர். குறித்து நோக்கல்- நூலானும் மனத்தானும் ஆராய்ந்து காண்டல்; குறித்துணர்தலால் சோதிடம் குறியென்று பெயர்பெறும். வருமாரி என்பதனை மாரிவருதல் எனக் கொள்க. கூறுதும் கேண்மின் என்க. (௩)

காய்சின வெய்யோன் சேயோன் முன்செலக் கதிர்கால் வெள்ளித்
தேசிகன் பின்பு சென்று நடக்குமிச் செயலான் முந்நீர்த்
தூசின வுலகிற் பன்னீ ராண்டுவான் சுருங்கு மென்று
பேசின நூல்கள் மாரி பெய்விப்போற் சென்று கேண்மின்.

(இ-ள்.) காய் சின வெய்யோன் சேயோன்-மிக்க சினமுள்ள சூரியனும் செவ்வாயும், முன் செல - முன்னே நடக்க, கதிர்கால் வெள்ளித் தேசிகன்-ஒளி வீசும் சுக்கிரனாகிய குரவன், பின்பு சென்று நடக்கும் இச்செயலால் - அவற்றிற்கும் பின்னே செல்லும் இந்தச் செயலினால், முந்நீர்த் தூசின உலகில்-கடலாகிய ஆடையையுடைய

(பா-ம்.) * யாதினுலென்று.

இந்நிலவுலகில், பன்னிரு ஆண்டு-பன்னிரண்டு ஆண்டுகள் வரை, வான் சுருங்கும் என்று நூல்கள் பேசின-மழையில்லே என்று நூல்கள் கூறின (ஆதலால்), மாரி பெய்விப்போன் சென்று கேண்மின் - மழையைப் பெய்விப்போனுகிய இந்திரனிடத்திற் சென்று அவனேக் கேளுங்கள் எ-று.

காய் சினம்-சுடுகின்ற சினமுமாம்; பரிதியின் வெம்மையைச் சினமென்று கூறுதல் கவிமரபு. ஆதித்தன் செவ்வாய்க்கு முன்செல்ல வென்று கூறுதற்கும் சொற்கிடக்கை இடந்தரும். தானவர்க்குக் குருவாகலின் 'தேசிகன்' என்றூர். மிகவும் பின்னே 'தள்ளிச் செல்லுதலால் என்பது கருத்து;. வெள்ளி மழைக் கோளாதல் உணர்க. கேண்மின் - பெய்விக்கவேண்டுமெனக் கேளுங்கள். (ச)

என்றவ னேதிர்யா மெவ்வா றேகுது மென்ரு ரைந்தும்
வென்றவன் சோம வார விரதநீர் நோற்று வெள்ளி
மன்றவ னருளேப் பெற்று வான்வழிச் சென்மி னென்றக்
குன்றவன் சிலேயா ஞேன்பின் விதியினேக் கூறுகின்ருன்.

(இ-ள்.) என்றவன் எதிர்-என்று கூறிய அகத்திய முனிவ னெதிரே, யாம் எவ்வாறு ஏகுதும் என்ருர்-யாங்கள் அங்கு எங்ஙனம் செல்வோம் என்று விஞயினர்; ஐந்தும் வென்றவன்-(அதற்கு) ஐம் புலன்களேயும் வென்றவனுகிய குறுமுனிவன், நீர் சோமவார விரதம் நோற்று-நீவிர் சோமவார விரதம் அனுட்டித்து, வெள்ளி மன்றவன் அருளேப் பெற்று - வெள்ளியம்பலவாணன் திருவருளேப் பெற்றுக் கொண்டு, வான் வழிச் சென்மின் என்று-வானின் வழியே செல்வீ ராக வென்று, அ குன்ற வன் சிலேயான் நோன்பின் விதியினே கூறு கின்ருன்-அந்த மேருமலேயாகிய வலிய வில்லேயுடைய சிவபிரானது விரதத்தின் விதியினேக் கூறுகின்ருன் எ-று.

ஐந்து: தொகைக் குறிப்பு. சிலேயானுகிய அவனது என்க. (ரு)

உத்தம வானோர் தம்மு ளுத்தம ஞகு மீசன்
உத்தம சத்தி மாரு ளுத்தமி யுருத்தி ராணி
உத்தம விரதந் தம்மு ளுத்தமந் திங்க ஞேன்பென்
றுத்தம மறைநூ லாதி யுரைக்குமிச் சோம வாரம்.

(இ-ள்.) உத்தம வானோர்தம்முள் ஈசன் உத்தமன் ஆகும்-மிக்க மேன்மையுடைய தேவர்களுள் சிவபிரான் மேலோனுவன், உத்தம சத்திமாருள் உருத்திராணி உத்தமி-மிக்க மேன்மையுடைய சத்திக ளுள்ளே உமாதேவியார் மேன்மையுடையராவர், உத்தம விரதம் தம் முள்-மிக்க மேன்மையுடைய விரதங்களுக்குள்ளே, திங்கள் நோன்பு உத்தமம்-சோமவார விரதம் மேன்மையுடையது, என்று உத்தம மறை நூல் ஆதி உரைக்கும்-என்று மிக்க மேன்மையுடைய வேத முதலிய நூல்கள் கூருநிற்கும்: இச்சோமவாரம்-இந்தச் சோமவார விரதமானது எ-று.

உத்தமம்-எல்லாவற்றிலும் சிறந்த தன்மை ; மிக்க மேன்மை. சோமவாரம் என்பது அடுத்த செய்யுளில் 'தந்திடும் பயனில்' என்பதனேடு பொருந்தும். (சு)

மந்தரங் காசி யாதிப் பதிகளில்* வதிந்து நோற்கத்
தந்திடும் பயனிற் கோடி தழைத்திடு மதுரை தன்னில்
இந்தநல் விரத நோற்போர்க் கதிகம்யா தென்னிற் சோம
சுந்தர னுரிய வார மாதலாற் சோம வாரம்.

(இ - ள்.) மந்தரம் காசி ஆதி பதிகளில்-மந்தரம் காசி முதலிய திருப்பதிகளில், வதிந்து நோற்கத் தந்திடும் பயனில்-இருந்து அனுட்டிக்கத் தருகின்ற பயனிலும், இந்த நல்விரதம் மதுரை தன்னில் நோற்போர்க்கு – இந்த நல்ல விரதத்தை மதுரைப்பதியில் இருந்து நோற்பவர்களுக்கு, கோடி தழைத்திடும்-கோடி பங்கு பயன்மிகும்; அதிகம் யாதென்னில்-அங்ஙனம் மிகுதற்குக் காரணம் யாதென்றால், சோமவாரம் சோமசுந்தரன் உரிய வாரம் ஆதலால் – சோமவாரமானது சோமசுந்தரக் கடவுளுக்கு உரிய வாரம் ஆகையால் எ - று.

நோற்போர்க்குக் கோடிமடங்கு பயன் மிகும் என்க. சோமவாரம் சோமசுந்தரக் கடவுளுக்கு உரியதாகலானும், அவ்விறைவன் எழுந்தருளி யிருப்பது மதுரையிலாகலானும் மிகுமென்றார். (எ)

அங்கதி னதிகப்பேறுண் டருக்கனின் மதிதோய்ந் தொன்றித்
தங்கிய திங்க ணோன்பு தகுதியி னோற்க வல்லார்க்
கிங்கதி னதிக நீதி யீட்டிய பொருள்கொண் டாற்றும்
மங்கல விரதப் பேறொன் றனந்தமாய் வளரு மன்றே.

(இ - ள்.) அங்கு - அம் மதுரைப்பதியில், அருக்கனின்மதி தோய்ந்து ஒன்றித் தங்கிய திங்கள் நோன்பு - சூரியனோடு சந்திரன் பொருந்த அந்நாளுடன் கூடிய சோமவார விரதத்தை, தகுதியில் நோற்க வல்லார்க்கு-விதிப்படி நோற்க வல்லவர்க்கு, அதின் அதிகப் பேறு உண்டு-அப்பயனிலும் அதிகப்பயன் உண்டு; இங்கு - இப்பதியில், நீதி ஈட்டிய பொருள் கொண்டு ஆற்றும்-நீதிவழியாக ஈட்டிய பொருளினல் இயற்றும், மங்கல விரதப்பேறு - நன்மையாகிய அவ் விரதப் பயன், அதின் அதிகம் ஒன்று அனந்தமாய் வளரும் – அதனிலும் அதிக முடையதாய் ஒன்று பலவாகப் பெருகும் எ - று.

அதனின் என்பது அதின் என விகார மாயிற்று. அருக்கனுடன் மதி கூடிய நாள் அமாவாசை; தலையுவா. ஒன்றியென்பதனை ஒன்றவெனத் திரிக்க. தோய்ந் தொன்றல்: ஒருபொருளன. அவ்விரதப் பேறு அதிகமாய் அனந்தமாய் வளருமென்க. அன்று, ஏ: அசைகள். (அ)

நலமலி விரத நோற்கத் தொடங்குநா ணவில்வாந் தெளிற்
சிலையினி லாத லன்றி யிரட்டிய தெரிசஞ் சேர்ந்த
மலமதி யொழித்து மற்றை மதியிலு முந்தைப் பக்கத்
தலர்கதிர் வாரத் தல்லா ணயின்றிடா தயலிற் றுஞ்சா.

(இ - ள்.) நலம் மலி விரதம் நோற்கத் தொடங்கும் நாள் நவில்வாம் - நன்மை நிறைந்த அச்சோமவார விரதத்தினை நோற்பதற்குத்

(பா - ம்.) * காசி யாதி பதிகளில்.

தொடங்குகின்ற நாளைக் கூறுதும்; தேளில் சிலையினில் ஆதல்-கார்த்திகை மாதத்திலாவது மார்கழி மாதத்திலாவது, அன்றி-அல்லாமல், இரட்டிய தெரிசம் சேர்ந்த மலமதி ஒழித்து - இரண்டு அமாவாசை சேர்ந்த மலமாதங்களை நீக்கி, மற்றை மதியிலும் - மற்றைய மாதங்களிலாவது, முந்தை பக்கத்து-முற்பக்கத்தில், அலர் கதிர் வாரத்து-பரந்த கிரணத்தையுடைய ஞாயிற்றுக்கிழமையின், அல் - இரவில், ஊண் அயின்றிடாது-உணவு கொள்ளாது, அயலில் துஞ்சா-வேற்றிடத்தில் துயின்று எ - று.

தேள் - விருச்சிகம்; சிலை - தனுசு; இவ்விராசிகளில் ஆதித்தன் இருக்கும் கார்த்திகை மார்கழி மாதங்களென்க. இரட்டிய தெரிசம்-இரண்டாகிய அமாவாசை. மலமதி-குற்றமுடைய மாதம். முந்தைப் பக்கம்-பூர்வ பக்கம்; சுக்கில பட்சம். அயின்றிடா: ஈறுகெட்ட எதிர்மறை வினையெச்சம். துஞ்சா: செய்யா என்னும் உடன்பாட்டெச்சம். இடக்கரடக்கல் வகையால் அயலிற்றுஞ்சி என்றார்; மனைவியுடன் துயிலாமலென்பது கருத்து. வேறிடத்தில் துயிலாமல் என்று பொருளுரைப்பாருமுளர். (கூ)

வைகறை யெழுந்து சேற்கண் மணாளனை யுள்கி யற்றைச்
செய்கட னிறீஇக்கா மாதி சிந்தைநீத் தலர்பொற் கஞ்சப்
போய்கையை யடைந்து கையிற் பவித்திரம் புனைந்து வாக்கு
மெய்கருத் தொருப்பா டெய்தச் சங்கற்பம் விதந்து கூறி.

(இ - ள்.) வைகறை எழுந்து-விடியற்காலையில் எழுந்து, சேல் கண் மணாளனை உள்கி - அங்கயற்கண்ணம்மையின் மணாளராகிய சோமசுந்தரக் கடவுளைச் சிந்தித்து, அற்றைச் செய்கடன் நிறீஇ-அன்று செய்ய வேண்டிய கடன்களைச் செய்து முடித்து, காமாதி சிந்தை நீத்து - காம முதலிய குற்றங்களை மனத்தினின்றும் நீக்கி, அலர் பொன் கஞ்சப் பொய்கையை அடைந்து - மலர்ந்த பொற்றாமரை வாவியை அடைந்து, கையில் பவித்திரம் புனைந்து - விரலில் பவித்திரம் தரித்து, வாக்கு மெய் கருத்து ஒருப்பாடு எய்த-உரையும் உடலும் உள்ளமும் ஒன்றுபட, சங்கற்பம் விதந்து கூறி - சங்கற்பம் சிறந்தெடுத்துச் சொல்லி எ - று.

பரிதி யுதித்தற்கு ஐந்துநாழிகையின் முன் எழுந்தென்க. சேற்கண்ணி யென்பது சேற்கண் என நின்றது. பிராட்டியுடனுஞ் சிந்திக்க வேண்டுமென்பது தோன்றச் 'சேற்கண் மணாளனை' என்றார். காமாதி-காமம் வெகுளி மயக்கம்; அறுவகைக் குற்றமுமாம். ஒருப்பாடு-ஒன்றுபடல்: தொழிற்பெயர். விதந்து கூறல்-சிறப்பு வகையாற் கூறல். (க0)

கடம்படி முளைத்த முக்கட் கரும்பினை நினைந்து ஞாலத்
திடம்படு தீர்த்த மெல்லா மாடிய பயனை யீண்டுத்
திடம்படத் தருதி யென்னாத் திரைத்தடம் படிந்து வெண்ணீ
றுடம்பணிந் தக்க மாலை யொளிபெற விதியாற் றாங்கி.

(இ - ள்.) கடம்பு அடி முளைத்த முக்கன் கரும்பினை - கடப்ப மரத்தின் அடியிலே தோன்றிய மூன்று கண்களையுடைய கரும்பு

போன்ற சோமசுந்தரக் கடவுளை, நினைந்து - சிந்தித்து, ஞாலத்து இடம் படு தீர்த்தம் எல்லாம் - நிலவுலகிற் பொருந்திய தீர்த்தங்கள் எல்லாவற்றிலும், ஆடிய பயனை-மூழ்கிய பயனை, ஈண்டு திடம்படத் தருதி என்னு - இங்கு உறுதி பெறத் தருவாயாக என்று வேண்டி, திரைத்தடம் படிந்து - அலைகளையுடைய பொற்றாமரையில் நீராடி, வெள் நீறு உடம்பு அணிந்து - வெள்ளிய திருநீற்றை உடம்பில் தரித்து, அக்கமாலை ஒளிபெற விதியால் தாங்கி - உருத்திராக்க மாலையை ஒளியுண்டாக விதிப்படி தாங்கி எ - று.

கண்-விழி, கணு. இறைவனைக் கரும்பென்றவர் இக்கரும்பு கடம்படியில் முளைத்ததென்றும், மூன்று கண்ணினையுடையதென்றும் நயந்தோன்றக் கூறினர். முன்னரும் இங்ஙனங் கூறியிருத்தல்காண்க;

"கண்கள்மூன் றுடையதோர் கரும்பே"

என்பது திருமாளிகைத்தேவர் திருவிசைப்பா;

இறைவனை "ஞானக்கரும்பின் றெளி" என்றார் மாணிக்கவாசகப் பெருமானர். படுதீர்த்தம்-உண்டாகிய தீர்த்தம்; இடம்படு எனப் பிரித்து மிக்கவாகிய என்றுரைத்தலுமாம். விதியால் என்பதனை வெண்ணீறணிந் தென்பதனோடும் கூட்டலுமாம். ஒளி - ஞானமுமாம். (கக)

வெள்ளைமந் தார முல்லை மல்லிகை வெடிவாய்ச் சாதி
கள்ளவிழ் மயிலை யாதி வெண்மலர் கவர்ந்து வேழப்
பிள்ளையை முந்தப் பூசித் திரந்துசங் கற்பம் பேசி
உள்ளணைந் துச்சி மேற்பன் னிருவிர லுயர்ச்சிக் கும்பர்.

(இ - ள்.) வெள்ளைமந்தாரம் முல்லை மல்லிகை வெடிவாய் சாதி - வெள்ளைமந்தாரை மலரும் முல்லை மலரும் மல்லிகை மலரும் வெடித்த வாயையுடைய சாதி மலரும், கள் அவிழ் மயிலை ஆதி வெண்மலர் கவர்ந்து-தேனொடு மலர்ந்த இருவாட்சி மலரும் முதலிய வெள்ளை மலர்களை எடுத்து, வேழப்பிள்ளையை முந்தப்பூசித்து-சித்தி விநாயகக் கடவுளை முன்னே வழிபட்டு, இரந்து-குறையிரந்து, சங்கற்பம் பேசி-சங்கற்பங் கூறி, உள் அணைந்து-உள்ளே சென்று, உச்சி மேல் பன்னிரு விரல் உயர்ச்சிக்கு உம்பர்-முடியின்மேல் பன்னிரண்டு அங்குல அளவின் உயர்ச்சிக்குமேல் எ - று.

வெடித்தல் - மலர்தல். பன்னிரு விரல் உச்சிக்குமேல் - துவாத சாந்தத்தில். (கஉ)

சத்திய ஞான னந்த தத்துவந் தன்னை யுள்கி
வைத்ததன் வடிவங் கொண்டு மண்முதற் சிவமீ றான
அத்துவ விலிங்கந் தன்னை யாசன மூர்த்தி மூல
வித்தைமற் றுலு நூலின் விதியினுற் பூசை செய்க.

(இ - ள்.) சத்திய ஞான ஆனந்த தத்துவம் தன்னை உள்கி வைத்து-உண்மையறிவானந்த வடிவாகிய சோமசுந்தரக் கடவுளைச் சிந்தித்து வைத்து, அதன் வடிவம் கொண்டு-அச்சிவ வடிவாயிருந்து,

மண் முதல் சிவம் ஈறு ஆன அத்துவ இலிங்கம் தன்னை - மண்முதலாகச் சிவம் ஈறாக வுள்ள தத்துவாத்துவாவின் வடிவமான சிவலிங்கப் பெருமானை, ஆசனம் மூர்த்தி மூல வித்தை மற்றாலும் - ஆசனமும் மூர்த்தியும் மூலமும் முதலிய மந்திரங்களாலும். நூலின் விதியினால்- ஆகம விதிப்படி, பூசை செய்க - பூசிக்க எ-று.

சச்சிதானந்தமாகிய தத்துவத்தை யென்க; தத்துவம் - மெய்ப் பொருள். உள்கி வடிவங் கொண்டு என்பது அந்தரியாக மென்னும் அகப் பூசையை யுணர்த்திற்று. மண் முதல் சிவம் ஈறாகவுள்ள தத்துவம் முப்பத்தாறும் தத்துவாத்துவா எனப்படும்; இஃது ஆறு அத்துவாக்களுள் ஒன்று; அத்துவா - வழி; சிவலிங்கத்தின் அடியில் ஆன்ம தத்துவமான அயன் பாகமும், நடுவில் வித்தியா தத்துவமான திருமால் பாகமும், முடியில் சிவ தத்துவமான உருத்திரன் பாகமும் தோன்றும் (உள்ளன) என்று வேதத்துக்குப் பொருளருளிச் செய்த படலத்திற் கூறப் பெற்றுள்ளது. ஆசனமந்திர மூர்த்திமந்திர மூலமந்திரங்களாலும் பிறவற்றாலு மென்க. வித்தை-மந்திரம். (கங)

ஐந்தமு தாவி னைந்து நறுங்கனி யைந்து செந்தேன்
சந்தன தோயம் புட்பத் தண்புனன் மணிநீ ராட்டிச்
சுந்தர வெண்பட் டாடை கருப்புரச் சுண்ணஞ் சாந்தங்
கந்தமல் லிகைமுன் னான வெண்மலர்க் கண்ணி சாத்தி.

(இ - ள்.) ஐந்து அமுது - பஞ்சாமிர்தமும், ஆவின் ஐந்து-பஞ்ச கவ்வியமும், நறுங்கனி ஐந்து - நறிய கனிகள் ஐந்தும், செந்தேன் - சிவந்த தேனும், சந்தன தோயம் - சந்தனக் குழம்பும், புட்பத் தண் புனல் - மலர் பெய்த குளிர்ந்த நீரும், மணிநீர் - தூய நீருமாகிய இவைகளால், ஆட்டி - திருமஞ்சனஞ் செய்து, சுந்தர வெண் பட்டாடை - அழகிய வெண் பட்டாடையும், கருப்புரச் சுண்ணம் - பச்சைக் கர்ப்பூரச் சுண்ணமும், சந்தம் - சந்தனமும், கந்த மல்லிகை முன் ஆன வெண்மலர்க் கண்ணி - மணம் பொருந்திய மல்லிகை முதலான வெள்ளிய மலராலாகிய மாலையும், சாத்தி-அணிந்து எ-று.

ஐந்தமுது முதலியன முற்கூறப்பட்டன. தோயம் - நீர் ; சந்தன தோயம் - சந்தனத்துடன் கலந்த நீர்; சந்தனச் சேறு. புட்பத் தண் புனல் - பனிநீருமாம். கண்ணி - இண்டை முதலியன. (கச)

காசணி பொலம்பூண் சாத்திக் கனைகழ லாதி யங்க
பூசனை செய்து சேற்கட் பூரண பரையை யவ்வா
றீசனைந் தெழுத்தைப் பெண்பாற் கிசையவுச் சரித்துப் பூசித்
தாசறு சுரபித் தீம்பா லட்டவின் னமுதி னோடும்.

(இ - ள்.) காசு அணி பொலம் பூண் சாத்தி-மணிகள் இழைத்த பொன்னாலாகிய திருவாபரணஞ் சாத்தி, கனைகழல் ஆதி அங்க பூசனை செய்து-ஒலிக்கின்ற வீரகண்டை யணிந்த திருவடி முதலாகத் திருவங்கங்களைப் பூசித்து, சேல் கண் பூரண பரையை - கயல்போலுங் கண்ணினையுடைய எங்கும் நிறைந்த பராசக்தியை, அவ்வாறு-அவ்வாறே, ஈசன் ஐந்து எழுத்தைப் பெண்பாற்கு இசைய உச்சரித்துப் பூசித்து-

இறைவனுடைய திருவைந்தெழுத்தைப் பெண்பாலுக்குப் பொருந்த உச்சரித்துப் பூசித்து, ஆசு அறு சுரபித் தீம்பால் அட்ட இன் அமுதினோடும் - குற்றமற்ற இனிய ஆன்பாலுடன் கலந்து சமைத்த இனிய திருவமுதுடன்.

காசணியும் பொலம் பூணும் என்றுமாம். அங்கயற் கண்ணியாகிய பராசக்தி. பாலுடன் கலந்து அட்டவென விரிக்க. (கரு)

பண்ணிய வகைபா னீய நிவேதனம் பண்ணி வாசம்
நண்ணிய வடைக்காய் நல்கி நறுவிரைத் தூபந் தீபம்
எண்ணிய வகையாற் கோட்டிக் கண்ணடி யேனை மற்றும்
புண்ணியன் றிருமுன் காட்டி வில்வத்தாற் பூசை செய்தல்.

(இ - ள்.) பண்ணிய வகை பானீயம் நிவேதனம் பண்ணி-பலகாரவகைகளும் பானக்கமும் ஆகிய இவைகளை நிவேதித்து, வாசம் நண்ணிய அடைக்காய் நல்கி-மணம் பொருந்திய தாம்பூலம் கொடுத்து, நறுவிரைத் தூபம் தீபம் எண்ணிய வகையால் கோட்டி - நறிய மணமுள்ள தூபத்தையும் தீபத்தையும் வரையறுத்தவாறு சுழற்றி, கண்ணடி ஏனை மற்றும் புண்ணியன் திருமுன் காட்டி-கண்ணாடி முதலிய மற்றை உபசாரங்களையும் சோமசுந்தரக் கடவுள் திருமுன் காண்பித்து, வில்வத்தால் பூசை செய்தல் - வில்வத்தினால் அருச்சனை செய்க.

பண்ணியம்-பண்ணிகாரம். பானீயம் - பருகற்குரியது. கோட்டி வளைத்து. கண்ணடியும் மற்று ஏனையவு மென்க. மற்று: அசை. செய்தல் : வியங்கோள். (கசு)

புரகர னிச்சா ஞானக் கிரியையாய்ப் போந்த வில்வ
மரமுத லடைந்து மூன்று வைகலூ ணுறக்க மின்றி
அரகர முழக்கஞ் செய்வோ ரைம்பெரும் பாத கங்கள்
விரகில்சேய் கொலைக டீரு மாதலால் விசேடம் வில்வம்.

(இ - ள்.) புரகரன் இச்சாஞானக்கிரியையாய்ப் போந்த வில்வமர முதல் அடைந்து-திரிபுரம் எரித்த இறைவனின் இச்சா ஞானக் கிரியைவடிவாயுள்ள வில்வமரத்தினடியைச் சார்ந்து, மூன்று வைகல் ஊண் உறக்கம் இன்றி-மூன்று நாட்கள்வரை உணவுந் துயிலும் இல்லாமல், அரகர முழக்கம் செய்வோர்-அரகரவென்று முழங்குவோர் செய்த, ஐம்பெரும் பாதகங்கள் - ஐந்து பெரிய பாவங்களும், விரகு இல் செய் கொலைகள் - அறிவின்றிச் செய்த கொலைப்பாவங்களும், தீரும் - நீங்கும், ஆதலால் - ஆகலின், வில்வம் விசேடம் - வில்வம் சிறந்தது.

புரகரன் - புரத்தை யழித்தவன். வில்வ இலையின் மூன்று கவர்களும் இறைவனுடைய மூன்று சத்திகளின் வடிவம் என்க. விரகின்மையாவது அதனாற் றமக்கு ஊதியஞ் சிறிது மின்றி ஏதமே மிகுமென்னும் அறிவு இல்லாமை;

"விரகின்மையின் வித்தட் டுண்டனை"

எனப் புறத்துள் வருதலுங் காண்க. கொலைகள் என வேறு கூறினமையால் ஐம்பெரும் பாதகங்கள் அஃதல்லாத ஐந்தாதல் பெறப்படும். விரகிற்செய் கொலைகள் எனப் பாட மிருப்பின் சூழ்ச்சியாற் புரிந்த கொலைகள் என்று பொருள்படும். (கஎ)

மடங்கிதழ் சுருங்கல் வாடி யுலர்ந்தது மயிர்ச்சிக் குண்டல்
முடங்குகாற் சிலம்பிக் கூடு புழுக்கடி முதலாங் குற்றம்
அடங்கினுங் குற்ற மில்லை* யுத்தம மாகும் வில்வந்
தடங்கை கொண்டீச ஞம மாயிரஞ் சாற்றிச் சாத்தல்.

(இ - ள்.) மடங்கு இதழ் சுருங்கல் - இதழ் மடங்கிச் சுருங்கியிருத்தலும், வாடி உலர்ந்தது - வாடிக் காய்ந்திருத்தலும், மயிர்ச்சிக்குண்டல் - மயிர்ச் சிக்குண்டிருத்தலும், முடங்குகால் சிலம்பிக் கூடு - வளைந்த கால்களையுடைய சிலம்பிப்பூச்சி கூடுகட்டியிருத்தலும், புழுக்கடி - புழுக்கள் கடித்திருத்தலும், முதலாம் குற்றம் அடங்கினும் குற்றம் இல்லை - முதலிய குற்றங்கள் அடங்கியிருந்தாலும் குற்ற மாகா; வில்வம் உத்தமம் ஆகும் - வில்வஞ் சிறந்ததாகும்; தடங்கை கொண்டு - நீண்டகையில் அதனைக் கொண்டு, ஈசன் ஆயிரம் நாமம் சாற்றிச் சாத்தல் - சிவபெருமானுடைய ஆயிரந் திருநாமங்களையுங் கூறி அருச்சிக்க எ - று.

இதழ் சுருங்கல் முதலியன குற்றமேனும் வில்வத்திற்காயின் அவை குற்றமாகா என வில்வத்தின் பெருமை கூறியவாறு. சாத்தல்: வியங்கோள். (கஅ)

அடியனேன் செய்யுங் குற்ற மன்றைக்கன் றனந்த மாகுங்
கொடியநஞ் சமுதாக் கொண்டாய் குற்றமுங் குணமாக் கொண்டு
படியெழு தரிய நங்கை பங்கனே காத்தி யென்று
முடியுற வடியில் வீழ்ந்து மும்முறை வலஞ்செய் தேத்தி.

(இ - ள்.) படி எழுதரிய நங்கை பங்கனே - ஒப்பெழுதலாகாத உமையை ஒரு பாகத்தி லுடையவனே, அடியனேன் செய்யும் குற்றம் அன்றைக்கு அன்று அனந்தம் ஆகும் - அடியேன் செய்கின்ற குற்றங்கள் ஒவ்வொருநாளும் எண்ணிறந்தனவாம்; கொடிய நஞ்சு அமுதாக் கொண்டாய் - கொடிய நஞ்சினையும் அமுதாகக் கொண்ட நீ, குற்றமும் குணமாக் கொண்டு காத்தி என்று - யான் செய்யும் குற்றங்களையும் குணமாகக் கொண்டு காத்தருள்வாய் என்று வேண்டி, அடியில் முடி உற வீழ்ந்து - திருவடியில் முடி பொருந்துமாறு வீழ்ந்து வணங்கி, மும்முறை வலம் செய்து ஏத்தி - மூன்றுமுறை வலஞ்செய்து துதித்து எ - று.

அன்றைக்கன்று - அன்றன்று; ஒவ்வொரு நாளும். குற்றமுங் குணமாகக் கொண்டு என்பது.

"குன்றே யனைய குற்றங்கள் குணமா மென்றே நீ கொண்டால்"

என்னும் திருவாசகத்தை நினைப்பிக்கின்றது. குற்றமும் குணமாக் கொள்ளுதற்கு உரியை யென்பார் 'கொடிய நஞ்சமுதாக் கொண்டாய்' என்றார்; இது கருத்துடையடைகொளியணி. படி - ஒப்பு;

"படியெடுத் துரைத்துக் காட்டும் படித்தன்று படிவம்"

---

(பா - ம்.) * முதலவான அடங்கலுங் குற்றமேயாம்.
(இராமசுவாமிப் பிள்ளை)

என்பது இராமாயணம். படிவம் என்பது ஈறு தொக்க தென்னலுமாம். அங்ஙனம் அருச்சித்துக் காத்தி யென்று வீழ்ந்து வலஞ்செய்து ஏத்தி என மேலைச் செய்யுளோடியைத்துரைக்க. (௧௯)

வன்மனங் கரைய நின்று வேண்டிய வரங்கள் வேண்ட
நன்மணப் பேறு மக்கட் பேறுநல் வாக்குக் கல்வி
போன்மனக் கினிய போகந் தெவ்வரைப் புறகு காண்டல்
இம்மையி லரசு மற்று மெண்ணியாங் கெய்து மன்னோ.

(இ - ள்.) வல் மனம் கரைய நின்று வேண்டிய வரங்கள் வேண்ட-வலிய மனமானது கரைந்துருக நின்று வேண்டிய வரங்களைக் கூறிக்குறையிரக்க, நல்மணப் பேறு - நல்ல கல்யாணப் பேறும், மக்கள் பேறு - நன் மக்கட்பேறும், நல்வாக்கு கல்வி பொன்-நல்ல வாக்கும் கல்வியும் பொருளும், மனக்கு இனிய போகம்-மனதிற்கு இனிய போகமும், தெவ்வரைப் புறகு காண்டல் - பகைவரைப் புறங்காணுதலும், இம்மையில் அரசும் மற்றும்-இப்பிறப்பிலே அரசுரிமையும் பிறநலங்களும், எண்ணியாங்கு எய்தும்-எண்ணியவாறே உண்டாகும் எ - று.

"இருப்பு நெஞ்ச வஞ்ச னேனை யாண்டு கொண்ட நின்னதாள்"

"வன்னெஞ்சக் கள்வன் மனவலிய னென்னாதே
கன்னெஞ் சுருக்கிக் கருணையினா லாண்டு கொண்ட"

"அன்பினா லடியே னாவியோ டாக்கை யானந்த மாய்க்கசிந் துருக"

"அரைசனே யன்பர்க் கடியனே னுடைய வப்பனே யாவியோ டாக்கை, புரைபுரை கனியப் புகுந்து நின்றுருக்கி"

என்னும் திருவாசகங்கள் இங்கே சிந்திக்கற்பாலன. மணமாகிய பேறும் மக்களாகிய பேறும் என்க. மனக்கு: அத்துச் சாரியை தொக்கது. மன்னும் ஓவும் அசைகள். (௨௦)

ஆதியிவ் விலிங்கந் தீண்டற் கருகரல் லாத வேத
வேதியர் முதலோ ரிட்ட விலிங்கத்திவ் விதியா லர்ச்சித்
தோதிய விரத நோற்க வர்ச்சனைக் குரிய ரல்லாச்
சாதியர் பொருணேர்ந் தாதி சைவராற் பூசை செய்தல்.

(இ-ள்.) ஆதி இவ்விலிங்கம் தீண்டற்கு - முதன்மையான இச்சொக்கலிங்கப் பெருமானைத் தொட்டுப் பூசித்தற்கு, அருகர் அல்லாத வேத வேதியர் முதலோர்-உரியரல்லாத வேதம் உணர்ந்த வேதியர் முதலோர், இட்ட இலிங்கத்து - ஆன்மார்த்த இலிங்கத்தின்கண், இவ்விதியால் அர்ச்சித்து-இம் முறைப்படி வழிபட்டு, ஓதியவிரதம் நோற்க-மேலே கூறிய சோமவார விரதம் நோற்கக் கடவர்; அர்ச்சனைக்கு உரியர் அல்லாச் சாதியர் - அவ்வான்மார்த்த பூசனைக்கு உரிமையளிக்கப்படாத சாதியார், பொருள் நேர்ந்து ஆதி சைவரால் பூசை செய்தல்-பொருள் கொடுத்து ஆதி சைவராற் பூசித்து நோற்கக்கடவர் எ-று.

திருக்கோயில்களில் சிவலிங்கத்தைத் தொட்டுப் பூசித்தற்குரியார் ஆதி சைவரே யென்பதும் வைதிகப் பிராமணர் முதலிய ஏனையோர் உரியரல்லரென்பதும் சிவாகமநூற் கொள்கை;

"முப்பொழுதுந் திருமேனி தீண்டுவார்க் கடியேன்"

என ஆளுடையநம்பிகள் விதந்தோதுதலுங் காண்க. செய்தல்: வியங்கோள். இவ் விரதம் நோற்கக் கடவர் என வருவித்துரைக்கப்பட்டது. (௨௧)

[எழுசீரடி யாசிரிய விருத்தம்]

போருவிலிவ் விரத மைவகைத் துச்சிப்
போதிலூ ணிரவிலூ ணிரண்டும்
ஒருவுத லுறங்கா திருத்தலர்ச் சனைநால்
யாமமு முஞற்றுத லென்னக்
கருதினிவ் வைந்து மோன்றினுக் கோன்று
கழியவு மதிகமா நோற்கும்
வருடமோன் றிரண்டு மூன்றுபன் னிரண்டு
வருடம்வாழ் நாளள விவற்றுள்.

(இ - ள்.) உச்சிப்போதில் ஊண் - உச்சிப் பொழுதில் உண்ணுதலும், இரவில் ஊண் - இரவிலுண்ணுதலும், இரண்டும் ஒருவுதல் - இரண்டு வேளை உணவையும் நீக்குதலும், உறங்காது இருத்தல் - துயிலாதிருத்தலும், நால் யாமமும் அர்ச்சனை உஞற்றுதல் என்ன - நான்கு சாமமும் அருச்சனை புரிதலும் என்று, பொருவு இல் இவ் விரதம் ஐவகைத்து - ஒப்பற்ற இவ்விரதமானது ஐந்து வகையினை யுடையது; கருதின் - ஆராய்ந்து பார்க்கின், இவ்வைந்தும் - இவ்வைந்து வகையும், ஒன்றினுக்கு ஒன்று கழியவும் அதிகம் ஆம் - ஒன்றைக் காட்டினும் ஒன்று மிகவுஞ் சிறந்ததாகும்; நோற்கும் வருடம் - நோற்கும் ஆண்டின் அளவு, ஒன்று இரண்டு மூன்று பன்னிரண்டு வருடம் வாழ் நாள் அளவு - ஒன்றும் இரண்டும் மூன்றும் பன்னிரண்டும் ஆகிய ஆண்டினளவும் வாழ் நாளளவும் ஆகும்; இவற்றுள் - இவற்றினுள் எ - று.

உச்சிப் போதில் உண்டு இரவில் நீக்கலும், இரவில் உண்டு உச்சிப்போதில் நீக்கலும் என்க. உறங்காதிருத்தல் அர்ச்சனை இவற்றுடன் ஊணொருவுதலையுஞ் சேர்த்துக் கொள்க. ஒன்றினுக்கொன்று - ஒன்றினொன்று: வேற்றுமை மயக்கம். (௨௨)

உடலள வெண்ணி நோற்பவர் முந்த
வுத்தியா பனஞ் செய்து நோற்கக்
கடவரவ் வருடக் கட்டளைக் கிறுதி
கழிப்பதுத் தாபன விதிதான்
மடலவிழ் மாலை மண்டபங் குண்ட
மண்டலம் வகுத்துமா பதியைப்
படரொளி வெள்ளி முப்பது கழஞ்சிற்
படிமையா னிருமிதஞ் செய்து.

(இ - ள்.) உடல் அளவு எண்ணி நோற்பவர் - வாழ் நாளளவு கருதி நோற்கின்றவர் (தமக்கு உத்தியாபனம் இல்லையாகலின்), முந்த உத்தியாபனம் செய்து நோற்கக் கடவர்-முதலில் அவ்விரதம் பூர்த்தியாதற்காக முன் செய்யும் கிரியையைச் செய்து நோற்கக் கடவர்; அவ்வருடக் கட்டளைக்கு-மேற்கூறிய அவ்வாண்டுகளினளவில் நோற்கும் விரதத்திற்கு, இறுதி கழிப்பது-(உத்தியாபனம்) முடிவிற் செய்யம் தக்கதாகும்; உத்தாபன விதி - அவ்வுத்தியாபன விதியாவது, மடல் அவிழ் மாலை மண்டபம்-இதழ் விரிந்த மாலை நாற்றிய மண்டபமும், குண்டம் மண்டலம் வகுத்து-குண்டமும் மண்டலமும் வகுத்து, உமாபதியை உமை கேள்வனாகிய சிவபெருமானை, படர் ஒளி வெள்ளி முப்பது கழஞ்சில் படிமை நிருமிதம் செய்து-பரந்த ஒளியையுடைய முப்பது கழஞ்சு வெள்ளியினால் திருவுருவம் அமைத்து எ - று.

உத்தியாபனம்-குறித்த ஆண்டுவரை விரதம் நோற்று முடிக்கும்பொழுது செய்யுஞ் சடங்கு; இஃது உத்தாபனம் எனவும் திரிந்தது. தான், ஆல். அசைகள். (௨௩)

காலையி லாசான் சொல்வழி நித்தக்
கடன்முடித் துச்சி தொட் டந்தி
மாலையி னளவும் புராணநூல் கேட்டு
மாலைதொட் டியாமமோர் நான்குஞ்
சேலன கண்ணாள் பங்கனைப் பூசை
செய்கவப் பூசனை முடிவின்
மூலமந் திரநூற் றெட்டுநூற் றெட்டு
முறையினா லாகுதி முடித்தல்.

(இ - ள்.) காலையில் ஆசான் சொல்வழி-விடியற்காலையில் ஆசிரியனது சொல்லின் வழியே, நித்தக்கடன் முடித்து - நாட் கடமைகளை முடித்து, உச்சிதொட்டு அந்தி மாலையின் அளவும்-உச்சிப்பொழுது தொடங்கி மாலைப்பொழுது வரையும், புராண நூல் கேட்டு சிவபுராணங்களைக் கேட்டும், மாலை தொட்டு யாமம் ஓர் நான்கும் - மாலைப் பொழுது தொடங்கி நான்கு யாமத்தினும், சேல் அன கண்ணாள் பங்கனைப் பூசை செய்க - கயல் போலும் கண்களையுடைய இறைவியை ஒரு கூற்றிலுடைய சிவபெருமானைப் பூசிக்கக் கடவர்; அப்பூசனை முடிவில்-அப்பூசை இறுதியில், மூலமந்திரம் நூற்றெட்டால் நூற்றெட்டு முறையின் ஆகுதி முடித்தல் - சில மூலமந்திரம் நூற்றெட்டினால் நூற்றெட்டு முறை ஆகுதி செய்யக் கடவர் எ - று.

மூன்றனுருபு பிரித்துக் கூட்டப்பட்டது. முடித்தல்: வியங்கோள். (௨௪)

வில்வமா யிரங்கொண் டாயிர நாமம்
விளம்பிநால் யாமமுஞ் சாத்தல்
நல்லவைந் தெழுத்தா லைந்தெழுத் தருவி
னாதனுக் கருக்கியங் கொடுத்தல்

எல்லையின் மூல மந்திரத் தாலு
மேனைமந் திரங்களி னாலும்
வில்லழ லோம்பிப் பூரணா குதிசெய்
தீறிலான் வேள்வியை முடித்தல்.

(இ - ள்.) வில்வம் ஆயிரம் கொண்டு ஆயிர நாமம் விளம்பி-ஆயிரம் வில்வங்களைக்கொண்டு ஆயிரம் திருப்பெயர்களையும் கூறி, நால் யாமமும் சாத்தல்-நான்கு யாமங்களினும் அருச்சிக்கக் கடவர்; நல்ல ஐந்து எழுத்தால்-நல்ல திருவைந்தெழுத்தினால், ஐந்து எழுத்து உருவின் நாதனுக்கு அருக்கியம் கொடுத்தல் - அவ் வைந்தெழுத்தினையும் உருவமாகவுடைய இறைவனுக்கு அருக்கியங் கொடுக்கக் கடவர்; எல்லைஇல் மூல மந்திரத்தாலும்-அளவிறந்த மூலமந்திரங்களாலும், ஏனை மந்திரங்களினாலும்-மற்றைய மந்திரங்களினாலும், வில் அழல் ஓம்பிப் பூரணாகுதி செய்து-விளங்குகின்ற வேள்வித்தீயை வளர்த்துப் பூரணாகுதி செய்து, ஈறு இலான் வேள்வியை முடித்தல் - முடிவில்லாத சோமசுந்தரக் கடவுளின் வேள்வியை முடிக்கக்கடவர் எ - று.

இறைவன் மந்திர வடிவமாதலை,

''சுத்தமாம் விந்து தன்னிற் றோன்றிய வாத லானும்
சத்திதான் பிரேரித் துப்பின் றானதிட் டித்துக் கொண்டே
அத்தினாற் புத்தி முத்தி யளித்தலா லரனுக் கென்றே
வைத்ததா மந்தி ரங்கள் வடிவென மறைக ளெல்லாம்.''

''மந்திர மதனிற் பஞ்ச மந்திரம் வடிவ மாகத்
தந்திரஞ் சொன்ன வாறிங் கென்னெனிற் சாற்றக் கேணீ
முந்திய தோற்றத் தாலு மந்திர மூலத் தாலும்
அந்தமில் சத்தி யாதிக் கிசைத்தலு மாகு மன்றே.''

என்னும் சிவஞானசித்தித் திருவிருத்தங்களால் உணர்க. அருக்கியம்-நீராற்செய்யும் ஒருவகை உபசாரம். வில் அழல் - வில் வடிவாகச் செய்த குண்டத்தின் அழலுமாம். சாத்தல், கொடுத்தல், முடித்தல் என்பன வியங்கோள். (உ௫)

புலர்ந்தபின் னித்த வினைமுடித் தரம்பைப்
பொதுளும்பா சிலைபதின் மூன்றின்
நலந்தரு தூவெள் ளரிசிபெய் தினிய
நறியகாய் கறியொடு பரப்பி
அலந்தர வான்பா னிறைகுடம் பதின்மூன்
றரிசிமேல் வைத்தர னடியிற்
கலந்தவன் பினராய்ச் சிவார்ச்சனைக் குரிய
கடவுள்வே தியர்களை வரித்து.

(இ - ள்.) புலர்ந்தபின் - விடிந்தபின், நித்த வினை முடித்து - நித்தியக் கடன்களைச் செய்து முடித்து, அரம்பை பொதுளும் பாசிலை

பதின்மூன்றில் - வாழையின் செழித்த பசிய இலைகள் பதின்மூன்றில் நலம் தரு தூ வெள் அரிசி பெய்து - நன்மையைத் தருகின்ற தூய வெள்ளிய அரிசியை நிரப்பி, இனிய நறிய காய்கறியொடு பரப்பி - இனிமையுடைய நல்ல காய்கறிகளைப் பரப்பி, அலந்தர - அமைவுபெற ஆன்பால் நிறை குடம் பதின்மூன்று - ஆவின்பால் நிறைந்த குடங்கள் பதின்மூன்றனை, அரிசி மேல் வைத்து - அவ்வரிசியின் மேலே வைத்து, அரன் அடியில் கலந்த அன்பினராய் - சிவபெருமான் திருவடியில் ஒன்றுபட்ட அன்பினையுடையவராய், சிவார்ச்சனைக்கு உரிய கடவுள் வேதியரை வரித்து - சிவபெருமானை அருச்சித்தற்குரிய ஆதிசைவர்களை அழைத்து எ-று.

அரம்பை - வாழை; அரம்பை யிலையெனக் கூட்டுக. கறியொடு ஒடு: இசை நிறை. காய்கறி, வழக்கு. கடவுள் வேதியர் - சிவவேதியர். வரித்தல் - அழைத்தல், நியமித்தல். (உ௬)

காதணி கலனுங் கையணி கலனுங்
கவின்பெற வளித்தர னுக
ஆதரம் பெருக நினைந்தருச் சனைசெய்
தரியதக் கிணையோடும் பாதப்
போதணி காப்பு விசிறிதன் கவிகை
பூந்துகின் முதற்பல வுடனே
மேதகு தானஞ் செய்துபின் குருவைக்
கற்புடை மின்னிடை யோடும்.

(இ-ள்.) காது அணி கலனும் - காதிலணியுங் குண்டலமும், கை அணி கலனும் - கையிலணியுங் காப்பும், கவின் பெற அளித்து - பொலிவுபெறத் தந்து, ஆதரம் பெருக - அன்பு மிக, அரனுக நினைந்து (அவர்களைச்) சிவபெருமானுகவே கருதி, அருச்சனை செய்து - அருச்சித்து, அரிய தக்கிணையொடும் - பெரிய தக்கிணையுடன், பாதப்போது அணி காப்பு - பாதமாகிய மலரிலணியும் பாதுகையும், விசிறி தண் கவிகை பூந்துகில் முதல் பலவுடனே - விசிறியும் குளிர்ந்த குடையும் அழகிய ஆடையுமாகிய இவை முதலிய பலவற்றையும், மேதகு தானம் செய்து - சிறந்த தானமாகக் கொடுத்து, பின் - பின்பு, குருவைக் கற்பு உடை மின் இடையோடும் - குரவனை அவனுடைய கற்பு நிறைந்த மின்போலும் இடையினை யுடைய மனைவியுடன் எ-று.

பாத காப்பு - பாத ரட்சை; பலவுடன் - பலவற்றையும் என்க. மேதகு - மேன்மை பொருந்திய. மின்னிடை : அன்மொழித்தொகை. (உஎ)

ஆசனத் திருத்திப் பொலந்துகில் காதுக்
கணிகள்கைக் கணிகளு மணிந்து
வாசநன் மலரிட் டருச்சனை செய்து
மலைமக டலைவனை வரைந்து

பூசனை செய்த படிமையோ டம்போன்
பூதலம் பதாதிகள் பிறவுந்
தூசலர் மாலை கோட்டணி புனைந்த
சுரபிமா தானமுஞ் செய்து.

(இ - ள்.) ஆசனத்து இருத்தி-தவிசில் இருக்கச் செய்து, பொலம் துகில் - பொன்னுடை (தரிப்பித்து), காதுக்கு அணிகள் கைக்குஅணிகளும் அணிந்து-காதுக்கு அணிகலன்களும் கைக்கு அணிகலன்களும் அணிவித்து, வாசம் நல் மலர் இட்டு அருச்சனை செய்து - மணமுள்ள நல்ல மலர்களால் அருச்சித்து, மலை மகள் தலைவனை வரைந்து பூசனை செய்த படிமையோடு-மலையரையன் புதல்வியாகிய உமை கேள்வனை நிருமித்துப் பூசிக்கப்பெற்ற திருவுருவத்துடன், அம்பொன் பூதலம் பதாதிகள் பிறவும் - அழகிய பொன்னும் நிலமும் ஏவலாளர்களும் பிறவுமாகிய தானங்களையும், தூசு அலர் மாலை-ஆடையும் மலர்மாலையும், கோட்டு அணி-கொம்பினணியும். புனைந்த-அணிந்த, மா சுரபி தானமும் - பெரிய பசுவாகிய தானமும், செய்து - புரிந்து எ - று.

இனையவா றுத்தா பனமுடித் தாசா
னேவலாற் சிவனடிக் கன்பர்
தனையரோ டொக்க லுடனமு தருந்த
றகுதியிவ் விரதமுன் கண்ணன்
நனையதா மரையோ னிந்திரன் முதல்வா
னுடவர் மூவறு கணத்தோர்
அனைவரு நோற்றார் மனிதரு மனுட்டித்
தரும்பெறற் போகம்வீ டடைந்தார்.

(இ - ள்.) இனையவாறு உத்தாபனம் முடித்து-இம்முறையாக உத்தியாபனத்தை முடித்து, ஆசான் ஏவலால் - ஆசிரியன் கட்டளையினால், சிவன் அடிக்கு அன்பர் - சிவபிரான் திருவடிக்கண் அன்புடைய அடியார்களுடனும், தனையரோடு ஒக்கல் உடன்-மக்களோடும்சுற்றத்தோடும், அமுது அருந்தல் தகுதி - அமுதுண்ணல் முறையாகும்; இவ் விரதம் - இச் சோமவார விரதத்தை, முன் - முன்னே, கண்ணன் - திருமாலும், நனைய தாமரையோன் - தேனையுடைய தாமரை மலரில் வதியும் பிரமனும், இந்திரன் முதல் வானுடவர் - இந்திரன் முதலிய தேவர்களும், மூவறு கணத்தோர் - பதினெண் கணத்தாரும் ஆகிய, அனைவரும் - எல்லாரும், நோற்றார் - அனுட்டித்தார்; மனிதரும் அனுட்டித்து அரும் பெறல் போகம் வீடு அடைந்தார் - மனிதர்களும் நோற்றுப் பெறுதற்கரிய போகத்தையும் வீடுபேற்றையும் அடைந்தனர் எ - று.

அன்பரோடும் என விரிக்க. மூவறுகணம் முற் கூறப்பட்டன. பெறலரும் என மாற்றுக. எண்ணும்மைகள் தொக்கன. (உசு)

ஈதுநோற் பவர்வெம் பகைமனத் துயர்தீர்ந்
தாயிரம் பிறவியி லியற்றுந்
தீதுசேர் வினைதீர்ந் தெடுத்தயாக் கையினிற்
சிவகதி யடைவரிவ் விரதம்
ஓதினோர் கேட்டோர் மனைவியர் மக்க
ளோக்கலோ டினிதுவாழ்ந் தும்பர்
மேதகு பதினா லிந்திரன் பதத்தில்
வீற்றினி திருப்பரேன் றறவோன்.

(இ-ள்.) ஈது நோற்பவர் - இவ்விரதத்தை நோற்பவர், வெம் பகை மனத்துயர் தீர்ந்து - கொடிய பகையும் மனத்துன்பமும் நீங்கி, ஆயிரம் பிறவியில் இயற்றும் தீது சேர் வினை தீர்ந்து-அளவிறந்த பிறவிகளிற் செய்த தீமை பொருந்திய வினைகள் நீங்கி, எடுத்த யாக்கையினில் சிவகதி அடைவர் - எடுத்த பிறப்பிலேயே வீடுபேறெய்துவர்; இவ்விரதம் ஓதினோர் கேட்டோர்-இவ்விரதத்தைக் கூறினவர்களும் கேட்டவர்களும், மனைவியர் மக்கள் ஒக்கலோடு இனிது வாழ்ந்து-மனைவியர் புதல்வர் சுற்றத்துடன் இன்பத்தோடு வாழ்ந்து, உம்பர் - தேவருலகில், மேதகுபதினால் இந்திரன் பதத்தில் - சிறந்த பதினான்கு இந்திரப் பட்டமளவும் அவன் பதத்தில், இனிது வீற்றிருப்பர் என்று - இனிதாக வீற்றிருப்பாரென்று, அறவோன் - அகத்திய முனிவன் (அருளிச்செய்தனன்) எ - று.

ஆயிரம் - அளவின்மை. இவ்விரதத்தின் வரலாற்றையும் பயனையும் ஓதினோரும் கேட்டோருமென்க. அறவோன் அருளிச்செய்தனன் என வருவித்து முடிக்க. (௩௦)

[அறுசீரடியாசிரியவிருத்தம்]

சொல்லிய நெறியாற் சோம சுந்தரன் விரத நோற்பான்
வில்லிடு மணிப்பூண் வேந்தர் முனிவனை விடைகொண் டேகி
அல்லியங் கனகக் கஞ்சத் தாடியங் கயற்கண் வல்லி
புல்லிய பாகன் றன்னை வழிபடீஇப் போற்றி நோற்றார்.

(இ-ள்.) சொல்லிய நெறியால் - அங்ஙனம் அவன் அருளிச்செய்த முறைப்படி, சோம சுந்தரன் விரதம் நோற்பான்-சோமசுந்தரக் கடவுளுடைய சோமவார விரதத்தை நோற்கும் பொருட்டு, வில் இடுமணிப் பூண் வேந்தர் - ஒளிவீசும் மணிக்கலன்களை யணிந்த மன்னர் மூவரும், முனிவனை விடைகொண்டு ஏகி-அம் முனிவனிடத்தில் விடைபெற்றுச் சென்று, அம் அல்லி கனகக் கஞ்சத்து ஆடி - அழகிய அகவிதழ்களை யுடைய பொற்றாமரை வாவியில் நீராடி, அங்கயற்கண்வல்லி புல்லிய பாகன்தன்னை-அங்கயற்கண் அம்மையையும் அவர் ஒரு பாகத்திற் பொருந்திய சோமசுந்தரக் கடவுளையும், வழிபடீஇப் போற்றி நோற்றார் - வழிபட்டுப் பரவி அவ்விரதத்தை அனுட்டித்தார்கள் எ - று.

நோற்பான்: வினையெச்சம். முனிவனை - முனிவன்பால். அல்லி: தாமரை மலருக்கு அடை. (௩க)

சுந்தரன் றன்னைப் பூசைத் தொழில்செய்து வரம்பெற் றேகி
அந்தரத் தாறு செல்வா ரஃதறிந் தமரர் வேந்தன்
வந்தவ ரிருக்க வேறு மடங்கன்மான் றவிசு மூன்று
தந்திடப் பணித்தா னிட்டார் தனதரி யணையிற் றாழ.

(இ - ள்.) *சுந்தரன் தன்னைப் பூசைத் தொழில் செய்து* - சோம சுந்தரக் கடவுளைப் பூசித்து, *வரம் பெற்று ஏகி*-வரம்பெற்று நீங்கி, *அந்தரத்து ஆறு செல்வார்*-வான்வழியாகச் செல்வாராயினர்; *அமரர் வேந்தன் அஃது அறிந்து* - தேவேந்திரன் அவ் வருகையை உணர்ந்து, *வந்தவர் இருக்க* - வந்த மன்னர்கள் இருத்தற்கு, *வேறு மடங்கல் மான் தவிசு மூன்று*-வேறு மூன்று சிங்காதனங்கள், *தனது அரி அணையில் தாழத் தந்திடப் பணித்தான்* - தனது சிங்காதனத்திற் றாழ்ந் திருக்குமாறு அமைக்கும்படி கட்டளையிட்டான், *இட்டார்* - (பணியாளர் அவ்வாறே) அமைத்தனர் எ - று.

பூசைத் தொழில் செய்து என்பது ஒரு சொல்லாய் இரண்டாம் வேற்றுமைக்கு முடிபாயிற்று. அவர் வந்து இருக்க என்றுமாம்; மடங்கல் மான்: இரு பெயரொட்டு. (௩௨)

வான்வழி வந்த மூன்று மன்னரும் பொன்னா டெய்தி
ஊன்வழி குலிச வைவே லும்பர்கோன் மருங்கிற் புக்கார்
தேன்வழி போந்தின் கண்ணிச் சேரனு மார்த்தார் வேந்துங்
கான்வழி தாரு நாடன் காட்டிய தவிசில் வைக.

(இ - ள்.) *வான் வழி வந்த மூன்று மன்னரும்*-வானின் வழியாக வந்த மூன்று வேந்தரும், *பொன் நாடு எய்தி* - பொன்னுலகத்தை யடைந்து, *ஊன் வழி குலிசவைவேல் உம்பர்கோன் மருங்கில்புக்கார்*- ஊன் சிந்துகின்ற கூரிய வச்சிரப் படையையுடைய இந்திரன் அருகி லுற்றனர்; *தேன் வழி போந்தின் கண்ணிச் சேரனும்* - (அவருள்) தேன் ஒழுகும் பனம்பூமாலை யணிந்த சேரமன்னனும், *ஆர்த்தார் வேந்தும்* - ஆத்திப் பூ மாலை யணிந்த சோழமன்னனும், *கான்வழி தாரு நாடன் காட்டிய தவிசின் வைக*-மணம் வீசும் கற்பகத் தருவையுடைய நாட்டினையுடைய இந்திரன் காட்டிய இருக்கையில் அமர எ - று.

பகைவர் ஊன் சிந்துகின்ற. குலிசமாகிய வேல்: இருபெய ரொட்டு. வை-கூர்மை. போந்தின்: இன் சாரியை அல்வழிக் கண் வந்தது. போந்தாகிய கணி, ஆராகிய தார் என்க. தாரு: நீட்டல் விகாரம். (௩௩)

மைக்கடல் வறப்ப வென்ற வாகைவேற் செழியன் மேளலிச்
செக்கர்மா மணிவிற் காலத் தேவர்கோன் றவிசி லேறி
ஒக்கவீற் றிருந்தா னாக வும்பர்கோ னழுக்கா றெய்திப்
பக்கமே யிருந்த வேனைப் பார்த்திபர் முகத்தைப் பாரா.

(இ - ள்.) *மைக்கடல் வறப்ப வென்ற வாகை வேல் செழியன்*- கரிய கடலானது வறக்குமாறு வென்ற வெற்றிமாலை தரித்த வேற்

படையையுடைய உக்கிர பாண்டியன், மௌலிச் செக்கர் மாமணிவில் கால - முடியிற் பதித்த சிவந்த பெரிய மணிகள் ஒளி வீச, தேவர் கோன் தவிசில் ஏறி-தேவேந்திரனது ஆதனத்திலேறி, ஒக்க வீற்றி ருந்தான் - அவனுடன் பெருமிதமாக இருந்தான்; ஆக - அங்ஙனம் இருக்க, உம்பர்கோன் அழுக்காறு எய்தி - தேவர்க்கரசன் பொருமை யுற்று, பக்கம் இருந்த ஏனைப் பார்த்திபர் முகத்தைப் பாரா - அருகி லிருந்த மற்றைச் சேர சோழ மன்னர்களின் முகத்தை நோக்கி எ-று.

செக்கர் - செம்மை: பண்புப் பெயர். ஒக்க - சமமாக என்னலு மாம். வீற்றிருத்தல் - வீறுடனிருத்தல்; வீறு - பெருமிதம். ஆக: அசையுமாம். (௩௪)

முகமனன் கியம்பி நீவிர் வந்ததென் மொழிமி னென்ன
மகபதி யெங்க ணாட்டின் மழைமறுத் தடைந்தே மென்றார்
அகமலர்ந் தனையார் நாட்டி னளவும்வான் சுரக்க நல்கி
நகைமணிக் கலம்பொன் னாடை நல்கிநீர் போமி னென்றான்.

(இ - ள்.) முகமன் நன்கு இயம்பி-நன்றாக உபசார மொழிகூறி, நீவிர் வந்தது என்-நீங்கள் வந்த காரணம் என்னை, மொழிமின்என்ன- கூறுங்கள் என்று சொல்ல, மகபதி - இந்திரனே, எங்கள் நாட்டில் மழை மறுத்து அடைந்தேம் என்றார்-எங்கள் நாட்டில் மழைஇன்மை யால் (அதனைவேண்டி) இங்கு வந்தேம் என்று கூறினர்; அகமலர்ந்து- (இந்திரன்) மனமகிழ்ந்து, அனையார் நாட்டின் அளவும் வான் சுரக்க நல்கி - அவ்விருவர் நாடுகளின் அளவும் மழைபெய்ய அருளி, நகை மணிக்கலம் பொன் ஆடை நல்கி-ஒளிபொருந்திய நவமணியாலாகிய அணிகலன்களும் பொன்னாடைகளும் தந்து, நீர் போமின் என்றான் - நீவிர் செல்லுங்கள் என்று விடையளித்தான் எ - று.

மகபதி: விளி: மறுத்தலால் என்பது மறுத்தெனத் திரிந்து நின்றது. (௩௫)

அன்னவ ரகன்ற பின்னை யமரர்கோன் கன்னி நாடன்
தன்னரி யணைமே லொக்கத் தருக்கினோ டிருக்கு மாறும்
பின்னரு மாரி வேண்டாப் பெருமித வீறு நோக்கி
இன்னது புலப்ப டாமை யினையதோர் வினைய முன்னா.

(இ - ள்.) அன்னவர் அகன்ற பின்னை - அம்மன்னவர்கள்போன பின்பு, அமரர் கோன் - தேவேந்திரன், கன்னி நாடன் - கன்னி நாட னாகிய உக்கிரவழுதி, தன் அரி அணை மேல் ஒக்கத் தருக்கினோடு இருக்குமாறும் - தனது சிங்காதனத்தின்கண் சமமாக இறுமாப்புடன் இருக்குந் தன்மையையும், பின்னரும் மாரி வேண்டாப் பெருமித வீறும் நோக்கி-பின்னும் மழையை வேண்டாதிருக்கும் மிக்க பெரு மிதத்தையும் நோக்கி, இன்னது புலப்படாமை - இது வெளிப்படாத வாறு, இனையது ஓர் வினையம் உன்னா-இங்ஙனமாய ஒரு சூழ்ச்சியைக் கருதி எ - று.

பெருமித வீறு: ஒரு பொருட் பன்மொழி. இன்னதென்றது தன் மனக் கோளினை. இனையது என்றது பின் வருவதனைச் சுட்டிற்று. முன்னா வெனப் பிரித்தலுமாம். (௩௬)

போற்புற வரிசை செய்வான் போலள விறந்தோர் தாங்கி
வெற்புறழ் திணிதோ ளாற்றன் மெலிவதோ ராரந்தன்னை
அற்புற வளித்தான் வாங்கி யலர்மதுத் தார்போ லீசன்
கற்புடை யுமையாண் மைந்தன் கதுமெனக் கழுத்தி லிட்டான்.

(இ-ள்.) பொற்பு உற வரிசை செய்வான்போல் - அழகு பொருந்தச் சிறப்புச் செய்கின்றவனைப்போல, அளவு இறந்தோர் தாங்கி-அளவற்றவர்களாலே தாங்கிவரப்பட்டு, வெற்பு உறழ் திணி தோள் ஆற்றல் மெலிவது ஓர் ஆரந்தன்னை - (அவர்கள்) மலையை யொத்த திண்ணிய தோளின்வலி குறைதற்குக் காரணமான தோர் முத்து மாலையை, அற்பு உற அளித்தான்-அன்பு பொருந்தக் கொடுத்தான்; ஈசன் கற்பு உடை உமையாள் மைந்தன் - சோமசுந்தரக் கடவுளின் கற்பு நிறைந்த தேவியாகிய தடாதகைப் பிராட்டியாரின்புதல் வனுகிய உக்கிரவழுதி, வாங்கி - (அதனை) ஏற்று, மது அலர்தார் போல் கதுமெனக் கழுத்தில் இட்டான் - தேன் ஒழுகும் மலர் மாலை போல விரைந்து கழுத்தில் அணிந்து கொண்டான் எ - று.

அளவிறந்தோர் - கிங்கரர். தாங்கி யென்னும் எச்சம் மெலிவது என்னும் வினைகொண்டது. முன் ஏனையோர் பலரால் தாங்கப்பட்டு அவர் தோளாற்றல் மெலிதற்கேதுவாயிருந்த ஆரம் என்றுரைப்பாரு முளர். எளிதினேந்தினனென்பார் 'தார்போல் கதுமென இட்டான்' என்றார். கதுமென: விரைவுக்குறிப்பு. பாண்டியன் ஆரம் பூண்ட இவ்வரலாறு சிலப்பதிகாரத்திற் பலவிடத்திற் குறிக்கப்பெற்றுள் ளமை பின் வருவனவற்றால் அறிக.

''திங்கட் செல்வன் றிருக்குலம் விளங்கச்
செங்கணா யிரத்தோன் றிறல்விளங் காரம்
பொங்கொளி மார்பிற் பூண்டோன் வாழி''

''தேவர்கோன் பூணாரந் தென்னர்கோன் மார்பினவே''
''தேவரார மார்பன்வாழ்க வென்றுபந் தடித்துமே''
''வானவர்கோ னாரம் வயங்கியதோட் பஞ்சவன்றன்
மீனக்கொடிபாடும் பாடலே பாடல்'' (௩எ)

கண்டனன் கடவு ணாதன் கழியவு மிறும்பூ துள்ளங்
கொண்டன னின்று தோட்டுக் குரையளி துழாவு நிம்பத்
தண்டழை மார்ப வாரந் தாங்குபாண் டியனேன் றுன்னை
மண்டல மதிக்க வென்றான் வானநா டுடைய மன்னன்.

(இ-ள்.) கடவுள் நாதன் வானநாடு உடைய மன்னன்-தேவர்கள் தலைவனுகிய வானநாட்டையுடைய இந்திரன், கண்டனன்-(அதனைக்) கண்டு, கழியவும் உள்ளம் இறும்பூது கொண்டனன்-மிகவும் உள்ளத்தில் வியப்படைந்தவனாய், குரை அளி துழாவு நிம்பத்தண் தழைமார்ப- ஒலிக்கின்ற வண்டுகள் மகரந்தத்தில் அளையும் வேம்பினது குளிர்ந்த மாலைபொருந்திய மார்பினையுடைய உக்கிரவழுதியே, உன்னை-நின்னை,

மண்டலம்-உலகமானது, இன்றுதொட்டு-இன்று முதல்,ஆரம்தாங்கு பாண்டியன் என்று மதிக்க என்ருன்-ஆரந்தாங்கு பாண்டியன் என்று மதிப்பதாக என்று கூறினுன் எ - று.

கடவுணுதனுகிய மன்னன் எனக் கூட்டுக. தழை: மாலைக்கு ஆகு பெயர். மண்டலம் - மண்டலத்திலுள்ளார். (௩௮)

அன்னது சிறிது மெண்ணு தங்குநின் றிழிந்து தென்னன்
தன்னக ரடைந்தா னிப்பாற் சதமக ஞணை யாலம்
மன்னவ ரிருவர் நாடு மழைவளம் பெருகப் பெய்த
தென்னவ ஞடு பண்டைச் செயலதா யிருந்த தன்றே.

(இ - ள்.) தென்னன் - உக்கிரவழுதி, அன்னது சிறிதும் எண்ணுது-அப்புகழ்ச்சியைச் சிறிதுங் கருதாது, அங்கு நின்று இழிந்துதன் நகர் அடைந்தான் - அவ் வாதனத்தினின்றும் இறங்கித் தனது நகரத்தை யடைந்தான்; இப்பால் - பின், சதமகன் ஆணையால் - இந்திரன் கட்டளையால், அம் மன்னவர் இருவர் நாடும் வளம் பெருக மழை பெய்த - அச் சேர சோழ வேந்தர் இருவர் நாட்டிலும் வளம் பெருகுமாறு மழைகள் பொழிந்தன; தென்னவன் நாடு பண்டைச் செயலதாய் இருந்தது - பாண்டியன் நாடு முன்னைத் தன்மையாகவே மழையின்றி யிருந்தது எ - று.

எண்ணுது - மதியாது. வளம் பெருக மழை பெய்தனவென மாறுக. அன்று, ஏ: அசைகள். (௩௯)

ஆயதோர் வைகல் வேட்டை யாடுவா னண்ணல் விண்ணந்
தாயதோர் பொதியக் குன்றிற் சந்தனச் சார னண்ணி
மேயதோ லரிமா னேனம் வேங்கையெண் கிரலை யின்ன
தீயதோர் விலங்கு வேட்டஞ் செய்துயிர் செகுக்கு மெல்லை.

(இ - ள்.) ஆயது ஓர் வைகல் - அங்ஙனமாகியதொரு நாளில், அண்ணல் வேட்டை ஆடுவான் - உக்கிரவழுதி வேட்டை யாடுதற் பொருட்டு, விண்ணம் தாயது பொதியக் குன்றில்-வானுலகை ஊடுருவிச் சென்றதாகிய பொதியின் மலையில், சந்தனச் சாரல் நண்ணி - சந்தன மரங்கள் நெருங்கிய சாரலை அடைந்து, மேய தோல் அரிமான் ஏனம் வேங்கை எண்கு இரலை இன்ன - அங்குள்ள யானையும் சிங்கமும் பன்றியும் புலியும் கரடியும் மானும் என்னும் இவை முதலாகிய, தீயது ஓர் விலங்கு - தீமையைக் கருதும் விலங்குகளை, வேட்டம் செய்து உயிர் செகுக்கும் எல்லை - வேட்டையாடி (அவைகளின்) உயிரைப் போக்கும் பொழுது எ - று.

அங்ஙனம் மழையின்றி யிருக்கு நாளில் ஒருநாள் என்க. விண்ணம் என்பதில் அம்மும், தாயதோர் என்பதில் ஒரும் அசைகள். தோல் - யானை. எண்கு - கரடி. இரலை-புல்வாயின் ஆண். ஆகியது, தாவியது, மேவிய என்பன ஆயது, தாயது, மேய என விகாரமாயின. தீயது அது: பகுதிப் பொருள் விகுதி; ஓர்தல் - கருதுதல். (௪0)

பொன்றத்து மருவிக் குன்றிற் புட்கலா வருத்த மாதி
மின்றத்து மேக நான்கும் வீழ்ந்தன மேயக் கண்டு
குன்றத்தி னெடிய திண்டோட் கொற்றவ னவற்றைப் பற்றிக்
கன்றத்திண் களிறு போலக் கடுந்தளை சிக்க யாத்தான்.

(இ - ள்.) பொன் தத்தும் அருவிக் குன்றில் - பொன்னை (வாரிக்கொண்டு) தாவும் அருவிகளையுடைய அம்மலையின்கண், புட்கலா வருத்தம் ஆதி-புட்கலா வருத்தம் முதலிய, மின் தத்தும் மேகம் நான்கும் வீழ்ந்தன மேயக்கண்டு-மின் வீசும் முகில்கள் நான்கும் வீழ்ந்து மேய்வதைப் பார்த்து, குன்றத்தின் நெடிய திண் தோள் கொற்றவன்-மலையினும் பெரிய திண்ணிய தோளையுடைய உக்கிரவழுதி, அவற்றைப்பற்றி-அவற்றைப் பிடித்து, கன்ற - வருந்துமாறு, திண் களிறு போல-வலிய யானைகளைப் போல, கடுந்தளை சிக்க யாத்தான் - கடிய விலங்கால் அகப்படப் பிணித்து எ - று.

மேகம் நான்கு - புட்கலா வருத்தம், சங்காரித்தம், துரோணம், காளமுகி என்பன; இவை முறையே பொன், பூ, மண், கல் என்பவற்றைப் பொழிவன. தளை-இருப்புத் தொடர். சிக்க-இறுக என்றுமாம். வீழ்ந்தன, யாத்தான் என்பன முற்றெச்சங்கள். (௬௧)

வேட்டத்திற் பட்ட செங்கண் வேழம்போற் கொண்டு போகிக்
கோட்டத்தி லிட்டா னாகக் குன்றிற கரிந்த வென்றி
நாட்டத்துப் படிவத் தண்ட நாடன்மற் றதனைக் கேட்டுக்
காட்டத்துக் கனல்போற் சீறிக் கடுஞ்சமர் குறித்துச் செல்வான்.

(இ - ள்.) வேட்டத்தில் பட்ட செங்கண் வேழம் போல் - வேட்டையில் அகப்பட்ட சிவந்த கண்களையுடைய யானையைக் கொண்டு போதல் போல, கொண்டு போகிக் கோட்டத்தில் இட்டான்-கொண்டு சென்று சிறைக்கோட்டத்தி லிட்டனன்; அதனை - அச்செய்தியை, குன்று இறகு அரிந்த வென்றி - மலைகளின் சிறைகளை அறுத்த வெற்றியையுடைய, நாட்டத்துப் படிவத்து அண்ட நாடன் கேட்டு-கண்கள் பொருந்திய உடலையுடைய வான நாடனாகிய இந்திரன் கேட்டு, காட்டத்துக் கனல் போல் சீறி-விறகிற் பற்றிய தீப் போல வெகுண்டு, கடுஞ்சமர் குறித்துச் செல்வான்-கடிய போரைக் குறித்துச் செல்வானாயினான் எ - று.

ஆக: அசை; இட்டானாக என எச்சமுமாம். திருமுருகாற்றுப்படையில்

"நூற்றுப் பத்தடுக்கிய நாட்டத்து"

எனவும், சிலப்பதிகாரத்தில்

"செங்கணா யிரத்தோன்"

எனவும் கூறப்பட்டுள்ளமை காண்க. மற்று: அசை, முகிலைச் சிறையிட்ட தென்பது ஆராய்ச்சிக் குரியது. (௬௨)

வாங்குநீர் வறப்ப வேலை விடுத்ததும் வலிய வாரந்
தாங்கிய செருக்குங் காரைத் தளையிடு தருக்கு நோக்கி
ஈங்கொரு மனித யாக்கைக் கித்துணை வலியா தென்னு
வீங்கிய மான மூக்க மீனவன் மதுரை சூழ்ந்தான்.

(இ - ள்.) வாங்கு நீர் வறப்ப வேலை விடுத்ததும்-வளைந்த கடல் சுவற வேற்படையை விடுத்ததனையும், வலிய ஆரம் தாங்கிய செருக்கும்-வலிய மாலையைத் தாங்கிய பெருமிதத்தையும், காரைத் தளை இடு தருக்கும் நோக்கி-முகிலை விலங்கிட்ட செருக்கையும் நோக்கி, ஈங்கு ஒரு மனித யாக்கைக்கு இத்துணை வலியாது என்று-இங்கு ஒரு மனித உடம்பிற்கு இவ்வளவு வலிமை வந்தது என்னை என்று, வீங்கிய மானம் ஊக்க - மேலெழுந்த மானம் செலுத்த, மீனவன் மதுரை சூழ்ந்தான்-பாண்டியனது மதுரையை வளைந்தான் எ - று.

வெறுப்பால் 'ஈங்கொரு மனிதயாக்கை' என இகழ்ந்தானென்க. ஊக்க-ஊக்க முண்டாக்க, செலுத்த. (சுங)

[கலிவிருத்தம்]

ஓடின ரோற்றர்போய்ச் செழிய னொண்கழல்
சூடினர் நகர்ப்புறஞ் சுரர்கள் சேனைகள்
மூடின வென்னலு முனிவு மானமும்
நீடின னரியணை யிருந்து நீங்குவான்.

(இ - ள்.) ஒற்றர் ஓடினர் போய் - ஒற்றர்கள் ஓடிச்சென்று, செழியன் ஒண்கழல் சூடினர்-பாண்டியனின் ஒள்ளிய திருவடிகளைச் சிரத்திற்சூடி. நகர்ப்புறம் சுரர்கள் சேனைகள் மூடின என்னலும் - நகரின் புறத்தே தேவர் படைகள் வளைந்தன என்று கூறலும், முனிவும் மானமும் நீடினன்-கோபமும் மானமும் மிக்கவனாய், அரி அணை இருந்து நீங்குவான்-சிங்காதனத்தினின்றும் நீங்கிப் போருக்குச் செல்கின்ற அப்பாண்டியன் எ - று.

ஓடினர், சூடினர், நீடினன் என்பன முற்றெச்சங்கள். நீங்குவான்: பெயர். (சுச)

பண்ணுக தேர்பரி பகடு வீரர் முன்
நண்ணுக கடிதென நடத்தி யாவரேன்
றெண்ணலன் மதமலை யெருத்த மேற்கோடு
கண்ணகன் கடிநகர்க் காப்பு நீங்குமுன்.

(இ - ள்.) தேர் பரி பகடு பண்ணுக-தேரையும் குதிரையையும் யானையையும் பண்ணுக, வீரர் கடிது முன் நண்ணுக - வீரர்கள் விரைந்து முன் செல்லுக, என - என்றுகூறி, நடத்தி - (அவற்றை) முன்னே நடப்பித்து, யாவர் என்று எண்ணலன்-போருக்கு வந்தவர் யாவர் என்று கருதாது, மதமலை எருத்தம் மேற்கொடு - யானையின் பிடரியிலேறி, கண் அகன் கடிநகர் காப்பு நீங்குமுன் - இடமகன்ற விளக்கமுள்ள நகரின் காவலாகிய மதிலைக் கடக்குமுன் எ - று.

பண்ணுதல்-புறப்படுதற் கேற்பச் சமைத்தல்,ஒப்பனை செய்தல். அகன்: மரூஉ. (சரு)

அடுத்தனர் வானவ ரார்த்துப் பல்படை
எடுத்தனர் வீசினர் சிலையி லெய்கணை
தொடுத்தன ரிறுதிநாட் சொரியு மாரிபோல்
விடுத்தனர் மதிக்குல வீரன் சேனைமேல்.

(இ - ள்.) வானவர் அடுத்தனர் ஆர்த்து-தேவர்கள் நெருங்கி ஆரவாரித்து, பல்படை எடுத்தனர் வீசினர் - பல படைகளையும் எடுத்து வீசி, சிலையில் எய்கணை தொடுத்தனர் - வில்லின்கண் எய்யுங் கணைகளைத் தொடுத்து, மதிக்குல வீரன் சேனைமேல்-சந்திர குலத்து வீரனாகிய உக்கிர வழுதியின் சேனையின்மேல், இறுதிநாள் சொரியும் மாரிபோல் விடுத்தனர் - ஊழிக்காலத்திற் பொழியும் மழைபோலச் சொரிந்தார்கள் எ - று.

வானவர் வீரன் சேனைமேல் மாரிபோல் விடுத்தனர் என்க. முற்றுக்கள் எச்சமாய் வருவன காண்க. (சசு)

ஆர்த்தனர் மலயவெற் பரையன் சேனையோர்
பார்த்தனர் வேறுபல் படைக்க லக்குவை
தூர்த்தனர் குனிசிலை தொடுத்து வாளியாற்
போர்த்தன ரமரர்மெய் புதைத்த வென்பவே.

(இ - ள்.) மலய வெற்பு அரையன் சேனையோர் ஆர்த்தனர் - பொதியின் மலையையுடைய பாண்டியன் படைவீரர் ஆரவாரித்து, பார்த்தனர் வேறுபல் படைக்கலக் குவை தூர்த்தனர்-பார்த்து வெவ்வேறு பலபடைக்கலக் கூட்டங்களை வீசி,குனி சிலை தொடுத்து வாளியால் போர்த்தனர்-வளைந்த வில்லிற்பூட்டி அம்புகளால் மூடினர்;அமரர் மெய்புதைத்த(அவ்வம்புகள்) தேவர்கள் மெய்யில் தைத்தன எ-று.

பார்த்தனர்-ஆராய்ந்து; வானவர் விடுத்தமையை நோக்கி என்றுமாம். புதைந்த வென்பது புதைத்த வென வலித்தது; மெய்யை மறைத்தன என்னலுமாம். என்ப, ஏ: அசைகள். (சஎ)

தறிந்தன தாள்சிரந் தகர்ந்த தோள்கரம்
பறிந்தன குருதிநீர் கடலிற் பாய்ந்தன
செறிந்தன பாரிடஞ் சேனங் கூளிகள்
முறிந்தன வானவர் முதல்வன் சேனையே.

(இ - ள்.) தாள் தறிந்தன-(சிலருக்குக்) கால்கள் அறுபட்டன; சிரம் தகர்ந்த - (சிலருக்குத்) தலைகள் உடைந்தன; தோள் கரம் பறிந்தன-(சிலருக்குத்)தோளும் கையும் குறைபட்டன; கடலில் குருதி நீர் பாய்ந்தன - கடலில் உதிரநீர்கள் ஓடிப்பாய்ந்தன; பாரிடம் சேனம் கூளிகள் செறிந்தன - பூதங்களும் பருந்துகளும் பேய்களும் வந்து நெருங்கின; வானவர் முதல்வன் சேனை முறிந்தன - தேவர் தலைவனாகிய இந்திரன் சேனைகள் நிலைகெட்டோடின எ - று.

பறிதல் - நீங்குதல். முறிதல் - கெடல். (சஅ)

ஆடின குறைத்தலை யவிந்த போர்க்களம்
பாடின பாரிடம் விந்தைப் பாவைதாள்
சூடின கூளிகள் சோரி சோரப்பார்
மூடின பிணக்குவை யண்ட முட்டவே.

(இ - ள்.) குறைத்தலை ஆடின - கவந்தங்கள் ஆடின; போர்க்களம் அவிந்த-போர்க்களத்திற் போர் ஒழிந்தன; பாரிடம் பாடின - பூதங்கள் பாடின; கூளிகள் விந்தைப் பாவை தாள் சூடின - பேய்கள் கொற்றவையின் திருவடியை (முடியிற்) சூடின; பிணக்குவை சோரி சோர அண்டம் முட்ட பார் மூடின - பிணக் குவியல்கள் குருதி ஒழுகாநிற்க வானை அளாவ நிலவுலகை மூடின எ - று.

குறைத்தலை - தலையற்ற உடல். போர் அவிந்ததனைப் போர்க்களம் அவிந்தன வென்றார்; அவிதல் - அடங்குதல். விந்தையாகிய பாவை யென்க. (சக)

வெஞ்சின வலாரிதன் வீரச் சேனைகள்
துஞ்சின கண்டேரி சோரியுங் கண்ணனாய்ப்
பஞ்சின்மு னெரியெனப் பதைத்துத் தெய்வத
வஞ்சினப் படைகளான் மலைவ துன்னினான்.

(இ - ள்.) வெஞ்சின வலாரி - கொடிய சினத்தையுடைய இந்திரன், தன் வீரச்சேனைகள் துஞ்சின கண்டு-தனது வீரமுள்ள சேனைகள் இறந்தனவற்றை நோக்கி, எரி சொரியும் கண்ணனாய்-அழல் சிந்துங் கண்களை யுடையனாய், பஞ்சின் முன் எரி எனப் பதைத்து - பஞ்சின் முன்னே நெருப்பு (விரைந்து பற்றல்) போல் (சினம் விரைந்து பற்றப்) பதைத்து, வஞ்சினம் தெய்வதப் படைகளால் மலைவது உன்னினான் - நெடுமொழி கூறித் தெய்வத் தன்மையையுடைய படைக் கலங்களினால் போர்செய்தலைக் கருதினான் எ - று.

வலாரி—வலனுக்குப் பகைவன். துஞ்சின - வலி கெட்டன என்னலுமாம்; தொழிற் பெயருமாம். வீரச் சேனை யென்றது இகழ்ச்சி யென்றும், வஞ்சினப் படைகள் என்றது வீரர் வஞ்சினங் கூறிப் பொருதலைப் படைகள் மேலேற்றிய தென்றும் கொள்ளலு மாகும். மலைவது: தொழிற் பெயர். (௫௦)

[அறுசீரடி யாசிரிய விருத்தம்]

வெங்கதிர்ப் படைவிட் டார்த்தான்
விண்ணவ னதனைத் திங்கட்
பைங்கதிர்ப் படைதோட் டோச்சி
யவித்தனன் பாராள் வேந்தன்
சிங்கவெம் படைவிட் டார்த்தான்
தேவர்கோ னதனைச் சிம்புட்
புங்கவன் படைதோட் டோச்சி
யடக்கினான் புணரி வேன்றோன்.

(இ - ள்.) விண்ணவன் வெங்கதிர்ப் படை விட்டு ஆர்த்தான் - இந்திரன் கொடிய பரிதிக்கணையை விட்டு ஆரவாரித்தான்; அதனை - அக் கணையை, பார் ஆள் வேந்தன் - நில வுலகை ஆளுகின்ற பாண்டி மன்னன், பைங்கதிர்ப் படை தொட்டு ஒச்சி அவித்தனன் - இளங் கிரணத்தையுடைய திங்கட் கணையை (வில்லிற்) பூட்டி விடுத்து அழித்தான்; தேவர் கோன் சிங்க வெம்படை விட்டு ஆர்த்தான் - தேவேந்திரன் கொடிய நரசிங்கக் கணையை விடுத்து முழங்கினான்; அதனை - அந்தக் கணையை, புணரி வென்றோன் - கடலை வென்றவனா கிய உக்கிரவழுதி, புங்கம் வன் சிம்புள் படை தொட்டு ஓச்சி அடக் கினான் - மிக்க வலிமையுடைய சரபக்கணையை (வில்லிற்) பூட்டி விடுத்து அழித்தான் எ - று.

புங்கம் - உயர்ச்சி. (௯௧)

தானவர் பகைவன் மோக சரந்தொடுத் தெறிந்தா னாக
மீனவ னதனை ஞான வாளியால் விளித்து மாய்ந்து
போனபின் மற்போ ராற்றப்* புக்கனர் புக்கார் தம்மில்
வானவன் மண்ணி னான்மேல் வச்சிரம் வீசி யார்த்தான்.

(இ - ள்.) தானவர் பகைவன் - அசுரர்கள் பகைவனாகிய இந் திரன், மோகசரம் தொடுத்து எறிந்தானாக - மோகனக் கணையை (வில்லிற்)பூட்டி விடுக்க, அதனை - அக் கணையை, மீனவன் - பாண்டி யன், ஞானவாளியால் விளித்து - ஞானக்கணையால் அழித்தலால், மாய்ந்து போனபின் - (அஃது) அழிந்தபின், மல்போர் ஆற்றப் புக் கனர் - (இருவரும்) மற்போர் புரியத் தொடங்கினார்கள்; புக்கார் தம் மில் - அங்ஙனம் தொடங்கினவர்களுள், வானவன் - இந்திரன், மண்ணி னான்மேல் வச்சிரம் வீசி ஆர்த்தான் - பாண்டியன்மேல் வச்சிரப் படையை விடுத்து ஆரவாரித்தான் எ - று.

மோக சரம் - அறிவை மயக்கும் அம்பு. விளித்து - விளியச் செய்து: பிறவினை; விளித்தலாலென்பது திரிந்து நின்றது. (௯௨)

காய்சின மடங்க லன்னான் கைவளை சுழற்றி வல்லே
வீசினன் குலிசந் தன்னை வீழ்த்தது† விடுத்தான் சென்னித்
தேசினன் மகுடந் தள்ளிச் சிதைத்தது சிதைத்த லோடுங்
கூசின னஞ்சிப் போனான் குன்றிற கரிந்த வீரன்.

(இ - ள்.) காய் சின மடங்கல் அன்னான் - மிக்க சினத்தையுடைய சிங்கத்தை ஒத்த உக்கிரவழுதி, கைவளை சுழற்றி வல்லே வீசினன் - கையிலுள்ள திகிரிப்படையைச் சுழற்றி விரைந்து வீசினன்; குலிசம் தன்னை வீழ்த்து - (அப்படை) வச்சிரப் படையை அழித்து, அதுவிடுத் தான் - அப்படையை விடுத்தவனாகிய இந்திரனது, சென்னி தேசின் நல் மகுடம் தள்ளிச் சிதைத்தது - தலையிலுள்ள ஒளி வீசும் நல்ல முடி யைக் கீழே வீழ்த்தி அழித்தது; சிதைத்த லோடும் - (அங்ஙனம்) சிதைத்த வளவில், குன்று இறகு அரிந்த வீரன் கூசினன் அஞ்சிப் போனான் - மலையின் சிறைகளை அறுத்த வீரனாகிய இந்திரன் நாணமும் அச்சமும் உடையனாய் ஓடினான் எ - று.

---

(பா - ம்.) * ஆற்றிப். † விண்டது.

காய் சினம் - சுடு சினம்; மிக்க சினம். கூசினன் - நாணினனாய்: முற்றெச்சம். வீரனென்றது இகழ்ச்சிக் குறிப்பு; முன்பு வீரனான வன் என்றுமாம். இந்திரன் முடியைத் தகர்த்த இச்செய்தி;

"வச்சிரத் தடக்கை யமரர் கோமான்
உச்சிப் பொன்முடி யொளிவளை யுடைத்தகை"

என்று சிலப்பதிகாரத்திற் கூறப்பட்டுளது. (௩௩)

இந்திரண் டனைய கூர்ம்பல் லிருள்வரை நெஞ்சு போழ்ந்த
மைந்தனில் வலிய காளை வரைந்தெறி நேமி சென்னி
சிந்திடா தாகி யம்பொன் மணிமுடி சிதறச் சோம
சுந்தர நாதன் பூசைத் தொழிற்பய னளித்த தென்னா.

(இ - ள்.) இரண்டு இந்து அனைய கூர்ம்பல் - இரண்டு பிறை மதி போன்ற கூரிய பற்களையுடைய, இருள் வரை நெஞ்சுபோழ்ந்த - மயக்கத்தைச் செய்யும் மலை வடிவாயுள்ள கிரவுஞ்சனது நெஞ்சைப் பிளந்த, மைந்தனில் வலிய காளை - முருகக் கடவுள் போலும் வலியுடைய உக்கிரவழுதி, வரைந்து எறி நேமி - கையிற்கொண்டு எறிந்த திகிரிப்படையானது, சென்னி சிந்திடாதாகி - தலையைச் சேதிக்காமல், அம்பொன் மணி முடி சிதற - அழகிய பொன்னாலாகிய மணிகள் பதித்த முடியையே சிதறுமாறு, சோமசுந்தர நாதன் பூசைத்தொழில் பயன் அளித்தது என்னா - சோமசுந்தரக் கடவுளின் பூசைப்பயன் காத்தது என்று எ - று.

அசுரனாகிய வரை யென்பார் 'கூர்ம்பல் இருள் வரை' என்றார் எனலுமாம். கூர்ம்பல், மெல்லெழுத்து மிக்கது;

"ஆரும் வெதிரும் சாரும் பீரும்
மெல்லெழுத்து மிகுதல் மெய்பெறத் தோன்றும்" (தொல்)

என்பதன் இலேசாற் கொள்க. பூசையாகிய நல்வினையின் பயன். (௩௪)

போரினுக் காற்று தோடிப் பொன்னகர் புகுந்த வென்றித்
தாரினுக் கிசைந்த கூர்வேற் சதமகன் பின்பு நின்னாட்*
டூரினுக் கெல்லா மாரி யுதவுவே னிகள நீக்கிக்
காரினைத் தருக வென்னாக் கவுரியற் கோலை விட்டான்.

(இ - ள்.) போரினுக்கு ஆற்றாது ஓடி-போருக்கு ஆற்றாது புறங் கொடுத்தோடி, பொன் நகர் புகுந்த - பொன்னுலகிற் புகுந்த, வென்றித் தாரினுக்கு இசைந்த - வெற்றி மாலைக்கு அமைந்த, கூர்வேல் சதமகன் - கூரிய குலிசப் படையை யுடைய இந்திரன், பின்பு - பின், நின்நாட்டு ஊரினுக்கு எல்லாம் மாரி உதவுவேன் - நினது நாட்டிலுள்ள ஊர் முழுதுக்கும் மழைவளந் தருவேன்; நிகளம் நீக்கிக் காரினைத் தருக என்னா - விலங்கினின்றும் நீக்கி முகில்களைத் தருவாயாக என்று, கவுரியற்கு ஓலை விட்டான் - உக்கிரவழுதிக்குத் திருமுகம் அனுப்பினான் எ - று.

(பா - ம்.) * தன்னாட்.

இசைந்த சதமகன் என்க. தாரினுக்கு என்பதனை உருபு மயக்க மாக்கித் தாரினை யணிந்த என்னலுமாம்; இதுவும் இகழ்ச்சி நாடு முழுதுக்கும் என்க. நிகளத்தை நீக்கி யென்றுமாம். விட்டான் - விடுத்தான். (ருரு)

முடங்கல் கோண்டணைந்த தூதன் முடிகெழு வேந்தன் பாதத்
தோடுங்கிநின் றோலை நீட்ட வுழையுளா னொருவன் வாங்கி
மடங்கலே றனையான் முன்னர் வாசித்துக் காட்டக் கேட்டு
விடங்கலுழ் வேலான் விண்ணோர் வேந்துரை தேரா னாகி.

(இ - ள்.) முடங்கல் கொண்டு அணைந்த தூதன்-ஓலை கொண்டு வந்த தேவ தூதன், முடி கெழுவேந்தன் பாதத்து ஒடுங்கி நின்று ஓலை நீட்ட - முடியினையுடைய பாண்டி மன்னன் திருவடியின்கீழ் அடங்கி நின்று ஓலையைக் கொடுக்க, உழையுளான் ஒருவன் வாங்கி - அருகி லுள்ள ஒருவன் அதனை வாங்கி, மடங்கல் ஏறு அனையான் முன்னர் வாசித்துக் காட்ட - ஆண்சிங்கத்தை ஒத்த உக்கிரவழுதியின் முன் படித்துக் காட்ட, கேட்டு - அதனைக் கேட்டு, விடம் கலும்வேலான்- நஞ்சுமிழும் வேற்படையையுடைய அம் மன்னன், விண்ணோர்வேந்து உரை தேரானாகி - தேவேந்திரனுடைய வார்த்தையைத் தெளியாத வனாய் எ - று.

முடியை யிழந்த வேந்தன் றூதன், முடியையுடைய வேந்தன் பாதத்தில் ஒடுங்கி நின்றானென்க. உழையுளான் - கரணத்தான்; திருமுகம் வாசிப்பான். மெய்யெனத் தெளியாமல் என்க. (ருசு)

இட்டவன் சிறையை நீக்கி யெழிலியை விடாது மாறு
பட்டசிந் தையனே யாகப் பாகசா தனனுக் கேன்றும்
நட்டவ னொருவே ளாள னான்பிணை யென்று தாழ்ந்தான்
மட்டவிழ் தொழுகு நிம்ப மாலிகை மார்பி னானும்.

(இ - ள்.) இட்டவன் சிறையை நீக்கி எழிலியை விடாது-இடப் பட்ட வலிய சிறையினின்றும் நீக்கி முகில்களை விடாது, மாறுபட்ட சிந்தையனே ஆக - மாறுகொண்ட உள்ள முடையனாக, பாகசாதன னுக்கு என்றும் நட்டவன் ஒரு வேளாளன்-இந்திரனுக்கு எப்பொழு தும் நண்பினனாயுள்ள ஒரு வேளாளன், நான் பிணைஎன்று தாழ்ந் தான் - நான்பிணை என்று வணங்கினான்; அவிழ்ந்து மட்டு ஒழுகு நிம்பமாலிகை மார்பினானும் - மலர்ந்து தேனொழுகும் வேப்ப மலர் மாலையை யணிந்த மார்பினையுடைய பாண்டியனும் எ - று.

பாகசாதனனை நட்டவன் என உருபு மயக்கமுமாம். பிணை-புணை; ஈடு. (ருஎ)

இடுக்கண்வந் துயிர்க்கு முற்ற மெய்தினும் வாய்மை காத்து
வடுக்களைந் தொழுகு நாலா மரபினா னுரையை யாத்தன்
எடுத்துரை மறைபோற் சூழ்ந்து சிறைக்களத் திட்ட யாப்பு
விடுத்தனன் பகடு போல மீண்டன மேக மெல்லாம்.

(இ-ள்.) இடுக்கண் வந்து உயிர்க்கும் ஊற்றம் எய்தினும் - துன்ப முண்டாகி உயிருக்கும் இடையூறு வந்தாலும், வாய்மை காத்து - மெய்ம்மையைப் பாதுகாத்து, வடுக்களைந்து ஒழுகும் - குற்றத்தையகற்றி ஒழுகும், நாலாம் மரபினன் உரையை - நான்காங் குலத்தினனாகிய அவன் கூறிய மொழியை, ஆத்தன் எடுத்து உரை மறைபோல் சூழ்ந்து-இறைவன் (உயிர்களின் பொருட்டு) எடுத்துக் கூறிய மறை மொழிபோல் மதித்து, சிறைக் களத்து இட்ட யாப்பு விடுத்தனன் - சிறைச்சாலையின்கண் இட்டிருந்த தளையினை நீக்கினான்; மேகம் எல்லாம் பகடுபோல மீண்டன - முகில்கள் நான்கும் யானைகள் போல மீண்டு சென்றன - எ - று.

இடுக்கண் - வறுமை முதலிய துன்பம்; உயிர்க்கும்: உம்மை எச்சமும் சிறப்புமாம். ஊற்றம் - ஊறு. வாய்மை காத்தலை 'வழுக்கறு வாய்மை மாண்பும்' என மேலே உரைத்ததனுள்ளுங் காண்க. வேத மொழிபோற் பொய்யாதெனக் கருதி, களவேள்வி நாட்டில் ஏழூர்களை யுடைய ஒருவன் 'நாம் முன்' என்று கூறிப் புணை நின்றான் என நம்பி திருவிளையாடல் கூறும். (௧அ)

தேவர்கோ னேவ லாலே திங்கண்மும் மாரி பெய்து
வாவியுங் குளனும் யாறு மடுக்களு மடுத்துக் கள்வாய்க்
காவிசூழ் வயலுஞ் செய்யுஞ் செந்நெலுங் கன்னற் காடும்
பூவிரி பொழிலுங் காவும் பொலிந்தது கன்னி நாடு.

(இ-ள்.) தேவர்கோன் ஏவலாலே - தேவேந்திரன் கட்டளையாலே, திங்கள் மும்மாரி பெய்து - மாதம் மூன்று மழை பெய்துவர, வாவியும் குளனும் யாறும் மடுக்களும் மடுத்து - வாவிகளும் குளங்களும் ஆறுகளும் மடுக்களும் நிறைதலால், கள்வாய் காவி சூழ் வயலும் செய்யும் - தேன் ஒழுகும் வாயினையுடைய குவளைகள் வயல்களிலும் செய்களிலுமுள்ள, செந்நெலும் கன்னல் காடும் - செந்நெற் காடுகளாலும் கரும்பின் காடுகளாலும், பூவிரி பொழிலும் காவும் - மலர் விரிந்த பூஞ்சோலைகளாலும் இளமரக்காக்களாலும், கன்னிநாடு பொலிந்தது - கன்னி நாடு பொலிவு பெற்று விளங்கியது எ - று.

பெய்ய வென்பது பெய்து என்றும், மடுத்தலால் என்பது மடுத்து என்றும் திரிந்து நின்றன. செந்நெலும் கன்னற்காடும் உடைய வயல்களாலும் செய்களாலும் என்று கருத்துக் கொள்க. செய் - படுகர் போலும். (௧௯)

ஆகச் செய்யுள் - ௧௧OO.

---

## கரு. மேருவைச் செண்டாலடித்த படலம்

[எழுசீரடி யாசிரிய விருத்தம்]

அண்ட ரஞ்ச வமரு ழந்த வமரர் கோனை யரசர்கோன்
வண்ட லம்பு மௌலி சிந்த வளையெ றிந்து வெம்புறங்
கண்ட வண்ண மின்ன தன்ன கன்னி நாடன் மேருவிற்
செண்டெ றிந்து வைப்பெடுத்த செயலு நன்கு செப்புவாம்.

(இ - ள்.) அரசர் கோன் - மன்னர் மன்னனாகிய உக்கிரவழுதி, அமர் உழந்த அமரர் கோனை - தன்னுடன் போர் புரிந்த தேவர்க்கரசனை, அண்டர் அஞ்ச - தேவர்கள் அஞ்சுமாறு, வண்டு அலம்பு மௌலி சிந்த - வண்டுகள் ஒலிக்கும் (மாலை சூடிய) முடி தகர, வளை எறிந்து வெம் புறம் கண்ட வண்ணம் இன்னது - திகிரிப் படையை ஓச்சிப் புறங் கண்ட திருவிளையாடல் இதுவாகும்; அன்ன கன்னி நாடன் - (இனி) அந்தக் கன்னி நாடனாகிய பாண்டியன், மேருவில் செண்டு எறிந்து - மேருமலையின் மேல் செண்டினை ஓச்சி, வைப்பு எடுத்த செயலும் நன்கு செப்புவாம் - சேமநிதி எடுத்த திருவிளையாடலையும் நன்கு கூறுவாம் எ - று.

உழத்தல் - வருந்திச் செய்தல். வண்டலம்பு என்னும் அடையால் மாலை சூடிய என வருவிக்கப் பட்டது. வெம், புறம்; ஒருபொருளிரு சொல். இச் செய்யுளில் சந்த நலந் தோன்றச் சீரெதுகை பல அமைந்திருத்தல் காண்க. (க)

மன்ன வன்ற னக்கு முன்னர் மலய வெற்பின் முனிவர்கோன்
சொன்ன திங்கள் விரத மன்று தொட்டு நோற்று வரலுமந்
நன்ன லஞ்செய் பேறு போல நங்கை காந்தி மதிவயிற்
றுன்ன ருஞ்ச யங்கொண் மைந்த னொருவன் வந்து தோன்றினன்.

(இ - ள்.) மன்னவன் - உக்கிர வழுதி, முன்னர் - முன்பு, மலய வெற்பின் முனிவர் கோன் - பொதியின் மலையையுடைய முனிவர் தலைவனாகிய அகத்தியன், தனக்கு சொன்ன திங்கள் விரதம் - தனக்குக் கூறிய சோமவார விரதத்தை, அன்று தொட்டு நோற்று வரலும் - அற்றை நாள் முதல் நோற்று வரவும், அந்நல் நலம் செய்பேறுபோல - அந்த நல்ல விரதம் அருளிய பயன்போல, நங்கை காந்திமதி வயிற்று - பெண்களுட் சிறந்த காந்திமதியின் வயிற்றிலே, உன் அரும் சயம் கொள்மைந்தன் ஒருவன் வந்து தோன்றினன் - நினைத்தற்கரிய வெற்றியைப் பெறும் புதல்வன் ஒருவன் வந்து உதித்தான் எ - று.

மூவேந்தர்க்குங் கூறியதனைத் தனக்குக் கூறிய தென்றது தனக்கும் அவ்வுரிமை யுண்மையால்; எவ்வுயிர்க்கும் அப்பனாயுள்ளானை 'என்னப்பன்' என்பது போல. நல மென்றது விரதத்தை யுணர்த்திற்று. உன்: முதனிலைத் தொழிற்பெயர். (உ)

வயந்த னைப்ப யந்த தென்ன மைந்த னைப்ப யந்தபோ
தியந்து வைத்து நகர் களிப்ப வினிதி ருந்த புரவலன்
சயந்த ழைக்க விந்தி ரன்ச யந்த னைப்ப யந்தநாள்
வியந்த கத்த டைந்த வின்பம் விளைம கிழ்ச்சி யெய்தினன்.

(இ - ள்.) வயந்தனைப் பயந்தது என்ன-மன்மதனைப் பெற்றாற் போல, மைந்தனைப் பயந்தபோது - புதல்வனைப் பெற்ற பொழுது, நகர் இயம்துவைத்து களிப்ப-நகரத்திலுள்ளவர்கள் இயங்களை ஒலிப்பித்துக் களிகூர, இனிது இருந்த புரவலன்-இனிதாக இருந்த உக்கிர வழுதி, இந்திரன் சயம்தழைக்க சயந்தனைப்பயந்த நாள்-இந்திரனனவன் வெற்றி பெருகச் சயந்தனைப் பெற்ற பொழுது,வியந்து அகத்து அடைந்த இன்பம் - வியப்புற்று உள்ளத்திலுற்ற மகிழ்ச்சிபோல, விளை மகிழ்ச்சி எய்தினன்-மிக்க மகிழ்ச்சியை அடைந்தான் எ - று.

வயந்தன் - வேனிலுக் குரியவன். வயம் தனை எனப் பிரித்து வெற்றியையே பெற்றாற் போல என்றுரைத்தலுமாம். துவைத்து: ஈண்டுப் பிறவினை. சயந்தன் - இந்திரன் மகன். சயந் தழைக்கச் சயந்தனைப் பயந்த என்பதன் நயத்தினை ஓர்க. இன்பம் போலவென உவமச் சொல் விரிக்க; இன்பம் விளைக்கும் மகிழ்ச்சி போலும் மகிழ்ச்சியை யென்றலுமாம். (ங)

தென்ன ரேறு சாத காதி செய்து வீர பாண்டியன்
என்ன நாம வினை நிரப்பி யெழுதொ ணாத கலைமுதற்
பன்னு கேள்வி கரிக டேர்கள் பரிப டைக்க லம்பயின்
றன்ன காத லான்வி ளங்க வகம கிழ்ச்சி யடையுநாள்.

(இ - ள்.) தென்னர் ஏறு-பாண்டியருள் ஆண் சிங்கம் போன்ற உக்கிரவழுதி, சாதகாதி செய்து - சாத கன்ம முதலிய சடங்குகளைச் செய்து, வீரபாண்டியன் என்ன நாம வினை நிரப்பி-வீரபாண்டியன் என்று பெயரிட்டு, எழுத ஒண்ணாத கலை முதல் பன்னு கேள்வி — எழுதலாகாத மறை முதலாகக் கூறப்பட்ட பல நூல்களையும், கரிகள் தேர்கள் பரி – யானை தேர் குதிரைகளின் ஏற்றங்களையும், படைக்கலம்-படைக்கல வித்தையையும், பயின்று-கற்று, அன்னகாதலான் விளங்க – அந்தப் புதல்வன் விளங்க, அகமகிழ்ச்சி அடையும் நாள்-(அதனைக் கண்டு) மனமகிழ்ச்சி யடையுங் காலையில் எ - று.

சாதகாதி: நெடிற் சந்தி. பெயரிடுதலும் சடங்காகலின் 'நாம வினை நிரப்பி' என்றார். எழுதொணாத: அகரம் தொகுத்தல்; ஒன்றாத வென்பது மரூஉவாயிற்று. பயிற்றுவித்து, அவற்றைப் பயின்று விளங்கக் கண்டு என விரித்துரைத்துக் கொள்க. (ச)

மல்கு மாறில் கோடி ரிந்து மழைசு ருங்கி நதியுநீர்
ஒல்கு மாறு பருவ மாறி யுணவு மாறி யுயிரெலாம்
மேல்கு மாறு* பசியு ழந்து வேந்த னுக்கு விளைபொருள்
நல்கு மாறி லாமை யின்ன னலிய வந்த நாடெலாம்.

(பா - ம்.) * மல்குமாறு.

(இ - ள்.) மல்கு மாறு இல் - நலம் பெருகுந் தன்மை இல்லையாக, கோள் திரிந்து-கோட்கள் தத்தம் நிலையினின்றும் மாறுதலால், மழை சுருங்கி நதியும் நீர் ஒல்குமாறு-மழைவளஞ் சுருங்கி நதியும்நீர் வறப்ப, பருவம் மாறி உணவுமாறி-பருவங்கள் மாறுபட்டு உணவு இன்றாகி, உயிர் எலாம் மெல்குமாறு-உயிர்களனைத்தும் மெலியுமாறு, பசி உழந்து - பசியால் வருந்தி, வேந்தனுக்கு விளை பொருள் நல்குமாறு இலாமை - அரசனுக்கு விளைபொருள் கொடுத்தலும் இல்லையாக, நாடு எலாம் இன்னல் நலிய வந்த - நாடு முழுதும் வறுமைத் துன்பம் வருத்துமாறாயின எ - று.

இல்-இல்லையாக. ஒல்குமா றென்பதனை ஒல்க வெனத் திரிக்க. பருவம் மாறுதலாவது கார் கூதிர்ப் பருவங்களில் மழையின்மையின் எல்லாப் பருவங்களும் தம் இயல்பு மாறுதல். திரிதலால் சுருங்கி ஒல்க அதனால் பருவமாறி உணவுமாறி உழந்து இல்லையாக நாடெலாம் நலிய வந்தன எனக் கூட்டி வினைமுடிவு செய்க. இன்னல்கள் வந்தன என்னலுமாம். (ரு)

மழைவ றந்த தென்கோ லென்று வழுதிகூற முழுதுணர்ந்
தழிவி லாத பிரம கற்ப மளவு மெல்லை கண்டநூல்
உழவர் கோள்க ளிரவி தன்னை யுற்று நோக்கி நிற்றலால்
தழையு மாரி வருடி யாதோர் வருட மென்று சாற்றினர்.

(இ - ள்.) மழை வறந்தது என்கொல் என்று வழுதிகூற-மழை வறந்ததற்குக் காரணம் யாதென்று பாண்டியன் வினவ (அதற்கு), முழுது உணர்ந்து அழிவு இலாத பிரமகற்பம் அளவும்இல்லை கண்ட நூல் உழவர் - சோதிட நூல் முழுதும் உணர்ந்து அழியாத பிரம கற்பம் வரையும் காலவளவைத் தேர்ந்துணர்ந்த புலவர்கள், கோள்கள் இரவி தன்னை உற்று நோக்கி நிற்றலால்-ஏனைய கோட்கள் சூரியனைப் பொருந்தி நோக்கி நிற்றலால், ஓர் வருடம் தழையும் மாரி வருடியாது என்று சாற்றினர். ஓராண்டுவரை (உலகைச்) செழிப்பிக்கும் மழையானது பொழியாது என்று கூறினர்கள் எ - று,

பிரம கற்பம் - பிரமனுக்கு ஒருபகல்; பதினான்கு இந்திரர் அழியுங்காலம். அக்காலம் என்றும் வந்து கொண்டிருத்தலின் 'அழிவிலாத' என்றார்; உபசாரமுமாம். நூலுழவர்-புலவர்; 'சொல்லேருழவர்' என்பது போலும் வழக்கு. எல்லை கண்ட நூல் எனலுமாம். வருடியாது: வடசொற்றிரிபு. (சு)

[அறுசீரடியாசிரிய விருத்தம்]

மகவுறு நோயை நோக்கி வருந்துறு தாய்போன் மன்னன்
பகவுறு மதியஞ் சூடும் பரஞ்சுடர் முன்போய்த் தாழ்ந்து
மிகவுறு பசியால் வைய மெலிவதை யைய வென்றுத்
தகவுற விரங்கிக் கண்ணீர் ததும்பி*நின் றிரந்து வேண்ட.

(இ - ள்.) மகவு உறு நோயை நோக்கி வருந்துறு தாய்போல் - பிள்ளையுற்றபிணியைநோக்கி வருந்துகின்ற தாயைப்போல,மன்னன்-

---

(பா - ம்.) * ததும்ப.

பாண்டி மன்னன், பகவு உறு மதியம் சூடும் பரஞ்சுடர் முன்போய்-பிளவு பொருந்திய மதியையணிந்த சிவபரஞ்சோதியின் திருமுன் சென்று, தாழ்ந்து-வணங்கி, ஐய-ஐயனே, வையம் - உயிர்கள், மிக உறுபசியால் மெலிவது என்னு-மிகவும் உற்ற பசியினால் வருந்துகின் றனவே என்று, தகவு உற இரங்கி கண்ணீர் ததும்பி நின்று இரந்து வேண்ட -மிகவும் இரங்கிக் கண்ணீர் பொழிய நின்று குறையிரந்து வேண்ட எ - று.

குழவியுற்ற நோயைக் கண்டு எல்லையின்றி வருந்துதலும், அந் நோயைப் போக்குதற்குத் தான் மருந்துண்டலும் உடையதாயினுங் காட்டில் அன்பிற்கு எடுத்துக்காட்டு வேறில்லை;

''தாயொக்கு மன்பின்''

என்றார் கம்பநாடர்.

"ஓத நீருல கொப்ப நிழற்றலால்
தாதையே''

என்றார் திருத்தக்கதேவர். தாய்போல் இரங்கித் ததும்பி நின்று வேண்ட எனக் கூட்டுக. வையம்: ஆகுபெயர். மெலிவதை, ஐ:சாரியை; வினைத்திரிசொல்லுமாம். தகவுற-மிக வென்னும் பொருட்டு. (எ)

திரைக்கடல் விடஞ்சேர் கண்டன் காலத்தின் செவ்வி நோக்கி
இரக்கமில் லவர்போல் வாளா விருத்தலு மருத்தார் மார்பன்
கரைக்கரி தாய துன்பக் கடலில்வீழ்ந் திருக்கை புக்கான்
அரக்கர்போர்க் கடலி னீந்தி யருக்கனீர்க் கடலில் வீழ்ந்தான்.

(இ - ள்.) திரை கடல் விடம் சேர் கண்டன்-அலைகளையுடைய கடலிற்றோன்றிய நஞ்சு பொருந்திய திருமிடற்றையுடைய சோம சுந்தரக் கடவுள், காலத்தின் செவ்வி நோக்கி-காலத்தின் இயல்பைக் கருதி, இரக்கம் இல்லவர்போல் வாளா இருத்தலும்-கருணையில்லாத வர்போலச் சும்மா இருக்கவும், மருத்தார் மார்பன் - மணம் பொருந்திய மாலையை யணிந்த மார்பினையுடைய உக்கிரவழுதி, கரைக்கு அரிதாய துன்பக்கடலில் வீழ்ந்து இருக்கை புக்கான் - கரையில் அடங்குதலில்லாத துன்பக்கடலில் விழுந்து இருப்பிடம் சென்றான்; அருக்கன்-சூரியன், அரக்கர் போர்க்கடலின் நீந்தி நீர்க்கடலில் வீழ்ந் தான்-அரக்கர்கள் செய்யும் போர்க்கடலினின்று நீங்கி நீர்க்கடலிற் குளித்தான் எ - று.

வானோரைப் புரத்தற்குக் கொடிய நஞ்சையும் அயின்ற பேரரு ளாளன் இப்பொழுது மக்களுறுந் துயரை நோக்கியும் வாளா விருத் தல் இரக்க மின்மை யன்றென்பார், 'காலத்தின் செவ்வி நோக்கி இரக்கமில்லவர்போல்' என்றார். காலத்தின் செவ்வியாவது உயிர் களின் வினைக்கீடாகத் தனது ஆணைவழி நடக்கும் காலத்தின்நிலைமை. கரைக்கு: உருபு மயக்கம்; கரைதற்கு என்பதன் தொகுத்தலாக்கிச், சொல்லுதற் கரிய என்னலுமாம். போர் மிகுதி தோன்றப் 'போர்க் கடல்' என்றார்;

"வாளமர் நீந்தும் போழ்தின்"

என்பது சிந்தாமணி. போர்க்கடல் என்றமைக் கேற்ப நீர்க்கடல் என்றார். மந்தேகா என்னும் ஒருவகை அரக்கர் ஆதித்தனுடன் பொருது அவன் தேரைத் தடுப்பர் என்று உருவக வகையாற் புராணங் கூறும். (அ)

வள்ளறன் குடைக்கீழ்த் தங்கு முயிர்ப்பசி வருத்த மெல்லாங்
கொள்ளைகொண் டிருந்த நெஞ்சிற் குளிர் முகச் செவ்வி குன்றத்
தள்ளருந் துயரின் மூழ்கித் தரையிடைத் துயின்ற னாக
வெள்ளிமன் றுடையார் சித்த வேடராய்க் கனவில் வந்தார்.

(இ-ள்.) வள்ளல் - உக்கிர வழுதி, தன் குடைக்கீழ் தங்கும் உயிர் பசிவருத்தம் எல்லாம் - தனது குடைநிழலிற்றங்கிய உயிர்களின் பசி வருத்த மனைத்தையும், கொள்ளை கொண்டு இருந்த நெஞ்சில் - கவர்ந்து கொண்டிருந்த உள்ளத்தினால், குளிர்முகச் செவ்வி குன்ற - குளிர்ந்த முகத்தின் பொலிவு குறைய, தள் அரும் துயரில் மூழ்கித் தரையிடைத் துயின்றனாக - நீக்குதற் கரிய துன்பக் கடலில் அழுந்தி நிலத்திலே கிடந்து உறங்கா நிற்க, கனவில் - அவனது கனவின்கண். வெள்ளி மன்று உடையார் சித்த வேடராய் வந்தார் - வெள்ளியம் பல வாணர் சித்த மூர்த்தியாய் எழுந்தருளினார் எ - று.

உயிர்களை யெல்லாம் காத்தற்கு விரையும் பேரருளுடைமை பற்றி 'வள்ளல்' என்றார். கொள்ளை கொண்டு - ஏற்றுக் கொண்டு.

"அடுத்தது காட்டும் பளிங்குபோ னெஞ்சங்
கடுத்தது காட்டு முகம்"

என்ப வாகலின் 'முகச் செவ்விகுன்ற' என்றார். அணையின்றி வறிதாகிய தரையிலென்க. (கூ)

அடற்கதிர் வேலோய் மாரி யரிதிப்போ ததனை வேண்டி
இடர்ப்படல் வரைக்கு வேந்தா யிருக்கின்ற வெரிபொன் மேருத்
தடப்பெரு வரையின் மாடோர் தனிப்பெரு முழைய லிட்டுக்
கிடப்பதோ ரெல்லை யில்லாக் கேடிலாச் சேமவைப்பு.

(இ-ள்.) அடல் கதிர் வேலோய் - வெற்றியை யுடைய ஒளி பொருந்திய வேற்படை ஏந்திய உக்கிரகுமார, இப்போது மாரி அரிது - இப்பொழுது மழை பெய்தல் இல்லை (ஆதலால்), அதனை வேண்டி இடர்ப்படல் - அதனை விரும்பி வருந்தற்க; வரைக்கு வேந்தாய் இருக்கின்ற - மலைகட்கு அரசாக இருக்கும், எரி பொன் மேருத் தடப் பெருவரையின்மாடு - விளங்குகின்ற பொன் வடிவாகிய மேரு வென்னும் மிக்க பெருமையுடைய மலையின் பக்கத்தில், ஓர் தனிப்பெரு முழையில் - ஒரு ஒப்பற்ற பெரிய குகையில், ஓர் எல்லை இல்லாக் கேடுஇலாச் சேம வைப்பு இட்டுக் கிடப்பது - ஓர் அளவில்லாத அழியாத சேமநிதி வைக்கப்பட்டிருக்கின்றது எ - று.

இடர்ப்படல், அல்லீற்று எதிர்மறை வியங்கோள். தடப்பெரு; ஒருபொருளிருசொல். இட்டு - இடப்பட்டு. ஓரெல்லையில்லா என்றது

ஒருவாற்றானும் அளக்க முடியாத என்றபடி. சேமவைப்பு-பின் உதவுதற்கென்று வைக்கப்படும் நிதி. சேமம் - காவல். வைப்பு - வைத்தல்: வைக்கப்படும் பொருளை உணர்த்துகின்றது. (கo)

கிடைத்துமற் றனைய மேரு கிரிசெருக்* கடங்கச் செண்டாற்
புடைத்துநின் றாணைத் தாக்கிப் பொன்னறை பொதிந்த பாறை
துடைத்துநீ வேண்டுங் காறுந் தோட்டெடுத் ததனை மீள
அடைத்துநின் குறியிட் டைய வருதியென் றடிகள் கூற.

(இ - ள்.) ஐய-ஐயனே, கிடைத்து-(அதனை) அடைந்து) அனைய மேருகிரி செருக்கு அடங்க - அந்த மேருமலையானது செருக்கடங்குமாறு; செண்டால் புடைத்து-செண்டாலடித்து, நின் ஆணைத்து ஆக்கி-நினது ஆணை வழிப்படுத்தி, பொன் அறை பொதிந்த பாறை துடைத்து-பொன் வைப்பிருக்கும் அறைமேல் மூடியுள்ள பாறையை நீக்கி, நீ வேண்டுங்காறும் தொட்டு எடுத்து - நீ வேண்டுமளவும் (பொன்னை) வாரி யெடுத்து, அதனை மீள அடைத்து-அவ்வறையைத்திரும்ப மூடி, நின் குறி இட்டுவருதி என்று-நினது இலச்சினையைப் பொறித்துவரக் கடவாய் என்று, அடிகள் கூற - (அங்ஙனம் வந்த) சித்த மூர்த்திகள் கூறியருள எ - று.

செருக்கடக்கி என்றமையால் முன் அது செருக்குடைத்தெனக் கொள்க. ஆணைத்து - ஆணையின் கீழது. துடைத்தல் - நீவுதல். கிரிச் செருக் கென்பது பாடமாயின் கிரியினது செருக்கென்க. (கக)

விழித்தன னெழுமான் றேரோன் விழிக்குமுன் கடன்க[ளெல்லாங்
கழித்தனன் மீன நோக்கி கணவனை வலமாப் போந்து
சுழித்தெறி கடல னீகத் தோகைபுறஞ் சூழக் கொண்டல்
கிழித்தெழு வாயி னீங்கிக் கீழ்த்திசை நோக்கிச் செல்வான்.

(இ-ள்.) விழித்தனன்-(உக்கிர பாண்டியன் உடனே) விழித்து, எழுமான் தேரோன் விழிக்கு முன் கடன்கள் எல்லாம் கழித்தனன் - ஏழு குதிரைகள் பூட்டிய தேரினையுடைய சூரியன் தோன்றுவதற்கு முன்பே நாட்கடன் அனைத்தையும் முடித்துக் கொண்டு, மீனநோக்கி கணவனை வலமாப்போந்து-அங்கயற்கண்ணம்மையின் மணாளனாகிய சோமசுந்தரக் கடவுளை வலம் வந்து, சுழித்து எறி கடல் அனீகத் தொகை புறம் சூழ-சுழித்து அலைகள் வீசும் கடல் போன்ற சேனைக் கூட்டம் புறத்தேசூழ்ந்துவர, கொண்டல் கிழித்து எழுவாயில் நீங்கி-முகில் மண்டலத்தை ஊடுருவி ஓங்கிய கோபுரவாயிலைக் கடந்து, கீழ்த்திசை நோக்கிச் செல்வான் - கீழைத்திசை நோக்கிச் செல்வானாயினன் எ - று.

விழிக்கு முன் விழித்தன னென்பது நயமுடைத்தேனும் கனவு கண்டவுடன் விழித்தனன் என்பதே பொருட் பொருத்த முடைத்தாம். விழித்தனன், கழித்தனன்: முற்றெச்சங்கள். வலமா: விகாரம். அனீகம் - சேனை. (கஉ)

---

(பா - ம்.) * கிரிச்செருக்.

அதிர்ந்தன முரசஞ்.சங்க மதிர்ந்தன வியங்களண்டம்
பிதிர்ந்தன வென்ன வார்ப்பப் பெயர்ந்துவெண் கவரி துள்ள
முதிர்ந்தநான் மறையோ ராசி மொழியநா வல்லோ ரேத்தப்
புதிந்துபார் கிழியத் திண்டேர் பாகுமுன் செலுத்த வூர்ந்தான்.

(இ-ள்.) முரசம் அதிர்ந்தன - பேரிகை ஒலிக்கவும், சங்கம் அதிர்ந்தன - சங்கு ஒலிக்கவும், இயங்கள் அண்டம் பிதிர்ந்தன என்ன ஆர்ப்ப - இயங்களெல்லாம் அண்டங்கள் பிளந்தன என்னுமாறு ஒலிக்கவும், வெண் கவரி பெயர்ந்து துள்ள - வெள்ளிய சாமரைகள் எழுந்து துள்ளவும், முதிர்ந்த நான் மறையோர் ஆசி மொழிய - நான்கு மறைகளிலும் பயிற்சி மிக்க அந்தணர்கள் வாழ்த்துக் கூறவும் நாவல்லோர் ஏத்த-புலவர்கள் புகழ்ந்து பாடவும், பதிந்து பார்கிழிய உருள் பதிதலால் பிளக்குமாறு, திண் தேர் பாகு முன் செலுத்த ஊர்ந்தான் - வலிய தேரைப் பாகன் முன்னே செலுத்தச் சென்றான் எ - று.

அதிர்ந்தன வென்பன அதிர வென்னும் பொருள் குறித்தன; ஆர்ப்ப என்பதனோடியைத்து, அதிர்ந்தன வாய் ஆர்ப்ப எனலுமாம். பாகு - பாகன்; சொல்லால் அஃறிணை. முன்பாகன் செலுத்த என்றமையால் ஊர்ந்தான் என்பதற்குச் சென்றான் என்பது பொருளாயிற்று. (௧௩)

பவளக்காற் பிச்சம் பொற்காற் பன்மணிக் கவிகை முத்தத்
தவளக்காற் பதாகைக் காடுந் தானவா னருவி தூங்குங்
கவளக்காற் பொருப்பும் பாய்மாக் கடலுமண் மடந்தை யாகந்
துவளக்கால் வயவர் மான்றேர்த் தொகுதியுஞ் சூழல் போக.

(இ - ள்.) பவளக்கால் பிச்சம் - பவளத்தாற் செய்த காம்பினை யுடைய பீலிக் குடையும், பொன்கால் பல் மணிக் கவிகை-பொன்னாற் செய்த காம்பையுடைய பல முத்துக்குடைகளும், முத்தம் தவளக்கால் பதாகைக் காடும் - முத்துக்கள் கோத்த வெள்ளிய காம்பையுடைய வெற்றிக் கொடியின் காடும், தானவான் அருவி தூங்கும் கால்கவளம் பொருப்பும்-மதமாகிய பெரிய அருவி ஒழுகும் காலையுடைய கவளம் உண்ணும் மலைபோன்ற யானைகளும், பாய்மாக்கடலும் - தாவுகின்ற குதிரை வெள்ளமும், கால் வயவர் மான் தேர்தொகுதியும்-வீரர்கள் கூட்டமும் குதிரை பூட்டிய தேர்க் கூட்டமும், மண் மடந்தை ஆகம் துவள சூழல்போக - நிலமகளின் உடல் வருந்தச் சூழ்ந்து வரவும் எ - று.

பதாகை - பெருங்கொடி. காடு போறலின் காடு என்றார். காடும் மலையும் கடலும் என ஓர் நயம்படக் கூறினார். காலாள் என்பவாகலின் 'கால்வயவர்' என்றார். வயவர் தொகுதியுமென்க. சூழல்போக - சூழ்போக. (௧௪)

கோழிணர் ஞாழ லன்ன கோட்டுகிர்ப் புலவுப் பேழ்வாய்த்
தாழ்சின வுழுவை யோற்றைத் தனிப்பெருங் கொடியுங் கூனற்
காழ்சிலைக் கொடியுஞ் சூழக் கயற்கொடி நிலந்து ழாங்கை
ஏழுயர் வரைமேற் றேன்றி யிருவிசும் பகடு கீற.

(இ - ள்.) கோழ் இணர் ஞாழல் அன்ன கோட்டு உகிர்-கொழுவிய பூங்கொத்தினையுடைய ஞாழலின் பூவையொத்தவளைந்த நகத்தையும், புலவுப்பேழ்வாய்-புலால் நாற்றத்தையுடைய பிளந்தவாயையும், தாழ்சினம் - அடிப்பட்ட சினத்தையும் உடைய, உழுவை ஒற்றைத் தனிப்பெருங் கொடியும் - புலி எழுதிய ஒப்பற்ற பெரிய கொடியும், கூனல் காழ் சிலைக் கொடியும் சூழ-வளைவினையுடைய வலிய வில் எழுதிய கொடியும் சூழ்ந்து வர, கயல்கொடி-மீனக் கொடியானது, நிலம் துழாம் கை ஏழு உயர் வரைமேல் தோன்றி - நிலத்தைத் தடவுகின்ற துதிக்கையையுடைய ஏழு முழம் உயர்ந்த மலைபோன்ற யானை மேலே தோன்றி, இருவிசும்பு அகடு கிற-பெரிய வானின் வயிற்றைக் கிழித்துச் செல்லவும் எ - று.

ஞாழல் - புலிநகக் கொன்றை, தாழ்தல்-தங்குதல், அடிப்படுதல். உழுவை-புலி. ஒற்றை, தனி என்பன ஒப்பற்ற வென்னும் ஒருபொருளில் வந்தன. காழ் - காம்புமாம். சோழ சேரர்களின் கொடிகள் கீழ்ப்பட்டுவர என்றார்; மூவேந்தருள் ஒருவர் பிற நாட்டின்மேற் செல்லும் பொழுது ஏனையிருவர் கொடியும் உடன்வரச் செல்லுதல் மரபு. துழாவு மென்பது விகார மாயிற்று. ஏழென்னும் எண்ணுப் பெயர் ஏழு முழத்திற் காயிற்று. யானைக்கு உத்தம விலக்கணம் ஏழு முழ வுயரம் என்ப; சிந்தாமணியில்,

"ஏழுயர் போதகம்"

என்பதற்கு நச்சினார்க்கினியர் கூறிய பொருள் காண்க. (கரு)

தென்கடல் வடபா லேக்கிச் செல்வது போலத் தென்னன்
றன்கட லனிகங் கன்னித் தண்டமிழ் நாடு நீந்தி
வன்கட நெறிக்கொண் டேகி வளவர்கோ னெதிர்கொண் டாற்றும்
நன்கடன் முகம னேற்று நளிர்புன னாடு நீந்தி.

(இ-ள்.) தென்னன் - உக்கிர பாண்டியன், தென்கடல் வடபால் நோக்கிச் செல்வதுபோல - தெற்குக் கடலானது வடதிசையை நோக்கிச் செல்லுவதுபோலச் செல்லா நின்ற, தன் கடல் அனிகம் தண் தமிழ் கன்னி நாடு நீந்தி - தனது கடல் போன்ற சேனையோடு குளிர்ந்த தமிழ் வழங்கும் கன்னி நாட்டைக் கடந்து, வன்கடம் நெறிக்கொண்டு ஏகி-வலிய காட்டு வழியாற் சென்று, வளவர் கோன் எதிர்கொண்டு ஆற்றும் நன் கடன் முகமன் ஏற்று -சோழ மன்னன் எதிரேற்றுச் செய்யும் நல்ல வரிசையாகிய உபசாரங்களை ஏற்றுக்கொண்டு, நளிர் புனல் நாடு நீந்தி-குளிர்ந்த நீர் நாடாகிய அச்சோழ நாட்டைக் கடந்து எ - று.

செல்லா நின்ற அனிகத்தோடு என விரிக்க. தண்டமிழ்நாடாகிய கன்னி நாடு. கடன் என்றது வரிசையை; முகமனாகியகடனென்றுமாம். (கசு)

தண்டக நாடு தள்ளித் தெலுங்கநா டகன்று சாய்தாட்
கண்டகக் கைதை வேலிக் கருநடங் கடந்து காடுந்
தொண்டகந் துவைக்குங் குன்று நதிகளுந் துறந்து கள்வாய்
வண்டக மலர்க்கா வேலி மாளவ தேச நண்ணி.

(இ-ள்.) தண்டக நாடு தள்ளி-தொண்டை நாட்டைக் கழித்து, தெலுங்க நாடு அகன்று-தெலுங்க நாட்டினீங்கி, சாய் தாள்கண்டகம் கைதை வேலிக் கருநடம் கடந்து - வளைந்த அடியையும் முள்ளையு முடைய தாழையை வேலியாகவுடைய கருநட நாட்டைக் கடந்து, காடும் தொண்டகம் துவைக்கும் குன்றும் நதிகளும் துறந்து - காடும் தொண்டகப்பறைஒலிக்கும் மலையும்ஆறுகளுமாகிய இவற்றை நீத்து, கள்வாய் வண்டு அகம் மலர்க்காவேலி-தேன் பொருந்தியவண்டுகளைத் தம்மிடத்திலுள்ள மலர்கள் நிறைந்த சோலைகளை வேலியாகவுடைய, மாளவதேச நண்ணி - மாளவ தேயத்தைச் சேர்ந்து எ - று.

தொண்டகம் - குறிஞ்சி நிலப்பறை. கள்வாய் மலர் என்க. (கஎ)

அங்குநின் றெழுந்து தீவா யருஞ்சுர நெறிப்பட் டேகி
மங்குனின் றதிருஞ் செம்பொன் மாடநீள் விராட நண்ணிக்
கொங்குநின் றவிழுங் கானங் குன்றோரீஇ வாளை பாயத்
தெங்குநின் றிளநீர் சிந்து மத்திய தேயத் தெய்தி.

(இ-ள்.) அங்கு நின்று எழுந்து-அந்நாட்டினின்றும் புறப்பட்டு, தீவாய் அருஞ்சுரம் நெறிப்பட்டு ஏகி-தீவாய்ந்த செல்லுதற்கரியபாலை நிலத்தின் வழிப்பட்டுச் சென்று, மங்குல் நின்று அதிரும் செம்பொன் மாடம் நீள்விராடம் நண்ணி-முகில்நின்று முழங்கும் சிவந்த பொன்னு லாகிய மாடங்கள் நெருங்கிய விராட நாட்டை யடைந்து, கொங்கு நின்று அவிழும் கானம் குன்று ஓரீஇ - மகரந்தம் பொருந்தி மலரும் மலர்கள் நிறைந்த முல்லை நிலத்தையும் குறிஞ்சி நிலத்தையும் நீங்கி, வாளை பாயத் தெங்கு நின்று இளநீர் சிந்தும்-வாளை மீன் பாய்தலினால் தென்னைமரத்தினின்றும் இளநீர் சிந்தா நின்ற, மத்திய தேயத்து எய்தி - மத்திய தேசத்தை யடைந்து எ - று.

கொங்கு நின்றவிழும் என்றமையால் மலர்கொள்க. தெங்கினின்று எனற்பாலது சாரியையின்றி நின்றது; தெங்கு சிந்தும் என்னலுமாம்; இருக்கருத்து,

"வாளை தாவிழுப் புடைக்காய்த் தெங்கின்
படுபழ முதிர்க்குஞ் சூழற் பல்லவதேய வேந்தே"

என நைடதத்தில் வந்துளது. (கஅ)

அந்நெடு நாடு நீங்கி யாடலே றுயர்த்த தோன்றல்
பொன்னெடுஞ் சடையிற் றாழ்ந்து புனிதமாந் தீர்த்த காசி
நன்னெடு நகர மெய்தி நளிர்புனற் கங்கை நீந்திக்
கன்னெடு நெறிய னேக காவதங் கடந்த பின்னர்.

(இ-ள்.) அந்நெடு நாடு நீங்கி-அந்த நெடிய நாட்டினைக் கடந்து, ஆடல் ஏறு உயர்த்ததோன்றல்-வெற்றியையுடைய இடபக்கொடியை உயர்த்திய சிவபெருமானது, பொன் நெடுஞ் சடையில் தாழ்ந்து - பொன் போன்ற நீண்ட சடையினின்றும் இழிந்து, புனிதம் ஆம் தீர்த்தம்- தூய்மையாகிய கங்கையை யுடைய, காசி நல் நெடு நகரம் எய்தி- நல்ல நெடிய காசிப்பதியை அடைந்து, நளிர் புனல் கங்கை நீந்தி -

குளிர்ந்த நீரையுடைய கங்கையாற்றைக் கடந்து, கல் நெடு அனேக காவதம் நெறி கடந்த பின்னர்-கற்கள் செறிந்த நீண்ட அனேககாத வழியைக் கடந்த பின் எ - று.

ஆடல் - வெற்றி. சடையிற் சூழ்தலால் புனிதமாகிய வென்க; இவ்வரலாறு முன் உரைக்கப் பட்டது; தாழ்ந்து-தங்கி யென்றுமாம். காவத நெறியை யெனக் கூட்டுக. (௧௯)

மடங்கன்மா நாகம் யாளி வழங்கலான் மனிதர் செல்லா
இடங்கடந் தாக வைஞ்ஞூற் றிரட்டியோ சனைத்தா மெல்லைக்
கடங்கெழு குமரி கண்டங் கடந்துமற் றதுபோ லெட்டுத்
தடங்கெழு கண்டங் கொண்ட பாரத வருடந் தள்ளி.

(இ - ள்.) மடங்கல் மா நாகம் யாளி வழங்கலால்-சிங்கங்களும் பெரிய யானைகளும் யாளிகளும் இயங்குதலால், மனிதர் செல்லா இடம் கடந்து-மக்கள் வழங்குதல் இல்லாத இடங்களைக் கடந்து, ஆக ஐஞ்ஞூற்று இரட்டி யோசனை எல்லைத்து ஆம் - இவையெல்லாமாக ஆயிரம் யோசனை அளவை யுடையதாகிய, கடம்கெழு குமரி கண்டம் கடந்து-காடுகள் பொருந்திய குமரி கண்டத்தை இங்ஙனம் கடந்து, அதுபோல் எட்டுத் தடம் கெழு கண்டம் கொண்ட பாரத வருடம் தள்ளி - அது போல விரிவு பொருந்திய எட்டுக் கண்டங்களைக் கொண்ட பாரத வருடத்தைக் கழித்து எ - று.

ஆக வென்றது முற்கூறிய வெல்லாம் சேர என்றபடி. யோசனை யெல்லைத்தாம் எனப் பிரித்துக் கூட்டுக. மற்று: அசை. ஒன்பான் கண்டங்களின் பெயர்களை,

"வடபால் விதேகம் தென்பால் விதேகம்
கீழ்பால் விதேகம் மேல்பால் விதேகம்
வடபா லிரேவதம் தென்பா லிரேவதம்
வடபாற் பரதம் தென்பாற் பரதம்
மத்திம கண்டமென் றித்திற மென்ப
நாவலந் தீவின் நவகண்டப் பெயரே"

என்று திவாகரம் கூறுகின்றது. (௨0)

யாவையு மீன்ற டன்னை யீன்ற பொன் னிமயந் தன்னைத்
தாவியப் புறம்போய்ப் போகந் ததும்புகிம் புருட கண்டம்
மேவியங் கதுநீத் தேம வெற்படைந் ததுபின் னாக
ஓவியப் புறத்துத் தோன்று மரிவரு டத்தை யுற்று.

(இ-ள்.) யாவையும் ஈன்றாள் தன்னை ஈன்ற - எல்லா வுலகங்களையும் பெற்ற உமாதேவியைப் பெற்றதாகிய, பொன் இமயம் தன்னைத் தாவி அப்புறம் போய் - பொன் வடிவாகிய இமயமலையைத் தாண்டி அப்பாற்சென்று, போகம் ததும்பு கிம்புருட கண்டம் மேவி-போகம் நிரம்பிய கிம்புருட கண்டத்தை யடைந்து, அங்கு அதுநீத்து அங்கு அதனைக் கடந்து, ஏம வெற்பு அடைந்து - ஏம வரையை

அடைந்து, அது பின்னாக ஓவி-அம் மலை பின்னாக ஒழித்து, அப்புறத்துத் தோன்றும் அரி வருடத்தை உற்று-அந்தப் புறத்திற் காணப்படும் அரி வருட கண்டத்தை அடைந்து எ - று.

இமயமும் பொன்மலை யெனப்படும். ஓவி-ஒழித்தெனப் பிறவினைப் பொருட்டாய் நின்றது. (உக)

உற்றது கழிந்தப் பாற்போய் நிடதவெற் பொழிந்து சம்புப்
பொற்றருக் கனிகால் யாறு போகிளா விருத கண்டத்
துற்றனன் கண்டான் மூன்றூ ரோருங்கடு ஞான்று கூனி
வெற்றிவெஞ் சிலையாய் நின்ற வெற்பினை மலய வெற்பன்.

(இ-ள்.) உற்றது கழிந்து-அடைந்த அவ்வரி வருட கண்டத்தைக் கடந்து, அப்பால் போய் நிடத வெற்பு ஒழிந்து-அப்புறஞ் சென்று நிடத மலையினீங்கி, சம்புப் பொன் தரு கனிகால் யாறு போகு நாவல் மரத்தின் - பொன்போலும் கனிகள் சிந்தும் சாருகிய ஆறு செல்லா நின்ற, இளாவிருத கண்டத்து-இளாவிருத கண்டத்தை, மலய வெற்பன்-பொதியின் மலையை யுடையவனாகிய உக்கிர பாண்டியன், உற்றனன்-அடைந்து, மூன்று ஊர் ஒருங்கு அடுஞான்று-திரிபுரங்களையும் ஒரு சேர அழிக்குங் காலத்தில், கூனி-வளைந்து, வெற்றி வெஞ் சிலையாய் நின்ற வெற்பினைக் கண்டான்-வெற்றியை யுடைய வெவ்விய வில்லாக நின்ற மேருமலையைக் கண்டான் எ - று.

உற்றது:வினையாலணையும் பெயர். சம்புத்தருப் பொற்கனி என மாறுக. மேல் பதினாறுஞ் செய்யுளிலுள்ள தென்னன் என்பதனோடு மலய வெற்பன் என்பதனையும் கூட்டி, வெற்பினைக் கண்டான் என முடிக்க; அச்செய்யுள் முதலாகக் கூறப்பட்ட வினையெச்சங்கள் இம் முற்றுவினை கொண்டு முடியும். இங்கே கூறப்பட்ட கண்டங்கள் முதலியவற்றைக் கந்தபுராணத்து அண்ட கோசப்படலம் முதலியவற்றானும் அறிக. (உஉ)

வெம்படைமறவர் சேனை வெள்ளநீத் தேகித் தென்பாற்
சம்புவின் கனியின் சாறு வலம்படத் தழுவி யோடும்
அம்பொனீ ராறு மாற்றி னருகுபொன் மயமாய் நிற்கும்
பைம்புனங் கானு* நோக்கி வளைந்துதேன் பால்வந் தெய்தா.

(இ-ள்.) வெம்படை மறவர் சேனை வெள்ளம் நீத்து ஏகி-கொடிய படையை யேந்திய வீரர்களை யுடைய சேனை வெள்ளத்தை நீக்கித் (தனியே) சென்று, தென் பால் சம்புவின் கனியின் சாறு-தென் புறத்தில் நின்ற நாவற் கனியின் சாறானது, வலம் படத் தழுவி ஓடும் அம்பொன் நீர் ஆறும்-வலமாகத் தழுவி ஓடாநின்ற அழகிய பொன் மயமாகிய நீர் நிறைந்த ஆற்றையும், ஆற்றின் அருகு பொன் மயமாய் நிற்கும்-அந் நதியின் அருகில் பொன்மயமாய் நிற்கும், பைம்புனம் கானும் நோக்கி-பசிய கொல்லைகளையுங் காட்டையும் பார்த்து, வளைந்து-சூழ்ந்து, தென்பால் வந்து எய்தா-அந்நாவல் மரம் நின்ற தென்பக்கத்தை வந்தடைந்து எ-று.

(பா-ம்.) * கான நோக்கி.

சேனை வெள்ளத்தை நிறுத்தித் தனியே சென்றென்க. சம்புவின்: வடசொல் லாகலின் உகரங் கெடாது நின்றது. புனத்தையும் கானையும் என விரிக்க. (உரு)

அவ்வரை யரசை நோக்கி வரைகளுக் கரசே யெந்தை
கைவரி சிலையே பாரின் களைகணே யளவில் வானந்
தைவரு சுடருங் கோளு நாள்களுந் தழுவிச் சூழுந்
தெய்வத வரையே மேலைத் தேவரா லயமே யென்னு.

(இ-ள்.) அவ்வரை அரசை நோக்கி - அம் மேருமலைத் தலைவனை நோக்கி, வரைகளுக்கு அரசே, மலைகளனைத்திற்கும் வேந்தே, எந்தை கைவரி சிலையே - எம் தந்தையாகிய சிவபெருமானது திருக்கரத்திலுள்ள கட்டமைந்த வில்லே, பாரின் களைகணே-நிலவுலகின் ஆதாரமே, அளவு இல் வானம் தைவரு - அளவிறந்த வானை அளாவி வருகின்ற, சுடரும் - சூரிய சந்திரரும், கோளும்- நாள்களும் - ஏனைக் கோள்களும் - நாண் மீன்களும், தழுவிச் சூழுந் தெய்வதவரையே - பொருந்திச் சூழ்ந்து வருகின்ற தெய்வத்தன்மையுடைய மலையே, மேலைத் தேவர் ஆலயமே என்னு - வானுலகிலுள்ள தேவர் வசிக்குங் கோயிலே என்று எ - று.

புவியைத் தாங்குதலின் 'பாரின் களைகண்' என்றார்; பூதரம் என்னும் பெயரும் நோக்குக. சுடரெனப் பிரித்தமையால் கோள் என்றது ஞாயிறு திங்கள் ஒழிந்தவற்றை. இருபத்தேழு நாண் மீன்களும் ஏனை விண்மீன்களும் 'நாள்கள்' எனப்பட்டன. கோளும் நாளும் முதலியன சூழ்ந்து வருதலையும், மேருவானது தேவர்களுக்கு இருப்பிடமாதலையும் கந்தபுராணம் முதலியவற்றா னறிக. (உச)

மாணிக்க மிமைக்கும் பூணுன் விளித்தலும் வரைக்கு வேந்தன்
பாணித்து வரவு தாழ்ப்பப் பாகசா தனனை வென்றோன்
நாணித்தன் சினமு மேரு நகைவரைச் செருக்கு மாறச்
சேணுற்ற சிகரந் தன்னிற் சேண்டினு லடித்து நின்றான்.

(இ-ள்.) மாணிக்கம் இமைக்கும் பூணுன் விளித்தலும்-மாணிக்கங்கள் ஒளி வீசும் அணியை யணிந்த உக்கிரவழுதி இவ்வாறு அழைத்தலும், வரைக்கு வேந்தன் வரவு பாணித்துத் தாழ்ப்ப-அம் மலையரசனது வருகை காலம் நீட்டித்துத் தாழ்த்தமையால், பாகசாதனனை வென்றோன்-இந்திரனை வென்ற அப் பாண்டியன், நாணி-நாணமுற்று, தன் சினமும் நகை மேருவரைச் செருக்கும் மாற-தன் வெகுளியும் விளங்குகின்ற மேரு மலையின் தருக்கும் நீங்குமாறு, சேண் உற்ற சிகரம் தன்னில் செண்டினுல் அடித்து நின்றான் - வானை யளாவிய (அம் மலையின்) முடியில் செண்டினுற் புடைத்து நின்றான் எ-று.

பாணித்தலும் தாழ்த்தலும் ஒரு பொருளன. வரவு தாழ்ப்ப என்பதை ஒரு சொல்லாகக் கொண்டு, வேந்தன் தாழ்க்க என்னலுமாம். தான் புகழ்ந்துரைத்து அழைக்கவும் வந்திலாமையால் நாணும் சினமும் உளவாயின. (உரு)

அடித்தலு மசையா மேரு வசைந்துபோற் பந்து போலத்
துடித்தது சிகர பந்தி சுரர்பயில் மாடப் பந்தி*
வெடித்தன தருண பானு மண்டலம் விண்டு தூளாய்ப்
படித்தலை தெறித்தா லென்னப் பன்மணி யுதிர்ந்த வன்றே.

(இ - ள்.) அடித்தலும் அசையாமேரு அசைந்து பொன் பந்து போலத்துடித்தது-(அங்ஙனம்) அடித்த வளவில் ஒருகாலும் சலியாத மேருமலையானது சலித்துப் பொன்னாற் செய்த பந்து (துடித்தாற்) போலத் துடித்தது; சிகரபந்தி சுரர் பயில் மாடப்பந்தி வெடித்தன - முடிவரிசைகளும் தேவர்கள் வசிக்கும் மாடவரிசைகளும் வெடித்தன; தருணபானு மண்டலம் விண்டு தூளாய்ப் படித்தலை தெறித்தால் என்ன-இளஞாயிற்றின் மண்டலம் பிளந்து தூளாகிப் புவியிற் சிந்தினாற்போல, பல் மணி உதிர்ந்த - பல மணிகளும் சிதறின எ - று.

அசைவின்மையால் மலை அசலம் எனப்படும்; ஏனை மலைகள் அசையினும் அசையாத வென்க; நிலத்தில் அடித்த பந்து துள்ளுதல்போல. பொன் வரையாகலின் பொற்பந்துபோல வென்றார். தருணம் - இளமை. அன்று, : அசைகள். (உசு)

புடைவரைக் குலங்க ளேட்டும் புறந்தழீஇக் கிடக்குஞ் செம்பொன்
அடைகலோர் நான்கு நான்கு கிடங்கரு மலர்ந்த நான்கு
தடமலர்ப் பொழிலு நான்கு தருக்களுஞ் சலித்த வம்மா
உடையவ னிடையூ றுற்று லடுத்தவர்க் குவகை யுண்டோ.

(இ - ள்.) புடைவரைக் குலங்கள் எட்டும்-(மேருவின்) பக்கத்திற் சூழ்ந்த குலமலைகள் எட்டும், புறம் தழீஇ கிடக்கும் செம்பொன் அடைகல் ஓர் நான்கும்-நான்கு புறங்களிலும் தழுவிக் கிடக்கும் செம்பொன் வடிவாகிய பக்க மலைகள் நான்கும், நான்கு கிடங்கரும்-கிடங்குகள் நான்கும், அலர்ந்த நான்கு தடமலர்ப் பொழிலும் - மலர்ந்த பெரிய பூம்பொழில் நான்கும், நான்கு தருக்களும் சலித்த - மரங்கள் நான்கும் நடுங்கின; உடையவன் இடையூறு உற்றால்-தலைவன் துன்பமுற்றானாயின், அடுத்தவர்க்கு உவகை உண்டோ - (அவனைச்) சார்ந்தவர்களுக்கு மகிழ்ச்சி உண்டாகுமோ (ஆகாது) எ - று.

அடைகல் - ஆதாரமாய் அடுத்த கல். கிடங்கர் : ஈற்றுப் போலி. அம்மா: அசை. வரைகள் எட்டு-தெற்கில் நிடதம், ஏமகூடம், இமயம். வடக்கில் நீலம், சுவேதம், சிருங்கம்; மேற்கில் கந்தமாதனம்; கிழக்கில் மாலியவான். அடைகல் நான்கு-கிழக்கில் மந்தரம், தெற்கில் கந்தமாதனம், மேற்கில் விபுலம், வடக்கில் பார்சுவம். கிடங்கர் நான்கு-கிழக்கில் அருணவோடை, மேற்கில் அசிதோத வோடை, தெற்கில் மானதவோடை, வடக்கில் மாமடு வோடை. பொழில் நான்கு - கிழக்கில் சயித்திரதம், தெற்கில் நந்தனம், மேற்கில் வைப்பிரசம், வடக்கில் திருதாக்கியம். தருநான்கு-கிழக்கில் கடம்பு, தெற்கில் நாவல், மேற்கில் அரசு, வடக்கில் ஆல். இவை யெல்லாம் கந்தபுராணத்து அண்டகோசப் படலத்திற் கூறப்பட்டுள்ளன. இச் செய்யுள் வேற்றுப்பொருள் வைப்பணி. (உஎ)

---

(பா - ம்.) * மாடபந்தி.

புடைத்தபின் மேருத் தெய்வம்
புடைக்குல வரையெட் டென்னப்
படைத்தவெண் டோளு நான்கு
முடியுமேற் படுவெண் சோதி
உடைத்தனிக் குடையுங் கொண்ட
வுருவினே டெழுந்து நாணிக்
கிடைத்தது கருணை வேந்தன்
கிளர்சினந் தணிந்து நோக்கா.

(இ - ள்.) புடைத்தபின் மேருத் தெய்வம்-(அங்ஙனம்) அடித்த பின்பு மேருமலைத் தெய்வமானது, புடைக்குல வரை எட்டு என்ன - பக்கலிலுள்ள குலவரைகள் எட்டினையும் போல, படைத்த எண் தோளும்-கொண்ட எட்டுத் தோள்களும். நான்கு முடியும் - நான்கு தலைகளும், மேல்படு வெண் சோதி உடைத்தனிக் குடையும் - மேலே கவிக்கும் வெள்ளிய ஒளியையுடைய ஒப்பற்ற குடையும் ஆகிய இவைகளை, கொண்ட உருவினேடு எழுந்து நாணிக்கிடைத்தது - கொண்ட வடிவத்தோடு எழுந்து வெள்கி எதிர்ப்பட்டது; கருணை வேந்தன் - அருளையுடைய உக்கிர பாண்டிய வேந்தன், கிளர் சினம் தணிந்து நோக்கா - மிக்கு எழுந்த சினந் தணிந்து நோக்கி எ - று.

மேருத் தெய்வம் - மேருவாகிய தெய்வம், மேருவின் அதி தெய்வம். கிடைத்தது - அடுத்தது. (உ௮)

இத்தனை வரவு தாழ்த்த தென்னென மேருத் தெய்வம்
வித்தக நம்பி கேட்டி மீனெடுங் கண்ணி யோடும்
பைத்தலை யரவும் பூண்ட பரனையிப் படிவங் கொண்டு
நித்தலும் போகிப் போகி வழிபடு நியமம் பூண்டேன்.

(இ - ள்.) இத்தனை வரவு தாழ்த்தது என் என-இதுவரை நினது வரவு தாழ்த்ததற்குக் காரணம் யாதென்று வினவ, மேருத் தெய்வம்-அம் மேருத் தெய்வமானது, வித்தக நம்பி கேட்டி-சதுரப்பா டுடைய நம்பியே கேட்பாயாக, மீன் நெடுங் கண்ணியோடும் பைத்தலை அரவம் பூண்ட பரனை-அங்கயற்கண் ணம்மையோடும் படத்தையுடைய தலையினை யுடைய பாம்பை அணிந்த சோமசுந்தரக் கடவுளை, இ படிவம் கொண்டு நித்தலும் போகிப் போகி வழிபடும் நியமம் பூண்டேன் - இந்த வடிவத்தோடும் நாடோறும் சென்று சென்று வழிபடும் நியதியைக் கொண்டிருந்தேன் எ - று.

தாழ்த்தது என் - தாழ்த்தமைக்குக் காரணம் என். வித்தகம் - சதுரப்பாடு.

"வித்தகர்க் கல்லா லரிது"

என்பதற்குப் பரிமேலழகர் கூறிய உரையை நோக்குக. அடுக்கு இடை விடாமைப் பொருட்டு. (உ௯)

இன்றுகேட் டிலேயோ வைய* வேந்திழை யொருத்தி காமந்
துன்றுமா கடலின் மோகச் சுழித்தலைப் பட்டு வெள்ளி
மன்றுளா டிய பொற் பாதம் வழிபடன் மறந்து தாழ்த்து†
நின்றுளே னினைய தீங்கி னிமித்தின லடியும் பட்டேன்.

(இ - ள்.) ஐய இன்று கேட்டிலையோ - ஐயனே இன்று நடந்த தொரு செய்தியைக் கேட்பாயாக, ஏந்திழை ஒருத்தி காமம் துன்று மாகடலில் - பெண் ஒருத்தியின் காமமாகிய பெரிய கடலிலுள்ள, மோகச் சுழித்தலைப்பட்டு - மோகமாகிய சுழியில் ஆழ்ந்து, வெள்ளி மன்றுள் ஆடிய பொன்பாதம் வழிபடல் மறந்து - வெள்ளியம்பலத்தில் ஆடியருளும் பொன் போலும் திருவடிகளை வணங்குதலை மறந்து, தாழ்த்து நின்றுளேன் - தாமதித்து நின்றேன், இனைய தீங்கின் நிமித்தினுல் அடியும் பட்டேன் - இந்தத் தீங்கு காரணத்தால் அடியும்பட்டேன் எ - று.

கேட்டிலையோ என்றது கேட்பாயாக வென்னும் குறிப்பிற்று. ஏந்திழை யென்பது அன்மொழித்தொகைப் பெயராய்ப் பின் ஒருத்தி யென்பதனேடுந் தொக்கது; ஏந்திய அணிகளையுடைய ஒரு பெண் எனலுமாம். சுழித்தலை, தலை: ஏழனுருபு; பட்டு - அகப்பட்டு, ஆழ்ந்து. நிமித்தத்தினுல் என்பது நிமித்தினுல் என விகாரமாயிற்று. தீங்கின் நிமித்தம் - தீங்காகிய நிமித்தம். (௩௦)

திருவடி பிழைத்த தீங்கு தீர்த்தனை யிதனி லையன்
தருவதோ ருறுதி தானுந் தக்கதோர் கைம்மா றென்னுல்
வருவது முண்டாங் கொல்லோ மற்றது நிற்க மன்றற்
பருவரை மார்ப வந்த பரிசென்கொல் பகர்தி யென்ன.

(இ - ள்.) திருவடி பிழைத்த தீங்கு தீர்த்தனை - சிவபெருமான் திருவடிக்குத் தவறுசெய்த தீமையை நீக்கினை, இதனில் ஐயன் தருவது ஓர் உறுதி தானும் - இதனிலும் ஐயனே நீ செய்வதொரு நன்மையும், தக்கது ஓர் கைம்மாறு என்னுல் வருவதும் - (அதற்குத்) தகுதியாகிய ஒரு கைம்மாறு என்னுற் கிடைப்பதும், உண்டாம் கொல் - உண்டாமோ (இல்லை), அது நிற்க - அஃதிருக்க, மன்றல் பருவரை மார்ப - மாலையை யணிந்த பருத்த மலை போலும் மார்பினையுடையவனே, வந்த பரிசு என் பகர்தி என்ன - நீ வந்த காரணம் யாது கூறுவாயாக என்ன எ - று.

எல்லாப் பிழையினும் திருவடிக்குச் செய்யும் பிழை பெரிதென்பது,

"அடியேன் பிழைப்ப னுகிலுந் திருவடிப் பிழையேன்"

என நம்பியாரூரர் கூறுதலா னறிக. தீர்த்தனை - ஒறுத்தலால் தீர்த்தாய்; தீர்க்க வொண்ணுத தோர் தீங்கினைத் தீர்த்தருளினை ஆதலின் இதனினும் தருவதோர் உறுதியுண்டோ என்றவாறு. கைம்மாறு - எதிர்நன்றி. மன்றல் - மணம்; மாலைக்காயிற்று. பரிசு - விதம்; காரணத்தை யுணர்த்திற்று. தான், கொல், மற்று என்பன அசைகள். (௩௧)

---

(பா - ம்) * ஐயா. † தாழ்ந்து.

மன்னவன் வெறுக்கை வேண்டி வந்தன னென்ரு னைய
உன்னது புலத்தோர்க் கேற்ப வுரைபடு மாற்ற தாய
பொன்னவிர் தேமா நீழற் புதைபடக் கிடக்குஞ் செம்பொன்
என்னவங் கையாற் சுட்டிக் காட்டிய தெரிபொற் குன்றம்.

(இ - ள்.) மன்னவன் வெறுக்கை வேண்டி வந்தனன் என்ருன் - (அதற்கு) உக்கிரபாண்டியன் நிதிபெறுதலை விரும்பிவந்தேன் என்ருன்; ஐய-ஐயனே, உன்னது புலத்தோர்க்கு ஏற்ப உரை படு மாற்றது ஆய செம்பொன் - உன்னுடைய நாட்டிலுள்ளோர்க்கு இசைய உரைக்கப் படும் மாற்றினை யுடையதாகிய செம் பொன், பொன் அவிர் தேமா நீழல் புதைபடக் கிடக்கும்-பொன் போல விளங்கும் தளிர்களையுடைய இத்தேமாமரத்தின் நிழலின்கீழ் (ஓர் அறையில் பாறையால்) மூடப் பட்டுக்கிடக்கும், என்ன - என்று கூறி, எரி பொன் குன்றம் அங்கை யால் சுட்டிக் காட்டியது - விளங்கும் மேருமலைத்தெய்வம் அழகிய கைவிரலால் அவ்விடத்தைச் சுட்டிக் காட்டியது எ-று.

உன்னது: விரித்தல். உரைபடும் - உரைத்துக் காட்டப்படும். மாற்றதாய செம்பொன் எனக் கூட்டுக. மாற்றுமிக்க பொன்னும் இங்குளது; அஃது நினக்கு வேண்டா என்று குறிப்பிட்டவாருயிற்று. என்ன - என்றுகூறி; கூறி யென்பது விருவிக்கப்பட்டது. (௩உ)

மின்னகு வேலான் முந்நீர் வேலையை வணக்கங் கண்டோன்
பொன்னறை மருங்கிற் போகிப் பொத்திய பாறை நீக்கித்
தன்னவா வளவிற் ருய தபனிய முகந்து மூடிப்
பின்னதுந் தன்ன தாகப் பெயரிலச் சினையுந் தீட்டா.

(இ - ள்.) மின்நகு வேலால் முந்நீர் வேலையை வணக்கம் கண்டோன்-மின்போல விளங்கும் வேற்படையால்மூன்று நீர்களையுடைய கடலைத் தனதடிக்கீழ்ப் படுத்திய உக்கிரவழுதி; பொன் அறை மருங்கில் போகி-நிதியறையின் அருகிற்சென்று, பொத்திய பாறை நீக்கி-மூடிய பாறையை நீக்கி, தன் அவா அளவிற்று ஆய தபனியம் முகந்து-தனது விருப்பின் அளவினதாய பொன்னை அள்ளிக் கொண்டு, மூடி-அப்பாறையை மீண்டும் மூடி, பின்னதும் தன்னதாகப் பெயர் இலச்சினையும் தீட்டா - எஞ்சிய பொன்னையும் தன்னுடையதாக (வைத்துத்) தன் பெயர் முத்திரையும் அப்பாறைமேல் எழுதி எ - று.

வணக்கங் கண்டோன் - வணங்குவித்தோன். பொத்திய - மூடிய. தன்னதாக-தனக்குரியதாக வைத்து. பெயராகிய இலச்சினை யென்க. பெயரும் இலச்சினையுமென்றும் ஆம்; இதற்குச் சேல் இலச்சினை யென்க. (௩௩)

மின்றிகழ் மணிப்பூண் மார்பன் மீண்டுதன் ருனை யோடுந்
தென்றிசை நோக்கிப் பாகன் செலுத்தமான் றடந்தே ரூர்ந்து
பொன்றிகழ் வரையும் போக பூமியும் பிறவு நீத்து
நன்றிகொண் மனிதர் வைப்பி னண்ணுவா னண்ணு மெல்லை.

(இ - ள்.) மின் திகழ் மணிப்பூண் மார்பன்-மின்போல விளங்கும் மணிகள் குயிற்றிய அணிகளையுடையமார்பனுகிய உக்கிரபாண்டியன்,

மீண்டு தன் தானையோடும்-திரும்பித் தன் சேனையோடும், தென் திசை நோக்கி-தெற்குத்திசையை நோக்கி, மான் தடம்தேர் பாகன்செலுத்த ஊர்ந்து-குதிரை பூண்ட பெரிய தேரினைப் பாகன் செலுத்தாநிற்க ஏறிச்சென்று, பொன் திகழ் வரையும் போக பூமியும் பிறவும் நீத்து-விளங்கும் பொன் மலையாகிய மேருவையும் போக பூமியையும் மற்றுள்ள நாடுகளையும் துறந்து, நன்றி கொள் மனிதர் வைப்பில் நண்ணுவான்-நன்மையைக் கொண்ட மக்கள் வசிக்கும் நாட்டின்கண் வருவானாயினன்; நணுகும் எல்லை-அங்ஙனம் வரும் பொழுது எ-று.

மின்-ஒளியுமாம்.	(௩௪)

மாத்திமர் விராட மன்னர் மாளவர் தெலுங்க தேயப்
பார்த்திபர் பிறருந் தத்தம் பதிதோறும் வரவுநோக்கித்
தேர்த்திக ழனிகத் தோடுஞ் சென்றெதிர் முகமன் செய்யத்*
தார்த்திரு மார்பன் கன்னித் தண்டமிழ் நாடு சார்ந்தான்.

(இ-ள்.) மாத்திமர் விராட மன்னர் மாளவர் தெலுங்க தேயப் பார்த்திபர் பிறரும்-மத்திம நாட்டு மன்னரும் விராடநாட்டு மன்னரும் மாளவநாட்டு மன்னரும் தெலுங்க நாட்டு மன்னரும் ஏனை மன்னர்களும், தத்தம் பதிதொறும்-தம் தம் நகரங்கள் தோறும், வரவு நோக்கி - (தனது) வருகையை எதிர்நோக்கி, தேர்திகழ் அனிகத்தோடும் சென்று எதிர் முகமன் செய்ய-தேருடன் விளங்கும் சேனைகளோடும் சென்று எதிர்கொண்டு உபசாரஞ் செய்ய (அதனையேற்று), தார் திருமார்பன்-மாலை யணிந்த அழகிய மார்பினையுடைய உக்கிர குமாரன், தண் தமிழ் கன்னி நாடு சார்ந்தான்-தண்ணிய தமிழ் (வழங்கும்) பாண்டி நாட்டை அடைந்தான் எ-று.

மாத்திமர் முதலியவற்றில் எண்ணும்மை விரிக்க. எதிர்-எதிர் கொண்டென்க. கன்னித் தமிழ்-அழியாத தமிழ், இளமை மாறாத தமிழ் எனத் தமிழுக்கு அடையாக்கலுமாம்.	(௩௫)

கன்னிப்பொன் னெயில்சூழ் செம்பொற் கடிநகர்க் கணிய ணுகிப்
பொன்னிற்செய் திழைத்த நீள்கோ புரத்தினைக் கண்டு தாழ
உன்னித்தே ரிழிந்தெட் டோடைந் துறுப்பினாற் பணிந்தெழுந்து
வன்னிச் செஞ்சுடர்க்க ணேற்றி மன்னவன் மதுரை சார்ந்தான்.

(இ-ள்.) கன்னிப் பொன் எயில் சூழ் செம் பொன் கடி நகர்க்கு அணியணுகி-அழியாத பொன்னாலாகிய மதில்சூழ்ந்த செம்பொன் நிறைந்த காவலையுடைய மதுரைப்பதிக்கு அணிமையணுகி, பொன்னிற் செய்து இழைத்த நீள் கோபுரத்தினைக் கண்டு தாழ உன்னி-பொன்னாற் செய்து மணிகள் இழைத்த நீண்ட கோபுரத்தைக்கண்டு வணங்கக் கருதி, தேர் இழிந்து-தேரினின்றும் இறங்கி, எட்டோடு ஐந்து உறுப்பினால் பணிந்து எழுந்து-எட்டு உறுப்பினாலும் ஐந்து உறுப்பினாலும் வணங்கி எழுந்து, நெற்றி செஞ்சுடர் வன்னி கண் மன்னவன் மதுரை சார்ந்தான்-நெற்றியில் செவ்வொளி பொருந்திய அழற்கண்ணை யுடைய சோமசுந்தரக் கடவுளின் மதுரையை அடைந்தான் எ-று.

---

(பா - ம்.) * முகமன் செப்பத்.

செய்திழைத்த: ஒருபொருள் குறித்தனவுமாம். எட்டுறுப்பும் ஐந்துறுப்பும் தோயப் பணிந்தென்க. (கசு)

அறத்துறை யந்த ணாளர் துறந்தவ ரரன்றாள் பற்றிப்
புறத்துறை யகன்ற சைவ பூதியர் புனிதன் கோயிற்
றிறத்துறை யகத்துத் தொண்டர் திரண்டெதிர் கொள்ள முத்தின்
னிறத்துறை வையை நீத்து நெடுமதில் வாயில் புக்கான்.

(இ-ள்.) அறத்துறை அந்தணாளர்-அறநெறியிற் பிழையாத அந்தணர்களும், துறந்தவர்-துறவிகளும், அரன் தாள் பற்றி புறத்துறை அகன்ற சைவ பூதியர்-சிவபிரான் திருவடியைப் பற்றிக் கொண்டு புறமாகிய நெறிகளின் நீங்கிய சைவப்பெருவாழ்வினரும், புனிதன் கோயில் திறத்துறை அகத்துத் தொண்டர்-சோமசுந்தரக் கடவுளின் திருக்கோயிலிற் பூசனை வகைகளை நடத்தும் அகத் தொண்டர்களும், திரண்டு எதிர் கொள்ள-ஒருங்கு கூடி எதிர் கொள்ள, முத்தின் நிறத்துறை வையை நீத்து நெடுமதில் வாயில் புக்கான்-முத்துக்களின் ஒளி விளங்கும் நீர்த்துறைகளை யுடைய வையை யாற்றினைக் கடந்து நீண்ட மதில் வாயிலிற் புகுந்தான். எ-று.

புறத்துறை-பாவநெறி;

"முதல்வன் பாதமே
பற்றா நின்றாரைப் பற்றா பாவமே"

என்னும் தமிழ்த் திருமறையுங் காண்க. பூதி-செல்வம். திறம்-நித்தம் நைமித்திகம் முதலியன. (கஎ)

கொங்கலர் கோதை மாதர் குங்குமம் பனிப்பச் சிந்தும்
மங்கல மறுகி னேகி மறைகள்சூழ் கோயி லெய்தித்
தங்கணா யகனைச் சூழ்ந்து தாழ்ந்தெழுந் தேத்திப் போந்து
திங்களூர்* குடுமிச் செல்வத் திருமணிக் கோயில் புக்கான்.

(இ-ள்.) கொங்கு அலர் கோதை மாதர்-மணம் பரந்த கூந்தலை யுடைய மகளிர்; குங்குமம் பனிப்பச் சிந்தும் மங்கல மறுகின் ஏகி-குங்கும நீரைக் குளிரச் சிந்திய மங்கல நிறைந்த வீதியிற் சென்று, மறைகள் சூழ் கோயில் எய்தி-வேத ஒலி சூழ்ந்த திருக்கோயிலை யடைந்து, தங்கள் நாயகனைச் சூழ்ந்து-தங்கள் தலைவனாகிய சோம சுந்தரக் கடவுளை வலம்வந்து, தாழ்ந்து எழுந்து ஏத்தி-வணங்கி எழுந்து துதித்து, போந்து-சென்று திங்கள் ஊர் குடுமிச் செல்வத் திருமணிக் கோயில் புக்கான்-சந்திரன் தவழுஞ் சிகரத்தை யுடைய செல்வ மிக்க பொலிவையுடைய மணிகள் இழைத்த (தனது) கோயிலை யடைந்தான் எ-று.

கோதை-மாலையுமாம். (கஅ)

(பா-ம்.) * திங்கள் சூழ்.

போன்மலைக் கடவு ளீந்த புண்ணிய நிதியை யந்த
நன்மலை மானக் கூப்பி நல்கிப்பல் குடியு மோம்பித்
தேன்மலைக் கிழவன் றெய்வந் தென்புல வாண ரொக்கல்
தன்மனை விருந்து காத்துத் தருக்கின னிருக்கு நாளில்.

(இ - ள்.) பொன்மலைக் கடவுள் ஈந்த புண்ணிய நிதியை - (பின்பு) மேருமலைத் தெய்வம் கொடுத்த அத்தூய்மையாகிய பொருளை, அந்த நல்மலை மானக் கூப்பி - அந்த நல்ல மேருமலையைப் போலக் குவித்து, பல் குடியும் நல்கி ஓம்பி - பல குடிகளுக்கும் கொடுத்துப் பாதுகாத்து, தென்மலைக் கிழவன் - பொதியின் மலைக்கு உரியவனாகிய உக்கிரவழுதி, தெய்வம் தென்புல வாணர் ஒக்கல் தன்மனை விருந்து காத்து - தெய்வத்தையும் தென்புலத்தாரையும் சுற்றத்தாரையும் தனது இல்லில் வந்த விருந்தினரையும் ஓம்பி, தருக்கினன் இருக்கும் நாளில் - களிப்புடன் இருக்கும் காலத்தில் எ - று.

புண்ணிய நிதி-குற்றமற்ற நிதி; அறஞ்செய்தற் குரிய நிதியுமாம். தென்புல வாணர் - பிதிரர்; வாழ்நர், வாணர் என மருவிற்று.

"தென்புலத்தார் தெய்வம் விருந்தொக்கல் தானென்றாங்
கைம்புலத்தா றோம்பல் தலை"

என்னும் குறளிற் கூறியவற்றுள் தன்னை யொழித்துக் கூறினார்; தான் என்றது தன் மனைவி மக்கள் முதலாயினாரை யெனக் கருத்துக் கொண்டு 'தன் மனை' எனக் கூறினா ரென்னலுமாம். ஆன் : ஒடுவின் பொருட்டு. (௩௯)

ஐவினை நடாத்துமீச னாணையா னடக்குங் கோளுஞ்
செய்வினைத் திரிவு மாறத் தென்னனா டெங்கு மாரி
பெய்வினை யுடைய தாகிப் பெருவளம் பகிர்ந்து நல்க
உய்வினை யுடைய வாகி யுயிரெலாந் தழைத்த வன்றே.

(இ - ள்.) ஐவினை நடாத்தும் ஈசன் ஆணையால் நடக்கும் கோளும்-ஐந்து தொழில்களையும் நடாத்தும் சிவபிரான் ஆணையினால் நடவாநின்ற கோள்களும், செய்வினைத் திரிவு மாற-செயற்கையாகிய நிலைமாறுதற் றொழிலினின்றும் நீங்குதலால், தென்னன் நாடு எங்கும்-பாண்டியனது நாடு முழுதும், மாரி பெய்வினை உடையதாகி - மழையானது பொழியுந் தொழிலை யுடையதாகி, பெருவளம் பகிர்ந்து நல்க - பெரிய வளத்தைப் பங்கிட்டளிக்க, உயிர் எலாம் உய்வினை உடையவாகித் தழைத்த - எல்லா வுயிர்களும் (பசியினீங்கிப்) பிழைத்தலுடையனவாய்ப் பல்கின எ - று.

ஐவினை - படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் என்பன. செய் - செயற்கையை யுணர்த்திற்று; முன்செய்த என்றுமாம். திரிவு வினையென மாறுக. கோளும் உயிர்களின் வினையும் திரிவுமாற என்றுரைத்தலுமாம். பெய்வினை - பெய்தலை யென்றுமாம்; இதற்குப் பெய்வு தொழிற்பெயர், இன் : சாரியை. பகிர்ந்து நல்க - எவ்வுயிர்க்கும் நல்க வென்னுங் குறிப்பிற்று. தழைத்தல் - பெருகல். அன்று, ஏ : அசைகள். (௪௦)

[எழுசீரடி யாசிரிய விருத்தம்]

புவனியிம் முறையாற் புரந்தளித் தாரம்
பூண்டபாண் டியன்றிரு மகனுக்
கவனியே ழறிய வீரபாண் டியனென்
றணிமுடி கவித்தர சளித்து
நவநிர திசய பூரண வின்ப
ஞானநோக் கருளிய மதுரைச்
சிவனடி நிழலிற் பிளப்பறப் பழைய
தேசோடு நிறைந்துவீற் றிருந்தான்.

(இ - ள்.) ஆரம்பூண்ட பாண்டியன் - ஆரந்தாங்கு பாண்டியனென்னும் உக்கிரவழுதி, புவனி இம்முறையால் புரந்து அளித்து - நிலவுலகை இம்முறையினால் நன்றாகப் பாதுகாத்து, திருமகனுக்கு - தன் திருமைந்தனுக்கு, அவனி ஏழ் அறிய - ஏழுலகும் அறியுமாறு, வீர பாண்டியன் என்று - வீரபாண்டியன் என்று கூறி, அணிமுடி கவித்து - அழகிய முடிசூட்டி, அரசு அளித்து - அரசுரிமையைத் தந்து, நவநிரதிசய பூரண இன்பம் ஞான நோக்கு அருளிய - புதுமையாகிய ஒப்பற்ற நிறைந்த இன்பத்திற் கேதுவாகிய ஞான நாட்டத்தை அருளாநின்ற, மதுரைச்சிவன் அடி நிழலில் - மதுரைப் பதியில் எழுந்தருளி யிருக்கும் சோமசுந்தரக் கடவுளின் திருவடி நீழலில், பிளப்பு அற பழைய தேசொடு நிறைந்து வீற்றிருந்தான் - இரண்டறப் பழைய ஒளியொடு நிறைந்து வீற்றிருந்தான் எ - று.

புரந்து அளித்து, ஒரு பொருளன. ஏழும் என்னும் உம்மை தொக்கது. அருளிய - அருளாநின்ற வென்க; அருளும்பொருட்டென்பாரும் உளர். சிவபெருமானது நுதற் கண்ணினின்றும் தோன்றிய முருகவேளே உக்கிரவன்மனாக அவதரித்தானாகலின் 'பழைய தேசொடு' என்றார். (௬௪)

ஆகச்செய்யுள் - ௧௧௫௧.

---

## கசு. வேதத்துக்குப் பொருளருளிச்செய்த படலம்

[எழுசீரடி யாசிரிய விருத்தம்]

உலம்பொரு தடந்தோ ளுக்கிரச் செழிய
னுயரிய் மேருமால் வரையைப்
பொலம்புரி சேண்டாற் புடைத்துவைப் பெடுத்துப்
போந்தரு ளடைந்தவா புகன்றும்
வலம்படு திணிதோள் வீரபாண் டியன்கோல்
வழங்குநாண் மதுரையெம் பெருமான்
புலம்பொரு முனிவர் தேறநால் வேதப்
பொருளுணர்த் தியதிறம் புகல்வாம்.

(இ-ள்.) உலம் பொருதடம்தோள் உக்கிரச்செழியன்-திரண்ட கல்லுப்போலும் பெரிய தோளையுடைய உக்கிரவழுதி, உயரிய மேரு மால்வரையை-உயர்ந்த மேரு என்னும் பெரிய மலையை. பொலம்புரி செண்டால் புடைத்து - பொன்னாற் செய்த செண்டினால் அடித்து, வைப்பு எடுத்துப்போந்து-நிதியை எடுத்துவந்து, அருள் அடைந்தவா புகன்றும்- திருவருளைப்பெற்ற திருவிளையாடலைக் கூறினும், வலம்படு திணிதோள் வீர பாண்டியன் - (இனி) வெற்றி பொருந்திய வலிய தோள்களையுடைய வீர பாண்டியன், கோல் வழங்கும் நாள்-செங்கோ லோச்சும் பொழுது, மதுரை யெம்பெருமான் - மதுரையில் எழுந் தருளிய எம் பெருமானாகிய சோமசுந்தரக் கடவுள், புலம்பொரு முனிவர் தேற-புலன்களை வென்ற முனிவர்கள் தெளிய, நால்வேதப் பொருள் உணர்த்திய திறம் புகல்வாம்-நான்கு வேதங்களின் பொருளை அறிவுறுத்திய திருவிளையாடலைக் கூறுவாம் எ - று.

உலம் - திரண்ட கல். பொரு - மாறுபடுகின்ற எனினுமாம். அருள் அடைதல் - திருவடிநீழலிற் கலத்தல். அடைந்தவா : ஈறு தொக்கது. புகன்றும்: இறந்த காலத்தன்மைப் பன்மை முற்று. புலம்பு ஒரு எனப் பிரித்துத், துன்பம் நீங்கிய என்றுரைத்தலுமாம். (க)

ஐம்பெரும் பூத நிலைதிரிந் தீரே
ழடுக்கிய வுலகோடு மயன்மால்
உம்பர்வான் பதமு முதித்தவா றேடுங்க
வுருத்ததோ ரூழிவந் தெய்தச்
செம்பொருண் மறையு மோடுங்கிய வழிநாட்
செஞ்சுடர்க் கடவுள்முன் மலரும்
வம்பவிழ் கமல மேனவரன் றிருமுன்
மலர்ந்ததா லகிலமு மாதோ.

(இ - ள்.) ஐம்பெரும் பூதம் நிலை திரிந்து – ஐந்து பெரிய பூதங் களும் தத்தம் நிலையில் மாறுபட்டு, ஈர் ஏழ் அடுக்கிய உலகொடும்-பதி

னுன்காக அடுக்கப்பட்ட உலகங்களுடன், அயன்மால் உம்பர்வான் பதமும் - பிரமன் திருமால் ஏனைத் தேவர்கள் ஆகிய இவர்களின் பெரிய பதங்களும், உதித்தவாறு ஒடுங்க - தோன்றியவாறே ஒடுங்க, உருத்தது ஓர் ஊழி வந்து எய்த - உட்குந் திறத்ததாகிய ஓர் ஊழிக் காலம் வந்து பொருந்த, செம்பொருள் மறையும் ஒடுங்கிய - மெய்ப் பொருளை யுடைய மறைகளும் ஒடுங்கின; வழிநாள் - பின்னாளில், செஞ் சுடர்க் கடவுள் முன் - சிவந்த கிரணங்களையுடைய ஆதித்தன் முன்னே, மலரும் வம்பு அவிழ் கமலம் என - மலருகின்ற மணங்கமழும் தாமரை மலர்போல, அரன் திருமுன் - சிவபெருமான் திரு முன்னர், அகிலமும் மலர்ந்தது - யாவுந் தோன்றின எ - று.

அயன் மால்களின் மேலிடத்துள்ள பெரிய பதம் என்னலுமாம். உதித்தவாறொடுங்கல் - எது எதனிடத்திற் றோன்றியதோ அது அதனிடத்தில் ஒடுங்கல். உருத்தது: உரு என்னும் உரிச்சொல் லடியாகப் பிறந்தது; வெகுண்டதென்றும், தோன்றியதென்றும் கூறலுமாம். ஒடுங்கிய : முற்று. இறைவன் ஒரு தொழிலுமின்றியிருப்ப அவனது சந்நிதிக்கண்ணே உலகங்கள் தோன்றின என்றார்; சந்நிதி - சத்தி சங்கற்பம்.

"மன்னுசிவன் சந்நிதியின் மற்றுலகஞ் சேட்டித்த
தென்னு மறையி னியன்மறந்தாய்"

என்பது சிவஞானபோதம். மலர்ந்தது - மலர்ந்தன : பன்மையி லொருமை. மாது, ஓ: அசைகள். (உ)

பண்டுபோற் பின்னு முத்தொழி னடாத்தப்
பராபரஞ் சுடர்திரு வுள்ளங்
கொண்டு போர்த்திகிரி வலவனைத் தாவிக்
குரிசிறன் னுபிமுண் டகத்தில்
வண்டுபோற் பிரம னுதித்துமூ வுலகும்
வரன்முறை படைக்குநா ணஞ்சம்
உண்டுபோற் றியவா னவர்க்குயி ரளித்த
வும்பர் நாயகன்றிரு வாக்கில்.

(இ - ள்.) பண்டுபோல் பின்னும் முத்தொழில் நடாத்த - முன்பு போலப் பின்னும் ஆக்கலாதி மூன்று தொழிலையும் நடாத்தியருள, பராபரஞ் சுடர் திருவுள்ளம் கொண்டு - சிவபரஞ்சுடர் திருவுள்ளங் கொண்டு, போர்த் திகிரி வலவனைத் தர - போர்செய்தற்குரிய திகிரிப் படை ஏந்திய திருமாலைத் தோற்றுவிக்க, இக் குரிசில் தன் நாபி முண்டகத்தில் வண்டுபோல் பிரமன் உதித்து - அத்திருமாலின் உந்திக் கமலத்தினின்றும் வண்டுபோலப் பிரமன் தோன்றி, மூவுலகும் வரன் முறை படைக்கு நாள் - மூன்று உலகங்களையும் முறையாகப் படைக்கும்போது, நஞ்சம் உண்டு போற்றிய வானவர்க்கு உயிர் அளித்த - நஞ்சினை உண்டு வணங்கிய தேவர்களுக்கு உயிரைத் தந்தருளிய, உம்பர் நாயகன் திருவாக்கில் - தேவதேவனாகிய சிவபெருமான் திரு வாக்கின்கண் எ - று.

ஐந்தொழிலை முத்தொழிலுள் அடக்கிக் கூறுதலும் பெருவழக்கு;

"விண் முதல் பூதலம்
ஒன்றிய விருசுட ரும்பர்கள் பிறவும்
படைத்தளித் தழிப்பமும் மூர்த்திக ளாயினை"

என்பது திருவெழுகூற்றிருக்கை; சிவஞானபோத முதற் சூத்திரமும்,

"அவனவ ளதுவெனும் அவைமூ வினைமையின்"

என்று கூறிற்று. பராபரம்; பரஞ்சுடர் என்னும் இருதொகைகள் ஒருதொடராய்த் தொக்கன. முண்டகத்தினுள்ளிருந்து வெளிப்பட்டமை கருதி 'வண்டுபோல்' என்றார். உண்டு அளித்த வெனக் கூட்டுக. (௩)

பிரணவ முதித்த ததனிடை வேதம்
பிறந்தன நைமிசா ரணியத்
தருணிறை முனிவர் கண்ணுவர் கருக்க
ராதியோ ரதிகரித் தவற்றின்
பொருணிலை தெரியா துள்ளமு முகமும்
புலர்ந்தன ரிருப்பவப் போதத்
திருண்மல வலிவென் றவனர பத்த
னென்றொரு வேதியன் வந்தான்.

(இ - ள்.) பிரணவம் உதித்தது - பிரணவந் தோன்றியது; அதனிடை வேதம் பிறந்தன - அதனிடத்து மறைகள் தோன்றின; நைமிசாரணியத்து அருள் நிறை முனிவர் கண்ணுவர் கருக்கர் ஆதியோர் - நைமிசாரணியத்தில் உள்ள கருணை நிறைந்த முனிவராகிய கண்ணுவர் கருக்கர் முதலியோர், அதிகரித்து-பயின்று, அவற்றின் பொருள் நிலை தெரியாது-அம்மறைகளின் உட்கிடையாகிய பொருளை உணராமல், உள்ளமும் முகமும் புலர்ந்தனர் இருப்ப - மனமும் முகமும் வாடியிருக்க, அப்போதத்து-அப்பொழுது, இருள் மலவலி வென்றவன் - ஆணவ மலத்தின் சத்தியை வென்றவனாகிய, அரபத்தன் என்று ஒரு வேதியன் வந்தான்- அரபத்தன் என்னும் பெயரினையுடைய ஒருமுனிவன் வந்தான் எ - று.

அதிகரித்து - கற்று என்னும் பொருட்டு. புலர்ந்தனர் என்பது வினையெச்சமும், வென்றவன் என்பது பெயரெச்சமும் ஆயின. அப்போதத்து, அத்து : சாரியை. ஆதியோ ரோதலுற்று என்று பாடங் கொண்டாருமுளர். (௪)

வந்தவே தியனை யிருந்த வேதியர்கள்
வரவெதிர்ந் திறைஞ்சிவே றிருக்கை
தந்தவே லையிலம் மறையவன் முனிவர்
தமைமுக நோக்கியீ துரைப்பான்
பந்தவே தனைசா லவாவெறுப் பிகந்த
பண்பின ராயினீர் நீவிர்
சிந்தைவே றாகி முகம்புலர்ந் திருக்குஞ்
செய்தியா தெனவவர் சொல்வார்.

(இ - ள்.) வந்த வேதியனை இருந்த வேதியர்கள் வரவு எதிர்ந்து-(அங்ஙனம்) வந்த முனிவனை இருந்த முனிவர்கள் வரவேற்று, இறைஞ்சி-வணங்கி, வேறு இருக்கை தந்த வேலையில்-வேறு ஆதனம் அளித்த பொழுது, அம் மறையவன் - அம் முனிவன், முனிவர் தமை முகம் நோக்கி ஈது உரைப்பான் - கண்ணுவர் முதலிய முனிவர்கள் முகத்தை நோக்கி இங்ஙனம் கூறுவான்: நீவிர் பந்த வேதனை சால் அவர் வெறுப்பு இகந்த பண்பினர் ஆயினீர்-நீங்கள் பந்த வேதனையும் மிக்க விருப்பு வெறுப்பும் நீங்கிய தன்மையினரா யிருந்தும், சிந்தை வேறாகி முகம் புலர்ந்து இருக்கும் செய்தியாது என-மனம் வேறுபட்டு முகம்வாடி இருக்கும் செய்தியாது என்று வினவ, அவர் சொல்வார் - அம் முனிவர்கள் கூறுவார்கள் எ - று.

முகநோக்கி யென்பது ஒரு சொல்லாய் இரண்டாவதற்கு முடிபாயிற்று. இங்ஙனம் உரைப்பான், எங்ஙனம் எனின் செய்தியாதென்று கூற வென்க. பந்தவேதனை – கட்டினாகிய துன்பம்; வேதனை யமைந்த அவாவெறுப்பென்னலுமாம். ஆயினீர் – ஆகியும். (ரு)

மருட்படு மாயை கழிந்தவன் மொழிந்த
மறைபயின் றுரைசெய்தே சிகனற்
றிருட்படு மனத்தே மிருத்துமா லைய
யாதுசூ ழிதற்கெனக் கேட்ட
தெருட்படு மனத்தோன் செப்புவான் வேதஞ்
செப்பிய சிவபரஞ் சுடரே
அருட்படி வெடுத்துப் பொருளையு முணர்த்து
மல்லது சூழ்ச்சியா தறைவீர்.

(இ - ள்.) ஐய-ஐயனே, மருள் படு மாயை கழிந்தவன்-மயக்கத்திற் கேதுவாகிய மாயையை இயல்பாகவே நீங்கிய இறைவன், மொழிந்தமறை பயின்று - திருவாய் மலர்ந்தருளிய வேதங்களை ஓதி, உரைசெய் தேசிகன் அற்று - அவற்றின் பொருளை உணர்த்தும் குரவனில்லாமல், இருள்படு மனத்தேம் இருத்தும் - அஞ்ஞானம் நிறைந்த மனத்தையுடையேமாக இருக்கின்றேம் (ஆதலால்), இதற்குச் சூழ் யாது என-இதற்கு ஆலோசனை யாது என்று வினவ, கேட்ட தெருள்படு மனத்தோன் செப்புவான் - அதனைக் கேட்ட தெளிவு பொருந்திய மனத்தையுடைய அரபத்தன் கூறுகின்றான்; வேதம் செப்பிய சிவபரஞ் சுடரே - அம் மறைகளைக் கூறியருளிய சிவபரஞ் சோதியே, அருள் படிவு எடுத்து - அருளுருக் கொண்டு, பொருளையும் உணர்த்தும் - பொருளையும் அறிவிக்கும்; அல்லது சூழ்ச்சி யாது அறைவீர்-அஃதன்றி வேறு ஆலோசனை யாது உளது சொல்வீர் (எனக் கூறி) எ - று.

மாயை மயக்கத்திற்கேது வென்பதனை.

"வைத்ததோர் மலமாய் மாயை மயக்கமுஞ் செய்யு மன்றே"

என்னும் சிவஞான சித்தியாலறிக. மாயை கழிந்தவன் - மாயைக்கு அப்பாற்பட்டவன் எனலுமாம். இருத்தும்-இருக்குதும்: தன்மைப் பன்மை முற்று; தும் விகுதி நிகழ் காலத்தில் வந்தது. ஆல்: அசை. உணர்த்துமல்லது என்பதற்கு உணர்த்தினன்றி என் றுரைத்தலுமாம். (சு)

பண்ணிய தவத்தா லன்றியா தானும்
படுபொருள் பிறிதிலை தவமும்
புண்ணிய தலத்தி னல்லது பலியா
புண்ணிய தலத்தினும் விழுப்பம்
நண்ணிய சைவ தலத்தினி லியற்றி
னல்குமச் சிவதலங் களினும்
எண்ணிய வதிக தலத்தினி லியற்றி
னிருந்தவ மெளிதுடன் பயக்கும்.

(இ - ள்.) பண்ணிய தவத்தால் அன்றி-செய்த தவத்தினாலல்லாமல், பிறிது யாதானும் படுபொருள் இலை-வேறு யாதொன்றினாலும் கைகூடும் பொருள் இல்லை; தவமும் புண்ணிய தலத்தின் அல்லது பலியா - அத்தவங்களும் புண்ணியப் பதிகளினன்றிச் சித்திக்க மாட்டா; புண்ணிய தலத்தினும் விழுப்பம் நண்ணிய சைவ தலத்தினில் இயற்றின் நல்கும்-அந்தப் புண்ணியப் பதிகளினும் சிறப்புப் பொருந்திய சிவத் தலங்களிற் செய்தால் (எளிதிற்) பயனளிக்கும்; அச் சிவ தலங்களினும்-அந்தச் சைவ தலங்களினும், எண்ணிய அதிக தலத்தினில் இயற்றின்-மதிக்கப்பெற்ற சிறந்த சிவத்தலத்தில் செய்தால், இருந்தவம் எளிது உடன் பயக்கும்-அப்பெரிய தவங்கள் எளிதாக விரைந்து பயனளிக்கும் எ-று

பிறிது யாதானும் எனக் கூட்டுக. யாதானும்-யாதினானும். படுபொருள் இலை என்பதனைப் பொருள் படுதல் இலையெனப் பிரித்தியைக்க;

"வேண்டிய வேண்டியாங் கெய்தலாற் செய்தவம்
ஈண்டு முயலப் படும்" (திருக்குறள்-உசுரு)

என்னும் திருக்குறள் இங்கு நோக்கற்பாலது. தலத்தினுள்ளும் தலங்களினுள்ளும் என உள்ளுருபு விரிக்க. எண்ணிய-ஆன்றோரால் எண்ணப்பட்ட. அதிக தலம்-விசேடத்தலம். (எ)

அத்தகு தலமற் றியாதெனி னுலக
மகிலமுந் தன்னுடம் பான
வித்தகன் சென்னிப் பன்னிரு விரன்மேல்
விளங்கிய தலமது சீவன்
முத்தரா யெண்ணில் வானவர் முனிவோர்
முயன்றுமா தவப்பய னடைந்து
சித்தமா சகன்று வதிவதென் றறநூல்
செப்பிய மதுரையந் நகரில்.

(இள்.) அத்தகு தலம் யாது எனில்-அந்தச் சிறந்த பதி யாதெனில், அது-அஃது, உலகம் அகிலமும் தன் உடம்பான வித்தகன்-உலகமனைத்தும் தனது வடிவமாகவுள்ள விராட்புருடனது, சென்னிப்

பன்னிரு விரல்மேல் விளங்கிய தலம் என்று - முடியின்மேல் பன்னிரண்டங்குலத்துக்கு மேலாக விளங்கிய தலம் என்றும், எண் இல் வானவர் முனிவோர் முயன்று மாதவப்பயன் அடைந்து-அளவிறந்த தேவர்களும் முனிவர்களும் நோற்றுப் பெரிய தவப்பயனை எய்தி, சித்தம் மாசு அகன்று சீவன் முத்தராய் வதிவது என்று - மனக்குற்றங்கள் நீங்கிச் சீவன் முத்தராய் வசிக்கப் பெறுவது என்றும், அறநூல் செப்பிய மதுரை-தரும நூல்கள் எடுத்துக்கூறும் மதுரைப் பதியாம்; அந்நகரில்-அத் திருப்பதியிலே எ - று.

அது என்பதனை யாதெனில் அது எனக் கூட்டி யுரைக்க: அகிலம் - எல்லாம். பன்னிரு விரன்மேல் விளங்கிய தலம் - துவாதசாந்தத்தலம்; தல விசேடத்திற் காண்க. என்று என்பது முன்னுங் கூட்டி யுரைக்கப்பட்டது. (அ)

தெளிதரு விசும்பி னிழிந்ததோர் விமான
சிகாமணி யருகுதென் மருங்கின்
முளிதரு பராரை வடநிழல் பிரியா
முழுமுதல் வழிபடு மறவோர்க்
களிதரு கருணை முகமலர்ந் தளவா
வருங்கலை யனைத்தையுந் தெளிவித்
தொளிதரு மனைய மூர்த்தியே நுங்கட்
கோதிய மறைப்பொரு ளுணர்த்தும்.

(இ - ள்.) தெளிதரு விசும்பின் இழிந்தது ஓர் விமான சிகாமணி அருகு-தெளிந்த வானினின்றும் இறங்கியதாகிய ஒப்பற்ற விமானங்களுக்கெல்லாம் சூளா மணியாயுள்ள விமானத்தின் அருகில், தென் மருங்கில் - தென்பாலில், முளிதரு பராரை வடநிழல் பிரியா முழுமுதல்-உலர்ந்த (பொருக்குள்ள) பருத்த அரையையுடைய கல்லால மரத்தி னிழலினின்றும் நீங்காத முழுமுதற் கடவுள், வழிபடும் அறவோர்க்கு-வழிபடாநின்ற முனிவர்க்கு, அளிதரு கருணை முகம் மலர்ந்து-முதிர்ந்த கருணையுடன் முகமலர்ச்சியுற்று, அளவா அருங்கலை அனைத்தையும் தெளிவித்து - அளவிறந்த அரிய நூல்கள் அனைத்தையும் தெளிவுறுத்தி, ஒளி தரும் - விளங்கா நிற்பர்; அனைய மூர்த்தியே - அச்சிறந்த தென்முகப் பெருமானே, ஓதிய-மறைப்பொருள் நுங்கட்கு உணர்த்தும் - (தாம்) அருளிய வேதத்தின் பொருளை உங்கட்கு அறிவிப்பர் எ - று.

விமான சிகாமணி-விமானங்கள் முடியிற் றரிக்கும் மணிபோலும் சிறப்புடையது. பருஅரை பராரை யென்றாயது. அரை - அடிமரம். வடம்-ஆல். அறவோர்-சனகர் முதலிய முனிவர். அளிதல்-முதிர்தல்; அளிதரு கருணை என்பதற்கு அன்பு பெற்ற அருள் என்று கூறுவது ஈண்டுச் சிறப்பின்று. அளவில்லாத என்பது அளவா எனநின்றது. ஒளிதரும்-ஞானத்தைத் தரும் என்றுமாம். (கூ)

அங்கவன் றிருமு னருந்தவ விரத
மாற்றுவான் செல்லுமி னெனவப்
புங்கவ னருள்போல் வந்தமா தவன்பின்
புனிதமா முனிவரு நங்கை

பங்கவன் மதுரைப் பதிபுகுந் தம்போற்
பன்மணிக் கோயில்புக் காழிச்
சங்கவன் கைபோல் வளைசெறி செம்போற்
றாமரைத் தடாகநீ ராடி.

(இ - ள்.) அவன் திருமுன் அருந்தவ விரதம் ஆற்றுவான் அங்கு செல்லுமின் என - அந்த மூர்த்தியின் திருமுன்னர் இருந்து அரிய தவமாகிய நோன்பைச் செய்தற்கு அங்கே செல்லுங்கள் என்று கூற, அப் புங்கவன் அருள்போல் வந்த மாதவன் பின்-அந்தத் தேவனது திருவருளே போலும் வந்த மாதவனாகிய அரபத்தன் பின்பு, புனிதம் மாமுனிவரும்– தூய பெருமையுடைய முனிவர்களும், நங்கை பங்கவன் மதுரைப் பதி புகுந்து-உமையொரு பாகனாகிய சோமசுந்தரக் கடவுளின் மதுரைப்பதியிற்சென்று, அம்பொன் பல்மணிக் கோயில் புக்கு-அழகிய பொன்னாற் செய்த பல்வகை மணிகள் இழைத்த திருக்கோயிலுட்புகுந்து, ஆழிச் சங்கவன் கைபோல் - திகிரிப்படையை யுடைய திருமாலின் சங்கை ஏந்திய கைபோல, வளைசெறி செம்பொன் தாமரைத் தடாகம் நீராடி-சங்கு பொருந்திய சிவந்த பொற்றாமரையையுடைய வாவியில் நீராடி எ - று.

மாதவன் பின் என்றமையால் அவனும் சென்றானென்பது பெறப்பட்டது. இறைவனை வழிபடுதற்கு அம்முனிவன் அழைத்துச் செல்லுதலை அவனது அருளேவந்து ஈர்த்துச் செல்வது போலும் என உவமை கூறியது சாலவும் பொருத்த முடைத்து;

"அவன தருளாலே யவன்றாள் வணங்கி"

என்று திருவாசகத் திருமறை அருளிச்செய்தல் காண்க. பங்கவன்: வகரம் விரித்தல். ஆழியான் சங்கக் கைபோல் என விகுதி பிரித்துக் கூட்டுக. சங்கு தாமரை மேல் இருக்குமென்றார்;

"முட்டாட் டாமரை முறுக்கவிழ் மலர்மேல்
வலம்புரி கிடக்கும் வாதவூ ரன்ப."

என நால்வர் நான்மணி மாலை கூறுவதுங் காண்க. (௪0)

கரைகடந் துள்ளங் கடந்தவன் புந்தக்
கடிதுபோய் நான்கிரு வெள்ளி
வரைகடம் பிடரிற் கிடந்ததோர் மேரு
வரைபுரை விமானமேற் காணு
உரைகடம் பொருளைக் கண்களாற் கண்டாங்
கும்பர்தம் பிரானைநேர் கண்டு
திரைகடந் திடும்பே ரின்பவா ரியிலுஞ்
சேணிலத் திலும்விழுந் தெழுந்தார்.

(இ - ள்.) கரை கடந்து உள்ளம் கடந்த அன்பு - எல்லையின்றி உள்ளத்தை விழுங்கி எழுந்த அன்பானது, உந்த - செலுத்த, கடிது

போய் - விரைந்துபோய், நான்கு இரு வெள்ளி வரைகள் தம்பிடரில் கிடந்தது ஓர் மேருவரை புரை விமானம் மேல் - எட்டு வெள்ளிமலைகளின் பிடரியிலே தங்கியதாகிய ஒரு பொன்மலையைப் போலும் விமானத்தின்கண், காணு உரைகள் தம்பொருளைக் கண்களால் கண்டாங்கு - தம் அகக்கண்ணாற் காணக்கூடாத மறைகளின் பொருளைப் புறக்கண்ணாற் கண்டது போல, உம்பர் தம்பிரானை நேர் கண்டு-தேவ தேவனாகிய சொக்கலிங்கக் கடவுளை நேரிற்பார்த்து, திரை கடந்திடும் பேரின்ப வாரியிலும் சேண் நிலத்திலும் விழுந்து எழுந்தார் – அலையொழிந்த பேரின்பக் கடலினும் சேய்மையாகிய நிலத்தினும் விழுந்து எழுந்தார்கள் எ - று.

எட்டு வெள்ளை யானைகளால் தாங்கப்பட்டிருக்கும் பொன் விமானம் எட்டு வெள்ளி மலைகளின் மேற் பொருந்திய மேரு மலையை ஒக்குமென்றார். உரைகள் என்றது வேதங்களை யுணர்த்திற்று; 'அவற்றின் பொருணிலை தெரியா துள்ளமுமுகமும் புலர்ந்தனர்' என மேலே கூறினராகலின், ஈண்டு அங்ஙனம் காணப்படாப் பொருளையே கண்களாற்கண்டாங்குப் பிரானை நேர்கண்டு என்றார். விமான மேற்கண்டு என இயையும். முழு நிறைவுடைத் தாகலின் 'திரை கடந்திடும்' என்றார்;

''திரை பொரா மன்னும் அமுதத் தெண் கடலே.''

என்னும் திருவாசகமும் நோக்குக; திரைகள் தந்திடும் எனப் பிரித்தல் பொருந்து மேனுங் கொள்க. நிலத்திலும் வாரியிலும் ஒருங்கு விழுந்தாராகக் கூறியது ஓர் அணி கருதிற்று. வரைகடம், உரைகடம் என்பவற்றில் தம் சாரியை. (கக)

கைதலை முகிழ்த்துக் கரசர ணங்கள்
கம்பிதஞ் செய்துகண் ணருவி
பெய்தலை வெள்ளத் தாழ்ந்துவாய் குழறிப்
பிரமன்மா லின்னமுந் தேரு
மைதழை கண்ட வெள்ளிமன் றுடும்
வானவர் நாயக வானோர்
உய்தர விடமுண் டமுதருள் புரிந்த
வுத்தம போற்றியென் றேத்தா.

(இ - ள்.) கைதலை முகிழ்த்து-கைகளைத் தலைமேற் குவித்து, கரசரணங்கள் கம்பிதம் செய்து-கைகளும் கால்களும் நடுங்கப்பெற்று, கண் அருவி பெய்து-ஆனந்தக் கண்ணீராகிய அருவியைப்பொழிந்து, அலை வெள்ளத்து ஆழ்ந்து-அலை வீசுகின்ற அவ் வெள்ளத்தில் மூழ்கி, வாய்குழறி-நாத்தடுமாறி, பிரமன் மால் இன்னமும் தேரு மைதழை கண்ட – பிரமனும் திருமாலும் இன்னமும் காணப்பெறாத கருமை மிக்க திரு மிடற்றை யுடையவனே, வெள்ளிமன்று ஆடும் வானவர் நாயக –வெள்ளியம்பலத்தில் திருக்கூத்தாடி யருளும் தேவதேவனே, வானோர் உய்தர விடம் உண்டு அமுது அருள்புரிந்த உத்தம-தேவர்கள் (உயிர்) பிழைக்குமாறு நஞ்சினை அருந்தி அமுதத்தை அளித்தருளிய உத்தமனே, போற்றி - எங்களைக் காத்தருள்க, என்று ஏத்தா – என்று துதித்து எ - று.

கர சரணம்: வடசொற்ருெடர், கம்பிதம் செய்து - கம்பித்து; நடுங்கி. கம்பித்தல் முதலியன அன்பின் நிகழ்ச்சிகள். சினை வினைகள் முதன்மேல் நின்றன. 'இன்னமுந் தேரு' என்றது,

''தேவரு மறையு மின்னமுங் காணுச்செஞ்சடைக் கடவுளைப் பாடி
யாவரு மதித்தோர் மூவரி லிருவர் பிறந்தநா டிந்தநன் னுடு.''

என்னும் வரந்தருவார் கூற்றை நினைவுறுத்துகிறது. பிரமன் மால் தேருமையும் மன்றிலாடுதலும் ஒருங்கு கூறியிருப்பது,

''மன்றுளே மாலயன் றேட
ஐயர்தாம் வெளியே யாடுகின்ருரை.''

என்னும் அருண்மொழித்தேவர் திருவாக்கைச் சிந்திக்கச் செய்கின்றது. ஏனோர்க்கு அமுதளித்துத் தான் நஞ்சுண்ட பெருந் தகைமையாளன் என்பதுபற்றி 'உத்தம' என்ருர். ''எங்களுத்தமனே'' என்பர் வாதவூரடிகள். (கஉ)

மறைபொருள் காணு துள்ளமா லுழந்து
வாடிய வெமக்குநீ யேயந்
நிறைபொரு ளாகி நின்றனை யதற்கு
நீயலாற் பொருள்பிறி தியாதென்
றிறைவனை யிறைவன் பங்கிலங் கயற்க
ணிறைவியை யம்முறை யேத்தி
முறைவலஞ் செய்து வடநிழ லமர்ந்த
மூர்த்திமுன் னெய்தினுர் முனிவோர்.

(இ - ள்.) முனிவோர் - கண்ணுவர் முதலிய அம்முனிவர்கள், மறைபொருள் காணுது - (மறைகளின்) மறைந்த பொருளைக் காண மாட்டாது, உள்ளம் மால் உழந்து வாடிய எமக்கு - உள்ளம் மயங்கி வாடிய எமக்கு, நீயே அ நிறை பொருள் ஆகி நின்றனை - நீயே அம் மறையின் நிறைந்த பொருளாகி நின்ருய், அதற்கு நீ அலால் பிறிது பொருள் யாது என்று-அம்மறைக்கு நின்னை யல்லால் வேறுபொருள் யாதென்று, இறைவனை (ஏத்தி)-சொக்கலிங்கக் கடவுளைத் துதித்து, இறைவன் பங்கில் அங்கயற்கண் இறைவியை அம்முறை ஏத்தி-அப் பெருமானது ஒரு பாதியிலமர்ந்த அங்கயற்கண் ணம்மையையும் அங்ஙனமே துதித்து, முறைவலம் செய்து - முறையாக வலம்வந்து, வடநிழல் அமர்ந்த மூர்த்தி முன் எய்தினுர் - கல்லாலின் நிழலிலமர்ந் தருளிய தட்சிணு மூர்த்தியின் திருமுன்னர் அடைந்தார்கள் எ - று.

மறைந்த பொருளுடைமையால் மறையெனப்படுதலைத் தொல்காப்பியப்பாயிரத்தில் ''நான்மறை'' என்பதற்கு நச்சினுர்க்கினியர் கூறிய உரையானுமறிக. நீயே அந்நிறை பொருளாகி நின்றனை என்ற கருத்தை,

''மறையுமாய் மறையின் பொருளுமாய் வந்தென்
மனத்திடை மன்னிய மன்னே.''

என்னும் திருவாசகத்தானும் ஓர்க. ஏத்தி யென்பதனை இறைவனை யென்பதனோடுங் கூட்டி யுரைக்க. முனிவோர், அகரம் ஒகாரமாதல் தொல்காப்பியத்து உடம்பொடு புணர்த்தலாற் கொள்க. (௧௩)

சீதளப் பளிக்கு மேனியும் பளிக்குச்
செழுமலை பதித்ததுப் பன்ன
பாதமுஞ் செவ்வாய் மலருமுக் கண்ணும்
பங்கயச் செங்கர நான்கும்
வேதபுத் தகமு மமுதகும் பமுந்தன்
விழிமணி வடமுமெய்ஞ் ஞான
போதமுத் திரையுந் தரித்ததோர் தனிமைப்
போதன்முன் றாழ்ந்தெழுந் தேத்தா.

(இ - ள்.) சீதளம் பளிக்கு மேனியும் - குளிர்ந்த பளிங்கு (மலை போன்ற வெள்ளிய) திருமேனியும், செழுபளிக்கு பதித்த துப்பு அன்ன பாதமும்-ஒளி நிறைந்த அப்பளிக்குமலையின் அடியிற் பதித்த பவளம் போன்ற திருவடிகளும், செவ்வாய் மலரும் - சிவந்த திருவாயாகிய தாமரை மலரும், முக்கண்ணும் - மூன்று கண்களும், பங்கயச் செங்கரம் நான்கும்-தாமரை மலர்போன்ற சிவந்த திருக்கைகள் நான்கும், வேத புத்தகமும்-வேதத் திருமுறையும், அமுத கும்பமும்-அமுதம் நிறைந்த கலசமும், தன்விழி மணிவடமும் - உருத்திராக்க மணிமாலையும், மெய்ஞ்ஞான போத முத்திரையும்-சிவஞானத்தைத் தெளிவித்தருளும் சின்முத்திரையும். தரித்தது ஓர் தனிமைப் போதன்முன்-தரித்த ஒப்பற்ற தேசிகனாகிய தட்சிணாமூர்த்தி திருமுன்னர், தாழ்ந்து எழுந்து ஏத்தா-வணங்கி எழுந்து துதித்து எ - று.

வேத புத்தகம் முதலியவற்றை நான்குகையிலும் தரித்தவென்க. வேத புத்தகம் என்பது சிவஞான போதத்தைக் குறிக்கும் என்பர்: பின் இவ்வாசிரியரே,

"போதம்வரை புத்தக மிடக்கையது பொற்ப."

"புத்தகத் தெழுதிய சிவஞான மெய்ப்போதம்
கைத்தலந்தரித் திருப்பதோர் கருணையைக் கண்டார்."

என்றும் கூறுவர்; புத்தகம் தரித்தல் - சிவஞானத்தை யுணர்த்துவதோர் குறிப்புப் போலும். தன்விழி-உருத்திராக்கம். சின்முத்திரையின் பொருட் குறிப்பானது.

"மும்மலம் வேறுபட் டொழிய மொய்த்துயிர்
அம்மலர்த் தாணிழ லடங்கு முண்மையைக்
கைம்மலர்க் காட்சியிற் கதுவ நல்கிய
செம்மலை யலதுளஞ் சிந்தி யாதரோ."

என்று கச்சியப்ப முனிவரால் திருவானைக்காப் புராணத்தில் உணர்த்தப்பட்டுளது.

தரித்தது என்பதனைத் தரித்தவென எச்சமாகக் கொள்க. தரித்ததாகிய கரம் நான்கும் எனக் கூட்டி யுரைத்தலுமாம். (௧௪)

வடநிழ லமர்ந்த மறைமுதன் மேதா
மனுவெழுத் திருபது மிரண்டுந்
திடமுற வரபத் தன்றனுற் றெளிந்து
தேணிறை மதிமுத லடைவிற்
படுமதி யளவுந் தருப்பண மோமம்
பார்ப்பன வுண்டிமுப் போதும்
அடைவுற நுவன்று நோற்குமா தவர்மு
னருமறைப் பொருள்வெளி வருமால்.

(இ - ள்.) வடநிழல் அமர்ந்த மறைமுதல் மேதா - கல்லாலின் நிழலிலமர்ந்தருளிய வேதமுதலாகிய தட்சிணாமூர்த்தியின், இருபதும் இரண்டும் எழுத்து மனு - இருபத்திரண்டு எழுத்து வடிவமாகிய மந்திரத்தை, அரபத்தனுல் திடம் உற தெளிந்து-அரபத்த முனிவனுல் உறுதிபெறத் தெளிந்து, தேன்நிறை மதிமுதல்-கார்த்திகைத் திங்களின் பூரணை முதலாக, அடைவில் படுமதி அளவும் - அடுத்த கார்த்திகைத் திங்களின் பூரணை வரையும், தருப்பணம் ஓமம் பார்ப்பன உண்டி முப்போதும் அடைவுற-தருப்பணமும் ஓமமும் பார்ப்பன வுணவும் மூன்று காலமும் பொருந்துதலுற, நுவன்று நோற்கும் மாதவர்முன்-செபித்து நோற்கின்ற முனிவர்கள் முன், அருமறைப் பொருள் வெளிவரும் - அறிதற்கரிய மறைகளின் பொருளாயுள்ள இறைவன் (அவர்களறிய) வெளிப்பட்டு வருகின்ருன் எ - று.

மேதா-ஞானி: தென்முகப் பெருமான்; மந்திரத்தின் பெயராகக் கொண்டு மேதாமனு வென்றும் உரைப்பர். அடைவுற என்றமையால் அவற்றைச் செய்து என்க. தெளிந்து நுவன்று நோற்கும் எனக் கூட்டுக. ஆல்: அசை. (௧௫)

[கலிவிருத்தம்]

மானமுனி வோரதி சயிப்பவட நீழல்
மோனவடி வாகிய முதற்குரவ னெண்ணுன்
கூனமி லிலக்கண வுறுப்பகவை நானுன்
கானவோரு காளைமறை யோன்வடிவ மாகி.

(இ - ள்.) மானம் முனிவோர் அதிசயிப்ப-பெருமை பொருந்திய அம்முனிவர்கள் அதிசயமெய்த, வடநீழல் மோனவடிவு ஆகிய முதல் குரவன் - கல்லாலின் நிழலிலமர்ந்த மௌன வடிவத்தையுடைய பரம குருவானவன், ஊனம் இல் எண்ணான்கு இலக்கண உறுப்பு - குற்ற மில்லாதமுப்பத்திரண்டு இலக்கணமுடைய உறுப்புக்களுடன் கூடிய நானான்கு அகவைஆன -பதினாறு வயதுள்ள, ஒரு காளை மறையோன் வடிவம் ஆகி - ஒரு குமாரனாகிய வேதிய னுருவங் கொண்டு எ - று.

சின்முத்திரையை மோன முத்திரை யென்றுங் கூறுவர்; திருமுருகாற்றுப்படையில், ஒருகை மார்பொடு விளங்க' என்பதற்கு 'முனிவர்க்குத் தத்துவங்களைக் கூறி உரையிறந்த பொருளை யுணர்த்துங்காலத்து

ஒருகை மார்போடே விளங்காநிற்க' எனவும், 'இறைவன் மோனமுத் திரை யத்தனுய்த்தானுயே யிருந்து காட்ட ஊமைத் தசும்புள் நீர் நிறைந்தாற்போல ஆனந்த மயமான வொளி மாணுக்கர்க்கு நிறை தலின் அதற்குரிய மோன முத்திரை கூறிற்று' எனவும் நச்சினார்க் கினியர் உரை விரித்தமை காண்க. காளை யென்பது கட்டிளமையை உணர்த்துகிறது. (௧௬)

நீண்டதிரி முண்டமழ னெற்றிவிழி போத்தக்
காண்டகைய கண்டிகை வளைந்தொழுகு காதிற்
பூண்டகுழை கௌவிய பொலன் செய்பல காசு
சேண்டவ ழிளங்கதிர் சிரித்திருள் சிதைப்ப.

(இ-ள்.) நீண்ட திரி முண்டம் நெற்றி அழல் விழிபொத்த- நீண்ட திரிபுண்டரமானது நெற்றியிலுள்ள அனற் கண்ணை மறைக்க வும், காண் தகைய கண்டிகை-காணத்தக்க அழகினையுடைய (கழுத்தி லணிந்த) கண்டிகையோடு, வளைந்து ஒழுகு காதில் பூண்ட குழை கௌவிய - வளைந்து நீண்ட திருச்செவியில் அணிந்த குண்டலங்கள் கௌவியுள்ள, பொலன் செய் பல காசு-விளக்கஞ் செய்யும் பலமணி களும், சேண் தவழ் இளங்கதிர் சிரித்து-வானிற்றவழும் இளஞாயிற் றைச் சிரிப்பது போலும் ஒளி வீசி, இருள் சிதைப்ப-இருளை ஓட்டவும் எ - று.

திரிமுண்டம்-திருநீற்றின் மூன்று கீற்று. கண்டிகையும் குழை யும் கௌவிய வென்க. கௌவுதல்-அகப்படப் பற்றிக் கொள்ளுதல். பதிக்கப்பட்ட வற்றைக் கௌவிய வென்றார். சிரித்து-சிரிப்பது போலும் ஒளிவிட்டு; சிரித்தல் - எள்ளி நகுதல். (௧௭)

உத்தரிய வெண்படம் வலம்பட வொதுங்க
முத்தவள நூலினொடு முத்தமிடை யிட்டு
வைத்தணியு மக்கவட மாலையெறி வாளாற்
பத்தரை மறைத்தமல பந்தவிருள் சிந்த.

(இ - ள்.) வெள் உத்தரியபடம் வலம்பட ஒதுங்க-வெள்ளிய உத்தரியமாகிய ஆடை வலத்திற் பொருந்த ஒதுங்கவும், தவள முந் நூலினொடு வெள்ளிய பூணூலொடு, முத்தம் இடை இட்டுவைத்து அணியும் அக்கவட மாலை-முத்துக்களை இடையிட்டுக் கோவைசெய்து அணிந்த உருத்திராக்க மணி மாலை, எறி வாளால்-வீசும் ஒளியால், பத்தரை மறைத்த மலபந்த இருள் சிந்த-அன்பர்களை மறைத்த ஆணவ பந்த மாகிய இருள் சிதறவும் எ-று.

உத்தரியம்-மேலாடை. வடம், மாலை ஒருபொருளன. நூலும் மாலையும் எறியு மென்க. எறிகின்ற வாட்படை யென்பதோர் பொரு ளும் தோன்ற நின்றது. பந்த இருள்-செறிந்த இருள் என்னலுமாம். மேற் செய்யுளிற் புறவிருளை யோட்டுதல் கூறி, இச்செய்யுளில், அக விருளை யோட்டுதல் கூறினார். (௧௮)

கண்டிகை தொடுத்திரு கரத்திெ‌னாடு வாகு
தண்டனிடு மாலைவிட வாளரவு தள்ள
வெண்டுகிலி னுனவிரி கோவண மருங்கிற்
றண்டரிய பட்டிகை வளைந்தொளி தழைப்ப.

(இ - ள்.) கண்டிகை தொடுத்து - உருத்திராக்க மணிகளைக் கோத்து, இரு கரத்தினொடு தண்டு வாகின் இடுமாலை-இரண்டு கைகளிலும் தண்டினை யொத்த தோள்களிலும் அணிந்த மாலை, விடம் வாள் அரவு தள்ள-நஞ்சினையுடைய கொடிய பாம்பணிகளை ஒழிக்கவும், வெண் துகிலின் ஆன விரி கோவணம் மருங்கில் - வெள்ளிய ஆடையாற் போக்கிய விரிந்த கோவணத்தின் பக்கத்தில், தண்டு அரிய பட்டிகைவளைந்து ஒளிதழைப்ப-நீங்குதலில்லாத பட்டிகை சூழ்ந்து ஒளி மிகவும் எ - று.

கண்டிகை - உருத்திராக்கம். தொடுத்து இடுமாலை, அரவினை யொழித்து மாலை யணிந்ததனை 'மாலை விடவாளரவு தள்ள' எனமுர்; அரவின் விடமென மாற்றி, அடியார்களின். மாயையாகிய விடத்தை யொழிக்க வென்பதோர் பொருளுங் கொள்க;

"உலோகா யதனெனு மொண்டிறற் பாம்பின்
கலாபே தத்த கடுவிட மெய்தி
அதிற்பெரு மாயை யெனைப்பல சூழவும்"

என்பது திருவாசகம். தண்டல்-நீங்குதல். பட்டிகை-அரைப்பட்டிகை. (௧௯)

வண்டுவரி பாடுவன போலமலர் பாத
புண்டரிக மேலுழல் சிலம்புகள் புலம்பத்
தொண்டரக மாசிரு டுணித்துமுடி சூட்டும்
முண்டக மலர்ப்புறம் விறற்கழன் முழங்க.

(இ - ள்.) வண்டு வரி பாடுவன போல-வண்டுகள் இசைபாடுதல் போல, மலர்பாதபுண்டரிகம் மேல் உழல் சிலம்புகள் புலம்ப-மலர்ந்த திருவடித் தாமரையின்மீது சூழ்ந்த சிலம்புகள் ஒலிக்கவும், தொண்டர் அகமாசு இருள் துணித்து-அடியார்களின் அக வழுக்காகிய ஆணவ இருளைப் போக்கி, முடிசூட்டும் முண்டக மலர்ப்புறம் அவர்கள் முடியிற் சூட்டுகின்ற தாமரை மலர்போலும் திருவடியின்கண், விறல் கழல் முழங்க-வெற்றியை யுடைய வீரகண்டை ஒலிக்கவும் எ - று.

வரி-இசைப்பாட்டு. உழலல் -அசைதலுமாம் முண்டக மலர் திருவடிக்கு ஆகுபெயர். (௨௦)

ஏதமில் பவித்திரம் வலக்கர னிமைப்பப்
போதம்வரை புத்தக மிடக்கையது பொற்ப
ஓதியுண ராதலறி யோலமிடும் வேதம்
பாதுகைக ளாகியிரு பாதமலர் சூட.

(இ - ள்.) ஏதம் இல் பவித்திரம் வலக்கரன் இமைப்ப - குற்ற மில்லாத பவித்திரம் வலத்திருக்கையில் விளங்கவும்; போதம் வரை புத்தகம் இடக்கை பொற்ப - சிவஞானபோதம் எழுதப்பெற்ற திரு முறை இடத் திருக்கரத்தில் அழகு செய்யவும், ஓதி உணராது அலறி ஓலமிடும் வேதம் - பலவாறு கூறி அறியாது கதறி ஓலமிடுகின்ற மறைகள், பாதுகைகளாகி இருபாத மலர் சூட - பாதுகைகளாகி இரண்டு திருவடி மலர்களையும் சூடவும் எ - று.

கையது: அது பகுதிப்பொருள் விகுதி; கையினிடத்ததாய் என வுரைத்தலுமாம். ஓதவும் உணரவும் கூடாமல் எனினுமாம். வேதங் கள் இறைவனை உணரப் பெறுமல் ஓலமிடுதலை,

"அருமறை முறையிட் டின்னு மறிவதற் கரியான்"

என்றும்,

"மயக்கறு மறையோலிட்டு மாலயன்றேட நின்றான்"

என்றும் திருத்தொண்டர்புராணங் கூறுதல் காண்க. இறைவனை அறிய மாட்டாது ஓலமிட்ட வேதங்கள் இப்பொழுது ஓர் உபாயத்தையுன் னிப் பாதுகைகளாயின என்றார். மலர் என்றதற்கேற்பச் சூட என் றார். போதம் வரை புத்தகம் இடக்கையிற் பொற்ப என்றும், ஓல மிடும் வேதம் பாதமலர் சூட என்றும் கூறியது சிவஞான போதத் திற்கும் வேதத்திற்குமுள்ள வாசியை விளக்கியவாறு மாயிற்று. (௨௧)

கள்ளமுள ரிக்குண்முரல் காளையறு கால
புள்ளொலியி னுவுமித ழும்புடை பெயர்ந்து
துள்ளவெழு வேதவொலி தொண்டர்செவி யாற்றால்
உள்ளவயல் புக்குவகை யொண்பயிர் வளர்ப்ப.

(இ - ள்.) கள்ள முளரிக்குள் முரல் அறுகால காளை புள் ஒலி யின் - தேனையுடைய கமல மலரினுள் முழங்கும் ஆறு கால்களை யுடைய ஆண் வண்டின் ஒலிபோல, நாவும் இதழும் புடைபெயர்ந்து துள்ள எழு வேத ஒலி - நாவும் இதழும் எழுந்து துள்ளத்தோன்றும் மறை யொலியானது, தொண்டர்செவி ஆற்றால்-அடியார்களின் செவி யாகிய கால்வழியால் ஓடி, உள்ளம் வயல் புக்கு-உள்ளமாகிய கழனி யிற் பாய்ந்து, உவகை ஒண்பயிர் வளர்ப்ப-மகிழ்ச்சியாகிய ஒள்ளிய பயிரை வளர்க்கவும் எ - று.

கள்ள-தேனையுடைய: குறிப்புப் பெயரெச்சம்; கால என்பதும் அது. முளரி மலருக்கு ஆகுபெயர். காளையாகிய புள் எனக் கூட்டுக. புள்-வண்டு. வேதவொலி திருவாயினுள்ளிருந்து வருதலின் அதற் கேற்ப முளரிக்குள் முரல் ஒலியின் என்றார். வேத வொலியாகிய நீர் என்க. உருவகவணி. (௨௨)

சீதமணி முரறிரு வாய்சிறி தரும்ப
மாதவர்கள் காணவெளி வந்தவெளி நின்றான்
நாதமுடி யாயளவி னுன்மறையி னந்த
போதவடி* வாகிநிறை பூரண புராணன்.

(பா - ம்.) * போதமுடி.

(இ-ள்.) திருவாய் சீதம் மணிமூரல் சிறிது அரும்ப - திருவாயிலே குளிர்ச்சியும் அழகுமுள்ள புன்னகை சிறிது தோன்றவும், நாத முடிவாய்-நாத தத்துவத்தின் முடிவாகியும், அளவு இல் நான்மறையின் அந்தம் - அளவிடலாகாத நால்வேதங்களின் முடிவில், போத வடிவு ஆகி - ஞான வடிவாகியும், நிறை பூரண புராணன் - நிறைந்த பூரணத் தன்மையுடைய பழையோனாகிய தட்சிணாமூர்த்தி, மாதவர்கள் காண எளி வந்து வெளி நின்றான் - அம்முனிவர்கள் தரிசிக்குமாறு எளிதின் வந்து வெளியே நின்றருளினான் எ - று.

எளிவந்து: ஒருசொல். நிறை பூரணம்-முழு நிறைவு. புராணன்-முன்னைப் பழம் பொருட்கு முன்னைப் பழம்பொருளானவன். (௨௩)

[அறுசீரடியாசிரியவிருத்தம்]

வட்டவாண்* மதிகண் டார்க்கு †முவாக்கடன் மானமாண்ட
சிட்டரா முனிவர் காளைத் தேசிக வடிவு நோக்கி
ஒட்டரு வுவகை வெள்ள மேற்கொள வுருத்த கூற்றை
அட்டதா மரைதஞ் சென்னிக் கணிமல ராகத் தாழ்ந்தார்.

(இ-ள்.) உவா வட்டம் வாள் மதி கண்டு ஆர்க்கும் கடல்மான- உவா நாளிலே வட்டமாகிய ஒள்ளிய திங்களைக் கண்டுமுழங்குகின்ற கடலை ஒப்ப, மாண்ட சிட்டராம் முனிவர் - மாட்சிமைப்பட்ட பெரியோராகிய முனிவர்கள், காளைத் தேசிக வடிவம் நோக்கி - காளைப் பருவமுடைய ஆசான் வடிவத்தைக் கண்டு, ஒட்டு அரு உவகை வெள்ளம் மேற்கொள - வற்றுதலில்லாத மகிழ்ச்சிவெள்ளம் மேலெழ, உருத்த கூற்றை அட்ட தாமரை - வெகுண்டெழுந்த கூற்றுவனை உதைத்தருளிய திருவடித் தாமரை, தம் சென்னிக்கு அணிமலராகத் தாழ்ந்தார் - தங்கள் முடிக்குச் சூடும் மலராக வணங்கினார்கள் எ - று.

உவாமதி கண்டார்க்கும் கடல் என மாறுக. சிட்டர்-பெரியோர். உருத்த - மார்க்கண்டியைச் சினந்த. கூற்றையட்ட என்னும் அடையால் தாமரை திருவடியை உணர்த்திற்று. தாமரை அணி மலராக அதனை வணங்கினார்கள் என்க. (௨௪)

அளவறு கலைகட் கெல்லா முறைவிட மாகி வேத
விளைபொரு ளாகி நின்ற வேதிய சரண மென்ற
வளைவுறு மனத்தி னாரைத் தேசிக வள்ள னோக்கிப்
பளகறு தவத்தீர் வேட்கை யாதெனப் பணிந்து சொல்வார்.

(இ-ள்.) அளவு அறு கலைகட்கு எல்லாம் உறைவிடம் ஆகி- அளவிறந்த கலைகளெல்லாவற்றிற்கும் உறையுளாகி, வேத விளை பொருள் ஆகி நின்ற வேதிய சரணம் என்ற - வேதங்களில் விளையும் பொருளாய் நின்ற வேதியனே அடைக்கலம் என்ற, வளைவு உறு மனத்தினாரை-வணக்கம் பொருந்திய மனத்தையுடைய முனிவர்களை, வள்ளல் தேசிகன் நோக்கி-அருட்கொடையையுடைய குரவன் நோக்கி, பளகு அறு தவத்திர் - குற்றமற்ற தவத்தினையுடைய முனிவர்களே,

(பா-ம்.) * வட்டவான். † உவர்க்கடல்.

வேட்கை யாது என-நுங்கள் விருப்பம் யாதென்று வினவ, பணிந்து சொல்வார் - அவர்கள் வணங்கிக் கூறுகின்றார்கள் எ - று.

கலைகள் எல்லாவற்றுக்கும் என உருபு பிரித்துக்கூட்டுக. எல்லா வித்தைகளும் ஈசானனிடத்தினின்றும் தோன்றியன வென்னும் உண்மை கூறியவாறு. வளை வெனினும் வணக்க மெனினும் ஒக்கும்: குற்றம் அறுதற்குக் காரணமாகிய தவமுமாம். (௨௫)

அடியரே முய்யு மாறு முகமெலா யளிக்கு மாறும்
படியிலா வரத்த வேதப் பயனருள் செய்தி யென்னக்
கொடியமா பாசந் தீர்ப்பான் குரவனம் முனிவ ரோடு
முடிவிலா விலிங்க முன்போய்மறைப்பொருண் மொழிவதானான்.

(இ-ள்.) அடியரேம் உய்யுமாறும்-அடியேங்கள் உய்தி கூடும் வண்ணமும், உலகு எலாம் அளிக்குமாறும்-உலகம் அனைத்தையும் ஓம்பும் வண்ணமும், படி இலா வரத்த வேதப் பயன் அருள் செய்தி என்ன-ஒப்பற்ற சிறப்பினையுடைய மறைகளின் பொருளை அருளிச் செய்வாய் என விண்ணப்பிக்க, கொடிய மா பாசம் தீர்ப்பான் குரவன் - (உயிர்களின்) மிகக் கொடிய பாசங்களைப் போக்கி யருளும் அக்குரவன், அம்முனிவரோடு-அந்த முனிவர்களுடன், முடிவு இலா இலிங்கம் முன்போய் மறைப்பொருள் மொழிவது ஆனான் - அழிவில் லாத இலிங்கத்தின் திருமுன் சென்று வேதங்களின் பொருளை அருளு வானாயினன் எ - று.

அளிக்குமாறும் - அளிக்கப்படுமாறும் என்றுமாம். வரத்த - மேன்மையுடைய: குறிப்புப் பெயரெச்சம். தீர்ப்பான்: பெயரெச் சப் பொருட்டாய் நின்றது; முனிவர்களின் பாசத்தைத் தீர்க்க வென் றுரைப்பாருமுளர். முடிவிலா என்றமையால் முதலுமில்லா வென் பது கொள்க. மொழிவது: தொழிற்பெயர். (௨௬)

அந்தணிர் கேண்மின் சால வருமறைப் பொருள்க ளெல்லாம்
மந்தண மாகு மிந்த மறைப்பொரு ளறித றானே
நந்தலில் லாத போகப் பயனுக்கு நலியும் பாச
பந்தனை கழிக்கும் வீட்டின் பயனுக்குங் கருவி யாகும்.

(இ-ள்.) அந்தணிர் கேண்மின் - முனிவர்களே கேளுங்கள், அரு மறைப்பொருள்கள் எல்லாம் சால மந்தணம் ஆகும் - அரிய வேதங்களின் பொருள்களனைத்தும் பெரிதும் இரகசியமாகும்; இந்த மறைப்பொருள் அறிதல் தானே - இந்த வேதப்பொருளை அறிதலே, நந்தல் இல்லாத போகப் பயனுக்கும்-கெடுதலில்லாத போகப் பேற் றிற்கும், நலியும் பாச பந்தனை கழிக்கும் வீட்டின் பயனுக்கும் - வருத்துகின்ற பாச பந்தத்தைப் போக்கும் வீடுபேற்றிற்கும், கருவி ஆகும்-சாதனமாகும் எ - று.

சால மந்தணம் எனக் கூட்டுக. தானே யென்பதில் ஏகாரம் தேற்றம். போகப்பயன்-போகமாகிய பயன். கழிக்கும் வீடு-கழித் தெய்தும் வீடு. வீட்டின்:இன்சாரியை அல்வழிக்கண் வந்தது. 'மறைப்

பொருள் கேட்டலாலே, நந்திடு துக்கமெல்லா நன்னுருதகலும்' எனப் பாடங் கொண்டாரு முளர். (௨௭)

உத்தம சயம்புக் குள்ளு முத்தம தரமாய் மேலாந்
தத்துவ மாகு மிந்தச் சுந்தர சயம்பு லிங்கம்
நித்தமாய் மறைகட் கெல்லா நிதானமாம் பொருளா யுண்மைச்
சுத்தவத் துவித மான சுயம்பிர காச மாகும்.

(இ - ள்.) உத்தம சயம்புக் குள்ளும் உத்தம தரமாய் உத்தமமான சுயம்புலிங்கங்களுக்குள்ளும் மேலான உத்தமமாகி, மேலாம்தத்துவம் ஆகும் இந்தச் சுந்தரசயம்புலிங்கம் - மேன்மையான தத்துவங்களின் வடிவமாகிய இந்தச்சுயம்புவாகும் சொக்கலிங்கம், நித்தமாய்-என்றும் அழியாததாய், மறைகட்கு எல்லாம் நிதானம் ஆம் பொருளாய்-வேதங் களனைத்திற்கும் ஆதி காரணமாகிய பொருளாய், உண்மைச் சுத்த அத்துவிதமான சுயம்பிர காசமாகும் - உண்மையாகிய சுத்தாத்துவித மான சுயம்பிரகாசமாக விளங்கும் எ-று.

உத்தமம்-எல்லாவற்றுள்ளும் மேம்பட்டது; அதனைப் பின்னும் சிறப்பித்து 'உத்தமதரம்' என்றார். அத்துவிதம் என்பதற்கு இதுவே பொருளென்பார், 'உண்மை' என்றார்; சுத்தம் என்றதும் இக்கருத்துப் பற்றியே யென்க. அத்துவிதம் என்பது 'வேறன்மை' என்னும் பொருட்டு; சிவஞானபோதம் இரண்டாஞ் சூத்திரத்தில் வரும் "அத்து விதமென்ற சொல்லானே ஏக மென்னில் ஏகமென்று சுட்டுவ துண் மையின் அத்துவித மென்ற சொல்லே அந்நிய நாத்தியையுணர்த்துமா யிட்டு" என்னும் பொழிப்பும், அதற்கு மாதவச் சிவஞானயோகிகள் தம்மதிவன்மையால் விரித்த வுரையும் நோக்குக. 'நிதானமதாகி நீங் காச் சத்தியப் பொருளுமாகித் தயங்குறு மென்பர் நூலோர்' எனப் பாடங்கொண்டாருமுளர்; இங்ஙனம் மிக்க வேற்றுமையுடையவாய்க் காணப்படும் பாடமெல்லாம் மதுரைக் காண்ட வளவிற் பொழிப் புரை யெழுதி வெளிப்படுத்தினர் ஒருவரே கொண்டனவாகும். (௨௮)

நிறைபரா பரம்விஞ் ஞான நிராமய மேன்று நூல்கள்
அறைபரம் பிரம மாகு மிதனுரு வாகு மேக
மறையிதன் பொருளே யிந்தச் சுந்தர வடிவா யிங்ஙன்
உறைசிவ லிங்க மோன்றே யென்பர்நூ லுணர்ந்த நல்லோர்.

(இ - ள்.) நிறை பராபரம் விஞ்ஞானம் நிராமயம் என்று நூல்கள் அறை-எங்கும் நிறைந்த பராபரமென்றும் விஞ்ஞான மென்றும் நிராமய மென்றும் நூல்கள் கூறுகின்ற, பரம் பிரமமாகும் இதன் உரு பரப்பிரமமாகிய இந்த மூர்த்தியின் திருவுருவமே, ஏக மறை ஆகும் - ஒன்றாயுள்ள வேதமாகும்; இதன் பொருள் - இந்த வேதத்தின் பொருளும், இந்தச் சுந்தரவடிவாய் இங்ஙன் உறை சிவலிங்கமே - இந்தச் சுந்தர மூர்த்தமாய் இங்கே எழுந்தருளிய சிவலிங்கமே ஆகும்; நூல் உணர்ந்த நல்லோர் - உண்மை நூல்களைக் கற்றுணர்ந்த நல்லறிவுடையோர், ஒன்றே என்பர் - (இச்சிவலிங்கமும் வேதமும்) வேறல்ல என்று கூறுவர் எ - று.

நிராமயம்-நோயின்மை. பராபரம் உண்மையையும், விஞ்ஞானம் அறிவையும், நிராமயம் ஆனந்தத்தையும் குறிப்பனவாகக் கொள்க. உருவேயாகும் என்றும், பொருளும் சிவலிங்கமேயாகும் என்றும் ஏகாரத்தையும் ஆகும் என்பதனையும் பிரித்துச் கூட்டியுரைக்க. ஒன்றே யென்ற கருத்தினை,

"மறையுமாய் மறையின் பொருளுமாய் வந்தென்
மனத்திடை மன்னிய மன்னே"

என்னும் திருவாசகம் வலியுறுத்துதல் காண்க. மூற்கூறப்பட்டவர் இச்செய்யுள் முழுவதையும் மாற்றி வேறுபாடங் கொண்டனர். (௨௯)

ஆகையான் மறையு மோன்றே யருமறைப் பொருளுமோன்றே
சாகையா லனந்த மாகித் தழைத்ததச் சாகை யெல்லாம்
ஓகையா லிவனை யேத்து முலகுத யாதிக் கிந்த
ஏகஞ ணையினுன் மூன்று மூர்த்தியா யிருந்தா னன்றே.

(இ-ள்.) ஆகையால் மறையும் ஒன்றே அருமறைப் பொருளும் ஒன்றே-ஆதலால் வேதமும் ஒன்றே அரிய அவ்வேதத்தின் பொருளும் ஒன்றே, சாகையால் அனந்தமாகித் தழைத்தது - (அவ்வேதம்)சாகைகளால் அளவிறந்த பேதமாகித் தழைத்துள்ளது; அ சாகை எல்லாம் ஓகையால் இவனை ஏத்தும்-அந்தச் சாகைகளனைத்தும் மகிழ்ச்சியோடு இவனையே துதிக்கும்; உலகு உதய ஆதிக்கு இந்த ஏகன் ஆணையினுல் மூன்று மூர்த்தியாய் இருந்தான்-உலகத்தின் தோற்ற முதலிய மூன்று தொழிற்கும் இந்த ஒருவனுகிய சொக்கலிங்க மூர்த்தி (தனது) சத்தியால் மூன்று மூர்த்தியாய் இருந்தருளினுன் எ-று.

ஆகையால் 'மறையு மொன்றே அருமறைப் பொருளு மொன்றே என்றது மேற் செய்யுளிற் கூறியதனை அநுவதித்தவாறு; வேதமும் ஒன்றே இறைவனும் ஒருவனே என்னும் பொருள் இரட்டுற மொழிதலாற் கொள்க. உதயாதி-தோற்றம் நிலை இறுதி என்பன; தோற்றுவித்தல் முதலியவற்றுக்கு அயன் மால் உருத்திரனுகி யிருந்தானென்க. ஏகனென்பது இறைவனுக்கோர் பெயர்;

"ஏக னநேக னிருள் கரும மாயையிரண்
டாகவிதை யாருதி யில்"

என்று திருவருட்பயன் கூறுதலுங் காண்க. அன்று, ஏ: அசைகள். இச்செய்யுளையும் திரித்துப் பாடங்கொண்டனர். (௩௦)

மலர்மக ஞகி மூன்று வையமும் படைத்து மாலாய்
அலைவற நிறுத்தி முக்க ணுதியா யழித்தம் மூவர்
தலைவனுய்ப் பரமா காச சரீரியாய் முதலீ றின்றித்
தொலைவருஞ் சோதி யாமிச் சுந்தர விலிங்கந் தன்னில்.

(இ-ள்.) மலர் மகனுகி மூன்று வையமும் படைத்து பிரமனுகி மூன்றுலகங்களையும் ஆக்கி. மாலாய் அலைவு அற நிறுத்தி-திருமாலாகி (உயிர்கள்) வருத்தமற அளித்து, முக்கண் ஆதியாய் அழித்து-மூன்று

கண்களையுடைய உருத்திரனுகி அழித்து, அம்மூவர் தலைவனுய்-அந்த மூன்று மூர்த்திகளுக்குந் தலைவனுகியும், பரமாகாச சரீரியாய் - சிதா காயமே திருமேனியாயுள்ளவனுகியும், முதல் ஈறு இன்றித் தொலைவு அருஞ் சோதியாம் - ஆதி அந்த மில்லாது என்றுங்கெடாத ஒளிவடி வாகியு முள்ள, இ சுந்தர இலிங்கம் தன்னில் - இந்தச் சொக்கலிங்க மூர்த்தி யிடத்தில் எ - று.

நான்முகன் திருமாலினும் சங்காரத் தொழில் நடத்தும் உருத்திர னுக்கு முதன்மை கூறுவார், 'முக்கணுதியாய்' என்ருர். மூவரிடத்து நின்றும் முத்தொழில் நடாத்துபவன் அம்மூவர்க்கும் தலைவனுகிய முதல்வன் ஒருவனே யாமென்பார், 'ஆகி' யென உபசரித்துக்கூறினுர் மூவர் தலைவனுதலை 'மூவர்கோனுய் நின்ற முதல்வன்' என்னும் திருவாசகத்தானும் அறிக. பரம ஆகாசம் - ஞானமாகிய சூக்கும ஆகாயம்; வடமொழி நெடிற்சந்தி. ஞானமே திருவுருவா யென்க.
(௩௧)

[எழுசீரடி யாசிரிய விருத்தம்]

ஆதியி லான்ம தத்துவ மான
வலர்மகன் பாகமு நடுவில்
நீதியில் விச்சா தத்துவ மான
நெடியவன் பாகமு முடிவில்*
ஓதிய சிவதத் துவமென லான
வுருத்திர பாகமு முதிக்கும்
பேதியிம் மூன்றி லெண்ணிறத் துவங்கள்
பிறக்குமிம் மூன்றினு முறையால்.

(இ-ள்.) ஆதியில் ஆன்மதத்துவம் ஆன அலர்மகன் பாகமும் - முதலில் ஆன்ம தத்துவமான பிரமன் பாகமும், நடுவில் நீதியில் விச்சாதத்துவமான நெடியவன் பாகமும் - இடையில் முறைப்படி வித்தியாதத்துவமான திருமாலின் பாகமும், முடிவில் ஓதிய சிவதத்து வம் எனலான உருத்திர பாகமும்-இறுதியில் சிறப்பித் தோதப்பட்ட சிவதத்துவம் என்னலான உருத்திர பாகமும், உதிக்கும் - தோன்றும், பேதி ··இ மூன்றில் - இங்ஙனம் வேறுபட்ட இந்த மூவகைத் தத்து வங்களில். எண் இல் தத்துவங்கள் பிறக்கும் - அளவிறந்தனவாய ஏனைத் தத்துவங்கள் தோன்றும்; இம் மூன்றினும் முறையால் - (இன்னும்) இந்த மூன்று தத்துவங்களினும் முறைப்படி எ-று.

ஆதி-அடிப்பகுதி. முடிவு - மேற்பகுதி. ஆன்ம தத்துவம்-பூதம் ஐந்து, தன்மாத்திரை ஐந்து, ஞானேந்திரியம் ஐந்து, கன்மேந்திரியம் ஐந்து, அந்தக் கரணம் நான்கு ஆகிய இருபத்து நான்குமாம். வித்தியா தத்துவம் - காலம், நியதி, கலை, வித்தை, அராகம், புருடன், மாயை ஆகிய ஏழுமாம். சிவ தத்துவம் - சுத்த வித்தை, ஈச்சுரம், சாதாக்கியம் சத்தி, சிவம் ஆகிய ஐந்துமாம். ஓதிய - ஏனைத் தத்துவங்களினும் சிறந்தனவென்ருேதப்பட்ட;

---

(பா - ம்.) * முடியில்.

"வித்தையோ டீசர் சாதாக் கியஞ்சத்தி சிவங்க ளைந்தும்
சுத்ததத் துவஞ்சி வன்றன் சுதந்தர வடிவமாகும்"

என்று சிவஞானசித்தியார் கூறுதல் காண்க. பேதி - பேதித்த;வேறுபட்ட. இம்மூன்று என்றது சமட்டி தத்துவங்களை யெனவும், எண்ணில் தத்துவங்கள் என்றது ஆன்மாக்கள் தோன்றும் வெவ்வேறாய தத்துவங்களை யெனவும் கொள்க. ஈற்றடி முழுதும் மாற்றியமைத்தனர் ஒருவர். (௯௨)

ஓதரு மகார முகாரமே மகார
முதித்திடும் பிரணவம் விந்து
நாதமோ டுதிக்கும் வியத்ததா ரகத்தி
னல்லகா யத்திரி மூன்று
பேதமாம் பதத்தாற் பிறக்குமிக் காயத்
திரியிரு பேதமாம் பேதம்
யாதேனிற் சமட்டி வியட்டியேன் றிரண்டு
மேதுவாம் வேட்டவைக் கெல்லாம்.

(இ - ள்.) ஓது அரும் அகாரம் உகாரம் மகாரம் உதித்திடும் - ஓதுதற்கு அரிய அகாரமும் உகாரமும் மகாரமும் தோன்றும்; பிரணவம் விந்து நாதமோடு உதிக்கும்-பிரணவமானது விந்து நாதங்களோடும்அவை கூடுதலாற் றோன்றும்; வியத்த தாரகத்தில் - சிறந்த அப் பிரணவத்தில்,நல்ல காயத்திரி மூன்றுபேதமாம் பதத்தால் பிறக்கும்-நன்மை தருகின்ற காயத்திரி மூன்று பேதமாகிய பதங்களாலேதோன்றும்; இக்காயத்திரி இருபேதம் ஆம்-இந்தக் காயத்திரி இரண்டு வேற்றுமையாகும்; பேதம் யாது எனில்-அவ்வேற்றுமை என்னவென்றால், சமட்டி வியட்டி - சமட்டி வியட்டி யென்பனவாம்; என்ற இரண்டும் வேட்டவைக்கு எல்லாம்ஏதுவாம்-என்று கூறப்பட்ட இவ்விரண்டும் விரும்பிய பொருள்களனைத்தையும் பெறுதற்குக் காரணங்களாகும் எ - று.

அகரம், உகரம், மகரம், விந்து, நாதம் என்னும் ஐந்துங் கூடிப் பிரணவமாகும்; இவை சூக்கும பஞ்சாக்கரம் எனவும் பெறும்;

"அகார வுகார மகங்காரம் புத்தி
மகார மனஞ்சித்தம் விந்துப்—பகாதிவற்றை
நாத முளவடிவா நாடிற் பிரணவமாம்
போதங் கடற்றிரையே போன்று"

என்னும் சிவஞானபோத வெண்பாவும், அதற்கு மாதவச் சிவஞான யோகிகள் உரைத்த விரிவுரையும் ஈண்டு உணரற்பாலன. வியத்த-மேன்மையுடைய. தாரகம் - பிரணவம். மூன்று வாக்கிய வடிவமான பதங்களாலென்க. பேதமென்னும் பொதுமை பற்றி 'யாதெனில்'என ஒருமை கூறினர். சமட்டி, வியட்டி என்பவற்றின் பொருள் முன் உரைக்கப்பட்டது. முற்கூறிய பதிப்பாளர் இச் செய்யுளை முழுதும் மாற்றியமைத்தனர். (௯௩)

இன்னவை யிரண்டு மிவனருள் வலியா
லீன்றநான் மறையையங் நான்கும்
பின்னிவ னருளா லளவில வான
பிரணவ மாதி மந்திரமும்
அன்னவா றுன தாரகத் தகார
மாதியக் கரங்களு முதித்த
சொன்னவக் கரத்திற் சிவாகம நூலிச்
சுரவர னடுமுகத் துதித்த.

(இ-ள்.) இன்னவை இரண்டும் இவன் அருள் வலியால் ஈன்ற நான் மறையை - இவை இரண்டும் இந்தச் சொக்கலிங்க மூர்த்தியின் திருவருட் சத்தியால் நான்கு வேதங்களையும் தந்தன; அ நான்கும் - அந்த நான்கு வேதங்களும், பின்-பின்பு, இவன் அருளால் அளவு இல ஆன-இவன் திருவருளால் அளவிறந்தனவாய் விரிந்தன; பிரணவம் ஆதி மந்திரமும் அன்னவாறு ஆன - பிரணவத்தை முதலாகவுடைய மந்திரங்களும் அவ்வாறே விரிந்தன; தாரகத்து அகாரம் ஆதி அக்கரங்களும் உதித்த - (இன்னும்) அப் பிரணவத்தில் அகர முதலிய எழுத்துக்களெல்லாம் தோன்றின; சொன்ன அக்கரத்தின் சிவாகம நூல் இச்சுரவரன் நடு முகத்து உதித்த - கூறிய அவ்வெழுத்துக்களினுலே சிவாகம நூல் இச்சொக்கலிங்க மூர்த்தியின் நடுமுகத்தில் தோன்றின எ - று.

ஈன்ற, உதித்த என்பன அன்சாரியை பெருது வந்த பலவின்பால் முற்று. ஆன, ஆயின வென்பதன் விகாரம். சுர வரன்-தேவர்களில் மேலாயவன். நடு முகம்-ஈசான முகம். சிவாகமம்-காமிகம், யோகசம், சிந்தியம், காரணம், அசிதம், சிப்தம், சூக்குமம், சகச்சிரம், அஞ்சுமான், சுப்பிரபேதம், விசயம், நிச்சுவாசம், சுவாயம்புவம், ஆக்கினேயம், வீரம், இரௌரவம், மகுடம், விமலம், சந்திரஞானம், முகவிம்பம், புரோற்கிதம், இலளிதம், சித்தம், சந்தானம், சருவோக்தம், பாரமேச்சுரம், கிரணம், வாதுளம் என இருபத்தெட்டாம்; இவை தனித்தனி ஞானபாதம், யோகபாதம், கிரியாபாதம், சரியாபாதம் என நான்கு பாதங்களை உடையனவாம். இச் செய்யுளையும் பிறர் மாற்றியமைத்தனர். (ஙசு)

கீட்டிசை முகத்தோன் றடுத்தா லைந்திற்
கிளைத்ததா லிருக்கது தென்பால்
ஈட்டிய விரண்டாம் வேதநூ றுருவோ
டெழுந்தது வடதிசை முகத்தில்
நீட்டிய சாம மாயிர முகத்தா
னிமிர்ந்தது குடதிசை முகத்தில்
நாட்டிய வோன்ப துருவோடு கிளைத்து
நடந்தது நான்கதா மறையே.

(இ - ள்.) கீழ்த்திசை முகத்து ஒன்று அடுத்த நாலைந்தில் இருக்கு கிளைத்தது - தற்புருட முகத்திலே இருபத்தொரு சாகைகளோடு இருக்கு வேதம் தோன்றியது; தென்பால் இரண்டாம் வேதம் ஈட்டிய நூறு உருவோடு எழுந்தது-அகோர முகத்தில் யசுர் வேதம் நெருங்கிய நூறு சாகைகளோடும் தோன்றியது; வடதிசை முகத்தில் சாமம் நீட்டிய ஆயிரம் முகத்தால் நிமிர்ந்தது - வாமதேவ முகத்தில் சாமவேதம் நீண்ட ஆயிரம் சாகைகளோடும் தோன்றியது; குடதிசை முகத்தில் நாட்டிய ஒன்பது உருவொடு கிளைத்து நான்காம் மறை நடந்தது - சத்தியோசாத முகத்தில் நாட்டப்பட்ட ஒன்பது சாகைகளோடுந் தோன்றி அதர்வவேதம் நடந்தது எ - று.

கீழ்த்திசை என்பது கிட்டிசையென மருவிற்று. ஒன்றடுத்த நாலைந்து-இருபத்தொன்று. ஈண்டிய, நீண்ட என்பன ஈட்டிய, நீட்டிய என விகாரமாயின. இருக்கது, நான்கது என்பவற்றில் அது பகுதிப்பொருள் விகுதி. ஆல், ஆம், ஏ என்பன அசைகள். (நடு)

அருமறை நால்வே றாகையால் வருண
மாச்சிர மங்களு நான்காந்
தருமம்யா காதி கருமமு மறையின்
றகைமையிற் றோன்றின மறையுங்
கருமநூன் ஞான நூலென விரண்டாங்
கருமநூ லிவனருச் சனைக்கு*
வரும்வினை யுணர்த்து ஞானநூ லிவன்றன்
வடிவிலா வடிவினை யுணர்த்தும்.

(இ - ள்.) அருமறை நால் வேறு ஆகையால்-அரிய வேதங்கள் நான்குவகை ஆகலின், வருணம் ஆச்சிரமங்களும் நான்காம்-வருணங்களும் நிலைகளும் தனித்தனி நான்கு ஆகும்; தருமம் யாகாதி கருமமும் மறையின் தகைமையின் தோன்றின - தருமங்களும் வேள்வி முதலிய வினைகளும் வேதங்களின் நெறியிலே தோன்றின; மறையும் கருமநூல் ஞானநூல் என இரண்டாம் - அவ்வேதங்களும் கரும காண்டமும் ஞானகாண்டமுமென இரண்டு வகைப்படும்; கருமநூல் இவன் அருச்சனைக்கு வரும்வினை உணர்த்தும் – கரும காண்டமானது இச் சொக்கலிங்கமூர்த்தியின் பூசனைக்குரிய வினைகளை அறிவிக்கும்; ஞான நூல் இவன் தன் வடிவிலா வடிவினை உணர்த்தும் - ஞான காண்டமானது இவனது சச்சிதானந்த வடிவத்தை அறிவிக்கும் எ - று.

ஆச்சிரமம்-நிலை; அது பிரமசரியம், கிருகத்தம், வானப்பிரத்தம், சன்னியாசம் என நான்காம். தகைமை-கூறுபாடு. நூல் என்றது காண்டத்தை. வடிவிலா வடிவு-சொரூப மெனப்படும் சச்சிதானந்த வடிவு; நிட்களமுமாம். (நசு)

முதனுகர் நீராற்சினை குழைத்† தாங்கிம்
முழுமுதற் கருத்துநல் லவியின்
பதமிவன் வடிவப் பண்ணவர் பிறர்க்குந்
திருத்தியாம் பரனிவன் முகத்தின்

(பா - ம்.) * இவனையர்ச்சிக்க. † கிளைத்தாங்கு.

விதமுறு நித்த மாதிமூ வினைக்கும்
வேண்டியாங்* குலகவர் போகங்
கதிபெற வியற்றுஞ் சிவார்ச்சனை வினைக்குங்
காரண மிச்சிவ கோசம்.

(இ-ள்.) முதல் நுகர் நீரால் சினை குழைத்தாங்கு-வேர் நுகரும் நீரினாலே கிளைகள் தளிர்த்தாற்போல, இம்மூ முதற்கு அருத்தும் நல் அவியின் பதம்-இம்மூழுமுதற் கடவுளுக்கு ஊட்டும் நல்ல அவி யுணவு, இவன் வடிவப் பண்ணவர் பிறர்க்கும் திருத்தியாம் - இவ் விறைவனது வடிவமாகிய தேவர்கள் பிறருக்கும் நிறைவினைச் செய் யும்; பரன் இவன் முகத்தின் - இப்பரமன் திருமுன்னர், விதம் உறு நித்தம் ஆதி மூவினைக்கும் - (இயற்றும்) வெவ்வேறு வகைப்பட்ட நித்திய முதலிய மூன்று வினைகளுக்கும், உலகவர் போகம் கதி வேண்டியாங்கு பெற இயற்றும் சிவார்ச்சனை வினைக்கும்-உலகத்தவர் இன்பப் பேற்றினையும் வீடு பேற்றினையும் வேண்டிய வண்ணமே பெறும் பொருட்டுச் செய்யும் சிவார்ச்சனைக்கும், இச் சிவகோசம் காரணம்-இச்சிவலிங்கமே காரணமாயுள்ளது எ - று.

முதல் நுகர் நீரால் சினை குழைத்தாங்கு என்னும் இவ்வுவமை, முன் மூர்த்தி விசேடப் படலத்திலும்,

"வேரூட்டு நீர்ப்போய்
மற்றைய சினைகளெல்லாந் தழைவிக்கு மரத்தின்"

என இவ்வாசிரியராற் கூறப்பட்டது. அவியின் பதம் - அவியாகிய பதம்; இன்: சாரியை. ஏனைத்தேவரெல்லாம் உடலாக இவன் உயி ராக நிற்றலின் 'பிறர்க்குந் திருத்தியாம்' என்றார். மூவினை-நித்தியம், நைமித்தியம், காமியம் என்பன. போகமும் கதியும் பெற எனவிரிக்க. அருச்சனையாகிய வினை. சிவகோசம் - சிவலிங்கம். இச்செய்யுளின் பிற்பகுதி பிறரால் மாற்றி யுரைக்கப்பட்டது. (௬எ)

மறைபல முகங்கோண் டலறிவா யினைத்து,
மயங்கவே றகண்டபூ ரணமாய்
நிறைபரம் பிரம மாகுமிக் குறியைக்
கருமநன் னெறிவழாப் பூசை
முறையினு ஞான நெறியினிப் பொருளை
யருளினுன் முயக்கற முயங்கும்
அறிவினுந் தெளிவ துமக்குநா முரைத்த
அருமறைப் பொருள்பிறர்க் கரிதால்.

(இ-ள்.) மறை பல முகம் கொண்டு அலறி வாய் இளைத்து மயங்க-வேதங்கள் பல முகங்களைக்கொண்டு (தேடியு முணராது) கதறி வாய் சோர்ந்து மயங்க, வேறு அகண்ட பூரணமாய் நிறை பரம் பிரமமாகும் இக்குறியை-(அவற்றிற்கு) வேறாய் அகண்ட பரிபூரண

(பா-ம்.) * வேண்டியயங்கு.

மாய் நிறைந்த சொரூப சிவமாகிய இச்சிவலிங்கத்தை, நல்கருமம் நெறிவழாப் பூசை முறையினும் - நல்ல கரும காண்டத்திற் கூறிய நெறியினின்றுந் தவறாத பூசை முறையினாலும், ஞான நெறியின் - ஞான காண்டத்திற் கூறிய நெறியினின்று, அருளினால் இ பொருளை முயக்கு அறமுயங்கும் அறிவினும் - திருவருளால் இதனைக் கலவாது கலக்கும் உணர்வினாலும், தெளிவது-தெளிக; உமக்கு நாம் உரைத்த அருமறைப் பொருள் - நுங்கட்கு நாமுணர்த்திய அரிய வேதங்களின் உட்கிடைப் பொருள், பிறர்க்கு அரிது-ஏனையோர்க்கு அறிதற்கரிது எ - று.

முகம் என்றது சாகையினை. சொரூப சிவமே இவ்விலிங்கமாக வுள்ள தென்றார். திருவருளா லன்றி உணர்தல் கூடா தென்பார் 'அருளினால்' என்றார். முயக்கற முயங்கல்-ஒன்று மாகாது வேறு மாகாது கலத்தல்; சிவோகம் பாவனை யெனலுமாம். தெளிவது:வியங்கோள். ஆல்: அசை. 'உறை பரம்' என்றும், 'உறுகன்ம நெறிவழாப் பூசை என்றும் பாடங் கொண்டார் பிறர். (௩அ)

[அறுசீரடியாசிரியவிருத்தம்]

கருமத்தான் ஞான முண்டாங் கருமத்தைச் சித்த சுத்தி
தருமத்தா லிகந்த சித்த சுத்தியைத் தரும நல்கும்
அருமைத்தாந் தருமத் தாலே சாந்தியுண் டாகு மாண்ட
பெருமைத்தாஞ் சாந்தி யாலே பிறப்பதட் டாங்க யோகம்.

(இ-ள்.) கருமத்தால் ஞானம் உண்டாம் - நல்வினையினாலே ஞானம் கைகூடும்; கருமத்தை சித்த சுத்தி தரும்-அந்நல்வினையை உளத்தூய்மை கொடுக்கும்; மத்தால் இகந்த சித்த சுத்தியைத் தருமம் நல்கும்-மயக்கத்தினின்று நீங்கிய உளத் தூய்மையை அறம் கொடுக்கும்; அருமைத்து ஆம் தருமத்தாலே சாந்தி உண்டாகும்-அருமையை யுடையதாகிய அவ்வறத்தாலே சாந்தி உண்டாகும்; மாண்ட பெருமைத்து ஆம் சாந்தியாலே அட்டாங்க யோகம் பிறப்பது-மாட்சிமைப்பட்ட பெருமையை யுடைய அச் சாந்தியினாலே அட்டாங்க யோகந் தோன்றும் எ-று.

கருமம் என்றது சிவபூசனையை என்றும், தருமம் என்றது சிவ புண்ணியத்தை யென்றும் கொள்க. கருமத்தால் ஞானமுண்டா மென்பது,

"கிரியையென மருவுமவை யாவுஞானங் கிடைத்தற்கு நிமித்தம்"

எனச் சிவப்பிரகாசம் கூறுதலானறிக; சிவனை நோக்கிச் செய்யும் உண்மைச் சரியை கிரியை யோகங்களினாலே ஞான முண்டாமென்பது கருத்தாகக் கொள்க. மத்தத்தால் என்பது விகாரமாயிற்று; ஆல் இன்னுருபின் பொருளில் வந்தது. சாந்தி - அகக்கரண அடக்கம். அட்டாங்கயோகம் முன் உரைத்தமை காண்க. சிவபுண்ணியத்தால் சித்த சுத்தியும், அதனால் சிவபூசனையாகிய கிரியையும், அதனால்சாந்தியும், அதனால் யோகமும், அதனால் ஞானமும் முறையே உண்டாமென்பது இச்செய்யுளின் கருத்தாகும்.

"நித்தியமை மித்தியகன் மங்கணிட்கா மியமாகப்
பத்தியுறச் செய்வதனாற் பாவமெலா நாசமுறும்
ஒத்தியன்மற் றதனானே யொழியாம லுறுசித்த
சுத்தியுள தாமென்று சொல்லுமால் மறையனைத்தும்"

என்னும் சூதசங்கிதைச் செய்யுள் இங்கு உணர்தற் பாலது. இது முதல் நான்கு செய்யுட்களையும் பிறர் பாடம் மாற்றி யமைத்தனர் (௩௯)

கிரியையான் ஞானந் தன்னாற் கிளர்சிவ பத்தி பூசை
தரிசனஞ் சைவ லிங்க தாபனஞ் செய்த லீசற்
குரியமெய் யன்பர் பூசை யுருத்திர சின்னந் தாங்கல்
அரியதே சிகன்பாற் பத்தி யனைத்தையுந் தெரிய லாகும்.

(இ - ள்.) கிரியையால் ஞானம் தன்னால் - கிரியையினாலும் ஞானத்தினாலும், கிளர் சிவபத்தி பூசை தரிசனம் - விளக்கந்தரும் சிவபத்தியும் சிவபூசையும் சிவதரிசனமும், சைவலிங்க தாபனம் செய்தல்-சிவலிங்கம் தாபித்தலும், ஈசற்கு உரிய மெய் அன்பர்பூசை - சிவபெருமானுக்குரிய மெய்யடியார் பூசையும், உருத்திர சின்னம் தாங்கல் - சிவசின்னந்தாங்குதலும், அரிய தேசிகன் பால் பத்தி - அரிய குருபத்தியும் ஆகிய இவை, அனைத்தையும் தெரியலாகும் - எல்லாவற்றையும் அறியலாகும் எ - று.

ஞானத்தாற் சீவன் முத்தரானவர்களும் பாச வாசனை தாக்காமைப் பொருட்டுத் திருவைந் தெழுத்தோதலும், சிவனடியார் திருவேடத்தையும் திருக்கோயிலையும் சிவனெனவே தேறி வழிபடுதலும் செய்வராகலின் 'ஞானந்தன்னால்' என்றுங் கூறினார், வேதத்தின் கரும காண்டத்தாலும் ஞான காண்டத்தாலும் என்றும், ஆகமத்தின் கிரியாபாதத்தாலும் ஞான பாதத்தாலும் என்றும் உரைத்தலுமாம். (௪0)

மறைவழி மதங்கட் கெல்லா மறைபிர மாணம் பின்சென்
றறைதரு மிருதி யெல்லாம் வைக்கனு குணமா மின்ன
முறையினான் மார்த்த மென்று மொழிவதம் மார்த்தஞ் சேர்ந்த
துறைகள்வை திகமா மேலாச் சொல்வதிச் சுத்த மார்க்கம்.

(இ - ள்.) மறைவழி மதங்கட்கு எல்லாம் மறை பிரமாணம் - வேதத்தின் வழிப்பட்ட மதங்களனைத்திற்கும் வேதம் பிரமாணமாகும்; பின்சென்று அறைதரும் மிருதி எல்லாம் அவைக்கு அனுகுணமாம் - அவ்வேதத்தின் வழியேசென்று அதற்குப் பொருந்தக் கூறும் மிருதிகளனைத்தும் அம்மதங்களுக்கு ஏற்பனவாகும்; இன்ன முறையினால் மார்த்தம் என்று மொழிவது - இங்ஙனம் வேதத்திற்குப் பொருந்தக் கூறும் முறையினாலே அம்மிருதிக் கொள்கைகள் மார்த்தம் என்று கூறப்படும்; அம்மார்த்தம் சேர்ந்த துறைகள் வைதிகம் ஆம் - அந்த மார்த்தத்தைத் தழுவிய வேத நெறிகள் வைதிகம் என்று கூறப்படும்; மேலாச் சொல்வது இச் சுத்த மார்க்கம்-அவற்றுள் மேன்மையுடைத்தாகச் சொல்லப்படுவது இந்தச் சுத்த சன்மார்க்கமாகிய வைதிகசைவமாகும் எ - று.

'மறைவழி மதங்கட்கெல்லாம் மறை பிரமாணம்' என்றமையால் வேதம் பொதுநூல் என்பதும், வேதாந்தத் தெளிவாகிய சைவசித்தாந்தங் கூறும் சிவாகமம் சிறப்பு நூல் என்பதும் பெறப்படும்;

"வேதநூல் சைவநூ லென்றிரண்டே நூல்கள்
வேறுரைக்கு நூலிவற்றின் விரிந்த நூல்கள்"

என்றும்,

"மிருதிபுராணங் கலைகண் மற்றுமெல்லாம்
மெய்ந்நூலின் வழிபுடையாம்"

என்றும் சிவஞானசித்தியார் கூறுவன நோக்கற்பாலன.

'பின்சென்று அறைதரும்' என்றமையால் மிருதிகளுள்ளும் வேதத்திற்குமுரணாகாதவையே கொள்ளற்பாலன வென்பது பெற்றும். அநுகுணம் - பொருந்துவது, உதவியாவது. மார்த்தமென்றும் ஓர் பெயர் கூறுவது என்க. சுத்தமார்க்கம் என்றது வைதிக சைவத்தை; இதனை,

"சன்மார்க்கஞ் சகலகலை புராண வேத
சாத்திரங்கள் சமயங்கள் தாம்பலவு முணர்ந்து
பன்மார்க்கப் பொருள் பலவுங் கீழாக மேலாம்
பதிபசுபா சந்தெரித்துப் பரசிவனைக் காட்டும்"

என்னும் சித்தியார் அருண்மொழியாலும்,

"அந்தோவி ததிசயமிச் சமயம் போலின்
றறிஞரெல்லா நடுவறிய வணிமா வாதி
வந்தாடித் திரிபவர்க்கும் பேசா மோனம்
வைத்திருந்த மாதவர்க்கு மற்று மற்றும்
இந்த்ராதி போகநலம் பெற்ற பேர்க்கும்
இதுவன்றித் தாயகம்வே றில்லை யில்லை
சந்தான கற்பகம்போ லருளைக் காட்டத்
தக்கநெறி யிந்நெறியே தான்சன் மார்க்கம்"

என்னும் தாயுமானசுவாமிகள் திருப்பாட்டாலும் தெளிக. (௪௧)

[எழுசீரடி யாசிரிய விருத்தம்]

தெருட்பெறு போகம் வீடுகா ரணமாய்ச்
சிவமய மாமறைப் பொருளை
இருட்கெட வுரைத்தே மிப்பொருட் கதிக
மில்லையிப் பேருளேலா முமக்கு
மருட்கெடத் தெளிவ தாகென வினைய
வழிவழா மாதவர் புறத்தை
அருட்கையால் தடவி யிலிங்கத்துட் புகுந்தா
னருள்பழுத் தன்னதே சிகனே.

(இ-ள்.) தெருள் பெறு போகம் வீடு காரணமாய் - தெளிவு பெற்ற போகத்திற்கும் வீட்டிற்கும் காரணமாகி, சிவமயமாம் மறைப் பொருளை-சிவமயமாகிய மறைகளின் பொருளை, இருள் கெட உரைத்தேம் - அறியாமை நீங்கக்கூறினேம்; இ பொருட்கு அதிகம் இல்லை - (நாம் கூறிய) இந்தப் பொருளுக்கு மேலான பொருள் இல்லை; இ பொருள் எல்லாம் உமக்கு மருள்கெட தெளிவது ஆகென-இப்பொருளனைத்தும் நுமக்கு மயக்கந்தீர விளங்குவதாக என்று, அருள் பழுத்தன்ன தேசிகன் - அருள் கனிந்தாலொத்த வடிவத்தையுடைய சிவபெருமானாகிய குரவன், இனைய வழிவழா மாதவர் புறத்தை - இந்த வழியினின்றும் வழுவாத முனிவர்கள் முதுகை, அருள் கையால்தடவி இலிங்கத்துள் புகுந்தான்-அருளாகிய தமது திருக்கரத்தாலே தடவிச் சிவலிங்கத்துட் புகுந்தருளினான் எ - று.

போகத்திற்கும் வீட்டிற்கும் என விரிக்க. தெளிவது: பன்மையிலொருமை வந்தது. ஆகென: விகாரம். "அரன்றன் கரசரணாதி சாங்கம் தருமருள்" என்பதனால், அருளாகிய கை என உரைக்கப்பட்டது. பழுத்தாலன்ன என்பது தொக்கது. (சஉ)

ஆகச் செய்யுள் - ககசுரு.

---

## கஎ. மாணிக்கம்விற்ற படலம்

[கலிநிலைத்துறை]

சுகந்த வார்பொழின் மதுரையெம் பிரான்றன துணைத்தாள்
உகந்த வாவறு கண்ணுவ முனிமுத லோதும்
அகந்த வாதபே ரன்பருக் கருமறைப் பொருளைப்
பகர்ந்த வாறிது மாணிக்கம் பகர்ந்தவா பகர்வாம்.

(இ - ள்.) சுகந்தம் வார் பொழில் மதுரை எம்பிரான் - நறுமண முடைய நெடிய சோலைகள் சூழ்ந்த மதுரைப்பதியில் எழுந்தருளி யிருக்கும் எம்பெருமானாகிய சோமசுந்தரக்கடவுள், தன துணைத் தாள் உகந்து அவா அறு கண்ணுவ முனி முதல் ஓதும் - தன்னுடைய இரண்டு திருவடிகளையும் பற்றி (யான் என தென்னும் இருவகைப்) பற்றும் நீங்கிய கண்ணுவர் முதலாகக் கூறப்படும், அகம் தவாத பேர் அன்பருக்கு - உள்ளத்தினீங்காத பெரிய அன்பினையுடைய முனி வர்களுக்கு, அருமறைப் பொருளைப் பகர்ந்தவாறு இது - அரிய வேதங் களின் பொருளைக் கூறிய திருவிளையாடல் இதுவாகும்; மாணிக்கம் பகர்ந்தவா பகர்வாம் - (இனி அப்பெருமான்) மாணிக்கம் விற்ற திரு விளையாடலைக் கூறுவாம் எ - று.

சுகந்தம் - நன்மணம். தன: அகரம் ஆறும் வேற்றுமைப் பன்மை யுருபு. உகந்து - விரும்பி; ஈண்டு விரும்பிப்பற்றி யென்னும்பொருட்டு;

> "முதல்வன் பாதமே
> பற்றாநின் றாரைப் பற்றா பாவமே"

என்னும் தமிழ்மறை சிந்திக்கற்பாலது. ஓதப்படும் அன்பருக்கு என்க. தவாத என்னும் பெயரெச்சம் அன்பர்என்பதன் பகுதியைக்கொண்டு முடியும். பகர்தல் - விற்றல், கூறுதல். பகர்ந்தவா: ஈறு தொக்கது. (க)

அன்ன நாள்வயின் வீரபாண் டியற்கணங் கனைய
மின்ன னாருளும் போகமும் விளைநில மனைய
பொன்ன னார்பெறு காளைய ரைங்கணைப் புத்தேள்
என்ன வீறினர் வான்பயிர்க் கெழுகளை யென்ன.

(இ - ள்.) அன்ன நாள் வயின் - அக்காலத்திலே, வீரபாண்டியற்கு அணங்கு அனைய மின்னனாருள் - வீரபாண்டியனுக்குத் தெய்வ மகள் போலும் மகளிருள், ஐம்போகமும் விளை நிலம் அனைய பொன் அனார் - ஐந்து போகங்களும் விளைகின்ற நிலத்தை யொத்த காமக் கிழத்தியர், பெறு காளையர் - பெற்ற புதல்வர்கள், வான் பயிர்க்கு எழு களை என்ன - சிறந்த பயனைத் தரும் பயிருக்கு மாறாக வளர்கின்ற களை போல, ஐங்கணைப் புத்தேள் என்ன வீறினர் - ஐந்து பாணங்களை யுடைய மதவேள் என்று கூறுமாறு வளர்ந்தனர் எ - று.

மின் அனார் - மின்னை யொத்தவர்; பொன் அனார் - திருமகளை யொத்தவர்; இரண்டும் கிழத்தியர் என்னும் பெயர் மாத்திரமாய் நின்

றன. மனைவியையும் உளப்படுத்தி 'மின்னனாருள்' என்றார். பொன்னனார் காமக் கிழத்திய ரென்பதனைப் பின் ஏழாஞ் செய்யுளிற் கூறுவதானறிக. ஐம்போகம் - ஐம்புல இன்பங்கள்;

"கண்டுகேட் டுண்டுயிர்த் துற்றறியு மைம்புலனும்
ஒண்டொடி கண்ணே யுள" (திருக்குறள்-௧௧௦௧)

என முப்பானூல் கூறுவது காண்க. ஐந்து போகம் விளையும் நிலம் போல் ஐந்து போகமும் விளையும் கிழத்தியர் என நயம் படக் கூறினார்; நிலத்திற்கு ஐம்போகமாவது ஆண்டொன்றில் ஐந்து முறை விளையும் விளைவு. பயிருக்கு மாறாக வளர்கின்ற வென விரிக்க. தருக்கி வளர்ந்தாரென்பார், 'வீறினார்' என்றார். புத்தேளென்ன அழகிற் சிறந்தும், களையென்ன மாறாகியும் வளர்ந்தா ரென்க. (௨)

பின்ன ரும்பெறற் குமரனைப் பெறுவது கருதி
மன்ன னுங்குலத் தேவியுங் கயற்கணி மணாளன்
தன்னை நோக்கியட் டமிசதுர்த் தசிமதி வாரம்
இன்ன நோன்புநோற் றொழுகுவா ரிறைவனின் னருளால்.

(இ - ள்.) பின் - பின்பு, அரும் பெறல் குமரனைப் பெறுவது கருதி-பெறுதற் கரிய பண்புடைய மகனைப்பெறுவது குறித்து, மன்னனும் குலத் தேவியும் - அரசனும் அவன் குல மனைவியும், கயற்கணி மணாளன் தன்னை நோக்கி - அங்கயற் கண்ணம்மையின் மணவாளனாகிய சொக்கலிங்கப் பெருமானை நோக்கி, அட்டமி சதுர்த்தசி மதி வாரம் இன்ன நோன்பு நோற்று ஒழுகுவார்-அட்டமி நோன்புசதுர்த்தசி நோன்பு சோமவார நோன்பு ஆகிய நோன்புகளை அனுட்டித்து ஒழுகுவாராயினர்; இறைவன் இன் அருளால் - இறைவனது இனிய திருவருளால் எ - று.

அரும் பெறற் குமரன்-குலமனைவி வயிற்றுப் பிறந்து அரசாளுதற்குரியனாகும் பண்புடைய புதல்வன். பெறலரும் என மாறுக. குலத்தேவி-முறைப்படி மணந்த பட்டத்து மனைவி. அட்டமி முதலியவற்றோடு நோன்பு என்பதனைக் கூட்டுக. நோன்பு நோற்றொழுகுவார் என்றமையால், நெடு நாளாகியும் மனைவி வயிற்றுப் புதல்வன் பிறந்திலன் என்பது தெளிவாகின்றது. (௩)

சிறிது நாள்கழிந் தகன்றபின் கங்கையிற் சிறந்த
மறுவி லாவட மீன்புரை கற்பினாள் வயிற்றிற்
குறிய வாலவித் தங்குரம் போன்றொரு குமரன்
நிறையு நீருல கருட்குடை நிழற்றவந் துதித்தான்.

(இ-ள்.) சிறிதுநாள் கழிந்து அகன்ற பின்-சில நாட்கள் சென்று நீங்கிய பின், கங்கையில் சிறந்த மறுவுஇலா வடமீன் புரைகற்பினாள் வயிற்றில் - கங்கையினுஞ் சிறந்த தூய்மையுடைய குற்றமில்லாத அருந்ததிபோலும் கற்பினையுடைய அத்தேவியின் வயிற்றிலே, குறிய ஆலம் வித்து அங்குரம் போன்று-சிறிய ஆலம் வித்தில் தோன்றிய முளைபோல, நிறையும் நீர் உலகு அருள் குடை நிழற்ற ஒரு குமரன்

வந்து உதித்தான்-கடல் சூழ்ந்த உலகிற்கு அருளுடன் கூடிய குடையால் நிழலைச் செய்ய ஒரு புதல்வன் வந்து தோன்றினன் எ - று.

கங்கை தூய்மைக்கு எடுத்துக் காட்டு;

''வான்யாறன்ன தூய்மையும்''

என்னும் ஆத்திரையன் பேராசிரியனது சூத்திரமும் காண்க. சிறந்த என்னும் பெயரெச்சமும், புரை என்னும் பெயரெச்ச முதனிலையும் முறையே கற்பினள் என்பதன் விகுதியையும், பகுதியையும்கொண்டு முடியும். அங்குரம் போன்று நிழற்றுமாறு உதித்தான் என்க. சிறிய ஆலம் வித்திற் றோன்றிய முளை பின் பணைத்து வளர்ந்து பெரிய நிழலைச் செய்வதுபோல் இவ்விளங்குமரன் ஒருவனே பின் உலக முழுதும் நிழல் செய்வான் என்றார்;

''ஆலம்வித் தனைய தெண்ணி''

என்றார் சிந்தாமணியுடையாரும்; ஆலம் வித்து நிழல் செய்தல்,

''உறக்குந் துணையதோ ராலம்வித் தீண்டி
இறப்ப நிழற்பயந் தாங்கு''

என்று பிறராலும் கூறப்பட்டது. நிறையுநீர்-நிறைந்த நீரினையுடையது; கடல். குடை நிழல் செய்தலை, ''கண்பொர விளங்குநின் விண்பொருவியன் குடை, வெயின்மறைக் கொண்டன்றோ வன்றே வருந்திய, குடிமறைப்பதுவே'' என்னும் புறப்பாட்டாலறிக. (௪)

அத்த னிச்சிறு குமரனுக் ககங்களி சிறப்ப
மெய்த்த நூன்முறை சாதக வினைமுதல் வினையும்
வைத்த னன்பொலி வெய்துநாள் மன்னவ னூழ்வந்
தொத்த நாள்வர வேட்டைபுக் குழுவைகோட் பட்டான்.

(இ - ள்.) அத்தனிச் சிறுகுமரனுக்கு - அந்த ஒப்பற்ற சிறிய புதல்வனுக்கு, அகம் களி சிறப்ப-மனமகிழ்ச்சி மிக, மெய்த்த நூல் முறை-உண்மையையுடைய வேத நூலிற் கூறிய முறைப்படி, சாதக வினை முதல் வினையும் வைத்து-சாதகன்ம முதலாகப் பிறசடங்குகளையுஞ் செய்து முடித்து, அன்னான் பொலிவு எய்துநாள் - அப்புதல்வன் விளக்கமுடன் வளர்ந்து வருங்காலத்தில், மன்னவன் - வீரபாண்டியன், ஊழ்வந்து ஒத்த நாள் வர-போகூழ் வந்து பொருந்திய நாள் வந்தமையால் வேட்டை புக்கு உழுவை கோட்பட்டான் - வேட்டமாடுவான் சென்று புலியினாற் பற்றப்பட்டான் எ - று.

தனிக் குமரன் - ஒருவனாகிய குமரனுமாம். மன்னவன் வைத்து எய்து நாள் புக்குக் கோட்பட்டான். என்க. வேட்டையிற் புக்கென ஏழாம் வேற்றுமை, இது சிறுபான்மை இயல்பாதல் கொள்க. உழுவை கோட்பட்டான்: மூன்றாம் வேற்றுமையில் தம்மினாகிய தொழிற்சொல் முன்வர வலி யியல்பாயிற்று. (௫)

வேங்கை வாய்ப்படு மீனவன் விண்விருந் தாக
வாங்கு நூன்மருங் கிறக்கர மார்பெறிந் தாரந்
தாங்கு கொங்கைசாந் தழிந்திடத் தடங்கண்முத் திறைப்ப
வெங்க மாதர்போ னகருளார் யாவரு மிரங்க.

(இ - ள்.) வேங்கை வாய்ப்படும் மீனவன் விண் விருந்து ஆக - (இங்ஙனம்) புலியின் வாய்ப்பட்ட வீரபாண்டியன் விண்ணுலகிலுள்ள தேவர்க்கு விருந்தாயினமையால், வாங்கு நூல் மருங்கு இற கரம் மார்பு எறிந்து - துவளுகின்ற நூல்போலும் இடையானது முறியுமாறு கையினால் மார்பில் அடித்துக்கொண்டு, ஆரம் தாங்கு கொங்கை சாந்து அழிந்திட - முத்து மாலையைத் தாங்கிய கொங்கைகளிற் பூசிய சாந்து அழிய, தடம் கண் முத்து இறைப்ப - நீண்ட கண்கள் நீர்த்துளி சிந்த, மாதர் ஏங்க-மகளிர் வருந்தவும், பொன் நகருளார் யாவரும் இரங்க - அழகிய நகரத்திலுள்ள அனைவரும் கவலவும் எ - று.

உயிர் துறந்து விருந்தாயினானென்க. ஈண்டு அறஞ் செய்தமையால் விண் விருந்தாயினான்;

"செல்விருந் தோம்பி வருவிருந்து பார்த்திருப்பான்
நல்விருந்து வானத் தவர்க்கு"

என்று தமிழ் மறை கூறுவது காண்க. சாந்தழிந்திடுமாறு கண் முத்திறைப்ப வென்க. மாதர் எறிந்து இறைப்ப ஏங்கவெனக் கூட்டுக. மாதர் - மனைவியும், காமக்கிழத்தியரும் முதலாயினோர். (௬)

மற்ற வேலைகா மக்கிழத் தியர்பெறு மைந்தர்
அற்ற நோக்கியீ தமையமேன் றானைமா வாதி
உற்ற பல்பிற பொருணிதி யொண்கல னோடுங்
கொற்ற மௌலியுங் கவர்ந்தனர் கொண்டுபோய் மறைந்தார்.

(இ - ள்.) அ வேலை-அங்ஙனம் வருந்தும் பொழுது, காமக்கிழத்தியர் பெறுமைந்தர் - காமக் கிழத்தியர் பெற்ற பிள்ளைகள், அற்றம் நோக்கி - சோர்வு பார்த்து, ஈது அமையம் என்று-இதுவே ஏற்றசமயம் என்று கருதி, ஆனை மா ஆதி-யானை குதிரை முதலியனவும், உற்ற பிற பல்பொருள் - பொருந்திய ஏனைப் பல பொருள்களும், நிதி ஒண் கலனோடும் கொற்ற மௌலியும்-திரவியங்களும் ஒள்ளிய அணிகலன்களும் வெற்றியையுடைய முடியுமாகிய இவைகளை, கவர்ந்தனர் கொண்டு போய் மறைந்தார் - வௌவிக் கொண்டுபோய் மறைந்தார்கள் எ - று.

மற்று : அசை. ஆதியாக உற்ற பிற பல் பொருளும் என்னலுமாம். கவர்ந்தனர் : முற்றெச்சம். (எ)

மன்ன னாணையா றொழுகிய மந்திரக் கிழவர்
மின்னு வேலிளங் குமரனைக் கொண்டுவிண் ணடைந்த
தென்னர் கோமகற் கிறுதியிற் செய்வினை நிரப்பி
அன்ன காதலற் கணிமுடி சூட்டுவா னமைந்தார்.

(இ - ள்.) மன்னன் ஆணை ஆறு ஒழுகிய மந்திரக் கிழவர்-அரசனது ஆணைவழி நடந்த அமைச்சர்கள், மின்னுவேல் இளங் குமரனைக் கொண்டு-ஒளிவிடும் வேற்படை ஏந்திய இளமையையுடைய புதல்வனால், விண் அடைந்த தென்னர் கோமகற்கு-துறக்கம் புக்க செழியர் தலைவனாகிய வீரபாண்டியனுக்கு, இறுதியில் செய்வினை நிரப்பி-முடி

விற் செய்யவேண்டிய ஈமக் கடன்களை நிறைவித்து, அன்ன காதலற்கு அணிமுடி சூட்டுவான் அமைந்தார்-அந்தப் புதல்வனுக்கு அழகிய முடிசூட்டத் தொடங்கி எ - று.

மந்திரம் - சூழ்ச்சி; கிழவர் - உரிமையுடையவர். கொண்டு: மூன்ருவதன் சொல்லுருபு. இறுதியிற் செய்வினை-பிற்கடன். சூட்டுவான்: வானீற்று வினையெச்சம். அமைந்தார்: முற்றெச்சம். (அ)

நாடிப் பொன்னறை திறந்தனர்* நவமணி மகுடந்
தேடிக் கண்டிலர் நிதிசில கண்டிலர் திகைத்து
வாடிச் சிந்தைநோ யுழந்திவை† மாற்றலர் கூட்டுண்
டோடிப் போயின‡ வாகுமென் றுணர்ந்தித நினைவார்.

(இ - ள்.) நாடிப் பொன் அறை திறந்தனர் - கருவூலத்தினைத் திறந்து பார்த்தனர்; நவமணி மகுடம் தேடிக் கண்டிலர் - ஒன்பான் மணிகளும் இழைத்தியற்றிய முடியினைத் தேடிக் காணு ராயினர்: சில நிதி கண்டிலர் - வேறு சில பொருள்களையும் காணுதவ ராயினர்; திகைத்து வாடி சிந்தைநோய் உழந்து - மயங்கி வாட்டமுற்று மனம் வருந்தி, இவை மாற்றலர் கூட்டுண்டு ஓடிப்போயின ஆகுமென்று உணர்ந்து-இவைகள் பகைவரால் கவர்ந்து கொண்டுபோகப்பட்டன வாகும் என்று அறிந்து, இது நினைவார் - இதனைக் கருதுவா ராயினர் எ - று.

திறந்து நாடினர் என விகுதி பிரித்துக் கூட்டுக. போயின - போகப்பட்டன. திறந்தனர், கண்டிலர் என்பவற்றை எச்சமாக்கி யுரைத்தலுமாம். (கூ)

வேறு மாமுடி செய்துமா லென்னினோ விலைமிக்
கேறு மாமணி யிலையர சிருக்கையின் றின்றேற்
றேறு நீருல கலையுமென் செய்வதிங் கென்னு
ஆறு சேர்சடை யாரருள் காண்டுமென் றமைச்சர்.

(இ - ள்.) வேறு மாமுடி செய்தும் என்னினோ-வேறு சிறந்த முடி செய்வோம் என்று கருதினுலோ, விலை மிக்கு ஏறு மாமணி இலை - விலைமிகுந்து உயர்ந்த பெரிய மணிகள் இல்லை; அரசு இருக்கை இன்று - (முடி இல்லையானுல்) அரசிருக்கையு மில்லை; இன்றேல்-அரசில்லையானுல், தேறு நீர் உலகு அலையும் - தெளிந்த கடல் சூழ்ந்த உலகு வருந்தும்; இங்கு செய்வது என் என்னு-இங்கு நம்மாற் செய்யத் தகுவது யாது என்று (கவலையுற்றுப் பின்), ஆறுசேர் சடையார் அருள்காண்டும் என்று - கங்கையை யணிந்த சடையை யுடைய சொக்கலிங்கப் பெருமானது திருவருளைக் காண்போமென்று, அமைச்சர் - மந்திரிகள் எ - று.

ஆல்: அசை. முடியில்லையேல் என்பதும், அரசு என்பதும் அவாய் நிலையால் வருவிக்கப்பட்டன. தேறுநீர்-கடல். என் செய்வதென்று கவன்று, பின், அருள் காண்டுமென் றெண்ணினு ரென்க. செய்தும், காண்டும் என்பன தன்மைப் பன்மையெதிர்கால முற்றுக்கள். (௧௦)

(பா - ம்.) * புகுந்தனர். † உழந்தித. ‡ போயினதாகும்.

கரைசெ யாப்பெருங் கவலைசூழ் மனத்தராய்க் கறங்கும்
முரசு கண்படாக் கடிமனை முற்றநீத் தருமை
அரசி ளந்தனிக் கொழுந்தினைக் கொண்டுபோ யம்பொன்
வரைசெய் கோபுர வாயின்முன் வருகுவார் வருமுன்.

(இ - ள்.) கரை செயாப் பெருங் கவலைசூழ் மனத்தராய்-எல்லை காண முடியாத பெரிய துன்ப நிறைந்த மனத்தினை யுடையவராய், கறங்கும் முரசு கண்படாக் கடிமனை முற்றம் நீத்து - ஒலிக்கும்முரசு துயிலாத காவலையுடைய அரண்மனையின் முற்றத்தினின்றும் நீங்கி, அருமை அரசு இளந்தனிக் கொழுந்தினை - பெறுதற்கரிய அரசனின் ஒப்பற்ற இளம் புதல்வனை, கொண்டுபோய்-கொண்டு சென்று, அம் பொன் வரைசெய் கோபுர வாயில்முன் வருகுவார் - அழகிய பொன் மலையைக் கோபுரமாகச் செய்துவைத்தா லொத்த திருக்கோபுர வாயிலின்முன் வருவா ராயினர்; வருமுன் - அவர் வருதற்கு முன் எ - று.

அரசு என்னும் பெயருக்கேற்ப இளங்கொழுந்து என நயம்படக் கூறினர். செய்: உவமச் சொல்லுமாம். என்று மொலிக்கு மென் பார், 'கண்படா' என்றார்;

"முழவுங் கண்டுயி லாதது முன்னவன் கோயில்"

என முன்னரும் கூறினமை காண்க; இதனைக் குணவணி என்ப. (கக)

எற்ற தும்புகோ வணவுடை யிடம்படப் பிறங்கத்
துற்ற பல்கதிர் மணிப்பொதி சுவன்மிசைத் தூங்க
மற்ற டம்புய வரைமிசை வரம்பிலா விலைகள்
பெற்ற வங்கதம் பரிதியிற் பேர்ந்துபேர்ந் திமைப்ப.

(இ - ள்.) எல் ததும்பு கோவண உடை-ஒளி மிகுந்த கோவண மாகப் போக்கிய ஆடையானது, இடம்படப் பிறங்க - விசாலமாக விளங்கவும், துற்ற பல்கதிர் மணிப் பொதி சுவல்மிசைத் தூங்க - நெருங்கிய பல ஒளியினையுடைய அரதனங்களின் பொதி பிடரியின் மேல் தூங்கவும், மல் தடம் புயவரை மிசை-மற்போருக்குரிய பெரிய தோளாகிய மலையின்மேல், வரம்பு இலா விலைகள் பெற்ற அங்கதம் - அளவிறந்த விலைகள்பெற்ற வாகுவலயம்,பரிதியில் பேர்ந்து பேர்ந்து இமைப்ப - சூரியனைப் போல விட்டுவிட்டு ஒளி வீசவும் எ - று.

துற்ற-நெருங்கிய; துறு: பகுதி; துன்றவுமாம். பொதி - பொதி யப்பட்டது; சுமை. தூங்கல் - தங்குதல், தொங்குதல். விலைகள், கள்: பகுதிப்பொருள் விகுதி. (கஉ)

மந்தி ரப்புரி நூலது வலம்படப் பிறழ
இந்தி ரத்திரு வில்லென வாரமார் பிலங்கச்
சுந்த ரக்குழை குண்டலந் தோள்புரண் டாடத்
தந்தி ரத்தரு மறைகழி* தாணிலந் தோய.

(பா - ம்) * மறைகளி.

(இ - ள்.) மந்திரம் புரிநூல் வலம்படப் பிறழ - மந்திரத்தாலமைந்த பூணூலானது வலப்பாலிற் புரளவும், இந்திரத் திருவில் என ஆரம் மார்பு இலங்க - அழகிய இந்திர வில்லைப்போல அரதன மாலை மார்பில் விளங்கவும், சுந்தரம் குழைகுண்டலம் தோள்புரண்டு ஆட - அழகிய குழையும் குண்டலமும் தோளிற் புரண்டு ஆடவும், அருமறை தந்திரத்து அகழி தாள் நிலம் தோய - அரிய வேதங்களின் சூழ்ச்சியினின்றும் நீங்கிய திருவடிகள் நிலத்திற் பொருந்தவும் எ-று.

புரிநூல்-மூன்று புரியாக வுள்ள நூல். நூலது, அது: பகுதிப் பொருள் விகுதி. இந்திரவில்லாகிய திருவில் என்க. குழை,குண்டலம்: சாதி வேற்றுமை; ஒரு பொருள் குறித்தனவுமாம்; குழையைக் காது என்னின், குழைக் குண்டலம் என ஒற்று மிகுதல் வேண்டுமென்க. தந்திரம்-இண்டுதற்குரிய உபாயம். தீண்டப்படாது நீங்கியவென்க. களியெனப் பாடமோதிக், களிக்கும் என்றுரைப்பாரு முளர். (௧௩)

[கலிவிருத்தம்]

பொன்னவிர்ந் திலங்குகோ புரமுன் போதுவார்
முன்னவர் துனிவுகூர் முன்ன நீக்கிய
தென்னவர் குலப்பெருந் தெய்வ மாகிய
மன்னவர் வணிகராய் வந்து தோன்றினார்.

(இ - ள்.) பொன் அவிர்ந்து இலங்கு கோபுரமுன் போதுவார் முன் - பொன்னொளி விட்டு விளங்கும் திருக்கோபுர வாயிலின் முன் வருகின்றவர்களுக்கு எதிரே, அவர் துனிவு கூர் முன்னம் நீக்கிய - அவர்களின் துன்ப நிறைந்த எண்ணத்தை ஒழிக்கும் பொருட்டு, தென்னவர் குலப்பெருந் தெய்வமாகிய மன்னவர் - பாண்டியர்கள் குலத்திற்குப் பெரிய தெய்வமாகிய சுந்தரேசர், வணிகராய் வந்து தோன்றினார் - வணிகராக வந்து தோன்றி யருளினார் எ - று.

கூர் - மிக்க : உரிச்சொல். முன்னம்-குறிப்பு. நீக்கிய: செய்யிய வென்னும் வாய்பாட்டு வினையெச்சம். (௧௪)

வந்தவ ரெதிர்வரு வாரை மம்மர்கொள்
சிந்தைய ராய்வரு செய்தி யாதென
முந்தையில் விளைவெலா முறையிற் கூறினார்க்
கெந்தையாம் வணிகரீ தியம்பு வாரரோ.

(இ - ள்.) வந்தவர் எதிர் வருவாரை-அங்ஙனம் வந்த பெருமானார் எதிரில் வரும் அமைச்சர் முதலியோரை (நோக்கி), மம்மர்கொள் சிந்தையராய் வருசெய்தி யாது என - மயங்கிய மனத்தினராய் நீவிர் வரும் செய்தி யாதென்று வினவ, முந்தையில் விளைவு எலாம் முறையில் கூறினார்க்கு-முன் நிகழ்ந்த செய்திகளனைத்தையும் முறைப்படி கூறிய அவர்களுக்கு, எந்தையாம் வணிகர் ஈது இயம்புவார் - எம் தந்தையாகிய வணிகர் பெருமானார் இதனைக் கூறுவார் எ - று.

முந்தை-முன்பு; இல்: ஏழனுருபு. எந்தையாம் வணிகர்: ஒருமையிற் பன்மை வந்தது. அரோ: அசை. (௧௫)

என்பட ரேய்துகின் றீர்க ளேன்வயின்
ஒன்பது மணிகளு முள்ள வாலவை
பொன்பதி னுயிரங் கோடி* போனவென்†
றன்புற மணியெலா மடைவிற் காட்டுவார்.

(இ - ள்.) என் படர் எய்துகின்றீர்கள்-என்னை துன்ப முறுகின்றீர்கள், என்வயின் - என்னிடத்தில், ஒன்பது மணிகளும் உள்ள - ஒன்பதுவகை மணிகளும் உள்ளன; அவை-அம்மணிகள், பதினுயிரங் கோடி பொன்போன என்று-பதினுயிரங்கோடி பொன் விலையேறின என்று, அன்பு உற மணி எலாம் அடைவில் காட்டுவார் - விருப்பம் பொருந்த அவற்றையெல்லாம் முறையே காட்டத்தொடங்கி எ-று.

படர்-துன்பம். இனித் துன்பமுற வேண்டா என்பார், 'என்படரெய்துகின்றீர்கள்' என்றார். ஆல்: அசை. போன - விலையேறின, விலையாகப் பொருந்தியன. (௧௬)

இருந்தனர் கீழ்த்திசை நோக்கி யிட்டதோர்
கருந்துகி னடுவுமிந் திராதி காவலர்
அருந்திசை யெட்டினு மடைவிற் செம்மணி
பெருந்தண்முத் தாதியெண் மணியும் பெய்தரோ.

(இ - ள்.) கீழ்த்திசை நோக்கி இருந்தனர் - கிழக்குத் திக்கை நோக்கி இருந்து, இட்டது ஓர் கருந் துகில் நடுவும்-விரித்ததாகியஒரு கரிய கம்பலத்தின் நடுவிலும், இந்திராதி காவலர் அருந்திசை எட்டினும் - இந்திரன் முதலிய திசைக் காவலரின் அரிய திக்குகள் எட்டினும், அடைவில் - முறையே, செம்மணி பெருந்தண் முத்தாதி எண் மணியும் பெய்து-மாணிக்கத்தையும் பெரிய குளிர்ந்த முத்து முதலிய எட்டு மணிகளையும் வைத்து எ - று.

நடுவில் மாணிக்கமும், கிழக்கு முதலிய எண்டிசையிலும் முத்து முதலிய எண்வகை மணியும் வைத்தென்க. இருந்தனர்: முற்றெச்சம். அரோ: அசை. (௧௭)

இம்மணி வலனுடற் சின்ன மேன்னவக்
கைம்மறி கரந்தவர் கூறக் கற்றநூற்
செம்மதி யமைச்சரச் செம்மல் யாரவன்
மெய்ம்மணி யாயதேன் விளம்பு கேன்னவே.

(இ - ள்.) இம் மணி வலன் உடல்சின்னம் என்ன-இந்த மணிகள் வலன் என்னும் அவுணனது உடலின் பகுதிகளென்று, அக் கை மறி கரந்தவர் கூற - கையிலுள்ள மானை ஒளித்து வந்த அவ்வணிகர் கூற, நூல் கற்ற செம்மதி அமைச்சர் - பல நூல்களையும் கற்ற நுண்ணிய அறிவினையுடைய அமைச்சர்கள், அச் செம்மல் யார்-அவ்வலன் என்பான் யாவன், அவன் மெய் மணி ஆயது என்-அவன் உடல் மணிகள் ஆயினமை எங்ஙனம், விளம்புக என்ன-கூறுக வென்று கேட்க எ-று.

---

(பா - ம்.) * பதினுயிரகோடி. † போனதென்று.

உடற் சின்னம்-குருதி முதலிய தாதுக்களும், பல் முதலியவும் ஆம். அகரச் சுட்டு கரந்தவர் என்பதன் விகுதியோடியையும். நூலறிவும், இயற்கையாகிய நுண்ணறிவு முடையாரென்பார், 'கற்ற நூற் செம்மதி யமைச்சர்' என்றார்;

"மதிநுட்பம் நூலோ டுடையார்க்கு."

என்றார் திருவள்ளுவதேவரும். விளம்புக என்பதன் அகரம் தொக்கது. (கஅ)

மேவரும் வலனெனு மவுணன் மேலைநாள்
மூவரின் விளங்கிய முக்கண் மூர்த்திசெஞ்
சேவடி யருச்சனைத் தவத்தின் செய்தியால்
யாவது வேண்டுமேன் றிறைவன் கூறலும்.

(இ - ள்.) மேவரும் வலன் எனும் அவுணன் - (பகைவர்) கிட்டு தற்கரிய வலன் என்னும் அசுரன், மேலை நாள் - முன்னாளில், மூவரின் விளங்கிய முக்கண் மூர்த்தி - மும்மூர்த்திகளினும் சிறந்து விளங்கும் சிவபெருமானுடைய, செம் சேவடி - செவ்விய திருவடிகளில், அருச்சனை தவத்தின் செய்தியால்-அருச்சித்தலாகிய திருத்தொண்டின் செம் கையால், இறைவன் - அப்பெருமான், யாவது வேண்டும் என்று கூற லும்-நினக்கு யாதுவேண்டு மென்று வினவிய வளவில் எ - று.

பகைவர் அணுகுதற்கரிய வென்க. செம்மைப் பண்பு அடுக்கி வந்தது; ஒன்று செந்நிறத்தையும், ஒன்று விகார மின்மையையும் குறிப்பன எனலுமாம் அருச்சனையே தவமென்றார். தவத்தின், சாரியை அல்வழிக்கண் வந்தது. யாவது: வகரம் விரித்தல். அவுணன் தன் செய்தியால் இறைவன் கூறலும் என இயையும். (கக)

தாழ்ந்துநின் றியம்பும்யான் சமரில் யாரினும்
போழ்ந்திற வாவரம் புரிதி யூழ்வினை
சூழ்ந்திறந் தாலென்மெய் துறந்த மாந்தரும்
வீழ்ந்திட நவமணி யாதல் வேண்டுமோல்.

(இ - ள்.) தாழ்ந்து நின்று இயம்பும்-வணங்கி நின்று கூறுவா னாய், யான் சமரில் யாரினும் போழ்ந்து இறவா வரம் புரிதி - யான் போரின்கண் யாராலும் பிளவுண்டு இறவாத வரத்தையருளுக; ஊழ் வினை சூழ்ந்து இறந்தால் - (அங்ஙன மன்றி) ஊழ் வினையாற் சூழப் பட்டு இறப்பேனாயின், என் மெய் - என் உடம்பு, துறந்த மாந்தரும் வீழ்ந்திட-பற்றுக்களை விடுத்த துறவினரும் விரும்பும் வண்ணம், நவ மணி ஆதல் வேண்டும் - ஒன்பான் மணிகளாக வேண்டும் எ - று.

இயம்பு மென்பதனை எச்சப்படுத்துக. யாரினும் - எவராலும்; இன்னுருபு மூன்றன் பொருட்டு. போழ்ந்து - வெட்டுண்டு: செயப் பாட்டுவினைப் பொருளது; சூழ்ந்து என்பதும் அது. மாதரும் என் னும் உம்மை உயர்வு சிறப்பு. மணியின் விசேடத்தால் விரும்ப வென்க. ஆல்: அசை. (௨0)

என்றுவேண் டலும்வர மீச னல்கினன்
அன்றுபோ யமர்குறித் தமரர் கோனெடு
சென்றுபோ ராற்றவுந் தேவர் கோனெதிர்
நின்றுபோ ராற்றல னீங்கிப் போயினன்.

(இ-ள்.) என்று வரம் வேண்டலும்-என்று வரம் கேட்க, ஈசன் நல்கினன்-இறைவன் (அங்ஙனமே) அருளினன்; அன்று அமர் குறித்துப்போய்-அப்பொழுதே போரினைக் குறித்துச் சென்று, அமரர் கோனெடு சென்று போர் ஆற்றலும் - தேவேந்திரனெடு எதிர்த்துப் போர் புரியவும், தேவர்கோன் அவ்விந்திரன், எதிர்நின்று போர் ஆற்றலன்-நேர் நின்று போர் புரியும் வலியிலனய், நீங்கிப்போயினன்-புறங்கொடுத் தேகினன் எ - று.

போய் என முன் வந்தமையின் சென்று என்பதற்கு எதிர்த்தென உரைக்கப் பட்டது. ஆற்றலன்-செய்ய மாட்டானய்; முற்றெச்சம். (உக)

தோற்றவா னடவன் மீண்டு சூழ்ந்தமர்
ஆற்றினும் வெல்லரி தழிவி லாவரம்
ஏற்றவ னுதலா லிவனைச் சூழ்ச்சியாற்
கூற்றினூ ரேற்றுதல் குறிப்பென் றுன்னியே

(இ-ள்.) தோற்ற வான் நாடவன் - இங்ஙனம் தோல்வியுற்ற இந்திரன், அழிவு இலா வரம் ஏற்றவன் ஆதலால் - இறவாத வரம் பெற்றவன் ஆதலால், மீண்டு சூழ்ந்து அமர் ஆற்றினும் வெல் அரிது-திரும்பவும் வளைந்து போர் செய்தாலும் இவனை வெல்லுதல் கூடாது; இவனைச் சூழ்ச்சியால் கூற்றின் ஊர் ஏற்றுதல் குறிப்பு என்று உன்னி - இவனை வஞ்சத்தால் கூற்றுவன் ஊரிற் குடியேற்றுதலே செயற்பாலது என்று கருதி எ-று.

ஆலோசித்து மீள அமர் புரியினும் என்றுரைத்தலுமாம். வெல்: முதனிலைத் தொழிற் பெயர். குறிப்பு - கருத்து. (உஉ)

விடங்கலுழ் படைக்கல னின்றி விண்ணவர்
அடங்கலுந் தழீஇக்கோள வடுத்துத் தானவ
மடங்கலை வருகென நோக்கி வானவக்
கடங்கலுழ் யானைபோற் கரைந்து கூறுவான்.

(இ-ள்.) விடம் கலுழ் படைக்கலம் இன்றி - நஞ்சு சிந்தும் படைக்கலம் இல்லாமல். விண்ணவர் அடங்கலும் தழீஇக்கோள-தேவரனைவரும் சூழ்ந்து வர, கடம் கலுழ் வானவ யானைபோல் அடுத்து - மதம் பொழியும் தேவயானைபோல் போர்க்களத்தை யடுத்து, தானவ மடங்கலை நோக்கி வருக எனக் கரைந்து - அசுர சிங்கத்தை நோக்கி வருக என்று அழைத்து, கூறுவான் - சொல்லுவான் எ - று.

யானையானது சிங்கத்தை நோக்கி அழைப்பது போல் இந்திரன் அவுணனை நோக்கி அழைத்தான் என்பது கருத்தாகக் கொள்க. கரைதல் - அழைத்தல். (உங)

விசையநின் ரேள்வலி வென்றி வீக்கமெத்
திசையினும் பரந்ததச்* சீர்த்தி நோக்கியுள்
நசையறு மகிழ்ச்சியா னல்கு வேனுனக்
கிசையவேண் டியவரம் யாது கேளென.

(இ-ள்.) விசைய - வெற்றியை யுடையோய், நின் தோள்வலி வென்றி வீக்கம் எத்திசையினும் பரந்தது-உன் தோளின் வலிமையும் வெற்றிப் பெருக்கமும் எல்லாத் திசைகளிலும் பரவின; அ சீர்த்தி நோக்கி-அந்தப் புகழ்ச்சியை நோக்கி, உள் நசை அறு மகிழ்ச்சியால் உனக்கு இசைய நல்குவேன்-உள்ளத்தில் விருப்பம் நீங்காத மகிழ்ச்சியால் உனக்குப் பொருந்த வரம் அளிப்பேன்; வேண்டிய வரம் யாது கேள் என - நீ விரும்பிய வரம் யாதோ அதனைக் கேட்பாய் என்று கூற எ - று.

பரந்தது: பன்மையி லொருமை; தோள் வலியாகிய வென்றி யென உரைத்தலுமாம். நோக்கி - மனத்தால் நோக்கி; கருதி. பொருந்த வேண்டிய வரம் கேள் அதனை நல்குவேன் என இயைத் தலுமாம். (உச)

கடிபடு கற்பக நாடு காவலோன்
நொடியுரை செவித்துளை நுழையத் தானவன்
நெடியகை புடைத்துட னிமிர்ந்து கார்படும்
இடியென நகைத்திகழ்ந் தினைய கூறுவான்.

(இ - ள்.) கடிபடு கற்பகநாடு காவலோன் நொடி உரை-மணம் பொருந்திய கற்பகத் தருவையுடைய விண்ணுலகிற் கிறைவனாகிய இந்திரன் கூறிய உரை, செவித்துளை நுழைய - செவிகளின் தொளை களிற் புகுதவும், தானவன்-அவுணன், நெடிய கை புடைத்து-நீண்ட கைகளை ஒன்றோடொன்று தாக்கி, உடல் நிமிர்ந்து கார் படும் இடி என நகைத்து இகழ்ந்து - உடல் நிமிர்ந்து முகிலிற் றோன்றும் இடி போலச் சிரித்து இகழ்ந்து, இனைய கூறுவான் - இத்தன்மையன கூறு வான் எ - று.

நொடி - கூறிய. நொடியுரை: வினைத்தொகை. இடிபோல் ஒலி யுண்டாக நகைத்தென்க. (உரு)

[அறுசீரடி யாசிரிய விருத்தம்]

நன்றிது மொழிந்தா யாரு நகைக்கநீ யெனைவெங் கண்ட
வென்றியு மதனாற் பெற்ற புகழுநின் வீறு பாடும்
இன்றுநின் போரிற் காணப் பட்டவே யிசைபோ யெங்கும்
நின்றதே யிதுபோ னின்கை வண்மையு நிற்ப தன்றே.

(இ - ள்.) யாரும் நகைக்க நன்று இது மொழிந்தாய் - எவரும் நகையாடுமாறு நல்லதாகிய இந்தமொழியைக் கூறினாய்; நீ எனை வெங்

(பா - ம்.) * பரந்தவச் சீர்த்தி.

கண்ட வென்றியும் - நீ என்னைப் புறங்கண்ட வெற்றியும், அதனால் பெற்ற புகழும் - அவ்வெற்றியால் அடைந்த கீர்த்தியும், நின் வீறுபாடும் - நினது பெருமிதமும், இன்று நின் போரில் காணப்பட்டவே - இன்று நீ என்னோடு செய்த போரிற் காணப்பட்டனவே; இசை போய் எங்கும் நின்றதே - புகழானது எங்கும் பரந்து சென்று நிலைபெற்றதே; இதுபோல் நின்கை வண்மையும் நிற்பது அன்றோ - இதுபோல உனது வள்ளன்மையும் நிலைபெறுவதல்லவா எ-று.

நன்று இது - நல்லதாகிய இதனை: இகழ்ச்சிக் குறிப்பு. பகைவர், அயலார், நண்பர் என்னும் யாவிரும் நகைக்க வென்க. புறங்காட்டிய தோல்வி வெங்கண்ட வென்றி யென்றும், அதனாலுண்டாய பழி புகழென்றும், சிறுமை வீறுபாடென்றும், இகழ்ச்சி தோன்றக் கூறப்பட்டன. காணப்பட்டவே, நின்றதே என்னும் ஏகாரங்கள் இவற்றை நீயும் அறிதியே என்னும் வினாப்பொருள் தோன்ற நின்றன. இது போல் - இச்செயல் போல்; இசை நிலை பெற்றதுபோல் என்றுமாம். (உசு)

ஈறிலா னளித்த நல்ல வரமெனக் கிருக்க நின்பால்
வேறுநான் பெறுவ துண்டோ வேண்டுவ துனக்கியா தென்பாற்
கூறுநீ யதனை யின்னே கொடுக்கலே னாகி னின்போற்
பாறுவீழ் களத்திற் றோற்ற பழிப்புகழ் பெறுவ னென்றான்.

(இ - ள்.) ஈறு இலான் அளித்த நல்ல வரம் எனக்கு இருக்க - தனக்கோர் இறுதியில்லாதவனாகிய சிவபெருமான் அருளிய நல்லவரங்கள் எனக்கிருக்கவும், வேறு நான் நின்பால் பெறுவது உண்டோ - அவற்றிற்கு வேறாக நான் உன்னிடம் பெறுவ தொன்று உண்டோ, என்பால் உனக்கு வேண்டுவது யாது - என்னிடம் நினக்கு வேண்டியது யாது, நீ கூறு - நீ சொல், அதனை இன்னே கொடுக்கலேனாகில் - அதனை இப்பொழுதே கொடேனாயின் பாறுவீழ் களத்தில் - பருந்துகள் வீழ்கின்ற இப்போர்க்களத்தில், நின்போல் தோற்ற பழிப்புகழ் பெறுவன் என்றான் - நின்னைப் போன்றே தோல்வியுற்ற பழியாகிய புகழைப் பெறுவேன் என்று கூறினான் எ - று.

ஈறிலான் என்றமையால் முதலும் நடுவும் இல்லாதவனென்பதும் பெறப்படும். ஈறுடைய நின்பால் நன்மையில்லாத வேறு என அடைகளை எதிர் மறுத்துக்கொள்க. 'வேண்டுவதுனக் கியாதென்பாற் கூறுநீ' என்றது நின்பதவியினும் பெரிய செல்வங்களை யான் அளித்தற் குரியேன் என்று குறிப்பிட்டவா றாயிற்று. தோற்றமையா லாகிய பழி எனப் பெயரெச்சம் காரணப் பொருட்டாயது. பழிப்புகழ்-பழியாகிய புகழ்; பழியையே புகழாகப் பெற்றுளாய் என்றவாறு. (உள)

மாதண்ட வவுணன் மாற்ற மகபதி கேட்டு வந்து
கோதண்ட மேருக் கோட்டிக் கொடும்புரம் பொடித்தான்வெள்ளி
வேதண்ட மெய்தி யாங்கோர் வேள்வியான் புரிவ னீயப்*
போதண்டர்க் கூட்ட வாவாய்ப் போதுவாய் வல்லை யென்றான்.

(இ - ள்.) மாதண்ட அவுணன் மாற்றம் - பெரிய தண்டினையேந்திய அசுரனது வார்த்தையை, மகபதி கேட்டு உவந்து - இந்திரன்

(பா - ம்.) * புரிவனைப்.

கேட்டு மகிழ்ந்து, கோதண்டம் மேரு கோட்டி-வில்லாக மேரு மலையை வளைத்து, கொடும்புரம் பொடித்தான் - கொடிய அவுணர் களின் திரிபுரத்தை நீருக்கிய சிவபிரானது, வெள்ளி வேதண்டம் எய்தி-வெள்ளி மலையை அடைந்து, ஆங்கு ஓர் வேள்வி யான் புரிவன்- அங்கு ஒரு வேள்வியினை யான் செய்வேன்; அப்போது அண்டர்க்கு ஊட்ட-அப்பொழுது தேவர்களுக்கு அவியூட்ட, நீ ஆவாய் வல்லை போதுவாய் என்றான் - நீ வேள்விப்பசுவாகி விரைந்து வருவாயாக என்று கூறினான் எ - று.

மாற்றம் - மறுமொழி. தான் நினைத்தது கைகூடிற்றென உவந் தென்க. கோதண்டம் - வில்லின் பொதுமையை உணர்த்துவது. மேருவாகிய வில்லை யெனலுமாம். கேட்டு உவந்து போதுவாய் என் றான் என முடிக்க. (உஅ)

அன்றொரு தவத்தோ னென்பு வச்சிர மொன்றே யாக
ஒன்றிய கோடையாற் பெற்ற புகழுடம் பொன்றே யென்போல்
வென்றியி னாலும் வீயா மெய்யெலா மணிக ளாகப்
பொன்றிய கோடையி னாலும் புகழுடம் பிரண்டுண் டாமே.

(இ - ள்.) அன்று ஒரு தவத்தோன் - அக்காலத்திலே ஒருதவப் பெரியானாகிய ததீசிமுனிவன், என்பு ஒன்றே வச்சிரம் ஆக- (பூதஉட லின்) முதுகந்தண்டாகிய எலும்பு ஒன்றே வச்சிரப்படை ஆமாறு, ஒன்றிய கொடையால் பெற்ற புகழ் உடம்பு ஒன்றே - மனமிசைந்து கொடுத்தகொடையினாற் பெற்றபுகழுடம்பு ஒன்றேயாகும்; வென்றி யினாலும்- (பிறரை வெல்லும்) வெற்றியினாலும், வீயா மெய் எலாம் மணிகளாக-பிறரால் அழியாத உடல் முழுதும் நவமணிகளாகுமாறு, பொன்றிய கொடையினாலும் - இறத்தலாலாகும் கொடையினாலும், என் போல் - என்னைப் போல, புகழ் உடம்பு இரண்டு உண்டாமே - (அம்முனிவனுக்குப்) புகழுடம்பு இரண்டு உள்ளனவோ - எ - று.

ததீசி முனிவன் பெற்றது கொடையாலாகிய புகழொன்றே; யானோ வென்றியினாலும் கொடையினாலும் இருவகையான புகழினை எய்துதற் குரியனானேன்; அவன்பெற்ற கொடைப்புகழ் ஒன்று தானும் ஓர் என்பை ஒரு படைக்கலமாக ஒருவன்பெற அளித்தமை யாலாயது; என் கொடைப்புகழோ உடம்பின் எல்லா உறுப்புக்களும் ஒன்பது வகை மணிகளாக எக்காலத்தும் யாவரும் பெறுமாறு அளிக் கும் கொடையா லாயது; எனத் தன் புகழ்ப் பேற்றினை வியந்துரைத் தானென்க. ஒன்றிய கொடை-மனம் பொருந்தி யளித்த கொடை. பொன்றிய கொடை - பொன்றினமையாலாகிய கொடை. உண் டாமே-உள்ளனவோ; ஏகாரம் எதிர்மறைப் பொருட்டு. (உகூ)

மேவல னல்லை நீயே நட்டவன் மேலை வானோர்
யாவரு மருந்து மாற்று லறம்புக ழெனக்கே யாக
ஆவுரு வாதி யென்று யன்னதே செய்வே னென்றான்
ஈவதே பெருமை யன்றி யிரக்கின்ற திழிபே யன்றோ.

(இ - ள்.) மேவலன் அல்லை - நீ எனக்குப் பகைவன் அல்லை; நீயே நட்டவன் - நீயே நண்பன்; மேலை வானோர் யாவரும் அருந்தும்

ஆற்றல்- விண்ணுலகிலுள்ளதேவர்களனைவரும்உண்ணுமியல்பினால், அறம்புகழ் எனக்கே ஆக-புண்ணியமும் புகழும் எனக்கு உளவாக, ஆ உரு ஆதி என்றாய்-ஆனின் உருவாகி வருவாய் என்றாய், அன்னதே செய்வேன் என்றான் - அங்ஙனமே செய்வேன் என்று கூறினான், ஈவதே பெருமை அன்றி -(எஞ்ஞான்றும்) கொடுத்தலே பெருமை யல்லாமல், இரப்பது இழிபே அன்றோ-இரத்தல் இழிபல்லவா எ-று.

எனக்கு அறமும் புகழும் உண்டாக இங்ஙனங் கூறினமையால் நீ பகைவனல்லை நண்பனாவாய் என்றானென்க. நீ நண்பனே என ஏகாரத்தைப் பிரித்துக் கூட்டலுமாம். மேற் செய்யுளில் நவமணிக ளாதலால் எய்தும் கொடைப் புகழைக் கூறிவைத்து, இச்செய்யுளில் தேவர் யாவரும் அருந்துமா றளிக்கும் கொடையினையும் அதனாற் புகழேயன்றி அறமும் உளதாதலையும் கூறினானென்க.யானொருவனே சிறப்பெய்தினேன் என்பான்: 'அறம்புகழ் எனக்கேயாக' என்றான். ஆதி - ஆவாய்; த் : எழுத்துப்பேறு, இ : எதிர்கால விகுதி. ஈவதே பெருமையன்றி இரக்கின்றது பெருமையன்று; அதன்மேலும் அஃது இழிபேயாகும்; என விரித்துரைத்துக் கொள்க. ஈதல் இரத்தல் களின் பெருமை சிறுமைகளை,

''நல்லா றெனினுங் கொளல்தீது மேலுலகம்
இல்லெனினு மீதலே நன்று'' (திருக்குறள்-உஉஉ)

என்னும் திருக்குறளானும்,

''ஈயென விரத்த லிழிந்தன்று...
கொள்ளெனக் கொடுத்த லுயர்ந்தன்று''

என்னும் புறப்பாட்டாலு மறிக. இது வேற்றுப்பொருள் வைப்பணி. (௩௦)

அதற்கிசைந் தவுணர் வேந்த னமரர்வேந் தனைமுன் போக்கி
மதர்க்கடுங் குருதிச் செங்கண் மைந்தனுக் கிறைமை யீந்து
முதற்பெருங் கலையாம் வேத மொழிமர பமைந்த வானாய்ப்
புதர்க்கடு வேள்விச் சாலைப் புறத்துவந் திறுத்து நின்றான்.

(இ - ள்.) அதற்கு இசைந்த அவுணர் வேந்தன்-அங்ஙனம் பசு வாய் வர உடன்பட்ட அவுணர் தலைவனாகிய வலன், அமரர் வேந்தனை முன்போக்கி-தேவர்க்கரசனாகிய இந்திரனை முன்னே அனுப்பிவிட்டு, மதர் கடுங் குருதிச் செங்கண் மைந்தனுக்கு இறைமை ஈந்து-மதர்த்த கொடிய உதிரம்போற் சிவந்த கண்களையுடைய புதல்வனுக்கு அர சுரிமையைத்தந்து,முதல்பெருங் கலையாம்வேதமொழி மரபு அமைந்த ஆனாய்-கலைகட்கெல்லாம் முதன்மையாகியபெரியமறைநூலிற்கூறிய முறையே இலக்கணமமைந்த பசுவாகி,புதர்க்கு அடுவேள்விச்சாலைப் புறத்துவந்து இறுத்து நின்றான் -தேவர்கட்கு அவியுணவு ஆக்கும் வேள்விச் சாலையின்கண் வந்து நிலைபெயராது நின்றான் எ - று.

இசைந்த வென்னும் பெயரெச்சத்து அகரந்தொக்கது. இறைமை இறையினது தன்மை; இறை - அரசன். மொழிமரபு-மொழிந்த முறைமை. புதர் - தேவர்; புலவரென்னும் பொருட்டு. (௩க)

வாய்மையான் மாண்ட நின்போல் வள்ளல்யா ரேன்று தேவர்
கோமகன் வியந்து கூறத் தருக்குமேற் கொண்டு மேரு
நேமியோ டிகலும் விந்த வரையென நிமிர்ந்து வேள்விக்
காமெனே யூபத் தோடும் யாமினேன் றடுத்து நின்றான்.

(இ - ள்.) வாய்மையால் மாண்ட நின்போல்-மெய்ம்மொழியால் மாட்சிமைப்பட்ட நின்னைப்போல, வள்ளல் யார் என்று தேவர் கோமகன் வியந்து கூற - வள்ளன்மை யுடையார் யாவருளர் என்று தேவேந்திரன் வியந்து கூற, தருக்கு மேற்கொண்டு – செருக்கினை மேற்கொண்டு, மேருநேமியோடு இகலும் விந்த வரை என-மேருமலை யோடு பகைத்து ஓங்கிய விந்தமலை போல, நிமிர்ந்து-உயர்ந்து, வேள் விக்கு ஆம் என - வேள்விக்குப் பயன்படும் என்னை, யூபத்தோடும் யாமின் என்று அடுத்து நின்றான் - யூபத் தம்பத்தோடுங் கட்டுங்கள் என்று அதனை அடுத்து நின்றான் எ - று.

நேமி - மலை. யூபம் - வேள்வித்தூண். யாமின் - பிணியுங்கள்; யா: பகுதி. (௬௨)

யாத்தனர் தருப்பைத் தாம்பா லூர்ணையால் யாத்த சிங்கப்
போத்தென நின்றான் வாயைப் புதைத்துயிர்ப் படங்க வீட்டி
மாய்த்தனர் மாய்ந்த வள்ளல் வலனுமந் தார மாரி
தூர்த்திட விமான மேறித் தோல்விதி யுலகஞ் சேர்ந்தான்.

(இ – ள்.) தருப்பைத் தாம்பால் யாத்தனர்-தருப்பைக் கயிற்றால் கட்டி, ஊர்ணையால் யாத்த சிங்கப்போத்தென நின்றான் வாயைப் புதைத்து-சிலம்பி நூலினால் கட்டப்பட்ட ஆண் சிங்கம்போலநின்ற அவன் வாயைப் பொத்தி, உயிர்ப்பு அடங்க வீட்டி மாய்த்தனர் - மூச்சு அடங்கக் கொன்றனர்; மாய்ந்த வள்ளல் வலனும் - இறந்த வள்ளலாகிய வலனும், மந்தார மாரி தூர்த்திட–கற்பக மலர் மழை பொழிய, விமானம் ஏறித் தொல்விதி உலகம் சேர்ந்தான்-விமானத்தி லேறிப் பிரமன் உலகத்தை அடைந்தான் எ - று.

தானாக வாய்மையால் அடங்கி நின்றமை தோன்ற 'ஊர்ணையால் யாத்த சிங்கப் போத்தென நின்றான்' என்றார். ஊர்ணை: மயக்க விதி யின்றேனும் வட சொல்லாகலின் அமையும். போத்து: ஆண்பால் உணர்த்துஞ் சொல். வீட்டி வீழ்த்தி என்பதன் மரூஉ. வீட்டி மாய்த் தல்: ஒரு பொருள் குறித்தன. வானோர் தூர்த்திட என விரித் துரைத்தலுமாம். பிரமன் பிதாமகன் எனப்படுவ னாகலின் 'தொல் விதி' என்றார். (௬௩)

மணித்தலை மலையின் பக்க மாய்த்தவன் வயிர வேலாற்
பிணித்துயிர் செகுத்த வள்ளற் பெருந்தகை யாவாய்* வேதம்
பணித்திடும் வபையை வாங்கிப் படரேரி சுவைமுன் பார்க்கக்
குணித்தவா னுடர்க் கூட்டிக் கோதிலா வேள்வி செய்தான்.

---

(பா - ம்.) * பெருந்தகை யாவை.

(இ - ள்.) மணித்தலை மலையின் பக்கம் மாய்த்தவன் - மணிகள் பொருந்திய முடிகளையுடைய மலைகளின் சிறகை அரிந்த இந்திரன், பிணித்து உயிர் செகுத்த வள்ளல் பெருந்தகை ஆவாய்-தூணிலே கட்டி உயிர் போக்கப்பட்ட வள்ளன்மையும் பெருந்தகுதியு முடைய வலனாகிய ஆவினிடத்திருந்து, வயிர வேலால் வேதம் பணித்திடும் வபையை வாங்கி-வச்சிரப் படையினால் வேதம் விதித்த வபையினை எடுத்து, படர் எரி சுவை முன் பார்க்க-படர்ந்த வேள்வித் தீயானது முன்னே சுவை பார்க்க (இட்டு), குணித்த வானாடர்க்கு ஊட்டி-கருதப் பட்ட தேவர்களுக்கு உண்பித்து, கோது இலா வேள்வி செய்தான்-குற்றமில்லாத வேள்வியைச் செய்து முடித்தான் எ - று.

பக்கம்-சிறை; இது வடமொழியில் பக்ஷம் எனப்படும். ஆவாய்-ஆவினிடத்து; வாய்: ஏழனுருபு. வபை-நிணம். வேலால் வாங்கி யெனக் கூட்டுக. பார்க்க இட்டு என ஒருசொல் வருவிக்க. குணித்த-மதிக்கப்பட்ட. வானாடர்க்கு-தேவரை : உருபு மயக்கம். (௩௪)

அத்தகை யாவின் சோரி மாணிக்க மாம்பன் முத்தம்
பித்தைவை டூய மென்பு வச்சிரம் பித்தம் பச்சை
நெய்த்தவெண் ணிணங்கோ மேதந் தசை துகிர் நெடுங்க ணீலம்
எய்த்தவை புருட ராக மிவைநவ மணியின் றோற்றம்.

(இ - ள்.) அத்தகை ஆவின் சோரி மாணிக்கம் ஆம்-அந்தப் பசுவினது குருதி மாணிக்கமாம்; பம் முத்தம் ஆம்-பற்கள் முத்தமாம்; பித்தை வைடூயம் ஆம்-மயிர் வயிடூரியமாம்; என்பு வச்சிரம் ஆம்-எலும்பு வயிரமாம்; பித்தம் பச்சை ஆம்-பித்தம் மரகதமாம்; நெய்த்த வெண்ணிணம் கோமேதம் ஆம்-நெய்ப்பினையுடைய வெள்ளிய நிணம் கோமேதமாம்; தசை துகிர் ஆம்-தசை பவளமாம்; நெடுங்கண் நீலம் ஆம்-நீண்ட கண்கள் நீலமாம்; எய்த்த ஐ புருடராகம் ஆம்-இளைத்தற் கேதுவாகிய கோழை புருடராகமாம்; இவை நவமணியின் தோற்றம்-இவையே நவமணிகள் தோன்றிய முறைமையாம் எ- று.

ஆம் என்பதனை முத்தம் முதலியவற்றோடும் கூட்டுக. பச்சை-மரகதம். எய்த்த-இளைத்தற்குக் காரணமான; ஐ-கபம். (௩௫)

இவ்வடி வெடுத்துத் தோன்றி யிருண்முகம் பிளப்பக் காந்தி
தைவரு மணியோன் பானுஞ் சார்விட நிறங்கள் சாதி
தெய்வத மொளிமா செள்ளிச்*சோதனை செய்து தேசு
மெய்வர வணிவோ ரெய்தும் பயனிவை விதியாற் கேண்மின்.

(இ - ள்.) இ வடிவு எடுத்துத் தோன்றி - இந்த உருவங்களை யெடுத்துத் தோன்றி, இருள் முகம் பிளப்பக் காந்தி தைவரும் மணி ஒன்பானும் - இருளின் முகம் பிளக்க ஒளிவீசும் ஒன்பது மணிகளும், சார்விடம்-பொருந்து மிடங்களும், நிறங்கள் -(அவற்றின்) நிறங்களும், சாதி - சாதியும், தெய்வதம் - தெய்வமும், ஒளி-ஒளியும், சோதனை செய்து மாசு எள்ளி-ஆராய்ந்து குற்றங்களை நீக்கி (நல்லனவற்றை), தேசு மெய்வர அணிவோர் எய்தும் பயன்-ஒளி பொருந்த உடலில்

(பா - ம்.) * மாசெண்ணி.

அணிகின்றவர் அடையும்பயனும், இவை விதியால் கேண்மின்-(ஆகிய) இவற்றை முறைப்படி கேளுங்கள் எ - று.

இருள் கெடுதலை 'இருள் முகம் பிளப்ப' என்றார். முகத்தைப் பிளக்கவென இரண்டாம் வேற்றுமையாகக் கொள்ளுதலும் பொருந்தும். தேசுவர மெய் அணிவோர் என மாறுக. (௩௬)

[ஷை வேறு]

வாளவிரு மாணிக்கங் கிரேதமுத லுகநான்கும் வழியே மக்கம்
காளபுரந் தும்புரஞ்சிங் களமிந்நான் கிடைப்படுமக் கமல ராகம்
ஆளுநிற மோன்பதர விந்தமா துளம்பூவித் தழல்கல் லாரங்
கோளரிய கச்சோத நரந்தநறும் பலந்தீபங் கோப மென்ன.

(இ - ள்.) வாள் அவிரும் மாணிக்கம்-ஒளி விளங்கும் மாணிக்கமானது, கிரேதம் முதல் உகம் நான்கும்-கிருதயுக முதல் நான்கு உகங்களிலும், வழியே-முறையே, மக்கம் காளபுரம் தும்புரம் சிங்களம் இநான்கு இடைபடும்-மக்கமும் காளபுரமும் தும்புரமும் சிங்களமும் ஆகிய இந்நான்கு இடங்களிலும் தோன்றும்; அ கமலராகம் ஆளும் நிறம்-அப் பதுமராகம் ஆளா நின்ற நிறம், அரவிந்தம்-தாமரை மலரும், மாதுளம் பூ-மாதுளை மலரும், வித்து-மாதுளை விதையும், அழல் - நெருப்பும், கல்லாரம் - செங்குவளை மலரும், கோள் அரிய கச்சோதம் - குற்றமற்ற மின்மினிப் பூச்சியும், நரந்த நறும்பலம்-நாரத்தையின் நறியபழமும், தீபம்-விளக்கும், கோபம் - இந்திர கோபமும், என்ன ஒன்பது-என ஒன்பது வகையாம் எ - று.

கிருதயுகத்தில் மக்கத்தினும், திரேதாயுகத்தில் காளபுரத்திலும், துவாபர யுகத்தில் தும்புரத்திலும், கலியுகத்தில் சிங்களத்திலும் தோன்றுமென்க. மாணிக்கத்திற்குப் பதுமராகமென்பது ஒரு பெயர். முன் குறிப்பிட்டுவந்த பதிப்பொன்றிலே இது முதற் பல செய்யுட்கள் பாடம் மாறியும், பல செய்யுட்கள் மிக்கும் உள்ளன. (௩௭)

இந்நிறத்த பொதுவாய மாணிக்க
மறையவர்முன் னியனாற் சாதி
தன்னியல்பாற் சாதரங்கங் குருவிந்தஞ்
சௌகந்தி கங்கோ வாங்கம்
என்னுமிவற் றாற்சிறந்து நான்காகு
மிவ்வடைவே யிந்நான் கிற்குஞ்
சொன்னவொளி பத்திருநான் கிருமூன்று
நான்கவையுஞ் சொல்லக் கேண்மின்.

(இ - ள்.) பொதுவாய இந்நிறத்த மாணிக்கம் - பொதுவாகிய இவ்வொன்பது நிறங்களையுடைய மாணிக்கம், மறையவர் முன் இயல் நால் சாதி தன் இயல்பால்-அந்தணர் முதலாக வமைந்த நான்கு சாதியாகி வழங்கு மாற்றால், சாதரங்கம் குருவிந்தம் சௌகந்திகம் கோவாங்கம் என்னும் இவற்றால் சிறந்து நான்கு ஆகும்-சாதரங்கமும் குருவிந்தமும்

சௌகந்திகமும் கோவாங்கமும் என்று சொல்லப்படும் இப்பெயர்களாற் சிறந்து நான்கு வகைப்படும்; இ நான்கிற்கும் சொன்ன ஒளி-இந்த நான்கு வகைக்கும் நூலிற் கூறிய ஒளி, இ அடைவே-இந்த முறையே, பத்து இருநான்கு இரு மூன்று நான்கு-பத்தும் எட்டும் ஆறும் நான்கு மாகும்; அவையும் சொல்லக் கேண்மின்-அவற்றையும் சொல்லக் கேளுங்கள் எ - று.

மேலே மாணிக்கத்தின் பொதுநிறங்களைக் கூறிப் பின் நாற் சாதிக்கும் உரிய நிறங்களைக் கூறுகின்றார். சாதரங்கம் பதுமராகமெனவும், குருவிந்தம் இரத்த விந்து எனவும், சௌகந்திகம் நீலகந்தியெனவும், கோவாங்கம் படிதமெனவும் பெயர் கூறப்படுதலு முண்டு;

"பதுமமும் நீலமும் விந்தமும் படிதமும்
விதிமுறை பிழையா விளங்கிய சாதியும்"

என்று சிலப்பதிகாரம் கூறுவது காண்க. சாதுரங்கம், சௌகந்தி, கோவாங்கு என்றும் சிறிது உருவு திரிந்து காணப்படுன்றன. தன் சாரியை. (கூஅ)

சாதரங்க நிறங்கமலங் கருநெய்த
லிரவியொளி தழல்கச் சோதம்
மாதுளம்போ ததன்வித்துக் கார்விளக்குக்
கோபமென வகுத்த பத்தும்
மேதகைய குருவிந்த நிறங்குன்றி
முயற்குருதி வெள்ள லோத்தம்
போதுபலா சலர் திலகஞ் செவ்வரத்தம்
விதாரமெரி பொன்போ லெட்டு.

(இ - ள்.) சாதரங்க நிறம்-சாதரங்கத்தின் நிறம், கமலம்-தாமரை மலரும், கருநெய்தல்-கருநெய்தல்மலரும், இரவிஒளி-சூரியனொளியும், தழல்-நெருப்பும், கச்சோதம்-மின்மினியும், மாதுளம் போது-மாதுள மலரும், அதன் வித்து-மாதுள வித்தும், கார்-முகிலும், விளக்கு-தீபமும், கோபம் - இந்திர கோபமும், என வகுத்த பத்தும்-எனப் பாகுபாடு செய்த பத்துமாகும்; மேதகைய குருவிந்த நிறம்-சிறந்த தன்மையையுடைய குருவிந்தத்தின் நிறம், குன்றி-குன்றி மணியும், முயற் குருதி-முயலிரத்தமும் வெள்ள லோத்தம்போது-வெள்ள லோத்த மலரும், பலாசு அலர்-முண் முருக்க மலரும், திலகம்-மஞ்சாடி மலரும், செவ்வரத்தம்-செவ்வரத்த மலரும்; விதாரம்-முள்ளிலவ மலரும், எரி பொன்போல்-விளங்கும் பொன்னும் ஆகிய இவைகளைப்போல, எட்டு-எட்டு வகையாகும் எ-று.

"தாமரை கழுநீர் சாதகப் புட்கண்
கோப மின்மினி கொடுங்கதிர் விளக்கு
மாதுளைப் பூவிதை வன்னியீ ரைந்தும்
ஓதுசா துரங்க வொளியா கும்மே"

என்னும் பழைய நூற்பாவிலும்,

"சாதகப் புட்கண் டாமரை கழுநீர்
கோப மின்மினி கொடுங்கதிர் விளக்கு
வன்னி மாதுளம் பூவிதை யென்னப்
பன்னு சாதுரங்க வொளிக்குணம் பத்தும்"

என்னும் கல்லாட அகவற் பகுதியினும் சாதுரங்க நிறத்துள் கார் கூறப்படாது சாதகப் புள்ளின்கண் கூறப்பட்டிருத்தலும்;

"திலக மூலோத்திரஞ் செம்பருத் திப்பூக்
கவிர்மலர் குன்றி முயலுதி ரம்மே
சிந்துரங் குக்கிற் கண்ணென வெட்டும்
எண்ணிய குருவிந்த மன்னிய நிறமே"

என்னும் நூற்பாவிலே, குருவிந்த நிறத்துள் செவ்வரத்தம், விதாரம் பொன் என்பன வின்றிச், செம்பருத்திப்பூ, சிந்துரம், குக்கிற்கண் என்பனவும்,

"செம்பஞ் சரத்தந் திலக மூலோத்திரம்
முயலின் சோரி சிந்துரங் குன்றி
கவிரல ரென்னக் கவர்நிற மெட்டும்"

என்னும் கல்லாடப் பகுதியிலே விதாரமும் பொன்னும் இன்றிச், செம்பஞ்சு, சிந்துரம் என்பனவும் கூறப்பட்டிருத்தலும் அறியற்பாலன. (௩௬)

களிதருசௌ கந்திகத்தி னிறமிலவம்
போதுகுயிற் கண்ண சோகந்
தளிரவிர்பொன் செம்பஞ்சி யைவண்ண
மெனவாறு தகுகோ வாங்க
ஒளிகுரவு குசும்பைமலர் செங்கல்கோவ்
வைக்கனியென் றொருநான் கந்த
மிளிர்பதும ராகத்தைப் பொதுமையினாற்
சோதிக்க வேண்டு மெல்லை.

(இ - ள்.) களிதரு சௌகந்திகத்தின் நிறம் - களிப்பைத்தருகின்ற சௌகந்திகத்தின் நிறம், இலவம்போது குயிற்கண் அசோகந் தளிர் அவிர் பொன் செம்பஞ்சி ஐவண்ணம் என ஆறு - இலவமலரும் குயிலின் கண்ணும் அசோகந்தளிரும் விளங்கும் பொன்னும் செம்பஞ்சியும் மருதோன்றியும் என ஆறு வகையாகும்; தகு கோவாங்க ஒளி - தக்க கோவாங்கத்தின் ஒளி, குரவு குசும்பை மலர் செங்கல் கொவ்வைக் கனி என்று ஒரு நான்கு - குராமலரும் குசும்பைமலரும் செங்கல்லும் கொவ்வைக் கனியும் என்று ஒரு நான்கு வகையாகும்; அந்த மிளிர் பதுமராகத்தைப் பொதுமையினால் சோதிக்க வேண்டும் எல்லை - அந்த விளக்கமுள்ள மாணிக்கத்தைப் பொதுவாக ஆராயவேண்டுமிடத்து எ - று.

ஐவண்ணம் - மருதோன்றி.

"கோகிலக்கண் செம்பஞ்சு கொய்ம்மலர்ப் பலாசம்
அசோகப் பல்லவம் அணிமலர்க் குவளை
இலவத் தலர்க ளென்ருறு குணமும்
சௌகந் திக்குச் சாற்றிய நிறனே"

என்னும் நூற்பாவில், சௌகந்திகத்தின் நிறத்துள் பொன், ஐவண்ணம் என்பன வின்றிப், பலாசம், குவளை என்பனவும்,

"அசோகப் பல்லவம் அலரிசெம் பஞ்சு
கோகிலக் கண்ணீ ளிலவலர் செம்பெனத்
தருசௌ கந்தி தன்னிற மாறும்"

என்னும் கல்லாடத்தில் பொன், ஐவண்ணம் என்பன வின்றிச் செம்பு, அலரி என்பனவும் கூறப்பட்டிருத்தலும்;

"கோவைநற் செங்கல் குராமலர் மஞ்சளெனக்
குங்கும மஞ்சிற் கோவாங்கு நிறமும்"

என்னும் கல்லாடத்தில், குசும்பை மலரின்றி மஞ்சள் கூறிக் குங்குமம் ஒன்று மிகுதியாகக் கூறப்பட்டிருத்தலும் அறியற்பாலன. (௬0)

திண்ணியதாய் மேல்கீழ்சூழ் பக்கமுற
வொளிவிடுதல் செய்தாற் செவ்வே
அண்ணியவுத் தமமுதன்மூன் றாமென்பர்
சாதரங்க மணிவோர் விச்சை
புண்ணியவான் கன்னியறு சுவையன்ன
முதலான புனித தானம்
பண்ணியதும் பரிமேத யாகமுதன்
மகம்புரிந்த பயனுஞ் சேர்வர்.

(இ - ள்.) திண்ணியது ஆய் மேல் கீழ் சூழ் பக்கம் உற ஒளி விடுதல் செய்தால்-திட்பமுடையதாய் மேலும் கீழும் சுற்றுப் பக்கமுமாகிய இவற்றில் ஒளி வீசினால், செவ்வே - முறையே, அண்ணிய உத்தமம் முதல் மூன்று ஆம்-பொருந்திய உத்தமம் முதலிய மூன்று வகைப்படும், என்பர் - என்று கூறுவர்; சாதரங்கம் அணிவோர் - சாதரங்கத்தினை அணிகின்றவர்கள், விச்சை புண்ணிய ஆன் கன்னி அறு சுவை அன்னம் முதலான புனிததானம் பண்ணியதும்-கல்வியும் அறவடிவாகிய பசுவும் கன்னியும் அறுசுவை யமைந்த உண்டியும் முதலான தூய தானஞ் செய்த பயனையும், பரிமேத யாகம் முதல் மகம் புரிந்த பயனும்-பரி வேள்வி முதலிய பல வேள்விகளைப் புரிந்த பயனையும், சேர்வர்-அடைவர் எ - று.

மேலே ஒளி விடில் உத்தமம், கீழே ஒளி விடில் அதமம், பக்கத்தில் ஒளி விடில் மத்திமம் என்க. பண்ணியது-பண்ணிய பயன். (௬௧)

குருவிந்தந் தரிப்பவர்பார் முழுதுமொரு
குடைநிழலிற் குளிப்ப வாண்டு
திருவிந்தை யுடனிருப்பர் சௌகந்தி
கந்தரிப்போர் செல்வங் கீர்த்தி
மருவிந்தப் பயனடைவர் கோவாங்கந்
தரிப்போர்தம் மனையிற் பாலும்
பெருவிந்த மெனச்சாலி முதற்பண்ட
முடன்செல்வப் பெருக்கு முண்டாம்.

(இ - ள்.) குருவிந்தம் தரிப்பவர் பார் முழுதும் ஒரு குடை நிழலில் குளிப்ப ஆண்டு-குரு விந்தத்தினை அணிகின்றவர் நில வுலக முற்றும் தமது ஒரு குடை நிழலின் கீழ்த் தங்க அரசாண்டு, திரு விந்தை உடன் இருப்பர்-திருமகளோடும் வீரமகளோடுங் கூடி யிருப்பர் ; சௌகந்திகம் தரிப்போர்-சௌகந்திகத்தினை அணிவோர், செல்வம் கீர்த்தி மருவு இந்தப் பயன் அடைவர் - செல்வமும் புகழு மாகிய பொருந்திய இந்தப் பயன்களை யடைவார் ; கோவாங்கம் தரிப்போர் தம் மனையில்-கோவாங்கத்தினை அணிவோரின் வீட்டில், பாலும் பெரு விந்தம் என சாலி முதல் பண்டமுடன் செல்வப்பெருக் கும் உண்டாம்-பாலும் பெரிய விந்த மலையைப் போல நெல் முதலிய பல பண்டங்களின் குவைகளோடு செல்வப் பெருக்கமும் உண் டாகும் எ - று.

நிழலின் கீழிருத்தலை 'நிழலிற் குளிப்ப' என்றார். திருவுடனும் விந்தையுடனும் என்க. (சுஉ)

எள்ளியிடு குற்றமெலா மிகந் துகுண
னேற்றொளிவிட் டிருள்கால் சீத்துத்
தள்ளியவிச் செம்பதும ராகமது
புனைதக்கோர் தம்பா லேனைத்
தெள்ளியமுத் துள்ளிட்ட பன்மணியும்
வந்தோங்குஞ் செய்யா ளோடும்
ஒள்ளியநற் செல்வமதற் கொப்பநெடும்
பாற்கடலி னோங்கு மானே.

(இ - ள்.) எள்ளியிடு குற்றம் எலாம் இகந்து-விலக்கப்பட்ட குற்றங்களெல்லாவற்றினின்றும் நீங்கி, குணன் ஏற்று ஒளிவிட்டு இருள் கால் சீத்துத் தள்ளிய-சிறந்த குணங்களைத் தன்னகத்தே கொண்டு ஒளி வீசி இருளைப் பற்றறக் கெடுத்துப் போக்கிய, இ செம்பதும ராகமது புனை தக்கோர் தம்பால்-இந்தச் சிவந்த பதும ராக மணியை அணிகின்ற தக்கோரிடத்து, ஏனை தெள்ளிய முத்து உள்ளிட்ட பல் மணியும் வந்து ஓங்கும் - மற்றைச் சிறந்த முத்து முதலிய பல மணிகளும் வந்து பெருகும்; அதற்கு ஒப்ப - அதற்குப் பொருந்த, செய்யாளோடும் ஒள்ளிய நல் செல்வம் - திருமகளோடும் புகழைத் தருவதாகிய நல்ல செல்வமும், நெடும்பாற்கடலின் ஓங்கும்- நெடிய பாற்கடலைப் போல வளரும் எ - று.

கால் சீத்து - அடியுடன் கெடுத்து ; ஒரு சொல்லுமாம். பதும ராகமது; அது : பகுதிப் பொருள் விகுதி. தம் : சாரியை. ஆல், ஓ : அசைகள். மாணிக்கத்தின் குற்றம் பதினாறு எனவும், குணம் பன்னிரண்டு எனவும் கூறப்படும் : அதனை,

"மாணிக் கத்தியல் வகுக்குங் காலைச்
சமனொளி சூழ்ந்த விருநான் குடமும்
நால்வகை வருண மூஙவின் றவிப் பெயரும்
பன்னிரு குணமும் பதினறு குற்றமும்
இருபத் தெண்வகை யிலங்கிய நிறமும்
மருவிய விலையும் பத்தி பாய்தலும்
இவையென மொழிப வியல்புணர்ந் தோரே"

என்னும் பழைய நூற்பாவால் அறிக. (௬௩)

ஷை வேறு

பிறநிறச் சார்பு புள்ளி புள்ளடி பிறங்கு கீற்று
மறுவரு* தராச மென்ன வகுத்தவைங் குற்றந் தள்ளி
அறைதரு பண்பு சான்ற வரதன மணியும் வேந்தன்
செறுநர்வா ளூற்ற மின்றிச் செருமகட் கன்ப னுவான்.

(இ - ள்.) பிறநிறச் சார்பு-(அவ்வவற்றிற்குரிய நிறமொழிந்த) வேறு நிறம் பொருந்தலும், புள்ளி-விந்துவும், புள் அடி - காக பாதமும், பிறங்கு கீற்று - விளங்குகின்ற தாரையும், மறு வரு தராசம்-குற்றம் பொருந்திய ஒளி சலித்தலும், என்ன வகுத்த ஐங்குற்றம் தள்ளி - என்று பாகுபாடு செய்த ஐந்து குற்றங்களையும் ஒழித்து, அறைதரு பண்பு சான்ற அரதனம் அணியும் வேந்தன் - (அவ்வவற்றிற்குக்) கூறிய குணம் நிறைந்த மணிகளை அணிகின்ற மன்னன், செறுநர்வாள் ஊற்றம் இன்றி - பகைவரது வாளினால் இடையூறில்லாமல், செருமகட்கு அன்பன் ஆவான் - வீரமகளுக்குத் தோழனுவான் எ - று.

சரை மலம், கீற்று, சம்படி, பிளத்தல், துளை, கரு, விந்து, காக பாதகம், மிருத்து, கோடியில்லன, கோடி முரிந்தன, தாரை மழுங்கல், கருகல், வெள்ளை, கல், மணல், பரிவு, தார், சாயையிறுகுதல், கருப்பத்துளை, கல்லிடை முடங்கல், திருக்கு என்பன வாதியாகக் குற்றங்கள் பலவாகும்; அவற்றுள், ஐந்து குற்றங்களைப் பொது வகையால் ஈண்டெடுத்துக் கூறினர். புள்ளடி - காகபாதம்; புள்-காக்கை. ஊற்றம்-ஊறு; அம்: பகுதிப்பொருள் விகுதி. (௬௪)

குறுநிலக் கிழவ னேனு மவன்பெருங் குடைக்கீழ்த் தங்கி
மறுகுநீர் ஞால மெல்லாம் வாழுமற் றவனைப் பாம்பு
தெறுவிலங் கலகை பூதஞ் சிறுதெய்வம் வறுமை நோய்தீக்
கறுவுகோள் கூற்றச் சீற்றங் கலங்கிட வாதி யாவாம்.

---

(பா - ம்.) * மறுவுறு.

(இ - ள்.) குறுநிலக் கிழவனேனும்-(இம்மணிகளை யணிபவன்) குறுநில மன்னனாயினும், அவன் பெருங் குடைக்கீழ் - அவனது பெரிய குடை நிழலின் கீழ், மறுகு நீர் ஞாலம் எல்லாம் தங்கி வாழும்- கடல் சூழ்ந்த உலக மனைத்தும் பொருந்தி வாழும்; பாம்பு தெறு விலங்கு அலகை பூதம் சிறு தெய்வம் வறுமை நோய் தீ - பாம்பும் கொல்லும் விலங்குகளும் பேயும் பூதமும் சிறு தெய்வங்களும் மிடியும் நோயும் நெருப்பும், கறுவுகொள் கூற்றச் சீற்றம் - கறுவுதலைக் கொண்ட கூற்றின் சினமும், கலங்கிட அவனை வாதியா - கலக்கமடையும்படி அவனைத் துன்புறுத்தமாட்டா எ - று.

மறுகுதல் - சுழலுதல், மறுகு நீர் - கடல்; ஆகுபெயர். தெறு விலங்கு - கொலைத் தொழிலையுடைய விலங்கு; சிங்கம் புலி முதலியன. மற்று, ஆம் என்பன அசைகள். (சஙி)

முன்னவ ரேன்ப கற்றோர் வச்சிர முந்நீர் முத்தம்
மன்னவ ரேன்ப துப்பு மாணிக்கம் வணிக ரேன்ப
மின்னவிர் புருட ராகம் வயிடூயம் வெயிற்கோ மேதம்
பின்னவ ரேன்ப நீல மரகதம் பெற்ற சாதி.

(இ - ள்.) கற்றோர் - கற்று வல்லோர், பெற்ற சாதி-பொருந்திய சாதி வகையால், வச்சிரம் முந்நீர் முத்தம் முன்னவர் என்ப - வயிரத்தையும் கடலிற்றோன்றிய முத்தையும் அந்தணர் என்று கூறுவர்; துப்பு மாணிக்கம் மன்னவர் என்ப-பவளத்தையும் மாணிக்கத்தையும் அரசரென்று கூறுவர்; மின் அவிர் புருடராகம் வயிடூயம் வெயில் கோமேதம் வணிகர் என்ப - மின்போல விளங்கும் புருடராகத்தையும் வயிடூரியத்தையும் ஒளி பொருந்திய கோமேதகத்தையும் வணிகர் என்று கூறுவர்; நீலம் மரகதம் பின்னவர் என்ப - நீலத்தையும் மரகதத்தையும் சூத்திரரென்று கூறுவர் எ - று.

பொருந்திய சாதி வகையால் என விரித்துத் தனித்தனி கூட்டுக. வெண்மை முதலிய நிறம்பற்றி வயிரம் முதலியவற்றை அந்தணர் முதலிய சாதியுட் படுத்துக் கூறுவது புனைந்துரை வகையாயதொரு வழக்கு. (சசு)

பார்த்திவர் மதிக்கு முத்தம் பளிங்கன்றிப் பச்சை தானுஞ்
சாத்திகந் துகிர்மா ணிக்கங் கோமேதந் தாமே யன்றி
மாத்திகழ் புருட ராகம் வயிடூயம் வயிரந் தாமும்
ஏத்திரா சதமா நீலந் தாமத மேன்ப ராய்ந்தோர்.

(இ - ள்.) ஆய்ந்தோர் - நூல்களை ஆராய்ந்தோர், பார்த்திவர் மதிக்கும் முத்தம்-அரசர்கள் மதிக்கின்ற முத்தும், பளிங்கு-பளிங்கும், அன்றி - இவையல்லாமல், பச்சைதானும் - மரகதமும், சாத்திகம் - சாத்துவிக குணமுடையனவாம், துகிர் மாணிக்கம் கோமேதம் - பவளமும் மாணிக்கமும் கோமேதமும், அன்றி இவையல்லாமல், மாதிகழ் புருடராகம் வயிடூயம் வயிரம் தாமும் - பெருமை விளங்கும் புருடராகமும் வயிடூரியமும் வயிரமும், ஏத்து இராசதம் ஆம்-பலரும் போற்றும் இராசத குணம் உடையனவாம், நீலம் - நீலமானது, தாமதம்-தாமத குணம் உடையதாம், என்பர் என்று கூறுவர் எ-று.

நவமணிகளின் வேருய பளிங்கும் இதிற் கூறப்பட்டது. சாத்திகம் சாத்விகம் என்பதன் திரிபு, சாத்துவிகம் முதலிய குணவகை சிறிது வேறுபடக் கூறுவாருமுளர். தான், தாம், ஏ என்பன அசைகள். (சஎ)

இனையவை யளந்து கண்டு மதிக்குநா ளேழுமான் பொற்றேர்
முனைவனுண் முதலா வேழின் முறையினுற் பதும ராகங்
கனைகதிர் முத்தந் துப்புக் காருடம் புருட ராகம்
புனையொளி வயிர நீல மென்மனுர் புலமை சான்றோர்.

(இ-ள்.) இனையவை அளந்து கண்டு மதிக்கும் நாள்-இம்மணிகளை ஆராய்ந்து பார்த்து மதிப்பிடும் நாட்கள், எழுமான் பொன் தேர் முனைவன் நாள் முதலா - ஏழு குதிரைகளைப் பூட்டிய பொன்னுலாகிய தேரினையுடைய சூரியனுக்குரிய ஞாயிற்றுக்கிழமை முதலாக, ஏழின் முறையினுல் - ஏழு கிழமைகளின் முறையே, பதுமராகம் கனைகதிர் முத்தம் துப்பு காருடம் புருடராகம்-பதுமராகமும் செறிந்த ஒளியினையுடைய முத்தும் பவளமும் பச்சையும் புருடராகமும், புனை ஒளி வயிரம் நீலம் - அழகிய ஒளியினையுடைய வயிரமும் நீலமும் (என்பவற்றிற்குரியன), என்மனுர் புலமை சான்றோர் - என்று கூறுவர் அறிவின் மிக்க பெரியோர் எ - று.

நாள் முறையினுல் உரியன வென விரித்து முடிக்க. காருடம் - பச்சை. (சஅ)

வெய்யவன் கிழமை தானே மேதக மணிக்கு மாகும்
மையறு திங்க டானே வயிடூய மணிக்கு மாகும்
ஐயற விவையோன் பானு மாய்பவ ரகம்பு றம்பு
துய்யரா யறவோ ராய்முன் சொன்னநா ளடைவே யாய்வர்.

(இ - ள்.) வெய்யவன் கிழமை தானே - ஞாயிற்றுக் கிழமையே, மேதக மணிக்கும் ஆகும்-கோமே தக மணிக்கும் உரியதாகும்; மைஅறு திங்கள் தானே - குற்றமற்ற திங்கட்கிழமையே, வயிடூய மணிக்கும் ஆகும் - வயிடூரிய மணிக்கும் உரியதாகும்; இவை ஒன்பானும் ஐயம் அற ஆய்பவர் - இவை ஒன்பது மணிகளையும் ஐயுறவு நீங்க ஆராய்பவர், அகம் புறம்பு துய்யராய் - உள்ளும் புறமும் தூய்மையுடையவராய், அறவோராய் - அறநெறியிற் செல்பவராய், முன் சொன்ன நாள் அடைவே ஆய்வர் - முன் கூறிய கிழமைகளில் முறையே ஆராயக் கடவர் எ - று.

பதுமராகத்திற்குக் கூறிய ஞாயிற்றுக் கிழமையே கோமேதகத்திற்கும், முத்திற்குக் கூறிய திங்கட்கிழமையே வயிடூரியத்திற்கும் ஆகுமென்ருர். கோமேதகம் என்பது முதற்குறையாய் நின்றது. ஐயமற என்பது ஐயற எனத் தொகுத்தல் விகாரமாயிற்று. அகமும் புறம்பும் எனவிரிக்க. ஆய்வர் - ஆயக்கடவரென்க. (சகூ)

அல்லியம் பதுமஞ் சாதி யரத்தவா யாம்பல் கோடல்
வல்லிசேர் மௌவற் போது நூற்றிதழ் மரைகா லேயம்*
மெல்லிதழ்க் கழுநீர் பேழ்வாய் வெள்ளைமந் தார மின்ன
சொல்லிய முறையால் வண்டு சூழத்தன் முடிமேற் சூடி.

---

(பா - ம்.) * மரைகள் வாய.

(இ - ள்.) அல்லி அம் பதுமம்-அகவிதழையுடைய அழகிய செந்தாமரை மலரும், சாதி - சிறுசண்பக மலரும், அரத்தவாய் ஆம்பல் - சிவந்த வாயையுடைய ஆம்பன் மலரும், கோடல் - செங்காந்தண் மலரும், வல்லிசேர் மௌவல்போது-கொடியாய்ப் படர்ந்த மல்லிகையின் மலரும், நூறு இதழ்மரை - நூறு இதழ்களையுடைய வெண்டாமரை மலரும், காலேயம் - மரமஞ்சள் மலரும், மெல் இதழ் கழுநீர் - மெல்லிய இதழையுடைய நெய்தல் மலரும், பேழ்வாய் வெள்ளை மந்தாரம் - பிளந்த வாயையுடைய வெள்ளை மந்தார மலரும், இன்ன - ஆகிய இம்மலர்களை, சொல்லிய முறையால் வண்டு சூழத் தம் முடிமேல் சூடி - முன்னர்க் கூறிய முறையினால் வண்டுகள் சூழத் தமது முடியிற் சூடி எ - று.

அல்லி - அகவிதழ். மரை: முதற்குறை. முன்னே பதுமராகம் முதலியவற்றைக் கூறிய முறையே அவற்றுக்கு உரியவாகக்கொண்டு சூடி என்க. (௫௦)

தலத்தினைச் சுத்தி செய்து தவிசினை யிட்டுத் தூய
நலத்துகில் விரித்துத்தெய்வ மாணிக்க நடுவே வைத்துக்
குலத்தமுத் தாதி யெட்டுங் குணதிசை முதலெண் டிக்கும்
வலப்பட முறையே பானு மண்டல மாக வைத்து.

(இ - ள்.) தலத்தினைச் சுத்தி செய்து - நிலத்தைத் தூய்மை செய்து, தவிசினை இட்டு-ஆதனத்தைஇட்டு, தூயநலம்துகில் விரித்து-அதன்மேல் வெள்ளிய நன்மையாகிய ஆடையை விரித்து, தெய்வ மாணிக்கம் நடுவே வைத்து - தெய்வத் தன்மை பொருந்திய மாணிக்கத்தை இடையில் வைத்து, குலத்த முத்து ஆதி எட்டும்-சிறந்த முத்து முதலிய மணிகள் எட்டினையும், குணதிசை முதல் எண் திக்கும் முறையே வலப்பட - கிழக்குத் திக்கு முதல் எட்டுத் திக்குகளிலும் முறையே வலமாக, பானு மண்டலமாக வைத்து - பரிதி மண்டலம் போல வைத்து எ - று.

நலத்துகில் - நன்மையாகிய துகில்: பண்புத் தொகை. குலத்த - சிறப்பினையுடைய: குறிப்புப் பெயரெச்சம். மண்டலமாக வலப்பட வைத்து என்க. வலம்பட என்பது வலித்தலாயிற்று. வட்டமாக வென்பார் 'பானு மண்டலமாக' என்றார். சூரிய மண்டிலம் சிவந்த கதிருடன் ஏனைக் கதிர்களையும் உடையதாதலும் கொள்க. (௫௧)

அன்புறு பதும ராக மாதியா மரத னங்கள்
ஒன்பதுங் கதிரோ னாதி யோன்பது கோளு மேற்றி
முன்புரை கமலப் போது முதலோன்பான் மலருஞ் சாத்தி
இன்புற நினைந்து பூசை யியன்முறை வழாது செய்தல்.

(இ - ள்.) அன்பு உறு பதுமராகம் ஆதியாம் அரதனங்கள் ஒன்பதும் - விருப்ப மிக்க பதுமராகம் முதலாகிய ஒன்பதும் மணிகளின் மேலும், கதிரோன் ஆதி ஒன்பது கோளும் ஏற்றி - ஞாயிறு முதலிய ஒன்பது கோட்களையுந் தாபித்து, முன்பு உரை கமலப்போது முதல் ஒன்பான் மலரும் சாத்தி-முன்னே கூறிய தாமரை மலர் முதலிய ஒன்

பது மலர்களையும் சாத்தி, இன்பு உற நினைந்து-இன்ப மிகச் சிந்தித்து இயல் முறை வழாது-விதி முறை வழுவாமல், பூசை செய்தல்-பூசனை புரிக எ - று.

ஏற்றுதல் - ஆவாகித்தல். செய்தல் - செய்க: அல்லீற்று வியங்கோள். மாணிக்கம் ஞாயிற்றுக்கும், முத்து திங்களுக்கும், பவழம் செவ்வாய்க்கும், மரகதம் புதனுக்கும், புட்பராகம் வியாழனுக்கும், வயிரம் வெள்ளிக்கும், இந்திர நீலம் சனிக்கும், கோமேதம் இராகுவுக்கும், வைடூரியம் கேதுவுக்கும் மகிழ்ச்சி தருவன என்று சுக்கிரநீதியுட் கூறப்பட்டுளது.* ( llஉ)

தக்கமுத் திரண்டு வேறு தலசமே சலச மென்ன
இக்கதிர் முத்தந் தோன்று மிடன்பதின் மூன்று சங்கம்
மைக்கரு முகில்வேய் பாம்பின் மத்தகம் பன்றிக் கோடு
மிக்கவெண் சாலி யிப்பி மீன்றலை வேழக் கன்னல்.

(இ - ள்.) தக்க முத்து தலசமே சலசமே என்ன இரண்டுவேறு-குற்றமில்லாத முத்துக்கள் தலச மென்றும் சலச மென்றும் இரண்டு வகைப்படும்; இ கதிர் முத்தம் தோன்றும் இடன் பதின்மூன்று-இந்த ஒளியையுடையமுத்துக்கள் தோன்றும் இடம் பதின்மூன்றாம்; சங்கம் மைக்கரு முகில் வேய் பாம்பின் மத்தகம் பன்றிக்கோடு-சங்கும் மிகக் கரிய முகிலும் மூங்கிலும் அரவின் தலையும் பன்றிக் கொம்பும், மிக்க வெண்சாலி இப்பி மீன் தலை வேழக் கன்னல் - மிகுந்த வெண்ணெல்லும் சிப்பியும் மீனினது தலையும் வேழக்கரும்பும் எ-று.

தலசம் – நிலத்திற் றோன்றுவது. சலசம் – நீரிற் றோன்றுவது. தலசமே: ஏகாரம் எண்ணுப் பொருட்டு. என்ன இரண்டு வேறும் என்க. வேழக் கன்னல் - வேழமாகிய கன்னல்: இருபெய ரொட்டு; வேழம்-கரும்பின் ஒருவகை. இச்செய்யுளை வருஞ் செய்யுளோடு ஒரு தொடராக்கி, தோன்றுமிடன் கொக்கின் கண்டம் எனப்பதின் மூன்றாம் என முடிக்க. (llங)

கரிமருப் பைவாய் மான்கை கற்புடை மடவார் கண்டம்
இருசிறைக் கோக்கின் கண்ட மேனக்கடை கிடந்த மூன்றும்
அரிபன வாதிப் பத்து நிறங்களு மணங்குந் தங்கட்
குரியன நிறுத்த வாறே யேனவு முரைப்பக் கேண்மின்.

(இ - ள்.) கரிமருப்பு ஐவாய் மான்கை கற்புடை மடவார் கண்டம் - யானையின் தந்தமும் சிங்கத்தின் கையும் கற்புடை மகளிரின் கழுத்தும், இருசிறைக் கொக்கின் கண்டம் என - இரண்டு சிறைகளையுடைய கொக்கின் கழுத்தும் என்று; கடை கிடந்த மூன்றும் அரியன ஈற்றிற் கூறிய மூவகையும் கிடைத்தற்கரியன; ஆதிப்பத்து நிறங்களும் - முதற் கண் உள்ள பத்துவகை முத்துக்களின் நிறங்களும் தங்கட்கு உரியன அணங்கும் - அவற்றிற்கு உரியவாகிய தெய்வங்

* பண்டிதர், மு. கதிரேசச் செட்டியாரவர்கள் மொழி பெயர்த்த 'சுக்கிர நீதி' கஅ௵, கஅசுஆம் பக்கங்களிற் காண்க.

களும், எனவும் - பிறவும், நிறுத்தவாறே உரைப்பக் கேண்மின் - நிறுத்த முறையே சொல்லக் கேளுங்கள் எ - று.

விரிந்த முகமுடையது என்னும் பொருளில் சிங்கத்திற்குப்பஞ்சானனம் என்பது ஒருபெயர்; பஞ்ச என்பது ஐந்து எனவும் பொருள்படு மாகலின் சொல் நோக்கி 'ஐவாய்' எனக் கூறினார்; இங்ஙனம் மொழி பெயர்த்த லுண்டென்பது 'குஞ்சர நகரம்' முதலியவற்றா லறிக. அவை தங்கட்கு என்க. (௰௪)

மாடவெண் புறவின்முட்டை வடிவெனத்திரண்ட பேழ்வாய்*
கோடுகான் முத்தம்வெள்ளை நிறத்தன† கொண்மூ முத்தம்
நீடுசெம் பரிதி யன்ன நிறத்தது கிளைமுத் தாலிப்
பீடுசா னிறத்த ராவின் பெருமுத்த நீலத் தாமால்.

(இ - ள்.) மாடப் புறவின் வெள்முட்டை வடிவு எனத்திரண்ட - மாடப் புறவின் வெள்ளிய முட்டையின் வடிவினைப்போலத் திரட்சி வாய்ந்த, பேழ்வாய்-பிளந்த வாயினையுடைய இப்பியும், கோடு - சங்கும், கால் - ஈன்ற, முத்தம் - முத்தங்கள், வெள்ளை நிறத்தன - வெள்ளை நிறத்தினை யுடையன; கொண்மூ முத்தம் நீடு செம்பரிதி அன்ன நிறத்தது - முகிலீன்ற முத்து மிக்க செந்நிறம் வாய்ந்த சூரியனை ஒத்த நிறத்தினை யுடையது; கிளைமுத்து - மூங்கிலீன்ற முத்து, ஆலிப் பீடுசால் நிறத்து - மழைக் கட்டிபோலப் பெருமை நிறைந்த நிறத்தினை யுடையது; அராவின் பெருமுத்தம் - பாம்பீன்ற பெரியமுத்து, நீலத்து ஆம் - நீல நிறத்தினை யுடையதாகும் எ - று.

பேழ்வாய் - பிளந்தவாயையுடையது என இப்பிக்குக் காரணக் குறி. கோடு - சங்கு. கிளை - மூங்கில். ஆலி - ஆலங்கட்டி; மழை பெய்யும் பொழுது விழும் நீர் திரண்ட கட்டி; ஆலம் - நீர். நிறத்தது நீலத்தது என்பன நிறத்து நீலத்து என விகாரமாயின. ஆல், அசை. (௰௫)

ஏனமா வாரஞ் சோரி யீர்ஞ்சுவைச் சாலி முத்தம்
ஆனது பசுமைத் தாகும் பாதிரி யனைய தாகும்
மீனது தரளம் வேழ மிரண்டினும் விளையு முத்தந்
தானது பொன்னின் சோதி தெய்வதஞ் சாற்றக் கேண்மின்.

(இ - ள்.) ஏனம் மா ஆரம் சோரி-பன்றிக்கொம்பின் பெருமையுடைய முத்தானது குருதியினிறத்தினையுடையது; ஈர் சுவைச் சாலி முத்தம் ஆனது பசுமைத்து ஆகும் - தண்ணிய சுவையினையுடைய வெண்ணெல்லின் முத்தம் பசிய நிறத்தினையுடையது; மீனது தரளம் பாதிரி அனையதாகும் - மீன்றலையின் முத்தம் பாதிரி மலர் போலும் நிறத்தினையுடையது; வேழம் இரண்டினும் விளையும் முத்தம்-யானைக் கொம்பும் கரும்பும் ஆகிய இவ்விரண்டினும் உண்டாகின்ற முத்துக்கள், பொன்னின் சோதி - பொன்னின் நிறத்தினையுடையன; தெய்வதம் சாற்றக் கேண்மின் - அவ்வம் முத்தங்களுக்குரிய தெய்வங்களையும் கூறக்கேளுங்கள் எ - று.

---

(பா - ம்.) * பேழ்வாய்க்கோடு. † வெள்ளை நிறத்தது.

ஈர்ஞ்சுவை, 'மெல்லெழுத்து மிகுதல் மெய் பெறத் தோன்றும்'' என்பதன் இலேசால் மெலி மிக்கது. ஆனது, முதல் வேற்றுமைச் சொல். வேழம்-யானை, கரும்பு. தான், அது என்பன அசைகள். (இசு)

பான்முத்தம் வருணன் முத்தம்
பகன்முத்தம் பகலோன் முத்தம்
மான்முத்த நீல முத்த
மாசறு குருதி முத்தங்
கான்முத்தம் பசிய முத்தங்
காலன்றன் முத்தந் தேவர்
கோன்முத்தம் போன்போன் முத்தங்
குணங்களும் பயனுஞ் சோல்வாம்.

(இ - ள்.) பால் முத்தம் வருணன் முத்தம் - பால் போன்ற வெள்ளிய முத்தங்கள் வருணனுக்குரிய முத்தங்களாகும்; பகல் முத்தம் பகலோன் முத்தம் - சூரியன் போன்று செந்நிறம் வாய்ந்த முத்தங்கள் சூரியனுக்குரிய முத்தங்க ளாகும்; நீல முத்தம் மால் முத்தம் - நீல நிறமுடைய முத்தங்கள் திருமாலுக்குரிய முத்தங்களாகும்; மாசு அறு குருதி முத்தம் கால் முத்தம் - குற்றமற்ற குருதி நிறத்தினையுடைய முத்தங்கள் வாயு தேவனுக்குரிய முத்தங்க ளாகும்; பசிய முத்தம் காலன் முத்தம் - பசிய நிறத்தினையுடைய முத்தங்கள் கூற்றுவனுக் குரிய முத்தங்க ளாகும்; பொன்போல் முத்தம்-பொன்னைப் போலும் நிறம் வாய்ந்த முத்தங்கள், தேவர்கோன் முத்தம் - தேவேந்திரனுக் குரிய முத்தங்க ளாகும்; குணங்களும் பயனும் சொல்வாம் - (இனி) அவற்றின் குணங்களையும் அணிவோ ரடையும் பயனையும் கூறுவோம் எ - று. (இஎ)

கால் காற்றுத் தெய்வம். தன்: சாரியை.

உடுத்திர ளனைய காட்சி யுருட்சிமா சின்மை கையால்
எடுத்திடிற் றிண்மை பார்வைக் கின்புறல் படிக மென்ன*
அடுத்திடு குணமா றின்ன வணியின்மூ தணங்கோ டின்மை
விடுத்திடுந் திருவந் தெய்தும் விளைந்திடுஞ் செல்வம் வாழ்நாள்.

(இ - ள்.) உடுத்திரள் அனையகாட்சி-உடுக் கூட்டத்தினை ஒத்த தோற்றமும், உருட்சி - திரட்சியும், மாசு இன்மை - குற்றங்களில்லாமையும், கையால் எடுத்திடில் திண்மை - கையினால் எடுத்தால் திண்ணென் றிருத்தலும், பார்வைக்கு இன்புறல் - நோக்கத்திற்கு இன்பஞ் செய்தலும், படிகம் - படிகம்போன்று தெளிந்திருத்தலும், என்ன அடுத்திடு குணம் ஆறு-என்று பொருந்திய குணங்கள் ஆறுகும்; இன்ன அணியின் மூதணங்கோடு இன்மை விடுத்திடும் - இம் முத்துக்களை அணிந்தால் (அணிவோரைத்) தவ்வையும் வறுமையும் (விட்டு) நீங்கும்; திருவந்து எய்தும்-திருமகள் வந்து சேருவாள்; செல்வம் வாழ்நாள் விளைந்திடும் - செல்வமும் வாழ்நாளும் மிகும் எ - று.

---

(பா - ம்.) * புடிதமென்ன.

உடு - விண்மீன். மூதணங்கு - மூதேவி. குற்றங்களாவன-காற்றேறு, மணலேறு, கல்லேறு, நீர்நிலை என்பன முதலாயின;

"காற்றினு மண்ணினுங் கல்லினு நீரினும்
தோற்றிய குற்றந் துகளறத் துணிந்தவும்
சந்திர குருவே அங்கா ரகனென
வந்த நீர்மைய வட்டத் தொகுதியும்"

என்னும் சிலப்பதிகாரத்து ஊர்காண் காதை யடிகளும், அவற்றின் உரையும் நோக்குக. (௩௮)

மாசறு தவத்தோ னென்பும் வலாசுர னென்பும் வீழ்ந்த
கோசல மாதி நாட்டிற் பட்டது குணத்தான் மாண்ட
தேசதா யிலேச தாகித் தெள்ளிதா யளக்கி னெல்லை
வீசிய விலைய தாகி மேம்படு வயிரந் தன்னை.

(இ – ள்.) *மாசு அறு தவத்தோன் என்பும்-குற்றமற்ற தவத்தினையுடைய ததிசி முனிவன் முதுகந் தண்டெலும்பும், வலாசுரன் என்பும் - வலாசுரனுடைய எலும்பும், வீழ்ந்த கோசலம் ஆதி நாட்டில் - சிந்திய கோசல முதலிய நாட்டினில். பட்டது - தோன்றி, குணத்தால் மாண்ட தேசது ஆய் - குணங்களால் மாட்சிமைப் பட்ட விளக்க முடையதாய், இலேசது ஆகி - (கையால் எடுப்பின்) இலேசாய், தெள்ளிதாய் - சருச்சரை யகன்றதாய், அளக்கின் எல்லை வீசிய விலையது ஆகி - (விலையை) வரையறுத்தால் அளவு கடந்த விலையை யுடையதாகி, மேம்படு வயிரம் தன்னை - சிறந்த வயிரத்தை எ - று.*

பட்டது - தோன்றியதாய்; எச்சம். எல்லை வீசிய - அளவினைப் போக்கிய.

"வைரரகர மேருப் பிமவா னேம கூடம்
துங்கசவாலக்க மவந்திக மாதங்கந் தொகுமருண
[மெனுமெட்டா கரமேதோற்றம்"

என வயிரம் தோன்றுமிடம் எட்டென்பர் பெரும்பற்றப்புலியூர்நம்பி.

'குணத்தால் மாண்ட' எனவே குற்ற மின்மையுங் கொள்க;

"சரைமலங் கீற்றுச் சம்படி பிளத்தல்
துளைகரி விந்து காக பாதம்
இருத்துக் கோடிக ளிலாதன முரிதல்
தாரை மழுங்கல் தன்னோ
டீராறும் வயிரத் திழிபென மொழிப"

என்பதனால் வயிரத்தின் குற்றம் பன்னிரண்டு எனவும்;

"காகபாதமுங் களங்கமும் விந்துவு மேகையு நீங்கி"

என்னும் சிலப்பதிகார அடிகளாலும்,

"காக பாத நாகங் கொல்லும்"

"மலம்பிரி யாதது நிலந்தரு கிளைகெடும்"
"விந்து சிந்தையிற் சந்தா பந்தரும்"
"கீற்று வரலினை யேற்றவர் மாய்வர்"

என்னும் நாற்பாக்களாலும் அவற்றுள் மிக்க குற்றம் நான்கு எனவும்;

"பலகை யெட்டுங் கோண மாறும்
இலகிய தாரையுஞ் சுத்தியுந் தராசமும்
ஐந்துங் குணமென் றறைந்தனர் புலவர்
இந்திர சாபத் திக்லொளி பெறினே"

என்பதனால் வயிரத்தின் குணம் ஐந்து எனவும் அறியப்படுகின்றன. (௧௯)

குறுநிலத் தரசுந் தாங்கிற் குறைவுதீர் செல்வ மெய்தி
உறுபகை யெறிந்து தன்கோன் முழுதுல கோச்சிக் காக்கும்
வறுமைநோய் விலங்கு சாரா வரைந்தநா ளன்றிச் செல்லுங்
கறுவுகொள் கூற்றம் பூதங் கணங்களு மணங்கு செய்யா.

(இ - ள்.) குறுநில அரசும் தாங்கின் - குறுநில மன்னனும் (இதனை) அணியில், குறைவுதீர் செல்வம் எய்தி - குறைவற்ற செல்வத்தை அடைந்து, உறுபகை எறிந்து - மிக்க பகைவரை அழித்து தன்கோல் உலகு முழுதும் ஓச்சிக் காக்கும் - தனது செங்கோல் உலக முழுதுஞ் செல்ல நடாத்திக் காப்பான்; வறுமைநோய் விலங்கு சாரா - (அவ்வரசனை வருத்த) வறுமையும் பிணியும் விலங்குகளும் அடையாவாம்; வரைந்தநாள் அன்றிச் செல்லும் கறுவுகொள் கூற்றம் - வரையறுத்த நாளிலல்லாமல் இடையில் வரும் சினங் கொண்ட கூற்றமும், பூதம் கணங்களும் அணங்கு செய்யா - பூதங் களும் பேய்களும் துன்பம் செய்யமாட்டா எ - று.

உறு - மிக்க: உரிச்சொல்; உறுகின்ற பகையென வினைத் தொகையுமாம். முழுது - எஞ்சாமைப் பொருட்டு. உலகு முழுதும் என மாறுக. கூற்றமும் பூதமும் என உம்மை விரிக்க. அணங்கு - வருத்தம். (௨0)

மாமணி மரபுக் கெல்லாம் வயிரமே முதன்மைச் சாதி
ஆமென வுரைப்பர் நூலோ ரதிகம்யா தென்னி னேனைக்
காமரு மணிகட் கெல்லாந் தமரிடு கருவி யாமத்
தூமணி தனக்குந் தானே துளையிடுங் கருவி யாகும்.

(இ - ள்.) நூலோர் - மணி நூலாராய்ச்சி வல்லுநர், மாமணி மரபுக்கு எல்லாம் வயிரமே முதன்மைச் சாதி ஆம் என உரைப்பர் - பெருமை பொருந்திய மணிகளின் மரபுகளுக் கெல்லாம் வயிரமே முதற் சாதியாம் என்று கூறுவர்; அதிகம் யாது என்னில் - அம் முதன்மை எதனா லென்னில், அ தூமணி - அந்தத் தூய்மையுடைய வயிரமணி, ஏனை காமரு மணிகட்கு எல்லாம் தமர் இடு கருவியாம் - மற்றைய விருப்பம் பொருந்திய மணிகளனைத்திற்கும் தொளையிடுங்

கருவியாகும் (அன்றி), தனக்குத் தானே துளை இடும் கருவியாகும் - தனக்கும் தானே தொளை செய்யும் கருவியாகும் (ஆதலின்) எ - று.

'நவமணிகளுள் வயிரமே எல்லாவற்றினுஞ் சிறந்ததாகும்; கோமேதகமும், பவழமும் எல்லாவற்றினும் தாழ்ந்தனவாகும்; மரகதமும், மாணிக்கமும், முத்தும் தலையாய மணிகளாம்; இந்திர நீலமும், புட்பராகமும், வைடூரியமும் இடையாய மணிகளாகும்.' என்று சுக்கிர நீதியிற் கூறப்பட்டுளது. வயிரம் எல்லாவற்றினும் திட்பமுடைத் தென்பது கூறப்பட்டது;

"வயிர வூசியு மயன்வினை யிரும்பும்
செயிரறு பொன்னைச் செம்மைசெ யாணியும்
தமக்கமை கருவியுந் தாமா மவைபோல்
உரைத்திற முணர்த்தலு முரையது தொழிலே"

என்னும் சூத்திரம் இங்கு நோக்கற் பாலது. (௬௧)

மரகதத் தோற்றங் கேண்மின் வலாசுரன் பித்தந் தன்னை
இரைதமக் காகக் கௌவிப் பறந்துபுள் ளீர்ந்தண் டில்லித்
தரைதனிற் சிதற வீழ்ந்து தங்கிய தோற்ற மாகும்
உரைதரு தோற்ற மின்னும் வேறுவே றுள்ள கேண்மின்.

(இ - ள்.) மரகதத் தோற்றம் கேண்மின்-மரகதத்தின் தோற்றத்தினைக் கேளுங்கள்; வலாசுரன் பித்தந்தன்னை-வலாசுரன் பித்தத்தை, இரை தமக்காகக் கௌவிப் பறந்த புள்-தமக்கு உணவாகக் கௌவிப் பறந்த கலுழன், ஈர்தண் டில்லித்தரையினில் சிதற வீழ்ந்து தங்கிய தோற்றம் ஆகும்-மிக்க தண்ணிய டில்லி நாட்டிற் சிதறலால் வீழ்ந்து தங்கிய (இடங்களில்) தோற்றமாகும்; உரைதரு தோற்றம் - சொல்லப்படும் தோற்றங்கள், இன்னும் வேறுவேறு உள்ள கேண்மின் - இன்னம் வெவ்வேறு உள்ளன கேளுங்கள் எ - று.

'வலனுடைய வயிற்றின் புறத்தைக் கொத்தி விழுங்கிய கருடன் நகைத்தலானுமிழ, அஃது இமவான் முதலிய பன் மலைகளினும் ஊறிப் பிறத்தலிற் கருடோற்காரம் என்று பெயர் பெற்ற மரகதச் சாதி' என்று அடியார்க்கு நல்லார் கூறுவர். (௬௨)

விதிர்த்தவே லனைய வாட்கண் வினதைமா தருணச் செல்வன்
உதிர்த்தவான்முட்டையோட்டை உவணவேற்றரையில்யாப்பக்
கதிர்த்தவோ டரையிற் றப்பி வீழ்ந்தோரு கடல்சூழ் வைப்பில்
உதித்தவா ருகு மின்னு முண்டோரு வகையாற் றோற்றம்.

(இ - ள்.) விதிர்த்த வேல் அனைய வாள் கண் வினதை மாது - அசைத்தலுடைய வேல்போன்ற ஒளிபெற்ற கண்ணையுடைய வினதை என்பாள், அருணச் செல்வன் உதித்தவால்முட்டைஓட்டை - அருணன் உதித்த வெள்ளிய முட்டையின் ஓட்டினை, உவண ஏற்று அரையில் யாப்ப-கருடனது அரையிற் கட்ட, கதிர்த்த ஓடு அரையில் தப்பிவீழ்ந்து ஒருகடல் சூழ்வைப்பில் உதித்தவாறு ஆகும்-விளங்கிய

வோடானது அதன் அரையினின்றும் தவறி விழ்ந்து ஒரு கடல் சூழ்ந்த நிலத்தில் உதித்த விதம் ஒன்ரும்; இன்னும் ஒருவகையால் தோற்றம் உண்டு - இன்னும் ஒருவகையினுலும் தோற்றம் உண்டு எ - று.

வினதை : தக்கன் புதல்வி; காசிபன் மனைவி; அருணனுக்கும் கலுழனுக்கும் தாய். அருணச் செல்வன் - அருணனுகிய புதல்வன். வைப்பில் வீழ்தலால் உதித்த வாருகும் என்க. (௬௩)

முள்ளரை முளரிக் கண்ணன் மோகினி யணங்கா யோட
வள்ளரை மதியஞ் சூடி மந்தர வரைமட் டாகத்
துள்ளரி யேறு போலத் தொடர்ந்தொரு விளையாட் டாலே
எள்ளரி தாய செந்தீ யிந்தியக் கலனஞ் செய்தான்.

(இ-ள்.) முள் அரை முளரிக் கண்ணன் - முட்கள் பொருந்திய நாளத்தினையுடைய தாமரையின் மலர்போலும் கண்களையுடைய திருமால், மோகினி அணங்காய் ஓட - மோகினிப்பெண் வடிவாகி ஓட, வள் அரை மதியம் சூடி - அழகிய பாதி மதியினைச் சடையிற் சூடிய சிவபெருமான், ஒரு விளையாட்டால் - ஒரு திருவிளையாட்டாக, மந்தர வரை மட்டு ஆக - மந்தரமலையின் எல்லையளவாக, துள் அரி ஏறு போலத் தொடர்ந்து-துள்ளுகின்ற ஆண்சிங்கம்போல அம் மோகினியைத் தொடர்ந்து சென்று, எள் அரிதாய செந்தீ இந்தியக்கலனம் செய்தான்-பழிப்பில்லாத சிவந்த தீயாகிய இந்திரியத்தைச் சிந்தினன் எ-று.

மதியம், அம்: சாரியை. சூடி - அணிந்தவன்; இ: வினை முதற்பொருள் விகுதி, காமனை முனிந்த கண்ணுதற் பெருமான் இங்ஙனம் புரிந்தது ஒரு விளையாட்டே என்ருர். இறைவனுக்கு இந்திரியமாவது செந்தீ என்பது நூற் கொள்கை. (௬௪)

அப்போழு தமல வித்தி லரிகர குமரன் கான
வைப்புறை தெய்வத் தோடும் வந்தன னந்த விந்து
துப்புறு கருடன் கௌவிக் கடலினுந் துருக்க நாட்டும்
பப்புற விடுத்த வாறே பட்டது கலுழப் பச்சை.

(இ-ள்.) அப்பொழுது அமலவித்தில் அரிகர குமரன் - அக்காலையில் தூய அவ்விந்தில் ஐயன் என்பான், கான வைப்பு உறை தெய்வத்தோடும் வந்தனன் - காட்டிலுறையும் பரிவார தெய்வங்களோடும் வந்தனன்; அந்த விந்து-அந்த விந்தினை, துப்பு உறு கருடன் கௌவி-வலமிக்க கருடன் கௌவி, கடலினும் துருக்க நாட்டும் பப்பு உற விடுத்தவாறே - கடலிலும் துருக்க நாட்டிலும் பரவ விடுத்த வழியே, கலுழப் பச்சை பட்டது - கலுழப் பச்சை தோன்றியது எ - று.

வித்து - விந்து. அரிகர குமரன் - திருமாலுக்கும் சிவனுக்கும் பிறந்த புதல்வன்; ஐயனுர்; மகா சாத்தா. பப்புற - பம்புதலுற. ஐயனுர் தோன்றிய வரலாறு,

"இந்த வண்ண மிருக்க முராரியும்
அந்தி வண்ணத் தமலனு மாகியே

மூந்து கூடி முயங்கிய வேலையில்
வந்த வன்னெமை வாழ்விக்கு மையனே''
''அத்த குந்திரு மைந்தற் கரிகர
புத்தி ரன்னெனு நாமம் புனைந்துபின்
ஒத்த பான்மை யுருத்திரர் தம்மொடும்
வைத்து மிக்க வரம்பல நல்கியே''

எனக் கந்தபுராணத்துட் கூறப்படுதல் காண்க. (௬௫)

காடமே சுப்பிரமே காளமேனக்
குணமூன்றுங் கருடப் பச்சைக்
கீடறுகி னிதழ் நிறத்த காடமது
சாதியினு லிருவே றுகுஞ்
சாடரிய சகுணமேனச் சதோடமேன
வவையிரண்டிற் சகுண மாறும்
பீடுபேறு காடமோடு முல்லசிதம்
பேசலம் பித்தகமே முத்தம்.

(இ - ள்.) கருடப் பச்சைக்குக் காடமே சுப்பிரமே காளமெனக் குணம் மூன்றும் - கருடப்பச்சை என்னும் மரகதத்திற்குக் காடம் என்றும் சுப்பிரம் என்றும் காளம் என்றும் குணங்கள் மூன்று வகையாம், ஈடு அறுகின் இதழ்நிறத்த காடமது - பெருமை பொருந்திய அறுகினிதழ்போலும் நிறத்தையுடைய காடமானது, சாடு அரிய சகுணமெனச் சதோடமெனச் சாதியினுல் இருவேறு ஆகும் - கெடுதலில்லாத சகுணம் எனவும் சதோடம் எனவும் சாதியினுல் இரண்டு வகைப்படும்; அவை இரண்டில் - அவ்விரண்டினில், பீடுபெறு காடமொடும் உல்லசிதம் என பேசலம் என பித்தகம் என முத்தம் என - பெருமை பொருந்திய காடமொடு உல்லசிதம் எனவும் பேசலம் எனவும் பித்தகம் எனவும் முத்தம் எனவும் எ - று.

ஏ என என்பன எண்ணிடைச் சொற்கள். காடமது, அது: பகுதிப் பொருள் விகுதி. சகுணம் ஆறும் என்பது வருஞ் செய்யுளிற் கூட்டி முடிக்கப்படும். (௬௬)

புல்லரிய பிதுகமேன விவையாறிற்
காடமது புல்லின் வண்ணம்
உல்லசித மேலிதாகும் பேசலமே
குளச்சேநேலோண் டரளம் போலும்
அல்லடரும் பித்தகமே பசுங்கிளியின்
சிறைநிறத்த தாகு முத்தங்
குல்லைநிறம் பிதுகமரை யிலையினிறஞ்
சதோடத்தின் குணனேந் தாகும்.

(இ - ள்.) புல் அரிய பிதுகம் என-அடைதற்கரிய பிதுகம் எனவும், சகுணம் ஆறும்-சகுணம் ஆறு வகைப்படும்; இவை ஆறில்-இவ்வாறனுள், காடமது புல்லின் வண்ணம் ஆகும் - காடமானது புல்லைப் போன்று பசிய நிறமுடையதாம் ; உல்ல சிதம் மெலிது ஆம் - உல்ல சிதம் மென்மைத் தன்மையுடையதாம்; பேசலம் குளச் செந்நெல் ஒண்தரளம் போலும்-பேசலமானது குளநீரால் விளையும் செந்நெற் பயிரிற்றோன்றிய ஒள்ளிய முத்துப்போலும் பசிய நிறத்தினையுடையதாம்; அல் அடரும் பித்தகமே பசுங் கிளியின் சிறை நிறத்தது ஆகும்-இருளை ஓட்டும் பித்தகமானது பசிய சிறையின் நிறத்தினையுடையதாம்; முத்தம் குல்லை நிறம் - முத்தமானது துளவத்தி னிறத்தினையுடைய தாம்; பிதுகம் மரை இலையின் நிறம் - பிதுகமானது தாமரை இலையின் நிறத்தினையுடையதாம்; சதோடத்தின் குணன் - சதோடத்தின் குணங்கள் எ-று.

மரை: முதற்குறை. ஐந்தாகும் என்பது வருஞ்செய்யுளிற் கூட்டி முடிக்கப்படும். (௬௭)

தோடலே சாஞ்சிதமே துட்டமே
　　தோடமூர்ச் சிதமே வெய்ய
தோடலே சத்தியோடு சூழ்மந்த
　　தோடமெனத் தொகுத்த வைந்தில்
தோடலே சாஞ்சிதஞ்சம் பிரவிலையா
　　மலரியிலை துட்ட நீலத்
தோடதாம் புல்லினிறந் தோடமூர்ச்
　　சிதமுளரி தோட லேசம்.

(இ-ள்.) தோடலே சாஞ்சிதமே துட்டமே தோட மூர்ச்சிதமே-தோடலேசாஞ்சிதம் எனவும் துட்டம் எனவும் தோட மூர்ச்சிதம் எனவும், வெய்ய தோடலே சத்தியொடு சூழ் மந்த தோடம் என - வெவ்விய தோடலேசம் எனவும் நீங்காத மந்த தோடம் எனவும், ஐந்து ஆகும் - ஐந்து வகைப்படும்; தொகுத்த ஐந்தில் - தொகுத்துக் கூறிய சதோடமைந்தினுள், தோடலே சாஞ்சிதம் சம்பிர இலையாம் - தோடலே சாஞ்சிதமானது எலுமிச்சை யிலையின் நிறத்தினையுடைய தாம்; துட்டம் - துட்டமானது, அலரி இலை - அலரி யிலையின் நிறத்தையும், நீலத்தோடது ஆம் - கருங்குவளையின் இதழ்நிறத்தையும் உடையதாம்; தோட மூர்ச்சிதம் புல்லின் நிறம் - தோட மூர்ச்சிதமானது புல்லின் நிறத்தினையுடையதாம்; தோடலேசம் முளரி - தோடலேசமானது தாமரையிலையின் நிறத்தினை யுடையதாம் எ - று.

தோட மூர்ச்சிதமானது நீலத்தோடாகிய புல்லின் நிறம் என்னலுமாம். (௬௮)

மந்ததோ டங்கலப மயிலிறகி
　　னிறமாமிவ் வகுத்த தோடஞ்
சிந்தவா ஞதகுண மணியணிவோர்
　　நாற்கருவிச் சேனை வாழ்நாள்

உந்தவாழ் வார்வலன்க ணீலமிரண்
டரன்கண்டத் தொளிவிட் டோங்கும்
இந்திரநீ லந்தான்மா நீலமென
வேறிரண்டுண் டிந்த நீலம்.*

(இ - ள்.) மந்ததோடம் கலபமயில் இறகின் நிறமாம்-மந்த தோடமானது கலாபத்தையுடைய மயிலிறகின் நிறத்தினையுடையதாம்; இவ்வகுத்த தோடம் சிந்தகுணம் ஆறுதமணி அணிவோர்-இங்கு வகுத்துக் கூறிய குற்றம் நீங்க (முன் கூறிய) குணத்தினின்றும் நீங்காத மரகதத்தை அணிகின்றவர், நாற்கருவிச் சேனை வாழ்நாள் உந்த வாழ்வார்-நான்கு கருவியாகிய தானையொடு வாழ்நாளும் பெருக வாழ்வார்; வலன்கண் நீலம் இரண்டு - வலனுடைய இரு கண்களாகிய நீலம் இரண்டு உண்டு; இந்த நீலம் - இந்நீலத்தில், அரன் கண்டத்து ஒளிவிட்டு ஓங்கும் இந்திர நீலம் - சிவபெருமான் திருமிடற்றைப்போல் ஒளிவிட்டு விளங்கும் இந்திர நீலம் எனவும், மாநீலம் என - மாநீலம் எனவும், வேறு இரண்டு உண்டு - வேறு இரண்டுவகை எ - று.

"கருகுதல் வெள்ளை கல்மணல் கிற்று
பரிவுதார் சாயை யிறுகுதல் மரகதத்
தெண்ணிய குற்ற மிவையென மொழிப"

என்பதனால் மரகதத்தின் குற்றம் எட்டு எனவும்,

"ஏகையு மாலையு மிருளொடு துறந்த"

என்னும் சிலப்பதிகார அடியால் அவற்றுள் மிக்க குற்றம் மூன்று எனவும்,

"நெய்த்த மயிற்கழுத் தொத்தபைம் பயிரிற்
பசுத்தல் பொன்மை தன்னுடன் பசுத்தல்
வக்கி பாய்தல் பொன்வண்டின் வயி
றொத்துத் தெளிதலோ டெட்டுங் குணமே"

என்பதனால் மரகதத்தின் குணம் எட்டு எனவும் அறியப்படுகின்றன. (சுகூ)

முந்தியவிந் திரநீலம் விச்சுவரூ
பனைமகவான் முடித்த நாளின்
நந்தியடு பழிதவிர்ப்பான் புரியுமகப்
பரிமகத்தி னறிய தூமம்
உந்தியரும் பரியிமையா நாட்டநுழைந்
தளிசேற்றி னெழுகும் பீளை
சிந்தியவாற் றிடைப்படுமோன் றிந்திரவின்
னீலமெனத் திகழு நீலம்.

---

(பா-ம்.) * இன்னுநீலம்.

(இ - ள்.) மூந்திய இந்திர நீலம் - முன்னர்க் கூறிய இந்திரநீல மானது, விச்சுவரூபனை மகவான் முடித்த நாளில் - விச்சுவவுருவனை இந்திரன் கொன்ற பொழுது, நந்தி அடு பழி தவிர்ப்பான் - வளர்ந்து வருத்தும் பழியினை நீக்கும் பொருட்டு, புரியும் மகம்-செய்த வேள்வி யாகிய, பரிமகத்தின் நறிய தூமம்-புரவி வேள்வியில் எழுந்த நறுமண முடைய புகையானது, உந்தி அரும் பரி இமையா நாட்டம் நுழைந்து-ஓங்கி அரிய குதிரையின் இமையாத கண்ணுள் நுழைதலால், அளி சேற்றின்-இளகிய சேற்றைப்போல, ஒழுகும் பீளை சிந்திய ஆற்றி டைப் படும் - ஒழுகிய பீளையானது சிதறிய இடத்தினின்றும் தோன்றும்; நீலம் - இந்நீலமானது, இந்திரவில் ஒன்று நீலம் எனத் திகழும்-இந்திர வில்லிற்பொருந்தியநீல நிறம்போல விளங்காநிற்கும் எ - று.

விச்சுவவுருவனைக் கொன்ற வரலாற்றை இந்திரன் பழிதீர்த்த படலத்திற் காண்க. நந்தி - பெருகி. மகப்பரிமகம் என்பதற்குப் பெரிய அசுவமேதம் என்றுரைப்பாருமுளர். உந்தி - தாவி. (௭0)

சஞ்சையாம் பகற்கடவுண் மனைவியவன்
கனலுடலந் தழுவ லாற்றா
தஞ்சுவா டன்னிழலைத் தன்னுருவா
நிறுவிவன மடைந்து நோற்க
விஞ்சையா லறிந்திரவி பின்றொடர
மாப்பரியா மின்னைத் தானுஞ்
செஞ்செவே வயப்பரியாய் மையல்பொரு
திந்தியத்தைச் சிந்தி னானே.

(இ - ள்.) சஞ்சை ஆம் பகல் கடவுள் மனைவி-சஞ்சை என்னும் பெயரையுடைய சூரியன் மனைவியானவள், அவன் கனல் உடலம்தழு வல் ஆற்றாது அஞ்சுவாள்-அவனது தழல் வடிவத்தைத் தழுவுதற்குப் பொறாமல் அஞ்சுவாளாகி, தன் நிழலைத் தன் உருவா நிறுவி - தனது உடல் நிழலைத் தனது வடிவாக நிறுத்தி, வனம் அடைந்து நோற்க - காட்டிற் சென்று தவஞ்செய்ய, விஞ்சையால் இரவி அறிந்து-(அதனை) ஞானத்தாற் சூரியன் உணர்ந்து, பின்தொடர - பின் தொடர்ந்து செல்ல, மாப்பரி ஆம் மின்னை - (அப்பொழுது) பெருமை பொருந் திய பெண் குதிரை வடிவாகி (ஓடிய) மனைவியை, தானும் செஞ் செவே வயப் பரியாய் - அச்சூரியனும் செவ்வனே அமைந்த ஆண் குதிரை வடிவாய் (ப்பின் சென்று), மையல் பொருது இந்தியத்தைச் சிந்தினான் - காமம் பொறுக்கலாற்றாது இந்திரியத்தைச் சிந்தினன் எ - று.

சஞ்சையாம் மனைவி யென்க. நிழலுருவின் பெயர் சாயாதேவி. நோற்க வென்னும் எச்சம் தொடர வென்பதனையும், தொடர வென் னும் எச்சம் ஆம் என்பதனையும் கொள்ளும். தானும் பரியாய்த் தொடர்ந்து என விரித்துரைக்க. செஞ்செவே - மிகச்செவ்வே. (௭௧)

அவைசிதறும் புலந்தோன்று நீலமா
நீலமிவை யணிவோர் வானோர்
நவையறுசீர் மானவரிந் நகைநீலஞ்
சாதியினா னால்வே றந்தக்

கவலரிய வெள்ளைசிவப் பெரிபொன்மை
கலந்திருக்கிற் கரிதாய் முற்றுந்
தவலரிதா யிருக்கிலிரு பிறப்பாளர்
முதன்முதனாற் சாதிக் காகும்.

(இ - ள்.) அவை சிதறும் புலம் தோன்றும் நீலம் மாநீலம்-அவ் விந்திரியங்கள் சிந்திய இடங்களிற் றோன்றும் நீலம் மாநீலமாகும்; இவை அணிவோர் வானோர் நவை அறுசிர் மானவர் - இம்மணிகளை அணிபவர் தேவர்களும் குற்றமற்ற சிறப்பினையுடைய மக்களுமாவர்; இ நகை நீலம் சாதியினால் நால்வேறு - இவ்வொளியுள்ள மாநீலமானது சாதியினால் நான்கு வகையாகும்; அந்தக் கவல் அரிய வெள்ளை சிவப்பு எரி பொன்மை கலந்திருக்கில் - (பிறிதொன்று) பற்றுதலில்லாத அந்த வெண்மையும் சிவப்பும் விளங்கும் பொன்மையும் கலந்திருக்கினும், கரிதாய் முற்றும் தவல் அரிதாய் இருக்கில்-முற்றும் கரியதாய்க் கெடுதலில்லாததாய் இருக்கினும், இரு பிறப்பாளர் முதல் - அந்தணர் முதல், முதல் நால்சாதிக்கு ஆகும் - முதன்மையையுடைய நான்கு வருணத்திற்கும் உரியதாகும் எ-று.

கவல்-கவ்வுதல்; பிறிதொன்று பற்றுதல். வெண்மை கலந்தால் அந்தணனும், செம்மை கலந்தால் அரசனும், பொன்மை கலந்தால் வைசியனும், முற்றும் கரிதாகில் சூத்திரனும் ஆம் என்க. சாதிக்காகும்-சாதி எனப்படுதற் குரியவாகும். சிலப்பதிகாரத்து ஊர்காண் காதையுரையில்,

"நீலத் தியல்பு நிறுக்குங் காலை
நால்வகை வருணமு நண்ணு மாகரமும்
குணம்பதி னென்றுங் குறையிரு நான்கும்
அணிவோர் செயலு மறிந்திசி னோரே"

"வெள்ளை சிவப்புப் பச்சை கருமையென்
றெண்ணிய நாற்குலத் திலங்கிய நிறமே"

"கோகுலக் கழுத்துக் குவளை சுரும்பர்
ஆகுலக் கண்க ளவிரிச் சாறு
காயா நெய்தல் கனத்தல் பத்தி
பாய்த லெனக்குணம் பதினொன் றுமே"

என அடியார்க்கு நல்லார் எடுத்துக்காட்டிய நூற்பாக்கள் இங்கு அறியற் பாலன. (எ௨)

இலங்கொளிய விந்நீல மெய்ப்படுப்போர்
மங்கலஞ்சேர் திருப்பா ரேனை
அலங்குகதிர் நீலத்திற் பெருவிலையா
யிரப்பத்தி னளவைத் தாகித்

துலங்குவதான் பாற்கடத்தி னூறுகுணச்
சிறப்படைந்து தோற்றுஞ் சோதி
கலங்குகட லுடைவைப்பி லரிதிந்த
விந்திரன்பேர்க் கரிய நீலம்.

(இ - ள்.) இலங்கு ஒளிய இ நீலம் - விளங்குகின்ற ஒளியினை யுடைய இந்நீல மணிகளை, மெய்ப்படுப்போர் மங்கலம் சேர்ந்து இருப்பார்-அணிகின்றவர்கள் நலங்களெய்தி யிருப்பர்; ஏனை அலங்கு கதிர் நீலத்தின் பெருவிலை ஆயிரப்பத்தின் அளவைத்து ஆகி - மற்றை விளங்காநின்ற ஒளியினையுடைய மா நீலத்தினும் பதினாயிர மடங்காகிய பெரிய விலையினை உடையதாகி, துலங்குவது - விளங்குவதாகிய, இந்த இந்திரன் பேர்க்கரிய நீலம்-இந்த இந்திரநீலம், ஆன்பால் கடத்தின் - ஆனின்பால் நிறைந்த குடத்தில் இட்டால், நூறுகுணம் சிறப்பு அடைந்து சோதி தோற்றும்- (அப்பால் நிறத்தைக் கீழ்ப்படுத்தி) நூறு மடங்கு தன் குணம் மேம்பட்டு ஒளி தோன்றச் செய்யும்; கலங்கு கடல் உடைவைப்பில் அரிது - (இஃது) ஒலிக்கின்ற கடல் சூழ்ந்த இந்நிலவுலகில் அரியதாகும் எ - று.

மெய்ப்படுத்தல் - மெய்யின்கட் சேர்த்தல்; அணிதல். ஏனை அலங்கு கதிர் நீலம் என்றது இந்திரநீலமென்னில் 'நீலத்தின் பெருவிலை' என்றிருத்தல் வேண்டும். ஊறுகுணம் எனப் பிரித்து, மேம்பட்டுச் சுரக்கின்ற குணம் என்றலுமாம். சோதி தோற்றுவது மாநீலம் என்றுரைப்பாருமுளர். சீவகசிந்தாமணியிலே "கருமணியம் பாலகத்துப் பதித்தன்ன படிவாய்" என்பதன் குறிப்பாகக் 'கருமணியைப் பாலிற் பதித்தால் பால்நிறங் கெடுமென்றுணர்க' என நச்சினார்க்கினியர் கூறியிருப்பது இங்கு நினைக்கற்பாலது. (எ௩)

மைந்துறுசெம் மணிமுத்து வாள்வயிரம்
பச்சையொளி வழங்கு நீலம்
ஐந்திவைமேற் கோமேத முதற்பவள
மீறுக வறைந்த நான்கும்
நந்தொளிய வேனுமவை சிறுவேட்கை
பயப்பவழ னகுசெங் குஞ்சி
வெந்தறுகண் வலனிணங்கள் சிதறுமிடைப்
படுவனகோ மேத மேன்ப.

(இ - ள்.) மைந்து உறு செம்மணி முத்து வாள் வயிரம் பச்சை ஒளிவழங்கும் நீலம் ஐந்து இவைமேல் - வன்மை மிக்க மாணிக்கமும் முத்தும் ஒளிபொருந்திய வயிரமும் மரகதமும் ஒளியைக் கொடுக்கும் நீலமும் ஆகிய இவ்வைந்தின் மேல், கோமேத முதல் பவளம் ஈறுக அறைந்த நான்கும்-கோமேதகம் முதலாகப் பவளம் இறுதியாகக் கூறிய நான்கு மணிகளும், நந்து ஒளியவேனும்-மிக்க ஒளியினை யுடையவேனும், அவை - அம் மணிகள், சிறுவேட்கை பயப்ப-சிறிய விலையுள்ளன; அழல் நகு செங்குஞ்சி வெந்தறுகண் வலன் நிணங்கள் சிதறு மிடை - நெருப்பைப் போலும் விளங்காநின்ற சிவந்த

சிகையையும் கொடிய அஞ்சாமையையும் உடைய வலனுடைய வினங்கள் சிந்திய இடத்தில், கோமேதம் படுவன என்ப-கோமேத கங்கள் தோன்றுவன என்பர் எ-று.

இதுகாறும் கூறியவற்றைச் சுட்டி 'ஐந்திவை' என்றார். நான்கு-கோமேதகம், புருடராகம், வைடூரியம், பவளம் என்பன. வேட்கை விருப்பம்; ஈண்டு விலை. (எச)

உருக்குநறு நெய்த்துளிதேன் றுளிநல்லான்
புண்ணியநீ ரோத்துச் சேந்து
செருக்குபசும் பொன்னிறமும் பெற்றுமெலி
தாய்த்தூய்தாய்த் திண்ணி தாகி
இருக்குமது தரிக்கினிருட் பாவம்போம்
பரிசுத்தி யெய்தும் வென்றித்
தருக்குவலன் கபம்விழுந்த விடைப்புருட
ராகமொளி தழையத் தோன்றும்.

(இ-ள்.) உருக்கும் நறு நெய் துளி-உருக்கிய நறிய நெய்த்துளியும், தேன் துளி-தேன்றுளியும், நல் ஆன் புண்ணியநீர் ஒத்துச்-சேந்து நல்ல பசுவின் கோசலமும் ஆகிய இவற்றை ஒத்துச்சிவந்து, செருக்கு பசும்பொன் நிறமும் பெற்று - உயர்ந்த பசிய பொன்னிறத்தையும் பெற்று, மெலிதாய் தூய்தாய் திண்ணிதாகி-சருச்சரை அகன்றதாய்த் தூயதாய்த் திண்ணியதாய், இருக்குமது தரிக்கின்-இருக்கின்ற கோமே தகத்தை அணிந்தால், இருட்பாவம்போம் - கருமையாகிய பாவம் நீங்கும்; பரிசுத்தி எய்தும் - புனிதம் வந்து பொருந்தும்; வென்றித் தருக்கு வலன் கபம் விழுந்த இடை - வெற்றிச் செருக்கினையுடைய வலனது கபம் விழுந்த விடத்தினின்றும், புருடராகம் ஒளி தழையத் தோன்றும்-புருடராகமணி ஒளிமிகத் தோன்றும் எ - று.

புண்ணிய நீர் - கோசலம். மாற்றுயர்ந்த பொன்னைச் 'செருக்கு பசும்பொன்' என்றார். இருட்பாவம் - அஞ்ஞானத்தா லாகிய பாவம் என்றும், நிரயத்திற் கேதுவாகிய பாவம் என்றும் கூறலுமாம். 'மஞ்சளும் சிவப்பும் கலந்தா லொத்த நிறத்தையுடைய கோமேதக வருக்கமும்' என்பர் அடியார்க்கு நல்லார். (எரு)

தாழ்ந்தபிலத் திழிந்தெரிபோற் கண்ணவுண
னுயிர்குடிக்குந் தறுகட் பன்றி
போழ்ந்தமுழை வாய்திறந்து திசைசெவிடு
படநகைத்துப் பொன்போற் கக்கி
வீழ்ந்தகபம் படுதீவிற் படுமுச்சி
வட்டமாய் மெலிதாய்ப் பொன்போற்
சூழ்ந்தொளிவிட் டவிர்தழல்போற் றெளிவெய்தி
மனங்கவர்ந்து தோற்றஞ் செய்யும்.

(இ-ள்.) தாழ்ந்த பிலத்து இழிந்த எரிபொற்கண் அவுணன் உயிர்குடிக்கும் - ஆழ்ந்த பாதலத்தில் (பூமியைப் பாயாகச் சுருட்டிக் கொண்டு) சென்றொளித்த இரணியாக்கன் என்னும் அவுணனது உயிரைப் பருகிய, தறுகண் பன்றி போந்த முழைவாய் திறந்து - அஞ்சாமையையுடைய (திருமாலாகிய) பன்றி தனது பிளந்த குகை போன்ற வாயினைத் திறந்து, திசைசெவிடுபட நகைத்துக் கக்கி - திக்குகள் செவிடாம்படி நகைத்துக் கக்குதலால், பொன்போல் வீழ்ந்த கபம் படு தீவில் படும் - பொன்னைப்போற் சிதறி வீழ்ந்த கபம் பொருந்திய தீவிலும் உண்டாகும்; உச்சி வட்டமாய் மெலிதாய்-(அது) உச்சியில் வட்ட வடிவாய் மென்மையுடையதாய், பொன்போல் அவிர் தழல் போல் சூழ்ந்து ஒளிவிட்டு-பொன்போலும் விளங்கும் தீப்போலும் சுற்றிலும் ஒளிவீசி, தெளிவு எய்தி மனங்கவர்ந்து தோற்றஞ்செய்யும்- தெளிவு பொருந்திக் கண்டோர் மனத்தைக் கவர்ந்து பொலியும் எ - று.

இழிந்த என்பதன் அகரம் தொக்கது; இழிந்து உயிர் குடிக்கும் எனப் பன்றிக்கேற்றி உரைத்தலுமாம். பொற்கண்ணன்-இரணியாக்கன்; இரணியனுக்குத் தமையன். இரணியாக்கன் புவியைப் பாய்போற் சுருட்டிப் பாதலத்திற் புக்கொளிக்கத், திருமால் வெள்ளைப் பன்றி யுருவெடுத்துச்சென்று அவனைக்கொன்று, தமது கோட்டின் நுதியால் புவியைப் பண்டுபோற் கொணர்ந்து நிறுத்தினர் என்பது வரலாறு. கக்குதலால் பொன்போல் வீழ்ந்தன விரித்துரைக்க. தீவிலும் படும் என இறந்தது தழுவிய எச்சவும்மை விரித்துரைக்க. தோற்றஞ் செய்யும்-விளங்கும். (எசு)

இந்தமணி பாரியாத் திரகிரியிற்
கோடுமுடியா யிலங்குந் தெய்வ
மந்தரமால் வரைப்புறஞ்சூழ் மேகலையா
மயனிந்த மணியி னாலே
அந்தரநா டவனகரு மரசிருப்பு
மண்டபமு மமைத்தா னிந்தச்
சந்தமணி தரிப்பவரே தரியார்வெந்
நிடவாகை தரிக்க வல்லார்.

(இ-ள்.) இந்தமணி பாரியாத்திர கிரியின் கொடு முடியாய் இலங்கும்-இந்த மணியானது பாரியாத்திர மலையின் சிகரமாய் விளங்கும்; தெய்வ மந்தர மால்வரைப் புறம்சூழ் மேகலையாம் - தெய்வத் தன்மை பொருந்திய பெரிய மந்தரமலையின் புறத்திற் சூழ்ந்த மேகலையாகவும் விளங்கும்; மயன் இந்த மணியினாலே-தெய்வத் தச்சன் இந்த மணியினாலே, அந்தர நாடவன் நகரும் அரசு இருப்பு மண்டபமும் அமைத்தான்-தேவேந்திரனது நகரத்தையும் அவன் அரசு வீற்றிருக்கு மண்டபத்தையும் ஆக்கினான்; இந்தச் சந்தமணி தரிப்பவரே - இந்த அழகிய புருடராகமணியை அணிபவரே, தரியார் வெந் இட வாகை தரிக்க வல்லார்-பகைவர் புறங்கொடுக்க வெற்றிமாலை தரிக்க வல்லராவர் எ - று.

புருடராகமானது பூசத்தினது உருவினையுடைய பொன்னை மாசறத் தெளிய வைத்தாலொத்தது எனச் சிலப்பதிகாரத்திற் கூறப் பட்டுள்ளது. (எஎ)

வலன்மயிராம் வயிடூய மிளாவிருத
கண்டத்தில் வந்து தோன்றிப்
பலர்புகழுங் கோரக்க மகதஞ்சிங்
களமலயம் பார சீகம்
இலகுதிரி கூடாதி தேயங்கள்
பிறதீப மெங்குந் தோற்றம்
அலைகடலும் படுமிறுதிக் காரிடிக்கும்
போதுநிற மதற்கியா தென்னில்.

(இ-ள்.) வலன் மயிராம் வயிடூயம் இளாவிருத கண்டத்தில் வந்து தோன்றி-வலன் மயிராகிய வயிடூரியமானது இளாவிருத கண்டத்திற் றோன்றி, பலர் புகழும் கோரக்கம் மகதம் சிங்களம் மலயம் பாரசீகம்-பலரும் புகழுகின்ற கோரக்கத்திலும் மகதத்திலும் சிங்களத்திலும் பொதியின் மலையிலும் பாரசீகத்திலும், இலகு திரிகூடாதி தேயங்கள்-விளங்காநின்ற திரிகூடம் முதலான தேயங்களிலும், பிற தீபம் எங்கும்-வேறு தீவுகளனைத்திலும்; தோற்றம்-உண்டாகும்; அலை கடலும் இறுதிக்கார் இடிக்கும்போதும் படும்-அலைகின்ற கடலிலும் ஊழிக்காலத்தில் முகில் இடிக்கும் பொழுதிலும் தோன்றும்; அதற்கு நிறம் யாது என்னில் - அம்மணிக்கு ஒளி யாதென்றால் எ - று.

ஊழிக்காலத்து மேகம் முழங்கும்பொழுது அலைகின்ற கடலிலும் படும் என ஒன்றாக்கி யுரைத்தலுமாம். (எஅ)

கழையிலைகார் மயிலெருத்தம் வெருகின்கண்
ணிறத்ததாய்க் கனத்த தாகி
விழைவுதரு தெளிதாகித் திண்ணிதாய்
மெலிதாகி விளங்கு மீதில்
அழகுபெற வலமிடமேல் கீழொளிவிட்
டனமுறையே யறவோ ராதித்
தழைவுறுநாற் சாதிகளாந் தினமிதனைப்
பூசித்துத் தரிக்க சான்றோர்.

(இ - ள்.) கழை இலை கார் மயில் எருத்தம் வெருகின்கண் நிறத்த தாய்-மூங்கில் இலையும் கரிய மயிலின் கழுத்தும் பூனையின் கண்ணு மாகிய இவற்றின் நிறத்தினையுடையதாய், கனத்தது ஆகி-கனமுடையதாய், விழைவுதரு தெளிதாகி-விருப்பத்தைத் தரும் தெளிவுள்ளதாகி, திண்ணிது ஆய்-திண்மை யுடையதாய், மெலிதாகி விளங்கும்-மென்மைத்தன்மை யுடையதாய் விளங்காநிற்கும்; ஈதில் - இம்மணியில். வலம் இடம் மேல் கீழ் ஒளி விட்டன - வலத்திலும் இடத்திலும் மேலும் கீழும் ஒளி வீசுவன, முறையே-முறையாக, அறவோர் ஆதி - அந்தணர் முதலான, தழைவு உறு நால்சாதிகளாம் - செழிப்பினை யுடைய நான்கு வருணங்களாம்; சான்றோர்-இதனைத் தினம் பூசித்து தரிக்க - அறிவுடையோர் நாளும் இம்மணியைப் பூசித்து அணியக் கடவர் எ - று.

நிறம் யாதென்னில் கழையிலே மயிலெருத்தம் வெருகின்கண் என்னு மிவற்றின் நிறம் என முடித்துப், பின், அஃது அந்நிறத்ததாய்க் கனத்ததாகித் தெளிதாகித் திண்ணிதாய் மெலிதாகி விளங்கும் என்றுரைத்துக் கொள்க. தெளிது தெள்ளிது. இதனில் எனற்பாலது ஈதில் என நின்றது. அறவோர் - அந்தணர் என்னும் பொருட்டு. வைடூரியமானது ஞாயிற்றின் ஒளியும், தேன்றுளியும் போலுமெனச் சிலப்பதிகாரத்திற் கூறப்பட்டுளது. (எகூ)

வலத்தவுணன் றசைவீழ்ந்த வழிப்படுதுப்
ப*யன்சந்தி வடிவ மாத்தேன்
புலத்தவரை விதிக்குமிடத் தவனுடன்மா
சிழிபுலத்தும் புயல்போல் வண்ணன்
வலத்தமது கைடவரைக் குறைகுருதி
வழிநிலத்தும் மகவான் வெற்பின்
குலத்தையிற கரிசோரி சிதறிடத்தும்
வந்துகுடி கொண்டு தோன்றும்.

(இ - ள்.) வலத்தவுணன் தசைவீழ்ந்த வழிப்படு துப்பு - வலனென்னும் அவுணனது தசைவீழ்ந்த இடத்துத் தோன்றிய பவளம், அயன் சந்தி வடிவமாதென் புலத்தவரை விதிக்கு மிடத்து - பிரமன் சந்திக்கால வடிவமாக விருந்து தென்புலத்தவரைப் படைக்கும் பொழுது, அவன் உடல்மாசு இழி புலத்தும்-அவனது உடலின் அழுக்கு வீழ்ந்த இடத்திலும், புயல்போல் வண்ணன்-முகில்போலும் நிறத்தினையுடைய திருமால், வலத்த மது கைடவரைக் குறை குருதி வழி நிலத்தும்-வலியினையுடைய மதுகைடவர்களைச் சேதித்த குருதி ஒழுகிய இடத்திலும், மகவான் - இந்திரன், வெற்பின் குலத்தை இறகு அரிசோரி சிதறு இடத்தும் - மலையின் கூட்டத்தைச் சிறகு அரிந்த குருதி சிதறிய இடத்திலும், வந்து குடிகொண்டு தோன்றும்- வந்து குடிகொண்டு விளங்கும் எ - று.

வலனாகிய அவுணனை 'வலத்தவுணன்' என்றார். பிரமன் பிதிரரைப் படைக்கும்பொருட்டுக்கொண்ட உடலை விடுத்த பொழுது சந்திக்காலம் ஆகலின் அவனுடல் சந்தி யெனப்படும் என்று புராணங் கூறும். மதுகைடவர்-மதுவும் கைடவனும்: உம்மைத்தொகை. அயன் உந்தித் தாமரையில் இருக்க அரி திருப்பாற் கடலில் அறிதுயில் கொள்ளும் பொழுது அவருடைய இரு செவிகளிலு மிருந்து மது கைடவன் என்னும் அசுரர் இருவர் தோன்றி அண்டங்கள் நடுங்க உலவும்பொழுது பிரமன் துணுக்கமுறத் திருமால் 'அஞ்சேல்' எனக் கூறி, விட்டுணு, சிட்டுணு என்று இருவரைப் படைத்து ஏவ, அவர்கள் மதுகைடவரைக் கொன்றனர் என்று கூர்ம புராணங் கூறும். (அ0)

அவ்வழியிற் படுபவள முருக்கம்பூப்
பசுங்கிளிமூக் கலர்ந்த செவ்விச்
செவ்வரத்த மலர் கோவ்வைக் கனிபோலுங்
குணங்குற்றந் திருகிக் கோடல்

(பா - ம்.) * வழிபடுந்துப்பு.

எவ்வமுறப் புழுவரித்தன் முகமோடிதல்
பெரும்பாலு மிப்பூ ணேந்தல்
பெய்வளையார் தமக்கேயாந் தரிக்கின்மகப்
பேறுமுதற் பேறுண்டாகும்.

(இ - ள்.) அ வழியில் படுபவளம் குணம் - அவ்விடங்களிற் றோன்றிய பவளத்தினது நிறமானது; முருக்கம்பூ பசுங்கிளி மூக்கு அலர்ந்த செவ்வி செவ்வரத்த மலர் கோவ்வைக் கனிபோலும் - முருக்க மலரையும் பசிய கிளியின் மூக்கையும் மலர்ந்த பருவத்தையுடைய செவ்வரத்த மலரையும் கொவ்வைக்கனியையும் ஒக்கும்; திருகிக்கோடல் எவ்வம் உறப் புழு அரித்தல் முகம் ஒடிதல் குற்றம் - திருகிக் கோணுதலும் குற்றம் பொருந்தப் புழு அரித்தலும் முகமொடிதலும் (அதற்குரிய) குற்றங்களாகும்; இ பூண் ஏந்தல் பெரும் பாலும் பெய்வளையார் தமக்கே ஆம் - இப் பவளங்களைத் தரித்தல் பெரும்பாலும் வளையலையணிந்த மகளிருக்கே உரியதாகும்; தரிக்கின் - அவர்கள் அணிந்தால், மகப்பேறு முதல்பேறு உண்டாகும் - மக்கட்பேறு முதலாகிய பயன்கள் உண்டாகும் எ - று.

முருக்கம்பூ முதலியவற்றின் நிறத்தைப்போலும் என்க. குணமென்றது நிறத்தை. இப்பூண்-இதனுலாகிய அணியை. பெரும்பாலும் என்றமையால் சிறுபான்மை பிறவற்றுடன் கலந்து ஆடவர் அணிதலுண்டென்க.

"கருப்பத் துளையவுங் கல்லிடை முடங்கலும்
திருக்கு நீங்கிய செங்கொடி வல்லியும்"

என்னும் சிலப்பதிகார அடிகளும், 'இனிக் குணமிக்குக் குற்றங்கணிங்கியன நிறமும் உருட்சியும் சிந்தூரமும் ஈச்சங்காயும் முசுமுக்கைக் கனியும் தாதுவழுதுணம் பழமும் போல்வன வெனக்கொள்க' என்னும் அடியார்க்கு நல்லார் உரையும் இங்கு அறியற்பாலன. (௬௧)

இரவியேதி ரேரியிறைக்குங் கல்லுமதி
யெதிர்செழுநீ ரிறைக்குங் கல்லும்
உரையிடுமோன் பதிஞென்றி னுட்கிடையாய்க்
கிடக்குமேன வோன்பான் வேறு
மரபுரைத்து வணிகரே ருகியவா
னவரேறு வடபா னேக்கிப்
பரவியிருந் தருச்சித்து மணிகைக்கோண்
டேதிர்மதுரைப் பரனை நோக்கா.

(இ-ள்.) இரவி எதிர் எரி இறைக்கும் கல்லும் - சூரியன் முன் தீயை உமிழும் சூரிய காந்தக்கல்லும், மதி எதிர் செழுநீர் இறைக்கும் கல்லும் - சந்திரன் முன் தண்ணிய நீரைச்சிந்தும் சந்திரகாந்தக்கல்லும், உரையிடும் ஒன்பதில் ஒன்றில் உட்கிடையாய்க் கிடக்கும் என - முன் கூறிய ஒன்பது மணிகளுள் ஒன்றின் உட்கிடையாக அடங்கியிருக்கு

மென்று, ஒன்பான் வேறு மரபு உரைத்து - நவமணிகளின் வெவ்வேருகிய தன்மையைக் கூறி, வணிகர் ஏறு ஆகிய வானவர் ஏறு-வணிகர் சிங்கமாக வந்த வானவர் சிங்கமாகிய இறைவன், வடபால் நோக்கி இருந்து பரவி அருச்சித்து - வடக்கு முகமாக நோக்கி யிருந்து துதித்துப் பூசித்து, மணி கைக் கொண்டு மதுரைப்பரனை எதிர் நோக்கா - மணிகளைக் கையில் எடுத்து மதுரைச் சொக்கலிங்க மூர்த்தியை எதிரே பார்த்து எ – று.

கிடைக்குமெனக் கூறி. இங்ஙனம் மரபுரைத்து என்க. தலைமை யுடையாரென்பதனை ஏறு என்பதனாற் கூறினர். முன் கிழக்கு நோக்கியிருந்து மணிகளினியல்பு கூறியவர், இப்பொழுது வடக்கு நோக்கியிருந்து அருச்சித்தாரென்றார்; அவ்வாறிருத்தல் மரபு போலும்; மதுரைப் பரனை எதிர் நோக்குதற் பொருட்டு வடக்கு நோக்கினருமாம். (அஉ)

அஞ்சலிசெய் தகநோக்கா லிக்குமரற்
களவிறந்த வாயுள் செல்வம்
விஞ்சுகவென் றளித்தருள விறைமகனும்
விண்ணிழிந்த விமான நோக்கிச்
செஞ்சரணம பணிந்திருகைத் தாமரையும்
விரித்தேற்றான் செல்வ நாய்கர்
மஞ்சனையும் புடைநின்ற வமைச்சரையு
நோக்கிமுக மலர்ந்து சொல்வார்.

(இ-ள்.) அஞ்சலி செய்து அக நோக்கால் இ குமரற்கு அளவு இறந்த ஆயுள் செல்வம் விஞ்சுக என்று அளித்தருள-அஞ்சலித்துத் திருவுளக் குறிப்போடு இவ்வரசிளங் குமரனுக்கு அளவற்ற வாழ்நாளும் செல்வமும் ஓங்குக என்று கூறிக் கொடுத்தருள, இறைமகனும் - அரச குமாரனும், விண் இழிந்த விமானம் நோக்கி-வானுலகினின்றும் இறங்கிய விமானத்தைப் பார்த்து, செஞ்சரணம் பணிந்து - சொக்கலிங்க மூர்த்தியின் சிவந்த திருவடிகளை வணங்கி, இருகைத் தாமரையும் விரித்து ஏற்றான் - தாமரை மலர்போலும் இரண்டு கைகளையும் விரித்து வாங்கினான்; செல்வ நாயகர் - (அப்பொழுது) செல்வத்தையுடைய வணிகராகிய சோமசுந்தரக் கடவுள் மஞ்சனையும் புடை நின்ற அமைச்சரையும் நோக்கி - அந்தப் புதல்வனையும் அருகில் நின்ற மந்திரிகளையும் நோக்கி, முக மலர்ந்து சொல்வார் - முக மலர்ச்சியுடன் சொல்வாராய் எ - று.

கூறியதுடன் அங்ஙனம் ஆக வென்று திருவுளம் பற்றியருளினரென்பார், 'அகநோக்கால்' என்றார். மஞ்சன்: மைந்தன் என்பதன் போலி. சொல்வார்: எச்சம். (அங)

இம்மணியா லிழைத்துநவ முடிசூட்டி
யிச்சிங்க விளவே றன்ன
செம்மறனை யபிடேக பாண்டியனென்
றியம்புமெனச் செம்போன் றாக்கிக்

கைம்மறியில் வணிகருக்கு விலைகொடுப்பான்
வருவார்முன் கருணை நாட்டம்
அம்மகன்மே ஸிரப்பியிள நகையரும்பி
நின்றாரை யங்குக் காணார்.

(இ-ள்.) இ மணியால் இழைந்து நவமுடி சூட்டி - இந்த மணிகளைக் கொண்டு புதிய மகுடஞ்செய்து சூட்டி, இசிங்க இள ஏறு அன்ன செம்மல்தனை - இவ்விளமையையுடைய ஆண் சிங்கம் போன்ற இறைமகனை, அபிடேக பாண்டியன் என்று இயம்பும் என - அபிடேகபாண்டியனென்று பெயரிட்டழையும் என்று சொல்ல, செம்பொன் தூக்கி - செம்பொன்னைத் துலையாற் றூக்கி, கைம் மறி இல் வணிகருக்கு விலை கொடுப்பான் வருவார் - கையின்கண் மாணிக்கரந்து வந்த வணிகருக்கு விலை கொடுப்பதற்கு வருகின்ற அமைச்சர்கள், முன் - முன்பு, அம்மகன்மேல் கருணை நாட்டம் நிரப்பி - அவ்வரச குமரன்மேல் அருள் நோக்கினை மிகச் செலுத்தி, இளநகை அரும்பி நின்றாரை - புன்னகை அரும்பி நின்ற வணிகேசரை. அங்கு காணார் - அவ்விடத்திற் காணாதவராயினர் எ - று.

நவமுடி இழைத்துச் சூட்டி யென்க ; நவம் - புதுமை ; இந் நவ மணியால் என்றியைத் துரைத்தலுமாம். என - என்ற பொழுது. சிவபிரானாகிய வணிக ரென்பார், 'கைம்மறியில் வணிகர்' என்றார். வருவார் காணாராயினாரென்க. வருவார்: பெயர். (அசு)

ஓருருவாய் நேர்நின்ற வணிகேசர்
விடையின்மே லுமையா ளோடும்
ஈருருவாய் முக்கண்ணு நாற்கரமு
மஞ்சமர ரிறவா வாறு
காருருவா யெழுமிடறுங் காட்டித்தங்
கோயில்புகக் கண்டா ரின்று
பாருருவாய் நின்றவணி கேசரிவ
ரேனவேபின் பற்றிப் போவார்.

(இ-ள்.) ஓர் உருவாய் நேர் நின்ற வணிகேசர் - ஓர் உருவாகி நேரே நின்ற வணிகர் பெருமான், விடையின்மேல் உமையாளோடும் ஈர் உருவாய் - இடபவூர்தியின்மேல் உமைப் பிராட்டியோடும் இரண்டு திருவுருவமாய், முக் கண்ணும் நால் கரமும் - மூன்று கண்களையும் நான்கு கைகளையும், அஞ்சு அமரர் இறவாவாறு - அஞ்சிய தேவர்கள் இறவாத வண்ணம், கார் உருவாய் எழுமிடறும் - கரிய வுருவாய் எழுந்த திருமிடற்றினையும், காட்டி - தோன்றச் செய்து, தம் கோயில் புகக் கண்டார் - தமது திருக்கோயிலுட் போதலைக் கண்டவர்கள், இன்று பார் உருவாய் நின்ற வணிகேசர் இவரே என - இன்று பாரின்கண் வணிகர் தலைவர் வடிவினராய் நின்றவர் இவரே என்று, பின் பற்றிப்போவார் - பின்றொடர்ந்து சென்றனர் எ - று.

சிவபெருமான் ஒருவரே 'படைப்பாதித் தொழிலும் பத்தர்க்கருளும் பாவனையும்' முதலியன நிகழ்த்துதற்குச் சிவமும் சக்தியுமென

ஈருருவாயினர் என்பது தோன்ற 'ஈருருவாய்' என்ருர். வணிகேசர்: குணசந்தி. திருமிடற்றின் கருமைக்கு நஞ்சினையுண்டல் காரணமாக லின் 'இறவாவாறு காருருவா யெழுமிடறு' என்ருர். வணிகேசர் உருவாய் நின்றவர் இவர் என விகுதி பிரித்துக் கூட்டுக; பார் என்பதனை ஆகு பெயராக்கி, மனிதருருவாய் நின்ற என்றுரைத்தலுமாம். இச்செய்யுளில் ஒன்று முதல் ஏழு எண்களின் பெயர் கூறியது எண்ணலங்காரம்; அஞ்சு, ஆறு, ஏழு என்பன ஈண்டு எண்ணுப் பெயர்களல்லவேனும் சொல்லொப்புமை நோக்கி எண்ணுகக் கொள்ளப்படும்; எழுகூற்றிருக்கை முதலியவற்றிலும் இங்ஙனம் வருதல் காண்க. (அ௫)

தேன்செய்த கோன்றைநெடுஞ் சடையார்முன்
  ரூழ்ந்தெழுந்து செங்கை கூப்பி
யான்செய்யுங் கைம்மாரு யெம்பிராற்
  கோன்றுண்டோ யானு மென்ன
தூன்செயுட லும்பொருளு முயிருமெனி
  னவையாவு முனவே யையா
வான்செய்யு நன்றிக்கு வையகத்தோர்
  செய்யுங்கைம் மாறுண்டேயோ.

(இ-ள்.) தேன் செய்த கொன்றை நெடுஞ் சடையார் முன்-தேன் பொருந்திய கொன்றை மலர்மாலையை யணிந்த நீண்ட சடையையுடைய சொக்கலிங்கக் கடவுளின் திருமுன், தாழ்ந்து எழுந்து செங்கைகூப்பி-வீழ்ந்து வணங்கி எழுந்து சிவந்த கைகளைத் தலைமேற் குவித்து, எம்பிராற்கு-எம் பெருமானுகிய நினக்கு, யான் செய்யும் கைம்மாருய் ஒன்று உண்டோ - அடியேனுற் செய்யப்படும் எதிருதவியாக ஒன்றுண்டோ, யானும் என்னது ஊன்செய் உடலும் பொருளும் உயிரும் எனின் - யானும் என்னுடைய தசையமைந்த உடலும் பொருளும் ஆவியும் என்ருல், ஐயா அவையாவும் உனவே-ஐயனே அவை முற்றும் உன்னுடையனவே, வான்செய்யும் நன்றிக்கு - முகில் செய்த உதவிக்கு, வையகத்தோர் செய்யும் கைம்மாறு உண்டோ - நிலவுலகத்தார் செய்கின்ற கைம்மாறு உண்டோ (இல்லை யென்றபடி) எ - று.

யாவர்க்கும் மேலாம் அளவிலாச் சீருடையானுகிய பெருமான் யாவர்க்கும் கீழாகிய என்னை ஆட்கொண்ட பெருங்கருணைக்குக் கைம்மாருவது யாதொன்றும் இல்லையென்பான், 'யான் செய்யுங் கைம்மாரு யெம்பிராற் கொன்றுண்டோ' என்றும், யானும் என் உடல் முதலியவும் நின் உதவிக்கு ஈடாகாவேனும் அவற்றை யளித்து ஒருவாருக என் கடப்பாட்டுணர்ச்சியை வெளிப்படுத்தலா மென்னின் அவை யெல்லாம் நின்னுடையவேயாகலின் யானென்றும் என்னுடையதென்றும் கூறுதற்கொன்றுமில்லை யென்பான், 'அவை யாவும் உனவே' என்றும் கூறினுனென்க;

"பண்டாய நான்மறையும் பாலணுகா மாலயனுங்
கண்டாரு மில்லைக் கடையேனைத்—தொண்டாகக்
கொண்டருளுங் கோகழியெங் கோமாற்கு நெஞ்சமே
உண்டாமோ கைம்மா றுரை"

''அன்றே யென்ற னாவியு முடலு முடைமை யெல்லாமுங்
குன்றேயனையா யென்னையாட்கொண்ட போதே கொண்டிலையோ''
என்னும் திருவாசகத் திருப்பாட்டுகள் இங்குச் சிந்திக்கற்பாலன. யானும் உயிரும் என வேறு கூறியது முதலும் சினையுமாகக் கொண்டென்க; ''ஊன்கெட் டுயிர்கெட் டுணர்வு கெட்டென் னுள்ளமும் போய், நான் கெட்டவா பாடி'' என்பதும் நோக்குக. ''வான் செய்யு நன்றிக்கு வையகத்தோர் செய்யுங் கைம்மா றுண்டேயோ'' என்றது இறைவன் பிறர்பால் உதவிபெறுதற்கோர் குறைபாடுடைய னல்லன் என்பதும், அவன் உயிர்களுக்குச் செய்யு முதவியெல்லாம் கைம்மாறு கருதியன அல்லவென்பதும் தோன்ற நின்றமையால் பிறிது மொழிதல் என்னும் அணி.

''கைம்மாறு வேண்டா கடப்பாடு மாரிமாட்
டென்னாற்றுங் கொல்லோ வுலகு''

என்னும் திருக்குறள் நோக்குக. என்னது: விரித்தல். உன: குறிப்பு வினைமுற்று. (அசு)

என்னுமுன் வழுத்தவுறும் விறன்மாறன்
கோக்கோமுந்தை இகல்வேல் விந்தை
மன்னுகு மிவற்குமன வாக்கிறந்த
பூரணமா மதுரை நாதன்
பொன்னாரு* மணிமகுடஞ் சூடமணி
நல்குதலாற் புவிய னேகம்
பன்னாளு முறைபுரியத் தக்கதென
வாழ்த்தினர் பல்சான் றோரும்.

(இ-ள்.) என்னா முன் வழுத்தல் உறும் விறல்மாறன் கோக்கொழுந்தை-என்றிங்ஙன்மாகத் துதிக்கும் வெற்றியையுடைய வீரபாண்டியன் புதல்வனை, பல் சான்றோரும்-பல அறிவுநிறைந்த பெரியாரும், இகல்வேல் விந்தைமான் ஆகும் இவற்கு-போருக்குரிய வேற்படை ஏந்திய வீரமகளின் தலைவனாகிய இவ்வழுதிக்கு, மனம் வாக்கு இறந்த பூரணம் ஆம் மதுரை நாதன்-உள்ளத்தையும் உரையையும் கடந்த முழு நிறைவாகிய மதுரை நாயகனாகிய சொக்கலிங்கப் பெருமான், பொன் ஆரும் மணிமகுடம் சூட-அழகு பொருந்திய மணி முடியினைச் சூடுதற்கு, மணி நல்குதலால் - மணிகளை அளித்தருளின மையால், புவி அனேகம்-உலக முழுதும், பல் நாளும்-எக்காலமும், முறை புரியத் தக்கது என வாழ்த்தினர்-(இவனால்) ஆட்சி செய்யத் தக்கது என்று வாழ்த்தினர்கள் எ - று.

பின்பற்றிப் போனார்; அவருள் வழுத்தலுறும் கோக்கொழுந்தைப் பல் சான்றோரும் வாழ்த்தினர் என முடிக்க. கொழுந்து - கொழுந்து போலும் இளம்பிள்ளை; கோக்கொழுந்து - அரசிளங் குமரன. பொன்னாரும்-பொன்னாற் செய்த என்றுமாம். அனேகம்-முழுது மென்னும் பொருட்டு. பன்னாளும்-பல்லூழிக் காலமும்; எந்நாளும். புரியத் தக்கது - புரிகவென வியங்கோளுமாம். (அஎ)

---

(பா - ம்.) * பொன்னாகும்.

ஏத்திவலங் கொண்டிருநான் கிபந்தழுவப்
பெற்றோங்கி யிருக்கு மட்ட
மூர்த்திவிடை யருள்பெற்று மூவாநன்
மறையாசி முனிவர் கூறப்
பார்த்திவன்றன் பொலன்மாட மனைபுகுந்தா
னிறைமணிப்பண் பாயுங் கேள்விச்
சாத்திரரு மந்திரரு மணிநோக்கி
வியப்படைந்தார் சங்கை கூர்ந்தார்.

(இ - ள்.) பார்த்திவன்-அரசகுமாரன், ஏத்தி வலம் கொண்டு-துதித்து வலம் வந்து, இருநான்கு இபம் தழுவப்பெற்று ஓங்கி இருக்கும் அட்டமூர்த்தி - எட்டு யானைகளாற் சுமக்கப் பெற்று வீற்றிருக்கும் அட்டமூர்த்தியாகிய சொக்கலிங்கப் பெருமானின், விடை அருள் பெற்று - அருள் விடை பெற்று, மூவா நல்மறை முனிவர் ஆசி கூற-அழியாத சிறந்த மறைகளை உணர்ந்த அந்தணர்கள் வாழ்த்துக் கூற, தன் பொலன்மாட மனை புகுந்தான் - தனது பொன்னாலாகிய மேன் மாடத்தையுடைய கோயிலிற் புகுந்தான்; நிறைமணிப் பண்பு ஆயும் கேள்விச் சாத்திரரும் - இலக்கணம் நிரம்பிய மணிகளின் குணங்களை ஆராயும் நூற்கேள்வி வல்லுநரும், மந்திரரும் - அமைச்சரும், மணி நோக்கி வியப்பு அடைந்தார் - மணிகளைப் பார்த்து வியப்புற்று, சங்கை கூர்ந்தார் – ஐயங்கொண்டவர்களாய் எ – று.

'என்னுமுன்வழுத்தலுறும்' என்பதனுள் 'என்னு' என்பதனுடன் 'ஏத்தி' என்பதனை இயைத்துரைக்க. தழுவப்பெற்ற விமானத்தில் இருத்தலைத் 'தழுவப் பெற்றிருக்கும்' என்றார். அட்டமூர்த்தி-நிலம், நீர், தீ, வளி, விசும்பு, நிலா, பகலோன், இயமானன் என்னும் எட்டுரு வாயவன். அருள் விடையெனமாறுக. நிறை பண்பு என இயைத்தும், இறைமணி எனப் பிரித்தும் உரைத்தலுமாம். சாத்திரக்கேள்வியர் என விகுதி பிரித்துக் கூட்டுக; கேள்வியும் சாத்திரமும் ஒருபொருட் சொற்களுமாம். அடைந்தார், கூர்ந்தார் என்பன முற்றெச்சங்கள். சங்கை கூர்தலை வருஞ்செய்யுளிற் காண்க. (அ௮)

[வேறு]

வேளென வந்த நாய்கர் சுந்தர விடங்க ரானல்
நாள்களும் கோளும் பற்றி நவமணி யாக்கி னாரோ
தாள்களுந் தோளு மார்புந் தரித்தநீ ணாக மீன்ற
வாள்விடு மணியோ வீந்தார் யாதென மதிக்கற் பாலேம்.

(இ - ள்.) வேள் என வந்த நாய்கர் சுந்தர விடங்கர் ஆனல்-முருக வேளைப் போல வந்த வணிகர் சோமசுந்தரக் கடவுளானல் (அவர்), நாள்களும் கோளும் பற்றி நவமணி ஆக்கினாரோ-நாண் மீன்களையும் கோள்களையும் பிடித்து நவமணிகளாகச் செய்து நல்கியருளினாரோ (அன்றி), தாள்களும் தோளும் மார்பும் தரித்த - திருவடிகளிலும் திருத்தோள்களிலும் மார்பிலும் அணிந்த, நீள் நாகம் ஈன்ற வாள்

விடும் மணி ஈந்தாரோ - நீண்ட பாம்புகள் கான்ற ஒளி வீசும் மணிகளைத் தந்தருளினாரோ, யாது என மதிக்கற்பாலேம் - யாதென்று கருதும் பகுதியையுடையேம் எ - று.

சுந்தரவிடங்கரென்பது உண்மையாயின் அவர் இவை செயற்பாலரென்பார் 'விடங்கரானால்' என்றார். ஈந்தார் என்பதனை முன்னுங் கூட்டி ஆக்கி யீந்தாரோ என்க. மணியோ ஈந்தார் என்பதில் ஓகாரம் பிரித்துக் கூட்டப்பட்டது. சங்கை கூர்ந்து இங்ஙனங் கூறியென்க. (அகூ)

இந்திரக் கடவு ணாட்டு மிம்மணி யரிய வென்னா
மந்திரக் கிழவர் நல்கி மயனினு மாண்ட கேள்வித்
தந்திரக் கனகக் கோல்லர்க் குவப்பன ததும்ப வீசிச்
செந்திரு மார்பி னாற்குத் திருமணி மகுடஞ் செய்தார்.

(இ - ள்.) இந்திரக் கடவுள் நாட்டும் இம்மணி அரிய என்னா - இந்திரனது உலகத்திலும் இம் மணிகள் கிடைத்தற்கரியன என்று வியந்து, மந்திரக்கிழவர் - சூழ்ச்சிக்குரிய அமைச்சர், மயனினும்மாண்ட கேள்வித் தந்திரக் கனகக் கொல்லர்க்கு உவப்பன ததும்ப வீசி - மயனைக் காட்டிலும் மாட்சிமையுடைய சிற்பநூலில் வல்ல பொற்கொல்லருக்கு அவர் உவப்பனவாய பல வரிசைகளை நிறைய அளித்து, நல்கி-(அம்மணிகளைக்) கொடுத்து, செந்திரு மார்பினாற்குத் திருமணி மகுடம் செய்தார் - சிவந்த திருமகள் தங்கும் மார்பினையுடைய அரசகுமாரனுக்குத் தெய்வத்தன்மை பொருந்திய மணிக ளழுத்திய முடியினைச் செய்வித்தனர் எ - று.

இந்திரனாகிய கடவுள் என இருபெயரொட்டு; இந்திரனது கடவுள் நாடு எனக்கொண்டு உயர்திணைப்பெயர் விகாரமாயிற்று எனலுமாம். சாத்திரரும் மந்திரரும் அரிய வென்னா வியந்தார் என முடித்து, அவருள் மந்திரர் மகுடஞ் செய்தார் என்க. தந்திரக் கேள்வி என மாறுக. செய்தார்: பிறவினைப் பொருட்டு. (கூ0)

மங்கல மரபான் மாலை மணிமுடி சூட்டி நாமஞ்
செங்கணே றுயர்த்த நாய்கர் செப்பிய முறையால் வேத
புங்கவ ரிசைப்ப வீதி வலஞ்செய்து புனிதன் பாத
பங்கய மிறைஞ்சி வேந்தன் பன்மணிக் கோயி லெய்தா.

(இ - ள்.) மங்கல மரபால்-மங்கல முறைமையால், மாலை மணிமுடிசூட்டி-மாலையை யணிந்த மணிமகுடத்தை அணிவித்து, செங்கண் ஏறு உயர்த்த நாய்கர் செப்பிய முறையால்-சிவந்த கண்ணையுடைய இடபத்தைக் கொடியாக உயர்த்திய வணிகர் கூறிய முறைப்படி, வேத புங்கவர் நாமம் இசைப்ப - மறைகளை யுணர்ந்த அந்தணர் அபிடேக பாண்டியனென்று பெயர் கூற, வேந்தன் - அவ்வரசன், வீதி வலம் செய்து-வீதியை வலம் வந்து, புனிதன் பாத பங்கயம் இறைஞ்சி-தூயனாகிய சோமசுந்தரக் கடவுளின் திருவடித் தாமரைகளை வணங்கி, பல்மணிக் கோயில் எய்தா - பல மணிகளழுத்திய அரண்மனையிற் சென்று எ - று.

மகுடாபிடேக விழாவானது தொல்காப்பியத்தில் ‘மண்ணு மங்கலம்’ என்னும் பெயராற் கூறப்படுகின்றது. புங்கவர் முறையால் நாமம் இசைப்ப என்க. (கக)

போர்மகட் குறையு ளான புயத்தபி டேகத் தென்னன்
தேர்முதற் கருவித் தானைத் தெவ்வர்நீண் முடியெ லாந்தன்
வார்கழற் கமலஞ் சூட மனுமுறை பைங்கூழ் காக்குங்
காரெனக் கருணை பெய்து வையகங் காக்கு நாளில்.

(இ - ள்.) போர்மகட்கு உறையுள் ஆன புயத்து அபிடேகத் தென்னன் - போருக்குரிய வீரமகளுக்கு இருப்பிடமாகிய தோளையுடைய அபிடேக பாண்டியன், தேர்முதல் கருவித்தானைத் தெவ்வர் நீள் முடி எலாம் - தேர் முதலிய கருவியாகிய படையினையுடைய பகைவருடைய நீண்ட முடிகள் அனைத்தும், தன் வார்கழல் கமலம் சூட - தனது நெடிய வீரகண்டையை யணிந்த அடியாகிய தாமரை மலரைச் சூட, மனுமுறை - மனு நூல் வழியே, பைங்கூழ் காக்கும் கார் என - (மழை பொழிந்து) பயிரை ஓம்பும் முகில்போல, கருணை பெய்து - கருணை சொரிந்து, வையகம் காக்கும் நாளில் - உலகத்தைப் புரக்கும் நாளிலே எ - று.

கருவித்தானை - கருவியாகிய தானை; இருபெயரொட்டு. கருணை பெய்து என்பதற்கேற்ப மழை பொழிந்து என விரித்துரைக்க. தென்னன் மனுமுறை காக்குநாளில் என இயையும். (கஉ)

[எழுசீரடி யாசிரிய விருத்தம்]

தந்தைதன் காமக் கிழத்திய ரீன்ற
　　தனயராய்த் தனக்குமுன் னவராய்
முந்தைநா ளரசன் பொன்னறை முரித்து
　　முடிமுதற் பொருள்கவர்ந் துட்குஞ்
சிந்தைய ராகி மறுபுலத் தொளித்த
　　தெவ்வரைச் சிலர்கொடு விடுப்ப
வந்தவர் கவர்ந்த தனமெலா மீள
　　வாங்கின னீர்ங்கதிர் மருமான்.

(இ - ள்.) தந்தை தன் காமக்கிழத்தியர் ஈன்ற தனயராய் - தன் தந்தையின் காமக்கிழத்தியர் பெற்ற புதல்வராய், தனக்கு முன்னவராய் - தனக்கு மூத்தவர்களாய், முந்தை நாள் அரசன் பொன் அறை முரித்து - முன்னொரு நாளில் மன்னனது கருவூலத்தின் தாழை முரித்து, முடி முதல் பொருள் கவர்ந்து - முடி முதலிய பொருள்களை வௌவி, உட்கும் சிந்தையராகி - (அதனால்) அஞ்சிய சிந்தையையுடையராய், மறு புலத்து ஒளித்த தெவ்வரை - வேற்றூரிற் புகுந்து ஒளித்த பகைவரை, சிலர் கொடுவிடுப்ப - சிலர் பிடித்துக் கொண்டு வந்து விடுக்க, வந்தவர் கவர்ந்த தனம் எலாம் - வந்தவராகிய அன்னோர் கவர்ந்த பொருளனைத்தையும், மீளவாங்கினன் ஈர்ங்கதிர் மருமான் -

திரும்பவும் வாங்கினன் குளிர்ந்த ஒளியையுடைய திங்களின் மரபில் வந்தவனாகிய அபிடேக பாண்டியன் எ-று.

முரித்து - தாழைப் போக்கி. தந்தையின் கிழத்தியர் ஈன்ற தனய ராயும் தனக்கு முன்னவராயு மிருப்பினும் முடி முதலியவற்றைக் கவர்ந்து ஒளித்தாராகலின் 'ஒளித்த தெவ்வரை' என்றார். அவர், முறையின்றிக் கவர்ந்த பொருள்களை மீட்டு வாங்கியதன்றி, அவர்க்கு யாதும் இன்னல் விளைத்தில னென்பது தோன்ற 'தனமெலா மீள வாங்கினன்' என்று கூறிவிடுத்தார். தந்தைதன், தன் : சாரியை. ஈர்ங் கதிர், கதிரையுடைய திங்களுக்கு ஆகுபெயர். (கூ)

ஆகச்செய்யுள் - கஉஅஎ.

---

## கஅ. வருணன்விட்டகடலை வற்றச்செய்த படலம்

[அறுசீரடி யாசிரிய விருத்தம்]

காழ்கெழு கண்டத் தண்ணல் கௌரியன் மகுடஞ்சூட
வீழ்கதிர் மணிக ளீந்த வியப்பிது விடையோன் சென்னி
வாழ்கரு முகிலைப் போக்கி மதுரைமேல் வருணன் விட்ட
ஆழ்கடல் வறப்பக் கண்ட வாடலைப் பாடல் செய்வாம்.

(இ - ள்.) *காழ்கெழு கண்டத்து அண்ணல்* - கருமை பொருந்திய திருமிடற்றினையுடைய சோமசுந்தரக் கடவுள், *கௌரியன் மகுடம் சூட* - பாண்டியன் முடி சூட, *வீழ் கதிர் மணிகள் ஈந்த வியப்பு இது*-விரும்பப்படுகின்ற நவமணிகளை அளித்தருளிய திருவிளையாடல் இது; (இனி), *விடையோன் சென்னி வாழ் கருமுகிலைப்போக்கி*-இடபவூர்தியையுடைய அப்பெருமான் தம் திருமுடியிற் றங்கிய கரியமுகில்களை விடுத்து, *மதுரைமேல் வருணன் விட்ட ஆழ்கடல் வறப்பக் கண்ட* - மதுரையின்மேல் வருணன் ஏவிய ஆழ்ந்த கடலானது சுவறுமாறு செய்தருளிய, *ஆடலைப் பாடல் செய்வாம்* - திருவிளையாடலைப் பாடுவோம் எ - று.

காழ் - கருமை; காழகம் என்னும் பெயருங் காண்க. ஞாயிறு முதலிய கதிர்களும் விரும்பும் மணி என்னலுமாம். வியப்பு-மேன்மை. மேன்மையாகிய திருவிளையாடல். போக்கி வறப்பக்கண்ட வென்க. (க)

சித்திரை மதியிற் சேர்ந்த சித்திரை நாளிற் றென்னன்
மைத்திரண் மிடற்று வெள்ளி மன்றுளாற் களவு மாண்ட
பத்திமை விதியிற் பண்டம் பற்பல சிறப்ப நல்கிப்
புத்தியும் வீடு நல்கும் பூசனை நடத்த லுற்றான்.

(இ - ள்.) *தென்னன்*-அபிடேக பாண்டியன், *சித்திரை மதியில் சேர்ந்த சித்திரை நாளில்*-சித்திரைத் திங்களில் வந்த சித்திரைநாளில் *மைத்திரள் மிடற்று வெள்ளிமன்றுளாற்கு*-கருமை மிக்க மிடற்றினையுடைய வெள்ளியம்பல வாணனுக்கு, *அளவுமாண்ட பத்திமை*-அளவிறந்த அன்பினால், *விதியில்* - ஆகம நெறிப்படி, *பண்டம் பற்பல சிறப்ப நல்கி* - பூசைப் பொருள்கள் பலவற்றைச் சிறக்க அளித்து, *புத்தியும் வீடும் நல்கும் பூசனை நடத்தலுற்றான்* - போகத்தையும் வீடுபேற்றையும் அளிக்கும் பூசையை நடாத்தத் தொடங்கினான் எ-று.

சித்திரைத் திங்களில் நிறைமதியுடன் கூடிய சித்திரைநாளில் என்க. பத்திமையால் என உருபு விரிக்க. சிறப்ப - மிக. விதியின் நடத்தலுற்றான் என இயையும். புத்தி தத்துவத்தின் பரிணாமமாகிய போகத்தைப் புத்தி என்றார்; புத்தி - ஞானமுமாம். (உ)

நறியநெய் யாதி யார நறுங்குழம் பீறு வாட்டி
வெறியகர்ப் புரநீ ராட்டி யற்புத வெள்ளம் பொங்க
இறைவனை வியந்து நோக்கி யேத்துவா னெறிநீர் வையைத்
துறைவநீ யென்கர்ப் பூர சுந்தர னேயோ வென்றான்.

(இ - ள்.) நறியநெய் ஆதி - நறுமணங் கமழும் நெய் முதலாக, நறும் ஆரக் குழம்பு ஈறு ஆட்டி - நறிய சந்தனக் குழம்பு இறுதியாக உள்ள இவற்றால் அபிடேகித்து, வெறிய கர்ப்புர நீர் ஆட்டி - மிக்க மணத்தினையுடைய கர்ப்புரநீரினால் ஆட்டி, அற்புதவெள்ளம்பொங்க- அன்பின் பெருக்கு மேன்மேலெழ, இறைவனை வியந்து நோக்கிஏத்து வான்-சோமசுந்தரக் கடவுளை வியப்புடன் தரிசித்துத் துதிப்பவன், எறிநீர் வையைத்துறைவ-அலைவீசும் வையையாற்றின் நீர்த்துறையை யுடைய பெருமானே, நீ என் கர்ப்பூர சுந்தரனோ என்றான் - நீ அடியே னுடைய கர்ப்பூர சுந்தரனோ என்று துதித்தான் எ - று.

ஆதியாக ஈறாக உள்ளவற்றால் என விரிக்க. வெறிய-மண முடைய: குறிப்புப் பெயரெச்சம். சிறப்பு நோக்கிக் கர்ப்புரத்தைப் பிரித்துக் கூறினர். அற்புதம் - ஈண்டு அன்பு; இன்பமுமாம்; இறை வனது அழகாகிய வெள்ளம் பெருக என்னலுமாம். அன்புரிமையால் 'என்' என்றான். ஓகாரம் வியப்பின்கண் வந்தது. (ங)

பூசனை புரியு மெல்லைப் பொன்னகர்க் கிறைமை பூண்ட
வாசவன் வருடந் தோறும் பூசித்து வருவா னன்ன
காசறு மனத்தான் பூசை கழிவுறு மளவுந் தாழ்த்துத்*
தேசமை சிறப்பார் பூசை செய்துதன் னாடு புக்கான்.

(இ - ள்.) பூசனை புரியும் எல்லை - இங்ஙனம் பூசைசெய்யும் பொழுது, வருடம் தோறும் பூசித்து வருவான் - ஆண்டுகள் தோறும் (சித்திரைத்திங்களின் சித்திரைநாளில்) பூசித்து வருபவனாகிய, பொன் நகர்க்கு இறைமை பூண்ட வாசவன் - பொன்னுலகத்திற்குத் தலைமை பூண்ட இந்திரனானவன், அன்ன காசு அறு மனத்தான் பூசை கழிவுறும் அளவும் தாழ்த்து-அந்தக் குற்றமற்ற உள்ளத்தினையுடைய பாண்டிய னது பூசை முடியும் வரை தாமதித்து (முடிந்தபின்), தேசு அமை சிறப்பு ஆர் பூசை செய்து - விளக்கமமைந்த சிறப்புமிக்க பூசையைச் செய்து முடித்து, தன் நாடு புக்கான் - தனது நாட்டிற்குச் சென்றான் எ - று.

வருவான்: வினையாலணையும் பெயர். வருவானாகிய வாசவன் எனக் கூட்டுக. அமை பூசை ஆர் பூசையெனப் பெயரெச்ச முதனிலை களைத் தனித்தனி கூடுக. (ச)

அன்றுநீர்க் கடவுள் வேள்வி நாயக னவையத் தெய்தி
நின்றவன் றன்னோய் தீருஞ் செவ்வியி னிகழ்ச்சி தோன்றக்
குன்றவன் சிறக ரீர்ந்த கோற்றவன் முகத்தை நோக்கி
இன்றுநீ சிறிது தேம்பி யிருத்தியா லிதேன்கோ லென்றான்.

(இ - ள்.) அன்று-அப்பொழுது, நீர்க்கடவுள்-வருணதேவன், வேள்வி நாயகன் அவையத்து எய்தி நின்றவன்-வேள்வித் தலைவனாகிய இந்திரனது அவையின்கட் சென்று நின்று, தன் நோய் தீரும் செவ்வி யின் நிகழ்ச்சி தோன்ற - தனது நோயானது நீங்கும் பருவத்தின் நிகழ்ச்சி கைகூட, குன்றவன் சிறகர் ஈர்ந்த கொற்றவன் முகத்தை நோக்கி - மலைகளின் வலிய சிறைகளை யறுத்த இந்திரன் முகத்தை

(பா - ம்.) * தாழ்ந்து.

நோக்கி, இன்று நீ சிறிது தேம்பி இருத்தி-இன்று நீ சற்று வாடியிருக்கின்றாய், இது என் என்றான் - இதற்குக் காரணம் யாது என்று வினவினன் எ - று.

வேள்வி நாயகன் - மகபதி. நின்றவன்: முற்றெச்சம். நோய் - வயிற்று நீர் நோய் என்பர். நிகழ்ச்சி-ஏதுத்தோற்றம். சிறகர்: ஈற்றுப் போலி. ஆல், கொல் என்பன அசைகள். இதென்: விகாரம். (ரு)

சிலைப்படு முகிலூ ரண்ணல் செப்புவா னிருடீ ரன்பின்
வலைப்படு பெருமா னெம்மான் மதுரையெம் பிரானை யன்பு
தலைப்படு பூசை செய்யத் தாழ்த்ததின் றதனு லிப்போ
தலைப்படச் சிறிதே னுள்ள மாகுல மடைந்த துண்டால்.

(இ-ள்.) சிலைப்படும் முகில் ஊர் அண்ணல்-வில்லுடன் கூடிய முகிலை ஊர்தியாகக்கொண்டு நடாத்தும் பெருமையினையுடைய இந்திரன், செப்புவான் - சொல்லுவான், இருள் தீர் அன்பின் வலைப்படு பெருமான் எம்மான் மதுரை எம்பிரானை - மயக்கத்தினீங்கிய அன்பாகிய வலையிற்படுகின்ற பெருமானும் எம்மானும் மதுரைப் பிரானுமாகிய சோமசுந்தரக் கடவுளை, அன்பு தலைப்படு பூசை செய்ய இன்று தாழ்த்தது - அன்போடு கூடிய பூசனை புரிய இன்று (வழுதியால்) காலந் தாழ்த்தது; அதனால் - அக் காரணத்தால், இப்போது என் உள்ளம் சிறிது அலைப்பட - இப்பொழுது என் மனம் சிறிது அலைவுற, ஆகுலம் அடைந்தது உண்டு - துன்பமெய்தியது உண்டு எ - று.

சிலை - திருவில்; இந்திரவில். செப்புவான் - செப்புகின்றவன் எனப் பெயராகக்கொள்க; செப்புதல் - விடையிறுத்தல். அன்பின் வலைப்படுதலை.

"பத்திவலையிற் படுவோன் காண்க"

என்னும் திருவாசகத்தா னறிக. ஆல்: அசை. (சா)

என்னவவ் விலிங்கந் தான்மா விலிங்கமோ வென்று முந்நீர்
மன்னவன் வினவ லோடு மகபதி மொழிவான் முன்பென்
றன்னரும் பழியும் வேழச் சாபமுந் தொலைத்த தன்றோ
அன்னதை யறிந்தி லாய்கொ லென்னநீ ரண்ணல் கூறும்.

(இ-ள்.) என்ன - என்று இந்திரன் கூற, அ இலிங்கம் மா இலிங்கமோ என்று முந்நீர் மன்னவன் வினவலோடும்-அந்தச்சொக்கலிங்கம் (ஏனைய பதிகளின் இலிங்கங்களைவிடச்) சிறந்த இலிங்கமோ என்று கடல் மன்னனாகிய வருணன் கேட்ட வளவில், மகபதி மொழிவான்-இந்திரன் கூறுவான், முன்பு-முன்னாளில், என் அரும் பழியும்-என்னுடைய போக்குதற்கரிய பழியையும், வேழச்சாபமும் தொலைத்தது அன்றோ - வெள்ளை யானையின் சாபத்தையும் போக்கியதல்லவா, அன்னதை அறிந்திலாய் கொல் என்ன-அச்செய்தியை நீ அறியாயோ என்று செப்ப, நீர் அண்ணல் கூறும் - வருணன் கூறுவான் எ - று.

மா இலிங்கம் - மகாலிங்கம். பிறவாற்றாற் போக்குதற்கரிய பழியென்பான், 'அரும்பழி' என்றான். அன்னதை - அவ்விலிங்கத்தின் மேன்மையை யென்றுமாம். தான், தன் என்பன அசைகள். (எ)

அற்றது வாகிற் றெய்வ மருத்துவ ராலுந் தீரச்
செற்றிட வரிதா யென்னைத் தெறும்பெரு வயிற்று நோயை
வற்றிடு மாறு தீர்க்குங் கொல்லென வலாரி யையம்
உற்றுநீ வினைய தென்னென் றுண்ணகை யரும்பிச் சொல்வான்.

(இ - ள்.) *அது அற்று ஆகில்* - அவ்விலிங்கம் அத்தன்மையை யுடையதானால், *தெய்வ மருத்துவராலும் தீரச்செற்றிட அரிதாய்* - தேவமருத்துவர்களாலும் முற்றக் கெடுத்தற்கு அரியதாய், *என்னைத் தெறும் பெரு வயிற்றுநோயை* - என்னை வருத்துகின்ற பெரிய வயிற்று நோயை, *வற்றிடுமாறு தீர்க்கும் கொல் என* - ஒழியும்படி தீர்க்குமோ என்று வினவ, *வலாரி* - இந்திரனானவன், *நீ ஐயம் உற்று வினையது என் என்று* - நீ சந்தேகித்து வினவியது என்னையென்று, *உள் நகை அரும்பிச் சொல்வான்* - புன் முறுவல் செய்து கூறுவான் எ - று.

தெய்வ மருத்துவர் - அச்சுவினி தேவர். தீர-முற்ற; நீங்க என்றுமாம். ஐயுற்றதுதகாதென்பான், 'ஐயமுற்று நீ வினையதென்' என்றான். உண்ணகையரும்பல் அவனது அறியாமை பற்றிய எள்ளலால் நிகழ்ந்தது;

"எள்ளல் இளமை பேதைமை மடனென்
றுள்ளப் பட்ட நகைநான் கென்ப"

என்பது தொல்காப்பிய மெய்ப்பாட்டியல். (அ)

அரியய ராலுந் தீராப் பிறவிநோ யறுக்க வல்ல
பெரியவ னிந்த யாக்கைப் பெரும்பிணி பிறவுந் தீர்த்தற்
கரியனோ வையன் செய்யுந் திருவிளை யாட்டை யின்னே
தெரியநீ சோதி யென்னத் தெண்கடற் சேர்ப்பன் சொல்வான்.

(இ-ள்.) *அரி அயராலும் தீராப் பிறவி நோய் அறுக்கவல்ல பெரியவன்* - திருமால் பிரமர்களாலும் நீங்காத பிறவி நோயினைப் போக்கவல்ல பெரியவனாகிய சொக்கலிங்க மூர்த்தி, *இந்த யாக்கைப் பெரும் பிணி பிறவும் தீர்த்தற்கு அரியனோ* - இந்த உடலிலுள்ள பெரிய பிணியையும் பிறநோயையும் போக்குதற்கு அரியவனோ, *ஐயன் செய்யும் திருவிளையாட்டை இன்னே தெரிய நீ சோதி என்ன* - இறைவன் செய்யும் திருவிளையாடலை இப்பொழுதே விளங்க நீ சோதிப்பாய் என்று கூற, *தெண் கடல் சேர்ப்பன் சொல்வான்* - தெளிந்த கடற்கிறைவனாகிய வருணன் கூறுவான் எ - று.

அரியயர்: உம்மைத்தொகை. பிணியும் பிறவுமென்க. தெரிய - உணர வென்றுமாம். சேர்ப்பன் - நெய்தற்றலைவன். (கூ)

கல்லிற கரிந்தோ யிங்கு நான்வருங் காலை வேட்டார்க்
கெல்லையில் காம நல்குஞ் சுரபியு மின்பால் சோரப்
புல்லிய கன்று மாற்றுப் பட்டவப் போது கண்ட
நல்லசோ பனத்தா லிந்த நன்மொழி கேட்டே னென்னா.

(இ - ள்.) கல் இறகு அரிந்தோய்-மலைகளின் சிறைகளை அரிந்த இந்திரனே, இங்கு நான் வருங்காலை - இங்கு யான் வரும்பொழுது, வேட்டார்க்கு விரும்பினருக்கு, எல்லை இல் காமம் நல்கும் சுரபியும்- அளவிறந்த விரும்பப்பட்ட பொருள்களைக் கொடுக்கும் தேனுவும், இன்பால் சோரப் புல்லிய கன்றும் - இனிய பால் ஒழுக (அதனால்) தழுவப் பட்ட கன்றும், ஆற்றுப்பட்ட - வழியில் எதிர்ப்பட்டன; அப்போது கண்ட நல்ல சோபனத்தால்-அப்பொழுது பார்த்த அந்த நல்ல சகுனத்தால், இந்த நல்மொழி கேட்டேன் என்று-இந்த நல்ல சொல்லைக் கேட்டேனென்று கூறி எ - று.

காமம் - விருப்பம்; விரும்பிய பொருள்கள். காம நல்குஞ் சுரபி- காமதேனு. புல்லிய: செயப்பாட்டு வினைப்பொருளது. பட்ட: அன் பெறுத பலவின் பால் முற்று. சோபனம்-ஈண்டு நிமித்தம். பாற்பசுவும் கன்றும் எதிர் வருதல் விரும்பியவற்றைப் பெறுதல் காட்டும் நன்னிமித்த மென்க. (க0)

வருணனு மேகி வெள்ளி மன்றுடை யடிகள் செய்யுந்
திருவிளை யாடல் கண்டு வயிற்றுநோய் தீர்ப்பா னெண்ணி
முரசதிர் மதுரை மூதூர் முற்றுநீ யழித்தி யென்னாக்
குரைகட றன்னை வல்லே கூஉவி னானேவி னானே.

(இ - ள்.) வருணனும் ஏகி-வருணனானவன் சென்று, வெள்ளி மன்று உடை அடிகள் செய்யும் திருவிளையாடல் கண்டு-வெள்ளியம்பலத்தை யுடைய பெருமான் செய்யும் திருவிளையாடலைப் பார்த்து, வயிற்று நோய் தீர்ப்பான் எண்ணி - வயிற்று நீர் நோயை நீக்கிக் கொள்ளக் கருதி, குரை கடல் தன்னை வல்லே கூவினான் - ஒலிக்கின்ற கடலை விரைய அழைத்து, முரசு அதிர் மதுரை மூதூர் முற்றும் நீ அழித்தி என்னா ஏவினான் - முரசுகள் ஒலிக்கின்ற தொன்மையுடைய மதுரைப் பதியை முழுதும் நீ அழிப்பாயென்று ஏவினான் எ - று.

தீர்ப்பான்: வினையெச்சம். அழித்தி: ஏவலொருமை முற்று; த்: எழுத்துப் பேறு, இ: விகுதி. கூவினான்: முற்றெச்சம். கண்டு, தீர்ப்பான், எண்ணி, கூவினான் என்னும் வினையெச்சங்கள் முறையே ஒன்று ஒன்றனைக் கொண்டன. (கக)

[கொச்சகக்கலிப்பா]

கோதித்தெழுந்து தருக்களறக்
கோத்தியெடுத் தெத்திசையும்
அதிர்த்தெறிந்து வரைகளெல்லா
மகழ்ந்துதிசைப் புறஞ்செல்லப்
பிதிர்த்தெறிந்து மாடநிரை
பெயர்த்தெறிந்து பிரளயத்தில்
உதித்தெழுந்து வருவதென
வோங்குதிரைக் கடல்வருமால்.

(இ-ள்.) ஓங்கு திரைக்கடல்-(அப்பொழுது) உயர்ந்தஅலைகளையுடைய கடலானது, கொதித்து எழுந்து – பொங்கி மேலெழுந்து, தருக்கள் அறக் கொத்தி எடுத்து - மரங்கள் முறியக் கல்லி எடுத்து, அதிர்த்து எத்திசையும் எறிந்து-ஆரவாரித்து எல்லாத் திசைகளிலும் வீசியும், வரைகள் எல்லாம் அகழ்ந்து பிதிர்த்து திசைப்புறம் செல்ல எறிந்து-மலைகளை யெல்லாம் தோண்டிப் பொடி செய்து திசைப்புறங்களிற் செல்லுமாறு வீசியும், மாட நிரை பெயர்த்து எறிந்து - மாட வரிசைகளைப் பெயர்த்து வீசியும், பிரளயத்தில் உதித்து எழுந்து வருவதென வரும் - ஊழிக்காலத்திற் பொங்கிமேலெழுந்து வருவது போல வாரா நின்றது எ - று.

பிதிர்த்து-பொடியாக்கி ; பிதிர் - பொடி. உதித்தல்-பொங்குதல் என்னும் பொருட்டு. ஆல்: அசை. (கஉ)

கந்தமலர்த் தனிக்கடவுள் கற்பத்து மழியாத
இந்தவளம் பதிக்கிடையூ றெய்தியதெம் பதிக்குமினி
வந்ததெனச் சுந்தரனை வந்திறைஞ்சி வானவருஞ்
சிந்தைகலங் கினர்வருணன் செய்தசெய றெளியாதார்.

(இ - ள்.) வானவரும் – தேவர்களும், வருணன் செய்த செயல் தெளியாதார்-வருணன் செய்த சூழ்ச்சியினை அறியாதவர்களாய், கந்த மலர்த் தனிக் கடவுள் கற்பத்தும் அழியாத - மணம் பொருந்திய தாமரை மலரில் இருக்கும் ஒப்பற்ற பிரமனது கற்பத்தினும் அழியாத, இந்த வளம் பதிக்கு இடையூறு எய்தியது – இந்த வளம் பொருந்திய மதுரைக்கும் அழிவு வந்தது; இனி எம்பதிக்கும் வந்தது என - இனி எமது பதிக்கும் அழிவு வந்தது என்று கருதி, சிந்தை கலங்கி வந்து சுந்தரனை இறைஞ்சினர்–மனங் கலங்கி வந்து சோமசுந்தரக் கடவுளை வணங்கினார்கள் எ - று.

'கற்பத்தும் அழியாத இந்த வளம்பதி' என்றமையால், எம்பதி கற்பத்தில் அழிவதென்றவா றாயிற்று. வளம் பதிக்கும் என்னும் உயர்வு சிறப்பும்மை தொக்கது. எம்பதிக்கும் இடையூறு வந்ததுஎன விரித்துரைக்க; வந்ததென: காலவழுவமைதி. வானவரும் என்பதில் உம்மை உயர்வு சிறப்பும் எச்சமுமாம். கலங்கி இறைஞ்சினர் என விகுதி பிரித்துக் கூட்டப்பட்டது. தெளியாதார்: முற்றெச்சம்.(கங)

சூலமோ டழலேந்துஞ் சொக்கர்திரு விளையாட்டின்
சீலமோ நாமிழைத்த தீவினையின் றிறமிதுவோ
ஆலமோ வுலகமெலா மழியவரும் பேரூழிக்
காலமோ வெனக்கலங்கிக் கடிநகரம் பனிப்பெய்த.

(இ-ள்.) இது சூலமோடு அழல் ஏந்தும் சொக்கர் திருவிளையாட்டின் சீலமோ – இந்நிகழ்ச்சி சூலப்படையையும், அங்கியையும் ஏந்திய சொக்கலிங்கப் பெருமானது திருவிளையாட்டின் செய்கையோ, நாம் இழைத்த தீவினையின் திறமோ-(அன்றி) நாம் செய்த தீவினையின் பாகு பாடோ, ஆலமோ-(தேவர்களை அழிக்க வந்த) கொடு விடமோ, உலகம் எலாம் அழிய வரும் பேர் ஊழிக்காலமோ – உலக

முழுதும் அழியும்படி வரும் பெரிய ஊழிக் காலமோ, என - என்று, கடி நகரம் - காவலையுடைய மதுரை நகரிலுள்ளா ரனைவரும், கலங்கி பனிப்பு எய்த - கலக்க மடைந்து நடுக்கமுறு நிற்க எ - று.

உலகமுழுதும் அழித்தலையும் ஒரு திருவிளையாடலாக உடையவ ரென்பது தோன்றச் 'சூலமோ டழலேந்துஞ் சொக்கர்' என அடை கொடுத்தார். சீலம் - தன்மை: செய்கை. இது திறமோ எனப் பிரித் தியைக்க. நகரம்: ஆகுபெயர். (கசு)

மண்புதைக்கத் திசைபுதைக்க மயங்கிருள்போல் வருநீத்தம்
விண்புதைக்க வெழுமாட வியனகரின் புறத்திரவி
கண்புதைக்க வருமளவிற் கண்டரச னடுநடுங்கிப்
பெண்புதைக்கு மொருபாகப் பிரானடியே சரணென்னு.

(இ - ள்.) மண் புதைக்கத் திசை புதைக்க மயங்கு இருள் போல் வரு நீத்தம்-மண்ணுலகை மறைக்கவும் திசைகளை மறைக்கவும் மயங்குதற் கேதுவாகிய இருளைப்போல் வருகின்ற கடல்வெள்ளம், விண் புதைக்க எழு மாட வியன் நகரின் புறத்து - விண்ணுலகை மறைக்குமாறு மேல் ஓங்கிய மாடங்களை யுடைய மதுரை நகரின் புறத்தில், இரவி கண்புதைக்க வரு மளவில்-பரிதியும் அச்சத்தாற் கண்ணை மூடுமாறு வரும் பொழுது, அரசன் கண்டு நடு நடுங்கி-அபிடேக பாண்டியன் அதனைப் பார்த்து மிக நடு நடுங்கி, பெண் புதைக்கும் ஒருபாகப் பிரான் அடியே சரண் என்னு-உமைப் பிராட்டியால் மறைக்கப்பட்ட ஒரு பாகத்தினையுடைய பெருமானுடைய திருவடிகளே அடைக்கலம் என்று கருதி எ - று.

புதைக்க என்பவற்றுக்குப் புதைய வெனப் பொருள் கூறலுமாம். இப்பொருளில் கு சாரியை; புதைய-மறைய. இருள் போலும் நீத்தம் இருளையோட்டும் இரவியும் கண் புதைக்க வரும் என்ற நயம் உணர்தற் பாலது. பிராட்டி ஒரு கூருக இருத்தலைப் பிராட்டியால் மறைக்கப் பட்ட ஒரு கூற்றினையுடைய என்ருர். பெருமானது திருவடியன்றி வேறு புகலிடமில்லை யென்பான் பிரிநிலையும் தேற்றமுமாகிய ஏகாரங் கொடுத்து 'அடியே சரண்' என்ருனென்க. இச் செய்யுள்,

"தேரொலிக்க மாவொலிக்கத் திசையொலிக்குந் திருக்காஞ்சி."

என்னும் திருத்தொண்டர் புராணச் செய்யுள் போன்று ஓசையின்பமும் சொல்லழகும், பின்வருநிலையணியும் உடைத்தாய் விளங்குவது காண்க (கரு)

ஆலமெழுந் திமையவர்மே லடர்க்கவரும்* பொழுதஞ்சும்
மாலெனவுந் தன்னுயிர்மேன் மறலிவரும் பொழுதஞ்சும்
பாலனெனவுங்கலங்கிப் பசுபதிசே வடியில் விழுந்
தோலமென முறையிட்டா னுலகுபுக ழுறையிட்டான்.

(இ-ள்.) உலகு புகழ் உறை யிட்டான் - உலகத்தார் புகழும் புகழாகிய கவசத்தை யணிந்த அபிடேக பாண்டியன், ஆலம் எழுந்து

(பா - ம்.) * அடரவரும்.

அடர்க்க இமையவர்மேல் வரும் பொழுது - நஞ்சானது பாற்கடலி னின்றும் தோன்றிக் கொல்லுதற்குத் தேவர்மேல் வருங் காலத்தில், அஞ்சும் மால் எனவும் - அஞ்சுதலுற்ற திருமாலைப் போலவும், தன் உயிர் மேல் மறலி வரும்பொழுது அஞ்சும் பாலன் எனவும் - தனது உயிரின்மேல் கூற்றுவன் வரும் பொழுது அஞ்சிய மார்க்கண்டனைப் போலவும், கலங்கி - மனங்கலங்கி, பசுபதி சேவடியில் விழுந்து ஓலமென முறையிட்டான் - உயிர்களுக்கு இறைவனாயுள்ள சோமசுந் தரக் கடவுளின் சிவந்த திருவடிகளில் விழுந்து ஓல மென்று முறை யிட்டான் எ - று.

ஆலத்தினையும் மறலியையும் போன்று வரும் வெள்ளத்தின் கொடுமையையும், அரசன் பிறவுயிர்க்கும் தன்னுயிர்க்கும் அஞ்சும் அச்சத்தையும், அவனது. அன்பின் மிகுதியையும், இறைவன்பால் அடைக்கலம் புகுந்து காப்பாற்றப்படுதலையும் உணர்த்தத் திருமாலை யும், மார்க்கண்டனையும் உவமை கூறினர். அஞ்சுதல், கலங்குதல், சேவடியில் விழுந்து முறையிடல், இவற்றை மூவர்க்குங் கொள்க. புகழும் புகழாகிய உறையென விரிக்க; உலகிற்குப் புகழாகிய உறை யினையிட்டான் எனலுமாம்; இதற்கு உலக முழுதும் தன் புகழ் பரக்க வென்பது கருத்து. ஈற்றடியில் முறையிட்டான் உறையிட்டான் என இயைபு நயம் அமைந்துளது. (கசு)

முறையிட்ட செழியனெதிர் முறுவலித்தஞ் சலையென்னாக்
கறையிட்டு விண்புரந்த கந்தரசுந் தரக்கடவுள்
துறையிட்டு வருகடலைச் சுவறப்போய்ப் பருகுமெனப்
பிறையிட்ட திருச்சடையிற் பெயனான்கும் வரவிடுத்தான்.

(இ - ள்.) முறையிட்ட செழியன் எதிர் - அங்ஙனம் முறையிட்ட பாண்டியன் எதிரே, கறை இட்டு விண்புரந்த கந்தரசுந்தரக் கடவுள் - நஞ்சக்கறையைப் பொருந்தித் தேவர்களைக் காத்தருளிய திருமிடற் றினையுடைய சோமசுந்தரக்கடவுள், முறுவலித்து - புன்னகை புரிந்து, அஞ்சலை என்னா - அஞ்சாதே என்றருளி, துறை இட்டு வருகடலை - பல துறைகளையிட்டு வருகின்ற கடலை, சுவறப்போய்ப் பருகும் என - அது வற்றுமாறு போய் உண்ணுங்கள் என்று, பிறை இட்ட திருச் சடையில் பெயல் நான்கும் வரவிடுத்தான் - குழவித்திங்களையணிந்த திருச்சடையிலுள்ள முகில் நான்கனையும் செல்ல விட்டான் எ - று.

புரந்தமை கந்தரத்திற்கேற்றி யுரைக்கப்பட்டது. கந்தரத்தினது சுந்தரத்தையுடைய என்பதோர் பொருள் தோன்றுமாறும், கந்தர சுந்தரம் என்னும் சொல்லழகும் நோக்குக. பெயல் - பெய்தலையுடைய முகிலுக்காயிற்று. (கஎ)

[அறுசீரடி யாசிரிய விருத்தம்]

நிவப்புற வெழுந்த நான்கு மேகமு நிமிர்ந்து வாய்விட்
டுவர்ப்புறு கடலை வாரி யுறிஞ்சின வுறிஞ்ச லோடுஞ்
சிவப்பெருங் கடவுள் யார்க்குந் தேவெனத் தெளிந்தோ ரேழு
பவப்பெரும் பௌவம் போலப் பசையற வறந்த தன்றே.

(இ - ள்.) நிவப்புற எழுந்த நான்கு மேகமும்-உயர எழுந்த அந் நான்கு முகில்களும், நிமிர்ந்து வாய்விட்டு-நிமிர்ந்து முழங்கி, உவர்ப்பு உறு கடலை வாரி உறிஞ்சின-உவர்ப்பினை யுடைய கடல் நீரை அள்ளி உறிஞ்சின; உறிஞ்சலோடும்-அங்ஙனம் உறிஞ்சினவளவில் (அக்கடல்) சிவப் பெருங் கடவுள் யார்க்கும் தேவு எனத் தெளிந்தோர்-சிவமாகிய பெரிய கடவுளே யாவருக்கும் தேவனெனத் தெளிந்தவர்களின், ஏழு பவப் பெரும் பௌவம்போல-எழுவகைப்பட்ட பிறவியாகிய பெரிய கடல் வற்றுதல்போல, பசை அற வறந்தது-பசையின்றாக வற்றியது எ - று.

உறிஞ்சுதல் - உட்புக இழுத்தல். கடவுளே யெனப் பிரிநிலை யேகாரம் வருவித் துரைக்க. தெளிந்தோராவர் ஐயமின்றித் துணிந் தவர் என்க. "ஐயத்தி னீங்கித் தெளிந்தார்க்கு." என்பது தமிழ் மறை. யார்க்கும் என்றது, அயன்மால் உள்ளிட்ட தேவர்க்கும் என்றவாறு;

"பாவ காரிகள் பார்ப்பரி தென்பரால்
தேவ தேவன் சிவன்பெருந் தன்மையே."

எனத் திருநாவுக்கரசர் இரங்கிக் கூறுதல் காண்க. 'மறை முதற்கலைக ளெல்லாம் மணிமிடற்றவனே யெங்கும், நிறைபரமென்றும்......... அறைகுவது' என இவ்வாசிரியர் முன் கூறினமையும் நோக்குக. அன்று ஏ: அசைகள். (கஅ)

அந்நிலை நகரு ளாரும் வானவ ராதி யோருந்
தென்னவர் பிரானு மெந்தை திருவிளையாட னோக்கிப்
பன்னரு மகிழ்ச்சி பொங்கப் பன்முறை புகழ்ந்து பாடி
இன்னறீர் மனத்த ராகி யீறிலா வின்பத் தாழ்ந்தார்.

(இ-ள்.) அ நிலை - அப்பொழுது, நகருளாரும் வானவர் ஆதியோரும் - நகரத்திலுள்ளாரும் தேவர் முதலானவர்களும், தென்னவர் பிரானும்-பாண்டியர்கள் தலைவனாகிய அபிடேக பாண்டியனும், எந்தை திருவிளையாடல் நோக்கி - எம் தந்தையாகிய சோமசுந்தரக் கடவுளின் திருவிளையாடலைப் பார்த்து, பன் அரும் மகிழ்ச்சி பொங்க-சொல்லுதற்கரிய மகிழ்ச்சி மிக, பல் முறை புகழ்ந்து பாடி-பலமுறை புகழ்ந்து துதித்து, இன்னல் தீர் மனத்தராகி - துன்ப நீங்கிய மனத்தினையுடையராய், ஈறு இலா இன்பத்து ஆழ்ந்தார்-முடிவில்லாத இன்பவெள்ளத்தில் மூழ்கினார்கள் எ - று.

அன்பு ஆராமையாற் பாடினாரென்பார். 'பன்முறை புகழ்ந்து பாடி' என்றார். ஆழ்ந்தார் என்றமையால் இன்பமாகிய வெள்ளத்தில் என விரிக்கப்பட்டது; கடல்வெள்ளமும் அதனாலாய துன்பவெள்ள மும் ஒழிய இன்பவெள்ளத்தில் மூழ்கினார் என்பதுதோன்ற, 'இன் னல் தீர் மனத்தராகி யீறிலா வின்பத் தாழ்ந்தார்' என்றார். (கக)

ஆகச் செய்யுள் கஅ0சு

மதுரைக்காண்டம்

முற்றிற்று.

———

# செய்யுள் முதற்குறிப்பு அகரவரிசை

---

